

International Journal of Tamil Language & Literary Studies

&



NA SUBBU REDDIAR 100 EDUCATIONAL TRUST
[AN ISO 9001 - 2015 CERTIFIED]

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

# 60 ஆய்வுக்கட்டுரைகள் வெளியிடப்பெற்றன


~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~




UGC CARE Listed Journal

E-ISSN: 2581-7140




# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

# INTERNATIONAL JOURNAL OF TAMIL LANGUAGE AND LITERARY STUDIES (Ijtlls)

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*




## ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை

## Na Subbureddiar 100 Educational Trust

## *பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை*

## *Professor Dr. N. Subbu Reddiar's Multi-Faceted Personality*

தொகுதி 5, சிறப்பிதழ் 1, நவம்பர் 2022

VOLUME 5, SPECIAL ISSUE 1, November 2022



**பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியார்**

**(27 ஆகஸ்ட் 1916 - 1 மே 2006)**

***என் பணி தமிழ் செய்து கிடைப்பதுவே***

# பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை

# Professor Dr. N. Subbu Reddiar's Multi-Faceted Personality

**முனைவர் ஜே. பி. பிரஷாந்த் மோர்,**
பேராசிரியர், சமூக அறிவியல் துறை,
சமூக அறிவியல் மற்றும் மனிதநேய ஆராய்ச்சி
நிறுவனம், இன்சீக், பாரிஸ், பிரான்ஸ்.
**மின்னஞ்சல்:** morejbplee@aol.com

**Dr. J. B. Prashant More,**
Professor of Social Science Department,
Institute of Research in Social Sciences and Humanities,
Inseec, Paris, France.
**Email:** morejbplee@aol.com

**முனைவர் வே. ராமராஜபாண்டியன்,**
தலைவர் மற்றும் நவீன இலக்கியத்துறைத்தலைவர்,
தமிழ் ஆய்வுப்பள்ளி,
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை, தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** drramarajapandian@gmail.com

**Dr. V. Ramarajapandian,**
Chairperson & Head, Department of Modern Literature,
School of Tamil Studies,
Madurai Kamaraj University,
Madurai, Tamil Nadu, India.
**Email:** drramarajapandian@gmail.com

**முனைவர் பெ. இளையாப்பிள்ளை,**
பேராசிரியர் மற்றும் தலைவர், இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** pelayapillai@gmail.com

**Dr. P. Elayapillai,**
Head & Professor of Literature,
Tamil University,
Thanjavur, Tamil Nadu, India.
**E-mail:** pelayapillai@gmail.com

**முனைவர் T. K. வேதராஜா,**
ஆங்கில உதவிப்பேராசிரியர்,
எம் வீ எம் அரசு கலைக் கல்லூரி,
திண்டுக்கல், தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** tkvraja@gmail.com

**Dr. T. K. Vedaraja,**
Assistant Professor of English,
MVM Govt. Arts College,
Dindigul, Tamil Nadu, India.
**E-mail:** tkvraja@gmail.com

**முனைவர் சு. குழந்தைவேல்,**
தலைவர் & உதவிப்பேராசிரியர்,
ஆங்கிலத்துறை,
கணேசர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
மேலசிவபுரி, தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** english.kulandhai@gmail.com

**Dr. S. Kulandhaivel,**
Head & Assistant Professor,
Department of English,
Ganesar Arts and Science College,
Melasivapuri, Tamil Nadu, India.
**E-mail:** english.kulandhai@gmail.com

**முனைவர் மா. வினோத்குமார்,**
தலைவர் மற்றும் உதவிப்பேராசிரியர்,
ஆங்கிலத்துறை,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
நாகலாபுரம், தூத்துக்குடி, தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** vinoth5082@gmail.com

**Dr. M. Vinoth Kumar,**
Head & Assistant Professor,
Department of English,
Government Arts and Science College,
Nagalapuram, Thoothukudi, Tamil Nadu, India.
**Email:** vinoth5082@gmail.com

**த. நாகஜோதி,**
ஆராய்ச்சி ஆலோசகர் மற்றும் ஆன்லைன்
உள்ளடக்க மேலாளர்,
தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,
விருதுநகர், தமிழ்நாடு, இந்தியா.
**மின்னஞ்சல்:** nagajothid@gmail.com

**D. Nagajothi,**
Research Advisor and Online Content Manager,
International Journal of Tamil Language and Literary Studies,
Tamil Nadu, India.
**Email:** nagajothid@gmail.com

# PUBLISHER'S MESSAGE

## Aim & Objectives

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-Reviewed International Journal published twice in a year on July and January, which is published by **Maheswari Publishers,** patronized by **Pandian Educational Trust, Virudhunagar, Tamil Nadu, India**. It also publishes **Literary Druid, for English Language and Literature (Online)** to foster research in the domain areas**. International Journal for Tamil Language and Tamil Studies** aims to bring down Academic Research to promote research support for the academicians and scholars in the field of Tamil Language and Literature. Research through this medium is motivating in all aspects of main and inter-disciplines by consequent projects and e-publication. Making Internationalization of the research works in the globalized world aid the scholarly community to develop scholarly profile in research through the quality of publications. The audacity and vision of academic research on internet could foster green printing and open access nature in research. All of these motivate best distribution of research that produces positive outcomes for the betterment of the world. In achieving the aim, our journal International Journal of Tamil Language and Tamil Studies has been listed in UGC CARE List from July 2020.

## Disclaimer

**International Journal for Tamil Language and Tamil Studies** is committed to research Ethics and consider plagiarism as a crime. The authors are advised to adhere academic ethics with respect to the acknowledgment of quotations from other works. The Publisher & Editors will not be held responsible for any lapse of the provider regarding plagiarism in their manuscripts. The submissions ought to be original, must accompany the declaration form stating your research paper as an original work, and has not been published elsewhere for any research purpose. The contributor will be the sole responsibility for such lapses on any legal issues and publication ethics. **Contact** ijtllsetamiljournal@gmail.com for submission and other information. See www.ijtlls.com for guidelines.

## Message from the Editor-in-Chief

**International Journal for Tamil Language and Tamil Studies** is an online Peer-reviewed International Journal of Tamil Language and Literature which is committed to academic research, welcomes scholars and students all over the world who to advance their status of academic career and society by their scholarly ideas. The journal welcomes publications of quality papers on the domain area. Research ought to be active to create a major frontier in the academic world. It must augment the neo-theoretical frame that facilitates re-evaluation and augmentation of existing practices and thoughts. In due course, this will effect in a prime discovery and lean to the knowledge acquired. Research is to establish, substantiate facts, restate previous works ant to resolve issues. An active venture to endow cogent approach to these types for educational reformations through academic research has become the central intent of the journal. I am glad to say that our journal has been approved in the UGC CARE List. It is an achievement by the clear protocol of academic and ethical policies maintained by the journal and I thank the authors for their original articles with proper ethical writing methods. Now, I am happy to extend the special issue on the title **Professor Dr. N. Subbu Reddiar's Multi-Faceted Personality** containing sixty curated articles to the Tamil academic community.

**Publisher, Director and Editor**
**Dr. D. Maheswari**

# பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை

# Professor Dr. N. Subbu Reddiar's Multi-Faceted Personality

## இதழ் உறுப்பினர்கள் / Journal Members



## பதிப்பாசிரியர் குழு பணி விவரம்/ Editorial Work Flow Details

இந்த சிறப்பிதழ் குழு, (எடிட்டோரியல்) நேர்மையான பதிப்பு நெறிமுறைகளின் படி அறிவார்ந்த கட்டுரைகளை நெறிமுறைக் கொள்கைகளுடன் தொகுத்துள்ளது. இது சமர்ப்பித்தல், கருத்துத் திருட்டு சரிபார்ப்பு, திருத்தங்கள், சக மதிப்பாய்வு செயல்முறை, (டபுள் பிளைண்ட்), பெரிய திருத்தங்கள் அல்லது சிறிய திருத்தங்கள், பரிந்துரைகள் மற்றும் திருத்தம், ஏற்பு, மூல கோப்பு தயாரித்தல் மற்றும் இணையதள தயாரிப்பு மற்றும் வெளியீடு ஆகியவற்றை உள்ளடக்கியது.

This Special issue committee curated the scholarly articles with ethical princples according to the norms of the Editorial work flow. It contains of submission, plagiarism check, correction, peer review process, (Double Blind), major corections or minor corrections, suggestions and rectifications, acceptance, copy editing and production and publication online.

# வாழ்த்துரை

**முனைவர் பூ. சு. கணேஷ்மூர்த்தி**
**உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,**
**திராவிடப் பல்கலைக்கழகம்,**
**குப்பம், ஆந்திர மாநிலம்.**



பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஒர் ஆற்றல் மிக்க மனிதர். பலதுறை அறிவைப் பாடுபட்டு பெற்றவர். பல துறைகளில் நூற்று முப்பதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர். பேராசிரியர் நிறுவிய தமிழ்த்துறை திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அடியேன் முதுகலை மற்றும் முனைவர் Post Doctoral Program படிக்கும் பாக்கியத்தையும், பேராசிரியர் அவர்கள் துறைக்கு வரும் போதெல்லாம் ஆசிபெற்றும், அன்னாரின் அனுபவங்களைக் கேட்கும் பாக்யம் பெற்றவனாகிறேன். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ் வளர்ச்சியையே தம் வாழ்க்கைப் பணியாக மேற்கொண்டு திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை நிறுவி முதல் பேராசிரியராகத் தமது பணியைப் பதினேழு ஆண்டுகள் சேவையாற்றியதை அறியலாம். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ்மொழி வளர்ச்சியடைய இவர் எடுத்துக்கொண்ட முயற்சி பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெற வேண்டியவை. அன்னாருடைய பல்துறை அறிவு, ஆட்சித்திறன், விடாமுயற்சி, இவையனைத்தும் ஒருங்கே அமைந்து தமிழ்மொழிக்குச் சேவையாற்றியதை அறியமுடிகிறது. திருவேங்கடமுடையான் மீது மிகுந்த பக்தி; அவனைச் சரணாகதி அடைந்து அவனது நிழலில் வாழ்ந்து பல எதிர்ப்புகள், அவமானங்கள், நிந்தனைகள் இவற்றையெல்லாம் சகித்து எதிர்த்து நீச்சல் போட்டு தமிழ்த்துறை வளர்ச்சிக்குப் பாடுபட்டதால் ஆலவிருட்சம் போல் வளர்ந்து எண்ணற்ற மாணவர்கள் தமிழ் எம்.ஏ, முனைவர் பட்டங்களைப் பெற்று நல்லநிலையில் இருப்பதை அறியமுடிகிறது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் எம்பெருமான் ஶ்ரீமந்நாராயணன் நூற்றெட்டு திவ்விய தேசங்களில் பரமபதம், பாற்கடல் தவிர்த்து அர்ச்சாவதாரமாக வீற்றிருக்கும் 106 திவ்விய தேசங்களையும் குடும்ப உறுப்பினர்களோடு சென்று சேவித்ததை *நினைவுக்குமிழிகள்* வழி அறியமுடிகின்றது. பேராசிரியர் அனுபவத்தின் வழி இயற்றிய *நினைவுக்குமிழிகள்* நான்காம் பாகத்தைப் படிக்கும் போது பேராசிரியரின் அயராது உழைப்பும் சில சம்பவங்களும் நேரில் கண்டது போல் என்னையும் அறியாமல் கண்ணீர்விட்டேன். பேராசிரியர் இயற்றிய நூல்களைத் தமிழக அரசு நாட்டுடைமையாக்கியது. பேராசிரியரின் கடும் உழைப்பிற்குக் கிடைத்த வெற்றியாகும். பேராசிரியர் இயற்றிய நூல்களின் விசாலப் பார்வையை மையப்பொருளாகக் கொண்டு அறிவார்ந்த ஆய்வுக்கட்டுரைகளை வழங்கிய பேராளர்கள் அனைவரும் போற்றத் தகுந்தவர்களே. **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** எனும் பொருண்மையில் சிறப்பிதழ் முழுவடிவம் பெற ஒத்துழைப்பு நல்கிய முனைவர் த.மகேஸ்வரி இயக்குனர் *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்* அவர்களையும் சிறப்பிதழ் கௌரவப் பதிப்பாசிரியரும், ந.சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை நிறுவனச் செயலருமான மதிப்பிற்குரிய பேராசிரியர் டாக்டர் சு. இராமலிங்கம் அவர்களையும் இச்சாதனை முழு வெற்றிபெற வேண்டும் என்றும் எதிர்வரும் காலத்தில் பலசாதனைகள் நிகழ்த்தவேண்டும் என்றும் இதயம் நிறைந்து வாழ்த்துகிறேன்.

**அன்புடன்**

**முனைவர் பூ. சு. கணேஷ்மூர்த்தி**

# வாழ்த்துரை

**முனைவர் இரா. தமிழ்ச்செல்வன்,**
**தமிழ் உதவிப்பேராசிரியர்,**
**நவீன இந்தியமொழிகள் துறை,**
**அலீகர் முஸ்லிம் பல்கலைக்கழகம்,**
**உத்திரப் பிரதேசம், இந்தியா.**



பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆளுமையை விளக்கும் வகையில் எழுதப்பெற்ற கட்டுரைகளை உள்ளடக்கிய இச்சிறப்பிதழ் பேராசிரியரின் பன்முகத் திறனை ஆய்வு நோக்கில் தமிழ்க் கல்விச்சூழலுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறது. இச்சிறப்பிதழுக்காகக் கட்டுரைகள் பெறுவதற்குப் பின்பற்றப்பட்ட முறை குறிப்பிடத்தக்க ஒன்று. பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆளுமையையொட்டி எழுத வேண்டிய ஆய்வுப் பகுதிகளையும் அதற்குரிய தரவுகளையும் வெளியிட்டுக் கட்டுரைகளைப் பெற்றுக்கொண்ட இதழ் குழுவினர், அறிஞர் குழுவொன்றை அமைத்து உரிய கட்டுரைகளைத் தொடக்கத்தில் தேர்வு செய்தனர். இதற்காகப் பல மாதங்கள் எடுத்துக்கொண்டு கூடுதல் கவனத்துடன் கட்டுரைகள் தேர்வுசெய்யப்பட்டன. இவ்விதழுக்குப் பொருத்தமானதாகக் கருதித் தேர்வு செய்யப்பெற்ற கட்டுரைகளில் உரிய திருத்தங்களைக் கூறிச் செழுமைப்படுத்தித் தந்திட கட்டுரையாளர்களிடம் அவ்வப்போது கோரியதையும் சான்றெண் குறிப்புகள், நூல் பட்டியல் முதலான பகுதிகளில் கூடப் பிழைகள் நிகழக்கூடாது என இதழ் குழுவினர் இயங்கியதையும் அறிவேன். உலக அரங்கில் புகழ்பெற்ற ஆய்விதழ்களுக்கு இணையான ஒன்றாகப் **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** என்ற இச்சிறப்பிதழைக் கொண்டு வருவதற்கான முனைப்பு இதில் செலுத்தப்பட்டதாகவே அவதானிக்கிறேன். தமிழ் ஆய்வுத்தளத்தில் இவ்விதழ் தொகுக்கப்பெற்ற முறை என்றென்றும் கவனத்தில் கொள்ளப்படும் என்பது என் நம்பிக்கை. ஆய்விதழுக்குக் கட்டுரைகள் எழுதும் போது கவனம் செலுத்த வேண்டிய பகுதிகள் குறித்த படிப்பினைகளை இவ்விதழில் பங்களிப்புச் செய்தோர் பலரும் பெற்றிருக்கூடும். அந்த வகையில் கட்டுரையாளர்கள் தன்னை மேம்படுத்திக் கொள்வதற்கான ஒரு நல்வாய்ப்பும் இவ்விதழ் வெளியீட்டில் நடந்தேறியிருக்கிறது. கட்டுரையாளர்கள் ஒருவித மனநிறைவை இதன் மூலம் அடைந்திருப்பர். மேலும், வணிக ஆய்விதழ்களுக்கு இடையில் நேரியமுறையில் ஒருங்கிணைக்கப்பட்ட இவ்விதழில் கட்டுரையை வெளியிட்டதன் மூலம் பெருமிதத்தையும் கட்டுரையாளர்கள் பெற்றிருப்பர் எனக் கருதுகிறேன்.

கல்விச் சூழலில் அளப்பரிய பணியைச் செய்த பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆளுமையைப் பல்வேறு நிலைகளில் கூர்மையாக விளக்கும் வகையில் இச்சிறப்பிதழில் தொகுக்கப் பெற்றிருக்கிற கட்டுரைகள் இளம் ஆய்வாளர்களின் ஆய்வுப் பார்வைகளை விரிவாக்கக்கூடியன. கல்வியியல், சமயம், திறனாய்வு எனப் பல ஆய்வுத் தளத்தில் பணியாற்றிய பேராசிரியரின் ஆக்கங்களை ஆய்வு செய்த கட்டுரைகளை உள்வாங்குவதன் மூலம் அவரின் ஆய்வு முறையை அறிந்து கொண்டு பார்வையை விரிவுபடுத்திக் கொள்ளலாம். ஆய்வில் ஈடுபடுவோர்க்குத் தெரிந்துகொள்ள பல செய்திகள் இவ்விதழில் இருக்கின்றன.

***ஆய்வுச் சூழலுக்கு வெளிச்சத்தைத் தரும் முயற்சி.***

***வாழ்த்துகள்…***

**முனைவர் இரா. தமிழ்ச்செல்வன்**

# பாராட்டுரை



**முனைவர் ஆ. ஏகாம்பரம்,**
**பேராசிரியர் & தலைவர்,**
**அழிநிலை மொழிகள் நடுவம்,**
**தமிழ் இலக்கியத்துறை,**
**சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை - *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்* வழியாக வெளிவரும் **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** என்ற இச்சிறப்பிதழ் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமையைத் தமிழ் உலகிற்குக் கொண்டு செல்வதற்கான வலிமை வாய்ந்த ஊடகம் என்பதில் எள்ளு மூக்களவும் ஐயமில்லை. பேராசிரியரின் படைப்புகள் காலத்தை வென்று நிற்கும் என்றும் அழியாத அரிய ஆவணங்கள். அவர் சைவத்தைப் பின்புலமாகக் கொண்டிருந்த போதிலும் வைணவத்தில் ஆழங்காற்பட்டவர். தம் வாழ்வின் அனுபவங்களையும் சைவ-வைணவ இறைச் சிந்தனைகளையும் இணைக்கும் பாலமாகக் கொண்ட அன்னாரின் எழுத்துகள் ஆற்றொழுக்க நடையிலும் நெஞ்சைப் பிணிக்கும் வகையிலும் நேருக்கு நேர்நின்று பேசுவது போல் அமைந்த அழகு தமிழ்ச்சொல் ஓவியம். வாழ்நாள் முழுக்க எழுதிக் குவித்தப் பேராசிரியர், சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பியம், பக்தி இலக்கியம், சித்தர் இலக்கியம் எனப் பல்வேறு களங்களில் அறிவியலையும் அருளியலையும் இணைத்து 136 நூல்களைத் தமிழ்ச் சமூகத்திற்கு வழங்கியுள்ளார். அவற்றுள் 13 நூல்கள் தமிழக அரசின் பரிசுகளைப் பெற்றவை என்பதும் 100 நூல்கள் அவரின் ஓய்வுக்குப் பின் வெளியிடப்பட்டவை என்பதும் குறிப்பிடத்தக்கது. அவ்வாறே பேராசிரியரின் தன் வரலாற்று நூலான *நினைவுக்குமிழிகள்* என்ற நூல் தமிழ் வளர்ச்சித் துறையின் நிதிஉதவி பெற்றது என்பதும் 2008-ஆம் ஆண்டு தமிழக அரசு அய்யா அவர்களின் நூல்களை நாட்டுடைமையாக்கியது என்பதும் கவனிக்கத்தக்கது. ஆனந்தரங்கரின் நாட்குறிப்பைப் போல எதிர்கால ஆய்வுகளுக்கும் அறிஞர்களுக்கும் தமிழ்ச்சமூகப் பொருளாதார மற்றும் கல்வி பற்றியச் செய்திகளெல்லாம் அறிந்து கொள்வதற்கான வரலாற்று ஆவணம் என்பதும் குறிப்பிடத்தக்கது.

திருச்சி அருகேயுள்ள பெரகம்பி என்ற ஊரில் பிறந்த பேராசிரியர் தம்முடைய இளங்கலை முதுகலைப் பட்டங்களை நிறைவு செய்து துறையூரில் உயர்நிலைப் பள்ளியையும் நிறுவி அதன் தலைமையாசிரியராகத் தம் கல்விப் பணியைத் தொடங்கியவர். பின்னர் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் 10 ஆண்டுகள் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி, இறுதியில் திருப்பதி திருவேரங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழக அரசு மானியத்துடன் தமிழ்த்துறையை நிறுவி அதன் தலைவராகவும் பேராசிரியராகவும் 17 ஆண்டுகள் சிறக்கப் பணியாற்றியவர். சென்னைப் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், புதுவைப் பல்கலைக்கழகம் மற்றும் சென்னைக் கம்பன் கழகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆகியவற்றில் அறக்கட்டளைகளை நிறுவி, அவரே சொற்பொழிவுகளையும் ஆற்றியுள்ளார். புதுவைப் பல்கலைக்கழகத்தில் நான் படித்த காலத்தும் பணியாற்றிய காலத்தும் அங்கு நடைபெறும் அறக்கட்டளைகளைக் கவனித்திருக்கிறேன். அங்கு நான் பணிசெய்த காலத்து பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் உள்ளிட்ட அறக்கட்டளைகளுக்கு வரவேற்புரையும் நன்றியுரையும் ஆற்றும் வாய்ப்பைப் பெற்றேன் என்பது இவ்விடத்துக் குறிப்பிடத்தக்கது. அவ்வாறே சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிறுவப்பட்டுள்ள பல்வேறு அறக்கட்டளைகளுள் ந. சுப்புரெட்டியார்

திருமதி சு. செல்லப்பாப்பா அம்மாள் என்ற பெயரில் (1997) நிறுவப்பெற்ற அறக்கட்டளைக்கும் நான் பங்காற்றியுள்ளேன். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் நினைவாக வெளிவரும் இந்த இச்சிறப்பிதழ் பணிக்குரியவர்கள் அனைவரையும் வாழ்த்தி வணங்குகிறேன்.

**பணிவுடன்,**

**முனைவர் ஆ. ஏகாம்பரம்**

# வாழ்த்துரை



**முனைவர் சா. இரமேஷ்,**
**உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,**
**அரசினர்கலைக் கல்லூரி,**
**கும்பகோணம்.**

தமிழக கல்விச் சூழலில் திறனாய்வுப் போக்குப் பல்கலைக்கழகங்களில் இன்று பல்கிப் பெருகியுள்ளது. திறனாய்வு நூல்கள், இதழ்கள், கட்டுரைத்தொகுப்புகள், கருத்தரங்க அமர்வுகளின் தொகுப்புகள், பயிற்சி அரங்குகள் எனத் திறனாய்வு முயற்சிகள் அதிகம் தற்காலத்தில் நடைபெற்று வருகின்றன. இம்மேனாட்டுத் திறனாய்வுக் கொள்கைளைத் தொடக்ககால கட்டத்தில் தமிழுக்குத் தந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆவார். இவர் தலைமகனார், தன்னைச் சான்றோனாக்கியத் தந்தைக்குக் மகன் செய்யும் கைம்மாறு, இவன் தகப்பன் என்னதவம் செய்தானோ என்று சொல்லும் சொல்லைப் பெற்றுத் தருவதே. இவ்வரிகளை அனுபவ வரிகளாக்கியவர் முனைவர் சு. இராமலிங்கம் அய்யா அவர்கள். தமிழுலகம், தந்தையின் அறியப்படாத நூல்களை வெளியிட்டும் புதிய இளம் ஆய்வாளர்களை ஊக்குவிக்கப் பல்வேறு பல்கலைக்கழகங்களில் திறனாய்வு இருக்கைகளை உருவாக்கியும் திறனாய்வுப் பணியினை மேற்கொண்டு வருகிறார். தமிழ்த் திறனாய்வின் அடுத்தகட்ட வளர்ச்சியாக பன்னாட்டு ஆய்விதழ்களுக்கு ஆய்வாளர்களை எழுதச் செய்யுதல் என்னும் அரும்முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு வரும் தலைமகனார், ந. சுப்புரெட்டியாரின் 100 கல்வி அறக்கட்டளை சார்பாக, **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** எனும் பொருண்மையில் ஆய்வாளர்களிடம் கட்டுரைகள் பெறப்பட்டுத் தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழில் வெளியிடுவதற்குரிய முன்னெடுப்புகளை முறையாகச் செய்து வருகிறார். ஒரு குறிப்பிட்ட நூல் அல்லது ஆசிரியர் குறித்துப் பகுப்புமுறை திறனாய்வு மேற்கொள்வதனால் இலக்கிய இரசனையை மேம்படுத்த இயலும். அவ்வகையில், ந. சுப்புரெட்டியாரின் நூல்கள் மீதான இக்கருத்தரங்க ஆய்வுக்கோவை தொடக்ககாலத் தமிழிலக்கியத் திறனாய்வின் போக்கினை ஆய்வாளர்கள் புரிந்துகொள்ளத் துணைபுரிகிறது என்பது வெள்ளிடைமலை.

**என்றென்றும் நன்றியுடன்**
**முனைவர் சா, இரமேஷ்**

# அணிந்துரை



**முனைவர் அ. திருநாவுக்கரசு,**
**இயக்குநர் – ஆராய்ச்சி,**
**டாக்டர் எம். ஜி. ஆர். கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்,**
**மதுரவாயில், சென்னை.**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் [E-ISSN: 2581-7140] மற்றும் ந.சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை (உலகத்தர சான்றிதழ் பெற்ற நிறுவனம்) இணைந்து கொணரும் **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** எனும் சிறப்பிதழ் மூலமாக வெளியிடப் பெறும் ஆய்வுக் கட்டுரைகள் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் வாழ்வினையும் பணியையும் தமிழ் கூறும் நல்லுலகம் நன்கு அறியும் பொருட்டு இணையத்தின் வழி உலக ஆய்வியல் தளத்திற்கு எடுத்து செல்லுவது வரவேற்கத்தக்கதாகும். முனைவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராக வாழ்வைத் தொடங்கிப் படிப்படியாகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்கிப் பின்பு கலைக்களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராக உயர்ந்த செம்மல். அரை நூற்றாண்டுக் காலமாகக் கல்வி உலகில் சிறந்து விளங்கியவர். பல்துறைப் பயிற்சிமிக்கவர்; பலநிலைகளில் பதவி ஏற்றுச் சிறந்தவர்; எதனையும் ஆழ்ந்து கற்பவர்; எளிதாகக் கற்பிப்பவர் மற்றும் கல்வி இயலில் தனிநோக்குச் செலுத்துபவர். இவர்தம் படைப்புகளின் பயனாக முகிழ்ந்த நூல்கள் பல. எதனையும் விரிவாகவும், விளக்கமாகவும் எழுதுபவர்கள். பேராசிரியர் படைத்த நூல்கள் அனைத்தும் அளவாலும் பொருளாலும் உயர்வானவை.

தமிழக அரசு பேராசிரியரின் நூல்களை 2008ஆம் ஆண்டு நாட்டுடைமையாக்கியது என்பது பெருமைக்குரியது. முன்னமேயே நிறுவப்பெற்று இருக்கும் ஒரு துறையில் அல்லது ஒரு நிறுவனத்தில் சேர்ந்து அதை திறமையாக நடத்தி அதை மேம்படுத்துவதென்பது ஓர் இயல்பான செயல். ஆனால், பேராசிரியர் பணியில் சேர்ந்த மூன்று இடங்களிலும் (பள்ளி, கல்லூரி மற்றும் பல்கலைக்கழகம்), இவர் தான் முதன் முதலில் தொடங்கியவர். அனைத்துமே சவால்களாகவும், புதிய அநுபவங்களாகவும் அமைந்தன. பள்ளியில் பெற்ற அநுபவத்தினைப் பின்புலமாக வைத்து கல்லூரியிலும், கல்லூரியில் பெற்ற அநுபவத்தினைப் பின்புலமாக வைத்து பல்கலைக் கழகத்திலும் திறமையாகப் பணியாற்றிய பாங்கு இங்கு குறிப்பிடதக்கது. நிறுவனங்களில் 36 ஆண்டுகள் பணியாற்றிய அநுபவம், பல்வேறு நிறுவனங்கள் மற்றும் சான்றோர்களின் தொடர்பு ஆகியவற்றின் துணைக்கொண்டு, ஓய்வுக்குப் பின்னரும் 29 ஆண்டுகள் பேராசிரியரின் கல்வி மற்றும் தமிழ்ப்பணி தொடர்ந்தன.

பல்வேறு இடங்களில், பல்வேறு காலகட்டங்களில், பல்வேறு நிறுவனங்களில் பணியாற்றிய நாட்களில் ஒருநாள் கூட பணியில் இடைவெளி இல்லாதிருந்தது வியக்கத்தக்கது. தலைமையாசிரியாக 4.7.1950 அன்று துறையூரிலிருந்து விடைபெற்று, 5.7.1950 அன்று காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பொறுப்பில் சேர்தல் பேராசிரியராக 31.7.1960 அன்று காரைக்குடியிலிருந்து விடைபெற்று, 1.8.1960 அன்று திருப்பதியிலுள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணியில் சேர்தல் 1.6.1941 முதல் 25.10.1977 வரை (36 அண்டுகள்) பணியாற்றிய காலத்தில் ஒரு நாள் கூட பணி இடைவெளி இல்லாது பணியாற்றியது பேராசிரியரின் சிறப்புகளில் குறிப்பிடத்தக்கது. திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் பேராசிரியர் ஒருவரே பணிபுரிந்து வந்தமையாலும், தனியாகப்புலம் என்ற ஒன்று இல்லாமையாலும் முனைவர் பட்டப்படிப்பிற்கு பதிவு செய்வதில் ஏராளமான காலதாமதம்

ஆயிற்று. இறுதியில் ஒருவாறு பதிவு செய்து கொண்டு 1969ல் 1200 பக்க ஆங்கில ஆய்வறிக்கையைச் சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றார். இப்பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் முதன் முதலில் முனைவர் பட்டம் பெற்றவர் எனும் சிறப்பினைப் பெற்றவர் பேராசிரியர் தான். இந்த ஆய்வேடு 32 இயல்களையும், 5234 அடிக்குறிப்புகளையும் பிற்சேர்க்கையில் 306 நூல்களையும் தன்னகத்தே கொண்டு வைணவ இலக்கியத்தின் மிகச்சிறந்த ஆய்வு நூலாக ஆய்வாளர்கள் அனைவருக்கும் பெரும் பயனுள்ளதாக விளங்கி வருகின்றது. பேராசிரியர் தன் வாழ்நாளில் எழுதிய 136 நூல்களில் 100 நூல்கள், அவர் ஓய்வு பெற்ற பின்னரே எழுதப்பெற்றன என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இச்சிறப்பிதழில் வெளியிடப்பெறும் ஆய்வுக்கட்டுரைகள் அனைத்தும் பேராசிரியரின் நூல்களைப் பின்புலமாகக் கொண்டு எழுதப்பெற்றவை. அனைத்துக் கட்டுரைகளும் பேராசிரியரின் நூல்கள் அமைந்த பல்வேறு துறைகளைச் சார்ந்துள்ளமை ஓர் அரிதான நிகழ்வு.

கல்வியியல், சமயம், அறிவியல், இலக்கியத் திறனாய்வு, தமிழ் இலக்கியம், நீதி இலக்கியம், வாழ்க்கை வரலாறு, யாத்திரை நூல்கள், தன் வரலாறு, பயண இலக்கியம், இலக்கிய ஆராய்ச்சி, வைணவம், சைவம், உளவியல், தத்துவம் என பல்வேறு துறைகளில் பேராசிரியர் நூல்கள் அவரின் இலக்கியத்திறனின் புலமையையும் ஆழத்தையும் எடுத்துரைக்கின்றன. இந்நூல்களைப் பின்புலமாக் கொண்ட இவ்வாய்வுக் கட்டுரைகள் பேராசிரியரின் பன்முக ஆளுமையை வெளிக்கொணரும் தன்மை பெரிதும் பாராட்டிற்குரியது. தமிழ், இலக்கியம், அறிவியல், உளவியல், கல்வியியல், சமயம், தத்துவம் என பல்வேறு துறைகளிலும் புலமைமிக்கவர் என தமிழ் கூறும் நல்லுலகம் அன்னாரை அங்கீகரித்தமை கண்கூடு. கல்வியியல் குறித்த நூல்களைப் (தமிழ்ப் பயிற்றும் முறை, அறிவியல் பயிற்றும் முறை, கவிதை பயிற்றும் முறை, கல்வி உளவியல் கோட்பாடுகள், கவிதையநுபவம்) பின்புலமாகக் கொண்ட ஆய்வுக்கட்டுரைகள் பேராசிரியரின் கல்விப்பணியினைக் குறித்து முழுமையாக ஆராய்கின்றன. நூல்களில் எடுத்தாளப் பெற்றுள்ள நுட்பங்கள் - தாய் மொழிப் பயிற்சியைத் தவிர அத்துடன் தொடர்பாக இருக்க வேண்டிய நவீனமுறைகள், ஆசிரியர்ப் பயிற்சி மாணாக்கர்களுக்கு மிகவும் பயனுள்ள கோட்பாடுகள், பயிற்றுவித்தலில் உளவியலின் இன்றியமையா செயற்பாடுகள், கல்வியியல் கொள்கைக்கும் பழைய தமிழ் இலக்கியங்களிலிருந்து புலனாகும் பழங்காலக் கொள்கைகளுக்கும் ஒற்றமை காணுதல், கம்பராமாயணம், திருமந்திரம், திருவருட்பா, திருக்குறள் மற்றும் பாரதியார் கவிதைகளை மேற்கோள் காட்டுவதிலிருந்து தமிழில் உளவியல் கற்போருக்குத் தெளிவாகப் புரியவைக்கும் தன்மை - அனைத்தையும் ஆய்வுக்கட்டுரைகள் முறையே செவ்வனே நோக்கி விளக்குகின்றன.

அறிவியல் நூல்களைப் (அணுவின் ஆக்கம், வானொலி, அதிசய மின்னணு, இராக்கெட்டுகள், இல்லறநெறி, இளைஞர் தொலைக்காட்சி, நமது உடல், அறிவியல் விருந்து, அம்புலிப்பயணம், அறிவியல் தமிழ், தொலை உலகச் செலவு, வாழையடி வாழை, தமிழில் அறிவியல் - அன்றும் இன்றும், ஆன்மீகமும் அறிவியலும், விண் வெளிப்பயணம், வானமண்டலக் காட்சி, தமிழில் அறிவியல் செல்வம்) பின்புலமாகக் கொண்ட ஆய்வுக்கட்டுரைகள் பேராசிரியரின் அறிவியல் மற்றும் தமிழ் திறனாய்வுத்திறன், நூல்கள் விளக்கமுறும் முறையிலும், ஆராய்ச்சிப் பாங்கிலும் அமைந்துள்ளமைக்குப் பெரிதும் பங்காற்றியுள்ளன என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றன. பேராசிரியரின் அறிவியல் படைப்புகள் யாவும் சிறார்களின் அறிவியல் கல்விக்கும், வளர்ச்சிக்கும்; அடிப்படைத் தரவுகளாக விளங்குகின்றன என்பதனைக் கட்டுரைகள் தெளிவாக வெளிக்கொணர்கின்றன. எத்தகைய அறிவியல் உண்மைகளையும் வெளிக்கொணர தமிழ் மொழி வளமுடையது என்பதனைப் பேராசிரியர் தம் நூல்களின் மூலம் நிலை நாட்டுகின்றார் எனும் கருத்தைக் கட்டுரைகள் பாராட்டி மகிழ்கின்றன.

இந்து சமயம் மிகப் பழமையையும், பெருமையையும், வரலாற்றையும் கொண்டது. இவ்வுலகில் நிலவி வரும் பல்வேறு சமயங்களுக்கெல்லாம் மூத்தது என்பது அனைவரும் ஏற்றுக்கொண்ட ஒன்று. பரந்து விரிந்த இந்து சமயம் பல்வேறு கொள்கைகளுக்கு இடம் கொடுத்து அவைகள் அனத்தையும் ஏற்று தழுவிப் போற்றுகின்றது. சைவமும், வைணமும் இந்து சமயத்திற்கு இரு கண்களாகத் திகழ்கின்றன. குறிப்பாக தமிழ் நாட்டில் இவையிரண்டும் மிகவும் பரவி வளர்ந்தோங்கி வருகின்றன. இச்சமய நூல்கள் (முத்திநெறி, சிலநோக்கில் நாலாயிரம், சைவ சமயவிளக்கு, ஆன்மீகமும் அறிவியலும், வைணவ உரைவளம், கலியன் குரல், நவவித சம்பந்தம், அர்த்தபஞ்சகம், வைணவ செல்வம் - 1 & 2, வைணவமும் தமிழும், சைவசித்தாந்தம் - ஓர் அறிமுகம், சைவமும் தமிழும், வைணவ புராணங்கள் ஐந்து இரகசியங்கள், திருப்பாவை விளக்கம், அர்ச்சிராதி, திருவேங்கடமும் தமிழ் இலக்கியம்) பேராசிரியரின் ஆய்வுக்களம் விரிவானது என்பதனைத் தெள்ளத் தெளிவாக நிலைநாட்டுகின்றன. பேராசிரியர் சைவம், வைணவம் இரண்டையும் தமது இரு கண்களாகப் போற்றுபவர் என்பதனையும், தமிழிலக்கியத்தின் பல்வேறு காலத்து நூல்களிலும், உரைகளிலும் ஆழ்ந்த புலமையுடையவர் என்பதனையும் ஆய்வுக்கட்டுரைகள் சிறந்த திறனாய்வு மூலமாக நிலைநாட்டுகின்றன. சமய உலகை மெய்யியல் நோக்கில் அலசியவர். சைவம், வைணவம் இரண்டின் ஆழத்தையும் கண்டு உணர்த்தியவர் பேராசிரியர் என்பதனை ஆய்வுக்கட்டுரைகள் செவ்வனே நிறுவுகின்றன. மேலும், மதப்பற்று அகவுணர்வாக அமைவது அன்றி புறப்பொருளாக அமைவதில்லை என்பதை அறிந்தவன் நான் எனும் பேராசிரியரின் கூற்றைக் கட்டுரையாசிரியர்கள் மிகவியந்து பாராட்டுகின்றனர். இலக்கியத் திறனாய்வுப் போக்கு கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் சமீபகாலமாக பல்கிப் பெருகிக் கொண்டுள்ளது என்பது கண்கூடு. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே திறனாய்வுக் கொள்கைளைத் தமிழ் இலக்கியத்திற்கு அறிமுகம் செய்தவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். பேராசிரியரின் பல நூல்களில் (கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, அகத்திணைக் கொள்கைகள், கம்பன் படைத்த சிறுபாத்திரங்கள், கண்ணன் பாட்டுத்திறன், பாஞ்சாலி சபதம் – ஒரு நோக்கு, குயில் பாட்டு – ஒரு மதிப்பீடு, புதுக்கவிதை – போக்கும் நோக்கும், பாரதீயம், விட்டுச் சித்தன் விரித்ததமிழ், ஆழ்வார்களின் ஆராஅமுது, பாட்டுத்திறன், சடகோபன் செந்தமிழ், பரகாலன் பைந்தமிழ், வடவேங்கடமும் திருவேங்கடமும், பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், கவிஞர் வாலியின் அவதார புருஷன் – ஒரு மதிப்பீடு, வாழும் கவிஞர்கள், பாவேந்தரின் பாட்டுத்திறன், பாண்டியன் பரிசு – ஒரு மதிப்பீடு, கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு, பல்சுவை விருந்து, கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி – ஒரு மதிப்பீடு, அண்ணல் அநுமன், மூவர் தேவாரம் – புதிய பார்வை, வாழும் தமிழ்க் கவிஞர்கள், பல்சுவைக் கதம்பம், கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் – ஒரு மதிப்பீடு) இலக்கியத் திறனாய்வைக் காணலாம். பாரதியின் நூற்றாண்டில் (1982) அவர்தம் முப்பெரும் பாடல்களைத் தனித்தனியே திறனாய்வு செய்து நூல்களை வெளியிட்டவர் பேராசிரியர். பழந்தமிழ் இலக்கியத்திலிருந்து ‘புதுத்தமிழ்’ இலக்கியம் வரை பேராசிரியர் படித்தறிந்தவர் என்பதனை ஆய்வுக்கட்டுரைகள் தெளிவுபடுத்துகின்றன. ஆங்கிலம், தமிழ், வடமொழி ஆகிய மொழிகளில் நிலைத்து வாழ்ந்து வரும் இலக்கிய, இலக்கணங்களை நன்கு கற்றுத் தெளிந்து அவைகளிலுள்ள கருத்துக்களைத் திறனாய்விற்கு பேராசிரியர் பயன்படுத்தியுள்ளமையை ஆய்வுக்கட்டுரைகள் வெளிக்கொணர்கின்றன.

பேராசிரியர் யாத்ததமிழ் இலக்கிய (கவிஞன் உள்ளம், காலமும் கவிஞர்களும், காதல் ஓவியங்கள், அறிவுக்கு விருந்து, தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, முத்தொள்ளாயிர விளக்கம், பரணிப் பொழிவுகள், கம்பனில் மக்கள் குரல், தமிழ் இலக்கியத்தில் அறம், நீதி, முறைமை, புதுவை(மை)க் கவிஞர் பாரதியார் – ஒரு கண்ணோட்டம், பாவேந்தர் பாரதிதாசன் – ஒரு கண்ணோட்டம் வாய்மொழியும் வாசகமும், இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், திருக்குறள் தெளிவு, அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம், வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்) நூல்களில் காணும்

பரந்துபட்ட நூலறிவும், பன்மொழி ஆற்றலும், ஆய்வு நேர்மையும், ஒப்பீட்டுரைக்கும் பாங்கும், தருக்கமுறை விளக்கங்களும், அழகிய, எளிய உரைநடைக் கூறுகளும் ஆய்வுக்கட்டுரைகளில் திறம்பட கையாளப் பெற்றுள்ளன. இலக்கிய கூறுகளை நயம்பட கூறுமிடத்து, பேராசிரியர் உளவியல் மற்றும் அறிவியல் துறைகளிலுள்ள பயன்பாட்டினை மிகத்திறமையாகத் கையாண்டிருப்பதைக் கட்டுரைகள் மிகத்தெளிவுபட உரைக்கின்றன. பேராசிரியர் எழுதிய இந்த வாழ்க்கை வரலாற்று (தமிழ்க்கடல் இராய சொ.முத்தமிழ்க்காவலர் KAP விஸ்வநாதம், தந்தைபெரியார் சிந்தனைகள், தாயுமானவர், இராமலிங்க அடிகள், பட்டினத்தடிகள், காஞ்சிபிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமிகள்) நூல்கள் ஞானியர்களின் வரலாறுகளையும், அவர்களது அருள் செயல்களையும் ஒரு சேர யாவரும் கற்று உணரும் வகையில் எளிய இனிய தமிழ் நடையில் வெளிக்கொணர்கின்றன. இந்நூல்கள் சமய நோக்கர்களும் மற்றும் தமிழர்களும் படித்து பயன்பெற தக்கவை என கட்டுரையாளர்கள் எடுத்துரைக்கின்றனர்.

பேராசிரியரின் இந்த யாத்திரை நூல்கள் (மலை நாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், வட நாட்டுத் திருப்பதிகள், சோழ நாட்டுத் திருப்பதிகள் - 1, சோழ நாட்டுத் திருப்பதிகள் - 2, தம்பிரான் தோழர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர்) அவரது முனைவர் பட்ட ஆய்வுக்களத்தைப் பின்புலமாகக் கொண்டு வெளியிடப்பெற்றன. பிறப்பால் பேராசிரியர் சைவர் வளர்ப்பாலும் சைவர். தம் வாழ்வில் அனைவரையும் அன்பால் பிணைக்கும் அருளாளர். அவர் எழுதிய நூல்களில் வைணவ நூல்களே அதிகம். அவரது முனைவர் பட்ட ஆராய்ச்சியே வைணவம் (நாலாயிர திவ்வியப் பிரபந்தம் - நம்மாழ்வார்) என்பது இங்கு நோக்கற்பாலது. முனைவர் பட்ட ஆராய்ச்சியின் விளைவாக, 108 வைணவ திருத்தலங்களில் நூற்றைச் சென்று சேவித்து தாம் பெற்ற அநுபவங்களை ஆறு நூல்களாகப் பேராசிரியர் வெளியிட்டார். பேராசிரியர் வைணவத்தில் மிகவும் ஈடுபட்டவராதலால் சைவசமயக் கருத்துகளை ஆழங்கால் பட்டு விளக்குங்கால் வைணம் பற்றிய கருத்துக்களைத் தொடர்புபடுத்திக் காட்டுகின்றார். இந்நூல்களை வாசிப்போர் இத்திருப்பதிகளைப் பேராசிரியரோடு தரிசிக்கின்ற ‘மறந்தும் புறந்தொழாமாந்தராய்’ மாறிவிடும் மனநிலையை அடைகின்றனர். மேலும், போராசிரியர் வைணவக் கருத்துகள் பலவற்றை நூலை வாசிப்போர் மனதில் தெளித்து அவர்களது சமயக் கருத்துகளைக் கிளறுகின்றார். இந்நூல்களை வாசிப்போர் அனைவரும் இவருடன் பயணத்தை மேற்கொண்டு இத்திருத்தலங்களையெல்லாம் சேவித்த பேற்றைப் பெற்றுவிட்டதான திவ்விய அநுபவத்தைப் பெறுகின்றார்கள் என்பதனை இவ்வாய்வு கட்டுரைகள் மிகச்சிறப்பாக வெளிக்கொணர்கின்றன. எம்பெருமானின் அநந்த கல்யாண குணங்களை எடுத்துரைக்கும் போதும், அவனுடைய வெற்றிச் செயல்களையும், வீரச் செயல்களையும் எடுத்துக் கூறும்போதும், வியக்கத்தக்க ஈடுபாட்டோடும், தோய்ந்த உள்ளத்தோடும், விரிந்த மனநிலையோடும் தம்மையே மறந்த நிலையைப் பேராசிரியர் எய்தி விடுகின்றார் எனும் உண்மையைக் கட்டுரையாளர்கள் ஆராய்ந்து வெளிக்கொணர்கின்றனர்.

**மொழிபெயர்ப்பு நூல்கள்:** UNESCO: அறிவியல் பயிற்றும் மூல முதல்நூல், அணுக்கரு பெளதிகம், மானிட உடல், வேமனர், CR ரெட்டி, குரஜாட.

பேராசிரியர் மூன்று அறிவியல் நூல்களைத் தமிழிலும் மற்றுமொரு மூன்று நூல்களை சாகித்திய அகாதெமிக்காகவும் மொழிபெயர்த்துள்ளார். தொல்காப்பியர் மொழிபெயர்ப்பினை ‘அதர்ப்படயாத்தல்’ என குறிப்பிட்டுச் செல்கின்றார். தமிழ் மொழியாக்கத்தில் தூய்மையான ஆர்வமே முக்கியமாகும். கூட்டங்களில் பாமர மக்களிடையே ‘வெற்று வேட்டுகள்’ எழுப்புவதை விட அறிஞர்கள் அமைதியாக உருப்படியானப் பணியில் இறங்குவது இன்று மிகவும் வேண்டப்படுவதொன்று. துறையறிவு சிறிதுமின்றி தமிழ்ப் புலமையொன்றையே துணையாகக் கொண்டு மொழிபெயர்ப்புத் துறையில்

இறங்குவது விரும்பத்தக்கதன்று. ஒரு நூல் இஃது ஒரு மொழிபெயர்ப்பு என்று தோன்றா வண்ணம் முதல் நூல் போன்றே மொழிபெயர்ப்பு அமைதல் சாலச் சிறந்ததாகும்.

மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையைக் குறித்துப் பேராசிரியரின் கருத்து கீழ்கண்டவாறு:

"தமிழ் மொழி வளம் பெறவேண்டுமானால் எல்லாத் துறைகளிலும் நல்ல புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். எந்தத் தமிழனும் தமிழிலேயே படித்து எத்தகைய உயர்ந்த அறிவையும் பெற வாய்ப்புகள் இருக்க வேண்டும்". மொழிபெயர்ப்பு நூல்கள் மூலமாக, பேராசிரியரின் அறிவியல் அறிவும், ஆங்கில அறிவும், தமிழ் மொழிப்பற்றும் மொழிபெயர்ப்புப் பணியில் பெரும் பங்குவகித்தன என்னும் செய்தி ஆய்வுக்கட்டுரைகள் மூலமாக வெளிப்பெறுகின்றது. உலகிலேயே இருபதிற்கும் மேலான மொழிகளைக் கொண்டது நம் இந்தியநாடு. இருபத்துநான்கு மொழிகளில் உள்ள இலக்கிய வளத்தை ஒவ்வொரு ஆண்டும் தொடர்ந்து மேம்படுத்தும் மாபெரும் சாதனையைச் செய்யும் ஒரே நிறுவனம் சாகித்திய அகாதெமி. முதலில் 24 மொழிகளிலிருந்து ஒரு நூலை தேர்தெடுத்து, அவைகளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து, அந்த ஆங்கில மொழிபெயர்ப்புகளை மீண்டும் 22 மொழிகளில் மொழிபெயர்ப்பது என்பது ஓர் உயரிய இலக்கியப் பணிமட்டுமின்றி ஒரு பெரும் சாதனையாகும். சாகித்திய அகாதெமி மொழிபெயர்ப்புப் பணியினைப் பேராசிரியருக்கு வழங்கியது. அவ்வாறு வழங்கப்பெற்ற கீழ்கண்ட நூல்களைப் பேராசிரியர் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். 1. வேமனர் (1978), 2. C R ரெட்டி (1981), 3. குரஜாட (1982) மொழிபெயர்ப்பிற்குத் தேர்ந்தெடுக்கப் பெற்ற மூன்று ஆங்கில நூல்களும் அறிவியல் உலகில் பெரும் அளவில் பயன்பாட்டினை நல்கின என்பது குறிப்பிடத்தக்கது. பேராசிரியரின் மொழிபெயர்ப்புத் திறனைச் சாகித்திய அகாதெமி பயன்படுத்திக் கொண்டது பெரிதும் பாராட்டிற்குரியது. அணுக்கரு பௌதிகம் என்ற மொழிபெயர்ப்பு நூலிற்கு, உயர்திரு இராஜாஜி அவர்களின் அணிந்துரை:

> 'I can understand the difficulties of a translator of scientific books and I tender my congratulations to Prof. N. Subbu Reddiar on his having won the prize for the best translation of Heisenberg's Nuclear Physics. - Bharat Rathna C Rajagopalachari [Rajaji]

பேராசிரியருக்கு வழங்கப் பெற்ற மாபெரும் பாராட்டு.

**தன் வாழ்க்கை வரலாறு**:

(நினைவுக்குமிழிகள் - பகுதி:1, நினைவுக்குமிழிகள் - பகுதி:2, நினைவுக்குமிழிகள் - பகுதி:3, மலரும் நினைவுகள், நினைவுக்குமிழிகள் - பகுதி:4, நீங்காத நினைவுகள் - 1, நீங்காத நினைவுகள் - 2) நினைவுக் குமிழிகளின்; நான்குபகுதிகளாவன:

- பகுதி 1 –கல்வி (1916-1941);
- பகுதி 2 – தலைமையாசிரியர் (1941-1950);
- பகுதி 3 –கல்லூரிப்போராசிரியர் (1950-1960);
- பகுதி 4 –பல்கலைக்கழகப் பேராசிரியர் (1960-1977).

சிலம்பொலி செல்லப்பன் தமது அணிந்துரையில் (நினைவுக்குமிழிகள் - 1) குறிப்பிடுவது: 'தன் வரலாறு என்பதை விட 1920, 1930களில் தமிழ்நாட்டுச் சிற்றூர்களின் நிலை, மக்களின் வாழ்க்கைமுறை, திண்ணைப்பள்ளிக் கூடங்களில் கல்வி கற்றுத்தந்த முறை, பள்ளி, கல்லூரிகளில் கல்விநிலை போன்றவற்றையெல்லாம் படம் பிடித்துக் காட்டுகின்ற சமூக வரலாற்று விளக்க நூல் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும்.' தலைமையாசிரியாராகப் பணிபுரிந்த காலத்தில் அவர் அடைந்த இடர்ப்பாடுகளும், இன்னல்களும், 'விரிப்பின் நீளும், தொகுப்பின் மிஞ்சும்' என கட்டுரையாசிரியர்கள் குறிப்பிட்டு வியக்கின்றனர். பேராசிரியரின் கல்வி மற்றும் தமிழ்ப் பணியினை இந்நூல்கள் மிகவிரிவாக எடுத்துரைக்கின்றன. பேராசிரியரின் பன்முக நோக்கை முழுமையாக விவரிக்கும் வகையில்: அவரது

வாழ்க்கை வரலாறு https://archive.org/details/IllustEncyloSubbuReddiar என்ற இணைய தளத்தில் அமைக்கப் பெற்றுள்ளது.

கடல் போலப் விரிந்து பரந்து கிடக்கும் பேராசியரின் எழுத்துலகில் புகும்போது ஒருவன் எதைத் தொடுவது எதைவிடுவதெனத் தெரியாமல் மலைத்து நிற்பான் என்பது நடைமுறை உண்மை. ஆனால் எல்லாவற்றிற்கும் ஓர் அடிப்படையை அவர் வைத்திருப்பது தான் எழுத்துக்களில் ஆழத்தை விரிவின் அளவுக்குத் தருகிறது. பேராசிரியரின் நூல்களை பின்புலமாகக் கொண்டு நாற்பது ஆய்வு மாணாக்கர்கள் ஆய்வு செய்து பல்வேறு பல்கலைக்கழகங்களில் பட்டம் பெற்றுள்ளனர். அவரது அனைத்து நூல்களும் https://archive.org/details/@centenary1916nsr2016 என்ற இணைய தளத்தில் அனைத்து தமிழ் ஆய்வாளர்களும், ஆர்வலர்களும் பயன்பெறும் வண்ணம் வழங்கப்பெற்றுள்ளன. ஆய்வுக்கட்டுரைகள் தேர்ந்தெடுக்க பெற்ற முறைமை மிகவும் பாராட்டுதற்கு உரியது. ந சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளையால் நிறுவப்பெற்ற மதிப்பீட்டுக்குழு, வரப்பெற்ற கட்டுரைகளை முதல் மதிப்பீடு செய்தது. தேர்ந்தெடுக்கப் பெற்ற கட்டுரைகள் இரண்டாம் மதிப்பீட்டிற்கு அனுப்பப்பெற்றன.

*தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்* நிறுவிய மதிப்பீட்டுக் குழு அக்கட்டுரைகளை இரண்டாம் மதிப்பீடு செய்தது. இரு மதிப்பீட்டிற்குப் பின்பு, கட்டுரைகள் இறுதியாக சிறப்பிதழில் வெளியிட ஏற்கப்பட்டன. வெளியிடப்பெறும் ஆய்வுக்கட்டுரைகள் அனைத்தும் காலம் வென்ற மூத்ததமிழ் அறிஞர், பரந்துபட்ட ஆய்வு நெறியாளர் மற்றும் வைணவத்தில் ஆழங்கால்பட்ட இறையன்பர் ந சுப்புரெட்டியார் அவர்களின் பன்முக ஆளுமையையும, வெற்றியையும், வீச்சையும், நோக்கரிய நோக்கையும், நுணுக்கரிய நுண்ணுணர்வையும் பறைசாற்றுகின்றன. இப்பன்னாட்டு ஆய்விதழ் பல்கலைக்கழக மான்ய குழுவினால் அங்கீகரிக்கப் பெற்ற ஒன்று (UGC Care List). மேலும், இவ்வாய்விதழ் இருபதிற்கும் மேற்பட்ட இணையவழி மதிப்பீட்டு மற்றும் ஆய்வுத்தளங்களோடு இணைக்கப் பெற்றுள்ளது. இச்சூழ்நிலையில் தேர்ந்தெடுக்கப் பெற்ற கட்டுரையாளர்கள் அனைவரும் தம் முயற்சி வெற்றியடைந்ததை எண்ணி மகிழ்வர் என்பது திண்ணம். அனைவருக்கும் வாழ்த்துக்கள்.

**என்றென்றும்**

**முனைவர் அ. திருநாவுக்கரசு**

# பதிப்புரை



**முனைவர் த.மகேஸ்வரி,**

**இயக்குநர் மற்றும் பதிப்பாசிரியர்,**

**தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ், (IJTLLS)**

**விருதுநகர்- 626001,**

**தமிழ்நாடு, இந்தியா.**

தமிழ்மொழி மற்றும் இலக்கியத்திற்காக எமது *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்* (Ijtlls) தம் இலக்கிய மற்றும் ஆராய்ச்சி அரும்பணியைச் செம்மையாகச் செய்து வருகின்றது. யு.ஜி.சி. கேர் (UGC CARE), எம்.எல்.ஏ (MLA) மற்றும் டி.ஓ.ஏ.ஜே (DOAJ) போன்ற ஆய்வுத் தளங்களில் மதிப்பீடு செய்யப்பட்ட எமது ஆய்விதழில் கௌரவ சிறப்பிதழ் ஆசிரியர்களாகப் பணியாற்றிட தன்னார்வம் கொண்ட பேராசிரியர்களுக்கு வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது. மேலும், இச்சிறப்பிதழில் பெருமைமிகு பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள் மற்றும் ஆய்விதழ்களில் இருந்து பங்கு கொண்ட பேராசிரியர்கள் சிறந்த கட்டுரைகளை வழங்கியமைக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரைப் பற்றி தொகுக்கப்பட்ட இச்சிறப்பிதழ் தமிழ் ஆய்வுலகில் மிகச்சிறந்த பணியாகும். தமிழ்மொழியின் வளர்ச்சியினை எண்ணிச் செயல்பட்டு தமது காலத்தை அற்பணித்த வள்ளலைப் பெருமைப்படுத்துவதாகப் **பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியாரின் பன்முக ஆளுமை** என்ற பொருண்மையில் சிறப்பிதழைத் தொகுத்து தரமான 60 ஆய்வுக்கட்டுரைகளைப் பெற்று ஆய்வு நெறிமுறைகளின்படி தணிக்கைச் செய்யப்பட்டு, மதிப்புரை வழங்கி, செம்மைப்படுத்தி இணையத்தில் எமது ஆய்விதழ் வாயிலாக சிறப்பிதழாகப் பதிப்பித்தமைக்கு அகமகிழ்வடைகிறேன். ஆய்வுக்கட்டுரைகள் வழங்கி சிறப்பித்தத் தமிழ்ப்பேராசிரியர்கள், எழுத்தாளர்கள், தமிழ் ஆர்வலர்கள் மற்றும் ஆராய்ச்சி மாணவர்களை மனதாரப் பாராட்டுகிறோம். *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ் / International Journal of Tamil Language and Literary Studies* செம்மையாய் செயல்பட்டு ஆய்வுக் கட்டுரைகளை இணையத்தில் பதிப்பு செய்து வருகின்றது. எதிர்காலத்தில் தமிழ் ஆராய்ச்சிகளை உலக அரங்கத்திற்கு எடுத்துச் செல்ல ஓர் ஆய்வுக்களமாகவும் செயல்பட்டு வருகிறது. அதற்கு உறுதுணை அளித்த அனைவருக்கும் நன்றி.

**என்றும் தமிழ்ப்பணியுடன்**
**முனைவர் த.மகேஸ்வரி**

# பொருளடக்கம்

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அறவியல் சிந்தனைகள்

## Professor N. Subbu Reddiar's Virtuous Thoughts

**அ. அக்ஸிலியா மேரி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.
**A. Auxilia Mary,** Assistant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.
**ORCiD:** https://orcid.org/0000-0002-8204-8926
**DOI: 10.5281/zenodo.7295010**

### Abstract

*The word 'Virtue' has a broad meaning. It can include all the good deeds by man. It is interesting to note that in Tamil literature, the practice of virtue, both in personal and public Tamil culture, is manifested. Prof. N. Subbu Reddiar's references from typical texts such as "Tolkappiyam", "Nannul", Sangam literature, and "Aimperumkappiyam" etc. are worth notable. The author's knowledge of religious literature is well expressed when he deals with didactic and devotional literature. In particular, the in-depth training in Vaishnava literature and traditions aids the research study. The author explains the virtues of love and the evils caused by selfishness and states that to live and praise the virtues of thought, speech, and action, one must have the power to keep the mind, language and conscience under his control. Being jealous does not make you resourceful and never leads to progress. Moreover, those who are jealous have not advanced in their life anytime. "When the heart is rotten by the dirt, the people are pleased by the dirt; Lord!" the critical claim of Thayumaanavar, needs to be given thought says the author. There were many witnesses in those ancient days when people lived a life of apostasy. They enlightened the earthy king and the common people raising them to righteousness. Even in the War attrition, virtuous policies have been strictly adhered. N. Subbu Reddiar, rightly points out the pride of the scholars and great thinkers of the ancient virtuous life. As long as there is ignorance and hypocrisy in life, all the misery that does not exist, would seem to be existing and thus cause great anxiety and fear. It would also stumble anyone without knowing the way to get rid of the suffering within. Therefore, the author says that well-being requires consciousness and the elimination of illusions. If we think deeply, we will know that all evils are born out of anger which is contrary to the grace of renunciation, and he suggests abandoning anger. Speaking of hospitability, the author's reference to today's luxuries that take place in the name of hospitability and the inability to provide real warmth serves as an example of his analytic insightfulness. This article explores Prof. Subbu Reddiar's multifaced perspective of presenting the didactic virtuous thoughts in his works.*

**Keywords:** Virtue, Anger, Hospitability, Ignorance, Amazement.

### ஆய்வுச்சுருக்கம்

*'அறம்' என்ற சொல் விரிந்த பொருளையுடையது. மனிதன் புரியும் நற்செயல்கள் அனைத்தையும் இதில் அடக்கிக் கூறலாம். தமிழர் வாழ்க்கையில் அக வாழ்க்கையிலும் புற வாழ்க்கையிலும் அறம் கடைபிடிக்கப்பட்டு வருதலைத் தமிழ் இலக்கியங்களில் குறிப்பாகவும், தெளிவாகவும் புலப்படுத்திருப்பதைக் கண்டு மகிழலாம். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தொல்காப்பியம், நன்னூல், சங்க இலக்கியம், ஐம்பெருங்காப்பியங்கள், முதலான இலக்கண*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*இலக்கிய நூல்களினின்று மேற்கோள்கள் எடுத்துக்காட்டியது சிறப்பான ஒன்று. அறத்தோடு நிற்றலைப் பக்தி இலக்கியத்தோடு புணர்த்திப் பேசும்பொழுது ஆசிரியரது சமய இலக்கிய அறிவு நன்கு வெளிப்படுகிறது. குறிப்பாக வைணவ இலக்கியத்திலும், மரபுகளிலும் உள்ள ஆழ்ந்த பயிற்சி ஆய்வுக்குத் துணைசெய்கிறது. அன்பின் சிறப்பையும் தன்னலத்தினால் ஏற்படும் தீமைகளையும் ஆசிரியர் நன்கு விளக்குகிறார். எண்ணத்தாலும், பேச்சாலும், செயலாலும் இல்வாழ்வார் அறத்தைப் போற்ற வேண்டுமானால் மனம், மொழி, மெய் என்பவற்றைத் தம் ஆட்சியின் கீழ் வைத்திருக்கும் ஆற்றல் பெற்றிருத்தல் வேண்டும் என்கிறார் ஆசிரியர். பொறாமைபடுவதால், உள்ள வளமும் முன்னேற்றம் அடைய வழியும் அமையாது. பெரும்பாலும் பொறாமைப்பட்டு முன்னேறியவர்களும் இல்லை "அழுக்காற்றால் நெஞ்சம் அழுங்கியபுன் மாக்காள் இழுக்காற்றால் இன்ப நலம் எய்தார் பராபரமே!" என்ற தாயுமானவர் வாக்கைச் சிந்தித்தல் வேண்டும் என்கிறார் பேராசிரியர். இல்வாழ்வு வாழ்ந்து உள்ளம் துறந்த சான்றோர்கள் அக்காலத்தில் பலர் இருந்தனர். இவர்கள் மண்ணாளும் மன்னருக்கும் மண்ணில் வாழும் மக்களுக்கும் அறிவு ஒளியூட்டி வாழ்ந்து அவர்களை நன்னெறியில் உய்த்தனர். சான்றோர்கள் உரைத்த அறவுரையின் கனத்தால் போரிலும் அறக்கொள்கை கடைப்பிடிக்கப் பெற்றது. இவ்வாறு சான்றோர்களின் பெருமிதத்தைச் சுட்டிக்காட்டி உள்ளார் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள். வாழ்க்கையில் அறியாமையும் போலியறிவும் உள்ள வரையிலும் இல்லாத துன்பமெல்லாம் இருப்பதாகக் கொண்டு கவலையும் அச்சமும் மிகுந்து வருந்த நேர்கிறது. உள்ள துன்பத்தைப் போக்கிக் கொள்ளவும் வழி அறியாமல் திகைக்கவும் நேர்கிறது. ஆகையால் நல்வாழ்வுக்கு மெய்யுணர்வு வேண்டும்; மயக்க உணர்வு நீங்குதல் வேண்டும் என்கிறார் ஆசிரியர். ஆழ்ந்து சிந்தித்தால் தீமைகளெல்லாம் வெகுளியிலிருந்து பிறக்கின்றன என்பது தெரியவரும். உள்ளத்திலுள்ள வெறுப்பும் பகையுமே வெகுளியாய் வெளிப்படும். அது துறந்தார்க்கு இன்றியமையாததான அருளுடைமைக்கு மாறானது. ஆகையால் அதற்கு இடம் இல்லாமல் காத்துக் கொள்ள வேண்டும் என்கிறார். விருந்தோம்பலைச் சொல்லுங்கால் இக்காலத்தில் விருந்து என்ற பெயரில் நடக்கும் ஆடம்பரங்களையும், உண்மையான விருந்து வழங்க இயலாத நிலையையும் குறித்து ஆசிரியர் கூறியிருப்பது அவரது நுனித்த பார்வைக்கு ஓர் எடுத்துக்காட்டு என்றே கூறலாம். மேலும் ஆசிரியர் பல்துறை நோக்கில் அறவியல் சிந்தனைகளை இச்சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டுவது பற்றி இக்கட்டுரை ஆராய்கின்றது.*

**குறிப்புச்சொற்கள்**: அறம், வெகுளி, விருந்து, அறியாமை, திகைத்தல்.

**முன்னுரை**

தமிழ்ப்பணி, அறப்பணி, சமயப்பணி ஒருசேர செய்தவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எண்ணற்ற நூல்களை வெளியிட்டு இலக்கியப்பணியைச் செய்து வந்த பேராசிரியர் 73 – வது அகவையின் நினைவாக தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி - முறைமை என்னும் நூலினை வெளியிட்டிருந்தார். இந்நூலில் அறம் என்ற தலைப்பில் கூறப்பட்ட செய்திகள் அனைத்தும் சிறப்பானவை. மேலும் இந்நூலில் தொல்காப்பியம், நன்னூல், சங்க இலக்கியம், ஐம்பெருங் காப்பியங்கள் முதலான இலக்கண, இலக்கியங்களை சான்று காட்டி தெளிவாக்கியிருப்பது பிற்காலத்தில் ஆய்வு மேற்கொள்ளும் ஆய்வு மாணவர்களுக்கு மிகவும் உதவிகரமாக இருக்கும். தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி - முறைமை என்னும் நூலினை முதன்மை ஆதாரமாகக் கொண்டு இவ்வாய்வு கட்டுரையானது ஆராய முற்படுகிறது.

**அறம்**

அறம் என்ற சொல் விரிந்த பொருளுடையது. மனிதன் புரியும் நற்செயல்கள் அனைத்தையும் இதில் அடக்கி கூறலாம். தமிழர் வாழ்க்கையில் - அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் அறம் கடைபிடிக்கப்பட்டு வருதலைத் தமிழ் இலக்கியங்களில் குறிப்பாகவும், தெளிவாகவும் புலப்படுத்தியிருப்பதைக் கண்டு மகிழலாம். ‘அறம்’ என்ற சொல் நீதியைக் குறிக்கும். அறம் என்ற சொல் பல நீதி கருத்துக்களை உள்ளடக்கியுள்ளது. பேராசிரியர் மனத்தூய்மையின் அடிப்படையில் அமைவது தான் அறவாழ்க்கையாக இருக்க முடியும் என்று குறிப்பிட்டுள்ளார். மனத்தூய்மை இல்லையாயின் காதல் வாழ்க்கையால் மனம் பண்படுவதும் இல்லை. பொது வாழ்க்கையிலும் அந்த மனம் தக்கவாறு பயன்படுவதில்லை. பிறர்க்கும் பயன்படுவதில்லை. அறத்திற்கு அடிப்படை மனத்தூய்மை என்பதை,

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற (குறள். 34)**

என்ற குறளால் விளக்குவார். மேலும் வள்ளுவப் பெருந்தகை அறத்தில் - அறநெறியில் - அழுத்தமான நம்பிக்கையுடையவர். மறந்தும் பிறர்க்குத் தீங்கு பயப்பனவற்றை எண்ணக்கூடாது. அவ்வாறு எண்ணினால் எண்ணியவனுக்கே கெடுதி விளையும். அவ்வாறு விளையுமாறு அறமே செய்துவிடும் என்கின்றார்.

**மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்**
**அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு (குறள். 204)**

என்பது அவர் காட்டும் அறவழி ஒளிவிளக்கு ஆகும். நாம் செய்யும் கெடுதியானது எப்பொழுதாவது நம்மை தாக்கும் என்பதாகும்.

திருமுருகாற்றுப்படையில்,

**அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்டு**
**ஆறினிற் கழிப்பிய அறனில் கொள்கை (திரு. முருகு., அடி .188 - 189)**

என்ற அடிகளில் அறத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகிறார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சமண முனிவரின் பாடல் ஒன்றினால் விரைந்து அறஞ் செய்யுமாறு ஆற்றுப்படுத்துதலை ஈண்டு நினைக்கின்றோம்.

**வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்**
**வைகலும் வைகலை வைகும் என்று இன்புறுவர்**
**வைகலும் வைகற்றம் வாழ்நாண் மேல் வைகுதல்**
**வைகலை வைத்துண ராதார் (நாலடியார், பா. 39)**

நாடோறும் பொழுது கழிதலைத் தமது ஆயுள் நாளிலே கழிதலாக வைத்து நாள் கழிதலின் உண்மை அறியாதவர்கள், நாள்தோறும் நாள் கழிதல் வந்து கொண்டே இருக்க, அதனை நேரில் கண்டிருந்தும் அதன் உண்மையை அறிந்து அறஞ் செய்யாதவர்களாய் நாள்தோறும் ஆயுள் கழிதலை மேன்மேல் இருக்கின்றதென்று எண்ணி மகிழ்ச்சி அடைவர் என்பது இப்பாடலின் கருத்து.

**அன்புடைமை**

அன்புடன் வாழ்வதே இல்வாழ்க்கையின் பண்பாகும். அறத்தைப் போற்றி வாழ்வதே அதன் பயனாகும்.

**அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது (குறள். 45)**

என்பது வள்ளுவரின் அருள்மொழியாகும். உலகில் அன்பு இல்லாதவர்களை காண்பது அரிது. கண்ணீர் விடாதவர்கள் உலகில் இருந்தால் அவர்களை அன்பு இல்லாதவர்கள் என்று கூறலாம். மக்கள் வாழ்க்கையில் தன் துன்பத்திற்காக விடும் கண்ணீரும் உண்டு, பிறர் துன்பத்திற்காக விடும் கண்ணீரும் உண்டு. வாழ்க்கையானது சிறக்க வேண்டின் பிறர் துன்பத்திற்காகக் கண்ணீர் விடுவதே அதிகமாகின்றது. இந்தக் கண்ணீர் தான் மக்களின் சிறப்பான இயல்புகள் அமைந்துள்ளன. இல்லறநெறியில் ஒழுகுவோர் தாம் அன்பு செலுத்துகின்றவர்களுக்கு ஏதேனும் துன்பம் நேர்வதைக் கண்டால், உடனே கண்ணீர் உள்ளத்தில் கொண்ட பல அன்பைப் பலர் அறிய வெளிப்படுத்துகின்றனர் என்கிறார் பேராசிரியர். ஆகையால் அன்பினை அடைத்து வைக்கின்ற தாழ் இல்லை. இதனை

**அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும் (குறள். 71)**

வள்ளுவர் இரண்டு வரிகளில் கூறுகின்றார்.

அன்பு இல்லாத உயிர் வாழ்க்கைக்கு உரிமை இல்லாத உயிர் என்று சொல்லலாம். எலும்பு இல்லாத உடம்பு வெயிலில் இருப்பதற்கு உகந்தது அன்று; அதனை வெயில் அழிக்கும். அன்பு இல்லாத மனிதனை அறம் அழிக்கும். உயிர் வாழ்க்கைக்கு இடம், பொருள் முதலிய வசதிகளும் அமைதல் வேண்டும். அன்பு இல்லையாயின் யாதொரு பயனும் இல்லை. அன்பு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அடிப்படையாக வாழும் உடம்பே உயிர் நின்ற உடம்பு; அன்பு இல்லாதவர்க்கு உள்ள உடம்பு எலும்பைத் தோல் போர்த்திய உடம்பு; உயிருடன் வாழ்ந்தாலும் பிணத்திற்கே பொருந்தும்.

**என்பிலதனை வெயில் போலக் காயுமே**
**அன்பி லதனை அறம் (குறள். 77)**
**அன்பின் வழியது உயிர்நிலை, அஃதிலார்க்கு**
**என்பு தோல் போர்த்த உடம்பு (குறள். 80)**

என்ற வள்ளுவரின் வரிகளுடன் விளக்கம் காட்டி அன்பினை விளக்குகின்றார் பேராசிரியர்.

**விருந்தோம்பல்**

வள்ளுவர் பெருமான் வாழ்ந்த காலம் அமைதியான காலம். பரபரப்பே இல்லாத காலம். உணவு விடுதிகளும், தங்கும் விடுதிகளும் இல்லாத காலம். மேலும் பணம் மாற்றம் அக்காலத்தில் இல்லை. வெளியூர்களுக்குச் செல்வோர் பல நாட்களுக்கு வேண்டிய உணவினை கையில் கொண்டு செல்ல முடியாது;பல திங்களுக்கு வேண்டிய அரிசி முதலியவற்றைக் கொண்டு செல்லவும் முடியாது. செல்வந்தர்கள் சொந்தமான ஊர்திகளில் செல்லும் போது மட்டுமே உணவுப் பொருட்களை உடன் கொண்டு செல்ல முடிந்தது. மற்றவர்களால் அவ்வாறு கொண்டு செல்ல முடியவில்லை. அக்காலத்தில் ஊர்தோறும் இன்றியமையாத அறமாகப் போற்றப் பெற்று வந்தனர் என்பதையும், அறத்தை மக்கள் பெரிதாகப் போற்றி வந்தார்கள் என்பதையும் பேராசிரியர் கூறியிருப்பது அவரின் சிந்தனையில் சிறந்தது.பழகியவர்களை அன்போடு வரவேற்று உணவளிக்கும் வழக்கத்தை தமிழர்களுக்குரிய பண்பாக கொண்டிருந்தனர் என்பதை,

**மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து (குறள். 90)**

என்னும் குறளைச்சான்று காட்டி விளக்குகின்றார்.

**பொறையுடைமை**

பொறையுடைமை இல்லறக் குணங்களுள் ஒன்று. பொறுத்தவர் பூமியாழ்வார் என்பது பழமொழி. பாண்டவர்களுள் தருமன் மட்டும் பொறையுடைமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றான். பொறுமையைப் போற்றுகின்றவர் நிலத்தை நோக்கிக் கற்க வேண்டும். தனக்கே குழிப்பறிக்கின்றவர்களையும் அது தாங்குகின்றது. அதனால் நிலத்தின் ஆற்றல் குறைந்து போவதில்லை. அதுபோல இகழ்வாரையும் பொறுத்துக் கொள்வது சிறந்த அறம்.

**அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**
**இகழ்வார்ப் பொறுத்தல் தலை (குறள். 151)**

என்பது வள்ளுவர் வாக்கு. ‘பொறுமைக்குத் தருமன்’ என்று முன்னர் குறிப்பிட்ட பேராசிரியர் அதனை சிறதளவு விளக்குவேன் என்று கூறி கிருட்டிணனோடு பாண்டவர்கள் கலந்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

யோசிக்கின்றனர். சிந்து செய்தருளுமாறு வேண்டுகின்றான் தருமன். சிந்துரத்தின் மருப்பு ஒசித்த செங்கண் மாலை – கண்ணனைத் தருமன் வேண்டவது,

**முந்து ஊர்வலம் பணிக்கொடியோன் மூதூரில்**
**நடந்து உழவர் முன்றில் தோறும்**
**நந்து ஊரும் புனல் நாட்டின் திறம் வேண்டு;**
**நாடு ஒன்றும் நல்கான் ஆகில்;**
**ஐந்து ஊர் வேண்டு; அவை இல் எனில் ஐந்து இலம் வேண்டு;**
**அவை மறுத்தால் அருபோர் வேண்டு (வில்லிபாரதம், கிருட்டிணன் தூது, பா.9)**

இதைக் கேட்டிருந்த வீமனால் பொறுத்துக் கொள்ள முடியாமல் வெறுத்து பேசிகின்றான்.

**இது பொறுப்பதில்லை – தம்பி!**
**எரிதழல் கொண்டு வா**
**கதிரை வைத்திழந்தான் – அண்ணன்**
**கையை எரித்திடுவோம் (பாஞ்சாலி சபதம், பா. 273)**

இப்பாடலில் தருமனின் அளவற்ற பொறுமையைக் காண முடிகிறது. தம்பியரின் பொறுமையை ஓரளவு பார்க்க முடிகிறது. அறத்தின் உருவம் போல்வான் பொறையுடைமைக்கு தருமன் என்று இன்றளவும் எடுத்துக்காட்டாக நிற்கின்றான் தருமன் என்று கூறியிருப்பது பேராசிரியரின் சிந்தனையை உயர்த்திக் காட்டுகின்றது.

**அழுக்காறாமை**

அக்கம் பக்கத்தார் சீருடனும் சிறப்புடனும் நன்றாக வாழும் போது அன்புடையவர்கள் அதைக் கண்டு நன்கு மகிழ்வார்கள். அதுவே அன்பின் நெறியாகும். பிறர் சிறப்புடன் வாழ்வதைக் கண்டு மனம் பொறுக்காமல் புழுங்குவது அன்பற்ற குறையையே காட்டும். ஆகையால் அன்பு நெறியில் வாழ்வோருக்குப் பொறாமை கூடாது. தன் நெஞ்சத்தில் பொறாமையின்றி வாழும் தன்மையையுடையவனாக இருப்பின் அதுவே சிறந்த ஒழுக்க நெறியாகக் கொள்ளப்படும். நண்பர், பகைவர் என்ற வேறுபாடு இன்றி வாழும் தன்மையை ஒருவன் பெற்றால் அதுவே அவன் பெற வேண்டிய பேறுகளுள் நிகரற்றதாக இருக்கும் என்று பேராசிரியர் விளக்கி இரண்டு குறள்களை எடுத்துக்காட்டுகிறார்.

**ஒழுக்காறாகக் கொள்க ஒருவன் தன் நெஞ்சத்து**
**அழுக்காறு இலாத இயல்பு (குறள். 161)**
**விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லை யார்மட்டும்**
**அழுக்காற்றின் அன்மை பெறின் (குறள். 162)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பொறாமையுடையார்க்கு வேறு பகை வேண்டாம். பொறாமை மட்டுமே போதும். பகைவர் கெடுதி செய்யத் தவறினாலும் பொறாமை தவறாமல் கேடு விளைவித்து விடும். ஆகையால் நெஞ்சில் எழும் பொறாமையைப் பொல்லாத பகையாகக் கருதி அதனை நீக்கி விட வேண்டும் என்று மக்களுக்கு அறிவுரை புகட்டுகின்றார் பேராசிரியர். மேலும், பொறாமைப்படுவதால் ஒரு பயனும் இல்லை. வேண்டுமானால் நமக்கு இரத்தக் கொதிப்பு அதிகமாக கிடைக்கலாம். பொறாமைப்படுவதால் உள்ள வளமும் கெடும். முன்னேற்றமும் அடைய முடியாது. பெரும்பாலும் பொறாமைப்பட்டவர்கள் முன்னேறி விட வில்லை என்பதை,

**அழுக்காற்றால் நெஞ்சம்**
**அழுங்கிய புன் மாக்காள்**
**இழுக்காற்றால் இன்ப நலம்**
**எய்தார்; பராபரமே! (தா.பா.பராபரம், பா. 297)**

என்ற தாயுமானவர் வாக்கைச் சிந்தித்தல் வேண்டும் என்று நம்மை சிந்திக்க வைக்கின்றார் பேராசிரியர்.

**கொல்லாமை**

கொல்லாமைப் பற்றித் தாயுமான அடிகளின் வாக்குகளாகக் காணப்பெறும்.

**கொல்ல விரதம் குவலயமெல் லாம் ஓங்க**
**எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சை பராபரமே (தா.பா.பராபரம், பா. 54)**
**கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லோர் மற்று**
**அல்லாதார் யாரோ? அறியேன், பராபரமே (தா.பா.பராபரம், பா.192)**

என்ற இரண்டு பராபரக் கண்ணிகளில் கொல்லாமை என்ற நோன்பு தெளிவாக உணர்த்தப்படுகிறது.

வள்ளுவர் பெருமான் முதலில் புலையும் இறுதியில் கொலையும் நிறுத்தி ஏனைய ஆறு நோன்புகளையும் அவற்றின் இடையில் இணக்கி வைத்திருப்பதை நோக்கினால் புலையும் கொலையும் தவிர், நோன்பு என்பது கொன்று தின்னாமை என்ற பொன்மொழிகளை விளக்கிக் காட்டி பொருள் உணர்த்துகிறார் பேராசிரியர்.

உலகில் அன்றாட வாழ்வில் நிகழும் கொலைகள் எண்ணற்றவை. காய், கனி, கிழங்கு, கூலம் முதலியவற்றைப் போதிய அளவு விளைவிக்க முடியாத குறைவாலோ, போதிய அளவு விளைவிக்க முடியாத காரணத்தாலோ பிற உயிர்கள் உணவுக்காகக் கொல்லும் கொலையும் நிகழ்கின்றது. இவற்றுள் வறுமையால் நிகழும் வேறு கொலைகளும் உள்ளன. கற்புக் கொலை, அறிவுக்கொலை, மானக்கொலை, ஒழுக்கக்கொலை, அன்புக்கொலை இங்ஙனம் எண்ணற்ற கொலைகள் நடந்த வண்ணம் உள்ளன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

புரிந்துக் கொண்டவர்கள் பல உயிர்களையும் காக்க வேண்டிய நிலையில் உள்ளனர். அற நூல்களில் தொகுத்து கூறியவற்றுள் தலையாய அறம் கொல்லாமை ஆகும். நியாய விலை கடைகள் இதற்காக ஏற்படுத்தவில்லை. ஆயின் அங்கும் மனிதனுடன் பிறந்த சாத்தான் தன் கை வரிசையை காட்டுகின்றான். ஓர் உயிரையும் கொல்லாமல் இருப்பதுவே அறமாகும். மேலும் கொல்வது என்பது பாவச் செயல் ஆகும்.

**கள்ளாமை**

பிறர் பொருளை மறையக் கவரும் நிலை நெஞ்சின் நினைவிலேயே அழிக்கப் பெறுதல் வேண்டும். கருதுதலும் செய்தலோட ஒக்குமாதலால் அதனையும் தவிர்த்தல் வேண்டும். உள்ளத்தில் எண்ணுவது முதல் படி. செயல் இரண்டாம் படி. ஆதலால், **கள்ளாமை காக்கத் தன் நெஞ்சு (குறள். 281)** வள்ளுவர் இவ்வாறு கூறினார். தீய முறையில் செல்வம் சேருதல் ஆவது போலத் தோற்றுமே தவிர நிலைக்காது. தீயன ஆவதே போன்று கெடும். இந்தச் செல்வம் போகுங்கால் பாவத்தையும் பழியையும் நிறுத்திச் செய்த அறத்தையும் உடன் கொண்டு போய் விடும். புது வெள்ளம் வந்து பழைய வெள்ளத்தையும் கொண்டு போவது போல தீய முறையில் ஈட்டும் செல்வம் வந்த அளவினும் மிகுந்து போய்விடும். ஆகவே இல்வாழ்வார் தம் உழைப்பால் கூடி வரும் பொருளில் வாழ்க்கை நடத்தப் பார்க்க வேண்டும்.

**அளவறிந்து வாழா தான் வாழ்க்கை உளபோல**
**இல்லாகித் தோன்றாக் கெடும் (குறள். 479)**

என்று வள்ளுவர் பிறிதோர் இடத்தில் கூறியதைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். அவரவர் அளவில் நின்று வாழ்க்கை நடத்துதல் பற்றி வள்ளுவர் பெருமான் அருமையான குறிப்பொன்றை இல்வாழ்வானுக்கு வழங்கியுள்ளார். மேற் குறிபிட்ட சான்றுகளை எல்லாம் பேராசிரியர் எடுத்துக்காட்டுகளுடன் கூறி இருப்பது பாராட்டக்கூடியது.

**தீவினையெச்சம்**

“வினை விதைத்தவன் வினை அறுப்பான்; தினை விதைத்தவன் தினை அறுப்பான்” என்பது நம் நாட்டில் வழங்கும் ஒரு முதுமொழி. விதைக்கப் பெறுவது எதுவோ அதுவே விளைந்து பயன்தரும். அதுபோல நன்மையான செயல்கள் நன்மையையே விளைவிக்கும் என்பதோடு அதற்கு திருக்குறளை எடுத்துக்காட்டி விளக்குகிறார்.

**எனைப் பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை**
**வீயாது பின் சென்று அடும் (குறள். 207)**

புறத்தில் தோன்றும் பகை எவ்வளவு பெரும் பகையாக இருந்தாலும் ஒருவாறு ஓடி ஒளிந்து தப்பித்துக் கொள்ள முடியும்; தீவினையாகிய பகைவிட்டு நீங்காமல் தொடர்ந்து வருத்தியே தீரும் என்பது இதன் கருத்து. இதனை ஓர் அருமையான உவமையால் விளக்குவார் அப்பெருந்தகை.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வெயிலில் ஒருவர் நடந்து செல்லும் போது அவருடைய நிழல் அவரை விடாது பின்பற்றிச் செல்வதைக் நம்மால் காண முடியும். நிழலொடு நடக்கும் அவர் காலடியை நன்றாகப் பற்றிக் கொண்டு உடும்புப் பிடியாய் தொடர்ந்து செல்கிறது. அகன்ற சாலைவழி, குறுக்கு சந்து, பொந்து வழிகள், காடு, மேடு, பள்ளம் வயல், கடற்கரை, கல்லும் முள்ளும் நிறைந்த காட்டு வழி இவற்றுள் எந்த வழியின் கண் சென்றாலும் நம்முடைய நிழல் நம்மையே பின் தொடர்ந்துச் செல்லும். மனிதனுடைய உயரம், குட்டை, அழகு, அழகின்மை இவற்றிற்கேற்ப அவர் நிழல் மாறுபடுவதில்லை. ஒரே இருள் நிலையில் தான் பின்பற்றுகின்றது. தீவினையை விளக்குவதற்கு இஃது ஓர் அற்புதமான உவமை. மேலும் உவமையை சிந்தித்தால் வேறுசில இயைபுகளும் புலனாகும் என்று கூறுவது பேராசிரியருடைய சிந்தனையைப் புலப்படுத்துகிறது.

**செய்ந்நன்றி அறிதல்**

அறநெறிகளில் கடைப்பிடித்து ஒழுக வேண்டியது செய்ந்நன்றி அறிதலாகும். ஒருவருக்கொருவர் உதவி செய்யாவிட்டால் உலக வாழ்க்கை நடைபெறாது. உதவி செய்தவரை மறவாமல் நன்மையைப் போற்றுவது நமது கடமையாகும். ஒருவருக்கொருவர் செய்துக் கொள்ளும் உதவிகள் பலவகை உண்டு. இதற்கு முன் அவருக்கு ஓர் உதவியும் செய்யாதிருக்கும் போது காரணமில்லாமல் ஒருவர் மனம் உவந்து தாமே உதவி செய்வதும் உண்டு. அந்த உதவிக்குக் கைம்மாறு இல்லை எனலாம். மண்ணுலகமும் விண்ணுலகமும் கொடுத்தாலும் அதற்கு அவை ஈடாகாது என்று நம்மை சிந்திக்க வைக்கின்றார் பேராசிரியர். இதற்கு அவர் குறிப்பிடும் உதாரணம் நாலடியார்.

**உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி**
**இறப்ப நிழல் பயந் தாஅங்கு – அறப்பயனும்**
**தான் சிறிதாயினும் தக்கார் கைப் பட்டக்கால்**
**வான் சிறிதாப் போர்த்து விடும் (நாலடியார், பா.38)**

இவ்விடத்தில் சமண முனிவரின் கருத்தை நினைத்தல் வேண்டும் என்கிறார். ஆலமரத்தின் விதை சிறிதாயினும் அது வான் அளவு உயர்ந்து மிகுந்த நிழலைத் தருவது போல, தானம் செய்யப்பட்ட பொருள் சிறியதாக இருந்தாலும் அது தகுதியுடைய நல்லோர் கையில் சேர்ந்தால் அஃது ஆகாயமும் சிறிது என்னும் படி தருமத்தின் மேலான பயனைப் பரப்பி விடும் என்ற கருத்து நம்மை வியக்க வைக்கிறது என்று கூறுகிறார் ந. சுப்புரெட்டியார்.

**அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் பற்றி சங்க இலக்கிய பாடலகள் அதிகமாக எடுத்துரைக்கின்றன. பிற வழிகள் யாவும் பயனற்றுப் போன பிறகு அறத்தொடு நிற்றல் என்னும் நேர்வழியைத் தலைவியும், தோழியும் மேற்கொள்கின்றனர். நாணமும், கற்பும் உயிரனைய இருபேர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஒழுக்கங்களாகும். ஒருவர் அறத்திணைக் காத்துப் போற்றத்தக்கவைகளுள் முதன்மையானது என்பதை பண்டைத் தமிழர் கண்ட வாழ்க்கை நெறி.

அறத்தொடு நிற்கும் சந்தர்ப்பங்களையும் இலக்கண நூலார் விரிவாக விளக்கி கூறியுள்ளனர். இறையனார் களவியலாசிரியர் இவற்றை,

**காப்பு கைமிக்குக் காமம் பெருகினும்**

**நொது மலர் வரையும் பருவம் ஆயினும்**

**வரைவெதிர் கொள்ளாது தமரவர் மறுப்பினும்**

**அவன் ஊறு அஞ்சும் காலம் ஆயினும்**

**அந்நால் இடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ**

**அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே (இறை.களவியல், நூ. 29)**

என்று தொகுத்துக் கூறுவர் இறையனார். அறத்தொடு நிற்றல் என்ற துறை பற்றி 51 பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன என்பர் பேராசிரியர். அறத்தொடு நிற்றல் பக்தி இலக்கியத்தில் ஆழ்வார் அமைத்த முறையை ந. சுப்புரெட்டியார் சுட்டிக் காட்டி விளக்குகின்றார். தோழியின் பாசுரமாகச் செல்லும் குட்டநாட்டுத் திருப்புலியூரில் மாயப்பிரான் மீது நம்மாழ்வார் பாடியுள்ள திருவாய்மொழியில் இத்துறை மிக அருமையாக அமைந்துள்ளது. (திருவாய். 8-9)

**நடுவுநிலைமை**

அறநெறி வாழ்க்கையில் நடுநிலை தவறாமல் நீதியைப் போற்றுதல் வேண்டும். நடுநிலைமையைச் சிறந்த அறமாகக் கொண்டு போற்றுவர் கடைப்பிடிக்க வேண்டிய பொருண்மையாக பேராசிரியர் சில விளக்கங்களை குறிப்பிடுகின்றார். வாழ்வு என்பது எப்பொழுதும் உயர்வு, தாழ்வுகளோடு இருக்கும். இது செய்தால் உயர்வு பெறுவாய்; இதனை செய்தால் தாழ்வு அடைவாய் என்ற அவாவும், அச்சமும் எல்லாருக்கும் ஏற்படுவதே. நடுநிலையைப் போற்றுவோர் துலாக்கோலை நோக்கினால் ஒரு பேருண்மை தட்டுப்படும். தான் சமமாக நின்று பிறர்க்கு வேண்டியவர் வேண்டாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் தன்னிடம் வைக்கப் பெற்ற பொருளின் எடையை துலாக்கோல் உள்ளவாறு அறிவிப்பதைக் காணலாம். அதுபோல் சமநிலையில் நின்று ஒரு சார்பாகக் கோணாமல் நடப்பதே சான்றோர்க்கு அழகாகும் என்று கூறி திருக்குறளை சான்று காட்டுகின்றார் பேராசிரியர்.

**சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்**

**கோடாமை சான்றோர்க்கு அணி (குறள். 118)**

என்று குறிப்பிடுகின்றது பொய்யா மொழி.

**போரில் அறம்**

சான்றோர்கள் கூறிய அறிவுரைகளின் படி போர்களிலும் அறநெறி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கடைப்பிடிக்கப்பட்டது. சங்க இலக்கியங்களில் அறநெறிப்படி நடை பெறாத போர்கள் பற்றி இலக்கியங்கள் சான்று காட்ட வில்லை. பண்டைய கால மன்னர்களின் போர் செய்யும் திறம் நமக்கு வியப்பினை ஏற்படுத்துகின்றது. போர் செய்கின்ற இருவேந்தர்களும் அறமே தலைசால் பண்பாகக் கொண்டு விளங்கினர் என்பதை இலக்கியத்தின் வழி சான்றுக் காட்டி உணர்த்துகின்றார் பேராசிரியர்.

ஓர் அரசன் மாற்றரசனுக்குரிய நாட்டின் மீது படை எடுத்துச் செல்லும் போது எல்லா உயிர்களையும் சேதப்படுத்துவதில்லை. பசுக்களையும், பார்ப்பார்களையும், பெண்டிரையும், நோயாளிகளையும் அவர் போன்ற பிறரையும் போர் நிகழும் நிலத்தை விட்டுப் புறத்தேப் போய்விடும்படி எச்சரித்து அவர்களை அகற்றுவார்கள். இத்தகைய அறப்போர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம் அமைந்திருந்ததாக நெட்டிமையார் என்ற புலவர் பாராட்டிருப்பதை,

**ஆவும் ஆனியற் பாரப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன் போற் புதல்வர் பெறாஅ தீரும்**
**எம் அம்பு கடிவிடுதும் நுன் அரண் சேர்மின் என**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்**
**கொல்களிறு மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்**
**எங்கோ வாழிய குடுமி (புறம், பா. 9)**

என்று அறப்போர் புரிந்த பாண்டியனைப் புலவர் புகழ்ந்து வாழ்த்துவதைக் பேராசிரியர் கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

**வெகுளாமை**

அறத்தின் முக்கியமான ஒன்றாக விளங்குவது வெகுளாமை. மனிதன் சிறிது ஆழ்ந்துச் சிந்தித்தால் தீமைகள் எல்லாம் போகத்திலிருந்து பிறக்கின்றன என்பது தொிய வரும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறும் சிந்தனை இங்கு பாராட்டக் கூடியது. பாறை நிலத்தின் மேல் ஒருவனுக்குச் சினம் பிறந்து அதனைக் கையால் அறைந்தால் அழிவது அவன் கையேயன்றிப் பாறையன்று. சினத்தைப் பொருளென்று கொண்டவன் தானே அதைப்போல் கேடுறுகின்றான். கொண்டவன் கேடு உறுதி; கொள்ளப் பெற்றவன் கேடு அவ்வளவு உறுதி இல்லை என்பதும் இங்கே நினைவு கூர்தற்குரியது. அதிலும் சினம் கொண்டவனை விட கொள்ளப்பட்டவர் தக்கவனாய் பாறை போலத் திண்ணிய உள்ளம் உள்ளவனாய், மெய்ம்மையில் உறுதி மிக்கவனாய், நிலைகுலையாதவனாய், அஞ்சாதவனாய், பொய்ம்மைகளுக்கு அசைந்துக் கொடுக்காதவனாய் எதிர்க்கும். துணிவில் சிறந்தவனாய்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இருந்து விட்டால் யார் சினமும் அவனை எதுவும் செய இயலாது. இந்த அழகைப் பாலை நிலத்து அறைந்தவனது கைப் பிழையாதது ஒக்கும் என்பதில் மேலும் காண முடிகிறது என்ற சிந்தனையை முன்வைக்கின்றார் பேராசிரியர். இதனை

**சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு**
**நிலத்தறைந்தான் கைபிழையா தற்று (குறுந்தொகை, பா. 307)**

என்ற வள்ளுவரின் குறள் மூலம் விளக்கி காட்டுகின்றார்.

**முடிவுரை**

வளர்ந்து வரும் காலச் சூழலில் அறம் என்பது சிலநேரங்களில் குறைந்து கொண்டே செல்கிறது எனலாம். தான் உண்டு தன் வேலை உண்டு என்று செல்லுகின்ற மனிதர்களிடையே அறம் என்பது வெறும் பேச்சளவில் மட்டுமே உள்ளது. முற்றிலும் குறைந்து விட்டது என்று பொருள் கொள்ளலாகாது. மனிதாபிமானவர்கள் அதிகம் பேர் நாட்டில் உலாவி கொண்டுதான் இருக்கின்றனர். நல்லுணர்வுள்ள நாம் எல்லோரும் அறவுணர்வு குன்றாதிருக்கவும், எல்லா மட்டங்களிலும் அதை நிலை நிறுத்தவும் நாம் எல்லோரும், குறிப்பாக இளம் சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் முன்வர வேண்டும். இளம் தலைமுறையினரிடம் அறம், அன்புடைமை, விருந்தோம்பல், பொறையுடைமை, அழுக்காறுடைமை, கொல்லாமை, கள்ளாமை, தீவினையெச்சம், செய்ந்நன்றி அறிதல், நடுவுநிலைமை, போரில் அறம், வெகுளாமை போன்ற பண்புநலன்களைப் பற்றி பேசுதல் வேண்டும். பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அறத்தைப் பற்றிய சிந்தனைகளை மாணவர்கள் மனதில் பதியச் செய்ய வேண்டும். இத்தகைய நெறிமுறையானது நமக்கும் நாட்டிற்கும் உகந்தது.

**குறிப்பு நூல்கள்**

[1] நக்கீரர். *இறையனார் களவியல்.* நக்கீரர் உரை, கழக வெளியீடு, 1958.
[2] கம்பர். *கம்பராமாயணம்.* வை.மு.கோ பதிப்பு, உரையுடன், 1926.
[3] முனைவர் இரா. சாரங்கபாணி. *குறுந்தொகை.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2017.
[4] சமணமுனிவர்கள். *நாலடியார்.* புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், 1970.
[5] தாயுமானவர் அடிகள். *தாயுமானவர் பாடல்கள்.* அமெரிக்கன் அச்சுக்கூடம், 1891.
[6] திருமூலர். *திருமந்திரம்.* குமரகுருபரன் சங்கம், ஸ்ரீவைகுண்டம்.
[7] திருவள்ளுவர். *திருக்குறள்.* பரிமேலழகர் உரை, பூம்புகார் பதிப்பகம், 2001.
[8] முனைவர் இரா. சாரங்கபாணி. *பத்துப்பாட்டு.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 2004.
[9] முனைவர் இரா. சாரங்கபாணி. *புறநானூறு.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

2014.

[10] பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார். *தமிழ் இலக்கியங்களில் அறம்-நீதி-முறைமை.* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1988.

**References**

[1] Nakkirar. *Eraiyanar Kalaviyal*. Nakkirar Text, Club Release, 1958.
[2] Kambar. *Kambaramayanam.* Vai.Mu. Koo Text, 1926.
[3] Dr. R. Sarankapani. *Kuruntogai.* New Century Book House. Chennai, 2017.
[4] Samanamunivargal. *Naladyar*. Puduvai Paintamil Publishing House, 1970.
[5] Tayamanavar Atigal. *Tayumanavar Poems*. American Printing House, 1891.
[6] Thirumular. *Thirumaththiram*. Kumaragurubaran Club, Sri Vaikundam.
[7] Thiruvalluvar. *Thirukkual*. Parimelazhagar Urai, Poompuhar Publishing House, 2001.
[8] Dr. R. Sarankapani. *Paththuppaddu*. New Century Book House. Chennai, 2004.
[9] Dr. R. Sarankapani. *Purananuru*. New Century Book House, Chennai, 2014.
[10] Profosser N. Subbu Reddiar. *Tamil Elakkiyagalil Aaram- Neethi- Muraimai.* Publishing, Chennai, 1988.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரும் பாரதீயமும்

## Peraasiriyarum and Bharatheeyamum

**முனைவர் தெ. அகிலா**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
காவேரி மகளிர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. D. Akila**, Assistant Professor of Tamil, Cauvery College for Women, Tiruchirappalli, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-1179-071X**
**DOI: 10.5281/zenodo.7251300**

### Abstract

*Although politics has been implicit in mythology from the Sangam period to the late nineteenth century, it has been passionately expressed in Bharati's poetry. Bharathi lived as one of those who tried to live without gaps in word and deed. Bharathi was a prolific writer who spoke out about the tragedies of life and gave a voice to the liberation of the common people. He is considered to be the forerunner of modern Tamil literature, who uprooted the paralyzed literature of the Yamagam and Madakku pa types among the ancient poets. Content studies of Bharathi's poems have been conducted by various scholars for critical purposes. Periyasamy Dooran's 1982 book "Bharathiyar's Works a Review" and in 2006, a collection of essays titled "Bharatheeyam" by poet Meera are good examples. In it, Bharathi's content is shown in the national concept in the article "Towards Bharathi's Center of literary Creation" written by Tamilavan. On Bharati's literary theory, Dr. Sachithanandam, Dr. Manuel, Dr. Ka. Meenakshi Sundaram and Dr.C., Kanakasabapathy have researched the perspectives of the Formalistic Approach and Appreciative Method. They compare Bharti's theory of poetry with Wordsworth's ideas in English literature and establish that Bharti's theory belongs to the genre of Romantic Theory. This article examines Professor Subbu Reddiar's versatility that highlights the strengths of the ten essays written by Professor in his work "Bharatheeyam". Moreover, Bharathiyar is shown as the pioneer of Modern poetry and the father of lyrical poetry of dialogues has been` highlighted by Professor Subbu Reddiar is justified in the research article.*

**Keywords:** Bharati, Literary Policy, Professor, Vaishnava Explanation, Scientific Overview.

### ஆய்வுச் சுருக்கம்

*சங்ககாலம் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதிவரை கலை இலக்கியத்தில் அரசியல் என்பது மறைபொருளாக வெளிப்பட்டே வந்துள்ளது என்றபோதிலும் அவை பாரதியின் கவிதைகளில் தான் உணர்ச்சியுடன் வெளிப்பட்டது. சொல்லிற்கும் செயலிற்கும் இடைவெளி அற்று வாழ முயல்பவர்களில் ஒருவராக வாழ்ந்தவர் பாரதி. வாழ்க்கைப் பேருண்மைகளை வெளிப்படுத்தி எளிய மக்களின் விடுதலைக்குக் குரல் கொடுத்த, மக்களுக்கான இலக்கியக்காரனாக வாழ்ந்தவர் பாரதி. பழம் புலவர்களிடையே யமகம், மடக்கில் கட்டுண்டும் வள்ளல்களின் அந்தப்புரங்களிலும் முடங்கிக் கிடந்த இலக்கியத்தை வேரோடு களைந்தெடுத்து மக்களிடம் ஒப்படைத்தவர் மகாகவிஞர் பாரதி. தற்கால நவீன*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*இலக்கியத்தின் முன்னோடியாகக் கொள்ளப்படுவது வியப்பானதன்று. பாரதியின் கவிதைகளின் உள்ளடக்க ஆய்வுகள் பல்வேறு அறிஞர்களால் திறனாய்வு நோக்கில் ஆய்வுகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன. பாரதியின் கவிதைகள் நாட்டுப்பற்று, மொழிப்பற்று, ஆன்மீகம், எனப் பல்வேறு கோணங்களிலும் அரசியல், சமுகவியல், மெய்யியல், தத்துவம், அழகியல் என்னும் பல்வேறு துறைகளிலும் ஆய்வு நிகழ்த்தப்பட்டு வருகின்றன. 1982ஆம் ஆண்டு வெளியான பெரியசாமி தூரனின் “பாரதியார் நூல்கள் ஒரு திறனாய்வு” என்னும் நூலும் 2006ஆம் ஆண்டு கவிஞர் மீரா வெளியிட்ட “பாரதியம்” என்னும் கட்டுரைத் தொகுப்பும் குறிக்கத்தக்கன. இதனுள் தமிழவன் எழுதிய “பாரதியின் படைப்பு மையம் நோக்கி” என்னும் கட்டுரையில் தேசிய கருத்துருவத்தில் பாரதியின் உள்ளடக்கம் இருப்பது குறித்து விவரிப்பர். பாரதியின் இலக்கியக் கோட்பாடு பற்றி டாக்டர். சச்சிதானந்தம், டாக்டர் மானுவேல், டாக்டர். க. மீனாட்சிசுந்தரம், டாக்டர்.சி, கனகசபாபதி ஆகியோர் உருவவியல் (Formalistic Approach) கண்ணோட்டத்திலும், ரசனைமுறை (Appreciative Method)யிலும் ஆராய்ந்துள்ளனர். பாரதி கவிதையைப் பற்றி கொண்டுள்ள கோட்பாட்டை இவர்கள் ஆங்கில இலக்கியத்தில் வேர்ட்ஸ் வொர்த்தின் கருத்துக்களுடன் ஒப்பிட்டுக் காட்டி பாரதியின் கோட்பாடு புனைவியல் (Romantic Theory) கோட்பாட்டு வகையைச் சார்ந்தது என்று நிறுவுகின்றனர். இக்கட்டுரை, பேராசிரியரின் “பாரதீயம்” என்னும் நூலில் அமைந்துள்ள பத்துக் கட்டுரைகளின் வன்மைமென்மைகளை எடுத்துக்காட்டிப் பேராசிரியரின் பல்துறைப் புலமையினை ஆய்கிறது. மேலும், பாரதியார், புதுக்கவிதையின் முன்னோடி என்றும், வசனகவிதையின் தந்தை என்றும் நிறுவும் பேராசிரியரின் திறனாய்வுப் பார்வை எடுத்துக் காட்டப்பெறுகிறது.*

**குறிப்புச்சொற்கள்**: பாரதி, இலக்கியக் கொள்கை, பேராசிரியர், வைணவ விளக்கம், அறிவியல் கண்ணோட்டம்.

**முன்னுரை**

பாரதியின் இலக்கியக் கோட்பாடு பற்றி டாக்டர். சச்சிதானந்தம், டாக்டர் மானுவேல், டாக்டர் க.மீனாட்சிசுந்தரம், டாக்டர் சி.கனகசபாபதி ஆகியோர் உருவவியல் (Formalistic Approach) கண்ணோட்டத்திலும், ரசனைமுறையிலும் (Appreciative Method) ஆராய்ந்துள்ளனர். பாரதி கவிதையைப் பற்றி கொண்டுள்ள கோட்பாட்டை இவர்கள் ஆங்கில இலக்கியத்தில் வேர்ட்ஸ்வொர்த்தின் கருத்துக்களுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார்கள். இதன்மூலம் பாரதியின் கோட்பாடு புனைவியல் (Romantic Theory) கோட்பாட்டு வகையைச் சார்ந்தது என்று நிறுவ முயற்சிக்கின்றனர். பாரதியாரின் கவிதைகள், வசன கவிதைகள், கட்டுரைகள் முழுமையான படைப்புகளைக் கொண்டு பாரதியின் இலக்கியக் கொள்கையினை வகுத்துக் காட்டுகின்றார்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேராசிரியர். மேலும், ஆய்வு நோக்கில் பாரதியின் இலக்கியங்கள் இக்கட்டுரைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன.

**பாரதியம் பற்றி அறிஞர்கள் கருத்து**

பாரதியம் குறித்து டாக்டர் எம்.மானுவேல் என்னும் அறிஞர்,

> **Bharathi's work in changing the direction of Tamil poetry and in setting up new ideals for it reminds us of the efforts of Wordsworth and Coleridge. (பாரதியம், ப. 61)**

என்றுரைக்கின்றார். மேலும், பாரதியின் இலக்கியக் கொள்கை குறித்து அறிஞர் பெரியசாமி தூரன், நூலொன்றின் முன்னுரையில்,

> **எளிய பதங்கள், யாருக்கும் புரியும்படியான சொற்கள் சுமார் இரண்டொரு வருஷத்து தமிழ்ப் பழக்கமே உள்ளவர்கூட எளிதில் புரியும்படியான வாக்கிய அமைப்புகள் இவற்றையெல்லாம் வைத்து ஒரு நல்ல கவிதை இயற்றுவோன் உண்மையிலே தமிழுக்குச் சிறந்த தொண்டாற்றுபவன் (பாரதியார் நூல்கள் ஒரு திறனாய்வு, ப.1.)**

என்பது பாரதியாரின் இலக்கியக் கொள்கை எனக் குறிப்பிடுவர். பாரதியின் கருத்துகளை அறிவியல் கருத்துகளைத் துணைகொண்டு எழுதியோரில் வா.செ.குழந்தைசாமி குறிக்கத்தக்கவர். அவ்வரிசையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பாரதியின் கருத்தாக்கங்கள் குறித்துப் பல்வேறு பரிமாணங்களில் எழுதிய ஆய்வுக்கட்டுரைகளின் தொகுப்பாய்ப் பாரதீயம் அமைந்துள்ளது.

**பாரதீயம் –பொருண்மையும் கட்டமைப்பும்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பாரதீயம் என்னும் தலைப்பிலான இந்நூல் பத்துக் கட்டுரைகளின் தொகுப்பாகும். முதலிரு கட்டுரைகள் பாரதியின் இலக்கியக் கோட்பாடுகள் எது? என்பதை விளக்குகின்றன. எஞ்சிய எண்மக் கட்டுரைகளும் அதனடிப்படையில் எழுந்த தனித்த ஆய்வுக் கட்டுரைகளாக மலர்ந்துள்ளன. முதலாம் கட்டுரையில், பாரதீயமாகப் பேராசிரியர் கூறுவன, நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை, தாய் மொழிப்பற்று, சமுதாய முன்னேற்றம், பழமையில் புதுமை, பெண் விடுதலை, அறிவுத் தெளிவு இவை பாரதீயங்களாயின. (ப. 2) எனவும் பாரதி வாழ்ந்த காலச்சூழல் பாரதியின் பாடல்களில் தாக்கத்தைக் காண்பதாகவும் கூறுகிறார். இரண்டாம் கட்டுரையில் பாரதியின் இலக்கியக் கொள்கைகளாக இயற்கை எழில், கடவுட் கொள்கை, கல்வி சிந்தனைகள், மக்கள் முன்னேற்றம் ஆகியனவற்றைப் பேராசிரியர் குறிப்பிடுகின்றார். மேலும், கவிதைச் சுவை, நடைப்போக்கு குறித்து இக்கட்டுரையின் பார்வை அமைகிறது. மூன்றாவது கட்டுரை கடவுட் கொள்கையாகும். பாரதி பாடிய சமயப்பாடல்களை ஒருங்கு திரட்டிப் பாரதியின் கடவுட் கொள்கையினை வரையறுக்கின்றார். இக்கட்டுரையினை பண்டையோர் வணங்கும் தெய்வங்கள், வேறு வழிபடுபொருள்களான பகலவன், திங்கள், தீ இம்மூன்றையும் பாரதி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பாடிய விதம், பாரதி இறைவனை அடயும் நெறிகளாய்க் கூறுவன, சமய சமரசம் என்னும் நான்கு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு திறனாய்வு செய்துள்ளார். இயற்கை எழில் என்னும் நான்காம் கட்டுரையில் அகிலநோக்கு, ஞாயிறு, விடியற்புனைவு, காலைப்புனைவு, மாலைப்புனைவு, வான்மதி, காற்று, மழை, காடு, நாட்டுவளம், நகர்ப்புனைவு, கருப்பொருள் புனைவு எனப் பலகோணங்களில் பாரதியின் கவித்திறனைப் பேராசிரியர் ஆய்கின்றார்.

ஐந்தாம் கட்டுரையான சமுதாயப்பார்வையில் தனி மனிதன் கடமை, சமுதாயக் கேடுகள் என்னும் இரு உட்பிரிவாகக் கொண்டு பாரதின் கருத்துகளை விவரிக்கின்றார். பாரதியின் கவிதைகளைக் கோண்டு பாரதியின் கல்விச் சிந்தனைகளைப் பேராசிரியர் வறையறுப்பது ஆறாம் கட்டுரையின் பொருளாய் அமைகிறது. ஏழாம் கட்டுரை வசனகவிதையில் பாரதியின் கருத்துகளைக் குறித்ததொரு பார்வையினைத் தருகிறார். 9, 10ஆம் கட்டுரைகள் பாரதியின் கவிதைகளில் காணும் சுவைகளையும் படிமங்களையும் விரித்துரைக்கும் தனித்தனி ஆய்வாக அமைந்துள்ளன. பல்வேறு காலக்கட்டங்களில் எழுதப்பெற்ற கட்டுரைகளாக இருப்பதனாலும் முதல் இரு கட்டுரைகளின் விரிவே மூன்று, நான்கு, ஐந்து, ஆறு மற்றும் ஒன்பதாம் கட்டுரைகளின் கருத்தாய் அமைந்திருப்பதனாலும் செய்திகளின் சாரம் திரும்ப வருவதைத் தவிர்க்க இயலாதாய் இந்நூல், அமைந்துள்ளது.

**ஆய்வு விளக்க முறைகள்**

பேராசிரியர் எடுத்துக்கொண்ட பொருளை விரிக்கும் முறை, நடைக்கூறு ஆய்தல், ஆய்வறம் பேணுதல், பல்துறை அறிவுடன் விளக்குதல், அறிவியல் முறையில் விளக்கம் செய்தல் மற்றும் வைணவ ஈடுபாட்டுடன் விளக்குதல் என்னும் உட்தலைப்புகளால் விவரிக்கப்படுகின்றன.

**நடைக்கூறு ஆய்தல்**

பாரதியார் கவிதைகளின் நடைக்கூறு இனிமை, எளிமை, தெளிவு என்னும் முக்கூறுகளை உள்ளடக்கியது என்பது பேராசிரியரின் துணிபாகும். இதற்குச் சான்றாகத் தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதா மொழிந்திடுதல் (பா.சப., சூ.சருக்கம், பா. 154) எனத் தொடங்கும் பாரதியின் கவிதை வரிகளை எடுத்துக்காட்டி விளக்கும் பாடல் தெரிவு பொருத்தமானதாக உள்ளது . (*பாரதீயம்*, ப.29)

**ஆய்வறம் பேணுதல்**

திறனாய்வில் கூர்ந்தாயுந்திறன் பெற்றவர் பேராசிரியர். **உள்ளது புனையும் ஆற்றல் உடையவர் பாரதி, இப்பூவுலகில் இல்லாத விலங்குகளை இவர்தம் பாடல்களில் யாண்டும் காட்டிற்றிலர் (பாரதீயம், ப.75)** என்னும் வரிகள் இதற்குச் சான்று பகர்கின்றன. மேலும், இக்கட்டுரையின் இறுதிப் பகுதியில் இப்பூவுலகில் அன்னம் என்ற பறவையைக் காணமுடியாது. இந்தப் பாட்டில் எப்படியோ இடம்பெற்று விட்டது. (பாரதீயம்,ப.76) என்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆய்வில் முன் சொன்ன கூற்றுக்கு அரணாக இல்லையெனினும் மறைக்காமல் குறிப்பிடுவது பேராசிரியரின் ஆய்வறத்தைக் காட்டுகிறது.

**பல்துறை அறிவுடன் விளக்குதல்**

ஒளிச்சேர்க்கை என்பதற்கான விளக்கத்தினைக் கூறும்போது,

> **ஒளிச்சேர்க்கை (Photo-synthesis) இயற்கையில் நடைபெறும் ஓர் அற்புத நிகழ்ச்சி. தாவரங்கள் காற்றிலுள்ள கரியமில வாயு, வேர்களின் மூலம் பெறும் நீர் இவற்றை உட்கொண்டும், கதிரவன் ஒளிக்கதிர்களாகவும், வெப்பக் கதிர்களாகவும், உமிழும் ஆற்றலைத் துணைகொண்டும் (இதுதான் அணுவாற்றல்; நீரிய உட்கருக்கள் பரிதிய உட்கருக்களாக மாறுங்கால் உண்டாவது) கார்போஹைட்ரேட்டுகள் போன்ற பொருள்களைச் சேமித்துவைக்கும் நிகழ்ச்சிதான் ஒளிச்சேர்க்கை என்பது. தாவரங்கள் கதிரவனின் ஒளியைக்கொண்டே வாழ்கின்றன என்பதை நாம் அறிவோம். எனவே, இப்புவியிலுள்ள பிராணிகள் அனைத்தும் பகலோனிடமிருந்தே ஆற்றலைப் பெறுகின்றன என்பது வெள்ளிடை மலை. இக்கருத்துகள் யாவும் மேற் குறிப்பிட்ட பாடலில் அமைந்து கிடப்பதைக் கண்டு மகிழ்கின்றோம். (பாரதீயம், பக். 53-54)**

என்பர் பேராசிரியர். மேலும், பிறிதொரிடத்தில்,

> **இலக்கண நூலார் கூறும் சுவைக்கப்படும் பொருள், சுவைக்குறிப்பு, விரல் என்பனவற்றை உளவியலார் முறையே பொருள் (object) புலன்காட்சி (perception) பொது உணர்வு (அநுபவம்) உடல்நிலை மாறுபாடு (organic state) (பாரதீயம், ப. 156).**

ஆகியனவாகும் என்று உளவியல் முறையினை எடுத்துரைத்து விளக்குவர். இவ்வாறு பல்துறை அறிவு கொண்டு விளக்குவதனால் இவரின் நுண்மாண் நுழைபுலத்தினை அறிகின்றோம்.

**அறிவியல் முறையில் விளக்கம் செய்தல்**

> **அனுபவத்தின் மூலம் கவிதை நுகரும் ஆற்றலினை அறிவியல் உண்மையால் விளக்கம் தருதல் பெருமூளையில் பதிவாகி இருக்கும் அனுபவம் அக்காட்சிகளை அனுபவித்து மகிழ்கிறது. (பாரதீயம், ப.191) என்றும், ஆதவனே ஆற்றலனைத்திற்கும் மூலம் என்ற் இக்கால அறிவியல் உண்மையைச் சிந்தித்து பொருள் யாவிற்கும் முதலே என்கிறார். (பாரதீயம், ப. 52)**

என்று கவிதைகளுக்கு அறிவியல் விளக்கம் தருகின்றார்.

**வைணவ ஈடுபாட்டுடன் விளக்குதல்**

பேராசிரியர் ஔவை நடராசன் இந்நூலுக்கு அணிந்துரை எழுதும்போது,

> **பேராசிரியர் ரெட்டியார் ஒரு சிறந்த வைணவத் தமிழறிஞராக விளங்குகின்றார்; வைணவத்தில் பல்வேறு ஆன்மிக நூல்களை எழுதியுள்ளார். இவருடைய வைணவ**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **ஈடுபாடு இவர் எழுதியுள்ள எல்லா நூல்களிலும் வெள்ளிடை மலையாகத் தோன்றும். (பாரதீயம், அணிந்துரை, ப.7)**

என்று குறிப்பிடுவது பேராசிரியர் வைணவ தத்துவத்தில் ஆழங்கால்பட்ட புலமையினை எடுத்துரைக்கிறது. நம்மாழ்வாரிடம் ஒரு மரபு இருந்தது. எல்லாவற்றையும் திருமாலாகக் கொள்வது அது (பாரதீயம், ப.22) என்றும் நாயன்மார்கட்கும் ஆழ்வார்கட்கும் பக்தி அவர்தம் மூச்சாக இருந்தது போலவே இவருக்கு விடுதலையே மூச்சாக இருந்தது (பாரதீயம், ப.24) என்றும் பாரதியின் விஸ்வரூப தரிசனக் காட்சி நம்மாழ்வாரின் திருவாக்கை நினைவு கூரச் செய்கிறது (பாரதீயம், ப.45) என்றும், திருமங்கை மன்னன் காணும் விசுவரூப தரிசனத்தை நினைவுகூரச் செய்கிறது (பாரதீயம், ப.45) என்றும் இதனைப் படிக்குங்கால் வாய்கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லன் என்ற நம்மாழ்வாரின் கூற்றை நினைக்கச் செய்கிறது பாரதீயம், (ப.88) என்றும் பிறப்பினால் உயர்வு கற்பித்த கொள்கை ஆழ்வார்கள் காலத்திலேயே தகர்ந்தது. (பாரதீயம், ப.91) என்றும் இக்கட்டுரைத் தொகுப்பில், எட்டு இடங்களில் இடம்பெற்றுள்ள தொடர்கள், மேற்கூறிய அறிஞரின் கருத்திற்கு அரண் சேர்ப்பதாய் அமைகின்றன.

**பாடல் வரிகளுக்கு விளக்கம்**

பாடல் வரிகளுக்குப் புதிய விளக்கம், அனுபவ விளக்கம், ஆங்கிலச் சொற்கள் தருதல், தத்துவ விளக்கம் மற்றும் அறிவியல் அடிப்படையில் விளக்கம் தருகிறார்.

**புதிய விளக்கம்**

பாரதியாரின் விடுதலை வேட்கைக்கு உவமை கூறும்போது, “நாயன்மார்கட்கும் ஆழ்வார்கட்கும் பக்தி அவர்தம் மூச்சாக இருந்தது போலவே, இவருக்கு விடுதலையே மூச்சாக இருந்தது” (பாரதீயம், அணிந்துரை, பக்.7) என்று புதியதொரு விளக்கம் தருகின்றார். பிறிதோரிடத்தில்,

> **‘தன்னைக் கட்டுதல்' என்பது மனத்தைக் கட்டுதல். ஐம்பொறிகளை அடக்கி மனத்தைக் கட்டுதல் என்று ஞானியர் கூறும் பொருளில் அல்ல ஈண்டுக் குறிப்பிடப்பெறுவது. ‘பாதரசமாய்ச் சஞ்சலப்பட்டுக்கொண்டே' (தாயுமானவர்) இருக்கும் மனத்தை, பல பொருள்களின்மீது சஞ்சலப்படுகின்ற மனத்தை அடக்கினால் போதும் என்பது பாரதியாரின் கருத்து (பாரதீயம், பக். 83)**

என்று கூறுவது அலைபாயும் மனத்தினைக் கட்டுவதைப் பாரதியார் குறிக்கின்றார் என்பதற்குப் புதிய விளக்கம் தந்துரைக்கின்றார்.

**அனுபவ விளக்கம்**

இசையினை ஏழே சுரத்தின் சேர்க்கையில் கூறவில்லையா? ஆயிரக்கணக்கான சுவை உணவு வகைகள் இருந்தும் அவற்றை ஆறு சுவிகளில் அடக்கி விடவில்லையா? (பாரதீயம், ப.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

73). அவற்றைப் போல இதுவும் எனக் கூறி அனுபவத்தின் அடிப்படையில் விளக்குகிறார். மேலும், பாரதி வருணிக்கும் காடு பற்றிய புனைவினைக் கூற வந்த பேராசிரியர், **சிங்கவேழ் குன்றம் என்பது திருமங்கயாழ்வார் மங்களாசனம் செய்யப்பெற்றது, இது ஆந்திரத்தில் கடப்பை மாவட்டத்தில் உள்ளது. (பாரதீயம், ப. 75)** எனத் தனது அனுபவ அறிவினை வெளிப்படுத்துவர். மேலும்,

> **தீய எண்ணங்கள் மனத்தில் தோன்றுவதற்கு இடமே தருதல் கூடாது. கெடுவான் கேடு நினைப்பான் என்ற முதுமொழியையும் மறந்தும் பிறன் கேடு சூழற்க வள்ளுவத்தையும் சிந்தித்தல் வேண்டும். (பாரதீயம், ப. 85)**

என்றும்

> **நம்மவர்கள் மனத்தில் இந்த ஜாதிக் கொள்கை எத்தனை ஆழமாகப் பதிதிருக்கிறது என்பதை உணர்த்தும் பொருட்டேயாம். (பாரதீயம், ப. 93)**

என்றும் இவர் உரைப்பன யாவும் அனுபவத்தின் வெளிப்பாடேயாகும்.

**ஆங்கிலச் சொற்களைத் தருதல்**

அறிவியல் செய்திகளை விளக்குமிடங்கள், பேராசிரியர் காலத்தில் வழங்கிய மணிப்பிரவாளச் சொற்கள், மேனாட்டார் கொள்கைகளை விவரிக்குமிடங்கள் போன்றவற்றிற்கு அடைப்புக் குறியில் தமிழ்ப் பெயர்ப்புச் சொற்களுக்கு இணையான ஆங்கில வார்த்தைகளைப் பயன்படுத்தும் போக்கினைக் காண்கின்றோம். அவையாவன:

**அறிவியல் செய்திகளை விளக்குமிடங்கள்**

> **ஆதவனே ஆற்றலனைத்திற்கும் மூலம் (the sun is the ultimate energy) (பாரதீயம், ப. 52, 67),**
>
> **ஒளிச்சேர்க்கை (photo synthesis (ப. 54),**
>
> **பல்லுருவங்காட்டி (kaleidoscope, ப.104),**
>
> **அறிவு வெடிப்பு (explosion of knowledge, ப.105)**

**பேராசிரியர் காலத்தில் வழங்கிய மணிப்பிரவாளச் சொற்கள்**

> வைதீக மனுசன் (orthodox man) (ப. 92), பூமி சாத்திரம் (புவியியல்), ராஜ்ஜிய சாத்திரம் (civic), பொருள் நூல் (economics), பௌதீக சாஸ்திரம் (physics), யாத்திரை (excursion), கல்வி ஏற்பாடு (curriculum), சீமைக்காரை (cement) (பாரதீயம், ப.104).

**மேனாட்டார் பெயர்கள் மற்றும் கொள்கை விளக்கச் சொற்கள்**

பாரதியின் கவிதைகளை மேனாட்டார் கருத்துக்கு ஒப்பிடும்போதும் மேலை நாட்டுக் கோட்பாடுகளை எடுத்துரைக்கும்போதும் பேராசிரியர் அச்சொற்களை அடைப்புக்குறியில் இட்டுக் காட்டுகின்றார். வால்ட்விட்மன் (Waltwitman), தொடர் அமைப்பு (syntax), வசனகவிதை (prose-poetry), தொடை (rhyme), சுயேச்சைக் கவிதை(free verse), (பாரதீயம், ப.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

117), குறியீட்டுக் கவிஞர்கள் (symbolists), கட்டற்ற கவிதை (verse libre), கட்டற்றக் கவிதைகள் (Le versest libre).

**தத்துவ விளக்கம்**

பாரதியின் கவிதை வரிகள், தத்துவத்தை உள்ளடக்கி இருப்பது குறித்துப் பேராசிரியர் கூறும்போது, "இறைவனை அடைதற்கு வைணவ' தத்துவத்தில் முடிந்த முடிபாக, எளிய வழியாக, மேற்கொள்ளப்பெறுவது பிரபத்தி நெறி (சரணாகதி மார்க்கம்). எனினும், சற்றுக் கடினமாகவுள்ள பக்தி நெறியும் அங்கு மேற்கொள்ளப்பெறுகின்றது" என்றுரைத்து அவற்றைப் பாரதியார் கைக்கொண்டதாக எடுத்துக்காட்டி நயம்பட விளக்குகின்றார் (பாரதீயம், பக். 57).

**சித்தினை அசித்துடன் இணைத்தாய்—அங்கு சேரும் ஐம்பூதத்து வியனுலகு அமைத்தாய் அத்தனையுலகமும் வண்ணக் களஞ்சியமாகப் பலப்பலநல் அழகுகள் சமைத்தாய்' என்ற பாரதியாரின் பாடற்பகுதி விசிட்டாத்வைத தத்துவத்தை உள்ளடக்கி இருப்பதைப் பேராசிரியர் சுவைபட விளக்குவது அவரது தத்துவத்தில் தோய்ந்த புலமையை எடுத்துரைக்கின்றது. (பாரதீயம், பக். 67)**

**அறிவியல் விளக்கம்**

கவிதைப் பகுதியில் புவியீர்ப்பு விசையே காரணம் என்பதை நாம் அறிவோம் என்று அறிவியல் விளக்கம் தந்துரைப்பது அவரின் அறிவியல்சார் அறிவினைப் புலப்படுத்துகிறது. (பாரதீயம், ப. 133)

**கட்டுரை தொடங்கும் முறை**

**1. பிற நூல்களை மேற்கோள் காட்டி விளக்குதல்**

இருந்தமிழே உன்னால் இருந்தேன் என்றும் பாரதிதாசனின் பாடல்களை மேற்கோள் காட்டித் தொடங்குகிறார். (பாரதீயம், கட்டுரை எண். 9, ப.152.)

**2. உதாரணம் கொண்டு தொடங்குதல்**

சுவை பற்றிய அடிப்படை விளக்கத்தினை எளிய உதாரணம் கொண்டு விவரித்தல். மூன்று காட்சிகளை விவரித்து விளக்கம் செய்தல் ஓவியம், நாடகக் கலை, இலக்கியம் இம்மூன்றின் அடிப்படை வேறுபாட்டினைச் சுட்டி விளக்குதல் (பாரதீயம், கட்டுரை எண்: 9, பக்.152). மேலும், இயற்கையைக் கவிஞன் அனுபவிக்கு முறையினைக் கூறும்போது உறங்குகின்ற குழந்தை அணையும் தாயினோடு கவிஞனை ஒப்புமைப்படுத்தி உதாரணத்துடன் விளக்குதல் (பாரதீயம், கட்டுரை எண் 4, ப.62)

**3. அறிஞர் கருத்துடன் தொடங்குதல்**

"வாழ்க்கையைப் பற்றிய திறனாய்வே கவிதையின் அடிப்படை என்று கூறிப் போந்தார் மாத்யூ அர்னால்டு என்ற ஆங்கிலத் திறனாய்வாளர்" எனத் தொடங்கிய பேராசிரியர், கவிதைக் கலை குறித்த ஐ.ஏ. ரிச்சர்டு கருத்து, ஏ.சி, பிராட்லி, கீட்ஸ் ஆபர்குரோம்பி ஆகியோர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கருத்துகளை விவரித்தும் தமிழில் எழுந்த பழங்கால நூல்களான திருமுருகாற்றுப்படை, பழமொழி, ஆசாரக் கோவை, திரிகடுகம், நான்மணிக் கடிகை போன்ற நூல்களையும் உதாரணம் காட்டுகின்றார். (பாரதீயம், கட்டுரை எண். 8, ப. 136 -137) படிமம் குறித்து உதாரணத்துடன் தொடங்கும் பேராசிரியர் கவிதையில் படிமம் பயன்படுவதையும் அதன் பல்வேறு வகையினையும் மேனாட்டுத் திறனாய்வாளர் என்பர்டன் அவர்களின் கூற்று வழி விளக்குகின்றார்.

**4. பாரதி கவிதைகளைக் கொண்டே தொடங்குதல்**

இலக்கியக் கொள்கைகள் (பாரதீயம், ப.17), கடவுள் சமயக் கொள்கைகள்(பாரதீயம், ப.33), சமுதாயப் பார்வை (பாரதீயம், ப. 82), கல்வி பற்றிய சிந்தனைகள் (பாரதீயம், ப.102) என்னும் நான்கு கட்டுரைகளும் பாரதியின் பாடல்கள் கொண்டே துவக்கம் பெறும் உத்திமுறையினைக் கையாள்கின்றார். தலைப்புக்கேற்றவாறு கவிதைகளைக் கூறி விளக்கம் செய்து கட்டுரையைப் பேராசிரியர் விரித்துரைக்கின்றார்.

**கட்டுரை முடிப்பு முறை**

**5. கவிதையை மேற்கோள் காட்டி முடித்தல்**

கட்டுரைகளை முடிக்கும்போது கவிதைகளை மேற்கோள் காட்டி நிறைவு செய்வது இவரது முடிக்கும் உத்தியாக உள்ளது.

> **இலக்கிய இன்பத்தைப் புறக்கணிப்பவர்களைப் பற்றி ஒரு வடமொழிக் கவிஞன் ஒருவன் கூறியுள்ளதைக் காட்டி இக்கட்டுரையைத் தலைக்கட்டுவோம் (ப. 81) மேலும், வள்ளுவர் கூறும் இன்மையென ஒரு பாவியை இல்லாதாவாறு செய்ய சூளுறைப்போம். (பாரதீயம், ப. 102)**

என்றும் கவிஞர்கள், குறட்பா வரிகளைக் கொண்டு நிறைவு செய்வதைக் காண்கின்றோம்.

**6. தமது விருப்பத்தை வெளிப்படுத்தி முடித்தல்**

பாரதியின் கவிதைகள் இந்திய மொழிகளில் மொழிபெயர்த்தும் அவரது கல்விச் சிந்தனைகள் பாடத்திட்டத்தில் சேர்க்கப்படவேண்டும் என பெருவிருப்பினராய்த் திகழ்ந்தவர் பேராசிரியர். இவ்வுள்ளக் கிடக்கையை, **தாயின் மணிக்கொடி என்ற பாடல் இந்திய மொழிகளனைத்திலும் பெயர்க்கப் பெற்று, எங்கும் இசை ஏற்றம் பெறுதல் வேண்டும்; மைய அரசு இதில் முயற்சி எடுத்துச் செய்ய வேண்டும். (பாரதீயம், ப. 5)** என்றும் **பாரதியார் கல்வி பற்றிக் கூறும் கருத்துகள் கல்வி ஏற்பாட்டில் இடம்பெறும் என எதிர்பார்ப்போமாக. (பாரதீயம், ப. 135)** என்றும் வெளிப்படுத்தி ஆய்வுக் கட்டுரையினை இறுதி செய்யும் முறையினைக் காண்கின்றோம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**7. கட்டுரையின் சாராம்சம் கூறி முடித்தல்**

இலக்கியத்தில் ரஸத்தினை அனுபவித்ததன் பலன்தான் நாம் புலன்களின் தெளிவு என்பதை அறிகின்றோம் (பாரதீயம், ப. 172) என்றும் மம்மர் அறுக்கும் மருந்தாக நமக்குக் களிப்பூட்டுவதை உணரலாம். (பாரதீயம், ப.192).

**8. அறிஞர் கூற்றினைக் கொண்டு நிறைவு செய்தல்**

**இழுமென் மொழியால் விழுமியது நுவலல் என்னும் தொல்காப்பியர் நூற்பாவினைக் கூறி நிறைவு செய்கிறார். (பாரதீயம், ப. 151).**

**சான்றெண் காட்டும் முறைகள்**

பாரதியின் கவிதைகளை எடுத்தாண்டு விட்டுச் சான்றெண் தந்து, நூலின் அப்பக்கத்தின் அடிப்பகுதியில் மேற்கோள் காட்டுகிறார். அனைத்துக் கட்டுரைகளிலும் இம்முறையினைப் பின்பற்றியுள்ளார்.

**1. இலக்கண மேற்கோள் சுட்டல்**

தொல்காப்பியம், செயிற்றியம் செய்திகளைத் தருதல் (பாரதீயம், ப.155), நன்னூலார் நூற்பா காட்டுதல் (பாரதீயம், ப.32) ஆகியன பேராசிரியரின் பன்னூற் இலக்கண அறிவினை வெளிப்படுத்துகிறது.

**2. பிற நூலாசிரியர் வரிகளைச் சான்று காட்டுதல்**

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற மரபு வழி வந்த தமிழ் மகன் (பாரதீயம், ப. 3) கவிமணி தேசியவிநாயகம் பிள்ளை அவர்கள் பாட்டுக்கொரு புலவன் பாரதியடா எனப் பட்டிக்காட்டான் ஒருவன் வாயில் வைத்துப் போந்தார். (பாரதீயம், ப. 17) அருணகிரிநாதரின் கந்தரனுபூதியின் நடையில் அமைந்திருப்பது போல் தோன்றுகிறது (பாரதீயம், ப. 36) மணிவாசகப் பெருமானின் திருவாக்கினை நினைவுகூரச் செய்து விடுகிறது. (பாரதீயம், ப. 51)

**தாயுமான அடிகளின் கருத்து நம் கவிஞரின் கருத்திற்கு அடிப்படையாய் இருப்பதைக் கண்டு மகிழலாம்' தாயுமான அடிகள் நாயகி நிலையில் இறைவனின் திரு உருவத்தை விண்வெளியாகவும் காண்பதை நினைவுறுத்துகிறார். (பாரதீயம், ப. 61)**

**தருமப்புத்திரன் இராசசூய வேள்வியில் பரிசுப்பொருட்கள் குவிந்தமையைப் பேராசிரியர் சிலப்பதிகார மலைவளம் காண வந்த செங்குட்டுவனுக்குக் குறவர்களால் அளிக்கப்பட்ட பரிசுப் பொருட்களை ஒப்பீட்டுக் காட்டுகிறார். (பாரதீயம், ப. 78-79)**

**தாயுமான அடிகளும் இக்கருத்தைத் தெரிவித்துள்ளார். (பாரதீயம், ப. 86)**

**3. தமது நூலைச் சான்று காட்டுதல்**

பொங்கலும் அணுவும் என்ற கட்டுரையில் இதன் விளக்கத்தை (பாரதீயம், ப.52) காண்க என்று சான்று காட்டுவதோடு இந்தப்பாடல் முழுவதையும் நவீன கீதையாக கொள்வர் பேராசிரியர் எஸ் வையாபுரிப் பிள்ளை என்று அறிஞர் பத்மநாபன் தனது கட்டுரை ஒன்றில்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேராசிரியரை மேற்கோள் காட்டுவதைச் சான்றெண் ஆக்கித் தருவர். கண்ணன் பாட்டில் படித்து பாரதீயம், கட்டுரை எண். 9, ப.157) இது போன்று ரஸங்கள் குறித்து விளக்கும்போது (பாரதீயம், 158) ஈரிடங்களில் தனது நூலை மேற்கோளாய்க் காட்டுகின்றார்.

**4. தம் கருத்துக்கு அரணாய் அறிஞர் கருத்துகளைத் தருதல்**

படைப்புகள் அவ்வக் காலச் சூழலின் தாக்கம் பெறும் எனும் பேராசிரியரின் கருத்துக்கு அரணாக, எந்த ஒரு நாட்டிலும் அந்த நாட்டில் அறிஞர்கள் கண்ட உண்மை, என்றும் நாட்டில் வேகமாகப் பரவும் (பாரதீயம், ப.1) என்றும் முறையே ஹட்சன், மாத்யூ அர்னால்டு என்னும் இருவரின் கருத்துகளை எடுத்துக் காட்டுகிறார். கண்ணன் மீதான பாரதியின் ஈடுபாட்டினைக் கூறவந்த பேராசிரியர் வாலி பாரதியைக் கேமராவாய் குறியீடு செய்துள்ள புதுக்கவிதையினைச் சான்று காட்டுவர். (பாரதீயம், ப.42)

**5. சான்றெண்ணில் விவரித்தல்**

சுவைக்கு நிலைக்களனாகிய பொருள், சுவை, குறிப்பு விறல் என்ற நான்கு வகை பொருள்களை அறிகின்றோம் என்பதற்குச் சான்றெண் விளக்கத்தில் விளக்கம் தரும் முறை ஆய்வு நெறியை ஒட்டியதாகும். (பாரதீயம், ப.156) என்.பர்ன் கூறும் படிம வகைகளை ஒட்டிப் பாரதியின் கவிதைகளில் படிமக் காட்சிகள் விளக்கம் பெறுகின்றன. கட்புலப் படிமம், செவிப்புலப் படிமம், நாற்றப் புலப் படிமம், நொப்புலப் படிமம், இயக்கநிலைப் படிமம், எனப் பலவகையான படிமங்கள் எடுத்துக் காட்டும் (பாரதீயம், ப.183) போக்கு காணப்படுகிறது.

**கலைச்சொற்கள் உருவாக்குதல்**

பாரதியின் சொல்லாட்சியினைத் தொகுத்துக் கலைச்சொற்கள் போன்றதொரு அரிய பணியினைச் செய்துள்ளார் பேராசிரியர். சொற்களில் தேர்தலில் வல்லவர் பாரதி என்பதற்கு அவரது படைப்புகளில் உள்ள சொற்கள் அனைத்தும் ஒருங்கே தொகுத்துரைத்துள்ளார். அகராதிப் பணியில் இருந்தமையால் இப்பணி எளிதில் பேராசிரியருக்குக் கைகூடியுள்ளது என்பது வெள்ளிடை மலை. இச்சொற்களை மின்னல் போன்ற மணிமொழிப் படிமங்கள் என ஒருங்குத் திரட்டி இறுதிக் கட்டுரையில் அழகுறத் தந்துள்ளார். இதற்குப் பாராதியாரின் படைப்புகளான தேசிய கீதங்கள், தோத்திரப்பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், பல்வகைப்பாடல்கள், தனிப்பாடல் திரட்டு, சுயசரிதை, மூன்று குறுங்காப்பியங்களில் உள்ள சொற்களை அடுக்கித் தருகிறார். (பாரதீயம், ப.189-190). இச்சொற்களின் குவியல் பாரதியின் நடைக்கூறினை ஆய்வதற்குப் பேருதவியாய் அமையும்.

**வினாவும் பாங்கு**

சங்க இலக்கியங்களிலும் உரையாசிரிகளிடமும் காணப்படும் 'அன்றோ' என்னும் எதிர்மறைப்பொருளை உணர்த்தும் சொல்லைப் பேராசிரியர் தமது கட்டுரைகளில் எடுத்தாள்கின்றார். நற்றிணை பாடல் 172ஐ விளக்க வந்த உரையாசிரியர் 'வேண்டுமெனில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வேறு நிழலுமுண்டன்றோ' என்று பகற்குறி மறுத்துக் கூறாநிற்பது. இப் புன்னைநீழல் போன்று நிறைபடு நீழல் பிறவுமுளவோ என்று ஏகாரத்தை வினாவாக்கி இல்லையாகலின் பகலின்கண் வாராதே கொள் எனப் பொருள் காண்க என்பர். மேலும், (நற்றிணை, பின்னத்தூர் நாராயணசாமி உரை, பா. எண்.172, கழக வெளியீடு, சென்னை, மறு அச்சு, 1986, ப. 299).

**பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்**
**பெண்மை உடைக்கும் படை (குறள். 1258)**

என நிறையழிதல் அதிகாரத்தில் வள்ளுவரும் அன்றோ என்னும் சொல்லைக் கையாள்வர். இச்சொற்களில் ஆழங்காற்பட்ட அகத்திணைக் கொள்கை ஆசிரியர் நற்றிணையிலும், திருக்குறளிலும் அன்றோ? என்னும் எதிர்மறைப்பொருள் தரும் சொற்களை நேர்மறைப்பொருளுக்குப் பயன்படுத்தி இருக்கும் பாங்கு கூரத்தக்கது. இந்நூலில் இடம்பெற்றுள்ள வினாப் பாங்கான தொடர்களாவன: யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற மரபு வழி வந்த தமிழ் மகனிடம் குறுகிய நோக்கு எங்ஙனம் முகிழ்க்கும்? (பாரதீயம், ப. 3), தமிழ் மொழியில் திருக்குறள் இருப்பினும் அது உலக மொழிகளுக்கெல்லாம் பெயர்க்கப்பெற்று உலகப் பொதுச் சொத்தாகி விடவில்லையா? (பாரதீயம், ப. 4), பின்னர் அமையும் நிலையை முன்னரே கூறிய கவிஞனின் புலமைவீறு போற்றுதற்குரியதன்றோ? (பாரதீயம், ப.15), இறந்தகால வினைமுற்றுகள் எதிர்கால நல்வாழ்வை சுட்டுவதைக் கண்டு புலவனின் எண்ணக் கூர்மையை வியக்கின்றோமன்றோ? (பாரதீயம், ப.18) என்றும் கருத்துரைப்பது நோக்கத்தக்கது.

**இணைப்பு முறைகள்**

இன்னோர் இசைப்பாட்டில் (பாரதீயம், ப. 67) இன்னிமோரிடத்தில், பிறிதொரிடத்தில், (பாரதீயம், ப. 49) இன்னொருபாடலில் (பாரதீயம், ப. 50) இவற்றையும் காண்போம். (பாரதீயம், ப. 52) இதே பாடலில் (ப. 92) என்றும் அவர் காட்டும் நெறிகளையும் ஈண்டு சிந்திப்போம் (பாரதீயம், ப.34), இவர் வாக்கிலே அதனைக் கேட்போம். (பாரதீயம், ப. 39), இனி, இறைவனை அடைதற்குப் பாரதியார் காட்டும் நெறிகளைச் சிந்திப்போம். (பாரதீயம், ப. 56), இனிப், பாரதியாரின் சமுதாயப் பார்வையினைச் சில கோணங்களில் காண்போம். (பாரதீயம், ப. 82) இதே கவிதையில் அடித்துப் பேசுவார். (பாரதீயம், ப. 92) என்று வெகுண்டு உரைப்பர் (பாரதீயம், ப.112), என்று வீரமுழக்கம் செய்வர் (பாரதீயம், ப. 112) என்றும் இணைப்புச் சொற்களைக் கையாள்கிறார். இவ்வாறு, கதைகள் மூலம் விளக்குதல் (பாரதீயம், ப.170), தற்காலச் சம்பவங்களை ஒப்பிட்டு விளக்குதல். (பாரதீயம், ப.152), ஹாஸ்யம் தற்கால விளக்கம் (பாரதீயம், ப. 9), என்று பல்வேறு உத்திகளைப் பயன்படுத்திக் கவிதையின் அழகினை நுண்ணியதாய் விளக்குகின்றார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நிறைவுரை**

நாட்டுப்பற்று, விடுதலை வேட்கை, தாய் மொழிப்பற்று, சமுதாய முன்னேற்றம், பழமையில் புதுமை, பெண் விடுதலை, அறிவுத் தெளிவு, இவை பாரதீயங்களாயின. நடைக்கூறு ஆய்தல், ஆய்வறம் பேணுதல், பல்துறை அறிவுடன் விளக்குதல், அறிவியல் முறையில் விளக்கம் செய்தல் மற்றும் வைணவ ஈடுபாட்டுடன் விளக்குதல் ஆகியன இவரது ஆய்வு விளக்க முறையாகும். கவிதைகளை விளக்கும்போது காலத்திற்கேற்ற கருத்துகளையும், குறிப்பாக அறிவியற் கருத்துகளையும் ஆங்காங்குப் பேராசிரியர் ரெட்டியார் விளக்கிச் செல்வது படிப்போரின் சுவையை மிகுவிக்கும் என்பதற்கு ஐயமில்லை. ஒன்பான் சுவை எனும் ரஸக்கொள்கைக்குப் பேராசிரியர் உடன்படுகின்றார். பாரதி பாடல்களில் வடமொழி அலங்கார ரஸங்கள் அமைந்துள்ளபடியால் அந்த அடிப்படையில் அவர் காட்டும் ரஸங்களைக் காண்பது பொருத்தமாகும் என விளக்கம் தருகிறார். பழமையின் அடிப்படையில் புதுமையாகப் பாடியுள்ளார் என்பது பேராசிரியரின் துணிபாகும். பாரதி கவிதைகள் முழுவதையும் சாரமாகப் பிழிந்து வழங்கும் பெருநூலே பாரதீயம்.

**குறிப்பு நூல்கள்**

[1] ந.சுப்புரெட்டியார். *பாரதீயம்.* பழனியப்பா பிரதர்ஸ், திருச்சி, முதற்பதிப்பு, 1983.
[2] பரிமேலழகர். *திருக்குறள்.* கழக வெளியீடு, சென்னை, மறு பதிப்பு, 1972.
[3] பின்னத்தூர் நாராயணசாமி. *நற்றிணை.* கழக வெளியீடு, சென்னை, மறு அச்சு, 1986.
[4] க.பூரணச்சந்திரன். *தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு.* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2000.
[5] ம.ப.பெரியசாமித் தூரன். *பாரதியார் நூல்கள் ஒரு திறனாய்வு.* வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1982,
[6] மீரா (தொ). *பாரதியம்.* அகரம், தஞ்சாவூர், முதல் பதிப்பு, 2006

**References**

[1] N. Subbu Reddiar. *Bharatiyam.* Palaniappa Brothers, Trichy, First Edition, 1983.
[2] Parimelagar. *Thirukkural.* Kalaga Veliyeedu, Chennai, Reprint, 1972.
[3] Binnathur Narayanasamy. *Nattrinai.* Kalaga Veliyeedu, Chennai, Reprint, 1986.
[4] K. Puranachandran. *History of Tamil Literary Criticism*. Tamil University, Thanjavur, First Edition, 2000.
[5] M. P. Periyasamith Dooran. *A Review of Bharatiyar Texts*. Vanathi Publishing House, Chennai, First Edition, 1982,
[6] Meera (Ed). *Bharatiyam.* Akaram, Thanjavur, First Edition, 2006.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் நூல்களில் அணிந்துரைகள்

## Foreword in the Texts Written by Professor

**முனைவர் சி. அருள் செல்வம்**, தலைவர் & உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீ கன்யகா பரமேஸ்வரி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. S. Arul Selvam**, HOD & Assistant Professor of Tamil,
Sri Kanyaka Paramreswari Arts And Science College for Women, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-0022-3514**
**DOI: 10.5281/zenodo.7251318**

### Abstract

*'Agathin Alagu Mugathil theriyum' is a classic proberb. According to Nannular, it is not an exaggeration to say that what one wears is a smile, inner beauty, a gentle face, and the foreword is also like that for a book. A foreword of the book is the glory of the book and explains about the book in a precise manner, That is, it introduces the book to everyone and enables them an opportunity to know the essence of the book. It gives an understanding of the book and not a criticism or praise written about the book. Before writing a foreword for a book, the main thing to be noted is the personality of the reviewers for that book. V. Subha Manikanar, who had written a foreword to Professor N. Subburettiyar's book "Agathinai Kolgaigal" (Inner Principles), says that the reason for his work was that he knew about the indepth knowledge of professor's scientific thinking. That is, the main purpose of the foreword and it introduces the book to everyone and giving them an opportunity to know the essence of the book in a clear manner. This article examines the merits of the forewords written by most respected scholars including the former Vice-Chancellor Madurai Kamaraj University, Prof. V. Subha Manickam to great writers such as Avvai Natarasan, Kamban Adisoodi Phala. Pahalaniappan (student of Professor N.Subburettiyar) to the classic works of N. Subbu Reddiar.*

**Keywords:** Foreword, Foreword Writers, Forwords in Subbu Reddiar's Works.

### ஆய்வுச் சுருக்கம்

*'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி. புன்னகை ஒன்றே நம்மை மற்றவருக்கு அறிமுகம் செய்யப் போதுமானது. அதுபோலத்தான், ஒரு நூலின் அணிந்துரை கண்டால் அந்நூலின் அகமும் காணமுடியும். ஆயிர முகத்தான் அகன்ற தாயினும் பாயிரமில்லது பனுவல் அன்றே, என்ற நன்னூலார் வாக்கிற்கேற்ப, எதிர்ப்படும் ஒருவரின் புன்னகையாயும், அகத்தின் அழகாயும், நூன்முகமாயும், முன்னுரையாயும் விளங்குவது அணிந்துரை எனில் அது மிகையன்று. ஒரு நூலின் அருமை பெருமைகளை அந்நூலுக்கு அணிவித்து விளக்குவது அணிந்துரை. அதாவது, ஒரு நூலை அனைவருக்கும் அறிமுகம் செய்வதாகவும், அந்நூலின் உள்ளடக்கச் சாரத்தை அறிந்து கொள்ள வாய்ப்புத் தருவதாகவும் அமைவது அணிந்துரை. அணிந்துரை என்பது, விமர்சனமுமல்ல, அதே சமயத்தில் பாராட்டு உரையும் அல்ல என்பதை*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com



*உணர்ந்து எழுதப்பட வேண்டிய ஒன்றாகும். ஒரு நூலுக்கு எழுதப்படும் அணிந்துரை என்பது, அந்நூலுக்கு துலாக்கோல் போல் விளங்க வேண்டும். ஆழ்ந்த கருத்து வேற்றுமை இருக்கும் பொழுது நூலின் அணிந்துரை அந்நூலின் உள்ளடக்கத்தை முழுமையாக ஆதரிக்காமல் ஆங்காங்கு சில கருத்துக்களையும் பதிவு செய்ய வேண்டும். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஐயா அவர்களின் நூல்களுக்கு எழுதப்பட்ட அணிந்துரைகள் இத்தன்மையதே. ஒரு நூலுக்கு அணிந்துரை எழுதுவதற்கு முன்பு, அந்நூலுக்கு அணிந்துரை எழுதுபவர் எத்தன்மை வாய்ந்தவர் என்பதும் கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற நூலுக்கு அணிந்துரை வழங்கிய வ.சுப.மாணிக்கனார் அவர்கள், தம்மை பணித்தமைக்கான காரணமாக, பேராசிரியரைப் பற்றி அவருடைய அறிவியல் சிந்தனையைப் பற்றி தாம் அறிந்தவர் என்றும், பேராசிரியரின் பல நூல்களைப் படித்து உணர்ந்தவர் என்றும் குறிப்பிட்டிருப்பதன் கருத்து, அணிந்துரை எழுதுபவரின் சிறப்பு எத்தன்மையது என்பதை உணர்ந்து கொள்ளச் செய்கிறது. இங்ஙனம் மாண்புமிகு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய அத்தனை நூல்களுக்கும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர் வ.சுப.மாணிக்கம் ஐயா முதற்கொண்டு டாக்டர். அவ்வை நடராசன், கம்பன் அடிசூடி பழ.பழநியப்பன் (பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் மாணவர்) எனப் பலரும் வழங்கியுள்ள அணிந்துரைகளின் மாண்புகளை ஆராய்கிறது இக்கட்டுரை.*



**கலைச்சொற்கள்:** அணிந்துரை, பேராசிரியரின் அணிந்துரையாளர்கள், ந.சுப்புரெட்டியார் நூல்களில் அணிந்துரைகள்.


**முன்னுரை**

உலகில் மனிதன் செய்த புதுமைகளுள் தலைசிறந்தது இலக்கியம் எனலாம். மனித நாகரீகத்தின் வளர்ச்சிப்படிநிலையைக் கண்முன்னே காட்டும் காலக் கண்ணாடியாக விளங்குவது இலக்கியம். இலக்கியம் என்பது அறிவுவளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்த மனிதச்சிந்தனையின் தனித்தன்மையை வெளிச்சம் போட்டு காட்டும் ஒளிவிளக்கு என்று கொள்ளலாம். இலக்கியமானது வாய்மொழியாகத் தோற்றம் பெற்று, கல்லைச் செதுக்கி, மண்ணில் தவழ்ந்து, இலைகளில் இளைப்பாறி, ஓலைகளில் பதிந்து, காகிதத்தில் அச்சேறி நூல்வடிவம் கொண்டு நம் கைகளில் தவழும் வளர்ந்த குழந்தை என்று கூறலாம். தமிழன்னையின் அணிகலனாய் விளங்கும் எழுர்ச்சிமிகும் இலக்கியங்களைப் படைத்தளித்த பாரதியார், பாரதிதாசன், கவிமணி போன்ற இக்காலப் படைப்பாளர்களின் வரிசையில் வைத்து எண்ணப்படக்கூடியவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். அவர் தமிழன்னைக்கு மணிமகுடமாய்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விளங்கும் சிறப்பு மிக்கநூல்கள் பலவற்றைப் படைத்தளித்தவர். சங்ககால இலக்கியவகைகளில் ஒன்று ஆற்றுப்படை இலக்கியமாகும். இதில் பரிசு பெற்ற ஒருவர், அதனை பெறாத மற்றொருவருக்கு பரிசு கிடைக்கும் இடத்தை நோக்கி ஆற்றுப்படுத்தும் இலக்கியமாக அமைவது ஆற்றுப்படை இலக்கியம். அதேபோன்றுதான், ஓர் இலக்கியத்தைப் படித்து புரிந்து கொண்ட ஒருவர் அந்நூலைப் படிக்கவிரும்பும் மற்றவருக்கு அந்த நூலின் சிறப்புகளோடு, நிறை, குறைகளை எடுத்து இயம்பும் அறிமுக உரையாக அமைவது அணிந்துரை எனக்கொள்ளலாம். பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்கள் அனைத்திலும் சிறப்புமிக்க அணிந்துரைகள் இடம்பெற்று இருக்கின்றன. அத்தகைய அணிந்துரைகளின் நோக்கம் குறித்தும் பேராசிரியர் படைப்புக் கடலில் மூழ்கி எழுந்து அணிந்துரையாளர்கள் கோர்த்த முத்துக்களின் சாரத்தைக்குறித்தும் விளக்கும்முகமாக பேராசிரியர் நூல்களில் அணிந்துரைகளை ஆராய்வதாக அமைவது இக்கட்டுரையின் நோக்கம் எனக்கொள்ளலாம்.

திருவையாற்றில், கோவில் பிரகாரத்தில், மேள சத்தத்தை கேட்டு, ஏதோ இடி இடிக்கிறது, மழை வருமோ என்று மரத்தின் மேல் ஏறி மேகங்களை ஏறிட்டுப் பார்த்த சில பேதைமைத் தன்மை கொண்ட மந்திகளில் ஒன்றைப் போன்றதே பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களில் இடம்பெறும் அணிந்துரைகள் குறித்து எழுதத் துணிந்த என்நிலை. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் பேராசிரியர் நூல்களில் அணிந்துரைகள் என்னும் தலைப்பில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்**

பேராசிரியர் என்றாலே நம் நினைவிற்கு வருவது தமிழ் இலக்கண, இலக்கியங்களுக்கு உரை வகுத்த இளம்பூரணர், கல்லாடர், பரிமேலழகர் போன்றோர் வரிசையில் இடம்பெறும் பேராசிரியர் ஆவார். அதுபோன்றே, இன்றைய படைப்பாளர்களால் பேராசிரியர் என்று அன்புடன் அழைக்கப்படுபவர் எழுத்தாளரும், தமிழறிஞரும், முனைவருமான பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எனில் மிகையன்று. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தமிழ்ப்புலமை பெற்றது மட்டுமின்றி, அறிவியல், வேதியியல், சமயம், ஆன்மீகம் எனப்பல துறைகளில் சிறந்து விளங்கியவர். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், தமிழ் இலக்கியவரலாற்றில் கல்வி, இலக்கியம், சமயம், தத்துவம், பயண இலக்கியம், தன்வரலாறு, அறிவியல், கணிதவியல், உளவியல், கல்வி உளவியல் எனப்பல்வேறு துறை சார்ந்த நாட்டுடமையாக்கப்பட்ட நூற்று முப்பத்து ஐந்து நூல்களுக்கும் மேலாக படைத்தளித்த சிறப்பு மிக்கவர் ஆவார். மேலும், பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர், ஆசிரியர் பயிற்சி கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவர், பல்கலைக்கழகப் பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர், தமிழ்க்கலைக்களஞ்சிய முதன்மைப்பதிப்பாளர் எனப் பன்முக ஆளுமை கொண்டவர் ஆவார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**அணிந்துரை – வரையறை**

அகராதிகள் அணிந்துரை என்பதற்கு, அணிந்துரை என்பது நூலுக்கு புகழ் பெற்ற ஒருவர் தரும் முன்னுரை என்றும், பாயிரம் என்றும் பொருள் தருகிறது. அணிந்துரை என்பதற்கு பழைய பெயர் பாயிரம் என்பதாகும். நூலை கற்க முனையும் மாணவர்களுக்கு அந்நூலின் பண்புகள் என்ன என்று கூறும் வகையில் அமைவது பாயிரம்மாகும். பாயிரம் என்பது,

**மாடக்குச் சித்திரமு மாநகர்க்கு கோபுரமும்**
**ஆடமைந்தோ ணல்லார்க் கணியும்போல் - நாடிமுன்**
**ஐந்துரை நின்ற வணிந்துரையை யென்நூற்கும்**
**பெய்துரையா வைத்தார் பெரிது (நன்னூல், நூ. 55)**

எனக் கூறுகிறது நன்னூல். மேலும், பாயிரம் என்பதன் முக்கியத்துவத்தை கூறுமுகமாக,

**ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்**
**பாயிரமில்லது பனுவல் அன்றே (நன்னூல், நூ. 54)**

என ஆயிரம் துறைகளைப் பற்றிப் பேசுவதாக ஒரு நூல் இருந்தாலும் அதற்கு பாயிரம் இல்லை என்றால் அது முழுமையான நூலாகாது என்கின்றது நன்னூல். பாயிரம் என்பதில் நூலின்தன்மை, ஆசிரியனதுதன்மை போன்ற பலசெய்திகள் இடம் பெற்றிருக்கும். ஒரு செயலைச் செய்யும்போது ஆரம்பம் சிறப்பாக இருக்குமானால் முடிவும் சிறப்பாக இருக்கும் என்பது அனைவரும் அறிந்ததே. ஒரு நல்லநூலின் சிறந்த ஆரம்பமாக அமைவது அந்த நூலின் அணிந்துரை ஆகும். அணிந்துரை என்பது ஒருவர் எழுதிய நூலை இன்னொருவருக்கு அறிமுகப்படுத்த கொடுக்கப்படும் அறிமுகம் எனலாம்.

**அணிந்துரையாளர் – தகைமைகள்**

அணிந்துரை என்பது அணிந்துரை மட்டுமல்ல ஆய்வுரை எனலாம். நூல் முழுவதையும் ஆழ்ந்து படித்து உள்வாங்கி ஒப்பிலக்கியநோக்கில் ஆய்வுசெய்து எழுதுவதே அணிந்துரையாகும். அதாவது ஒரு நூலை எந்த எதிர்பார்ப்போடு வாசிக்கத் தொடங்கினால் அல்லது எப்படி வாசிக்கத் தொடங்கினால் அந்த நூலை முழுமையாகப் புரிந்துகொள்ளலாம் என்பதற்கு வழிகாட்டுவதாக அமைவதே அணிந்துரை. ஆகவே ஒரு நூலுக்கு அணிந்துரை எழுதுவதற்கு முன்பு அந்நூலுக்கு அணிந்துரை எழுதுபவர் எத்தன்மை வாய்ந்தவர் என்பது கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். சிறப்பு பாயிரம் எழுதுவதற்குரியவர் யார் என்பதற்கு,

**தன்னா சிரியன் தன்னோடு கற்றோன்**
**தன்மா ணாக்கன் தகுமுரை காரனென்(று)**
**இன்னோர் பாயிரம் இயம்புதல் கடனே (நன்னூல், நூ. 51)**

என்கிறது நன்னூல். ஆகவே, அணிந்துரை கொடுப்பவர் நூல் தொடர்பான துறையில் அறிவும் அனுபவமும் பெற்றவராகவும், அத்துறை சார்ந்தவரிடையே மதிப்பு பெற்றவராகவும்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நடுவுநிலை மாறாதவராகவும், சான்றோர் தன்மை பெற்றவராகவும் இருப்பதுடன், அந்நூலில் இருக்கும் குணம் மற்றும் குற்றம் இரண்டையும் உலகத்திற்கு புலப்படுத்துபவராகவும் இருப்பதுதான் சிறப்பு.

**பேராசிரியரின் அணிந்துரையாளர்கள்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் படைப்புக்களுக்கு அணிந்துரை வழங்கிய அணிந்துரையாளர்கள் வ.சுப.மாணிக்கனார், பேராசிரியர் டாக்டர் இராம.மகாதேவன், பேராசிரியர் முனைவர் ஜே.பார்த்தசாரதி, திரு க.பத்மநாபன்ரெட்டியார், சிலம்பொலி சு.செல்லப்பன், ஆ.பன்னீர் செல்வம், டாக்டர் ச.மெய்யப்பன், முனைவர் தானியேல் தேவசங்கீதம், இராம.வீரப்பன், டாக்டர் எம்.ஏ.வேங்கடகிருஷ்ணன், பேராசிரியர் டாக்டர் தி.வைத்தமாநிதி, டாக்டர் கி.வேங்கடசுப்ரமணியன், திரு தி.அ.கிருஷ்ணமாச்சாரியசுவாமிகள், திரு க.அவினாசிலிங்கம், பேராசிரியர் டாக்டர் A.V. ரங்காச்சாரி, திரு கே. ஆர்.மாணிக்கம், பாரதரத்னா சி.சுப்பிரமணியம், டாக்டர் ஏ.சிதம்பரநாதன் செட்டியார் போன்ற பலராவர்.

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல்களில் அணிந்துரைகள்**

பாயிரம் எழுதுவதற்கு உரியவர் யார் யார் என்பதை, தன்னாசிரியன், தன்னோடு கற்றோன், தன்மாணாக்கன், தகுமுரைகாரன் போன்றவர் என்று நன்னூல் குறிப்பிட்டிருப்பதற்கேற்பவே, பேராசிரியர் நூல்களிலும் பேராசிரியர், டாக்டர், முனைவர், புலவர், மாணாக்கர் என ஆகச்சிறந்த பலரும் அணிந்துரைகள் எழுதியிருக்கின்றனர். பானை சோற்றுக்கு ஒரு சோறுபதம் என்பது போல பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் சில நூல்களின் அணிந்துரைகள் பேராசிரியரின் முழு ஆளுமை திறனுக்கும் சான்றாக இங்கு காண்போம்.

***அகத்திணைக் கொள்கைகள்***

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் 'அகத்திணைக் கொள்கைகள்' என்ற நூலுக்கு அணிந்துரை வழங்கிய வ.சுப.மாணிக்கனார் அவர்கள் தம்மைப் பணித்தமைக்கான காரணமாக, பேராசிரியரைப் பற்றி 'அவருடைய அறிவியல் சிந்தனையைப் பற்றி தாம் அறிந்தவர் என்றும், பேராசிரியரின் பலநூல்களைப் படித்து உணர்ந்தவர்' என்றும் குறிப்பிட்டிருப்பது அணிந்துரையை எழுதுபவரின் சிறப்பு எத்தன்மையது என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது. மேலும், இந்நூலில்,

> **பாரதத்திற்கு உரிய தனி மலை இமயமலை என்று அறிபவன் 'பாரதன்' ஆவான். தமிழுக்கே உரிய தனி இலக்கியம் அகத்திணை என்று அறிபவன் 'தமிழன்' எனப்படுவான். தமிழின் பெருமையையும் அருமையையும் உணர்ந்த புலவர்கள் தமக்காக எழுதுவதில்லை; தமிழர்க்காக எழுதுகின்றனர்; பிறப்பால் தமிழர்களை சிறப்பாலும் தமிழராக்க எழுதுகின்றனர். இச்சிறந்த நோக்கோடு எழுதிய இனிய பெரிய இந்நூலைக் கற்று பயனடைய வேண்டுகிறேன் (அகத்திணைக் கொள்கைகள், பக்.v)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று வ.சுப.மாணிக்கனார் தமது அணிந்துரையில் கூறியிருப்பது பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களுக்கு கிடைத்த சிறப்பு என்று கருதலாம்.

***அர்த்த பஞ்சகம்***

அணிந்துரை கொடுப்பவர் அந்நூல் தொடர்பான துறையில் அறிவும் அனுபவமும் பெற்றவராய் இருப்பது வழக்கம். அவ்வாறே, பேராசிரியர் டாக்டர் இராம.மகாதேவன் அவர்கள் வழங்கிய அணிந்துரையில்,

> **அர்த்த பஞ்சகம் என்ற நூலுக்கு "இந்நூலில் நுவலப்படும் 'அர்த்தபஞ்சக ஞானம்' என்பது சம்சாரியான சேதநன் தத்துவஞானம் பிறந்து உய்யும்போது தோன்றுவதாம்.' இது (1) ஈஸ்வரனது இயல்பு (2) ஆன்மாவின் இயல்பு (3) ஆன்மா அடையும் பயன் (4) அப்பயனை அடைவதற்குரிய வழிகள் (5) அப்ப பயனை அடைய வொட்டாமல் தடுக்கும் இடையூறுகள் இவை ஆகும். இவற்றைப் பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் இந் நூலில் மிக விரிவாக, ஆழ்வார்களின் பாசுரங்களிலிருந்து தெளிவான மேற்கோள்களுடன் விளக்கியுள்ளார்கள் (அர்த்த பஞ்சகம், பக்.xvi)**

என்று குறிப்பிடுவது பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரது துறைசார்ந்த அறிவும் அனுபவமும் எத்தனை சிறப்பானது என்பதைப்புலப்படுத்துகிறது.

***வைணவ புராணங்கள்***

ஒரு நூலுக்கு வழங்கப்படும் பாயிரமானது அணிந்துரை என்றும் வழங்கப்படும் என்பதை, **ஒரு நூலினது பெருமையை முதலில் விளங்க அணிந்துரைத்தலின் அணிந்துரை (நன்னூல், பக். 46)** என்று அழைக்கப்படுகிறது என்கிறது நன்னூல். அதற்கேற்பவே, முனைவர் பேராசிரியர் ஜே. பார்த்தசாரதி *வைணவ புராணங்கள்* என்ற இந்நூலுக்கு வழங்கியுள்ள அணிந்துரையில் நூலின் வைப்புமுறை பற்றி தெளிவான ஒரு விளக்கத்தை வழங்கிச்செல்கின்றார். இந்நூலில் 'வைணவர்களில் பலரும் அறிந்திராத இலக்கியங்களான இதிகாச பாகவதம், புராண பாகவதம், திருக்குருகை மான்மியம், கூடற் புராணம், இருசமயவிளக்கம் என்னும் ஐந்து நூல்களைப் பற்றிய செய்திகளின் அறிமுகமாக அமைத்துள்ள பாங்கைக் கூறியுள்ளதோடு, இறுதியாக அவர் கூறுமிடத்து,

> **ஏராளமான செய்திகளை உள்ளடக்கி, நடுநிலையோடு வெளிப்படுத்தி, வைணவ மரபு வழிப் பண்பாட்டினை நமக்கெல்லாம் புரியவைத்து இந்த நூல்களைத் தேடி கண்டறிந்து படிக்க வேண்டும் என்று தூண்டுகிறார். அதுவே மிக உயர்வான செய்தியாகும் (வைணவ புராணங்கள், பக்.ix)**

என்று கூறியிருப்பது பேராசிரியர் ந.சுப்புரெட்டியாருக்கு மணிமகுடம் சூட்டுவது போன்றது.

***விட்டுச்சித்தன் விரித்த தமிழ்***

நூலுக்கு அணிந்துரை வழங்கும்பொழுது அந்த நூலாசிரியரின் பல்துறை ஞானம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எவ்வாறு அமைத்துள்ளது என்பதை வெளிப்படுத்தும் முறையில் அணிந்துரை அமையவேண்டும். பெரியாழ்வாரைப் பற்றி விரிவாகப்படிப்பதற்கு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் இயற்றியநூல் *விட்டுச்சித்தன் விரித்த தமிழ்* என்ற நூலாகும் எனலாம்.

> **நூலாசிரியர் அவர்களை நான் நீண்ட காலமாக அறிவேன். அவர் ஒரு நல்லாசிரியர், நல்ல கவிஞர், மேடைப் பேச்சாளர் என்பதையும் அறிவேன். ஆனால் திருக்குறளை முற்று ஓதி அதன் பொருள் உணர்ந்து பயின்றவர் என்பதையும்... இன்றைய நிலைமையோடு ஒப்பிட்டு சீர் தூக்கி பார்ப்பதில் வல்லவர் என்பதையும் இந்நூலை படித்த பின்னரே நான் அறிய வந்தேன் (வள்ளுவம் என்னும் மணற்கேணி, பக். iii)**

என்று கூறுவதற்கு ஏற்ப, இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள திரு க. பத்மநாபன் ரெட்டியார் அவர்கள் இந்நூல் பற்றி கூறும்பொழுது பேராசிரியரின் பல்துறை ஞானம் எவ்வாறு இந்நூல் முழுவதும் பரவிகிடக்கிறது என்பதை அழகுற எடுத்துரைக்கிறார். இந்நூலின் பெயர்க்காரணம் பற்றி கூறும்பொழுது,

> **சுருதிப்பாசுரம் ஒன்றில் வரும் 'விட்டு சித்தன் விரித்தமிழ்' (3.6:11) என்ற சொற்றொடரையே நூலின் பெயராக இட்டு ஆசிரியர் வழங்கியமை நூலிற்குக் கவர்ச்சியுடைய பெயராக அமைந்திருப்பது ஒரு தனிச் சிறப்பாகும் (விட்டுச்சித்தன் விரித்த தமிழ், பக். xvi, xvii)**

என்கிறார். மேலும், இந்நூலின் ஒவ்வொரு இயல்பற்றி கூறும்பொழுதும் அதன் சிறப்புகள், தனித்தன்மைகளோடு, இந்நூலில் இடம்பெறும் அணிந்துரை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கையாண்டுள்ள முறைமைகள் குறித்து சுவைபட எடுத்து இயம்பியிருக்கும் பாங்கு சிறப்புடையது.

***நினைவுக்குமிழிகள் – 1***

காரைக்குடியில் அழகப்பர் ஆசிரியர்பயிற்சிக் கல்லூரியில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் மாணவனாக இருந்து பயின்ற சிலம்பொலி சு.செல்லப்பன் அவர்கள், பேராசிரியர் அவர்களின் *நினைவுக்குமிழிகள்-1* என்னும் இந்நூலுக்கு அணிந்துரை வழங்குமிடத்து,

> **பேராசிரியர் தம் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை மட்டும் அடுக்கிச் சொல்லவில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சியைக் குறிப்பிடும் பொழுதும் அது தொடர்பான பின்னணிகளுடன் அனைத்து விவரங்களையும் அழகு மிளிரும் சொல்லோவியமாகத் தீட்டி செல்கிறார்கள். இந்நூலினை பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் தன்வரலாறு என்பதைவிட 1920, 1030களில் தமிழ்நாட்டு சிற்றூர்களின் நிலை, மக்களின் வாழ்க்கைமுறை, திண்ணைப்பள்ளிக் கூடங்களில் கல்வி கற்று தந்த முறை, உயர்நிலைப் பள்ளி - கல்லூரிகளில் கல்வி நிலை போன்றவற்றை எல்லாம் படம்பிடித்து**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**காட்டுகின்ற சமூக வரலாற்று நூல் என்று கூறுவது பொருத்தமாக இருக்கும் (நினைவுக்குமிழிகள் – 1, பக். ix)**

என்று அவர் கூறியிருக்கின்றார். இந்நூலின் அணிந்துரை இந்நூலை முழுமையாக படித்த உணர்வைத்தருவதாக அமைந்திருக்கிறது.

***நினைவுக்குமிழிகள் – 2***

பேராசிரியரின் தன் வரலாற்று நூலான நினைவுக்குமிழிகள் என்ற இந்நூலுக்கு பேராசிரியருடன் நெருங்கிப்பழகிய நண்பர் என்ற முறையில் அணிந்துரை வழங்கியுள்ளார் குறளகம், தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித்துறை துணை இயக்குனர் ஆ. பன்னீர்செல்வம் அவர்கள். இவர் இந்நூலை ஆழமாகவும் அகலமாகவும் படித்து உணர்ந்து தம் கருத்துக்களை வழங்கியுள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் சிந்திக்கும் திறனும், திட்டமிடும் திறனும், செயலாற்றும் திறனும் கண்டு பல இடங்களில் பாராட்டிச்செல்லும் அவர்

**பல பிரச்சினைகளையும் சமாளிக்கும் பொறுப்பு தன் தலைமீது அமைந்ததால் தலைமை ஆசிரியர் என தம்மை அழைத்தனரோ (நினைவுக்குமிழிகள் – 2, பக். ix)**

என பேராசிரியர் அவர்கள் குறிப்பிடுவதைச் சுட்டிக்காட்டியுள்ளார். பேராசிரியரின் கணித அறிவை வியப்பதிலும், தமிழ் எம்.ஏ தேர்வு எழுதுவதற்கு தடையாக இருந்த சென்னைப்பல்கலைக்கழக விதிகளை எதிர்த்து போராடிய பாங்கையும் விவரித்துள்ளார். கல்விக்கண் திறந்த காமராசர் என்று காமராசரை புகழ்வது போலவே மாணவர்களுக்கான அறிவுத்தேடலில் சீரிய முறையில் பேராசிரியர் ஆற்றிய பணிகளை அந்நூலின் பக்கங்களோடு பதிவுசெய்திருப்பதும், தமிழ்நாட்டுப் பள்ளிகளில் அமைந்த இலவசஉணவுதிட்டம் முதன்முதலில் எப்பொழுது தொடங்கப்பட்டது என்பது குறித்து தெளிவுபடுத்தி இருப்பதும் குறிப்பிடத்தக்கது. அணிந்துரை எழுதுபவர்கள் நடுவுநிலை மாறாத சான்றோர் தன்மை பெற்று அதில் இருக்கும் குணம் மற்றும் குற்றம் இரண்டையும் உலகத்திற்குக்கூறுவதே சிறந்தது என்பதால் நயத்தகு அணிந்துரையை வழங்கியுள்ளார் ஆசிரியர்.

**தமிழ்மொழி வளர்ச்சி குறித்தும், தமிழ் கலைச் சொல்லாக்கம் குறித்தும் பேராசிரியர் குறிப்பிட்டுள்ள கருத்துக்கள் 'பழமைக்கும் பழமையான தமிழ் புதுமைக்கும் புதுமையாய் வளர்ந்தோங்க' வகை செய்யும் என்பதில் ஐயமில்லை (நினைவுக்குமிழிகள் – 2, பக். xiv)**

என்று குறிப்பிட்டதோடு சிறப்புகளை மட்டும் எடுத்துக்கூறுவதாக மட்டுமின்றி அந்நூலில் காணப்படுகின்ற தமிழாக்க முரண்பாடுகளை, **இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள சில தமிழாக்கங்கள் வழக்கிலுள்ளவற்றுக்குச் சற்று முரண்படுமாறு உள்ளன (நினைவுக்குமிழிகள் – 2, பக்.xiv)** என்றும் கூறி சில எடுத்துக்காட்டுகளையும் தந்திருக்கின்றார். அதேபோன்று நூலில் ஆங்காங்கே சில எழுத்துப்பிழைகளும் உள்ளதை சுட்டி அதற்கான பக்கங்களையும் சுட்டுவதுடன், **திருத்தலப் பயணம் பற்றிய பகுதி (பக்.293-362) சற்று நீண்டு விட்டது**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**(நினைவுக்குமிழிகள் – 2, பக். xv)** என்று தோன்றுகிறது எனவும், இவ்வாறு குணம் குற்றம் இரண்டையும் நாடி அணிந்துரை வழங்கியிருப்பது அன்னாரின் ஆய்வு மனப்பான்மையை வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

***நினைவுக்குமிழிகள் – 3***

அணிந்துரையினை வித்தியாசமான விமர்சனம் என்றே கொள்ளலாம். ஒரு நூலைப் படிக்கும்போது எத்தகைய உணர்வு மேலோங்குகிறது என்பதை, டாக்டர் ச.மெய்யப்பன்,

> **காரைக்குடியின் கதையினை, பெருமக்கள் வாழ்வினை, கல்வி நிலையங்களின் வளர்ச்சியினை, சான்றோர்களின் சார்புகளை, அறிஞர்களின் அறிவுரைகளை கவிதை அழகுடன் கல்வெட்டுகளாக்கி தருகிறார்கள்… ஒரு ஆசிரியர் நல்லாசிரியர் பேராசிரியர் உருவான கதையை பொன் இழைச் சுடராக இந்நூலுள் இழையோடுகிறது (நினைவுக்குமிழிகள் – 3, பக். x)**

என்று கூறியிருப்பது உணர்த்துகிறது.

***நினைவுக்குமிழிகள் - 4***

முனைவர் தானியேல் தேவசங்கீதம் அவர்கள் திருவேங்கடம் பல்கலைக்கழகத்தில் பேராசிரியருடன் பணியாற்றியவர். அவர் நினைவுக்குமிழிகள் – 4 என்கின்ற இந்நூலுக்கு தந்துள்ள அணிந்துரையில்,

> **பேராசிரியர் அவர்களின் 'நினைவுக் குமிழிகள்' ஒரு தன் வரலாற்று நிகழ்ச்சி கோவை மட்டுமன்று; அஃது ஒரு சிறந்த இலக்கியம்; வாழ்க்கை அநுபவங்களை இலக்கியச் சான்றுகளால் விளக்குவதும், இலக்கியம் கூறும் உண்மைகளை, நீதிநெறிகளை, வாழ்க்கைத் தத்துவங்களைத் தம் சொந்த வாழ்க்கை நிகழ்ச்சிகளால் விளக்கிக் காட்டுவதும் இந்நூலின் சிறப்புகளில் தலையாயவை என்று கூறலாம் (நினைவுக்குமிழிகள் – 4, பக். xyi)**

என்று அவர் கூறியிருப்பது ஒரு நூலின் பொறுண்மையின் சாரம் அந்நூலில் இடம்பெற்றுள்ள அணிந்துரையில் நியாயமான அளவிற்கு இடம்பெற்றிருக்கவேண்டும் என்பதை உணர்த்துவதாக உள்ளது.

***ஆழ்வார்களின் ஆரா அமுது***

புலவர் மு.இராமசாமி அவர்கள் அருளிய அணிந்துறையுள் அமுதம் என்ற சொல்லை ஆசிரியர் சிறப்பு வாய்ந்ததாக்கும்படி கையாண்டுள்ளவிதம் சிறப்பு வாய்ந்ததாகும். மேலும் அவர் ஆழ்வார்களின் பக்தியைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எவ்வாறு இந்நூலுள் பதிவு செய்துள்ளார் என்பதை புலப்படுத்தும் போது, **இவ்வருமை நூல் இனி இவ்வகையில் வெளிவரவுள்ள ஆயிரம் ஆயிரம் நூல்களுக்கு ஒரு பாயிரம் ஆகும் (சுதந்திரம் - 75, பக். 8)** என்பதற்கு ஏற்ப,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஆழ்வார்களின் ஆரா அமுது என்கின்ற இந்நூலின் மூலமாக ஆழ்வார்கள் வழிபட்ட ஆறா அமுதத்தை மனதாரக் கண்டு தரிசிக்கலாம்; அவர்கள் அருளிய தமிழ் அமுதினை சுவைத்து இன்புறலாம். இந் நூலாசிரியரின் அகத்தோற்றத்து வைணவ பொலிவைக் கண்டு வியந்து போற்றி மகிழலாம் (ஆழ்வார்களின் ஆரா அமுது, பக். xxvii, xxviii)**

என்று கூறிச்செல்கின்றார்.

***நீங்காத நினைவுகள் - 1, 2***

ஒரு நூலில் இடம்பெறும் அணிந்துரை அந்நூலைப் பற்றிய வெளிப்படையான கருத்தாக அமையவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது நீங்காத நினைவுகள் என்ற இந்நூல் பற்றிய அணிந்துரை. இராம. வீரப்பன் அவர்கள்,

**இருளும் ஒளியும் கலந்த உலகம் போல நல்லதும் கெட்டதும் கலந்தவன் தான் மனிதன் என்ற எச்சரிக்கையோடு தாம் உறவாடிய சான்றோர்களின் அருங்குணங்களை ஆழமாகத் தீட்டி ஆகாத தன்மைகளையும் மிக நாகரீகமாக புலப்படுத்தியுள்ளார்கள் (நீங்காத நினைவுகள் – 1, பக். viii)** என்றும்,

**துறையூர் உயர்நிலைப் பள்ளி துவங்கி முடிவில் திருவேங்கடம் பல்கலைக்கழகம் வரை - பின் பதினைந்து மாதங்கள் தமிழ்க் கலைக்களஞ்சிய தலைமைப் பதிப்பாளராக பணியாற்றியது உட்பட - பல்வேறு கல்வி தளங்களில் அவரது ஆக்கமும் ஊக்கமும் செயல்பாடுகளும் நீக்கமற நிறைந்து பரிமளித்திருக்கின்றன (நீங்காத நினைவுகள் – 2, பக். viii)**

என்றும் கூறியிருப்பது பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் தர்மநெறியை, ஆக்கச்சிந்தனையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

***வைணவமும் தமிழும்***

உயர்திரு டாக்டர் எம்.ஏ.வேங்கடகிருஷ்ணன் அவர்கள் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் வைணவமும் தமிழும் என்ற நூலுக்கு அருளிய அணிந்துரை சிறப்பு வாய்ந்ததாகும். இதில் வைணவம் பற்றிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியாருக்கு உரிய அனுபவம் பற்றிப்பேசி இருக்கும் அவர் அந்நூலில் ஒவ்வொரு இயலையும் விரிவாக விவரித்து அதிலுள்ள நிறை, குறைகளை முறையான சான்றுகளுடன் எடுத்துக்காட்டி வலுவூட்டியும், மறுத்தும் அணிந்துரை கொடுத்திருப்பது சிறப்பு. இரண்டாம் இயலில் திருப்பல்லாண்டு பதிகமாகாது என்ற பேராசிரியரின் கருத்துக்கு எதிராக அவர் சான்றுகள் பலகாட்டி திருப்பல்லாண்டு பதிகம் ஆகும் என்று மெய்ப்பித்திருப்பதும், நான்காம் இயலில்,

**சம்பிரதாய கருத்துக்கு முரணாக நம்மாழ்வாரை அனைத்து ஆழ்வார்களுக்கும் பிற்பட்டவராகக் காட்டி இருப்பதை ஏற்க முடியவில்லை. (வைணவமும் தமிழும், பக். viii, ix)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று மறுத்து இருப்பதும் சிறப்பு ஆகும். டாக்டர் எம்.ஏ.வேங்கடகிருஷ்ணன் அவர்கள் அருளிய அணிந்துரை என்பது படைப்பாளிகளுக்கு பாராட்டையும் ஊக்கத்தையும் ஆக்கத்தையும் வழங்கும் விதமாக அற்புதமாக அமைந்த அணிந்துரை மட்டுமல்ல, ஆய்வுரை என்றே சொல்லலாம். இந்த நூல் முழுவதையும் ஆழ்ந்து படித்து உள்வாங்கி ஒப்பிலக்கியத்துறையின் ஒப்புநோக்கி ஆய்வுசெய்து அணிந்துரை அருளியதே சிறப்பாக அமைந்திருக்கிறது.

***சடகோபன் செந்தமிழ்***

பேராசிரியர் டாக்டர் தி. வைத்தமாநிதி அவர்கள் வழங்கிய அணிந்துரையில்,

> **சடகோபன் செந்தமிழ் பதினைந்து இயல்களாக தம் நோக்கான நம்மாழ்வாரையும் அவர் தாயாக விளங்கி ஈன்ற தமிழ் மறையையும் ஒருசேர இணைத்துப் பயில்கின்ற முயற்சியை எடுத்துக் காட்டி நிறைவு செய்திருக்கிறது (சடகோபன் செந்தமிழ், பக். xvi)**

என அந்த நூலின் முழுமையையும் ஒற்றைவரியில் கூறியிருப்பது சிறப்பாக அமைகின்றது.

***மலரும் நினைவுகள்***

டாக்டர் கி. வேங்கடசுப்ரமணியன் அவர்கள் **மலரும் நினைவுகள்** என்ற பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அதில்,

> **நெறிப்படுத்தும் சமயம், நெஞ்சை அள்ளும் தமிழ், நேர்மை விளங்கும் தத்துவம், மனநலம் உணர்த்தும் உளவியல் எனப் பல வண்ண மலர்கள் மலர்ந்துள்ளன. வெறும் வரலாற்றுப் படைப்பாக இல்லாமல் இதனை இனிய காவியம் ஆக்கியுள்ளார் ரெட்டியார் (மலரும் நினைவுகள், பக். vi)**

என்று அவர் குறிப்பிட்டுள்ளது இந்நூலை முழுமையாகப் படித்துள்ளதுடன் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் உழைப்பை வெளிப்படுத்தும் முறையில் அணிந்துரை அமைந்துள்ளது.

***வடவேங்கடமும் திருவேங்கடமும்***

*வடவேங்கடமும் திருவேங்கடமும்* என்ற பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள திரு தி.அ.கிருஷ்ணமாச்சாரியசுவாமிகள் இந்நூலில் வேங்கடம் என்ற சொல்லுக்கு பேராசிரியர் காட்டிச்செல்லும் விளக்கங்களை வியந்து போற்றி அணிந்துரை தந்துள்ளது அருமை வாய்ந்தது.

***தமிழ் பயிற்று முறை***

தமிழ் பயிற்றுமுறை குறித்து கூறுமிடத்து முதலில் இதற்கு தேவையான புத்தகங்கள் தமிழில் இல்லையே என்று சிலர் கூறுகின்றார்கள். இந்தக் குறையை நீக்க பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் முன்வந்திருப்பது பாராட்டத்தக்கது. அவர் படைத்துத்தந்துள்ள *தமிழ் பயிற்றுமுறை* என்ற நூலுக்கு திரு க.அவினாசிலிங்கம் அவர்கள் எழுதிய அணிந்துரையில்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **தாய்மொழி பயிற்சியைத் தவிர அத்துடன் தொடர்பாக இருக்கவேண்டிய நவீன முறைகள் பற்றிய பிற செய்திகளும் சேர்க்கப்பட்டு இருப்பதாக அறிகின்றேன். அவருடைய புத்தகம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளில் பயிற்சி பள்ளிகளில் பயிற்சி பெறும் மாணவர்களுக்கு பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன் (தமிழ் பயிற்று முறை, பக். viii)**

என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

***வைணவச் செல்வம்***

*வைணவச் செல்வம்* என்ற நூலுக்கு அண்ணாமலை பல்கலைக்கழகப் பொருளாதாரத் துறைத்தலைவர் பேராசிரியர் டாக்டர் A.V.ரங்காச்சாரி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்கள். அதில், காலங்காலமாக பாரத தேசத்தில் வேதத்தின் அடிப்படையில் நிலவிவரும் சமயங்களில் வைணவம் எவ்வாறு சிறந்துள்ளது என்பதைப் புலப்படுத்தும் விதமாக *வைணவச் செல்வம்* என்னும் இந்நூல் அமைந்துள்ளது. மேலும், வைணவச் செல்வம் என்ற நூல் பதினைந்து இயல்களாக பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு இயலிலும் என்ன செய்திகள் கூறப்பட்டுள்ளது என்பதையும் ஒரு பருந்துப்பார்வையாக பார்த்து, பேராசிரியர் டாக்டர் A.V.ரங்காச்சாரி அவர்கள் அணிந்துரை வழங்கி இருப்பது சிறப்பு. இந்த நூலின் "முதல் இயல் 'வரலாற்று முறையில் பயணம்' என்ற தலைப்பில் சமயம் எவ்வாறு மானிடவாழ்க்கையில் பின்னிப்பிணைந்துள்ளது என்பதை விளக்குவதாக அமைவதை சுட்டிக்காட்டி,

> **இந்து மதம் என்பது ஒரு கதம்பம். முற்காலத்தில் தந்தை என்றும் பாட்டன் என்றும் தோன்றிய வழிபாட்டு மரபுகள் கொண்ட கருத்துக்களே, நாளடைவில் எழுத்து வடிவம் பெற்று நூல்களில் இடம் பெற்றுள்ளது. இதன் காரணமாக, பரம்பொருள் ஒன்றே எனினும் பல பெயர்களில் பல கடவுள்களாக வழிபடும் துறைகளும் பரவலவாக அமைந்துள்ளன (வைணவச் செல்வம், பக். xxxi)**

என ஆசிரியர் அறிமுகப்படுத்துவதை சுட்டிக்காட்டி இந்நூலின் சிறப்பை விளக்குவது அருமையாக உள்ளது.

**கல்வி உளவியல் கோட்பாடுகள்**

நூலைப் படிக்கும்போது எத்தகைய உணர்வு மேலோங்குகிறது என்பதை உணர்த்துவதாக அமைவதே அணிந்துரை. பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் அரிய நண்பராகிய திரு கே.ஆர்.மாணிக்கம் அவர்கள் கல்வி உளவியல் கோட்பாடுகள் என்ற நூலுக்கு அருளிய அணிந்துரையில்,

> **மக்கள் கற்க கூடும்; கற்கத்தான் செய்கின்றனர். எனினும் ஒழுங்காகவும் பயனுடனும் கற்க உளவியல் அறிவு வேண்டும் (ப.6) என்ற பேருண்மையினை இந்நூலெங்கும் பரக்கக் காணலாம் (கல்வி உளவியல் கோட்பாடுகள், பக். vii)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எனவும் அவர் கூறியிருப்பது பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூலை முழுமையாகப் பார்க்கும் முறைமையில் அணிந்துரை வழங்கியிருப்பதை அறியலாகின்றது.

***அணுவின் ஆக்கம்***

ஒரு தமிழ் நூலுக்குள் உயரிய விஞ்ஞானக் கருத்துகளைசொல்ல முடியுமா? இதற்கு விடையளிக்கும் முறையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் *அணுவின் ஆக்கம்* என்ற நூலை எழுதி முடித்திருக்கிறார். இந்நூல்,

> **அணு அறிவைப்பற்றிய அரிய கருத்துக்களைச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய முறையில் எழுதப் பெற்றிருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது. புதிய புதிய விஞ்ஞானப் பதங்களைக் கையாண்டிருப்பது தமிழுக்குப் புதியதொரு வளத்தைக் கொடுக்கின்றது (அணுவின் ஆக்கம், பக். v)**

என்றும் *அணுவின் ஆக்கம்* என்ற நூலுக்கு பாரதரத்னா டாக்டர் சி.சுப்பிரமணியம் அவர்கள் வழங்கிய அணிந்துரையில் கூறியிருப்பது மிகச்சிறப்பு.

***கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி***

அணிந்துரை கொடுப்பவர் சிலசமயங்களில் நூலில் காணும் சிலவற்றை திறனாய்வு கண்ணோட்டத்துடன் பார்த்து எழுதுவதும் உண்டு. *கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி* என்ற நூலுக்கு எழுதிய அணிந்துரையில்,

> **நடையறாப் பெருந்துறவியாகிய தாயுமான அடிகளும் இப்பரணி நூலின் கடைதிறப்புப் பகுதியில் உள்ளத்தைப் பறிகொடுத்து ‘உபய தனம் அசையில்’ என்ற தாழிசை எடுத்துத் தமது பாட்டில் நயம்படக் கையாண்ட முறையை இத் திறனாய்வு நூலில் எடுத்துக் காட்டியிருக்கிறார் அன்பர் சுப்புரெட்டியார் (கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, பக். 1)**

எனவும் கலிங்கத்துப்பரணியை நன்கு ஆராய்ந்து ஆங்காங்கு உள்ளதை அழகுபட எடுத்துக் காட்டியிருக்கிறார். 'மனித வாழ்வியலை ஆய்வதற்குரிய தரவுகளை தரும் கருவூலமாக இலக்கியமே திகழ்கிறது' (தமிழ் நவீன இலக்கியங்களில் பெண்கள், பக்.10) என்ற முனைவர் இரா.கண்ணன் அவர்களின் வார்த்தைகளை போன்று இந்நூலின் கடைதிறப்பின் உட்பொருள் என்ற பகுதியில் காட்டியிருக்கும் கருத்து கொள்ளத்தக்கது.

***கவிதை அநுபவம்***

*கவிதை அநுபவம்* என்ற நூலுக்கு டாக்டர் ஏ.சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் எழுதிய அணிந்துரையில்,

> **மாணவர்கள் கவிதையை எந்த விதத்தில் அணுக வேண்டும், கவிதையை எப்படிப் பாராட்ட வேண்டும் என்று கற்றுக்கொடுக்க வேண்டும் என்பதில் நான் உடன்படுகிறேன் (I agree with the other that students have to be tought the way in**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**which they should approach poetry and the way in which they can appreciate poetry) (கவிதை அநுபவம், பக். 7)**

என்று ஆசிரியர் அவர்கள் எப்படி ஒரு நூலை நடத்த வேண்டும் என்பதை அழகுற குறிப்பிட்டிருப்பது சிறப்பு.

**முடிவுரை**

பிறந்த குழந்தைக்கு உலகை அறிமுகம் செய்வது தாய்பாடும் தாலாட்டு. அதுபோல ஒரு நூலை வாசகனுக்கு அறிமுகம் செய்வது அணிந்துரை எனில் மிகையன்று. எந்த ஒரு புத்தகம் வாங்கினாலும் நாம் முதலில் வாசிப்பது அந்தப்புத்தகத்தின் ஆசிரியர் எழுதிய முன்னுரை, மற்றொரு இலக்கியவாதி அதற்கு எழுதி இருக்கும் முகவுரை இவைகளைத்தான். எந்த ஒரு முன்னுரையும் அழுத்தமாக எழுதப்பட்டிருக்கிறது எனில் வாசிக்கும் ஆவலைத் தூண்டுகிறது அதுவே அந்த புத்தகத்திற்கு பெருமை சேர்த்துவிடும். அணிந்துரை வழங்குபவர் ஒரு புத்தகத்தை படிக்காமல் அல்லது அங்குமிங்குமாக பார்த்துவிட்டு அணிந்துரை வழங்கும் பழக்கம் கொண்டதாக பேராசிரியர் சுப்புரெட்டியார் அவர்களுடைய படைப்புகளுக்கு வழங்கப்பட்டுள்ள அணிந்துரைகள் அமையவில்லை மாறாக ஒவ்வொரு நூலின் வன்மை மென்மைகளை அணிந்துரை வழங்கியவர்கள் கண்டறிந்து கூறியுள்ளமை சிறப்புக்குரியது. அந்தவகையில் பேராசிரியரின் பல நூல்கள் பாராட்டைப் பெற்றிருப்பது அவருடைய நூலுக்கு சிறப்பு. ஒரு நூலுக்கு எழுதப்படும் அணிந்துரை என்பது, அந்நூலுக்கு துலாக்கோல்போல விளங்க வேண்டும். ஆழ்ந்த கருத்துவேற்றுமை இருக்கும்பொழுது அணிந்துரை நூலின் உள்ளடக்கத்தை முழுமையாக ஆதரிக்காமல் ஆங்காங்கு சில கருத்துக்களையும் பதிவு செய்யவேண்டும். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நூல்களுக்கு எழுதப்பட்ட அணிந்துரைகள் இத்தன்மையதே.

**குறிப்பு நூல்கள்**

[1] முனைவர் ப.த.இராணி பிரகாஷ். *காப்பிய இலக்கியம் பன்முகப்பார்வை தொகுதி-1*. கோ. மோகனரங்கன் தமிழில் ஆய்வு மையம், சென்னை, முதல் பதிப்பு, 2020.
[2] செம்முனி, டாக்டர் யாழ் ப.செந்தில்நாதன். *சுதந்திரம் - 75*. தெய்வீக தமிழ்ச்சங்கம், ஆரூர், முதற்பதிப்பு, 2022.
[3] முனைவர் கி. ஆதிநாராயணன், முனைவர் த.மோகன்தாஸ், முனைவர் சி.குமார். *தமிழ் நவீன இலக்கியங்களில் பெண்கள் - பன்னாட்டு கருத்தரங்க ஆய்வுக் கட்டுரைகள் - தொகுதி - 2*, நிலாசூரியன் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 2022.
[4] பவணந்தி முனிவர். *நன்னூல் (மூலம்)*.
[5] அய்.பிரகாசம். *வள்ளுவம் எனும் மலர்கேணி*. தேவகி பதிப்பகம், புதுக்கோட்டை, முதல்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

பதிப்பு, 2021.

[6] சத்யசாந்தி. *வனம் தொலைத்த மூங்கில்*. ஸ்ரீ ரேணுகா பதிப்பகம், கோயம்புத்தூர், முதல் பதிப்பு, 2022.

[7] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியாரின் இல்லசுடிரேட்டட் என்சைக்ளோபீடியா*. ந.சுப்புரெட்டியார் 100 நூற்றாண்டுக் குழு வெளியீடுகள், சென்னை, முதல் பதிப்பு, 2020.

**பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியாரின் பிற நூல்கள்**

[1] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *அகத்திணைக் கொள்கைகள்*.1981.

[2] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *அர்த்த பஞ்சகம்*, 1994.

[3] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *வைணவ புராணங்கள்*. 2003.

[4] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *விட்டுச்சித்தன் விரித்த தமிழ்*. 1987.

[5] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *நினைவுக் குமிழிகள் – 1*. 1988.

[6] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், *நினைவுக் குமிழிகள் – 2*. 1989.

[7] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *நினைவுக் குமிழிகள் – 3*. 1989. .

[8] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *நினைவுக் குமிழிகள் – 4*. 1990.

[9] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *ஆழ்வார்களின் ஆரா அமுது*.1987.

[10] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *நீங்காத நினைவுகள் – 2*. 1999.

[11] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *வைணவமும் தமிழும்*.1998.

[12] ச பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *சடகோபன் செந்தமிழ்*. 1989.

[13] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *மலரும் நினைவுகள்*. 1989.

[14] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *வடவேங்கடமும் திருவேங்கடமும்*.1992.

[15] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *தமிழ் பயிற்று முறை*. 1980.

[16] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *வைணவச் செல்வம்*. 1995.

[17] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *கல்வி உளவியல் கோட்பாடுகள்*. 1985.

[18] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *அணுவின் ஆக்கம்*. 1958.

[19] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி*. 1957.

[20] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *கவிதை அநுபவம்*. 1961.

**References**

[1] Muṉaivar Pa.Ta.Irāṇi Pirakāṣ. *Kāppiya Ilakkiyam Paṉmukappārvai Thokuti -1*. Kō. Mōkaṉaraṅkaṉ tamiḻil Ayvu Maiyam, First Edition, 2020.

[2] Cem'muṉi, ṭākṭar yāḻ pa.Centilnātaṉ. *Cutantiram - 75*. Teyvīka Tamiḻccaṅkam, Arūr, First Edition, 2022.

[3] Muṉaivar ki. Ātinārāyaṇaṉ, muṉaivar ta.Mōkaṉtās, muṉaivar ci.Kumār. *Tamiḻ Navīṉa*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*Ilakkiyaṅkaḷil Peṇkaḷ - Paṉṉāṭṭu Karuttaraṅka Ayvuk Kaṭṭuraikaḷ - Thokuti – 2*. Nilācūriyaṉ Patippakam, First Edition, 2022
[4] Pavaṇanti muṉivar. *Naṉṉūl (mūlam)*
[5] Ay.Pirakācam. *Vaḷḷuvam Eṉum Malarkēṇi*. Dēvaki Patippakam, Putukkōṭṭai, First Edition, 2021.
[6] Catyacānti. *Vaṉam Tolaitta Mūṅkil*. Srī Rēṇukā Patippakam, Kōyamputtūr, First Edition, 2022.
[7] Professor N.Subbu Reddiar. *Illustrated Encyclopedia of Prof Dr N Subbu Reddiar*. N. Subbu Reddiar 100 Centenary Committee, Chennai, First Edition, 2020.

**Other's Professor N.Subburettiyar's Texts**

[1] Professor N.Subbu Reddiar. *Agathinai Kolgaigal*. 1981.
[2] Professor N.Subbu Reddiar. *Artha Panchagam*. 1994.
[3] Professor N.Subbu Reddiar. *Vaishnava Puranangal*. 2003.
[4] Professor N.Subbu Reddiar. *Viṭṭuccittaṉ Viritta Tamiḻ*.1987.
[5] Professor N.Subbu Reddiar. *Ninaivuk Kumuligal – 1*. 1988.
[6] Professor N.Subbu Reddiar. *Ninaivuk Kumuligal – 2*. 1989.
[7] Professor N.Subbu Reddiar. *Ninaivuk Kumuligal – 3*. 1989.
[8] Professor N.Subbu Reddiar. *Ninaivuk Kumuligal – 4*. 1990.
[9] Professor N.Subbu Reddiar. *Ara Amuthu of Alwars*. 1987.
[10] Professor N.Subbu Reddiar. *Neengatha Ninaivugal – 2*. 1999.
[11] Professor N.Subbu Reddiar. *Vaishnavism and Tamil*. 1998.
[12] Professor N.Subbu Reddiar. *Sadagopan Senthamizh*. 1989.
[13] Professor N.Subbu Reddiar. *Malarum Ninaivugal*. 1989.
[14] Professor N.Subbu Reddiar. *Vadavenkadam and Thiruvenkadam*. 1992.
[15] Professor N.Subbu Reddiar. *Tamil Payitru Murai*. 1980.
[16] Professor N.Subbu Reddiar. *Vaishnava Wealth*. 1995.
[17] Professor N.Subbu Reddiar. *Kalvi Ulaviyal Kootpadugal*. 1985.
[18] Professor N.Subbu Reddiar. *Anuvin Aakam*. 1958.
[19] Professor N.Subbu Reddiar. *Kalingathuparani Araichi*. 1957.
[20] Professor N.Subbu Reddiar. *Kavithai Anubavam*. 1961.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 | UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 | Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் இல்லற நெறி

## Domestic Ethics as Evinced by Professor

**முனைவர் மு. அனு**, உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,

காவேரி மகளிர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. M. Anu**, Assistant Professor of Tamil, Cauvery College for Women, Tiruchirappalli, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-9843-8646**

**DOI: 10.5281/zenodo.7251298**

### Abstract

*Human life is said to be intertwined with three events namely birth, marriage and death. These three events orderly take place in the first phase, middle phase and final phase of one's life. All communities give importance to these three events. Birth and death occur to all living creatures that emerged on earth. The event of marriage belongs only to the human being. All civilized people have many restrictions and customs on marriage. Marriage is a social construct that seeks to know about the relationship between two minds, body, soul, revolt, emotion and about its spirituality. Marriage transforms a man from a husband to a father and a woman from a wife to a mother, giving them a higher status, responsibility, duty and entitlement in society. Marriage is the reason for the disappearance of the selfish thought 'I am, mine' and the appearance of good thought 'we are, ours'. Marriage binds two bodies as one life, it's a cure for loneliness and purifies love emotions. Professor Subbu Reddiar had already realized the essential virtues to know about human anatomy for good domestic life. The present research explores and analyses the importance of life stages, human anatomy, physical elements, emotions, the superiority of the husband-wife relationship, its scientific perspective, psychological counseling, and guidance and provides suggestions for leading better domestic life with the ideas evinced by Subbu Reddiar. In this regard, the study seeks to examine Professor N.Subbureddiar's way of evincing domestic ethics for society in a universal approach.*

**Keywords:** Professor N.Subbureddiar, Marriage, Husband - Wife Relationship, Domestic Ethics.

### ஆய்வுச்சுருக்கம்

*மனிதனின் வாழ்க்கை பிறப்பு திருமணம் இறப்பு என்ற மூன்று நிகழ்வுகளால் பின்னிப் பிணைந்தது எனலாம். இம் மூன்றும் ஒவ்வொருவருடைய வாழ்விலும் முதற்பகுதி, நடுப்பகுதி, பிற்பகுதி என முறையாக நடைபெறுகின்றன. அனைத்து சமூகங்களும் இம்மூன்று நிகழ்வுகளுக்கும் உட்பட்டன. உலகில் தோன்றிய அனைத்து உயிரினங்களிலும் பிறப்பும் இறப்பும் நிகழ்வது உண்டு. பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையில் நடைபெறும் திருமணம் என்பது மனித இனத்திற்கு மட்டும் உரியது. நாகரிகம் அடைந்த அனைத்து இனமக்களும் திருமணத்திற்கு எனப் பல கட்டுப்பாடுகளையும், பழக்கவழக்கங்களையும் கடைப்பிடித்து வருகின்றனர். திருமணம் என்பது இருமனம் இணையும் உறவுபற்றியும், உடல் பற்றியும், உள்ளம் பற்றியும், உள்ள கிளர்ச்சி மற்றும் உணர்ச்சி பற்றியும், ஆன்மிக உறவு பற்றியும்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அறிந்து அல்லது அறியவைக்கும் முயற்சியினை ஏற்படுத்தும் சமூககட்டமைப்பாகும். திருமணம், ஓர் ஆண் மகனைக் கணவனிலிருந்து தந்தையாகவும், ஒரு பெண் மகளை மனைவியிலிருந்து தாயாகவும் மாற்றுவதோடு, சமூகத்தில் ஓர் உயர்ந்த நிலையையும், பொறுப்பையும், கடமையையும், உரிமையையும் பெற்றுத் தருகின்றது. 'நான் எனது'என்ற தன்னலம் மறைந்து 'நாம் நமது' என்ற பொதுநலம் தோன்றக் காரணமாகின்றது. ஈருடல் ஓருயிராகப் பிணிக்கும் திருமணம் ஒருவருடைய தனிமைக்கு மருந்தாக அமைகின்றது. காதல் உணர்ச்சியைத் தூய்மையாக்குகின்றது. இத்தகைய இல்லறம் நல்லறமாக மலர உடற்கூறு பற்றிய அறிவும், அவற்றை பற்றிய தெளிவும், தற்கால தமிழ் மக்களுக்குத் தேவை என்பதை அன்றே உணர்ந்த ஆசிரியர்,மேல்நாட்டு அறிஞர்கள் ஆராய்ந்து வெளியிட்ட உயிர் நிலைகளின் நுட்பங்களைக் கருத்தில் கொண்டு, உயிர் நிலையாக உள்ள உறுப்புகளையும், அவற்றின் தன்மைகளையும்,செயல்பாடுகளையும்,அறிவியல் நோக்கில் நுணுகி ஆராய்ந்து உள்ளதை இவ்ஆய்வு கூறவிழைகின்றது. இல்லற நெறி என்பது இல்லத்தில் மனைவியோடு கூடி வாழும் ஒழுக்கம் என்பதையும் கடந்து உடல்கூறுகளையும், உணர்வுகளையும், கணவன் மனைவியரின் உறவு நிலையின் உன்னதத்தையும், திருமண வாழ்வில் நுழையும் ஓர் ஆணும் பெண்ணும் அறிந்து கொள்ள வேண்டிய அடிப்படைச் செய்திகளையும், இல்லறத்தை வெற்றியுடன் நடத்த மனோதத்துவ அடிப்படையில் தேவையான ஆலோசனை வழங்கியும், வழி நடத்தவும் செய்கின்ற பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் இல்லறநெறியை ஆராயமுற்படுகின்றது இவ்ஆய்வுக்கட்டுரை.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், திருமணம், கணவன் – மனைவி உறவுநிலை, இல்லறநெறி.

**முன்னுரை**

பண்டையத்தமிழர் குடும்ப வாழ்வு பற்றிய உயர்ந்த கொள்கைகளைக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு அறம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியன்று. வாழ்வு முழுவதுமே அறமாகும். எனவேதான் குடும்ப வாழ்க்கையை இல்லறம் என்றனர். இல்லறத்தைச் செம்மையுற ஆற்றி காமம் சான்றா கடைக்கோட் சாலை ஏமம் சான்ற மக்களோடு கூடி அறம்புரி சுற்றமோடு சிறந்திருத்தலையே விரும்பினர். அன்பு பூண்ட கணவனும் மனைவியும் விருந்தோம்தபுலையும், சுற்றந் தழுவுதலையும், வறியோர் துயர்துடைத்தலையும் தன் கடமையாகக் கொண்டனர். தன் மனைவி, தன் பிள்ளை,தன் சுற்றம் என்னும் எல்லைகளையெல்லாம் கடந்து அனைத்துயிர்க்கும் அருள் செய்யும் மனநிலையடைவதே

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாழ்வின் நோக்கம் என்று கருதினர். இதற்கு அடிப்படையாக அமைவது இல்லறம் என்று நம்பினர்.

**நினக்கு யான், உயிர்பகுத்தன்னமாண்பின்னே (நற்றிணை, பா. 128)**

**யாமே, பிரிவின் றியைந்து துவரா நட்பின்**

**இருதலைப் புள்ளின் ஓருயிரம்மே (அகநானூறு, பா. 12)**

என்று இல்லறம் ஏற்ற கணவனும் மனைவியும் ஈருடல் ஓருயிர் போலவும், இரண்டு தலைகளைக் கொண்ட ஒரு பறவை போலவும் ஒன்றுபட்டு வாழும் வாழ்வியலை, இல்லற நெறியைச் சங்க இலக்கியங்கள் விளக்குவதற்கு இணங்க, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களும், எவ்விலக்கியங்களும் கூறாத இல்லற நெறியைப் பற்றி மிகவும் விரிவாக விளம்புகின்றார். வேலனுக்கு வேங்கடத்தான் எழுதும் கடிதங்கள் வாயிலாக இல்லறநெறியைப் பற்றி பல கோணங்களில் விளக்கியுரைப்பதையும், மண வாழ்வு மகிழ்வுடன் அமைவதற்கான வழிமுறைகளையும் பேராசிரியர் விளக்குவதை ஆராய முற்படுகின்றது இவ்வாய்வுக் கட்டுரை.

**தமிழரின் திருமண முறைகள்**

ஓர் ஆணும் ஒரு பெண்ணும் கூடி வாழும் ஒழுக்கத்தினைப் பண்டைய மக்கள் 'அகத்திணை' என்ற பெயரால் குறித்தனர். அகத்திணை என்பது அகவொழுக்கமாகும். திணை என்பதற்கு ஒழுக்கம் என்ற பொருளுண்டு. இந்த ஒழுக்கத்தினை கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என ஏழு வகைகளாகப் பிரித்துரைத்தனர் நம் முன்னோர்கள்.

**கைக்கிளை உடையது ஒருதலைக் காமம் (அகப்.அகத்., நூ. 3)**

**ஐந்திணை உடையது அன்புடை காமம் (அகப்.அகத்., நூ. 4)**

**பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் (அகப்.அகத்., நூ. 5)**

அதாவது கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்ற இவ்ஏழும் தலைவன் தலைவியரின் இல்வாழ்க்கையின் தன்மையினை, காதல் தோன்றும் நிலையினை எடுத்துரைக்கின்றது. இல்வாழ்க்கை அல்லது இல்லறம் என்றழைக்கப்படும் இல்லறத்தின் தொடக்கம் திருமணமாகும். இத்திருமணம் கடி, மணம், மன்றல், வரைவு என்று பல்வேறு சொற்களால் அழைக்கப்படுகின்றது. சங்க இலக்கியங்கள் வாயிலாக மரபுவழி மணம், சேவை மணம், போர் நிகழ்த்தி மணம், துணங்கையாடி மணம், பரிசம் கொடுத்து மணம், ஏறு தழுவிய மணம், மடலேறி மணம் என்று பல்வேறு திருமண முறைகளைக் காணமுடிகின்றது. இத்திருமணத்தை பழந்தமிழர் பெண் வீட்டில் நிகழ்த்துவதை மரபாகக் கொண்டிருந்தனர். களவின் (காதல்) காரணமாக ஒன்றுபட்ட தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொள்ளும் பொழுது தலைவன் தலைவியைத் தனது இடத்திற்கு அழைத்துச் சென்று மணம் செய்து கொள்ளும் மரபு இருந்துள்ளது. ஆனால் பெற்றோர்கள் பார்த்து நடத்தி வைக்கும் திருமணம் பெரும்பாலும் மணமகள் இல்லத்திலேயே நிகழ்ந்துள்ளது. இதை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நும்மனைச் சிலம்பு கழீஇயயரினும்**
**எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்**
**சொல்லி னெவனோ மற்றே வெண்வேல்**
**வையற விளங்கிய கழலடிப்**
**பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே (ஐங்குறுநூறு, பா. 399)**

என்ற ஐங்குறுநூறு பாடலால் அறியமுடிகின்றது. தலைவன் தலைவியை ஊரறியத் திருமணம் செய்து கொள்ளுவதை,

**வரைவு எனப்படுவது உரவோன் கிழத்தியைக்**
**குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாமையும்**
**கரணமொடு புணரக் கடிஅயர்ந்து கொளலே (அகப். வரை., நூ. 171)**
**பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப (தொல். கற்., நூ. 4)**

என்ற வரிகள் திருமணம் நடைபெறுவதை எடுத்துரைக்கின்றது. தலைவனும் தலைவியும் பலபேர் அறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்துதலே 'இல்லற நெறி' யாகும். தொல்காப்பியர் 'கற்பு' என்கின்ற 'இல்லற நெறியை',

**மறைவெளிப்படுதலும்தமரிற்பெறுதலும்**
**இவைமுதலாகியஇயல்நெறிபிழையாது**
**மலிவும் புலவியும்ஊடலும்உணர்வும்**
**பிரிவோடுபுணர்ந்ததுகற்பனைப்படுமே (தொல். செய்., நூ. 179)**

என்று குறிப்பிடுவதிலிருந்து பண்டைய காலத்தில் இருவகையானத் திருமண முறைகள் இருந்துள்ளதை அறியமுடிகின்றது. அவைகளவு (காதல்) வெளிப்படுவதற்கு முன்வரைதல் (திருமணம்), களவு வெளிப்பட்டபின் வரைதல் என்பனவாகும். இதனை,

**வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று**
**ஆயிரண்டு என்ப வரைதல் ஆறே (தொல். களவி., நூ. 50)**

என்றுரைக்கின்றார் தொல்காப்பியர். களவில் (காதலில்) ஈடுபட்டத்தலைவி அறத்தொடு நின்ற பின் (களவை வெளிப்படுத்துதல்) அக்களவை அனைவரும் ஏற்றுக்கொண்டதும் திருமணம் செய்து கொள்ளுதல் களவு வெளிப்பட்ட பின் வரைதலாகும். களவு வெளிப்படா முன்வரைதல் என்பது தலைவி அறத்தொடு நிற்பதற்கு முன்தலைவன் தலைவியைத் தன்னுடன் அழைத்துச் சென்று தன் ஊரில் திருமணம் செய்து கொள்வதாகும்.

**நன்ற கின்றால்தோழிநாம்வள்ளையுள்**
**ஒன்றிநாம் பாட்மறை நின்று கேட்டருளி**
**மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**மன்றல் வேங்கைக் கீழிருந்து**

**மணநயர் தான் அம் மழை கிழ வோற்கே (கலித்தொகை., பா. 41)**

என்ற இக்கலித்தொகைப் பாடல் சுட்டும் திருமணம் களவு வெளிப்படா முன் பெற்றோர் மூலம் நடத்தி வைக்கப்பட்ட திருமணமாகும். எனினும் திருமணத்தின் வகைகளை, ஒரு நான்கு வேதத்து இருநான்கு மன்றலுள் (அகப். களவி. நூ. 117) என்று நம் சான்றோர்கள் திருமணத்தின் வகைகளை அரிதியிட்டுரைக்கின்றனர். அதாவது இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களும் எண் வகை மணங்களைக் குறிப்பிடுகின்றது. அவை,

1. **'பிரமம்':** பிரம்மசரிய விரதம் காத்த தக்கான் ஒருவனுக்குக் கன்னியை அகங்கரித்துக் கொடுப்பது.
2. **'பிரசாபத்தியம்':** தலைமகனின் பெற்றோர் பெண் வேண்ட தலைமகளின் பெற்றோர் மறுக்காமல் பெண்ணை கொடுப்பது.
3. **'ஆரிடம்':** தலைமகனிடமிருந்து ஓரிரு ஆவையும் (பசு) ஆனேற்றையும் (எருது) வாங்கிக் கொண்டு பெண்ணை கொடுப்பது.
4. **'தெய்வம்':** வேள்வி ஆசிரியனுக்குக் கன்னியை அலங்கரித்துக் கொடுப்பது.
5. **'காந்தர்வம்':** கொடுப்பாரும் கேட்பாரும் இன்றித் தலைமகனும் தலைமகளும் தனியிடத்துக் கண்டு கூடுவது.
6. **'ஆசுரம்':** தலைமகட்கு உரியப் பொன் கொடுப்பதோடு அவளது சுற்றத்தாருக்கும் வேண்டுவன கொடுத்துப் பெண் கொள்வது.
7. **'இராக்கதம்':** தலைமகள் மற்றும் அவள்தம் பெற்றோர் உடன்பாடின்றி வலிதிற் கொள்வது.
8. **'பைசாசம்':** உறங்கும் பெண்ணிடமும் கள் உண்ட பெண்ணிடமும் வலிதிற் சேர்வது.

என்ற இவ் எண்வகை மணங்களைப் பேராசிரியர் நா.சுப்புரெட்டியார் 'ஆரியரின் எண் வகை மணங்கள்' என்றுரைக்கின்றார்.

**திருமணப் பொருத்தம்**

திருமணம் ஒருவரது வாழ்வில் இடம்பெறும் முக்கிய நிகழ்வாகும். அதனால்தான் திருமண விழாவை பெரும் பொருள் செலவழித்துச் செய்கின்ற வழக்கம் இன்றும் இருக்கின்றது. திருமணம் என்பது குடும்பம், பாலுறவு, இனப்பெருக்கம், பொருளாதாரம் போன்ற பல காரணங்களை உள்ளடக்கியதாகும். இத்திருமணம் அனைத்துப் பண்பாட்டு மக்களிடையே காணப்படும் ஒரு பொதுவான நிகழ்வாகும். 'இருமனம் ஒருமனம் ஆவதுதான் திருமணம்' என்பார் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன். மணம் என்பது ஓர் ஆணும் ஒரு பெண்ணும் இணைந்து இல்லறம் மேற்கொள்ளச்செய்யப்படும் ஒரு வாழ்க்கை உடன்படிக்கையாகும். இத்தகைய திருமணத்திற்கு மணப்பொருத்தத்தை நம் முன்னோர்கள் பார்த்துள்ளனர். தமிழில் கிடைக்கும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மிகப்பழைய இலக்கண நூலானத் தொல்காப்பியத்தில் திருமணத்திற்குரியப் பத்துப் பொருத்தங்களையும் தொல்காப்பியர் கூறியுள்ளதை,

**பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டோடு,**
**உருவு, நிறுத்த காமவாயில்**
**நிறையே, அருளே, உணர்வொடு, திருஎன**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (தொல். நூ. 1219)**

என்ற நூற்பாவழி அறியமுடிகின்றது. அதாவது, குலப்பிறப்பு, ஒழுக்கம், ஆள்வினையுடை, அகவை, வனப்பு, காம ஒழுக்கத்திற்குரிய உள்ளக்கிளர்ச்சி, நல்லகுணம், அருளுடைமை, உள்ளக் குறிப்பை அறிந்தொழுகும் நுண்ணறிவு, தெய்வப்பொலிவு என்ற பத்துப் பொருத்தங்களும் ஒத்தவையாக இருத்தல் நலம் என்கிறது தொல்காப்பியம். இளமை, வனப்பு, வளமை, தறுகண், வரம்பில் கல்வி, நிறைந்த அறிவு, தேசத்தமைதி காத்தல், குற்றமில்லாத சூழ்ச்சி என்ற இவ்எட்டுப்பொருத்தங்களே மணப்பொருத்தம் என்கின்றது பெருங்கதை. இவ்வாறு இலக்கியங்கள் கூறும் மணப்பொருத்தத்தைப் போலவே பேராசிரியரும் சில பொருத்தங்களை முன்வைக்கின்றார். அவை ஒத்த உடல்நிலை, ஒத்துப்போகும் உள்ளக்கிளர்ச்சி நிலை, பொருளாதார நிலை, மரபுவழி பொருந்தும் நிலை, மணமக்களின் கடந்தகால தற்கால உடல்நலத்தைக் குறிப்பிடும் பதிவேடுகள் (Health Record), இனமேம்பாட்டியல் பொருத்தம் என்று அறிவியல் அடிப்படையில் நுணுகி ஆராய்ந்துரைக்கின்றார். எனினும் மரபு வழியாக இறங்கும் உடல் உளக்கூறுகள், பிறவி சார்ந்த குறைகள், மரபுவழியாகக் கடத்தப்படும் நோய்கள் முதலியவை பற்றிய கருத்துகளையும் முன்வைக்கின்றார்.

மணமகன் மற்றும் மணமகள் உடல் நிலையானது பிள்ளைப் பெறுவதற்கேற்றவாறு பக்குவம் அடைந்திருத்தல் வேண்டும். ஏறக்குறைய மணமக்களின் வயதில் நான்கு ஆண்டுகளாவது வேற்றுமையிருக்க வேண்டும். பண்டையத் தமிழ் நூல்களில் மணமகளின் வயது பதினாறு என்றும் மணமகளின் வயது பன்னிரண்டு என்றும் வரையறை செய்யப்பட்டுள்ளது. இவனும் பதினாராட்டைப் பிராயத்தானுய் இவளும் பன்னீராட்டைப் பிராயத்தாளாய் (இல்லற நெறி, ப. 29) என்ற வரிகள் வழியும் வயது வேற்றுமை நான்கு அல்லது ஐந்துக்குமேல் இருத்தல் கூடாது (பெண்ணின்பெருமை (அ) வாழ்க்கைத்துணை, ப. 23) என்கிற திரு.வி.காவின் கருத்தினையும் வழி மொழிந்து மணப் பொருத்தத்தில் ஒத்த உடல்நிலையும் அதாவது வயது பொருத்தமும் இன்றியமையாதது என்பதை அறிய முடிகின்றது. திருமணத்திற்குப் பொருளாதாரம் மிகவும் தேவையான ஒன்றாகும். 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை, அருள்இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை' என்பது நம் சான்றோர் வாக்கு. திருமணம் நடைபெறவும், திருமணம் நடைபெற்ற பின் கணவனும் மனைவியும் இணைந்து

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

இல்லறம் பேணுவதற்கும் 'பொருள்' இன்றியமையாத ஒன்றாகும். பழங்காலத்தில் கணவன் பொருள்தேடும் பொறுப்பினையும் மனைவி குடும்பம் நடத்தும் பொறுப்பினையும் பெற்றிருந்தனர். உள்ளக் கிளர்ச்சி பற்றிப் பல கருத்துக்கள் எழுந்துள்ளன. உதாரணமாக,

> **ஒரு கவிதையைப் படித்து அதிலுள்ள செய்திகளைப் பெருமூளை அறிந்ததும், அங்குத்தோன்றும் எண்ணங்களும் எண்ணக் கோவைகளும் மேற்பூத் தண்டைத் தூண்டி அதன் மூலம் தன்னாட்சி நரம்பு மண்டலத்தை (Autonomous Nervous System)இயக்குகின்றது.மண்டலத்தின் இயக்கத்தால் சுரப்பிகள் தூண்டப்பெற்று அவற்றின் சாறுகள் குறிப்பாக மாங்காய்ச் சுரப்பிகளின் (Adrenal Glands) சாறுகள், குருதியோட்டத்தில் கலந்து உடலெங்கும் உணர்ச்சி அலைகளை எழுப்புகின்றன. (மானம் வேந்தரின் பாட்டுத்திறன், ப. 4)**

இத்தகைய உணர்ச்சி அலைகள் கணவன் மனைவியரிடையே ஒருமித்திருக்க வேண்டும். உள்ளக் கிளர்ச்சிப் பொருத்தம் என்பது கணவனும் மனைவியும் ஒருவரோடொருவர் சேர்ந்து வாழ்வதில் இல்லை. அது அவர்களுடைய ஆளுமைகளைப் பொறுத்ததாக ஆசிரியர் கூறுகின்றார்.

**அறிவியலும் திருமணமும்**

அறிவியல் அடிப்படையில்திருமணம் என்பது ஓர் ஆணின் பெண்ணின் உடல் நலத்தைக்குறிக்கும் பதிவேடுகளையும் (Health Record) தாண்டி, அவர்களின் இனப்பெருக்க மண்டலங்களையும், அவற்றின் செயல்களையும் விளக்குவதாகும். ஏனைய உடல் உறுப்பு மண்டலத்திற்கும், இனப்பெருக்க உறுப்புகளடங்கிய மண்டலத்திற்கும் பல வேற்றுமைகள் உள்ளன. நரம்பு மண்டலம், சுவாசிக்கும் மண்டலம், உணவு மண்டலம், குருதியோட்ட மண்டலம் போன்றவை மனிதனைக் காப்பாற்றுவதில் பெரும்பங்கு வகிக்கின்றது. ஆனால் இனப்பெருக்க மண்டலம் இனப்பெருக்கத்தை வளர்ப்பதில் மட்டுமே கடமையாற்றுகின்றது.

> **உயிரணுக்களை (Germinal Cells) உற்பத்தி செய்யும் காமச்சுரப்பிகள் (sex Glands), உயிரணுக்களை உரிய இடங்களுக்கு அனுப்பிக் கருவுறுதலைச் சாத்தியப்படச்செய்யும் தூப்புகள் (Ducts), கருவுறுதலுக்கான விந்தணுக்களை முட்டையிடம் சேர்க்கும் (அ) இணைக்கும் உறுப்புகள் (இல்லற நெறி, ப. 14)**

என்று ஆசிரியர் இனப்பெருக்க மண்டலத்தைப் பற்றியும், அவை செயல்படும் முறையினையும், அவற்றின் இயல்பினையும், உருவ அமைப்பினையும் விளக்குகின்றார். ஆணின் இனப்பெருக்க மண்டலத்தை விளக்கும்போது, ஆண் பிறப்புறுப்புகளின் அமைப்பு, விந்துப் பாய்மம், விரைகள், விரைப்பைகள், விந்தணுக்கள் வரும் வழி, விந்துப்பைகள், புராஸ்டேட் சுரப்பி, விறைத்தல், விந்தணுக்களின் தன்மை, விந்தணுக்களின் ஆயுட்காலம், ஹார்மோன்கள், பாலறிகுறிகள் என்றும், பெண்ணின் இனப்பெருக்க மண்டலத்தை விளக்கும்போது, பிறப்புறுப்புகளின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைப்பு, யோனிக்குழல், கருப்பை, கருக்குழல், சூற்பைகள், முட்டை பக்குவமாதல், கார்ப்பஸ் லூட்டியம், மாதவிடாயும் முட்டை பக்குவப்படுதலும், முட்டையணு,முட்டை கருவுறுதல், கருப்பையின் செயல், பூப்பின் அறிகுறிகள், கன்னிச்சவ்வு, சூற்பைகளை நீக்குவதால் ஏற்படும் மாறுபாடுகள் என்றும் அறிவியல் அடிப்படையில் மனித இனத்தின் உயிர் நிலையாக உள்ள உறுப்புகளை நுணுகி ஆராய்ந்துரைக்கின்றார் பேராசிரியர்.

**இனப்பெருக்கம்**

இனப்பெருக்கம் என்பது உலகில் வாழ்கின்ற உயிரினங்களின் அத்தியாவசியமான பண்புகளில் ஒன்றாகும். உயிரினங்கள் நிலைத்து இருக்கவும் தகுந்த மாற்றங்களுடன் சந்ததிகள் தொடர்ந்து வாழவும் இது ஒரு முக்கிய நிகழ்வாகும். இனப்பெருக்கம் பற்றிய கருத்துகளைச் சங்க இலக்கியங்களிலும் காணமுடிகின்றது.

**தாய்இல் முட்டைபோல உட்கிடந்து**
**சாயின் அல்லது பிறதுவென் உடைத்தே**
**யாமைப் பார்ப்பின் அன்ன காமம்**
**காதலர் கையற விடினே (குறுந்தொகை, பா. 152)**

என்ற குறுந்தொகைப் பாடலில் தன் தலைவனின் அரவணைப்பை இழந்தால் காதல் அழிந்து போகும் என ஒரு தலைவி ஏங்குவதைக் காணமுடிகின்றது. இதில் தாயால் காக்கப்பட ஆமை பார்ப்பு போலத்தானும் இறந்துபடப் போவதாகத் தலைவி கூறுவதன் வாயிலாக ஆமையின் இனப்பெருக்கம் குறித்த செய்தியை அறியமுடிகின்றது. ஆமை நீர்நிலையை அடுத்த மணற்பாங்கான பகுதியில் முட்டையிடும். ஆனால் அடைகாக்காது. வெயில் சூடுபட்டு அதிலிருந்து குஞ்சு வெளிப்படும். பின் தாய் ஆமை வந்து தன்குஞ்சுகளைப்பேணி வளர்க்கும் செய்தியை,

**தீம்பெரும் பொய்கை யாமை யிளம் பார்ப்புத்**
**தாய்முக நோக்கி வளர்ந்த சினா அங்கு (ஐங்குறுநூறு,பா. 44)**

என்ற ஐங்குறுநூறு பாடல் ஆமையின் இனப்பெருக்கம் நிகழும் முறையினை விளக்குகின்றது. இவ்வாறு தமிழிலக்கியங்கள் மனிதர் அல்லாத பிற உயிரினங்களின் இனப்பெருக்கம் பற்றிய கருத்துக்களை எடுத்துரைப்பதற்கிணங்க பேராசிரியரும் மனித இனத்தின் இனப் பெருக்கம் பற்றிய கருத்துக்களை நுணுகி ஆராய்ந்துரைக்கின்றார். இனப்பெருக்கம் இறைவன் படைப்பில் எல்லா உயிர்களிடமும் நிகழ்ந்துவரும் ஓர் அற்புத நிகழ்ச்சி. இவ்வினப்பெருக்கத்தை 'பால் வேற்றுமையில்லா இனப்பெருக்கம், பாலறி முறை இனப்பெருக்கம் என்று இரு நிலைகளாக வகுக்கப்படுகின்றது.

**பால் வேற்றுமையில்லா இனப்பெருக்கம்**

பாக்டீரியா போன்ற ஒற்றையணு உயிர்களிடம்பாலியல் வேற்றுமை என்பது இல்லை.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அதாவது ஆண் பெண் என்ற பாகுபாடு இருப்பதில்லை. எனவே இவ்வுயிரிகளிடம் இனப்பெருக்கச் செயல் மிக எளிமையாக நடைபெறுகின்றன. உதாரணமாக ஓரணு உயிரி அதாவது ‘Amoeba’ ஓரளவு வளர்ச்சியற்றதும் இரண்டாகப்பிரியும். இந்த இரண்டு மீண்டும் இரண்டாகப்பிரிக்கும். 'ஹைட்ரா' என்ற நீர்ப்பிராணியும், தட்டைப்புழுவும் பல பகுதிகளாகப் பிரிந்து ஒவ்வொரு பகுதியும் ஒவ்வொரு தனி உயிரியாக வளரும். இந்நிலையில் எந்தவிதமான பாலறிப்பொறிநுட்பமும் பங்கு பெறுவதில்லை என்று பால் வேற்றுமையில்லா (Asexual) முறையில் உயிரினங்கள் இனப்பெருக்கமடைவதை விளக்குகின்றார் ஆசிரியர்.

**பாலறிமுறை இனப்பெருக்கம்**

பாலறிமுறை இனப்பெருக்கம் என்பது விந்தணுக்கள், முட்டையணுக்கள் என்ற குறிப்பிட்ட உயிரணுக்கள் உண்டாகி அவற்றின் சேர்க்கையால் மட்டும் புதிய உயிரிகள் தோன்றும் நிலையைக் குறிப்பதாகும். அதாவது பெரும்பாலான இனங்களிடம் விந்தணுக்களை உண்டாக்கும் ஆண், முட்டையணுக்களை உண்டாக்கும் பெண் என்ற இரண்டு பாலறிகுறிகளுடன் கூடிய இனங்களில் ஆணும் பெண்ணும் சந்தித்து அவர்களுடைய இப்பாலறி அணுக்கள் சேர்வதனால் இனப்பெருக்கம் நிகழ்கின்றது. இந்நிகழ்வே பாலறிமுறை இனப்பெருக்கமாகும். ஒரு முட்டையும் ஒரு விந்தணுவும் ஒன்றாக இணைவதே பாலறி முறை இனப்பெருக்கத்தின் அடிப்படையாகும்.

மனித இனத்தில் பெண்ணிடமுள்ள ஒரு முட்டையனுவும் ஆணிடமுள்ள ஒரு விந்தணுவும் சேர்வதால் பெண் கருவுற்றுக் குழந்தையைப் பெறுகின்றாள். இக்குழந்தையைப் பெறும் நிலைகளான கருவுரும் முறை, கருவளரும் நிலை, கருப்பகாலக்கோளாறு, குழந்தைப்பேறு, பிரசவங்களில் மருத்துவர் கையாளும் முறை, இரட்டைக் குழந்தைகளின் தன்மை, இரட்டைக் குழந்தைகள் கருப்பையில் இருக்கும் பல்வேறு நிலைகள் போன்ற பல செய்திகளையும் மிகவும் ஆழமாகவும், விரிவாகவும் ஆசிரியர் விளக்குவதை அறிந்துணர முடிகின்றது. மனித இனத்தில் ஓர் உயிர் உருவாகும் படிநிலைகளை 'விந்து பாய்ச்சுதல், விந்தணுக்கள் கருப்பையில் நுழைதல், கருவுறுதல், கருமுட்டை வளர்தல், நச்சுக்கொடி வளர்தல், கருப்பகாலத்தில் கருப்பை வளர்ச்சியடைதல், கருப்பகால அறிகுறிகள், கருச்சிதைவு, குறைமாதப் பிரசவம், கருக்குழலில் கருப்பம் அதாவது கருப்பையின் வெளியே கருப்பம், கருவுயிர்த்தல் அதாவது முழு வளர்ச்சி பெற்ற குழந்தை கருப்பையிலிருந்து வெளியே வருதல், பிரசவ வேதனை, பனிக்குடம் உடைதல், பலவகை பிரசவங்கள் (1. தலை உதயம் 2. ஆசன உதயம் 3. கைஉதயம்), சிசேரியன், ஆயுதப் பிரசவம் (Instrumental Delivery), கருவுயிர்த்த பெண்ணின் ஓய்வு, பால் சுரத்தல், ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் பிறத்தல், குழந்தையின் பாலை அறுதியிடல் அதாவது பிறக்கப்போகும் குழந்தை ஆணா அல்லது பெண்ணா என

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

அறுதியிடல் என்று பல படிநிலைகளில் இனப்பெருக்கம் நிகழ்வதைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் இல்லற நெறி வாயிலாக அறியமுடிகின்றது.

**மக்கட்பேறு**

'மக்கட்பேறு' என்றவுடன் நம் மனதில் தோன்றுபவர் திருவள்ளுவர். நீதி நூலான வள்ளுவத்தை இலக்கியமாக்கியது குழந்தைகளைப் பற்றி அவர் எழுதிய பகுதிகளும், அவரது இன்பத்துப்பால் குறட்பாக்களும் தான். 'ஓடி விளையாடு பாப்பா நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா' என்றெல்லாம் அறிவுரை சொன்னவரே,

**பாதகம் செய்பவரைக் கண்டால் நீ**

**பயம்கொள்ளலாகாது பாப்பா!**

**மோதி மிதித்துவிடு பாப்பா அவர்**

**முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா! (பாரதியார் கவிதைகள், ப. 532)**

எனக் குழந்தைகள் மனத்தில் தன் கம்பீரமான வரிகளால் அதர்மத்தை எதிர்க்கும் வீரத்தையும் புகட்டியவர் பாரதியார். இத்தகைய குழந்தைப்பேறு என்பது மக்கள் அடையவேண்டிய பேறுகளிலெல்லாம் தலையாய பேறாகும். அதனால்தான்,

**பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த**

**மக்கட்பேறல்ல பிற (குறள். 61)**

அறிவுள்ள குழந்தைகளைப் பெறுவதைத் தவிர வேறு என்ன பேறு வேண்டும் என வினவுகிறார் வள்ளுவர். மனிதர்கள் அடையக்கூடிய பேறுகள் மொத்தம் பதினாறு என்று வகைப்படுத்துகிறது நமது மரபு. 'பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்க!' என்று நம் முன்னோர்கள் வாழ்த்துவது பதினாறு குழந்தைகளைப் பெற்று வாழச் சொல்லவில்லை. பதினாறு பேறுகளும் கிடைக்கட்டும் என்பதற்கான வாழ்த்து முறைதான் அது. அப்பதினாறு பேறுகள்,

**துதி, வாணி, வீரம், விஜயம், சந்தானம், துணிவு, தனம்,**

**மதிதானியம், போகம், சௌபாக்கியம், அறிவு, அழகு,**

**பெருமை, அறம், குலம், நோவகல் பூண் வயது**

**பதினாறு பேறும் தருவாய் மதுரைப் பராபரனே (தனிப்பாடல் திரட்டு, ப. 112)**

அதாவது புகழ், கல்வி, வீரம், வெற்றி, மக்கட்பேறு, தைரியம், செல்வம் மிகுதியான உணவுப்பொருள், சுகங்கள், நலவாழ்வு, புத்தி, எழில், முடிவில்லாத பெருமை, தர்மசிந்தனை, நல்ல குடும்பகம், நோயற்ற நீண்ட ஆயுள் என்று பதினாறு பேறுகளையும் பட்டியலிடுகின்றனர். நம் முன்னோர்கள். இப்பதினாறு பேறுகளில் ஐந்தாவதாகச் சொல்லப்படும் சந்தானம் என்பது கிடைத்தற்கரிய பெரும் பேறான மக்கட்பேறாகும்.சில பேறுகளை முயற்சியால் அடைந்துவிடலாம். கடின உழைப்பால் செல்வம் உள்ளிட்ட

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேறுகளை அடையலாம். ஆனால் இயற்கை கொடுக்கும் கொடை என்று சில பேறுகள் இருக்கின்றன. அழகு, நீண்ட ஆயுள் போன்றவை நாம் முயற்சி எடுப்பதனால் மட்டும் கிட்டுவன அல்ல. மக்கட்பேறும் அப்படித்தான்.

**குறுகுறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்கள்... (புறநானூறு, பா. 188)**
**அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ் (குறள். 64)**

என்ற தமிழிலக்கிய வரிகள் குழந்தைப்பேற்றின் இனிமையைத், தனித்தன்மையை விளக்குவதற்கிணங்க பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரும் குழந்தைப்பேறு கிடைப்பதற்குரிய காரணங்களையும், அவை கிடைக்காமல் ஏற்படும் தடைகளுக்கான காரணங்களையும் விளக்குகின்றார். இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாகச் சிறக்கக் கணவன் மனைவிக்கிடையில் நல்லுறவு நிலவ வேண்டும். சிவன்பார்வதி தம்பதிகள் தங்கள் குழந்தையான கந்தனுடன் காட்சியளிக்கும் 'சோமாஸ்கந்த மூர்த்தம்'போலக் கணவன் மனைவி என்பவர்கள் உரியகாலத்தில் தாய் தந்தையாக மாறி குழந்தையுடன் மகிழ்வாய் வாழும் வாழ்க்கையையே அனைவரும் விரும்புவர்.

**சொல்லு மழலையிலே - கண்ணம்மா**
**துன்பங்கள் தீர்த்திடுவாய்**
**முல்லைச் சிரிப்பாலே - எனது**
**மூர்க்கந் தவிர்த்திடுவாய் (பாரதியார் கவிதைகள், ப. 243)**

குழந்தைகளின் மழலை மொழியானது அனைத்து துன்பங்களுக்கும் மருந்தாவதை அறிந்ததனால்தான் பேராசிரியர் பிள்ளைப்பேறு ஏற்படுவதற்குரிய (கருத்தரிப்பிற்குரிய) காரணங்களை எடுத்துரைக்கின்றார். கருத்தரிப்பிற்குரிய காரணங்கள் பல இருப்பினும் மிக முக்கியமான காரணங்கள் இரண்டு. ஒன்று மரபுவழி காரணங்கள் மற்றொன்று சூழ்நிலை காரணங்கள். பேராசிரியர் குழந்தைப்பேறு ஏற்படுவதற்குரிய காரணங்களாகச் சிலவற்றை எடுத்துரைக்கின்றார். அவை,

**முதலாவதாக: கருப்பையின் வாயிலருகில் நல்ல விந்தணுக்கள் செலுத்தப்பெறுதல் வேண்டும். இரண்டாவதாக: கருப்பையின் வாயில் கருப்பை கருக்குழல்கள் இவற்றிலுள்ள வழிகள் விந்தணுக்கள் ஏறிச் செல்வதற்கேற்றவாறு சரியாக யாதொரு தடையுமின்றி இருத்தல் வேண்டும். மூன்றாவதாக: முட்டையும் விந்தணுக்களும் சந்திக்கும் இடமாகிய குருக்குழலில் நல்ல முட்டை இருக்க வேண்டும். கருப்பையின்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**அணைச்சவ்வும் கருவுற்ற முட்டை தன்னைப் பதித்துக்கொண்டு வளர்வதற்கேற்றவாறு பக்குவம் பெற்றிருத்தல் வேண்டும். (இல்லற நெறி, பக். 304-305)**

என்று இவ்முக்கியமான நிலைகளே குழந்தைப் பேற்றுக்குப் பெரிதும் வழிவகை செய்கின்றன. இவை மட்டுமின்றி 'எரித்தோ பிளாஸ்டாஸிஸ், நவீன முறையில் மக்கட்பேறு, செயற்கை முறையில் விந்து பாய்ச்சுதல், உடலுக்குப் புறத்தே உயிரியை உண்டாக்குதல்' என்று பல்வேறு அறிவியல் ஆராய்ச்சியின் வாயிலாக மக்கட்பேறு நடைபெறும் வழிமுறைகளையும் அறியமுடிகின்றது. குழந்தைப்பேறு ஏற்படாததற்குரிய காரணங்களையும் ஆசிரியர் எடுத்துரைத்துள்ளார். ஆண் மலடு, விந்தணு உற்பத்தியின்மை, டெஸ்டிகுலர் பயோப்ஸி, அஸீஸ்பெர்மியா, விந்துக்குறை, பெண்மலடு, முட்டை முதிருங்காலம், பிறப்புறுப்புகளில் தடைகள், இனப்பெருக்கக் கோளாறுகள், காலத்திற்கு முன் குழந்தை பெறுதல், இறந்து பிறத்தல், கருச்சிதைவு என்று பல்வேறு நிலைகளை விளக்குவதையும் அவற்றிற்குரிய தீர்வையும் பேராசிரியரின் இல்லற நெறி வாயிலாக அறியமுடிகின்றது.

**முடிவுரை**

கணவன் மனைவியரின் உடல் மற்றும் உள்ளம் சார்ந்த கருத்துக்களையும் அவர்களின் அந்தரங்க வாழ்வில் நிகழும் நிகழ்வுகளையும் மிக எளிமையாகத் தெளிவாக விளக்கத்துடனும், படங்களுடனும் பேராசிரியர் விளக்கி இருப்பது மனித இனத்தின் இல்லறம் மேன்மையுறுவதற்குக் கிடைத்த ஒரு வரமாகும். ஆங்கிலத்தில் இதுபோன்ற நூல்கள் ஏராளமாக உள்ளன. தற்காலத் தேவைக்கேற்பத் தமிழில் இத்தகைய நூல்கள் மிகவும் அவசியம். பேராசிரியர் அந்த அவசியத்தை உணர்ந்து செயல்பட்டிருக்கின்றார். மனித இனத்தின் வளமான வாழ்வுக்கு வழிவகைச் செய்திருக்கின்றார்.

**குறிப்பு நூல்கள்**

[1] ந.மு.வேங்கடசாமி நாட்டார். *அகநானூறு*. தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிமிடெட், சென்னை, 1968.

[2] ஔவை சு.துரைசாமிப் பிள்ளை. *ஐங்குறுநூறு*. தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிமிடெட், சென்னை, 1975.

[3] புலியூர்க் கேசிகன். *கலித்தொகை*. தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிமிடெட், சென்னை, 1973.

[4] திரு. வி. கல்யாண சுந்தரனார். *பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை*. மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2004.

[5] டாக்டர் உ.வே.சாமிநாதையர். *குறுந்தொகை*. தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (பி) லிமிடெட், சென்னை, 1978.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[6] ந. சுப்புரெட்டியார். *இல்லறநெறி.* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, இரண்டாம் பதிப்பு – டிசம்பர், 1976.

[7] ந. சுப்புரெட்டியார். *பாவேந்தரின் பாட்டுத்திறன்.* சுரா புக்ஸ், சென்னை, முதற்பதிப்பு – டிசம்பர், 2001.

[8] துரை.தண்டபானி.(உ.ஆ). *நீதி நூல்கள் (மூலமும் உரையும்).* உமா பதிப்பகம், சென்னை – 600001, 16 ஆம் பதிப்பு.

[9] திருவள்ளுவர். *திருக்குறள்.* சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1994.

[10] கா.சு.பிள்ளை. *தனிப்பாடல் திரட்டு.* கலாவதி அச்சகம், சென்னை, 1862.

[11] தொல்காப்பியர். *தொல்காப்பியம்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 600108, பதினொன்றாம் பதிப்பு - அக்டோபர் 2010.

[12] ஔவை சு.துரைசாமிப் பிள்ளை. *நற்றிணை.* தென்னிந்தியச் சைவ சித்தாந்தநூற்பதிப்புக் கழகம் (பி) லிமிடெட், சென்னை, 1969.

[13] நாற்கவிராச நம்பி. *அகப்பொருள் விளக்கம்.* கதிர் பதிப்பகம், திருவையாறு - 613204.

[14] பாரதியார். *பாரதியார் கவிதைகள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 600001, 1990.

[15] மாணிக்கவாசகன்.ஞா.(உ. ஆ). *புறநானூறு.* உமா பதிப்பகம், சென்னை – 600001, மூன்றாம் பதிப்பு - அக்டோபர் 2008.

**References**

[1] N.M. Venkatasamy Natar. *Agananooru*. Theninthiya Saiva Siddhanta Noorpathippu Kazhagam (P) Limited, Chennai, 1968.

[2] Auwai Su. Duraisamy Pillai. *Aingurunooru*. Theninthiya Saiva Siddhanta Noorpathi ppuazhagam (P) Limited, Chennai, 1975.

[3] Buliyurg Kasikan. *Kaliththokai*. Theninthiya Saiva Siddhanta Noorpathippu Kazhagam (P) Limited, Chennai, 1973.

[4] Thiru V.K. Kalyana Sundaranar. *Pennin Perumai (or) Vazhakai Thunai*. Manikavasagar Pathippagam, Pathippu, Chennai, 2004.

[5] Dr. U. V. Saminathayar. *Kurunthogai*. Theninthiya Saiva Siddhanta Noorpathippu Kazhagam (P) Limited, Chennai, 1978.

[6] N. Subbu Reddiyar. *Illara Neri*. Tamil Puthakalayam, Irandam Pathippu, Chennai, Dece 1976.

[7] N. Subbu Reddiyar. *Pavendar Pattuthiran*. Sura books, Chennai, Muthal Pathippu, December – 2001.

[8] Thandapanithurai (U.A). *Neethi Noolkal (Moolamum Uraium)*. Uma Pathippakam, Chennai – 600001.

[9] Thiruvalluvar. *Thirukkural*. Saiva Siddhanta Noorpathippu Kazhagam, Chennai, 1994.

[10] Ka. Su. Pillai. *Thanipadal Thirattu*. Kalavathi Achagam, Chennai, 1862.

[11] Tholkappiyar. *Tholkappiyam*. Mnikavasagar Pathippagam, Chennai - 600108, Pathinoram Pathippu - October 2010.

[12] Auwai Su. Duraisamy Plai. *Nattrinai*. Theninthiya Saiva Siddhanta Noorpathippu Kazhagam (P) Limited, Chennai, 1969.

[13] Naarkavirasa Nambi. *Akapporul Vilakkam*. Kathir Pathippagam, Thiruvaiyaru - 613204.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[14] Bharathiyar. *Bharathiyar Kavidhaigal*. Manikkavasagar Pathippagam, Chennai - 600001, 1990.
[15] Manikkavasagan (U.A). *Purananooru.* Uma Pathippagam, Chennai - 600001, Moondram Pathippu – October 2008.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் பிழை திருத்தக் குறிப்புகள்

## N. Subbu Reddiar's Contribution to Error Correction

**முனைவர் மா. ஆசியாதாரா,** உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை,

காவேரி மகளிர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி, தமிழ்நாடு, இந்தியா

**Dr. M. Asiathara,** Assistant Professor of Tamil, Cauvery College for Women, Tiruchirappalli, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0003-0612-3194**

**DOI: 10.5281/zenodo.7251354**

**Abstract**

*Speaking and writing a language without error is an important factor in language development. However, it can be noticed that even native Tamil speakers make errors in written Tamil. In his book 'Tamil Payittrum Murai' (Tamil Teaching Methodology), Prof. N. Subbu Reddiar is keen that the Tamil community will be able to handle their language more accurately by correcting errors during their childhood days. He has described the errors that can occur in written Tamil in contextual situations, correcting methods and the contribution of the ones who are involved in correction. This article, 'N. Subbu Reddiar's Contribution to Error Correction' is based on three variants; spelling, word and sentence error corrections. N. Subbu Reddiar demonstrates misspellings caused by wrong pronunciation, inattention, and coarse language; Glossary errors caused by colloquial Tamil, lack of education, and use of the vernacular; and Syntactic errors caused by the wrong formation of verbs and the improper applications of conjunction/ case/ suffix/ auxiliary verbs. He also describes the methods of correction. He also points out the errors that arise in semantic contexts also. He combined the contribution of teachers and students in eliminating errors. The suggestions for correcting such as teaching the correct pronunciation, establishing grammatical knowledge, and repeated writing practice are being explored in this article. He lists misspellings, vernacular words, coarse words as well as corrections. This article examines what kinds of errors have been corrected by N.Subbu Reddiar. It also reveals N. Subbu Reddiar's deep linguistic ability, sound knowledge of teacher-student psychology, and his focus on transmitting the Tamil language to the next generation.*

**Keywords**: N.Subbu Reddiar, Error correction, alphabetic error, word error, sentence error, Correction exercises.

**ஆய்வுச் சுருக்கம்**

*மொழியைப் பிழையின்றிப் பேசுவதும் எழுதுவதும் மொழி வளர்ச்சிக்கு முக்கிய காரணிகளாக அமைகின்றன. எனினும் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோரிடத்தும்கூட எழுத்துத் தமிழில் பிழைகள் நேர்ந்துவிடுவதைக் காணமுடிகிறது. மாணவப் பருவத்திலேயே அப்பிழைகளைக் கண்டறிந்து சரிப்படுத்துவதன்வழி தமிழ்ச் சமூகம் மிகச் சரியாகத் தம் மொழியைக் கையாளும் வன்மை பெறும் என்ற உறுதியான எண்ணம் கொண்டவரான பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், எழுத்துத் தமிழில் நேரக்கூடிய பிழைகள், நேரும் சூழல்கள், களையும் முறை, களைய வேண்டியவர்களின் பங்களிப்பு ஆகியவற்றைத் 'தமிழ் பயிற்றும்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*முறை' நூலில் தெளிவாக விவரித்துள்ளார். இந்நூலின்வழி எழுதப்பட்டிருக்கும் 'ந.சுப்புரெட்டியாரின் பிழை திருத்தக் குறிப்புகள்' என்னும் இக்கட்டுரை எழுத்துப்பிழை திருத்தம், சொற்பிழை திருத்தம், வாக்கியப்பிழை திருத்தம் என்னும் மூன்றன் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. உச்சரிப்புப்பிழை, கவனக்குறைவு, கொச்சை மொழி பேசுதல் போன்ற காரணங்களால் உருவாகும் எழுத்துப்பிழைகள்; உலக வழக்கு, குறைவான கல்வி, வடமொழிச் சொற்பயன்பாடு போன்ற காரணங்களால் உருவாகும் சொற்பிழைகள்; வினை உருவாக்கம் மற்றும் இணைப்பிடைச்சொல் / வேற்றுமை / பின்னுருபு / துணைவினை போன்றவற்றின் தவறான பயன்பாடுகளால் உருவாகும் வாக்கியப்பிழைகள் ஆகியவற்றை எடுத்துக்காட்டும் ந.சுப்புரெட்டியார் அவற்றைக் களையும் முறைகளையும் முன்வைக்கிறார். பொருண்மை அடிப்படையில் சொற்பயன்பாட்டுச் சூழல்களில் உருவாகும் பிழைகளையும் இந்நூலில் கூறுகிறார். இப்பிழை களைதலில் ஆசிரியர் மற்றும் மாணவர்களின் பங்களிப்பை இணைத்தே ந.சுப்புரெட்டியார் கூறுகிறார். சரியான உச்சரிப்பினைச் சொல்லிக்கொடுத்தல், இலக்கண அறிவு ஏற்படுத்துதல், திரும்பத்திரும்ப எழுதிப் பழகுதல் போன்று அவர் அளிக்கும் தீர்வுகள் இங்கு ஆராயப்படுகின்றன. வழுச் சொற்கள், உச்சரிப்புப் பிழையால் பிழையாக எழுத நேரும் சொற்கள், எழுத்து வேறுபாட்டால் பிழை நேரும் சொற்கள் போன்றவற்றுடன் வடசொற்கள், வழக்குச் சொற்கள் போன்றவையும் பட்டியலிடப்பட்டு அவற்றின் திருத்தங்களும் இந்நூலில் அளிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின்வழி எவ்விதங்களில் பிழைகள் ந.சுப்புரெட்டியாரால் சரிசெய்து தரப்பட்டுள்ளன என்பதை இக்கட்டுரை ஆராய்கிறது. இக்கட்டுரைவழி, ந.சுப்புரெட்டியாரின் ஆழ்ந்த மொழித்திறன், ஆசிரியர் – மாணவர் உளவியல் அறிந்திருக்கும் நுண்மான் நுழைபுலம், அடுத்த தலைமுறையினருக்குத் தமிழ்மொழி தவறின்றிக் கடத்தப்பட வேண்டும் என்பதில் மிகுகவனம் கொண்டிருக்கும் பண்பு ஆகியன வெளிக்கொணரப்படுகின்றன.*

**குறிப்புச்சொற்கள்**: ந.சுப்புரெட்டியார், பிழை திருத்தம், எழுத்துப்பிழை, சொற்பிழை, வாக்கியப்பிழை, பிழை நீக்கப் பயிற்சி.

**முன்னுரை**

உலகில் பல்லாயிரக்கணக்கான மொழிகள் பேசப்பட்டுவரும் சூழலில் மொழி என்பது பேசுபவரின் அடையாளமாக, கலாச்சாரக் கூறுகளில் ஒன்றாக நிலைபெற்றுவிட்டது. ஒரு சமூகம் தனக்கு அடையாளமாக விளங்கும் மொழியினை மிகச் சரியான முறையில் கையாள வேண்டியது அவசியமாகிறது. தமிழ்ச் சூழலில் ஒரு மனிதனுக்குப் பேச்சு மொழியைக் குடும்பமும் சமூகமும் அறிமுகப்படுத்துகின்றன; எழுத்து மொழியைப் பள்ளி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அறிமுகப்படுத்துகிறது. ஆரம்ப நிலையிலேயே மொழியைத் தெளிவாகப் பயிற்றுவித்து விட்டால் பிறகு அம்மனிதன் மொழியைச் சரியாகப் பயன்படுத்திக்கொள்ள இயலும். ஆனால் பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்குமான வேறுபாடு, பிற மொழித் தாக்கம் போன்ற தடைகள் தமிழ் எழுதுவோரிடையே பிழைகளை உண்டாக்கிவிடுகின்றன. இவ்வாறு பிழை உருவாகும் சூழல்களைக் கண்டறிந்து பிழைகளை ஆரம்ப நிலைகளிலேயே நீக்க வேண்டியது ஆசிரியர்களின் கடமையாக உள்ளது. நவீன முறையில் தமிழ் கற்பித்தல் குறித்து 1957இல் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் 'தமிழ் பயிற்றும் முறை' என்ற நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலின் திருந்திய இரண்டாம் பதிப்பு 1964இல் வெளியிடப்பட்டுள்ளது. கூடுதலாக ஒரு இயல் சேர்க்கப்பட்டு மூன்றாம் பதிப்பு 1980இல் வெளிவந்துள்ளது. தாய்மொழி கற்பித்தல் நெறிகள் குறித்துப் பேசும் இந்நூலில் மொழியைப் பிழையின்றிக் கற்பித்தல் மற்றும் பிழை நேரின் களைவதற்கான குறிப்புகள் என்பன விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**மொழியில் ஏற்படும் பிழைகள்**

காலந்தோறுமான மொழியமைப்பு குறித்த ஆவணங்களாக இலக்கண நூல்கள் கிடைக்கின்றன. 'இலக்கண உருவாக்கத்துக்கு ஆதாரமாக இரண்டு வகையான நிலையைக் காண முடிகிறது. ஒன்று : பழையகால மொழியைப் பாதுகாப்பது. இன்னொன்று : வளரும் மொழிக்கு ஆதரவாக இலக்கணம் எழுதுவது' (இலக்கண உருவாக்கம், ப.12). இவற்றில் மொழி பாதுகாத்தலுக்காக எழுதப்படும் இலக்கண நூல்களின் முக்கிய நோக்கம் பிழையற்ற மொழியை அடையாளங் காட்டுவதுதான். இவ் இலக்கண நூல்கள் பிழை நேரும் இடங்களைக் குறிப்பிட்டுப் பிழை களையவும் குறிப்புரைக்கின்றன.

**திணையே பால் இடம் பொழுது வினாஇறை**
**மரபாம் ஏழும் மயங்கினாம் வழுவே (நன்னூல், நூ. 375)**

என நன்னூலில் இருதிணை, ஐம்பால், மூவிடங்கள், முக்காலங்கள், வினா, விடை, மரபு ஆகியன தம் நெறியிலிருந்து பிறழ்வது வழு என்று சொல்லப்படுகிறது.

வழுக்களைக் கூறும் இலக்கண நூல்கள் வழு இல்லாமல் எழுதுவதை வழுக்காத்தலாகக் குறிப்பிடுகின்றன. திணை, பாலில் ஐயம் ஏற்படுகிறபொழுது அவற்றைக் களையும் விதங்களை வழுவமைதி விதிகளிலும் கூறிச்செல்கின்றன.

**ஐயம் திணை பால் அவ்வப் பொதுவினும்**
**மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புப (நன்னூல், நூ. 376)**
**உயர்திணை தொடர்ந்த பொருள் முதல் ஆறும்**
**அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின (நன்னூல், நூ. 377)**

முதலாக நன்னூலில் வழுக்காத்தலுக்கான கருத்துக்கள் (நூ.376-389) தொடர்ச்சியாகக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியக் கிளவியாக்கம் இயலில் திணை, பால், வினா, விடை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

போன்றவற்றில் ஐயங்கள் எழும்பினால் எவ்விதம் வழுவின்றி எழுதுவது என்ற குறிப்புகள் தரப்பட்டுள்ளன. இலக்கண நூல்களின் கட்டமைப்பே பேச்சு மற்றும் எழுத்துத் தமிழில் நேரக்கூடிய பிழைகளைக் களைவதை அடிப்படையாகக் கொண்டிருப்பதுதான் என்பதிலிருந்து அவ்இலக்கண நூல்களை அடிப்படையாகக் கொண்டு எழும் மொழி தொடர்பான நூல்களில் பிழை திருத்தக் கருத்துக்களின் இன்றியமையாமையை உணரலாம்.

தாய்மொழியாகத் தமிழைக் கொண்டோரிடத்தும் எழுத்துத் தமிழில் பிழைகளைக் காண்கிறோம். ‘ஒருவன் தாய்மொழியாகிய தமிழைப் பேசுவதனாலேயே அவன் தமிழறிவு பெற்றவனாய் ஆகிவிட மாட்டான். மொழியைப் பேசுவது வேறு; மொழியைப் பற்றித் தெரிந்துகொள்வது வேறு. முந்தையது செய்திறன் (performance); பிந்தையது அறிதிறன் (competence). பல்வேறு காரணங்களால் மொழியைப் பேசும்போதும் எழுதும்போதும் பிழைகள் நேரலாம். எது பிழை, எது சரி என்று உணரும் திறமே அறிதிறன்; மொழிதிறன். அத்தகைய திறனைப் பெறுவதே மொழிக்கல்வியாகும்’ (இக்காலத் தமிழ் மரபு, ப.2) என்பர்.

ந. சுப்புரெட்டியார் தனது ‘தமிழ் பயிற்றும் முறை’ நூலில் இம்மொழிக் கல்வி குறித்தும் மாணவர்களிடத்து எழும் மொழிப் பிழைகளைக் களையும் விதம் குறித்தும் கூறியுள்ளார். இதில் மூன்று வகையான பிழைகள் குறித்து முக்கியமாகக் குறிப்பிட்டுள்ளார்.

- **எழுத்துப் பிழை**
- **சொற் பிழை**
- **வாக்கியப் பிழை**

மேலும், வாக்கியங்களைக் கொண்டு கட்டமைக்கப்படும் கட்டுரைகளில் எவ்விதம் பிழைகள் நேர்கின்றன என்பதையும் கூறுகிறார். இப்பிழைகள் உருவாகக்கூடிய சூழல்கள் குறித்த தெளிவு இருந்தால் மட்டுமே அவற்றைக் களைவது குறித்தும் சிந்திக்க முடியும். பொதுவாக, அலட்சியப் போக்கு, இலக்கணம் அறியாமை, நூற் பயிற்சியின்மை என்பன தமிழில் பிழை மலிந்து எழுதுவதற்கான காரணங்களாகக் கூறப்படுகின்றன (தவறின்றித் தமிழ் எழுத, ப. 19). பேராசிரியர் பிழை ஏற்படுதலுக்கான காரணங்களாக,

- **குறைவான கல்வியறிவு**
- **வடமொழிச் சொல் பயன்பாடு**
- **சரியான ஒலிப்பு முறை அறியாமை (தமிழ் பயிற்றும் முறை, ப. 272)**

என்பனவற்றைக் கூறுவதுடன், ‘இளமைதொட்டே கேட்பதிலும் உச்சரிப்பதிலும் நேரிடும் பிழைகளைக் களையாமையும் கவனக்குறைவும்’ (தமிழ் பயிற்றும் முறை, ப. 267) பிழை ஏற்படுவதற்கான காரணங்களெனக் கூறுகிறார். இச்சூழல்களில் எழும் பிழைகளைத் திருத்திக்கொள்வதற்கான வழிமுறைக் குறிப்புகளையும் உதாரணங்களுடன் இந்நூலில் விளக்கியுள்ளார்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**எழுத்துப் பிழைகளும் திருத்தங்களும்**

மொழியில் பண்பட்ட ஒரு சமூகம் மொழிப் பிழைகளை ஏற்காது. பிழைகளின்றி எழுதுவதன் முக்கியத்துவத்தை ந.சுப்புரெட்டியார் பின்வருமாறு விளக்குகிறார். 'எழுத்துப் பிழைகளிலிருந்து ஒருவாறு கல்விக்குறைவை அளந்தறிய முடிகின்றது. எனவே, பிழைகளின்றி எழுதுதலை ஆசிரியர்கள் முக்கிய நோக்கமாகக் கொள்ளவேண்டும். எழுத்தில் கவனமற்றிருந்து பிழை செய்தால் அது கல்வியின் பல பிரிவுகளிலும் கவனக் குறைவை உண்டுபண்ணும்; படிப்பவர்களுக்கு எதிர்பாராத பொருளையும் தரக்கூடும். எழுத்துப் பிழைகளைக் கவனியாது எழுதினால் `கல்வி` `கலவி` யாகும்; `மன்னர்` `மண்ணா` என்றாகும்; `இறங்கவும்` `இரங்கவும்` என்றாகும்; `அறிந்தோர்` `அரிந்தோர்` என்றாகிவிடும்,' (தமிழ் பயிற்றும் முறை, ப. 267) என எழுத்துப் பிழையினால் ஒருவரது அறிவே குறைவாக மதிப்பிடப்படக்கூடிய சூழலை உணர்த்துகிறார்.

ந.சுப்புரெட்டியார் தனது நூலில் கையெழுத்தும் எழுத்துக் கூட்டலும் என்னும் பகுதியில் எழுத்துப் பிழைகளை நீக்கும் வழிகள் குறித்துப் பேசியுள்ளார். இப்பகுதியின் 'வழூஉச் சொற்களும் திருத்தமும்' என்ற தலைப்பில் தவறாக எழுதப்படும் சொற்கள் 'பிழை' என்ற தலைப்பின்கீழும் சரியான சொற்கள் 'திருத்தம்' என்ற தலைப்பின்கீழும் தரப்பட்டுள்ளன. இதில் 220 சொற்களுக்குச் சரியான சொற்களை அளித்துள்ளார். சில சொற்கள் தவறாக உச்சரிக்கப்படுவதால் அவற்றை எழுதும்போதும் தவறாக எழுத நேரிடுகின்றது. அவ்வாறான 31 சொற்களைப் 'பிழையாக உச்சரிப்பதால் பிழையாக எழுதப்பெறும் சொற்கள்' தலைப்பில் எடுத்துக்காட்டித் திருத்த வடிவத்தையும் கூறியுள்ளார் (தமிழ் பயிற்றும் முறை, ப. 272 - 279). ந.சுப்புரெட்டியார் பிழை திருத்தித் தந்துள்ள சொற்களை ஆராய்கையில் பல்வேறு விதமான மாற்றங்களினால் அப்பிழைகள் நேர்ந்துள்ளதை அறியமுடிகிறது. அவற்றில் சில பின்வருமாறு அமைந்துள்ளன.

**அழுத்தி உச்சரிக்கப்படுதல்**

சில சொற்கள் அவற்றின் இயல்பான உச்சரிப்பை விட அழுத்தி உச்சரிக்கப்படுவதால் பிழையாகின்றன. அவ்வாறான சொற்களும் இப்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

சான்று: புஸ்த்தகம் - புஸ்தகம்

**பேச்சு வழக்கினால் மருவிய மாற்றம்**

சில சொற்கள் தொடர்ந்து உலக வழக்கில் பயன்படுத்தப்படும்போது மருவிவருகின்றன.

சான்று: தாவலை, தேவலை - தாழ்வில்லை

**பேச்சு வழக்கில் எழுத்து விடுபடுதல்**

சில சொற்கள் பேசப்படும்போது அவற்றிலுள்ள ஒரு எழுத்து விடுபட்டுப் பிழையாகப் பேசப்படுகின்றன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சான்று: காச்சல் - காய்ச்சல்

**கூட்டெழுத்து உச்சரிப்பினால் நேர்ந்த மாற்றம்**

தமிழில் உள்ள கூட்டெழுத்துக்களான ஐ மற்றும் ஔ உச்சரிப்பின்போது மாற்றமடையும். அவற்றை இப்பட்டியலில் சுட்டியுள்ளார்.

சான்று: அய்யர் - ஐயர்

**ஆய்த எழுத்து உச்சரிப்பினால் நேர்ந்த மாற்றம்**

சொற்களில் இடம்பெறும் ஆய்த எழுத்து அருகில் உள்ள மெய்யாக மாறியோ விடுபட்டோ பிழையாகப் பயன்படுத்தப்படுகிறது.

சான்றுகள்: அக்கிள் - அஃகுள்

அதாவது - அஃதாவது

**பேச்சு வழக்கில் விரிவடைந்துள்ள சொற்கள்**

சில சொற்கள் அவற்றின் உண்மையான எழுத்து வடிவத்தை விட கூடுதலான எழுத்துக்கள் சேர்க்கப்பட்டுப் பிழையாகப் பயன்படுத்தப்படுகின்றன.

சான்று: அருகாமையில் - அருகில்

**பேச்சு வழக்கில் வட எழுத்து சேர்ந்த சொற்கள்**

வட எழுத்துக்கள் இடம்பெறாத சொற்களில் கூட வட எழுத்துக்கள் இணைக்கப்பட்டுப் பிழையாகப் பயன்படுத்தப்படுகின்றன.

சான்று: வெங்கிடாஜலம் - வேங்கடாசலம்

**இலக்கணம் குறித்த அறியாமையால் ஏற்பட்ட மாற்றம்**

சொற்களின் ஒருமைப் பன்மை வேறுபாட்டு வடிவங்கள், எண்ணுப்பெயர்ச் சொற்கள் தமிழில் அமையும் நிலை போன்ற இலக்கணக் கருத்துக்களை அறியாத நிலையில் சில சொற்கள் தவறாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

சான்றுகள்: அதுகள் - அவை

ஒருவள் - ஒருத்தி

**இரு குறில்கள் ஒரு நெடிலாக மாற்றம்**

சொற்களின் முதலில் இடம்பெறும் இரு குறில்கள் ஒரு நெடிலாக மாற்றம் பெற்றுப் பயன்படுத்தப்படுவதைப் பிழை என்று பட்டியலில் எடுத்துக்காட்டுகிறார்.

சான்று: ஆத்துக்கு – அகத்துக்கு

உச்சரிப்பில் சற்று மட்டும் வேறுபட்ட எழுத்துக்கள் தமிழில் உண்டு. ர – ற, ல-ழ-ள, ண-ன போன்றன பேச்சு வழக்கில் பெரும்பாலும் வேறுபட்டு உச்சரிக்கப்படுவதில்லை. இவ்வெழுத்துக்கள் தவறாக ஒத்த தன் ழகர, ளகரம் பற்றிப் பேசும் எம்.ஏ.நுஃமான், ‘பழந்தமிழில் இவற்றுக்கு இடையே இருந்த ஒலி வேறுபாடு தற்காலத்தில் பெரிதும் மறைந்துவிட்டது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இலங்கைத் தமிழில் இவை வேறுபடுத்தி உச்சரிக்கப்படுவதில்லை. தமிழ்நாட்டில் தென்ஆர்க்காடு, தஞ்சாவூர் மாவட்டங்களில் மட்டும் இவை வேறுபடுத்தி உச்சரிக்கப்படுகின்றன. ஏனைய பிரதேசங்களில் இவை வேறுபாடு இன்றி ளகரம் போலவே உச்சரிக்கப்படுகின்றன. கால மாற்றத்தில் ஏற்பட்ட ஒலி மாற்றமாக நாம் இதனைக் கொள்ள வேண்டும். எனினும் எழுத்தில் இவற்றுக்கிடையே வேறுபாடு உண்டு' (அடிப்படைத் தமிழ் இலக்கணம், ப.27) என்கிறார். எழுதும்போது வேறுபாடு காணவேண்டிய ரகரம், லகரம், யகரம், றகரம், ணகரம், இகரம், ஒகரம் போன்றன தவறான பயன்பாட்டினால் பிழையாக எழுதப்படுவதை ந.சுப்புரெட்டியார் பட்டியலிட்டிருக்கிறார். அப்பட்டியலிலிருந்து சில சான்றுகள் கீழே அளிக்கப்பட்டிருக்கின்றன.

**ரகரம் – றகரம் மாற்றம்**

ரகரம் இடம்பெற வேண்டிய சொல்லில் தவறாக றகரம் கையாளப்பட்டுப் பிழையாகியிருக்கின்றது.

சான்று: கடப்பாறை - கடப்பாரை

இவ்வாறே றகரம் இடம்பெற வேண்டிய சொல்லில் ரகரம் இடம்பெறுவதையும் எடுத்துக்காட்டுகிறார்.

சான்று: கருப்பு - கறுப்பு

**ரகரம் – லகரம் மாற்றம்**

சான்று: இலுப்புப்பெட்டி - இருப்புப்பெட்டி

**லகரம் - ளகரம் மாற்றம்**

சான்று: ஈர்வளி - ஈர்வலி

**யகரம் - சகரம் மாற்றம்**

சான்று: உசரம் - உயரம்

**றகரம் - தகரம் மாற்றம்**

சான்று: ஒத்தடம் - ஒற்றடம்

**ணகரம் – னகரம் மாற்றம்**

சான்று: உத்தராயனம் - உத்தராயணம்

**இகரம் - எகரம் மாற்றம்**

சான்று: எடக்கு - இடக்கு

பிழையாக உச்சரிப்பதால் பிழையாக எழுதப்பெறும் சொற்கள் தலைப்பின்கீழ் உகரத்தை முதலாக உடைய சொற்கள் பிழையாக ஒகரத்தை முதலாக உடையதாக உச்சரிக்கப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

சான்று: ஒங்களுக்கு - உங்களுக்கு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சில சொற்கள் வழக்கில் மிகச் சரியானதாகப் பயன்படுத்தப்படுவதாக எண்ணம் இருக்கும். ஆனால் அவை அடிப்படையில் தவறான வடிவமாக இருக்கும். அவ்வாறான சில சொற்களின் திருத்த வடிவங்களை எடுத்துக்காட்டுகிறார்.

சான்றுகள்: ஆவாரம் பூ - ஆவிரம் பூ

இடதுபக்கம் - இடப்பக்கம்

வலதுபக்கம் - வலப்பக்கம்

சில சொற்கள் இருவகைகளில் பிழையுடன் எழுதப்பட்டால் அவ்விரு வகைகளையும் குறிப்பிடுகிறார்.

சான்று: அருகாமணை, அருவாமணை – அரிவாள்மணை

இத்தலைப்புகளுக்கு அடுத்த பகுதியில் ரகர – றகர வேறுபாட்டுச் சொற்கள், ணகர – னகர வேறுபாட்டுச் சொற்கள், லகர – ழகர – ளகர வேறுபாட்டுச் சொற்கள் ஆகியன பொருளுடன் அளிக்கப்பட்டுள்ளன.

**சொற்களில் எழுத்துப் பிழை நேரும் இடங்களும் திருத்த முறைகளும்**

அ.கி.பரந்தாமனார் பிழைகளை நீக்கும் முறைகளை விரிவாக எடுத்துரைத்தவர். அவர், எழுத்துப் பிழைகள் வராமல் இருக்கச் சில வழிகள் உண்டெனக் கூறுகிறார். '1. பிழையற்ற நூல்களைப் படித்தல் ஒன்று, 2. பொருள் நினைவோடு எழுதுதல் மற்றொன்று, 3. சொல்லின் பகுதி பார்த்து எழுதுதல் இன்னொன்று' (நல்ல தமிழ் எழுத வேண்டுமா, ப. 59) என்று அவ்வழிகளை விளக்கியுரைக்கிறார்.

மொழியைப் பிழையின்றி ஆள மொழித்திறனை வளர்க்க வேண்டும்.

> **மொழித் திறனில் நாம் கவனமாக வளர்க்க வேண்டிய சில உட்பிரிவுகள் உண்டு. பிழையில்லாமலும் சிறந்த முறையிலும் எழுதுவதை எழுது திறன் எனலாம். தெளிவாக எழுதுதல், நிறுத்தற்குறிகள் இடுதல், பத்தி பிரித்தல், அடிக்கோடிடுதல் முதலானவற்றை நன்கு உணர்ந்து கற்பித்து எழுது திறனை வளர்க்க வேண்டும். விரைவாகவும் சரியாகவும் தெளிவாகவும் எழுதுகின்ற நிலையை எய்தும்போது எழுதுதிறன் கைவந்ததாகக் கருதலாம். சரியான ஒலிப்புடனும் பொருளோசையுடனும் தெளிவாகப் படிப்பதைப் படிக்குந் திறன் எனலாம். இதனை வாய்விட்டுப் படித்தல், படித்துப் பார்த்தல் என இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். (இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2, ப.102)**

என்று கூறும் பொற்கோ, இவற்றோடு பேசுந்திறன், உணருந்திறன், படைக்குந்திறன், உரையாடுந்திறன் ஆகியவற்றையும் முறையாக வளர்க்க வேண்டும் என்கிறார்.

ந.சுப்புரெட்டியார் தனது நூலில் எழுத்துப் பிழைகளை நீக்கும் முறைகளைத் தெரிந்த சொற்கள், வருமுன் தடுத்தல், இலக்கண அறிவு, அகராதிப் பழக்கம், எழுதிப் பழகல்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சொல்லுவதை எழுதுதல், பார்த்து எழுதுதல், எழுத்துக் கூட்டு விளையாட்டுக்கள், பிழைகளை அவ்வப்போது களைதல், சில எழுத்துக்கள் என்னும் தலைப்புகளில் கூறுகிறார். இத்தலைப்புகளின் வழியாக, தெரிந்த சொற்களை எழுத்துக் கூட்டி அறிய முதலில் உணர்த்திவிட வேண்டும்; சரியான உச்சரிப்பை வற்புறுத்துவதன்வழி பிழை நேரும் முன்னரே அவற்றைத் தடுத்துவிடலாம்; உறுப்பிலக்கணம் மற்றும் புணர்ச்சி விதிகளின் அறிவினால் பிழைகளைத் தடுக்க வாய்ப்புண்டு போன்ற கருத்துக்கள் அவரால் முன்வைக்கப்படுகின்றன (தமிழ் பயிற்றும் முறை, ப.287).

மொழிப்பயிற்சி பகுதியில் தவறான சொல், சரியான சொல் என்று பிழை திருத்தங்கள் அவரால் அளிக்கப்பட்டுள்ளன. இவை முற்பகுதியான 'வழூஉச் சொற்களும் திருத்தமும்' என்ற பகுதியில் இடம்பெற்ற சொற்களாகத்தான் உள்ளன. இப்பகுதியில் கல்வியறிவில்லாதவரும் நாகரிகம் இல்லாதவரும் ஆகிய மனிதர்கள் பேசுகின்ற இழிந்த சொற்களை மாணவர்கள் தவிர்க்கும் பயிற்சிகளைத் தரவேண்டும் என்ற கருத்துடன் அச்சொற்கள் சிலவற்றையும் பட்டியலிடுகிறார்.

**சான்றுகள்:**

இஸ்துகினு, துண்ணுறு, பொட்டச்சி, கம்பி நீட்டிட்டான் (தமிழ் பயிற்றும் முறை, ப. 301). தற்காலக் கட்டத்தில் இப்பிழை திருத்தத்திற்கேற்ற கருவி நூல்கள் உருவாகியுள்ளன. சொல் வழக்குக் கையேடு நூலில் நூற்றுக்கும் மேற்பட்ட சொற்களின் பயன்பாட்டு முறைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன (மு.ப. 2005, ம.ப. 2010).

**வாக்கியப் பிழைகள்**

மொழியமைப்பில் எழுத்து, சொற்களின் அடுத்த நிலையாக வாக்கியம் நோக்கப்படுகிறது.

> **வாக்கியம் என்பது குறிப்பிட்ட சொற்றொடர்கள் குறிப்பிட்ட அமைப்பு முறையில் இணைந்து நின்று ஒரு முற்றுப்பொருளைத் தரும் மொழியாக்கம் ஆகும் (தமிழ்மொழி அமைப்பியல், ப. 277).**

தமிழின் வாக்கிய அமைப்பு திட்பமானதல்ல, நெகிழ்ச்சி உடையது என்பார் மு.வரதராசனார் (மொழி நூல், ப. 259-260). நெகிழ்ச்சியான வாக்கிய அமைப்பினை உடைய மொழியினைக் கவனமாகக் கற்பிக்க வேண்டியதாகிறது. ஒரு வாக்கியம் பின்வரும் விதிகளை மேற்கொள்ளாத காரணத்தினால் பிழை உடையதாய் மாறுகிறது.

- ஒரு பத்தியில் உள்ள வாக்கியங்களுள் ஒவ்வொன்றுக்கும் பொருள் தொடர்பு
- வாக்கியத்திலிருக்கும் சொற்கள் தத்தமக்கு உரிய சொற்களோடு முடிதல்

இது குறித்து ந.சுப்புரெட்டியார் அளித்திருக்கும் உதாரணங்களை ஆராய்கையில் அவை பின்வருமாறு அமைகின்றன.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இணைப்பிடைச்சொல்லைத் தவறாகப் பயன்படுத்துதலால் வாக்கியப் பிழைகள் நேர்கின்றன. ஒரு பெயர்ச் சொல்லை வினைச்சொல்லாகப் பயன்படுத்தும்போது எந்த வடிவில் பயன்படுத்த வேண்டும் என்பதில் கவனம் தேவை. முயற்சிக்கின்றேன் என்ற சொல்லிற்குப் பதிலாக முயல்கின்றேன், முயற்சி செய்கின்றேன் என்ற சொற்களைப் பயன்படுத்தலாம் என்பது ஆசிரியரின் கருத்தாக உள்ளது. முயற்சி என்ற பெயரைப் பயன்படுத்தும்போது துணைவினை கொண்டே தொடரை முடிக்க வேண்டும், முயல் என்ற வினையடியைப் பயன்படுத்தும் போதுதான் கால இடைநிலை மற்றும் விகுதிகளை நேரடியாய் இணைக்க வேண்டும். ஒரு தொடரில் தேவையற்ற வினைச் சொற்களைத் தவிர்க்க வேண்டியது அவசியம். 'தங்கள் நலனைத் தெரிவிக்க வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கின்றேன்' என்ற தொடர் 'தங்கள் நலனைத் தெரிவிக்க வேண்டுகிறேன்' என்றிருப்பதே சரி.

வாக்கியங்கள் வேற்றுமை உருபிற்கேற்ற வகையில் வழுவின்றி அமைக்கப்பட வேண்டும். 'அவைகளை (ஆறு பொறிகளை)ச் சரவணப் பொய்கையிலிட்டு வளர்ந்து வருநாளில் அம்பிகையால் அவை யொருங்கே எடுக்கப்பட அவை ஓருடல் பெறலாயினர்' என்ற தொடரைத் திருத்தித் தருகிறார். அவைகளை என்ற சொல்லில் இரண்டாம் வேற்றுமை உருபு இடம்பெற்றுள்ளது. அச்சொல் 'வளர்ந்து வருநாளில்' என்ற தொடருடன் சரியான முறையில் இயையவில்லை. எனவே அவ்வேற்றுமை உருபு நீக்கப்பட்டு அத்தொடர் செயப்பாட்டு வினைத் தொடராக்கப்படுகிறது. 'அவை சரவணப் பொய்கையிலிடப்பட்டு வளர்ந்து வருநாளில் அவற்றை அம்பிகை ஒருங்கே எடுக்க, அவை ஓருடலாய் அமைந்தன' என்பது சரியான வாக்கியமாகிறது. சில சொற்களைப் பின்னொட்டுக்களாகவோ பின்னுருபுகளாகவோ எண்ணிப் பிற சொற்களுடன் இணைத்து எழுத வேண்டும். சேர்த்து எழுத வேண்டிய சொற்களைப் பிரித்து எழுதினால் பொருள் மயக்கம் ஏற்படும். அவ்வாறே பிரித்து எழுத வேண்டிய சொற்களைச் சேர்த்து எழுதினாலும் பொருள் மயக்கம் ஏற்படும். இவற்றைக் கவனத்தில் கொண்டு, இணைத்து எழுத வேண்டிய சொற்களாக ந.சுப்புரெட்டியார் பன்மை உணர்த்தும் கள் விகுதி, தொகைநிலைச் சொற்கள், துணைவினைச் சொற்கள், முதல் மற்றும் வரை, தொட்டு, மட்டும் போன்ற சொற்கள், ஏழாம் வேற்றுமையுருபு மற்றும் ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு என்பனவற்றைக் குறிப்பிடுகிறார். இவ்வாறே, சுட்டுகளை எவ்இடங்களில் சேர்த்து எழுத வேண்டும், எவ்இடங்களில் பிரித்து எழுத வேண்டும் என்பதையும் கவனப்படுத்துகிறார் (தமிழ் பயிற்றும் முறை, ப. 303-308).

**பொருண்மை நோக்கு**

எழுத்து, சொல் இலக்கணத் தரவுகளின் விளக்கத்தில் பொருண்மையைக் கவனத்தில் கொள்ள வேண்டியுள்ளது. பிழை திருத்தத்தில் பொருண்மை முக்கியமான பங்கு வகிக்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

'பொருளுக்கு அமைதியான சொற்கள்' என்ற தலைப்பின்கீழ் ந.சுப்புரெட்டியார் பின்வரும் சொற்கள் வழங்குமாற்றைக் கவனத்தில் கொண்டு மொழிப்பயிற்சி மேற்கொள்ளச் சொல்கிறார்.

- வருதல், தருதல் – தன்மை முன்னிலையில் வரும்
- போதல், கொடுத்தல் – படர்க்கையில் வரும்
- அழைத்தல் – மரியாதையாக வேண்டிக் கொள்ளுமிடத்துப் பயன்படுத்தப்பட வேண்டியது. '..என்று அழைக்கப்படுகின்றது' என்ற வழக்கு தவறு. '.. என்று வழங்கப்படுகிறது' எனப் பயன்படுத்தலாம்.
- ஓர் – உயிர்முன், ஒரு – மெய்முன் வரும் (தமிழ் பயிற்றும் முறை, ப. 308-309).

**வழுவமைதிகள்**

சொற்கள் மற்றும் வாக்கியத்தில் நேரும் சில பிழைகள் இலக்கணிகளால் மரபாக ஏற்றுக்கொள்ளப்பட்டும் வருகின்றன.

> **வரையறை செய்யப்பெற்ற இலக்கணத்தினின்றும் ஒரு காரணத்தான் திணை முதலிய ஏழும் வழுவி வருமிடத்து ஏற்றுக்கொள்ளுதல் வழுவமைதி எனப்படும். வழாநிலையாகக் கூறுவதற்கு வாய்ப்பின்றி வருவனவும் வழுவமைதியாகக் கொள்ளப்படும் (சொல்லிலக்கணக் கலைச்சொல் – பொருள் விளக்க அகராதி, ப. 147).**

ந.சுப்புரெட்டியார் இவற்றுள் திணை வழுவமைதி மற்றும் கால வழுவமைதிகளை எடுத்துக்காட்டுகிறார் (தமிழ் பயிற்றும் முறை, ப. 304). இது நன்னூல் நூற்பாவான,

> **திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்**
> **மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே (நன்னூல், நூ. 378)**

என்ற நூற்பாவின் கருத்தொத்து எழுதப்பட்டுள்ளது. இவ்வாறே விரைவினால் நிகழ்காலம் இறந்தகாலத்துடன் மயங்குவதை எடுத்துரைக்கிறார்.

**கட்டுரையின் பிழை திருத்தங்கள்**

கருத்துக்களைக் கோர்வையாக உரைக்குந்திறன் மொழித்திறனில் இன்றியமையாததாகும். கட்டுரை எழுதுவது மாணவருக்கு அத்திறனை மேம்படுத்தும். 'ஒரு பொருள் பற்றிய சிந்தனைகளை முறை செய்தும் வரையறுத்தும் எளிதாக எல்லாரும் தெளிந்து உணரும் வகையில் எடுத்துரைப்பது கட்டுரை.' (மொழிப்பாடம், ப. 185) என்பதால் சமூகத்திற்குத் தனது கருத்துக்களை முன்வைக்கும் தருணங்களில் இத்திறன் தேவையாகிறது. கட்டுரை எழுதுதல் பற்றி விரிவாக உரைக்கும் ந.சுப்புரெட்டியார், கட்டுரையில் என்னென்ன பிழைகள் நேர்கின்றன, எவற்றால் அப்பிழைகள் நேர்கின்றன, அப்பிழைகளைத் திருத்தும் முறை என முப்பகுதிகளையும் விவரித்துரைக்கிறார். கட்டுரையில் நேரும் சில பிழைகள்: ர-ற, ல-ள-ழ போன்ற எழுத்துப் பிழைகள், சந்திப் பிழைகள், ஒருமைப் பன்மை மயக்கம், செய்வினை – செயப்பாட்டு வினை மயக்கம், பொருண்மை மயக்கம், வாக்கிய அமைப்பில் தடுமாற்றம்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைப்பு முறை ஒழுங்கின்மை என்பன. இவ்வாறு நேரும் பிழைகளுக்கான காரணங்களை இரண்டு பிரிவுகளாக்குகிறார். அறியாமையால் ஏற்படுவன, கவனக் குறைவினால் நேரிடுவன என மாணவர்களின் இவ்விரு நிலைகளால் பிழைகள் நேரிடுகின்றன. மாணவர்களும் ஆசிரியர்களும் இணைந்து செயலாற்றினால்தான் இப்பிழைகளைக் களைய இயலும்.

**ஆரம்ப நிலைக் கற்பித்தலும் பிழை திருத்த முறைகளும்**

கற்கும் முறையிலும் கற்பித்தல் முறையிலும் இருக்கும் குறைபாடுகள்தாம் மொழியில் வழுக்கள் ஏற்பட முக்கியக் காரணங்களாகின்றன. கற்பித்தல் முறையில் பயிற்சிக்கான படிநிலைகளைச் சரியான முறையில் கடைபிடித்தால் பிழைகள் குறைய வாய்ப்புண்டு.

- பொதுவாகத் தரப்பட வேண்டிய பயிற்சி நிலைகள்
- பள்ளியில் தரப்பட வேண்டிய பயிற்சி நிலைகள்

என இரண்டையும் ந.சுப்புரெட்டியார் விவரிக்கிறார்.

> **நல்ல பேச்சுப் பழக்கம் ஏற்பட்ட பிறகுதான் சொற்களையும் சொற்றொடர்களையும் படிக்கும் பழக்கத்தைத் தருதல் வேண்டும். பிறகுதான் எழுதும் பயிற்சி தரப்பெறுதல் வேண்டும். இவ்விதம் படிப்படியாகப் பயிற்சிகள் தரப்பெறல் வேண்டும். மூன்றையும் தொடர்ந்தே கற்பிக்க வேண்டும் (தமிழ் பயிற்றும் முறை, ப. 250)**

என்று படிப்படியாக அளிக்க வேண்டிய பயிற்சிநிலைகள், அவற்றை இணைத்துத் தரவேண்டிய நிலை ஆகியனவற்றை ந. சுப்புரெட்டியார் விளக்கி உரைக்கிறார். பள்ளியில் ஒரு குழந்தை சேர்ந்த பிறகு பயிற்சி தர வேண்டிய படிநிலைகளைப் பின்வருமாறு விளக்குகிறார்.

> **சாதாரணமாகக் குழந்தைகள் பள்ளிக்கு வந்து சேர்ந்த இரண்டு அல்லது மூன்று வாரங்களில் எழுத்து வேலை தரலாம். முதல் வாரத்தில் பேச்சு, படங்கள் வைத்து விளையாடுவது; இரண்டாம் வாரத்தில் அதிகப் பேச்சு, அதிக விளையாட்டு, படங்களில் காணப்பெறும் சொற்களைப் படிப்பது, படங்களின்றிப் படிப்பது; மூன்றாம் வாரத்தில் இன்னும் அதிகப் பேச்சு, விளையாட்டு, அதிகச் சொற்களைப் படிப்பது, எழுதத் தொடங்குவது என்றவாறு நடைமுறைத் திட்டங்களை அமைத்துக் கொள்ளலாம் (தமிழ் பயிற்றும் முறை, ப. 253).**

இவ்வாறான படிநிலைக் கற்பித்தல் மாணவரிடத்துப் பிழையற்ற தொடர்களை உருவாக்க உதவிபுரியும். ஆரம்ப நிலை எழுத்துப் பயிற்சிகளென நடைமுறையில் கையாளப்பெற்று வருவனவாகப் பார்த்து எழுதுதல், அச்சிட்ட பயிற்சி ஏடுகளில் எழுதுதல், சொல்லுவதை எழுதுதல் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார்.

மாணவர்கள் பிழையற எழுதுவதற்கான பயிற்சிகளுள் அவசியமான முறையாகச் ‘சொல்லுவதை எழுதுதல்’ முறையைக் கருதுகிறார். இதனால் மாணவர்கள் பிழையின்றி எழுதுகின்றனரா என்று சோதித்து அதன்வழி பயிற்சிதர இம்முறை முக்கியமானதாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைகிறது. இம்முறையில் இருக்கும் குறைபாடுகளையும் ‘எழுத்துப் பிழைகளை நீக்கும் முறை’ பகுதியில் எடுத்துரைக்கிறார். புதிய சொற்களின் எழுத்துக் கூட்டறிவைக் கற்பிக்க இது சரியான வழியாக அமைவதில்லை என்று கருத்துரைப்பவர், அதற்கான காரணமாக ‘இதில் பலமுறை பிழையாக எழுதிப் பழகிவிட்டால் அப்பிழைகளே மனத்திற் படிந்துவிடவும் இடமுண்டு,’ (தமிழ் பயிற்றும் முறை, ப. 270) என்பதனைக் கூறுகிறார். கீழ் வகுப்புகளுக்குரிய ஒரு முறையாகத்தான் ‘சொல்லுவதை எழுதுதல்’ முறை அவரால் குறிப்பிடப்படுகிறது.

தொடர்ச்சியான பயிற்சிகள் தாய்மொழியாளரான மாணவருக்கு ஏற்கெனவே உள்ளுணர்வாக இருக்கக்கூடிய மொழி அறிவினை வெளிப்படுத்திச் சிந்திக்க வைக்கும்.

> **உணர்வுத்தளத்தில் இருப்பதை அறிவுத்தளத்திற்குக் கொண்டு சென்று பார்ப்பதன் மூலம் உணர்வுத்தளத்தில் உள்ளுணர்வு ஒலி – ஒளி வாங்கி (antenna) போல் இயங்கத் தொடங்கிவிடுகிறது. உள்ளுணர்வு மெலிதாக உணர்த்துவதையும் அலட்சியம் செய்துவிடக் கூடாது. (சொல்வலை வேட்டுவன், ப. 370)**

என மொழிக் கற்றலில் உள்ளுணர்வுக்கான முக்கியத்துவம் கூறப்படுகிறது. பயிற்சியின்போது மாறுபட்ட வடிவங்களை எழுத நேர்ந்தால் மாணவர்களின் உள்ளுணர்வு அவ்வடிவத்தை ஏற்றுக்கொள்வதில் தயக்கம் காட்டும். எனவே சரியான வடிவத்திற்கான தேடல் தொடங்கும்.

**பிழை திருத்த உத்திகள்**

பிழை திருத்தத்திற்காக மாணவர்களிடத்துப் பயன்படுத்தப்பட வேண்டிய சில உத்திகள் ந.சுப்புரெட்டியாரால் குறிப்பிடப்படுகின்றன.

- விளையாட்டுகள்
- படங்கள்

எழுத்துக் கூட்டு விளையாட்டின்வழி மாணவர்களிடத்துப் பிழையின்றி எழுதக் கற்பிக்கலாம். மாணாக்கரின் விருப்பத்திற்குரிய முறையில் இக்கற்றல் முறை நிகழும். அவ்விளையாட்டுகளில் சிலவாக, பேருக்கு ஓர் எழுத்தாகச் சொல்லிச் சொற்களை உண்டாக்கல், எழுத்து அட்டைகளைக் கொண்டு சொற்களைக் கட்டுதல், சொல்லேணிகளை அமைத்தல், ஒரு சொல்லைக் கூறி அச்சொல்லிலுள்ள எழுத்துக்களைக் கொண்டே வேறு பல சொற்களை உண்டாக்குதல், சொல்லின் இறுதி எழுத்தை முதல் எழுத்தாகக் கொண்டு சொற்களை உண்டாக்கல் போன்றவை ஆசிரியரால் குறிப்பிடப்பட்டுள்ளன. எழுத்தொலிகளைக் கற்பிக்கும்போது படங்களைப் பயன்படுத்துவதை முக்கியமான உத்தியாகக் குறிப்பிடுகிறார். குறிப்பாக, ரகர - றகர, லகர – ழகர – ளகர, நகர – ணகர – னகரங்கள் போன்ற ஒலிகளை உச்சரிக்கும்போது நாவின் நிலைகளைப் படங்களின் வாயிலாகக் கற்பிக்க வேண்டும். நல்ல வண்ணம் தீட்டிய படங்களை இதற்காகப் பயன்படுத்துதல் எளிதில் புரியவைக்க உதவும் (தமிழ் பயிற்றும் முறை, ப. 272).

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஆசிரியர் பங்களிப்பு**

ஒரு சமூகம் பிழையின்றி மொழியை எழுத ஆசிரியர்களின் பங்கு முதன்மையானது என்பதை ந.சுப்புரெட்டியார் உணர்ந்து உணர்த்தியபடி இருக்கிறார். ஆசிரியர்கள் மாணாக்கர் ஏற்படுத்தும் பிழைநிலைகளைத் தொகுத்து வைத்து அறிவுறுத்தல் அவர்களின் முக்கிய பணியாகக் குறிப்பிடப்படுகிறது. தமிழாசிரியர்கள் செய்யாமல் விடுபட்டனவற்றையும் சுட்டிக்காட்டுகிறார். அகராதிகள் எழுத்துப் பிழை இன்றி எழுதுவதற்கு மிகவும் துணை புரியும். ஆனால் மாணவர்கள் அகராதியை வைத்துக்கொள்வதில்லை. தமிழாசிரியர்கள் இதை வற்புறுத்தாததை ந.சுப்புரெட்டியார் சுட்டிக்காட்டுகிறார். ஆசிரியர்கள் மாணவர்கள் செய்யும் பிழைகளைக் கரும்பலகையில் எழுதிக் காட்டிச் சுட்டிக் காட்ட வேண்டும். அவ்வாறு கரும்பலகையில் எழுதும்போது சரியான சொற்களை மட்டும் கரும்பலகையில் எழுதிவிட்டு, தவறான சொற்களை வாயினால் சொல்லிக் காட்டினால் போதுமானது. இரண்டையும் எழுதிக் காட்டினால் தவறான சொற்கள் மாணவர்கள் மனதில் பதிந்துவிட வாய்ப்பிருக்கிறது என்பது இவர் கருத்தாக அமைகிறது. பிழை களைதலில் தமிழாசிரியர்கள் மட்டும் ஈடுபட்டால் போதாது. தமிழில் பாடங்களைக் கற்பிக்கும் அனைத்து ஆசிரியர்களும் மாணவர்களின் மொழிப் பிழைகளை நீக்க வேண்டிய கடமை உள்ளவர்களாகிறார்கள் (தமிழ் பயிற்றும் முறை, ப. 269-271). மேலும் பிழை திருத்தத்திற்குச் சில குறியீடுகளைக் கையாளுவது மாணாக்கரின் சிந்தனையைத் தூண்டும் என்று அவற்றைப் பட்டியலிட்டிருக்கிறார் (தமிழ் பயிற்றும் முறை, ப. 340).

**சான்றுகள்:** எ.பி - எழுத்துப்பிழை

த.ந. - தமிழ் நடை நன்றாக இல்லை

**தொகுப்புரை**

தமிழ்ச் சமூகம் தன் மொழியைத் தவறான முறையில் கையாண்டுவிடக் கூடாது என்ற நோக்கத்துடன் ந.சுப்புரெட்டியார் தனது கருத்துக்களை முன்வைத்துள்ளார். எழுத்துப் பிழைகளினால் ஒருவரது அறிவு குறைவாக மதிப்பிட்டுவிடக்கூடும். ஆரம்பநிலைக் கற்பித்தலின்போதே பிழை நேரும் இடங்களைக் கணித்து அவற்றை நீக்கி எழுதுவதற்கான பயிற்சிகளை அளிக்க வேண்டும். பேச்சு வழக்கு, தனி நபர்களின் உச்சரிப்பு, இலக்கண அறியாமை, கவனக் குறைவு ஆகியவற்றின் காரணமாகச் சொற்கள் தவறாக எழுதப்படுகின்றன. அப்பிழைகளைப் பட்டியலிட்டுக் காட்டும் ந.சுப்புரெட்டியார் அவற்றைக் களையும் வழிமுறைகளை உத்திகளோடு இணைத்துக் கூறியுள்ளார். ஒரு மொழியின் தூய்மையான பயன்பாட்டிற்கு ஆசிரியர்களின் பங்களிப்பு மிகவும் முதன்மையானது என்பதை வலியுறுத்துகிறார். தமிழ் மொழியில் ஆழ்ந்த திறன் கொண்டு விளங்கும் ந.சுப்புரெட்டியார் அடுத்த தலைமுறையினருக்குத் தமிழ் பிழையற்ற வகையில் கொண்டு செல்லப்பட வேண்டும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற சிந்தனை உடையவராயிருந்திருக்கிறார். தமிழ்மொழியின் வளர்ச்சிக்கேற்ற நூல்களை வெளியிட்டு மொழியின்வழி தமிழ்ப் பண்பாட்டை வளப்படுத்துவதற்குத் தனது அறிவுப் புலமையினைப் பயன்படுத்தியிருக்கிறார்.

**குறிப்பு நூல்கள்**

[1] ச. அகத்தியலிங்கம். *தமிழ்மொழி அமைப்பியல்.* மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2002.
[2] செ.வை.சண்முகம். *இலக்கண உருவாக்கம்.* அடையாளம் பதிப்பகம், திருச்சி, இரண்டாம் பதிப்பு 2012.
[3] பா. ரா. சுப்பிரமணியன். *சொல்வலை வேட்டுவன்.* கயல்கவின் புக்ஸ், சென்னை, 2009.
[4] பா.ரா.சுப்பிரமணியன், (ப.ஆ.). *சொல் வழக்குக் கையேடு.* அடையாளம் பதிப்பகம், திருச்சி, மறுபதிப்பு 2010.
[5] ந. சுப்புரெட்டியார். *தமிழ் பயிற்றும் முறை.* மணிவாசகர் நூலகம், சிதம்பரம், மூன்றாம் பதிப்பு 1980.
[6] சேனாவரையர் (உ.ஆ.). *தொல்காப்பியம்-சொல்லதிகாரம்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1923.
[7] நுஃமான். *அடிப்படைத் தமிழ் இலக்கணம்.* அடையாளம் பதிப்பகம், திருச்சி, 2007.
[8] அ.கி.பரந்தாமனார். *நல்ல தமிழ் எழுத வேண்டுமா.* மலர் நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு 1957.
[9] கு.பரமசிவம். *இக்காலத் தமிழ் மரபு.* அடையாளம் பதிப்பகம், திருச்சி, 2011.
[10] ச.பாலசுந்தரம். *சொல்லிலக்கணக் கலைச்சொல் – பொருள் விளக்க அகராதி.* தாமரை வெளியீட்டகம், தஞ்சாவூர், 1998.
[11] பொற்கோ. *இலக்கண உலகில் புதிய பார்வை, தொகுதி 2.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு 2005.
[12] மயிலைநாதர் (உ.ஆ.). *நன்னூல் மூலமும் மயிலைநாதருரையும்.* உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1995.
[13] மருதூர் அரங்கராசன். *தவறின்றித் தமிழ் எழுத.* ஐந்திணை பதிப்பகம், சென்னை, 2004,
[14] வரதராசனார், மு. *மொழி நூல்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, முதல் பதிப்பு 1947, மறுபதிப்பு 2003.
[15] வளன் அரசு, பா. தமிழ்க் கட்டுரைப் பயிற்சி தேவையா? (கட்.). அறவாணன்.க.ப. (ப.ஆ.). *மொழிப்பாடம்.* தமிழ்க் கோட்டம், சென்னை, 1988.

**References**

[1] S. Agathiyalingam. *Tamilmozhi Amaippiyal.* Meyyappan Thamizhaivagam, Chidamparam, 2002.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[2] S. V. Shanmugam. *Ilakkana Uruvakkam*. Adaiyalam Publishers, Trichy, Second Edition, 2012.
[3] P. R. Subramaniyan. *Solvalai Vettuvan*. Kayalkavin publishers, Chennai, 2009.
[4] P. R. Subramaniyan (Editor). *Sol Vazhakku Kaiyedu.* Adaiyalam Publishers, Trichy, Re Edition 2010.
[5] N. Subbu Reddiar. *Tamil Payitrum Murai.* Manivasagar Noolagam, Chidamparam, Third Edition 1980.
[6] Senavaraiyar (commentator). *Tholkaapiyam – Sollathikaram.* Thirunelveli Saiva Siththantha Noorpathippu Kazhagam, Chennai, 1923.
[7] Nuhmann. *Adippadai Tamil Ilakkanam*. Adaiyalam Pathippagam, Trichy, 2007.
[8] A.K.Paranthamanar. *Nalla Tamil Ezhutha Venduma*. Malar Nilayam, Chennai, Second Edition 1957.
[9] K. Paramasivam. *Ikkala Tamil Marabu*. Adaiyalam Pathippagam, Trichy, 2011.
[10] S. Balasundharam. *Sollilakkanak Kalaichol – Porul Vilakka Agarathi*. Thamarai Publishers, Thanjavur, 1998.
[11] Porko. *Ilakkana Ulagil Puthiya Paarvai, Volume 2.* New Century Book House, Chennai, Third Edition 2005.
[12] Mayilainathar (commentator). *Nannool Moolamum Mayilainaatharuraiyum*. U.Ve. Saminathaiyar Nool Nilaiyam, Chennai, 1995.
[13] Maruthoor Arangarasan. *Thavarindri Tamil Ezhutha.* Inthinai Pathippagam, Chennai, 2004.
[14] Varatharasanar, M. *Mozhi Nool*. Thirunelveli Saiva siththantha noorpathippu kazhagam, Chennai, First Edition 1947, Re Edition 2003.
[15] P. Valan Arasu. "Tamil Katturai Payirchi Thevaiya?" Aravanan. Ka. Pa., (Editor). *Mozhipaadam,* Tamilkottam, Chennai, 1988.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 | UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 | Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் கல்வி உளவியல் கோட்பாடுகளின் வழி சிறாரியம்

## N. Subbu Reddiar's Principles of Educational Psychology in the Perspective of Children

**அ. இந்துமதி**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.
**A. Indumathi**, Assisant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-5382-7675**
**DOI: 10.5281/zenodo.7251368**

**Abstract**

*N. Subbu Reddiar's love and involvement in education and educating children can be found in the book "Kalvi Ulaviyalin Koatpaaadugal" (The Principles of Educational Psychology). Through this book, we can know his concern for the future of society. This can be deduced from the fact that the entire book is carefully addressed to children under each heading. It also explains how a teacher dealing with children should act with examples. It also establishes that an excellent teacher is the only way to better explain the interpretations of education, psychology, etc. In the nature and measurement of psychology, the researcher finds that measurement is a new interpretation of N. Subbu Reddiar's logical thinking. His understanding of the relationship between psychology and educational psychology, and the purpose for which educational psychology is well established, enables one to understand his subtle field by interpreting the relationship psychology has with other disciplines. His knowledge in the field of science shows him as a scientist in the areas of man and circumstance, psychology and physiology. It explains the different age-based divisions, learning, modules involved in learning, types of learning, specialization of stimuli, individual differences, abnormal behaviors, etc., each with a clear understanding of the mass defects and discipline assessments and their way. Subbu Reddiar makes better instruction on the conditions that occur among children at certain educational levels.*

**Keywords:** Subbu Reddiar, *Educational Psychology, Childhood, Learning Development.*

**ஆய்வுச்சுருக்கம்**

*ந. சுப்புரெட்டியார் "கல்வி உளவியல் கோட்பாடுகள்" என்ற நூலின் வழி கல்வியின் மீதும் கல்வி கற்கும் சிறார்களின் மீதும் சுப்புரெட்டியார் கொண்ட அன்பையும் ஈடுபாட்டையும் காண முடிகிறது. அதன்வழி எதிர்கால சமூகத்தின் மீது அவர் கொண்ட அக்கறையை இந்நூலின் வழி நெடுக அறிய முடிகிறது. இந்நூல் முழுமையும் ஒவ்வொரு தலைப்பின் கீழும் சிறார்களுக்கு என்று தனித்த நிலையில் கவனத்துடன் செய்தி சொல்லப்பட்டு இருப்பதில் இருந்து இதனை அறிய முடிகிறது. சிறார்களைக் கையாளும் ஆசிரியர் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதையும் தேவையான இடங்களில் தேவையான எடுத்துக்காட்டுகளின் வழி பேராசிரியர் விளக்குகிறார். கல்வி, உளவியல் போன்றவற்றின் விளக்கங்களை எளிய முறையில் சிறப்பாக விளக்குவதன் வழி தான் ஒரு மிகச்சிறந்த ஆசிரியர் என்பதை நிறுவுகிறார். உளவியலின் இயல்பும் அளவீயலும் என்பதில் அளவீடு என்பது தத்துவார்த்த சிந்தனை (logic)*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*என்பது ந.சுப்புரெட்டியாரின் புதுவித விளக்கமாய் அமைவதாகவே காண்கிறேன். உளவியலுக்கும் கல்வி உளவியலுக்கும் உள்ள தொடர்பை சிறப்பாக விளக்குகிறார். கல்வி உளவியலின் நோக்கத்தையும் சிறப்பாக அமைத்து ஏனைய பிற துறைகளோடு உளவியல் கொண்டுள்ள தொடர்பை விளக்குகிறார் இதன் வழி அவரது நுண்மான் நுழைபுலத்தை அறிய இயலுகிறது. மனிதனும் சூழ்நிலையும் எவ்வாறு சிறார்களின் வளர்ச்சிக்கு அவசியமானது என்பதையும், உளவியலும் உடல் நலவியலும் என்ற பகுதிகளின் வழியே உடலியல் சார்ந்த அறிவியல் துறை செய்திகள் அவரை அறிவியல் அறிஞராகவே காட்டுகிறது. பல்வேறு வயது நிலை சார்ந்த பிரிவினைகள், கற்றல், கற்பித்தல், கற்றலில் அடங்கியுள்ள மூலக்கூறுகள், கற்றலின் வகைகள், ஊக்கத்தின் சிறப்பு, தனியாள் வேற்றுமைகள், இயல்பு பிறழ்வு நடத்தை போன்றவற்றையும் அவை ஒவ்வொன்றின் நிறை குறைகளையும் தெளிவற உணர்த்துவதோடு ஒழுக்கம் மதிப்பீடுகள் அதன் வழியான சோதனைகள் போன்றவற்றையும் தெளிவுறுத்துகிறார். இவை ஒவ்வொன்றும் சிறார்களிடையே ஏற்படுத்தும் பல்வேறு நிலைகளை சிறப்பாக அறிவுறுத்தி நம்மை அறியச் செய்கிறார். சிறார்களின் எதிர்கால வாழ்வை சிறப்புற அமைக்க இவ்வறிவு உதவுவதோடு சமூக மேம்பாட்டிற்கான மிகச்சிறந்த வழியாக அமையும் என்பதையும் இக்கட்டுரை ஆய்வு தெளிவுப் படுத்துகிறது.*

**குறிப்புச்சொற்கள்:** ந. சுப்புரெட்டியார், கல்வி உளவியல், சிறார், கற்றல் மேம்பாடு.

**முன்னுரை**

"கல்வி உளவியல் கோட்பாடுகள்" வழி சிறாரிடம் நாம் ஏற்படுத்த வேண்டிய நல்லொழுக்க சிந்தனைகளை குறித்து அறிய வேண்டியதையும் அவற்றின் வழி இச்சமூகம் பயனுற அமைய வேண்டிய வழிமுறைகளையும் ந. சுப்புரெட்டியாரின் நூல் வழி அறிய முடிகிறது. இதன் வழி சிறார்களிடம் மிகுந்த ஈடுப்பாட்டைக் கொண்டவர் சுப்புரெட்டியார் என்பதையும் அறிய முடிகிறது. சிறார்களின் வயது நிலை, அதற்கேற்ப கொடுக்கப்பட வேண்டிய பயிற்சிகள் போன்றவற்றை சிறார்களுக்கு கற்பிக்கும் ஆசிரியர் அறிவதன் வழி மாணக்கரின் மனம் அறிந்து சிறப்புற செயல்பட உதவும் என்பதை நிறுவுகிறார். எல்லா பாடங்களையும் மாணவர் விரும்பும் வண்ணம் எடுக்க வேண்டும் என்ற அவரது அவாவையும் அவரது உள்ளக்கிடக்கையையும் அவரது எழுத்து உணர்த்துகிறது.

**கல்வி**

கல்வி என்பது ஒருவருக்கு ஊட்டக்கூடிய பொருள் அன்று. அஃதை அவனே அடைதல் வேண்டும் என்கிறார் ந. சுப்புரெட்டியார். சுவாமி விவேகானந்தரும் கல்வி என்பது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஒருவருக்குள் புதைந்திருக்கும் ஆற்றலை வெளிக்கொணர்வது என்கிறார். இக்கல்வியின் சிறப்பை,

**உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே (புறநானூறு, பா. 183)**

என்ற புறநானூற்று வரிகள் நமக்கு மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறது. இத்தகைய கல்வியும் இன்றையக் கல்வி ஆராய்ச்சிகளும், மக்களைப் பற்றிப் பிறத் துறை வல்லுனர் உணர்த்தியதனால் அறிந்தனவும் கல்வியானது மக்களின் நடத்தையை மாற்றும் ஒரு செயல்முறை என்பதையே காட்டுகின்றன என்கிறார் பேராசிரியர். இவர் கல்வியில் மூன்று அடிப்படை கூறுகள் உள்ளன என்கிறார். அவை தனியாள், சூழ்நிலை, தனியாளுக்கும் சூழ்நிலைக்குமான இடைவெளி எனக் குறிப்பிடுகிறார். இம்மூன்று அடிப்படை கூறுகளை அறிந்தால் கல்வியின் இலக்கணத்தை அறிந்தவராவோம் என்கிறார். அதாவது கல்வியின் இலக்கணம் என்பது ஒருவரை வாழ்க்கைக்குப் பொருத்தமுறுதற் பொருட்டு மாற்றம் செய்வதே என்கிறார்.

**உளவியல்**

நூல்களை பிரிக்கும் நிலையை ந. சுப்புரெட்டியார் அறநூல், அளவைநூல், இருப்புநிலை நூல், எழிலியல் நூல் என்று வகைப்படுத்துகிறார். இதனுள் உளவியல் என்பது இருப்புநிலை எனப்படும். இருப்புநிலை நூல் என்பதில் (1) கட்டுப்படுத்தப்பட்ட உற்று நோக்கலால் தகவல்களை திரட்டி அவற்றை ஒரு பிரச்சனையாக கொள்வது (2) கருதுகோள் அமைத்தல். (3) கருதுகோளுக்கு ஏற்றத் தகவல் திரட்டி புள்ளி விவரத்தோடு விளக்குதல் (4) பொதுவிதி உண்டாக்குதல் (5) புதியவற்றில் நிகழ்வில் பொருத்தி பொதுவிதியை பார்த்தல் என அமையக் கூடியவை என்கிறார். மொத்தத்தில் உளவியல் என்பது அனுபவம், மனித செயல், அவற்றின் இயல்புகளை முறைப்படுத்திக் கோவை செய்து வெளியிடுவதே உளவியல் என்கிறோம் என்கிறார். பெரியவர்களின் செயல்களை விளக்குவது பொது உளவியல் என்றும் கூறுகிறார். ஆசிரியர் கி. நாகராஜன் அவர்கள் மனிதனின் புறச்செயல்களை உற்றுநோக்கி முறையாக ஆராய்ந்து அறிந்து அதன் மூலம் அவை, எங்ஙனம் அகத்தே நிகழும் சிந்தனை ஓட்டங்களுடன் தொடர்பு கொண்டுள்ளன என்றும், சுற்றுச்சூழலில் ஏற்படும் நிகழ்வுகளால் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்றும் விளக்குவதே உளவியலாகும் என்று ந.சுப்புரெட்டியாரின் கருத்தை அடியொற்றிய கருத்தை வழங்கி இருப்பதையும் அறியலாம்.

**கல்வி உளவியல்**

கல்விக்கும் உளவியலுக்கும் உள்ள தொடர்பையும் அதன் பயனையும் இப்பகுதியில் காணலாம். அமனிஷ்வீலி அவர்கள்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குழந்தைகளின் ஆழ்ந்த உள்ளாற்றல்களை வெளிப்படுத்தி, வளர்க்க வல்ல கல்வி போதிக்கும் முறை எவ்வளவுக்கெவ்வளவு செயல் முனைப்போடு புதுப்பிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது மனிதாபிமானம் மிக்கதாய், எதிர்கால நம்பிக்கையுள்ளதாய், மகிழ்ச்சிகரமானதாய் மாறும். (அமனிஷ்வீலி குழந்தைகள் வாழ்க, பக் 194)**

என்கிறார். அமனிஷ்வீலி குறிப்பிட்டதைப்போல் மனிதம் மிக்கதாய் எதிர் கால நம்பிக்கையுள்ளதாய், மகிழ்ச்சிகரமானதாய் கல்வி அமைய கல்வி உளவியல் அறிவு ஆசிரியருக்கு அவசியமாகிறது. அத்தகு கல்வி உளவியல் என்பது குழந்தைகள், இளைஞர்கள், வளர்ந்தவர்கள் போன்ற யாவரும் கற்கும் நிகழ்ச்சிகளில் தோன்றும் செயல்களை எடுத்து உரைக்கின்ற உளவியல் என்கிறார் பேராசிரியர். கற்றலின் இயல்பு, கற்றலின் வகைகள், கற்றலின் முறைகள், சாதகமான ஏதுக்கள், கற்றலின் போக்கு போன்றவற்றை விளக்குவது என்கிறார். மேலும் பேராசிரியர் கல்வி உளவியல் என்பது பொது உளவியலுக்கும் – கல்விக் கலைக்கும் இடைப்பட்ட துறை என்று வழங்குவதில் தவறில்லை என்று கூறுகிறார். கல்வி உளவியல் குழந்தையின் பட்டறிவு, செயல்கள், ஆகியவற்றைக் கொண்டு அவனைச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு பொருத்தமுறச் செய்வதில் துணை நிற்கின்றது. மக்கள் கற்கக் கூடும். கற்கத்தான் செய்கின்றனர். எனினும் ஒழுங்காகவும் பயனுடனும் கற்க உளவியல் அறிவு வேண்டும் என முன்மொழிகிறார் ந.சுப்புரெட்டியார். மேலும், கல்வி உளவியல் என்பது ஆசிரியருக்கு, பயிற்றும் பொருட்களையும் பயிற்றும் முறைகளையும் ஒரு கட்டுபாட்டிற்குள் கொண்டு செலுத்த முடிவதாய் அமைகிறது என்கிறார் பேராசிரியர். கல்வி உளவியல் மக்களிடையே பழக்கங்களையும் நல்லனவற்றின் மீதான பற்றுகளையும் உண்டாக்க உதவுகிறது. தம்மைத் தாமே சரியாக உணரவும் மதிப்பிடவும் உதவுகிறது என்பதையும் தெளிவுறுத்துகிறார் ஆசிரியர்.

**சிறார்களின் வயது பிரிவு நிலை**

சிறார்களின் வயது பிரிவு நிலை என்பது பொதுவாக பல்வேறு நிலைகளில் அமைகிறது. ஒவ்வொரு சட்டம், கலாச்சாரம், பண்பாடு நிலை சார்ந்தும் பிரிக்கிறோம் எனினும் பொதுவில் பார்க்கும் பொழுது 18 வயதிற்கு உட்பட்டவர் அனைவரும் சிறார் என்பதே மிகச் சரியாதனதாகும்.

**1992 டிச 11 அன்று இந்திய அரசு ஐ.நா சபையின் குழந்தைகள் உரிமைகள் மீதான உடன்படிக்கையையும் அதிலுள்ள விதிகளையும் ஏற்றுக்கொள்வதாக ஐ.நா சபைக்கு உறுதியளித்தது. அந்த உடன்படிக்கையின் படி முதல் விதியானது 18 வயது நிறைவடையாத அனைவரும் குழந்தைகள் என்பதாகும். எனவே இந்திய நாட்டிலுள்ள 18 வயது நிறைவடையாத அனைவரும் குழந்தைகள் என்பதை இந்திய அரசு தனது**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சட்டங்களிலும் உறுதி செய்திருக்கிறது. (குழந்தை நல காவல் அலுவலர்களுக்கான தகவல் திரட்டு, ப. 5)**

சட்டத் திட்டத்தின்படியே ஆசிரியர் ந.சுப்புரெட்டியார் உளவியல் பகுப்பு படுத்தியதாக குறிப்பிடும் வயது நிலையும் அமைவதைக் காணமுடிகிறது. ந.சுப்புரெட்டியார் சிறார்களின் வயது பிரிவு நிலையை பற்றிக் குறிப்பிடும் பொழுது குழந்தையின் வளர்ச்சி தொடர்ச்சியாக இருந்தாலும் அதில் சில முக்கியமான பருவங்களை உளவியலறிஞர்கள் பகுத்துப் பேசுவர். அவைகள் என்று குறிப்பட்டு பின்வரும் இப்பட்டியலை தருகிறார்.

| பருவம் | வயது | வளர்ச்சி |
|---|---|---|
| குழவிப் பருவம் | 0 முதல் 3 வயது வரை | |
| முன் பிள்ளைப் பருவம் | 3 முதல் 6(அ)7 வயது வரை | உடல் வளர்ச்சிக்கு உரியது |
| பின் பிள்ளைப் பருவம் | 7(அ) 8 வயது முதல் 12 வயது வரை | மன வளர்ச்சிக்கு உரியது |
| முன் குமரப் பருவம் | 12 முதல் 14 வயது வரை | உடல் வளர்ச்சிக்கு உரியது |
| பின் குமரப் பருவம் | 14 முதல் 18 வயது வரை | மன வளர்ச்சிக்கு உரியது |

பேராசிரியர் மேலும் இவற்றில் உடல் வளர்ச்சி என்பது ஒவ்வொரு குழந்தையின் குடும்பம், சூழல், அமைப்பு போன்றவற்றை பொறுத்து மாறுபடும் என்பதையும் வயதுக்கு ஏற்ற மன வளர்ச்சி என்பது குடும்பம் சூழல் என்ற இவ்விரண்டை பொறுத்து மாறுபடும் என்பதையும் தனித்து காட்டுகிறார். குழந்தைகளின் வளர்ச்சி படிநிலைகள் என்று குறிப்பிட்டு 0 முதல் 18 என்று பேராசிரியர் கொண்டிருப்பதில் இருந்து இந்நூல் முழுமையும் குழந்தை, சிறார், மாணவர், என்ற குறிப்புச் சொற்கள் ஒரே பொருளைத் தருகின்றன என்பதை தெளிவாக உணர முடிவதை நாம் காணலாம். எனினும் குழந்தை, சிறார் (அ) மாணவர் என சில இடங்களில் நிலைக்கு ஏற்றார் போலப் பிரித்துப் பேசுவதை நூல் முழுவதும் காண முடிகிறது. பொதுவில் காணும் பொழுது பள்ளிச் செல்லும் வயதினை உடையவரையே சிறார் என்போம் என்பதால் சிறார் என்பதையும் மாணவர் என்பதையும் ஒன்றாக எண்ணத் துணிகிறது ஆய்வு. குழவிப் பருவத்தில் உண்ணுதல், உறங்குதல், கழிவுப் பொருள்களை அகற்றுதல் போன்ற உடல் நலத்துடன் தொடர்பு கொண்ட செயல்களில் நற்பழக்கங்களை வளர்க்க வேண்டும் என்கிறார் பேராசிரியர்.

முன்பிள்ளை பருவத்தில் குழந்தைகளின் ஆற்றல் வெளிப்படுவதற்கும் கற்பனை செய்வதற்கும் ஏற்ற வாய்ப்புகளை நல்குதல் வேண்டும். மனவிருப்பம், பாவனை, விளையாட்டு, பகற்கனவு போன்றவை மேம்படும் என்பதால் இப்பருவத்தை ஆசிரியர் மிகச் சரியாகக் கையாண்டால் சிறார்களுக்கு முருகுணர் கலையாகவும், நல்ல நடத்தையாகவும், வரன்முறையான சீரிய

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பழக்கங்களாகவும் வளரும் என்கிறார். இப்பருவத்தில் நீண்ட பாடவேளைகள் கூடா என்றும் கூறுகிறார் ஆசிரியர். ஏனெனில் இயக்க நிலையும் இருப்பு நிலையும் இப்பருவத்தில் மாறி மாறி அமைய வேண்டும் என்கிறார்.

நிலைமாறு பருவத்தில் கற்பனை மிகவும் வீறுடன் விளங்குகின்றது. நாடகக் கற்பனை மனத்தைக் கவர்கின்றது. இப்பொழுது சிறு நாடகத்தைப் படித்து நடிக்கத் தூண்டலாம் என்கிறார். பின் பிள்ளைப் பருவத்தில் சிறாரின் மனவளர்ச்சியைக் குறித்தும் அவன் சமூகத்தில் பழகுவதைக் குறித்தும் ஆசிரியர் கவனிக்க வேண்டியவராகிறார். இந்தப்பருவச் சிறார் தம் சொல்லைக் கேட்கவில்லை என்று சதா பெற்றோர் குறைக் கூறிக் கொண்டே இருப்பர். இது மிகவும் தவறான செயல். இப்பொழுதுதான் அவர்கள் வெளியுலகைப் பற்றி அறிந்துக் கொள்ள விழைக்கின்றனர் என்கிறார். தன் வேலையை தாமே திறனாயும் திறன் பெறுவதால் சிறிய பொறுப்புகளைத் தரலாம் என்பதோடு இப்பருவத்தில் குழு உணர்ச்சி மேலோங்கி காணப்படுவதால் இவ்வுணர்ச்சியை சிறப்பான முறையில் பயன்படுத்த வேண்டும். தவறவிட்டால் மிகப்பெரிய கேட்டினை விளைவிக்கும் என்றும் எச்சரிக்கிறார் பேராசிரியர். பின் குமரப்பருவத்தில் அறிவு வளர்ச்சியும் செயல்களும் மேம்பாடு அடைகின்றன. சமூக முன்னேற்றம் குறித்த அறிவு வளர்கிறது. உடல் மாறுபாடுகளால் ஏற்படும் உள் விளைவுகளையும் அதற்கு ஏற்ற பொருத்தபாடுகளையும் இப்பருவத்தில் சிறார் அடைகின்றனர். இப்பருவ இனப்பெருக்க உறுப்புகளின் வளர்ச்சி பாலின ஈர்ப்பால் காதல் உணர்வு பிறக்கிறது. சுருக்கமாகக் கூறினால் ஆண்களும் பெண்களும் பக்குவ நிலையை எய்துகின்றனர். காலம், பால், தட்பவெப்ப நிலை, இனம், வாழ்க்கைச் சூழ்நிலை, பகுத்தறிவு முதலிய பலவற்றால் இந்நிலையில் சிற்சில வேறுபாடுகள் ஏற்படுகின்றது என்கிறார் ந. சுப்புரெட்டியார். இந்த நெருக்கடியான பருவத்தில் ஆசிரியரும் பெற்றோரும் அறிவுடன் கூடிய ஒத்துணர்ச்சியைக் காண்பிக்க வேண்டும் என்று கூறி சில நினைவு குறிப்புகளையும் கொடுக்கிறார்.

- உடலுக்கோ, உள்ளத்திற்கோ அதித வேலை அளிக்க கூடாது.
- களைப்பையும் சோம்பலையும் (மடியையும்) வேறுபடுத்தி அறிதல் அவசியமாகும்.
- அறிவு வளர்ச்சிக்கும் சமூக வளர்ச்சிக்கும் இப்பருவம் முக்கியமானது.

இசை, ஓவியம், வண்ணவேலை, கற்பனை வன்மை, தையல், இலக்கியம், சேவை போன்ற ஆக்க வேலைகளில் ஈடுப்படுத்தலாம். மாணவர்களை உயர்மடை மாற்றம் செய்யலாம் என்பதையும் விளக்குகிறார்.

**சிறார்களின் வளர்ச்சி**

சிறுவர்களும் சிறுமிகளும் முதன் முதலாக சமவயதினர் உடன் சேர்ந்து விளையாடுகிறார்கள். அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு தலை காட்டுவதில்லை. பள்ளியில் சேர்வதற்கு முன்னும் தொடக்க நிலைப் பள்ளி முதல் ஆண்டிலும் இருபாலரும் சேர்ந்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விளையாடுகின்றனர். பழக்க வழக்கங்களாலும் பெரிய பிள்ளைகள் தடுத்தால் அன்றி ஒரு குழந்தை பெரும்பாலும் எதிர் பாலினத்தார்களால் அமைக்கப்பெற்ற குழுவில் சேர்ந்து விளையாடத் தயங்குவதில்லை என்று கூறுகிறார் ந.சுப்புரெட்டியார். ஏறக்குறைய பன்னிரண்டு வயதில் குமரப்பருவம் தலை காட்டுகின்றது. இப்பருவத்தில் சமூகப்பண்பு வளர்ச்சி சிறந்தோங்கும். இப்பருவத்தில் உரிமை அறிதல், எதிர்பால் கவர்ச்சி, சமூகத்தொண்டு போன்றவை தனித்து விளங்குவதைக் காணலாம். மேலும், இப்பருவத்தில் விளையாட்டுகள், விழாக்கள், குழுக்கள், கழகங்கள், சுற்றுலாக்கள், சாரணர்படை போன்றவை தன்னலம் கருதாது குழு கிளர்ச்சியை உண்டாக்கி அக்குழுக்களின் நோக்கத்தை வளர்க்கின்றன என்பதையும் தெளிவுறுத்துகிறார். அதாவது தாய் நாட்டுப்பற்று, அனைத்து நாட்டுப்பற்று என்று அறிவு நிலை நாளடைவில் மெல்ல விரிவடைகிறது என தெளிவுறுத்துகிறார் ந. சுப்புரெட்டியார்.

**சிறார்களின் கற்றல்**

மாணாக்கன் பாடங்களைக் கற்பது அவன் அவற்றின்பால் கொள்ளும் கவர்ச்சியைப் பொறுத்தது என்பதோடு பள்ளி வாழ்வில் காணும் நிகழ்ச்சிகளில் அவன் பெரும் இன்பமும் துன்பமும் அவன் மன போக்குகளைத் தீர்மானிக்கின்றன என்று கூறுகிறார் ந.சுப்புரெட்டியார். இதிலிருந்து பள்ளிக்கால வாழ்க்கையின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார். ந.சுப்புரெட்டியார். கற்பதில் சிறுவர்கள் ஒருவருக்கு ஒருவர் வேறுபடுகின்றனர். சிலர் எளிதாகவும் சுலபமாகவும் கற்க, சிலர் கடினமாகவும் மெதுவாகவும் கற்கின்றனர் என்பதை சுட்டுகிறார். அறிவைப் பெருக்குவதில் பயனில்லை நடைமுறையில் கையாளுவதே பயன் தருவது என்ற கருத்தையும் முன் மொழிகிறார் சுப்புரெட்டியார்.

**அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர் (குறள். 430 )**

என்னும் குறளின் படி வெறும் அறிவு ஆற்றல் அன்று அதன் நடைமுறை பயனே ஆகும் என்பதை தெளிவுபடுத்துகிறார். வாழ்க்கைக்கும் கல்விக்கும் இடையே ஒரு பெரும் பிளவு ஏற்பட்டு இருப்பதாலும், பள்ளியில் பெரும்பாலும் பாடநூல்களை மட்டுமே பயன்படுத்துவதாலும் கற்றலுக்கும் அனுபவத்திற்குமான இணைப்பை பல சிறார்கள் காண்பதில்லை. இதனை திருத்துதல் தற்கால கல்விப் பிரச்சனைகளில் முக்கியமான ஒன்று என்று சுட்டிச் செல்கிறார் ந.சுப்புரெட்டியார். தற்கால ஆசிரியர்கள் மிகவும் மாணவர்களின் முன்னேற்றத்தை விரும்புகின்றவர்கள் கற்றலை நேர் அனுபவத்தால் மட்டுமே பெற முடியும் என்று கருதுகின்றனர். ஆனால் ஆசிரியர் குழந்தைகளின் கவனம் பெறத் துறைச் சார்ந்த நுணுக்கங்களை அறிந்து கொள்ளலாம் என்கிறார். மேலும் பலவண்ணச் சீமை சுண்ணாம்பு காம்பால் எழுதுவதும், சொற்களின் கீழ் கோடிடுவதும், சில சொற்களை சாய்த்து அல்லது வளைத்து எழுதுவதும், செய்கைகளையும் குரலையும் சமயத்துக்கு தகுந்தவாறு மாற்றுவதும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

போன்ற முறைகளை ஆசிரியர் கையாளுவதன் வழி கவர்ச்சியை அதிகரிக்க வேண்டும் என்கிறார் பேராசிரியர். இதனால், கல்வியில் சிறார்களுக்கு அலுப்பும் களைப்பும் ஏற்படாது என்கிறார். மாணவர்கள் விரும்பும் படி கற்றலை அமைத்தல் வேண்டும் என்பதையும் வலியுறுத்துகிறார். அனைத்து உளவியல் கூறுகளையும் அடுக்கி அதனை ஆசிரியர் எவ்வாறு சிறப்பாக பயன்படுத்த வேண்டும் என்பதையும் மிகச் சிறப்பாக விளக்குகிறார் பேராசிரியர்.

**சிறார்களின் புலன்காட்சி**

ஐம்புலன்கள் வழி நாம் பெறும் அறிவுக் காட்சியே புலன்காட்சி என்கிறோம். புலன் காட்சி கற்றலுக்கு அடிப்படை; அறிவின் தொடக்கம்; வெளி உலகைப் பற்றிய திட்டமான அனுபவம் பெற முதற்காரணம்; என்று புலன்காட்சி வழியாக கற்றலின் முக்கியத்துவத்தை உணர்த்துகிறார் ந. சுப்புரெட்டியார். பார்வைபுலன், கேட்டல் புலன், நுகர்வுப்புலன், சுவைப்புலன், தொடுபுலன் போன்ற புலன்களையும் அவற்றின் வழியே பெறப்படும் உணர்வுகளையும் சிறப்புற எடுத்துக்காட்டும் போது ந. சுப்புரெட்டியார் மிகச் சிறந்த அறிவியல் அறிஞர் ஆகிறார். ஏதாவது ஒரு பொருளை எடுத்துக் கொண்டு வந்து ஒரு குழந்தையிடம் கொடுத்தால் அது இயல்பாகவே அதை பார்க்கிறது, ஓசை படுத்துகிறது, தொட்டு தடவுகிறது, கடித்து சுவைக்கிறது, முகர்ந்து மணம் உணர்கிறது, அமுக்கவும் உடைக்கவும் முயல்கிறது. இவ்வாறு குழந்தை தனது எல்லா புலன்களையும் பயன்படுத்திப் பொருளின் தன்மையை அறிய முயல்கிறது. பள்ளிக்கு வரும் முன் சிறுவன் கற்கும் முறை இதுவே. பள்ளிக்கு வந்தவுடன் அவன் இம்முறையையே மேற்கொள்வான் என்பதை மறக்கலாகாது என்பதும் இங்ஙனம் புலன்களின் பயிற்சியே இயற்கை அன்னையின் கல்விமுறை என்பதையும் மாண்டிசோரி, ப்ரொபைல் போன்ற கல்வி வல்லுனர்கள் இதனை நன்கு அறிந்து புலப்பயிற்சிக்கு முதல் இடம் அளித்துள்ளனர் என்கிறார் பேராசிரியர். சிறார்களுக்கு எழுதவும் படிக்கவும் வாய்ப்புகள் கொடுத்தால் போதாது 'சொற்களுக்கு முன் பொருட்கள்' என்ற கொள்கையே குழந்தை கல்வியின் உயிர் நாடியாக இருத்தல் வேண்டும் என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

> **தொடக்கக் கல்விக்கான செயற்திட்டத்தில் ஆடுதல், பாடுதல், உடற்பயிற்சி, விளையாட்டு, ஓவியம், களிமண் சிற்பம், கதை கேட்டல், கதை கூறல், கவிதை கேட்டல் போன்றவை முக்கியத்துவம் பெறுகின்றன. இவையனைத்தும் ஒருங்கே சங்கமிக்கும் கலை வடிவம் நாடகம் (அ) அரங்கக் கலை என்கிறார் (கல்வியில் நாடகம். பக் 31)**

நிறைவாக காட்சிப் பொருட்களை உணர்தல் கருத்துப் பொருளை தெளிவுடன் அறிவதற்கு வாய்ப்பு அளிக்கும் வகையில் கற்பிக்கும் பொழுது படங்கள், துணைக்கருவிகள், கரும்பலகை முதலியவற்றைக் கொண்டு பல புலன்களுக்கு முறையீடு செய்யும் வாய்ப்பு அளிக்கலாம். புலன்களின் மூலமே நாம் அறிவினைப் பெறுகின்றோம். பயிற்சி, உற்றுநோக்கலை குழந்தைகளிடம் உண்டாக்குவதையே நோக்கமாக உடையது. 'உற்றுநோக்கல்' என்பது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ன? என்ற வினாவையும் கேட்டு அவரே ஒரு பொருளை நோக்கமற்று பார்த்தல் உற்றுநோக்கல் ஆகாது என்கிறார். ஒரு பொருளை கூர்ந்து நோக்கி அதன் பகுதிகளையும் விவரங்களையும் குறிப்பாக கவனித்தலே உற்றுநோக்கல் ஆகும் என்கிறார்.

குழந்தையின் உள்ளக் கிளர்ச்சிகள் பள்ளிச் செயல்களுடனும் கலந்து நிற்கின்றன. பாடத்திட்டம் நன்முறையில் அவனுடைய ஆற்றலுக்கேற்றவாறு அமைந்திருப்பதால் குழந்தை தான் சாதிப்பதில் மகிழ்ச்சியடைகிறான். மேலும் உடன் பயில்வோர் உடன் விளையாடுவோர் அவனிடமும், அவன் அவர்களிடமும் காட்டும் அன்பு, பரிவு, வெறுப்பு போன்றவையும் அவன் வாழ்க்கையில் முக்கியமானவை. ஆசிரியரின் பாடம் பயிற்றும் திறமையைவிட, அவர் காட்டும் அன்பையும் பரிவையுமே குழந்தை அதிகமாக கவனிக்கிறது. கடுமையும் உறுதியும் இன்றியமையாதவையே; எனினும், குழந்தையின் ஆற்றல்கள் வளர்வதற்கு அன்புடன் தரும் வாய்ப்புகளே பெரிதும் மனநிறைவு தரக்கூடியவை. குழந்தைகளை வாளா இருக்கச் செய்தலாலும், பழகிய இயக்கத்தையே திரும்பத் திரும்பச் செய்யும்படி ஏவுதலாலும், அவர்களின் திறன்களுக்கு ஒவ்வாத செயல்களைச் செய்யும்படி ஏவுதலாலும், குழந்தைகளிடம் அலுப்பும் எதிர்ப்பு மனப்பான்மையும் தோன்றும் என்பதை ஆசிரியர்களும் பெற்றோர்களும் உணர்தல் வேண்டும் என்கிறார்.

**சிறார்களின் கற்பனை திறன்**

சிறார்களின் கற்பனைத் திறன் என்பது நாம் மிகவும் கவனம் செலுத்த வேண்டிய திறன்களில் ஒன்றாகும். கற்பனை ஆற்றலை சிறார்களிடத்தில் வளரச் செய்ய வேண்டியது கடமையாகிறது. விளையாட்டு சிறுவன் பல செயல்களை நடிக்கிறான் தன் முன்னுள்ள எப்பொருளையும் தான் வேண்டும் பொருளாக கற்பனையாக மாற்றிக் கொள்கிறான் என்கிறார் ந.சுப்புரெட்டியார். சிறார்களின் கற்பனை வளர்ப்பதற்கான பல்வேறு வழிமுறைகளையும், பயன்களையும் காட்டுகிறார். கற்பனை வளர்ப்பதற்கான வழிமுறைகளாவன பள்ளி இதழ்கள் வெளியிடுதல் மகிழ்ச்சி செலவுகள் (பயணங்கள்) பொருட்காட்சி அமைத்தல் போன்றவற்றின் வழி அவர்களின் கற்பனையை வளர்க்க வேண்டும் என்கிறார் பேராசிரியர். அதன் பயன்களாக கீழ்கண்டவற்றையும் பட்டியலிடுகிறார்

- கற்பனை எதிர்காலத்தை நிர்ணயிக்க துணை செய்கிறது.
- கற்பனை மனிதனின் ஒத்த உணர்வுக்கு அவசியமானது.
- கற்பனை இலக்கியம் இசை சிற்பம் வண்ண ஓவியம் போன்றவற்றை சுவையுடன் துாய்க்க உதவுகிறது.
- கற்பனை மகிழ்ச்சியைத் தருகின்றது.
- கற்பனை ஒழுக்க வளர்ச்சிக்கு துணைபுரிகின்றது. (பெரியோரை போல் கற்பனை செய்தல்)

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஆளுமையில் சிறார்**

ஆளுமை என்பதனை பொறுத்தவரை பல்வேறு வரையறைகள் காணப்படுகின்றன. எனினும் ஆல்போர்ட் என்பாரின் வரையறையே சிறப்பானது எனக் கொள்ளப்படுகிறது என்கிறார் ஆசிரியர் நாகராஜன். அவ்வரையறையானது

> **ஒவ்வொரு மனிதனிடமும் குறிப்பிட்ட ஒரு வகையில் அவனது உடல் மனப்பண்புகள் சேர்ந்து ஒருங்கமைந்திருக்கும். இவ்வொருங்கமைப்பின் இயல்பு, மனிதனுக்கு மனிதன் சிறிதேனும் மாறுபட்டிருக்கும். தனிமனிதன் ஒருவன் தன் சூழ்நிலையில் எவ்வாறு செயல்படுகிறான் என்பது இவ்வொருங்கமைப்பின் தன்மையைப் பொறுத்தாகும். இத்தகைய உடல் மனப்பண்புகளின் தனிப்பட்ட ஒருங்கமைப்பு ஒருவனது ஆளுமையாகும். (சிறப்பத் தமிழ் கற்பித்தல், பக் 148)**

என்கிறது. இக்கருத்தும் ந.சுப்புரெட்டியாரின் கருத்துடன் ஒத்தமைவதைக் காண முடிகிறது. ஆளுமை என்பது மிகவும் சிக்கலானது. ஒரு மனிதனுடைய நடத்தை வழக்கம், மனப்போக்கு, எண்ணங்கள், நோக்கங்கள், கருத்துகள், நம்பிக்கைகள், மனப்பான்மைகள் முதலியவை அனைத்தும் கலந்து நிற்கும் மனப்பாங்கு ஆளுமை என்பதாகும் என்கிறார். பள்ளியில் பயிலும் மாணவர்களிடையே பல்வேறு ஆளுமை வேற்றுமைகளை காணலாம் என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

ஆளுமை வளர்ச்சிக்கு குடி வழியும் சூழ்நிலையும் அடிப்படையான கூறுகள் ஆகும் என்கிறார் ந.சுப்புரெட்டியார். மேலும் குடும்பம், விளையாட்டுக் குழு, உறவினர், பள்ளித் தோழர்கள் சங்கம் போன்ற சமூக நிலையங்கள் யாவும் ஆளுமை வளர்ச்சியில் பங்கு பெறுகின்றன என்பதையும் தெளிவுறுத்துகிறார். வீட்டில் மட்டுக்கு மிஞ்சிய செல்லம் கொடுத்தல், மாணாக்கர்களை புறக்கணித்தல் குறைபாடுகள் முதலிய காரணங்களால் சிறார்களின் ஆளுமை பாதிக்கப் பெறலாம் என்பதோடு இத்தகைய பழம் குறைகளை ஆசிரியர் கண்டறிந்து நோய் ஊட்டும் நிலைகள் ஏற்படாதவாறு கண்காணிக்கவும் வேண்டும் என்கிறார். ஒவ்வொரு சிறாருக்கும் ஏற்படும் தனித்தனி உள்ளக் கிளர்ச்சியையும் எதிர்வினைகளையும் அவரவரே கண்டறிந்து எவ்வாறு வாழ வேண்டும் என்று அறியச் செய்ய வேண்டும் இதுவே ஆளுமை வளர்வதற்கு சிறந்த வழி என ந.சுப்புரெட்டியார் கூறுவதிலிருந்தும் சிறார்களின் மீது பேராசிரியர் கொண்டுள்ள அன்பையும் பற்றையும் அறிய முடிகிறது.

**சிறார்களின் தலைமைத்துவம்**

இன்றைய சிறுவனே நாளையத் தலைவன். எனவே அவனுக்கு தலைமைப் பண்பை வளர்க்க வேண்டியது கல்வியின் தலையாய கடமையாகும். ந. சுப்புரெட்டியார் சிறார்களுக்கு நல்ல தலைமைத்துவ பண்புகளை வளர்க்க வேண்டும் அப்போதுதான் நாடும் வீடும் நலம் பெறும் என்பதை தெளிவுறுத்துகிறார். நல்ல தலைமைக்கு உடல் நலம், உள்ள நலம் அவசியம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பதையும் விளக்குகிறார். இவை இரண்டும் தலைமைக்கு முக்கியமானவை என்கிறார். மேலும் அவர்:

- குறிப்பிட்ட துறை சார்ந்த திறமை வேண்டும்
- பகைமை ஏற்படுத்தி கொள்ளாது தோழமை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்
- பல்வேறுப்பட்ட மக்களுடன் பல வகையில் பழகக் கற்றுக் கொள்ள வேண்டும்
- விட்டு கொடுக்கும் இயல்பு வேண்டும்
- குழுவின் விருப்பத்திற்கு மதிப்பு தர வேண்டும்
- ஏமாற்றக் கூடாது
- மனதார உழைத்தல், ஒத்துழைப்பு, உயர்ந்த குறிக்கோள்கள், மரியாதை போன்ற பண்புகளை பேண வேண்டும்.

என்று கூறி இப்பண்புகள் சிறார்களிடம் மேம்பட பள்ளி இப்பண்புகளில் கவனம் செலுத்தி மாணவர்களிடம் தலைமைப் பண்புகள் வளர வாய்ப்புகளையும் ஏற்படுத்தித் தருதல் வேண்டும் என்கிறார்.

**சிறார்களுக்கு நாடகமும் விளையாட்டும்**

நாடகக் கலை எனப் பார்க்கும் பொழுது முதலில் பெரியவர்களுக்கான கலைவடிவமாகவே இருந்தது. பெரியவர் நாடகத்திலே சிறார்களுக்கான கூறுகள் அங்காங்கே அமைந்திருந்தன. ஒரு கட்டத்தில் **பெரியவர்களுக்கான நாடகத்தை குழந்தைகள் பார்ப்பது பொருத்தமற்றது என்பது புரிந்து கொள்ளப்பட்டபோது குழந்தைகளுக்கான நாடகம் பிறந்தது (தமிழில் குழந்தை இலக்கியம், பக் 91)** என்கிறார் எழுத்தாளர் சுகுமாரன் அவர்கள். ந. சுப்புரெட்டியாரும் சிறுவர்களின் விளையாட்டில் நாற்காலி கப்பல் ஆகின்றது. செங்கொடி வெடிமருந்து ஆகின்றது. ஊசல் பலகை ரயில் வண்டி ஆகின்றது. அவர்கள் விளையாட்டில் விலங்குகளும் பேசுகின்றன. சில சமயம் அவர்கள் வண்டி ஓட்டிகளாகவும் பால்காரர்களாகவும், ஆசிரியர்களாகவும் இன்னும் தம் மனம் போன போக்கில் பலவாறாகவும் உண்மையுடன் ஒத்தவாறு நடிக்கின்றனர் என்கிறார். இங்ஙனம் அறிவுக்கூறு, புலன்காட்சி, புலன், உணர்ச்சி மனது, காட்சி, நினைவு, சிந்தனை ஆகியவற்றின் மூலம் சிறார்களின் அறிவும் துலங்கி வளருகின்றது. இன்னும் விளையாட்டில் சிறார்களிடம் தனித்தன்மையும் காணப்பெறுகின்றது. தன் நினைவு மாறுவதில்லை. கற்பனை மிகவும் வீறுடன் விளங்குகின்றது. இத்தகைய சிறார்களின் நாடகக் கற்பனை மனத்தை கவர்கின்றது. இப்பருவத்தில் சிறு நாடகத்தை படித்து நடிக்கத் தூண்டலாம். உணர்ச்சி நிலைகளுக்கு ஏற்ற பருவமாக இச்சிறார் பருவம் அமைகிறது என்கிறார். இப்பருவத்தில் சிறார்களுக்கு கூறப்பெறும் கதைகள் நல்ல முடிவு உடையனவாக இருத்தல் வேண்டும் என்பதையும் உணர்த்துகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சிறார் நாடகச் செயற்பாட்டாளர்கள் பொதுவாக விளையாட்டும் நாடகமும் ஒன்றுடன் ஒன்று இணைந்தது என்றே கூறுகின்றனர். அவ்வகையில் பார்க்கும் பொழுது ந.சுப்புரெட்டியார் விளையாட்டு குழந்தையின் கற்பனை ஆற்றலை வளர்க்கிறது. 'பாவனை' விளையாட்டின் ஒரு முக்கிய கூறு. 'பாவனை' உலகில் இயங்கும் குழந்தைகளுக்கு ஊஞ்சல் கப்பலாக மாறுகிறது. மரக்கட்டை குதிரை ஆகின்றது. சிறு குச்சி மோட்டார் ஆகிவிடுகின்றது. உயிர் இல்லாதவை உயிருள்ளவை ஆகின்றன பேசுகின்றன. அம்மா அப்பா விளையாட்டு, கடை வைத்தல், பள்ளிக்கூடம் வைத்தல் போன்ற விளையாட்டுகள் குழந்தைகளின் அக உலகில் தோன்றும் அற்புத காட்சிகள், கற்பனைகள் என்கிறார்.

**நாடகம், விளையாட்டினால் அடையும் பயன்கள்**

நாடகத்தினாலும் விளையாட்டினாலும் சிறார்கள் மிகுந்த மகிழ்ச்சியை அடைகின்றனர். இவ்விரண்டு வடிவங்களும் உடலும் மனமும் இணைந்து செயல்படும் கலைவடிவமாக அமைந்திருப்பதால் சிறார்கள் மிகுந்த பயனையும் நிறைந்த மகிழ்ச்சியையும் அடைகின்றனர். இதனையும் ந. சுப்புரெட்டியார் கல்வி உளவியல் கோட்பாடுகளின் வழி திறம்பட விளக்கியுள்ளார். கற்பனை வளர்கிறது, புத்துணர்ச்சி கிடைக்கிறது, விதிகளுக்கு கட்டுப்படுவதை அறிகின்றனர், ஆற்றல் கொள்கையை அறிகின்றனர், தலைமைக்கு கட்டுப்படல், புறங்கூறாமை, பிறர்க் கருத்தறிதல், வெற்றி தோல்விகளை ஒன்றுபோல் பாவித்தல் போன்ற குடிமைப் பண்புகள் வளர்கின்றன. விளையாட்டு ஒழுக்கத்தையும் அறிவையும் ஏற்படுத்துகின்றது. களைப்பை போக்குகின்றது. இவ்வாறு பலவிதமான இயல்புகள் வளர்வதோடு பலவற்றை எளிதில் கற்குத் திறனை வளர்த்துக் கொள்ளவும் நாடகமும் விளையாட்டும் துணைச் செய்வதாக கூறுகிறார். மேலும் இம்முறைகளில் மனிதப் பண்பும் சிறப்பாக வளர்கிறது என்கிறார் ந. சுப்புரெட்டியார். இன்றும் கூட பலர் அனைத்து பாடங்களையும் நாடகமாக்க இயலுமா? என்ற வினாவை எழுப்பி கொண்டிருக்க இவரோ வரலாற்றுப் பாடங்களை பயிலும் பொழுது குழவிகள் அலெக்சாண்டர் ஆகவும், செலுக்காஸ் ஆகவும், புருஷோத்தமன் ஆகவும், சந்திரகுப்தன் ஆகவும், சாணக்கியன் ஆகவும் கோலம் பூண்டு வரலாற்றை நாடகமாக நடத்தி வருதல் வேண்டும் என்கிறார். புவியியலைப் பலப்பல காட்சிகளாக அமைத்து அந்தந்த நாட்டின் வழக்கங்களையும் விளையாட்டாக அமைத்தல் வேண்டும் என்றும் இயற்பியல், இயற்கை நூல், உயிரியல் முதலியவற்றில் வரும் சோதனைகள் யாவும் குழந்தைகள் மிகமிக விரும்புகின்ற விளையாட்டுகளாக அமைக்க வேண்டும் என்கின்றார். கணிதப் பாடத்தை சரியான திட்டத்தோடு செய்தி திட்டங்களாக அமைத்து கற்பித்தல் இயலும் என்கிறார். இதனால் ஏற்படும் நன்மைகள் ஆக இவர்

- கட்டாயம் இன்மையால் குழந்தைகள் ஆர்வத்துடனும் பற்றுடனும் கற்றலில் ஈடுபடுகின்றனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

- கல்வி பற்றிய மனப்பான்மை நல்லவிதமாக மாறி அறிவு நன்கு வளரத் தொடங்குகிறது.
- படிப்பில் ஏற்பட்ட கவர்ச்சியால் அதிகமாக படிக்க முடிகிறது.
- உடல் வளர்ச்சியும் மன வளர்ச்சியும் சிறப்பாக வளர்கிறது.
- கற்பனை ஆற்றல் வளரச்சி பெறுகிறது.

மேலும் ந.சுப்புரெட்டியார் நாடகத்தினால் பெறும் பயன்களை தனித்தும் சுட்டுகிறார். அரிஸ்டாட்டில் முதன் முதலாக துன்பியல் நாடகத்தை கையாண்டது என்பது பேதி மருந்து உடலில் இருந்து எப்படி வேண்டாத பொருட்களை அகற்றுகிறதோ அது போலவே துன்பியல் நாடகங்கள் ஆன்மாவை சூழந்துள்ள அழுக்குப் பொருள்களை அகற்றுகின்றன என்கிறார் ‘பயிற்சி விதி’ இவ்விதியானது நாடகத்தில் நடிக்கும் சிறார்கள் தங்கள் கதாபாத்திரங்களின் உரையாடல்களைத் திரும்பத் திரும்ப சொல்லி பயிற்சி செய்கின்றனர் அதே போலவே ஒரு செய்யுளை மனப்பாடம் செய்யவும் ஒரு ராகத்தை நன்றாகப் பாடவும் மிதிவண்டியில் வாகாக செல்லவும் சிலகாலம் தொடர்ந்த பயிற்சி தேவைப்படுகிறது. இதுப் போன்று பயிற்சியே அழகிய கையெழுத்திற்கும் பிழையின்றி எழுதவும் மிகவும் அவசியம் என்கிறார். நம்மிடம் தேங்கி கிடக்கும் உணர்வுகள் நாடகத்தின் வழி வெளிப்படும் என்கிறார். கதைத் தலைவனுடைய உணர்வினை நாமும் பெறுகிறோம் என்கிறார். கதைத் தலைவனிடம் தோன்றும் உணர்வுப் போராட்டம் நம்மிடமும் தோன்றுகிறது என்கிறார். மேலும் உடல் நலமின்மை நல்ல காற்றின்மை, ஒலிக்குறைவு, உடல் நலத்திற்குக் கேடு விளைவிக்கும் தட்டுமுட்டுக்கள், அதிகநேரம் கற்பித்தல், மனம் வேறொன்றில் ஈடுபடுதல், கடினமான பாடம், தவறான கற்பித்தல் முறை, சிறுவர்களின் சிறு குறும்புகள், பாடத்தைப் பற்றிய முன்னறிவின்மை, பற்றின்மை போன்றவை கவனக் குறைவுக்கான காரணங்கள் என்றும் தெளிவுபடுத்துகிறார்.

**சிறார்களின் உடல் நலம்**

குழந்தையின் உடல் நலமே கல்விக்கு முதல் அடிப்படை என்னும் ந.சுப்புரெட்டியார் உடல் நலவியல் பற்றிய கல்வி, உடற்பயிற்சி, இயற்கை நூல், பள்ளியின் அன்றாட உடல் நலச் செயல்கள் ஆகியவற்றுடன் தொடர்புடையது என்கிறார். உடல் நலவியல் பற்றிய இக்கல்வியை தனி பாடமாக பயிற்றாமல் தனி பாடமாக பயிற்சி அளிக்க வேண்டும் என்றும் சமூக பாடம் உட்பட பிற பாடங்களுடன் இணைத்து பயிற்றுவிக்க வேண்டும் என்றும் குழந்தையின் உள்ளத்தில் உடல் நலத்தை பற்றிய சீரிய மனப்பான்மை ஏற்படா விடில் உடல் நலத்தை பற்றிய நற்பழக்கங்கள் படியாது. எனவே உடல் நலத்தை பற்றிய கல்வியும் பயிற்சியும் தொடக்கத்திலிருந்தே பள்ளியின் அன்றாட வாழ்க்கையின் பகுதியாக அமைதல் வேண்டும் என்கிறார். இவ்வாறு அமைந்தால் மாணவர்கள் உடல் நலத்துடன் வாழும் வாழ்வினை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தனக்கும், தனது நண்பர்களுக்கும், தன் பள்ளிக்கும், தன் வீட்டிற்கும், நாட்டிற்கும் நற்பயன் விளையும் என்ற உண்மையை குழந்தை பருவத்திலேயே செவ்விதின் உணரக் கூடியவராய் விளங்குவர் என்கிறார். உடல் நலமின்றி களைப்புறும் பொழுது ஓய்வு, தொழில் மாற்றம், வளர்ச்சி, ஊட்ட உணவு, விரைந்து செயலாற்றுதல், நல்ல பழக்க வழக்கங்கள், போன்றவை களைப்பைப் போக்கும் அருமருந்துகள் என்பதை நிரல்பட எடுத்துக் காட்டுகிறார்.

இயற்கை செயலுக்கு துணையாகி வருவதே அறிவுச் செயல் என்கிறார் சுப்புரெட்டியார். அறிதிறனுக்கும் கற்கும் திறனுக்கும் கல்வியின் எல்லா நிலைகளிலும் நேரடித் தொடர்பு உள்ளது என்று தெளிவாகக் குறிப்பிடும் சுப்பு ரெட்டியார், அறிதிறன் தனியாள் வேற்றுமை என்பது தொடக்க நிலைப் பள்ளியில் மிக அதிகமாகவும் உயர்நிலைப் பள்ளியில் சற்று குறைவாகவும் கல்லூரியில் மிகவும் தாழ்வாகவும் உள்ளது என்கிறார். அதாவது அறிவு திறனில் வேறுபாடு வளர வளர குறைகிறது என்பதைக் சுட்டிக் காட்டுகிறார்.

**சிறார் கல்வி நிலை சிக்கல்கள்**

பால் கல்வி பற்றிய புரிதலில் சுப்புரெட்டியார் இது மிகச் சிக்கலான பிரச்சனையே எனினும் அறவே ஒழித்து விடுவதால் நாம் எதிர்பார்க்கும் பலனை எய்தி விடுவதில்லை. நாம் மறைத்தாலும் அவர்கட்கு பால் பற்றிய தகவல்கள் எட்டா என்றும் சொல்வதற்கு இல்லை. தவறான தகவல்களை அவர்களே பெற்று பாழ் படுவதைவிட சரியான தகவல்களை நாமே தரும் பொறுப்பை மேற்கொண்டு அவர்களை நல்வழியில் உய்ப்பது நம் கடமை. காதல் ஊக்கத்தை உயர் மடைமாற்றம் செய்து நன்முறையில் சிறார்களை திருப்பலாம் என்றும் விளக்குகிறார் சுப்புரெட்டியார். இவர் எழுதி வெளியிட்டுள்ள மற்றொரு நூலான இல்லற நெறி என்ற நூலை 12 வயதிற்கு மேற்பட்ட மகளிர் படிப்பதும், 16 வயதிற்கு மேற்பட்ட ஆண்பிள்ளை படிப்பதும் பயன்தரும் என்ற இவரது கருத்திலிருந்து பால் கல்வியைப் பற்றிய அறிவு அவசியம் என்பதை இவர் உணர்த்துவதையும், மேலும் இவர் பெண்பிள்ளைகளின் முதிர்ச்சி வயது 12 என்றும் ஆண் பிள்ளைகளின் முதிர்ச்சி வயது பதினாறு என்று உணர்த்துதையும் கூட இந்நூலின் வழி காண முடிகிறது. சமூகத்திற்கு ஒவ்வாத நடத்தையை இயல்பு பிறழ்வு நடத்தை என்கிறோம். குடும்ப நிலைகள், காப்பின்மை, மிகுதியான பாதுகாப்பு, பெற்றோரின் பிறழ்ச்சி, சரியான தொடர்பின்மை, உயர்ந்த அறநெறி நிலை, வறுமை, போன்ற குடும்ப சூழ்நிலைகளும், தேர்வுகளும், ஆசிரியரின் போக்கு, ஒவ்வாத பாடத்திட்டம், வகுப்பறையில் அளவுகடந்த கட்டுப்பாடு போன்ற பள்ளிச் சூழ்நிலையும் சிறார்களின் இயல்பு பிறழ்வு நடத்தைக்கு காரணங்களாக அமைகின்றன. இவற்றின் குறைகளை கண்டறிந்து நீக்கும்போது சிறார்களிடையே பொருத்தப்பாடு ஏற்படும் என்பதையும் விளக்குகிறார்.

குழந்தை வளரும் நிலையில் அதன் ஒழுக்கத்தை பாதிக்கும் நிகழ்ச்சிகள் வீட்டிலும் எழலாம். பள்ளியிலும் எழலாம். வீட்டில் நடைபெறும் நிகழ்வுகள் பள்ளி நடத்தையை

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

பாதிக்கலாம்; பள்ளியில் நடைபெறும் நிகழ்வுகள் வீட்டு நடத்தையை பாதிக்கலாம்; பெற்றோர் ஆசிரியர் கூட்டுறவும் நல்லுறவுமே இத்தகைய செயல்களை புரிந்து கொள்ள வாய்ப்புகளை நல்கும். என்று சிறார்களின் கல்வி நிலையில் உள்ள சிக்கல்களையும் அவற்றைக் களையும் வழிமுறைகளையும் குறித்துப் பேசுகிறார்.

**சிறார் பாடத் தேர்ச்சி நிலை**

பள்ளியில் தரப்படும் தேர்ச்சி அறிக்கையில் மாணவர்கள் பள்ளிக்கு வந்த நாட்களின் எண்ணிக்கை, நடத்தை, படைப்பாற்றல், கைத்திறன், கையெழுத்து, தூய்மை, காலம் தாழ்த்தாமை, சமூகப் பண்பு, தான் தொடங்காற்றல் அல்லது தன்முனைப்பு, விளையாட்டில் காட்டும் உற்சாகம் போன்ற கூறுகள் இடம் பெற வேண்டும் என்பதையும் சுட்டுகிறார் ந.சுப்புரெட்டியார்

**ஆசிரியர்**

ஒரு ஆசிரியர் தான் செய்யும் வேலையை மூன்று துறைகளாக பகுத்து ஆராயலாம் என்று ஆசிரியருக்கும் வழிகாட்டுகிறார்.

- ஏட்டுப் படிப்புத் திறனில் காணப்பெறும் தனியாள் வேற்றுமைகளுக்குத் தான் செய்திருக்கும் ஏற்பாடுகள்.
- தொழில் முறையில் தான் என்னென்ன விதங்களில் பங்கு பெற்றிருந்தால் என்பது பற்றிய சிந்தனை.
- சிறுவர்கள் சமூக வளர்ச்சியில் முன்னேற்றம் அடைவதற்குத் தன்னால் மேற்கொள்ளப் பெற்ற வழிவகைகள்.

இவர் கூறும் பிரௌன் என்பவரின் கூறு ஒரு நாட்டின் பெருமை அதன் பரப்பு, மலைகள், காடுகள், ஆயத்தச் சாலைகள், கட்டிடங்கள், ஆகியவற்றைப் பொறுத்தன்று; ஆனால் அஃது அந்நாட்டின் பள்ளிகளின் மனநிலையையும் ஆசிரியர்களின் தன்மையையும் பொறுத்ததாகும் என்ற மேற்கோளை சுட்டுவதன் வழியாக ஆசிரியர் குறித்த தனது நன்மதிப்பினை பதிவுச் செய்கிறார்.

**முடிவுரை**

ந.சுப்புரெட்டியாரின் கல்வி உளவியல் கோட்பாடுகளின் வழி சிறாரியம் என்ற இந்த ஆய்வுக் கட்டுரையின் வழி மிகச் சிறந்த தமிழ் ஆய்வாளராய் ந. சுப்புரெட்டியாரின் அளப்பரிய தமிழ்த் தொண்டினையும் சிறப்பையும் அறிந்து இன்புற்றேன். தமிழ் ஆசிரியராய், அறிவியல் அறிஞராய், கலைச்சொல் வல்லுனராய், பல்கலை வித்தகராய் பேராசிரியரை அறிந்தேன். இவ்வாய்வு முடிவுகள் அனைத்தையும் சுட்ட இக்கட்டுரை பக்க வரையறை இடம் தரா நிலையும், காலம் கருதியும் முடிந்த முடிபினை சுட்ட வேண்டியுள்ளது. இவ்வாய்வின்படி ந. சுப்புரெட்டியார் கல்வியையும், உளவியலையும், கல்விக்கும் உளவியலுக்கும் என்னும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இவ்விரண்டிற்கும் இணைக்கும் தொடர்பான கல்வி உளவியலையும் ஒவ்வொரு ஆசிரியருக்கும் திறம்பட விளக்குகிறார் என்பதும், சிறார்களின் மீது அதாவது இந்தியாவின் எதிர்கால தூண்களான இளைய சமூகத்தின் மீது அளப்பரிய பற்றும் பாசமும் கொண்டவர் என்பதை கட்டுரை நிறுவுகிறது. சிறார்களின் கற்றல், கவனம், உடலநலம், புலன்காட்சி, ஆளுமை, தலைமை போன்ற பண்புகள் வளர்க்கப்பட வேண்டியதன் அவசியம் வளர்க்கப்பட வேண்டிய முறைகள் போன்றவற்றை திறம்பட விளக்கியுள்ளார் என்பதையும் கட்டுரை சாற்றுகிறது. மேலும் சிறார்களுக்கான எல்லா பாடங்களையும் அவர்களுக்கு பிடித்த விளையாட்டு நாடக வழியிலே கற்பித்தல் நலம் என கூறுவதோடு விளையாட்டு நாடகம் போன்ற வழிகள் சாத்தியம் என்றும் நிறுத்துகிறார் ந.சுப்புரெட்டியார். இதிலிருந்து நாடகக் கல்வி சிறார்களுக்கு அவசியம் என்பதை அவர் வலியுறுத்துவதையும் அறிய முடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] ச. அசரப் அலி. *உங்கள் குழந்தைகளை படியுங்கள்.* தாமரை பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதல் பதிப்பு, நவம்பர் 2018.

[2] ஷ. அமனஷ்வீலி. *குழந்தைகள் வாழ்க.* முன்னேற்ற பதிப்பகம், சோவியத் நாடு, முதல் பதிப்பு 1987.

[3] எல். இரவி *நிலாக்கூட்ட விருந்து. (குழந்தைகள் நாடகத் தொகுப்பு).* களம் வெளியீடு, பாண்டிச்சேரி, முதற்பதிப்பு, 2004.

[4] இரா. நடராசன். *இது யாருடைய வகுப்பறை.* புக்ஸ் பார் சில்ரன், பதிமூன்றாம் பதிப்பு, பிப்ரவரி 2021.

[5] அ.மா. பரிமாணம். முனைவர் கு. வெ. பாலசுப்பிரமணியன். *புறநானூறு மூலமும் உரையும்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், மூன்றாம் பதிப்பு, பிப்ரவரி 2007.

[6] அ. மரியசூசை. *கற்றல் கற்பித்தல் முறைமையில் நாடகம்.* போதிவனம் வெளியீடு, நவம்பர் 2011.

[7] கி. நாகராஜன். *கற்றல் மனித வளர்ச்சி தொடர்பான உளவியல்.* ராம் பதிப்பகம், சென்னை, 2001.

[8] பிரளயன். *கல்வியில் நாடகம்.* புக்ஸ் பார் சில்ரன், சென்னை, நான்காம் பதிப்பு, 2015.

[9] சுப்பு ரெட்டியார் ந. *கல்வி உளவியல்.* எம்.வாஸன் கம்பெனி, சென்னை, பதிப்பாண்டு 1961.

[10] சுப்பு ரெட்டியார் ந. *நினைவுக் குமிழிகள்.* பாரி நிலையம், சென்னை, முதல் பதிப்பு 1988.

[11] சுப்பு ரெட்டியார் ந. *அறிவியல் தமிழ்.* பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு 1981.

[12] சுப்பு ரெட்டியார் ந. *அறிவியல் விருந்து.* பாரிநிலையம், சென்னை, இரண்டாம்பதிப்பு 1981.

[13] இ. பா. வேணுகோபால், மு. சாந்தகுமாரி. *சிறப்புத் தமிழ் கற்பித்தல்.* சாரதா பதிப்பகம்,

[14] வேலு சரவணன். *தொடக்கக் கல்வியில் நாடகியம்.* புக்ஸ் பார் சில்ரன், சென்னை, முதல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பதிப்பு, செப்டம்பர் 2015.

[11] https://panmai2010.wordpress.com/ 15 ஜூலை 2022 அன்று அணுகப்பட்டது.

**References**

[1] S. Asarap Ali. *Ungal Kuzandhaigalai Padiyungal*. Thamarai Publications, Chennai, Mudhal Padhippu, November 2018.
[2] S. Amanshvili. *Kuzhandhaigal Vaazhga*. Munnetra Padhippagam, Soviet Nadu, Mudhal Padhippu, 1987.
[3] L. Ravi el. *Nilaakoota Virundhu.* (Kuzhandhaigal Naadaga Thoguppu) Kalam Veliyeedu, Pondichery, Mudharpadhippu, 2004
[4] R. Natarasan. *Idu Yaarudaya Vagupparai*, Books for Children, Padhimoondram Padhippu, February 2021.
[5] A. M. Parimanam. Munaivar K. V. Balasubramaniyan. *Purananooru Moolamum Uraiyum.* New Century Book House, Moondram Padhippu, February 2007.
[6] A. Mariyasoosai. *Katral Karpithal Muraimayil Naadagam*. Bodhivanam Veliyeedu, November, 2011.
[7] K. Nagarajan. *Katral Manidha Valarchi Thodarbana Ulaviyal*. Ram Padhipagam, Chennai, 2001.
[8] Pralayan. *Kalviyil Naadagam*. Books for Children, Chennai, Naangam Padhippu, 2015.
[9] Subbu Reddiyar. N. *Kalvi Ulaviyal*. M. vasan pathipagam, Chennai, 1961
[10] Subbu Reddiyar. N. *Ninaivu Kumizhigal*. Parri Nilayam, Muthal Pathipu Chennai, 1988
[11] Subbu Reddiyar. N. *Ariviyal Tamizh.* Parri Nilayam, Irandam Pathipu Chennai, 1981
[12] Subbu Reddiyar. N. *Ariviyal Virundhu.* Parri Nilayam, Irandam Pathipu Chennai, 1981
[13] E. P. Venugopal. M. Santhakumari. *Sirapputh Thamizh Karpithal*, Saradha Padhipagam, p. 148.
[14] Velu saravanan. *Thodakka Kalviyil Naadagaviyam*. Books for Children, Chennai Mudhal Padhippu, September 2015.
[15] https://panmai2010.wordpress.com/ Accessed on 15 July 2022.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் மொழிபெயர்ப்புத்திறன்

## Professor N. Subbu Reddiar's Translation Skills

**மோ. இந்துமா**, முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வுத் துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**M. Induma**, Ph.D Scholar, PG Tamil and Research Department,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-7044-071X**
**முனைவர் செ. ஹேமலதா**, உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வு துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. S. Hemalatha,** Assistant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-3227-7616**
**DOI: 10.5281/zenodo.7251378**

### Abstract

*Humans used language as a tool to convey their ideas to one another but today there are many different languages in the world. As languages are different, so are the culture, civilization, and customs of the people who exist in the world. The literature also varies according to their lives. Translation becomes essential for other languages to understand the literature of another language. Translation is the process of translating literature from one language to another. Translators are those who translate literary work from one language to another language. Translators can also translate ideas from one language to another in the original sense. It is also possible to learn about the specialities of the language, customs and cultures of the people. Translators who translate in this way have the same qualifications, obligations and rights. Some skills are essential for the translator. It is those skills that make translation literature successful. He becomes the best translator only if the translated literature is successful. The translator's relevant skills can be identified through his translated literature. Translational grammar and translational theories can be used to examine translated literature and find the characteristics and features of translated literature. Did a translation succeed with this? Or Failed? You can also find out. It also reveals the skills of the translator. Through this, one can know not only the skill of the translator but also the literal and technical features of the translated literature. Translation can be scientific, literary, or philosophical. But with the involvement of the translator and his experience in the field, it is possible to translate from one language to another. Translators must be proficient in both the source language and the translation language. Translators need to be familiar with bilingual traditions and translate literature. Subbu Reddiar is one of the famous translators of his time. He was an avid reader and had an interest in reading western ideas and philosophy. He has rendered ultimate knowledge to Tamil from other languages. The purpose of this research is to explore the translation literature of Professor Subbu Reddiar through translation theories, policies, etc. to show his translation ability.*

**Keywords:** Professor N. Subbu Reddiar, Translation literature, Professor's translation skills.

### ஆய்வுச் சுருக்கம்

*மனிதர்கள் தங்கள் கருத்துக்களை ஒருவர் மற்றொருவருக்கு உணர்த்தும் கருவியாக மொழியைப் பயன்படுத்தினர். ஆனால் இன்று பல்வேறு மொழிகள் இவ்வுலகில் உள்ளன.*

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மொழிகள் பல்வேறு இருப்பது போல அம்மொழிகளை பேசும் மக்களின் பண்பாடு, நாகரீகம், பழக்கவழக்கங்கள் ஆகியவையும் வேறுபடுகின்றன. மேலும், அம்மக்களின் வாழ்வியலுக்கு ஏற்ப இலக்கியங்களும் மாறுபடுகின்றன. ஒரு மொழியின் இலக்கியங்களைப் பிற மொழியினர் அறிவதற்கு மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகின்றது. ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு ஒரு இலக்கியத்தை மொழிபெயர்ப்பு செய்வது மொழிபெயர்ப்பாகும். ஒரு இலக்கியத்தை ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்ப்பவர்கள் மொழிபெயர்ப்பாளர்கள் ஆவர். மொழிபெயர்ப்பதால் ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மூல மொழியின் கருத்துக்களை மொழிபெயர்க்கப்பட்ட மொழியினரும் அறிந்து கொள்ள இயலும். மேலும் அம்மொழியின் சிறப்புகள், அம்மொழியினரின் பழக்கவழக்கங்கள், பண்பாடுகள் போன்றவையும் அறிந்து கொள்ள இயலும். இவ்வாறு மொழிபெயர்ப்பு செய்யும் மொழிபெயர்ப்பாளர்களுக்கு என்று தகுதிகளும், கடமைகளும், உரிமைகளும் உண்டு. மேலும் மொழிபெயர்ப்பாளருக்க்கு என்று சில திறன்கள் இன்றியமையாததாகும். அந்த திறன்களே ஒரு மொழிபெயர்ப்பு இலக்கியம் வெற்றியடையக் காரணமாகிறது. மொழிபெயர்த்த இலக்கியம் வெற்றியடைந்தால் தான் அவர் சிறந்த மொழிபெயர்ப்பாளர் ஆவார். மொழிபெயர்ப்பாளருக்குரிய திறன்களை அவரது மொழிபெயர்ப்பு இலக்கியம் வழியே கண்டறிய முடியும். மொழிபெயர்ப்பிற்குரிய இலக்கணங்கள் மற்றும் மொழிபெயர்ப்புக்குரிய கோட்பாடுகள் வழி மொழிபெயர்க்கப்பட்ட இலக்கியத்தை ஆராய்ந்தால் மொழிபெயர்க்கப்பட்ட இலக்கியத்தின் தன்மைகளையும் சிறப்புகளையும் கண்டறியலாம். இதன் மூலம் ஒரு மொழிபெயர்ப்பு வெற்றிப்பெற்றதா? அல்லது தோல்வி அடைந்ததா? என்பதையும் அறிய முடியும். மேலும் மொழிபெயர்ப்பாளரின் திறன்களையும் அதன்மூலம் கண்டறியமுடியும். மொழிபெயர்ப்பாளரின் திறன் மட்டுமன்று மொழிபெயர்க்கப்பட்ட இலக்கியத்தின் சிறப்புகளையும் இதன்மூலம் அறியமுடியும். மொழிபெயர்ப்பானது அறிவியல், இலக்கியம், தத்துவம் என எத்துறைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். ஆனால் மொழிபெயர்ப்பாளரின் ஈடுபாடும், அத்துறையில் உள்ள அவரது அனுபவமும் கொண்டே ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு மொழிபெயர்ப்பு செய்ய முடியும். மொழிபெயர்ப்பாளர்கள் மூலமொழி மற்றும் பெயர்ப்புமொழி இரண்டிலும் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். மொழிபெயர்ப்பாளர்கள் இருமொழி மரபுகளையும் நன்கு அறிந்து ஒரு இலக்கியத்தை எவ்வகையில் மொழிபெயர்த்தால் அவ்விலக்கியம் சிறப்பாக அமையும் என்பதை அறிந்து செய்தல் வேண்டும். பேராசிரியரின் மொழிபெயர்ப்பு இலக்கியங்களை மொழிபெயர்ப்பு நெறிமுறைகள், கொள்கைகள் போன்றவற்றின் வழி ஆராய்ந்து அவரது மொழிபெயர்ப்புத் திறனை வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், மொழிபெயர்ப்பு இலக்கியம், பேராசிரியரின் மொழிபெயர்ப்புத் திறன்.

**முன்னுரை**

மொழிபெயர்ப்பிற்கு இன்றியமையாத கூறகளாக மூலநூலையும், மொழிபெயர்ப்பாளரையும் கருதலாம். மொழிபெயர்ப்பாளனே மொழிபெயர்ப்பிற்கான மூலநூலையும் தேர்ந்தெடுக்கும் உரிமை பெறுகின்றான். எனவே மொழிபெயர்ப்பாளனின் தன்மையைப் பொறுத்தே மொழிபெயர்ப்பும் அமையும். அம்மொழிபெயர்ப்பு நூலைக் கொண்டே மொழிபெயர்ப்பாளரின் மொழிபெயர்ப்புத்திறனைக் கண்டறியலாம். பேராசிரியரின் மொழிபெயர்ப்பு நூலைக் கொண்டு அவரது மொழிபெயர்ப்புத்திறனை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பேராசிரியரின் மொழிபெயர்ப்பு நூல்கள்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழில் பல ஆய்வு நூல்களையும், இலக்கியங்களையும், சொற்பொழிவுகளையும் நிகழ்த்தியுள்ளார். அது போன்றே மொழிபெயர்ப்பு நூல்கள் மூன்றையும் எழுதியுள்ளார். அவையாவன சாகித்திய அகாதெமி வெளியிட்ட இந்திய இலக்கிய சிற்பிகள் என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ள வி.ஆர். நார்லா என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய *வேமனா* என்ற நூலையும் டி. ஆஞ்சனேயுலு என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய *சி. ஆர். ரெட்டி* என்ற நூலையும் தமிழில் முறையே *வேமனார்* என்ற தலைப்பிலும் *சி.ஆர். ரெட்டி* என்ற தலைப்பிலும் பேராசிரியர் அவர்கள் மொழிபெயர்த்துள்ளார். மேலும், *UNESCO Source Book For Science Teaching* என்ற ஆங்கில நூலை தமிழில் அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல் என்ற பெயரில் பேராசிரியர் அவர்கள் மொழிபெயர்த்துள்ளார். இந்நூல்களின் வழியே பேராசிரியரின் மொழிபெயர்ப்புத் திறன்களை இவ்வாய்வுக் கட்டுரையில் காண்போம்.

**மொழிபெயர்ப்பு**

மொழி என்பது கருத்துக்களைப் பகிர உதவுவது. அம்மொழி பேசும் மக்களின் கலாச்சாரமும் அம்மொழியில் இருக்கும். அம்மொழியிலிருந்து அம்மொழி பேசும் மக்களின் கலாச்சாரத்தை பிரிக்க இயலாது. இதனை,

> **If People and People use language are bearers of culture, then it is impossible to decouple the study of language from the study of culture. (Sarah et.al. P. 17.)**

என்ற கூற்றின் வழி அறியலாம். ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு கருத்துக்களைக் கடத்தும் கடத்தியாக மொழிபெயர்ப்பைக் கருதலாம். அவ்வாறாயின் மூலநூலின் கலாச்சாரம், பண்பாடு முதலியவையும் கடத்தப்படும். எனவே ஒரு நூலையோ, இலக்கியத்தையோ மொழிபெயர்க்கும் பொழுது இருமொழி மக்களுக்கும் உரிய வகையில் மொழிபெயர்ப்பு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைதல் இன்றியமையாததாகும். பேராசிரியர் மொழிபெயர்த்த நூல்களுள் ஆங்கில மொழி நூலாக *வேமனார், சி. ஆர். ரெட்டி* ஆகிய நூல்கள் அமைந்தாலும் அவர்கள் தெலுங்கு மொழியைச் சார்ந்தவர்கள். இந்நூலின் மூலம் தெலுங்கு மொழியினரான இவ்விருவர் வாழ்வோடு அவர்கள் கால பழக்கவழக்கங்கள், பண்பாடுகள், சமூக நிலைகள் போன்றவை தமிழ்மொழிக்கு அறிமுகப்படுத்தும் பாலமாக பேராசிரியர் அவர்கள் உள்ளார் எனலாம். அதே போன்று இன்று வளர்ந்து வரும் துறையாகிய அறிவியல் துறைக்கும் தேவையான வளர்ச்சியை முதலில் மாணவர்களுக்கு ஆசிரியர்கள் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கில் ஆசிரியருக்கு தேவையான நூலாக அவரது அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல் உள்ளது எனலாம்.

**பேராசிரியர் மொழிபெயர்ப்பாளர்**

ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழிக்கு ஒரு நூலையோ, இலக்கியத்தையோ மொழிபெயர்த்தளிப்பவர் மொழிபெயர்ப்பாளராவார். இதனை, **ஒரு மொழியில் உள்ளவற்றை மற்றொரு மொழியில் மாற்றி அமைக்கும் பணியில் ஈடுபடுவோரை மொழிபெயர்ப்பாளர்கள் என்று கூறுகிறோம். (மொழிபெயர்ப்புக் கலை. ப. 42).** மொழிபெயர்ப்பு என்பது இரு மொழிகளை இணைக்கும் சேது என்றும் மொழிபெயர்ப்பு ஒரு கலை என்றும் பேராசிரியர் அவர்கள் தனது நூலின் முகவுரையில் கூறியிருப்பார். பேராசிரியர் அவர்கள் ஆங்கில மொழியில் எழுதப்பட்ட மூன்று நூல்களை தமிழ் மொழியில் மாற்றி அமைக்கும் பணியைச் செய்வதால் மொழிபெயர்ப்பாளர் ஆகின்றார். மொழிபெயர்ப்பு என்பது மொழி பெயர்ப்பவர்களின் தன்மைக்கு ஏற்ப பல வகைப்படும். கலைகள் இவ்வுலகில் பல இருப்பது போல மொழிபெயர்ப்பிலும் பல வகைகள் உள்ளன. மொழிபெயர்க்கப்படும் இலக்கியத்தின் தன்மைகேற்ப மொழிபெயர்ப்பு இலக்கியத்தை வகைப்படுத்தலாம். அதற்கேற்ப மொழிபெயர்ப்பாளரையும் வகைப்படுத்தலாம். அறிவியல் தொழில்நுட்பங்கள், இலக்கியங்கள், வாழ்வியற்கலைகள், பத்திரிக்கைகள், மேடைப்பேச்சு போன்ற எத்துறை சார்ந்ததாகவும் மொழிபெயர்ப்பு அமையலாம். **“நாடகம், நாவல், சிறுகதை, கவிதை, வாழ்க்கைவரலாறு, பயணநூல்கள், தொழில்நுட்பத்தைச் சாராத பிறநூல்கள், உண்மை நிகழ்ச்சிகள் ஆகியவற்றை மொழிபெயர்ப்பவர்களே இலக்கிய மொழிபெயர்ப்பாளர்கள்.” (மொழிபெயர்ப்புக் கலை, ப. 55)** பேராசிரியர் அவர்கள் *வேமனார்* என்ற ஆய்வு நூலையும், சி.ஆர். ரெட்டி என்பவரது வாழ்க்கை வரலாற்று நூலையும் அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல் என்ற அறிவியல் சார்ந்த நூலையும் மொழிபெயர்த்துள்ளார்.

**மொழிபெயர்ப்பாளர் வகைகள்**

மொழிபெயர்ப்பு செய்யப்படும் நூல் அல்லது இலக்கியத்தின் தன்மையில் மொழிபெயர்ப்பாளர்களையும் வகைப்படுத்தலாம் என்பதை கீழ்க்கண்ட கூற்றின் மூலம் அறியலாம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**மொழிபெயர்ப்பாளர்கள் அனைவரும், ஒரே தன்மையான மொழிபெயர்ப்பினைச் செய்ய இயலாது. மொழிபெயர்ப்பாளர் செய்யும் பணிகளைக் கொண்டு அவர்களைப் பல வகைகளாகப் பிரிக்கலாம். அறிவியல் தொழில்நுட்ப மொழிபெயர்ப்பாளர், வாழ்வியற்கலைகள், பத்திரிகை மொழிபெயர்ப்பாளர், இலக்கிய மொழிபெயர்ப்பாளர், மேடைப்பேச்சு மொழிபெயர்ப்பாளர், பட்டயம் பெற்ற மொழிபெயர்ப்பாளர் (மொழிபெயர்ப்புக் கலை, ப. 51)**

இவ்வாறு நோக்குமிடத்து பேராசிரியர் இலக்கியவகைச் சார்ந்த டாக்டர் சி.ஆர். ரெட்டி அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும் வேமனார் பற்றிய ஆய்வு நூலையும் மொழிபெயர்ப்பு செய்துள்ளதால் அவர் இலக்கிய மொழிபெயர்ப்பாளராகவும், அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூலான அறிவியல் மொழிபெயர்ப்பால் அறிவியல் மொழிபெயர்ப்பாளராகவும் அமைகிறார் என்பதை அறியலாம்.

**மொழிபெயர்ப்பாளருக்குரியத் தகுதிகள்**

வரைபவர்கள் எல்லாம் எவ்வாறு ஓவியராக முடியாதோ அதுபோல மொழிபெயர்ப்பவர்கள் எல்லாம் மொழிபெயர்ப்பாளராகிவிட முடியாது. அதற்கென்று சில தகுதிகளை அறிஞர்கள் வரையறுத்துள்ளனர். மொழிபெயர்ப்பாளர் மூலமொழியிலும் பெயர்ப்புமொழியிலும் தேர்ச்சியுடையவராக இருக்க வேண்டும் என்பர். இதனை

**மொழிபெயர்ப்பாளருக்கு இரு மொழிகளையும் பற்றிய தெளிந்த அறிவும் இலக்கியப் புலமையுடன் இலக்கணப் புலமையும் வேண்டற்பாலது. அவற்றின் மரபுகளையும் அறிந்திருத்தல் மிகவும் தேவை (Bibliography on Translations – p. Xviii)**

என்பதன் மூலம் அறியலாம். பேராசிரியர் அவர்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்கு புலமையுடைவர். ஏனென்றால்

**முசிறி உயர்நிலைப் பள்ளியில் வரலாறு, புவியியல், இயற்பியல், வேதியியல், இயற்கணிதமும் வடிவ கணிதமும் என்ற பாடங்கள் கற்பிக்கப் பெற்றன. இப்பிரிவில் வரலாறு புவியியலைத் தவிர ஏனைய பாடங்கள் ஆங்கிலத்தில் கற்பிக்கப் பெற்றன. (நினைவுக் குமிழ்கள், ப. 196)**

என்று அவரே தனது வாழ்க்கை வரலாற்று நூலில் எழுதியுள்ளார். இதன்மூலம் பேராசிரியர் அவர்கள் ஆங்கிலத்தை சிறுவயது முதலே கற்றுள்ளார் என்பதாலும் வேதியியல் துறையில் முதுகலைப் பட்டம் பெற்றவர் என்பதாலும் ஆங்கில மொழியை நன்கு அறிந்தவர் என்பதை அறியலாம். மேலும் தமிழ் மொழியில் பல அரிய நூல்களை வெளியிட்டு பல விருதுகளையும் பெற்றுள்ளதால் தமிழ்மொழியிலும் சிறந்தவர் என்பதை அறியலாம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஒரு மொழியை விளக்கிக் கொள்கின்ற அறிவும் அதை மற்றொரு மொழியில் விளக்கிக் காட்டுகிற அறிவும் மொழிபெயர்ப்பாளருக்கு இருக்க வேண்டும் (மொழிபெயர்ப்புக் கலை, ப. 44)**

பேராசிரியர் அவர்கள் ஆங்கில மொழியை சிறுவயது முதலே அறிந்திருந்ததால் அம்மொழியிலுள்ள கருத்துக்களை விளக்கிக் கொள்கின்ற அறிவும், அவரது தாய் மொழி தமிழ்மொழி என்பதால் அதில் கருத்துக்களை விளக்கிக் காட்டுகிற அறிவும் உடையவர் என்பதை அறியலாம். **மொழிபெயர்ப்பாளருக்கு வேண்டிய தகுதி தன்வயப்படுத்தும் ஆற்றல் (மொழிபெயர்ப்பு நிகரன்கள், ப. 18)** மொழிபெயர்ப்பாளருக்கு இன்றியமையாத தகுதியாகக் கருதப்படுவது வாசகர்களைத் தன்பால் கவர்ந்திழுக்கும் தன்மையாகும். அவ்வாறு ஒரு மொழிபெயர்ப்பாளர் தனது மொழிபெயர்ப்பு நூலை வாசகர்களைக் கவர்ந்திழுக்கும் வகையில் அமைக்காவிட்டால் அவர் மொழிபெயர்ப்பு செய்ததற்கான பயனைப் பெறவியலாமல் போய்விடும். எனவே வாசகர்களைக் கவரும் வகையில் தனது மொழிபெயர்ப்பை மொழிபெயர்ப்பாளர் அமைக்க வேண்டும். பேராசிரியர் அவர்கள் தனது மொழிபெயர்ப்பு நூல்களை நடையாலும் சொற்களைக் கூறும் விதத்தின் எளிமையாலும் கூறுகின்ற பொருளினை அழகுற விளக்குவதாலும் வாசகர்களைத் தன்வயப்படுத்துகிறார் என்பதில் ஐயமில்லை. மொழிபெயர்ப்பாளர் கருத்துக்களை கூறும் விதத்தின் அடிப்படையிலும் வகைப்படுத்த முடியும் என்று கோத்தோ, ஷிலர்மேக்கர் ஆகிய மொழிபெயர்ப்பியல் அறிஞர்கள் வகைப்படுத்துகின்றனர் என்று மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும் என்ற நூலில் வீ. சந்திரன் அவர்கள் விளக்குகிறார்.

**மொழிபெயர்ப்பாளர், வேற்று நாட்டு மூலநூலாசிரியரை நம்மிடம் மொழிபெயர்ப்பு மூலம் அழைத்து வருபவர். மற்றொரு வகை மொழி பெயர்ப்பாளர், நாம் நமது தேவை கருதி மொழி பெயர்ப்பின் மூலம் புதிய மூலநூலாசிரியரைச் சென்றடைந்து, அவருடைய அரிய கருத்துக்களை நாம் அறிந்து கொள்ளவேண்டும் என்று கூறுபவர் என்கிறார் கோத்தோ (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 17)**

**ஒரு மொழிபெயர்ப்பாளர் மூலநூலாசிரியரை அலைக் கழிக்காது வாசகரை அவரருகே அழைத்துச் செல்வார். மற்றொரு மொழிபெயர்ப்பாளர், வாசகரை நிறுத்திவிட்டு மூலநூலாசிரியரை வாசகரை நோக்கி அழைத்து வருவார் என்கிறார் ஷிலர்மேக்கர் (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 18)**

இவ்விருவரின் கருத்தையும் பேராசிரியரின் மொழிபெயர்ப்பு நூல்களைக் கொண்டு ஆராயும் பொழுது கோத்தோ கூறிய விதத்தில் வேற்று நாட்டு மூல நூலாசிரியரை நம்மிடம் மொழிபெயர்ப்பு மூலம் அழைத்துவருகிறார் என்பதையும் ஷிலர்மேக்கர் கூறிய விதத்தில்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாசகரை நிறுத்திவிட்டு மூலநூலாசிரியரை வாசகரை நோக்கி அழைத்து வருகிறார் என்பதையும் அறியமுடிகின்றது.

> **மொழிபெயர்ப்பாளருக்குத் திறனாய்வுத் தகுதி தேவை. மூலமொழிக் கருத்தை இலக்கு மொழியில் நடைமுறை சூழலுக்கேற்ப கூறும் இரு மொழித் தகுதியும் தேவை. ஏனெனில் மொழிபெயர்ப்பால் மிகுந்த பயனும் உதவியும் வாசகர்கள் பெறவேண்டும். மொழி பெயர்ப்பாளருக்கு இரு மொழி அறிவோடு பொது அறிவும் துறையறிவும் கட்டாயம் தேவை (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 18)**

பேராசிரியர் அவர்களது நூல்கள் பல ஆய்வு நோக்கிலேயே அமைந்துள்ளன. எனவே அவர் திறனாய்வுத் தகுதியுடையவர் என்பதை அறியலாம். மேலும், சிறுவயது முதலே தமிழ் ஆங்கிலம் என இரு மொழியிலும் புலைமையுடையவர் என்பதை அவரது வாழ்க்கை வரலாற்று நூலின் பதிவுகளின் மூலம் அறியமுடிகின்றது. அதுமட்டுமன்று இயற்பியல், வேதியியல், கணிதம் என பல்துறை அறிவும், வேதியியல் துறையால் அறிவியல் துறை அறிவும் பெற்றுள்ளார் என்பதன் மூலம் மொழிபெயர்ப்பாளருக்குரிய அனைத்துத் தகுதியும் பெற்றுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

> **மொழிபெயர்ப்பாளன் என்பவன் நல்ல நிலைக்கண்ணாடியைப் போன்றவன். சில கண்ணாடிகள் உருவங்களைப் பெரிதாகப் பூதம்போல காட்டும். சில கண்ணாடிகள் ஒரேயடியாகச் சுருக்கி சிறியதாகக் காட்டும். இந்த இரு வகைக் குற்றமுமின்றி அசல் கண்ணாடியாயிருக்கும் மொழிபெயர்ப்பே முறையான மொழிபெயர்ப்பாகும் (மொழிபெயர்ப்புக் கலை, ப. 44)**

பேராசிரியர் அவர்கள் அசல் கண்ணாடியாக விளங்குகிறார். அவர் தனது மொழிபெயர்ப்பு நூலில் கருத்துக்களை கூட்டவோ, குறைக்கவோ மாட்டாமல் கருத்துக்கள் அனைத்தையும் வெளிப்படுத்தியுள்ளார். இதனை அவரது மொழிபெயர்ப்பு நூல்கள் மூலம் அறியலாம். சான்றாக அவர் நூல்முகம் முதல் பின்னிணைப்புகள் வரை உள்ளவற்றை மொழிபெயர்ப்பு நூல்களில் மொழிபெயர்த்துள்ளதன் மூலம் அறியலாம்.

**மொழிபெயர்ப்பில் கையாள வேண்டிய இன்றியமையாத கூறுகள்.**

மொழிபெயர்ப்பாளர் ஒரு இலக்கியத்தை மொழிபெயர்க்கும் பொழுது கருத்துக்களை எளிதாகவும், நேரடியாகவும் அனைவருக்கும் புரியும்படியும் அமைக்க வேண்டும் என்பதை,

> **தமிழில் கூறும்போது சொற்புலமையாக மாற்றிவிடாமல் கருத்துகளை எளிதாகவும் நேரடியாகவும் புரிந்துகொள்ளும் நடையமைப்பைக் கையாள வேண்டும் (மொழிபெயர்ப்பு என்ற ஊடகம் – ப.32)**

இதன்மூலம் அறிய முடிகிறது. பேராசிரியர் அவர்களது மொழிபெயர்ப்பு நூல்கள் எளிமையாகவும், கருத்துக்களை நேரடியாகவும் அமைந்துள்ளன. வேமனார் என்ற ஆய்வு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நூலின் மொழிபெர்ப்பிலும் அவர் ஆசிரியரின் அனைத்துக் கருத்துக்களையும் விடுபடாமலும் நேரடியாகவும், எளிமையாகவும் தந்திருப்பதையே சான்றாகக் கூறலாம். மேலும் இலக்கியத்திலும் தேர்ச்சிபெற்ற பேராசிரியர் அவர்கள் மொழிபெயர்ப்பில் தன் சொல்லாற்றலை வெளிப்படுத்தாமல் மொழிபெயர்ப்புக்குரிய நெறிமுறைகளைப் பின்பற்றி எழுதியுள்ளார் என்பதை காணமுடிகிறது.

**அறிவியல் மொழிபெயர்ப்பும் அதன் தன்மைகளும்**

அறிவியல் துறை இன்று வளர்ந்து வரும் துறைகளுள் ஒன்று. இலக்கியத்தினை மொழிபெயர்ப்பதற்கு இருமொழியறிவு தேவை. ஆனால் அறிவியல் துறை சார்ந்த மொழிபெயர்ப்பு செய்ய அத்துறையறிவும் இன்றியமையாததாகிறது. பேராசிரியர் அவர்கள் அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல் என்ற அறிவியல் சார்ந்த மொழிபெயர்ப்பு நூலை எழுதியுள்ளார். மேலும், பேராசிரியர் அவர்கள் வேதியியல் என்ற அறிவியல் துறையில் முதுகலைப்பட்டம் பெற்றுள்ளார். எனவே, அறிவியல் துறையை சார்ந்தவர் என்பது ஐயத்திற்கு இடமின்றி அறியலாம். அறிவியல் மொழிபெயர்ப்பையும் ஆறு வகையாகப் பிரித்துள்ளார் இளம்பாரதி என்ற மொழிபெயர்ப்பறிஞர்.

அறிவியல் இலக்கியத்தை ஆறு வகைகளாகப் பிரிக்கலாம்.

> **ஆய்வு இலக்கியம், தொகுப்பு இலக்கியம், மதிப்பீட்டு இலக்கியம், தனிவரைவு இலக்கியம், பாடநூல் இலக்கியம், பொதுமக்கள் இலக்கியம் (மொழிபெயர்ப்பு என்ற ஊடகம், ப.124)**

பேராசிரியரது அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல் என்ற இலக்கியம் இதில் பாடநூல் வகையில் அடங்கும். ஆனால் இது ஆசிரியர் படிப்பு மாணவர்களுக்கான பாடநூல் வகையில் அமைகின்றது எனலாம். ஏனென்றால், இதில் கற்கும் மாணவப் பருவத்தில் கற்பதற்கு அடிப்படையாக அமைவது பாடநூல் இலக்கியம் (மொழிபெயர்ப்பு என்ற ஊடகம், ப.127) என்று அவரே பாடநூல் இலக்கியத்திற்கான வரையறையையும் தந்துள்ளார். ஆனால் ஆசிரியருக்கு என பேராசிரியர் குறிப்பிட்டுள்ளாரே என்ற எண்ணமும் மனதில் எழலாம். ஆனால் ஆசிரியர் படிப்பினை மேற்கொள்ளும் மாணவர்களுக்கான நூலாக இது அமைவதால் இவ்விலக்கியம் பாடநூல் வகையிலேயே அமைகிறது என்பதில் ஐயமில்லை. மேலும் ஆசிரியர்கள் தாம் ஆசிரியரான பிறகு மாணவர்களிடம் அறிவியல் ஆர்வத்தை தோற்றுவிக்க பயன்படும் விதமாக பேராசிரியர் அவர்கள் இந்நூலை எழுதியுள்ளார்.

**மொழிபெயர்ப்பின் பயன்**

ஒவ்வொரு செயலும் அதற்கான பயனைத் தருகிறது. அதுபோல மொழிபெயர்ப்பும் அதற்கான பயனைத் தருதல் வேண்டும். **ஒரு மொழியில் உள்ளவற்றை மற்றொரு மொழிக்கு செலுத்துதல், போக்குதல் என்பது மொழிபெயர்ப்பாகிறது. (Bibliography on Translations, p.**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**Xviii)** இக்கூற்றைக் காணும்பொழுது ஒரு மொழியில் உள்ள செய்தியை மற்றமொழியில் கொண்டு போய் சேர்த்தல் மட்டுமே மொழிபெயர்ப்பாகுமா என்ற ஐயம் ஏற்படலாம். பேராசிரியரது மொழிபெயர்ப்புகளையே எடுத்துக்கொண்டு ஆய்வோமே. *வேமனார்* என்ற பேராசிரியரது மொழிபெயர்ப்பு நூலைப் படிக்கும் பொழுது தெலுங்குக் கவிஞர்களில் மிகவும் இன்றியமையாதவர், சாதி மதங்களின் வேறுபாடுகளை வெறுத்தவர் போன்ற செய்திகளும், இவரது காலத்து பழக்கவழக்கங்கள் போன்றவற்றை தமிழில் மொழிபெயர்த்ததால் அவரை பற்றிய செய்திகள் தமிழ் மக்கள் அறிய உதவியது. இவ்வாறு சி.ஆர். ரெட்டி அவர்களது வாழ்க்கை வரலாற்று நூலால்

> **இராமலிங்க ரெட்டி பெருக்க வளமுள்ள எழுத்தாளர் அல்லர். ஆனால் இவர் ஒரு முன்மாதிரியான எழுத்தாளர் என்றும் கவிஞர் என்ற முறையில் இவரது புகழ் முக்கியமாக முசலம்ம மரணமு என்ற கவிதையாலும் குறைந்த அளவில் வேறு சில கவிதைகளாலும் ஓங்கியுள்ளன (தமிழாக்கம், ப. 27, 28)**

என்றும் கூறி தெலுங்கு மொழியெழுத்தாளராகவும், கவிஞராகவும் அவரைப்பற்றிய செய்திகளை பேராசிரியர் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்துகிறார். அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்வழி வருங்கால ஆசிரியர்களுக்கு மாணவர்களிடையே அறிவியல் கண்டுப்பிடிப்புகளை கண்டுபிடிக்கும் ஆர்வத்தைத் தூண்டுகின்ற செய்திகளை விளக்குகிறார். இவ்வாறு ஒவ்வொரு மொழிபெயர்ப்பும் பயனடையதாக அமைய வேண்டும்.

**மொழிபெயர்ப்புக் கொள்கைகள்**

மொழிபெயர்க்கப்படும் எல்லா நூல்களும் சிறந்த மொழிபெயர்ப்புகளாகா. அவை சிறந்த மொழிபெயர்ப்பாக அமைய இன்றியமையாத சில விதிமுறைகளையும் அறிஞர்கள் கூறுகின்றனர். பேராசிரியரது மொழிபெயர்ப்புகள் அனைத்தும் மூல நூலின் முழு உணர்வினையும், கருத்துக்களையும் நிகழ்வுகளையும் உரையாடல்களையும் சிறிதும் விடுபடாமலும் அதிகப்படுத்தாமலும் மாற்றாமலும் மொழிபெயர்த்துள்ளார் என்பதை அவரது இலக்கியத்தை படிக்கும்பொழுது அறியமுடிகின்றது.

> **மொழிபெயர்ப்பின் முழுப்பயனையும் கற்போர் பெறும் பொருட்டு மொழிபெயர்ப்பாளர் சில நெறிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். அவையாவன எளிமை, பயன்படுத்தும் சொற்கள், இலக்கிய நயம், தெளிவு, மூலநூலின் அறிமுகம். (Bibliography on Translations, p. Xxi)**

பேராசிரியரது மொழிபெயர்ப்புகளின் மொழி நடையானது இலக்கிய நடையிலும் எளிமையான சொற்களால் வாசகர் படிக்கின்ற முறையில் அமைந்துள்ளது. அவர் கடினமான இருபொருள் தரும் நடைகளை மொழிபெயர்ப்பிலக்கியத்தில் பயன்படுத்தவில்லை. மேலும் தெளிவான, இலக்கிய நயமிக்க சொற்களையே தனது இலக்கியங்களில் பயன்படுத்துகின்றார்.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

மூலநூல் பற்றிய முகவுரையையும் மூல ஆசிரியர் கூறிய பின்னிணைப்புகள், துணைநூற்பட்டியல் போன்ற அனைத்தையும் தனது மொழிபெயர்ப்பு நூலிலும் இடம்பெறுமாறு செய்துள்ளார். முன்பே கூறியது போல பேராசிரியர் அவர்கள் மொழிபெயர்ப்பு நூலில் இடம்பெற்ற நூலாசிரியர் உரை, ஆய்வுரை, அறிமுகவுரை போன்றவற்றை தனது மொழிபெயர்ப்பில் இடம்பெறுமாறு மொழிபெயர்த்துள்ளார்.

**மொழிபெயர்ப்பென்பது மூலநூலின் சொற்களைக் கொண்டிலங்க வேண்டும்.**

**மொழிபெயர்ப்பு ஒரு மூலநூல் போன்று தோற்றமளிக்க வேண்டும்.**

**ஒரு மொழிபெயர்ப்பு மூலநூலின் நடையினைப் பிரதிபலிக்க வேண்டும்.**

**(மொழிபெயர்ப்பு நூற்றொகை தொகுதி 3, ப. 6)**

பேராசிரியரது மொழிபெயர்ப்பு நூலானது மூல நூல் போன்றே தோற்றமளிக்கிறது. அவரது மொழிபெயர்ப்பு நூல்கள் மொழிபெயர்ப்பு நூல் என்பதை அவரது குறிப்புகளால் மட்டுமே உணரமுடிகின்றது. அதில் உள்ள நடை, சொற்கள் ஆகியவை அந்நூல் மொழிபெயர்ப்பு நூல் என்ற எண்ணங்களை ஏற்படுத்தாமல் மூலநூலுக்குரியது போல அமைந்துள்ளன. இவ்வாறு பேராசிரியரது நூல்கள் மொழிபெயர்ப்பிற்குரிய கொள்கைகளை கொண்டிலங்குகின்றன.

**மொழிபெயர்ப்புக் கொள்கை**

மொழிபெயர்ப்பின் மிக முக்கிய நோக்கங்களில் ஒன்று நாடுகளுக்கிடையே நட்புறவையும், பிணைப்பையும் ஏற்படுத்துவது. ஏற்கனவே இருக்கின்ற நட்பினை வலுப்படுத்துவதும் மொழிபெயர்ப்பின் மூலமாக நடைபெறுகின்றது. அதற்கு அந்தநாட்டின் புறவளர்ச்சியை மட்டுமல்லாது அக உணர்ச்சியையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும் அதற்கு இலக்கியங்கள் ஒரு பாலமாக அமைகின்றன. (மொழிபெயர்ப்பியல், ப.29) பேராசிரியரது *வேமனார். சி.ஆர். ரெட்டி* என்ற இரு மொழிபெயர்ப்புகளில் இந்நோக்கமானது அமைகிறது எனலாம். தமிழ் மொழியிலிருந்து தோன்றிய மொழிகளில் ஒன்று தெலுங்கு. பேராசிரியரது மொழிபெயர்ப்பு ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டிருந்தாலும் தெலுங்கு மொழியின் சிற்பிகளாகிய இருவரைப் பற்றியே அமைந்துள்ளது. அவரது மொழிபெயர்ப்பு தெலுங்கு மொழியினரின் அக உணர்ச்சியையும், புறவளர்ச்சியையும் வெளிப்படுத்தியும் உள்ளது. எனவே அவரது மொழிபெயர்ப்பு இருமொழியினரின் நட்பை மேலும் வலுப்படுத்தும்.

**மேனாட்டினரின் மொழிபெயர்ப்புக் கொள்கைகள்**

மொழிபெயர்ப்பானது உலகளவில் வளர்ந்து வரும் துறைகளில் ஒன்று. எனவே மொழிபெயர்ப்பு கொள்கைகளும் பலவாறாக உள்ளன. மொழிபெயர்ப்பு கொள்கைகள் வேறுபடும் விதத்தை, கீழ்க்கண்ட கூற்றின் வழி அறியலாம்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**மொழிபெயர்ப்புத் திறன் மொழிபெயர்ப்பாளரின் திறனைப் பொறுத்தமைவதால் மொழிபெயர்ப்புக் கொள்கையிலும் வேறுபாடுண்டு (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், பக். 2)**

இரு மேனாட்டினரின் மொழிபெயர்ப்பு கொள்கைகள் கீழ்க்கண்டவாறு:

**கேட்ஃபோர்ட் கொள்கைகள்:** மொழிபெயர்ப்பு என்றால் ஒரு மொழியிலுள்ள வாசகத்தை மற்றொரு மொழியில் மாற்றியமைப்பது. (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 3)

**சேவரியின் கொள்கைகள்:** மொழிபெயர்ப்பு மூல நூலைப் போன்று எளிதாகவும் நன்றாகவும் இருக்க வேண்டும் என்று கூறும் இவர் வெறுமனே மொழி இலக்கியத்திறன் மட்டும் கொண்டு பலரும் பாராட்டும் மொழி பெயர்ப்பைச் செய்ய இயலாது, அதற்கு மொழிபெயர்க்கப்படும் துறையில் தோய்ந்தபட்டறிவும் தேவை என வலியுறுத்துகிறார்.

- ஒரு மொழிபெயர்ப்பு மூலச் சொற்களைத் தருதல் வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மூலத்தின் கருத்துக்களைத் தருதல் வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மூல நூலைப் போலிருக்க வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்பைப் போலவே இருக்க வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மூல நூலின் நடையை எதிரொலிக்க வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்பாளரின் நடையைக் கொண்டதாய் இருக்க வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மூல நூலின் காலத்தையொட்டியிருக்க வேண்டும்.
- ஒரு மொழிபெயர்ப்பு மொழிபெயர்ப்பாளரின் சம காலத்ததாய் இருக்க வேண்டியதில்லை.
- ஒரு மொழிபெயர்ப்பில் எதையும் மூலநூல் வாசகத்தோடு சேர்க்கவோ விட்டுவிடவோ செய்யலாம்.
- ஒரு மொழிபெயர்ப்பில் எதையும் மூல நூல் வாசகத்தோடு சேர்க்கவோ விட்டுவிடவோ கூடாது.
- மொழிபெயர்ப்பாளர் மூலமொழி இலக்குமொழி இரண்டிலும் தேர்ச்சி பெற்றவராக இருத்தல் வேண்டும்.
- மொழிபெயர்ப்பாளர் தாம் மொழிபெயர்ப்பு மேற்கொள்ளவிருக்கும் பொருட்பாட்டில் போதிய தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.
- இவர் மூலநூலாசிரியரிடம் மரியாதை கொண்டவராக நூலின் பொருமையும் நன்கு அறிந்திருக்க வேண்டும் (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 4)

மேற்குறிப்பிடப்பட்ட அத்தனைக் கருத்துக்களையும் உடையதாக பேராசிரியரது மொழிபெயர்ப்பு நூல் அமைந்துள்ளது எனலாம்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**பேராசிரியரும் அறிவியல் மொழிபெயர்ப்பும்**

பேராசிரியர் அவர்கள் அறிவியல் நூலை மொழிபெயர்ப்பு செய்துள்ளார். மொழிபெயர்ப்பில் ஒரு துறை அறிவியல் சார்ந்ததாகும். மேலும் இலக்கியங்கள் போலன்று அறிவியல் மொழிபெயர்ப்புகள் கருத்துக்கு முதலிடம் அளிப்பதாகும்.

> **அறிவியல் படைப்புகளை மொழிபெயர்ப்பது என்பது ஒரு சிறந்த மொழிபெயர்ப்பிற்குச் சான்றாக்க காட்டலாம். அதில் கருத்துக்களுக்குத்தான் முதலிடம் அளிக்கப்படுகிறதே தவிர, கருத்துக்கள் எழுதப்படுகின்ற முறைக்கு அல்லது நடைக்கு அல்ல.**
>
> **மூலமொழியிலுள்ள கருத்துக்களைப் பற்றிய அறிவை அறிவியல் மொழிபெயர்ப்பு செய்கின்றவர் பெற்றிருக்க வேண்டிய தேவையை வலியுறுத்துவதாகும் அறிவியல் மொழிபெயர்ப்பிலே சொற்களுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. (மொழிபெயர்ப்பியல், ப. 81)**

இவ்விரு கருத்துக்களையும் நோக்குமிடத்து பேராசிரியர் தனது அறிவியல் மொழிபெயர்ப்பில் சொல்லுக்கு முக்கியத்துவம் கொடுத்த காரணத்தை அறியலாம். பேராசிரியர் அவர்கள் தனது அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூலில் பல தமிழ் சொற்களைக் கூறி அதற்கான ஆங்கில சொற்களையும் அடைப்புக்குறிக்குள் தந்துள்ளார். சான்றாக மின் துறைஞர் என்பதற்கு (electrician) பொறிக் கம்மியன் என்பதற்கு (mechanic) அறிவியல் மூலை என்பதற்கு (science corner) வளர்ச்சி வளையங்கள் என்பதற்கு (growth rings) என்றும் (அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல் - தமிழாக்கம் ப. 19, 17) விளக்கம் தந்துள்ளார். இவ்வாறாக பல சொற்களை தனது நூலில் குறிப்பிட்டுச் சென்றுள்ளார். நாம் அன்றாட வாழ்வில் இவ்வறிவியல் கலைச்சொற்களைப் பயன்படுத்துகின்றோமா என்றால் இல்லை என்பதே இதற்கான விடையாக அமையும். அதன் காரணமாகவே பேராசிரியர் அவர்கள் தனது நூலில் ஆங்கிலத்திலும் அதனை கூறியுள்ளார் எனலாம். தமிழில் அவ்வறிவியல் கலைச்சொல்லை அறிந்துகொள்ள வழிவகையும் செய்துள்ளார் எனலாம்.

**பேராசிரியரது மொழிபெயர்ப்புத் திறன்**

மொழிபெயர்ப்பு செய்யப்பட்ட இலக்கியத்தின் அடிப்படையிலேயே மொழிபெயர்ப்பாளனின் மொழிபெயர்ப்புத் திறனானது வெளிப்படும். மொழிபெயர்ப்புத் திறனை கண்டறிய சில முறைகளை மொழிபெயர்ப்பறிஞர் எடுத்துக்கூறியவழி பேராசிரியரது மொழிபெயர்ப்புத்திறனை ஆய்வோம்.

> **மொழிபெயர்ப்புத்திறனைக் கணிப்பதற்கான ஆய்வு நெறிமுறைகளானவை, மொழியியல் சார்ந்தது, மொழிமாற்றம் சார்ந்தது, நடையியல் சார்ந்தது (மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும், ப. 43)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என மூவகையின் அடிப்படையில் காணலாம் என்று *மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும்* என்ற நூலில் வீ. சந்திரன் அவர்கள் கூறியுள்ளார். அவற்றின் அடிப்படையில் பேராசிரியரது மொழிபெயர்ப்புத் திறனை ஆய்வோம். மொழியியல் சார்ந்த பகுதியில் சொற்களஞ்சியம் சார்ந்த தத்துவம், மொழியியலமைப்பு சார்ந்த தத்துவம், பொருளியல் இலக்கணம் சார்ந்த தத்துவம் என வகைப்படுத்துகிறார்.

**சொற்களஞ்சியம் சார்ந்த தத்துவம்**

சொற்களஞ்சியம் சார்ந்த தத்துவம் முறையினால் மூலமொழியிலுள்ள சொல்லுக்கு இணையான பெயர்ப்பு சொல்லை மொழிபெயர்ப்பாளர் அமைக்க வேண்டும். அவ்வாறு மொழியில் அதற்கு இணையான தமிழ்ச்சொல் இல்லையென்றால் புதிதாக சொல்லாக்கம் செய்து சொற்களஞ்சியங்களை உருவாக்க வேண்டும் என்கிறார். இதன்மூலம் பெயர்ப்பு மொழியில் புதிய சொற்கள் உருவாவதுடன் மூலமொழிக்கு நிகரான சொற்களும் தோன்றுகின்றன. பேராசிரியரது *வேமனார்* என்ற நூலில்,

> **வேமனார் ஒரு சிவனடியாராக இருந்தபோதிலும் இலிங்கம் தரித்தல், பட்டினி கிடத்தல், இரவு முழுவதும் உறங்காது விழித்திருத்தல், தல யாத்திரையை மேற்கொள்ளல் போன்ற புறப்பகுதிகளாகிய சிவ வழிபாட்டு மரபுகளை ஏளனம் செய்கின்றார். (வேமனார், ப.8)**

என கூறுகிறார். இதில் இலிங்கம் அணிதல் என்று கூட அவர் அமைத்திருக்கலாம். ஆனால் அணிதல் என்பது இயல்பான சொல். இலிங்கம் என்பதோ இறைவனது திருவுருவம். இதனை அவ்வாறு கூறுதல் தகாது என்றே பேராசிரியர் அவர்கள் தரித்தல் என்று குறிப்பிட்டுள்ளார். அதே போல் பட்டினி கிடத்தல் என்பதை உண்ணா விரதம், உண்ணா நோன்பு என்று கூறியிருக்கலாம். இவை அனைத்தும் ஒரே பொருளையே தரும். இருந்தும் பேராசிரியர் அவர்கள் விரதம், நோன்பு என்பது தமிழ்ச்சொல் அல்ல. பிறமொழி தமிழில் புகுந்ததால் தோன்றிய சொற்கள் என்பதால்தான் பட்டினி கிடத்தல் என்று பேராசிரியர் குறிப்பிடுகிறார். அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூலில் பல அறிவியல் கலைச்சொற்களைக் குறிப்பிட்டு அதற்கு இணையான ஆங்கிலச் சொற்களையும் தனது நூலில் குறிப்பிட்டுள்ளார். எடுத்துக்காட்டாக கம்பியாலான அங்கவடி (wire stirrup) என குறிப்பிட்டுள்ளார். இதன்மூலம் பேராசிரியர் அவர்கள் மூலமொழிக்கு இணையான சொற்களையும், புதிய சொற்களையும் பெயர்ப்புமொழியான தமிழ்மொழிக்கு கொடுத்துள்ளார் என்பதை அறியலாம்.

**மொழியமைப்பில் அடிப்படைத் தத்துவம்**

பெயர்ப்பு மொழியின் வாக்கிய அமைப்பு பொருள் கொள்ளும் வகையில் அமைய வேண்டும். மேலும் மொழிபெயர்ப்பு வாசக அமைப்பில் கட்டமைக்கப்பட வேண்டும் என்கிறார். பேராசிரியரது நூல்களில் வாக்கிய கட்டமைப்பு எளிதாகவும், எளிதில் பொருள்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கொள்ளத்தக்க வகையிலும் அமைந்துள்ளது. மேலும் வாசகர் படிக்கின்ற பாங்கில் கட்டமைக்கப்பட்டுள்ளது. இதனை,

> **வேமனர் சூத்திரர். தெலுங்கு அணி இலக்கணத்திற்கு ஒரு நிபுணர் என்று கூறப்பெறும் அப்பகவி என்பார் சூத்திரக்கவியொருவரின் நூலைப் பரிசோதனையின்றியே தள்ளுபடி செய்யப்பெறுதல் வேண்டும் என்ற விதியையும் விதித்திருந்தார் (வேமனார், ப. 8)**

என்ற சான்றின் மூலம் அறியலாம்.

**பொருளியல் இலக்கணம் சார்ந்த அடிப்படைத் தத்துவம்**

மொழிபெயர்ப்பாளர் மூலநூலில் உள்ள சமூக அரசியல் பண்பாட்டுக் கூறுகளை பெயர்ப்பு மொழியிலும் பேணிக்காக்க வேண்டும் என்கிறார். பேராசிரியர் அவர்கள் வேமனார் என்ற நூலில் சூத்திரர்களை அடிமைப்படுத்திய சமூகமாக தெலுங்கு சமூகம் இருந்தது என்பதையும், சிவனடியார்கள் இலிங்கம் தரித்தல், பட்டினி கிடத்தல் போன்ற பண்பாட்டுச் செய்திகள் போன்றவை இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது. இவ்வாறு மொழியியல் சார்ந்த அடிப்படைத் தத்துவங்களை பேராசிரியரது இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

**மொழிபெயர்ப்பு அணுகுமுறைத் தத்துவம்**

செய்தியை வெளியிடுவதே பெயர்ப்பு முறையில் இன்றியமையாததாகும் என்கிறார். மூல மொழி வாசகர்களால் பெறப்பட்ட அதே பயனை இலக்குமொழி வாசகர்கள் பெறுமளவில் மறுபடைப்பு செய்முயற்சியாகும். பேராசிரியர் அவர்களது மொழிபெயர்ப்பு நூல்கள் அனைத்தும் திறம்பட அமைந்துள்ளது என்பதை அவரது நூல்கள் வழி அறியலாம்.

**அறிவார்ந்த மொழிபெயர்ப்புச் செய்முறை**

மூலமொழியில் உள்ள வாக்கியங்களை இணைத்தோ, பிரித்தோ எவ்வாறு தெளிவாக பெயர்ப்பு மொழியில் அமைக்க வேண்டும் என்பதையே அறிவார்ந்த மொழிபெயர்ப்புச் செயல்முறை என்கிறார். பேராசிரியர் அவர்களது பெயர்ப்பு இலக்கியங்கள் வாசகர்களுக்கு ஏற்ப எளிமையான மற்றும் தெளிவான முறையில் பெயர்ப்பு மொழியான தமிழ் மொழிக்கு ஏற்ப இணைத்தும் பிரித்தும் அமைத்துள்ளார். உண்மையான பெருங்கவிதை கொண்டு திகழ வேண்டிய பிறிதின் சார்பற்ற பல நுண்புலங்களைக் கொண்டுள்ளது அவரது கவிதை (வேமனார், ப. 8) என்ற வரிகளைக் காணும் இடத்து வாக்கியங்களின் இணைப்பு முறையை அறியலாம்.

**சொற்பொருளியல் மொழிபெயர்ப்பு முறை**

மூலமொழி ஆசிரியர் கூறவந்த பொருளை துல்லியமாக மொழிபெயர்ப்பாளர் பெயர்ப்பு மொழியில் வெளிப்படுத்த வேண்டும். பேராசிரியர் அவர்கள் வேமனார் பற்றிய ஆய்வு நோக்கில் அமைந்த கருத்துக்களை துல்லியமாக தமிழில் தந்துள்ளார். அதே போல் சி.ஆர். ரெட்டி அவர்களது வாழ்க்கை வரலாற்றையும் எவ்வித மாற்றமும் இன்றி தமிழில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

படைத்துள்ளார். அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூலையும் சரியான முறையில் மொழிபெயர்த்துள்ளார். இதன்மூலம் மொழிபெயர்ப்பு அணுகுமுறைத் தத்துவத்தையும் பேராசிரியர் அவர்கள் சரிவர பின்பற்றியுள்ளார் எனலாம்.

**நடையியல் அடிப்படைத் தத்துவம்**

வீ. சந்திரன் அவர்கள் நடையியல் அடிப்படைத் தத்துவத்தை தகவல் தொடர்பு சார் நடை, இயல்பான நடை, நோக்கமுடைய நடை, கட்டளை சார் நடை, வாசகர் சார் நடை, மொழிபெயர்ப்பாளர் நடை என வகைப்படுத்தியுள்ளார். பேராசிரியரது மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் வாசகர் சார் நடையிலேயே அமைந்தள்ளன. இவ்வாறு மொழியியல் சார்ந்து, மொழிமாற்றம் சார்ந்து, நடையியல் சார்ந்து என மூன்று முறையிலும் பேராசிரியரது மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் அமைந்துள்ளதால் அவரது மொழிபெயர்ப்புத் திறன் சிறப்பானதாகவும், நல்ல முறையிலும் அமைந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

மொழிபெயர்ப்பினால் ஒரு புதிய கருத்தை ஒரு மொழியினரிடம் உருவாக்குவதே சிறந்த தன்மையாகும். இதனை,

> **Even though translation is an activity innate in human beings, such a quintessential characteristic of the human brain tends to be regarded as secondary in respect to the creation of a new concept. (Sarah et.al. p. 49)**

என்ற கூற்றின் வழி அறியலாம். இவ்வாறு புதிய கருத்தை மக்களிடம் உருவாக்குவதும் மொழிபெயர்ப்பாளரின் மொழிபெயர்ப்புத் திறன்களில் இன்றியமையாததாகும். பேராசிரியர் அவர்களும் வேமனாரின் ஆய்வு நூலை மொழிபெயர்த்ததன் மூலமும் *சி. ஆர். ரெட்டி* என்ற ஆய்வு நூலை மொழிபெயர்த்ததன் மூலமும் அவர்களைப் பற்றிய புதிய கருத்தை தமிழ் மக்களிடம் உருவாக்கியுள்ளார். இதன்மூலம் பேராசிரியரின் மொழிபெயர்ப்புத் திறனை அறியலாம்.

**முடிவுரை**

பேராசிரியர் அவர்கள் மொழிபெயர்ப்பிற்குரிய அனைத்துத் நெறிமுறைகளையும், கொள்கைகளையும் நோக்கத்தையும் பின்பற்றி மொழிபெயர்ப்புச் செய்துள்ளார் என்பதையும், மொழிபெயர்ப்பாளருக்குரிய தகுதிகளை ஒருங்கே பெற்றுள்ளார் என்பதையும் மேற்கண்ட ஆய்வின் மூலம் உணரலாம். மேலும் பேராசிரியர் அவர்களது மொழிபெயர்ப்பு நூல்கள் அவரது மொழிபெயர்ப்புத் திறனை வெளிப்படுத்தும் விதத்தில் அமைந்துள்ளன என்பதையும் கண்டோம். எனவே பேராசிரியர் அவர்களது மொழிபெயர்ப்புத் திறன் போற்றுதற்கும் சிறப்பிற்கும் உரியதாகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] இராமசுவாமி. மு, முத்தையா. இ, சேதுபாண்டியன். தூ. (தொ). *இலக்கணமும்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*மொழியியலும் (ஆய்வுக்கட்டுரைகள்).* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற்பதிப்பு, 2019.

[2] இளம்பாரதி. *மொழிபெயர்ப்பு என்ற ஊடகம்.* அன்னம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2019.

[3] சண்முக வேலாயுதம்.சு. *மொழிபெயர்ப்பியல்.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முதற்பதிப்பு, 1985.

[4] சந்திரன்.வீ. *மொழிபெயர்ப்புச் சிக்கல்களும் தீர்வுகளும்.* சாரதா பதிப்பகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2013.

[5] சாரா மைத்லன்ட் (ம) சூசன் தீட்ஸ் (ம) டேவிட் ஹேத். "கலாச்சார மொழிபெயர்ப்புகளாக பன்னாட்டு நிறுவனங்கள் பன்முகத்தன்மை மற்றும் உள்ளடக்கத்தில் உள்ள வேறுபாட்டை விளக்குதல்." *மொழிபெயர்ப்பு மற்றும் மொழி ஆய்வுகள் இதழ்*, தொகுதி 3, வெளியீடு 2, DOI: 10.48185/v3i2.525, 2022.

[6] சிவகாமி. எஸ். *பிப்ளியோகிராபி ஆன் டிரான்ஸ்லேசன்.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 2008.

[7] சுப்பிரமணியம்.அ.க. *மொழிபெயர்ப்புக் கலை.* விவேகானந்த சபைப் புத்தகசாலை, கொழும்பு, முதற்பதிப்பு ,1954.

[8] சுப்புரெட்டியார்.ந. (*வேமனார்- என். ஆர். நார்லா) தமிழாக்கம்.* சாகித்திய அகாதெமி, புது டெல்லி, முதற்பதிப்பு, 1978.

[9] சுப்புரெட்டியார்.ந. *(சி.ஆர்.ரெட்டி - டி. ஆஞ்சனேயலு) தமிழாக்கம்.* சாகித்திய அகாதெமி, புதுடெல்லி, முதற்பதிப்பு, 1981.

[10] சுப்புரெட்டியார்.ந. *அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல், தமிழாக்கம்*, ஓரியண்ட் லாங்மன்ஸ், முதற்பதிப்பு, 1969.

[11] சுப்புரெட்டியார்.ந. *நினைவுக் குமிழ்கள்,* முதல் பகுதி. பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1988.

[12] மார்டினோ கேப்புசியோ மற்றும் அலெக்சான்ட்ரா. "தியேட்டரில் நெப்போலிடன் பேச்சுவழக்கு மொழிபெயர்த்தல் கலாச்சார இடமாற்றத்தின் சிக்கல்கள்." *மொழிபெயர்ப்பு ஆய்விதழ்.* தொகுதி 3, வெளியீடு 1, ISSN: 1555-8614, 2011.

[13] முருகன்.இரா.சு. *மொழிபெயர்ப்பு நிகரன்கள்.* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2012.

[14] மோகனா.இரா. *மொழிபெயர்ப்பு நூற்றொகை தொகுதி – 3.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முதற்பதிப்பு, 2014.

[15] வளர்மதி. மு. *மொழிபெயர்ப்புக் கலை.* திருமகள் நிலையம், சென்னை, ஏழாம் பதிப்பு, 2014.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**References**

[1] Ramaswamy. M, Muthaiya. E. Sedupandian. T (Compiled), *Ilakkanamum Mozhiyiyalum* (Aaivu Katturaigal). New Century Book House, Chennai, First Edition, 2019.
[2] Ilambharathi. *Mozhipeyarpu Endra Odhagam*. Annam, Tanjore, First Edition, 2017.
[3] S. Sanmuga Velayudam. *Mozhipeyarpiyal*. Ulaga Tamilaraichi Niruvanam, Chennai, First edition, 1985.
[4] Sandhiran.V. *Mozhipayarpu Sikkalgalum Thirvugalum*. Saratha Pathipagam, Chennai, First Edition, 2007.
[5] Sarah Maithland, Susanne Tietze, David Heath. “Multinational Corporations as Cultural Translators: Interpreting Difference in Diversity and Inclusion.” *Journal of Translation and Language Studies*. Volume 3, Issue 2, 2022. DOI: 10.48185/v3i2.525.
[6] Sivakami. S. *Bibliography on Translations*. Ulaga Thamizharaichi Kazhagam, Chennai, First Edition, 2008.
[7] Subramaniyam. A. K. *Mozhipayarpu Kalai*. Vivekanandhasabai Puthagasalai, Columbu, First Edition, 1954.
[8] Subbu Reddiar. N. (N.R. Narla – *Vemanar*) Translation. Sahitya Academy, New Delhi, First Edition, 1978.
[9] Subbu Reddiar. N. (D. Anchaneyulu – *C.R. Reddy*) Translation. Sahitya Academy, New Delhi, First Edition, 1981.
[10] Subbu Reddiar. N. *UNESCO Source Book for Science Teaching* – Translation. Orient Lonmens, First Edition – 1969.
[11] Subbu Reddiar. N. *Ninaivu Kumizhgal*. First Part. Pari Nilaiyam, Chennai, First Edition,1988.
[12] Martino Cappuccio & Alessendra. “Translating Neapolitan Dialect in Theatre: Problems of Cultural Transfer.” *Translation Studies Journal*. Volume 3, Issue 1, ISSN: 1555-8614, 2011.
[13] Murugan. R. S. *Mozhipeyarpu Nigarangal*. Tamizh Palgalaikkazhagam, Tanjore, First Edition, 2017.
[14] M. Valarmathi. *Mozhipayarpu Kalai*. Thirumagal Nilayam, Chennai, Seventh Edition, 2014.
[15] Mogana. R. *Mozhipayarpu Noorthogai. Thoguthi - 3*. Ulaga Tamilaraichi Niruvanam, Chennai, First Edition – 2014.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் திறனாய்வில் கவிமணி

## Kavimani in Professor N. Subbu Reddiar's Review

**சி. இராகினி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**S. Rahini,** Assistant Professor of Tamil, Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-5993-6557**
**DOI: 10.5281/zenodo.7251391**

**Abstract**

*Kavimani is one of the most admired twentieth century poets in the literary world after Bharathi and Bharathidasan. The evaluation of Kavimani Desikavinayakam Pillai has been done by Prof. N. Subbu Reddiar. Therefore, this review article is based on the book "An Evaluation of Kavimani's Tamil Work" by Prof. N. Subbu Reddiar. The book reveals the potential of two personalities. Prof. N. Subbu Reddiar's performance skills and Kavimani's Tamil works are clearly explained. Prof. N. Subbu Reddiar states that Kavimani's Tamil works are suitable for children education. Following Sundarar's "Thiruthonda Thogai" which explained the greatness of other poets, Kavimani also sung about the pride of the poets. So, he was considered as the one who cherished Tamil tradition. The poem which Kavimani wrote for Bharathiyar appraises the value of criticism so Kavimani is exaggerated as the poet who gave the poem as a criticism. He also states that Kavimani instills human values through nature. Prof. N. Subbu Reddiar considers Kavimani is a great philosopher and theologian. He appreciates Kavimani's poem as it tends the reader to visualize what they read. He also compliments Kavimani as he presents his poem being fascinated by the nature. In this way, Prof. N. Subbu Reddiar has reviewed Kavimani's Tamil work with his descriptive, analytical, compilation, comparative and psychological critiques and he also had the ability to interpret the poet's vision in Tamil that is based on a number of factors such as being a reviewer, as well as being an elite scholar, with an in-depth knowledge of literature, the ability to penetrate aesthetic sense, the ability to see what is in literature, the multifaceted scholarship, and the neutrality of likes and dislikes. Hence, this article explores the critical views of Prof. N. Subbu Reddiar on the works and ideals of Kavimani Desikavinayakam Pillai.*

**Keywords:** Kavimani, Professor N. Subbu Reddiar, Review.

**ஆய்வுச்சுருக்கம்**

*இலக்கிய உலகில் இருபதாம் நூற்றாண்டு கவிஞர்கள் வரிசையில் பாரதி மற்றும் பாரதிதாசனை அடுத்து போற்றக்கூடிய சிறப்பினைப் பெற்றவர் கவிமணி. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைப் பற்றிய மதிப்பீடு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. அதனால் பேராசிரியர் அவர்களின் "கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு" என்ற நூலினை அடிப்படையாகக் கொண்டு இவ்வாய்வு கட்டுரை அமைகிறது. "கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு" என்ற இந்நூலின் மூலம் இரண்டு ஆளுமைகளின் திறனும் வெளிப்படுகின்றன. அதாவது கவிமணி அவர்களின் தமிழ்ப்பணியும், பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் திறனாய்வு திறனும் தெற்றென விளக்கப்படுகிறது. கவிமணி*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அவர்களின் தமிழ்ப்பணி பேராசிரியர் பார்வையில், குழந்தை கல்விக்கு ஏற்றதாக உள்ளது. சுந்தரர் எவ்வாறு தன்னுடைய திருத்தொண்ட தொகையின் மூலம் புலவர்களின் சிறப்பை பாடினாரோ அதுபோல கவிமணியும் பல புலவர்களைப் பற்றி பாடி மரபைப் போற்றுபவராக உள்ளார் என்று குறிப்பிடுகிறார். பாரதியைப் பற்றி கவிமணி எழுதிய ஒரு கவிதை திறனாய்வுக்கு உண்டான தகுதியைப் பெறுகிறது. அதனால் கவிதையை திறனாய்வாக தந்த கவிஞர் கவிமணி என்பதை விளக்குகிறார். இயற்கையின் வழி மனித பண்பைக் காட்டுபவர் கவிமணி என்கிறார். சமூகநலச் சிந்தனையாளராகவும், இறைபக்திக் கொண்டவராகவும் கவிமணி உள்ளார் என்கிறார். கவிமணியின் கவிதைகள் மனக்கண்ணில் காட்சியாக நிற்க கூடியவை என்று பாராட்டுகிறார். இயற்கை இன்பத்தை அனுபவித்து அதன் வழி தன் கவிதையைத் தந்தவர் கவிமணி என்று போற்றுகிறார். இவ்வாறு கவிமணி அவர்களின் தமிழ்ப்பணியை மதிப்பிடும் பொருட்டு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கவிமணியின் கவிதைகளை விளக்கமுறை, பகுப்புமுறை, தொகுப்பு முறை, ஒப்பீட்டு முறை, உளவியல் முறை ஆகிய ஆய்வியல் நெறிமுறைகளைத் திறனாய்வுக்கு உட்படுத்தியுள்ளார். அதோடு ஒரு தேர்ந்த திறனாய்வாளனுக்கு இருக்க வேண்டியத் தகுதிகளான திறனாயும் இலக்கியத்தைப் பற்றிய ஆழ்ந்த அறிவு, எதனையும் ஊடுருவி நோக்கும் திறன், இலக்கியத்தில் உள்ளதை உள்ளவாறு காணும் திறன், பலநூற் புலமை, விருப்பு வெறுப்பின்றி நிற்கும் நடுநிலைத்தன்மை போன்ற சில கூறுகளின் அடிப்படையில் ந.சுப்புரெட்டியார் அவர்களின் திறனாயும் திறனை ஆராய்வதாகவும் இக்கட்டுரை அமைகிறது.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், திறனாய்வு, கவிமணி.

**முன்னுரை**

கவிதை இலக்கியத்தில் தனக்கென தனி முத்திரைப் பதித்தவர்கள் மகாகவி சுப்பிரமணிய பாரதி மற்றும் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள். அந்த வரிசையில் தமிழ் இலக்கிய உலகில் மிகவும் புகழ்ந்து பேசக் கூடிய கவிஞர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள். கவிதை எவ்வாறு இருக்க வேண்டும் என்று கவிதைக்கு இலக்கணம் சொன்னவர் கவிமணி அவர்கள். கவிமணி கவிதைக்கு சொன்ன இலக்கணம், உள்ளத் துள்ளது கவிதை - இன்ப உருவெ டுப்பது கவிதை தெள்ளத் தெளிந்த தமிழில் – உள்ளம் தெளிந்து ரைப்பது கவிதை என்ற வரிகள் கவிதை என்றால் என்ன என்பதை எளிமையாக விளக்கக்கூடியது. கவிதைக்கு சொன்ன இப்பாடல் மட்டும் அல்லாமல் கவிமணி அவர்களின் பிற பாடல்கள் அனைத்தும் அந்த எளிமைத் தன்மைக்கு உரித்தே. அத்தகு கவிஞர் பெருமானின் கவிதைகளைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் திறனாய்வுக்கு உட்படுத்தி உள்ளார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

“கவிமணியின் தமிழ்ப் பணிகள் – ஓர் மதிப்பீடு” என்பது அத்திறனாய்வு நூல். ஆதலின் அந்நூலின் வழி பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் பார்வையில் கவிமணியின் தமிழ்ப் பணியும், பேராசிரியரின் திறனாய்வுத் திறனும் ஒருங்கே காட்டப்படுவது இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

**திறனாய்வு**

திறனாய்வு என்பதற்கு பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களை முன்வைத்துள்ளனார். அவற்றுள் திறனாய்வு என்பதற்கு,

> **யார் ஒருவன் ஒரு பாடலையோ அன்றி ஓர் உரைநடையையோ ஆக்கியிருப்பின், அதனைக் கற்ற ஒருவன் அது சிறந்தது என்றோ, மட்டமானது என்றோ கூறித்தான் இருப்பான். அவ்வாறு ஒருவன் கூறும்பொழுது ‘திறனாய்வு’ அங்கே தோன்றி விடுகிறது. ஆகவே, ‘திறனாய்வு’ என்று கூறினால் ‘முடிவு கூறல்’ அல்லது ‘மதிப்பிடல்’ அதனுள் அடங்கியிருத்தல் கண்கூடு. (*இலக்கியக் கலை*, ப.22)**

என்ற நிலையில் திறனாய்வுக்கு விளக்கம் தருகிறார் அறிஞர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள். டாக்டர் தா.ஏ.ஞானமூர்த்தி அவர்கள்,

> **திறனாய்வு என்பது குறிப்பிட்ட இலக்கியத்தை விளக்கி அதன் மதிப்பினை அளந்து அறிகிறது. அதாவது, அவ்விலக்கியத்தைப் பற்றித் தெளிவாகச் சிந்திக்கச் செய்கிறது. (*இலக்கியத் திறனாய்வியல்*, ப.10)**

என்ற விளக்கத்தைத் தருகிறார். தி.சு.நடராசன் அவர்கள்,

> **இலக்கியத்தைப் புரியச் செய்தல், இலக்கியத்தோடு சம்பந்தப்பட்டவற்றை அறியச்செய்தல், இலக்கியத்தைப் பிறர்க்குக் கொண்டு செல்லுதல், இலக்கியத்திற்கும் வாசகனுக்கும் நடுவே இடைவெளிகளைக் குறைத்தல் என்ற பொதுவான பொருளில் திறனாய்வை நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். (*திறனாய்வுக் கலை*, ப.250)**

என்ற கருத்துக்களை முன்வைக்கின்றார். இவ்வாறு தமிழக அளவில் திறனாய்வுத் துறையில் சிறப்பிடம் பெற்று விளங்கக்கூடிய அறிஞர்களான அறிஞர் அ.ச.ஞானசம்பந்தன், அறிஞர் தா.ஏ.ஞானமூர்த்தி, அறிஞர் தி.சு.நடராசன் ஆகியோர் திறனாய்விற்கு தந்த விளக்கங்களின் அடிப்படையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் திறனாய்வுத்திறன் எவ்வாறு வெளிப்படுகிறது என்பதை இனி அறியலாம்.

**ந. சுப்புரெட்டியாரின் பார்வையில் கவிமணி**

**குழந்தைக் கல்விக்கு ஏற்றப்பாடல்களைத் தந்தவர்**

கவிமணி அவர்களின் குழந்தைப் பாடல்கள் முத்தந் தா, தாலாட்டு, பள்ளி எழுச்சி, பேச்சு பயிற்சி, காக்காய் பற்றியவை, கோழியைப் பற்றியவை, கிளியை அழைத்தல் பற்றியவை, நாயைப் பற்றியவை, பாண்டி ஆடுதல் பற்றியவையாக உள்ளன என்பது பற்றி முதலில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ந.சுப்புரெட்டியார் அவர்கள் விளக்கம் அளிக்கிறார். பின்னர் கவிமணியின் குழந்தைப் பாடல்களில் ‘முத்தந் தா’ என்ற தலைப்பின் கீழ் அமைந்துள்ள பாடல்களை, பிள்ளைப் பருவத்தின் ஒரு பருவமான முத்தப்பருவத்திற்கு இணையாக எடுத்துக்காட்டும் நோக்கில், பிள்ளைத் தமிழ் ஆசிரியர்களான பகழிக் கூத்தர், குமர குருபரர், அந்தகக்கவி வீரராகவ முதலியார், கந்தப்ப தேசிகர் ஆகியோர் பாடல்களோடு ஒப்பீட்டுக் காட்டுகிறார்.

**முத்தம் தனக்கு விலையில்லை**
**முருகா முத்தம் தருகவே**
**முத்தம் சொரியும் கடல் அலைவாய்**
**முதல்வா! முத்தம் தருகவே (*திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்,* பா.1)**

என்பது பகழிக் கூத்தரின் திருச்செந்தூர் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழில் இடம்பெற்ற பாடல். அதேப் பாணியில் கவிமணி

**கண்ணே! மணியே! முத்தந்தா**
**கட்டிக் கரும்பே முத்தந்தா**
**வண்ணக் கிளியே! முத்தந்தா**
**வாசகக் கொழுந்தே முத்தந்தா (*மலரும், மாலையும்,* பா.293)**

என்று பாடியிருக்கிறார். இதன் வழி ந.சுப்புரெட்டியார் அவர்களின் பார்வையில் கவிமணி அவர்கள் *பிள்ளைத்தமிழ்* இலக்கிய வடிவத்தின் எளிமையை அடுத்த நூற்றாண்டு மக்களுக்கு கடத்திச் சென்ற ஒரு ஆற்றலாகக் காட்டப்படுகிறார்.

கவிமணியின் தாலாட்டுப் பாடல்கள் பக்தி இலக்கியங்களையும், ஞானச் செல்வர்களையும், மாபெருங் கவிஞர்களையும் அறிமுகம் செய்யக் கூடியதாகவும் அமைந்திருப்பதை எடுத்துக் காட்டியுள்ளார். அதோடு கவிமணியின் தாலாட்டு பாடல்களுக்கும், பாரதிதாசனின் தாலாட்டு பாடல்களுக்கும் உள்ள ஒப்பீட்டையும் தருகிறார்.

**காப்பார் கடவுள் உமைக் கட்டையில்நீர் போகுமட்டும்**
**வேர்ப்பீர், உழைப்பீர்என உரைக்கும் வீணருக்கும்**
**மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்டவந்த**
**தேனின் பெருக்கே, என் செந்தமிழே! கண்ணுறங்கு**

**(பாரதிதாசன் தாலாட்டுப் பாடல்கள், ப.72)**

என்பது பாவேந்தரின் தாலாட்டு பாடல்.

**மாங்கனியும், நல்ல வருக்கைப் பலாக்கனியும்**
**வாங்கியுன் அம்மான் வருவார் அழவேண்டாம்**
**கண்ணுறங்கு கண்ணுறங்கு கண்மணியே கண்ணுறங்கு (மலரும் மாலையும், பா.228)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பது கவிமணியின் தாலாட்டு பாடல். இரண்டையும் ஒப்பீட்டு நோக்கும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், பாரதிதாசனின் தாலாட்டு பாடல்கள் இறை மதிப்பு, சீர்த்திருத்தக் கருத்துக்கள் கொண்டவை என்றும், கவிமணியின் தாலாட்டுப் பாடல்கள் அழுகின்ற குழந்தையை உறங்க வைக்கும் பாணியில் அமைந்தவை என்றும் ஒப்பீட்டு முடிவைத் தருகின்றார். மேலும், கவிமணியின் குழந்தைப் பாடல்கள் பல பேச்சுப் பயிற்சிக்கு ஏற்ற பாடல்களாக உள்ளன என்பதை எடுத்தக் காட்டுகிறார்.

**தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு – அங்கே**
**துள்ளிக் குதிக்குது கன்றுக் குட்டி (*மலரும் மாலையும்*, பா.265)**

என்ற பாடலும்,

**காக்காய்! காக்காய்! பறந்துவா**
**கண்ணுக்கு மை கொண்டு வா**
**கோழி! கோழி! கூவிவா**
**குழந்தைக்குப் பூ கொண்டுவா (*மலரும் மாலையும்*, பா.240)**

எனப் பல பாடல்களை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எடுத்துகாட்டுகிறார். மேனாட்டு அறிஞர்களான ரூசோ, ஃபிராபெல், பெஸ்டலாஸ்லி, மாண்டிசோரி ஆகியோர் உளவியல் அடிப்படையில் குழந்தைக் கல்விக்கான வழிமுறைகளை சொன்னவர்கள். அதாவது இயற்கை வழியிலான அனுபவங்களின் வழி இயற்கையாகவே கற்கும் நிலையிலேயே குழந்தைகள் முழு அறிவுத் திறனைப் பெறுகின்றன என்ற அவர்களின் கருத்துக்களை எடுத்துக்காட்டி கவிமணியின் கவிதைகளும் அத்தகு இயற்கைத் தன்மைக் கொண்டவை என்பதை விளக்குகிறார். இதன்வழி கவிமணியின் கவிதைகள் குழந்தைக் கல்விக்கு ஏற்புடையது என்பதை தெளிவுப்படுத்துகிறார். இவ்வாறு கவிமணியின் குழந்தைப் பாடல்களைத் திறனாய்வுச் செய்யும் போது ஒரு தேர்ந்த திறனாய்வாளனுக்கு இருக்க வேண்டிய தகுதியான எதனையும் ஊடுருவி நோக்கும் திறன் என்பது ந.சுப்புரெட்டியாரிடம் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

**கவிமணியின் தேசியப் பாடல்கள்**

கவிமணியின் தேசியப் பாடல்களைப் பற்றிக் குறிப்பிடும் போது, பாரதியார், பாரதிதாசன் வாழ்ந்த காலத்தில் அவர்களின் சூழலுக்கு ஏற்ற வகையில் அவர்கள் பாடிய பாடல்களில் தேசப் பக்தியின் உணர்வு மிளிர்வதை எடுத்துக்காட்டி விளக்கிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், கவிமணியின் தேசபக்தி பாடல்களில் அத்தகைய உணர்வு நிலையைப் பார்க்க முடியவில்லை என்கிறார். அதற்கு காரணம் கவிமணி வாழ்ந்த சூழல் என்றும் விளக்குகிறார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கூறும் இதே கருத்தை அறிஞர் எஸ்.வையாபுரிப்பிள்ளை அவர்களும்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**கவிமணியின் காலம், சூழல் குறித்து குறிப்பிடுகையில் பாரதியின் கவிதைகளில் காணும் தேச உணர்ச்சி கவிமணியின் கவிதைகளில் இல்லை என்றும், அதற்குக் காரணம் நேரடி காலனி ஆட்சியில் அல்லாமல் சுதேச மன்னர் ஆட்சியின் கீழ் இருந்த வாழ்க்கை நிலைமையே காரணம் என்று விளக்குகிறார். (பெருமாள்)**

இருப்பினும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தேசபக்திப் பற்றிய கவிமணியின் பாடுபொருட்கள் சிறப்பானவையே என்பதையும் எடுத்துக்காட்டுகிறார். அவ்வகையில் கவிமணியின் தேசியப் பாடல்கள் ஊழல் நிறைந்த அரசாங்கத்தையும், போட்டி போடும் அரசியல் கட்சிகளின் நிலையையும் எடுத்துக்கூறும் பாங்குடைத்து என்று விளக்குகிறார்.

மேற்கண்ட கருத்துக்களின் வழி, எடுத்துக் கொண்ட நூலைப் பற்றி திறனாய்வு செய்யும் போது விருப்பு வெறுப்பின்றி நடுவு நிலைத் தன்மையுடன் குற்றங் குறைகளைச் சுட்டிக் காட்டுவதும் ஒரு திறனாய்வாளனின் கடமையாகும். அவ்வகையில் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நடுவுநிலைத் தன்மை இங்கு புலனாகிறது.

**கவிமணியின் தெய்வத் தமிழ் பாடல்கள்**

கவிமணியின் தெய்வத் தமிழ் பாடல்கள், பல கோணங்களில் பிற அறிஞர் பெருமக்களோடு ஒப்பீட்டு நோக்கத் தகுந்தது என்பதை எடுத்துக்காட்டுகிறார். அவ்வகையில் முதலில், கவிமணியின் தெய்வத் தமிழ் பாக்கள் அனைத்தும் அப்பர் சுவாமிகளுடன் ஒப்பீட்டு பார்க்கத்தக்கது என்கிறார். அடுத்து கவிமணி இறை பக்திப் பாடல்களை நிறைவு செய்யும் விதம் தாயுமானவர் மற்றும் குமரகுருபரர் தம் பாடல்களை நிறைவு செய்யும் பாணியில் அமைந்துள்ளது என்கிறார்.

**ஆணிப்பொன் வில்லிபுணர் மாணிக்க வல்லியுடன்**
**அம்புலி ஆட வாவே (*மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்*, பா. 64)**

என்பது குமரகுருபர அடிகளின் பாடலின் முடிவு.

**தென்னிரத புரிவாழும் என்னரிய செல்வமே!**
**தேவிஅழ கம்மை உமையே (*மலரும், மாலையும்*, பா. 27)**

என்பது கவிமணி அவர்களின் பாடலின் முடிவு என ஒப்பீட்டு காட்டுகிறார். அதுபோல் கவிமணி, இறைவனை நிந்திக்கும் பாணியில் அமைத்துள்ள பாடல்கள் காளமேகப் புலவரின் பாடல் போல் அமைந்திருப்பதை எடுத்துக் காட்டுகிறார். கவிமணி கலைமகள் பற்றி பாடிய பாடல்கள், குமர குருபரின் சகலகலாவல்லிப் பாடல்களையும், கம்பனின் *சரசுவதி அந்தாதி* பாடல்களையும் விஞ்சும் முறையில் அமைந்தவை என்றும் பாராட்டுகிறார். மேலும் மீராபாய், இந்தியில் பாடிய பாடல்களை கவிமணி தமிழாக்கம் செய்துள்ளார். அத்தகு பாடல்களை பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான ஆண்டாள் பாடிய பாணியில் கவிமணி அமைத்துள்ளமையை ஒப்பு நோக்கி காட்டுகிறார். மீராபாய் பாடல்களிலிருந்து ஆண்டாள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மட்டுமல்லாமல் கண்ணப்ப நாயனார், நம்பியாண்டர் நம்பி, அப்பரடிகள், திருப்பாணாழ்வார், பாரதி ஆகியோர் பற்றிய காட்சிகள் மற்றும் தாக்கங்கள் மீராபாய் பாடல்களிலும் காணப்படுவதை ஒப்பு நோக்கியுள்ளார். மேலும் கவிமணி அவர்கள் புத்தபிரானைப் பற்றி பாடிய பாடல்கள் அனைத்தும் மனக்கண்ணில் காட்சியாக நிற்க கூடியவை என்பதற்கு தன்னையைச் சான்றாக காட்டியுள்ள திறம் சிறப்பிற்குரியதாக காணப்படுகிறது. மேற்கண்ட கருத்துக்களின் வழி ந. சுப்புரெட்டியார் அவர்களின் பலநூற் புலமைத்திறனும், எடுத்துக்கொண்ட இலக்கியத்தில் அவருக்குள்ள ஆழ்ந்த அறிவும் தெளிவாக புலப்படுவதைக் காணமுடிகின்றது.

**கவிமணியின் திறனாயும் திறன்**

‘பாரதியும் பட்டிக்காட்டானும்’ என்ற தலைப்பில் கவிமணி பாரதியைக் குறித்து ஒரு கவிதையைப் படைத்துள்ளார். அக்கவிதை முழுவதும் ஒரு திறனாய்வாகவே மிளிறுவதை ந.சுப்புரெட்டியார் அவர்கள் எடுத்துக்காட்டுகிறார்.

> **திறனாய்பவரின் உண்மையான செயல் அழகையும், உண்மையையும் காண்பதேயாகும் என்பதைத் தெளிவாக உளங்கொள்ளுதல் வேண்டும். (*கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு*, ப.83)**

என்பது ந.சுப்புரெட்டியாரின் கூற்று. அக்கூற்றிற்கு ஏற்ப கவிமணியும் பாரதியைக் குறித்து பாடிய அக்கவிதையில் அப்பண்பு மிளிறுவதை எடுத்துக்காட்டுகிறார்.

இலக்கியத்தில் குறிப்பாக உள்ளனவற்றை திறனாய்வாளன் விளக்கமாக எடுத்துரைத்தல் வேண்டும் என்பதற்கு இணங்க பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், கவிமணியின் ‘பாரதியும் பட்டிக்காட்டானும்’ என்னும் பாடலை வரிக்கு வரி குறிப்பாக உள்ள பாரதியின் பாடல்களையும், பட்டிக்காட்டானாக கவிமணி வெளிப்படுவதையும் விளக்கிச் செல்லும் நயம் சிறப்பிற்குரியதாக காணப்படுகிறது.

**கவிமணி அறிஞர்கள் பற்றி பாடியவை**

சுந்தரர், நம்பியாண்டர் நம்பி, சேக்கிழார் என இவர்களை பின்பற்றி பாரதி, பாரதிதாசன் எவ்வாறு பல அறிஞர்கள், அடியார்கள் பற்றிய பல பாடல்களை பாடினார்களோ அதே போல கவிமணியும் பலரைப் பற்றி பாடியுள்ளார் என்பதை ஒரு வகைப்பாடாகவே பிரித்துக் காட்டுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். அதாவது உலகப் பெரியோர்கள், ஞானச் செல்வர்கள், புலவர் – கவிஞர் பெருமக்கள், நாட்டு நற்றொண்டர்கள், அறிஞர் பெருமக்கள், கலைஞர்கள் என்ற வகைப்பாட்டில் பல அறிஞர்கள் குறித்து கவிமணி பாடல்களை பாடியுள்ளார் என்று காட்டுகிறார். அவ்வரிசையில் கவிமணி தாயுமான அடிகளையும், இராமலிங்கப் பெருமான் பற்றியும் பாடல்களை பாடவில்லை என்ற குறிப்பையும் கண்டறிந்து கூறுகிறார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கவிமணியின் சமூக நலச் சிந்தனைகள்**

கவிமணி சமூக நலத்திற்காக பாடிய பாடல்களின் கருபொருள் ஒற்றுமை, சாதி வேற்றுமை, பெண்ணுரிமை, தீண்டாமை, தொழிலாளர் நலன், வேலையில்லாத் திண்டாட்டம், உடல் நலம் பேணல், மது விலக்கு போன்றவை ஆகும். கவிமணியின் பாடல்களில் காணப்படும் இத்தகு கருபொருள்கள் பிற ஆசிரியர்களின் பாடல்களோடு எவ்விதம் ஒத்துப் போகிறது என்பதையும் பேராசிரியர் காட்டுகிறார். அவ்வகையில் கவிமணி ஒற்றுமை பற்றி பாடிய பாடல்களை பாரதியாரின் பாடல்களோடு ஒப்பீட்டு காட்டுகிறார். அதுபோல கவிமணி பாடிய ஒவ்வொரு சமூகநலச் சிந்தனைக் கருத்துக்களையும் பாரதி, பாரதிதாசன், ஔவை, கலைவாணர், பிள்ளைப் பெருமான் அய்யங்கார், தொண்டரடிப் பொடியாழ்வார், வள்ளுவர் ஆகிய கவிஞர் பெருமக்களின் பாடல் கருத்தக்களோடு ஒப்பீட்டு காட்டுகிறார். இத்தகு ஒப்பீட்டின் வழி பேராசிரியர் அவர்களின் பலநூற் புலமையும், எடுத்துக் கொண்ட இலக்கியத்தைப் பற்றி மிகவும் நுணுக்கமாக ஆய்ந்து அறியும் திறனும் வெளிப்படுவதைக் காணமுடிகிறது. இவை தவிர்த்து கவிமணியின் பண்பாட்டு கூறுகள், மக்கட் பண்புக் கோட்பாடு, இயற்கை வழி இன்பம், கவிமணியின் பாடல்களில் காணப்படும் படிமங்கள் எனத் இத்தலைப்புகளின் கீழும் கவிமணியின் பாடல்களை பிற ஆசிரியர்களோடு ஒப்பீட்டு காட்டியும், தேவையான இடங்களில் தகவல்களை வகைபடுத்தியும், பகுத்துகாட்டியும் ஆங்காங்கே பல புள்ளி விவரங்களையும் காட்டி மதிப்பீடுகிறார்.

**பேராசிரியரின் திறனாய்வுத் திறன்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், கவிமணி குறித்த இம்மதிப்பீட்டு நூலில் கவிமணி குறித்து எத்தகு மதிப்பீடுகளை முன்வைக்கிறார் என்பதை மேற்கண்ட கருத்துகளின் வாயிலாக அறிந்து கொள்ளும் அதே நேரத்தில், பேராசிரியர் அவர்களின் திறனாய்வு திறனும் இந்நூலின் வாயிலாக தெளிவாகப் புலப்படுகிறது. அதாவது ஒரு தேர்ந்த திறனாய்வாளனுக்கு இருக்க வேண்டிய பண்புகளான, திறனாயும் இலக்கியத்தைப் பற்றிய ஆழ்ந்த அறிவு, எதனையும் ஊடுருவி நோக்கும் திறன், இலக்கியத்தில் உள்ளதை உள்ளவாறு காணும் திறன், பலநூற் புலமை, விரும்பு வெறுப்பின்றி நிற்கும் நடுநிலைத் தன்மை போன்ற கூறுகள் ந.சுப்புரெட்டியாரிடம் வெளிப்படுவதை இம்மதிப்பீட்டு நூல் மூலம் காணமுடிகிறது. இவற்றோடு ஒவ்வொரு தலைப்பின் கீழும் கவிமணி குறித்து மதிப்பீடு செய்யும் போது பல்வேறு ஆய்வு அணுகு முறைகளை கடைப்பிடித்திருப்பதையும் காண முடிகிறது. அவ்வகையில் விளக்க முறை ஆய்வு, ஒப்பீட்டு ஆய்வு, உளவியல் முறை ஆய்வு, தொகுப்பு முறை ஆய்வு, பகுப்பு முறை ஆய்வு ஆகிய ஆய்வியல் அணுகு முறைகளை இம்மதிப்பீட்டு நூலில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கையாண்டுள்ளார் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**முடிவுரை**

"கவிமணியின் தமிழ்ப்பணி – ஒரு மதிப்பீடு" என்னும் இந்நூலின் மூலம் கவிமணியின் தமிழ் பணிகள் பேராசிரியர் பார்வையில் எத்தகு மதிப்பீட்டை பெற்றுள்ளது என்பது குறிக்கப்பட்டுள்ளது. அவ்வகையில் கவிமணியின் பாடல்கள் குழந்தை கல்விக்கு ஏற்றதாக உள்ளது. கவிமணி மரபை பேணுபவர், இயற்கையின் வழி மனித பண்பைக் காட்டாக் கூடியவர், கவிதைகளை மனக்கண்ணில் காட்சிகளாக நிறுத்தக் கூடியவர் என கவிமணியின் பல தன்மைகளை அவருடைய கவிதையின் வாயிலாகவே எடுத்துக்காட்டுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். அதோடு இதன் வழியாகவே பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் திறனாய்வு திறனும் தெற்றென புலனாகிறது. இதனால், "கவிமணியின் தமிழ்பணி – ஒரு மதிப்பீடு" என்னும் ந.சுப்புரெட்டியாரின் இந்நூல் திறனாய்வு எவ்வாறு செய்ய வேண்டும் என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டாகவே திகழ்கிறது எனலாம்.

**குறிப்பு நூல்கள்**

[1] குமரகுருபரர். *மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.* முல்லை நிலையம், சென்னை, மறுபதிப்பு, 2011.

[2] சுப்புரெட்டியார். ந. *கவிமணியின் தமிழ்ப்பணிகள் – ஒரு மதிப்பீடு.* கலைஞன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2002.

[3] ஞானசம்பந்தன். அ. ச. *இலக்கியக்கலை.* முல்லை நிலையம், சென்னை, மறுபதிப்பு, 2016.

[4] ஞானமூர்த்தி. தா. ஏ. *இலக்கியத் திறனாய்வியல்.* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு – 2011.

[5] தேசிக விநாயகம் பிள்ளை. *மலரும் மாலையும்.* பாரி நிலையம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1960.

[6] நடராசன்.தி.சு. *திறனாய்வுக் கலை கொள்கைகளும் அணுகுமுறைகளும்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, பன்னிரெண்டாம் பதிப்பு, 2018.

[7] பகழிக்கூத்தர். *திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.* சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம், தஞ்சாவூர், முதற்பதிப்பு, 2015.

[8] பாரதிதாசன். *பாரதிதாசன் தாலாட்டுப்பாடல்கள்.* கவிஞர் கழகம், ஆர்க்காடு, பதிப்பு, 2000.

[9] பெருமாள்.அ.கா. *கவிமணி வரலாற்றாய்வாளர்.* கீற்று இணையதளம், www.keetru.com, அக்டோபர் 2018.

**References**

[1] Kumaraguruparar. *Madurai Meenachiyammai Pillaithamizh.* Mullai Nilaiyam, Chennai, Reprint, 2011.

[2] Dr. N. Subbu Reddiar. *Kavimani's Tamil Works – Review.* Kalainan Pathippagam, First Edition –

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

2002.
[3] A. S. Gnanasambanthan. *Ilakkiya Kalai.* Mullai Nilaiyam, Chennai, Reprint, 2016.
[4] Dr. D. A. Gnanamoothi. *Principles of Literary Criticism.* Inthinai Pathippagam, Chennai, Reprint, 2011.
[5] Desikavinayakam Pillai. *Malarum Malaiyum.* Paari Nilaiyam, Chennai, Ninth Edition, 1960.
[6] T. S. Natarajan. *Thiranaivuk Kalai Kolkaigalum Anugumuraigalum.* New Century Book House, Chennai, 12th Edition, 2018.
[7] Pakazhikuthar. *Thiruchendur Pillaithamizh.* Saraswathi Mahal Library and Research Center, Thanjavur, First Edition, 2015.
[8] Bharathidasan. *Bharathidasan Thalattu Patalkal.* Kavinar Kazhkam, Aarkatu, First Edition, 2000.
[9] A. K. Perumal. *Kavimani Varalarru Ayvalar.* Keetru Inaiyatalam, www.keetru.com, October 2018.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் பார்வையில் வள்ளலாரின் அறிவியல் தமிழ் உயிரியக்கக் கோட்பாடுகள்

## Vallalarar's Scientific Tamil Biological Theories in the View of Professor

**முனைவர் இரா. கண்ணன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, உருமு தனலெட்சுமி கல்லூரி, திருச்சிராப்பள்ளி,
(பாரதிதாசன் பல்கலைக்கழகம் இணைவுப் பெற்றது), தமிழ்நாடு, இந்தியா.
**Dr. R. Kannan,** Assistant Professor in Tamil, Urumu Dhanalakshmi College,
(Affiliated to Bharathidasan University) Tiruchirappalli, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-3953-8786
**DOI: 10.5281/zenodo.7251398**

**Abstract**

*This article is based on the study of the great saint Vallalarar's ideas of scientific Tamil biological theories from the viewpoint of Professor N. Subbu Reddiar. Vallalar was the one who elicited the biological thoughts of the ancient Tamils and established the principle that all communities should live in harmony by eliminating caste, religion and race discrimination and establishing a pure moral code of reconciliation. He was considered the beacon of the nineteenth century to eradicate poverty. He was the first to wage war on poverty next to Manimegalai. His principle was to measure the universe through his works on philanthropy, individual morality, humanity, psychiatry, and the doctrines of the five principles through his works "Thiruvarupa" and "Manumurai Kandavasakam". Professor N. Subbu Reddiar is a great scholar of Divine Literature in Tamil. He has a moral taste for moral ethics and philosophy. He had widely studied the Bhakti literature of Tamil literature. He introduced many saints to Tamil readers and scholars. One such epic sail is the study of Vallalar. He had made the life and philosophy of Vallalar in front of the readers in a grasping way. Hence, this article ponders over the stance of Professor Reddiar on the ideals of Vallalar.*

**Keywords:** N. Subbu Reddiar and Vallalar, Scientific Tamil, Biological Principles.

**ஆய்வுச்சுருக்கம்**

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியர் பார்வையில் வள்ளலாரின் அறிவியல் தமிழ் உயிரியக்கக் கோட்பாடுகள் என்ற ஆய்வுபொருண்மையில் இக்கட்டுரை அமைகிறது. பழந்தமிழர்கள் வாழ்ந்த வாழ்வியல் சிந்தனைகளைக் கண்ட வள்ளலார் மக்களிடையே சாதி, மத, இனம் என்ற பாகுபாடு நீங்கிசமரச சுத்த சன்மார்க்க நெறியைநிறுவி அனைத்த சமூகத்தினரும் சமரசமாக வாழ வேண்டும் என்ற கொள்கையை உருவாக்கியவர். இவர் தான் கண்ட வறுமையை ஒழிக்க பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய மணிமேகலையாக கருதப்பட்டார். இவர்தான் மணிமேகலைக்கு அடுத்த நிலையில் வறுமையை ஒழிக்க முதல் போர்செய்தவர். அதே வழியில் ந.சுப்புரெட்டியர் வள்ளலாக கருதப்பட்டார். உயிரியத்தம் இவருடையகொள்கை ஜீவகாருண்யம், மனிதநேயம், ஐம்பூதகோட்பாடுகள் மூலம் அகிலம்*


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அனைத்திற்கும் தன் படைப்புகளான "திருவருட்பா", "மனுமுறை கண்டவாசகம்" ஆகிய படைப்புகளின் மூலம் அகிலத்தை அளந்து காட்டியவர். தமிழர் தம் இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனையினைக் கூறுவதோடு மட்டுமின்றி, அவற்றின் அறிவியல் சார்ந்த செய்திகளையும் இணைத்தே வள்ளலார் கூறியுள்ளார். ஆன்மிகச் சிந்தனைகள், அறிவியல் கோட்பாடுகள் சிந்தனைகள் போன்று உயிர் வாழ்வதற்குத் தேவையான யோகத்தையும் பசிப்பிணி நீக்கியும் வாழவேண்டும் என்று மனித நேயத்தைக் காத்த கடவுளாக வள்ளலார் திகழ்கிறார் என்பதைப் பற்றி இவ்வாய்வுக் கட்டுரையில் காண்போம்.*

**குறிப்புச் சொற்கள்:** ந.சுப்புரெட்டியர் மற்றும் வள்ளலார், அறிவியல் தமிழ், உயிரிரக்கக் கோட்பாடுகள்.

**முன்னுரை**

பண்டைய தமிழர் தம் இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனையினைக் கூறுவதோடு மட்டுமின்றி, அவற்றின் அறிவியல் சார்ந்த செய்திகளையும் இணைத்தே வள்ளலார் கூறியுள்ளார். ஆன்மிகச் சிந்தனைகள், அறிவியல் கோட்பாடுகள் சிந்தனைகள் போன்று உயிர் வாழ்வதற்குத் தேவையான யோகத்தையும் பசிப்பிணி நீக்கியும் வாழவேண்டும் என்று மனித நேயத்தைக் காத்த கடவுளாக வள்ளலார் திகழ்கிறார் என்பதைப் பற்றி இவ்வாய்வுக் கட்டு ரையில் காண்போம்.

உலகில் எண்ணிறந்த உயிரினங்கள் தோன்றி உயிர்தது மறையக் காண்கின்றோம். இவற்றில் மனித இனமே நாளும் உயர்ந்து பல்கிப் பல்துறையில் சிறக்கக் காண்கின்றோம். மனித மாண்பிற்கெல்லாம் அடித்தளமாக வள்ளலார் திகழ்கிறார் என்பதை அவர்களின் மனசாட்சியே செம்பில் களிம்புபோல் மாசு படர்ந்த உள்ளங்கொண்ட மனிதன் அவனிடம்,

**மாணங் குலம் கல்வி வன்மை அறிவுடைமை**
**தாளம் தவம் உயர்ச்சி தாளாண்மை – தேனின்**
**ரொல்லியர் மேல் காமுறுதல் பத்தும்**
**பசி வந்திடப் பறந்த போகும். (நல்வழி, பா. 26)**

என்னும் நல்வழிப் பாடல் மூலம் விளக்குகின்றன என்பதை நாடறிந்த உண்மையாகும். அவர்களின் ஐம்பூதக்கோட்பாடு, ஜீவகாருண்யம், உயிரிரக்கம், அறிவியல் சிந்தனைகள், பசிப்பிணி, மனிதநேயம், சமுதாயநெறி ஆகியனவற்றை இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.

**ஐம்பூதக் கோட்பாடு**

**நிலம் தீ நீர்வளி விசும்பொடைந்துங்**
**கலந்த மயக்கம் உலகம் ஆதலின். (தொல். மரபியல், நூ. 91)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்னும் தொல்காப்பியரின் வாக்கிற்கிணங்க வள்ளலார் திருவருட்பா அகவல் பகுதியில் ஐம்பூதங்களின் தன்மையினையும் செயலையும் மிகத்தெளிவாக விளக்குகிறார்.

**நிலம்**

நிலத்தை ஆய்வு செய்யும் மண்ணியல் அறிஞர்கள் நிலத்தை அடிப்படையாகக் கொண்டு அதன் தன்மைகளுக்கேற்ப நிலத்தில் காணப்படும் நுட்பங்களை ஆராய்ந்து வெளியிட்டுள்ளனர். அவ்வகையில் நிலத்தை,

1. **வன்புலம்**
2. **மென்புலம்**

என்று அறிவியல் அறிஞர்களின் கருத்தாகும். இவ்வகையில் வள்ளலாரின் நிலம் பற்றியச் சிந்த னைகள் மிக நுணுக்கமாக ஆராய்ந்து 'அருட்பெருஞ்ஜோதி அகவல்' என்னும் நூலில் விளக்குகிறார் வள்ளார். 'மண்ணியல் விரி' என்னும் தலைப்பின்கீழ் மண்ணியல் சிந்தனையைப் புலப்படுத்துகிறார். **மண்ணினிற்றிண்மை வகுத்ததிறக் கிடக்கை. (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 367)** என்னும் பாடல் வரியின் மூலம் மண்ணின் தன்மை உறுதிப்பாடு உடையதாகவும், கடினத்தன்மை உடையதாகவும் இருக்கும் என்பதை குறிப்பிட்டுள்ளார். மண்ணின் நிறம், சத்து, குளம், வகை போன்றவற்றை தம் படைப்புகளில் பதினெட்டு வரிகளில் அடிகளார் கூறுகிறார். **மண்ணினினாற்றம் வகுத்து பலவகை. (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 373)** என்ற வரியில் மண்ணின் குணத்தைச் சுட்டிக்காட்டுகிறார். மண்ணிற்கு மணம் (நாற்றம்) ஒரு குணமாகும் என்பதை வலியுறுத்துகிறார்.

**தீயின் தன்மை**

பழைய கற்காலத்தில் மனிதன் கண்டுபிடித்த அறிவியல் கண்டுப்பிடிப்பு நெருப்பாகும், நெருப்பைக் கொண்டு காட்டு விலங்குகளிடமிருந்து தன்னைக் காத்துக்கொள்ள தீ பயன்பட்டது. மேலும் உணவு வகைகளைச் சுட்டு உண்ணும் பழக்கமும் இதன்மூலம் ஏற்பட்டது. உயிர் வாழ்விற்குத் தீ இன்றியமையாதது என்பதை வள்ளலார் சுட்டியுள்ளார். மேலும் தீயின் தன்மை, பயன், இயற்கைத் தன்மை போன்றவற்றையும் வள்ளல் கூறுகிறார். **தீயிடை நிலைபோல திகழ்செயல் பலபயன் (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 453)** என்னும் அகவலில் தீயின் நிலை, செயல் பலவாகும் என்பதை மேற்காணும் வரிகளின் மூலம் அறியமுடிகிறது. **தீயுடை யுருக்கியல் சிறப்பியல் பொதுவியல் (அருட்பெருஞ்சோதி அகவல், பா.** 457) என்னும் வரியின் மூலம் தீ உருகும் தன்மையுடையது என்பதை வள்ளலார் மிகநுட்பமாக ஆராய்ந்துள்ளதை அறியமுடிகின்றது.

**நீர்**

உலகத்து உயிர்கள் நீர் இல்லாமல் (உயிர்) வாழ இயலாது என்பது உலகறிந்த உண் மையாகும். நீரானது சுவை, நிறமற்றது என்பது அறிவியல் அறிஞர்களின் கருத்தாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நீர்இன்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்**

**வான்இன்று அமையாது ஒழுக்கு. (குறள். 20)**

என்னும் வரிகளின் மூலம் உயிரினங்கள் வளர்வதற்கும், வாழ்வதற்கும் ஏற்ற இடமாகவும் அமைந்துள்ளது. நீரின் முக்கியப் பங்காகும் என்பதை நிரூபித்துக் காட்டியுள்ளார்.

**காற்று**

உயிர் காற்றின் அம்சமாகும். காற்றின்றி எவ்வுயிரும் உயிர் வாழ முடியாது. காற்றில் அளந்தறிய முடியாத அளவிற்கும் நுண்ணுயிர்கள் பெருகி வாழ்கின்றன என்று அறிவியல் அறிஞர்கள் கூறியுள்ளனர். வள்ளலார் காற்றின் தன்மையினைக் காற்றியல் விரி என்னும் தலைப்பின்கீழ் 16 வரிகளில் அருட்பெருஞ்சோதி அகவலில் மிகநுட்பமாகக் கூறியுள்ளார். **காற்றிடைச் சக்திகள் கணக்கில் உலப்பில. (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 405)** என்ற அகவல் வரின் மூலம் காற்றிலுள்ள ஆற்றலை இவ்வளவுதான் என்று கணக்கிட்டுச் சொல்லமுடியாது என்பதை அறியமுடிகிறது. மேலும் காற்றில் பல உயிர்கள் தோற்றம் பெறுவதற்கான ஆற்றல்கள் உள்ளன என்பதை, **காற்றிடை யுயிர்பல கதிபல கலைபல. (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 479)** மேற்கூறும் வரிகள் மூலம் காற்றின் தன்மையினைப் பற்றியும் வள்ளலார் மிகநுட்பமாகக் கூறியுள்ளதை நன்கு அறியமுடிகிறது என்பதை வலியுறுத்துகிறார்.

**ஆகாயத்தின் தன்மை**

**வெளியிடைப் பகுதியின் விரியியல் அணைவியல் (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 493)** என்னும் அகவல் மூலம் வெளியானது எல்லையற்றது. விரிந்து செல்லக்கூடிய ஒன்றாகும். இந்த வெளியின் தோற்றத்தை முழுமையாகக் கண்ணலோ அல்லது கருவிகள் கொண்டோ பார்க்க முடியாது. வள்ளலார் 'வெளியியல் விரி' என்னும் தலைப்பின் அடிப்படையில் ஆகாயம் பற்றி மிகநுணுகி ஆராய்ந்துள்ளார். இவ்வாறு வள்ளலார் ஐம்பூதங்களின் இயல்பையும் அதன் தன்மையினையும் ஆராய்ந்து கூறுவதில் அறிவியல் சிந்தனையையும் நன்கு அறியமுடிகிறது.

**வள்ளலாரின் உயிரிரக்கம்**

உயிரிரக்கம் வளர்வதற்குரிய சாதனமாகிய பசி ஆற்றுதலுக்குச் சத்திய தருமச்சாலையை 24.05.1867இல் வள்ளலார் நிறுவினார். அது இன்றுவரை பலரசு பசியைத் தவிர்க்கும் பணியைச் செய்து வருகிறது. சமரச நெறியைச் சேர்ந்தவர்கள் உலகத்து உயிர்களையெல்லாம் சேய்போல் எண்ணுவர். அதனால் தான் இராமலிங்கர் சன்மார்க்கம் என்னும் பொதநெறியை எடுத்துரைத்து உயிர்கள் அனைத்தையும் பின்னிப்பிணைந்து நிற்கின்ற ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையை உலகுக்களித்தார். உலக உயிர்கள் அனைத்தையும் ஒருசேர வைத்துப் பார்த்தார். அருள் சேர்ந்த நெஞ்சினர் எல்லா உயிர்களையும் உறவாக நினைத்தலால் ஆன்மநேய ஒருமைப்பாடு உண்டாகி வலுப்பெறுகிறது. எல்லா உயிர்களையும் தம் உயிர்போல கருதவேண்டும் என்பதை வள்ளலார்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்**
**தம் உயிர்போல் எண்ணி உள்ளே**
**ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்**
**யாவர் அவர் ஊந்தான் சுத்த**
**சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்**
**இடம்என நான் தெரிந்தேன் அந்த**
**வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திட என்**
**சிந்தைமிக விழைந்த தாலோ (அருட்பெருஞ்சோதி அகவல், பா. 513)**

என்று திருவருட்பாவில் (5297) கூறியுள்ளதாலும் அறியமுடிகிறது.

**ஜீவகாருண்ய ஒழுக்கம்**

தீர்த்த வார்களேயாயின் சிக்கல்களும் தீர்க்கப்படும் இப்புரயசியை ஏற்படுத்த மனிதனின் உடல்நிலை நலமாக இருப்பதற்கு அடிப்படையான செயல் மனதைத் தூய்மையாக பேணி காப்பது முதல் கடமையாகும் என்கிறார் வள்ளலார். இன்றை சிந்தனையாளர்களும் ஆன்மநேய ஒருமைப்பாட்டினை உயிர்களின் பிரிக்க இயலாத நிலைகளையும் கூட்டு வாழ்வின் தேவைகளையும் வலியுறுத்தி வருகின்றார். வள்ளல் கண்ட 'சன்மார்க்கம்' அருள் வழியான மண்ணுயிரெல்லாம் தன்னுயிராக எண்ணி ஒப்பின்ற ஜீவகாருண்ய நெறியாகும்.

**நெறிதான் மிக மிக முக்கியம்**
**நின்றருள் செய்யும்' (திருமந்திரம், பா. 545)**

என்னும் திருமூலர் வாக்கிற்கு ஒப்பாகும். வள்ளல் பெருமானின் ஜீவகாருண்ய நெறியாகும் என்பது புலப்படுகிறது.

**பசிப்பிணி**

பசிப்பிணி என்பது வறுமையில் உணவு இல்லாமல் வாடும் ஏழைகளின் நிலையை மாற்ற சத்திய தருமசாலையை நிறுவியர் வள்ளலார் என்பதை, உயிர்களுக்கு வருகின்ற துன்பங்கள் ஏழுவகை என்பவை,

1. **பசி**
2. **தாகம்**
3. **பிணி**
4. **இச்சை**
5. **எளிமை**
6. **பயம்**
7. **கொலை**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

இவற்றுள் பசியினால் வருகின்ற துன்பமே ஏனையவற்றைவிடக் கொடுமையானதாகும் என்பதை ஆராய்ந்த வள்ளலார் பசிப்பிணியை நீக்கினார் என்பதை, "பசியினால் இளைத்தே வீடு தோறிரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்" (திருவருட்பா) என்னும் பாடலின் மூலம் பசித்துன்பத்தால் பிறரைக் கண்டு வருந்திய நிலையைக் கருதுகிறார்.

**வள்ளலார் உணர்த்தும் மனிதநேயம்**

வள்ளலாரின் நோக்கம் உலகில் பிறந்த எல்லா உயிர்களுக்கும் உணவு பசி நீங்கி வாழ வேண்டும் என்று புரட்சி செய்து பசிப்பிணியை போக்கியவர். உணவுப்பசி, உணர்வுப்பசி, மகிழ்வுப்பசி என்னும் மூன்றும் இயல்பாக அமைந்தவையாகும். இவற்றுள் உணவுப்பசி கட்டாயம் தீர்க்கப்பட வேண்டிய அவசியமான ஒன்றாகும் என்பதை வள்ளலார், நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே உண்டி முதற்றே உணவின் பிண்டம் வெனப்படுவது நிலத்தொடு நீரே என்னும் பாடல் வரிகளின் மூலம் உணரமுடிகிறது.

**மனிதநேய ஒருமைப்பாடு**

பசி நீக்கியவர்களுக்குச் சூலை, கன்மம் முதலிய நோய்கள் வந்தாலும் நீங்கிச் சந்ததியில்லாதவர்கள் சங்கதியைப் பெறுவர். குறைந்த வயதில் இறந்து விடுவோம் என எண்ணியவர் கூட நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்வர். கல்வி, செல்வம் ஆகியவையும் உண்டாகும். இயற்கையின் கொடுமைகள் இல்லை எனவும் குறிப்பிட்டுள்ளார். அந்தப் புண்ணியர்கள் கடவுளைக் கண்டவர்களென்றும், இந்தப் புண்ணியர்களைத் தெய்வமாகப் பாவிக்கின்றார். இப்பசிக் கொடுமை நீக்கத்திற்காக அமைக்கப்பட்ட சபையே வடலூரில் அமைந்துள்ள சத்திய தருமச் சாலையாகும். மக்கள் வறுமையைக் கண்டு நெஞ்சம் வருந்த புதியதொரு சன்மார்க்க சமுதாயம் காண விரும்பிய அடிகள் அதற்கான ஆரம்பப்பணி மக்களுடையே பட்டினியைப் போக்குவதேயென அறிந்தார். அதனால் வடலூரிப் பகுதியில் நாள்தோறும் ஏழைகளுக்குச் சோறுபோடும், சத்திய தருமச் சாலையை நிறுவினர். அணையா அடுப்பின் மூலம் ஏழைகளின் பசிப்பணியை போக்கியவர் தாம் வள்ளல் பெருமாள் என்பது நாடறிந்த உண்மையாகும். சத்திய தருமசாலை கட்டத் திறப்பு விழா அன்னதான துவக்க விழாவும் நடைபெற்றது. இவர் 19 பத்தொன்பது ஆம் நூற்றாண்டின் ஏழைகளின் பசிப்பிணி தீர்க்க வந்த மணிமேகலையாகக் காட்சியளித்தார். இவர் புகழ் வையகம் தாண்டி இன்றளவும் உலகம் முழுவதும் பேசப்படுகிறது என்பது திண்ணமாகும்.

**வள்ளலாரின் சமுதாய நெறி**

வள்ளலாரின் புதுவழி தான் "சுத்த சமரச சன்மார்க்கம்" அதற்கு வள்ளலார் வழங்கிய முழுப்பெயர் "ஷடார்ந்த சமரசு சுத்த சிவ சன்மார்க்கம்" என்பது யாவருக்கும் விளங்கும் வகையில் இதனை,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

1. **பொது நெறி**
2. **அருள் நெறி**
3. **ஒளி நெறி**

என்றும் அவர் வழங்குகிறார். இந்த நெறியில் அவர் வாழ்ந்தார். அந்த வாழ்வின் அனுபவத்தை உணர்வை, அறிவுத் தெளிவை அருளோடு குழைத்துக் கருணையோடு தருகிறார் வள்ளல் பெருமான். **காட்டையெல்லாம் வெட்டி நிலத்தை உழுது (அருட்பெருஞ்சோதி அகவல் பாடல்-112)** செம்மைப்படுத்தி எருப்போட்டுத் தயாராக்கிய பிறகு அதில் கரும்பை நடாமல் விஷச்செடிகளை நட்டு மகிழ்ந்து கொண்டிருக்கின்றீர்களே உங்கள் அறியாமையை என்ன சொல்ல? என்கிறார்.

அருமையான உவமையைக் கூறி மக்களின் அறியாமையைப் பளிச்சென எடுத்துக்காட்டுகின்றார். கல்வி கற்று ஒழுக்கத்தை வளர்த்து மனதை நெறிப்படுத்தித் தயாராக்கிய பிறகு அதில் இரக்கத்தை வளர்த்து இறைவனை அடைய முயலாமல் சண்டையிடும் சமயம், மத நெறிகளுக்கு உள்ளத்தில் இடம் கொடுத்த அதனால் சளிப்பும் அடைகின்றீர்களே என்று கூறி நொந்து கொள்கின்றார்.

**காடு வெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டுக்**
**கரும்பை விட்டுக் கடுவிதைத்துக் களிக்கின்ற உலகீர்**

**(அருட்பெருஞ்சோதி அகவல், பா. 112)**

என்ற பாடல் மூலம் அறியாமல் உள்ளவர்களை அழைத்து அவர்களுக்கு அறிவு புகட்டுவதற்காக புரட்சியாளராக புறப்பட்டவர் வள்ளலே என்பதில் உலகப்போற்றும் உத்தமரே என்றுப் போற்றப்பட்டார்.

**முடிவுரை**

வள்ளல் பெருமான் வறுமைக்கு எதிராக போர் தொடுத்த முதல் துறவியாவர் என்பது உலகறிந்த உண்மை. அதற்கு பிறகு *ந.சுப்புரெட்டியர்* இரண்டாவது வள்ளலாக கருதப்பட்டார். மனக்கண் திறந்து வள்ளல் தன்மை கொண்ட தனி மனிதனாக விளங்கிய மகான் ஆவார். இவர் பிற உயிர்களின் கொலை, புலால் மறுத்தல் மற்றும் வருத்தம் தீர்க்கும் உபாயம் தெரிந்தவன் இந்நெறிக்குட்பட்டவர்கள் 'மக்கள்' என்றும் அல்லாதவர் 'மாக்கள்' எனவும் அழைக்கப்படுவர் என்று சொன்னவர் வள்ளல் பெருமான் ஆவார். இவர் ஐம்பூதக்கோட்பாடு, பசிப்பிணி, பசியின் கொடுமை, ஜீவகாருண்யம், உயிரிரக்கம், மனிதநேயம், சமுதாயநெறி ஆகியனவற்றை இக்கட்டுரையின் உள்ளடக்கமாகவும், மேலும், சமய சீர்த்திருத்தவாதியாகவும் உயர்ந்தவர். பழமையை மாற்ற எண்ணியபோது புதுமை ஒன்றையும் இந்த விதத்தில் அவர் படைத்து வழங்க வேண்டிய தேவையும் பற்றி சிந்தித்த வள்ளல் புதுமைச் சமயம் 'சமரச சுத்த சன்மார்க்கம்' என்ற நெறியை உலகலொம் என்ற வார்த்தைக்கிணங்க 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்னும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கூற்றுக்கிணங்கவும் வள்ளலார். அதற்கு உதாரணமாக வாழ்ந்தவர் *ந.சுப்புரெட்டியர் என்பது மிகையாகாது.* இவ்வாராய்ச்சியின் கட்டுரையில் மனிதனின் அறிவியல் மற்றும் உயிரிரக்கக் கோட்பாடுகளை தம் படைப்பின் மூலம் நிரூப்பித்துக் காட்டியுள்ளார் என்பது திண்ணமாகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] இளம்பூரணர். *தொல்காப்பியம் (சொல்லதிகாரம்).* சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், கழக வெளியீடு, கும்பகோணம், 1981.

[2] மா.இராமலிங்கம். *திருவருட்பா (ஐந்து).* அகில உலக சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம், வடலூர், இரண்டாம் பதிப்பு, 1981.

[3] டாக்டர்.தங்கமணியன். ஒப்பிலா மதிவாணன் (ப.ஆ.). *ஆய்வுலகில் பொற்கோவின் பாதையும் பயணமும்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2011.

[4] வரதராசனார். மு. (உ.ஆ.). *திருக்குறள்.* 2004.

[5] வள்ளலார். *அருட்பெருஞ்சோதி அகவல்.* வடலூர் பதிப்பகம், வடலூர், 1999.

[6] மா.பா.குருசாமி. *வள்ளலார் ஓர் அறிமுகம்.* வடலூர் பதிப்பகம், வடலூர், 1999.

[7] ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.). *புறநானூறு (மூலமும் உரையும்).* உமா பதிப்பகம், சென்னை,1998.

[8] தாயுமானவர். *திருப்பாடல்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.

[9] மா.பொ.சிவஞானம், *வாழ்விக்க வந்த வள்ளலார்.* மணிமேகலை பிரசுரம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1998-1999.

[10] திருமந்திரம். *திருமூலர்.* 1978.

[11] நா.சுப்புரெட்டியார். *அணுக்கரு பௌதிகம்.* பழனியப்பா சகோதரர்கள் வெளியீடு, சென்னை, 2018.

[12] நா.சுப்புரெட்டியார். *அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்.* பழனியப்பா சகோதரர்கள் வெளியீடு, சென்னை, 2001.

[13] நா.சுப்புரெட்டியார். *இராமலிங்க அடிகள்.* பழனியப்பா சகோதரர்கள் வெளியீடு, சென்னை, 2004.

**References**

[1] Elampuranar. *Tholkappiyam (Solathikaram).* Saiva Siddhanta Publication Society, Society Publication, Kumbakonam, 1981.

[2] Ramalingam, M. *Tiruvarutpa (5).* Akila Ulaga Samarasa Sutta Sanmarka Sathya Sangam, Vadalore, Second Edition, 1981.

[3] Thangamanian, Dr. Oppila Madhivanan (Ed.). *Aaivulagil Porkovin Pathaiyum Payanamum*. Manivasakar Publishing House, Chennai, First Edition, 2011.

[4] Varadarasanar. M. (U.A.). *Thirukkural*. 2004.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[5] Vallalar. *Arutperunjothi Agawal.* Vadalur Publishing House, Vadalur.
[6] Guruswamy, M. P. *Vallalar Oor Arimugam*. Vadalur Publishing House, Vadalur, 1999.
[7] J. Manikkavasakan (U.A.). *Purananuru (Moolamum Uraiyum).* Uma Publishing House, Chennai, 1998.
[8]Thayumanavar. *Thiruppadal.* Varthamanan Publishing House, Chennai.
[9] Sivajnanam, M.B.. Valvikka Vantha *Vallalar.* Manimegalai Press, Chennai, Second Edition, 1998-1999.
[10] Thirumantram. *Thirumoolar.* 1978.
[11] N. Subbu Reddiar. *Annukaru Bouthigam*. Palaniappa Brothers Publication, Chennai, 2018.
[12] N. Subbu Reddiar. *Arivial Nokiel Elakiyam Samayam Tathuvam*. Palaniappa Brothers Publication, Chennai, 2001.
[13] N. Subbu Reddiar. *Ramalingaadigal.* Palaniappa Brothers Publication, Chennai, 2004.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரும் திருவேங்கடத் தமிழ்த்துறையும்

## Professor Contribution to Tamil Department of Sri Venkateswara University

**முனைவர் பூ. சு. கணேஷ்மூர்த்தி,** உதவிப்பேராசிரியர், தமிழ்மொழி மற்றும் மொழிப்பெயர்ப்பியல் துறை,
திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம்.
**Dr. P. S. Ganeshmoorthy**, Assistant Professor, Department of Tamil & Translation Studies,
Dravidian University, Kuppam.
ORCiD: https://orcid.org/0000-0003-3734-2402
**DOI: 10.5281/zenodo.7251431**

### Abstract

*Prof. N. Subbu Reddiar was a well-writer known for his contribution to Tamil Studies. It is well known that he set foot in Tirupati, Andhra Pradesh, and pursued Tamil development as his career and started his career as a lecturer in the Department of Tamil at Sri Venkateswara University in 1960 and later as Associate Professor later promoted to Professor and Head of the Department of Tamil. He served for seventeen years and undertook many development projects for the Tamil language and students. Subbu Reddiar made his career in Tamil development and started his career as a lecturer in the Department of Tamil at Sri Venkateswara University in Tirupati. There is a need to know about the background of the University system. In Tirupati, there is a system called University College. It also functions under a Principal. All the departments are under the charge of the Principal. Every two or three years one of the Professors will be the principal on a rotating basis. The professor applauded this method and served so for the purpose. To encourage students to study well, Professor N. Subbu Reddiar after the inception of the Tamil Department, Professor put the name of the great poet Thiruvalluvar to the 'Gold Medal Committee' to consider placing a Gold medal on the student who received the first total marks in the MA. Tamil Postgraduate examination and a gold medal on the MA.Tamil student who received the first mark on the literature review paper. He served in such a manner and was revered by the students and appreciated by the Tamil academics and researchers for seventeen years.*

**Keywords:** Prof. N. Subbu Reddiar, Tamil Department, Sri Venkateswara University, Teaching.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தமிழ் ஆர்வலர்கள் அறிந்த தமிழ் அறிஞராக ஆக திகழ்ந்தவர். தமிழ்வளர்ச்சியையே தம் வாழ்க்கைபணியாக மேற்கொண்டு அயல் மாநிலமான ஆந்திரத்தில் அமைந்துள்ள திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் 1960 ஆம் ஆண்டு தமிழ்த்துறையில் விரிவுரையாளராக சேர்ந்து தமிழ்த்துறையை தொடங்கினார். தமிழ் மொழியினை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அங்கு வாழும் மக்களுக்கு கல்வியின் மூலம் பரப்ப எண்ணினார். தமிழ்த்துறையை ஏற்படுத்தி முதலில் விரிவுரையாளராக தம் பணியைத் தொடங்கினார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் காரைக்குடியில் இருந்து திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறையில் சேர்ந்தார். தமிழகத்தில் உள்ள*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*பல்கலைக்கழக அமைப்பினின்றும் சிறிது வேறுபட்டது திருவேங்கடவன் பல்கலைக்கழகம்.திருப்பதியில் பல்கலைக்கழகக் கல்லூரி என்ற ஓர் அமைப்பு உண்டு. இதற்கு முதல்வர் என்ற ஒருவரும் உண்டு. துறைகள் யாவும் முதல்வர் பொறுப்பிலிருக்கும். இரண்டு அல்லது மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை பல சேர்ந்த பேராசிரியர்களில் ஒருவர் சுழல் முறையில் வரிசை முறைப்படி முதல்வராக இருப்பார். பல்கலைக்கழகத்திற்குத் துறையிலிருந்து போகும் கடிதங்கள் யாவும் முதல்வர் மூலம்தான் செல்லவேண்டும். பதினேழு ஆண்டுகள் (1960-1977) சேவையாற்றி எத்தனையோ வளர்ச்சிப் பணிகளை தமிழ்மொழிக்காகவும், மாணவர்களுக்காகவும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் மேற்கொண்டார். பொதுவாக நன்றாக பணி ஆற்றுபவர்களுக்கு ஊதியம் உயர்த்தப் பெறுவது மரபு. மாணவர்கள் நன்றாக படிக்கவும் அவர்களை ஊக்குவிக்கும் வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் பொதுவாக வீட்டில் அன்னையும், பிதாவும் கையாளுகின்ற முறையை ஒட்டியே ஆசிரியர்கள் மாணவர்கள் நடத்தையிலும், சுற்றலிலும், இத்தகைய ஒரு முறையைக் கையாளுகின்றனர். தமிழ்த்துறை தொடங்கப்பெற்ற பிறகு முதலாவதாக முதுகலைப் பட்டம் பெறுபவர்களில் மொத்த மதிப்பெண்களில் முதலாவதாக பெற்ற மாணவருக்கு ஒரு தங்க பதக்கமும், இலக்கிய திறனாய்வுத் தாளில் முதல் மதிப்பெண் பெறும் மாணவருக்கு ஒரு தங்கப்பதக்கமும் வைக்கவேண்டும் என எண்ணிய பேராசிரியர் 'திருவள்ளுவர் தங்கக் குழு' என ஒரு பேரவையை ஏற்படுத்தி வெற்றி கண்டதை அறியலாம். பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை ஏற்படுத்தி தலைவராகவும் 1960 முதல் 1977 வரை பணியாற்றி அவர் செய்த எண்ணற்ற சேவைகளை ஆராய்வதே இக்கட்டுரையின் ஆய்வு நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர், தமிழ்த்துறை, திருவேங்கடப்பல்கலைகழகம், வளர்ச்சிப்பணி.

**முன்னுரை**

ஆந்திர மாநிலத்தில் அமைந்துள்ள பல்கலைக்கழகங்களுல் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகம் பெருமைவாய்ந்த பல்கலைக்கழகம் ஆகும். இப்பல்கலைகழகத்திற்கு இந்தியாவின் முதல் குடியரசுத்தலைவர் மாண்பமை. திரு ராஜேந்திர பிரசாத் அவர்கள் அடிக்கல் நாட்டினார். இத்தகு பெருமை வாய்ந்த திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் வழியாக தமிழ் மொழியினை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அங்கு வாழும் மக்களுக்கு கல்வியின் மூலம் பரப்ப எண்ணினார். தமிழ்த்துறையை ஏற்படுத்தி முதலில் விரிவுரையாளராக தம் பணியைத் தொடங்கினார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். தமிழ்த்துறை தலைவராகவும் பணியாற்றினார். தமிழ்த்துறையை வளர்ச்சிக்காக பல இன்னல்களை எதிர் கொண்டும்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சமாளித்தும் அலுவலகப் பணியையும் செய்துக் கொண்டும் தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு பாடுபட்டதை அறியமுடிகிறது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் உயரிய சேவையினை பதினேழு ஆண்டுகள் தமிழ்த்துறைக்கு பிள்ளையார் சுழிபோட்டு முதுகலை வகுப்பை தொடங்கி அதற்கு தலைவராகவும் இருந்து துணிவையே துணையாக கொண்டு பல எதிர்ப்புகள், அவமானங்கள், நிந்தனைகள் இவற்றையெல்லாம் சகித்து எதிர்த்து நீச்சல் போட்டு தமிழ்த்துறை வளர்ச்சிக்கு ஆந்திர மாநிலத்தில் தமிழ்மொழியை வளர்ச்சி அடையச்செய்த பேராசிரியர். ந. சுப்புரெட்டியார் அவர்கள் திருப்பதி வேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கும், தமிழ்மொழிக்கும் பேராசிரிய பெருந்தகை செய்த உன்னத பணிகளை ஆராய்வதே இவ்ஆய்வு கட்டுரையின் முதன்மை நோக்கமாகும்.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் காரைக்குடியில் இருந்து திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறையில் சேர்ந்தார். பல்கலைக்கழக அமைப்பைப் பற்றி சிறிது பகர்தல் இன்றியமையாதது. தமிழகத்தில் உள்ள பல்கலைக்கழக அமைப்பினின்றும் சிறிது வேறுபட்டது திருவேங்கடவன் பல்கலைக்கழகம். தமிழகத்தின் பல்கலைக்கழகத்தையொட்டிக் கல்லூரி அமைப்பு இல்லை. ஆனால் திருப்பதியில் பல்கலைக்கழகக் கல்லூரி என்ற ஓர் அமைப்பு உண்டு. இதற்கு முதல்வர் என்ற ஒருவரும் உண்டு. துறைகள் யாவும் முதல்வர் பொறுப்பிலிருக்கும். இரண்டு அல்லது மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை பல சேர்ந்த பேராசிரியர்களில் ஒருவர் சுழல் முறையில் வரிசை முறைப்படி முதல்வராக இருப்பார். பல்கலைக்கழகத்திற்குத் துறையிலிருந்து போகும் கடிதங்கள் யாவும் முதல்வர் மூலம் தான் செல்லவேண்டும். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்திற்கு வந்து தமது பணியை நம்மாழ்வார் பாசுரம் சேவித்து தொடங்கியதை அறியலாம்.

**அகல கில்லேன் இறையும் என்று**
**அலர்மேல் மங்கை உறைமார்பா**
**நிகரில் புகழாய்! உலகம் மூன்று**
**உடையாய் என்னை ஆள்வனே**
**நிகரில் அமரர் முனிக்கணங்கள்**
**விரும்பும் திருவேங்கடத்தானே**
**புகலொன் றில்லா அடியேன் உன்**
**அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே. (நினைவுக் குமிழிகள், நான்காம் பாகம் ப. 7, திருவாய்மொழி பாசுரம், 6-10-10)**

**திருப்பதியில் தமிழ்த்துறை தொடங்குதல்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் திருவேங்கடமுடையான் மீது மிகுந்த பக்திக்கொண்டு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருப்பதியை அடைந்து திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைக்கு பிள்ளையார் சுழி போட்டு "தியாக உணர்வும், உண்மையான தமிழ்பற்றும், இன்னல்கள் தாங்கிகொள்ளகூடிய இதயமும், பலனை எதிர்பாராது கடமையைசெய்" என்ற கண்ணனின் மறை மொழியை மனதில் எண்ணி தமிழ்த்துறை துவங்கியதை அறியமுடிகிறது.

**தமிழ்த்துறை வளர்ச்சிக்காக சிறிதுகாலம் பேராசிரியர் குடும்பம் பிரிதல்**

காரைக்குடியிலிருந்து அன்பு மனைவியையும், அருமை செல்வங்களையும் பிரிந்து வந்த பேராசிரியர் ஒன்றை நினைவில் கொண்டார். இந்திய விடுதலைபெற போராடிய தேசபக்தர்களை பேராசிரிய பெருந்தகை தன் கண் முன் வைத்துக்கொண்டார். பிழைப்பின் நிமித்தமோ அல்லது ஊதியத்தின் பொருட்டோ பேராசிரியர் திருப்பதி வரவில்லை தமிழ்த்துறையை ஆலவிருட்சம் போல் வளர்த்து எம்.ஏ, முனைவர் பட்டங்களை பெற ஒரு வாய்ப்பு களனாக்க உறுதியாக நின்று பற்பல சங்கடங்களை எதிர்த்து உழைத்ததை அறியமுடிகிறது

**திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் எம்.ஏ. தொடங்கியதும் பேராசிரியர் மு.வ.அவர்களின் சேவையும்**

எம்.ஏ. தமிழ் 1970 தொடங்கப்பெறும் வரை சிறிய அறைகளில் வகுப்பை நடத்தியும் தமிழ்பாடத் திட்டக்குழு கூட்டம் கூட சிறு அறைகளில் நடத்திக்கொண்டு மேலாண்மை செய்த பெருமை பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரையே சாரும். தமிழ்பாடத் திட்டக்குழு தலைவராக பேராசிரியர்மு.வரதராசன் அவர்கள் இருந்து பல்வேறு நிலைகளில் அயல் மாநிலமான ஆந்திர மாநிலத்தில் தமிழ்த் துறை வளர்ச்சிக்கு முழு ஒத்துழைப்பு நல்கியது குறிப்பிடத்தக்கதாகும். பேராசிரியர் மு. வ. அவர்களுடன் உறுப்பினர்களாகப் பேராசிரியர் கோ.சுப்பிரமணிய பிள்ளை (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) பேராசிரியர். பூ. ஆலால் சுந்தரம் செட்டியார் (சென்னை கிருத்தவ கல்லூரி, தாம்பரம்) இவர்கள் முன்னிலையில் தமிழ்த் துறை சிறப்புற நடைப்பெற்று வந்தது அறியமுடிகிறது. பேராசிரியர் மு.வரதராசன் அவர்கள் பாடத்திட்டக்குழு பல்கலைக்கழகப் பேரவைக் கூட்டங்களுக்கு ஆண்டிற்கு மூன்று முறை வந்து போவதுண்டு. ஒரு சமயம் அவர் ஏதோ ஒரு கூட்டத்திற்கு வந்திருந்தபொழுது துணைவேந்தருக்கு பேராசிரியர். சுப்பு ரெட்டியார் தந்த கைப்பிடியை நினைவூட்டி பேராசிரியர் முனைவர் மு. வ. அவர்களிடம் அதனைச் சேர்த்தார் ரெட்டியார். அஞ்சல் செலவின்றி கைப்படி மு. வ. அவர்களிடம் சேர்ந்தது. மு. வ. அவர்களும் நான்கு மாதங்களில் வேறொரு கூட்டத்திற்கு வந்த பொழுது தம் கருத்துடன் கைப்படியை பேராசிரியர்.ந. சுப்பு ரெட்டியார் அவர்களிடம் தந்து பல்கலைக்கழகத்தில் சேர்க்குமாறு பணித்தார். ரெட்டியாரும் துணைவேந்தர் அவர்களிடம் அவர் செவ்வியறிந்து கைப்படியைச் சேர்ப்பித்துப் பதிப்பிக்க வகை செய்யுமாறு வேண்டினார் ரெட்டியார். இவ்வாறு ஒரு பிரச்சினை தீர்ந்தது. திருவேங்கடவன் கீழ்த்திசை ஆய்வுக் கழகக் கணக்கில் நிதி தூங்கிக்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கொண்டிருந்தது. அதிலிருந்து வெளியீட்டிற்குக் கட்டளை பிறப்பித்தார். இரண்டாண்டுகளாக சிவப்பு நாடாவில் தடை இருந்தது. எப்படியோ நூல் *முத்தொள்ளாயிர விளக்கம்* என்ற தலைப்பில் பல்கலைக்கழக வெளியீடாக பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் ஆங்கில ஆய்வு நூல் முகத்துடன் நவம்பர் 1965இல் வெளிவந்தது இவ்வெளியீடு பேராசிரியர் அவர்களின் பதினேழாம் வெளியீடாக அமைந்ததை அறியலாம். நல்ல சேவையாளருக்கு இதை அன்பு படையல் ஆக்க நினைத்தார் பேராசிரியர். இப்படைப்பு கிட்டத்தட்ட ஒரு பதிப்பாகவும், விளக்க உரை நூலாகவும் அமைந்ததால் தமிழ் நூல்களைப் பதிப்பிப்பதில் தமிழ் இலக்கிய வானில் துருவ மீன்போலத் திகழ்ந்த அமரர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்கு அர்ப்பணிக்கப்பட்டது அறியலாம். பேராசிரியர் டாக்டர் மு. வரதராஜன் அவர்களின் மேலான தமிழ் சேவையை 1974 ஆம் ஆண்டு வரை திருவேங்கடவன் பல்கலைக் கழகம் பயன்படுத்திக்கொண்டது அறியற்பாலதாகும்.

**திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த் துறையில் முதல் முனைவர் பட்ட ஆய்வாளராக பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார்**

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் பிஎச்.டி பட்டத்திற்குப் பதிவு செய்து கொள்வதற்காகவே திருப்பதி வந்ததாகவும் டாக்டர் கே. சி. வி. வரதாச்சாரி துணைப் பேராசிரியர் அவர்களிடம் அடிக்கடிப் பேசுவது உண்டு. தலைப்பைத் தேர்ந்தெடுத்தல் அணுகும்முறை இவற்றைப் பற்றி அவரிடம் கலந்து ஆலோசிப்பதுண்டு. ஒரு நாள் டாக்டர் கே.சி.வி.வரதாச்சாரி அவர்களிடம் ஆய்வு நெறியாளர் ஆக இருக்கும் படியாக வேண்டுகிறார் பேராசிரியர் ரெட்டியார். இவரின் துடிப்பு ஆய்வில் ஆர்வம் கடுமையான உழைப்பு இவற்றை கவனித்த வரதாச்சாரி அவர்கள் ஒப்புக் கொண்டார். ஒரு நன்னாளில் விண்ணப்ப படிவத்தை நிரப்பி உரிய கட்டணத்தைச் செலுத்தி வரதாச்சாரி அவர்களிடம் ஒப்பம் வாங்கி பல்கலைக்கழகத்திற்கு அனுப்பி வைத்து துணைவேந்தர் அவர்களை சந்தித்து இசைவு தர வேண்டுகிறார் பேராசிரியர் ரெட்டியார். துணைவேந்தர் அவர்கள் கூறியது மிஸ்டர் ரெட்டியார் நன்றாக ஆய்வு செய்யுங்கள் கட்டுரை ஆங்கிலத்தில் தான் எழுத வேண்டும் என்ற எண்ணம் உடையவராக இருங்கள் எதிர் காலத்தில் இங்குத் தமிழ்த் துறை ஏற்பட்டு வளர வாய்ப்புள்ளது. பேராசிரியர் ரெட்டியார் அவர்களை பேராசிரியர் ஆகவும் துறைத் தலைவர் ஆகவும் வருவதற்கும் வாய்ப்பு இருக்கும். அப்போது தாங்கள் வழிகாட்டியாக இருக்க நேரிடுங்கால் இருவர் அல்லது மூவருக்கு மேல் எடுத்து கொள்ளாதீர். ஆய்வு செய்பவரின் கட்டுரை ஆங்கிலத்தில் அமைய வேண்டும் என வற்புறுத்துங்கள் எனவும் பல்கலைக்கழகம் துணைவேந்தர் அவர்கள் பேராசிரியர் ரெட்டியார் அவர்களை வலியுறுத்தியதை காணமுடிகிறது. காரணம் ஆங்கிலத்தில் கட்டுரை அமைந்தால் உலகலாவிய புகழ் கிடைக்கும் ஏன் இந்தியாவிலேயே எல்லாப் பகுதிகட்குப் போகவும் அங்கெல்லாம் தமிழ் இலக்கியம் தமிழ்ப்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பண்பாடு தமிழில் பக்தி இலக்கியத்தின் பெருமை நம் நாட்டில் பிற பகுதியினரும் வெளிநாட்டவரும் அறிய வாய்ப்புகள் ஏற்படும் என மலையுச்சி அறிவுரையை துணைவேந்தர் கூறியதை அறியமுடிகிறது. டாக்டர் கே. சி. வி. வரதாச்சாரி துணைப் பேராசிரியர் அவர்கள் நன்கு படித்தவர் பெரும்புலவர் இவரது மேற்பார்வையின் கீழ் வைணவம் மீது ஆர்வம் கொண்ட பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள்" நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவம்" (*Religion and Philosophy of Nalayira Divya Prabhandam with Special Reference to Nammalvar*) என்ற தலைப்பை ஆய்வுப் பொருளாகத் தேர்ந் தெடுத்துக் கொண்டார் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார். நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் இறுதிப் பாசுரத்தில் வரும் குருகூர்ச் சடகோபன் அவதரித்த தற்போது அழைக்கப் பெறும் ஆழ்வார் திருநகரிக்கு புறப்பட்டு சென்று திருப்புளி ஆழ்வாரை சேவித்து நம்மாழ்வாரின் திருவடி சம்பந்தம் பெற்ற மதுர கவிகளின் மரபில் வந்த பராங்குச தாசரை வினாவினால் இதுப்பற்றித் தெரியக்கூடும் எனக் கூறி அவர் இருக்கும் இருப்பிடத்தையும் அங்கு இருந்த வைணவ சான்றோர் தெரிவித்ததை அறியலாம்.

பராங்குச தாயிடம் நாதமுனிகள் வந்து அவரை வினவ அவர் பதினொரு பாசுரங்களைக் கொண்ட கண்ணிநுன் சிறுதாம்பு என்ற பிரபந்தத்தைப் பன்னீராயிரம் முறை ஒன்றிய மனத்துடன் நம்மாழ்வார் திருமுன் உருபோடுகிறவர்க்கு ஆழ்வார் தோன்றி அருள்வார் என உரைத் தருளுகின்றார். அங்ஙனமே நாதமுனிகளும் செய்ய ஆழ்வார் அவர் முன் தோன்றி தாம் அருளிய திருவிருத்தம் திருவாசிரியம் பெரிய திருவந்தாதி திருவாய்மொழி என்ற நான்கு பிரபந்தங்களையும் ஏனைய ஆழ்வார் பாடி அருளியவற்றையும் அஷ்டாங்க யோகத்தின் நுட்பங்களையெல்லாம் கூறி அருளியதை விளக்கப்பட்டுள்ளதை அறியலாம். பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் எல்லா குறிப்புகளையும் சேர்த்து பல இடங்களுக்கும் சென்று பல வைணவ சான்றோர்களை சந்தித்து குறிப்புக்களை ஒன்றுச் சேர்த்து உருவாக்கிய ஆய்வு கட்டுரை ஆயிரம் பக்கங்கள் மேல் ஆங்கிலத்தில் தட்டச்சு செய்து பல்கலைக் கழகத்திற்கு சமர்பித்து 1969 ஆம் ஆண்டு பேராசிரியர். ந. சுப்பு ரெட்டியார் அவர்களுக்கு முனைவர் பட்டம் பெற்றதை அறியமுடிகிறது.

**ஆந்திர மாநிலத்தில் தமிழ்ச்சங்கம் தோற்றுவித்த பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார்**

ஆந்திரமாநிலம் சித்தூர் மாவட்டத்தில்" சித்தூர் தமிழ்ச்சங்கம்" ஏற்படுத்தி மாவட்டத்தில் அதிகபடியாக வாழும் பகுதிகளான சித்தூர், பாக்காலா, நகரி, புத்தூர், ஏகாம்பரகுப்பம், குண்டகல் போன்ற இடங்களுக்கு பேராசிரியர் நேரடியாக சென்று கூட்டம் ஏற்பாடு செய்து தமிழ் ஆர்வலர்களின் உதவியோடு மேற்காணும் தமிழர்கள் வாழுமிடங்களில் விழிப்புணர்வு ஏற்படுத்தி தமிழ்த்துறை வளர பாடுட்டவர் பேராசிரியர் என்பது குறிப்பிடதக்கதாகும்.

**திருவேங்கடவன் பல்கலைக் கழக மாணக்கர்களின் கிளர்ச்சி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் பணி ஏற்றுக்கொண்டது பிழைப்புக்காக மட்டிலும் அன்று. பிழைப்புக்காக என்றிருந்தால் காரைக்குடிப் பணியைத் துறந்து இங்கு வந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை. அறிவு வளர்ச்சிக்கும், பதவி உயர்வுக்கும் நல்ல வாய்ப்பான இடம், சூழ்நிலை அற்புதம். திரு சா. கணேசன், திரு. ராய. சொக்கலிங்கம் போன்ற அறிஞர்களின் கூட்டுறவு தமிழ் சூழ்நிலையை மேலும் மிகுவித்தது. இந்த நல்ல சூழலை ஏன் துறக்க வேண்டும் மூன்று நான்குமுறை சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஏதேனும் பணியேற்க பேராசிரியர் முயற்சித்தார். அக்ககாலகட்டத்தில் முனைவர் பட்டத்தை வற்புறுத்துவதில்லை. காரணம் முனைவர் பட்டம் பெற்றவர்களே இல்லை. பேராசிரியர் டாக்டர் மு. வரதராசன் ஒருவரே முனைவர் பட்டம் பெற்று இருந்தார். அவர் சென்னையில் இயங்கிய பச்சையப்பன் கல்லூரியில் விரிவுரையாளராக பணியாற்றி வந்தார். நல்ல திறம் வாய்ந்த நூல்கள் எழுதி வெளியிட்டிருந்ததால் அவருக்கு நன்மதிப்பு இருந்தது. இது போன்று வெளியீடுகளை மதித்து ஆசிரியர்களைத் தேர்தெடுக்கும் முறையும் வழக்கத்தில் இருந்தது. அக்காலத்தில் பேராசிரியர் ஏழு பெரிய நூல்களை எழுதியிருந்தமையால் பேராசிரியரின் பெயர் தேர்தெடுக்கப் பெற்ற குழு பேனல் பட்டியலில் இடம் பெற்றது. அதற்குமேல் ஆதரவாளர் இறைவனுடைய அருள் இல்லாமையால் பேராசிரியருக்கு பதவி கிட்டவில்லை என உணர்ந்துக் கொண்டதை அறிய முடிகிறது. பேராசிரியர் கோவிந்தராஜுலு நாயுடு பல இன்னல்கள் அதாவது உள்ளூர் அரசியல் நாயுடு ரெட்டி என இருவகையினர் ஆதிக்கம் ஆந்திரத்தில் நிலவியதை துணைவேந்தர் பேராசிரியர் கோவிந்தராஜுலு நாயுடு எதிர்கொண்டதை அறியமுடிகிறது.

பேராசிரியர் கோவிந்தராஜுலு நாயுடுவை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் துணைவேந்தர் அவர்களை சந்திக்கமுடியாத நிலை ஏற்பட்டது. இந்நிலையில் திருப்பதியில் அருள்பாளித்து வரும் திருவேங்கட முடையான் தம்மை நம்பி வரும் அடியார்களை காக்கும் அவனிடத்தில் தம் மனதில் இருக்கும் தமிழ்த்துறை வளர்ச்சிக்கான கோரிக்கைகளை திருவேங்கடமுடையானே விட்டு விட்டு நிறைவேற்றும் படி கோரியதை குறிப்பிடப்பட்டுள்ளது. பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான குலசேகராழ்வார் சேர அரசனாக இருந்தும் போர்களின் மூலம் சோழபாண்டிய அரசர்களை வென்றும் அரசனுக்கான அத்துணை ஆடம்பர வசதிகள் இருந்தும் அதை ஆழ்வார் விரும்பவில்லை. இக்கலியுகத்தில் திருவேங்கட மலையில் இருந்துக்கொண்டு தன்னை வணங்கும் பக்தர்களை எல்லாம் காத்தருளும் திருவேங்கடமுடையான் நித்யம் வாசம் இருக்கும் அவ்வேங்கடமலை மேல் கொக்காகவோ, மீனாகவோ, செடியாகவோ, கொடியாகவோ, மரமாகவோ, பாறையாகவோ, புதராகவோ, தங்கவட்டிலாகவோ, படியாகவோ, ஏதேனும் ஒரு பொருளாக பிறக்க எண்ணி தம் பெருமாள் திருமொழி பாசுரத்தில்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**செடியாய வல்வினைகள் தீர்க்கு திருமாலே**
**நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாசல்**
**அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்**
**படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே.**

**(திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும், பக். 100, பாசுரம் - 86)**

என குலசேகராழ்வார் பணிவதுபோல் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் மனதினில் திருவேங்கடவன் மனதில் அந்தர்யாமியாக இருந்து பல இன்னல்களில் இருந்து எம்பெருமான் வேங்கடமுடையான் காத்ததை அவரின் அனுபவ வழி அறியமுடிகிறது.

**பல்கலைக் கழக துணைவேந்தரின் இரண்டாண்டு சேவைப் பூர்த்தி**

பேராசிரியர் பணியில் சேர்ந்து இரண்டாண்டு பூர்த்தி ஆகும் நேரத்தில் துணைவேந்தர் பேராசிரியர் கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள் மீது பல்கலைக்கழகத்தில் இணைந்திருந்த சுமார் முப்பது கல்லூரிகள் (சித்தூர், கடப்பா, நெல்லூர், கர்நூல், அனந்தப்பூர்) மாவட்டங்களில் இருந்த கல்லூரிகள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தோடு இணைந்த கல்லூரிகளை சார்ந்த மாணவர்கள், ஆசிரியர்கள் பொதுமக்கள் பத்தாயிரத்திற்கு மேற்பட்டவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து காந்தி சாலையில் ஊர்வலத்தில் கூட்டத்தின் முன்னதாக பறை மேளம், தாரை, ஊது கொம்புகளின் முழக்கம் அமைந்து துணைவேந்தரை எதிர்த்து கோஷமிட்டு ஒப்பாரிகள் சிரிப்பு கலந்த அழுகை குரல் களில் பெண்ணுடை அணிந்த பல மாணாக்கர்கள் காணப்பெற்றனர். சிலர் பெரிய கோணிகளில் பொரிகள், கடலைப்பருப்புகள், சல்லிகாசுகள் கலந்த கலவையைத் தூவிக் கொண்டு வந்தனர். இவர்களைத் தொடர்ந்து சிறு சிறு கூட்டமாகச் சில மாணவர்கள் கோவிந்தன் போய் விட்டாரே, கோவிந்தம்மாவும் மறைந்து விட்டாரே ஐயோ ஐயோ ஐயையோ என்று தெலுங்கில் அலறிய வண்ணம் துணைவேந்தர் கோவிந்த ராஜுலு நாயுடுவை எதிர்த்து மாணவர் குழுவினர் விசுவரூபம் எடுத்தது அறியற்பாலதாகும்.

இத்தகைய எதிர்ப்புகளுக்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி பலர் பலவாறாகப் பேசிக்கொண்ட செய்திகள் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் காதில் விழுந்தவை பல்கலைக்கழக நியமனங்களில் எல்லாமட்டங்களிலும் பலிஜ வகுப்பு நாயுடு மார்களுக்கு முதலிடம் தந்ததையும் தகுதி திறமைகளை காற்றில் பறக்க விட்டு கார்டணர் முதல் பேராசிரியர் நியமனம் வரை பலிஜ வகுப்பினருக்கே முதலிடம் அளித்ததையும், கல்லூரி அலுவலக மேலாளர் பதவிக்குக் கூட பெங்களூரில் ஓய்வு பெற்ற கோமாளி ஒருவரை தேர்வு செய்தார், பேராசிரியர் பதவிக்கும், துணைப் பேராசிரியர் பணிக்கும் தகுதியற்றவர்களுக்கு அளித்ததையும் அறியமுடிகின்றது. துணைவேந்தர் அவர்கள் பெரும் பகுதிக் காலம் திருப்பதியில் தங்குவதே இல்லை. சென்னையில் தான் வாழ்ந்து வந்தார். திருமலை திருப்பதி தேவஸ்தான நிர்வாக அதிகாரியைக் கைக்குள் போட்டுக் கொண்டு தேவஸ்தான பணி நியமனங்களில் பலிஜ வகுப்பிற்கே வாய்ப்பு

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தந்ததால் தான் மாணாக்கர்கள் துணைவேந்தர் மீது எதிர்த்தற்கான காரணம் என்பதை நினைவு க்குமிழி வழி அறியலாம். சென்னை மாநில அரசிடம் உதவிப் பெற முயற்சி செய்தல். மேற்கண்ட நிகழ்வு நடைபெற்ற சில நாட்களுக்கு முன்னதாக சென்னை மாநில மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் திருப்பதி வந்திருந்தார். தேவஸ்தான விருந்தினர் மாளிகையில் தங்கியிருந்ததை அறிந்து அவரைப் பேராசிரியர் அவர்கள் சந்திக்க சென்றார். பேராசிரியர் அழகப்ப வள்ளல் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றியதை அமைச்சர் அறிந்தவர் ஆதலால் பணி சுலபமானது. சென்னை மாநில அரசு பிற மாநிலங்களில் தமிழ் வளர்ச்சிக்கென மானியம் வழங்கும் கொள்கையை நம்பியே திருப்பதியில் தமிழ் எம்.ஏ மற்றும் முனைவர் பட்டம் வரை வளர்ப்பதற்காகவே பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் வந்ததையும் தெரிவித்து பேராசிரியர் வாழ்க்கை பணியாக இங்கு வந்து சைவையாற்றும் நிலையை அமைச்சரிடம் வலியுறுத்தி நிதி வழங்கி உதவுமாறு அரை மணி நேரம் பேசி வேண்டுகிறார். பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் சுயநலம் விடுத்து நல்ல நிறுவனத்தின் கீழ் இயங்கும் புகழ்ப் பெற்ற கல்லூரியிலுள்ள பதவியைத் துறந்து வந்ததை பாராட்டி பேராசிரியர் அவர்களின் தியாகத்திற்கு அமைச்சர் வியந்ததை அறியமுடிகிறது.

பேராசிரியர் அவர்கள் திருப்பதி தமிழ்த் துறை கேட்ட மானியத்திற்கு விண்ணப்பம் அனுப்பி வைக்குமாறு சொன்னார் அமைச்சர். அப்போது இருந்த சூழலில் பல்கலைக் கழகத்தை விண்ணப்பம் அனுப்பச் செய்வதென்பது திருவேங்கட மலையை அடைப்பது போன்ற முயற்சி என்பதை நன்கு அறிந்த பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் அவ்வழியில் முயற்சி செய்யாமல் பேராசிரியர் அவர்கள் அமைச்சர் பெயருக்கு தமிழில் ஒரு விண்ணப்பம் அனுப்பி வைத்தார். சில நாட்களிலேயே சென்னை மாநில அரசிடம் இருந்து பதில் வந்ததை அறியலாம். கல்வித் துறை துணைச் செயலாளர் வி. சங்கரன் கையெழுத்திட்டு பேராசிரியர் அனுப்பிய கடிதத்தை பல்கலைக்கழகத்தின் வழியாக அனுப்பும் படி கேட்டுக் கொண்டார். பேராசிரியர் அவர்கள் பல்லாண்டுகள் நிர்வாகத்தில் பணியாற்றியதால் இப்படித்தான் மறுமொழி வரும் என்பதை முன்னரே அறிந்திருந்தார். இந்த கடிதத்தை பல்கலைக்கழகத் துணைவேந்தர் அவர்களிடம் காட்டிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே பேராசிரியர் அவர்களின் திட்டம். இப்படி எண்ணிக் கொண்டிருந்த பொழுது தான் துணைவேந்தருக்கு எதிராக எரிமலை வெடித்தது போல் மேற்குறிப்பிட்ட கிளர்ச்சி எழுந்ததை குறிப்பிடப்பட்டுள்ளது. சென்னை மாநில அரசிடம் இருந்து வந்த கடிதத்தைத் தக்க முறையில் பயன்படுத்திக் கொள்ள முடியவில்லையே என்று வருத்தம் கொண்டார் பேராசிரியர் அவர்கள். திருப்பதியில் நித்யம் வாசம் செய்யும் ஏழுமலையான் பேராசிரியரின் முயற்சிக்கு கை கொடுக்கவில்லையே என்று பேராசிரியர் நொந்து கொண்டதை அறியலாம். திக்கற்றவருக்கு தெய்வம் துணை நிற்கும் என்ற

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

முதுமொழியில் அதிராத நம்பிக்கை இருந்ததை மணிவாசக பெருமானின் கீழ் காணும் பாடல் மூலம்.

**வேண்டத் தக்க தறிவோய் நீ**
**வேண்ட முழுவதும் தருவோய் நீ**
**வேண்டும் அயன் மாற்கு அறியோய் நீ**
**வேண்டி என்னைப் பணி கொண்டாய்**
**வேண்டி நீயா தருள் செய்தாய்**
**யானும் அதுவே வேண்டினல்லால்**
**வேண்டும் பரிசொன் றுண்டென்னில்**
**அதுவும் உன்றன விருப்பன்றே. (நினைவுக்குமிழி நான்காம் பாகம் பக். 90, திருவாசகம் பாடல் - 501)**

அறியமுடிகிறது.

**சென்னையில் இருந்து தமிழ் இலக்கிய நன்கொடை நூல்களை கொண்டு வந்த பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்**

சென்னை மயிலாப்பூர் பெண்ணாத்தூர் சுப்பிரமணிய அய்யர் உயர் நிலைப் பள்ளி (பி.எஸ். உயர் நிலைப் பள்ளி) தலைமைத் தமிழ் ஆசிரியர் திரு துரைசாமி அய்யர் என்பவர் பெரும் புலவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களோடு தொடர்பு உடையவர். அக்காலத்தில் கல்வி அறிவாளர் இடையே பெரும் மதிப்புடன் திகழ்ந்தவர். இவர் தம் காலத்தில் சேமித்து வைத்திருந்த அரிய நூல்கள் இவர் வீட்டு நூலகத்தில் ஏராளமாக இருந்ததை அறிய முடிகிறது. சுப்பிரமணிய அய்யருக்கு இரு குமாரார்கள் படித்து வேறு பெரிய அலுவல்களில் சேர்ந்து விட்டமையால் இந்த நூலகம் போற்றுவார் அன்றி உபயோகப் படுத்தாமல் இருந்தது. இரு குமாரார்கள் இருவரும் இந்த வீட்டு நூலகத்தைப் புதிதாகத் தொடங்கப்பட்ட திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் சேர்ப்பிக்க எண்ணித் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் எஸ். கோவிந்தராஜுலு நாயுடு அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள். இக்கடிதத்தை கண்ட துணைவேந்தர் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களை வந்து காணுமாறு ஆள் விட்டு அனுப்பினார். பேராசிரியரும் துணைவேந்தர் அறைக்குச் சென்று சந்தித்ததை அறியலாம். அப்போது திருவேங்கடப் பல்கலைக்கழகம் திருமலை திருப்பதி தேவஸ்தானம் கீழ் இருந்த பத்மாவதி மகளிர்க் கல்லூரிக் கட்டிடத்தில் இருந்தது. கீழ் உள்ள பகுதிகளில் பல்கலைக்கழக அலுவலகமும் மேல் மாடியில் பத்மாவதி மகளிர்க் கல்லூரியும் இயங்கி வந்தன.

துணைவேந்தர் அவர்கள் ரெட்டியாரிடம் மிஸ்டர் ரெட்டியார் சென்னை துரைசாமி அய்யர் குமாரர்கள் தம் தந்தையாரின் நூலகத்தை திருவேங்கடப் பல்கலைக்கழகத்திற்குத் தருவதாக கடிதம் எழுதியுள்ளனர். உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் ஆக பணி புரிந்ததால்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பாடப்புத்தகக் குப்பை நிறைய இருக்கும் அவற்றை நீக்கி விட்டு தரமான உயர்ந்த இலக்கண இலக்கியங்களை மட்டிலும் தேர்வு செய்து எடுத்துக் கொண்டு வாரும். பதிவாளர் இடமிருந்து இது பற்றிக் கடிதம் வரும் என்று துணைவேந்தர் அவர்கள் கூறினார். பேராசிரியர் அவர்கள் கடிதத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்ததை அறியமுடிகிறது. இந்த விஷயத்தை துணைவேந்தர் அவர்கள் முதல்வர் பேராசிரியர் டி. ஏ. புருஷோத்தம் அவர்களிடம் கூறியிருப்பதை அறியலாம். ஆனால் முதல்வரோ அவர்களின் துறையில் பணி புரியும் திரு டி. இ. வீரராகவன் என்ற விரிவுரையாளரை இப்பணிக்கு அனுப்ப எண்ணி பதிவாளர் அவர்களுக்கு பரிந்துரை செய்தார். ஆனால் துணைவேந்தர் அவர்கள் பதிவாளருக்கு பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களை அனுப்பச் சொல்லியதை அறியலாம். திரு துரைசாமி அய்யர் அவர்களின் வீடு கௌடியாம மடச்சாலை அருகில் உள்ள இலட்சுமி புரத்தில் இருந்தது. அதை விசாரித்துக் கொண்டு அங்கு சென்று விட்டு நூலகத்தை நோட்டம் இட்டார் பேராசிரியர் ரெட்டியார். திரு துரைசாமி அய்யர் மறைந்து சில ஆண்டுகள் ஆன படியால் நல்ல நூல்கள் அடுக்கப் பெற்றிருந்தன. பெரும்பாலான நூல்கள் குப்பை போல் குவிந்து கிடந்தன. சில ஆண்டுகள் நூல்கள் இருந்த அறையில் ஆள் நடமாட்டமே இல்லாது இருந்ததை அறிய முடிந்தது. திரு துரைசாமி அய்யர் அவர்களின் குமாரர்கள் இதை ஒப்புக்கொண்டனர். அறையில் இருந்த மக்கிப் போன தாள்களின் மனம் மூக்கைத் துளைத்தது. தாள்களின் மனம் பேராசிரியர் ரெட்டியார் அவர்களுக்கு ஒவ்வாது ஆகவே முதல் நாளன்று ஒரு வேலையாளை விட்டு குப்பை முதலியவற்றைப் பெருக்கியும் ஒட்டடை அடித்தும் அறையையும் அலமாரிகளை சுத்தம் செய்தால் தான் நூல்களைப் வரிசையாக்கி எடுக்க வசதியாக இருக்கும் என்று பேராசிரியர் ரெட்டியார் சொன்னார். அவர்களும் சரி என்று கூறி பேராசிரியர் அவர்களை மறுநாள் வரும் படி கூறினார்கள்.

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் சீரிய முயற்சியால் நான்கு நாட்கள் சிரமப்பட்டு பல்கலைக்கழகத்திற்கு மட்டுமே தேவையான நூல்களை மட்டும் தேர்வு செய்து இரு நூறு நூல்கள் அதாவது நாற்பது விழுக்காடு நூல்கள் மட்டும் பயன்படக் கூடிய அந்நூல்களை பட்டியல் இட்டு எழுதி அந்நூல்களை இரண்டு மூன்று கட்டுகளாக சிதராமல் கட்டி கோணியால் தைத்து சென்னையில் இருந்து லாரி மூலம் திருப்பதி வந்து சேர்ந்த்தை அறியலாம். பின்னர் பேராசிரியர் அவர்கள் பல்கலைக் கழக நூலகரிடம் இதற்கான விவரமும் பட்டியல் இட்டதற்கான நகலையும் அளித்ததை அறிய முடிகிறது.

**விரிவாக்கம் அடைந்த திருவேங்கடப் பல்கலைக் கழக தமிழ்த்துறை**

தமிழ்த்துறை தொடங்கப்பெற வேண்டும் பேராசிரியரின் 1960 – 1961 ஆண்டில் நினைத்த எண்ணம் 1970 – 1971 ஆண்டில் பழமானது. 1969இல் அக்டோபரில் தமிழக மானியம் கிடைக்காத்தால் 1969 – 1970 ஆண்டில் தமிழ் எம்.ஏ வகுப்பு தொடங்கமுடியாத நிலை

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

உண்டாகிவிட்டது. எனவே 1970 -1971 முதல் எம்.ஏ வகுப்பு செயற்படத் தொடங்கியது. முதலில் ஆறு மாணாக்கர்கள் சேர்ந்தனர். ஒரு பேராசிரியர், ஒருதுணைப்பேராசிரியர், ஒரு விரிவுரையாளர் என்று பல்கலைகழகத்தால் விளம்பரம் செய்ய பெற்றதை காணலாம். பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரும், பேராசிரியர் தாமோதரன், பேராசிரியர். பொன். சௌரிராசன் ஆகியோரால் தமிழ்த்துறை ஆல்போல் தளிர்த்தது, அருகுபோல் வேரூன்றியது. செயலாற்றும் துடிப்பும் நினைத்ததை முடிக்கும் எண்ணமும் மிக்க துணைவேந்தர் பேராசிரியர் டாக்டர் ஜகந்நாதரெட்டி முத்தாய்ப்பு வைத்தமாதிரி பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் விருப்பத்தின் மகுடம் சூட்டியது பேராசிரியரின் ஆனந்தகண்ணீரால் வேதாந்ததேசிகனின் பாடலை நினைவு கூறலாம்.

**கண்ணனடி யிணை யெமக்குக் காட்டும்வெற்பு**
**கடுவினையர் இருவரையும்கடியும் வெற்பு**
**திண்ணமிகு வீடென்னத் திகழும் வெற்பு**
**தெளிந்தபெருந் தீர்த்தங்கள் திகழும் வெற்பு**
**புண்ணியத்தின் புகலதெனப் புகழும் வெற்பு**
**பொன்னுலகின் போக மெலாம் புணர்க்கும் வெற்பு**
**விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு**
**வேங்கடவெற் பென விளங்கும் வேத வெற்பே (திருமலைக்கோயில் ஒழுகலாறுகளும், திருவிழாக்களும் பக். 192, தயாசதகம் பாசுரம் - 43)**

பாசுரத்தின் வழி பேராசிரியர் நினைவு கூறுவதை அறியலாம்.

**மாணவர்களின் மனதை கவர்ந்த பேராசிரியர்**

தமிழ் வளர்ச்சியையே தம் வாழ்க்கைப் பணியாக மேற்கொண்டு திருப்பதியில் பாதம் பதித்த பேராசிரியர் மனத்தூய்மையால் அன்பு வார்த்தைகளால் மாணவர்கள் உள்ளங்களைக் கவர்ந்தார். உள்ளொன்று வைத்து புறமொன்று பேசும்போக்கு இவரிடம் இல்லாததால் மாணவர்களுக்கு இவரிடம் அளவற்ற நம்பிக்கை உண்டானது. அந்த நம்பிக்கை பின்னால் துறை வளர்ச்சிக்கு பெரிதும் உதவியாக இருந்ததை அறியமுடிகிறது. துணைவேந்தர் தயவோடும், பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் உதவியோடும் இரகுபதி என்பவர் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்தார். இவர் நான்கு ஆண்டுகள் பணி புரிந்தார். நான்கு ஆண்டுகளுக்கு பின் இரகுபதி அவர்களுக்கு மனக் கோளாறு அடைந்தார். வகுப்பு எடுப்பதில்லை. பலர் கேட்டுக் கொண்டதற்கிணங்க ஓராண்டு காலம் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் பொறுத்து பார்த்தார். பல்கலைக்கழகத்திற்கு கடிதம் ஒன்றினை எழுதி இரகுபதி அவர்களை நீக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அதன் பிறகு ஒன்றரை ஆண்டுக் காலம் அவர் இடத்திற்கு ஆளே போடவில்லை. பேராசிரியர் அவர்கள் எத்தனையோ


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கடிதங்கள் எழுதியும் நடவடிக்கை எடுக்கவில்லை. ரகுபதி பதிலுக்கு பணி செய்ய தேனியல் தேவசங்கீதம் என்ற ஓர் ஆராய்ச்சி மாணவருக்கு பரிந்துரை செய்தார் பேராசிரியர். தேனியல் தேவசங்கீதத்திற்கு பல்கலைக் கழக மானிய ஆணையம் ரூபாய் 750 படிப்பு உதவி அளித்தது. ஆயினும் ஓராண்டு வகுப்பு வேலை செய்ததால் அவரது ஆய்வுப் பணி கெட்டது. ஓர் ஆண்டு கழிந்ததும் குறிப்பிட்ட காலத்தில் பி.எச்.டி. ஆய்வுக் கட்டுரை சமர்ப்பிக்க முடியவில்லை. படிப்புதவி பெறாத ஆய்வு மாணவர்கள் வகுப்பு வேலை செய்ய நேரிட்டால் வாரம் ரூபாய் ஐம்பது அனுமதிக்கலாம் என்று சுற்றறிக்கை ஒன்று பல்கலைக்கழகத்திலிருந்து வந்திருந்தது. அதைப் பயன்படுத்திக் கொண்டு ஆறு மாதம் வகுப்பு வேலை (எந்தப் படிப்புதவியும் இல்லாமல்) செய்த தேனியல் தேவசங்கீதத்திற்கு ரூபாய் 1200 வழங்க வேண்டும் என பேராசிரியர் அவர்கள் கடிதம் ஒன்றினை விவரமாக எழுதினார். சுமார் ஒன்றரை ஆண்டு வகுப்புப் பணி செய்ததில் ஓராண்டு பல்கலைக்கழக மானிய ஆணையம் படிப்புதவி பெற்றதனால் அந்தக் காலப் பகுதிக்குக் கேட்கவில்லை என்றும் பல கடிதங்கள் பதிவாளர் அவர்களுக்கு எழுதியும் விரிவுரையாளரை நியமனம் செய்யாததால் இந்நிலை எழுந்தது என்றும் தேர்வுக்குப் போகும் மாணவர்களின் நலனைக் கருதி இந்த ஏற்பாடு செய்ய வேண்டி நேரிட்டது என்றும் விளக்கி பேராசிரியர் கடிதம் எழுதியதை விளக்கப்பட்டுள்ளது.

இவ்வாறெல்லாம் பேராசிரியர் அவர்கள் மாணவனுக்கு உதவ வேண்டும் என்றும், அப்படி உதவப் பல்கலைக்கழகம் முன் வராவிட்டால் தாம் செய்த பணி மாணவர் நலனுக்காக்காக செய்த தியாகமாக வேலை செய்த மாணவர் கருதுவதாகவும் பணிவாக மறுபடியும் ஒரு கடிதம் எழுதினார் பேராசிரியர். பேராசிரியர்.ந. சுப்பு ரெட்டியார் அவர்களின் உள்ளம் தூய்மையாக இருந்ததாலும் மாணவனும் தன் பணியைத் தியாகமாகக் கருதும் படி கூறியதாலும் இறைவன் அருளால் பல்கலைக்கழகம் ரூபாய் 4200 மாணவர் தேனியல் தேவசங்கீதம் பெயருக்குக் காசோலை அனுப்பி உதவியது. இப்படி எல்லாம் மாணாக்கர் நலனுக்காகவும் தமிழ்த் துறை வளர்ச்சிக் காகவும் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் சேவைகள் ஆற்றியதை அறியமுடிகிறது.

**மாணவர்கள் உற்சாகத்துடன் படிக்க இரண்டு தங்கப் பதக்கங்கள் ஏற்பாடு செய்த பேராசிரியர்**

பொதுவாக நன்றாக பணியாற்றுபவர்களுக்கு ஊதியம் உயர்த்தப்பெறுகின்றது. அதுபோன்றே மாணவர்கள் நன்றாக படிக்கவும் அவர்களை ஊக்குவிக்கும் வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஒரு உதாரணத்தை கூறும்போது குழந்தையின் பெற்றோர்கள் கையாளுவதை குறிப்பிடுகின்றார். அந்த விசிறியை எடுத்துக்கொண்டுவா கற்கண்டு தருகின்றேன் என அன்னை கூறுவதாகவும், எண்ணெய் தேய்த்துக் குளித்தால் பொம்மை வாங்கித்தருவேன் என்கிறார் தந்தை. வீட்டில் அன்னையும், பிதாவும் கையாளுகின்ற முறையையொட்டியே ஆசிரியர்கள் மாணவர்கள் நடத்தையிலும், சுற்றலிலும், பொதுவாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இத்தகைய ஒருமுறையைக் கையாளுவதை அறியலாம். தமிழ்த்துறை தொடங்கப் பெற்ற பிறகு முதலாவதாக முதுகலைப் பட்டம்பெறுபவர்களில் மொத்த மதிப்பெண்களில் முதலாவதாக பெற்ற மாணவருக்கு ஒரு தங்க பதக்கமும், இலக்கிய திறனாய்வுத் தாளில் முதல் மதிப்பெண் பெறும் மாணவருக்கு ஒரு தங்கப்பதக்கமும் வைக்க வேண்டும் என எண்ணிய பேராசிரியர் திருவேங்கடவனை வணங்கி வெற்றி அடைய திருவள்ளுவர் தங்கக் குழு என ஒரு கமிட்டியை ஏற்படுத்தியதை காணமுடிகின்றது. இதற்காக சித்தூரில் வெல்லம் மண்டி இராசமாணிக்கம், ஆனந்தம் செட்டியார், திருப்பதியில் விஜயராகவ அய்யங்கார், கோபால கிருஷ்ண நாயுடு, சண்முகம்பிள்ளை, நல்லப்ப ரெட்டியார் போன்றோரை உறுப்பினர்களாக நியமித்து இத்திட்டம் வெற்றிப்பெற உதவியது குறிப்பிடதக்கதாகும்.

**தமிழ்த் துறை சார்பாக திருக்குறள் கருத்தரங்கு ஏற்பாடு செய்தல்**

**வள்ளுவன்தன்னை உலகினுக்கே தந்து**
**வான் புகழ் கொண்ட தமிழ்நாடு (தமிழ் இலக்கிய வரலாறு பக். 170)**

என்ற பாரதியார் பாடல்வழி பேராசிரியர் உலகநூலான திருக்குறள் பொருண்மையில் தமிழ்த்துறை முதல் கருத்தரங்காக ஒருங்கினைத்ததை அறியமுடிகிறது. இக்கருத்தரங்கை பேராசிரியர் பல்கலைகழக முறைப்படி - மரபுப்படி துணைவேந்தர் தலைமை வகிப்பார். சிறப்பு விருந்தினராக பேராசிரியர் ந.து.சுந்தரவடிவேலு சென்னை பல்கலைக்கழக துணைவேந்தர் கருத்தரங்கைத் தொடங்கி வைத்தார். நான்கு அமர்வுகள் சிறப்புற நடந்தேறியது. மிக்க சிரமத்துடன் பேராசிரியர் அறிஞர்களின் கட்டுரைகளை பெற்று அச்சாக்கம் பெற்றதை காணமுடிகிறது.

**பேராசிரியரின் பதவி உயர்வில் ஏற்பட்ட திருப்பு முனை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் துறைக்காக பாடுபட்ட போதிலும் பேராசிரியர் அவர்களுக்கு முழு தகுதி இருந்தும் உள் அரசியல் காரணமாக வேறு ஒருவருக்கு பரிந்துரிக்கபட்ட போதிலும் திருமலையப்பன் அருளால் கிடைத்ததற்கு அவரின் உழைப்பே என பகவத் கீதை கிருஷ்ணனின் ஸ்லோகம் **கடமைச்செய் பலனை எதிர்பார்க்காதே (பகவத் கீதை பக். 134, ச்லோகம்-50)** என அறியமுடிகிறது. இந்நிகழ்வின் உண்மை காரணத்தை நாம் அறியவேண்டியுள்ளது. நிதிக்குழு கூட்டம் தேதி டிசம்பர் 17 அன்று 1976 நடைப் பெற்ற பின்னர் பதவி உயர்வு என துணைவேந்தர் அலுவலகம் மூலம் அறிவிக்கபடுகிறது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் கடின உழைப்பையும் உண்மை நிலையை அறிந்த துணைவேந்தர் அவருக்கு உதவிசெய்யும் வகையில் சில ஆலோசனை கூறினார். இப்பதவி தரவேண்டுமானால் நிதிக்குழு வெளிப்புற உறுப்பினர் அதாவது வெளியிலிருந்து வரவிருக்கும் (நெல்லூர்) உறுப்பினரை நேரில் சென்று சந்தித்து வரும்படி கூறுவதை குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறே நெல்லூர் உறுப்பினரை பேராசிரியர் அக்டோபரில் சந்தித்து திரும்புகிறார். டிசம்பர் ஒன்றாம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தேதி ஆந்திரமாநிலத்தில் ஏற்பட்ட புயல் மாநிலம் முழுவதும் நிலை குலய வைத்துவிட்டது. சுமார் 25 நாட்களுக்கு தொடர்பே அனைத்து இடங்களிலும் போக்கு வரத்து அற்று போய்விட்டது. நெல்லூர் வழியாக ஓடும் போக்கு வரத்து ரயில்கள், பேருந்துகள் நின்று விட்டன. சாலைகள் பல இடங்களில் துண்டு பட்டதால் எந்த வாகனமும் ஓடவில்லை. தந்தி கம்பிகள், தொலைபேசிக் கம்பங்கள் சாய்ந்தன கம்பிகள் அறுந்துபோயின. இதனால் செய்தித்தொடர்புகள் முழுவதுமாக இல்லாமல் போயின. இந்நிலையில் நிதிக்குழு கூட்டத்திற்கு வெளியூரிலிருந்து வரவிருக்கும் (நெல்லூர்) உறுப்பினர் வரமுடியாது எனவும் பேராசிரியர் அவர்களுக்கு பதவி உயர்வு இல்லை திட்டம் போட்ட சிலர் மனதினில் எண்ணிக் கொண்டனர். இச்சூழலில் புயல் காரணமாக டிசம்பர் 17 ஆம்நாள் 1976 அன்று ஹெலிகாப்டரில் நெல்லூர் பகுதியை பார்வையிட வந்த ஆந்திர மாநில முதலமைச்சரின் நண்பரான நிதிக்குழு கூட்ட உறுப்பினரை சந்திக்கிறார். ஹெலிகாப்டருக்கு பெட்ரோல் தேவைப்பட்டதால் ரேணிகுண்டா வரவேண்டி இருந்தது. ஆகவே முதலமைச்சர் நிதிக்குழு கூட்ட உறுப்பினர் கேட்டுக்கொண்டதின் பேரில் அன்றைய தினம் மதியம் 02 மணிக்கு ரேணிகுண்டாவை வந்தடைந்தார். ஒரு மணி நேரம் கூட்டம் தாமதமாக நடந்தது. 03 மணிக்கு நிதிக்குழு கூட்டம் நிர்ணயித்த தேதியிலேயே நடந்தது. திருவேங்கடமுடையானையே முழுவதும் நம்பி செயல்பட்ட பேராசிரியரின் உழைப்பு வீண் போகவில்லை எம்பெருமானின் பார்வை பட்டது பேராசிரியரின் எண்ணம் நிறைவேறி ஓய்வு பெறும் முன் பதவி உயர்வு கிடைத்தது. துறைக்காகவே உழைத்த பேராசிரியரை எண்ணும் போது கீழ்காணும் பாசுரமான

**அவரவர் தமதமது அறிவறிவு வகை வகை**
**அவரவர் இறையவர் எனவடி அடைவர்கள்**
**அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்**
**அவரவர் விதி வழி அடைய நின்றனரே. (திருமாலியம் பக். 375, திருவாய்மொழி பாசுரம்- (1 - 1- 5)**

திருக்குருகூரில் அவதரித்த நம்மாழ்வாரின் திருவாய் மொழி பாசுரம் மூலம் நினைவு கூறலாம்.

**முடிவுரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆந்திரமாநிலத்தில் தமிழை வளர்ப்பதற்காக சிறிது காலம் குடும்பத்தையும் விட்டு விட்டு தனிமையில் வாழ்க்கைப் பணியாக மேற்கொண்டு ஆந்திரமாநிலத்தில் சித்தூர் மாவட்டத்தில அமைந்துள்ள திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை ஏற்படுத்தி விரிவுரையாளராக சேர்ந்தார். சில ஆண்டுகளுக்குப் பிறகு தமிழ்த் துறைத் தலைவராக பொறுப்பு வகித்து இணைப்பேராசிரியராகப் பதவி உயர்வுப் பெற்று சிறப்பான முறையில் தமிழ்த்துறையினை இயக்கி எண்ணற்ற மாணவர்களை உருவாக்கியதை அறியலாம். அயல் மாநிலமான

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆந்திரத்தில் தமிழை வளர்ச்சியடைய செய்து உழைத்த பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் மொத்தத்தில் பதினேழு ஆண்டுகள் பணிபுரிந்து மாணவர்கள், ஆராய்ச்சியாளர்கள் தமிழ் ஆர்வலர்கள் பெருமைபடும் விதமாக அமைந்த செய்தியையும் இவ்வாராய்ச்சி கட்டுரை வாயிலாக அறியப்படுகிறது. நடைப்பெற்று வரும் விரைவான காலகட்டத்தில் சுயநலம் கருதி வாழும் மக்கள் மத்தியில் ஒரு சமூக நோக்கத்தோடும். உதவிபுரியும் பாங்கோடும் சுயம் நலம் கருதாமல் ஆலோசித்து பிற மாநிலமான ஆந்திரமாநிலத்தில் தமிழ் மொழியினை வளர்க்கும் குறிக்கோளுடன் வந்த பேராசிரியர் .ந.சுப்புரெட்டியார் பல இன்னல்களை சந்தித்து வெற்றி இலக்கினை அடைந்ததையும், பேராசிரியரின் கடின உழைப்பால் நூற்றுமுப்பதுக்கும் மேற்பட்ட நூல்களை இயற்றி பெருமை கண்ட பேராசிரியரின் நூல்கள் தமிழக அரசால் நாட்டுடையாக்கபட்டது குறிப்பிடதக்கதாகும். பேராசிரியரின் உயரிய அனுபவங்களை ஆராய்ந்த விதம் இன்றைய ஆய்வாளர்களுக்கு உந்து சக்தியாக இருந்து பல ஆராய்ச்சிகளை மேற்கொள்ளும் விதத்தில் அமைந்துள்ளது.

**குறிப்பு நூல்கள்**

[1] கணேஷ்மூர்த்தி. பூ.சு. *திருமலைக்கோயில் ஒழுகலாறுகளும் திருவிழாக்களும்.* டுடே பப்ளிகேஷன்ஸ், சென்னை, இரண்டாம்பதிப்பு, 2019.

[2] கந்தையா பிள்ளை. ந.சி. *செந்தமிழ் அகராதி.* சைவசித்தாந்த கழகம், சென்னை, நான்காம் பதிப்பு, 2018.

[3] கம்பர். *கம்பராமாயணம்.* சைவசித்தாந்த கழகம் சென்னை, மறுபதிப்பு 2012.

[4] குலசேகராழ்வார். *பெருமாள் திருமொழி.* ஆழ்வார்கள் ஆய்வுமையம், சென்னை, மறுபதிப்பு, 2019.

[5] சுப்பு ரெட்டியார். ந. *திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்.* சென்னை, பதிப்பு, 1975.

[6] சுப்பு ரெட்டியார். ந. *நினைவுக் குமிழிகள் 4ம்பாகம்.* வேங்கடம் பதிப்பகம், அண்ணா நகர், பதிப்பு, 1990.

[7] நம்மாழ்வார். *திருவாய்மொழி.* ஆழ்வார்கள் ஆய்வுமையம், சென்னை, மறுபதிப்பு, 2019.

[8] பாலசுப்பிரமணியன். *பாரதியார் கவிதைகள்.* சென்னை, மறுபதிப்பு, 2018.

[9] புலியூர் கேசிகன். *திருக்குறள் உரை.* பூம்புகார் பிரசுரம், சென்னை, பதிப்பு, 2019.

[10] மாணிக்கவாசகர். *திருவாசகம்.* சைவசித்தாந்த கழகம், சென்னை, மறுபதிப்பு, 2018.

[11] வரதராஜன் மா. *அருளிச்செயல் அருஞ்சொற்பொருள் அகராதி,* ஸ்வாமி நம்மாழ்வார் அறக்கட்டளை, சென்னை, பதிப்பு, 2001.

[12] *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி-13,* தமிழ்ப்பல்கலைக்கழகம் தஞ்சாவூர், பதிப்பு1986.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[13] வேதாந்த தேசிகர். *தயாசதகம்.* வைபவ பிரகாசிகை, சென்னை, மறுபதிப்பு, 2019

[14] வியாசர். *பகவத்கீதை.* ஸ்வாமி நம்மாழ்வார் அறக்கட்டளை, சென்னை, பதிப்பு, 2001.

[15] ஜெகத்ரட்சகன்.எஸ். *திருமாலியம்.* ஆழ்வார்கள் ஆய்வுமையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2019.

**References**

[1] Ganeshmoorthy. Pu.Su. *Thirumalaikkoil Ozhukalarukalum Tiruvizhakalum*. Today Publications, Chennai, Second Edition, 2019.
[2] Kandaiayya Pillai N.S. *Sentamil Agaradi*. Saiva Siddanta Kazhagam, Fourth Edition, 2018.
[3] Kambar. Kambarayanam. Saiva Siddanta Kazhagam, Re-Edition, 2012.
[4] Kulasekarazvaar. *Perumaal Thiromozhi.* Azvaargal Ayvu Maiyam, Chennai, Re-Edition, 2019.
[5] Subbu Reddiar. Na. *Thiruvengadamum Tamil Ilakkiyamum*. Pari Nilayam, Chennai, First Edition 1975.
[6] Subbu Reddiar. Na. *Ninaivu Kumizhikal 4th Part*, Vengadam Publications, Chennai, 1990.
[7] Nammazvaar. *Thiruvaimozhi.* Azvaargal Ayvu Maiyam, Chennai, Re-Edition, 2019.
[8] Balasubramanian. *Bharadhiyaar Kavithaigal*. Pari Nilayam, Re-Edition, 2018.
[9] Puliyur Kesigan. *Thirukkural Urai*. Poombugar Press, Broadway, Chennai, 2019.
[10] Manikkavasagar. *Thiruvasagam*. Saiva Siddanta Kazhagam, Chennai, Re-Edition, 2018.
[11] Varadharajan. Ma. *Arulicheyal Arunsorporul Agaradi*. Swami Nammazvar Trust, Chennai, 2001.
[12] *Vazviyar Kalanjiyam Thogudhi 13*. Tamil Palkalikazagam, Tanjavur, 1986.
[13] Vedandadesigar. *Dayasadagam.* Vaibava Prakasigai, Chennai, Re-Edition, 2019
[14] Viyasar. *Bagavath Githai*. Swami Nammazvar Trust, Chennai, 2001.
[15] Jagathrachagan. S. *Thirumaliam*. Azvaargal Ayvu Maiyam, Chennai, Second Edition, 2019.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் சைவக் கொடை

## Contributions of Professor Na. Subbu Reddiar on 'Saivam'

**முனைவர் வி. கவிதா**, இணைப்பேராசிரியர், தமிழாய்வுத் துறை,

காவேரி மகளிர் கல்லூரி, திருச்சி, தமிழ்நாடு, இந்தியா

**Dr. V. Kavitha.** Associate Professor of Tamil, Cauvery College for Women, Trichy, Tamil Nadu, India.

ORCiD: https://orcid.org/0000-0002-8865-3457

.DOI: 10.5281/zenodo.7251450

**Abstract**

*Most of the literary works in Tamil focuses on Saivam, out of these 'Panniru Thirumuraigal' & 'Saivam Principles' are noteworthy. Prof. Na. Subbu Reddiar presents his literature in a simple language with clarity. This article highlights Subbu Reddiar's literary contribution to Saivam, "Saivamum Tamilum" – presents an overall view on Saivam. Professor has expressed the historic heritage of Saivam through his quotes which explicits that Professor has a splendid command over Tamil. He has also listed a catalogue of books- titled with the creators and their biography, that describes the greatness of 'Panniru Thirumuraigal', mythological literature etc. The book "Moovar Thevaram Pudhiya Parvai" – First chapter describes the history and origin of "Panniru Thirumuraigal". Subbu Reddiar has quoted from "Thevaram" sung by Appar, Sambandhar and Sundharar - a few verses which highlights the significance, affectations and its effects. In the second part entitled 'Pansumandha Thevara Padalgal', Professor has presented a new perspective & deeply analysed the poetical structure which is evident that he has a strong knowledge in music too. In 'Saivasithandham Oru Arimugam', professor has clearly explained the principles and philosophy in a simple language. The philosophy of Saivam is known as Saivasithandham and the principles – 'Padhi', 'Pasu' and 'Paasam' are elaborated. "Saiva Samaya Vilakku" also bestows Saivasithandham hymns in simple style which is portayed as an elderly person composing a letter to a youth about the meaning of 'Padhi, Pasu and Paasam'. Sadhanaiiyal, Payiraviyal and Vazhipatiyal elaborate on Saivam and the methods of worship.*

**Keywords:** Saivam, Padhi, Pasu, Paasam, Saivasithandham.

**ஆய்வுச்சுருக்கம்**

*இலக்கியவளம் நிறைந்த தமிழ்மொழியில் பெரும்பாலான இலக்கியங்கள் சைவம் பற்றிப் பேசுகின்றன. இவற்றுள் முக்கியமானவை "பன்னிரு திருமுறைகளும்" சைவ சித்தாந்த நூல்களும். இவற்றை, சாமானியர்களுக்கும் விளங்கும் வகையில் எளிய முறையில் விளக்கும் வல்லமை பெற்றவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் சைவசமயத்தின் பெருமையை விளக்கும்முகமாக பேராசிரியர் இயற்றியுள்ள பல நூல்களின்வழி சைவசமயத்திற்கு ஆற்றியுள்ள தொண்டினை எடுத்துரைப்பது இக்கட்டுரையின் நோக்கமாகும். 'சைவமும் தமிழும்' என்ற நூல் சைவசமயத்தை அறிய முற்படுபவர்களுக்கு ஒரு அகராதியாகத் திகழ்கிறது. சைவசமயத்தின் பழமையை, சங்ககாலந்தொட்டு தோன்றிய இலக்கியங்களில்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*இடம்பெற்றுள்ள பாடல்கள்வழி நிறுவியுள்ளார் பேராசிரியர். பன்னிருதிருமுறை நூல்களின் சிறப்பு, புராணஇலக்கியங்கள் என்று ஒரு மிகப் பெரிய பட்டியலையே தந்துள்ளார். ஆசிரியர்களின் பெயரைத் தலைப்பிட்டு அதற்குக் கீழே வாழ்க்கைக் குறிப்புகள், அவர்கள் இயற்றிய புராணஇலக்கியங்கள், அவற்றின் சிறப்பு, செய்யுள்நயம் போன்றவற்றைப் பல பாடல்களை எடுத்துக்காட்டாகத் தந்து விவரித்துள்ளதன் வாயிலாக பேராசிரியரின் தமிழ் ஆளுமையை உணரமுடிகிறது. 'மூவர் தேவாரம் புதிய பார்வை' என்ற நூலில் முதல் பகுதியில் பன்னிருதிருமுறை தோன்றிய வரலாற்றை எடுத்துரைத்துள்ளார். அதனைத் தொடர்ந்து தேவாரங்கள் பற்றியும் சிறந்த பாடல்கள், பாடப்பட்ட களம், சூழல், விளைவுகள் ஆகியவற்றை நுணுகி ஆராய்ந்து எடுத்துரைத்துள்ளார். இரண்டாம் பகுதியில் 'பண்சுமந்த தேவாரப்பாடல்கள்' என்ற தலைப்பில் நூலின் தலைப்புக்கு ஏற்ற வகையில் புதிய பார்வையில் தேவாரத்தை ஆய்ந்து உள்ளார். அக்காலத்திலேயே பண் அமைத்து, தாளத்துடன் தேவாரப் பாடல்கள் பாடப்பட்டு இருக்கின்றன என்பதை ஆய்வுநோக்கில் கண்டு தாம் இசையிலும் வல்லவர் என்பதை நிறுவியுள்ளார். 'சைவசித்தாந்தம் ஒரு அறிமுகம்' என்ற நூலில் சைவசித்தாந்தக் கருத்துக்களை எளிய முறையில் விளக்கியுள்ளார். சைவத்தின் தத்துவக் கருத்துகளை கூறுவதே சைவசித்தாந்தம். இதனடிப்படையில் ‘பதி பசு பாசம்’ ஆகியன பற்றி விரிவாக எடுத்துரைத்துள்ளார். “தொல்காப்பியம்” முதலாக மெய்கண்ட சாத்திரம் ஈறாக உள்ள நூல்களில் காணப்படும் சைவசித்தாந்த கருத்துகளைத் தொகுத்து ஆய்வு நோக்கில் எடுத்துக் கூறியுள்ளார். 'சைவ சமய விளக்கு' என்ற நூலும் சைவசித்தாந்தக் கருத்துக்களை எளிய முறையில் விளக்கும் வண்ணமாகவே அமைகின்றது. “பதி (இறை) பசு (உயிர்) பாசம் (தளை)” என்ற முப்பொருட்களை எளிய நடையில் ஆன்மிகப் பற்று உள்ள ஒரு முதியவர் ஒரு இளைஞனுக்கு கடிதம் மூலமாக விளக்குவது போல எழுதப்பட்டிருக்கிறது. சாதனஇயல், பாயிரவியல், வழிபாட்டு இயல் என்ற இயல்களில் சைவசமயத்தின் பிற தத்துவக்கருத்துக்களும் வழிபாட்டுமுறைகளும் விரித்துரைக்கப்பட்டுள்ளன.*

**குறிப்புச் சொற்கள்:** சைவம், பதி, பசு .பாசம், சைவசித்தாந்தம்.

**முன்னுரை**

இலக்கிய வளம் நிறைந்த தமிழ் மொழியில் பல இலக்கியங்கள் சமயம் சார்ந்து இருப்பதை காண்கிறோம் அவற்றில் பெரும்பாலானவை சைவம் பற்றிப் பேசுகின்றன. சைவ இலக்கியங்களுள் முக்கியமானவை பன்னிரு திருமுறைகளும், சைவ சித்தாந்த நூல்களும். அவற்றின் பொருளைக் கற்றுணர்ந்து கொள்ளுதல் சாமானியர்களுக்கு இயலாத ஒன்று .இதைக் கற்றுணர்ந்து பழமைவாய்ந்த சைவசமயத்தின் சிறப்பினை எளிய முறையில் விளக்கும்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வல்லமை பெற்றவர், பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள். சைவசமயத்தின் பெருமையினை அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் பல நூல்களை இயற்றியுள்ளார் .அவர் இயற்றிய நூல்களின் வழி பேராசிரியர் சைவசமயத்திற்கு ஆற்றிய கொடையினை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.

**சைவசமயத்தின் தொன்மை**

இயற்கையோடு இயைந்து வாழத்தொடங்கிய மனிதன், ஆதியில் அச்சத்தின் காரணமாக, இயற்கையை வழிபடத் தொடங்கினான். குழுவாக இணைந்து வாழும் பொழுது தம்மை மீறிய சக்திக்கு 'இறை' எனப் பெயரிட்டு வணங்கத் துவங்கி கால நீட்சியில் , அவரவர் கருத்திற்கேற்ப பல சமய வழிபாடாக மாறியது. இங்ஙனம் வளர்ந்த இறை வழிபாட்டில் சிவ வழிபாடு மிகப் பழமையான ஒன்றாகக் கருதப்படுகிறது.

> **மொகஞ்சதாரோ, ஹரப்பா ஆகியவற்றில் இருந்து தோண்டி எடுக்கப்பட்ட பொருள்களில் சைவசமயத்தின் பிரதான சின்னமாக விளங்கும் லிங்கமும் ஒன்றாகும். மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரீகம் கிறிஸ்து பிறப்பதற்கு நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இருந்த ஒன்று என வரலாற்றுப் பேராசிரியர்களும் அறிஞர்களும் மதிப்பீடு செய்து இருக்கின்றார்கள். (சைவ சமய விளக்கு, பக். xi)**

என்பதன் வாயிலாக சைவசமயத்தின் தொன்மையினை நம்மால் அறிய முடிகிறது.

**சாத்திரவளம்**

சமயம் என்பது வாழ்வும் அனுபவமும் இணைந்த ஒன்று .மனித இன வளர்ச்சியோடு இணைந்து சமயங்களும் வளர்ந்தன. சமயங்கள் வளர, வளர, மொழியும் சேர்ந்தே வளர்ந்தது . சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களையும் தம் இரு கண்களாகப் போற்றியவர் சுப்புரெட்டியார் என்பதனை, அவர் இயற்றியுள்ள நூல்கள் வழி நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது. வைணவம் உரை வளத்தால் ஏற்றம் பெற்றது; சைவம் சாத்திரவளத்தால் சிறப்புற்றது என்ற சொற்றொடரை தம் நூல்களின் வழி நிறுவியுள்ளார் பேராசிரியர்.

> **நம்முடைய சமயக் கோட்பாடுகள் தத்துவங்கள், கடவுள் பற்றிய கருத்துகள் ஆகியவற்றைப் பற்றி ஒன்றுமே அறியாமல் வேகமாக வளர்ந்து வருகின்றது. இன்றைய சமுதாயம். உழைப்பு, நாணயம், நேர்மை, ஒழுக்கம் உள்ள மனிதர்களிடத்தில் இன்று பணம் போய்ச் சேரவில்லை. மாறாக, உழைப்பு, நேர்மை, ஒழுக்கம் இவற்றைப் பற்றி கொஞ்சமும் கவலைப்படாத இடைத்தரகர்களிடமே பணம் போய் சிக்குகின்றது. இதைக் காணும் இளைஞர்கள் விரக்தியடைந்து எந்தத் தவறையும் செய்து வாழலாம், எப்படியும் வாழ வேண்டும் என்ற நினைப்பில் தங்கள் வாழ்க்கைப் பயணத்தை துவக்குகின்றார்கள். இந்தச் சமூகச் சூழ்நிலையில் நம்முடைய சமயங்களைப் பற்றியும் அவற்றின் கோட்பாடுகள் மற்றும் சாஸ்திரங்களைப் பற்றியும் மக்கள் அறிந்து கொள்ள**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**எளிய உரைநடையில் நூல்கள் தேவை. அந்தத் தேவையைத்தான் பேராசிரியரின் நூலான, சைவ சமய விளக்கு பூர்த்தி செய்கின்றது. (சைவ சமய விளக்கு, பக். xii)**

என்று சைவ சமய விளக்கு நூலின் அணிந்துரையில் மாண்புமிகு நீதிபதி பி. வேணுகோபால் அவர்கள் கூறியுள்ளார். இக்கருத்து முழுதும் ஏற்றுக் கொள்ளக் கூடிய ஒன்றாகும். வளர்ந்து வரும் தொழில்நுட்ப உலகில், சமயத்தின் சிறப்புகளை எளிய முறையில் நற்றமிழில் எடுத்துரைக்கின்றார் பேராசிரியர்.

**கடவுள் விளக்கம்**

'சைவ சமய விளக்கு' என்ற நூல் கார்த்திகேயன் எனும் ஆன்மீக அனுபவம் மிக்க சான்றோர் ஒருவர், கண்ணுதலப்பன் என்ற இளைஞனுக்கு கடிதம் விடுப்பதான அமைப்பில் அமைந்திருக்கிறது. கடவுள், இவ்வுலகத்தைப் படைத்து நம்மைக் காப்பவர் என்று அறிகிறோம். கடவுள் பற்றி அன்பின் மறு வடிவம் கடவுள் என்றும் இவ்வுலகத்தைக் கடந்து நிற்கும் பரம்பொருள் என்றும் பல விளக்கங்கள் காணக் கிடைக்கின்றன வைதிக சமயங்கள் யாவும் கடவுள் உண்டு என்ற கொள்கை உடையன. 'கடவுள்' என்ற சொல்லின் பொருள் சைவசித்தாந்தக் கருத்தினை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது.

**கடவுள் என்றால் இயக்குதல், எனவே கடவுள் என்பதற்கு உலகை இயக்குபவர் என்பது கருத்தா கின்றது கடவுள் என்பதற்கு உள்ளத்தைக் கடந்தவர் என்றும் பொருள் கொள்ளலாம். மூன்றாவது பொருளாக கடவுள் உலகைக் கடந்தவர் அதேசமயம் உலகுள்ளும் உள்ளவர் எனக் கொள்ளுவது என்றும் கொள்ளலாம் (சைவ சமய விளக்கு, பக். 33)**

என்ற பேராசிரியரின் விளக்கத்தின் வாயிலாக 'உள்' என்ற சொல் உலகு, உயிர் ஆகியவற்றில் வியாபித்து நிற்கும் நிலையையும் 'கட' என்ற சொல் இவற்றைக் கடந்து செல்லும் நிலையையும் குறிப்பதை அறியலாம்.

**பதி, பசு, பாசம்**

பாயிர இயலில் 'சித்தாந்தம்' என்ற சொல்லுக்கு விளக்கம் தருகிறார். சித்தாந்தம் என்பதற்கு முடிந்த முடிபு என்பது பொருளாகும். சைவசித்தாந்தத்தில் மூன்று பொருள்கள் முடிந்த முடிவாகக் கொள்ளப்படுகின்றன .அவை பதி, பசு, பாசம் ஆகியனவாகும்.

**பதி என்பது இறைவன்; கடவுள், 'பரமான்மா' எனப்படுவதும் இதுவேயாகும். பசு என்பது ஆன்மா; உயிர், 'சீவான்மா' எனப்படுவதும் இதுவே. பாசம் என்பது, தளை; அஃதாவது உயிரைப் பிணித்துள்ள கட்டு இவை தமிழில் முறையே இறை, உயிர், தளை என்று சொல்லப்படும். (சைவ சமய விளக்கு, பக். 3)**

என்று விளக்கம் பகருகிறார்.

**பதி பசு பாசம்—எனப் பகர் மூன்றில்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பதியினைப் போல் பசு பாசம் அனாதி**
**பதியினை சென்று அணுகா பசு, பாசம்**
**பதி அணுகின் பசு, பாசம் நில்லாவே. (திருமந்திரம், பா. 115)**

என்ற திருமூலரின் கருத்து இதனை உறுதி செய்கிறது. நூல்களைப் பற்றிப் பேசுகையில், அறநூல், அருள் நூல் என்று இரண்டு வகை நூல்கள் கூறுகிறார். உலகோர் பொருட்டு செய்யப் பெற்ற நூல் 'அற நூல்' என்றும் சத்திநிபாதர் பொருட்டு செய்யப் பெற்றது. 'அருள்நூல்' என்றும் விளக்கம் தருகிறார். அறநூலைப் பொது நூல் என்றும் அருள் நூலை, சிறப்பு நூல் என்றும் குறிப்பிடுகிறார். பொது, சிறப்பு என்பது கருத்துக்களின் அடிப்படையிலேயே அமைவதாகவும், அவ்வகையில் திருக்குறளை, பொது நூல் என்றும் திருமுறைகளைச் சிறப்பு நூல் என்றும் கூறுகிறார்.சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினையும் பட்டியலாகத் தருகிறார்

**1.திருஉந்தியார், 2.திருக்களிற்றுப்பாடியார், 3.சிவஞானபோதம், 4.சிவஞான சித்தியார், 5.இருபா இருபது, 6.உண்மை விளக்கம், 7.சிவப்பிரகாசம், 8.திருவருட்பயன், 9.வினா வெண்பா, 10.போற்றிப் பஃறொடை வெண்பா, 11.கொடிக்கவி, 12.நெஞ்சுவிடுதூது, 13.உண்மை நெறி விளக்கம், 14.சங்கற்ப நிராகரணம் (சைவ சமய விளக்கு, பக். 10)**

இந்நூல்களைப் பற்றியும், நூல் ஆசிரியர்கள் பற்றியும் விரிவாகப் பேசுகிறார். பன்னிரு திருமுறைகள் பற்றிய குறிப்புகளோடு, திருமுறைகளை ஓதி வழிபடுதலின் சிறப்பையும், தேவாரம் வழி எடுத்துரைக்கிறார்.

**இம்மையே தரும், சோறும் கூறையும்;**
**ஏத்தல் ஆம்; இடர் கெடலும் ஆம்;**
**அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு**
**யாதும் ஐயுறவு இல்லையே. (திருப்புகலூர்ப் பதிகம், பா. 1)**

என்ற திருப்புகலூர்ப் பதிகம் இறைவனை வணங்குவதனால் பெறும் சிறப்பைக் கூறுகிறது. பதி, பசு பாசம் ஆகிய முப்பொருள்கள் பற்றி மூன்று இயல்களில் பல கடிதங்கள் வாயிலாகப்பேசுகிறார். பதி இயலில், கடவுள் குறித்து அனைத்து விளக்கங்களும் கூறப்படுகிறது. சைவசித்தாந்தம், கடவுளைப் பற்றிக் கூறுகையில் இரு வகையான விளக்கங்கள் தருவதையும் கடவுள் உண்டு என்று பேசுவதை 'சுபக்கம்' என்றும் கடவுள் இல்லை என்று வாதிப்பதை 'பரபக்கம்' என்றும் கூறப்படுவதை அறிகிறோம்

**இறைவனது வடிவங்கள்**

உயிர்கள் மேல் கொண்ட கருணையால் இறைவன் திருமேனி (உருவம், அருஉருவம், அருவம்) கொண்டதாகக் கூறப்படுகிறது. இறைவனது செயல்கள் பற்றிப் பேசுகையில், குயவன் மட்பாண்டங்களை தன் விருப்பப்படி அன்றி வாங்குவோர் விருப்பப்படி செய்வது போல இறைவனும் உயிர்களும் வினைக்கேற்றவாறு செயல்படுகிறான் என்று உரைக்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


பசு இயலில், உயிர் பற்றிய விளக்கம், இயல்பு, ஆன்மாவின் மூன்று நிலைகள் ஆகியவை கூறப்படுகிறது. பாச இயலில், ஆணவம், கன்மம், மாயை பற்றிய விளக்கம், காரண காரியங்கள் ,ஐம்பூதங்கள் அண்டங்கள் போன்றவற்றை ஐயந்திரிபற எடுத்துரைக்கிறார். சாதன இயலில், சிவ புண்ணியத்தின் வகைகளான சரியை, கிரியை, யோகம் பற்றி எடுத்துரைத்துள்ளார். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் இறைவனுக்கு உயிர்கள் செய்யும் பணிகளே என்று கூறப்படுகிறது. 'சரியை' எனப்படுவது இறைவனது உருவத்திருமேனியைத் தீண்டி வழிபடுதலும், அந்த வழிபாட்டிற்குத் தேவையானவற்றை செய்தலும் என்று கூறுகிறார்.

இதற்குச் சான்றாக,

**தாதமார்க்கம் சாற்றில், சங்கரன்தன் கோயில்**
**தளம் அலகுஇட்டு, இலகுதிரு மெழுக்கும் சாத்தி**
**போதுகளும் கொய்து பூந் தார்மாலை கண்ணி**
**புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடி**
**தீதுஇல் திரு விளக்குஇட்டு, திருநந்த வனமும்**
**செய்து திருவேடங்கண்டால் அடியேன் செய்வது**
**யாது? பணியீர்! என்று பணிந்து, அவர்தம் பணியும்**
**இயற்றுவது; இச்சரியை செய்வோர் ஈசன் உலகு இருப்பர்.**

**(சிவஞான சித்தியார், பா. 8, 19)**

என்ற சிவஞானசித்தியார் பாடலை உரைக்கிறார் 'கிரியை' என்பது இறைவனை அகத்திலும் புறத்திலும் பலவகை உபசாரங்களை முறைப்படி செய்து வழிபடுதல் ஆகும். 'யோகம்' என்பது இறைவனோடு ஒன்றுதல் என்ற பொருளைத் தரும். இதனை எட்டுக் கூறுகளாக வகுத்துக் கூறுகிறார். அவையாவன- இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பதாகும். இவற்றையும் விளக்குகின்றார். மெய்ப்பொருளாகிய இறைவனை அறியும் அறிவு 'ஞானம்' எனப்படுகிறது. பயன் இயலில் இறைவன் திருவடி அடையும் சீவன் பெறும் இன்பம், முத்தி, தசகாரியம் ஆகியன கூறப்படுகின்றன. இறுதியாக வழிபாட்டியலில், வழிபாடு தோன்றிய வரலாற்றை எடுத்துரைக்கிறார். திருக்கோயில் வழிபாடு இடைக்காலத்தில் ஏற்பட்டதாகவும், வேதகாலம் சங்ககாலத்தில் இல்லை என்றும் உரைக்கிறார். இயற்கையைக் கடவுளாக போற்றி வழிபட்டமையை பரிபாடலை சான்றாகக் கூறி எடுத்துரைக்கிறார். காலப்போக்கில் ஆகம அடிப்படையில் கட்டப்பட்ட கோயில்கள் அமைப்பினையும் விரிவாகக் கூறுகிறார். மேலும் பூசை முறைகள், அதன் உட்பொருள், வழிமுறைகள் ஆகியவற்றையும் எளிய முறையில் விளக்கியுள்ளார்.

**பன்னிருதிருமுறைகள்**

'மூவர் தேவாரம் புதிய பார்வைகள்' என்ற நூலில் ‘பன்னிருதிருமுறைகள் மறைந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நிலையும் தொகுப்பு முறையும்' என்ற தலைப்பில் திருமுறைகள் தொகுக்கப்பட்ட விதத்தினை, சிறப்புற எடுத்துரைத்துள்ளார். இராசராச சோழன் தேவார பதிகங்கள் பாடக் கேட்டு நெக்குருகி அவற்றைத் தேடுகையில், நம்பியாண்டார் நம்பி பற்றி அறிகிறார். நம்பியாண்டார் நம்பியின் கதையினையும் பேராசிரியர் சுவைபடக் கூறியுள்ளார். நம்பியிடம், தேவாரத்தைத் தேடித் தருமாறு வேண்ட பொல்லாப் பிள்ளையாரின் அருளினால் தேவாரப் பதிகங்கள் தில்லையில் இருக்கும் செய்தியை அறிகிறார். தில்லைவாழ் அந்தணர்கள் நிபந்தனையை ஏற்று மூவரின் திருமேனியை முன்னிறுத்தி தேவாரப் பதிகங்களைப் பெறுகின்றனர். பல சுவடிகள் சிதைந்த நிலையில் அசரீரி கிடைக்கப்பெற்று மீதம் இருந்த சுவடிகளைத் தொகுக்கிறார். சம்பந்தர் பாடிய பாடல்கள் முதல் மூன்று திருமுறைகள் ஆகவும் திருநாவுக்கரசர் பாடியவை 4, 5, 6 திருமுறைகள் ஆகவும் சுந்தரர் பாடியது ஏழாம் திருமுறையாகவும் தொகுக்கப்பெற்றது. பின்னர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த பாடினியார் உதவியுடன் பண்களுக்குக் கட்டளைகள் வரையறுக்கப்பட்டன என்ற செய்தியை விரிவாகக் கூறியுள்ளார் பேராசிரியர். சைவத்தையும் வைணவத்தையும் தம் இரு கண்களாகப் போற்றுபவர் என்பதை இங்கும் நிரூபித்துள்ளார். வைணவ இலக்கியமான நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தை நாதமுனிகள் எவ்வாறு தொகுத்து அளித்தார் என்பதையும் சுவைபட எடுத்துரைத்துள்ளார்.

**தேவாரம்**

தேவாரப் பதிகங்கள் வரிசைமுறை பற்றிக் கூறுகையில், சிறு வயதினரான சம்பந்தப் பெருமானை ஏன் முதலில் வைத்துள்ளனர் என்ற வினா நம் மனதில் எழுதல் இயல்பு. அப்பெருமக்கள் இவ்வுலக வாழ்வைத் துறந்து இறைத் திருவடியை அடைந்து வீடு பேறு பெற்றமையை எண்ணியே தொகுக்கப் பெற்றதாக உரைக்கிறார் பேராசிரியர். மூவர் திருப்பதிகங்களை 'தேவாரம்' என்ற சொல்லால் வழங்கியது முதல் முதலில் இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகாம்பரநாதர் உலாவில்தான் காணப் பெறுகிறது என்ற செய்தியையும் அறியச் செய்கிறார்.

**மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்**
**தேவாரம் செய்த திருப்பாட்டும் (மூவர் தேவாரம் - புதிய பார்வை, ப. 14)**

என்பது அவ்வுலாவில் உள்ள தொடராகும். ஆனால் இங்கு 'தேவாரம் செய்து' என்று வினை நிலையில் வைத்து கூறப்பட்டுள்ளது. தேவாரம் என்ற பெயரைத் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்கியவர் எல்லப்ப நாவலர் என்ற செய்தியையும் குறிப்பிடுகிறார்.

**வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்**
**உய்வைத் தரஞ்செய்த நால்வர் பொற்றாள் உயிர்த்துணையே**

**(மூவர் தேவாரம் - புதிய பார்வை, ப. 15)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

'தேவாரம்' என்ற பொருளுக்கு விளக்கமும் அச்சொல் எப்பொழுதெல்லாம் வழங்கப்பட்டு இருக்கிறது என்பதையும் விரிவாக ஆராய்ந்துள்ளார் .தேவாரம் என்ற சொல்லையும் ஆராய்ச்சி செய்திருக்கிறார். தேவபாணி என்னும் பெயரை ஒட்டியே தேவாரம் என்று வழங்கி இருத்தல் வேண்டும் என்ற முடிவையும் உரைக்கிறார். 'மூவர் அருளிய திருப்பதிகங்கள்' எனும் தலைப்பில் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் வாழ்க்கை வரலாற்றினையும் அவர்களது அற்புதத் திருப்பதிகங்களையும் பற்றிக் கூறியுள்ளார். அற்புதத் திருப்பதிகங்கள் என்பவை, தெய்வ அருளால் நடைபெற்ற நிகழ்ச்சிகளை உடையவை என்ற விளக்கத்தையும் தருகிறார். இப்பதிகங்களை விளக்குவதோடு அவர்கள் வாழ்க்கை வரலாற்றினையும் பாடல்களில் போக்கிலேயே கூறிச் செல்கிறார்.

**பண்முறை**

'பண்சுமந்த தேவாரப்பாடல்கள்' என்ற தலைப்பில் ஆசிரியர் கூறியுள்ள கருத்துகள்தான் தலைப்புக்கு ஏற்ற வகையில் புதிய பார்வையில் அமைகின்றன. தேவாரப் பாடல்களின் அமைப்பு எங்ஙனம் அமைந்துள்ளது என்பதை இப்பகுதியில் விரிவாக எடுத்துரைத்துள்ளார்.

> **மூவராலும் அருளிச் செய்யப் பெற்ற திருப்பதிகங்கள் முழுவதும் 'பண்முறை' எனவும் 'தலமுறை' எனவும் இரு வேறு முறையில் வரிசைப்படுத்தப்பெற்று நடைமுறையில் இருப்பதை அனைவரும் அறிவர். (மூவர் தேவாரம்-புதிய பார்வை, ப. 117)**

பண்முறையே முற்காலத்தில் பின்பற்றப்பட்டதை ஏட்டுச் சுவடிகளின் வாயிலாக அறிகிறோம். திருமுறைகளைப் பகுப்பதற்கும் இப் பண்முறையே அடிப்படையாக அமைந்துள்ளதாகப் பேராசிரியர் கூறுகிறார். ஒவ்வொரு திருமுறையிலும் அமைந்துள்ள திருப்பதிகங்களின் எண்ணிக்கையைக் குறிப்பிட்டு அவை எந்தப் பண்களின் அடிப்படையில் முறைப்படுத்தப் பட்டுள்ளன என்றும் விளக்கியுள்ளார். ‘தோடுடைய செவியன்’ என்ற பிரம்மபுரம் திருப்பதிகம் முதல் பதிகமாக வைக்கப்பட்டமைக்கு ஆசிரியர் கூறும் காரணம் ஏற்புடையதாக இருக்கிறது. மேலும், வடமொழி யாப்பிலக்கண மரபை அடியொற்றி லகு ,குரு எனும் எழுத்தமைப்பைக்கொண்டு கூறப்பட்டுள்ள புதிய இலக்கணப்படி தனா தானா தனனா தனா போன்ற அமைப்பிலும் பதிகங்கள் பாடப்படும் முறையினைப் பகுத்து ஆராய்ந்து உள்ளார். திருப்பதிகங்களின் யாப்பு வகையினைக் கட்டளை என்பர். கட்டளை என்பது, மாத்திரை அளவு,எழுத்தியல் நிலை அடிப்படையில் செய்யுளில் அமையும் ஓசைக் கூறுபாடு என்று விளக்கம் தருவதோடு ஒவ்வொரு திருமுறையும் பெற்றுள்ள கட்டளை விகற்பங்களின் தொகை குறித்தும் திருமுறை கண்ட புராணத்தை ஆதாரமாகக் கொண்டு விளக்கியுள்ளார்.

> **தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடியும் கேட்டு மகிழ வேண்டுமானால் அப்பதிகங்களுக்குரிய பண்ணாகிய இசையமைப்பினையும் பாடல்களுக்கு உரிய தாள**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**அமைப்பினையும் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். (மூவர் தேவாரம்-புதிய பார்வை, ப. 246)**

என்ற ஆசிரியரின் கூற்று அவருக்கு மிகவும் பொருந்தும். தனது ஆழங்கால் பட்ட இசையறிவின் வாயிலாக தேவாரத் திருப்பதிகங்களை ஆராய்ந்து இருப்பதை நம்மால் உணர முடிகிறது.

**சைவமும் தமிழும்**

'சைவமும் தமிழும்' என்ற நூலில் ஓரூரும் ஒரு பேரும் இல்லாத ஒப்புவமையற்ற இறையினை ஓராயிரம் நாமம் சொல்லித் தெள்ளேணம் கொட்டிய புலவர்களை, அவர்கள் வடித்துத்தந்த இலக்கியங்களை, குறிப்பாக அவ்விலக்கியங்கள் முழுமுதற்கடவுளாக சிவனைக் குறிக்கும் சிறப்பான இடங்களைப் பற்றி பேராசிரியர் தொல்காப்பியம் முதலாக இலக்கியச்சான்றுகளுடன் எடுத்துரைத்துள்ளார்

**நீரும் நிலனும் தீயும் வளியும்**
**மாக விசும்போடு ஐந்து உடன் இயற்றிய**
**மழுவாள் நெடியோன் தலைவன் ஆக (மதுரைக் காஞ்சி, பா. 6-455)**

என்று மதுரைக் காஞ்சியில், சிவபெருமான் மழுவுடன் உடைய பெரியோன் எனக் குறிப்பிடப் பெறுகிறான்.

**பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி**
**நீல மணிமிடற் றொருவன் போல (புறம், பா. 91)**

என்று புறநானூற்றில், அதியமானை அவ்வையார் வாழ்த்துகிறார். சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில், நுதல்விழி நாட்டத் திறையோன் கோவிலும் (சிலப்பதிகாரம், பா. 14-7) என்று சிவபெருமானின் தோற்றம் குறிப்பிடப்படுகின்றது. இதுமட்டுமன்றி, ஐம்பெரும்காப்பியங்கள், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், பக்தி இலக்கியங்கள் எனப் பல சான்றுகள் தந்து சிவபெருமானைப் பற்றி, அவர்தம் சிறப்புகளைப் பற்றி எடுத்துரைக்கிறார். திருமுறை இலக்கியங்களைப் பற்றிக் கூறுகையில், முதல் ஏழு திருமுறைகளைத் தனித் தலைப்பாக இட்டுக் கூறியுள்ளார். நூல்களை, உலக நூல், அறிவு நூல் என்று பகுக்கிறார். உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை உலக நூல்கள், இவை உடலுக்கு உறுதி தருபவை, பெரியோர் அருளியுள்ள உயிர்க்கு உறுதி தரும் நூல்கள் அறிவன் நூல்கள். சைவத் திருமுறைகள் அறிவன் நூல் பகுதியில் அடங்குகின்றன.

ஒன்று முதல் ஏழு வரை உள்ள தேவாரத் திருப்பதிகங்களை வரிசைப்படுத்தி தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி என்றும் நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின்னும் சேக்கிழாருக்கு முன்னும் தோன்றிய பெரியோர், எட்டு முதல் பதினோரு திருமுறைகளைத் தொகுத்ததாக ஆசிரியர் உரைக்கிறார். ஒவ்வொரு திருமுறையாகக் குறிப்பிட்டு அதில் இடம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பெற்ற பதிகங்கள், அவற்றின் சிறப்புகள், முக்கியப் பாடல்கள், பதிகங்களின் சிறப்புகள் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன.

**திருமுறை ஆசிரியர்கள் என்ற தலைப்பில் பன்னிரு திருமுறை இயற்றிய ஆசிரியர்களின் வரலாற்றைக் கூறியுள்ளார் "முதல் எட்டு திருமுறைகளை இயற்றியவர்கள் சமய குரவர்கள் என்று வழங்கப் பெறுவர்" (சைவமும் தமிழும், ப. 79)**

இவர்களது வரலாற்றை முதலில் கூறுகின்றார்.பிறப்பு .வளர்ப்பு, அவர்கள் வாழ்வில் நடந்த சிறப்பு நிகழ்ச்சிகள், பாடிய பாடல்களின் தொகை, பதிக அமைப்பு, பாடல்களின் சிறப்பு, ஆகியன கூறப் பெறுகின்றன. சுந்தரரைக் கூறுகையில், அவர் சென்ற திருத்தலங்கள் பற்றியும் கூறியுள்ளார். ஒன்பதாம் திருமுறை பாடிய ஒன்பதின்மர், பத்தாம் திருமுறை பாடிய திருமூலர், பதினோராம் திருமுறை பாடி அருளிய பன்னிருவர் பன்னிரண்டாம் திருமுறை படைத்த சேக்கிழார் ஆகியோரது வாழ்க்கை வரலாறும் சிறப்புச் செய்திகளும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

புராணங்களை இயற்றிய ஆசிரியரின் பெயரைத் தலைப்பாக இட்டு அவரது வாழ்க்கைக் குறிப்புடன், இயற்றிய புராண நூல்கள் அவற்றின் அமைப்பு கதையமைப்பு, சிறந்த பாடல்கள் அடங்கிய ஒரு பெரிய பட்டியலே கொடுக்கப்பட்டுள்ளது. இங்கு கூறப்பட்டுள்ள புராணங்களின் பெயரைப் படிக்கையிலேயே நமக்கு பிரமிப்பு ஏற்படுகிறது. ஏறக்குறைய, ஐம்பதிற்கும் மேற்பட்ட புராணங்கள் அவற்றை முழுமையாகப் படித்து அதன் சாராம்சத்தைத் தந்துள்ள பேராசிரியரின் நூலறிவு எத்தன்மையதாக இருந்திருக்கிறது? புராணங்களைப் பற்றிக் கூறுகையில் புராணங்களில் வரும் கவச தோத்திரங்களும் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. 'பிரபந்த இலக்கியங்கள்' என்ற தலைப்பில், சிற்றிலக்கியங்களான உலா, அந்தாதி, கலம்பகம், தூது, கோவை, பிள்ளைத்தமிழ், அருணகிரிநாதர் படைப்புகள், மூவர் அம்மானை குறித்து பேராசிரியர் தந்துள்ள செய்திகள் நம்மை வியக்க வைப்பதாக உள்ளன. எத்துணை இலக்கியங்களைப் படித்து இருக்கிறார் என்பதை எண்ணும்போது நமக்கு, நாம் கற்றது கைமண்ணளவு என்ற சொற்றொடர் நினைவில் வருகிறது.

'சித்தர் இலக்கியங்கள்' என்ற தலைப்பில் சித்தர்கள் பற்றியும் அவர் இயற்றிய இலக்கியங்கள் பற்றிய செய்திகள் கிடைக்கப்பெறுகின்றன. **சித்தர்கள், சித்தி அடைந்தவர்கள். கடவுளைக் காண முடியும் என்று கண்டு அல்லது அறிந்து தெளிந்தவர்கள் சித்தர்கள், இவர்கள் சிவானுபூதி பெற்றவர்கள் (சைவமும் தமிழும், ப. 361)** என்று சித்தர்களுக்கான வரையறையைத் தரும் ஆசிரியர், பதினெண் சித்தர்கள், அவர்கள் செய்த பணிகள், பெற்ற சித்திகள், பாடிய பாடல்கள், தத்துவக் கருத்துகள் ஆகியவற்றைக் கூறியுள்ளதோடு பிற சித்தர்களைப் பற்றிய சுவையான செய்திகளைத் தந்துள்ளார்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

'பிற சான்றோர் இலக்கியங்கள்' என்ற தலைப்பில், தாயுமான அடிகள், இராமலிங்க அடிகள், தண்டபாணி அடிகள், சுப்பிரமணிய பாரதியார், கவிமணி ஆகியோரின் படைப்புகளில் உள்ள சைவ நூல்களை நமக்கு அறிமுகம் செய்கிறார். அத்தோடு, அவர்களது வரலாற்றையும் சுவையாகக் கூறிச் செல்கிறார். இச்சான்றோரது படைப்புகளைப் பார்க்கையில் அவரது புலமைத் தன்மையை அறிந்து கொள்வதோடு இதன் வாயிலாக பேராசிரியரின் ஆழங்கால் பட்ட தமிழ்ப் புலமை, சைவ சமயத்தின் நுண்ணிய கருத்துக்களை உணர்ந்திருக்கும் பேரறிவு புலனாகிறது

**சைவ சித்தாந்தம்**

'சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்' என்ற தலைப்பிட்ட நூலை, தொல்காப்பியம் முதலாக மெய்கண்ட சாத்திரங்கள் ஈறாக உள்ள பல நூல்களில் காணப்படும் சைவ சித்தாந்தக் கருத்துகளை ஆய்வு செய்து ஆசிரியர் எழுதி இருக்கிறார். சைவ சித்தாந்தம் எனும் பொருண்மை, தமிழகத்திற்கே உரிய சிறப்புடையது. இறைக்கும். உயிருக்கும் இடையேயான தளையினை ஆழமான நோக்கில் கூறுவது சைவ சித்தாந்தம் எனலாம். இந்நூலில் சைவசித்தாந்தம் நுவலும் உண்மைப் பொருள்களான பதி, பசு, பாசம் பற்றி விரிவாகப் பேசியுள்ளார். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினைப் பட்டியலிட்டு அவற்றை விளக்கியுள்ளார். நூலின் ஆசிரியர். நூல் அமைப்பு முறை. நுவலும்கருத்து. தோன்றிய உரைகள் ஆகிய செய்திகள் 'சித்தாந்த சாத்திரங்கள்' எனும் தலைப்பில் இடம் பெற்றுள்ளன. மெய்கண்ட நூல் ஆசிரியர்களை சந்தனாசாரியர்கள் என்று வழங்குவது வழக்கம்.

> **சமயசாரியர்களால் தழைத்தோங்கச் செய்யப்பெற்ற சைவ சமயத்தின் கொள்கைகளாகிய முப்பொருள் உண்மையை வரையறுத்து ஒழுங்குபடுத்திச் சிவஞானபோதம் முதலாக உள்ள சாத்திர நூல்களால் தெளிவாக விளக்கியவர்களாவார்கள். ஒருவருக்குப் புத்திர சந்தானம் போல இடையறவுபடாமல் வழிவழியாக ஞான புத்திரர்களாய் உபதேசக்கிரமத்தில் சைவ மரபினைக் காத்தவர்களாதலின் இவர்கள், சந்தான குரவர்கள் என வழங்கப் பெறுகின்றனர்.**
>
> **(சைவ சமயம்-வரலாற்றுப் பார்வை, ப. 57)**

சந்தான குரவர்கள் நால்வர் என்று பிற நூல்களில் கூறப்படுகிறது ஆனால், பேராசிரியர் சந்தனாசாரியர்கள் எழுவர் என்று கூறுகின்றார். 1. திருவியலூர், உய்யவந்த தேவனார், 2. திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், 3. மெய்கண்ட தேவர், 4. அருணந்தி தேவர், 5. மறைஞானசம்பந்தர், 6. மனவாசகம் கடந்தார், 7. உமாபதி தேவ நாயனார் ஆகியோரது வாழ்க்கை வரலாறும், எழுதிய நூல்களும் பற்றிக் கூறியுள்ளார். இவற்றைத் தொடர்ந்து சைவ சமயத் தத்துவங்களான பதி, பசு, பாசம் ஆகியன பற்றி மூன்று இயல்களில் மிக விரிவாக ஆழமான விளக்கங்களுடன் விரித்துரைத்துள்ளார். சற்காரியவாதம் பற்றி விளக்கம் தருகையில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**இல்லது தோன்றாது உள்ளது அழியாது என்றும் கூறலாம் இதுவே சற்காரிய வாதத்தின் சுருக்கமாகும் (சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 34)** என்று விளக்கம் பகர்கிறார்.

உலகத் தோற்றத்திற்கு கர்த்தா உண்டு என்றும் சங்கார காரணனே முதற்கடவுள் என்றும் கூறும் ஆசிரியர் சங்கார காரணன் என்ற திருப்பெயர் உருத்திரனைக் குறியாது மூவரிலும் மேம்பட்டவனாகிய சிவபெருமானையே குறிப்பதாகும் என்ற கருத்தினை உரைத்து மெய்கண்டாரைச் சான்றாகவும் காட்டி விளக்கியுள்ளார். இறைவன் தன் பொருட்டன்று உயிர்களின் பொருட்டே உருவம் கொள்கிறான் என்கிறார் அருணந்தி வடிவம் என்பன யாவும் அருவம் உருவம் அருவுருவம் என மூன்று வகையில் அடங்கும் எனக்கூறி இந்த மூவகை வடிவங்கள் பற்றி விளக்கமாகச் சொல்கிறார் இறைவனது செயல்களுக்கும் திருமேனிக்கும் உள்ள தொடர்பை தெளிவுபடுத்துகிறார். அறிவுக்கு அறிவாய் நிற்கும் பதிப்பொருளினது அறிவு புலனாவதே 'பதிஞானம்' என்றும், 'சச்சிதானந்தம் 'என்ற சொல்லில் அடங்கும் சத்து சித்து ஆனந்தம் ஆகிய மூன்றுக்கும் விளக்கம் தந்து இவை மூன்றும் சேரும் பொழுது இறைவன் சச்சிதானந்தம் என வழங்கப் பெறுகிறார் என்பதையும் அறிவுறுத்துகிறார் சித்தாந்தம் உயிரை, 'பசு' என்று கூறும். உயிர் பற்றிய கருத்துக்கள் உயிரின் இயல்புகள், அவத்தைகள் ஆகியன எளிய முறையில் விளக்கப்பட்டுள்ளன பாசம் பற்றிப் பேசுகையில் பசுக்கள் பல பசுக்களை பிடித்துள்ளது பாசம் என்று விளக்கமளிக்கும் ஆசிரியர் பாசங்கள் மூன்று என்று உரைக்கிறார் .அவை ஆணவம், கன்மம், மாயை.

> **மாயை அனைவராலும் எளிதில் உணரப் பெறுவது. ஏனெனில் பல்வேறு பிறவிகளில் காணப்பெறும் உடம்புகளும் மற்றும் நிலம், நீர் முதலிய பெரும் பொருள்களும் இயங்கு திணை, நிலைத்திணை ஆகிய உலகத் தொகுதி முழுவதும் மாயையின் செயல்களேயாகும். கன்மமோ இவ்வளவு எளிதாகக் காட்சியில் உணர முடியாதது. ஆனால் சிறிது நுனித்து நோக்கினால் உணரக்கூடியது. இதற்கு மேல் உள்ள ஆணவம் என்பதை உணர்தல் மிகவும் அரிது இது சைவசித்தாந்தத்தில் சிறப்பான பகுதியாகும்.**
>
> **(சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 160)**

என்று மும்மலங்கள் குறித்து விளக்கம் தருகிறார். இவ்வியலில் இவற்றைப் பற்றிய விரிவான எடுத்துக்காட்டுடன் கூடிய விளக்கம் தரப்படுகின்றது இதனை அடுத்து வீடு பேற்றுக்கு நூல்கள் நுவலும் வழிகள், ஞானம் வருவதற்குரிய வழிகள் சிவபுண்ணியங்கள், தீக்கை வகைகள்,சிவ நெறி ஒழுக்கம் ஆகியவற்றை உணர்த்துகிறார் 'வீடு பேறு' என்ற தலைப்பில் ஆன்மாவின் பயணம், முத்தியின் இயல்பு, பல்வேறு முத்திகள், தசகாரியம், அவத்தைகள் போன்ற, பிறவித் துன்பத்தை நீக்கி இறைவன் திருவடிப் பேரின்பத்தைப் பெற்று வாழும்முறைகள் எடுத்துரைக்கப்படுகின்றன. வழிபாட்டு முறைகளில், மனிதன் இறைவனை வணங்கும் முறை, ஆலய வழிபாடு, ஆலயங்களின் அமைப்பு, திருவிழாக்கள் தெய்வத்துக்கு நடைபெறும்

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

ஆராதனைகள், அவற்றால் விளையும் பலன்கள், பூசை விதிமுறைகள், பூசை வகைகள் ஆகியன எடுத்துரைக்கப் பட்டுள்ளன.

**முடிவுரை**

பேராசிரியரின் நூல்களைப் படிக்கும் போது இவரைப் போன்று தற்காலத்தில் சைவத்திற்கு இலக்கியத் தொண்டு செய்தவர்கள் வேறொருவர் இல்லை என்றே கூறலாம். அவ்வகையில், சைவம் பற்றி முழுவதுமாய் அறிந்ததோடு அதனைப் பிறர் அறியும் வண்ணம் மிக விரிவாக எடுத்துரைத்து தனது சமய அறிவினை நிறுவியுள்ளார் பேராசிரியர். பேராசிரியர் பல நூல்கள் சைவம் குறித்து  இயற்றி இருந்தாலும் ஆய்வு எல்லை கருதி நான்கு நூல்கள் மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது இந்நூல்கள் மட்டுமன்றி சைவசமயப் பெரியார்களான அப்பர், சம்பந்தர், தம்பிரான்தோழர் (சுந்தரர்) மாணிக்கவாசகர் ஆகியோர் பற்றியும் தாயுமானவர், பட்டினத்தடிகள் பற்றியும் தனித்தனியாக நூல்கள் இயற்றியுள்ளார். ஆய்வு எல்லை கருதி மேற்கண்ட நான்கு நூல்களில் கூறப்பட்ட கருத்துக்களை மட்டுமே இக்கட்டுரை ஆய்ந்துள்ளது. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல பேராசிரியரின் சைவசமயப் பேரறிவிற்கு இந்நான்கு நூல்களே சான்றாகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] ஔவைதுரைசாமி பிள்ளை. *புறநானூறு மூலமும் உரையும்.* சாரதா பதிப்பகம், சென்னை – 600014, முதற்பதிப்பு, 2015.

[2] டாக்டர் சொ.சிங்கார வேலன். *சைவ சமயம் வரலாற்றுப் பார்வை.* பாரதி அச்சகம், மயிலாடுதுறை, இரண்டாம் பதிப்பு, மே 2002.

[3] பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார். *சைவ சமய விளக்கு.* வேங்கடம் வெளியீடு, சென்னை. முதற்பதிப்பு, செப்டம்பர் 1984.

[4] பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார். *சைவமும் தமிழும்.* சைவ சித்தாந்தக் கழகம், சென்னை 18, முதற் பதிப்பு, 2001.

[5] பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார். *சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்.* சைவ சித்தாந்தக் கழகம், சென்னை18. முதற்பதிப்பு, 2001.

[6] பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார். *மூவர் தேவாரம் புதிய பார்வை.* நிவேதிதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

[7] பி. இரா. நடராசன் (உரையாசிரியர்) *தேவாரம்.* உமாபதிப்பகம், சென்னை – 1, முதற்பதிப்பு, 2004.

[8] புலவர்அடியன் மணிவாசகன். *திருமந்திரம் மூலமும் எளிய உரையும்.* சாரதா பதிப்பகம், சென்னை-600 014, ஐந்தாம் பதிப்பு, 2017.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[9] கரு முத்தையா. தொகுப்பாசிரியர். *சிலப்பதிகாரம் மூலமும் உரையும்* கலாசேஷத்ரா பதிப்பகம், முதற்பதிப்பு, 2020.

[10] இராமமூர்த்தி. இராம. *மதுரைக்காஞ்சி (தெளிவுரை).* கங்கை புத்தக நிலையம், சென்னை – 600 017, முதல் பதிப்பு, ஜூன் 2010.

**References**

[1] Avvai Duraisamy Pillai. *Puranaanooru Moolamum Uraiyum*. Saradha Padhippagam, Chennai-14, First Edition, 2015.
[2] So. Singaravelan, Editor. *Saiva Samayam Varalatru Paarvai*. Bharathi Press, Mayiladuthurai, Second Edition, May 2002.
[3] Prof. Dr. N. Subbu Reddiar, *Saiva Samaya Vilakku*. Parry Nilaiyam, Chennai, First edition, September 1984.
[4] Prof. Dr. N. Subbu Reddiar, *Saivamum Thamizhum*. Saiva Siddhanta Kazhagam, Chennai -18, First Edition, 2001.
[5] Prof. Dr. N. Subbu Reddiar. *Saiva Siddhantham Oor Arimugam*.n Saiva Siddhanta Kazhagam, Chennai 18, First Edition 2001.
[6] Prof. Dr. N. Subbu Reddiar. *Moovar Thevaram* Pudhiya Parvai. Niveditha Pathippagam, Chennai, First Edition, 2003.
[7] P. R. Natarajan. *Thevaram*, Uma Padhippagam, Chennai - 1, First Edition, 2004.
[8] Pulavar Adiyan Manivaasagan. *Thirumandhiram Moolamum Uraiyum*, Saradha Padhippagam, Chennai-14, Fifth Edition, 2017.
[9] Karu. Muthaiya, *Silappathikaaram Moolamum Uraiyum*, Kalasheethra Publication, First Ed, 2020.
[10] Rama. Ramamoorthy. *Mathuraikkanchi*, Gangai Book Shop, Chennai-17, First Ed, June 2010.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 | UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 | Available at: www.ijtlls.com

# பேராசிரியர் பார்வையில் கவிமணியின் தமிழ்ப்பணி

## Kavimani's Contribution to Tamil from the Perspective of Na. Subbu Reddiar

**முனைவர் கே. பி. கனிமொழி**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம்கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. K. B. Kanimozhi,** Assisant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.

**ORCiD:** https://orcid.org/0000-0003-2143-7116

**DOI: 10.5281/zenodo.7251486**

### Abstract

*Prof. Na. Subbu Reddiar is a famous Tamil scholar, great writer and a great intellectual who shaped Tamil Literature by his writings. He is proud to have made his mark in the development of Tamil studies by delving deep into various fields like literature, science, psychology, pedagogy, religion and society. He had written 135 books and they have been nationalized by the Tamil Nadu Government. During the period when Tamil sentiment started to rise, Prof. Bharatiyar wrote a critical review of Bharathidasan's songs. Similarly, this book 'Kavimani's Tamil Work - A Review' arose as a result of the increased involvement in the 'Malarum Malayum' songs of Kavimani Desika Vinayakam Pillaiyum. The author of this book has collected the verses written by Kavimani in various periods and categorized them under various topics and published them. Professor Reddiar has analyzed the natural scenes and pictorial scenes shown by Kavimani in historical and comparative manner in his own way. Kavimani's "Kulanthai Padalgal" (children's songs) has been conveyed in children's language and stresses that plays and abhinaya are necessary to educate a child. Also, professor had identified songs with national sentiments, songs with social thought, and songs that can express language. Professor had explored the concept of God and the ideas of Thaumana Swami and Kumaragurubarar. He gives the reason for the name Sundaramurthy vazhiyil on his own way. He has praised it by comparing it with Bharatiyar songs, Bharathidasan songs, Bhakti songs etc. at appropriate places. One can see nowhere except Tamil literature like Kavimani had expounded on impermanence in the cultural elements of his songs. Through analysis, Professor Subbu Reddiar gives us the feeling of the poet who enjoyed nature and indepth philosoophy. "Marumakkal Vazhi Manmiyam" is a beautiful work full of composition by Kavimani. The work is designed lofty with refined ideas in such a way that the mind of the learner is awakened, blossomed and tamilized.*

**Keywords:** *Philosopher, Sattvaguna, Review, Imagery, Cultural.*

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தமிழகத்தின் மூத்த தமிழறிஞர், மாபெரும் எழுத்தாளர், சிந்தனைச் செம்மல். இலக்கியம், அறிவியல், உளவியல், கல்வியியல், சமயம் மற்றும் சமூகம் என பல்வேறு துறைகளில் ஆழங்காற்பட்டு தமிழ் ஆய்வு வளர்ச்சியில் தம்முடைய முத்திரையை நன்கு பதித்த பெருமைக்குரியவர். இவர் படைத்த 135 நூல்களைத் தமிழக அரசு நாட்டுடைமை ஆக்கியுள்ளது. தமிழுணர்வு கிளர்ந்தெழுத் தொடங்கியக் காலக்கட்டத்தில் பேராசிரியர் பாரதியார், பாரதிதாசன் பாடல்களில் ஆழங்கால்பட்டு திறனாய்வு நூல்களை எழுதியுள்ளார். அதுபோல சத்துவகுணம் மிக்க பேராசிரியர் சத்துவகுணமே வடிவாகயுள்ள கவிமணி தேசிக*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*விநாயகம் பிள்ளையவர்களின் மலரும் மாலையும் பாடல்களிலும் ஈடுபாடு அதிகமாகியதன் பயனாக எழுந்தது கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு என்னும் இந்நூல். இந்நூலின்கண் ஆசிரியர் கவிமணி பல்வேறு காலக்கட்டங்களிலும் எழுதிய பாக்களைத் தொகுத்து பல தலைப்புகளில் வகைப்படுத்தி ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். கவிமணி காட்டும் இயற்கைக் காட்சிகளையும் படிமக் காட்சிகளையும் வரலாற்று போக்கிலும் ஒப்பீட்டு முறையிலும் தமக்கே உரித்தான முறையில் திறனாய்ந்துள்ளார். ஒரு குழந்தை கல்வி கற்பிக்க ஆட்டமும் அபிநயமும் அவசியம் என்பதை குழந்தை மொழியில் உணர்த்தியுள்ளதை குழந்தைப்பாடல்கள் வழி அறிய முடிகிறது. மேலும், கவிதைகளில் வெளிப்படும் தேசிய உணர்வு மிகுந்த பாடல்களையும், சமுதாயச் சிந்தனை உடைய பாடல்களையும், மொழிப்பற்றை வெளிப்படுத்தக் கூடிய பாடல்களையும் அடையாளப்படுத்துகிறார் பேராசிரியர். கவிஞரின் கடவுள் கொள்கையை ஆராய்கின்ற பேராசிரியர் தாயுமானசுவாமிகள், குமரகுருபரர் ஆகியோரின் கருத்துக்கள் இவர்தம் பாடல்களில் காணப்படுகின்றன என்ற கருத்தைத் தெரிவிக்கிறார். சுந்தரமூர்த்தி வழியில் என்ற இயலுக்கானப் பெயர்க் காரணத்தைத் தருகிறார். தக்க இடங்களில் பாரதியார் பாடல்கள், பாரதிதாசன் பாடல்கள், பக்திப் பாடல்கள் முதலியவற்றோடு ஒப்பிட்டுக் காட்டி நயம் பாராட்டியுள்ளது மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. பண்பாட்டுக் கூறுகளைப் பற்றி பேசும் போது கவிமணி நிலையாமையைப் பற்றி பாடல்களில் விளக்கியிருப்பது போல வேறு எங்கும் தமிழலக்கியத்தில் காணமுடியாது. இயற்கையை நன்கு அனுபவித்து பாடிய கவிமணியின் உணர்வினைத் தம் திறனாய்வின் மூலம் பேராசிரியர் நமக்கு அளிக்கிறார். அங்கதச்சுவை நிறைந்த அருமையான ஒரு படைப்பு கவிமணியின் "மருமக்கள் வழி மான்மியம்". கற்பவருடைய எண்ணத்தில் எழுச்சியையும் மலர்ச்சியையும் தமிழுணர்வையும் உண்டாகும் வகையில் இப்படைப்பு அமைந்துள்ளது.*

**குறிப்புச்சொற்கள்**: பேரறிஞர், சத்துவகுணம், திறனாய்வு, படிமக்காட்சி, பண்பாட்டு.

**முன்னுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் படைப்புகள் மனிதனின் சிந்தனைக்கும் உணர்வுக்கும் கற்பனைக்கும் விருந்தாக அமைகிறது. இவர் பல்வேறு துறைகளில் ஆழங்காற்பட்டு தமிழ் ஆய்வுவளர்ச்சியில் தனிமுத்திரையைப் பதித்த சிறப்புக்குரிய பேரறிஞர். இத்தமிழ் உணர்வு உணர்வோடு உணர்வாக கலந்திருந்தது. பேராசிரியர் தமிழார்வத்தின் மேலீட்டால் பாரதியார், பாரதிதாசனை அடுத்து கவிமணியின் தடம்பதித்து அடியொற்றி சென்றவர். நாட்டைப் பற்றியும் மக்களைப் பற்றியும் மொழியைப் பற்றியும் எழுதியுள்ள கவிமணியின் மலரும் மாலையும் பாடல்களானது பேராசிரியரின் மனதில் நிலைத்து நிற்கும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பொற்களஞ்சியமாக விளங்கியது. கவிமணியின் பாநலன்களைத் தமிழர் நன்கு படித்து மகிழ்வதோடு பயன் பெற்று வாழ்வில் சிறக்க வேண்டும் என்னும் பெருநோக்கில் கவிமணியின் தமிழ்ப்பணி - ஒரு மதிப்பீடு என்ற இந்நூல் பேராசிரியரால் உருவாக்கப் பெற்றுள்ளது. இந்நூலின்வழி பேராசிரியரின் பார்வையில் கவிமணியின் தமிழ்ப்பணிகளை முன்னிறுத்தி இவ்வாய்வு கட்டுரை அமைகிறது.

**கவிமணி - அறிமுகம்**

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை குமரி மாவட்டத்தில் உள்ள தேரூரில் சிவதாணுப்பிள்ளை, ஆதிலட்சுமி தம்பதியருக்கு மகனாக பிறந்தார். தேரூரில் உள்ள பாடசாலையில் தொடக்க நிலைக் கல்வியைக் கற்றார். இளமை முதற்கொண்டே தமிழும் மலையாளமும் பயின்றவர். தாய்மொழியாகிய தமிழ்மொழியின் மீது அளவற்றப் பற்றின் காரணமாக இளமை முதற்கொண்டே தமிழ் கவிதைகள் எழுதுவதில் ஆர்வம் காட்டி வந்தார். இருப்பினும் தமிழ்நூல்களை முறையாகக் கற்கவேண்டும் என்ற பேராவல் தன்மனதை வருடிக் கொண்டே இருந்தது. வாணன் திட்டு மடத்தில் தங்கியிருந்த திருவாவடுதுறை ஆதீனம் தவத்திரு சாந்தலிங்கத் தம்பிரான் அவர்களிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களை ஐந்தாறு ஆண்டுகாலம் முறையாகப் பாடம்கேட்டு ஆர்வத்துடன் பயின்றார். திருநெல்வேலி உமையொருபாகக் குருக்களிடம் சிவதீட்சை பெற்று கொண்டார். புகழ்பெற்ற கவிஞரான கவிமணி பக்திப்பாடல்கள், இலக்கியம் பற்றிய பாடல்கள், வரலாற்று நோக்குடைய கவிதைகள், குழந்தைப் பாடல்கள், இயற்கைப் பாட்டுக்கள், வாழ்வியல் போராட்டக் கவிதைகள், சமூகப் பாட்டுகள், தேசியப் பாட்டுக்கள், வாழ்த்துபாக்கள், கையறுநிலைக் கவிதைகள், பல்சுவைப் பாக்கள் என விரிந்ததளத்தில் செயல்பட்டவர்.

கல்வித் துறை வாழ்க்கையே தமக்கு சிறந்தது என்றாலும் அறிவியல் துறையிலும் நல்ல அறிவு பெற்றிருந்தமையால் அப்பாடம் பற்றிய பயிற்சி பாடங்கள் கற்பிப்பதில் சிறந்த ஆசிரியராகவும் இருந்தார். ஆனால் இலக்கியங்களை மறவாமல் கற்பதிலும் அவற்றை ஆராய்வதிலும் காலத்தைச் செலவிட்டார் கவிமணி. கவிதை இயற்றும் ஆற்றல் தவத்திரு சாந்தலிங்க தம்பிரான் அவர்களிடம் தமிழ் பயின்று வரும் போதே தொடங்கியது. கவிமணி குழந்தைகளுக்காக மலரும் மாலையும் என்ற நூலை எழுதினார். எட்வின் ஆர்னால்டின் லைட் ஆப் ஏஷியா தழுவித் தமிழில் ஆசிய ஜோதி எழுதினார். பாரசீகக்கவிஞர் உமர்கய்யாம் பாடல்களைத் தமிழில் எழுதி சிறந்த மொழி பெயர்ப்பாளராகவும் விளங்கினார் கவிமணி. ஆராய்ச்சித் துறையிலும் பல அரிய பணிகளை ஆற்றியிருக்கிறார். மனோன்மணியம் மறுபிறப்பு என்பது இவரது திறனாய்வுக் கட்டுரையாகும். சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழவேள் உமாமகேஸ்வரன் பிள்ளை என்பவர் கவிமணி என்ற பட்டம் வழங்கினார். இவர் அழகம்மை ஆசிரிய விருத்தம், மருமக்கள்வழி மான்மியம், கதர்பிறந்த கதை,


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தேவியின் கீர்த்தனங்கள், குழந்தைச் செல்வம், கவிமணியின் உரைமணிகள் போன்ற பல நூல்களை எழுதியுள்ளார். கவிமணியின் நூல்கள் தமிழ் கூறும் நல்லுலகில் நாடாளாவியப் பாராட்டுகளைப் பெற்றது.

**கவிமணியும் சிறுவர் இலக்கியமும்**

குழந்தைகளுக்காகப் பாடும் பாடல்கள் உள்ளதை உள்ளவாறு உணர்ச்சியோடும் மகிழ்வோடும் பாடக்கூடிய சிறப்பு வாய்ந்த பாடல்கள். ஆழமான உணர்ச்சிகளைவிட மகிழ்ச்சியான பாடல்கள் தான் மனதில் பதிய வைத்து கொள்ள முடியும். இக்குழந்தை வகை இலக்கியத்திற்கு முதன் முதலில் வித்திட்டவர் பாரதியார். பாப்பா பாட்டு, புதிய ஆத்திச்சூடி, முரசு என்ற பாடல்களில் காணலாம். முரசு என்ற தலைப்பில் காணப்படும் பாடல்களில் இளைஞர்கள் கடைப்பிடிக்க வேண்டிய கருத்துக்கள் சாகாவரம் பெற்று திகழ்கின்றன. இவரைப் பின்பற்றி பாவேந்தர் பாரதிதாசன் ஒருதாயின் உள்ளம் மகிழ்கிறது, இளைஞர் இலக்கியம் என்ற இரண்டு தனி நூல்களை ஏற்றி சிறுவர், இளைஞர் இலக்கியப் படைப்பினை மேலும் பெருகி உள்ளார். இந்த இரண்டு கவிஞர் பெருமான்களின் அடிச்சுவட்டில் கவிமணி செல்லும் அழகை நாமக்கல் கவிஞர்,

**கோழி குலவி வரும் கிளிகொஞ்சும்**
**குழந்தை எழுந்து துள்ளிக் களிமிஞ்சும் (மலரும் மாலையும், ப.2, பா.2)**

என்று மலரும் மாலையும் சிறப்பாயிரத்தில் புகழ்ந்து பேசுகிறார். மலரும் மாலையில் மழலை மொழி என்ற பகுதியில் காணப்பெறும் முத்தந்தா என்பது முதல் பாண்டியாடுதல் முடியவுள்ளப் பதினாறு பாடல்களும் குழந்தைப் பற்றிய பாடல்களே ஆகும். இதில் பெண்கள் குழந்தைகளைத் தூங்க வைப்பதற்காக தாலாட்டு பாடுவது இன்றும் வழக்கமாக உள்ளது. பிள்ளைத்தமிழ் இலக்கணம் தாலப்பருவம் என்று இதனைக் குறிப்பிடும். பெரியாழ்வார் தாலே தாலேலோ என்று சொல்லி குழந்தைக் கண்ணனைத் தாலாட்டுவதைக் காணலாம். கவிமணி பாடியுள்ள தாலாட்டு பாடல்களில் பல ஞானசெல்வர்களையும் கடவுளர்களையும் அறிமுகம் செய்வனவாக அமைத்திருக்கும் நேர்த்தி அற்புதம். கவிமணியின் தாலாட்டுப் பாடல்களில் முருகன் கண்ணன் ஆகியோரும் வருகின்றனர். குழந்தைகளைத் துயில் எழுப்புவதற்கு சில பாடல்களைப் பாடியுள்ளார் கவிமணி. தாய் தன் குழந்தையை அப்பா என்ற செல்லமாக அழைத்து கோழி கூவுகிறது எழுந்துக் கொள் என்பதை,

**அப்பா எழுந்திரையா! அரசே எழுந்திரையா!**
**கொக்கொக்கோ என்று கோழி அதோ கூவுது பார் (மலரும்மாலையும், ப.59, பா. 230)**

என்று பாடும் கவிமணி அப்பா, அரசே என்று அவனை விழிக்கிறார். குழந்தைகளுக்கானப் பேச்சுப் பயிற்சி பற்றியும் ஆசிரியர் பாடியிருக்கின்றார். குழந்தை பிறந்த நிலையில் தாயும், குழந்தைப்பள்ளி ஆசிரியர்களும் குழந்தைகளுக்கு பேச்சு பயிற்சி தரவேண்டும். அப்போது தான்



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம் அல்லவா? என்கிறார். இதற்கேற்ற முறையில் வீட்டு பிராணிகளை அழைக்கும் பாங்கில் சில பாடல்களையும் பாடியுள்ளார் கவிமணி என்பதைப் பதிய வைக்கிறார் பேராசிரியர்.

**தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு -அங்கே**

**துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி (மலரும்மாலையும், ப. 68, பா. 265)**

பேச்சுப் பயிற்சி உடைய பாடல்களைப் பாட சொன்னால் குழந்தைகள் நன்றாக உற்சாகமாகப் பாடுவார்கள். இதுபோன்ற நிறைய விளையாட்டு பாடல்களைக் கவிமணி அழகாக எழுதி இருக்கின்றார். கோழி, கிளி, நாய், பாண்டியாடுதல், பசு, பால் என்ற தலைப்புகளில் குழந்தைக்கானப் பாடல்களையும் கதைப்பாடல்களையும் எழுதி குழந்தைகளைக் களிப்பில் ஆழ்த்தியுள்ளார் என்கிறார் பேராசிரியர்.

குழந்தைகளின் தோட்டத்தில் உரிமை, விளையாட்டு, மகிழ்ச்சி ஆகிய மூன்று கூறுகள் இடம் பெறுதல் வேண்டும். அவ்வாறு இடம்பெற்றால் தான் குழந்தைகளின் உணர்வுகள் நன்முறையில் வெளிப்படும் என்பதை கவிமணி சுட்டியுள்ளதை எடுத்துரைக்கிறார். எமிலி என்ற நூல் தான் புதிய கல்விமுறைகளுக்கான வித்து என்று கூறும் அவர் பெஸ்டலாஸ்ஸி, ரூசோ, ஃபிராபெல் முதலான மேல்நாட்டு அறிஞர்களின் கல்விக் கொள்கைகளை எளிமையாக எடுத்து கூறியிருக்கிறார். அவர்கள் கொள்கைகள் மூலமாக குழந்தைக் கல்வி முறைகளை எடுத்தியம்பியுள்ளார். கவிமணியின் குழந்தைப் பாடல்கள் கற்பித்தல் முறைக்கு செயல்முறை வடிவம் கொடுக்கும் என்பதை மலரும் மாலையும் என்ற நூலின் வழி பேராசிரியர் தெளிவாக புலப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

**தேசியப் பாடல்கள்**

பேராசிரியர் தேசபக்தி உணர்வை கவிமணியின் கவிதைகளில் ஆராயும் போது பாரதியார், பாரதிதாசன் ஆகியோரது கவிதை உணர்வுகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்து கூறியிருப்பது மிகச் சிறப்பு. பாரதியாரின் கவிதைகளில் தீவிர தேசபக்தர்கள் பற்றி எடுத்துக்காட்டும் பேராசிரியர், பாரதிதாசன் கவிதைகளில் நாட்டுப்பற்று இல்லாமல் இல்லை. ஆனால் சமூக நீதிகளைக் கண்டிக்கும் போக்கானது தந்தை பெரியாரின் கருத்துகளில் தான் தலைத் தூக்கி நிற்கின்றன என்கிறார். கவிமணி வாழ்ந்த சூழ்நிலைக் காரணமாக இவர் தம் பாடல்கள் நாட்டுப்பற்று மிக்க இனிய மணம் கமழ்வதாக அமையவில்லை. ஆனால் நாட்டுப்பற்றுக்குரிய பொருள்களை இவர் பாடவே இல்லை என்று கருதவும் முடியாது என்று கருத்துரைக்கிறார் ஆசிரியர். தேசக் கொடியின் சிறப்பு, கதர் விற்பனை, வட்ட மேஜை மாநாடு முதலான தலைப்புகளில் பாடி அவரும் தேசிய நீரோட்டத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கவிமணி அவர்கள் சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொள்ளவில்லை என்றாலும் சுதந்திரம் பற்றி அவர் பாடிய இருபாடல்களுமே சுதந்திரம் பெற்ற பின் பாடப் பெற்றவை என்ற செய்தியைக் குறிப்பிடுகிறார்.

**மாதவம் செய்து பெற்ற**
**மந்திரவாளைக் கொண்டு**
**வேதனை மிகுந்திடத் தன்**
**மெய்யினைஅரிவதொக்கும் (மலரும்மாலையும், ப. 189, பா. 917)**

தேசத்தின் உணர்வினை ஒவ்வொரு செயலிலும் தான் உணர்ந்தவர். மற்றவர்களுக்கும் உணர்த்தியவர். காந்தியச் சிந்தனையை உள்ளத்தாலும் உணர்ச்சியாலும் போற்றிப் பாடியுள்ளார் என்பதையும் பதிவு செய்கிறார். நாட்டு மக்களிடம் சாதி சமய வேறுபாடுகளை நீக்கி நாட்டு மக்கள் அனைவரும் அன்புடன் இருப்பதே நாட்டுப் பற்றுக்கு அடிப்படை என்கிறார்.

**ஓ! என்சகோதரரே ஒன்றுக்கும் அஞ்சாதீர்**
**நாவலந்தீவு நம்மைவிட்டுப் போகாது**
**வாழ்கின்றார் முப்பது முக்கோடி மக்கள் (சஞ்சீவிபர்வதத்தின்சாரல், ப. 50)**

பாரதியாரின் தாயின் மணிக்கொடி பாரீர் என்ற பாடல் ஆனந்தக் களிப்பு மெட்டில் உணர்வு கொப்பளிக்கும் முறையில் அற்புதமாக அமைந்து இருப்பது போல கவிமணியின் தேசியக் கொடி பாடல் வளமானக் கருத்தோடு அமைந்துள்ளதை,

**வீரர்துணிந்தேறி நட்டகொடி - இது**
**வெற்றிவிருதா எடுத்தகொடி;**
**யாரும்இறைஞ்சி வணங்கும்கொடி**
**என்றும்சுதந்திரம் ஈட்டும்கொடி (கவிதைகள், பா. 14)**

என்ற பாடல் வழி புலப்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது.

**இசைத்தமிழ்**

உலகிலுள்ள உயரிய மொழிகளில் இலக்கிய வளம் மிக்க நம் இன்பத்தமிழ் மொழியும் ஒன்று. தொன்மை மிக்க நம் தமிழ்மொழியில் இணையில்லா இலக்கியச் செல்வங்களும் உண்டு. அவ்இலக்கியத்தில் சொல்லக் கருதிய கருத்துக்களைக் கேட்போர், விரும்பி ஏற்றுக் கொள்ளும்படி, இனிய ஓசையோடு கூடிய சொற்களாற் புலப்படுவது இசைத்தமிழ் ஆகும். இத்தமிழிசை இயக்கத்தின் அலைகள் திருவிதாங்கூர் பகுதியில் வாழ்ந்து வந்த கவிமணியின் உள்ளத்திலும் மோதின. அக்காலம் தொட்டு பற்பலக் கீர்த்தனைகளும் இவர் பாடி வந்துள்ளார். பெரும்பாலும் இவை தெய்வம் பற்றியதாகவே உள்ளன. இசை அரசு முத்துத்தாண்டவர் பதங்கள் முதலியவற்றில் காணப்பெறும் நயமும் அபிநய தகுதியும் கீர்த்தனங்களை


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மிளிர்கின்றன. கவிமணியின் கீர்த்தனங்களை எல்லாம் தொகுத்து தேசிக விநாயகம் பிள்ளையின் கீர்த்தனங்கள் என்ற பெயரில் வெளியிடப் பெற்றுள்ளன. தேவியின் கீர்த்தனங்கள் பாடி அருளிய கவிமணி இசைப்பயிற்சி பெற்றவர் அல்லர். இசைப்பயிற்சி பெறாத ஒருவர் கீர்த்தனங்கள் முதலியவற்றைப் பாடுதல் பொருத்தமாகுமா? என சிலர் வினவலாம். நம் தமிழ்நாட்டில் பெரும்பாலும் பாட்டு ஏற்றுபவர் வேறாகவும் பண் அமைப்பவர் வேறாகவும் தொன்றுதொட்டு நெருக்கமாக இருந்து வருவதையும் காணலாம். மேலை நாடுகளில் சாகித்திய ஏற்றுவரும் இசை வேறுவேறாக இருப்பது வழக்கம் என்று அறிய கிடைக்கின்றது. இவ்வழக்கு ஏற்பவும் தமிழ் கவித்துவத்தின் தன்மை ஏற்பவும் கவிமணி கீர்த்தனங்களைப் படைத்து உள்ளார் என்பதை நன்கு அறிய முடிகின்றது. இசை இயற்றுவோர் கீர்த்தனங்களைப் பலமுறை பற்றி அவற்றின் இசைபாவங்களில் ஊறி அதன் பின்னர் தக்கதாக இசையை அமைத்து கொள்ளுதல் வேண்டும். இன்றைய திரைப்பட உலகில் பாடல்களை இயற்றுவோர் வேறு இசை வேறாக இருப்பதையும் காண்கிறோம்.

**கடவுள் கொள்கை**

மக்களிடையே இறை வழிபாட்டை நினைவுறுத்திக் கொண்டே இருக்க சைவ, வைணவ இலக்கியங்கள் நிலைகளங்களாக அமைகின்றன. கவிஞரின் கடவுள் கொள்கையை ஆராய்கின்ற பேராசிரியர் தாயுமானசுவாமிகள், குமரகுருபரர் ஆகியோரின் கருத்துக்கள் இவர்தம் பாடல்களில் காணப்படுகின்றன என்ற கருத்தைத் தெரிவிக்கிறார். சிறுவயது முதற் கொண்டே கவிமணி தெய்வபக்தி மிக்கவராகத் திகழ்ந்தவர். திருநெல்வேலியில் வாழ்ந்து வந்த உமையொருபாகன் தீட்சிதர் ஒன்பது வயதில் இவருக்கு சிவதீட்சை செய்து வைத்தார். அச்சமயத்தில் அவர் மீது ஒரு வெண்பா பாடி புகழ்ந்துள்ளார். அழகம்மை ஆசிரிய விருத்தம் கவிமணியின் முதல் கவிதை நூல் 19 வயதில் பாடியது. தேரூரில் கோயில் கொண்டிருக்கும் அன்னை அழகம்மைப் பற்றியது. விநாயகர் பற்றிய காப்பு பாடலும் உள்ளது.

**சீருதவும் நல்லூராந் தேரூர்அழகி திருப்**

**பேருதவும் பாவினையான் பேசவே - ஒருதய**

**மார்த்தாண்ட வேழம் வழுவேதும் வராமல்**

**காத்தாண்டு கொள்ள கடன் (அழகம்மைஆசிரியவிருத்தம், பா. 1)**

என்ற வெண்பா தமிழ்வளம் மிக்கதாகவும், கருத்து மிக்கதாகவும் விளங்குகிறது. இக்கருத்தானது,

**தமிழொடு பிறந்து பழமதுரையில் வளர்ந்தகொடி**

**சப்பாணி கொட்டியருளே! (மீனாட்சிபிள்ளைத்தமிழ், பா. 36)**

என்ற குமர குருபர அடிகளின் பாடல் பாணியில் அமைந்துள்ளதைப் பேராசிரியர் சுட்டிக் காட்டுகிறார். கடவுள் கொள்கையைப் பற்றி கவிமணி கோயில் வழிபாடு என்ற பாடலில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கோவில் முழுதுங் கண்டேன்-உயர்**

**கோபுரம் ஏறிக்கண்டேன்**

**தேவாதி தேவனையான்- தோழி**

**தேடியும் கண்டிலனே (மலரும்மாலையும், ப. 15, பா. 37)**

என்று தொடங்கி காணாமை கூறிய காரணத்தையும் அவனைக் காணும் முறைமையும் விலகுவதை எடுத்துக்காட்டுகிறார் பேராசிரியர். இறைவனை வெளியில் தேடுவதை விட்டுவிடு. உள்ளத்தில் தேடு. அதுவே நிலையானது என்று கூறுகிறார்.

**உள்ளத்தில் உள்ளான், அடி! - அதுநீ**

**உணரவேண்டும், அடி!**

**உள்ளத்தில் காண்பாய் எனில் - கோயில்**

**உள்ளேயுங் காண்பாய், அடி!' (மலரும்மாலையும், ப. 16, பா. 44)**

கடவுளை ஆரவாரமின்றி கருத்தை ஒருநிலைப் படுத்தி நினைக்க வேண்டும் என்று கவிஞர் கூறும் நயம் சிறப்பாக உள்ளது. இதனை

**உடம்பெனும் மனையகத்துள்**

**உள்ளமேத களியாக**

**மடம்படும் உணர் நெய்யாட்டி**

**உயிர்எனும் திரி மயக்கி (தேவாரம், பா. 75:4)**

என்ற அப்பர் தேவாரத்தில் இறைவனை நினைவு கூர்ந்து மகிழ்வதைக் காணலாம்.

கவிமணி கடவுள் பற்றி பாடியுள்ளப் பாடல்கள் குமரகுருபரரின் சகலகலாவல்லி பாடலையும் கம்பனின் சரசுவதி அந்தாதி பாடல்களையும் விஞ்சும் முறையில் அமைந்துள்ளதைப் பாராட்டி கூறியிருக்கிறார். பேராசிரியர் கவிமணி வடமொழியை தழுவி எழுதப்பட்ட மீராபாய் பாடல்களில் பக்தி ஒழுகும் அற்புதக் கவிதைகள் என்று மகிழ்கிறார். அந்தப் பாடல்களில் உள்ள நிகழ்வுகளைத் தமிழில் உள்ள பக்திப் பாடல்களோடு ஒப்பிட்டு வர்ணிப்பது மிகவும் சுவை ஊட்டக் கூடியதாக அமைந்துள்ளது. மீரா அளித்த நைவேத்தியத்தை கண்ணன் விக்கிரகம் ஏற்றுக் கொண்ட செய்தி பேராசிரியருக்கு கண்ணப்ப நாயனார் குடுமித்தேவர் தம் நைவேத்தியத்தை உண்ண செய்ததையும் நம்பியாண்டார் நம்பி பொல்லாப் பிள்ளையாரை கொழுக்கட்டையை உண்ணச் செய்ததையும் நினைவுக்கு கொண்டு வருகிறது என்கிறார். ஆண்டாள், திருப்பாணாழ்வார் முத்தி நிலையோடு மீரா முக்தியடைந்த நிலையை ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்.

ஆசிய ஜோதியைப் பற்றி புத்தர் பெருமான் வரலாற்றைக் கூறும் திறனாய்வு செய்யும் பேராசிரியர் அக்கவிதைகளில் தம்மையே உணர்ச்சிப் பெருக்கோடு தள்ளப் பெற்றதையும் காட்டுகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**வையகத்தில் உயிர்கள் மிக வாடக் கண்டேன்**
**வழியறியாது அவைமயங்கி வருந்தக்கண்டேன்**
**மெய்யிது என்றுஉய்யுநெறி காட்டிநன்மை**
**விளைவிப்பார் எவரையுமே கண்ணிற்காணேன் (ஆசியஜோதி, ப. 9, பா. 1)**

இவை போன்ற கவிமணியின் பாடல்கள் படிக்கும் போதும் நினைக்கும் போதும் இறைவனின் அருள் உரை போல் என் மனதில் நீங்கா இடம் பெற்றது என்கிறார் பேராசிரியர்.

ஒரு சமயம் புத்தகயைக்கு சென்ற போது அவ்விடங்களில் எல்லாம் மானசீகமாக புத்தர் பெருமானை தரிசிக்க அவர் தம் புனித வரலாற்றை உணர கவிமணியின் கவிதைகளை அவ்விடங்களில் எல்லாம் தன் மனகாதுகளில் கேட்டு இன்புற்ற நிலையை நயம்பட நம்மிடம் பகிர்ந்து கொண்டிருப்பதைக் காணமுடிகிறது.

**சமூகநல சிந்தனைகள்**

கவிமணியின் சமுதாய ஒற்றுமை, ஜாதி வேற்றுமை, தீண்டாமை கொடுமை, பெண்கள் நிலை, தொழிலாளர் நிலை, பிச்சைக்காரர் நிலை என பல்வேறு கருத்துக்களின் அடிப்படையில் கவிமணியின் பாடல்களில் ஆராயும் பேராசிரியர் தக்க இடங்களில் பாரதியார் பாடல்கள் பக்திப்பாடல்கள் முதலியவற்றோடு ஒப்பிட்டு காட்டிய நயம் பாராட்டி உள்ளது மிகச்சிறப்பு. சமூகம் சிறப்புடன் திகழ வேண்டுமானால் மக்கள் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்கிறார் கவிமணி. பாரத சமுதாயம் என்ற கவிதையில் ஒற்றுமையை நிலைநாட்ட முயலும் பாரதி,

**எல்லாரும் ஓர்குலம் எல்லாரும் ஓரினம்**
**எல்லாரும் இந்திய மக்கள் (பாரதசமுதாயம், ப. 53, பா. 16)**

என்று மக்களில் வேறுபாடு இல்லை என்ற உண்மையை உணர்த்துவார். இதே கருத்தை கவிமணி ஒற்றுமையாக வாழவேண்டும் என்பதை,

**உலகம் முழுவதும் -நோக்கின்**
**ஒருடம்பே யாம்**
**அலகில் சீவரெலாம் – அதன்**
**அவயவுங்களே யாம் (மலரும்மாலையும், ப. 141, பா. 640)**

என்றும்,

**ஒற்றுமையாக உழைத்திடுவொம் நாட்டில்**
**உற்றதுணைவராய் வாழ்ந்திடுவொம் (மலரும்மாலையும், ப. 157, பா. 723)**

என்ற கருத்தை மற்றோர் இடத்திலும் வலியுறுத்துகின்றார் கவிமணி.

**பண்பாட்டுக் கூறுகள்**

பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல் என்ற கலித்தொகை பாடல் எல்லோருடைய இயல்புகளையும் அறிந்து நன்னெறியில் நடத்தலே பண்பு என்று கூறுகின்றது. மனித

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இனத்தையும் மதத்தையும் பயன்படுத்தும் நவீன இலக்கியங்களில் பதிவு செய்துள்ள பண்பாட்டு சிந்தனைகளைப் பற்றியும் எடுத்துக்காட்டுகிறார் பேராசிரியர். மனித நாகரிகம், உணவு, உடை போன்ற சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக பண்பாடு அமைகின்றது. உள்ளத்தின் வெளிப்பாடு பண்பாடு என்கின்றோம். மக்கள் கூட்டத்தின் சிறப்பியல்பானது தனிமனித சிறப்பாக விளங்கும் பண்பாடு செயல் என்கிறார் பேராசிரியர். பேராசிரியர் பண்பாட்டுக் கூறுகள் பற்றி பேசும் போது கவிமணி நிலையாமையைப் பற்றி பாடல்களில் விளக்கியிருப்பது போல வேறு எங்கும் தமிழிலக்கியத்தில் காணமுடியாது என்பதை ஆணித்தரமாக கூறுகிறார். இயற்கையை நன்கு அனுபவித்து பாடிய புலவன் கவிமணி அந்த உணர்வினை திறனாய்வின் மூலம் நமக்கு பேராசிரியர் அளிக்கிறார் என்றால் அது மிகையாகாது.

***மருமக்கள் வழி மான்மியம்***

கவிமணி வரைந்த ஒரு சிறந்த சமுதாய ஓவியம் மருமக்கள் வழி மான்மியம். இது நூதன இலக்கிய வகையைச் சார்ந்தது. இலக்கியம் வாழ்க்கையின் திறனாய்வு என்று கூறினார் மேல்நாட்டு திறனாய்வாளர் ஒருவர். இக்கூற்றினை விளக்குவது போல் மருமக்கள் வழி மான்மியம் சொல்லோவியமாக அமைந்துள்ளது. இந்த இலக்கியத்தில் நகைப்பும் இகழ்ச்சியும் சோகமும் ஒன்றாக கலந்து அடிநாதமாக ஒலிக்கின்றன. ஓர் அபலையின் வாயில் கதையை வைத்து கவிமணி பேசுவது அற்புதமாக அமைந்துள்ளது. காவியத்தின் நடை ஆனது சாதாரண மானிடப் பெண் பேசுவதாக அமைந்திருப்பது படிப்பவர்களின் மனதை கவர்கின்றது. சீர்திருத்தம் விரும்பிய கவிமணியின் நோக்கத்தை நிறைவு பெறச் செய்வதற்கு இக்காவியம் சிறந்த கருவியாக அமைகிறது. பெண் பாவத்தை பெரிதாக எடுத்துக்காட்டுகின்றது என்பதைப் பேராசிரியர் வெளிப்படுத்தியுள்ளார்.

**இயற்கை வழி இன்பம்**

எங்கெல்லாம் அழகு காணப்படுகின்றதோ அங்கெல்லாம் இறைவனும் இருப்பதாகக் கருதுவது தமிழர்களின் கொள்கை. இக்கொள்கையை ஒட்டியே பக்தர்களும் இயற்கையை அறிந்து இறைவனைக் காண்கின்றனர். காட்டிலும் நாட்டிலும் மண்ணிலும் விண்ணிலும் எல்லா இடங்களிலும் காணும் இயற்கை அழகுகளால் எம்பெருமானின் அழகு கூறுகளில் மனதைப் பறிகொடுத்து கவிஞர்கள் கவிதையாக வடிக்கின்றனர். தற்கால கவிஞர்களில் பாரதி, பாரதிதாசன் இயற்கை புனைந்து கவிதை வடித்துள்ளனர். எடுத்துக்காட்டாக புரட்சிக்கவியில் நிலா பற்றி இரண்டு பாடல்கள் அற்புதமாக பாரதிதாசன் பாடியிருக்கின்றார்.

**நீலவான் ஆடைக்குள்உடல்மறைத்து**
**நிலாவென்று காட்டுகின்றாய் ஒளிமுகத்தை!**
**கோலமுழுதும் காட்டி விட்டால் (பாரதிதாசன் கவிதைகள், பா. 20)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கவிமணியும் இயற்கையைப் பற்றி பல கவிதைகள் பாடி இருக்கின்றார். பேராசிரியர் இவருடைய கவிதைகளைச் சுவைக்கத் தெரிந்தவர்கள் மட்டும் தான் அதை போற்ற முடியும் மதிக்க முடியும் என்கிறார். கடல், வான்மதி, மலர்கள், கிளி, கனிகள் என பல பொருள் கொண்டு கவிதைப் படைத்துள்ளார் கவிமணி. மலர்களே பேசுவனவாக உள்ள கவிதை

**பூமகளின் புன்னகை போல் பூத்திடுவோமே! - கம்பன்**

**பாமணக்குந் தமிழினைப்போல் பரிமளிப்போமே! (மலரும்மாலையும், ப.78, பா. 335)**

என்று புனைந்துள்ளார். இவ்வாறு கவிமணி இயற்கை வழி இன்பதைத் தாம் நுகர்ந்து நம்மையும் அனுபவிக்கச் செய்கின்றார்.

**முடிவுரை**

பேராசிரியர் தமிழிலக்கிய உலகில் தனக்கென தனியிடம் பிடித்தவர். பன்முகத் தன்மை கொண்டவர். இவரது படைப்புகள் புதிய வழியையும் விழிப்பையும் புத்துணர்ச்சியையும் தரவல்லது. கவிமணியின் கவிதையில் ஆழங்கால்பட்ட பேராசிரியர் நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இறைவழிபாடு, சாதிபேதம் கடிதல், குழந்தைகளிடம் கொண்ட பற்று ஆகியவற்றை பாரதியார், பாரதிதாசன் கவிதைகளோடு ஒப்பிட்டு நயம்பட வெளிப்படுத்தியுள்ளார். புத்தர் பெருமான் வரலாற்றைக் கூறும் ஆசிய ஜோதியை நம் கண் முன்னே காட்சிப்படுத்துகிறார். இத்தகைய சிறப்பு பெற்ற கவிமணியின் கவிதைகளை நடுநிலையில் நின்று நல்லதொரு திறனாய்வு நூலைப் படைத்தளித்தப் பேராசிரியருக்கு தமிழ் உலகம் குறிப்பாக தமிழ் கவிதை உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

**குறிப்புநூல்கள்**

[1] அன்பு. கி. *இயற்கை.* கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 2022.

[2] முனைவர் கே.இரா.கமலாமுருகன். *சஞ்சீவி பர்வதத்தின் சாரல்.* சாரதா பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1940.

[3] கவிமணி, சி. தேசியவிநாயகம்பிள்ளை. *ஆசியஜோதி.* பாரி நிலையம், சென்னை, நான்காம் பதிப்பு, 1955.

[4] கவிமணி, சி. தேசியவிநாயகம்பிள்ளை, *மலரும்மாலையும்.* பாரி நிலையம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1960.

[5] கவிமணி, சி. தேசியவிநாயகம்பிள்ளை. *ஆசியஜோதி.* www.panuval.com/ 10 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

[6] கவிமணிபாடல்கள், swisscows.com/en/web?query=+ta.wikipedia.org 10 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

[7] காமராசன், க. *கவிமணி என்னும் பண்பாட்டியலாளர்.* உங்கள் நூலகம், சென்னை, 2018.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[8] ந. சுப்புரெட்டியார். *கவிமணியின் தமிழ்ப்பணி ஒருமதிப்பீடு.* தேன்மழை பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1989.

[9] ந. சுப்புரெட்டியார். *மலரும் நினைவுகள்.* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1989.

[10] சுப்பிரமணிபாரதியார். *பாரதியார் கவிதைகள்.* கவிதா வெளியீடு, சென்னை, பதிப்பு, 2020.

[11] குமரகுருபரர். *மீனாட்சிபிள்ளைத்தமிழ்.* பாரி நிலையம், சென்னை, பதிப்பு, 1995.

[12] பாரதிதாசன். *பாரதிதாசன் கவிதைகள்.* நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ், சென்னை, பதிப்பு, 2000.

[13] அ. கா. பெருமாள். *கவிமணி வரலாற்றாய்வாளர்.* நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ், சென்னை, பதிப்பு, 2018.

[14] அ. தட்சிணாமூர்த்தி. *தமிழர் நாகரிகமும் பண்பாடும்.* வெற்றிச்செல்வி வெளியீடு, தஞ்சாவூர், பதிப்பு, 2022.

[15] திருநாவுக்கரசர். *அப்பர் தேவாரம்.* பிரேமா பிரசுரம், சென்னை, இரண்டாம்பதிப்பு, 2019.

[16] ந. வானமாமலை. *தமிழர் வரலாறும் பண்பாடும்.* நியூசெஞ்சுரிபுக்ஹவுஸ், சென்னை, ஆறாம்பதிப்பு, 2007.

**References**

[1] K.Anbu. *Iyarkai*, Kannadasan Publishing House, Chennai, 2022.
[2] Dr. K. Ira. Kamala Murugan, *Sanjeevi Parvatathin Charal*. Sarada Publishing House, Chennai, Edition, 1940.
[3] Kavimani C. Desiya Vinayagam Pillai. *Asia Jyoti*. Pari Station, Chennai, Fourth Edition, 1955.
[4] Kavimani C. Desiya Vinayagam Pillai. *Malarum Malayum*, Pari Station, Chennai, Ninth Edition, 1960.
[5] Kavimani Desiya Vinayakam Pillai. *Asian Jyoti*. www.panuval.com/ Accessed 10 June 2022.
[6] *Kavimani* Songs. swisscows.com/en/web?query=+ta.wikipedia.org Accessed 10 June 2022.
[7] K. Kamarasan. *Kavimani Ennum Panbatiyalalar*. Ungal Noolagam, Chennai, Edition, 2018.
[8] N. Subbu Reddiar. *Kavimaniyin Tamil Pani Oru Mathipedu*. Thenmalai Publishing House, Chennai, Edition, 1989.
[9] N. Subbu Reddiar. *Malarum Ninaivugal*. Fifth Edition, Chennai, Edition, 1989.
[10] Subramani Bharatiyar. *Bharatiyar Kavithaigal*. Kavita Publications, Chennai, Edition, 2020.
[11] Kumaraguruparar. *Meenakshi Pillaithamil*. Pari Nilayam, Chennai, Edition, 1995.
[12] Bharathidasan. *Bharathidasan Kavithaigal*. New Century Book House, Chennai, Edition, 2000.
[13] Perumal. A.K. *Kavimani Varalatraivalar*. New Century Book House, Chennai, Edition, 2018.
[14] Dakshinamurthy A. *Tamilar Nagarigamum Panbadum*. Vetri Selvi Publication, Thanjavur, Edition, 2022.
[15] Thirunavukarasar. *Appar Thevaram*. Prema Prasuram, Chennai, Second Edition, 2019.
[16] Vanamamalai. N. *Tamilar Varalarum Panbadum*. New Century Book House, Chennai, Sixth Edition, 2007.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியாரின் அறிவியல் பயிற்றும் திறன்

## Science Teaching Ability of Prof. Na. Subbu Reddiar

**முனைவர் நா.குமாரி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr.N. Kumari,** Assistant Professor of Tamil, Auxilium College, Katpadi, Vellore, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-7889-6164**

**DOI: 10.5281/zenodo.7251527**

**Abstract**

*Professor Dr. N. Subbu Reddiar is a professor who has given 135 indelible literary treasures and holds a permanent place in the hearts of Tamils. He spent the first part of his life learning Tamil systematically, the other half creating scientific and academic texts, and the last part of his life establishing Tamil and glorifying it. He is the author of internal Policies, scientific Tamil, the feast of Wisdom, Alvars, Ramalingar, homeschooling, Periyar's thoughts, Literature on Religion, Religion, People's Voice, Educational Psychology, Theories of Educational Psychology, an appraisal of Kuilpattu and Science Teaching, He had authored books like Science Teaching Skills. Teaching strategies play a major role in enhancing the learning ability of learners. Science subject is unique in the curriculum of schools around the world. Uniqueness is due to the variety of materials and tests required to teach the subject effectively. Science is to be learned properly. Effective science training should be based on observation and experimentation and it would beneficially help the children. The purpose of this article is to explore how the book "Science Teaching Skills", written by a professor for teachers to allay those fears and is fundamentally supportive of educating students about science teaching methods and training them in action.*

**Keywords:** Prof. Na. Subbu Reddiar, Science, Teaching Ability.

**ஆய்வுச்சுருக்கம்**

*பேராசிரியர் முனைவர் ந. சுப்புரெட்டியார் 135 அழியாத இலக்கிய பெட்டகங்களைத் தந்து தமிழ் நெஞ்சங்களில் நிலையான இடத்தை பிடித்தவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். தன் வாழ்நாளின் முற்பகுதியை தமிழை முறையாக கற்பதிலும், நடுப்பகுதியை அறிவியல் கல்வியியல் நூல்களை படைப்பதிலும், கடைப் பகுதியை தமிழ் நடை போடாத தேசத்தில் தமிழை நிலைநாட்டி அதனை நாடே புகழ வைப்பதிலும் கழித்தவர். இவர் அகத்திணைக் கொள்கைகள், அறிவியல் தமிழ், அறிவுக்கு விருந்து, ஆழ்வார்களின் ஆரமுது, இராமலிங்க அடிகள், இல்லற நெறி, பெரியாரின் சிந்தனைகள், சமுதாய நோக்கில் இலக்கியம், சமயம், கம்பனின் மக்கள் குரல், கல்வி உளவியல், கல்வி உளவியல் கோட்பாடுகள், கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, குயில்பாட்டு ஒரு மதிப்பீடு, அறிவியல் பயிற்றும் முறை, சைவமும் தமிழும் முதலான நூல்களைப் படைத்துள்ளார். இதில் இவர் எழுதியுள்ள அறிவியல் பயிற்றும் திறன் எனும் நூல் ஆய்வுக்காக முன்னெடுக்கப்படுகிறது. உலகம் முழுவதிலும் உள்ள பள்ளிகளின் கல்வித்திட்டத்தில் அறிவியல் பாடம் தனித்தன்மை வாய்ந்தது. அப்பாடத்தை திறமையாகப்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*பயிற்றுவதற்கெனத் தேவைப்படும் பல்வேறு வகைப் பொருள்களும், சோதனைகளும் தனித்தன்மைக்குக் காரணமாகும். அறிவியலை கற்கப்பெற வேண்டுமேயன்றி, அறிந்து கொள்ளப்பெறுவதன்று. உற்றுநோக்கல்,சோதனை ஆகியவற்றின் அடிப்படையில்தான் திறமான அறிவியல் பயிற்றல் அமைய வேண்டும். அறிவியல் பயில்வதற்கு வாய்ப்பில்லாத பல ஆசிரியர்கள் அதனை கற்பிப்பதற்கு அஞ்சுகின்றனர். அந்த அச்சத்தைப் போக்குவதற்காக ஆசிரியர்களுக்கு பேராசிரியர் எழுதியுள்ள "அறிவியல் பயிற்றும் திறன்" எனும் நூல் மாணவர்களுக்கு அறிவியல் பயிற்றும் முறைகள் பற்றிய கல்வி புகட்டுவதிலும், அவர்களுக்கு செயல் முறையில் பயிற்சி அளிப்பதிலும் அடிப்படையாக இருந்து எவ்வாறு துணைப்புரியக் கூடும் என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார், அறிவியல், பயிற்றும் திறன்.

**முன்னுரை**

"மாற்றம் ஒன்றே மாறாதது" எனும் கிரேக்க அறிஞர் ஹெராகிளிடஸின் பொன்மொழிக்கு ஏற்ப காலம் காலமாக கற்பித்தல் பல மாற்றங்களைக் கொண்டுவந்துள்ளது. அறிவியல் வளர்ச்சியின் காரணமாக கணினி, கணினி வழியே வலைதளம் என்று விரிவடைந்தது. பின்பு வலை தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்து எதனையும் எங்கும் கற்கும் நிலை உருவாகி உள்ளது.மேலும் மின்மயமாக்கல் மூலம் அனைத்தும் கணினி மயமாக்கப்பட்டு வருகிறது. அதற்கேற்ப புதுப்புது தொழில்நுட்ப கருவிகள் உருவாகி வருகின்றன. இவ்வாறு வளர்ந்து வரும் தகவல் தொழில் நுட்பத்திற்கு ஏற்ப தோன்றியுள்ள அண்மைகால கற்பித்தல் போக்குகளை நாம் அறிவோம். தகவல் தொழில்நுட்ப வளர்ச்சி அற்ற காலகட்டங்களிலேயே பேராசிரியர். முனைவர். ந. சுப்புரெட்டியார் அவர்கள் அறிவியலை துணைக் கருவிகளை கொண்டு மாணவர்களுக்கு பயிற்றுவிக்கும் வழிமுறைகளை தம் படைப்பின் வழியாக திறம்பட உரைக்கிறார்.

**அறிவியல் தமிழுக்கு கிடைத்த கொடை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் அறிவில் தமிழுக்குக் கிடைத்த மாபெரும் கொடை. “தமிழால் தரணியில் உயர் பீடத்தில் நிற்பவர் பலர்; தமக்காய் தமிழை விற்பவர் பலர்;ஆனால் தமிழைப் பயன்படுத்தி மலரின் மகரந்தத் தேனை முகர்ந்து மனித சமுதாயத்திற்கு சேகரித்து வைக்கின்ற தேனீயைப் போல தமிழ் கூறும் நல்லுலகிற்கு உழைக்கும் நற்றமிழ் அறிஞர் சுப்புரெட்டியார்" என்று குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரால் பாராட்டப்பட்டவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். "ஒரு வட்டத்திற்குள் சுற்றிவரும் கிணற்றுத்தவளை அல்ல இவர் இமாலய சாதனைகளைக்குறிவைத்து சாதகப் பறவையைப் போல விரிவானம்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

ஊடுருவில் பறந்துக் கொண்டிருப்பவர்" என்று முன்னாள் அமைச்சர் இராம. வீரப்பன் அவர்களும் புகழாரம் சூட்டி உள்ளார்கள். எக்காலத்திலும் தவிர்க்க முடியாத மாபெரும் எழுத்தாளுமை பேராசிரியர் சுப்புரெட்டியார். மாணவர்களுக்கு பயன்படும் வகையில் அறிவியல் பயிற்றும் முறை பற்றி தமிழில் எழுதப்பெற்ற முதல் நூல் பேராசிரியரின் அறிவியல் பயிற்றும் முறை. ஒன்பது ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக, பேராசிரியர் இருந்தபொழுது, அறிவியல் பாடத்தை எல்லா வகுப்புகளுக்கும் கற்பித்த அனுபவத்தைக் கொண்டும், நேரில் அறிந்த பல செய்திகளைக் கொண்டும், ஏழு ஆண்டுகள் பயிற்சி கல்லூரியில் பெற்ற நேரத்தைக் கொண்டும் அறிவியல் பயிற்றும் முறை என்னும் நூலைப் படைத்துள்ளார் பேராசிரியர். இந்நூல் பதினைந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் இயலில் பள்ளிகளில் அறிவியல் பயிற்ற வேண்டிய இன்றியமையாமையையும், இரண்டாம் இயலில் அது பயிற்றப் பெறுவதன் நோக்கங்களும் கூறப்பெற்றுள்ளன. மூன்றாவது, நான்காவது இயல்களில் முறையே அறிவியல் பாடத்திற்குரிய பொருள் அறுதியீடு, அறுதியிடப் பெற்றவற்றைப் பல்வேறு முறையில் பாடத்திட்டமாக அமைத்தல் ஆகியவை கூறப்பெற்றுள்ளன. ஐந்தாவது இயலில் அறிவியல் பாடத்திட்டத்திற்கு சிறப்பானதும் அறிவியல் துறையில் இருந்து தோன்றியதுமான அறிவியல் முறை பற்றி விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. ஆறாவது, ஏழாவது இயல்களில் அறிவியல் பயிற்றுவதற்கு மேற்கொள்ளப்படும் பல்வேறு முறைகள் சுருக்கமாக கூறப்பெற்றுள்ளன. ஒன்பதாவது, பத்தாவது இயல்களில் முறையே ஆய்வகம் அமைத்தல், ஆய்வுக் கருவிகள், துணைக் கருவிகளை பாதுகாக்கும் முறைகள் ஆகியவை விளக்கமாக கூறப்பெற்றுள்ளன.

பதினொன்றாவது, பன்னிரண்டாவது இயல்களில் அறிவியல் பாடத்தை சுவையுடன் பயிற்றும் வழிகளும், சாதனங்களும் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. பதிமூன்றாவது இயல் அறிவியலைப் பிற பாடங்களுடன் பொருத்திப் பயிற்றலை விளக்குகின்றது. பதினைந்தாவது இயல் அறிவியல் பாடத்தில் மேற்கொள்ளும் பழைய முறை - புதிய முறை தீர்வுகளை எடுத்துரைக்கின்றது. பதினைந்தாவது இயல் அறிவியல் ஆசிரியர்களுக்கு தேவையான நடைமுறை குறிப்புகள் தரப்பெற்றுள்ளன. இன்று பள்ளிகளில் பெரும்பாலும் பாட நூல்களின் துணைக்கொண்டே அறிவியல் கற்பிக்கப்படுகின்றது. மாணவர்களை தலைக்கு ஒரு பத்தியாக படிக்கச் சொல்லி, அதில் உள்ள பொருள் விளக்கப்பெறுகின்றது. பள்ளிகளில் துணைகருவிகள் மனநிறைவு கொள்ளும் வகையில் இல்லை. அவை இருந்தாலும் ஆசிரியர்கள் அவற்றை கையாள்வதும் இல்லை. பாடநூல், சீமை சுண்ணாம்பு கட்டி, கரும்பலகை ஆகிய மூன்றை கொண்டே சில சமயம் பின் பின்னிரண்டும் இல்லாமலேயே சகல காரியங்களும் ஆசிரியர்கள் முடித்து விடுகின்றனர். வல்லவனுக்கு புல்லும் ஆயுதம் என்ற பழமொழிக்கு இணங்க, இந்நூலில் கூறப்பட்டுள்ள சில வழிகளைக் அறிவியல் பயிற்றும் ஆசிரியர்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மேற்கொண்டால், மாணாக்கர்கள் அறிவியலை உற்சாகமாக கற்பதுடன் அவர்களிடம் இக்காலத்தில் மிகவும் வேண்டும் அறிவியல் மனப்பான்மை அமையும் என்பதில் ஐயமில்லை.

தாய்மொழி வழிக்கல்வி

**தெளிவுறவே அறிந்திடுதல்**
**தெளிவு தர மொழிந்திடுதல் சிந்திப் பார்க்கே**
**களிவளர உள்ளத்தில் ஆனந்தக்**
**கனவு பல காட்டல்! கண்ணீர்த் துளிவரவுள்ளுருக்குதல்**
**இங் கிவை எல்லாம் நீ அருளும் தொழில்கள் அன்றோ?**
**பயிற்றிப் பலகல்வி தந்து- இந்தப் பாரை உயர்த்திட வேண்டும்**

**(பாரதியார், பாஞ்சாலி சபதம். ப. 154)**

என்ற பாரதியாரின் கல்வி திட்டத்தை நிறைவேற்ற வேண்டுமானால் தாய்மொழியிலேயே எல்லாப் பாடங்களையும் கற்பித்தல் வேண்டும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் கூட தாய் மொழி வாயிலாகவே கற்பிக்கும் நிலை ஏற்பட்டால்தான் எத்தனையோ விதங்களில் வீணாகப் போகும் ஆற்றல்கள் சரியான முறையில் பயன்படும். தாய்மொழியிலும் வடமொழியிலுள்ள சமயக் கருத்துகளையும் அம்மொழியில் உள்ள கல்வெட்டுக்கள் போன்றவற்றையும் கூட ஆங்கிலத்தில் படிப்பது தான் சிறப்பு என்று கருதும் குறுகிய எண்ணமும் நீங்கும்.மக்கள் நலனையும் நாட்டு நலனையும் அடிப்படை நோக்கமாகக் கொண்டு தங்கள் போக்கில் சரி என்று வக்கீல் வாதம் செய்யாது தெளிவாகவும் விரைவாகவும் பொருள் அறிவு பெறுவதற்கு வழி காண்பதில் பரிவுடனும் இதய தூய்மையுடனும் ஒத்துழைத்தால் அனைத்தும் சீர்படும். ஆங்கில மொழியை இன்று உலகம் அனைத்தும் புகழ்ந்து பாராட்டுவதற்கு மில்டனும் ஷேக்ஸ்பியரும் படைத்துள்ள இலக்கியங்கள் மட்டும் காரணம் அன்று. உலகில் உள்ள கலைகள் அனைத்தும் அம்மொழியில் உள்ள யாவரும் உணரக்கூடிய முறையில் வெளியிடப்பட்டிருப்பது தான் அம்மொழியின் உயர்வுக்கு காரணமாகும். அதுபோலவே தமிழ்மொழி சிறப்புடன் மிளிர்வதற்கு கம்பனும் வள்ளுவனும் இளங்கோவும் ஏனையோரும் செய்துள்ள இலக்கியங்கள் மட்டும் போதாது.

**புத்தம் புதிய கலைகள்- பஞ்ச**
**பூதச்செயல்களின் நுட்பங்கள் கூறும்;**
**மெத்த வளருது மேற்கே- அந்த மேன்மைக் கலைகள்**
**தமிழினில் இல்லை (பாரதியார் கவிதைகள், ப. 141)**

என்ற குறை தமிழுக்கு இருத்தல் கூடாது. இவை அனைத்தும் புறநானூற்று காலத்திலேயே தமிழில் இருந்தன என்று பழங்கதையை அடிக்கடி சொல்லி யாதொரு பயனுமில்லை. கல்லூரிகளில் தாய் மொழி வாயிலாகக் கல்வி பயிற்றப்பெற்றால் தான் இவை அனைத்தும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

தமிழில் தோன்றுவதற்கு வாய்ப்புகள் அமையும். அப்போதுதான் சாத்திரங்கள் அனைத்தும் தமிழில் மொழிபெயர்க்கவும் முடியும்.

**பள்ளிகளில் அறிவியல்**

பள்ளிகளின் கல்வி ஏற்பாட்டில் அறிவியல் ஒரு விந்தையான பாடம் என்பதை கல்வி அறிஞர்கள் உணர்ந்துள்ளனர். அப்பாடத்தை திறமையாக கற்பிப்பதற்கு தேவைப்படும் பல்வேறு பொருள்கள் பல்வேறு சோதனைகள் ஆகியவற்றிலிருந்து அதன் தனித்தன்மை தெளிவாகின்றது. சாதாரணமாக எளிதில் கிடைக்கக்கூடிய பென்சில், தாள்கள், கரும்பலகை, பாடநூல்கள் வேறு சில துணைக் கருவிகள் போன்றவற்றை கொண்டு பெரும்பாலான பாடங்களை கற்றுக் கொள்ளலாம். இவையாவும் அறிவியல் கற்பித்தலுக்கும் இன்றியமையாதவை ஆகும். இவை மட்டிலும் அறிவியல் கற்றலுக்கு கருவிகளாக அமையப்பெற்றால் அறிவியல் கவர்ச்சியற்ற விறுவிறுப்பற மந்தமான பாடமாக அமையும். அப்பாடம் திறமையுடன் கற்கப்பெற வேண்டுமாயின் அவை அனுபவமாக மாறுதல் வேண்டும். இவ்வுலகில் நாம் எங்கு சென்றாலும் அறிவியல் சூழ்நிலையின் ஒரு நெருங்கிய பகுதியாகவே அமைந்துள்ளது. உயிர்வாழ்பிராணிகள், இப்பூமி, வானம், காற்று, நீர், வெப்பம், ஒளி, உயிர்ப்பு ஆற்றல் போன்றவை அனைத்துமே அறிவியல் மெய்மைகள் அடங்கியவையே. எனவே அறிவியல் கற்றலுக்கு நேரடியான பொருள் இல்லையே என்ற கவலையை எந்த ஆசிரியரும் கொள்ள வேண்டியதில்லை என்று பேராசிரியர் அறிவுறுத்துகிறார். உற்றுநோக்கல் சோதனைகளை மேற்கொள்ள ஆகியவற்றின் அடிப்படையில் தான் சிறந்த முறையில் அறிவியல் பயிற்றல் அமையும் இவற்றிற்கு ஈடு செய்யக்கூடிய வேறு முறைகளை இல்லை என்று சொல்லலாம் ஆனால் சோதனைகள் செய்வதற்கும் அண்மையில் இருந்துகொண்டு உற்றுநோக்கல் களை மேற்கொள்வதற்கும் தனிப்பட்ட வசதிகள் வேண்டும் இவ்வுலகில் பெரும்பாலான இடங்களில் அதிலும் தொடக்க உயர்நிலைப் பள்ளி நிலைகளில் வசதிகள் பெறுவது அரிதாகவே உள்ளது இதன் காரணமாக அறிவியல் பயிற்சி சிறந்த முறையில் கொண்டு செலுத்த இயலாத நிலை ஏற்படுகின்றது தொடக்க உயர்நிலைப் பள்ளிகளின் நிலைகளில் எத்தனையோ சோதனைகளை வாணிக முறையில் உற்பத்தி செய்யப் பெற்ற கருவி தொகுதிகளில் செய்து கொள்ளலாம் என்பதை உற்சாகமும் கற்பனைத் திறனும் உள்ள ஆசிரியர்கள் நன்கு அறிவர்.

**மூலவளங்கள்**

நமக்கு எளிதில் கிடைக்கக்கூடிய மூல வளங்களை நாம் தக்க முறையில் பயன்படுத்தாமையாலும் தவறான பயிற்றும் முறைகளை மேற்கொள்வதாலும் நமக்கு அண்மையில் உள்ள பொருள்களே தொலைவிலுள்ளன போல் ஆகி விடுகின்றன. நாம் அவற்றை சிறுவர் சிறுமியர் அனுபவங்களுடன் தொடர்புபடுத்தி கற்கபிக்காமையே இந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அவல நிலைக்கு காரணமாகும். நமக்கு எளிதில்கிட்ட க்கூடிய சரளை கற்குழி அல்லது கற்சுரங்கம், பள்ளிக்கு அருகில் உள்ள காடு, தீக்கிரையான ஒரு பகுதி, (சாலையோரம் வயல், காடுகள் போன்றவை) அண்மையில் உள்ள புலம், கட்டப் பெறும் நிலையில் உள்ள புதிய கட்டடம், மரம் அறுக்கும் ஆலை, வேளாண்மை அல்லது கால்நடை பண்ணை, காய்கறி பூந்தோட்டம், தேனீக்கள் வளர்க்கும் இடம், பள்ளியின் ஆடுகளத்தில் உள்ள ஒரு மரம், ஒரு பழத்தோட்டம், ஒரு சிறு ஓடை அல்லது குளம் போன்ற மூல வளங்களைக் கொண்டு திறமைமிக்க அறிவியல் ஆசிரியர் அறிவியல் பயிற்றலில் ஒரு அசுவமேதயாகமே செய்து விடலாம். இந்த மூலவளங்கள் திறமையுடன் கையாளப்பட்டால் அவற்றை மூன்று வழிகளில் பயன்படுத்தலாம். முதலாவது உற்றுநோக்கும் மாணாக்கர்களுக்கு அதிகமான வினாக்களை விடுப்பதற்கு அகத்தெழுச்சியை தருமாறு செய்தல். இரண்டாவது அவர்கள் விடுக்கும் வினாக்களுக்கு விடைகளைக் காணும் மூலங்களாகவும் துணைபுரியச்செய்தல். மூன்றாவது அறிவியல் புதுமை கருத்துக்கள் உண்மையுடையனவாகக் காணத் துணை செய்யுமாறு செய்தல். இவை மூன்றும் கைவரப் பெற்றால் அறிவியல் பாடம் நன்முறையில் செல்வதாகக் கொள்ளலாம். இன்று நாம் அறிவியல் யுகத்தில் வாழ்கின்றோம். இப்போது இடத்திற்கேற்றவாறு சூழ்நிலையை ஒட்டியே கல்வியை அளிக்காவிடில் வாழ்க்கை சுவையுடன் அமையாது. இன்றைய வாழ்வில் அறிவியல் பயன்படாத துறைகளே இல்லை. அறிவியல் துறைகளில் புதிய கண்டுபிடிப்புகள், கைத்தொழில்களில் அவற்றின் பயன்கள், போக்குவரத்து சாதனங்கள், செய்திகளை பரப்பும் முறைகள், புதிய முறை வேளாண்மை, நவீன சிகிச்சை முறைகள் ஆகியவற்றால் மனித வாழ்க்கை பன்மடங்கு உயர்ந்து இருக்கிறது என்பதற்கு ஐயமில்லை. கடந்த 150 ஆண்டுகளாக துறைகளில் வியத்தகு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. இந்த மாற்றங்களுக்கு ஏற்றவாறு மக்கள் சிந்தனை வளர வில்லை. அவர்கள் எண்ணும் முறைகளும் அமையவில்லை. மனப்பான்மையும் ஏற்படவில்லை. நல்லதொரு பாடத் திட்டம் வகுத்து சிறந்த முறையில் அறிவியல் பாடங்களை கற்பித்தால் இக்குளப்பம் ஓரளவு அகலும்.கற்பிக்கும் செய்திகளை விட கற்பிக்கும் முறை தான் முக்கியம். கற்பிக்கும் முறைகள் தான் மாணவர்களிடம் அறிவியலைப் பற்றி நல்ல மனப்பான்மை உண்டாக்கி வளர்க்க முடியும்.

**அறிவியல் பயிற்றுவதன் நோக்கம்**

பள்ளிகளில் பயிலும் மாணவர்கள் தாம் வாழும் உலகைப் பற்றி தெளிவான தகவல்களை அறிந்து கொள்ள அறிவியல் வாய்ப்பினை நல்குகிறது. அறிவியல் பயில்வதால் மாணவர்களிடையே உற்றுநோக்கும் திறனும் சிந்திக்கும் ஆற்றலும் வளர்கின்றன என்று கூறப்படுகிறது. அறிவியல் அறிஞர்கள், அறிவியல் பயில்வதால் மாணாக்கர்கள் அறிவியல் முறையில் பயிற்சியினையும் அறிவினையும் அடைகின்றனர் என்று கருதுகின்றனர். நாம் பயன்படுத்தும் ஒவ்வொரு பொருளிலும் அறிவியல் தாண்டவம் ஆடுவதை பார்க்கலாம்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

ஆண்டவன் இருப்பிடத்தை குறித்து இரணியனுக்கும் பிரகலாதனுக்கும் வாக்குவாதம் நிகழ்ந்த பொழுது மைந்தன் தந்தைக்கு அவன் இருப்பிடத்தை குறித்து,

> **சாணிலும் உளன்; ஓர் தன்மை அணுவினைச் சதகூறு இட்ட கோணினும் உளன் மா மேருக் குன்றினும் உளன்; இந் நின்ற தூணிலும் உளன்; நீ சொன்ன சொல்லினும் உளன்; இத்தன்மை காணுதி (கம்ப. யுத்த. இரணியன்கதை., பா. 124)**

என்று சொன்னதாக இலக்கியங்களில் படிக்கின்றோம். அதுபோலவே அறிவு வடிவமான ஆண்டவன் அறிவியல் வடிவமாக அனைத்திலும் இருப்பதே ஊன்று நோக்குவார்க்கு உடனே புலனாகும். அன்றாட வாழ்க்கையில் எண்ணற்ற துறைகளில் அறிவியல் துணை செய்கின்றது. அறிவியல் பண்பாட்டையும் வளர்க்க துணைபுரிகின்றது என்றும் கூறப்படுகிறது. மனிதத்தன்மையை கூறும் பிற துறைகளில் உள்ள இலக்கியங்களைப் போலவே இத்துறை இலக்கியங்களும் மனதிற்கு முறையீடு செய்யும் ஆற்றலைப் பெற்று உள்ளன.அவற்றை பயிலுங்கால் மனம் பெருமிதம் கொள்ளுகின்றது. வாழ்க்கை துறைகளை அமைத்து கொள்ள அடி நிலமாக அறிவியல் உதவுகின்றது. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பயிலும் மாணவர்கள் நேர்முகமாகவோ, நேரல்முகமாகவோ தம் தொழில் துறைப் படிப்பை மேற்கொள்வதற்கு அறிவியல் துணைபுரிகின்றது. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மாணவர்கள் கல்வி பெறும் பொழுதும் கல்வி முற்றுப் பெற்று வாழ்க்கையில் அவர்கள் ஈடுபடும் பொழுதும் ஓய்வு நேரத்தை பயனுள்ள முறையில் கழிக்க வழிகாட்டுதல்.

**பயிற்றும் முறை**

அறிவியல் பாடம் கல்வி ஏற்பாட்டில் இடம்பெற்ற நாள் தொட்டு அப்பாட அறிவே முழு திறனுடன் எழுதவேண்டும் என்பதே முதல் நோக்கமாக இருந்தது. தொடக்கத்தில் அப்பாடம் பள்ளிகளில் கற்பிக்க பெருங்கால் செய்திகளை ஐயமின்றி மாணவர்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டு கற்பிக்க பெற்றது. சிறிது காலமாக தான் அறிவியல் விதிகளை உணரும் நோக்கத்துடன் கற்பிக்க பெற்று வருகின்றது. இந் நோக்கத்துடன் கற்பிக்க பெரும் பாட அறிவு மாணாக்கர்களுக்கு பயன்படுவதுடன் அதைக் கொண்டு அன்றாட வாழ்க்கையில் நேரிடும் பல பிரச்சினைகளை தீர்த்துக் கொள்ளவும் முடிகின்றது. தொடக்கத்தில் இருந்து அறிவியல் கற்பித்தலில் மேற்கொண்ட பல முறைகள் நடைமுறையில் இருந்து வருகின்றன. அவை யாவும் அறிவியல் வளர்ச்சி பெற்றவை. சில முறைகள் படிப்படியாக வளர்ச்சி உற்றவை. சில முறைகள் கவனத்துடன் செய்யப்பெற்ற சோதனைகளால் உருவானவை. அந்த முறைகள் யாவும் பாட அறிவை மனதில் ஏற்றுக் கொள்வதற்கு பெரிதும் துணைபுரிந்தது. ஆனால் அவை பிற பண்புகளை வளர்க்க சிறிதும் துணை செய்யவில்லை என்று எண்ணுவது சரியன்று. தகவல்களை சரியாக அறிந்து கொள்வதே முதல் நோக்கமாக இருந்தது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**விரிவுரை முறை**

விரிவுரை முறை மிகவும் கவர்ச்சிகரமானது. எளிதாக கற்பிக்க துணை செய்வது. இம்முறை ஆசிரியருக்கும் மாணவர்களுக்கும் தத்தம் முன்னேற்றத்தில் மனநிறைவு தரக்கூடியது. இன்று கல்லூரிகளில் இம்முறை பெரு வழக்காக இருந்து வருகிறது.இடைக்காலத்தின் தொடக்கத்தில் இருந்து இம்முறை கையாளப்பட்டு வருகின்றது. தேவையான நூல்கள் இல்லாமையாலும் திறமைசாலிகள் அதிகமாக இல்லாமையாலும் தவறின்றி சரியானபடி தகவல்களை பரப்புவதற்கும் இம்முறை கையாளப்பட்டது. நூலகத்துடன் தொடர்பு கொள்ளவும், அன்று பயின்று வந்த எழுத்துப் படிகளை பார்க்கவும் பலருக்கு வாய்ப்புகள் இல்லாததால் இம்முறை மிகவும் இன்றியமையாததாக இருந்தது. இன்றும் இம்முறை பொது மேடைகளில் விரிவுரை ஆற்றுவதில் பெருவழக்காகவும், வீட்டிலும் உரையாடலிலும் சாதாரணமாக கையாளப் பெறுகின்றது. இம்முறையில் மாணவர்கள் வாய்திறந்து பேசுவதற்கு வாய்ப்பு இல்லை. ஆசிரியரும் அவர்களை வினவுவதில்லை. மாணாக்கர்கள் வினாக்களை விடுப்பதற்கு அன்றி அவற்றிற்கு விடை அளிப்பதற்கு வசதிகள் இல்லை. சோதனைகள் செய்து காட்டலுக்கும் இடமில்லை. இம்முறையின் முக்கிய நோக்கம் சிறந்தவை என கருதப்படும் தகவல்களை எப்படியாவது மாணவர்களுக்கு அறிவிப்பதே ஆகும். இதை 'சொல்லும் முறை' என்றும் வழங்குவர். நடைமுறையில் உயர்நிலைப்பள்ளிகளில் இம்முறை வழக்கில் இல்லை என்றே சொல்ல வேண்டும்.

**நிறைகள்**

விரிவுரை முறையால் கால சிக்கனம் ஏற்படுகின்றது. ஆசிரியர் எல்லாச் செய்திகளையும் திரட்டி கூர்மைப்படுத்தி எடுத்துரைக்க முடிகின்றது. ஆசிரியர் பேச்சுத்திறமை வாய்ந்தவராகவும் நன்முறையில் எடுத்து இயங்கும் ஆற்றல் பெற்றவராகவும் இருந்தால், நகைச்சுவை கவர்ச்சித்தரும் சிறிய கதைகள் முதலியவற்றை இடங்களுக்கு ஏற்றவாறு கையாண்டு சிறந்த முறையில் செய்திகளை ஆணித்தரமாக எடுத்து விளக்க இயலும். இதனால் மாணவர்கள் கவனத்தை ஈர்த்து அவர்களுக்கு பாடத்தில் ஆர்வம் ஊட்ட முடியும்.

**குறைகள்**

விரிவுரை முறையால் கற்கும் மாணவர்கள் கற்றலில் பங்கு கொள்ள முடிவதில்லை. மாணாக்கர்களுக்கு கவனம்,பொருள் உணர்திறன், நினைவாற்றல் ஆகியவற்றில் பயிற்சி பெற வாய்ப்பு இருப்பினும், இதில் உற்றுநோக்கலுக்கும் ஆராய்ந்து பார்ப்பதற்கும் இடமில்லை.சில சமயம் செய்திகளைத் திரட்டி தருவதில் ஆசிரியரின் பங்கு முற்றுப் பெறாது போகக் கூடும்.சிறு விவரங்களில் அதிக அழுத்தம் தந்து ஆசிரியர் விலகிப்போகவும் இங்கு இடமுண்டு. மாணவர்கள் அறிவு நிலைக்கும் வயது நிலைக்கும் பொருந்தாத மொழி ஆட்சியால் அவர்களுக்கு தெளிவும் விளக்கமும் இல்லாமலும் போகலாம். இம்முறையில் மாணவர்களின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முன்னறிவை அறிந்து அவர்களின் தனித்திறனுக்கேற்றவாறு கற்பித்தலுக்கு வாய்ப்பே இல்லாது போய் விடுகின்றது. இக்கூறியவற்றால் இம்முறை பள்ளிகளில் சிறிதும் பயன் படுவதில்லை என்று எண்ணுவது தவறு.நவீன முறையில் கற்பிக்கும்போது இம்முறையை பயனுள்ள வகையில் கையாள வேண்டிய இடங்களும் உள்ளன. புதிய பகுதியை கற்கத் தொடங்கும் பொழுதும், ஒரு பகுதியில் உள்ள விதிகளை திரட்டிக்கூறும் பொழுதும் இம்முறை நன்கு பயன்படுகிறது. செய்திகளைத் தர நேரிடும் கால் எழும் பிரச்சினைகளைத் தீர்ப்பதிலும், காலச்சிக்கனத்தையொட்டி ஒரு பகுதியை விரைவாக முடிக்க நேரிடும் பொழுது இம்முறை நன்கு பயன்படக்கூடும்.

**செய்துகாட்டல் முறை**

கற்பிக்கும் பொழுது ஆசிரியர் அவ்வப்போது தான் கூறும் விதிகளையோ, கொள்கைகளையோ விளக்குவதாக இருந்தால் சோதனைகள் செய்து காட்டிக் கற்பித்தல் 'செய்துகாட்டல் முறை' என்று வழங்கப்படுகின்றது. விரித்துரைத்தல் முறையில் ஆசிரியரின் பேச்சுக்கு மட்டுமே இடம் உண்டு. இம்முறையில் மாணவர்களுக்கும் பங்கு இருக்கின்றது.விரித்தல் முறையில் மாணவர்கள் அமைதியாக இருந்து செய்திகளைக்கேட்டு அறிகின்றனர். இம்முறையில் அவர்கள் உற்சாகத்துடன் வினவிப் பங்கு கொள்கின்றனர். ஆசிரியர் சோதனையை செய்யும் பொழுது மாணவர்கள் ஒவ்வொரு படியையும் கூர்ந்து நோக்க வேண்டியுள்ளது. அப்படி உற்று நோக்கினால் தான் அவர்கள் சோதனையை நன்கு தெளிவாக விளக்கி எழுத முடியும் சோதனையின் இறுதியில் தாம் பார்த்த அவற்றிலிருந்து முடிவு காண வேண்டும். வகுப்பில் அம் முடிவுகளை ஆராயும் வேண்டும்.

**நிறைகள்**

செய்து காட்டல் முறையில் உரையாடலுக்கும் இடமுண்டு ஒவ்வொரு படியிலும் மாணவர்கள் தெரியாதவற்றை ஆசிரியரை வினவி அறியும் வாய்ப்புகள் உண்டு ஆசிரியரும் மாணவர்கள் தன்னை பின்பற்றுகின்றனர் என்பதை அறிய வினாக்களை எடுக்கலாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்ட கொள்கை விளக்க வினாவிடை மிகவும் இன்றியமையாதது வினாவும் வினாவும் விளக்கம் காண்பதற்கு மிகவும் ஏற்றவை செய்திகளை மேலும் சோதனைகள் செய்து காட்டப்படுகின்றன என்று எண்ணுதல் தவறு அவை புதிய செய்திகளை அறிவிக்கும் மேற்கொள்ளப் பெறுகின்றன செயல்முறையில் படங்கள் சினிமா படங்கள் படிமங்கள் முதலியவையும் இடம்பெறலாம் அவை மாணவர்களின் கவர்ச்சிகளை துணையாக இருக்கும் சோதனைகளிலும் கருவிகளை கையாள்வதிலும் சிரமங்களால் மாணவர்களின் கவனம் சிதற பெறாது கற்றலில் அதனை ஆழ்ந்து செலுத்துவதற்கு பேருதவியாக இருக்கும்.

அறிவியல் பாடம் பயிற்சி முறையை போல் இது ஒரு சிறந்த முறை இல்லை என்றே துணிந்து கூறலாம். நல்லாசிரியருக்கும் இம்முறை மிகவும் சிரமமானது. மிகுந்த திறமையுடன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இதனை கையாண்டால் தான் வெற்றி காண முடியும். மிகத்திறனுடன் இம்முறையை மேற்கொண்டு கற்பித்தால்காலச் உண்டாகும். குறைந்த காலத்தில் அதிகப் பகுதியைப் பயிற்றலாம். மாணவர்கள் உற்சாகத்துடன் கற்பர் கண்ணால் காண்பதற்கு வாய்ப்புகள் இருப்பதால், அறிவுக்கு முறையீடு செய்து கற்றலில் தெளிவு பிறக்கும். இயற்கைப் பாடங்களை கற்றலில் இம்முறை கவர்ச்சி அளிக்கவும் விடுபூக்கத்தைத் தூண்டவும் வாய்ப்பளிக்கிறது. கற்றலின் இன்றியமையாமையை விளக்குவதுடன் சிந்தனையைத் தூண்டவும் துணை செய்கின்றது. மாணவர்களின் அறிவுத்திறனுக்கும் அப்பாற்பட்ட சோதனைகளை காணவும் இம்முறை நல்ல வாய்ப்பினை அளிக்கின்றது.

**மாணவர்கள்**

கல்வி என்பது முக்கூட்டுச்செயல் மாணவர்கள், ஆசிரியர், பாடம் என்ற மூன்று துருவங்கள் அதில் உள்ளன. அந்த மூன்று துருவங்களிலும் இம்முறை முன்னேற்றமான பாதையைக் காட்ட வேண்டும். சாதாரணமாகப் பள்ளிகளில் குறைமதியினர், நடுநிலை மதியினர், நிறைமதியினர் ஆகிய அனைவரும் ஒரே வகுப்பில் ஒரே மாதிரியாக கற்பிக்கப் பெற்று வருகின்றனர். உளவியலாளர் மாணாக்கர்களின் நுண்ணறிவு, ஈவை, ஒட்டி மாணாக்கர்களை இனப்படுத்தியிருப்பதெல்லாம் நடைமுறையில் பயன்படுவதில்லை. திட்டத்தில் குழுவாகக் கற்பிக்கும் நிலை இல்லை. மாணாக்கர்கள் தனி நிலையில் கல்வி பயிற்றப்படுகின்றனர்.

**குலன் அருள் தெய்வம் கொள்கை மேன்மை**
**கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
**நிலம் மலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்**
**உலகிய லறிவோ டுயர்குணம் இனையவும் (நன்னூல், நூ. 26)**

என்ற கூற்றிற்கிணங்க ஆசிரியர் ஆசிரியர் இருக்க வேண்டும். பொதுக் கல்வித் துறையிலும் தொழில் துறையிலும் கற்றுத் துறை ப்போன வித்தகராக இருத்தல் வேண்டும் ஒரு ஆசிரியர். "தடி எடுத்தவன் எல்லாம் தண்டல்காரன்" என்ற படி வேறு வழி இல்லாதவர்கள் பிற துறைகளில் ஏமாற்றமடைந்து, அதனால் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டவர்கள் என்பவர்களுக்கு எல்லாம் இங்கு இடமில்லை. குழந்தைகளிடம் பரிவு, தன் தொழிலில் நம்பிக்கை உடையவர்கள் இங்கு பணியாற்ற தகுதியுடையவர்கள் ஆவார்கள். கல்வி அனைத்திற்கும் பயன்படும் என்று மொட்டை நோக்கத்துடன் கற்கும் நிலை இங்கு இல்லை. கல்வி வாழ்க்கை என்ற நோக்கத்துடன் இங்கு பயிற்றப்படுவதால் மாணவர்கள் பள்ளியில் பெரும் அனுபவங்களையும், வாழ்க்கையில் குறுக்கிடும் அனுபவங்களையும் இணைத்து கற்க வாய்ப்புகள் தரப்படுகின்றன. ஒவ்வொரு பாடத்திற்கும் தனித்தனி ஆய்வகம் உண்டு. அங்கு அதற்கு வேண்டிய சூழ்நிலை, துணைக்கருவிகள் பிற சாதனங்கள் ஆகிய யாவும் நல்ல


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முறையில் அமைந்திருக்கும். பள்ளி நூலகம், பாடங்களை ஒட்டி பிரிவினை செய்யப்பெற்று நல்ல சூழ்நிலையை கொண்டிருக்கும். ஆசிரியர் "கல்லாலின் புடையமர்ந்த தென்முக கடவுள்" போல் வீற்றிருந்து மாணவர்களிடையே எழும் ஐயங்களை அவ்வப்பொழுது அகற்றி, நன்முறையில் கற்றலில் கொண்டு செலுத்துவார்.

**மாணாக்கர் பயிலும் முறை**

மாணவர்கள் தத்தம் விரைவுக் ஏற்றவாறு பாடங்களை பயிலலாம். தம்முடைய விருப்பத்திற்கு தகுந்த பாடங்களை விருப்பப்படி கற்கலாம் படைப்புகளை பயிலும் நேரத்தில் மாணவர்கள் ஆசிரியரை அணுகி ஐயங்களைத் தெளிவுறலாம். பிறர் மாணவர்களிடமும் தம்முடைய ஐயங்களைப் போக்கிக் கொள்ளலாம். இதையே நன்னூலார்,

**நூல்பயில் இயல்பே நுவலின் வழக்கறிதல்**
**பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்**
**ஆசாற் சார்ந்தவை அமைவரக்கேட்டல்**
**அம்மாண் புடையார் தம்மொடு பயிறல்**
**வினாதல் வினாயவை விடுத்தல் (நன்னூல், நூ. 41)**

என்ற வாய்ப்புகள் யாவும் இங்கு பெற வசதிகள் உண்டு.பாடங்களில் அதிக கவனம் செலுத்த வேண்டுமோ அப் பாடங்களில் அதிக கவனம் செலுத்தலாம். ஆசிரியர் மாணாக்கர்களின் வேலையில் அடிக்கடி குறுக்கிடாது, ஒரு மேற்பார்வையாளர் போலிருந்து மாணவர்களுக்கு வேண்டிய அனைத்தையும் கொடுத்து கற்கும் சூழ்நிலை கெடாதவாறு பார்த்துக் கொள்வார் .அவ்வப்பொழுது தேர்வுகளில் மாணவர்கள் படைப்புகளை பெற்ற நாள் அவற்றை அவர்கள் செய்து முடித்தால் வேலையின் தகுதி முதலியவற்றை குறித்து வைப்பர். அத்தாள்களின் ஒருபடி மாணவர்களிடமும் இருக்கும் அவ்வாறு இருந்தால்தான் மாணவர்களுக்கும் தத்தம் உண்மை நிலையை அடிக்கடி தெரிந்து கொள்ள வசதி ஏற்படும்.

**விளையாட்டு முறை**

ஒரு செயலை வேலை போல் மேற்கொள்வதை விட விளையாட்டாக மேற்கொள்வது நன்றி என்பதை அனுபவத்தில் அறியலாம் சுமையாகத் தோன்றும் விளையாட்டு மகிழ்ச்சியாக இருக்கும் இதனால்தான் ஆண்டவன் பண்டங்களை எல்லாம் விளையாட்டாக படைத்தான் என்பதை "அலகிலா விளையாட்டுடையார்" என்று குறித்தனர். உளவியல் கல்வி அறிஞர்களும் கல்வியை விளையாட்டு முறையில் பயிற்ற வேண்டும் என்று உணர்த்தி வருகின்றனர். நாடகத்திற்கும் அறிவியலில் இடம் உண்டு நாடகமே உலகம் என்பது பழமொழியாகும். விறுவிறுப்பான சிறு அறிவியல் நிகழ்ச்சிகள் அறிவியல் மேதைகளின் வாழ்க்கை வரலாற்றில் கண்ட ஒரு சில அதிசய சம்பவங்கள் போன்றவற்றை நாடக பாணியில் அமைத்துக் கொள்ளலாம். ராஜாஜி அவர்கள் எழுதிய திண்ணை ரசாயனம், அப்புசாமி அவர்கள் தினமணி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சுடரில் எழுதிவந்த 'விஞ்ஞானப் பேரவை' என்ற தொடரில் காணப்பெறும் கட்டுரைகள் ஆகியவை உரையாடல் போக்கில் நாடக பாணியில் அமைந்தவை. பாஸ்டர், லிஸ்டர், ரைட் சகோதரர்கள், சர் ஐசக் நியூட்டன், தாமஸ் ஆல்வா எடிசன், க்யூரி அம்மையார் முதலியோரின் வாழ்க்கை வரலாற்றில் காணும் ஒரு சில நிகழ்ச்சிகளையும், நவீன மருத்துவ முறைகள், நோய்களை தடுக்கும் முறைகள், ஹெச்.ஜி.வெல்ஸ் போன்ற அறிஞர்களின் அறிவியல் கற்பனை கதைகள் முதலிய சிலவற்றையும் நாடக முறையில் அமைத்து தக்க பின்னணியுடன் ஒத்திகை போட்டும் சிறந்த முறையில் நடித்துக் காட்டலாம். இன்றைய இளைஞர்களின் மனப்பான்மையில் நாடக முறை கவர்ச்சி உடையதாக அமையும் என்பதற்கு ஐயமில்லை. படிக்காத பாமர மக்கள் நிரம்பிய நம் நாட்டில் விளையாட்டு முறைகளாலும், நாடக முறைகளாலும், படக்காட்சி முறையாலும் அறிவியல் கருத்துகளை பரப்புதல் வேண்டும். நாடு விடுதலை அடைந்த பிறகு பல சிற்றூர்களிலும் உயர்நிலைப் பள்ளிகள் தொடங்கப்பட்டுள்ளன. நீண்டநாட்களாக பள்ளிகள் வேண்டும் என்று ஏங்கிக் கொண்டிருந்த அவர்கள் இவ்விடங்களில்

**வீடு தோறும் கலையின் விளக்கம் வீதிதோறும்**
**இரண்டொரு பள்ளி நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்**
**நகர்க ளெங்கும் பலபல பள்ளி**
**தேடு கல்வி யிலாததோரூரைத்**
**தீயினுக் கிரையாக மடுத்தல் (பாரதியார் கவிதைகள், ப. 123)**

என்ற பாரதியாரின் கல்வி திட்டம் இன்று செயற்படத் தொடங்கியுள்ளது என்று கருதலாம் நம் நாட்டில் பொருளாதார நிலையினையொட்டியும்,மின்னாற்றல் முதலிய பல்வேறு வசதிகள் சிற்றூர்களில் கிடைப்பது அருமை கருதியும் சிற்றூர் பள்ளிகளுக்கும் ஏற்றவாறு ஒரு ஆய்வகத்தை நிறுவுவதில் கவனம் செலுத்துவது மிகவும் இன்றியமையாதது ஆகும். டாக்டர் வொயிட்ஹவுஸ் என்பார் கூறும் ஆய்வகமும் பயிற்றும் அறையும் இணைந்ததோர் அமைப்பு இப்பள்ளிகளுக்கு மிகவும் பொருத்தமாக இருக்கும்.

**முடிவுரை**

ஆசிரியர்கள் மாணவர்களுக்கு சிறந்த முறையில் அறிவியல் பாடத்தை துணைக் கருவிகளை கொண்டு கற்பிக்க வேண்டும். அறிவியல் பயிற்றலை நம்பிக்கையோடு அணுகுதல். சிறுவர்கள் விடுக்கும் வினாக்களுக்கு விடை காணும் திட்டத்தை அவர்களாலேயே அமைக்க செய்தல். மாணவர்கள் கற்கும் நிலைக்கேற்ற சில அடிப்படையான பாடநூல்களை பயிலுதல். நூல்களில் கூறப்பட்டுள்ள எல்லா சோதனைகளையும் செய்து பார்த்தல். நூல்களில் கூறப்பட்டுள்ள இடங்களுக்கு பயணங்களை மேற்கொள்ளல். அனுபவமிக்க உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களிடம் கலந்துபேசி சில அடிப்படைக் கருத்துக்களை அறிதல். பேராசிரியர்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ந.சுப்பு ரெட்டியார் கூறியுள்ள வழிமுறைகளைப் பின்பற்றினால் மாணவர்களுக்கு சிறந்த முறையில் அறிவியலைப் பயிற்றுவிக்க முடியும் என்பது உறுதியாகும்.

### குறிப்பு நூல்கள்

[1] இராதா செல்லப்பன். கலைச்சொல்லாக்கம். தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

[2] கம்பர், கம்பராமாயணம், செண்பகா பதிப்பகம், சென்னை.

[3] பேராசிரியர். நாகராஜன், கற்றல் கற்பித்தலின் இன்றியமையாக் கூறுகள், ஸ்ரீராம் பதிப்பகம், சென்னை.

[4] சண்முகம் செ.வை. அறிவியல் தமிழாக்கம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை.

[5] திருமலை, மா.சு. மொழி கற்பித்தலும் பாடம் தயாரித்தலும்.

[6] பவணந்தியார், நன்னூல், கழக வெளியீடு, சென்னை.

[7] பாரதியார், பாரதியார் கவிதைகள், கழக வெளியீடு, சென்னை.

[8] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், அறிவியல் தமிழ், ஜூன் 1981.

[9] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், அறிவியல் பயிற்றும் முறை, ஏஷியன் பிரிண்டர்ஸ், 1971.

### References

[1] Radha Sellappan, Kalaichollakkam. Tamil University, Thanjavur.
[2] Kambar, *Kambaramayanam*. Shenbaga Publishing, Chennai.
[3] Prof. Nagarajan, *Kattral Karpithalin Indriamayak Koorugal*. Sriram Publishing, Chennai.
[4] Shanmugam Se.Vai. *Ariviyal Tamilakkam*. New Century Book House, Chennai.
[5] Thirumalai, MA. Su. *Mozhi Karpithalum Padam Thayarithalum*. Chennai.
[6] Bavananthiyaar, *Nanool*, Kazhaga Veliyeedu, Chennai.
[7] Bharathiyar, Bharathiyar Kavithaigal, Club Publishing, Chennai.
[8] Prof. Na. Subu Reddiar, Scientific Tamil, June 1981.
[9] Prof. Na. Subu Reddiar, Science Teaching Methodology, Asian Printers, 1971.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.





தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com



# ந. சுப்பு ரெட்டியாரின் *தொண்டை நாட்டுத் திருப்பதிகம்* வெளிப்படுத்தும் பக்திநெறி

## Portrayal of Bhakti Idea in N. Subbu Reddiar's *Thondai Nattu Thiruppathigam*

**கு. கோகிலா**, முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வுத் துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**K. Kokila**, Ph.D Research Scholar, PG Tamil and Research Department,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-4458-9825**

**முனைவர் செ. ஹேமலதா,** உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வுத் துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. S. Hemalatha,** Assistant Professor, PG Tamil and Research Department,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-3227-7616**

**DOI: 10.5281/zenodo.7251578**

### Abstract

*Tolkappiyam is the basic source of Tamil literature. Tolkappiyam's writing, rhetoric and materiality form the basis of the Tamil language and grammar. Terminology in the language also tells about modes of action in semantics through grammar. The Alwars and Nayanmars through their eloquence sang Tirupathikams and expounded them through Saiva and Vaishnava sects. One can get to know the mythological stories, the structures of the temples, the hymns of the Alwars and the inscriptions of the Nayanmars. The shrines in Ranipet district can be learned through the book "Thondai Nattu Tirupathikam". In the history of the Thondai region, the life of Ilandrayan, and the reason for the name of Alwars are detailed. Saivism means the principles of the Shiva cult and glorifies the incarnation of Lord Shiva. The songs of the chief three Saiva nobles were compiled by King Rajaraja Chola through Nambiandar Nambi. Saiva scriptures are rendered mainly by Thirunnasambandar, Thirunavukarasar and Sundarar. It is possible to know that the news and books about Saiva Siddhanta have been published in the books of Na. Subbu Reddiar. The Alwars and Nayanmars who lived in the Thondai region used to go to the shrines, perform tirupanis, preach Thirunama and pray to Thiruperuman Shiva. It can be known that they worshipped, performed pujas and preached beneficial messages to the people with Thirunamam of Lord Shiva. Vaishnava and Saiva incarnations are glorified in the Thondai region. The glory of the Spiritual Alwars, Nayanmars and the kings and the special features of the temples can be learnt from Subbu Reddiar's books.*

**Keywords:** Subbu Reddiar, Saivism, Vaishnavism, Alvars, Nayanmars, Thondai Region, Pasurams.

### ஆய்வு சுருக்கம்

*தமிழ் இலக்கியங்கள் அனைத்திற்கும் அடிப்படை மூல ஆதாரமாய் விளங்குவது தொல்காப்பியமேயாகும். தொல்காப்பியத்தின் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் தமிழ்மொழியின் இலக்கணத்திற்கு அடிப்படையாக அமைகின்றன. தொண்டை நாட்டு வரலாற்றை சிறப்பிக்கும் வகையில் திருத்தலங்களின் பெருமையானது*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*எழுத்துருவாக்கம் பெற்றுள்ளது. சொல்லுருவாக்கத்தின் படியும் பொருளதிரத்தில் செயல் முறைகளைப் பற்றிய இலக்கணத்தின் வாயிலாக எடுத்துரைக்கின்றது. ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்கள் தன்னுடைய சொல்லதிகாரத்தின் மூலமாக திருப்பதிகங்களை பாடி அறநெறியுடன் சைவ வைணவத் தலங்களின் மூலமாக எடுத்துரைக்கப்பட்டது. திருத்தலங்களில் புராணக் கதைகளையும், கோயில்களின் அமைப்புகளையும், ஆழ்வார்களின் பாசுரங்களையும், நாயன்மார்களின் பதிகங்களையும் அறியமுடிகின்றன. சைவம் மற்றும் வைணவ வரலாற்று தலங்களை அடியார்கள் திருத்தலங்களின் பெருமையை பாடல்கள் மூலமாக பாடி திருப்பணிகளை செய்துள்ளார்கள். இராணிப்பேட்டை மாவட்டத்தில் உள்ள திருத்தலங்களில் தொண்டை நாட்டுத் திருப்பதிகம் என்னும் நூலின் வாயிலாக அறிந்துக்கொள்ள முடிகின்றது. தொண்டை நாட்டு வரலாற்றில் இளந்திரையனின் வாழ்க்கை குறிப்பும், ஆழ்வார்களின் பெயர் காரணமும், திருத்தலங்களின் பெருமைகளையும் அறிய முடிகின்றது. சைவம் என்பதன் பொருள் சிவ பெருமானின் அவதாரம் எனப்படும். சைவம் என்பது காய்கறி, கீரையைக் குறிக்கும். மூவர் அருளிய நூல்களை ராஜராஜ சோழ மன்னனால் திரு. நம்பியாண்டார் நம்பிகள் மூலமாக நூல்கள் கிடைக்கப்பெற்றன. சைவ சமய நூல்கள் என்றாலே திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் என்று மும்முர்த்திகளே ஆவார். இவர்களுக்கு அடுத்தப்படியாக சைவ சித்தாந்தத்தைப் பலர் பாடியுள்ளனர். ந. சுப்புரெட்டியவர்கள் அவர்களுடைய நூல்களில் சைவ சித்தாந்தம் பற்றிய செய்திகள், நூல்கள் வெளிவந்துள்ளதை அறிய முடிகின்றது. தொண்டை நாட்டில் வாழ்ந்த ஆழ்வார்கள், நாயன்மார்கள் திருத்தலங்களுக்குச் சென்று, திருப்பணிகளைச் செய்து, திருநாமத்தைப் போதித்து, இறைவனை வணங்கி, பூஜைகள் செய்து, மக்களுக்கு நன்மை தரும் செய்திகளை திருநாமம் கொண்டு போதித்ததை அறிய முடிகின்றது. வைணவம் மற்றும் சைவ பெருமானின் அவதாரத்தையும், தொண்டை நாட்டுச் சிறப்புகளையும் ந. சுப்புரெட்டியாரின் நூல்களின் வாயிலாக மன்னர்களின் பெருமையையும், கோயில்களின் சிறப்புகளையும் பக்தி நெறியோடு அழகுற எடுத்துரைப்பதே இவ்வாயிவின் நோக்கமாகும்.*

**குறிப்புச் சொற்கள்:** சுப்புரெட்டியார், சைவம், வைணவம், ஆழ்வார்கள், நாயன்மார்கள், தொண்டை மண்டலம், பாசுரங்கள்.

**முன்னுரை**

பல்லவர் காலம் பக்தி இலக்கிய காலமாக போற்றப்படுகிறது. அப்பல்லவர்கள் ஆண்ட பகுதியை தொண்டை நாடு என்பர். அத்தொண்டை நாட்டிலுள்ள சிவதலங்களையும், திருமால் தலங்களையும் ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாவால் பாடி மகிழ்ந்துள்ளனர். பேராசிரியர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நாயன்மார்களும், ஆழ்வார்களும் பாடி மகிழ்ந்த தருத்தலங்களுக்கு நேரில் சென்று அவர்கள் பெற்ற இன்பத்தை தானும் பெற்று பிறரும் பெறும்படி தொண்டைநாட்டு திருப்பதிகள் என்ற நூலினை எழுதியுள்ளார். அந்நூலில் உள்ள தலங்களையும் ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகும். சைவம், வைணவம் என்ற இரண்டுமே அறநெறிக்கொள்கையில் இருந்ததைப் பல நூல்கள் மூலமாக தெரியவருகின்றன. ஒரு மனிதன் எப்படி அறநெறியோடு வாழவேண்டும் என்று கூறுகின்றார்களோ அதையே சைவமும், வைணவமும் நமக்கு எடுத்துரைக்கின்றது. இதனை ஆழ்வார்களும், நாயன்மார்களும் அவர்களுடைய திருப்பதிகம் மூலமாக கூறுகின்றனர். சைவம் - சிவனை முழு முதற்கடவுளாகவும், வைணவம் – விஷ்ணுவை முழு முதற்கடவுளாகவும் ந. சுப்புரெட்டியார் நூல்களின் வாயிலாக அறிய முடிகின்றது. நூல்கள் பெரும்பான்மையானவை கள ஆய்வினை மேற்கொண்டு எழுதப்பட்ட நூல்கள் ஆகும். தொண்டை நாட்டு புகழினையும், திருத்தலங்களின் பெருமைகளையும் சைவம், வைணவம் போன்ற தலங்களின் சிறப்புகளை பக்தி நெறியோடு அழகுற எடுத்துரைப்பதே இவ்வாயிவின் நோக்கமாகும்.

**தொண்டை நாட்டு புகழ்**

தொண்டை நாட்டு திருப்பதிகத்தில் பெரும்பாண்மையானவை தொண்டை மண்டலத்தில் உள்ள கோயிலை பற்றி விவரிக்கிறது. கோவில்கள் மற்றவர்களுக்கு தொண்டுகள் செய்வதற்காக அமைக்கப்பட்டிருந்தது. இங்கு திருத்தலங்கள் மிகுதியாக காணப்படுகின்றன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதற்கொண்டு பேராசிரியர்கள் வரை தொண்டை நாட்டைப் பற்றி பாடதவர்களே இல்லை என்று கூறலாம். தொல்காப்பியத்தில் தொண்டை நாட்டு பெருமையை தொல்காப்பியர் தன்னுடைய பாயிரத்தில் **வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் (தொல். எழுத்., நூ. 01)** தொண்ட நாட்டு மன்னன் இளந்திரையனின் பிறப்பானது நாக குல வம்சத்தை சேர்ந்தவர்களுக்கும் ராஜா ராஜா சோழனுக்கும் மகனாக பிறந்தவர் தான் தொண்டைமான் இளந்திரையன். இந்த செய்தியானது தமிழகத்தில் ஊரும் பேரும் என்னும் நூலின் வாயிலாக காணமுடிகின்றது. படிகாசு புலவர் தொண்டைமான் பற்றி பாடியுள்ள பாடல்களில் அவருடைய உயிரானது துறக்கும் தருவாயில் கூட செய்த கொடையினை பாடியுள்ளார். **வண்டோ லிடுந் தொண்டை மண்டலத்தா னேதியாக முண்டோ விலையோ வுரை (தொண்டை மண்டல சதகம், ப. 78)** தொண்டைமானிடம் தருவதற்கு எதுவும் இல்லாத நிலையிலும் தன்னை நாடி வருவோர்க்கு இல்லை என்று கூறமுடியாமல் தன்னிடம் இருந்த களஞ்சியத்தில் இருந்த பொன்னையும், பொருளையும் வாரிக்கொடுக்க துணிந்த வீரர் தொண்டைமான் இளந்திரையன் ஆவார்.

மனித வரலாற்றில் மிகத் தொன்மை வாய்ந்த காலச் சமயங்களில் சைவமும், வைணவமும் சிறப்பு மிக்கதாக திகழ்கிறது. இமய மலையில் இருந்து குமரி வரை சைவ,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வைணவ திருத்தலங்களின் பெருமையை உணர முடிகிறது. பலவகைப் புராணக் கதைகள் வடமொழியில் சைவ, வைணவத்திற்கான ஆதாரமாக வேதங்களும், உபநிடதங்களும், இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் இமயம் முதல் தென்குமரி வரை பரவியிருக்கின்றது. சைவ, வைணவ அடியார்கள் நாடு முழுவதும் சுற்றித் திரிந்து திருத்தலங்களின் பெருமையை பாடல்கள் மூலமாக திருப்பணிகளை செய்து கொண்டே எடுத்துரைத்துள்ளனர். சைவ அடியார்களும், வைணவ அடியார்களும் இறைவனுடைய திருப்பெருமையினை உலகம் முழுவதுவும் திருப்பதிகம் மூலமாக பரப்பியுள்ளனர்.

தமிழர்கள் தங்கள் நாட்டின் இயற்கைக்கு ஏற்றவாறு தெய்வங்களை வழிபடுகின்றனர். தொல்காப்பியத்தில்;

**மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சே யோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புனலு லகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும்படுமே (தொல். பொருள். அகம்., நூ. 5)**

என்று குறிப்பிட்டுள்ளது. தொண்டை நாட்டு திருப்பதிகங்களில் – 20 திருப்பதிகள் கூறப்பட்டுள்ளன. அவை 1. வரதராஜப் பெருமாள் திருக்கோயில் 2. அஷ்டபுஜப் பெருமாள் திருக்கோயில் 3. விளக்கொளி பெருமாள் திருக்கோயில் 4. அழகிய சிங்க பெருமாள் திருக்கோயில் 5. உலகளந்த பெருமாள் திருக்கோயில் 6. பாண்டவதூதப் பெருமாள் திருக்கோயில் 7. நிலாதுண்டப் பெருமாள் திருக்கோயில் 8. உலகளந்தப் பெருமாள் திருக்கோயில் திருகாரகம் காஞ்சிபுரம் 9. சொன்ன வண்ணம்செய்தப் பெருமாள் திருக்கோயில் 10. உலகளந்தப் பெருமாள் திருக்கோயில் திருக்கார்வானம் காஞ்சிபுரம் 11. ஸ்தலசயனப் பெருமாள் திருக்கோயில் மாகபலிபுரம் காஞ்சிபுரம் 12. கள்வப் பெருமாள் திருக்கோயில் 13. பவளவண்ணப் பெருமாள் திருக்கோயில் 14. பரமபத நாதர் பெருமாள் திருக்கோயில் 15. விஜயராவைப் பெருமாள் திருக்கோயில் 16. வீரராகவர் பெருமாள் திருக்கோயில் 17. பார்த்தசாரதி பெருமாள் திருக்கோயில் 18. நீர் வண்ணப் பெருமாள் திருக்கோயில் 19. நித்ய கல்யாணப் பெருமாள் திருக்கோயில் 20. யோக நரசிம்ம சுவாமி பெருமாள் திருக்கோயில்.

***திருப்பதிகம்***

திருப்பதிகம் என்பது திரு + பதிகம் ஆகும். திருப்பதிகம் தொல்காப்பியத்தில் பாயிரம் என்று கூறப்பட்டுள்ளது. பாயிரம் என்பது பாடல் வரிகள் என்று பொருள். பதிகம் என்பது பாடல்களின் தொகுப்பாகும். பதிகம் என்பது முதன்முதலில் பாடபெற்ற பாடல்களை ஆதிப்பதிகம் என்று கூறப்படும். பதிகம் என்பது பத்து பாடல்களைக் கொண்டத்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தொகுப்பேயாகும். பல நூறுப் பாடல்களை தொகுத்தவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகியவர்கள் சிவபெருமானை நினைத்து பாடிய பாடல்களின் முதல் தொகுப்பேயாகும்.

**பதிகம் முடிந்தவுடன் அதனை முடித்துக்காட்டும் வகையில் தன்னுடைய பெயர், பதிகப் பயன், அரசனின் பெருமையை கூறுவது திருக்கடைக்காப்பாகும். (திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும், ப.73)**

அதற்கானப் பாடல்வரிகள்

**திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப்புச் சாத்தி**
**இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்த்தொழுது நின்றருள்**
**அருட்கருனைத் திருவாளனார் அருண் கண்டு அமரர்எலாம்**
**பெருக்க லிகம்பினில் ஆர்த்துப் பிரசமனர் மழைபொழித்தார்**
**(திருமுறை 12, பகுதி 5, பா. 1978)**

பாடல்களை பாடி முடித்த நிலையில் திருக்கடைக் காப்பையும் ரிக்மொழியையுடையப் பிள்ளையார் முன்பு இறைவனை வணங்கி நின்று கருணையுடன் அருள் புரிந்த சிவபெருமானின் நிலையை கண்டு தேவர்கள் யாகம் செய்து மகிழ்ச்சியான ஒலியை எழுப்பி மலர்களை போன்று மழையினை பொழியச்செய்தனர்.

**வைணவ திருப்பதிகளின் பெருமை**

திருமாலின் பெருமையை கூறும் வகையில் மொத்தம் நூற்று ஆறு திருப்பதிகள் இருக்கின்றன. திருமாலின் இந்த நூற்று ஆறு திருப்பதிகளில் எழுந்து அருள் புரிந்து நம்மை காத்து வருகின்றார் எம்பெருமான். மக்களுக்கு தண்ணீர் தாகம் எடுக்கும் போது நீரை உட்கொண்டு தாகத்தை தீர்த்து நிம்மதி அடைவர். அதுபோல பெருமாளை வணங்கினால் தாகத்தை தீர்க்கும் நீர்போல் அவர்களுடைய குறை நீங்கும் என்று மக்கள் நம்பிகை கொண்டுள்ளனர். பொய்கையாழ்வார்

**எம்பெருமானை எழுந்தாருளி மக்களுக்கு அருள் சுரந்து தான் "பேரருளாளன்" என்பதை நிருபித்து வருகின்றான். இதனை தமருகந்தது எவ்வுருதும் அவ்வுருவம் தானே (பன்னிரு திருநாமம் பெருமைகள், ப. 8)**

என்று கூறுகிறார். பொய்கையாழ்வார், சீத்தலைச் சாத்தனர் ஆகிய இருவரும் இக்கருத்திணை வலியுறுத்துகின்றர்.

**மண்ணினும் கல்லினும் மரத்தினும் – நண்ணிய**
**தெய்வதம் காட்டுநர் வகுக்க – ஆங்குஅத்**
**தெய்வதம் அவ்விடம் நீங்கா (மணிமேகலை, 21:125-6)**

சங்க கால மக்கள் மண்ணால் பொருட்டகளை செய்தனர்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சுடுமண்லில் சுட்டு எடுத்த பாத்திரங்களை செய்தனர். அவைகள் நிலைத்து நிற்க கல்லில் செதுக்கி வைத்தனர். பின் வரும் சந்ததியனர்க்கு பாறைக் கற்களைக் குடைந்து தெய்வ உருவங்களை செதுக்கினர். (செந்தமிழ் திங்கள் இதழ், ப.9)**

இச்செய்திகள் நூல்களின் வாயிலாக நமக்கு எடுத்துரைதுள்ளனர். இதனை மணிமேகலை என்னும் நூலில் உள்ள பாடலின் வயிலாக அறிய முடிகின்றது. தெய்வம் பிறந்த கதையை நமக்கு எடுத்துரைக்கிறது. இவ்வாறு வைணவ திருப்பதிகளில் பல்வேறு விதமான கற்றகளால் இறை மூரித்திகள் வடிக்கப்பட்டுள்ளன.

**ஆழ்வார்கள் குறிப்பு**

ஆழ்வார்கள் என்று வேறு பெயர் உண்டு. ஆனால் சிறப்பு பெற்ற பெயராக கருதப்படுவது ஆழ்வார் என்று கூறப்படுகின்றது. ஒவ்வொரு காலத்திற்கும் ஏற்றார் போல் ஆழ்வார்கள் காணப்படுகின்றனர். ஆழ்வார்களுக்கு என்று வேறு சிறப்பு பெயர்கள் உண்டு அவை **'திவ்ய சூரிகள்', 'பிரபந்தர்', 'ஆதி பக்தர்', 'மாலுகந்த ஆசிரியர்', 'பாலேய் தமிழர்', 'பொய்யில் புலவர்' என ஆழ்வார்களின் பெயர் சிறப்பிக்கப்படுகின்றது. (திவ்வியப் பிரபந்தம், ப.9)** ஆழ்வார்களின் பெயருக்கு மிக சிறப்பு உண்டு என்பதை அறிய முடிகின்றது. இறைவனை என்றும் மறவாது தொழுது நிற்பதே ஆழ்வார்களின் சிறப்பாகக் கருதப்படுகின்றது. ஆழ்வார்கள் என்றாலே ஆழ்ந்து சிந்தனை செய்பவர்கள் என்றும் பொருள்படலாம். ஆழ் + வார் ஆழ்ந்து சிந்தித்தலேயாகும். ஆழ்வார் என்ற சொல்லிற்கு இறைவனுடைய குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுபவர்கள் என்று பொருள். பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவர் மதுரகவியாழ்வார் இவர் தன்னுடை ஆசான் ஆன நம்மாழ்வாரையே சிறந்த தெய்வமாக எண்ணி பதினொரு பாசுரங்களைப் பாடியுள்ளார். **ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி – ஏழ்பாளும் உள்ளு அவர்கள் உரைத்தவகள் தாம் வாழி. செய்யமறை தன்னுடனே சேர்ந்து. (ஸ்ரீமதே நிக மாத்த மஹாதே, ப. 3)** ஆழ்வார்களை போற்றும் விதத்தில் இந்த பாடலானது அமைந்துள்ளது. ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப் பிரபந்தங்களை வாழ்க வாழ்கவே என்றும் எந்த நிலையிலும் கர்வம் கொள்ளாமல் வாழ்கின்றவர்களே ஆழ்வார்கள் என்றும், வாழியவே என்றும், ஏழுலகத்தில் உள்ள மக்களுக்கும் உணர்த்தும் படியாக ஆழ்வார்கள், சாத்திரங்களில் அருளிச் செய்த சுருக்கமான கருத்துக்களை நன்கு பொருள் புரியும்படி விரிவாக எடுத்து தனது பாசுரங்களில் விளக்குகின்றனர். சாத்திரக் கருத்துக்களின் மிக ஆழமான பொருள் செம்மையான விளக்கத்துடன் ஆழ்வார்கள் மக்களுக்கு புரியும் வகையில் எடுத்துரைக்கின்றனர்.

**பன்னிரு ஆழ்வார்கள்**

ஆழ்வார்கள் மொத்தம் 12 பேர். அவர்களின் பெருமைகளை ஆழ்வார்களின் பெருமையினை எடுத்துரைக்கும் விதமாக ஒரு பாடலையும் எழுதியுள்ளார்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**ஆழ்வார்கள் பன்னிருவர் எம்பெருமானின் திருக்குணங்களின் ஆழங்கால்பட்டுத் தம்மை மறந்த நிலையில் இருந்தமையால் ஆழ்வார்கள் என்ற திருப்பெயரைப் பெற்றுத் திகழ்ந்தனர் (வைணவமும் தமிழும், ப. 58)**

என்று நாராநாரச்சியபர் அவர்கள் எடுத்துரைத்ததை பேராசிரியர் அவர்கள் சான்று காட்டுகின்றார்.

**அண்ணலை மேக வண்ணன்**
**ஆகிய பெருமான் தன்னை**
**எண்ணியே நாளும் நெஞ்சில்**
**இருத்தியே அன்பில் ஆழ்ந்து**
**நண்ணியே நின்ற தாலே**
**நலமுற ஆழ்வார் என்று**
**திண்ணமாய்ப் போற்றப் பெற்றார்**
**செல்வர்பன் னிருவர் தாமே. (ஆழ்வார் ஆரா அமுது (கழகம்) சி, பா. 1)**

ஆழ்வார்களில் முதல் மூவர் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆவார். வைணவத்திற்கென்றே பல சிறப்புகள் ஆழ்வார்களால் நிகழ்த்தப்படுகின்றன. இவ்வாழ்வார்களை மும்மூர்த்திகள் என்று கூறுவார்கள். இம்மும்மூர்த்திகளின் பெருமைகளை பேராசிரியர் அவர்கள் தனது பாடல்களில் எடுத்துரைத்துள்ளார்.

**கடிகையில் நரசிம்ம பெருமான்**

கடிகை மலையை எடுத்து கொண்டால் திருகடிகை மலைக்கு வந்து செல்லாதவர்களே இல்லை என்று கூறலாம். கடிகை என்பது ஒரு நொடிப்பொழுது நரசிம்மனை தரிசனம் செய்து செல்வது என்று கூறுவார்கள். கடிகை மலையானது மிக பழம்பெரும் மலையாக அமைந்துள்ளது என்று தெரியவருகின்றது. விசுவாமித்திரர் கடிகை மலைக்கு வந்து ஒரு நொடிப்பொழுது நரசிம்மனை தரிசனம் செய்து சென்றுள்ளார் என்று பல நூல்கள் வாயிலாக தெரிகின்றது.

**யோக நரசிம்ம சுவாமி பெருமாள் திருக்கோயில்**

புகழ் பெற்ற நரசிம்ம கோயில் ராணிப்பேட்டை மாவட்டத்தில் அரக்கோணத்திற்கு அருகே அமைந்துள்ளது. கடிகாசலம் என்ற சோளிங்கர் கோயில் அமைந்துள்ளது. இது வரலாற்று சிறப்பு மிக்க இடமாக அமைந்துள்ளது. கடிகாசலம் என்ற பெயரிலிருந்து கடிகை மலை, திருக்கடிகை மலை, சோழசிம்மபுரம், சோழசிங்கபுரம், சோளிங்கர் என பல பெயர்கள் கொண்டது இந்த நரசிம்ம கோயிலாகும். ஆழ்வார்கள், புலவர்கள், கவிஞர்கள், அறிஞர்கள், பேராசிரியர்கள் போன்ற பலர் நரசிம்ம பெருமானை பற்றி பாடியுள்ளனர். இந்த கோயிலின் சிறப்புகளில் ஒன்று ஆஞ்சநேயர் நரசிம்ம பெருமானை வணங்கி நின்ற நிலையில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காட்சியளிக்கின்றார். எனெனில் அஞ்சநேரய் இராமனை வழிப்படும் விதமாக பிரகோவில்களில் காட்சி அளிக்க இக்கோவிலில் நரசிம்மரை வழிபடுவது சிறப்பு.

நரசிம்ம அவதாரம் என்பது பத்து அவதாரத்தில் நான்காவது அவதாரமாக ஆகும். ஒரு குழந்தை, பிறப்பு முதல் நடக்கும் வரை பத்து விதமான அவதாரத்தை எடுத்து உரைக்கின்றது. அதில் நரசிம்ம அவதாரம் எட்டாவது மாதக் குழந்தையை பற்றி விவரிக்கிறது. நரசிம்ம அவதாரமானது ஒரு குழந்தையின் நிலையில் இருந்து பார்த்தால் அந்த குழந்தை பிறந்து, தவழ்ந்து, எழுந்து, நிற்கும் நிலையினை விளக்குகிறது. ஒரு குழந்தையை எட்டாவது மாதத்தில் கவனமாக பார்க்க வேண்டும் என்பதை நரசிம்ம அவதாரத்தின் மூலமாக நமக்கு தெரிவிக்கின்றது. ஒரு குழந்தை எட்டாவது மாதத்தில் எழுந்து நின்று கொண்ட நிலையில் அந்த குழந்தை எதை கண்டாலும் எடுத்து வாயில் போட்டு கொள்ளும். அதே சமயம் எந்த ஒரு பொருள் கிடைத்தாலும் கிழித்து எரிந்துவிடும் இந்த நிலையினை நரசிம்ம அவதாரத்துடன் ஒப்பிட்டு பார்க்கப் படுகின்றது.

நரசிம்ம பெருமானை காணாது, மணம் உருகி, பல காலம் நினைத்து, பூஜித்து, தன் பாதங்களின் மூலமாக ஆடி ஆடி, அழுது, புலம்பி பெருமானை காண வேண்டும் என்று பராங்கு நாயகி பாடிய பாடல் ஆகும்.

**ஆடியாடி யகம் கரைந்து இசை**
**பாடிப் பாடிக் கண்ணீமல்கி, எங்கும்**
**நாடி நாடி நரசிக்கா வென்று**
**வாடி வாடுமிவ் வாணுதலே (நம்மாழ்வார் திருமொழி, 2-4-1)**

பராங்கு நாயகியானவள் நரசிம்ம பெருமானை காணவேண்டும் என்று மணம் உருகி தன்னுடைய கால்களினால் ஆடி ஆடி, அகம் கரைந்து, இசையைப் பாடி பாடி, கண்ணீரில் மூழ்கி, உலங்கெங்கும் நாடி நாடி, நரசிம்மனை காணாது அவளுடைய மனமானது வாடுகின்றது என்பதை நம்மாழ்வார் ஒரு பெண்ணாக பவித்து பாடுகின்றார்.

**திரு ந. சுப்புரெட்டியின் கடிகை வலம்**

ந. சுப்புரெட்டியார் கடிகை மலையினை தன்னுடைய கள ஆய்வு மூலம் கண்ட காட்சியினை நூலில் எடுத்துரைத்துள்ளார். கடிகை மலையின் வரலாற்றையும், மலையின் சிறப்புகளையும், நரசிம்மப் பெருமானின் புராண வரலாற்றையும் ஆழ்வார்கள் பாடிய திருப்பதிகம் பற்றியும் எடுத்துரைத்துள்ளார் ந. சுப்புரெட்டியார். அவர் சென்ற பாதையும் அங்கு கேட்ட செய்திகளையும் வரலாற்று ரீதியாக உள்ள நிகழ்வுகளையும் எடுத்துரைத்துள்ளார். அதில் சிலவற்றை காண உள்ளோம்.

நரசிம்ம பெருமானின் திரு தலத்திற்கு செல்லும் படிநிலையினை எடுத்துரைத்துள்ளார். நரசிம்ம பெருமானின் கோயிலுக்கு செல்லும் படியினை கட்டியவர் **ராயாஜி என்பவரால்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**மலைமேலுள்ள கோயிலுக்கு படிக்கட்டுகள் அமைக்கப்பெற்றன (தொண்டைநாடு திருப்பதிகம், ப. 87)** என்று பேராசிரியர் கூறுகின்றார். சோழசிம்மபுரத்தில் நடக்கும் திருவிழாக்களையும் கூறியுள்ளார். ஆழ்வார் பாடிய இறைவனின் திருநாமம் 'தக்கான்' என்பதற்கு 'அக்காரனி' என்று பொருள் அப்பேயர் கொண்டு பெயர்கள் கொண்டு பாடப்பட்ட திருப்பதிகம் இத்தலத்திர்க்கு உரியதாகும். நரசிம்ம பெருமானை நம்மாழ்வார் பாடிய பாசுரங்களை கொண்டு மங்களாசாசனம் செய்கின்றனர். சோளிங்கர் மலை மருத்துவ குணம் நிறைந்ததாக திரு. ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளார். அங்கு வரும் பெண்களுக்கு பேய் பிடித்திருந்தால் நரசிம்ம பெருமானின் குளத்தில் நீராடினால் அவர்களுக்கு பிடித்த பேயானது விலகிவிடும் என்று கூறப்பட்டுள்ளது. உடல் நிலை சரியில்லை என்றால் ஆஞ்சிநேயர் கோயிலில் இருந்து மருந்து சாப்பிட்டு உறங்கி சென்றால் உடல் குணமடைந்து விடும் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர்.

சோளிங்கர் என்னும் ஊரில் இரண்டு ஆச்சாரியர்கள் வாழ்ந்துள்ளனர் என்று ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளார். அதில் ஒருவர் வரதாச்சாரியார். அவர் எறும்பி என்ற ஊரில் பிறந்தவர். அவரை அப்பா என்று அங்குள்ள மக்கள் கூறுவார்கள். அதனால் அந்த ஊருக்கு எறும்பியப்பா என்று பெயர் மாற்றம் மடைந்ததை காணமுடிகின்றது. தொட்டையாச்சாரியார் என்பவர் பத்தாம் நூற்றாண்டில் பிறந்தவர். இவருடைய புதல்வன் தேவராச்சாரியார். தேவராச்சாரியாரின் குமரர் குமரபெரியபங்கார். இவர் பதினைந்தாம் நூற்றாண்டில் பிறந்தவர். ஐவர் 'வையம் கண்ட காஞ்சித் திருநாள்' என்று பெரும் புகழைப்பெற்றார். ஒவ்வொரு வைகாசித் திருநாளுக்குச் சென்று தரிசனம் செய்வது இவருக்கு வழக்கம். அந்த ஆண்டு பல சூழல் காரணமாக செல்ல முடியவில்லை. அதனால் திருநாளின் மூன்றவது நாள் அன்று கருடசேவை நடக்கும். ஆனால் தொட்டையாச்சாரியாரால் செல்ல இயலவில்லை. இவர் பெருமானை நினைத்து சோளிங்கர் மலையில் உள்ள் குலத்தில் நின்று கருடபெருமானை வணங்கியதாக கூறப்பட்டுள்ளது.

**சீர் அருளால் நம்மைத் திருத்தி, நாம் முன்அறியாக்**
**கூர் அறிவும் தந்து, அடிமை கொண்டதற்கே நேரே**
**ஒருகடிகை யும், மனமே! உள்ளுகிலாய் – முத்தி**
**தருகடிகை மாயவனைத் தான்**

**(கடிகை-நாழிகை, உள்ளுகிலாய்-நினைக்கின்றாய் இல்லை; முத்தி-மோட்சம்; கடிகை மாயவன்-யோக நரசிம்மன்)**

இவ்வாறு திரு ந. சுப்புரெட்டியார் திரு தலத்தினை முடித்துவிட்டு அய்யங்கார் பாடலுடன் பாடலை பாடி முடித்துள்ளார்.

**சைவம் சமயம்**

சைவம் என்பது சிவனை வணங்குவது என்று பொருள்படும். மேலும் சைவம் என்பது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காய்கறிகளைக் குறிக்கும். சைவ சித்தந்தாவாதிகள் என்பது ஆறுபத்து மூவார் நாயன்மார்களை குறிக்கும். இவர்கள் சைவ நெறிமுறைகளை பின்பற்றியுள்ளனர். இவர்களின் பணியானது எம்பெருமான் சிவனையே நாள்தோறும் வணங்கிப் பூஜைகள் செய்து கோயிலுக்கு திருப்பணிகளை செய்து முடிப்பார்கள். நாயன்மார்கள் ஊர் ஊராக சென்று அந்த ஊரில் உள்ள பெருமைகளை எடுத்துரைப்பர். திருத்தலத்தின் பணியினை நாயன்மார்கள் செய்து அங்குள்ள மக்களுடன் ஒன்று கூடி ஒன்றுமையுடன் அவர்களின் வீட்டு உறவினர் போல் இருந்து அந்த ஊரின் சிறப்பையும் சொல்லி கோயிலின் உள்ள திருப்பணிகளை செய்து கோயிலின் பெருமையை பாடல்கள் மூலமாக நாயன்மார்கள் எடுத்துரைத்துள்ளனர். நாயன்மார்கள் திருதலங்களுக்குச் சென்று திருப்பதிகம் பாடி கடவுளை தொழுது தினமும் பூஜைகள் செய்து கடவுள் மீது கொண்ட பக்தியால் திருப்பதிகம் பாடி தன்னுடைய உள்ளத்தில் இருக்கும் அன்பை பாடல்கள் மூலமாக வெளிப்படுத்தியுள்ளனர்.

**திருஊறால் திருப்பதிகம்**

திருமாலுக்கு மிகவும் பிடித்த ஊர் திருஊறாலால் ஆகும். பக்தர்களுக்கு காட்சி தரும் ஊரகவும் அமைந்திருக்கின்றன. இந்த ஊரில் சிறப்பாக பிரம்மா, விஷ்ணு கோயில்கள் இருந்ததாலும் மிக சிறப்பு மிக்க கோயிலாக அமைந்துள்ளது சிவபெருமான் கோயிலாகும். சிவபெருமான் தேவியுடன் காட்சியளித்த ஊரும் இதுவேயாகும். சிவனுடைய பல திருவிளையாடல்கள் இந்த திருவூறாலில் நடந்திருப்பதை பல திருப்பதிகம் மூலமாக அறிய முடிகின்றது.

சிவபெருமானுக்கு சிறந்த வாகனமாக நந்தி இருப்பதை எல்லா கோயில்களிலும் காணமுடிகின்றது. நந்தியின் பெருமையை இந்த திரு ஊறால் கோயிலில் வயிலாக தெரிய வருகின்றது.

> **தண்ணீர் வழியும் இடம் கண்டு நந்தியை நந்தி தீர்த்தததை எல்லாம் அமைத்தவன் கிருஷ்ணராஜ சாகரத்தில் காவிரித்தாயை வழிந்தோடும் கரகம் ஏந்திய கைகளாய் நிறுத்திய கலைஞருக்கே ஒரு வழிகாட்டி. இப்படி எப்போதும் நீர் ஊற்றிக்கொண்டே வழிந்து கொண்டே இருக்கும் தலத்தை அன்று திருஊறல் என்றே அழைத்திருக்கிறார்கள் மக்கள். (வேங்கடம் முதல் குமரி வரை, ப. 113)**

நந்தியின் பெருமையை இந்த பாடல் வரிகள் மூலமாக நமக்கு தெரிய வருகின்றது.

> **மாறி லவுணரரணம் மவைமாயவோர் வெங்கணையா லன்று**
> **நீறெழ வெய்தவெங்கள் நிமல னிடம்வினவில்**
> **தேற லிரும்பொழிலுந் திகழ்செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த**
> **ஊற லமர்ந்தபிரா னொலியார்கழ லுள்குதுமே. (திருஊறல் 106, பா. 1143)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தமக்கு நிகரில்லாத அசுரர்களின் கோட்டையை விலக்கிய கொடிய கணையால், அன்று நீர் ஒழுக செய்த நிலத்தினையுடைய பெருமான் எழுந்தருளிய இடம் எது என்று கூறினால் அந்த இடம் தான் ஊறால் என்று சொல்லப்படும் ஊராகும். இங்கே வயல்கள் நிறைந்து காணப்படுகின்றது. இயற்கை சூழல் நிறைந்த ஊராகும். இந்த ஊரானது சிவபெருமானுக்கு பிடித்த இடம் என்று கூட கூறலாம். பெருமானின் திருவிளையாடல்கள் நிறைந்த ஊராகும். தொண்டை மண்டலமே சிவனுக்கு உலகை அளந்த இடம் என்று கூறலாம். திருபெருமாளின் வைணவத்திருத்தலத்தில் மிகவும் சிறப்புப் பெற்ற தலமாக அமைகின்றது திருஊறால் என்னும் தலம் இதனுடைய தலம் உலகை அளந்த பெருமான் என்று கூறுவது உண்டு. **இக்கோவிலின் பிரகாரத்திலேயே, நீரகம், காரகம், கார்வானம் ஆகிய வேறு மூன்று சிறிய சந்நிதிகள் இருக்கின்றன. (108 திவ்ய தேசங்கள் வைணவத் தலங்கள், ப. 149)**இவ்வாறு நான்கு திவ்விய தேசங்களும் ஒரே இடத்தில் எழுந்தருளி இருப்பதை நம்மால் காணமுடிகின்றன. பெருமானின் பெருமையினை நான்கு திசைகளை காட்டும் விதமாக அமைந்துள்ளது. பெருமாளின் உருவசிலையானது சுமார் 35 அடியும், 24 அகலமும் கொண்டு நெடிந்து காணப்படுகின்றது. இந்த திருதலத்தில் முப்பெரும் தேவர்களும் காட்சியளித்தைக் காணலாம். பிரம்மனும், விஷ்ணுவும் சிவனுடைய திருமுடியை காணாது ஏமாற்றம் அடைத்தனர். பிரம்மனும், விஷ்ணுவும் சிவனை காண தவம் செய்தனர். அந்த சமயத்தில் பிரகஸ்பதியின் தம்பியான சம்வர்த்தனரும் இறைவனை காண தவம் புரிகின்றார். இந்த மூவருக்கும் காட்சி தருவதற்கு சிவன் பார்வதியுடன் திருஊறாலில் நின்று காட்சி தருகின்றார்.

**திருமாற்பேறு குறிப்பு**

திருமாற்பேறு சிவபெருமானின் சிறப்புகளில் ஒன்று. இந்த ஊரின் பெருமைகளை போற்றாதவர்கள் யாருமில்லை என்றே கூறலாம். மணிகண்டேஸ்வரர் கோயிலை பல்லவர் காலம், சோழர்கள் காலம் என்றே குறிப்பிடப்படுகின்றது. திருமாற்பேறுக்கு பெயர்காரணம், **திருமால் சிவபெருமானை வழிபட்டு அவ்வழிபாட்டின் பயனாக அப்பெருமானிடம் இருந்து நாற்பேறு பெற்றதால் இத்தலத்திற்கு திருமாற்பேறு எனப் பெயர் பெற்றது. (திருமால்புரம் ப-8)**

**திருமாற்பேறும் மும்மூர்த்திகளும்**

திருமாற்பேறு என்னும் ஊரில் உள்ள மணிகண்டேஸ்வரர் கோயிலின் சிறப்புகளை சான்றோர்கள் கூறியுள்ளனர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சேக்கிழார் ஆகிய மூவரும் திருமாலின் பெருமையினை போற்றியுள்ளனர். திருஞானசம்பந்தர் திருமாற்பேறு என்னும் ஊரை சிறப்பித்து புகழ்ந்து பாடியுள்ளார். இங்கு சிவபெருமானின் அவதாரத்தில் ஒன்று மணி கண்டேஸ்வரர். இதனை திருஞானசம்பந்தர் அவருடைய திருப்பதிகத்தில் சிவபெருமானின் ஊரில் உள்ளம் இடம் பற்றி பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் பல்லவர் காலத்தவர். **இந்த**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஊரின் பெருமையில், சேறு நிறைந்த வயல்கள் உள்ள ஊர், வளர் நகர் மாற்பேறு, மலையவர் வளவன் நகர் மாற்பேறுமறையவன் வளநகர் மாற்பேறு (திருமால்புரம், ப-9)** என்று திருஞானசம்பந்தர் பாடியுள்ளார்.

திருநாவுக்கரசர் திருமாறுபேறு உரைப்பற்றி பாடியுள்ளார். "திருமாற்பேறு முரசுகளின் ஓசையும், மறைவர்களின் வேத ஓசையும் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த ஊர், மாட வீடுகள் நிறைந்த ஊர்" என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார். "சென்றடைந்தேன் நானே" என்று ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் பாடியுள்ளார். சேக்கிழார் சம்பந்தர் வரலாற்றில் திருமாற்பேறு ஊரைப்பற்றி கூறியுள்ளார் என்றும் **திருப்பதிகப் பெரும்தனையில் அணிவித்தார் என்றும் அப்பரை குறிப்பிடும் போது அப்பர் பாடிய பதிகத்தை (திருமால்புரம், ப -10)** சேக்கிழார் திருமாற்பேறுவை நகரம் என்றும் பதி என்றும் பாடியுள்ளார். இவ்வாறு இம்மூன்று நாயன்மார்களும் திருமாற்பேறு ஊரினைப் பற்றியும், கோயில்களின் சிறப்புகளையும், புராண வரலாற்றையும் பாடல்கள் மூலமாக சிறப்பித்து பாடியுள்ளார்கள்.

சிவபெருமான் நஞ்சினை உண்ட கோலத்தினை பற்றி திருஞானசம்பந்தர் திருப்பதிம் பாடியுள்ளார். இந்த பதிகம் திருமால்பூர் என்னும் ஊரினை குறிக்கின்றது. சிவபெருமானின் பெருமைகளை மக்களுக்கு எடுத்துரைக்கும் வகையில் சிவபெருமானின் சிறப்புகளை எடுத்துரைத்துள்ளார். தொண்டை நாட்டில் இருக்கும் திருமாற்பேற்றூரில் தேவியுடன் திரு மணிகண்டேஸ்வரர் கோயிலில் வீற்றிருந்தார்.

**குருந்தவன் குருகவன் கூர்மையவன்**
**பெருந்தகை பெண்ணவன் ஆணுமவன்**
**கருந்தட மலர்க்கண்ணி காதல்செய்யும்**
**மருந்தவன் வளநகர் மாற்பேறே. (திருச்சிற்., ப. 1228)**

சிவபெருமான் இளந்தளிராக விளங்குபவனாகவும், வளமை மிக்கனவாகவும், தனக்கான இடத்தை விளக்குபவனாகவும், பெருந்தன்மை கொண்டவனாகவும், பெண்ணும், ஆணும் ஆகியவனாகவும், விரும்பி ஏற்றுக் கொள்ளும் அமுதாகவும் உள்ளவன். அவன் வளமை பொருந்திய நாடு திருமாற்பேறு. இவ்வாறு அவருடையப் பாடலில் குறிப்பட்டுள்ளது. இது போன்று பல அறிஞர்கள் சிவபெருமானை பல விதங்களில் பாடல்கள் மூலமாக பாடியுள்ளனர்.

**முடிவுரை**

பேராசிரியர் பயண நூலாக அமைத்திருக்கும் தொண்டை நாட்டு திருப்பதிகள் என்ற நூல் சமயசார்பற்றதாகவும், பேராசிரியரை சமய சார்பற்றவராகவும் பறைசாற்றுவதோடு ஒவ்வொரு ஆலயத்தின் சிறப்புகளையும் வெளிக்கொணர்வதாக உள்ளன. சைவம், வைணவம் இரண்டுமே சமநிலையில் இருப்பதை சங்க நூல்கள் முதற்கொண்டு இக்கால நூல்கள் வரை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காணமுடிகின்றன. திரு ந. சுப்புரெட்டியார் வரலாற்று ஆய்வு மூலமாக இமையம் முதல் தென்குமரிவரை செய்த ஆய்வினை பல நூல்களின் வாயிலாக சைவம் மற்றும் வைணவ சமயத்தை விளக்குகிறார். நரசிம்ம பெருமானை தரிசனம் செய்த விதத்தினையும், பேருந்தில் சென்ற அனுபவத்தையும், மக்களை சந்தித்து உறையாடிய விதத்தினையும் அழகுற எடுத்துரைத்துள்ளார்.

சுப்புரெட்டியார் அப்பரை திருநாவுக்கரசாருடன் ஒப்பிட்டு பேசியுள்ளார். ஆழ்வார்களின் சிறப்புகளையும், நாயன்மார்களின் புகழையும் இந்த கட்டுரையானது எடுத்துரைக்கின்றன. சைவம் மற்றும் வைணவம் தமிழர்களின் மனதில் வேறுன்றி இருப்பதை காணமுடிகிறது. மனிதனின் வாழ்கையில் கடவுள் என்று ஒன்று இல்லை என்றால் மனிதனின் அறநெறி வாழ்க்கையானது குலைந்துபோகும். திருப்பதிகம் என்பது பாடலின் பொருள் மூலம் ஆழ்வார்களும், நாயன்மார்களும் அறநெறியோடு வாழ்வதையும், பக்தி நெறியோடு வாழ்வதையும் எடுத்துரைத்துள்ளனார். ஒவ்வொரு ஆலயத்தின் தனிச்சிறப்பு, வளம் போன்றவற்றை இவ்வாய்வின் மூலம் அறியலாம். ஆழ்வார்கள், நாயன்மார்கள் கண் கொண்டு பேராசிரியர் இறைவனை கண்ட விதத்தை காணமுடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] இரா. அழகுமலை. *செந்தமிழ் திங்கள் இதழ்.* மதுரைத் தமிழ் சங்கம், மதுரை, 2014.

[2] ப. பூபாலன், முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர். *திருமால்புரம்.* தமிழ் நாடு அரசு, தொல்லியல் துறை, 2010.

[3] இரா. இளைய பெருமாள். *108 திவ்ய தேசங்கள், வைணவத் தலங்கள்,* சகுந்தலை நிலையம், 2017.

[4] உரை இளம்பூரணனார். *தொல்காப்பியம், எழுத்து - சொல் - பொருள்.* சாரதா பதிப்பகம், சென்னை – 14, ஐந்தாம் பதிப்பு, 2017.

[5] கவிஞர். முத்து இராமமூர்த்தி. *தொண்டைமண்டல சதகம்.* சாரதா பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு - 2013.

[6] ந. சுப்புரெட்டியார். *வைணவமும் தமிழும்.* நாம் தமிழர் பதிப்பகம், 2018.

[7] ந. சுப்புரெட்டியார். *தொண்டைநாட்டு திருப்பதிகம்.* கௌரா பதிப்பகம், 2021.

[8] ம.பெ. சீனிவாசன். *திவ்விய பிரபந்தம்.* பாசுரத் தொகுப்பு, அன்னம், சிவகங்கை, 2010.

[9] முனைவர் ஜோ. அருணாதேவி. *வைணவ பக்திநெறி.* நலங்கிள்ளி பதிப்பகம், தஞ்சாவூர் – 613001, முதற்பதிப்பு-2009.

[10] முனைவர் க. முருகேசன். *திருமுறை அகப்பொருள் மரபுகளும்.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை 600 113, வெளியீட்டு – 2012.

[11] முனைவர் ஏ. பரந்தாமன். *பன்னிரு திருமுறை பெருமைகள் இறையனார்.* தொகுப்பு – 1,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

2019.

[12] மு. பாஸ்கரன். *வேங்கடம் முதல் குமரி வரை*. சந்தியா பதிப்பகம், 2019.

[13] முனைவர் அ. ஜம்புலிங்கம். *அண்ணாமலைப் பல்கலைக்கழகம்*, இந்துமதி பதிப்பகம், முதற் பதிப்பு, 2018.

**References**

[1] Azhagukumalai E.R, *Senthamil Thingal Magazine*. Published by Madurai Tamil Sangam, 2014.
[2] P. Boopalan. Dr. T. Shri. Sridhar, *Thirumalpuram.* Tamil Nadu Government, Archeology, 2010.
[3] Ira. Ilaya Perumal. *108 Divya Desangal, Vaishnava Thilams*. Sakundala Station Edition: 2017.
[4] Yumabpurananar, *Tolkappiyam Ezhuthu – Sol - Porul.* Sarada Publishing House, Chennai – 14, 5th Edition – 2017.
[5] Muthu Ramamurthi. *Thondai Mandalam.* Sharda Publishing, First Edition, 2013.
[6] Subbu Reddiar. N. *Vaishnavamum Tamilum*. Nam Tamilar Publishing House, 2018.
[7] Subbu Reddiar. N. *Thondainattu Tirupatigam*. Gaura Publishing House, 2021.
[8] Seenivasan. M. P, *Thivaya Pirabantham*. Pasura Thogupu, Annam, Sivagangai, 2010.
[9] Dr. J. Arunadevi. *Vainava Bhakthineri*. First Edition, August 2009.
[10] Dr. Murugesan, *Thirumurai Agaporul Marabugal*. Ulaga Thamizh Araichi Nirumaikal, Chennai – 600 113, 2012.
[11] Dr. A. Paranthaman. *Paniru Thirumurai Perumaikal Iraiyanar*. Ajanta graphics, 1 Edition, 2005.
[12] M. Bhaskaran. *Venkadam Mudal Kumari Varai. Sandhiya* Pathippagam, 2019.
[13] Dr. A. Jambulingam. *Annamalai University*, Indumathi Publishing, 1 Edition, 2018.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் வைணவ திருத்தலப் பயணங்கள்
# Professor's Darshan of Vaishnava Divya Desas

**சே. கோமதி,** முதுகலை தமிழ் இலக்கியம், தமிழ்த்துறை, திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம், ஆந்திரா.
**S. Gomathy,** M.A Tamil, Dravidian University, Kuppam, Andhra Pradesh.
**ORCiD:** https://orcid.org/0000-0002-7957-0967
**DOI: 10.5281/zenodo.7266017**

## Abstract

*Professor Subbu Reddiar has made a great contribution to Tamil Literature and Vaishnavism. He was the one who made the world aware of the greatness of Emperuman Narayanan who made the Mangalasasana by going to the holy shrines of many Vaishnava Divine Places in person. He is the one who has personally visited and served one hundred and two Divya Desams out of the 108 Vaishnava Divya Desams and is a true devotee of the lord. Professor was the one who lived by saying that his chief duty was to do charity for Lord Vishnu. It tells of the Vaishnava divine shrines he visited and the glories of the greatness he realized and of the difficulties he encountered on the way to them. The Grand Vision of Perumal was not easily available. He won many turbulent circumstances and served Perumal. Usually, man has a nature by assuming an action has to be done and many misfortunes continue while doing it. At those times, they will immediately give up that action. But Professor Subbu Reddiar is different from all that. He was the one who has done it in the best possible way without changing the policy of having no matter how many hardships come; by putting all his miseries towards Lord Vishnu in the name of Devotion. In his texts, Perumal's sannidhi and the glory of the Goddess Thayar with Perumal, the sanctum sanctorum where Perumal resides are expressed with great reverence. One can see that about the news of the way to the railway station and how far to go in the direction from the bus station in his autobiographical works. There is no doubt that it will be a travel guide. The purpose of this article is to examine the texts of Professor Subbu Reddiar as a travel guide to the Vaishnava Divya Desams.*

**Keywords:** Professor Subbu Reddiar, Darshan, Vaishnava Divya Desas.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் அவர்கள் தமிழ் இலக்கியத்திற்கும்,வைணவத்திற்கும் பெரும் பங்கு ஆற்றியுள்ளார். பல வைணவ திருத்தலங்களுக்கு நேரில் சென்று ஆழ்வார்கள் மங்கலாசாசனம் செய்த எம்பெருமான் நாராயணின் பெருமையினை உலக அறியச் செய்தவர். 108 வைணவ திவ்ய தேசங்களில் நூற்றிரண்டு திவ்ய தேசங்களுக்கு நேரில் சென்று சேவித்து பெருமான் பக்தியில் மெய் உருகி நின்றவர். பேராசிரியர் அவர்கள் எம்பெருமானுக்கு தொண்டு செய்வதே என் தலையாய கடன் என்று சொல்லி வாழ்ந்தவர். அவர் சென்று வழிபட்ட வைணவ திவ்ய தேசங்கள் குறித்தும் அவர் உணர்ந்த பெருமாளின் பெருமைகள் குறித்தும் பேராசிரியர் செல்லும் வழியில் அவர் சந்தித்த இடர்பாடுகள் குறித்தும் சொல்லப்பட்டுள்ளது. எளிதாக பெருமாளின் தரிசனம் கிடைக்கவில்லை. பல போராட்டங்கள் அதில் அனைத்திலும் வெற்றி*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*கண்டு பெருமாளைச் சேவித்தார். பொதுவாக மனிதனிடம் ஒரு இயல்பு உள்ளது. ஒரு செயலை செய்ய வேண்டும் என கருதி அதனை செய்யும் போது பல துன்பங்கள் தொடர்ந்து வந்தால் உடனடியாக அந்த செயலை கைவிட்டு விடுவார்கள். ஆனால் பேராசிரியரோ அனைத்தில் இருந்தும் வேறுப்பட்டவர். எத்தனை துன்பங்கள் வந்தாலும் கொண்ட கொள்கையின் மீது மாற்றம் கொள்ளாமல் அதனை சிறப்பான முறையில் செய்து முடித்தவர். ஒவ்வொரு நூல்களிலும் பெருமாள் எழுந்தருளியுள்ள சந்நிதி மற்றும் பெருமாளோடு உறைந்துள்ள திருமகளின் பெருமை, பெருமாள் வீற்றிருக்கும் கருவறை அதனின் தூய்மை பக்தர்கள் திருத்தலங்களுக்கு செல்ல வேண்டும் என விரும்பினால் பேராசிரியரின் பாண்டி நாட்டு திருப்பதிகள், சோழ நாட்டு திருப்பதிகள், வட நாட்டு திருப்பதிகள் நடு நாட்டு திருப்பதிகள், தொண்டை நாட்டு திருப்பதிகள், மலை நாட்டு திருப்பதிகள் போன்ற நூல்களை வாசித்தால் தங்கும் இடம் குறித்த செய்திகளும் இருப்பூர்த்தி நிலையம் குறித்தும் [இரயில் நிலையம்] பேருந்து நிலையத்தில் இருந்து எந்த திசையில் எவ்வளவு தூரம் செல்ல வேண்டும் என அனைத்து செய்திகளும் கிடைக்கும். ஒரு வழிகாட்டி நூலாக அமையும் என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. இன்றைய காலத்தில் அலைபேசியில் உள்ள வழிகாட்டி போன்று வைணவ திருத்தலங்களுக்கு செல்லும் வழிகாட்டி என்றால் பேராசிரியரின் நூல்கள் அதனை குறித்து ஆராய்வதே இக்கட்டுரையின் இந்நோக்கமாகும்.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், திவ்ய தேசங்கள், பயணங்கள்.

**முன்னுரை**

பேராசிரியர் அவர்கள் காரைக்குடியில் பிறந்து வளர்ந்து கல்விக்காகவும் வைணவத்திற்கும் பெரும் பங்காற்றியுள்ளது அனைவரும் அறிந்ததே. திருவேங்கடத்தில் தமிழ்த் துறையை நிறுவ பல்வேறு இன்னல்களை எதிர்கொண்டு அதிலும் வெற்றிக் கண்டார். எம்பெருமானுக்கு கைங்கரியம் ஆற்றுவதை தலையாயக் கடனாக கொண்டு செய்து வந்தவர். அப்படிப்பட்ட பேராசிரியர் அவர்கள் 108 திவ்யதேசங்களில் 102 திவ்ய தேசங்களுக்கு சென்று ஸ்ரீமன் நாராயணனை சேவித்ததை அறிய முடிகின்றது. அதில் பேராசிரியர் அவர்கள் பயணித்த மலை நாட்டுத் திருத்தல பயணம், நடுநாட்டுத் திருத்தல பயணம், தொண்டை நாட்டுத் திருத்தல பயணம் குறித்த செய்திகளை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**மலைநாட்டுத் திருத்தலப் பயணம்**

1969ஆம் ஆண்டு ஜூன் மாதம் பாண்டிநாட்டு திருத்தல வழிபாட்டை முடித்துக்கொண்ட பின் மலைநாட்டு திருத்தல பயணம் துவங்குகிறது. நாகர்கோயிலை நோக்கி பயணம் அடைந்ததை அங்குள்ள திருவண்பரிசாரம் என்ற திருத்தலத்திற்குச் சென்று அங்கு

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வீற்றிருக்கும் திருவாழ்மார்பனைச் சேவித்தனர். திருவாழ்மார்பன் என்ற பெயரினை வடமொழியில் சீனிவாசன் என்று வழங்குகின்றனர். மேலும் அந்த ஊரினை திருப்பதிசாரம் என்று மக்கள் வழங்கி வருகின்றனர். திருப்பதி சென்றால் கிட்டும் பலன்கள் யாவும் திருப்பதிசாரம் சென்று வந்தால் கிடைக்கும் என்பது முன்னோர்களின் கருத்து நம்மாழ்வாரின் தாயார் உடைய மங்கையர் பிறந்த திவ்ய தேசமாகும்.

**கடல் சூழ் கன்னியாகுமரி பயணம்**

கன்னியாகுமரி சென்று அங்குள்ள இயற்கை அழகை ரசித்து முடித்து பௌவுர்ணமி நாள் என்பதால் கதிரவன் மறைவையும் முழுமதி வருகையும் பார்த்துவிட்டு சுசீந்திரம் நோக்கி சென்று தானுமாலையினை சேவித்துவிட்டு நாகர்கோவில் வந்தடைகிறார்கள். பின்பு, மறுநாள் காலையில் குளித்து முடித்து சிற்றுண்டி உண்டு திருவனந்தபுரம் பயணம் தொடங்கியது. திருவனந்தபுரத்தில் இருந்து 16 கிலோமீட்டர் தொலைவிலுள்ள திருவட்டாறு என்ற திவ்ய தேசத்திற்கு சென்றார். அந்த ஊரினை பற்றி நம்மாழ்வார் திகழ்கின்ற என துவங்கும் பாசுரம் வழி அறியமுடிகிறது. சாதாரண வாழ்க்கையில் ஒரு மனிதனை மதிப்பதற்கு திரு என்ற அடைமொழியை சேர்ப்பது வழக்கம் அதுபோல அலர்மேல் மங்கை உறை மார்பன் வாழும் இடம் என்பதால் திருவட்டாறு என்று பெயர் பெற்றதை அறியலாம்.

**திருக்கோவிலின் அமைப்பு**

திருவட்டாறு என்ற ஊரில் உள்ள திருத்தலத்தில் இருப்பவர் ஆதிகேசவபெருமாள் இவருடைய தாயாரின் பெயர் மரகதவள்ளி அம்மாள். இக்கோவிலில் எம்பெருமான் திருவனந்தபுரத்தில் காட்சி அளிப்பது போல மூன்று சன்னதிகளில் காட்சி அளிக்கின்றார். இந்த திருக்கோவிலின் கருவறை அர்த்த மண்டபம் இரண்டும் ஒரே கல்லால் ஆனவை. அர்த்தமண்டபத்தில் வண்ண பிரசாதங்கள் வழங்கப் பெறுவதில்லை. ஏனெனில் கருவறையின் தூய்மை கெட்டு விடும் என்பதால் இப்படி கோவிலை போற்றிப் பாதுகாத்தனர். அங்குள்ள இயற்கை சூழலை மொத்தமாக பேராசிரியர் கம்பன் பாடல் வழி உணர்ந்தார்.

**கேரள திருத்தலப் பயணம்**

கேரளா சென்று அங்குள்ள எம் பெருமானை தரிசிக்க பேராசிரியர் அவர்கள் தயாரானார். அங்கு அவர் தங்குவதற்கு சீமாட்டி கடை வைத்துள்ள ரெட்டி உதவிசெய்தார். ரெட்டியின் வீடானது 3 மாடியில் அமைந்துள்ள மிகப் பெரிய வீடு. முதல் மாடியிலிருந்து இரண்டாவது மாடிக்கு செல்ல கார் வசதி உண்டு. பேராசிரியர் அவர்களை நன்றாக கவனித்துக் கொண்டனர். அந்த ஊரில் மிதிவண்டியில் செல்வது என்பது மிகவும் கடினம். காரிலோ டாக்சிலோ தான் செல்ல வேண்டும். அதற்கான ஏற்பாட்டையும் ரெட்டி அவர்கள் செய்து கொடுத்து அங்கு வீற்றிருக்கும் பத்மநாபன், வித்துவக்கோட்டம்மா முதலிய திவ்ய மூர்த்திகளைத் தரிசித்து விட்டு மலை நாட்டுத் திருத்தல பயணத்தை முடித்தார். அவரின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அனுபவத்தை 13 கட்டுரைகளாக எழுதி பின்பு 1971 ஆம் ஆண்டு மலைநாட்டு திருப்பதிகள் என்ற நூலையும் பேராசிரியர் வெளியிட்டார். இது அவரின் 23 வது வெளியீடாக வந்தது குறிப்பிடத்தக்கது.

**நடுநாட்டு திருத்தலப் பயணம்**

பேராசிரியர்கள் திருப்பதியில் பணியாற்றிக் கொண்டிருக்கும்போது கோடை விடுமுறை போன்ற விடுமுறைகளில் சொந்த ஊரான காரைக்குடிக்குச் சென்று வருவது வழக்கம். அப்படி செல்லும்போது திருப்பாதிரிப்புலியூர் இருப்பூர்த்தி நிலையத்தில் இறங்கி கொண்டு அங்குள்ள திருவயிந்திரபுரம் மற்றும் முதலாழ்வார்கள் ஒன்றிணைந்த திருக்கோவிலூர் என்ற இரண்டு இடங்களுக்கும் பயணம் செய்ய திட்டமிட்டார். இதுதான் நடுநாட்டுதிருத்தல பயணம் ஆகும்.

**திருவயிந்திரபுரம் தரிசனம்**

திருப்பாதிரிப்புலியூர் பேருந்து நிலையத்தில் இருந்து மேற்கு திசையில் மூன்று கிலோமீட்டர் தூரத்தில் திருவயிந்திரபுரம் என்ற ஊர் உள்ளது. 108 திவ்ய தேசங்களில் 41 வது திவ்ய தேசமாகும். அந்த ஊருக்கு பேராசிரியர் அவர்கள் சென்று அங்குள்ள பாகவத கூட்டத்தைப் பார்த்து மெய்சிலிர்த்துப் போனார். பாகவத கூட்டத்தினர் எம் பெருமானின் பெருமைகளை மக்கள் மத்தியில் பாடி மகிழ்வர். இது அவர்களுக்கு பேரின்பம் அடைந்தது குறிப்பிடத்தக்கது.

**வங்கமார் கடல்கள் ஏழும் மலையும்வா னகமும் மற்றும்**
**அங்கண்மா ஞாலம் எல்லாம் அமுதுசெய்து உமிழ்ந்த எந்தை**
**திங்கள்மா முகில் அணவு செறிபொழில் தென்திருப்பேர்**
**எங்கள்மால் இறைவன் நாமம் ஏத்தி நான் உயந்தவாற (பெரிய திருமொழி ஐந்தாம்பத்து, 5 - 9 கையிலங்கு, பா.1429)**

என்ற பாடல் மூலம் பாகவதர்கள் பாடியுள்ளது போல பொருந்தி நிற்பது குறிப்பிடத்தக்கது. அந்த ஊரில் வீற்றிருக்கும் பெருமாளின் பெயர் தெய்வநாயகன், வைகுண்ட வல்லி தாயார் ஆகும். அங்கு சென்று தெய்வத்தை சேவித்துவிட்டு பத்துப் பாசுரங்களைப்பாடி நெகிழ்ந்தார். மேலும் எம்பெருமான் வீற்றியுள்ள அந்தக் கோலத்தைப் பார்த்து கீழ்காணும் பாசுரம் வழி என அறியலாம்.

**பின்னும் மாதவிப் பந்தலில் பெடைவர் பிணியவிழ் கமலத்து**
**தென்ன என்று வண்டின்னிசை முதல் தரு திருவயிந்தி புரமே (பெரிய திருமொழி மூன்றாம் பத்து, 3 - 1 இருந்தண் பா. 1149)**

வண்டுகள் கூடித் தாமரை மலரின் மீது ஏறி தேனினை உண்டு நர்த்தனம் ஆடுகின்றன. ஆண் வண்டு பெண் வண்டின் ஊடல்களை எம்பெருமானின் ஊடலுடன் ஒப்புமை செய்து பார்க்கிறார். இந்த தளத்தின் மீது தேசிகன் வடமொழியில் தேவநாயக பஞ்சாத், அச்சுயுத சதகம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற இரண்டு நூல்களையும் தமிழில் மும்மணிக்கோவை, பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல் நவமணிமாலை ஆகிய 7 சிற்றிலக்கியங்களின் அதில் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

**முதலாழ்வார்கள் மூவரும் ஒன்றிணைந்த இடைக்கழி**

108 திவ்ய தேசங்களில் ஒன்றான திருக்கோவிலூர் இருந்த மிருகண்ட முனிவரின் ஆசிரமத்திற்கு மழைக் கால வேளையில் பொய்கை ஆழ்வார் வந்தார். அவர் அங்குள்ள இடைக்கழியில் படுத்து இருந்தார். அந்த சமயம் அங்கு பூதத்தாழ்வார் வந்து இரவு தங்குவதற்கு இடம் கேட்டார். பொய்கை ஆழ்வார் அவரை உள்ளே அழைத்தார். அந்த இடத்தில் ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாம் என்ற அளவு இடமிருந்தது. அப்போது இருவரும் உள்ளே அமர்ந்திருந்தனர். சிறிது நேரத்தில் அங்கு பேயாழ்வார் வந்தார் அவரை உள்ள அழைத்தனர். அதனால் மூவரும் நின்றுக் கொண்டு பெருமாளின் பெருமையைப் பற்றி பேசிக்கொண்டிருந்தபோது, திடீரென்று இட நெருக்கடி ஏற்பட்டது. முண்டியடித்துக்கொண்டு நாலாவதாக ஒருவர் இருப்பதை அறிந்து கொண்டனர். திருமார்பில் கொண்ட திருமாலை அவர்கள் தங்கள் ஞானக் கண்ணால் கண்டனர். திருமகளைத் தன் மார்பில் கொண்ட திருமால் அவர்கள் மூவருக்கும் தன்னுடைய தெய்வ காட்சியை காட்டி அருள் புரிந்தார். அளவற்ற இன்பம் கொண்ட அவர்களில் பொய்கை ஆழ்வார்,

**வையந்தகளியா வார்க்கடலே நெய்யாக**
**வெய்ய கதிரோன் விளக்காக்கச் செய்ய**
**சுடராழியாண்டிக்கே சூட்டினேன் சொன்மாலை**
**இடராழி நீக்கு கவே என்று. (முதல் திருவந்தாதி, முதல் பாசுரம் – 3183)**

என்று தொடங்கி நூறு பாடல்களை பாடினார். இதன்பிறகு பூதத்தாழ்வார்,

**அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக**
**இன்புருகி சிந்தை இடுதிரியா நன்புருகி**
**னசுடர் விளக்கு எற்றினேன் நாயரணர்கு**
**ஞான தமிழ் புரிந்த நான் (நான்காம் திருமொழி, ஞானச்சுடர் விளக்கு – 1)**

என்று தொடங்கி நூறு பாசுரங்கள் இயற்றி அருளினார். பின்பு பேயாழ்வார் 100 பாசுரங்களை அருள்செய்தார். இப்படித்தான் நாலாயிர திவ்ய பிரபந்த நூல் உருவாக ஆரம்பித்தது. இந்த நிகழ்ச்சியில் நடந்ததற்கான வரலாற்று ஆதாரமாக இவர்கள் மூவரும் ஓர் இடம் இணைந்ததையும் பகவான் மூலமாக அவர்களுக்கு நிகழ்ந்த அனுபவத்தையும் பொய்கை ஆழ்வார்

**நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்**
**பாயும் பனிமரைய்ந்த பண்பாளா வாசல்**
**கடைகழியா உள்புகாக் காமர் பூங்கோவல்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**இடைகழியே பற்றி இனி. (முதல் திருவந்தாதி திருமொழி, 9: 2167)**

மேற்கண்ட பாடலில் ஆதாரம் காட்டுகின்றார். அத்தகைய சிறப்பு பெற்ற திருக்கோவிலூர்க்கு பேராசிரியர் சுப்பு ரெட்டியார் அவர்கள் 1966ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பயணம் மேற்கொண்டது குறிப்பிடத்தக்கது.

**திருக்கோவலூர் பயணம்**

1966 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் ஆழ்வார்கள் ஒன்றிணைந்த திருக்கோவிலூர் அடைந்ததை அறிய முடிகின்றது. ராமேஸ்வரம் வண்டியை பிடித்து திருக்கோவிலூரை அடைகின்றார் பேராசிரியர். இரயில் நிலையத்திற்கு அருகிலுள்ள அரகண்டநல்லூர் என்ற ஆற்றை கடந்து அதில் நீராடி பயணத்தை துவங்குகின்றார். திருக்கோவிலூர் என்பது ஒரு சிற்றூர். அதில் மேலோர் கீழோர் என்ற இரண்டு பகுதிகள் உள்ளன. இந்த இரண்டு ஊர்களும் ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. ஆற்றை ஒட்டி அமைந்த கீழுர் மேலும் இந்த ஊரில் வீராட்டானேசுவரம் என்ற பெயரில் சிவ தலம் உள்ளது. அதனைத் தொடர்ந்து மேலூரில் தான் திருமால் சந்நிதி உள்ளது. இந்த திருக்கோவிலில் தான் திருவிக்ரமன் குடிக்கொண்டுள்ளார். முதலாழ்வார்கள் மூவரையும் ஒன்றிணைத்த செய்த எம்பெருமான் திருமங்கை ஆழ்வாரும் இத்தலத்து பெருமாளை மங்களாசாசனம் செய்துள்ளனர். இந்த அழகு வாய்ந்த மேழூரானது இயற்கை எழில் சூழப்பட்டு தோப்புகளும் சோலைகளும் சூழ்ந்த அழகான பகுதி இதனை "கரும்பு சுரபுன்னை சோலை குளம் திருக்கோவலூர்" என்ற பாசுரம் மூலம் அறியலாம். அங்குள்ள வண்டுகள் எழுப்பும் ஓசையானது ஆழ்வார் பாசுரங்களை ஒலிப்பது போன்றே இருப்பதாக அனுபவிக்கிறார் பேராசிரியர். மேலும் பேராசிரியரை கவிதை அனுபவத்துடன் பக்தி அனுபவமும் கலந்து பேரின்பக் கடலில் தத்தளிக்க வைத்துள்ளது என்றால் மிகையாகாது.

**ஓங்கி உலகளந்த பெருமானை காணுதல்**

பேராசிரியர் திருக்கோவிலில் உள்ள இயற்கை சிறப்புகள் அனைத்தையும் கண்ணார பார்த்து விட்டு எல்லாம் இல்ல பெருமானை தரிசிக்க கருவறை நோக்கி பார்த்து மனம் முழுவதும் பக்தி வெள்ளத்துடன் நடந்தார் கருவறையில் ''வியந்தவர் வெருக்கொள விசும்பின் ஓங்கி'' உலகளந்த திரு விக்கிரமனை கண்டார் கிழக்கு நோக்கிய திருமுகம் கொண்டு சேவை சாதிக்கும் இப்பெருமான் பெயரளவில் வடிவிலும் விண்ணுற நிமிர்ந்து நிற்கும் திருவிக்கிரமன் ஆகவே காட்சி தருகின்றான். காஞ்சியில் உலகளந்த பெருமாள் கோவில் சுவரின் மீது செதுக்கி உள்ள சிற்பம் இந்த பெருமான் தனியே நிற்கும் வடிவமே ஆகும். இவர் மரத்தால் ஆனவர். முகத்தில் நல்ல கலை, எம்பெருமானின் ஒரு திருவடி மகாபலி சக்கரவர்த்தியின் தலை மீது வைத்த நிலையிலும் மற்றொரு திருவடி விண்ணை அளப்பதாக தூக்கிய நிலையிலும் காணப்படுகின்றன இரண்டடி நிலம் போக எஞ்சின ஓர் அடி நிலம் எங்கே என்று மாவலியை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வினவுவது போல வலக்கையின் ஒரு விரல் நீட்டிய நிலையில் காணப்படுகின்றது. இந்த கோலத்தில் எம்பெருமானே காணுகின்ற நிலையில்

**ஒண்மதியில் புனலுருவி ஒருகால் நிற்ப**
**ஒருகாலும் காமருசீர் அருணன் உள்ளத்து**
**எண்மதியும் கடந்து அண்ட மீது போகி**
**இருவிசும்பின் ஊடுபோய் எழுந்து மேலைத்**
**தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித்**
**தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு**
**மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை**
**மலர்புரையும் திருவடியே வணங்கினேன் (திருமங்கையாழ்வார், நூல் முகம்)**

என்ற திருமங்கை ஆழ்வார் பாசுரத்தை மனதார பாடி பேராசை என்பது குறிப்பிடத்தக்கது.

**புஷ்பவல்லி தாயார் தரிசனம்**

பேராசிரியர் பெருமாளை தரிசனம் செய்து முடித்துவிட்டு இரண்டாவது சுற்றில் உள்ள தாயார் சன்னதிக்கு சென்று அவரையும் சேவித்தார் ஆழ்வார்கள் வாழ்ந்த காலத்திற்கு முன்பாகவே திருக்கோவிலூர் புகழ்பெற்றிருந்தது மேலும் சங்கப்புலவர் ஆதரித்து வந்த கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய மலையமான் திருமுடிக்காரி இவ்வூரை சேர்ந்தவன் என்பது குறிப்பிடத்தக்கது. மலையமான் திருமுடிக்காரி திருக்கோவிலை தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தான். மேலும் இந்த ஊரில் உள்ள சிறப்புகளாவது ஔவையார் இவ்வூரில் தனக்கு ஆதரவளித்த ஆயர்குல நங்கையர் இருவருக்கு மூவரை வரவழைத்து சிறப்பாக திருமணம் நடத்தி வைப்பதாக ஒரு வரலாறு உண்டு.

**பொன்மாரி பெய்யும் ஊர்**
**பூம்பருத்தி அடையாம்**
**அந்நாள் வயலாகி**
**ஆகும் ஊர்-எந்நாளும்**
**தேங்குபுக ழேபடைத்த**
**சேதிமா நாடதனில்**
**ஓங்கு திருக்கோவிலூர் (ஔவையார் தனிப்பாடல்கள், பக்52)**

என அவ்வையார் பாடியதாக ஒரு தனி பாடலும் உண்டு என்று பேராசிரியர் புகழாரம் செய்துள்ளார்.

**திருப்பத்திகளின் பெருமையும் பேராசிரியரின் பயணமும்**

பேராசிரியர் வழிபட்ட திருப்பதிகளின் பெருமையினை சொல்ல வார்தைகள் இல்லை. பெருமாள் பெருமையினை உலகம் முழுவதும் பரைசாற்றி பாசுரங்கள் வழி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

புலமைப்படுத்திவிட்டு சென்று உள்ளது வைணவத்திற்கு கிடைத்த சொத்தாகும். அத்தகைய திருப்பதிகளின் மேன்மையினை காண்போம். இன்று வைணவர்கள் எம்பெருமானார் அர்சை வடிவாக எழுந்தருளியிருக்கும் திவ்ய தேசங்களை - 108 என்று கணக்கிட்டு உரைப்பார், இத்திருப்பதிகள் பற்றி விளக்க எழுந்த 9 நூல்களில் திவ்யகவி பிள்ளை பெருமாள் இயற்றிய 108 திருப்பதி அந்தாதி தான் என்றாலும் பெருவழக்காக மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. இந்த 108 திருப்பதிகள் எம்பெருமானும் திருப்புளி ஆழ்வார் இன் கீழ் எழுந்தருளியிருந்த நம்மாழ்வாருக்கு சேவை சாதித்ததாக வரலாறு சடகோபர் மங்களாசாசனம் செய்த திருப்பதிகள் 36 என்று தெரிவிக்கின்றது. இவற்றுள் தங்களால் கூற பெற்றவை சிலர். சில திருப்பதிகள் பாசுரங்களின் இடையிடையே எடுத்து கூறப்பட்டவை. ஆழ்வார் பாண்டிய நாட்டில் அவதரித்ததால் பாண்டியநாட்டு திருப்பதிகளையும் மலைநாட்டு திருப்பதிகளையுமே மிகுதியாக மங்களாசாசனம் செய்துள்ளார். சோழநாட்டு திருப்பதிகள் நாற்பதில் ஐந்தும் பாண்டிய நாட்டு மலை நாட்டு திருப்பதிகங்களில் 25 திருப்பதிகளும் இவர் பாசுரங்களில் இடம்பெற்றுள்ளன. ஏனையவை திருவேங்கடம் முதலிய வடநாட்டு திருப்பதிகள் மலைநாட்டு திருப்பதிகளில் சில இவரால் மட்டும் பாடப்பெற்றவை திருவேங்கடத்தின் மிகுதியாக பல இடங்களில் பாராட்டியுள்ளார். திருவிருத்தத்தை ஆழ்வாருடைய முதல் பிரபந்தமாக கருத்துவர் அறிஞர்கள். பார்கடலும் பரமபதமும் நீங்களாக நீங்களாக இந்த லீலா விபூதியில் உள்ள திருப்பதிகளில் திருவேங்கடத்தையே திருவிருத்ததில் எடுத்துக் காட்டியுள்ளார். சோழநாட்டு திருப்பதிகளில் முக்கியமான கோவில் என்றால் திருவரங்கம் ஆகும். அத்தகைய திவ்யதேசத்தை பற்றி நம்மாழ்வார் 12 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்துள்ளார்.

**ஈரிருப தாஞ்சோழம்;**
**ஈரொன்ப தாம்பாண்டி;**
**ஒர்பதின் மூன்றாமலைநா**
**டோரிரண்டாம்-சீர்நடுநாடு**
**ஆறோர(டு) ஈரெட்டு தொண்டை**
**யவ்வடநா டாறிரண்டு**
**கூறுதிரு நாடொன்றாக்**
**கொள். (ஆழ்வார்களின் ஆராஅமுது, பக். 335)**

இப்பாடல்திருவிருத்த திருப்பாசுரம். இதில் ஆழ்வார் நாயகனை பிரிந்த நாயகி வாடகைப் இருந்து இறங்கும் பாசத்தாலே தமது மன வருத்தத்தை வெளியிடுகின்றார் ஆற்றாமை மிகுதியால் தலைவனை எதிரே நிற்பது போல பாவித்து முன்னிலைப்படுத்தி கூறியது இது உருவழிபாட்டில் கண்டத்தை நோக்கி உரைத்ததும் இதில் ஆழ்வார் நாயகி கூறுவது சம்பந்தம் பெற்று தனது பிரிவு காலத்தில் காலத்தை நினைவூட்டும் மிகவும் வருத்தப்பட்ட செய்வதும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

அதற்காக நாம் எழுந்து நின்று கொண்டு அவனது கட்டளைக்கு உட்பட்டு பேசுகின்றான் என்ற உபநிடத வாக்கியத்தின் படி இயல்பாக உனக்கு அஞ்சு நடக்கும் தன்மையை தான காற்று உனது சம்பந்தம் பெற்ற நம்மை சமயம் பார்த்துக் கொள்ள தொடங்குவது தகுதியோ என்னை நாளைய காட்சிக்கு என்ன உரிமை உண்டு அங்கமாக படி என்னைக் காத்தருள வேண்டும் உன் பகல் அன்பு வைத்தவர்களின் போல வழங்கியவரும் முன்னால் ஆதரவு காட்டப்பட்ட வரும் இதுவரையில் எங்கும் எவரும் இல்லையே என்கின்றாள் எனது என்னை எவ்வளவு வேண்டுமானாலும் துன்பப்படுத்தும் அதற்கு நான் உடன்படுகிறேன் என்பது இதில் நோக்கி அனைத்தும் படுத்துவது ஒரு படியிலும் என்று வற்புறுத்தி கூறுவதில் நோக்கு உடைத்து ஒரு பிறகு மற்றொரு புறத்தில் வாடை பந்துவீசி 2 துன்பங்களுக்கு ஈடு கொடுக்க என்னால் ஆகவில்லையே இந்த துன்பங்களுக்கு வாய்ப்பினை எனக்கு புணர்ச்சி தந்தருளாய் என்கின்றான் குறிப்பிட்ட கருத்தை உள்ளத்தில் அமைத்துக்கொண்டு பாசத்தை மீண்டும் மீண்டும் படித்து சுவையை எட்டும் உயரத்தில் முதல் திவ்யதேசம் ஆகிய கோயிலை மங்களாசாசனம் செய்யப்பெற்றது சிறப்புக்குரியது இத்தகைய பெருமை மிக்க திருத்தலத்திற்கு பேராசிரியர் சென்று அதன் பெருமையை உலகறிய பறைசாற்றியது மேலும் குறிப்பிடத்தக்கது.

**பாண்டிநாட்டுத் திருப்பதிகள்**

பாண்டிநாட்டு திருப்பதிகள் 18. இவற்றுள் நம்மாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதிகள் 12. அவை:

1. **திருமாலிருஞ்சோலை**
2. **திருக்குருகூர்**
3. **திருக்கோளூர்**
4. **வைகுண்டம்**
5. **வரகுணமங்கை**
6. **திருக்குளந்தை**
7. **திருப்புளிங்குடி**
8. **தொலைவிலிமங்கலம்**
9. **சிரீவர மங்கை**

முதலியனவாகும். அதில் திருமோகூர் என்ற திருத்தலத்தை பற்றி காணலாம் .இத்திருத்தல பெயர் திருமாலின் மோகன அவதாரத்துடன் தொடர்புடையது. திருப்பாற்கடலை கடைந்து அமுதம் எடுப்பதற்கு தேவர்களும் அசுரர்களும் ஒன்று சேர்கின்றனர். அமுதம் வந்ததும் தேவர்கள் அசுரர்களுக்கு பங்கு கொடுக்க இசையவில்லை அசுரர்கள் சும்மா விடுவார்களா? அவர்கள் அமுத கலசத்தை தூங்கிக்கொண்டு ஓட தொடங்குகின்றனர். தேவர்கள் திருமாலிடம் முறையிட அவர் மோகினி வடிவத்துடன் அசுரர்கள் முன்னே காட்சி அளிக்கிறார், இரு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சாராருக்கும் அமுதத்த தாமே பங்கீடு தருவதாக கூறி கலசத்தை வாங்கிக் கொள்கின்றார் அமுதத்தை பங்கீடவும் முனைகின்றார்கள் தேவர்கள பக்கம் கலசமும் அகப்பையுமாக வருங்கால் அமுத்த்தை தாராளமாக வார்கின்றார். அசுரர் பக்கம் வருங்கால் தமது மோகன புண்ணகையாலும் ஆடலாலும் பாடலாலும் அவர்களை மயங்குகின்றார். அமுதம் வார்க்காமலேயே இறுதியாக அசுரர்களுக்கு ஒரு துளி கூட இல்லாமல் அமுதம் காலி ஆகி விடுகின்றது. இங்கணம் அசுரர்களை ஏமாந்த சோனகிரி களாக எடுக்கப்பெற்றதே மோகன் அவதாரம். இந்த அவதாரம் எழுந்தருளிய திருத்தலம் மோகனூர் அதுவே மோகூர் எனக் குறுகி திரு என்ற அடையுடன் சேர்ந்து திருமோகூர் என்றாயிற்று. இந்த திவ்ய தேசத்தை நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளார். நம்மாழ்வார் தானத்தாமரை என்ற திருவாய்மொழியால் மங்களாசாசனம் செய்துள்ளார் காள மேகத்தை யன்றிமற் றொன்றிலம் கதியே. என்பது முதல் பாசுரம். இத்தகைய பெருமைமிக்க திருத்தலத்திற்கு பேராசிரியர் சென்று வழிபட்டது இங்கு ஈண்டு குறிப்பிடத்தக்கது.

**மலைநாட்டு திருப்பதிகள்**

மலைநாட்டுத் திருப்பதிகளை 13 என வரையறுத்துள்ளார் திவ்யகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். அவை திருவன்பரிசரம், திருவனந்தபுரம், திருச்செங்குன்றூர், திருவல்லவாழ், திருப்புலியூர், திருமூழிக்களம், திருவட்டாறு, திருக்கடித்தானம், திருவண்வண்டூர், திருக்காட்கரை, திருவித்துவக்கோடு, திருநாவாய் இவற்றில் திருவித்துவக்கோடு என்ற திருப்பதியை தவிர 12 மங்களாசாசனம் செய்துள்ளார் நம்மாழ்வார். இவற்றை முறையை காண்போம். திருவண்பரிசாரம் இந்த திவ்ய தேசத்தை ஒரே ஒரு பாசுரத்தில் மங்களாசாசனம் செய்கின்றார் ஆழ்வார். வருவார் செல்வார் வண்பரி சாரத்து இருந்த என் திருவாழ் மார்வற்கு என்திறம் சொல்வார் செய்வதுஎன்? உருவார் சக்கரம் சங்குசுமந் இங்கு உம்மோடு ஒருபாடு உழல்வார் ஓர்அடி யானும் உளன் என்றே என்பது பாசுரம். எம்பெருமான் திருவண்பரிசாரத்தில் வந்து எழுந்தருளி இருக்கின்றார். திருநகரியில் திருப்புளி ஆழ்வார் அடியில் எழுந்தருளி இருக்கின்றார் நம்மாழ்வார் சக்கரத்தாழ்வாரையும் சங்காழ்வாரையும் எம்பெருமான் சுமந்து கொண்டிருப்பதை பார்க்கின்றார். எம்பெருமானுக்கு உபய விபூதியும் ஆளா இருந்தும் ஒரு சேவகனை தன்னிடம் வேலைக்கு வைத்துக் கொள்ள வில்லையே என்று குறிப்பிடுகின்றார். "ஆள் இருந்தால் திருவாழி திருச் சங்குகளை தாமே சுமப்பாரோ? மடாதிபதிகள் தம்முடைய திருத்தண்டத்தையும் ஒர் அடியார் இடம் கொடுத்து விட்டு தன் கையை வீசிக் கொண்டு போக நின்றார்களே. அவர்களுடைய திருமேனி அவ்வளவு மென்மையானதால் எம்பெருமானுடைய திருமேனியின் மென்மை வாயினால் வர்ணிக்க முடியுமா? திருவாழி திருச் அங்கு முதலான திவ்யா இடங்களை நாம் சுமக்கலாமோ? அவற்றை சுமக்க ஆள் வைத்துக்கொள்ள வேண்டாவோ? என்ற எண்ணம் அவர் மனதில் ஓடுகின்றது.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

திருநகரி திருத்தெருவிலே போவோரும் வருவோரும் ஆன வழிப்போக்கர்கள் உண்டு. அவர்கள் சம்சாரிகளாய் தங்கள் தங்கள் காரியங்களுக்காக போவதும் வருவதுமாக இருந்தாலும் ஆழ்வார் எண்ணம் வேறுவிதமாக உள்ளது. திருவண்பரிசாரம் சேவிக்க போகிறார்கள், சேவித்து மீள்கின்றார்கள் என்ற இவர் நினைக்கின்றார்.தம்மை அழைக்க வருகிறார்கள் என்று இவர் நினைத்தவாறு ஒருவரும் இவர் அருகில் வந்தார் இலர். இவர்கள்திருவெண்பரிசார எம்பெருமான் இடத்திலே நம்மைப் பற்றி சொல்ல வில்லை போலும் என்று அறுதியிட்டு திருவாழ்மார்பருக்கு என் திறம் சொல்வார் செய்வதென்? என்கின்றார். ஆழ்வார் அது விருப்பம் யாதெனில் உதவி ஆள் ஒருவரும் இல்லாதிருக்க இந்த சம்சார மண்டலத்திலே சங்கு சக்கரங்களை சுமந்துக்கொண்டு உம்முடைய ஒரு பக்கத்திலே கூடவே திரும்பியும்படியாக ஒருவன் திருநகரியிலே திருப்புளியடியிலே உளன் என்று சொல்ல வேண்டுமாம். ஒரு பாடுழல்வான் என்கின்றாரே ஒரு பக்கத்திற்கு ஆழ்வார் ஆனால் மற்றொரு பக்கத்திற்கு ஆர்? என்ற கேள்விக்கு பிறக்குமே என்பதற்கு நம் பிள்ளையின் அருளிசெயல் ஒரு பார்சவத்துக்கு இளையபெருமாள் உண்டிறே என்று ஓர் அடியான் என்றது பயன் கருதாத தாசன் என்றபடி. திருவட்டாறு இந்த திருப்பதியை நம்மாழ்வார் நமக்கு திகழ்கின்ற திருமார்பில் என்ற பாசுரம் வழி அறிமுகம் செய்து வைக்கின்றார். அலர்மேல் மங்கை உறை மார்பன் வாழுமிடம் திருவட்டாறு என்பது ஆழ்வாருடைய குறிப்பு திருவாட்டாற்றான் மீதுள்ள திருவாய்மொழி மிகமிக அற்புதமானது.பன்முறை படித்து படித்து மனம் கரைய வேண்டிய பதிகமாகும் இது. சீவான்மா வேட்டையில் சதா ஈடுபட்டுள்ள எம்பெருமான் திருவட்டார் ஹில் வந்து பாடி வீடு அமைத்துக் கொண்டு தங்குகின்றான்.ஆழ்வாரை திருநாட்டில் கொண்டுபோய் அனுபவிக்க வேண்டும் என்று பார்த்து நிற்கின்றான். மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாற்றான் வந்து நின்று விண்ணுலகம் தருவாய் விரைகின்றான் விதி வகையே என்ற ஆழ்வாருடைய பாசுரத்தாலையே இதனை அறியலாம். இதனை உளங்கொண்டு தான் ஈட்டின் ஆசிரியர் நம்பிள்ளை இப்பதிகத்தின் அவதாரிகை தொடங்கும்போதே பொய் நின்ற ஞாலம் தொடங்கி இவ்வலவும் வரை ஈஸ்வரனை ஆழ்வார் பின்தொடர்ந்த படி சொல்லிற்று; இது தொடங்கிய ஆழ்வாரை சர்வேஸ்வரன் பின்தொடர்கிறப் படிச் சொல்கின்றது என்று கூறியுள்ளார். அதாவது இதுகாரும் ஆழ்வார் எம்பெருமானிடம் குறை இரந்து நின்றார்; இனி முனியே நான்முகனே என்னும் திருவாய்மொழியாவும் எம்பெருமான் ஆழ்வாரிடம் குறை இரந்து நிற்கின்ற படியே பேச தொடங்குகின்றது என்பதாம். இது கருதியே திவ்ய தேசங்கள் தோறும் எழுந்தருளியுள்ள எம்பெருமான்களின் குணங்களை குறிப்பிடுங்கால் ஆசார்ய ஹ்ருதயம் திருவட்டாற்று எம் பெருமானிடம் அடியாருக்கு மோட்சத்தை கொடுக்கும் அளவில் அவர்கள் விதித்தபடி செய்வானாய் அவர்களுக்கு பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை எல்லை கடந்து வெள்ளமிடடோடும் என்று கூறுகின்றது. இந்த எம்பெருமானை சேவிக்கும் பொழுது

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

இத்திருவாய்மொழியில் ஆழங்கால் பட்ட நமக்கு நம்மாழ்வாரின் உணர்வு நம்மையும் பற்றுன்றது என பேராசிரியர் மனமுருகி குறிப்பிட்டுள்ளது சிந்திக்கத்தக்கது.

**வடநாட்டுத் திருப்பதிகள்**

வடநாட்டுத் திருப்பதிகள் 12 என்று வரையறுத்துள்ளார் பிள்ளை பெருமாள் ஐயங்கார் அவற்றுள் திருவேங்கடம் இன்று இது திருமலை என்று வழங்கப் பெறுகின்றது. இம்மலை வழிவழியாக ஏழுமலை (சப்தகிரி) என்றும் வழங்கப்படுகின்றது. இப்பொழுது பேருந்துகள் மலையிலிருந்து இறங்கும் வழியில் இம்மலையின் பெயர் பலகைகளை காணலாம். சில ஆண்டுகளுக்கு முன் இம்மலை சாலை ஏறும் வழியாகவும் அமைந்திருந்தது. இந்த வழியில் கீழ் இருந்து மேலே செல்லும் கால் முதலில் காண்பது எருதுமலை அடுத்து முறையே நீல மலை (நீலாத்திரி) மைவரை (அஞ்சனாத்திரி), பாம்பு மலை (சேஷாத்திரி), கருடமலை (கருடாத்ரி), நாராயணத்திரி, வேங்கட மலை (வேங்கடாத்ரி) என்ற மலைகளை காணலாம். அத்திரி - மலை; வரை- மலை; கிரி -மலை. கோயில் (திருவரங்கம்), திருமலை, பெருமாள் கோயில் (காஞ்சி) என்று வைணவப் பெருமக்களால் போற்றப்பெறும் மூன்று திவ்ய தேசங்களில் இது நடுநாயகமாக திகழ்கின்றது. திருவேங்கடத்தைப் பற்றி 213 பாசுரங்கள் நாலாயிரத்தில் காணப்படுகின்றன. இவை 10 ஆழ்வார்கள் பாடியவையாதலால் முத்தமிழ் கவி வீரராகவ முதலியார் பதின்மர் செந்தமிழ் என்று போற்றி புகழ்வர். நம்மாழ்வார் பாடியவை மட்டும் 62 பாசுரங்கள். தம்முடைய முதல் பிரபந்தம் ஆகிய திருவிருத்தத்தில் திருவேங்கடம் முதன்முதலாக மங்களாசாசனம் செய்யப் பட்டதால் திருமலை என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. கோவில்ப் பற்றி முன்னர் விளக்கப்பட்டது. இம்மூன்றுக்கும் நடுநாயகமாக உள்ள (கோயில், திருமலை, பெருமாள் கோயில்) திருமலை பற்றிய ஒரு பாடலைக் காண்போம்.

**இசைமின்கள் தூதென் றிசைந்தால்**
**இசையிலம் என்தலைமேல்**
**அசைமின்கள் என்றால் அசையும்கொலாம்**
**அப்பொன் மாமணிகள்**
**திசைமின் மிளிரும் திருவேங்**
**கடத்துவன் தாள்சிமயம்**
**மிசைமின் மிளிரிய போவான்**
**வழிக்கொண்ட மேகங்களே (திருவிருத்தம், திருவிருத்தம் திருமொழி - 4: 2508)**

என்பது தூது பாசுரம். இங்கு தூது செல்லாத மேகத்தை குறித்து தலைவி இரங்குகின்றாள் திருவேங்கட மலை மேல் சென்று சேரும் பொருட்டு பயணப்பட்ட மேகங்களை நோக்கி தலைமகள் என்னை பிரிந்து அங்கு சென்று வசிக்கின்ற என் தலை மகனுக்கு என் நிலைமையை சொல்லுமாறு நீங்கள் எனக்கு தூதராக வேண்டும் என்று வேண்ட, அதற்கு அவை உடன்பட


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காணாமையால் மீண்டும் அவற்றை நோக்கி, அவன் உள்ள விடத்து ஏறச் செல்லும் பேறு பெற்ற நீங்கள் அங்ஙகளம் செல்ல மாட்டாத என் தலைமேல் உங்கள் பாதத்தை வைத்தாவது செல்லுங்கள் என்று வேண்டுகின்றால் திருமலை தலைமேல் சென்று தங்குவதற்கு விரைகின்ற அவை இவள் தலைமேல் தங்கி நிற்பதற்கும் இசைதல் அரிதாக இருக்கும் தன்மையை குறித்து தலைவி இரங்குகின்றாள். இங்ஙனம் பலவாறு கூறி அலற்றுதற்கு பயன் யாதெனில் மூடி இருந்த வேவதோர் கொள்கலம் மூடி திறந்துவிடத்து ஆவி எழுந்து முன் நின்ற வெப்பம் நீங்கினார் போல, ஆற்றாமையால் உள்ளே மிக்குநின்ற தாபத்தை வாய்விட்டு வெளியிட அதை சிறிதளவு குறைதலேயாகும். இவ்விடத்தில் பெரியவாச்சான் பிள்ளை ஶ்ரீ சூக்த்திகள் சுவையுடன் அனுபவிக்க வேண்டியவை. "கீழ் நீலமுன்ட மின்னன்ன மேனி பெருமானுக்கு" என்று பரமபதத்தை தூது விட்டால்;அது பரப்பக்தி பரஞானம் பரமப்பக்தியுடையாருக்கு அல்லது புகவொண்ணாத தேசமாகையாலே அவதாரங்களிலே தூது விட பார்த்தால் அதுவும் சமகாலத்தில் உள்ளார்காய் பின்ன இல்லையாகையாலே பிற்ப்பாட்டாருக்கும் அனுபவிக்கலாம்.படி சுலபமான திருமலையிலே திருவேங்கடமுடையான் திருவடிகளே மேகத்தை தூதாக விடுகின்றாள், திருமலையை நோக்கி போகின்ற மேகங்களே, தூதுச் செய்தியை கொண்டு போய் சொல்லுங்கள் என்றால்.சொல்கிறீர்கள் இல்லை; திருமலைக்கு போகின்ற ஆர்வத்திலே பேசாமல் போகின்றவற்றைக் கண்டு நீங்கள் சொல்ல மாட்டீர்களாக்கில் உங்கள் திருவடிகளே என் தலைமேல வையுங்கள் என்றால் வைக்க மாட்டீர்களா ? அவருடைய திருவடிகளிலே கிடைக்குமா எங்கே போகவேண்டும் என்று அறிய எண்ணாது என்று அவனும் அழைத்துப் போனான் போகின்றான் என்று தொண்டை நாட்டுத் திருப்பதிகள் மீது ஆழ்வார் பாசுரங்கள் இல்லை ஆனாலும் ஒரே பாசுரம் உண்டு. தான் பெருமாள் கோயில் மீது இதுவும் ஆழ்வாரின் முதல் பிரபந்தம் பற்றியது என்பது கருதத்தக்கது.

**வடமதுரை**

ஒரு திருவாய்மொழி பாசுரத்தில் உத்தர மதுரைப் பிறந்த மாயனே என்கின்றார். கொண்ட பெண்டிர் என்ற ஒரு திருவாய்மொழி முழுதும் வடமதுரை பற்றிய மங்களாசாசனம் ஆக அமைகின்றது.நெடுமார் கடிமை என்ற திருவாய்மொழியில் பாகவதர்களின் பெருமையை வெளியிட்டார். இங்கு பகவானுடைய பெருமையை வெளியிடுகின்றார். பாகவதர்களே எல்லா உறவும் என்றது இத் திருவாய்மொழி. இவை ஒன்றோடு ஒன்று முரண்பட்டவை அன்று. பகவத் பக்தியின் எல்லை நிலமாக பாகவத பக்தியும், பாகவதத் பக்தியின் எல்லை நிலமாக பகவத் பக்தியும் கொள்ளத்தக்கது. ஒன்றில் வைக்கும் பக்தி பிறிதொன்றிலும் பெருகி வளரும். இத் திருவாய்மொழியில் பல பாசுரங்களில் வடமதுரையில் பிறந்த என்று வருவதால் இது வடமதுரையை மங்களாசாசனம் செய்கின்ற திருவாய்மொழியாக கொள்ளலாம். பேராசிரியர் அவர்கள் எம்பெருமான் மீது பக்தி கொண்டு இந்த உலகில் நடக்கும் அனைத்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நிகழ்வுகளுக்கும் எம்பெருமானே காரணமாக இருக்கின்றார் என்று மனதார உணர்ந்தார். அந்த வகையிலே அவர் வீற்றிருக்கும் திருத்தலங்களுக்கு செல்லவேண்டும் என்று அவர் மனதில் ஆசைகள் எழுந்தன. அதை நிறைவேற்றும் பொருட்டு மேற்கூறப்பட்ட பல வைணவ திருத்தலங்களுக்கு சென்று வழிபட்டது குறிப்பிடத்தக்கது. பொதுவாக ஒரு செய்தி உள்ளது என்னவென்றால் தினசரி நாம் திருக்கோவிலுக்கு சென்று வந்தால் அங்குள்ள கருவறையிலுள்ள நேர்மறை ஆற்றலானது நம் உடலுக்குள் நேர்மறை எண்ணங்களை விதைக்கும் இது ஒரு அறிவியல் உண்மையாகும். அத்தகைய அறிவியல் உண்மை ஒருபுறம் இருக்க, மறுபுறம் நம் மனதில் ஏற்படும் பல விடயங்களுக்கு விடையினை காண்பதற்கு சிலர் கோவிலுக்கு செல்வது வழக்கம். இவை அனைத்திற்கும் சேர்த்து எம்பெருமானை சேவிக்க வேண்டும். அவனை காண வேண்டும் என்ற ஒரு கருத்தை மனதில் பெரும் விருப்ப ஆசையாக கொண்டு பேராசிரியர் பயணித்துள்ளார். இவர் சென்ற வடமதுரை ஆக இருக்கட்டும் பாண்டிநாட்டு திருத்தலமாக இருக்கட்டும் மலைநாட்டு திருத்தலமாக இருக்கட்டும் அனைத்திலுமே திருக்கோவில் பெருமையினை பாசுரங்களோடு ஒப்பிட்டு கூறியது வியக்கத்தக்கது. அதாவது எந்த அளவிற்கு திருமாலின் பக்தியை கூறியிருக்கின்றாரோ அதே அளவிற்கு அவர்களுடைய பக்தர்களின் மேன்மையையும் எடுத்துக் கூறியது வியக்கத்தக்கது. சான்றாக, சொல்லவேண்டுமென்றால் வடமதுரை என்ற திருத்தலத்திற்கு பேராசிரியர் செல்லும் பொழுது ஒரு வயதான முதியவர் நடக்க முடியாமல் நின்று கொண்டிருந்தார் அப்போது அவரை உள்ளே அழைத்துச் செல்வதற்கு ஒருவரும் இல்லை ஆனால் அந்த பெரியவரின் மனதில் எப்படியாவது பெருமாளை தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் வேரூன்றி இருந்தது இதனை குறிப்பால் உணர்ந்த பேராசிரியர் அவருக்கு உதவி செய்து அவரை சன்னதியில் கொண்டு வந்து சேர்த்தார் எம்பெருமான் என்னை இப்பெரியவருக்கு தொண்டு செய்வதற்கே இங்கு அனுப்பியுள்ளார். எம்பெருமானின் வடிவம் இவர் என்று மனதில் நினைத்து மகிழ்ந்து கொண்டார். அதாவது எந்த ஒரு செயல் நடைபெற்றாலும் அது எம்பெருமான் எனக்கு வைக்கின்ற சோதனையாகவும் அல்லது தேர்வாகும் நினைத்து அதில் ஆழ்ங்கால்ப்படுவதை தன்னுடைய குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவர் பேராசிரியர் என்றால் மிகையாகாது.

**இதிகாச கதையொடு வாழ்வினை ஒப்பிடுதல்**

எம்பெருமனார் இத்திருவாய்மொழியினை அருளி செய்யும்போது அந்தக் காலச்சேபக் குழுவில் நூற்றுக்கணக்காக எழுந்தருளியிருந்த சீடர்களை நோக்கி 'ஆழ்வார் பாரித்த குறைதீர் திருவேங்கடமுடையான்" பரிசரித்திலேயிருந்து நித்ய கைங்கரியம் பண்ண விருப்பம் முடையார் யாரேனும் உண்டா? என்று வினவி அருள குளிர் அருவி வேங்கடமாகையால் எல்லாரும் குளிருக்கு அஞ்சி விடை கூறாதிருக்க அனந்தாழ்வான் எழுந்து அடியேனுக்கு நியமித்து அருள வேண்டும் என்று மிகுந்த பூரிப்புடன் அவர் சொன்னது அவர் உள்ளத்தில் தெரிந்தது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


அதுகேட்டு உகந்த எம்பெருமானார் நீ ஒருவரை ஆண்பிள்ளை என்று பேராப்பொலியக் கொண்டாடி தழுவி விடை கொடுத்தருளினார். அது முதலாக அனந்தாண்பிள்ளை என்று அவருக்கு புகழ் பரவலாயிற்று.இதை நினைத்து பேரசிரியர் அவர்கள் அனந்தாண்பிள்ளை பக்தி உணர்வை கண்டு மெய் சிலிர்த்தார்.

**முடிவுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆழ்வார்கள் மங்காளாசாசனம் செய்த நூற்றெட்டு திவ்யதேசங்களில் நூற்றிரண்டு திவ்யதேசங்களை நேரில் கண்டு எம்பெருமான்களை சேவித்ததை அறியமுடிகிறது. ஆழ்வார்களில் கடைக்குட்டியான திருமங்கை மன்னனான திருமங்கையாழ்வார் தனக்கு பலவித கஷ்டம் வந்த போதிலும் எம்பெருமானை மறக்காமல் அவனை நேரில் சென்று சேவித்தது போன்றே பேராசிரியர் அவர்கள் திருத்தல பயணத்தில் சோழ நாட்டு திருப்பதிகள், மலை நாட்டு திருப்பதிகள் மற்றும் பாண்டி நாட்டு திவ்யதேசங்களை பேராசிரியர் அவர்கள் குடும்பத்தோடு சென்று எம்பெருமான்களை சேவித்த்து அறியற்பாலதாகும். விரைவாக உள்ள இக்கால கட்டத்தில் பேராசிரியர் அவர்களின் திருத்தல பயண அனுபவத்தை நினைவில் கொண்டு நூலாக எழுதியமைத்த தம் தந்தையாரின் சாதனைகளை உலகிற்கு காட்டும் தமையரான பேராசிரியர் சு. இராமலிங்கம் அவர்களின் சேவையை அறியமுடிகிறது. இந்நூல் எம்பெருமானின் பக்தர்களுக்கு வழிக் காட்டியாய் அமைந்துள்ளது குறிப்பிடதக்கதாகும்.

**குறிப்பு நூல்கள்**


[1] முனைவர் ஜோ. அருணாதேவி. *வைணவ பக்திநெறி*. நலங்கிள்ளி பதிப்பகம், தஞ்சாவூர், 2009.

[2] இரா. இளைய பெருமாள். *108 திவ்ய தேசங்கள், வைணவத் தலங்கள்*. சகுந்தலை நிலையம், 2017.

[3] ஔவையார் - *தனிப்பாடல் திரட்டு*. சாரதா பதிப்பகம், சென்னை.

[4] பா.ர.கோவிந்தராச முதலியார். *ஆழ்வார்கள் வரலாறு*. கழக வெளியீடு, சென்னை, 1975.

[5] உ.வே. கோழியாலம் சடகோபாசாரியர். *திருவேங்கடவன் நூற்றெட்டு திருநாமங்கள்*. அயக்கிரிவா பதிப்பகம், சென்னை, 2017.

[6] ந.சுப்புரெட்டியார். *வைணவ உரைவளம்*. வேங்கடம் பதிப்பகம், சென்னை - 1985.

[7] ந. சுப்புரெட்டியார். *காஞ்சி பிரதிவாதி பயங்கர அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்*. அவ்வை பதிப்பகம், அசோக் நகர், சென்னை, 2004.

[8] ந. சுப்புரெட்டியார். *வைணவமும் தமிழும்*. நாம் தமிழர் பதிப்பகம், 2018.

[9] ந. சுப்புரெட்டியார். *தொண்டைநாட்டு திருப்பதிகம்*. கௌரா பதிப்பகம், 2021.

[10] மு. பாஸ்கரன். *வேங்கடம் முதல் குமரி வரை*. சந்தியா பதிப்பகம், 2019.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[11] பெரியவாச்சான்பிள்ளை. *பெரிய திருமொழி.* ஸ்ரீ ரங்க நாச்சியார் அச்சகம், ஸ்ரீரங்கம், 1992.

[12] மா.வரதராஜன். *வைணவ விளக்கு.* ஸ்ரீ அனந்த் பதிப்பகம், திருச்சானூர், திருப்பதி, 1994.

[13] வேங்கடகிருஷ்ணன், எம்.எ. *வைணவ ஆசாரியர்களின் வாழ்வும் வாக்கும்,* கீதாசாரியன் பதிப்பகம், சென்னை, 2003.

[14] முனைவர் ஜெகத்ரட்சகன். *நாலாயிர திவ்யப் பிரபந்தம்.* ஆழ்வார்கள் ஆய்வு மையம், சென்னை, 1993.

**References**

[1] Dr. J. Arunadevi. *Vainava Bhakthineri*. Nalankilli Pathipagam, Tanjavurm, 2009.
[2] Ira. Ilaya Perumal. *108 Divya Desangal, Vaishnava Thilams*. Sakunthalai Nilayam, 2017.
[3] Auvaiyar. *Thanipadal Thiratu*. Saratha Pathippagam, Chennai.
[4] Pa.Ra.Govindarasamudaliyaar. *Azvargal Varalaru*. Kalaga Veliyeedu, Chennai, 1975.
[5] U.Ve. Kozhiyaalam Sadagopachariyar. *Tiruvengadvan Nutriettu Tirunamangal.* Hayagriva Padippgam, Chennai, 2017.
[6] N. Subbu Reddiar. *Vainava Urai Valam*. Vengadam Padippagam, Chennai, 1985.
[7] N.Subbu Reddiar. *Kanchi Piradhivadi Payngara Annangaraaraccharya Swamigal*. Avvai Padhippagam, Ashok Nagar, Chennai, 2004.
[8] N. Subbu Reddiar. *Vaishnavamum Tamilum*. Nam Tamilar Publishing House, 2018.
[9] N. Subbu Reddiar. *Thondainattu Tirupatigam*. Gaura Publishing House, 2021.
[10] M. Bhaskaran. *Venkadam Mudal Kumari Varai. Sandhiya* Pathippagam, 2019.
[11] Periyavachanpillai. *Periya Thirumozhi*. Sri Ranga Nachiyar Press, Srirangam, 1992.
[12] M. Varadarajan. *Vainava Vilakku.* Sri Ananth Publication, Tiruchanur, Tirupati, 1994.
[13] Venkatakrishnan M. A. *Vainava Achayargal Vazvum Vakkum*, Geetha Charyan Padippagam. Tiruvellikeni, Chennai, 2003.
[14] Dr. Jagatrakshakan. *Nalayira Divya Prabandham*. Alvar Aaivu Maiyam, Chennai, 1993.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகளின் மொழி நடை

## The Language Style of the *Ninaivu Kumizhgal* Collection by Prof. Na. Subbu Reddiar

**முனைவர் பெ. கி. கோவிந்தராஜ்**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

மஜ்ஹருல் உலூம் கல்லூரி, திருப்பத்தூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. P. K. Govindaraj**, Assistant Professor of Tamil, Mazharul Uloom College, Thirupattur, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000- 0002-6951-9260**

**DOI: 10.5281/zenodo.7251966**

### Abstract

*Modern literature in the Tamil literary world occupies a significant place, during this period. Literature changed from its useful forms and led to the development of the dialectic language of ordinary conversation. The dialogue was also the basis for the emergence of literary genres such as Feminism, Marxism and other recent trends. Among these exceptions, Professor Subbu Reddiar's "Ninaivu Kumizhgal" collection is the one that has intellectual sharing about his school, college, the University, about interview experience. It also evinces his friendship with many prominent savants. His "Ninaivu Kumizhgal" collection is a sign that even ordinary people can create books. Professor Reddiar points out that "Ninaivu Kumizhgal" are a collection of book that all people can read about his biography. It is indeed an autobiography. The book deals with memories that blossom in professors' memories and it also portrays his writing style. Hence, this article studies the style he handled in his "Ninaivu Kumizhgal".*

**Keywords:** Language, Style, *Ninaivu Kumizhgal*, Prof. Na. Subbu Reddiar.

### ஆய்வுச் சுருக்கம்

*தமிழ் இலக்கிய உலகில் நவீன இலக்கியங்கள் குறிப்பிடத் தகுந்த இடத்தைப் பெற்றுள்ளன. இக்காலக்கட்டத்தில் தமிழ் இலக்கியம் தன் மரபான வடிவங்களிலிருந்து மாற்றம் பெற்று சாதராண (பேச்சு) உரையாடலில் வழக்கு மொழி நடை வளர்ச்சிக்கு வித்திட்டது எனலாம். பயணக் கட்டுரை, வாழ்க்கை வரலாறு, பெண்ணியம், மார்க்சீயம், அரவாணியம் போன்ற இலக்கிய வகைகள் தோன்றுவதற்கு உரையாடலே அடிப்படையாக அமைந்தது எனலாம். இவ்விலக்கிய வகைகளில் பேராசிரியரின் நினைவுக் குமிழிகள் என்பது தான் படித்த பள்ளி வேலைச்செய்து பள்ளி கல்லூரி, பல்கலைக்கழகம் நேர்முக தேர்வுச் சென்றது. பல முதன்மையான சான்றோர்களின் நட்பு அவருடைய புத்தகம் எழுதும் அனுபவம் இவற்றெல்லாம் உள்ளடக்கியது சாதராண மக்கள் கூட நூல்கள் படைக்கப்பெறலாம் என்று நினைவுக் குமிழிகள் அடையாளமாக அமைந்துள்ளது. பேராசிரியர் நினைவுக் குமிழிகள் எல்லாம் மக்கள் விரும்பி படிக்கக்கூடிய நூலாக ந. சுப்புரெட்டியார் அமைத்துள்ளார். தன் வரலாறு வகைகளில் ஒன்றான நினைவுன் குமிழிகள்*


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*என்னும் நூல் பேராசிரியரின் பழைய நினைவுகள் மலரும் நினைவுகள் அதில் கையாண்ட மொழி நடையைப் பற்றியும் ஆராய்வதாக இக்கட்டுரை அமையப்பெற்றுள்ளது.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், *நினைவுக்குமிழிகள்,* மொழி நடை.

**முன்னுரை**

தமிழ் இலக்கியம் வரலாற்றில் எழுத்துலக்கில் ஒரு தனி பாதை தேர்ந்தெடுத்து அனைவரும் மனதிலும் அழியா இடம் பிடிவத்தவர் குறிப்பிட்டவர்கள் ஒரு சிலர் அதில் ஒருவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள். இவருடைய எழுத்துக்கள் துள்ளுட்(மகிழ்ச்சி) சொற்களும் சிந்தனையும் அவருடைய பண்புக்கு பக்குவமும் மொழிக்கு முன்னேற்றத்தையும் அளிக்கும் ஆற்றல் இருந்தது. திருவேங்கடவ பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையின் மூத்த மகனின் கன்னித்தமிழ் கவனிக்க தக்கவை ஏராளாம். அவை ஒன்றுதான் அவர் கையாண்ட மொழி நடை, மொழி நடையானது வாசர்களுக்கு எளிய முறையில் சென்று சேருவதாக இருக்க வேண்டும். படைப்பாளனுக்கும் வாசிப்பாளனுக்கும் இடையே இணைப்புப்பாலமாக மொழி நடை திகழ வேண்டும். மனிதன் வாழும் வாழ்க்கை முறை, அவன் வாழ்கிற நிலத்தின் தட்ப வெப்ப மற்றும் சூழ்நிலைகளுக்கு ஏற்ற வகையில் மொழிநடையும் அமையும். மொழி மனிதன் வாழ்கின்ற சூழலுக்கு ஏற்பவும், செய்யும் தொழிலிக்கு ஏற்பவும் அமையும். ஒவ்வொரு சமூகத்தினரும் தனக்கென ஒரு மொழி நடையை உருவாக்கி வைத்துள்ளனர். மொழி என்பது அனுபவங்களின் வெளிப்பாடாகவே அமைகின்றன. அனுபவங்களின் வழி வெளிப்படும் மொழி நடையே சிறந்த மொழிநடையாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அவ்வகையில் அனுபவங்களின் மூலம் படைக்கப்பட்டது தான் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் *நினைவுக்குமிழிகள்* இதில் அவருடைய அனுபவத்தைதைப் பற்றியும் அவற்றின் மொழிநடையைப் பற்றியும் ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**நடை போக்கு**

இலக்கியத்தின் மொழி நடையானது அதனைப் படைத்த எழுத்தாளனை முழுமையாகக் காட்டும் பெற்றியது என்கிறார் பஃபோன் என்ற அறிஞர். இவரின் கூற்று முழுமையும் பேராசிரியாரின் படைப்புகளில் பொருந்திவரக் காணலாம். படைப்பாளனின் வாழ்விடங்களுக்கு ஏற்ற வாழ்க்கை முறை, மரபு, உணர்ச்சிகளைக் கொண்டு மொழி அமையும். தமிழ் இலக்கிய உலகில் பேராசிரியர் ஒரு புதிய பாதையை அமைத்தவர். இவரின் வெற்றிக்கு மொழிநடைச் சிறப்பு முக்கியமானதாகும். எனவே இவரின் படைப்புகளில் கையாண்டுள்ள மொழிநடையைச் சிறப்பாக குறிக்கத்தக்கனவாகும். படைப்பாளன் தனது உள்ளத்தில் ஊற்றெடுக்கும் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் அவன் அறிந்த மொழியில் செய்யும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மொழியாக்கமே இலக்கியமாகும். அவனுடைய மொழியாக்கத் திறனும், தனித்திறனும் சேர்ந்தே நடையென்று கருதினர் என்கிறார் பிரெச்டு (1874-1922) என்பவர். Stylistics என்ற சொல்தான் முதன்முதலில் நடையியல் என்பதைக் குறித்தது. இச்சொல்லை மாலி என்பவர் உருவாக்கினார். நடை என்பது ஆடை உடுத்தி வந்த மனிதன் எனலாம். உடம்பிற்கு உடை தேவைப்படுவதுபோல், கதைக்கு நடை முக்கியமான ஒன்றாகும். இதனையே ஆசிரியர் ஒருவர், உடம்பு வனப்பு போல கதைக்கு நடை இருக்க வேண்டும் என்கிறார். ஆசிரியர் ஒருவரின் தனிப்பட்ட சிந்தனை அல்லது பார்வை நடையாகும் என்கிறார்.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன் படைப்புகளில் ஒளியுடைய உலகத்தை காட்டுவதைக் காட்டிலும் இருள் சூழ்ந்த காட்டினை (தன் அனுபவத்தை) காட்டுவதில் மகிழ்ச்சி கொண்டவர். நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கினுள் காணப்படும் அறியாமையை நாட்டில் நடக்கும் ஏமாற்றங்களையும் பொய் வேடத்தையும் எடுத்துக்காட்டக் காணலாம். சிறுசிறு வாக்கியங்களினால் உணர்ச்சி எழுப்பி உளத்தினைத் தொட்டு உருகலைக்கும் திறன் கொண்டவர். இவர் படைப்புகள் சாதராண மக்கள் வரையிலும் புரியும் தன்மையில் அமைந்திருக்கும். இவரின் வெற்றிக்கு இவர் கையாண்ட மொழி நடையே காரணம் எனலாம்.

**ஆசிரியர்களின் மொழிநடைகள்**

1. மறைமலையடிகள் - தனித்தமிழ் நடை
2. மு.வாதராசனார் - ஆற்றொழுக்காக அமைந்த நடை
3. வ.வே.சு ஐயர் - உணர்ச்சி நடை
4. புதுமைப்பித்தன் - சிந்தனைத் துடிப்புள்ள நடை
5. கல்கி - நகைச்சுவை நடை
6. அகிலன் - காந்தியின் நடை
7. நா. பார்த்தசாரதி - தெளிந்த நடை
8. சி.என். அண்ணாதுரை - அடுக்குமொழி நடை

என சிறப்புடைய நடையினைக் கைவரப் பெற்றுவர்களாக தமிழிலக்கிய ஆசிரியர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளனர்.

பேராசிரியார் ந. சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகள் நடைக்போக்கு படிவர்களுக்குச் சலிப்புட்டாமல் இருக்கிறது. படிவத்தவுடன் புரிந்து கொள்ளும் வகையில் எளிதான நடையில் உள்ளது. தம் எழுத்துக்களின் நடைமுறை வழக்கில் உள்ள சொற்களை மிகுதியாகப் பயன்படுத்திச் செல்வது சிறப்பான ஒன்றாகும். மேலும், நினைவுக்குமிழிகள் என்னும் நூலை படிப்போர் நேரில் கேட்பது போலவே எளிமையான வார்த்தைகளைக் கொண்டு நூலை ஆசிரியர் அமைத்திருக்கிறார். நடை என்பதற்குப் பல்வேறுபட்ட இலக்கணங்கள் பலராலும் தரப்பட்டுள்ளன. என்பதை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சுருங்கச் சொல்ல, விளங்க வைத்தல்,**
**நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல்**
**ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல்**
**முறையின் வைப்பே, உலக மலையாமை**
**விழுமியது பயத்தல், விளங்கு உதாரணத்து**
**ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே (நன். எழுத்து., நூ. 13)**

என்று பல இயல்புகள் நூலிற்கு அழகென்பார் பவனந்தி முனிவர் அதற்கேற்ப நினைவுக்குமிழிகள் என்னும் நூலில்

**திருப்பதி வந்த பிறகு பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை வளர்ப்பது எப்படி? இந்த வினா அடிநாதமாக என் உள்ளத்தில் அடிக்கடி ஒலித்துக் கொண்டிருந்தது. ஏழுமலையப்பன் திருவருளின்றி எதுவும் நடைபெற முடியாது என்ற அதிகார நம்பிக்கையுடையவனாதலின் வாய்ப்பினை எதிர் நோக்கிக் கொண்டிருந்தேன். (நினைவுக் குமிழிகள், ப. 96)**

இதை நாம் நேரில் கேட்பது போலவே சிறப்பான சொல் தொடரை அமைத்திருக்கிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

**உணர்ச்சி நடை**

இலக்கியத்தில் காணும் பொருளை விடவும், பொருள் பற்றிய உணர்ச்சியைப் பிரதிபலிக்கிறது. ஓர் இலக்கியப் படைப்பாளன் ஒரு பாடலை பாடும் போது பொருள் பற்றிய உணர்ச்சியை அவன் பெற முடியும். அதுபோலப் பாடலைக் கேட்கிறவரும் படிக்கிறவரும் உணர்ச்சிளைப் பெறுகின்றனர். இவ்வாறு, படைப்பாளிக்கும் படிக்கிறவர்கள் கேட்கிறவர்களுக்கும் உண்டாகும் உணர்ச்சி நடை. இந்த இலக்கிய உணர்ச்சி பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் படைத்த நினைவுக்குமிழிகள் என்னும் நூலில் அமைந்த பொருளின் அடிப்படையில் உண்டாகிறது. படைப்பாளிக்கு ஏற்படும் உணர்ச்சி மற்றவர்களுக்கு புலப்படுத்துவதாக அமைவது உணர்ச்சியின் பண்பாகும். சான்றாக வேமனர் உதயமும் என் பதவி உயர்வு என்னும் தலைப்பின் கீழ் வருமாறு டாக்டர் ரெட்டியார் எங்கே? டாக்டர் தாமோதரன் எங்கே? உழைப்பிலாவது ஒப்பீடு உண்டா? இல்லவே இல்லை என்பது தெளிவு. டாக்டர் ரெட்டியரின் நூல்களே அவர்க்குப் பரிந்துரைகளாக இருக்கும். ஆதலால் இப்பதவி டாக்டர் ரெட்டியாருக்குக் தான் போக வேண்டும்" என்று உருக்கமாக வாதித்து என்னை நியமிக்க வேண்டும் என்ற தீர்மானத்திலும் கையெழுத்திட்டாராம். ஏனையோரும் ஒப்புக் கொண்டனராம். இந்தச் செய்தியை ஓர் ஊர்க்குருவி என் காதோடு காதாகச் செப்பியது ஆயினும் எனக்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு தான் இச்செய்தி கிடைத்தது.(நினைவுக் குமிழிகள், ப.606) என்று தன் படைப்பில் உணர்ச்சியோடு எழுதுகிறார் பேராசிரியார். மேலும்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

தம் படைப்பில் இறை உணர்ச்சியும் காட்டுகிறார். இசை தமிழர்களின் வாழ்வோடு இயைந்த ஒன்று வாழ்வு முழுமையும் வளமார்ந்த இசையோடு இணைந்து விடுகிறார்கள். இத்தகைய இணைபிரியாத் தொடர்பினை இசையோடு பெற்றிருக்கின்ற தமிழர்கள், எழுதி வைத்து இசை அமைத்துத் தாள லயங்கள் கூட்டிப் பாடப்பெற்ற பாடல்களை விட நினைத்த மாத்திரத்தில் நெஞ்சின் அடித்தளத்தில் உதிக்கின்ற கருத்துகளை நாட்டுப்புறப் பாடலில் வெளிப்படுத்துகின்றன.

இயற்கையின் ஆற்றலைக்கண்டு அஞ்சிய மனிதன், அதனை வழிபடுவதன் மூலம் அதன் சீற்றத்திற்கு ஆளாகமல் இருக்கலாம் என்று நம்பினான். அதனப்படையில் வழிபாட்டு முறைகளும், திருவிழாக்களும் தோன்றின. மக்கள் வாழ்வின் எல்லா அம்சங்களும் இசையாகவே இயங்குகின்றன அதனால் தான் இறை வழிபாட்டிலும்? தங்களின் இசைத்திறனைப் புலப்படுத்தினர். குறிப்பாக, பண்டையத் தமிழர்கள் ஒரு தொழிலைத் தொடங்குவதற்கு முன்னால், விநாயகரை வணங்கித் தொழிலை தொடங்கியுள்ளனர். அவை இதோ கீழ்க்காணுமாறு

**முந்தி முந்தி விநாயகரே முக்கண்ணனார் தன்மகனே**
**கந்தருக்கு முன்பிறந்த கணபதியே முன்னடைவாய்**
**வேலருக்கு முன்பிற்நத விநாயகரே முன்னடைவாய்**
**நீருமுத்தும் தேங்காயாம் நிலைகுலையாய் வாழைப்பழம்**
**இத்தனையும் ஒப்பதமாம் – எங்கள்**
**சப்பாணிப் பின்னையார்க்கு! (நாட்டுப்புறப்பாடல், ப. 40)**

என்ற பாடலின் மூலம் விநாயகர் என்ற உடனேயே மகிழ்ச்சி ததும்பும், உண்ணக்கூடிய பொருட்கள் நம் கண் முன்னே படியும் உணர்ச்சி செளிப்பாட்டால் ஆர்வமுடன் வேக வேகமாய் பாட்டு ஒலிக்கும். உருவ அமைப்பையும் வழிபடு முறையையும் இப்பாடல்கள் அடையாளமிட்டு தெளிவுபடுத்துகின்றன. இப்பாடல் அவயவிக் கொள்கையுடன் பொருந்துகின்றது. இதேப்போல் பேராசிரியரும் தமது படைப்பான நினைவுக்குமிழிகளில் தமிழ்த்துறையில் என் மணிவிழா என்னும் தலைப்பில் கீழ்க் கண்டவாறு எழுதுகிறார்.

**பைந்தமிழ்ப் பின்னால் சென்ற**
**பசுங்கொண்டல் நெடிய மாலே!**
**சுந்தரன் தமிழ்ப்பாட் டுக்குச்**
**சொக்கிய சிவனே! அன்று**
**செந்தூரில் குருப ரற்குச்**
**செந்நாவை வளைத்த வேலா!**
**செந்தமிழ் பாடல் கேட்டுச்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**முத்தாரம் அளித்த கண்ணா! (நினைவுக் குமிழிகள், ப. 560)**

இவ்வாறாக இறை உணர்ச்சியை பேராசிரியர் தம் மூலம் வெளிப்படுத்துக்கிறார். மேலும், இவர்

**இன்பம் ஒருவருக்கு இரத்தல் இரந்தலை**
**துன்பம் உறாஅ வரின் (குறள். 1052)**

என்று வள்ளுவர் குறிப்பிடுவது போன்று இரந்து கேட்ட பொருள் ஒருவருக்கு துன்பம் இல்லாமல் கிடைக்குமாயின், அதுவும் இன்பம் பயப்பதாகும். ஒருவர் துன்பத்தில் இருக்கும்போது தானாக முன்வந்து உதவுவது சிறப்பான ஒன்று. அது உணர்ச்சிபூர்வாக செயல்படக் கூடியதும் கூட நினைவுக்குமிழிகள் என்ற படைப்பியில் புதுமணத் தம்பதிகள் உடற்கூறு தெரியாது பல வழிகளிலும் கெடுகின்றனர். இருவரும் கெடுவதற்கு ஆண் மகனே முக்கிய காரணமாகின்றான். தவறான வழிகளில் சென்று பல்வேறு வித இரகசிய நோய்களை அடைகின்றான். (நினைவுக் குமிழிகள், ப. 174) என்று சொல்லுவது மூலம் இது உணர்ச்சி நடைக்குச் சான்றாகக் கூறலாம். மேலும், "முட்டாள் நாய்க்கனும் முரட்டுத் நாய்க்கனும் மோதிக் கொண்டால் முட்டாள் நாய்க்கனுக்குத்தான் கஷ்டம் வரும். எது இல்லாவிட்டாலும் அடி விழும் என்பது மட்டிலும் உறுதி. ஆனால், நான் முட்டாள் நாய்க்கன் இல்லை அறிவும் சிந்தனையுமுள்ள தமிழன் தமிழ்த்துறையில் பணியாற்றுபவன்." (நினைவுக் குமிழிகள், ப. 190) என்று பேராசிரியர் தன் வாழ்க்கையில் நடந்த உண்மை தரவுகளை அழகாக படம்பிடித்து காட்டியுள்ளார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். மேலும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தான் பணியாற்றுகின்ற திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறையில் முதன்முதலில் கருத்தரங்கு நடைப்பெற்றால் அது உலகுகென்று ஒரு நூலை அளித்த பெருமை தமிழகத்துக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் பெருமை அடையலாம். இத்தகைய பெருமை திருவள்ளுவருக்கு உண்டு இவரைத் தமிழ் நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும், சிறையமாகும்.

**வள்ளுவன் தன்னை உலகினுக் – கேதந்து**
**வான் புகழ் கொண்ட தமிழ்நாடு (பாரதி)**

என்று பாரதியாரும் பாடியுள்ளாரல்லவா? திருக்குறள் 'உலக நூல்' என்பதற்கு திருக்குறளிலேயே சான்றுகள் உள்ளன. ஆகாவே இந்த நூலைக் கருத்தரங்குப் பொருளாகத் தேர்ந்தெடுத்தேன். இதுவே தமிழ்த்துறையில் முதல் கருத்தரங்கில் ஆயப்படவேண்டும் என்பது என் ஆசை (நினைவுக் குமிழிகள், ப. 501) என்று பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தமது தாய் மொழி மீதுயுள்ள பற்றினை அழகாக வெளிப்படுத்தியுள்ளார்.

**உண்மைகளும் தத்துவங்களும்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் ரோசிரியர் ந. சுப்புரெட்டியாருக்கு நிரந்தரமான ஓர் இடம் உண்டு. எழுத்துலகில் இவர் ஈட்டிய வெற்றியே அவருக்கு அந்நிலையை அளிக்கின்றது.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இவரின் படைப்புகள் வாழ்க்கை உண்மைகளைப் படம் பிடித்துக்காட்டுகின்றன. நினைவுக்குமிழிகளில் உள்ள தெலை உலகச் செலவு என்னும் தலைப்பில் உலக உண்மை தத்துவத்தை காட்டுகின்றன. அதை பின்வறுமாறு பேராசிரியர் விளக்குகிறார். விபுவான (எங்கும் நிறைந்த) ஆண்டவன் ஞானசொருப முடையவன் என்றும், அங்ஙனமே அணுவளவான ஆண்மாவும் ஞானவடிவுடையது என்றும் வேதாந்த நூல்கள் விரிந்து பேசும் ஆண்டவன் வினைகட்கு அப்பாற்பட்டவன். ஆன்மாவோ வினைகளினால் கட்டுண்டு கிடப்பது. ஞானவடிவான ஆன்மாவிற்கும் ஒரு ஞானம் உண்டு. அது 'தர்மபூத ஞானம்' எனப்படும். (நினைவுக் குமிழிகள், ப. 546) என்று பேராசிரியர் உண்மை தத்துவத்தை மிக துள்ளியமாக படம் பிடித்துக்காட்டுகிறார். மேலும், தத்துவக்கருத்துக்களை படம்பிடித்து காட்டுவதில் இவருக்கு நிகர் இவரே என்று சொல்லக்கூடியளவிற்கு இவர் எழுதிய நினைவுக்குமிழிகள் என்னும் நூலில் தத்துவங்களாக நிறைந்து கிடைக்கின்றது சான்றாக "ஆண்டவன் அருள் இருப்பின் தியானத்தினால் மனம் ஒன்றித் தர்மபூத ஞானம் மலர்ந்து ஆன்மா ஆண்டவனையே காணும் ஆற்றலைப் பெறும். ஞானிகள் இந்த ஆற்றாலைப் பெற்றுள்ளனர்." (நினைவுக் குமிழிகள், ப. 547) என்று தம் படைப்பில் தத்துவக் கருத்துக்களை பரப்புகிறார். இவைப்போன்ற பல செய்திகளை இரத்தினச் சுருக்கமாக நினைவுக்குமிழிகள் என்னும் தன் படைப்பின் மூலம் வடித்து, பலரின் சிந்தனைத் துடிப்புகளைத் தட்டியெழுப்பியுள்ளார். இவ்வகையில் ரோசிரியர் பரம்பரை என்று கூறத்தக்க வகையில் தமிழில் பல புதிய எழுத்தாளர்கள் உருவாவதற்கு உந்து சக்தியாகவும், பிதாமகனாகவும் விளங்கியுள்ளார்.

**வழக்கு நடை**

வழக்கு நடை பேராசிரியரிகளின் தனித்தன்மையை மேம்படுத்தும், பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் படைப்புகளட ஒவ்வொன்றிலும் வழக்குநடை அவர்களுக்கே உரிய தனித்தன்மையில் மிளிரிவதைக் காணலாம். 'கம்பராமாயணக் கருத்தரங்கு என்னும் தலைப்பில் பின்வருமாறு பேராசிரியர் கையாண்டுள்ளார்.

> **சர். சி. பி. இராமசாமி அய்யர் முன்னுரை எழுதி வெளிவந்த நூலுக்கு முன்னுரை தருமாறு கேட்டார். நான் சர்.சி.பி. எழுதி விட்டபிறகு நூலும் வெளிவந்த பிறகு என் முன்னுரை தேவையற்றதே என்றேன். அதற்கு அவர் சர்.சி.பி. இப்போது இல்லை, அதனால் கேட்டேன் என்றார். (நினைவுக் குமிழிகள், ப. 582)**

என்பன போன்ற வழக்கு நடைகள் படைப்பின் ஏற்றாற்போல் கையாண்டிருப்பதைக் காணலாம். இவரின் படைப்புகள் வாழ்க்கையில் நடைந்த உண்மை சம்பசவங்களை பிரதிபலிக்கும் கண்ணாடிபோல் இருக்கின்றது. இவரின் வெற்றிற்கு வழக்குநடையும் ஒரு

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

காரணமாக அமைந்தது எனலாம். மேலும் பேராசிரியர் தம் படைப்புகளில் வழக்கு நடையை நையமாக கையாளுவதில் மன்னனாக திகழ்ந்தார்.

> **என்ன சார் நேற்று தலைமைச் செயலகத்திற்கு வந்தோம் தங்களைப் பார்க்க உள்ளே இருந்து கொண்டே இல்லை என்ற தகவலை அனுப்பி எங்களை அவமதித்தீர்கள். நாங்களும் ஏமாற்றத்துடன் திரும்பினோம். இப்போது இரண்டிலொன்று பார்த்து விடலாம் என்று வந்திருக்கிறோம் (நினைவுக் குமிழிகள், ப. 202)**

என்று யதார்த்தமாக தான் கருத்தை விளக்குகிறார்.

**பேச்சு வழக்குச் சொற்கள்**

*நினைவுக்குமிழிகள்* பெரும்பாலும் பேச்சு வழக்குச் சொற்களையே மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். இவரின் படைப்புகளில் உயிர்த்துடிப்பான எளிமையான சொற்களை வெளிப்படுத்துப் பேச்சு மொழியை முதன்மையாகக் கையாண்டுள்ளார். தனது படைப்பான நினைவுக்குமிழிகளில் பயன்படுத்தின பேச்சு வழக்கு நடைக்குச் சில சான்றுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. பேராசிரியரைப் பார்த்து துரையரங்கனார், என்ன மிஸ்டர் ரெட்டியார், அக்கினி சாட்சியாகக் கைபிடித்த பெண்ணைக் கைவிட்டு விட்டீர்களே! என்று வேடிக்கையாகக் கேட்டார். பேராசிரியர் அவர்களே, நான் கைவிடவில்லை. (நினைவுக் குமிழிகள், ப. 289) மேலும், இவை போன்ற பேச்சு வழக்குச் சொற்கள் நினைவுக்குமிழிகளில் பேராசிரியர் கையாண்டுயுள்ளார்.

**ஆங்கிலச் சொற்கள்**

பாத்திரங்களின் உரையாடலுக்கு ஏற்ப தம் படைப்புகளில் கலப்பு மொழிகளை கையாளுவதும் உண்டு. இவ்வாறு பேராசிரியர் படைப்புகளில் பயின்றுவரக் காணலாம். பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகளில் இடம்பெறும் பிறமொழிச் சொற்களான ஆங்கிலமும், வடமொழிச் சொற்களையும் பயன்படுத்தியுள்ளார். பேச்சு வழக்கில் ஆங்கிலச் சொற்கள் நீக்க முடியாத அளவிற்குச் செல்வாக்கினைப் பெற்றுள்ளன. வாசகரும், கதை மாந்தருக்கும் ஒரு நெருக்கத்தை ஏற்படுத்தவும், சூழலோடு ஒன்றவும் பிறமொழிச் சொற்களைக் கையாள்வதைக் காண முடிகின்றது.

பேராசிரியர் தேவையான இடங்களில் ஆங்கிலச் சொற்களை அளவோடு பயன்படுத்தியுள்ளார். அவ்வாறு பயன்படுத்துவதால் எளிதாக புரிந்துக்கொள்ள முடிகிறது. தம் படைப்புகளில் பயன்படுத்தியுள்ள ஆங்கிலச் சொற்களான, தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்கு அனுப்புவதில் மூன்று கட்டங்கள் உள்ளன. முதலாவதாக தொலைக்காட்சிப் படமாக வேண்டி நிகழ்ச்சியை அல்லது பொருளா துருவிப் பார்த்ததக்க (Scanning) என்ற நிகழ்ச்சிக்கு உட்படுத்தவேண்டும் (நினைவுக் குமிழிகள், ப. 272) மேலும், பேராசிரியர் தம் நூலில்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **1974 – இல் டாக்டர் மு.வ. திருநாடு அலங்கரித்த பிறகு என் வேண்டுகோட் கிணங்கப் பல்கலைக்கழகம் ஓராண்டு இவரைத் தமிழ்ப்பாட திட்டக் குழுவின் தலைவராக நியமித்து சிறந்த முறையில் கூட்டத்தை நடத்திக் கூட்டத்தின் தரத்தை உயர்த்தினார். இவரை இருப்பூர்தி நிலையத்தில் வரவேற்று பீமா உணவு விடுதியின் மாடியில் ஒரு நல்ல அறையை அமர்த்தித் தங்க வைத்தேன் சிற்றுந்து (Van) ஏழுமலையான் தரிசனத்திற்கும் ஏற்பாடு செய்தேன். (நினைவுக் குமிழிகள், ப. 282)**

மேலும், இவர் டாக்டர் முகமது, மிஸ்டர் ரெட்டியார் இரும்பு பீரோ (நினைவுக் குமிழிகள், ப.189) போன்ற ஆங்கிலச் சொற்களை யதார்த்தமாக இருக்கின்றது என்பதை படம் பிடித்துக்காட்டுவதாக அமைந்துள்ளது. பேராசிரியர் தம் படைப்பாகிய நினைவுக்குமிழிகள் என்னும் நூலில் தேவையான இடங்களில் ஆங்கிலச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார். அவ்வாறு பயன்படுத்துவதால் எளிதாகச் சொல்லவந்த கருத்தை புரிந்துக்கொள்ள முடிகிறது. தம் நூலில் பயன்படுத்தியுள்ள ஆங்கிலச் சொற்களான, டிராப்டுகள், St Thiruvalluvar Gold Medal, St. Ramalinga Swamigal Gold Medal. டாக்டர், (A.T.C. Cottage), Slogan, `High-Lights of Cultural Influence Abroad in the Classical Period (நினைவுக் குமிழிகள், ப. 616) இவ்வாறாக ஆங்கிலச் சொற்களை யதார்த்தமாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் பேச்சு வழக்கில் ஆங்கிலச் சொல்லைக் கலந்து பேசும் மக்களைப் படம்பிடித்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

**வடமொழிச்சொற்கள்**

இலக்கியத்தில் பயன்படுத்தும் வடவெழுத்துக்களை நீக்கித் தமிழாக்க விதி வகுத்துள்ளார் தொல்காப்பியர்.

> **வட சொற் கிளிவி வடவெழுது ஒரீஇ**
> **எழுத்தொரு புணர்ந்த சொல்லாகும்மே (தொல். சொல். நூ. 401)**

தம் படைப்பாகிய நினைவுக் குமிழிகள் என்னும் நூல் பேச்சு வழக்கில் இடம் பெறும் சொற்களைப் பயன்படுத்துவது போல வடமொழிச் சொற்களை எதார்த்தமான படிக்கும் வாசகர்களுக்கு ஆர்வதை ஊட்டவும் வடமொழிச் சொற்கள் கையளப்பட்டுள்ளன. இதை, துறையென்று ஒன்று இல்லாமல் தனி விரிவுரையாளராக இருப்பது பல்கலைக்கழக வட்டத்தில் 'அந்தஸ்து' என்ற ஒன்று இல்லாத நிலை (நினைவுக் குமிழிகள், ப. 284) என்ற வடமொழி சொல்லை ஆசிரியர் பயன்படுத்துள்ளார். மேலும் பேராசிரியர் எழுதும் பொழுது அங்குப் படகுகளில் புரோகிதர்கள் இவர்கட்கு அநுட்டாமை செய்து வைப்பார்கள். (நினைவுக் குமிழிகள், ப. 287) மேலும் இவர் நாங்கள் வானப்பிரஸ்த நிலையிலிருக்கின்றோம் என்று வடமொழிச் சொற்களைக் கையாண்டுள்ளார். (நினைவுக் குமிழிகள், ப. 289)

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**விருப்பச் சொற்கள்**

மக்களின் பழக்க வழக்கங்கள் பொருளாதார நிலைகள், விவசாயம், மண்ணின் தன்மை இவைகள் எல்லாம் அடிப்படையாகக் கொண்டு தான் வட்டார இலக்கியங்கள் தோற்றம் பெறுகின்றன. வட்டார இலக்கியம் எது என்பதற்கு விளக்கம் கூறும் ஆங்கில அகராதி ஒரு சில எழுத்தாளர்கள் குறிப்பிட்ட ஒரு வட்டாரத்துக்குள் தங்களது படைப்புக்களை அமைத்து அதன் சில தன்மைகள் அதில் வாழும் மக்களின் வாழ்க்கையைப் பாதிப்பதாகக் காட்டும் போக்கும் என் இலக்கணம் கூறுகின்றது. வட்டாரப் படைப்பானது கருவின் வட்டாரத் தேவையுடன் கலந்து வெளிப்படும்போது, கதாப் பாத்திரத்தின் விதி களப்பின்னணியுடன் உயிரோட்டம் மிக்கதாக வார்த்துப் படைக்கப்படும் போது அந்த படைப்பு வட்டார இலக்கியமாகிறது என அமெரிக்க அகராதி விளக்கம் தருகின்றன. தமிழ் இலக்கியத்தில் வட்டார இலக்கியத்தின் முன்னோடியாகத் திகழ்ந்தவர் புதுமைப்பித்தன். இவர் தம்முடைய படைப்புக்களில் முழுமையாக எடுத்துக்காட்டப்படவில்லை. நாம் அன்றாட வாழ்வில் அடிக்கடிப் பேசக்கூடிய சொற்கள் விருப்பச் சொற்களாகப் பயன்படுத்தப்பட்டுகின்றன. இதனையே **டாக்டர் அகமதுவின் முகத்தில் ஈயாடவில்லை முகம் சுருங்கி மௌனியானார் பேச்சு எழவில்லை (நினைவுக் குமிழிகள், ப. 493)** இப்படி விருப்பச் சொற்களைச் கையாண்டுள்ளனர் பேராசிரியர்.

**மொழி ஆளுமை**

பூலோகத்தின் பரந்து விரிந்துபட்ட நிலவெளியில் வாழுகின்ற மானுடத்தைக் குழுவாகவும், வகைப்படுத்தும் கருவியாகவும் முன் நிற்பது மொழி, மானுட இனங்களில் எது முதல்குடி என்றறிய ஏதுவாக மக்கள் பேசும் மொழியே சான்றாக உள்ளது அம்மக்கள் வாழும் நிலப்பரப்பை நாடாகவும், தேசமாகவும், வரையறுத்துப் பெயர் வைக்கவும், மக்களின் தோற்றம் நிறம், பண்பாடு, நாகரிகம் அனைத்தையும் தாண்டி முதலில் மொழியே முதன்மை பெறுகிறது.

ஓர் இனத்தின் தொன்மைத்துவம், பன்மைத்துவம் உள்ளிட்ட கூறுகளை அறிய மொழியே முதன்மை பெறுவதால், மக்கள் தங்களது தாய்மொழியை மட்டுமே தொன்மைத்துவமிக்கதாக அடையாளப்படுத்துவது இயல்பான ஒன்றாகும். தமிழ் தொன்மைபற்றி கவிஞர் வைரமுத்து அவர்கள் இவ்வாறு தடம்பதிக்கிறார். **தமிழ் மண்ணுக்கு வந்ததில் மொகஞ்சோதாராவிலும் முன்னுக்கு வந்த மொழி (வைரமுத்து பெய்யெனப் பெய்யும் மழை, ப. 7)** குறிப்பாக பல நிலப்பரப்புகளில் பல மொழிகளில் நடுவில் உறவாடிய தமிழர், தமது தாய்மொழி மீது பற்றதலும், ஈர்ப்பும் கொண்டிருப்பதோடு, பாதுகாத்தும் வளர்த்தும் வந்துள்ளதை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தமது படைப்பாகிய நினைவுக்குமிழிகள் நூலின் திருக்குறள் கருத்தரங்கு என்னும் தலைப்பின் கீழ் ஆந்திராவில் திருப்பதி மாநிலத்தில் இருக்கும் திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறையில் முதன்முதலில் கருத்தரங்க நடைப்பெற்றால் அது திருக்குறளில் தான் நடைப்பெற வேண்டும் என்று முனைப்போடு


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இருந்தார் பேராசிரியார் ந. சுப்புரெட்டியார். இவ்வாறாக, வரலாறு நெடுகிலும் படைப்பு இலக்கியங்களின் வழி ஆளுமை செலுத்திய தமிழ்மொழி பக்கத்து மாநிலங்களிலும் வளம் குன்றாமல் நின்று நிலை பெற்றிருக்கிறது என்றால். அது பேராசிரியரின் அயராது உழைப்பும் சீரிய தொண்டுனையும் நாம் வெகுவாக பாராட்ட வேண்டும் என்பது எமது கருத்தாக தெரிவிக்கிறோம்.

**தமிழும் ஆளுமைகளும்**

ஒவ்வொரு மொழியும் அது உலவுகின்ற பரப்பில் தன்னை அமையாளப்படுத்தும் பலப்பல ஆளுமைகளை நிலைநிறுத்தும், அவ்வாளுமைகளே அந்த மொழியின் பெருமையாய் நின்று மானுடக் கூறுகள் அனைத்தையும் உள்வாங்கிக் கொள்கின்றன. ஏனெனில், மொழியும் ஆளுமையும் ஒன்றுக்கொன்று பெருமை கூட்டி மானுடத்தை மலரச் செய்கின்றன. அவ்வகையில் ஆங்கிலமொழி என்ற சிறந்த ஆளுமைகள் ஷேக்ஸ்பியர், வின்சன்ட் சர்ச்சில், ஜெர்மன் மொழி தந்த ஆளுமை மாக்கிய வல்லி, சீனமொழி தந்த ஆளுமை கான்பூஸியஸ் போன்று தமிழும் தொன்மைக்காலம்தொட்டு இக்காலம் வரை பல்வேறு ஆளுமைகளைப் பெற்றிருக்கிறது. குறிப்பாக அகத்தியர், தொல்காப்பியர், திருவள்ளுவர் தொடங்கிய 20 ம் நூற்றாண்டில் பாரதியார், பாரதிதாசன் முதல் நூற்றுக்கணக்கான படைப்பாளுமைகள் அடையாளப்பத்தப்படுகின்றனர். சிறப்பாக நவீன மொழி இலக்கியங்கலில் தத்தமது படைப்புகள்வழி தமிழ், தமிழர்களின் தொன்மைத்துவத்தையும் நவீனத்துவத்தையும் தமது ஆளுமையின் பால் நிறுவியுள்ளனர். இந்த தொடர்ச்சியாக ஆந்திராவில் வாழும் தமிழ்க்குடிகள் தாய்மொழியின் தமிழ்நிலத்தின்பால் பற்பல களங்களில் தமது மொழிப்பற்றை கலாச்சாரப் பற்றைத் தொப்புள் கொடி உறவு போல் பேணிவருகின்றனர் என்பது திண்ணம். அவ்வரிசையில் நினைவுக்குமிழிகள் எனும் படைப்பில் இரண்டு தங்கப் பதக்கங்கள் என்னும் தலைப்பில் படைப்புக்கான உள்ளடக்கமாக மொழி இனம் சமூகம் இறைமை விழாக்களின் தற்பெருமை மானுட உணர்வு தியாக அடையாளங்களை நினைகூறல், தனிநலை வாழ்த்து மடல், வாழ்வியல் அறம் எனும் உட்கூறுகளை உள்வாங்கி படைப்புக்குரிய பாடுபொருளாக தகவமைத்துக்கொண்டு மொழியின் நெகிழ்வு கொண்டு தமது தமிழ் ஆளுமையை நிறுவிட முனைந்திருப்பது மொழிக்கு வளம் சேர்ப்பதாகவே அமைகின்றது இங்கு பேராசிரியரின் ஒவ்வொரு படைப்பும் பொருள் விளக்கம் கூறி விளக்குவதைவிடுத்து, படைப்புக்கான களத்தையும், கருவையும், அது செலுத்தும் உள்ளீடுகளும் தமிழ்மொழிக்கும் தமிழருக்கும் பேராசிரியரின் படைப்பு ஆளுமையால் விளைந்திட்ட மேன்மையும் உணர்வுமே முக்கியம் எனும் கருது கோளின்படி இவரை அடையாளப்படுத்துவது அவசியமாகிறது.

குறிப்பாக, அவரது படைப்புகளில் தமிழ்மொழி ஒன்றுதான், மதபேதங்கள் கடந்து, மனிதனைச் சிந்திக்க வைக்க, மானுடத்தை வயப்படுத்தக்கூடிய கருதுகோள் மேலும், தமிழை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உடலால் மட்டுமல்ல, உயிராலும் உச்சரிக்க முடியும் என்கிற அழுத்தமும் திடமான பார்வையும் பேராசிரியரின் படைப்புகள் வழிப் புலப்படுகின்றன. தமிழ் தமிழர்களுடைய ஒட்டுமொத்த விழுமியங்களையும் சேமித்து செறிவூட்டும் படைப்பகள் வழி பேராசிரியரின் ஆளுமைத் திரளச்சி முழுமை பெற்றுள்ளன எனலாம். பேராசிரியர் தமிழ் காப்பதற்கு அரும்பாடு பட்டு தமிழை அயல்மாநிலத்தில் வளத்தார் இதை தனது பணியாற்றி பல்கலைக்கழகத்தில் தமிழை வளர்ப்பதற்கு மாணவர்களுக்கு ஊக்கத் தொகை கொடுத்து தமிழை வளர்த்தனர். இதை பேராசிரியரே இரண்டு தங்கப் பதக்கங்கள் என்னும் தலைப்பில் கூறுகையில்;

> **உலகில் நன்றாகப் பணியாற்றுபவர்கட்கு ஊதியம் உயர்த்தப் பெறுகின்றது, பதவி உயர்வும் கிடைக்கின்றது. இந்த உண்மையை அப்படியே வீட்டில் குழந்தையின் பெற்றோர்கள் கையாளுகின்றனர். விசிறி எடுத்துக்கொண்டவா. கற்கண்டு தருகின்றேன் என்கின்றாள் அன்னை. எண்ணெய் தேய்த்துக் குளித்தால் பொம்மை வாங்கித் தருவேன் என்கின்றார் தந்தை, வீட்டில் முன்னறி தெய்வமாகிய அன்னையும் பிதாவும் கையாளுகின்ற முறையையொட்டியே ஆசிரியர்கள் மாணவர்களின் நடத்தியிலும் கற்றலிலும் இத்தகைய ஒரு முறையைக் கையாளுகின்றனர். தமிழ் எம்.ஏ வகுப்பு தொடங்கப்பெற்றதும் (1970-71) முதலாவதாக முதுகலைப்பட்டம் பெறுபவர்களில் மொத்த மதிப்பெண்களில் முதலாவதாகப் பெற்ற மாணவருக்கு ஒரு தங்கப் பதக்கமும், இலக்கியத் திறனாய்வுத் தாளில் முதல் மதிப்பெண் பெறும் மாணவருக்கு ஒரு தங்கப் பதக்கமும் வைக்க வேண்டும் என்ற எண்ணம் என் சிந்தையில் தோன்றியது, இதனை நிறைவேற்றுவது எப்படி? ஏழுமலையான்தான் வழிகாட்ட வேண்டும்" (நினைவுக் குமிழிகள், பக். 495-496)**

மாணவர்களுக்கு ஊக்கத்தெகை கொடுத்து அயல்மாநிலத்தில் தமிழை வளர்த்தார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

**பழமொழி**

பழமொழி காலத்தால் தொன்மையானது என்பதை அச்சொல்லே உள்ளங்கை நெல்லிக்கனி போன்று உணர்த்தும் விதமாக இருக்கின்றது. பரந்த பட்டறிவின் அடிப்படையில் எழுந்ததே பழமொழி. 'கடுகு சிறுத்தாலும் பாரம் குறையாது' என்பதற்கு ஏற்ப பழமொழி அளவில் மிகச் சிறியதாக இருப்பினும் கருத்தாழமும் பொருள் செறிவும் வாய்ந்தது. உலகில் உள்ள துறைகள் அனைத்தையும் வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும் நுட்பதிட்பத்துடன் இனிது இயம்பவல்லது பழமொழி.

தமிழ்ப் மொழிகள் எதுகை மோனையுடன் செவிக்கும் சிந்தைக்கும் இனிமை தருகின்றன. இனிமை தருகின்றன. **அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும், மாதா ஊட்டாத சோறு மாங்காய் ஊட்டும்** போன்ற பழமொழிகளில் அமைந்துள்ள மோனை செவிக்கு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விருந்தாக அமைகின்றது. இவ்வாறு நம் பழமொழிகள் வெறும் பழமொழிகளாக மட்டும் அமையாமல் கவிமொழியாக அமைந்து பொதுமக்களின் உள்ளத்தை உருவாக்குகின்றன. கற்றறிந்த புலவர்கட்கே உரிய இலக்கியங்களைப் பொதுமக்கட்கு அறிமுகப்படுத்தும் வகையில் சில பழமொழிகள் அமைந்துள்ளன.

**ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி**

**நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி (நாலடியார் செய்யுளும் செய்திகளும், ப. 45)**

என்று நாலடியாரின் சிறப்பையும் குறட்பாவின் செம்மையையும் உணர்த்துகின்றது. நம் முன்னோர்கள் கண்ககைப் பெரிதும் போற்றினர் என்பதற்குத் தக்க சான்று உண்டு.

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**

**கண்ணென்ப வாழும் உயிர்க்கு (குறள். 392)**

முதலிய நம்முன்னோர்கள் எழுத்தைவிட எண்ணிற்கே முதன்மை அளித்தனர் என்பது சொல்லாமலே விளங்கும். எண்ணை முதலில் கூறிவிட்டு அதற்குப் பிறகே எழுத்தைக் கூறியிருப்பது இவண் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. தமிழ்ப்பழமொழிகள் இலக்கியங்களையும் கணக்கின் இன்றியமையாமையைப் புலப்படுத்துவதற்கு பழமொழியே சான்றாகும். அவ்வகையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் படைத்த நினைவுக்குமிழிகள் ஆங்காகே பழமொழியைப் பயன்படுத்தியுள்ளார். சான்றாக வேமனர் உதயமும் என் பதவி உயர்வும் என்னும் தலைப்பின் இவ்வாறாக பயன்படுத்துள்ளார். “கொடுக்கிற தெய்வம் இருந்தால் அது கூரையைப் பொத்துக் கொண்டு கொடுக்கும்” என்பது மக்களிடையே வழங்கும் ஒரு பழமொழி என்று பழமொழியை பேராசிரியார் பயன்படுத்தியுள்ளார்.

**முடிவுரை**

நடைகளால் சிறப்படைந்த நூல்கள் படைப்பாளனின் திறமைகளைப் பறைசாற்றி நிற்கும் புதுமையை படைக்க விரும்பும் ஆசிரியர் தனது படைப்பில் பல்வகை நடைகளைக் கையாண்டுள்ளார். மொழி நடை வாயிலாக மக்களின் பேச்சு வழக்கையும் பிறமொழிச் சொல்லாட்சிகளையும் ஆசிரியர் படம் பிடித்துக்காட்டியுள்ளார். உத்தியைக் கையாண்டுள்ளார். தன் பெற்ற அனுபவத்தையும் பிறரது நினைவுகளையும் நினைவுக் குமிழிகளில் மூலம் பேராசிரியர் வாயிலாக நாம் வெளிப்படையாக அறிந்து கொள்ள முடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] டாக்டர் மு. வரதராசனார். *திருக்குறள். (உரை)* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., சென்னை, முதற் பதிப்பு, 1949.

[2] புலியூர்க்கேசிகன். *தொல்காப்பியம்.* பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, 1954.

[3] பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். *நினைவுக் குமிழிகள்.* வேங்கடம் வெளியீடுகள்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சென்னை. முதற் பதிப்பு, 1990.

[4] முனைவர் ச. திருஞானசம்பந்தம். *நன்னூல். (எழுத்து.)* கதிர் பதிப்பகம், திருவையாறு, முதற்பதிப்பு, 2006.

[5] வைரமுத்து. *பெய்யெனப் பெய்யும் மழை.* திருமகள் நிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1999.

[6] டாக்டர் ரா. சீனிவாசன். *நாலடியார் செய்யுளும் செய்திகளும்.* அணியகம் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பகம், 1985.

**References**

[1] Dr. M.Varadharasanar. *Thirukkural.* Saiva Siddhantha Works Publishing., Chennai, First Edition, 1949.
[2] Pooliuor Kesikan. *Tholkapiyam.* Pari Nelaiyam Chennai, First Edition, 1954.
[3] Prof. Na. Subureddyar. *Ninaivu Kumizhigal.* Venkadam Publishing, Chennai, First Edition, 1990.
[4] Dr. S. Thirugnansamtham. *Nannul.* Kathir Publishing, Thiruvaiyru, First Edition, 2006.
[5] Vairamuththu. *Peiyena Peiyum Mazhai.* Thirumakal Neelaiyam, Chennai, First Edition 1999.
[6] Dr. Ra. Srinivasan. *Naladiyar Cheulum Sethikalum.* Aniyagam Pathippakam, Chennai First Edition, 1999.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் பார்வையில் - நமது உடல்

## Na. Subbu Reddiar's View on Body

**முனைவர் ஏ. கௌதமச்செல்வி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. E. Gowthamaselvi,** Assisant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0001-7178-8171**

**DOI: 10.5281/zenodo.7251923**


### Abstract

*Professor N. Subbu Reddiar is a twentieth-century Tamil scholar, writer, professor, spiritualist, scientist, researcher, psychological thinker and a great man with a diverse personality in all fields. He was born on 27th August 1916 in Perakambi, Trichy, Tamil Nadu. He was born into an agricultural family and through hard work in his studies, he became a versatile man of Tamil rhetoric. He was involved in the field of science during his primary education. To highlight his writing, the Government of Tamil Nadu nationalized and honoured all of his 96 books. He studied the disciplines of science properly and became proficient in them with the principle that Tamil will prosper unless multidisciplinary texts were popularized in Tamil. He has a good understanding of Anatomy too. Na. Subbu Reddiar had written a book called "Namadhu Udal" (Our Body). He says that the human body is made up of five elements. He elicits that it is a mixture of the five elements such as land, water, air, fire and sky. So, the body needs to be taken care of to keep life in the body without physical and mental problems. Professor, in his book, explained the body as 1. Organ 2.Skin 3. Bone 4. Muscle 5.Brain Nerves 6.Our Sense 7.Digestive Zone 8. Blood Circulation 9. Respiratary Zone 10.Waste Zone, 11.Our Body and inside 12. Explaining the function of the organs with maps on the topics of anatomy and thereby striving for the well-being of mankind. All the instrumental reasons for living life to the fullest in this world are located in this body. It has been clearly explained by professor Subbu Reddiar to his Tamil readers. Based on the physiological notion that all of these vital organs, if in perfect condition, function in a good way and they can function as needed. Hence, the book "Namadhu Udal" (Our Body) will help us to understand the body simply where this article lays its justification.*


**Keywords:** Na. Subbu Reddiar, *Namadhu Udal*, Views, Body.


**ஆய்வுச் சுருக்கம்**

*இருபதாம் நூற்றாண்டின் தமிழறிஞர், எழுத்தாளர், பேராசிரியர், ஆன்மீகவாதி, அறிவியலாளர், ஆராய்ச்சியாளர், உளவியல் சிந்தனையாளர் என அனைத்துத் துறைகளிலும் பன்முக ஆளுமை கொண்ட மாபெரும் மனிதர் ந. சுப்புரெட்டியார். இவர் தமிழ்நாடு திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற ஊரில் 1916 -ஆம் ஆண்டு ஆகஸ்ட் 27ம் நாள் பிறந்தார். வேளாண் குடும்பத்தில் பிறந்து பல்துறை வித்தகராய் சிறப்பு பெற்றவர். தொடக்கக்கல்வி பயின்ற காலத்தில் அறிவியல் துறையில் ஈடுபாடு கொண்டிருந்தார். இவருடைய எழுத்துப்பணியைச் சிறப்பிக்கும் பொருட்டு தமிழ்நாடு அரசு அவருடைய 96 நூல்களையும் நாட்டுடைமையாக்கிக்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*கௌரவித்தது. பலதுறை அறிவு நூல்கள் தமிழில் பெருகினாலன்றி தமிழ் ஏற்றம் பெறாது என்ற கொள்கையோடு அறிவியல் துறைகளையும் முறையாகப் பயின்று அவற்றிலும் ஆழ்ந்த புலமை அடைந்தவர். மனித உடல் பஞ்ச பூதங்களால் ஆனது. நிலம், நீர், காற்று, நெருப்பு, ஆகாயம் என்ற ஐந்து தன்மைகளும் கலந்த கலவையாகும். பல்வேறு உறுப்புகளாகிய உடல் என்புதோல் போர்த்திய உடலாக உயிர் என்னும் சுயத்துடன் பொலிந்து உணர்வின் வெளிப்பாடாகத் திகழ்கிறது. உயிர் இந்த உடலில் தங்கியிருக்க வேண்டுமானால் உடலைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும். பேராசிரியர், நமது உடல் என்ற நூலில் 1. உயிரணுக்கள் 2. தோல் 3. எலும்புகள் 4. தசை மண்டலம் 5. மூளையும் நரம்புகளும் 6. நம் புலன்கள் 7. செரிவுறுப்பு மண்டலம் 8. இரத்தவோட்ட மண்டலம் 9. மூச்சுறுப்பு மண்டலம் 10. கழிவு மண்டலம் 11. நமது உடலும் உள்ளமும் 12. உடலோம்பல் ஆகிய தலைப்புகளில் உடலுறுப்புகளின் செயல்பாட்டினை வரைபடங்களுடன் விளக்கி அதன் மூலம் மனிதகுலம் நலம் பெற விழைந்துள்ளார். இந்த உலகில் வாழ்க்கையைச் செவ்வனே வாழ்வதற்கு வேண்டிய கருவி காரணங்கள் யாவும் நாம் பிறக்கும்போதே இவ்வுடலில் அமைந்துள்ளன. உயிர்நிலையான இவ்வுறுப்புகள் யாவும் சரியான நிலையிலிருப்பின் தேவைக்கேற்றவாறும் எதிர்பாராத தேவைக்கேற்றவாறும் வியத்தகு முறையில் செயல்படும் என்ற உடலுறுதிச் சிந்தனையின் அடிப்படையில் ந. சுப்புரெட்டியார் எழுதிய 'நமது உடல்' என்ற நூல் அமைந்துள்ளது. இந்நூல் மனிதஉடலைப் பற்றி எளிய முறையில் அறிந்துகொள்ள உதவி புரிந்துள்ளது.*

**குறிப்புச்சொற்கள்:** *ந. சுப்புரெட்டியார், நமது உடல்,* பார்வை, உடல்.

**முன்னுரை**

எழுத்துலகில் ஆன்ற அறிவின் விளக்கமாய் திகழ்பவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். காலத்தை வென்ற மூத்த தமிழ் அறிஞரான இவர் தடம் பதிக்காத துறையே இல்லை எனலாம். தொடக்கக் காலத்தில் அறிவியல் துறையில் ஆர்வம் கொண்ட இவர் பிற்காலத்தில் இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டு 136 நூல்களை எழுதியுள்ளார். உலகளவில் பல்கி பெருகும் நோய்களின் தாக்கங்களிலிருந்து மானுடம் விடுதலை அடைய பேராசிரியரின் இந்நூல் வழிவகுக்கும். அவற்றுள் தமிழ்நாடு அரசால் நாட்டுடைமையாக்கப்பட்ட 96 நூல்களுள் 'நமது உடல்' என்ற நூலில் காணப்படும் செய்திகளை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**சுப்புரெட்டியாரின் படைப்புலகம்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் படைப்புலகம் மிகவும் பரந்துபட்டது. இவரது வாழ்நாளில் 65 ஆண்டு காலம் தமிழ் மொழிக்கும் தமிழர்க்கும் அயராது உழைத்து வெற்றி பெற்றவர். ஏதேனும் ஒரு துறை சார்ந்தே அறிஞர்களின் திறம் போற்றுதற்குரியதாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இருக்கும். ஆனால், பேராசிரியர் அவர்களோ தமது நுட்பமான அறிவால் அனைத்து துறைகளிலும் ஆன்ற அறிவின் கலங்கரை விளக்கமாக திகழ்ந்தவர்.

**அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்**
**உள்ளழிக்க லாகா அரண் (குறள். 421)**

என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க, இலக்கணம் தொடங்கி சங்க இலக்கியம், நீதி இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியம் என்று நில்லாமல், ஞான அறிவைப் பெற்ற சித்தர் இலக்கியங்களையும் தமது கை வசப்படுத்தி மிளிரச் செய்துள்ளார். உரைநடை நூல்களையும் பக்திச் சுவை மிகுந்த இலக்கியங்களையும் அழகிய எளிய கூறுகளைப் பெற்று படிப்போரின் பண்பை உயர்த்தும் வல்லமை பெற்றுள்ளது. எல்லாவற்றுக்கும் மேலாக கல்வியியல் துறையில் இவரது பணி வியக்கும் வகையில் உள்ளது. கல்வியியலில் நுட்பங்களையும், புதுமைகளையும், கோட்பாடுகளையும் தமிழ் மாணவர்களுக்கு அறிமுகம் செய்த பெருமைக்குரியவர். பேராசிரியர் அவர்களோ அறிவியல் துறையையும் விட்டுவைக்கவில்லை. அறிவியல் துறைகளை முறையாகப் பயின்று அவற்றில் ஆழ்ந்த புலமை அடைந்தவர் என்பது அவர் எழுதிய அறிவியல் நூல்கள் மூலம் புலனாகிறது. இவரது பணி எழுத்துலகமாக மட்டும் இல்லாமல் தமிழகத்திலுள்ள அனைத்து பல்கலைக்கழகங்களிலும் ஏற்படுத்திய மாற்றங்களும், சொற்பொழிவு நிகழ்வுகளும் உண்மை பதிவுகளாக இன்றளவும் நமக்கு வழிகாட்டியாக உள்ளது. தனது சொந்த சேமிப்பு பணத்தை அறக்கட்டளைகள் நிறுவுவதற்கும், சிறந்த பேரறிவாளர்களுக்கு விருதுத்தொகை வழங்கவும் செலவிட்டது அவரின் தயாளக் குணத்தை வெளிப்படுத்துகிறது.

**எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே**
**அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே (பராபரக்கண்ணி, பா. 221)**

என்ற தாயுமானவரின் கூற்று இவண் ஒப்புநோக்கத்தக்கது.

**நமது உடல் - நூல் முகம்**

இலக்கியம் அறிவியல், சமயம், விஞ்ஞானம் கல்வி, ஆராய்ச்சி, தன் வரலாறு, திறனாய்வு, பயண இலக்கியம், மானுடவியல் என பல்வேறு துறைகள் சார்ந்த நூல்களை எழுதிய பெருமைக்குரிய ந. சுப்புரெட்டியார் மனித உடல் பற்றிய சிந்தனைகளை வெளிப்படுத்தும் 'நமது உடல்' என்ற நூலை எழுதியுள்ளார். 1966 - ஆம் ஆண்டு திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணிபுரிந்தபோது திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் இந்நூலை வெளியிட்டுள்ளது. 'உடலினை உறுதி செய்' (புதிய ஆத்திச்சூடி, ப. 247) என்ற பாரதியாரின் கூற்றுப்படி பன்னிரு தலைப்புகளில், உடலுறுப்புகளின் செயல்பாடுகளை வரைபடங்கள் மற்றும் மருத்துவத் துறைக்கான கலைச்சொற்களுடன் 153 பக்கங்களோடு படிப்போருக்கு பயன் தரும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**உடலின் உறுதி உடையவரே**

**உலகில் இன்பம் உடையவராம் (மலரும் மாலையும், உடல் நலம் பேணல், ப. 1)**

என்கிறார் கவிமணி. திருமூலரும் "உடம்பார் அழியின் உயிரார் அழிவர்" (திருமந்திரம், பா. 724) என்று கூறுகிறார். இவ்வுலகில் நாம் நலமுடன் வாழ உடலைப் பற்றி அறிந்து கொள்ளுதல் அவசியமாகும். தமிழ்மொழியில் உடலைப் பற்றிய நூல்கள் அதிக அளவில் இல்லை எனலாம். அவ்வாறு தெரிந்து கொள்ள வேண்டுமானால் மருத்துவத்துறை சார்ந்த கல்வியைப் பயிலவேண்டும் என்ற நிலை உள்ளது. இந்நிலையைப் போக்க பேராசிரியரின் இந்நூல் உதவிபுரியும். அறிவியலறிஞர்கள் கண்டறிந்து விளக்கியுள்ள அரிய செய்திகள் அனைத்தும் சாதாரண மக்களும், பள்ளி மாணவர்களும் அறிந்து கொள்ளும் வகையில் உள்ளது இந்நூலின் சிறப்பாகும்.

**உயிர் அணுக்கள்**

ஆண்டவன் படைப்பில் அகிலத்திலுள்ள பல்வேறு உயிரினங்களிடையேயும் ஒற்றுமைக் கூறு அமைந்துள்ளது. உயிரினங்கள் யாவும் உயிரணுக்கள் எனப்படும் மிகச் சிறிய அலகுகளால் ஆனவை. பருத்த யானை பன்னூறு கோடி உயிரணுக்களால் ஆனது. உடல் முழுவதும் ஒரே அளவிலான மிகச்சிறிய பிராணிகளும் உள்ளன. அவ்வாறே நம்முடைய உடலும் கோடிக்கணக்கான உயிரணுக்களால் உண்டாக்கப்பட்டதாகும்.

**ஒருவரின் பரம்பரை நோய்கள், குணங்கள் மற்றும் தோற்றங்கள் ஆகியவை உயிரணுக்களைச் சார்ந்தே அமைகிறது. உயிரணுக்களின் வடிவம், செயல்திறத்தை பற்றி கணக்கிடும் பொறியில் ஆயிரக்கணக்கான பகுதிகள் உள்ளன. ஆனால், அவற்றின் தொகை நூற்றுக்கணக்கான கோடிக்கு மேல் தொகையைக் கொண்ட உயிரணுக்களாலாகிய நமது உடலுக்கு முன்னர் சரி சமமாக நிற்க முடியாது. கணக்கிடும்பொறி பழுதுபட்டால் அதை சரிப்படுத்த பழுது பார்ப்பவர் ஒருவருக்காகக் காத்திருக்க வேண்டும். ஆனால், நமது உடலில் ஏற்படும் ஒரு சிறு ஊறு அல்லது வெட்டினை நமது உடலே சரிப்படுத்திக் கொண்டு விடும். (நமது உடல், ப. 13)**

என்று கூறுவது சுப்புரெட்டியார் மருத்துவ அறிவை வெளிப்படுத்துகிறது.

**உடல் உறுப்புகள் பற்றிய அறிவியல்**

உடல் என்றால் நம் அனைவருக்கும் நினைவில் வருவது உயிர், உள்ளம். நோய் என்று உடலில் வருத்தம் ஏற்பட்டால்தான் அவற்றிற்கான காரணத்தை அறிய முற்படுவோம். ஆனால் நோய் வருமுன் காப்பதே சிறந்த வழி. அதனால் தான் ஒவ்வொருவருக்கும் உடல் பற்றிய அறிவு அவசியம். அறிவின் நுட்பமான மலர்ச்சியே அறிவியலாகும். தமிழிலக்கியங்கள் இயற்கை சார்ந்த உடல்ரீதியான தமிழ் மருத்துவ முறைகளைப் பேசுகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தோல்**

தோல் பகுதியில் தோலின் செயல்பாட்டை விளக்குகிறார் பேராசிரியர். நம்முடைய உடலை உற்று நோக்கினால் முதலில் காணப்படுவது தோல். ஒரு சராசரி இளைஞனுடைய உடல் கிட்டத்தட்ட 18 சதுர அடி அளவு தோலினால் மூடப்பட்டிருக்கும் என்று அறிவியலறிஞர்கள் கணக்கிட்டுள்ளனர். நமது உடலில் தோல் இடத்திற்கு இடம் கணத்தில் வேறுபடுகின்றது. தோலின் அமைப்பு அதில் காணப்படும் வியர்வை சுரப்பிகள், வேர்வை கால்கள், மயிர்க்கால்கள், உரோமக் குழிகள், நிறமிகள் ஆகியவற்றின் செயல்கள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அடித்தோலில் காணப்படும் பல நரம்புகளின் அமைப்பு காரணமாகத் தோல் புலனை அறியும் உள்ளுறுப்பாகவும் செயல்படுகின்றது. இந்த புலனுணர்வு தான் ஊற்றுணர்வு எனப்படுகிறது. வன்மை, மென்மை, தட்பம், வெப்பம் போன்றவற்றை அறிவதற்குத் துணையாக இருப்பது ஊற்றுணர்வே ஆகும். மக்கள் தோலை உடலின் உறுப்பாக கருதுவதில்லை. அதன் செயல்களை கவனிக்குமிடத்தே அஃது ஒரு உறுப்பாகும் என்பது பேராசிரியரின் கருத்து.

**எலும்புகள்**

எலும்புகள் நமது உடலிலுள்ள நுட்பமான பகுதிகளைப் பாதுகாக்கின்றன.

**என்பி லதனை வெயில்போலக் காயுமே**

**அன்பி லதனை அறம் (குறள். 77)**

எலும்பு இல்லாத புழுவை வெயில் காய்ந்து வருத்துவது போல் அன்பு இல்லாத உயிரை அறம் வருத்தும் என்கிறது திருக்குறள். மண்டையோடு மிக நுட்பமான மூளையைப் பாதுகாக்கும் சிறிய பெட்டிபோல் அமைந்துள்ளது. மண்டையோட்டின் முன்புறத்திலுள்ள இரண்டு எலும்புக் குழிகள் கண்களைப் பாதுகாக்கின்றன. முதுகுத்தண்டு ஓர் எலும்பு குழல் போல் அமைந்து முதுகு நடு நரம்பினை பாதுகாக்கின்றது. விலா எலும்புகள் மார்பெலும்புடன் முதுகு தண்டுடனும் சேர்ந்து விரிந்து சுருங்கும் ஒரு கூடு போல் அமைந்து இதயத்தையும் நுரையீரல்களையும் பாதுகாக்கின்றன. ஒருவருக்கு விலா எலும்புகள் இல்லாதிருந்து அவர் யாராவது ஒருவருடன் முட்டி மோதினால் ஒரு சிறிய மோதுதலே நுரையீரல்களைக் குலைத்து விடும், அல்லது இதயத்திற்கு ஊறு விளைவித்து விடும். இடுப்பெலும்புக் கூட்டிலுள்ள எலும்புகளும் விரிந்த நிலையில் இருப்பதால் அவை அடிவயிற்றின் கீழ்ப்பகுதியிலுள்ள முக்கியமான உள்ளுறுப்புகளை நன்கு பாதுகாக்கின்றன. (நமது உடல், ப. 20)

மனித உடலில் 206 எலும்புகள் உள்ளதையும், அதன் அமைப்பு, அவற்றின் வேதிப்பொருட்கள், அதனால் உடலுக்கு ஏற்படும் நன்மைகளையும் இப்பகுதியில் ஆழமாக எடுத்தியம்பியுள்ளார். எலும்பு மண்டலத்தின் அமைப்பை பற்றி கூறுகையில்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **வட்டரங்குக் கூடாரத்தின் (Circus Tent) அடியிலுள்ள நீண்ட கழிகளைத் திடீரென்று அகற்றினால், கூடாரம் குலைந்து விழுவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். நீண்ட கழிகள் மிருதுவான எளிதில் துவளக்கூடிய கித்தானைத் தாங்கி நிற்கின்றன. அன்றியும், அவை கூடாரத்திற்கு ஒரு வடிவத்தைத் தரவும் துணை செய்கின்றன. அவ்வாறே நமது எலும்புக் கூட்டிலுள்ள எலும்புகளும் உடலின் மிக மிருதுவான பகுதிகளைத் தாங்கி நிற்கின்றன. உடலுக்கும் அவை ஒரு பொது வடிவத்தை நல்குகின்றன. நமது உடலில் எலும்புக் கூட்டினைத் திடீரென்று நீக்கினால், உடல் தரையில் ஒரு வடிவமற்ற பிண்டமாக விழுந்துவிடும். (நமது உடல், ப.18)**

என்று கூறியிருப்பது பேராசிரியர் அறிவியல் அறிவோடு உவமையைக் கூறி புரியவைக்க முயற்சித்துள்ளார் என்பது புலனாகிறது.

**தசை மண்டலம்**

உடலிலுள்ள எலும்புகள் யாவும் தாமாக அசைய முடியாது. நமது உடலின் தசைகளே அவற்றை இயக்குகின்றன. நமது எலும்புக்கூட்டின் பல்வேறு பகுதிகளையும் இயக்குவதற்கு நமது உடலில் 600-க்கும் மேற்பட்ட தசைகள் இருக்கின்றன. நமது உடலின் எடையில் பாதிக்குமேல் தசைகளினால் ஏற்பட்டதாகும். தசை இழையக் கொத்துக்கள் இறுகப் பிணைந்துதான் தசைகளாகின்றன. தசைகள் இருவகைப்படும். 1. **இயக்கு தசைகள்** – (Voluntary muscles) எலும்புக்கூட்டை இயக்கும் தசைகள் நம் விருப்பப்படி இயக்குதல் கூடும். இத்தசைகள் இயக்கு தசைகள் என்று வழங்கப் படுகின்றன. கண்கள், நாக்கு, மெல்லண்ணம், உணவுக்குழலின் மேற்பகுதி ஆகியவற்றை இயக்கும் தசைகள் இவ்வகையாகும். 2. **இயங்கு தசைகள் -** (Involuntary muscles) நமது விருப்பப்படி இயக்க முடியாத தசைகளும் நமது உடலில் இருக்கின்றன. இந்த தசைகள் இயங்கு தசைகள் எனப்படும். இவ்வகைத் தசைகள் குருதியின் வடிகுழல், பாய்குழற் சுவர்கள், இரைப்பை, குடல்கள், பித்த நீர்ப்பை, உணவுக் குழலின் கீழ்ப்பகுதிகள் மற்றும் பல உள்ளுறுப்புகள் ஆகியவற்றில் காணப்படுகின்றன. நமது தோலிலுள்ள ஆயிரக்கணக்கான நுண்ணிய இயங்கு தசைகள் மயிரினை இயக்குகின்றன. நாம் குளிரினால் அல்லது பயத்தினால் பீடிக்கப்பெறும்பொழுது தோலின் மீதுள்ள சிறிய தசைகள் மயிர்களை விரைத்து நிற்கச் செய்வதைக் காணலாம்.

**மூளையும் நரம்பும்**

மனித உடலில் எத்தனை உறுப்புகள் இருந்தாலும் மூளை முக்கியத்துவம் வாய்ந்தது. இது உடலின் மைய நரம்பு மண்டலத்தின் ஒரு பகுதியாகும். தகவல்களைப் பெறுவதற்கும், அனுப்புவதற்கும் அதிக திறனை கொண்டுள்ளது மூளைப்பகுதி. மூளையின் அமைப்பானது மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை முன்மூளை, நடுமூளை, பின்மூளை என்று


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தனித்தனியாகப் பிரிக்கப்பட்டுள்ளன. உடலின் ஆற்றலை அதிகரிக்கக்கூடியது மூளை பகுதியாகும்.

**பெருமூளை - சிறுமூளை**

நினைவு நிலைச் செயல்கள் (Conscious) யாவும் பெருமூளையால் கட்டுபடுத்தப் பெறுகின்றன. நாம் செய்திகளை நினைவிற்குக் கொண்டு வருவதற்கும், பொருட்களை பாகுபடுத்தி உணர்ந்து அறிவதற்கும், பிரச்சனைகளுக்கு தீர்வு காண்பதற்கும், கருத்துகளைப் புரிந்து கொள்வதற்கும் இப்பகுதி துணை செய்கின்றது. சிறுமூளை தசையின் இயக்கங்களை இணக்கப்படுத்துகின்றது. நாம் பழக்கங்களைக் கற்றுக் கொள்வதற்கும் நம்மிடம் திறன்கள் வளர்ச்சியுறுவதற்கும் உரிய ஆற்றலைத் தருவதற்கு இச்சிறுமூளை பொறுப்பாக உள்ளது. மூளையின் செயல்பாட்டைப் பற்றி கூறும் ஆசிரியர் தலைவனின் கட்டளைகளுக்கேற்ப பணியாற்றும் போர்வீரர்களைப் போல் மூளை செயல்படுகிறது என்கிறார். இவற்றைத்தவிர நரப்பான்கள் (Neurons) இயக்க நரம்புகள், மறிவினைகள் பற்றிய செய்திகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளது.

**ஐம்புலன்கள்**

கண், செவி, வாய், மூக்கு, மெய் என்னும் ஐம்புலன்கள் வழியாக ஒளி, ஓசை, சுவை, நாற்றம், ஊறு என்னும் ஐந்தும் நுகரப்படும். இதைத்தான் திருவள்ளுவர்,

**கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள (குறள். 1101)**

கண்டும் கேட்டும் உண்டும் முகர்ந்தும் தொட்டும் நுகரப்படும் ஐம்புலன் இன்பங்களும் ஒளி மிக்க வளையணிந்த பெண்ணிடம் உள்ளது என்கிறார். 'புலன்' என்ற சொல்லுக்குப் பொருட்களைப் புலப்படச் செய்யும் அறிவு என்பது பொருள்.

**பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு**
**மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன**
**மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்**
**பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய்ச் சொரியுமே (திருமந்திரம், பா. 1883)**

அதாவது பார்ப்பசு வாகிய ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தும் மார்க்கத்தை அறிந்து நாம் நம் புலன்களை நம் வசப்படுத்தினால் கர்மேந்திரியங்கலான நம் புலன்கள் ஞானந்திரியமாக மாறி அதனால் நமக்கு அமுதம் கிடைக்கும் என்பது திருமூலரின் வாக்கு. புலன்களின் துணைகொண்டே நம்மைச் சுற்றிலுமுள்ள உலகினை அறிந்து கொள்ளுகின்றோம். 'புலன்களே அறிவின் வாயில்கள்' என்று மில்ட்டன் என்ற ஒரு ஆங்கிலக் கவிஞர் கூறியுள்ளார். (நமது உடல், ப. 68) என்று எடுத்துக்காட்டியுள்ள சுப்புரெட்டியார் ஐம்புலன்களின் செயல்பாட்டை அறிவியல் துணைக்கொண்டு உறுப்புகளின் செயல்பாடாக இந்நூலில் கூறியுள்ளார். அதாவது

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

’புலனறிவு’ செயலில் பல படிகள் உள்ளன. நம் பொறிகளில் (Sense Organs) ஏதாவது ஒன்றிலுள்ள நரம்புகளில் ஒரு தூண்டல் ஏற்படுகின்றது. பொறியிலுள்ள நரம்புத் துடிப்புகள் மூளைக்கு செல்லுகின்றன. மூளையில் இத்துடிப்புகள் புலனுணர்ச்சியாக (Sensation) விளக்கம் பெறுகின்றன. உதாரணமாக நம்முடைய விரலொன்றை ஊசியால் குத்தும் பொழுது, நம்முடைய தோலிலுள்ள நரம்பு முடிவுகள் தூண்டப்பெறுவதால் துடிப்புகள் மூளையை அடைகின்றன. இத்துடிப்புகளையே மூளை வழியாக உணர்கின்றது. மூளை இத்துடிப்புகளை வலி என்று உணர்ந்தாலும், வலி மூளையில் இருப்பதாக உணர பெறுவதில்லை. அது விரலிலேயே அஃதாவது பொறியிலேயே இருப்பதாக உணரப் பெறுகின்றது. சுவை உணர்வைப் பற்றி கூறுகையில், பண்டையோர் சுவைகளை அறுசுவை என்று வகுத்திருந்த போதிலும் ஆராய்ச்சியாளர்கள் அவற்றை இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கைப்பு என நான்காகவே வகைப்படுத்தியுள்ளனர். மருத்துவம் படித்தவர்களைக் காட்டிலும் சிறப்பான ஒரு அறிவியல் விளக்கம் கூறியிருப்பது போற்றுதற்குரியதாக உள்ளது.

**செரிவுறுப்பு மண்டலம்**

உடலிலுள்ள இரத்தம் இழையங்களிலுள்ள உயிரணுக்களுக்கு ஊட்டப் பொருளைக் கொண்டு செல்கிறது. இந்த ஊட்டப் பொருள் நாம் உண்ணும் உணவின் மூலம் கிடைக்கிறது. வாயில் போட்டு உண்ணும் உணவு பொருள்களின் வடிவில் இரத்தம் உணவுப் பொருளைக் கொண்டு செல்வதில்லை. அங்ஙனம் கொண்டு செல்லவும் முடியாது. உணவுப்பொருட்கள் இழையங்களுக்கு ஊட்டம் தரும் நிலையை அடைவதற்கு முன்னர், அவற்றில் பெருமாற்றம் ஏற்படல் வேண்டும். நாம் உண்ணும் உணவு ஊட்டம் தருதற்கேற்ற நிலையில் மாற்றம் அடைவதைத்தான் செரிமானம் (Digestion) என்று வழங்குகிறோம். உணவுப் பொருளினால் தேவைப்படும் உப்புச் சத்துக்களை உடலுக்கு வழங்குவதையும், உணவுப் பாதைகளின் இயக்கம் செயல்படுவதையும் செறிவுறுப்பு மண்டலம் மேற்கொள்கின்றது.

**இரத்த ஓட்ட மண்டலம்**

மனித உடலில் உள்ள உறுப்புகளில் மிகவும் நுட்பமாக திறனுடன் இயங்குவது இதயம். இது நமது உடலெங்கும் இரத்தத்தைக் கொண்டு செல்வதற்குக் காரணமான உறுப்பாகும். இதயம் மார்பின் நடுவில் கூம்பு வடிவத்துடன் தசையினால் ஆனது. நிமிடம் ஒன்றுக்கு எழுபது முறை நாம் பிறந்தநாள் தொட்டு இறக்கும் வரையிலும் சுருங்கி விரியும் தன்மை உடையது. இவற்றை இதயத்துடிப்பு (Heartbeat) என்கிறோம். நாளொன்றுக்கு 1, 00, 000-க்கும் மேற்பட்ட இதயத்துடிப்பு நிகழ்ந்து அவற்றின் மூலம் சுமார் இரண்டரை அவுன்சு அளவுள்ள இரத்தம் பெரும் பாய்க்குழல் (Aorta) வழியாக நமது உடலெங்கும் பரவி நாம் உயிர் வாழ உதவி புரிகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பன்னெடுங்காலமாக நமது உடலில் இதயத்துடிப்பும், நாடித்துடிப்பும் அறிவியல் மனப்பான்மை உள்ள மக்களின் கவனத்தைக் கவர்ந்து வந்துள்ளது. கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக உடல் கூற்றியலை (Anatomy) மக்கள் ஓரளவு கற்று வந்த போதிலும் பதினேழாவது நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் கி.பி 1618 - ல் வில்லியம் ஹார்வி (William Harvey) என்ற ஆங்கில அறிவியலறிஞர் முதன்முதலாக நமது உடலின் ரத்த ஓட்டத்தைப் பற்றிய விவரங்களை உலகிற்கு உணர்த்தினார். (நமது உடல், ப. 104)**

என்று குறிப்பிட்டு இரத்தவோட்ட மண்டலம் பற்றிய விவரங்களையும் ந. சுப்புரெட்டியார் விளக்கியுள்ளார்.

**மூச்சுறுப்பு மண்டலம்**

இதயத்துடிப்பு இரத்த ஓட்டம் ஆகியவற்றைப் போலவே சுவாசித்தலும் உயிரைப் பாதுகாப்பதற்கு மிகவும் இன்றியமையாதது.

**‘பல் போனால் சொல் போச்சு’ என்பது போன்று, ‘மூச்சு நின்றால் உயிர் போச்சு’ என்பார்கள். நமது உடலில் உள்ள உயிரணுக்களுக்கு உயிரியம் (Oxygen) தேவை. அந்த உயிரியத்தைத் நாம் காற்றிலிருந்துதான் பெறுகின்றோம். பிரணாயாமம் யோகப்பயிற்சிகளால் உடலின் உள்ளே சிலவகை சுரப்பிகளைத் தூண்டி அமிர்தம் எனப்படும் உயர்ந்த சுரப்பிநீர்களைச் சுரக்கவைத்து அதன்மூலம் சுத்திபெறுதல். (தமிழிலக்கியத்தில் சித்தமருத்துவம், ப. 281)**

மூச்சுறுப்பு மண்டலம் எனும் தலைப்பின்கீழ் மூக்குத் துளைகள், முன் தொண்டை, குரல்வளை, மூச்சுக்குழல், மூச்சுக் கிளைக்குழல், மூச்சுச் சிற்றறைகள் போன்ற உறுப்புகளின் செயல்களை வரைபடங்களுடன் விளக்கியுள்ளது வியக்கும் வண்ணம் உள்ளது.

**கழிவு மண்டலம்**

உயிர் வாழ உட்கொள்ளும் உணவு பொருள்கள் அனைத்தும் சத்துப் பொருளாக மாறுகிறது. ஆனாலும் வேதியியல் மாற்றம் பெறும் உணவு பொருட்கள் பெருமளவு கழிவுப் பொருட்களாகவே வெளியேறி விடுகின்றன. அதற்காக உதவும் உறுப்புகளில் தோல், பெருங்குடல், நுரையீரல், சிறுநீரகம் ஆகிய உறுப்புகளையே கழிவு மண்டலம் என்கிறோம்.

**நமது உடலும் உள்ளமும்**

மனிதன் என்பவன் மனதால் இயங்குபவன். மேற்கூறிய உடலுறுப்புகள் யாவும் உடலை சார்ந்த செயல்பாடாகவும், அவற்றை இயக்கும் வலிமை உயிருக்கு உண்டென்பதும் நாம் அறிந்த உண்மை. உடற்பொறியில் அமைந்த உள்ளம் சேர்ந்து ’ஆள்’ ஆகின்றது. உடலின் பகுதிகள் யாவும் சேர்ந்த உடற்பொறியில் உள்ளம் அமைந்த ’ஆள்’ யாவரும் ஒருவர் போல் மற்றவர்கள் இருப்பதில்லை. நடத்தை, வழக்கம், மனப்போக்கு, எண்ணங்கள், நோக்கங்கள்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கருத்துகள், நம்பிக்கைகள், மனப்பான்மைகள் இவை அனைத்தும் கலந்து நிற்கும் மனப்பாங்கு ஆளுக்கு ஆள் மாறுபட்டிருக்கும்.

**உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்**
**உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்**
**உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று**
**உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே (திருமந்திரம், பா. 705)**

இப்பாடலில் திருமூலர், உடல் இறைவனின் உடைமை என்கிறார். பாற்கலத்தைப் பால் நோக்கிப் பேணுவதைப் போன்று, உடம்பில் இறைவன் கோயில் கொண்டுள்ளான் என்னும் உண்மை உணர்ந்து பேணி பாதுகாக்க வேண்டும் என்கிறார். உடல் சீராக இருப்பின் உள்ளத்தில் எண்ணங்கள் நன்மை பயக்கும். மானுட உடம்பின் மகத்துவத்தை மனித மனதில் பதிய வைத்த ஆசான் திருமூலர். ந. சுப்புரெட்டியார் உடலும் உள்ளமும் என்ற தலைப்பில் கூறப்படும் செய்திகள் பெரும்பாலும் திருமூலர் கூறும் உடல்நலச் சிந்தனையுடன் தொடர்புடையதாக அமைந்துள்ளது.

**உடலோம்பல்**

உடல் இறைவனின் கொடை. அவற்றைப் பேணிப் பாதுகாப்பது நமது கடமையாகும். 'காயமே இது பொய்யடா, வெறும் காற்றடைத்த பையடா' என்பது சித்தர்களின் வாக்கு. இவ்வழி பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரும் உடலோம்பல் என்ற தலைப்பின்கீழ் உடல்நலத்திற்கான சிந்தனைகளை வழங்கியுள்ளார். நம்முடைய தசைகளை நன்னிலையில் வைத்துக்கொள்வதற்கு உடற்பயிற்சி தேவை. நமது உடம்பின் பெரும்பங்கு தசைகளாலானது என்பதை நினைவில் வைத்துக்கொண்டால், தசைப்பயிற்சியின் இன்றியமையாமை ஓரளவுக்கு தெளிவாகும். உடற்பயிற்சியால் இதயம் இரத்தத்தை விரைவாகப் பீய்ச்சுகின்கிறது. இதனால் இழையங்களில் உள்ள சிறு சிறு இரத்தக் குழல்களிலும் ரத்தம் நன்கு பாய்ந்து அப்பகுதிகள் நன்கு ஊட்டம் பெறுகின்றன என்று நாள்தோறும் உடற்பயிற்சியின் அவசியத்தை கூறுகின்றார்.

**உடற்பயிற்சி**

தற்காலச் சூழலில் மக்களிடையே உடலுழைப்பு குறைந்து வருகிறது. காரணம் மனிதனுக்கு ஓய்வு கொடுக்கும் வகையில் மனிதனால் உருவாக்கப்பட்ட இயந்திரக் கருவிகளாகும். இதனால் மனித உடல் பருமன் ஏற்படுவதோடு பல நோய்கள் ஏற்பட வாய்ப்பாக உள்ளது. குறிப்பிட்ட கால இடைவெளியில்,

**உடற்பயிற்சிகள் செய்வதன் மூலம், உடலில் வளர்சிதை மாற்றம் ஏற்பட்டு நன்மை பயக்கிறது. நமது உடலில் பல முக்கிய சதைக்கோளங்கள் உள்ளன. அவைகளிலிருந்து வெளிப்படும் ஹார்மோன்கள்தான் இரத்ததுடன் கலந்து நோய்கிருமிகளைக்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கொல்லுகின்றது. இவைகள் நன்கு வேலை செய்தால் நோய் வருவதில்லை. இந்த சுரப்பிகளுக்கு சக்தியைக் கொடுக்கக்கூடியது யோகாசனமே. (ஆரோக்கிய வாழ்வு 15)**

உடற்பயிற்சியால் சீரான சுவாசம் ஏற்படுகின்றது. இதனால் நுரையீரல்களில் சாதாரணமாக இயங்காத சில சிற்றறைகளும் இயங்கி அவற்றில் உள்ள கரியமிலவாயு முற்றிலும் நீங்கி விடுகின்றது. போதுமான அளவில் செய்து வரும் உடற்பயிற்சி உடலுக்கு வளத்தினை நல்குகின்றதேயன்றிச் சோர்வினை ஒருகாலும் விளைவிப்பதில்லை. சிறுபிள்ளைகளை ஓடியாடி விளையாட வேண்டும். வகுப்பறை உள்ளத்திற்கு உணவு அளிப்பது போல் விளையாடுமிடம் உடலுக்கு வளமை நல்கும்.

**ஓய்வு**

உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் ஓய்வு என்பது அவசியமானது. அடுத்த கட்ட நகர்வுக்கு ஓய்வு ஒன்றே அடிப்படை. மனிதனும் மற்ற உயிர்களுக்கும் ஓய்வு என்பது தூக்கத்தை அடிப்படையாகக் கொண்டு அமைகிறது. ஆடம்பர வாழ்வு, பணம், பொருள் மீது ஆசை, பதவி மோகம் என நவீனயுக மனிதன் ஊண் உறக்கமின்றி அலைகின்ற வாழ்வை பெற்றுள்ளான். அதனால் உடலுக்கும் மனதிற்கும் ஓய்வு தேவை. நமது உடலிலுள்ள தசைகள் தொடர்ந்து செயல்படுவதால், அல்லது அளவுக்கு மீறிய பளுவினைத் தாங்குவதால் நமது உடலில் அதிகமான கழிவுப் பொருள்கள் உண்டாகின்றன. இவை நேரிடுங்கால் உடலுக்கு ஓய்வு தேவைப்படுகின்றது. உறக்கம் மனிதனுக்கு அமைதியைத் தருகிறது. நாம் நாடோறும் தேவையான அளவு உறங்க வேண்டும் என்பது பேராசிரியரின் கருத்தாகும்.

**தோலின் பாதுகாப்பு**

உடலைப் பாதுகாக்கும் பணியில் முதலிடம் பெறுவது தோல். இயற்கையின் பாதிப்பினாலும், நோய்க்கிருமிகளாலும் பாதிப்புக்கு உள்ளாகும்போது நமது அழகும் ஆரோக்கியமும் பாதிக்கும் சூழல் ஏற்படுகின்றது. எடுத்துக்காட்டாக தோலின் மீது உண்டாகும் நோய்க் கிருமிகளின் தொற்றினால் கட்டிகள், காளான் போன்றவற்றால் தோல் நோய்கள் உண்டாகின்றன. இவற்றை சரி செய்ய நாடோறும் ஒரு முறையாவது நாம் நன்றாகத் தேய்த்து குளிக்க வேண்டும். நல்ல சோப்பை பயன்படுத்தலாம். சோப்பிற்கு பதிலாக பாசிப்பயற்றம் மாவை உபயோகிப்பது மிகவும் சிறந்தது. இது தோலுக்கு இன்றியமையாதது. வாரம் ஒருமுறை எண்ணெய் தேய்த்துக் குளித்தால் வியர்வை துவாரங்களை அடைத்து கொண்டிருக்கும் கரையாத அழுக்குகளும் கரைந்து தூய்மையாகும். தோளில் ஏதாவது தொற்று நேரிட்டால் மருத்துவரை கலந்து ஆலோசிக்க வேண்டும்.

**கண்களின் பாதுகாப்பு**

கண்ணில் சிறந்த உறுப்பில்லை என்பது ஆன்றோர் வாக்கு. அப்படியானால் உலக உயிர்களின் இயக்கத்திற்கு கண் எவ்வளவு அவசியம் என்பதை அறிய முடிகிறது.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழும் உயிர்க்கு (குறள். 392)**

என்ற குறளில் எண்ணென்று சொல்லப்படுவனவும், ஏனைய எழுத்து என்று சொல்லப்படுவன ஆகிய இரண்டும் வாழும் உயிர்களுக்கு கண்கள் என்கிறார். தலைசிறந்த உறுப்பாகிய கண்ணினை ஒளி, தூசு, கண்நோய்கள் ஆகியவற்றிலிருந்து காப்பாற்ற வேண்டும். கண்களுக்கு ஏதாவது ஊறு நேர்ந்தால் நாமாகவே மருத்துவத்தை மேற்கொள்வது நல்லதல்ல. கண் மருத்துவரை நாடி தக்க சிகிச்சை மேற்கொள்ளுதல் வேண்டும் என்கிறார் பேராசிரியர்.

**பற்களின் பாதுகாப்பு**

வாய் உடலின் நுழைவாயில் ஆகும். வாயின் செயல்பாட்டிற்குப் பற்களே துணை புரிகின்றன. 'பல்லோடு வாழ்ந்தால் பல்லாண்டு சிரிக்கலாம்' என்ற பழமொழி பற்களின் அவசியத்தை உணர்த்துகின்றன. எனவே பற்களுக்கு நோய்க்கிருமிகளால் தீமை வராத வண்ணம் பாதுகாக்க வேண்டும். நோய் கிருமிகளினால் உண்டாகும் அமிலங்கள் பற்சிற்பியைத் தாக்கி அவற்றில் வெடிப்புகளை உண்டாக்குகின்றன. இதனால் சொத்தைப் பற்கள் உண்டாகின்றன. அதனால் காலை இரவு என இரண்டு வேளைகளிலும் பல் துலக்குதல் வேண்டும். நல்ல மணமுள்ள பற்பொடி, கருவேலம், வேப்பங்குச்சி, ஆலம் விழுதுகள் ஆகியவற்றைக் கொண்டு பற்களைத் துலக்கலாம்.

**கலைச் சொற்கள்**

அகட்டு நீர் (Gastric juice) – இரைப்பையில் சுரக்கும் ஒரு செரிமான நீர். அகட்டுப்பாகு (Chyme) – இரைப்பையில் செரிமானம் ஆகிக் கூழ் நிலையிலுள்ள உணவு. அங்கவாடி எலும்பு (Stirrup) – இடைச் செவியிலுள்ள மூன்று எலும்புகளில் ஒன்று. அடித்தோல் (Dermis) – தோலின் ஒரு பகுதி. இதயத் துடிப்பு (Heart beat) – இதயம் நிமிடம் ஒன்றுக்குச் சுமார் 70 தடவைகள் சுருங்கி விரிகின்றது. இழையம் (Tissue) – பல உயிரணுக்கள் ஒன்று சுரந்து உண்டாகும் உடலின் ஒரு பகுதி. உணவுப் பாதை (Alimentary canal) – வாயிலிருந்து தொடங்கி உணவுக் குழல், இரைப்பை, சிறு குடல், பெருங்குடல், மலக்குடல், ஆகியவை உட்பட எருவாய்வரையில் உடலிலுள்ள பகுதி. உதரவிதானம் (Diaphragm) – மார்பிற்கும் வயிற்றிற்கும் இடையிலுள்ள தசையாலான சுவர். உமிழ்நீர்சுரப்பிகள் (Salvary glands) - பக்கத்திற்கு மூன்றாக வாயில் இரு புறங்களிலும் அமைந்துள்ள ஆறு சுரப்பிகள். உயிரணு (Cell) – உயிர்ப் பொருளின் மிகச் சிறிய பகுதி. இவை போன்ற அறிவியல் கலைச்சொற்கள் அதிகமாக இந்நூலில் இடம் பெற்றுள்ளது ஆசிரியரின் அறிவியல் அறிவையும், தமிழ்மொழி பற்றையும் நன்கு அறியச் செய்கிறது.

**முடிவுரை**

உலகத்தில் காணப்படும் அனைத்து உயிர்களை விட மனிதராய் பிறத்தலே மேன்மையானதாகக் கருதப்படுகின்றது. 'அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது' என்பது

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


அவ்வையின் முதுமொழி. அச்சிறப்பு மிக்க மனிதன் உடலில் ஏதேனும் குறையுடன் பிறந்தாலோ அல்லது நோய்களுடன் வாழ்ந்தாலோ வாழ்நாள் நரகமாகி விடுகிறது. இந்நிலை மாற மனிதனுக்கு தன் உடல் மீதான அக்கறையும், விழிப்புணர்வும் அவசியம். நம் உடல் பல்வேறு நோய்களால் தாக்கப்பட்டு துன்புறுகின்றது. நோயினால் பீடிக்காத உடல் எங்ஙனமே இருக்க முடியாது. ஓரளவு நம்மால் நோய் வராமல் பாதுகாக்க முடியும். இன்றையச் சூழலில் எண்ணிலடங்கா நோய்கள் கண்ணுக்குத் தெரியாத நுண்கிருமிகளால் உலக மக்கள் அனைவருமே பாதிக்கப்பட்டுள்ளனர். மனித உடலின் அகப்புற பகுதிகள் நவீன உலகின் விரைவான வாழ்க்கை முறைகளாலும், முறையற்ற உணவுப் பழக்க வழக்கத்தாலும் பாதிப்படைந்துள்ளன. இதனால் ஆரோக்கியம் குறைந்து நோய்களின் தாக்கம் அதிகரிக்கின்றது. உடல் நலத்தைப் பேணுவதற்கு பல்வேறு முறைகள் காணப்பட்டாலும் ஒவ்வொரு மனிதனும் தன் உடல் பற்றி அறிதல் அவசியமாகும். இந்நூலில் காணப்படும் செய்திகள் நம் உடலின் மீதான அறிவை தெளிவுபடுத்தி நோய்களை வருமுன் காப்பதற்கு வழிவகை செய்யும். ‘நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்’ என்பதை உணர்த்தும் வகையில் மனிதகுலம் நலம் பெற விழையும் மருந்து மரமாகவும், பயன்மிகு கனிமரமாகவும் தமிழுக்குத் தொண்டு செய்த ந. சுப்புரெட்டியாரின் மருத்துவச் சிந்தனைகளைப் பறைசாற்றும் வண்ணம் அமைந்துள்ளது.

### குறிப்பு நூல்கள்


[1] இரா. ஆண்டியப்பன். *ஆரோக்கிய வாழ்வு.* திருநெல்வேலி, எட்டாவது பதிப்பு, 1981.

[2] ப. இராமநாதபிள்ளை. *திருமந்திரம் மூவாயிரம்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், சென்னை - 18.

[3] கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை. *மலரும் மாலையும்.* பாரிநிலையம், சென்னை - 108, பத்தாம் பதிப்பு, 1986.

[4] ந. சுப்புரெட்டியார். *நமது உடல்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை – 18, முதற்பதிப்பு, 1966.

[5] பாரதியார் கவிதைகள். *புதிய ஆத்திச்சூடி.* கங்கை புத்தக நிலையம், சென்னை - 17, இரண்டாம் பதிப்பு, 1999.

[6] ப. முருகன். *திருக்குறள்.* நியு செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை - 98.

[7] மூலிகைமணி வெங்கடேசன். *தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்.* சக்தி பதிப்பகம், சென்னை - 84, முதற்பதிப்பு, 1998.

[8] ராமகிருஷ்ண தபோவனம். *தாயுமானவர் பாடல்கள்.* திருப்பராய்த்துறை - 639115, இரண்டாம் பதிப்பு, 1980.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**References**

[1] R. Aandiyappan. *Aarokkiya Vaazhvu.* Thirunelveli, Eigth Edition, 1981.
[2] P. Ramanatha Pillai. *Thirumandhiram Moovaayiram.* Tirunelveli Saiva Sidddanta Noorpathipppu Kazhagam, Chennai - 18.
[3] Kavimani Dhesiya Vinayagam Pillai. *Malarum Maalaiyaum*. Paari Nilayam, Chennai - 108, Tenth Edition, 1986.
[4] N. Subbu Reddiyar. *Namathu Udal*. Thirunelveli Saiva Sidddanta Noorpathipppu Kazhagam, Chennai – 18. First Edition. 1966.
[5] Bharathiar Kavithaigal. *Puthiya Aathisoodi*. Gangai Putthaga Nilayam, Chennai - 17, Second Edition, 1999.
[6] P. Murugan. *Thirukkural*. New Century Book House (P) Ltd, Chennai - 98.
[7] Mooligai Mani Venkatesan. *Tamil Ilakkiyathil Siddha Maruthuvam*. Sakthi Pathipagam, Chennai – 84, First Edition,1998.
[8] Ramakrishna Thabovanam. *Thayumanavar Padalgal*. Thiruparaaithurai - 639115, Second Edition, 1980.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வையில் *தொல்காப்பியம்*

## N.Subbureddiar's Critical Perspective of *Tolkaappiyam*

**முனைவர் மு. சங்கர்**, உதவிப்பேராசிரியர், தமிழியல் துறை,
ஸ்ரீ காளீஸ்வரி கல்லூரி, சிவகாசி - 626130, விருதுநகர், தமிழ்நாடு, இந்தியா
**Dr. M. Sankar**, Assistant Professor of Tamil, Sri Kaliswari College, Sivakasi - 626130, Virudhunagar, Tamil Nadu, India
**ORCiD: https://orcid.org/0000-0003-4981-8615**
**DOI: 10.5281/zenodo.7251977**

### Abstract

*Professor N. Subbu Reddiar is a well known Tamil scholar. He is a great man who volunteered for Tamil Literature for his lifetime. He has put a strong foothold in the field of Tamil. He is not only an expert in a particular field, but he is well versed in various fields related to Tamil language and Literature. He involved himself in Vaishnavism and has written many books on devotional literature, science and education. He has also written science books for children. He has written excellent works on Tamil tradition, culture, philosophy and theology. Due to his commitment and respect for Tamil Language and Literature, Professor N. Subbu Reddiar established Department of Tamil at Sri Venkateswara University, Tirupathi. He has written 136 books during his lifetime and they are great researchers. They include "Tolkaappiam Kattum Vazhkkai", "Agathinai Kolgaikal", "Illara Neri", "Kavithai Payirrum Murai", "Paattu Thiran", "Ariviyal Nookkil Ilakkiyam, Samayam, Thatthuvam", "Vedic References in Cankam Literature" etc., The study of such works written by Professor N. Subbu Reddiar is extensive. Among them, his desire is on Tolkaappiya Porulathikarm. Professor's critical views can be found in two of his books, "Tolkaappiam Kattum Vazhkkai", "Agathinai Kolgaikal". Hence this article is based on "Tolkaappiam Kattum Vazhkkai", and aims to find out what are his critical views upon the chosen subject.*

**Keywords:** Professor N. Subbu Reddiar, *Tolkaappiyam*, *Agathinai Kolgaikal*, Critical view.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நன்கறியப்பட்ட தமிழ் அறிஞர். தம் வாழ்நாள் முழுவதும் தமிழுக்குத் தொண்டாற்றிய பெருந்தகை. தமிழியல் துறைகளில் வலுவாகக் கால் பதித்தவர். குறிப்பிட்ட ஒரு துறையில் மட்டும் வல்லுநராக இல்லாமல், பல்வேறு துறைகளில் தடம்பதித்தவர். குறிப்பாக, உளவியல், கல்வியியல், தமிழியல், ஒப்பியல், சமயவியல் உள்ளிட்ட துறைகளைக் குறிப்பிடலாம். வைணவத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர். அறிவியல் தொடர்பாகவும் கல்வியியல் தொடர்பாகவும் பக்தி இலக்கியங்கள் தொடர்பாகவும்*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*நூல்களை எழுதியுள்ளார். சிறுவர்களுக்கான அறிவியல் நூல்களையும் எழுதியுள்ளார். தமிழ்ச் சிந்தனை மரபுகள், பண்பாடு, தத்துவம், இறையியல் பற்றியெல்லாம் மிகச் சிறந்த ஆக்கங்களை வழங்கியவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கிய பெருமைக்குரியவர். இவர் தமது வாழ்நாளில் எழுதிய 136 நூல்கள் ஆய்வாளர்களுக்கு உற்றதுணையாக அமைகின்றன. இந்நூல்கள் நாட்டுடைமையாக்கப் பட்டுள்ளன. திரு.வி.க. விருது, திருக்குறள் விருது, கலைமாமணி விருது உள்ளிட்ட விருதுகளைப் பெற்ற பெருந்தகை. இவர் "அகத்திணைக் கொள்கைகள்", "அணுவின் ஆக்கம்", "ஆழ்வார்களின் ஆராஅமுது", "இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்", "கண்ணன் பாட்டுத் திறன்", "சைவ சமய விளக்கு", "சைவ சித்தாந்தம் - ஓர் அறிமுகம்", "தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை", "கல்வி உளவியல்", "கவிஞன் உள்ளம்", "கவிதை பயிற்றும் முறை" முதலிய நூல்களை எழுதியுள்ளார். இத்தகைய சிறப்பிற்குரிய பேராசிரியரின் ஆய்வுத்தடம் பரந்துபட்டது. அவற்றுள், ஒன்றே தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் மீது பேராசிரியர் கொண்ட அவா. பேராசிரியரின் திறனாய்வுப் பார்வையைத் "தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை", "அகத்திணைக் கொள்கைகள்" ஆகிய நூல்கள் மூலம் அறியலாம். அவரது திறனாய்வுப் பார்வை எத்தன்மைத்தாக அமைந்துள்ளது என்பதைக் கண்டறிவதை நோக்கமாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப்பெறுகின்றது. தொல்காப்பியத் திறனாய்வில் மிகச் சிறந்தவராகத் திகழும் ந. சுப்புரெட்டியாரின் திறனாய்வு நோக்கினைத் துணிந்து கூறும் திறன், உலகியல் வழக்கோடு அணுகும் திறன், பரந்துபட்ட நூலறிவு, நிலைபேறு, நூலாசிரியரின் நோக்கத்தை வெளிக்கொணர்தல், நடப்பியல் சார்ந்த வாசிப்புமுறை, தருக்கவியல் முறை, உடலியல், உளவியல், சைவசித்தாந்தம் பற்றிய புலமை, வடமொழியோடு ஒப்பிட்டுப் பார்த்தல் உள்ளிட்ட உட்தலைப்புகளில் காண்பதாக இக்கட்டுரை அமைகின்றது.*

**குறிப்புச்சொற்கள்:** ந.சுப்புரெட்டியார், *தொல்காப்பியம், அகத்திணைக் கொள்கைகள்* திறனாய்வு.

**தோற்றுவாய்**

உலகில் தோன்றிய ஒவ்வொரு மொழியும் தமக்கே உரித்தான சிறப்பியல்புகளைக் கொண்டிருக்கும். அது அம்மொழி பேசும் மக்களின் வாழ்வியலோடும் சூழ்நிலையோடும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

ஒத்துப் போகும் இயல்புடையது. அதனால்தான் தமிழரின் புலமை ஏனையோரின் புலமையை விட மேலோங்கியதாகக் காணப்பெறுகின்றது. இதனால்தான், தமிழ்மொழியைச் செவ்வியல் மொழி என்றும் தனித்தியங்கும் தன்மையுடையது என்றும் உயர்தனிச் செம்மொழி என்றும் அழைக்கின்றனர். இந்நிலைக்குக் காரணம், தமிழில் தோன்றிய இலக்கண, இலக்கியங்களே. தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் மொழிக்கு மட்டும் இலக்கணம் கூறுவதோடு நில்லாமல் மக்களின் வாழ்வியலுக்கும் இலக்கணம் கூறுகின்றது. தமிழுக்குக் கிடைத்த முதல் நூலான *தொல்காப்பியம்* பற்றிப் பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன; நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. பல்வேறு அறிஞர்களின் உழைப்பாலேயே *தொல்காப்பியம்* இன்று உலக்கத்தார் போற்றும் வண்ணம் ஒளிர்கின்றது எனலாம். தொல்காப்பியப் பதிப்புகள் பற்றியும் தொல்காப்பியர் பற்றியும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் பற்றியும் தொல்காப்பியக் கொள்கைகள் பற்றியும் நிரம்ப ஆய்வுகள் தமிழ் கூறு நல்லுலகில் மேற்கொள்ளப்பெற்றுள்ளன. புன்னைவன நாத முதலியார், கா.சுப்பிரமணிய பிள்ளை, மயிலை. சீனி.வேங்கடசாமி நாட்டார், எஸ்.வையாபுரிப்பிள்ளை, க.வெள்ளைவாரணர், வ.சுப.மாணிக்கம், ந.சுப்பிரமணியன், க.சுப்பிரமணியன், சோ.ந.கந்தசாமி, தமிழண்ணல், சுபாஷ் சந்திரபோஸ் உள்ளிட்டோர் தொல்காப்பியரின் சிந்தனைகளைச் சீர்தூக்கி ஆராய்ந்துள்ளனர். இவ்வறிஞர்கள் வரிசையில் ந.சுப்புரெட்டியாருக்கும் குறிப்பிடத்தக்க இடமுண்டு. இக்கட்டுரையின் முதன்மை நோக்கம் ந. சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வையில் *தொல்காப்பியம்* மிளர்வதைக் காண்பதாகும்.

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் திருச்சியில் உள்ள பெரகம்பி எனும் ஊரில் பிறந்தார். இவர் திருச்சியில் உள்ள சூசையப்பர் கல்லூரியில் வேதியியலில் இளம் அறிவியல் பட்டமும் சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப்பட்டமும் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். இவர்தம் தமிழ்ப்பணியாக, 1960 இல் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை நிறுவியமையைக் குறிப்பிடலாம். இவர் 130 க்கும் மேற்பட்ட தமிழ் சார்ந்தும் அறிவியல் சார்ந்தும் நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள், அகத்திணைக் கொள்கைகள், இல்லற நெறி, கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, குயில் பாட்டு ஒரு மதிப்பீடு, சைவ சமய விளக்கு, தமிழ் இலக்கியத்தில் அறம், நீதி முறைமை, தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, அணுவின் ஆக்கம், அணுக்கரு பௌதீகம், அறிவியல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தமிழ், அறிவியல் பயிற்றும் முறை, அறிவியல் விருந்து முதலிய நூல்கள் அன்னாரது பன்முகத் தன்மையைப் பறைசாற்றுகின்றன.

**திறனாய்வாளராக.....**

**1. துணிந்து கூறும் திறன்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எந்தக் கருத்தைக் கூறினாலும் சான்றாதாரங்களைக் காட்டி, அவற்றைத் துணிந்து கூறும் திறனுடையவராக உள்ளார். இதனை,

> **ஐந்திணைக்கும் பெரும்பொழுது சிறுபொழுதுகள் பகுக்கப்பெற்றது அவ்வந் நிலத்திற்கேற்ப இப்பொழுதுகள் தலைவன் தலைவியர் மாட்டுத் தோன்றும் காமக் குறிப்பைச் சிறப்பித்தல் பற்றியதாகும் என்பது உணர்தற்பாலது. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 43)**

என்று கூறுவதன் மூலம் அறிந்து கொள்ளலாம். இதில் இளம்பூரணர் கருத்தை மேற்கோள் காட்டியும் நச்சினார்க்கினியர் கருத்தைக் கூறியும் நிறுவியுள்ளார்.

ஆரிய மணமாகிய கந்தர்வத்திற்கும் தமிழரின் களவு மணத்திற்கும் உள்ள வேற்றுமையை ந.சுப்புரெட்டியார் கூறுகையில்,

> **கந்தர்வ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோன்றும். அதன் பயிற்சியால் உள்ளப் புணர்ச்சி நிலை பெற்றுச் சாகுமளவும் காதலர்கள் கூடி வாழ்தலும் உண்டு; உள்ளப் புணர்ச்சி தோன்றாது. தம் எதிர்ப்பட்டவரைக் கூடி மாறுதலும் உண்டு. சிந்தாமணியில் காணும் சீவகன் - தேசிகப் பாவை கூட்டம் இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். என்றும் பிரியாநிலையில் நிறை கடவாது அன்பினாற் கூடும் உள்ளப் புணர்ச்சியே களவொழுக்கத்தின் சிறப்பியல்பாகும். இதுவே தமிழியல் கூறும் களவொழுக்கத்திற்கும் வடநூல் குறிப்பிடும் கந்தர்வ மணத்திற்கும் உள்ள உயிர்நிலையாய வேற்றுமையாகும் (அகத்திணைக் கொள்கைகள், ப. 57)**

என்கின்றார். களவு மற்றும் கற்பு பற்றிய சிந்தனை ந.சுப்புரெட்டியாரின் புலமைத் திறனைக் காட்டுகின்றது. தொல்காப்பியர் கரணம் பற்றிக் குறிப்பிடும்போது,

> **பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
> **ஐயர் யாத்தனர் கரணம் என்ப (தொல்.பொருள்., நூ.143)**

என்கின்றார். இதற்கு விளக்கம் தர முற்பட்ட ந.சுப்பு ரெட்டியார், “இந்நூற்பாவில் இரண்டு விதமான குறிப்புகள் உள்ளன என்று கூறி, அவற்றுள் ஒன்று பூர்வீகப் பண்புடையது.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மற்றொன்று அயற்பண்புடையது" என்கின்றார். பூர்வீகப் பண்புடைய திருமணம் உள்ளேயே உயர்ந்தோரால் நிகழ்த்தப்பெற்றது என்றும் **ஐயர் யாத்தனர் கரணம்** என்பது அயற்பண்புடையது என்றும் கூறுகின்றார் (Vedic References in Cankam Literature, P.143).

**2. உலக வழக்கியல்**

ந.சுப்பு ரெட்டியார் உலக வழக்கோடு தொடர்புபடுத்தித் தமது கருத்தைக் கூறுகின்றார். இதனைத் *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை* என்ற நூலில் திருமணம் நிகழும் இடத்தைக் குறிப்பிடும்போது,

> **தலைவியின் வீட்டார் மகட்கொடைக்கு இசைந்த பின்னர் தலைவியின் வீட்டிலேயே திருமணம் நடைபெற்றது. இதனை மேற்குறிப்பிட்ட 'பூரண பொற்குடம் வைக்க' என்ற திருச்சிற்றம்பலக்கோவைப் பாட்டால் அறியலாம். *மணிமேகலை, சீவகசிந்தாமணி, நைடதம், இராமாயணம், பாரதம், திருவிளையாடற்புராணம்* முதலிய இலக்கியங்களில் கூறப்பெறும் திருமண நிகழ்ச்சிக் குறிப்புக்களும் திருமணம் பெண் வீட்டில் நடைபெற்றதையே உறுதிப்படுத்துகின்றன. இன்றும் செல்வர் வீட்டுத் திருமணம் பெரும்பாலும் மணமகள் வீட்டிலேயே நடைபெற்று வருதல் உலக இயல்பாக இருத்தலை நாம் காண்கின்றோம் (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பக்.181, 182)**

என்கின்றார். இதைப் போலவே, "முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை" (தொல்.பொருள்., அகத். நூ. 37) என்ற நூற்பாவிற்கு விளக்கம் கூறவந்த பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்,

> **தலைவியை உடன்கூட்டிச் செல்லும் புலனெறி வழக்காகச் சான்றோர் செய்யுட்களை இயற்றவில்லையாதலின், அவ்வழக்கம் தமிழர்களிடையே என்றும் இருந்ததில்லை என்று கருத வேண்டியுள்ளது. இன்றும் செட்டி நாடு போன்ற பகுதிகளில் வாழும் தனவணிகரும் அவரைச் சார்ந்த பிறரும் மலேயா போன்ற பிற நாடுகளுக்குச் செல்லும் பொழுது உரிமை மகளிரைக் கூட்டிச் செல்வதில்லை (தொல்காப்பியம் காட்டு வாழ்க்கை, ப. 203)**

என்கின்றார். மேற்குறிப்பிட்ட சான்றுகள் அவரது உலகியல் அறிவைப் புலப்படுத்துகின்றன. பேராசிரியர் தமது இல்லற நெறி என்ற நூலில் இன்று மக்கள் பொருளாதாரப் பொருத்தம் பார்க்கின்றனர். அதாவது பரிசத்தை அதிகமாக வற்புறுத்துகின்றனர் என்கின்றார். அப்போது, மெய்ப்பாட்டியல் கூறும், ஒத்த பிறப்பு, ஒத்த ஒழுக்கம், ஒத்த ஆண்மை, ஒத்த வயது, ஒத்த உரு, ஒத்த அன்பு, ஒத்த நிறை, ஒத்த அருள், ஒத்த அறிவு, ஒத்த செல்வம் என்ற

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பத்துப்பொருத்தங்களைக் குறிப்பிடுகின்றார் (இல்லற நெறி, ப.122). இப்பொருத்தங்களை மக்கள் இன்று பார்ப்பதில்லையே என்று ஆதங்கப்படுகின்றார்.

### 3. பரந்துபட்ட நூலறிவு

ஒரு நூலை ஆய்வு செய்யும் ஆய்வாளராக இருந்தாலும் சரி, அந்நூலின் நிறை, குறையைக் கூறும் திறனாய்வாளராக இருந்தாலும் சரி பரந்துபட்ட நூலறிவும் பழுத்த புலமையும் உடையவராக இருத்தல் வேண்டும் என்பர். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் நன்கு புலமையுடையவராக இருக்கின்றார். மேலும், தொல்காப்பியத்தை உளவியல், உயிரியல் முதலிய அறிவியல் துறைகளின் தலைசிறந்த நூல்களில் இருந்தும் தமிழின் தலைசிறந்த இலக்கியங்களில் இருந்தும் வடமொழி நூல்களில் இருந்தும் மேற்கோள்கள் காட்டுகின்றார். பேராசிரியர் தமது *தொல்காப்பியம்* காட்டும் வாழ்க்கையில், தொல்காப்பியத்தைப் பல்வேறு இலக்கிய, இலக்கணங்களோடு தொடர்புபடுத்திப் பேசுகின்றார். *புறப்பொருள் வெண்பா மாலை, சீவகசிந்தாமணி, திருவாசகம், திருக்கோவையார், திருக்குறள், அகப்பொருள் விளக்கம், கம்பராமாயணம், பழந்தமிழ் இலக்கியங்கள், தொனியாலோகம்* முதலிய நூல்களில் இருந்து மேற்கோள்கள் காட்டியுள்ளார்.

அகத்துறைகள் எவ்வாறு பக்தி இலக்கியங்களுக்குப் பாடுபொருள்களாக அமைந்தன? என்பது பற்றி ந.சுப்புரெட்டியார் கூறுகையில்,

> **உயர்ந்த அன்பு நிலையை வெளிப்படுத்துவதற்கு அகத்துறைகளைவிட உயர்ந்த இடம் பிறிதின்று. எனவே, முழு முதற் கடவுளிடத்துப் பேரன்பு செலுத்தி ஆடிப்பாடி நெஞ்சு நெக்குருகி அகங்கரைந்த அடியார்களும்கூட, அக்கடவுளையும் தம்மையும் தலைவன் தலைவியர்களாகக் கொண்டு இவ்வகத் துறைகள் வாயிலாகவே பக்தி என்னும் பெருவெள்ளத்தில் இழிந்து மூழ்கிக் களிப்பாராயினர். கடவுளிடத்துச் செலுத்தும் காமப்பகுதியைப் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்திருப்பினும், அதன் பொருட்கூறுகள் யாவும் அகத்திணைத் தொடர்புடையனவாகவே அமைந்திருக்கின்றன. இந்த அருமை பெருமைகளைத் *தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப்பிரபந்தம்* முதலிய நூல்களால் அறியலாம். எனவே, சிற்றின்பத்திற்கு மட்டுமின்றிப் பேரின்பக் கடலில் இறங்குவதற்கும் இந்த**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **அகத்துறைகள் உரிமைபூண்டுத் திகழ்வன என்பதை இளம் மாணாக்கர்கள் நன்கு உணர்தல் வேண்டும். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 171)**

என்கின்றார். தொல்காப்பிய அகத்துறைகளை நாயன்மார்களும் ஆழ்வார்களும் எதற்காக எடுத்தாண்டனர்? என்பதைப் பேராசிரியரின் இக்கூற்றால் அறிந்துகொள்ளலாம்.

இறை நம்பிக்கை தமிழர்களிடம் இருந்த தன்மையைக் குறிப்பிடும்போது, **இறைவன் ஒருவன் உண்டு என்ற உண்மை தமிழர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. தானலாது உலகம் இல்லை; சகமலாது அடிமையில்லை (அப்பர் தேவாரம், திருவையாறு பதிகம், 4. 40: 1)** என்று அப்பர் பெருமான் கூறியதற்கேற்பத் தமிழர்கள் இறையின்றி உலகம் இல்லை என்று நம்பினர். இதனால்தான் தொல்காப்பியர் முதற்பொருளாகிய நிலத்தைக் கூறவந்த இடத்திலேயே தமிழர்கள் இன்றியமையாததாகக் கருதிய கருப்பொருளாகிய தெய்வ வழிபாட்டையும் குறிப்பிட்டனர். இதனை, "மாயோன் மேய" (தொல். பொருள். அகத்.2) என்ற நூற்பாவால் அறியலாம் (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 55) என்கின்றார். ஆகத் தொல்காப்பியர் வகுத்த கருப்பொருள் தமிழரின் வாழ்வியலோடு பொருந்தி வருகின்றதை உய்த்துணரமுடிகின்றது. இப்பகுதிகளில் இருந்து சுப்புரெட்டியார் பக்தி இலக்கியங்கள் மீது கொண்ட ஈடுபாடு நன்கு புலனாகும்.

### 4. நூலின் நிலைபேற்றுத் தன்மையை வெளிக்கொணர்தல்

கால வெள்ளத்தில் பல நூற்கள் அழிந்துவிடுகின்றன. ஆனால், *தொல்காப்பியம்* இன்றும் நிலைபெற்று நிலைத்து நிற்கின்றது. அதற்குக் காரணம் அதன் தொன்மையே ஆகும். பழந்தமிழரின் வாழ்வியல் சிறப்புகளை எடுத்துக்காட்டும் நூலாகவும் *தொல்காப்பியம்* திகழ்கின்றது. இதனைப் பேராசிரியரின் அகத்திணைக் கொள்கைகள், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, காதல் ஓவியங்கள், முத்தொள்ளாயிர விளக்கம், இல்லற நெறி, கவிதை அனுபவம் உள்ளிட்ட நூல்களில் இருந்து உணரலாம்.

தமிழ் இலக்கியத்தில் நோக்கு எனும் செய்யுளுறுப்புக்கு நுட்பமான எடுத்துக்காட்டுகள் எத்தனை வேண்டுமானாலும் தரலாம் என்று கூறிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்,

> **செய்யுள் உறுப்பினுள் ஒன்றாகிய நோக்கு என்பதற்குப் பேராசிரியர் "முல்லை வைந்நுனை" என்ற அகப்பாட்டை எடுத்துக்காட்டித் தம் நுண்மாண் நுழைபுலம் தோன்றக் கூறியிருக்கும் அரிய உரையும் ஈண்டு சிந்திக்கற்பாலது. ஒரு செய்யுளின் அடியில் வந்துள்ள சொல்லின் பொருளை நன்கு அறிவதற்கு அந்த அடியின் பொருளை**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**அறிவதுடன், அச்செய்யுளில் எத்தனை அடிகள் வந்திருந்தாலும் அவற்றை முழுவதும் அறிந்தாலன்றி அச்சொல்லின் பொருளைத் தெளிவாக அறிந்து கொள்ள இயலாது.**

**(கவிதை பயிற்றும் முறை, ப. 38)**

என்று கூறி விளக்கிச் செல்லும் திறன் பாராட்டற்குரியது.

**5. மூல நூலாசிரியரின் நோக்கத்தை வெளிக்கொணர்தல்**

தமிழர் வாழ்வியலோடு ஒட்டி அமைந்த இலக்கியத்திற்கும் இலக்கணம் கூறும் நூலாகத் *தொல்காப்பியம்* அமைந்துள்ளது. குறிப்பாக, அதன் பொருளதிகாரம் அமைந்துள்ளது. பொருளதிகாரத்தின் நிலைத்த பகுதிகள் எவை? என்பதைப் பகுத்தறிந்து விளக்குகின்றார் ந.சுப்புரெட்டியார். *தொல்காப்பியம்* பயில்வோர்க்கு மயக்கத்தை உண்டுபண்ணும் பகுதிகளையும் உண்டுபண்ணாத பகுதிகளையும் வெளிக்காட்டி, மூல நூலாசிரியரின் நோக்கத்தை வெளிக்கொணர்வதாக அவரது ‘தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை’ எனும் நூல் அமைந்துள்ளது. தொல்காப்பியப் பொருளதிகாரம் பயில்வார்க்கு இந்நூல் ஒரு வரப்பிரசாதம். தொல்காப்பியச் செய்யுளுறுப்புக்களை விளக்கமுற்படும்போது முழுக்க முழுக்க ந.சுப்புரெட்டியாரின் திறனாய்வுப் பார்வைக் காணலாம். சான்றாக ஒரு பகுதியைக் காட்டலாம். தளையைத் தொல்காப்பியர் ஓர் உறுப்பாகக் கொள்ளவில்லை. அதற்கான காரணத்தைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் விளக்க முற்படுகின்றார்.

**இந்நூற்பாவில் தளை என்பது தனி உறுப்பாகக் குறிக்கப்பெறவில்லை. சீரொடு சீர் புணரச் சேர்த்தியற்றும் அடியில் நின்ற சீரின் ஈற்றசையுடன் வருஞ்சீரின் முதலசை ஒன்றியும் ஒன்றாமலும் வர இரு சீர்கள் இசைத் தொடர்ச்சியுறத் தம்முள் தளைத்து (கட்டப்பட்டு) நிற்றலே தளை என்பது சீரது தொழிலாகிய இத்தளையைச் செய்யுளுக்குரிய தனியுறுப்பாகக் கொள்ளாது சீராலாகிய அடியின் அமைப்பாகவே கொண்டு இலக்கணம் கூறுவர் தொல்காப்பியர் (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 340).**

இவ்வாறு மூலநூலாசிரியரின் நோக்கத்தைத் திறனாய்வாளன் என்ற முறையில் விளக்கமுற்பட்டுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

**6. நடப்பியல் சார்ந்த வாசிப்பு**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை நடப்பியல் சார்ந்த வாசிப்பு முறையில் எழுதிட முனைந்துள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆயுங்காலத்திலும் அவர்க்கு உளவியல், உயிரியல் முதலாய அறிவியல் துறைகள் மிகப் பயன்பட்டுள்ளன என்பதை இந்நூலில் காணலாம். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 7)**

என மு.வரதராசனார் தமது அணிந்துரையில் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கருத்தின் அடிப்படையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் வாசிப்புமுறை அமைகின்றது.

காதல் உணர்வு உயிர்கள் அனைத்திற்கும் பொது. அதனால்தான் தொல்காப்பியர்,

**எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**

**தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும் (தொல். பொருளியல், நூ. 27)**

என்கின்றார். இந்நூற்பாவை நடப்பியல் சூழலோடு பொருத்திக் காட்டுகின்றார் பேராசிரியர்.

**இன்பம் ஒருவனுக்கும் ஒருத்திக்கும் ஏற்படுத்தும் உறவு. ...பக்தி இயக்க காலத்தில் நாயக - நாயகி பாவனையாகக் குறியீடு இட்டு மகிழ்ந்தனர். சீவான்மா - பரமான்மா உணர்வு என்றும் கொண்டனர். ஆனால் இன்றைய மக்களில் பெரும்பாலோர் இந்தத் தெய்வீக உணர்வை மாசுபடச் செய்துவிட்டனர்; செய்தும் வருகின்றனர். ஆனால் ஒரு சிலர் இந்தக் காதலுணர்வைப் போற்றியும் வருகின்றனர். இந்த நிலைமைகளைப் புதுக்கவிஞர்கள் தம் கவிதைகளில் தோலுரித்துக் காட்டுகின்றனர். (பாட்டுத்திறன், ப. 388)**

என்கின்றார். இஃது அன்னாரின் நடப்பியல் சார்ந்த தொல்காப்பிய வாசிப்பைக் காட்டுகின்றது.

### 7. தருக்கவியல் சார்ந்த வாசிப்பு

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல் குறித்த செய்திகளைக் கூறும்போது, தருக்கவியல் முறையைப் பின்பற்றுகின்றார். அப்பகுதியைக் கீழே காண்போம். *தமிழ் இலக்கிய வரலாறு - தொல்காப்பியம்* என்ற நூலின் ஆசிரியர் நூன் மரபு பற்றிச் செய்யுளியலிலும் மரபியலிலும் காணப்பெறும் நூற்பாக்களை ஒப்ப வைத்து நோக்கின் இவ்விருவகை நூற்பாக்களும் சொல் நடையாலும் பொருளமைப்பாலும் தம்முள் வேறுபடுகின்றவென்றும் ஆகவே, இவை தொல்காப்பியனார் காலத்திற்குப் பின்பு இயற்றப்பெற்று வழங்கியவை என்றும் பிற்காலத்தவரால் எல்லா நூற்கும் உரிய பொதுப்பாயிரமாகத் தொல்காப்பியத்தின் இறுதியில் சேர்க்கப்பெற்றிருத்தல் வேண்டும் எனவும் பின்வந்த உரையாசிரியர்கள் இவற்றையும் தொல்காப்பியரின் வாய்மொழியெனவே கொண்டு உரையெழுத நேர்ந்ததெனவும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


எண்ணுதற்கு இடமுள்ளது என்றும் செய்யும் ஊகம் மிகவும் பொருத்தமென்றே தோன்றுகின்றது. இதனை வலியுறுத்த நன்னூலின் மயிலைநாதர் உரையிலிருந்தும் அவர் காட்டும் சான்று இதனை மேலும் வலியுறுத்துகின்றது. எனினும் நூலின் பொதுவிலக்கணத்தைக் கூறும் நூற்பாக்களையும் நூலின் அமைப்பினைக் கூறும் நூற்பாக்களையும் வேறு பிரித்து உணர வேண்டும் என்பது ஈண்டு அறியத்தக்கது (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பக். 380 - 381).

**புதுத்திறனாய்வில் பொலிவுறும் தொல்காப்பியம்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் உடலியல், உளவியல், உயிரியல், தத்துவவியல், தமிழியல், ஒப்பியல் முதலிய துறைகளில் தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பொருத்திப் பார்க்கின்றார். இதன் மூலம் அவரது ஒப்பியல் திறனை உணர்ந்து கொள்ளலாம்.

**உடலியல் சிந்தனை - பாலியல்**

தொல்காப்பியர் பூப்புக் காலத்தில் தலைமகளோடு தலைமகன் உடனுறைய வேண்டும் என்கின்றார். இதனைப்

**பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**
**நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்**
**பரத்தையிற் பிரிந்த காலை யான (தொல். கற்பு., நூ. 46)**

என்ற நூற்பா மூலம் காணலாம். இந்நூற்பாவிற்கு விளக்கம் கூறவந்த ந.சுப்புரெட்டியார் நச்சினார்க்கினியர், இறையனார் களவியலுரைக்காரர் ஆகியோர்தம் உரை விளக்கங்களை மேற்கோள்களாக எடுத்தாண்டு தமது கருத்தை முன்மொழிகின்றார்.

> **...இக்கருத்துக்களை இன்று கருத்தடை பற்றிப் பேசப்பெறும் கருத்துக்களுடன் ஒப்பு நோக்கி ஆராய்க. இயற்கைக் கருத்தடைக்காலம் (safe period) இன்னும் திட்டவட்டமாகக் கண்டுபிடிக்கப்பெறவில்லை. ஆயின், பண்டைத் தமிழர் இயற்கைக் கருத்தடை முறையைக் கண்டறிந்து வேண்டும்போது கருப்பெற்றும் வேண்டாதபோது கருத்தடை செய்தும் வாழ்ந்து வந்தனர் என்பதை அறிந்து இன்றைய தமிழர்கள் பெருமிதம் கொள்வார்களாக. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.199)**

என்று கூறியுள்ளார். இது குறித்து, விரிவாகக் கற்க பேராசிரியரின் மணமக்களுக்கு என்ற நூலினைப் படிக்கலாம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**உளவியல் நோக்கு**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் உளவியலில் ஈடுபாடு உடையவர் என்பதால் தமது ஆராய்ச்சியில் ஆங்காங்கு உளவியல் சார்ந்த சிந்தனைகளைப் புலப்படுத்தியுள்ளார். அகத்திணைக் கொள்கைகள் எனும் தமது ஆராய்ச்சி நூலில், **பருவம் நிரம்பிய ஆண்மையும் பெண்மையும் பார்த்ததும் உள்ளம் ஒன்றிக் காமப் பித்தேறுவதன் காரணம் யாது? உளவியலார் 'பாலுந்தல்' (Sex Drive, Freud) என்று கூறுவர். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 53)** என்கின்றார்.

**சைவ சித்தாந்தக் கொள்கை**

சைவ சித்தாந்தம் வலியுறுத்தும் பதி - பசு - பாசம் பற்றிய மெய்ப்பொருள்களைத் தொல்காப்பியத்தின் முப்பொருள்கள் பற்றி விளக்கும்போது விளக்கியுள்ளார். இது அவரது சைவ சித்தாந்த அறிவை வெளிப்படுத்துகின்றது. இதனை,

> **வடமொழியில் தத்துவங்கள் என்று வழங்கும் பொருள்களைத் தமிழர்கள் 'மெய்ப்பொருள்கள்'என்று குறிப்பிடுவர். மெய்ப்பொருள்களை 'முப்பொருள்கள்' என்றும் தொகுத்துப் பேசுவர். அவை கடவுள், உயிர், உலகம் என்று பகுத்துக் கூறப்படும். இந்த வாய்பாடுகள் பிற்காலத்தில் சிறிது மாற்றம் அடைந்துள்ளன. கடவுள் உயிருக்கு உயிராய் உயிர்தோறும் பதிந்து அவற்றை இயக்கும் முதல்வனாதலின் அவனைப் 'பதி' என்று வழங்கினர். உயிர்கள் சிற்றறிவுடையனவாய் ஒரு தலைவனைப் பெற்று இருப்பதால் அவை மனிதன் நடத்தும் மாக்கள் போன்றுள்ளன. அந்த மாக்களுள் சிறந்தவை பசுவாதலால், அவை 'பசுக்கள்' என்று கூறப்பெற்றன. உயிர்கள் கடவுளை அறியவொட்டாமல் அவற்றின் அறிவினை மலம், வினை, சடவுலக மூலமாகிய மாயை ஆகிய மூன்றும் மறைக்கின்றன. இவை நீரினை மறைக்கும் பாசம் போன்றிருத்தலால், அவற்றைப் பாசம் என்று குறித்தனர். எனவே கடவுள், உயிர், உலகம் என்ற வாய்பாட்டிற்குப் பதிலாகப் பதி, பசு, பாசம் என்ற வாய்பாடு வழக்கில் அமைந்தது. வடநூற்கொள்கைப்படி பதி என்பது தலைவனையும் பசு என்பது மும்மலத்தால் கட்டுண்ட உயிர்களையும் பாசம் என்பது உயிரினைப் பிணித்துள்ள மும்மலத்தையும் உணர்த்தும். இவற்றை இறை, உயிர், தளை என்று தமிழ்மொழியால் உணர்த்தலாம். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பக். 40-41)**

எனவரும் பகுதியால் உணரலாம். சைவ சித்தாந்த அறிவுப் புலத்தின் பின்னணியில் முப்பொருள் பற்றிய கோட்பாட்டை மேலும் விரிவாக ஆராய இடமுண்டு என்பதை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அன்னாரின் கூற்று நிரூபிக்கின்றது. பதி - பசு - பாசம் என்னும் சைவசித்தாந்தத்தின் மும்மலங்களுக்கும் முதல் - கரு - உரி எனும் தொல்காப்பியரின் முப்பொருள் கோட்பாட்டிற்கும் தொடர்புண்டு என்பது பேராசிரியரின் கருத்து.

**வடமொழியோடு ஒப்பிடல்**

ந.சுப்புரெட்டியார் தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தை வடமொழி இலக்கணத்தோடு ஒப்பிட்டு அதன் சீர்மையையும் நீர்மையையும் பார்க்கின்றார். “தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை” என்ற நூலில் குறிக்கோட்பொருள்கள் பற்றிக் குறிப்பிடும்போது பேராசிரியர்,

> **மக்களுக்கு உறுதிபயக்கக்கூடிய குறிக்கோட்பொருளைச் சமய நூலார் அறம், பொருள், இன்பம், வீடு என நான்காகப் பகுத்துப் பேசுவர். இவற்றை வடநூலார் தர்மம், அர்த்தம், காமம், மோட்சம் என்று கூறுவர். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.40)**

என்கின்றார்.

தொல்காப்பியர் குறிப்பிடும் இறைச்சிப் பொருளை வடமொழிக்காரர்களின் தொனிப் பொருளோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றார் ந.சுப்புரெட்டியார்.

> **வடமொழிவாணர்கள் தொனியை வஸ்துத தொனி, அலங்காரத் தொனி, ரஸத் தொனி என மூவகையாக வகுத்து, ஒவ்வொன்றையும் பலவாக விரித்துக் காட்டியுள்ளனர். அவ்வாறிருப்பினும் அம்மொழியில் அலங்கார நூலாருள் முற்பட்டவர், குறிப்புப்பொருள் (வியங்கியம்), சுவை (ரஸம்) முதலியவற்றை அணிகளினுட்படுத்தியே கூறியுள்ளனர். கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த பேரறிஞராகிய ஆனந்தவர்த்தனாசாரியார் என்பவரே குறிப்புப்பொருளின் சிறப்பினையுணர்ந்து, ‘த்வந்யா லோகம்’ என்னும் நூலொன்றினை எழுதி உலகிற்கு அறிவித்தார். அதன்பின் அவர் கொள்கையைப் பின்பற்றி மம்மட பட்டர், ஹேமச்சந்திரர் முதலியோர் காவ்யப்ரகாஸம், காவ்யாநுஸாஸனம் முதலிய நூல்களை இயற்றினர். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 229).**

குறிப்புப்பொருள் உத்திகளாகக் கருதப்படும் உள்ளுறையும் இறைச்சியும் வடமொழிவாணர்களின் தொனிப்பொருளோடு தொடர்புடையனவாக உள்ளன என்பதை இக்கூற்று வெளிப்படுத்துகின்றது. மேலும், மெய்ப்பாடு பற்றி விளக்கும்போது வடநூலாரின்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ரஸக் (Rasa) கொள்கையோடு ஒப்பிட்டு நோக்குகின்றார். இது பற்றி ந.சுப்பு ரெட்டியார் குறிப்பிடுகையில்,

**மக்கள் உள்ளத்தில் ஒவ்வொரு கால் எழும் உள வேறுபாடு பாவம் எனப்படும். பாவங்களுள் சில நிலைபெற்றிருக்கும்; பல சிறிது நேரம் நின்று மறையும். தனக்கு ஒற்றுமையுடையனவாகவும் வேற்றுமையுடையனவாகவுமாகிய பிற பாவங்களால் கேடுறாமல்.... (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 263)**

என்கின்றார். இப்பாவங்களைச் சகுந்தலையோடு ஒப்பு நோக்குகின்றார் பேராசிரியர்.

**துஷ்யந்தனுக்குச் சகுந்தலையும் சகுந்தலைக்குத் துஷ்யந்தனும் காதலுக்கு ஆலம்பனம். அக்காதல் தென்றல், நிலா, சோலை முதலியன உத்தீபன விபாவங்களால் எழும்பப்பட்டு, கண்ணீர்வார்தல், கடைக்கண்ணோக்குதல் முதலிய காரியங்களால் அனுபவப்பட்டு, விரைவு, நினைவு முதலிய சஞ்சாரி பாவங்களால் வளர்க்கப்பட்டு மனத்தில் நிலைபெறுகின்றது. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.264).**

தமிழரின் களவொழுக்கமும் ஆரியர்களின் காந்தருவ மணமும் வேறுபட்டது எனும் கருத்துடையவர் ந. சுப்புரெட்டியார். இதனை, "இல்லற நெறி" எனும் நூலில் தெளிவாகக் காட்டுகின்றார். இதனை இவண் மேற்கோள் காட்டுவம்.

**காந்தருவ வழக்கில் மெய்யுறு புணர்ச்சி முதற்கண் தோன்றுவது. அதன் பயிற்சியால் உள்ளப் புணர்ச்சி நிலைபெற்றுச் சாகுமளவும் கூடி வாழ்தலும் உண்டு. உள்ளப் புணர்ச்சி தோன்றாது தம் எதிர்ப்பட்டாரைக் கூடி மாறுதலும் உண்டு... என்று கூறி விளக்கமுற்பட்டுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் (இல்லற நெறி, ப. 527).**

**அறிவியல் பார்வை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அறிவியல் துறையில் பட்டம் பெற்றவர் என்பதால் அவருக்கு அத்துறையில் ஈடுபாடு உண்டு. இதனைப் பின்வரும் பகுதிகளால் அறியலாம்.

**முதற்பொருள் நிலம், காலம் என இரு வகைப்படும். ஆங்கிலத்தில் இவற்றை முறையே Space என்றும் Time என்றும் குறிப்பிடுவர். இவை இரண்டும் உலகத் தோற்றத்தைப் பற்றிய கருத்துக்களையும் இப்பூமண்டலத்தின் இயக்கத்தையும் விளக்குவதற்கு மிகவும் முக்கியமானவை. இவை இரண்டினையும் தொடர்புபடுத்தி ஐன்ஸ்டைன் என்ற உலகப் புகழ்பெற்ற அறிவியல் மேதை 'ஒப்பு நோக்குக் கொள்கை' என்ற புதிய கொள்கையைக் காட்டியுள்ளார் (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 41).**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **காலம் என்பது கற்பனைக்கு எட்டாத ஒரு பொருள். காலத்தைச் சரியாகக் கணக்கிட முடியாதென்பதைப் பண்டையாசிரியரும் கூறியிருக்கின்றனர். காலம் பற்றி அறிவியல் பெரியார் ஐன்ஸ்டைன் கொண்ட கருத்து இன்றைய அறிவியலறிஞர்களின் மனத்தையே கலக்கி இருக்கின்றது. ஏனைய பொருள்களை நேரடியாக அளப்பதைப் போலக் காலம் என்பதை நேரடியாக அளக்க முடியாது. காரணம், அஃது அருவப்பொருள். ஏனையவை உருவப் பொருள்கள். உருவமற்ற சில பொருள்களும் பொறியுணர்வால் உணரக்கூடியவை. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 50).**

தொல்காப்பியர், **"நிலம்தீ நீர்வளி விசும்பொடு ஐந்தும்/ கலந்த மயக்கம் உலகம்" (தொல். பொருள். மரபு., நூ. 91)** என்கின்றார். இதில் தொல்காப்பியரின் வேதியல் அறிவு வெளிப்படுவதாக ந.சுப்புரெட்டியார் குறிப்பிட்டுள்ளார். அதாவது மேற்குறிப்பிட்ட ஐந்து பொருள்களும் கலப்பதைப் பஞ்சீகரணம் என்று வேதாந்தம் கூறும். அவ்வாறு கலக்கும் பொருள்களையே அறிவியலார் தனிமங்கள் என்று பேசுவர் (தமிழில் அறிவியல் செல்வம், ப.17) என்றும் 'இந்திய தத்துவ தரிசனம் இவ்வுலகம் - ஏன் இந்த அகிலமே - ஐம்பெரும் பூதங்களால் ஆகியதாய்க் கூறுகின்றது' (அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம். ப.91) என்றும் உரைக்கின்றார்.

**மலர் - குறியீடு**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் தாவரவியல் பற்றிய சிந்தனையை *அகத்திணைக் கொள்கைகள்* என்ற நூலில் காணலாம்.

> **...லில்லி என்ற வெள்ளை மலரைக் கற்புக்குக் குறியாக வழங்கி வருதலானும் இயேசுப் பெருமானின் அன்னையின் கரத்திலுள்ள லில்லி மலர் அவளது கற்பின் தூய்மையைக் குறிப்பதாலும் ஐரோப்பியரிடையேயும் பண்டும் இன்றும் பூவால் கருத்துகளைக் குறிக்கும் வழக்கம் இருப்பதை உணரலாம். அன்புடையார் இருவர் பிரியுங்கால் அப்பிரிவைக் குறிக்க, 'பர்கெட்-மீ-நாட்' என்ற பூவைக் கொடுத்தலும் துக்கமிகுதியை 'வீப்பிங் வில்லோ' என்ற பூவாற் குறித்தலும் இன்றும் ஐரோப்பியர் வழக்கங்களாக இருத்தல் ஈண்டு ஒப்பு நோக்கி அறியத்தக்கவை. (அகத்திணைக் கொள்கைகள், பக். 41 - 42).**

இப்பகுதியில் மலர்கள் எவ்வாறு குறியீடுகளாக உள்ளன? என்பதைப் பேராசிரியரின் கூற்று வழி அறிந்துகொள்ள நேர்கின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ந.சுப்புரெட்டியார் குறித்த அறிஞர் மதிப்பீடு**

ந.சுப்புரெட்டியார் பன்முக ஆராய்ச்சித் திறத்தையும் திறனாய்வுப் பார்வையையும் அறிஞர்கள் பாராட்டிச் சிறப்பித்துள்ளனர். பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் பங்களிப்பை,

> **எழுதுந்துறை எதுவாயினும் அறிவியல் உறவாடுவதை இவர் தம் கைவண்ணத்திற் காணலாம். "அகத்திணைக் கொள்கைகள்" என்ற இவ்வகல நூலிலும் அறிவியல் உண்மைகள் படிந்துள. (அகத்திணைக் கொள்கைகள், ப.3)**

என வ.சுப.மாணிக்கனார் மதிப்பிடுகின்றார்.

**இறுவாய்**

தமிழியல் ஆய்வில் தனி மனிதர்களின் பங்களிப்புகளே முதன்மையானவையாக அமைந்துள்ளன. வரலாற்று ஆய்வாக இருந்தாலும் பதிப்புத்துறையாக இருந்தாலும் தனி மனிதர்களின் பங்களிப்புகளே மிகுதி எனலாம். இந்த வகையில் தமக்கென்று தனித்த முறையியலைப் பின்பற்றித் தமிழியல் ஆய்வுக்குப் பங்காற்றிய பெருந்தகை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். பல்துறை அறிவு நூல்களைத் தமிழில் பெருக்க வேண்டும் என்ற சிந்தனையோடு தமது வாழ்நாள் முழுவதும் செயல்பட்டவர். தமிழியலை அறிவியல் துறையோடு பொருத்திப் பார்க்கும் விதத்தில் இவரது திறனாய்வுப் பார்வை அமைந்திருந்தது. ஒப்பீட்டுத் திறனாய்வு அடிப்படையில் அறிவியல், தத்துவம், உளவியல், உயிரியல் போன்ற அறிவுப் புலங்களோடு தமிழைப் பொருத்திப் பார்க்கும் திறன் பாராட்டற்குரியது. அறிவியல் பூர்வமான ஆராய்ச்சியே உண்மையான சமுதாய மேம்பாட்டிற்கு அடிப்படையாக அமையும் என்பதைத் தமது திறனாய்வின் வழி நிரூபித்தவர். ஆக்கப் பூர்வமான தொல்காப்பிய ஆய்வுக்கு இவரது நூல்கள் வித்திடுகின்றன. பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் ஒட்டுமொத்த பார்வை நோக்குகையில், தொல்காப்பியத்தில் பல்துறைப்பட்ட செய்திகள் பொதித்துள்ளன என்ற மனப்போக்கு இருப்பதை அறியமுடிகின்றது. இருபதாம் நூற்றாண்டில் தொல்காப்பியத்தை விளங்கிக் கொள்ளும் நோக்கு நூல்களாக இவரது *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை* என்ற நூலும் *அகத்திணைக் கொள்கைகள்* என்ற நூலும் அமைந்துள்ளன.

**குறிப்பு நூல்கள்**

[1] ச.வே.சுப்பிரமணியன். *தொல்காப்பியம் - தெளிவுரை.* மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108, பத்தாம் பதிப்பு, அக்டோபர் 2009.

[2] ந.சுப்பு ரெட்டியார். *இல்லற நெறி.* தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சென்னை - 5, இரண்டாம் பதிப்பு, டிசம்பர் 1976.

[3] ந.சுப்பு ரெட்டியார். *கவிதை பயிற்றும் முறை*. பாரி நிலையம், 183, பிரகாசம் சாலை, சென்னை - 600 001, முதற்பதிப்பு, செப்டம்பர் 1983.

[4] ந.சுப்பு ரெட்டியார். *பாட்டுத் திறன்*. ஸ்டார் பிரசுரம், 72, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005, முதற் பதிப்பு, திசம்பர், 1988.

[5] ந.சுப்பு ரெட்டியார். *அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்*. பழனியப்பா பிரதர்ஸ், 14, பீட்டர்ஸ் சாலை, சென்னை - 600 014, முதற்பதிப்பு, மார்ச்சு 2001.

[6] ந.சுப்பு ரெட்டியார். *தமிழில் அறிவியல் செல்வம்*. மணிவாசகர் பதிப்பகம், 31, சிங்கர் தெரு, பாரி முனை, சென்னை - 600108, முதற் பதிப்பு, நவம்பர் 2002.

[7] ந.சுப்புரெட்டியார். *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை*. சந்தியா பதிப்பகம், அசோக் நகர், சென்னை - 600 083, முதற்பதிப்பு, 2011.

[8] ந.சுப்புரெட்டியார். *அகத்திணைக் கொள்கைகள்*. பாரி நிலையம், 184/88, பிராட்வே, சென்னை - 104, மறுபதிப்பு, 2016.

[9] ந.சுப்புரெட்டியார். சங்க இலக்கியத்தில் வேதக் குறிப்புகள். சேகரிக்கப்பட்ட ஆவணங்கள் பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை - 600 108, முதல் பதிப்பு, 1985.

[10] பிராய்ட், சிக்மண்ட். "உள்ளுணர்வு மற்றும் அவற்றின் மாறுபாடுகள்" *பிராய்டின் முழுமையான உளவியல் படைப்புகளின் நிலையான பதிப்பில்*, எஸ். எட் ஜே. ஸ்ட்ராச்சி, தி ஹோகார்த் பிரஸ், லண்டன், 109–140. 1915a.

## References

[1] S. V. Subramaniyan. *Tolkaappiyam - Telivurai*. Manivasagar Publication, 31, Singar Street, Parrys Corner, Chennai - 600 108, Tenth Edition, October 2009.

[2] N. Subbu Reddiar. *Illara Neri*. Tamil Puthagalayam, 576, Paicrafts Road, Chennai - 5, Second Edition, December 1976.

[3] N. Subbu Reddiar. *Kavithai Payirrum Murai*. Paari Nilayam, 183, Parakasam Road, Chennai - 600 001, First Edition, September 1983.

[4] N. Subbu Reddiar. *Paattu Thiran*. Star Perasuram, 72, Periya Vithi, Thiruvallikeni, Chennai – 600005, First Edition, December1988.

[5] N. Subbu Reddiar. *Ariviyal Nookkil Ilakkiyam, Samayam, Thatthuvam*. Palaniyappa Brothers, 14, Peters Road, Chennai - 600 014, First Edition, March 2001.

[6] N. Subbu Reddiar. *Tamilil Ariviyal Selvam*. Manivasagar Publication, Singar Street, Parrys Corner, Chennai - 600 108, First Edition, November 2002.

[7] N. Subbu Reddiar. *Tholkappiam Kattum Vazhkkai*. Sandhya Publications, Ashok Nagar, Chennai

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

- 600083, First Edition, 2011.

[8] N. Subbu Reddiar. *Agathinai Kolgaikal*. Pari Nilayam, 184/83, Broadway, Chennai - 104, Re Print, 2016.

[9] N. Subbu Reddiar. *Vedic References in Cankam Literature*. Collected Papers, Paari Nilayam, 184, Parkasam Saalai, Madras-600 108, First Edition, 1985.

[10] Freud, S. *Instincts and their Vicissitudes. The Standard Edition of the Complete Psychological Works of Sigmund Freud* (Vol. 14). Ed. J. Strachey, The Hogarth Press, London, 109–140, 1915a.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன் / I thank N. Subbu Reddiar Trust and IJTLLS for giving me this opportunity.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந.சுப்புரெட்டியாரும் பயிற்றலின் அடிப்படை விதிகளும்
## Subbu Reddiar and the Basic Laws of Teaching

**முனைவர் ப. சத்யா**, கௌரவ விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அரசினர் மகளிர் கல்லூரி, கும்பகோணம், தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. P. Sathya,** Guest Lecturer in Tamil, Government College for Women, Kumbakonam, Thanjavur, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-3727-0250**
**DOI: 10.5281/zenodo.7251591**

**Abstract**

*It is a well-known fact that Tamil is the most ancient of all the languages of the world. Hence, it is conferred the status of classical language. To its credit, it has a huge volume of literary works and grammar books dating back to the pre-Christian era and down to the present age. The richness and the greatness of a language are mainly decided by the good books written in that language. For a language to continue to exist, its written and spoken forms should be in practice. The Tamil language has both these characteristics. Besides knowing the subject and the methodology of teaching, the teachers need to be acquainted with the rules and regulations of teaching. Teachers should also know how important their standpoint is in teaching. Teaching is a kind of exercise that the teacher imparts to the students based on the environment which surrounds the students. The teacher must unite the student with the outside world. Education is very important for a society to flourish. It plays a vital role in shaping the future of society. The teacher must create learned men and women. Professor N. Subbu Reddiar opines that teachers should be aware of the basic laws of teaching when they try to bring students to the outside world. Teachers help students get exposed to the world outside. If the rules and regulations of teaching which N. Subbu Reddiar quoted about in detail are followed by young teachers they will become good teachers. This article aims at bringing out the important rules and regulations which N. Subbu Reddiar suggested to young teachers to make good students.*

**Keywords:** Professor N. Subbu Reddiar, Teaching Method, Basic Law, Future Society.

**ஆய்வுச் சுருக்கம்**

` *உலகில் மிகவும் தொன்மையான மொழியாகக் கருதப்படுவது தமிழ்மொழி. அம்மொழி செம்மொழி என்னும் தகுதியைப் பெற்ற சிறப்புடையது. தமிழ்மொழியில் பல்வேறு இலக்கிய, இலக்கணங்கள் காணப்படுகின்றன. இன்றும் பல்வேறு ஆசிரியர்களால் அவ்விரு கூறுகளிலும் அமைந்த நூல்கள் பல தோன்றிய வண்ணம் உள்ளன. ஒரு மொழி நிலைத்து நிற்பதற்கு அடிப்படையாய் இருப்பது அம்மொழியில் காணப்படும் தரமான நூல்களே காரணமாகும். அத்துடன் பேச்சுமொழியும் எழுத்துமொழியும் ஒருமொழி நிலைத்து நிற்பதற்குப் பேருதவி புரிபவை. அவ்விரு தன்மையும் பொதிந்தது தமிழ்மொழி என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. கல்வியையும் மொழிப்பாடத்திட்டங்களையும் அறிந்த ஆசிரியர்கள் பயிற்றலில் மேற்கொள்ள வேண்டிய விதிகளையும் அறிந்திருக்க வேண்டும் என்பது இன்றியமையாத ஒன்று. இதுமட்டுமன்றிப் பயிற்றலில் ஆசிரியரின் நிலை என்ன என்பதையும் இவர்கள் அறிதல் மிகவும்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*முக்கியமானது. பயிற்றல் என்பது ஆசிரியர் மாணாக்கர்களுக்குச் சூழ்நிலைக்கு ஏற்பத் தரும் பயிற்சியாகும். பயிலும் குழந்தையையும் பயில வேண்டிய உலகையும் ஒன்று சேர்த்தலே ஆசிரியரின் பணியாகும். ஒரு சமூகம் சிறப்பானதாக அமைவதற்குக் கல்வி இன்றியமையாதது. எதிர்கால சமூகம் எல்லா நிலையிலும் வளர்ச்சி நிலையைப் பெறுவதற்குக் கல்வியின் பங்கு குறிப்பிடத்தக்க ஒன்று. கல்வி பெற்றவர்களை உருவாக்குவது ஆசிரியர்களின் கடமையாகும். ஆசிரியர்கள் சிறந்த மாணவர்களை வெளியுலகிற்குக் கொண்டு வருவதற்குப் பயிற்றலின்போது சில அடிப்படை விதிகளைத் தெரிந்திருப்பது மிகவும் இன்றியமையாத ஒன்று என்பது ந. சுப்புரெட்டியாரின் கருத்து. மாணவர்கள் வெளியுலக அறிவைப் பெறுவதற்கும் ஆசிரியர்கள் துணைநிற்கின்றனர். கற்பித்தலில் ஆசிரியர்கள் கவனிக்க வேண்டிய ஒரு சில விதிகளைப் பற்றி ந.சுப்புரெட்டியார் விரியாக எடுத்துரைக்கிறார். அவற்றைத் தெரிந்து கொண்டால் கற்பித்தல் துறையில் புதிதாகப் புகும் இளைஞர்களுக்கு நல்ல வடிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை. சிறந்த மாணவர்களை உருவாக்குவதற்கு ஆசிரியர்கள் பயிற்றலின்போது சில அடிப்படை விதிகளைப் பின்பற்ற வேண்டும். அவை இன்னின்ன என்பதைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பட்டியலிட்டுக் காட்டுகிறார். பயிற்றலின் அடிப்படை விதிகளை வெளியுலகிற்குக் கொண்டு வருவதை நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.*

**முன்னுரை**

பேச்சுமொழியும் எழுத்துமொழியும் பெற்ற மொழி தமிழ்மொழி. அம்மொழி செம்மொழி என்னும் தகுதியைப் பெற்ற சிறப்பிற்குரியது. உலகில் தோன்றிய மொழிகளுக்கு எல்லாம் மூத்த மொழியாகத் திகழும் பேறு பெற்றது. தொன்மையும் புதுமையும் நிறைந்த அத்தமிழ்மொழியில் கணக்கற்ற இலக்கிய, இலக்கண நூல்கள் எழுந்த வண்ணம் உள்ளன. ஒருமொழி நிலைத்து நிற்பதற்கு அடிப்படையாய் இருப்பது அம்மொழியில் காணப்படும் தரமான நூல்களாகும். அந்நூல்களைப் படித்துத் தம்அறிவை விரிவாகக்கிக் கொள்வது ஆசிரியர்களின் கடமையாகும். தலைசிறந்த மாணவர்களை உருவாக்குவதற்கு ஆசிரியர்கள் பயிற்றலின்போது சில அடிப்படை விதிகளைப் பின்பற்றுவது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். அவை இன்னின்ன என்பதைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆழமாக எடுத்துரைக்கிறார். அவற்றை எடுத்துரைப்பதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுக் கட்டுரையின் நோக்கம்:** பயிற்றலின் அடிப்படை விதிகளை வெலியுலகிற்குக் கொண்டு வருவதை நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வுக் கட்டுரை அமைகிறது.

**ஆய்வுக் கட்டுரையின் அணுகுமுறை:** இவ்வாய்விக் கட்டுரை விளக்கமுறைத் திறனாய்வு, ஒப்பீட்டு முறைத் திறனாய்வு என்னும் திறனாய்வு முறைகளைப் பின்பற்றுகிறது.

**பயிற்றல் – விளக்கம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பயில் என்னும் சொல்லடியாகப் பிறந்த்தே பயிற்றல் என்னும் சொல்லாகும். பயில் என்பதற்குக் கல் என்பது பொருள். அதாவது படி என்பதாகும். பயில் என்னும் சொல் பயிற்று எனத் திரிந்தது. பயிற்று என்னும் சொல் ‘அல்’ என்னும் தொழிற்பெயர் விகுதியைப் பெற்றுப் பின்னர்ப் பயிற்றல் என மாறியது. பயிலல் என்பது தன்வினை. பயிற்றல் என்பது பிறவினை. அதாவது பிறருக்குக் கற்றுக் கொடுப்பதே பயிற்றல் ஆகும் என்று கல்வித்துறை அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். சட உடலத்துடனும் சமூக உலகத்துடனும் இணைந்து வாழச் செய்யும் வழிகளை அமைத்தல்தான் பயிற்றல் என்பது கல்வியாளர்களின் கருத்து. ஆசிரியர் பல்வேறு விதமான பயிற்றும் துணைக்கருவிகளைக் கொண்டு ஒவ்வொரு குழந்தைக்கும் அதன் சூழ்நிலைக்கும் நடுவில் ஒருவித திடீர் ஒளியை உண்டாக்குகின்றனர். என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

ஊக்குவித்தல்

**பயிற்றலில் ஆசிரியர் முதலில் கற்றுக் கொள்ள வேண்டியது ஊக்குவித்தல் ஆகும். ஊக்குவித்தலை ஆங்கிலத்தில் மோட்டிவேஷன் என்பர். ஊக்குவித்தல் என்பது அனைத்து ஆசிரியர்களிடமும் இருக்க வேண்டிய பண்பாகும். ஒரு பெண் குழந்தைக்குத் தையல் வேலையில் அக்க்கறை இல்லாமல் இருக்கலாம். ஆனால் தன் பொம்மைக்குப் பாவாடை சட்டை தைத்துப் போட வேண்டிய வாய்ப்பு அளித்தால் அக்குழந்தை தையல் வேலையை ஆவலுடன் கற்றுக் கொள்ள முனையும். இவ்வாறு குழந்தைகளிடம் படிப்பின்மீது ஆர்வத்தை எழுப்புதலைத்தான் முறைவல்லார் ஊக்குவித்தல் என்று குறிப்பிடுவர் என விளக்கம் தருகிறார் ந.சுப்புரெட்டியார் (ப.47)**

**முடிந்தளவு எல்லாப் பாடங்களையும் கற்பிக்கும்போது இவ்வாறு ஊக்குவிக்க முயற்சி செய்தல் வேண்டும். இதைச் செய்தல் எளிமையானது இல்லை. கற்பிக்க வேண்டியவற்றைக் கருத்துடன் பயின்றும் பல செய்திகளை நேரில் கண்டும் பல்வேறு ஊக்கிகளைக் கற்கும் வாய்ப்புகளுடன் நுழைத்தும் பார்க்கும்போது இதை ஒருவாறு வெற்றியுடன் மேற்கொள்ள முடியம் என்கிறார் பேராசிரியர் ந,சுப்புரெட்டியார் (ப.47)**

**செயல் மூலம் கற்றல்**

ஆசிரியர் பயிற்றலில் கடைபிடிக்க வேண்டிய அடிப்படை விதிகளுள் இரண்டாவதாக இடம்பெறுவது செயல் மூலம் கற்றல் ஆகும். செயல்மூலம் கற்றலை வலியுறுத்திய அறிஞர் ஃபிரொபல் ஆவார். நடைமுறையில் இக்கற்றலுக்கு முதன்மையான இடமும் கொடுத்தார். இதன் வெற்றியைத் தமது கிண்டர்கார்ட்டன் முறையில் மெய்ப்பித்தும் காட்டினார். கீழ்வகுப்புகளில் மொழிப்பாடங்கள் உற்சாகமின்றிக் கற்பிக்கப்படுவதால் கற்கும் மாணவர்களும் மகிழ்ச்சியுடன் அதிகமாக ஈடுபடுவதில்லை. வகுப்பறையில் உரக்கப்படித்தல், விளக்கம் தருதல், சொல்லுவது எழுதுதல், பார்த்து எழுதுதல் போன்ற முறைகள்தான்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நடைமுறையில் இருக்கின்றன. இவை மாணவர்களின் சிந்தையைக் கவரக்கூடியவை அல்ல. ஆசிரியர்கள் மொழிப்பாடங்களில் கைவேலையையும் இணைத்துக் கொள்ளும் வழிகளைப் பற்றிச் சிந்தித்து அதனை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சி செய்ய வேண்டும். அதாவது மாணவர்களைச் சொல் – அகராதிகளைத் தொகுக்கும் செயலில் ஈடுபடுத்தலாம். ஒவ்வொரு சொல்லையும் இயன்றவரை படித்தால் விளக்கும்படி தூண்டச் செய்யலாம்.

**அச்சுப்படிகளைவிடக் கையெழுத்துப் படிகள், வண்ணப்படங்கள் வரையவும் கட்டுரை, கவிதைகளின் தலைப்புகளை அழகான எழுத்துக்களால் எழுதவும் மாணவர்களுக்கு வாய்ப்பினை ஏற்படுத்தும். நல்ல திறமையுள்ள மாணாக்கர்களிடம் சிறு நாடகங்கள், கதைகள், கட்டுரைகள், உரையாடல்கள் போன்றவற்றை வரையும்படி அவர்களை உற்சாகப்படுத்தலாம். இதன்மூலம் மாணவர்கள் தங்களின் படைப்பாற்றல் திறனை வளர்த்துக் கொள்ள முடியும். மாணவர்களால் எழுதப்பட்ட சிறு நாடகங்களை வகுப்பறைகளிலேயே நடிக்கும் வாய்ப்பினை ஏற்படுத்தித் தரலாம். கீழ் வகுப்புகளில் ஆட்டப்பாடல்கள், பாப்பா பாடல்கள், செவிலிப்பாடல்கள் பெரும்பயனைத் தரும். இவற்றால் மாணவர்கள் மொழிப்பாடத்தை ஆர்வத்துடன் படிப்பதற்குத் தூண்டப்பெறுவர் என்கிறார் ந.சுப்புரெட்டியார் (ப.48).**

**ஆசிரியர்களின் சொற்களைக் காட்டிலும் செய்கைகளே மாணவர்களின் கற்றலில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன என்கிறார் கி.நாகராஜன் (கல்விப் புதுமைகளும் கலைத்திட்ட மேம்பாடும், ப.271)**

**கற்பனவற்றை வாழ்க்கையுடன் இணைத்துக் காட்டல்**

வாழ்க்கையுடன் ஒட்டிக் கற்பிக்காததால் கற்கும் மாணவர்கள் கற்கும் நேரத்தை அறியாமல் கற்கின்றனர். கற்கக் கூடியதை விருப்பமின்றியும் ஆர்வமில்லாமலும் ஒரு சுமையாக எண்ணியும் கற்கின்றனர். இவற்றைப் போக்குவதற்குக் கற்கக் கூடியதை வாழ்க்கையுடன் இணைத்துக் காட்டுவது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். இலக்கியம் வாழ்க்கையின் திறனாய்வு என்னும் கருத்துடையவர் மாத்யூ அர்னால்டு. கம்பராமாயணப் பாடல்களை நத்தும்போது உலகில் நடைமுறையில் இருக்கக்கூடிய அண்ணன் தம்பி சொத்துப் பிரச்சனை, மூத்தவனுக்கு முன்னுரிமை கொடுத்தல், விட்டுக் கொடுக்கும் பண்பு போன்றவற்றை எடுத்துக் காட்டிக் கற்பிக்கச் செய்வது மிகுந்த பயனைத் தரும். இவ்வாறு செய்வதால் வாழ்க்கையின் உண்மைகளை மாணவர்கள் பல கோணங்களில் சிந்திப்பர்.

**கற்றலில் அக்கறையை உண்டாக்கல்**

ஆசிரியர்கள் கற்றலில் மாணவர்களிடம் அக்கறையை உண்டாக்குவதற்குச் செயல்மூலம் கற்பிக்க வேண்டும். அக்கறை தோன்றினால்தான் கற்றலில் கவனம் ஏற்படும். மாணவர்களும் கருத்துடன் கற்பர். அக்கறையைக் 'கற்றலின் ஈர்ப்புவிசை' என அறிஞர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

குறிப்பிடுவர். மாணவர்களின் வயதிற்கு ஏற்ப மனவளர்ச்சி இருக்கும் என்றும் இதற்கேற்ப இவர்களின் விருப்பமும் மாறும் என்றும் உளவியல் அறிஞர்கள் கூறுவர். அன்றாடம் வகுப்புகளில் கற்பிக்கும் ஆசிரியர்கள் பாடங்களைக் கருத்துடன் கற்பிக்க வேண்டும். மொழிப்பாடங்கள் அனைத்தையும் கற்பிப்பதில் அக்கறையை உண்டாக்குதல் என்பது எளிதன்று. கீழ் வகுப்புகளில் விளையாட்டு முறைகளைக் கையாண்டு அக்கறையை உண்டாக்கலாம். ஆனால் மேல் வகுப்புகளில் இவற்றின் இன்றியமையாமையை உணரும்படி செய்து இவற்றை மேற்கொள்ளத் தூண்டலாம்.

**வகுப்பறையில் ஆசிரியர்கள் நடந்துகொள்ளும் முறை**

கற்பிக்கும் ஆசிரியர் இன்முகத்துடனும் உற்சாகத்துடனும் அக்கறையுடனும் பாடத்தைத் தொடங்கினால் குறைந்த அறிவுடைய மாணவர்களும் பாடத்தில் அக்கறை காட்டுவர். அவ்வாறின்றிச் சிடுசிடுவென்ற தோற்றத்துடனும் அழுதுவடிந்த முகத்துடனும் கடமைக்குக் கற்பிக்கும் பாவனையுடனும் வகுப்பில் நுழைந்தால் நிறைந்த அறிவுடைய மாணவர்களுக்கும் கற்றலில் கட்டாயம் வெறுப்பு ஏற்படும். இப்படியும் அப்படியும் ஒரு சிறு கம்பீரமான பார்வை, கருத்தை ஈர்க்கும் ஒன்றிரண்டு வினாக்கள், ஓர் அபிநயம் ஆகியவற்றால் வகுப்பில் மின்விசையைப் போன்றதோர் சூழ்நிலையை உண்டாக்கித் தம்முடைய தோற்றத்தாலேயே மாணவர்களிடம் உற்சாகத்தை ஏற்படுத்தும் மொழியாசிரியர்களும் இருக்கின்றனர். இதற்கு மாறான ஆசிரியர்கள் மாணவர்களுக்குக் கற்றலில் வெறுப்புணர்ச்சியைத் தானாக வளர வழிவகுக்கின்றனர். இதனை ஜார்ஜ் பெர்னாட்ஷா கல்வி ஹோமியோபதி முறையை ஒட்டியுள்ளது எனக் கூறுகிறார் என்கிறார் ந.சுப்புரெட்டியார் (ப. 51)

ஆளுமை உடையவராகவும் பாடப்புலமை பெற்றவராயும் ஆசிரியர் இருத்தல் வேண்டும். கற்கும் சூழலுக்கேற்பப் பாடப்பொருளைத் தேர்வு செய்ய வேண்டும். தனிநபர் வேறுபாடுகள் பற்றிய அறிவு பெற்றவராய் இருத்தல் வேண்டும் என ஆசிரியருக்குரிய பண்புகளாகப் பியூலா ரெய்னீஸ் குறிப்பிடுகிறார் (உளவியல் கற்றலும் மனித மேம்பாடும் ப. 20) ஆசிரியர்கள் முன்கூட்டியே திட்டமிடுவதால் வகுப்பறையின் கற்பிக்கும், கற்கும் சூழலைத் தமக்கேற்றவாறும் மாணவருக்கேற்றவாறும் கட்டுப்படுத்திக் கொண்டு கல்வி கற்பதின் நோக்கத்தை நோக்கி முன்னேற முடியும். வகுப்பின் இலட்சியம் எளிதிலே நிறைவேறப் பாடத்தைக் கற்பிக்கும் ஒழுங்குகளை முன்கூட்டியே திட்டமிடுவது நல்லது என்கிறார் மா.சு.திருமலை (தமிழ் கற்பித்தல். ப. 63) மேலும் மொழியைக் கற்பிப்பதற்கு மிகுந்த பொறுமையும் மிகக் கடின உழைப்பும் மிக நன்றாகப் பேசக் கூடிய பேச்சு உறுப்புகள் அமைப்பும் ஆசிரியர்களுக்குத் தேவை என்கிறார் மா.சு.திருமலை (தமிழ் கற்பித்தல்.ப.25). நல்லாசிரியருக்குரிய இலக்கணத்தைப் பவணந்தியார்,

**குலன்அருள் தெய்வம் கொள்கை மேன்மை**

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை**
**நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்**
**உலகியல் அறிவோடு உயர்குணம் இனையவும்**
**அமைபவன் நூல்உரை யாசிரி யன்னே (நன்னூல். எழுத்ததிகாரம். நூ.26)**

எனக் குறிப்பிடுகிறார். இந்நூற்பாவில் ஆசிரியர்க்கு நிலம், மலை, நிறைகோல், மலர் ஆகியவை உவமைகளாகக் காட்டப்பட்டுள்ளன. மாணவர்களிடம் அக்கறையை எழுப்புதல், கற்பதை வாழ்க்கையில் பயன்படுத்திப் பள்ளி வாழ்க்கையில் வாய்ப்புகளைத் தருதல், சிந்தனைக்கு வாய்ப்புத் தருதல், பல துணைக்கருவிகளால் புதிய பொருளுக்கு விளக்கம் தருதல், கருத்தேற்றம் தருதல் முதலியவை ஆசிரியர் செய்ய வேண்டியவை ஆகும்.

**ஐந்து படிகள்**

ஐந்து படிகளை முதன்முதலாகக் கண்டறிந்து கல்வி உலகத்திற்கு அளித்தவர் ஹெர்பார்ட் என்னும் அறிஞர். கற்பிக்கும் துறையில் ஆசிரியர்கள் ஐந்து படிகளைப் பற்றியும் நன்றாக அறிந்திருத்தல் வேண்டும். மனத்தைத் தயாரித்தல், எடுத்துக்கூறல் ஒப்பிடல், பொதுவிதி காணல், விதியைச் செயற்படுத்தல் ஆகிய ஐந்தும் ஹெர்பார்ட் கண்ட ஐந்து படிகளாகும். இவற்றை ஹெர்பார்ட்டின் முறையான ஐந்து படிகள் என்றே வழங்குவர்.

**மனத்தைத் தயாரித்தல்**

புதிதாகக் கற்க இருக்கும் கருத்துக்களை ஏற்பதற்கு மாணவர்களின் மனத்தைத் தயார் செய்வதே இப்படியின் நோக்கம். கற்பிக்கும் ஆசிரியர் மாணவர்களின் முன்னறிவினைச் சில வினாக்களால் சோதித்து அறிய வேண்டும். இதனை அறியாமல் கற்கும் ஆசிரியரின் முயற்சி வீணானது. ஆசிரியர்கள் புதிய பாடத்தைக் கற்பிப்பதற்கு முன் மாணவர்களிடம் அப்பாடம் தொடர்பான சிறுசிறு வினாக்களை எழுப்பியோ ஒரு சிறு தொடக்கத்தைக் கூறியோ மாணவர்களின் மனத்தைத் தயார்படுத்த வேண்டும். மலைப்பைத் தரும் பொருளை ஒரு சில சொற்களால் கூறி விளக்குதல் வேண்டும். இதனை நன்னூலார் பத்துவகை அழகுகளுள் ஒன்றான சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்கிறார். மாணவர்களின் கவனத்தை ஈர்க்கும் தலைப்பைக் கரும்பலகையில் எழுதுதல், நடத்திய பாடம் பற்றிக் குறிப்புக் காட்டல், புதிய பாடம் பற்றிக் கூறுதல் போன்றவை புதிய பாடத்தைத் தொடங்குவதற்கு முகவுரைகளாக அமையும். பாடத்தின் நோக்கத்தை உணர்த்துவதாலேயே மாணவர்களின் மனத்தைக் கவர்வது இப்படியின் பொதுவிதியாகும். பெரும்பாலும் ஆசிரியர்கள் பாடப்பகுதியைக் குறிப்பிட்ட காலத்திற்குள் முடித்துவிட வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் இந்தப் படியைப் புறக்கணிக்கின்றனர். ஆசிரியர்கள் வகுப்பை நன்கு அறிந்திருந்தால் இந்தப் படியில் அதிக நேரத்தைச் செலவிட வேண்டியதில்லை. புதிய பாடத்திற்குள் விரைவாகவும் நேராகவும் செல்ல முடியும்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**பாட நோக்கம்**

ஆசிரியர்கள் மாணாக்கர்களுக்குப் பாட நோக்கத்தைத் தெளிவாக எடுத்துரைத்தல் வேண்டும். இளஞ்சிறார்களுக்குப் பாடநோக்கத்தை முன்னரே உணர்த்தத் தேவையில்லை. ஆனால் வளர்ந்த மாணவர்களுக்கு முன்னரே பாடநோக்கத்தைக் கூறினால்தான் உற்சாகத்துடன் கற்பர். பாடநோக்கத்தை ஒரு சில சொற்களில் கரும்பலகையில் எழுதிவிடுதல் மிகவும் சிறப்பானது.

**எடுத்துக் கூறுதல்**

புதிய பொருள்கள் மாணவர்களுக்குக் கற்பிக்கப்படுகின்றன. ஆசிரியரே விரித்துரைத்துக் கற்பிக்கலாம்: அல்லது வினாக்கள் மூலம் மாணவர்களையே கண்டறியச் செய்யலாம். எடுத்துக் கூறுதல் என்னும் இப்படியில் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது புதிதாகக் கற்பிக்கப்பெறும் பொருள்கள் மாணவர்களின் பழைய அறிவுடன் பொருந்த வைக்கப்பெறுதலாகும். இதனை ஹெர்பார்ட்டும் வலியுறுத்தினர். இப்படியில் கற்பிப்பதில் அழுத்தம் தருதல், திரும்பக் கூறுதல், அக்கறையை உண்டாக்கல், சிந்தனையைக் கவர்தல் ஆகிய கூறுகள் நிறைந்த பயனளிப்பவை. இந்தப் படியைப் பாடவளர்ச்சி என்று கூறுவது பொருத்தமானது.

**ஒப்பிடல்**

மனம் செய்திகளைத் தனித்தனியாக ஏற்றுக்கொள்வதில்லை. அது பொருள்களின் ஒற்றுமை, வேற்றுமைப் பண்புகளையும் தனித்தனியாகக் கண்டு அவற்றைப் பல பிரிவுகளாகப் பிரித்தறிய முனைகிறது. மேல்வகுப்புகளில் இலக்கியம், வரலாறு போன்ற பாடங்களில் ஒப்பிடல் என்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். ஒப்பிட்டு நோக்கப்பெறும் இரண்டு பொருள்கள் அல்லது கருத்துக்கள் மாணவர்கள் அறிந்தவையாக இருக்க வேண்டும். தெரிந்த ஒன்றைத் தெரியாததுடன் ஒப்பிட்டு ஆராய்வதால் பயன் இல்லை என்பதை ஆசிரியர்கள் மறக்கக் கூடாது.

**பொதுவிதி காணல்**

ஒப்பிட்டுப் பார்த்துப் பொதுமையாகக் கண்டதைத் தொடுத்து ஒரு விதியாகவோ ஒரு பொது உண்மையாகவோ ஆக்குதலைத்தான் பொதுவிதி காணல் என்பர். பாடத்தின் நோக்கம் பொதுவிதி காணல் என்னும் இப்படியில்தான் நிறைவடைகிறது. மாணவர்கள் தாங்களாகவே பொதுவிதியினைக் காண வேண்டும். ஆசிரியர்கள் குறுக்கிட்டு அவ்விதியை உண்டாக்கக் கூடாது. மாணவர் கூறியபின் சரியான விளக்கம் கொடுக்கலாம். இலக்கணம், ஒரு சில மொழிப்பகுதிகள், அறிவியல், கணிதம் ஆகிய பாடங்களில் இப்படி பெரும்பயனைத் தரும். இப்படியைத் தொகுத்துரைத்தல் என்றும் கூறுவர்.

**விதியைச் செயற்படுத்தல்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாழ்க்கையில் பயன்படாத விதிகளையும் உண்மைகளையும் அறிந்து கொள்வதால் பயனில்லை. வாழ்க்கையில் அறிவு பயன்படும் பொழுதுதான் அதன் ஆற்றலை உணரமுடியும். மொழிப்பாடத்தில் கட்டுரை எழுதுதல், இலக்கணப் பாடத்தில் கண்ட விதிகளைப் புதிய எடுத்துக்காட்டுகளில் பொருத்திப் பார்த்தல், இலக்கியங்களில் ஒப்புமைப் பகுதியைக் கண்டறிதல் ஆகியவற்றால் இவ்வறிவைப் பயன்படுமாறு செய்யலாம். மேலும் ஆசிரியர்கள் வேறுசில உத்திகளையும் பின்பற்ற வேண்டும்.

**தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றிற்குச் செல்லல்**

மாணவர்கள் அறிந்தவற்றிலிருந்து கற்பித்தலைத் தொடங்குதல் இயல்பான முறையாகும். தெரிந்தவற்றை அதிகமாக விளக்கிக் கூறினாலும் மாணவர்கள் சலிப்படைவர். தெரியாதவற்றை விளக்கிக் கொண்டிருந்தாலும் மாணவர்களிடம் அலுப்பு உண்டாகும். சலிப்பும் அலுப்பும் ஏற்படாதவாறு கற்பித்தலே ஆசிரியருடைய திறமையாகும். இலக்கணப்பாடங்களில் இக்குறிப்புப் பயன்படும். எடுத்துக்காட்டாகத் திணையைப் பற்றிக் கற்பிக்கும்போது கண்ணன், யானை, மரம், கல் ஆகியவை பெயர்ச்சொற்கள் என்பதை மாணவர்கள் அறிவர். அவர்கள் அறிந்துள்ள அறிவைக் கொண்டு திணை என்னும் புதிய கருத்தைக் கற்பிக்கலாம். தெரிந்ததிலிருந்து தெரியாதவற்றிற்குப் போவதால் மாணவர்க்குத் தன்னம்பிக்கை ஏற்பட இடமுண்டு. மாணவர்கள் கற்பதில் சிரத்தை காட்டவும் இடமுண்டு. ஆகையால் தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றிற்குச் செல்வது பயனுள்ள, பொருத்தமான செயல் என்று தோன்றுகிறது என்கிறார் மா. சு.திருமலை (தமிழ் கற்பித்தல், ப.18).

**முழுமையிலிருந்து பகுதிக்குச் செல்லல்**

மாணவர்கள் அறிந்துள்ள முழுப்பொருளைப் பிரித்துப் பகுதிகளைக் கற்பிக்க வேண்டும் என்பது இதன் பொருள். படிப்புக் கற்பிப்பதில் கையாளும் சொற்றொடர் முறை இதனை அடிப்படையாகக் கொண்டது. கரும்பலகையில் ஒரு தொடரை முழு வாக்கியமாக எழுதி அதிலுள்ள சொற்களையும் சொற்களில் உள்ள எழுத்துக்களை உச்சரிக்கவும் அறியவும் எழுதவும் கற்பிக்க வேண்டும்.

**காட்சி நிலையிலிருந்து கருத்து நிலைக்குச் செல்லல்**

தெரிந்ததிலிருந்து தெரியாதவற்றிற்குப் போதலை இவ்வாறு மற்றொரு விதமாகவும் கூறப்படுகிறது. காட்சிப் பொருளாகத் தெரிந்தவற்றைக் குழந்தைகள் அறிதல் எளிமையானது. ஐம்புலன்களால் உணரமுடியாத கருத்துக்களை அறிவது கடினமானது. பொருளறிவு மூலம் கருத்துணர்வைப் பெறச் செய்யலாம். மொழிப்பாடத்தையும் இலக்கணப் பாடத்தையும் கற்பிப்பதில்தான் இக்குறிப்புப் பெரிதும் பயன்படும்.

**சிறப்பிலிருந்து பொதுவிற்குச் செல்லல்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

பொதுவிதிகளைத் தெரிந்து கொள்வதற்குமுன் மாணவர்கள் பல குறிப்பிட்ட உண்மைகளை அறிந்திருத்தல் வேண்டும். பல எடுத்துக்காட்டுகளைக் கொண்டு மாணவர்களே பொதுவிதியை உண்டாக்கும்படி செய்யலாம். விதிவருவித்தல் மூலம் கற்பித்தலில் இக்கூறினை அறியலாம். எடுத்துக்காட்டாக ஆகுபெயரைக் கற்பிப்பதில் இக்குறிப்பை மேற்கொள்ளலாம்

**எளிமையிலிருந்து அருமைக்குப் போதல்**

எளிமையும் அருமையும் மாணவர்களை வைத்துத் தீர்மானிக்கப்பெற வேண்டும். எதனையும் படிப்படையாகக் கற்றுச் சென்றால்தான் மகிழ்ச்சியுடன் கற்க முடியும். கற்பதற்கும் விருப்பம் ஏற்படும். ஆசிரியர்களும் மாணவப் பருவத்தில் படிப்படியாகக் கற்றார்கள். இதனை மாணவர்களுக்குக் கற்பிக்கும்போதும் நினைவில் வைத்துக் கொண்டு கற்பிக்க வேண்டும். " எளியதிலிருந்து கடினமானதற்குச் செல்வது என்னும் இவ்விதி மாணவனின் விஷய ஞானத்தைச் சேர்ந்திராமல் அவன் கற்கிற விஷயத்தைச் சேர்ந்ததாகும். கற்றுக்கொடுக்கும்போது முதலில் எளிமையானவற்றையும் அவற்றை அடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகக் கடினமானவற்றையும் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று இவ்வதி சொல்கிறது என்கிறார் மா.சு. திருமலை (தமிழ் கற்பித்தல், ப.18)

**தெளிவிலிருந்து சிக்கலுக்குப் போதல்**

ஒரு துறையில் ஒருவருக்கு எளிதாக இருப்பது அத்துறையை அறியாத மற்றொருவருக்கு அரிதாக இருக்கும். ஒரு துறையில் சிறிது கற்றவர் நிலை வேறு. ஒரு சிறிதும் கல்லாதவர் நிலை வேறு. மாணவர்களின் அறிவு நிலையை ஒட்டிக் கற்பித்தல் தொடங்க வேண்டும். மொழிப் பாடங்களைக் கற்பிப்பதில் அன்றாட வாழ்க்கையை ஒட்டிய நிகழ்ச்சிகளைக் கொண்டு பாடங்களைத் தொடங்க வேண்டும்.

**தெளிவற்ற நிலையிலிருந்து தெளிவான நிலைக்குப் போதல்**

குழந்தைப் பருவத்தில் அறிபவை யாவும் தெளிவற்ற நிலையில் இருக்கும். உணர்த்தும் செய்திகளும் உச்சரிக்கும் சொற்களும் சரியாக இருக்காது. இவற்றைச் செம்மைப்படுத்துவதே கற்பித்தலின் நோக்கமாகும். மாணவர்களின் அறிவை அடிப்படையாகக் கொண்டு புதியனவற்றைக் கற்பிக்கும்போது ஆசிரியரின் நோக்கம் தெளிவாக இருத்தல் வேண்டும். பொருளைக் காட்டிக் கற்பித்தலே சிறப்பானது என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

**முடிவுரை**

அன்று முதல் இன்று வரை ஆசிரியர்களுக்குச் சமூகத்தில் மிகுந்த மதிப்பு உண்டு. தாய் தந்தைக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படுபவர் ஆசிரியர். இதனை மாதா பிதா குரு தெய்வம் என்னும் கூற்றின்வழி அறியலாம். குருகுலக் கல்வியில் ஆசிரியர்களை நாடி மாணவர்கள் வருவர். ஆனால் இன்றைய கல்வி முறையில் ஆசிரியர்களும் மாணவர்களும் ஒரு பொதுவிடத்திற்கு வந்து கற்பிக்கும் கற்கும் நிலை உள்ளது. பழங்காலத்திலிருந்தே ஆசிரியர்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கற்பிக்கும்போது சில அடிப்படை விதிகளைப் பின்பற்றுவது மரபான ஒன்று. மாணவர்களின் நிலையை அறிந்து ஆசிரியர்கள் கல்வி கற்பிப்பது மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். ஆசிரியர்கள் மாணவர்களைக் கற்பதற்கு ஊக்குவித்தலை ஏற்படுத்துவதே முதல் விதியாகப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார். இரண்டாவதாக மாணவர்கள் செயல் மூலம் கற்றலை ஆசிரியர்கள் பின்பற்றுவது சிறந்தது என்கிறார். ஆசிரியர்கள் கற்றுக் கொடுப்பதை வாழ்க்கையுடன் இணைத்துப் பார்ப்பது இன்றியமையாத ஒன்று. மாணவர்கள் கற்றலை மிகவும் விருப்பத்தோடு கற்பதற்கும் ஆசிரியர்கள் துணை நிற்க வேண்டும். ஹெர்பார்ட்டின் ஐந்து படிகளுள் முதலாவதாக இடம்பெறுவது மாணவர்களின் மனத்தைத் தயார்படுத்தலாகும். பாட நோக்கம், எடுத்துக் கூறுதல், ஒப்பிடல், பொதுவிதி காணல், விதியைச் செயற்படுத்தல் ஆகியவற்றை ந.சுப்புரெட்டியார் அனைவருக்கும் எளிதில் புரியும்வண்ணம் எடுத்துரைக்கிறார். ஆசிரியர்கள் இவற்றுடன் கற்பிக்கும்போது வேறுசில உத்திகளையும் பின்பற்றுவது மிகவும் ஏற்புடையதாகும் என்கிறார் ந.சுப்புரெட்டியார். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை தெரிந்ததிலிருந்து தெரியாதவற்றிற்குச் செல்லல், எளிமையிலிருந்து அருமைக்குச் செல்லல், தெளிவற்ற நிலையிலிருந்து தெளிவான நிலைக்குச் செல்லல் ஆகியவை ஆகும். இவற்றை விரிவாகவும் எடுத்துரைக்கிறார் ந.சுப்புரெட்டியார். இன்றைய ஆசிரியர்களும் இனிவர இருக்கின்ற ஆசிரியர்களும் மாணவர்களுக்குக் கற்பிக்கும்போது பின்பற்ற வேண்டிய அடிப்படை விதிகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவருடைய வழிகாட்டுதலைப் பின்பற்றினால் ஆசிரியர்களும் மாணவர்களும் சமுதாயத்தில் மிகச் சிறந்த இடத்தைப் பெறுவர் என்பது திண்ணம்.

### குறிப்பு நூல்கள்

[1] அ.ச.ஞானசம்பந்தன். *கம்பன்கலை.* பாரதி நிலையம், சென்னை, பதிப்பு, 1961.

[2] ஔவை நடராஜன். *கம்பர்காட்சி.* சேகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1980.

[3] கோ.வெ.நடராசன். *கம்பராமாயணத்தில் மரபுவழிச் செல்வாக்கு.* குகன் பதிப்பகம், திருவாரூர், 2002.

[4] ச.வே.சுப்பிரமணியன். *கம்பன் கற்பனை.* உலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தமிழ் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1978.

[5] ந.சுப்புரெட்டியார். *கம்பனின் மக்கள் குரல்.* வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1983.

[6] ந.சுப்புரெட்டியார். *பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம்.* வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1996.

[7] ந.சுப்புரெட்டியார். *அண்ணல் அநுமன்.* வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[8] மு.சதாசிவம். *கம்பனின் வைர வரிகள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2005.

**References**

[1] A. S. Gnanasambandham. *Kamban Kalai*. Bharathi Nilaiyam, Chennai, Edition, 1961.
[2] Avvai Nadarajan. *Kambar Kaatchi*. Sekar Pathippagam, Chennai, Edition, 1980.
[3] Go.Ve.Nadarajan. *Kambaramayanathil Marabuvali Selvakku*. Gukan Pathippagam, Thiruvarur, 2002.
[4] Mu.Sadhasivam. *Kambanin Vaira Varigal*. Manivasagar Padhippagam, Chennai, 2005.
[5] N. Subbu Reddiar. *Kambanin Makkal Kural*. Vanathi Pathippagam, Chennai, First Edition, 1983.
[6] N. Subbu Reddiar. *Panpattu Nokkil Kamban Kaviyam*. Vanathi Pathippagam, Chennai, First Edition, 1996.
[7] N. Subbu Reddiar. *Annal Hanuman*, Vanathi Pathippagam, Chennai, First Edition, 2003.
[8] Sa. Ve.Subramaniyan. *Kamban Karpanai*. Ulaga Tamil Aarachi Niruvanam, Tamil Pathipagam, Chennai, 1978.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



# தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# முனைவர் ந. சுப்புரெட்டியாரின் திருக்கோயில் தத்துவம்

## Dr. Na. Subbu Reddiar Philosophical Approach to Temple

**முனைவர் சு. சதீஷ்குமார்**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. S. Sathishkumar**, Assistant Professor of Tamil, Kongunadu Arts and Science College, Coimbatore - 641029, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-8481-5113**

**DOI: 10.5281/zenodo.7252057**

### Abstract

*Temples are treasures of art and symbols of Tamil culture. The Sangam literature reveals that there were temples to Gods including Lord Shiva, Lord Murugan and Lord Thirumal two thousand years ago. The temples are built on the Aahamam basis. The temples will be built to include the sanctum sanctorum, the sanctum sanctorum, the mandapam, the maha mandapam, the mukha mandapam, the nandhi mandapam, the flagpole, the altar, the tower gate and the circumference hall. These are all philosophically based. In general, scholars who have studied temple systems and temple philosophies are well-versed in theology. But the people who go to temples and worship them are ignorant of their philosophical techniques about them. Professor Subbu Reddiar had written about the high philosophy of temples in his book "Saiva Siddantam Oor Arimugam". It can be easily understood by common people through the simplification of such in-depth philosophy of Tamil culture. Hence, the main purpose of this article is to document the simplification of the theories of Prof. Na. Subbu Reddiar's philosophical approach to the temple.*

**Keywords:** Dr. Na. Subbureddiar, Philosophical Approach, Temple.

### ஆய்வுச் சுருக்கம்

*தமிழர்களின் அருள்நெறிக் கருவூலங்களாகவும் கலைச் சின்னங்களாகவும் திகழ்வன கோயில்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவபெருமான், முருகன், திருமால் உள்ளிட்ட கடவுளர்களுக்குக் கோயில்கள் இருந்ததைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது. கோயில்கள் ஆகம அடிப்படையில் கட்டப்படுகின்றன. கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், முகமண்டபம், நந்தி மண்டபம், கொடிமரம், பலிபீடம், கோபுர வாயில், திருச்சுற்று மாளிகை ஆகிய அங்கங்களை உள்ளடக்கியதாகக் கோயில்கள் கட்டப்படும். இவை அனைத்தும் தத்துவ அடிப்படையில் அமைந்தனவாகும். திருக்கோயில் தத்துவம் குறித்து பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம் என்ற நூலில் வழிபாட்டு முறைகள் எனும் தலைப்பின்கீழ் ஆலய வழிபாடு என்ற உட்தலைப்பில் எடுத்துரைத்துள்ள கருத்துக்களை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது. பொதுவாக, ஆலய அமைப்பு முறைகள், திருக்கோயில் தத்துவங்கள் ஆகியவற்றைக் கற்றறிந்த பண்டிதர்கள், சமயநெறியில் ஒழுகும் அடியவர்கள் ஆகியோர் நன்கு*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அறிவர். ஆனால், திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடும் பாமர மக்கள் அவற்றைப் பற்றிய தத்துவ நுட்பங்களை அறியாதவர்களாவே உள்ளனர். அத்தகையோர்க்கும் எளிதில் விளங்கும் வண்ணம் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் திருக்கோயில் தத்துவங்களை எளிமைப்படுத்தி மொழிந்துள்ள பாங்கைப் பதிவு செய்வதே இக்கட்டுரையின் மைய நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** முனைவர் ந. சுப்புரெட்டியார், திருக்கோயில் தத்துவம்.

**முன்னுரை**

தமிழர்களின் அருள்நெறிக் கருவூலங்களாகவும் கலைச் சின்னங்களாகவும் திகழ்வன கோயில்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவபெருமான், முருகன், திருமால் உள்ளிட்ட கடவுளர்களுக்குக் கோயில்கள் இருந்ததைச் இலக்கியங்களின் வழி சங்க அறியமுடிகின்றது. கோயில்கள் ஆகம அடிப்படையில் கட்டப்படுகின்றன. கருவறை, அந்தராளம், அர்த்த மண்டபம். மகாமண்டபம், முகமண்டபம், நந்தி மண்டபம், கொடிமரம், பலிபீடம், கோபுர வாயில், திருச்சுற்று மாளிகை ஆகிய அங்கங்களை உள்ளடக்கியதாகக் கோயில்கள் கட்டப்படும். இவை அனைத்தும் தத்துவ அடிப்படையில் அமைந்தனவாகும். திருக்கோவில் தத்துவம் குறித்து பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் 'சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்' என்ற நூலில் 'வழிபாட்டு முறைகள்' எனும் தலைப்பின் கீழ் ‘ஆலய வழிபாடு' என்ற உட்தலைப்பில் எடுத்துரைத்துள்ள கருத்துக்களை ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைகின்றது.

**கோபுரம்**

திருக்கோயில்களில் கோபுரங்களை அமைக்கும் வழக்கம் பண்டைய காலத்தில் இல்லை. கோபுரம் என்ற கட்டுமான அமைப்பு பிற்காலச் சோழர் காலத்தில் உருவானது. ஒட்டக்கூத்தர் தக்கயாகப்பரணி வாழ்த்தில்,

**கோயில் முன்னேழ் நிலை கொண்ட தோர் கோபுர**
**வாயில் வகுத்த பிரான் மகன் வாழியே (தக்கயாகப்பரணி, பா. 809)**

என்று சோழர்கள் கோபுரங்கள் கட்டிய திறத்தைப் போற்றிப் பாடியுள்ளார். அதனைத் தொடர்ந்து விசயநகரப் பேரரசு காலத்தில்தான் கோபுரங்கள் மிகுதியாகக் கட்டப்பட்டன. கிருட்டிண தேவராயர் காலத்தில் இப்பணி பெருமளவில் வளர்ச்சியுற்றது. ஆதலால் இக்கோபுரம் 'இராயகோபுரம்' என்று அழைக்கப்பெற்று, பின்னர் 'இராசகோபுரம்' என மருவியது. கோபுரம் 'தூலலிங்கம்' என்று அழைக்கப்பெறுகின்றது. தொலைவில் தெரியும் கோபுரத்தை இறைவனாகக் கருதி வழிபட வேண்டும். கோபுரத்தை வழிபட்டு அதன் பின்பே உள்ளே நுழைதல் வேண்டும். இவ்வழக்கம் தொன்றுதொட்டு நிலவி வருவதை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கங்கை வார்சடையார் கபாலீச் சரத் தணைந்து**

**துங்க நீள்சுடர்க் கோபுரந் தொழுது புக்கருளி (பெரிய. திருஞானசம். புராணம், பா. 1077)**

**வலஞ்சுழிப் பெருமான் மகிழ் கோயில் வந்தெய்திப்**

**பொலங் கொள் நீள்சுடர்க் கோபுரம் இறைஞ்சியுட் புகுந்தார் (மேலது. பா. 380)**

எனும் தெய்வச் சேக்கிழார் மொழிகளால் இனிதுணர முடிகின்றது. இராசகோபுரத்தில் தேவர்கள், மனிதர்கள். விலங்குகள். பறவைகள் ஆகியவற்றின் உருவங்கள் அமைக்கப்படுவதற்கான காரணத்தை,

> **இராசகோபுரத்திற்கு அருகில் வந்து அதன் அமைப்பை உற்று நோக்கினால் அதிசயிக்கத்தக்க பல உண்மைகள் புலனாகும். கணக்கற்ற வடிவங்களை அங்குக் காணலாம். விதவிதமான வாழ்க்கை முறைகளை அவை விளக்குவனவாக அமைகின்றன. தேவர்கள் மனிதர்கள். விலங்குகள், பறவைகள், ஏனைய சிற்றுயிர்கள் அங்கு இடம்பெற்று இந்த அகிலத்திற்குக் குறியீடாக அமைகின்றன (சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 376)**

என்று ந. சுப்புரெட்டியர் குறிப்பிட்டுள்ளார். கோபுரத்தில் காணப்படும் உருவங்கள் குறித்து இவர் தரும் விளக்கம் இயல்பாக உள்ளது. நன்மை, தீமை ஆகிய இரண்டும் இயற்கையானது. அறிவுத்திறமும் பக்தி நெறியும் உடையவர்கள் அல்லதை விடுத்து நல்லதை நாடிச் செல்ல வேண்டும் என்பதைக் கோபுரச் சிற்பங்கள் உணர்த்துகின்றன என்பதை,

> **இராசகோபுரத்தில் அருவருக்கத்தக்க சில வடிவங்களும் அமைந்திருப்பதைக் காணலாம். நாகரிகமான சில வடிவங்களும் அமைந்திருப்பதைக் காணலாம். நாகரிகமான பண்புகளுக்கு இவை அறிகுறிகள் ஆகா. மனத்தில் மேலான கருத்துக்களைத் தோற்றுவிப்பதற்கும் இவை துணைபுரியா. இந்த அமைப்புக்குக் காரணமும் உண்டு. இயற்கையின் நடைமுறை புறச் சின்னம் அல்லவா? நாகரிகம் அநாகரிகம் ஆகிய இரண்டும் இயற்கையில் இடம் பெற்றுள்ளனவன்றோ? பாராட்டத்தக்க பெருவாழ்வும் பழிக்கத்தக்க சிற்றியல்பும் சிறுசெயல்களும் இயற்கையில் இடம்பெற்றுள்ளன என்பதைச் சுட்டிக்காட்டவே இந்தக் கோபுரம் அமைந்துள்ளது என்பது அறியப்படும். (சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம். ப. 376)**

என்று உணர்த்துகின்றார்.

**கோபுர வாயில்கள்**

உபானம் முதல் ஸ்தூபி வரையிலான நுழைவாயில் கட்டடமே கோபுரமாகும் அது உபபீடம், அதிஷ்டானம், வேதிகை, பித்தி, பிரஸ்தரம் சாலை, கூடு, கிரீவம், சிகரம், ஸ்தூபி எனப் பல்வேறு அங்கங்களைக் கொண்டதாகும். ஒவ்வொரு அங்கமும் பல்வேறு உபாங்கங்களைக் கொண்டிருக்கும். கோபுரங்களைப் பதினாறு நிலை வரையில் அமைக்கலாம்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

என மயமதம் எனும் ஆகமநூல் குறிப்பிடுகின்றது. இராச கோபுர வாயில் 'மகாதுவாரம்' என்று அழைக்கப்படும். வாயிலுக்கு மேல் அமைக்கப் பெற்றுள்ள நிலைகள் ஒவ்வொன்றிலும் வாயில்கள் எனப்பெறும் துவாரங்கள் அமைந்திருக்கும். கோபுரத்தின் நிலைகளில் பல வாயில்கள் இருப்பினும் உள்ளே சென்று இறைவனை வழிபட உதவுவது 'மகாதுவாரம்' எனும் வாயில் ஆகும். இத்தகைய வாயில்கள் குறித்து பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். தரும் தத்துவ விளக்கம் பாமரர்களுக்கும் புரியும் வகையில் எளிமையாக அமைந்துள்ளது.

> **இராச கோபுரத்தின் வாயில்கள் பொதுவாக ஒற்றைப்படையில்தான் அமைந்திருக்கும். இத்தகைய வாயில்கள் தத்துவத்திற்கு விளக்கமாகவும் அமைந்துள்ளன. மூன்று வாயில்கள் உள்ள கோபுரம் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்ற மூன்று அவத்தைகளைக் குறிக்கின்றன. ஐந்து வாயில்கள் உள்ள கோபுரம் ஐம்பொறிகட்குக் குறியீடாக அமைந்துள்ளது. ஏழு வாயில்கள் உள்ள கோபுரத்தில் மனம், புத்தி என்னும் இரண்டு தத்துவங்கள் சேர்க்கப்பெறுகின்றன. ஒன்பது உள்ள இடத்து சித்தம், அகங்காரம் மேலும் இரண்டு தத்துவங்கள் சேர்கின்றன. இங்ஙனம் நமது உடல் அமைப்பில் உள்ள வெவ்வேறு தத்துவங்களுக்குக் கோபுர வாயில்கள் சின்னங்களாக அமைந்துள்ளன என்பது ஈண்டு அறியப்படும். மேற்குறிப்பிட்ட வாயில்களும் தரைமட்டத்திலுள்ள ஒருவாயில்தான் செல்வதற்கு உதவுகின்றது. ஏனைய வாயில்கள் அமைக்கப் பெற்றிருந்தும் அவை ஆலயத்தினுள் புகுவதற்குப் பயன்படுவதில்லை. இதன்மூலம் நமக்கு ஒரு கருத்து புகட்டப்பெறுகின்றது. அக் கருத்து யாது? புறக்கரணங்களும் அந்தக்கரணங்கள் பலவும் நம்மிடம் இருப்பினும் இறைவன் நாட்டம் கொள்ளும்போது மனம் என்ற ஒரு கரணமே நமக்குப் பயன்படுகின்றது. ஏனைய கரணங்களையெல்லாம் அவ்அவற்றின் நிலையிலே வைத்து விட்டு மனம் இறைவனை நாடி உள்முகமாகப் போக வேண்டும் என்பது கோட்பாடு. ஐம்பொறிகளைக் கொண்டும் மனம், புத்தி முதலியவற்றைக் கொண்டும் புற உலகை அறிகின்றோம். புற உலகை அறிகின்ற செயலை அப்படியே நிறுத்தி வைத்துவிட்டு மனத்தைத் துணையாகக் கொண்டு பரம்பொருளினிடத்து உள்முகமாகப் பயணம் போக ண்டும் என்னும் கோட்பாட்டை இராச கோபுர வாயிலினுஸ் செல்லும் நுழைவு விளக்கிக் காட்டுகின்றது. (மேலது, பக். 376 - 377)**

தத்துவங்களை உணராத சாதாரண மக்களும் மனத்தைத் தூய்மையுடன் வைத்துக் கொள்வதே இறைவனை அடைவதற்கான வழி என்பதை பேராசிரியரின் மேற்கண்ட வரிகளைப் படிக்கும் போது தெளிவாக உணரமுடியும். மனக்கோயில் கட்டிய பூசலார் நாயனாரை ஈண்டு நினைவு கூறுவதன் மூலம் ந. சுப்புரெட்டியாரின் கருத்து முற்றிலும் உண்மையானது என்பது புலனாகின்றது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**கருவறை**

திருக்கோவில்களில் மூலவர் திருமேனி எழுந்தருளியிருக்கும் இடம் கருவறையாகும். கர்ப்பக்கிரகம், மூலஸ்தானம், உண்ணாழி ஆகிய பெயர்களும் கருவறைக்கு வழங்கப்படுகின்றது. இது அனைத்து உலகங்களையும் படைத்ததற்குக் காரணமான மூலப்பிரகிருதியின் இடமாகும். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், **நமது உடலமைப்பின் புறச் சின்னமாக அமைந்துள்ளது கருவறை. கருவி கரணங்களை ஒடுக்கி மனத்தை உள்முகமாகத் திருப்பினால் உண்டாகும் அநுபவத்திற்குச் சின்னமாக அமைந்திருப்பது கருவறையாகும். (சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், ப. 380)** என்று கருவறைக்கு விளக்கம் தருகிறார். இருள் சூழ்ந்திருக்கும் கருவறையில் வழிபாட்டின் போது மணி ஒலிக்கப்படும். பல்வேறு தீப ஆராதனைகள் நடைபெறும். அந்த ஒளியில் இறைவனின் திருமேனியைக் காணலாம். இந்த அனுபவத்தை மெய்யன்பர்கள் அகத்தினுள்ளே அடைய முடியும் என்று உறுதிபட ந. சுப்புரெட்டியர் உரைப்பதை,

> **மனத்தினுள் சிந்தையைச் செலுத்தும் ஆன்மசாதகன் (பக்தன்) கார் இருளையே தன்னுள் காண்கின்றான். அயினும், மனத்தை உள்முகத்தில் வைத்திருக்கப் பழக வேண்டும் (இதுவே தியானம் என்பது). இந்தப் பழக்கம் உறுதிப்பட நெடுங்காலம் ஆகும். பழகுபவனுக்கு ஓர் அற்புதமான அநுபவமும் கிட்டும் தனது உள்ளத்தினுள்ளே ஒருவித இனிய ஓசையைக் கேட்பான், புகை போன்றும், மின்மினிப் பூச்சிகளின் நடமாட்டம் போன்றும் சில காட்சிகள் தன்னுள் தென்படுவதைக் காண்பான். ஒலி ஒளி ஆகிய இரண்டும் மனத்தில் உதிப்பது சாதகன் தன் சாதனையில் முன்னேறி வருவதன் அறிகுறியாகும். இறுதியில் மனத்தின் அஞ்ஞானத் திரை நீங்குவதை அறிகின்றான். ஞான ஒளியின் தரிசனம் கிட்டுவதை உணர்கின்றான். அந்த ஞானமும் ஆன்ம சொரூபமும் ஒன்றேயாகும். இங்ஙனம் மனத்தகத்து உண்டாகின்ற ஆன்ம தரிசனத்துக்குப் புறச்சின்னமாக அமைந்திருப்பதே இந்த ஆலய தரிசனம்.**
>
> **(மேலது, பக். 380, 381)**

என்பதனால் அறிய முடிகின்றது.

**வலம் வருதல்**

திருக்கோயிலை வலம் வந்து வழிபடும் மரபு தொன்றுதொட்டு நிலவி வருகின்றது. இதனை,

> **புத்தேளிர் கோட்டம் வலஞ்செய்து (கலித்தொகை, பா. 82)**
>
> **கடவுட் கடிநகர் தோறும் இவனை**
> **வலம்கொளீஇ வாவெனச் சென்றாய் (மேலது, பா. 104)**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற பாடலடிகளால் அறியமுடிகின்றது. திருவையாற்றில் மகளிர் முழவதிர ஆடிக் கொண்டு திருக்கோயிலை வலம்வந்ததை சம்பந்தப் பிள்ளையார் காட்சிப்படுத்தியுள்ளார். அரன்கோவில் வலம் வந்து பூக்கொண்டு வழிபாடு செய்யாத போது பலனில்லை என்று அப்பரடிகள் பாடுகிறார். திருக்கோயில்களில் உள்ள பிரகாரங்களை வலம் வந்து இறைவனை வழிபட வேண்டும் என்பது வழிபாட்டு முறையாரும். இவ்வாறு வலம் வருதல் குறித்து,

> **கோயிலினுள் இருக்கும் பிராகாரங்கள் மூன்று, ஐந்து, ஏழாகக் காணப்படுகின்றன. மூன்று பிராகாரங்கள் அன்னமயம், பிராணமயம், மனோமயம் என்ற மூன்று கோசங்களையும் உணர்த்துகின்றன. ஐந்து பிரகாரங்கள் இவற்றோடு விஞ்ஞானமயம், ஆனந்தமயம் எனும் கோசங்களைக் குறிக்கின்றன. ஏழு பிரகாரங்கள் இவற்றோடு ஸ்தூல, சூட்சுமங்களை விளக்குகின்றன. பலமுறை பிரகாரங்களைச் சுற்றி வலம் வருவது கோசங்களைக் கடந்து இறைவன் விளங்குகிறான் என்பதை நினைப்பூட்டுகிறது. (இந்துமத இணைப்பு விளக்கம், ப. 46).**

என ஆறுமுக நாவலர் தத்துவ விளக்கம் தந்துள்ளார் வலம் வருதல் என்னும் சொல்லிற்கு வலப்புறமாகச் சுற்றி வருதல் என்பது பொருள். **இடமுறை மும்முறை வலமுறை வாரா (மணி, பீடிகைகண்டு பிறப்புணர்ந்த காதை, அ.எ. 5)** என்ற அடியில் அமைந்த 'வலமுறை வாரா' என்பதற்கு ந. மு. வேங்கடசாமி நாட்டார் "இடமாக விருந்து மும்முறை வலமாக வந்து' என்று உரையெழுதியுள்ளார். இதனால், இடப்புறம் தொடங்கி வலப்புறமாகச் சுற்றி வருதலே வலம் வருதல் என்பது புலனாகின்றது. ந. சுப்புரெட்டியார், **திருக்கோயிலைச் சுற்றி வலம் வருங்கால் உள்ளிருக்கும் இறைவன் தன் வலப்புறம் இருக்குமாறு பார்த்துக் கொள்ளுகின்றான் பக்தன். இதுவே வலம் வருதல் என்பதன் பொருள். (சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், பக். 377, 378)** என்று குறிப்பிட்டுள்ளார். மேலும், அவர் தரும் விளக்கம் வலம் வருதலின் அறிவியல் உண்மையையும் பயனையும் விளக்கும் வகையில் உள்ளது.

> **பிராணாயாமத்தின் சின்னமாகும். ஒழுங்குபட்ட மேலான மனம் பிராணாயாமத்திற்குத் தகுதியுடையதாகின்றது. மனத்தகத்து உண்டாகும் மாறுதலுக்கு ஏற்ப சுவாசிக்கின்ற காற்றில் வேறுபாடு உண்டாகின்றது. கீழான மனப்பான்மையுடையவர்க்கு சுவாசத்தின் போக்குவரவு அல்லது பிராணாயாமம் முறையாக நிகழ்கின்றது. தங்கு தடையின்றி அமைதியாக வலம் வரும்போது பிராணாயாமமும் ஒழுங்காக நிகழ்ந்து விடுகின்றது. சூக்குமமாக உடலின்கண் நிகழும் நிகழ்ச்சி பிராணாயாமம் என்பதும், வலம் வருதல் என்னும் உடலின் தூலமான செயல் அதன் புறச்சின்னமாக அமைகின்றது என்பதும் தெரிந்து தெளியத்தக்கவை. (மேலது, ப. 379)**

என்னும் கூற்றால் பிராணாயாமத்திற்கும் வலம் வருதலுக்கும் இடையேயுள்ள தொடர்பை ந. சுப்புரெட்டியார் உணர்த்திச் செல்கின்றார்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**முடிவுரை**

மனித உடலின் புறச்சின்னமாக விளங்கும் திருக்கோயில் குறித்த தத்துவங்கள் ஆகம நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் நுணுக்கமாக ஆராய்ந்து அனைவரும் உணரும் எளிய நடையில் ந. சுப்புரெட்டியார் எடுத்துரைத்துள்ளார். மன ஒருமுகப்படுத்தி உலகியல் இன்பங்களைப் புறந்தள்ளி மேலான பரம்பொருளைச் சிந்தனை செய்தால், அப்பரம்பொருள் நம் உள்ளத்தை இடமாகக் கொண்டு அமர்வான். அதற்குத் துணைசெய்யும் வகையில் ஆன்ம ஈடேற்றத்திற்குரிய வாயிலாகத் திருக்கோயில்கள் அமைந்துள்ளன என்ற உண்மையைத் திறம்பட மொழிந்துள்ளார்.

**குறிப்பு நூல்கள்**

[1] ந. சுப்புரெட்டியார். *சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, இரண்டாம் பதிப்பு - 2004.
[2] உ.வே. சாமிநாதையர் (உ.ஆ). *தக்கயாகப்பரணி மூலமும் உரையும்.* கேஸரி அச்சுக்கூடம், சென்னை, பதிப்பு - 1930.
[3] *பெரியபுராணம்.* திருப்பனந்தாள் காசித்திருமடம், திருப்பனந்தாள், பதிப்பு - 1994.
[4] *கலித்தொகை.* நோபில் அச்சுக்கூடம், சென்னை, பதிப்பு - 1925.
[5] *மணிமேகலை மூலமும் உரையும்.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மூன்றாம் பதிப்பு - 1994.

**References**

[1] N. Subbu Reddiar. *Saivasidhantham Oor Arimugam*. Saiva Siddantha Nool Pathippu Kazham, Chennai, Second Edition – 2004.
[2] U.V. Saminatha Ayyar (Urai Asiriyar) – *Thakkayahapparani Moolamum Uraiyum*. Kesari Aitchu Kudam, Chennai, Edition – 1930.
3] *Periyapuranam.* Thirupananthal Kasi Thirumadam, Thirupananthal, Edition – 1994.
[4] *Kalithogai.* Noble Aitchu Kudam, Chennai, Edition – 1925.
[5] *Manimegalai Moolamum Uraiyum.* Saiva Siddantha Nool Pathippu Kazham, Chennai, Third Edition – 1994.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியரும் அனுமனும்

# Perasiriyar and Hanuman

**ப. சபிதா**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அ. வீரையா வாண்டையார் நினைவு ஸ்ரீபுட்பம் கல்லூரி, பூண்டி, தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.

**P. Sabitha**, Assistant Professor of Tamil, A.Veeraiya Vandayar Memorial Sri Pushpam College, Poondi, Thanjavur, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0001-6604-2893**

**DOI: 10.5281/zenodo.7252074**

## Abstract

*The epic 'Kamba Ramayana' will excel in time because of its epic standards. There are so many characters in this epic 'Kamba Ramayana'. There are six Cantos in this epic. Hanuman's character came in the fourth Canto and continues till the end. Hanuman's deeds support the success of the epic 'Kamba Ramayana.' Professor Subbu Reddiar in his book entitled "Annal Hanuman" (Greatness of Hanuman) exposed the righteous deeds of Hanuman. He called Hanuman by several names such as the hero of a poem, an orator, a devotee of Rama, valorous Hanuman and a thinker. Because of Hanuman, the epic Ramayana ends in happiness, otherwise, it will be a great tragedy. Hanuman helped Bharathan to live long. Hanuman's words energized Rama after he discovered where Sita was imprisoned and that was the immediate turning point in the epic. The author reiterated that Hanuman is a great thinker. Although the thinking process is meant only for human beings, Hanuman had this quality through his devotion towards Rama. Further, Hanuman took twelve different images in Ramayanam. This was exposed greatly by Professor Subbu Reddiar. He exposes that Hanuman is courageous because of his mother Anjani. He affirms that Hanuman is a reliable messenger of Raman to Srilanka to meet Ravana. This was also rightly exposed by the author. Hanuman was a rightful devotee of Raman and Lakshmanan when he was in 'Kishkanta' he was introduced to them. Then onwards he was a dutiful devotee of them. In this epic, Hanuman was intelligent and clever and his special features are innumerous. It will be longer if one writes about him even if it may become as long as the myth of Hanuman's tail. Hence, the article details the ideals of Professor Subbu Reddiar on Hanuman.*

**Keywords:** Professor N. Subbu Reddiar, *Annal Hanuman*, *Kambaramayanam,* Hanuman.

## ஆய்வுச்சுருக்கம்

*காலங்களைக் கடந்து அறிவுக்கு விருந்தாக நிற்கும் காப்பியம் இக்காப்பியம். பலதரப்பட்ட கதை மாந்தர்களை உள்ளடக்கியதாக விளங்குகிறது. ஆறு காண்டங்களையுடைய இராமாயணத்தில் நான்காவது காண்டம் கிட்கிந்தைக் காண்டத்திலிருந்து தான் அனுமனின் பங்களிப்பு தொடர்கிறது. காப்பியத்தின் பாதிக்கு மேலாக அனுமனின் செயல்பாடு தொடர்ந்தாலும் காப்பியத்தின் வெற்றிக்கு காரணமாக அமைகின்றது என்பதை அண்ணல் அனுமன் எனும் நூல்வழி பேராசிரியர் எடுத்துரைக்கிறார். அண்ணல் என்றால் பெருமையிற் சிறந்தவன் என்று பொருள்படும். அண்ணல் அனுமன் என்னும் நூலில்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அனுமன் கவிக்கு நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினர், அஞ்சாநெஞ்சன், இராமதூதன், இராமபக்தன், குணக்குன்றன் எனும் எட்டுத் தலைப்புகளில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தெளிவுப்படுத்தியுள்ளார். கவிக்கு நாயகனான அனுமன் இல்லையெனில் இராமகாவியம் துன்பியலில் முடிந்திருக்கும். பரதனின் இறப்பைத் தடுத்து நிறுத்தி காப்பியத்தை இன்பியலாக முடித்ததே அனுமன் மதிநுட்பம் என்பதை பேராசிரியர் விளக்குகிறார். சொல்லின் செல்வனின் 'கண்டேன்' சீதையை என்று பயனிலையில் வாக்கியத்தைத் தொடங்கிய அனுமனின் சொல்வன்மையைப் போராசிரியர் சுட்டிச் செல்கிறார். சிந்தனைச் செம்மல் என்னும் பகுதியில் சிந்திக்கும் ஆற்றல் மனிதன் ஒருவனுக்கே இறைவனால் வழங்கப்பெற்ற ஓர் அற்புத ஆற்றல். இவ்வாற்றல் அனுமனிடம் அற்புதமாக செயல்படுவதை விளக்கியுள்ளார். 'விழையும் உருவினன்' என்பதில் இராமாயணத்தில் அனுமன் எடுத்த பன்னிரண்டு பேருருவங்களை எடுத்துக்காட்டுகிறார். அஞ்சா நெஞ்சன்: அஞ்சனை வயிற்றில் வந்துதித்த ஆஞ்சநேயன் இராவணன் முதலானவர்களிடம் அஞ்சா நெஞ்சத்தோடு செயல்பட்டதை பேராசிரியர் விளக்குகிறார். இராம தூதன்: அனுமனிடம் சீதையைப் பற்றிய விவரங்களைக் கூறிய காரணத்தால் இராமதூதன் என அழைக்கப்படுகிறார். இராமாயணத்தில் இதனை இன்ன இடத்திற்குச் சென்று இன்னாரிடம் சொல்லி வா என்று சொல்லவில்லை. அனுமனிடம் மட்டுமே கூறப்பட்டுள்ளது என்பதை பேராசிரியர் சுட்டியுள்ளார். இராம பக்தன் : இராம இலக்குவர்களைக் கிட்கிந்தையில் பார்த்தது முதல் இராவணனுக்கு அனுமன் கூறிய மறுமொழி வரை பல இடங்களில் அனுமன் இராமனிடத்து கொண்டிருந்த பக்தியைப் பரவத்தோடு வெளிப்படுத்தியுள்ளார். குணக்குன்றன்: கோதில் சிந்தை அனுமனின் குணங்களை அடக்கம், சமயோசித புத்தி, பொறையுடைமை எனும் தலைப்பில் எடுத்தியம்பியுள்ளார். அனுமனின் சிறப்பினை எடுத்தியம்பினால் அனுமனின் வால் போல் நீளுமாதலால் இத்துடன் இந்நூலை பேராசிரியர் முடிவு செய்கிறார். அனுமனின் பெருமையினை இனிமை, எளிமை, தெளிவு ஆகிய முறையில் பேராசிரியர் எடுத்துரைத்துள்ளார். இதை வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**கருவிச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், *அண்ணல் அனுமன்,* கம்பராமாயணம், அனுமன்.

**முன்னுரை**

காலங்களைக் கடந்து மக்களின் அறிவுக்கு விருந்தளிக்கும் காப்பியம் கம்பராமாயணம். வால்மீகி இராமாயணத்தைத் தழுவி எழுதப்பட்டாலும் தமிழ் மரபுக்கேற்றப்படி கம்பர் இந்நூலை இயற்றியுள்ளார். கம்பனில் வரும் கதைமாந்தர்கள் பலராவர். இக்கதை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மாந்தர்களைக் கற்பனையாகக் கொள்ளாமல் கடவுளாக வழிபட்டு வருகின்றனர். இதன்வழி அம்மாந்தர்களின் சிறப்பினை அறியமுடிகின்றது. இராமன், இலக்குவன், சீதை முதலான மூவரும் தலைமை மாந்தர்கள் ஆவார். இவர்கள் வழிபாடு செய்யப்படும் தெய்வமாக உள்ளனர். இவர்கள் இக்கதை முழுவதும் பயணித்துள்ளனர். ஆதலால் இவர்களை வழிபடுவது என்பது பெரிதல்ல. ஆனால் அநுமனை வழிபாடு செய்து வருவது பெரிதானக் காரியமாகும். திருமால் கோயில்கள் உள்ளேயும் தனியாகவும் அநுமனுக்குப் பல கோயில்கள் உள்ளன. ஆறு காண்டங்களையுடையக் கம்பராமாயணத்தில் நான்காவது காண்டத்திலிருந்து தான் அனுமனின் பங்களிப்பு (பணி) தொடங்கினாலும் காப்பியத்தின் வெற்றிக்கு அரணாக அமைகின்றது. செய்வதற்கு அருமையான செயல்களைச் செய்ய வல்லவர் பெரியோர் என்பது தெய்வப் புலவனின் வாக்கு. அப்படி பிறர் செய்யத் தயங்கும் செயல்களைச் செய்து மக்களின் மனதில் அனுமன் இடம்பிடித்து வாழக்கூடிய உன்னதமானவர். அப்படி இடம்பிடித்த அனுமன் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் மனதில் பிடித்த இடம் “அண்ணல் அனுமன்” எனும் நூலை எழுதுமளவிற்கு மிகையான கூற்றல்ல என்பது உண்மையானதாகும்.

**ஆய்வின் நோக்கம்**

கம்பன் கவித்துவமான கவிகளின்வழி தந்தை மகன் உறவு, கணவன் மனைவி உறவு, அரசன் மக்கள் உறவு, குரு மாணவர் உறவு, சகோதரர் உறவு, இப்படி பல உறவுகளைச் சொல்லியுள்ளார். மேற்குறிப்பிட்ட உறவுகள் எல்லாம் ஒருவரோடு ஒருவர் நெருங்கி பழகியதன் மூலம் ஏற்பட்டதாகும். ஆனால் இராமன், அனுமன் நட்பு எந்த நெருக்கமும் இல்லாது உண்டானது. இராமனிடம் கொண்ட நட்புவழிச் செயல்கள் மூலமாக வானரமான அனுமன் வானளவு எப்படி உயர்த்தப்பட்டான் என்பதை உணர்த்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**அண்ணல்**

அண்ணல் என்றால் “அருகன், மன்னன், சார்தல், தமையன், புத்தன், பெருமை, பெருமையிற் சிறந்தவன். முல்லைநிலத் தலைவன், சிவன், பெரியோன்” என தமிழ் அகராதி பல பொருள்களைக் கூறுகின்றது. தமிழ் அகராதி பல பொருள்களைத் தந்தாலும் “அண்ணல்” எனும் சொல்லானது அனுமனுக்குப் பெருமையிற் சிறந்தவன் எனும் சொல்லுக்கு உரித்தானதாக இருக்கின்றது.

**அனுமன்: ஆஞ்சநேயன்**

அனுமன் கேசரிராசன் - அஞ்சனைக்கும் மகனாகத் தோன்றியவர்.

**மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை**
**என்னோற்றான் கொல்எனுஞ் சொல் (குறள்.70)**

எனும் குறட்படி பெற்றோர்களைத் தன் செயலால் உலகிற்கு அடையாளப்படுத்தியவன் அனுமன்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **சிவன் அம்சமாகக் கருதப்பெறும் அனுமன். அஞ்சனைக்கு நேயமகன் என்பதாலும், சீதை சிறையுற்ற இடத்தை ஆய்ந்த நேயன் என்பதாலும் ஆஞ்சநேயன் என்றும் அழைக்கப் பெற்றான். பிறந்த உடனேயே இளஞ்சூரியனைப் பிடிக்கப் பாய்ந்த போது இந்திரன் வச்சிராயுதத்தால் கன்னத்தில் அடிப்பட்டவன். இதனால் வந்த பெயரே அனுமான் என்பது அனு-கன்னம், மான்-சிறப்புடையவன். (வாழ்வியற் களஞ்சியம், ப. 139)**

என வாழ்வியற் களஞ்சியம் விளக்கம் தருகின்றது.

**சிரஞ்சீவி**

முடிவில்லாதத் தன்மை கொண்டவர்களைச் சிரஞ்சீவி என்று அழைப்பர். சீரஞ்சீவிகள் எழுவருள் அனுமனும் ஒருவன் ஆவான். மற்றையோர் அசுவத்தாமா, மாபலி, வியாசன், வீடணன், கிருபன், பரசுராமன் ஆகியோராவர். அனுமன் குரங்கு வடிவினன் குரங்கு என்பதை தமிழ்ச் சொற்றொடர் அகராதி பின்வருமாறு, அரி, கோகிலம், கடுவன், கோடரம், கவி, யூகம், மந்தி, மர்க்கடம், நிரந்தம், வானரம் என கூறுகின்றது. சுக்கிரீவன் என்னும் வானரத் தலைவனுக்கு அமைச்சனாக அனுமன் இருந்தான். இராமன் புகழுக்கும், பெருமைக்கும் உறுதுணையாக இருந்தவன். உடல் வலிமை, நாவன்மை எனும் பல பண்புகளின் உருவமாக நின்றவன். பரம்பொருள் என்றும், பரமபதம் என்றும் போற்றப் பெறுபவன். இவன் காலை முதல் மாலை வரை சூரியனை நோக்கியபடி இருந்தே நவலியாகரணம் முதல் எல்லா நூல்களையும் கற்றான். நீதியின் நெறியில் நிறைவன். வாய்மையுடையோன், மாதரைக் கனவிலும் கருதாதவன் 'நித்திய பிரமசாரி' என்று போற்றி வழிபடப் பெறுபவன். ஈண்டிய கொற்றத்து இந்திரன் முதன் யாரும் பின்பற்றும் ஒழுக்கம் உடையவன். பொன்னிறமான மேனியை உடையவன். அனுமனை வணங்குவோர் அறிவுத்திறனும் உடல் வலியும் பெறுவர் என்ற நம்பிக்கை பற்றியே மகாபாரதத்ததில் பீமன் அனுமனைச் சந்தித்து இராமாயணம் கூறி வாழ்த்துப் பெற்றான் என்பது கூறப்பட்டுள்ளது. (வாழ்வியற் களஞ்சியம், ப. 139).

பேராசிரியர் ஔ.சுப்புரெட்டியார் கல்வி, அறிவியல், ஆன்மீகம், உளவியல், மொழிப்பெயர்ப்பு எனப் பல்துறை அறிவுடையவர். பல விருதுகளைப் பெற்றவர். 135 நூல்களை எழுதி குவித்தவர். இப்படி சொல்லிலடங்காச் செயல்களுக்கு உரியவர். அவர் கம்பனில் அனுமனின் பாத்திரப் பண்பை கவிக்கு நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினன், அஞ்சாநெஞ்சன் இராமதூதன், இராமபக்தன், குணக்குன்றன் என்னும் எட்டுத் தலைப்புகளில் எடுத்துரைத்துள்ளார்.

**கவிக்கு நாயகன்**

கவிக்கு நாயகனாக அனுமனைப் பற்றி கும்பகர்ணன் மாளிகையைக் கடக்கும் பொழுது கவிச்சக்ரவர்த்தி பின்வருமாறு கூறுவார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


**செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும்**

**கவிக்கு நாயகன் அனையவன் உறையுளைக் கடந்தான் (சுந். ஊர்தேடு படலம், பா. 132)**

இதை பேராசிரியர் மூன்று முறைகளில் விளக்குகிறார். வான்மீகி ராமாயணத்தை மாற்றம் செய்து கேட்போர்ச் செவிக்கு இனிமையாக இருக்குமாறு தேனாகச் செய்த கவிச்சக்கரவர்த்தி கம்பநாடன் என்பது முதலாவது கருத்து. காதுகளுக்கெல்லாம் தேன் போலினிமையாயிருக்கு மாறு இராமபிரானது கீர்த்தியைத் திருந்தச் சொல்கின்ற குரங்குகட்குத் தலைவனாகியவன் அனுமன். கவிக்கு நாயகனான அனுமனே அதில் நடைபெற்ற கோணல்களை நிமிர்த்தி திருந்தச் செய்து என்ற பொருளை எடுத்துரைக்கிறார்.

பேராசிரியர் கம்பன், கம்பனின் நாயகன் இராமன், காவிய வெற்றி நாயகன் அனுமன் மூவரையும் இவ்விரண்டு அடிகளில் ஒருங்கே கொண்டு விளக்குகிறார். இராம இலக்குவர்களைக் கண்டு சுக்கிரீவனுக்குச் சந்தேகம் ஏற்படுகிறது. சுக்ரீவனின் சந்தேகத்தை நீக்கி இராமனுடன் நட்பு ஏற்படக் காரணமான இருந்தவன் அனுமன். வானரத் துணை கொண்டு சீதையைத் தேட வழிவகுத்தவன். சீதையைக் கண்டு இராமனின் உயிரை மீட்டெடுத்தவன். இராமனின் உயிரான இலக்குவனின் உயிரை மீட்க மருந்து மலையைக் கொண்டு வந்தவன்.

**காவியத்தின் இன்பியலானவன்**

பதினான்கு ஆண்டுகள் நிறைவுற்று இராமன் அயோத்திக்குத் திரும்புகையில் பரத்துவாச முனிவரின் விருந்தினனாக தங்குகிறான். அனுமனைப் பரதனிடம் தன் (இராமன்) வருகையைத் தெரிவிக்கச் செய்கிறான். நெருப்பில் விழும் நிலையிலிருந்த பரதனைக் காக்கிறான். காவியத்தை இன்பியலாக அனுமன் முடிக்கிறான். இவ்வாறு பல புகழினை உடையதால் கவிக்கு நாயகனாக அனுமன் புகழப்படுகின்றான் என்பதைப் பேராசிரியர் விளக்கியுள்ளார்.

**சொல்லின் செல்வன்**

சொற்களைச் சுருக்கமாக விளக்கமாக எளிதில் புரிந்துணரும் வகையில் சொல்லக் கூடியவர்களைச் சொல்லின் செல்வன் என்பர்.

**கேட்டார்ப் பிணிகிகும் தகையவாய்க் கேளாரும்**

**வேட்ப மொழிவதாம் சொல் (குறள். 643)**

தெய்வப் புலவர் சொல்லின் சிறப்பினைக் கூறுகிறார். இக்குறளின்படி சொலல் வல்லன் அனுமன் ஆவான். அனுமன் இராம இலக்குவர்களைக் கண்டு பயந்த வானரங்களைப் பயப்பட வேண்டாம் என்று கூறினான். தசரதப் புதல்வர்களின் முகத்தினைக் கண்டு இவர்கள் நல்லவர்கள் என்பதை உணர்ந்தான்.

**அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**கடுத்தது காட்டும் முகம் (குறள். 706)**

எனும் குறளுக்கு அனுமன் இலக்கணமானான். இராம இலக்குவர்களைக் கண்டு நீங்கள் யார் என்று கேட்காமல்,

**யாரென விளம்பு கேனா னெங்குலத் தலைவற்கும்மை**
**வீரநீர் பணித்தீர் (கிட்கிந்தை அனுமப்படலம், பா. 71)**

வீரர்களே எங்கள் கூட்டத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவனுக்கு உம்மை யாவர் என்று சொல்லுவேன். சொல்லுங்கள் என அனுமன் நாகரிகமான வார்த்தைகளை உதிர்க்கிறான். பின்பு அவ்வீரர்களிடம் சுக்கிரீவனின் நிலையை எடுத்துரைக்கிறான்.

**பேரறம்**

அறம் என்பது மனதில் மாசிலன் ஆதல் என்கிறது வள்ளுவம்.

**பலவகைப்பட்ட அறங்கள், வேள்விகள், தவங்கள் முதலியவை பலவற்றையும் விடப் புகலடைந்தோர்க்கு அஞ்சற்க என்று அபயம் அளித்தலே பேரறம் (கிட்கிந்தை அனுமப்படலம், பா. 7126)**

என்பது பெரியோர் கருத்து எனப் பேராசிரியர் பின்வரும் இராமாயண அடிக்கு விளக்கம் தருகிறார். **நடுங்கினார்க் கபய நல்கு மதனினு நல்லதுண்டோ** என கம்பர் பேரறம் குறித்து குறிப்பிடுகிறார். அறங்களை பலர் பலவாறான கருத்துகளைத் தத்தம் நூல்களில் பதிப்பிக்கின்றனர்.

**மண்டினி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டிக் கொடுத்தோர் உயிர்கொடுத்தோர் (மணிமேகலை, பா. 11:95-96)**
**பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை (குறள். 322)**

என அறங்களில் தலைமை எது என விளங்கி வருகின்றனர். சிபி சக்ரவர்த்தி புறாவுக்காகத் தன் தசையைக் கொடுத்ததும் மனுநீதிச்சோழன் பசுவுக்காகத் தன் தம் அரும் பெறல் புதல்வனை ஆழியில் இட்டதும் அடைக்கல உயிர்களைக் காத்தற் பொருட்டேயாகும். காலங்களைக் கடந்தும் இன்றும் படித்தவர் பாமரர் என அனைவர் நெஞ்சிலும் இடம்பிடித்ததற்குக் காரணம் இவர்கள் அடைக்கல உயிர்களைக் காத்தலே காரணமாகும். இதன்வழி கம்பர் அடைக்கலமே பேரறம் என அனுமன் வழி கூறிய கூற்று உறுதியானது.

**பேரன்பு**

அன்பு என்பது அழகானது. அதைவிட பேரழகானது பேரன்பாகும். இப்பேரன்பின் வழியே இராமனை அனுமன் கண்டுக் கொண்டான். நீ திருமாலுக்கு அடிமைசெய் என்று அனுமனின் தந்தையான வாயுபகவான் அனுமனிடம் கூறினார். யான் எவ்வாறு திருமாலைக் கண்டறிய முடியும் என்று அனுமன் கேட்கிறான். அதற்கு வாயுபகவான் திருமால் உன்னெதிரில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வந்தால் உனக்கு அவனிடத்தில் யாதொரு காரணமுமின்றிப் பேரன்பு உண்டாகும். இதுவே நீ அப்பெருமானைக் கண்டறிவதற்கு உரிய நெறியாம் என அடையாளம் கூறினான். இராமனைக் கண்ட மாத்திரத்தில் அனுமனின் எலும்பு உருக்காணாதபடி உருகிவிட்டது. இதனால் வேறு வகையாகச் சான்று தேடத் தேவையில்லை என்று கம்பர் அனுமனுக்கு ஏற்பட்ட பேரன்பை விளக்குகிறார். **என்பு தோன்றல அருகனி தெனிற்பிறி தெவனோ (கிட்கிந்தை நட்புகோள் படலம், பா. 82).** இப்பேரன்பே அனுமனின் மனதில் நம்பிக்கை ஏற்படுத்தியது. சுக்கிரீவனுக்கு ஆறுதலைத் தரச் செய்தது.

**இராமனைக் கிளர்ந்தெழச் செய்தப் பேச்சு**

இராவணனால் கவரப்பட்ட சீதையை எங்ஙனம் தேடுவது எனத் திக்குத் தெரியாது தவித்து நின்ற இராமனுக்கு அனுமனின் பேச்சு கிளர்ச்சியை ஏற்படுத்தியது. சொலல் வல்லன் சோர்விலன் எனும் வள்ளுவர் வாக்குப்படி இராமனிடம் அனுமன் பேசுகிறான். இராமனே வானரச் சேனை எழுபது வெள்ளம் இருக்கிறது. கடலை முழுவதும் தூர்க்கக் கூடிய தொகையை உடையது. ஆதலால் கவலை வேண்டாம் சீதையைக் கண்டுப்பிடித்து விடலாம் எனும் நம்பிக்கையை இராமனுக்கு ஊட்டினான்.

**செய்ந்நன்றி**

நன்றி மறவாமை என்பது நற்பண்பு. இது எல்லோரிடத்திலும் இருந்தால் இவ்வுலகம் உய்வடையும். வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு வானர அரசை இராமன் தந்தருளுகின்றான். இவ்வுதவியை சுக்கிரீவன் மறந்துவிட்டான் என இலக்குவன் கோபமடைகிறான். அவனை சமாதானப்படுத்த அனுமன் கூறிய மறுமொழிகள் ஆறு கவிகளில் கூறப்பட்டுள்ளது. இதனைப் பேராசிரியர் எடுத்தியம்பியுள்ளார். அதில் முதலாவது கவியில் செய்ந்நன்றி மறத்தல் பாவமானது விமோசனம் இல்லாதது என்னும் கருத்தைப் புலப்படுத்தும் வகையில் அனுமன் கூறியுள்ளான்.

**சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்**
**பதவியந் தணரை ஆனவப் பாலரைப் பாவை மாரை**
**வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றன் மாயா**
**உதவிகொன் றார்க்கொன் றேனு மொழிக்கலாமுபாய முண்டோ (கிட்கிந்தா – கிட்கிந்தைப் படலம், பா. 62)**

எனும் இப்பாடலில் தாய்க்கொலை, தந்தைக்கொலை, ஆசான் கொலை, அந்தணர் கொலை, கோக்கொலை, குழவிக்கொலை, பெண்கொலை என்னும் கொடும்பாதங்களுக்கெல்லாம் அப்பாவம் நீங்கும் பரிகாரமாகிய கழுவாய் உண்டு. செய்ந்நன்றி மறத்தலுக்கோ அது இல்லையென்பதாகும். இக்கருத்தையே திருக்குறளும்,

**எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**செய்ந்நன்றி கொன்ற மகற்கு (குறள். 110)**

என்று கூறுகின்றது.

**ஆன்முலை யறுத்த அறனி லோர்க்கும்**

**...செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென (புறம்., பா. 34)**

எனப் புறநானூறு செய்ந்நன்றி மறவாமையைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

**சொல்லாத சொல்லிலும் பொருளுண்டு**

இலங்கைக்குச் சென்று போரிட்டு சீதையைக் கண்டு மீண்டு அனுமன் வந்தான். இராமனை அடைந்த அனுமன் இராமனை வணங்காது,

**முளரி நீங்கிய**

**தையலை நோக்கிய தலைவன் கையினன்**

**வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வைகினான் (சுந்தரகாண்டம். திருவடி தொழு படலம், பா. 55)**

இங்ஙனம் பிராட்டி இருக்கும் திசையை நோக்கித் தண்டன் இட்டது பேசாத பேச்சிலும் இலங்கையில் பிராட்டி குற்றமற்ற நிலையில் இருப்பதைத் தெரிவித்ததற்காக ஈண்டு பேசாத பேச்சிலும் சொல்லின் செல்வனைக் காணமுடிகின்றது. கண்டு களிக்கவும் முடிகின்றது என்று பேராசிரியர் கம்பனின் கவி வரிகளைச் சுவைத்துக் காட்டுகிறார்.

**வாக்கிய மாற்றம்**

கம்பர், அனுமன் இராமனிடம் **கண்டெனன் கற்பினுக் கணியைக் கண்களால் (சுந்தரகாண்டம். திருவடி தொழு படலம், பா. 58)** என்று கூறியச் செய்திகளைச் சொல்லத் தொடங்குகிறார். இதற்குப் பேராசிரியர் "இரத்தினச் சுருக்கமாகப் பொருள் பொதிந்த சொற்களால் அற்புதமாகத் தொடங்குகின்றான். பயனிலையில் தொடங்கி எழுவாயில் முடிக்கின்றான். எழுவாயில் தொடங்கினால் பயனிலையில் முடிப்பதற்குள் ஒருசில விநாடிக்குள் ஆயிரம் ஐயங்கள் தோன்றலாமல்லவா அவற்றைத் தவிர்த்தற் பொருட்டே "கண்டனென்" என்று தொடங்கினான் என்பது சிந்தித்து அனுபவிக்கத்தக்கது என்கிறார் (அண்ணல் அனுமன், பக்.37-38).

வானரர் குலம் அனுமனானது குரங்கினத்தை மனிதனும் உயர்ந்த தெய்வமாக்கியது சீதையின் கூற்றாகும்.

**உன்குலம் உன்னதாக்கி உயர்புகழ்க்கு ஒருத்தி தாய்**

**தன்குலம் தன்னதாக்கித் தன்னைஇத் தனிமை செய்தான்**

**வன்குலம் கூற்றுக்கு ஈந்துஅவ் வானவர் குலத்தை வாழ்வித்து**

**என்குலம் எனக்குத் தந்தாள் என்இனிச் செய்வது எம்மோய் (சுந்தரகாண்டம். திருவடிதொழு படலம், பா. 61)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சீதை தனக்கேயன்றி தன்குலத்துக்கும் உன்குலத்துக்கும் ஒப்புயர்வில்லாத சிறப்பை உண்டாக்கி இராவணன் முதலான அரக்கர்களை அழிப்பவளாய் தேவர் கூட்டத்திற்கு வாழ்வளித்து தன்னைத் தேடிவந்த எனக்கும் பெருமையைக் கொடுத்தள் என்று கம்பர் இப்பாடலை விளக்குகிறார்.

என்குலம் என்று அனுமன் வானரர் குலத்தைக் குறிப்பிடுகிறான். இதற்குப் பேராசிரியர் அக்குலத்துப் பிராணிகளை எல்லாம் அனுமன் என்று வழங்குமாறு செய்தாள். குரங்கு என்ற பெயரை நீக்கினாள் என்பார். தங்களையும் மானிடர்களைப் போல் பெயர் கொண்டு அழைக்கும் மாண்பு பிராட்டியால் உண்டானது என்பதைச் சொல்லின் செல்வன் இராமனுக்கு உணர்த்துகிறார்.

**தீர்க்கதரிசி**

பின்னால் நடக்கக்கூடியதை முன்பே அறியக்கூடியவர்களைத் தீர்க்கதரிசி என்பர். அனுமன் சீதையைத் தேடி இலங்கைக்குச் செல்கிறான். அங்கு ஒவ்வொரு இடமாகப் பார்த்து வருகின்றான். ஓரிடத்தில் கும்பகர்ணன் உறங்குவதைப் பார்த்து இவன் இராவணனோ என ஐயுறுகிறான். பின்பு பத்து தலை இல்லை என்பதை உணர்கிறான். கும்பகர்ணன் மாளிகையினைக் கடந்து செல்லும்போது,

**அவித்து நின்றுஎவன் ஆயினும் ஆகவென்று அங்கை**

**கவித்து நீங்கிடச் சிலபகல் என்பது கருதாச் (சுந்தரகாண்டம். ஊர்தேடு படலம், பா. 131)**

இவன் எவன் ஆயினும் இருக்கட்டும் என்று உதாசீனமாகச் சொல்லி இவன் அழிதற்கு இன்னும் சில நாள்களே உள்ளன என்று சிந்தித்து அவன் இருப்பிடத்தை விட்டு அகன்றான் என்பது கம்பர் கருத்து. இதைப் பேராசிரியர் இப்பொழுதே இராம-இராவணப் போர் இவன் சிந்தையில் எழுகின்றது. இவ்வரக்கன் முடிவும் சில நாள்களில் முடியும் என்றும் இவன் மனம் எண்ணுகின்றது என்று அனுமனின் சிந்தனையை விளக்குகிறார்.

இந்திரசித்துக்கும் அனுமனுக்கும் இடையே கடுமையானப் போர் நிகழ்கின்றது. இந்திரசித் இகழ்ச்சியுரைக்கிறான். அப்போது அனுமன் கூறும் பதிலுரையிலுள்ள சொற்றிறத்தைக் கண்டு மகிழலாம்.

**வில்லெ டுக்கஉரி யார்கள் வெய்யசில**

**வீரர் இங்குஉளர் மெல்லியோய்!**

**கல்லெ டுக்கஉரி யானும் நின்றான்**

**அதுஇன்று நாளை இடை காணலாம் (யுத்த நாகபாசம், பா.74)**

இங்கு வில் எடுத்து போர் செய்பவர்களும் இருக்கிறார்கள். நீ இந்திரனை வென்றதாக நினைத்துச் செருக்கு கொண்டுள்ளாய். உன்னுடன் வில் எடுத்து வெய்து பொருபவர்களால் உனது வலியின்மை வெட்ட வெளிச்சமாகும். அதனை இன்றோ நாளையோ காணலாம். நீ வில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வீரர்க்கு தோற்று இறந்தவுடன் உனக்குக் கல் எடுத்தலாகிய சவச்சடங்கைப் புரிய உரியவனான வீடணனும் இங்கு உள்ளான் என்று அனுமன் பின்பு நடக்கப் போவதை முன் கூட்டியே சொல்லக் கூடிய தீர்க்கத்தரிசியாகிறான். சிந்திக்கும் ஆற்றல் மனிதன் ஒருவனுக்கே இறைவனால் வழங்கப்பெற்ற அற்புத ஆற்றல். அதனை வளர்த்துக் கொண்டு அதனைச் செயல்படுத்துவது ஒவ்வொருவரின் கடமையும் பொறுப்பும் ஆகும். இவ்வாற்றல் கவிநாயகனான அனுமனிடம் இருப்பதை இராமகாதைவழி பேராசிரியர் விளக்குகிறார்.

இராவணனை அழிக்க அனுமன் எண்ணும்போது,

**நான் இராவணனையும் இலங்கையையும் அழிப்பது காகுத்தனின் கட்டளையன்று. அன்றியும் ஒரு காரியத்தைச் செய்ய முயன்று வேறொரு காரியத்தைச் செய்தல் அறிவுடைமை ஆகாது. சாலவும் ஆலோசித்தால் இது பெரும் பிழையாகும் (அண்ணல் அனுமன், ப.56)**

என்று அனுமனின் சிந்தனையைப் பற்றி பேராசிரியர் கூறியுள்ளார்.

**காலம் கருதி இருப்பர் கலங்காது**
**ஞாலம் கருது பவர் (குறள்.485)**

காலத்தைக் கருத்தில் கொண்டு இராவணனை இராமன் ஒருவனால் மட்டும்தான் வெல்லுதல் கூடும் என நினைக்கிறான்.

**பன்னிரண்டு உருவங்கள்**

அனுமனின் முதல் உருவமாற்றம் இராம இலக்குவர்களைக் காணும் போது மாணி வடிவமெடுக்கிறான். பார்ப்பனர் சத்திரியனை வணங்குவது முறையன்று இராம இலக்குவர்கள் கூறும்பொழுது யான் வானரக் குலத்தைச் சார்ந்தவன் என்கிறான். தருமத்தின் தனிமை தீர்ப்பான் போன்று மாருதி பேருருவம் எடுத்தான் என்பதை கவிச்சக்ரவர்த்தி கூறியதைப் பேராசிரியர் "தருமத்தின் தனிமை தீர்ப்பான்" என்ற விருதை அப்பெருந்தகைக்கு வழங்குகிறான் கவிப்பெருந்தகை என்கிறார். அனுமன் எடுத்த இரண்டாவது பேருருவத்தை இராமனால் காணமுடியவில்லை, அப்படிப்பட்ட பேருருவமாகும். சுயம்பிரபைக்காக 3வது பேருருவம், அனுமனுக்கு திருவடி பெயர் ஏற்படக் காரணமாக அமைந்தது 4வது பேருருவம், சுரசைக்காக ஐந்தாவது பேருருவம், அசோகவனத்தில் சீதையிருந்த மரத்தை விட்டு மற்ற மரங்களை அழிக்கிறான் இது 6வது பேருருவம்.

**ஐம்புல அடக்கம்**

ஐம்புலன்களையும் அடக்கியாண்டால் ஏழு பிறப்புகளிலும் பெருமை அடையலாம்.

**ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து (குறள். 126)**

பஞ்ச சேனாதிபதிகளை பேருருவம் கொண்டு அழிக்கிறான்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**வெஞ்சின வரக்கர் ஐவ ரொருவனே வெல்லப்பட்டார்**

**அஞ்செனும் புலன்க ளொத்தா ரவனுநல் லறிவை (சுந்தரகாண்டம், பஞ்சசேனாதிபதிகள் வதைப்படலம், பா. 64)**

எனும் உவமையால் விளக்குகிறார். இந்திரசித்தோடு போர் புரியும் பொழுது 8வது பேருருவம். இராவணனோடு போர் புரியும் பொழுது 9வது பேருருவம். இலக்குவனின் உயிரைக் காப்பதற்காக சஞ்சீவி மலையை எடுக்கச் செல்வது பத்தாவது பேருருவம். இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் போர் நடக்கின்றது. தேருக்கு நிகராக இலக்குவனைத் தன் தோளில் சுமந்து "நெடுமாருதி" என்னும் பெயர் பெற்றது 11வது பேருருவம். அனுமன் விரதனின் உயிரைக் காப்பாற்ற எடுக்கும் உருவம் 12வது பேருருவமாகும். இராமகாதையில் அனுமன் எடுத்த தேவைக்கு ஏற்ப பன்னிரண்டு உருவங்களைப் பேராசிரியர்,

**பன்னிரண்டு ஆழ்வார்களின் எண்ணிக்கை போல் துவாதச திருமண் காப்பு எண்ணிக் போல் பன்னிருமுறை பேருருவங்கள் கொண்டு அனுமன் இராம கைங்காரியத்தில் ஈடுபட்டுத் திறமையாகச் செயலாற்றுவதைக் காண்கிறோம். (அண்ணல் அனுமன், ப.78)**

என்று விளக்கியுள்ளார்.

**அஞ்சாநெஞ்சன்**

செயற்கரிய செய்வோர் பெரியோர் என்பர். அவர்கள் எதற்கும் அஞ்சாநெஞ்சம் உடையவர்களாக இருப்பர். அப்படிப்பட்ட அஞ்சாநெஞ்சனாக இராமதூதன் விளங்குகின்றான். கிட்கிந்தையில் அனுமனின் வீரத்தைப் புலப்படுத்துவனவாக நிகழ்ச்சிகளைக் காணமுடியவில்லை. சுந்தரகாண்டத்திலிருந்து யுத்தகாண்டம் வரை அனுமனின் வீரச் செயல்களைக் காணமுடிகின்றது.

**போரியல் அறம்**

அஞ்சா நெஞ்சத்தோடு போரிட வல்லவனான அனுமன் போரில் அறத்தைப் பின்பற்றினான் என்பதை சம்புமாலியினிடத்து போர் புரிகையில் அறியலாம். சம்புமாலியினிடம் இரக்கம் கொண்டு போர் செய்வதை நிறுத்தி வலிமை குறைந்தவரை உயிரை வாங்குதல் நியாயமல்ல என்று விட்டு விடுகின்றான். நீ திரும்பச் செல்வாய் என இரக்கம் தோன்றக் கூறினான்.

**ஏதி யொன்றால் தேரு மஃதா லெளியோ ருயிர் கோடல்**

**...போதி யென்றான் பூத்த மரம்போற் புண்ணாற் பொலிகின்றான் (சம்புவாலி வதைப்படலம், பா. 43)**

கவிச்சக்ரவர்த்தி, இராவணனை இராமன் இன்று போய் நாளை வா என்றார் என்பது நாம் பலரும் அறிந்த ஒன்று. தனிமையாக நின்ற சம்புமாலியை அனுமன் போ என்று போரிலிருந்து விடுவிக்கிறான் என்பதை இப்பாடல் வழி அறியமுடிகின்றது.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**சஞ்சீவி-அனுமன்**

பேராசிரியர் அவர்கள் அனுமன் பல நிலைகளில் போர் புரிவதைக் கூறுகையில் தன் பக்கமுள்ளவர் தோற்கையில் தோற்கும் நிலையில் இருக்கையில் அவர்கட்குச் "சஞ்சீவிபோல்" வந்து உதவுவான் என்று குறிப்பிடுகிறார் (அண்ணல் அனுமன், ப.105). ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவரானார் என்பது நாம் அறிந்த ஒன்று சஞ்சீவி என்பது புதுமையானது மட்டுமல்ல பெருமைப்படத்தக்கதுமாகும்.

**பகைவரும் புகழும் புகழாளன்**
**அனுமனின் திறமையைக் கண்டு,**
**நிருதனு மனையவன் நிலைமை நோக்கியே**
**கருதவு மியம்பவு மரிதுன் கைவலி**
**அரியன முடிப்பதற் கனைத்து நாட்டினும்**
**ஒருதனி உளையிதற் குவமை யாதென்றான் (கும்பகர்ணன் வதைப்படலம், பா.262)**

என்று கும்பகர்ணன் புகழ்ந்து கூறினான். இவ்வாறு அஞ்சா நெஞ்சத்தோடு பகைவரை எதிர்தது நின்று அறத்தோடு போர் புரிந்து பகைவரை அழித்தது மட்டுமல்லாமல் பகைவராலும் புகழப்படும் பண்பாளன்.

**இராமதூதன்**

இராமதூதன் என்றால் அது அனுமனுக்கு மட்டுமே உரியதாகும். இதற்குச் சான்று பகரும் வகையில் பேராசிரியர் அவர்கள் "கம்பர் படைத்த இராமகாதையில் எந்த ஓர் இடத்திலும் கம்பன் வாக்காகவோ, இராமன் வாக்காகவோ ஒரு செய்தியைச் சொல்லி இதனை இன்ன இடத்திற்குச் சென்று இன்னாரிடம் சொல்லி வா" என்பதாக இடம்பெறவில்லை என்று குறிப்பிடுகிறார் (அண்ணல் அனுமன், ப.114). சீதையைத் தேடி வரும் பொருட்டு இராமனால் அனுமன் அனுப்பப்படுகிறான். சீதையின் அடையாளங்களை இராமன் அனுமனுக்கு கூறுகிறான். இந்திரசித்தினால் நாகபாசத்தால் அனுமன் பிணிக்கப்பட்டு இராவணன் முன் ஒப்படைக்கப்படுகிறான். அப்போது அனுமன் "வில்லின்தூதன் யான்" என மறுமொழி உரைக்கிறான். இராவணன் அனுமனைக் கொல்ல முற்படும் பொழுது தூதுவனை கொல்லல் தவறு என்று வீடணன் உரைக்கின்றான். இராமதூதன் ஆற்றிய கடமைகள் வள்ளுவர் கூறும் தூதுவனுக்குரிய தகுதிகளாக,

**அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்**
**செறிவுடையன் செல்க வினைக்கு (குறள். 684)**

எனும் குறளைப் பேராசிரியர் மேற்கோள் காட்டி அனுமனிடமிருந்த இயற்கை அறிவு, ஆளுமை, சூரியனிடமிருந்து கற்ற கல்வி முதலியவற்றை கம்பன் கவி வழி வெளிக்காட்டுகிறார்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**இராம பக்தன்**

பக்தி என்பது நம்பிக்கை என்பர். இராமனிடத்து இருந்த பக்தி வெளிப்பாடு காரணமாகத்தான் அனுமன் தன்னை சுயம்பிரபையிடம் அறிமுகப்படுத்திக் கொள்ளும் போது,

**ஏதமி லறத்துறை நிறுத்திய விராமன்**
**தூதருல கிற்றிரிது மென்னுமுரை சொன்னான் (கிட்கிந்தை. பிலம்புக்கு நீங்கு படலம், பா. 53)**

குற்றமில்லாத இராமனின் தூதன் என்கிறான். சுக்கிரீவன் கூட்டத்தைச் சார்ந்தவன் என்று அடையாளப்படுத்திக் கொள்ளவில்லை. இது அனுமனுக்கு இராமனிடத்து இருந்த பக்தியின் வெளிப்பாடு ஆகும். பிராட்டியைத் தேடி களைப்படைந்த வீரர்களை நோக்கி அனுமன் சடாயு போல 'வீழுதல் பெருமை' என்று கூறுகிறான் என்பதை பேராசிரியர் அனுமன் இராமனிடத்தில் கொண்டிருந்த பக்திக்கு உரைக்கல்லாகக் காட்டுகிறார்.

**இராம நாமம்**

துன்பம் வரும்பொழுது அம்மா என்றோ கடவுளே என்றோ அழைப்பதுண்டு. அனுமன் துன்பம் உறும்போது உச்சரிக்க வேண்டிய நாமம் இராம நாமமே என்கிறான்.

**ஊறுகடி தூறுவன வூறிலற முன்னாத்**
**தேறலி லரக்கர்புரி தீமையவை தீர**
**ஏறுவகை யாண்டைய விராமானை வெல்லாம்**
**மாறுமதின் மாறுபிறி தில்லென வலித்தான் (கடல்தாவு படலம், பா. 88)**

என்று அனுமனின் நம்பிக்கையே அவனுக்கு ஏற்பட்ட கடுமையான துன்பங்களை நீக்கியது. அனுமனின் குணங்களைப் பேராசிரியர் குணக்குன்றன் எனும் தலைப்பில் விளக்கியுள்ளார். அனுமன் எடுக்கும் பேருருவங்கள் போல குணமும் குன்றத்தை ஒத்தது என்பதைச் சுட்டியுள்ளார்.

**தன்பெருங் குணத்தால் தன்னைத்**
**தானலாது ஒப்பிலாதான் (அனுமப்படலம், பா. 11)**

அனுமனுக்கு அனுமனே குணத்தால் நிகரானவன் என்கிறார். அடக்கத்தை உடைமையாகக் கொண்டு அனுமன் செயல்படுவதை அடக்கம் எனும் தலைப்பில் பேராசிரியர் விளக்கியுள்ளார். அனுமனின் வாலைக் கொளுத்தும் போது அதைத் தடுக்கக் கூடிய ஆற்றலிருந்தும் பொறுமையாக இருக்கிறான். அனுமன் இலங்கையை தீக்கிரையாக்கியது அரக்கர்களோடு போரிட்டது என்று எதையும் இராமனிடம் கூறவில்லை. சீதையைக் கண்டது மட்டுமே கூறினான். இதுவும் அனுமனின் தன்னடக்கத்திற்குச் சான்றாகும்.

**சமயோசித புத்தி**

அனுமனின் சமயோசிதபுத்தி அனுமனை மட்டுமல்லாது அவனுடையக் குலத்தையே

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காக்கச் செய்கிறது. சுக்கிரீவன் இராமனுக்குக் கொடுத்த வாக்குறுதியை மறந்து விடுகிறான். இலக்குவன் கோபத்தோடு வருகிறான். உடனே அனுமன் தாரையை அரண்மனை வாயிலில் நிற்கச் செய்கிறான். ஏனெனில் பெண்ணோடு போர் புரிதல் தகாது என்று இலக்குவன் போரிட மாட்டான் என்பதை உணர்ந்து செய்கிறான். வீடணன் அடைக்கலம் பற்றி இராமன் எல்லாரிடமும் கேட்டுவிட்டு இறுதியாக அனுமனிடம் கேட்டான். அப்போது அனுமன் தன்னடக்கத்தோடு இருக்கிறான் என்பதை கம்பர் "நுணங்கிய கேள்வியான்" என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

**பொறையுடைமை**

வாலி செய்த தீங்குகள் பற்பல. வாலியை அழிப்பதற்கான ஆற்றல் அனுமனிடத்து இருந்தும் பொறுமையாக இருக்கின்றான். சுக்கிரீவனை பொறுமையாக காத்திருக்கச் செய்கின்றான். வாலியைக் கொல்ல வல்லவன் இராமன் என்பதை சுக்கிரீவனுக்கு எடுத்துரைக்கின்றான். இங்குச் சுட்டப்பட்ட அனுமனின் குணங்கள் குணக்குன்றாகக் காட்சி அளிக்கின்றான். இன்னும் அவனுடைய குணநலன்களை விரித்துரைக்கலாம். அப்படி விரித்துரைத்தால் அஃது அவனுடைய வால்போல் நீளுமாதலால் அதில் ஈடுபடவில்லை என பேராசிரியர் விளக்குகிறார். பிறப்பு என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. அவ்வுயிர்கள் செய்யும் செயலின் அடிப்படையில் உயர்வு, தாழ்வு வந்தடையும் என்பதை அனுமனின் படைப்பின்வழி கம்பர் விளக்கியுள்ளார் என்பதை வெளிப்படுத்துவதே நோக்கமாயிற்று.

**தொகுப்புரை**

கவிக்கு நாயகனாக அனுமன் காப்பியத்தை இன்பியலாக முடிக்கின்றான். சொல்லின் செல்வனில் இராமனின் உயிரை மீட்டெடுக்கின்றான். சிந்தனைச் செம்மலில் அனுமனின் அறிவு வெளிப்படுகிறது. விழையும் உருவினனில் அனுமனின் பன்னிரண்டு பேருருவங்கள் காட்டப்படுகிறது. அஞ்சாநெஞ்சனில் அனுமனின் வலிமை வெளிப்படுகிறது. இராமதூதன், இராமபக்தன் என்பவற்றில் அனுமனின் நம்பிக்கை வெளிப்படுகிறது. குணக்குன்றில் அனுமனின் பண்புகள் குன்றிலும் மிகையானதாக உள்ளது என்று பேராசிரியர் இனிமை, எளிமை, தெளிவு ஆகிய முறையில் எடுத்துரைத்துள்ளார்.

**குறிப்பு நூல்கள்**

[1] உ.வே.சா. *புறநானூறு*. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி.

[2] உ.வே.சா. *மணிமேகலை*. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, 1981.

[3] கோபாலகிருஷ்ணமாச்சாரியர். *கம்பராமாயணம்*. உமா பதிப்பகம், சென்னை, 2006.

[4] ந.சுப்புரெட்டியார். *அண்ணல் அனுமன்*. ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முதற்பதிப்பு, 2003.

[5] வீ.ஜே. செல்வராசு. *தமிழ்ச் சொற்றொடர் அகராதி.* மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2003.

[6] புலவர் சே. மாணிக்கம். *திருக்குறள்.* சிவா பதிப்பகம், தஞ்சாவூர்.

[7] *வாழ்வியற் களஞ்சியம் தொகுதி II.* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

**References**

[1] Vu.Ve.Sa., *Manimekalai*. Saiva Sithantha Noorpathippu Kazhagam, Thirunvelvelli, 1981.
[2] Vu.Ve.Sa., *Purananooru*. Saiva Sithantha Noorpathippu Kazhagam, Thirunvelvelli, 1981.
[3] Gopala Krishnamachariyar. *Kambaramanyanam.* Uma Pathippagam, Chennai, 2006.
[4] N. Subbu Reddiar. *Annal Hanuman.* Asian Printers, Chennai, First Edition, 2003.
[5] V. J. Selvarasu. *Tamil Chotrodar Agarathi*. Meyappan Pathippagam, Chidambaram, 2003.
[6] S. Manickam. *Thirukkural*. Siva Pathippagam, Thanjavur.
[7] *Vazhviyar Kalanjiyam, Vol. II*, Tamil University, Thanjavur, 1987.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று வி. கணபதி கூறுகிறார். ஆய்ந்துநோக்குங்கால் இராமன் அனுமனைக் கண்டதும் அவனது சொல்லாளுமைத் திறனை அறிந்து கொண்ட உளவியல் பாங்கு உடையவராகக் கம்பர் படைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. கம்பன் தனது காவியத்தில் இராமனைத் தவிர யாருக்குமே தரப்படாத புகழ்மிகு வார்த்தைகளை அனுமனுக்கு மட்டுமே சொல்லப்படுகின்றன. அதுவும் ஸ்ரீராமனாலேயே சொல்லப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. இராமன் அனுமனை முதல் முதலில் சந்தித்தபோது அவனின் சொல்லாளுமைத் திறமையையும் கல்வியறிவும் ஆளுமைத்திறனையும் உணர்ந்து,

**இல்லாத உலகத்து எங்கும் ஈங்கு இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும்**
**வேதக்கடலுமே என்னும் காட்சி சொல்லாலே தோன்றிற்று அன்றே,**
**யார்கொல் இச்சொல்லின் செல்வன்?**
**வில் ஆர் தோள் இளைய வீர !**
**விரிஞ்சனோ விடை வானோ**
**இராமனின் நம்பிக்கை நாயகன் (கம்ப. 6307)**

கூறுவதும், அதுபோலவே அனுமன் சிறந்த சிந்தனையாளன் என்பதால் வந்து கொண்டு இருக்கும் இராம இலக்குவரைக் கண்டு, வாலியின் ஏவலால் வருகின்றவர்கள் அல்லர். தளர்கின்ற நிலைமையுடையவர்கள் என்பதைத் தனது ஞானத்தால் உணர்கிறான். அதுமட்டுமின்றி அனுமன் சீதையைத் தேடி இலங்கைக்குச் சென்றபோது இராவணன் காற்கடையில் அவன் மனைவியரான அரக்கியரிடையே மிகவுயர்ந்த படுக்கையில் மண்டோதரி படுத்து உறங்குவதைக் கண்ட அனுமன், சீதையென எண்ணினான். பின் அங்க இலக்கண நூலாகிய சாமுத்திரிகா சாஸ்திரத்தைச் சூரிய பகவானிடம் கற்றுத்தேர்ந்தவன் அனுமன் என்பதால்,

**உத்தமப் பெண்களுக்குரிய லட்சணங்கள் இவளுடம்பில் இருந்தாலும், இவளிடம் தோன்றுகின்ற அவலட்சணங்களைக் கண்ட அனுமன், சில தினங்களுக்குள் இவள் பெருந்துன்பத்தை அடைவாள் என்பதையும் உணர்ந்தான். (பன்முக நோக்கில் வைணவ இலக்கியம், ப. 222)**

என்று சீ. முத்துலட்சுமி, சுந்திரகாண்டத்தில் சொல்லின் செல்வன் என்ற தனது கட்டுரையில் மேற்கோளாகக் குறிப்பிட்டுள்ளார். இச்செயல்களை உற்றுநோக்குங்கால் அனுமன் ஒருவரைப் பார்த்தவுடனே அவர்களின் அங்க அடையாளங்களை வைத்து அவர்களின் குணநலன்களைக் கணிக்கும் உளப்பாங்குடையவன் என்பது விளங்கும். ஆக இன்றைய கால கட்டத்தில் தகவல் தொடர்பு சாதனங்களில் வளர்ச்சியால் ஒருவரையொருவர் பார்ப்பதே இல்லை. கைப்பேசி, கீச்சகம் போன்றவைகளின்வழி ஒருவரிடம் நட்புக் கொள்வதும், நம்பிக்கை வைப்பதும், பணபரிவர்த்தனைகள் செய்து ஏமாந்து போவதும், காதல் திருமணம் செய்துகொண்டு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

புரிதலின்றி பிரிதலும் இன்றைய சமுதாயத்தின் சாபக்கேடு ஆகிவிட்ட காரணத்தால் ஒருவரைப் பார்த்து புரிந்துணரும் பண்பு அவசியமாக வேண்டும் என்பதை காட்டும்வகையில் இத்தலைப்பு ஆராயப்பட்டுள்ளது.

**நம்பிக்கை ஊட்டல்**

நம்பிக்கை என்பது தும்பிக்கை போல் என்று சொல்வார்கள். நம்பு என்ற சொல்லுக்கு விருப்பம், விருப்பு, பற்று, ஆசை, நம்பிக்கை கொள், எதிர்பார் போன்ற அகராதிப் பொருள்கள் காணப்படுகின்றன. "Belief – என்ற ஆங்கிலச் சொல் நம்பிக்கை" என்ற பொருளில் பயிலப் பெற்றதை (Chidambaranathan Chettiar (Ed) English, Tamil Dictionary p. 81) ஆங்கில அகராதி உணர்த்துகிறது. இங்கு சுக்ரீவன் இராம இலக்குவரைப் பார்த்து பயப்படுகிறான். தனக்கு துன்பம் தர வந்த வாலியின் ஆட்கள் என அஞ்சுகிறான். ஆனால் அனுமன் அவர்களைப் பார்த்த உடனே தருமத்தின் நாயகனாகவும் அநீதிகளை அழிக்க வந்த அம்சமாகவும் இராமனை எண்ணியிருந்ததோடு, மலை முழையில் பதுங்கியிருந்த சுக்கிரீவனுக்குத் தேறுதல் கூறுகின்றான். பின்னர், மாணி வடிவத்துடன் இராமலக்குமணர்களை அணுகி, அவர்களுடன் விநயமாகப் பேசியும், மீண்டு வந்து சுக்கிரீவனுடன் தெளிவாகப் பேசியும் இருவர்களிடையும் நேசத்தையும் பாசத்தையும் உண்டாக்கிவிடுகின்றான். (அண்ணல் அநுமன், ப. 150) என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு பயப்பட்ட சுக்கிரீவனுக்கு ஆறுதலோடு நில்லாமல் இராமன் சுக்கிரீவனுக்கு உதவும் வண்ணம் உரையும் நிகழ்த்துகிறான் சொல்லின் செல்வன். அதோடுமட்டுமல்லாமல் இராமலக்குமணர்கள் சுக்கிரீவன் இருப்பிடத்திற்கு வந்து அவனின் விருப்பப்படி அங்கு விருந்துண்டபின் இராமன் சுக்கிரீவனிடம்,

**பொருந்து நன்மனைக்குரிய பூவையைப்**
**பிரிந்து னாய்கொலே நீயும்! (கம்ப. கிட். நட்புக்கோள்., பா. 35)**

என்று அன்போடு வினவுகிறனான். அதற்கு அநுமன் விடை கூறத் தொடங்கி வாலியின் வரலாற்றைக் குறிப்பிட்டு பின் இராமனின் வினாவிற்கு விடையாக,

**உருமை யென்று இவற்கு உரிய தாரமாம்**
**அருமருந்தையும் அவன்வி ரும்பினான்**
**இருமை யுந்துறந்து இவன்இ ருந்தனன் (மேலது, பா. 67)**

என்று கூறியதைக் கேட்ட இராமன் சுக்கிரீவனுக்கு உதவிக்கரம் கொடுக்கும் பொருட்டு வாலியைக் கொல்வதாக உறுதி கூறுகின்றான். மேலும் அனைவரும் இன்புற்று வாழ வேண்டும் என எண்ணுவதே உயர் சிந்தனை. இதனை "எல்லோரும் இன்புற்று இருப்பதுவே அல்லாமல் வேறொன்றும் அறியேன் பராபரமே" என்றார் தாயுமானவர். அவரின் வயிர வரிகளுக்கு ஏற்ற எண்ணம் கொண்டவராக அனுமன் விளங்குகிறான். அநுமன் சூடாமணிப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


படலத்தில் சீதாப்பிராட்டி இல்லாமல் வாழும் இராமபிரானின் துன்பத்தைப் போக்குவதொடு. அரக்கர் குலத்தை அழித்து இந்த உலகத்தின் துன்பத்தையும் போக்குவேன் என கூறுவதை,

**...சிந்தைஉறு வெம்துயர் தவிர்ந்து தெளிவோடும்**

**அந்தம் இல் அரக்கர்குலம் அற்று அவிய நூறி**

**நந்தல்இல் புலிக்கண் இடர், பின் களைதல் நன்றால் (கம்ப., பா. 5460)**

என்று கூறுவதன்வழி அநுமன் அனைத்து உயிர்களிடமும் நேயமுடன் இருந்ததோடு, நம்பிக்கை நாயகனாகவும் விளங்கியுள்ளான் என்பது விளங்கும்.

பிறர் "துன்பங்கண்டு அதனைப் போக்கும் எண்ணம் கொண்டவரே மனிதநேயர்" என்று முனைவர் பொ. மா. பழனிசாமி தனது (தமிழ் இலக்கியத்தில் மனித நேய மாண்புகள்) வாழ்த்துரையில் தெரிவித்துள்ளார். இவ்வாறு ஒருவர் அஞ்சும்போது அவருக்கு ஆறுதல் வார்த்தை மட்டும் கூறாமல் வலிமையுடையவரிடம் தகுந்த முறையில் பேசி, அஞ்சியவரின் வலிக்கு வழி காட்டுவது சிறந்த நம்பிக்கை ஊட்டல் எனலாம். இன்றைய காலத்தில் ஆதரவற்று இருப்பவர்களும், நல் உறவுவின்றி சோர்ந்தும், முன்னேற்றத்திற்குக்கேற்ற வழியின்றி தவிப்பவர்களும், நான் இருக்கிறேன் என்ற நம்பிக்கை வார்த்தை கூறி ஊக்குவிப்பவர்கள் இன்றி தவிப்பவர்களும் பலர் உள்ளனர். அவர்களுக்கு அநுமன் போல் நல்வழிகாட்டி இருந்தால் அவர்களுடைய வாழ்வு வளம் பெறும் என்பதற்கு இந்நிகழ்வு சிறந்த சான்றாக அமைகிறது எனலாம். ஆக சமுதாயத்தில் மனிதன் மனிதத்தின்மேல் நேயம் கொண்டு வாழ்தல் வேண்டும் என்ற நோக்கத்தில் அநுமனின் இச்செயல் ஆராயப்பட்டுள்ளது.

**வினைத்திட்பம்**

ஒரு தொழிலை அல்லது வேலையை ஒருவரிடம் கொடுத்தால் அந்த வேலையை நுட்பமாக ஆய்ந்து தெளிவாகச் செய்யும் திறன் உடையவரே வினைத்திட்பம் உடையவர் என்பதை வள்ளுவர்,

**வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்**

**மற்றைய எல்லாம் பிற (குறள். 661)**

என்றார். இவ்வகையில் அனுமன் சீதாப்பிராட்டியைத் தேடுதற் பொருட்டுக் எடுத்த வடிவம் வாமனாவதாரம் எனலாம். கதவுகள் சாத்திப் புட்டிடப் பெற்ற இடங்களிலும் அக்கதவுகளில் வயிர ரத்தினமான திறவுகோல் செல்லும் இடங்களில் எல்லாம் நுண்ணிய நூலைக்காட்டிலும் இளங்காற்றைக் காட்டிலும் நுட்பமாகத் தன் வடிவம் அமைய நுழைந்து சென்று அநுமான் பார்த்தாதன் என்பதனைக் கம்பரின் இவ்வடிகள் நமக்கு புலப்படுத்துகின்றதை,

**தழைந்த மொய்யொளி பெயம்மணித் தாழ்தோறும்**

**இழைந்த நூலினு மின்னிளங் காலினும் (கம்ப. சுந்தர., பா. 263)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று கூறிப்பிடும்போது ஆளைக்கண்டு எடை போடக்கூடாது என்பது விளங்கும். இதனையே வள்ளுவ பெருந்தகை,

**உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு**
**அச்சாணி அன்னார் உடைத்து (குறள். 667)**

என்கிறார். மேலும் இச்செயலை உற்று நோக்குங்கால் "அர்ஜுனன் தவத்திற்கு இடையுறாய் இருந்த பன்றியைத் தாக்க சிவனார் வேடன் உருவெடுத்துச் சென்றார் என்று முறைவர் சீ. தீபா தனது கட்டுரையில் (தேவார திருவாசகத்தில் விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும், ப. 91) தெரிவித்துள்ளார். ஆக ஒரு வேலையை நுட்பமாக ஆய்ந்து செய்வதோடு அவ்வேலையில் எந்த இன்னல்கள் வந்தாலும் கருமமே கண்ணாக வேலையை நுட்பமாகவும் சிறப்பாகவும் முடிக்க வேண்டும் என்பதை அனுமனின் இச்செயல்வழி நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

**நல்ல நட்பை ஏற்படுத்திய செம்மல்**

நட்பு என்பதற்கு அன்பு, ஒத்த கருத்து, நலன், அக்கறை, முதலரியவற்றின் அடிப்படையில் உறவினர் அல்லாதவருடன் கொள்ளும் உறவு என க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி குறிப்பிடுகின்றது. பண்டு தொட்டு இன்று வரை நட்பைப்பற்றிச் சொல்லாத இலக்கியங்களே இல்லை எனலாம். தமிழ் வேதமான திருக்குறளில் வள்ளுவப்பெருந்தகை உண்மையான நட்பு அகத்தில் மலரவேண்டும் என்று குறிப்பிடுகிறார். சங்க இலக்கியமோ அதியமான் ஔவையின் நட்பையும், பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழன் நட்பையும், பாரி கபிலர் நட்பையும் நட்புக்கு இலக்கணமாகவே பறை சாற்றுகிறது. நட்பின் ஆழம் என்பது நண்பனுக்கு வலி வரும் போது வழி காண்பிப்பது, சோர்ந்துவிடும்போது தோள் கொடுப்பது, மனம்தளரும்போது ஊக்கவுரைகள் சொல்லி மனந்தளராமல் செய்வது இவையெல்லாம் நல்ல நண்பனுக்கு அழகாக அமையும் எனலாம். மேலும், நல்ல நண்பர்கள் என்பவர்கள் நல்ல நட்பை இணைக்கும் பாலமாகவும் திகழ்வர் என்பதற்கு அநுமன் ஒரு முன்னுதாரணமாகத் திகழ்கிறான். அண்ணன் வாலிக்குப் பயந்து சுக்கிரீவன்,

**அநுமன் உட்பட சில நல்ல வானரர்களுடன் கிட்கிந்தையை விட்டு வெளியேறி, ஒரு முனிவர் சாபத்தால் வாலி புக முடியாத ருசியமுக பர்வதம் என்ற பகுதியில் வாழ்ந்து வருகின்றான். இராமலக்குமணர்கள் பிராட்டியைத் தேடிக்கொண்டு அவ்வழியாக வந்தபோதுதான் இந்த நட்பு ஏற்படக் காரணமாக அமைந்தவன் அனுமன் (அண்ணல் அநுமன், ப. 14)**

என்பதை தனது நூலில் தெளிவாக விளக்குகின்றார் பேராசிரியர். இராவணனின் தம்பி வீடணன் இராமனிடம் அடைக்கலம் தேடி வருகிறான். அப்போது இராமன் தன்னோடு இருப்பவர்களிடம் வீடணனை ஏற்றுக்கொள்ள ஆலோசனை கேட்கிறான். அனைவரும் வீடணனைத் தவிர்க்க ஒவ்வொரு காரணங்கள் சொன்னார்கள். ஆனால் அனுமன் வீடணன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அரக்கர் குடிப்பிறந்த நல்லவன் என்பதை சொல்லால் தொடுத்துக் கூறினான். அனுமனின் இச்சொல்லவன்மையை உணர்ந்து இராமன் வீடணனை ஏற்றுக் கொண்டதை,

**குகனொடு ஐவர் ஆனோம்முன்பு பின் குன்று சூழ்வான்**
**மகனொடு அறுவரானோம் எம்முழை அன்பின் வந்த**
**அகன் அமர் காதல் ஐயநின்னொடும் எழுவர் ஆனெம்**
**புகல் அருங்கானம் தந்து பதல் வரால் பொலிந்தான் நுந்தை (கம்ப., பா. 6507)**

இவ்வாறு இராமன் கூறினான். தன் தந்தையான தசரதனை அரக்கர் குடியில் பிறந்த வீடணனின் தந்தையாகவே இராமன் கூறும்வகையில் அநுமன் வீடணனைப் பற்றி உரைத்துள்ளான் என்பதை,

**உயர்குடியில் பிறந்தவர்கள் தன்னையும் தன்னுடைய இனத்தாரையும் மட்டும் உயர்ந்தவராகக் கருதாது அனைத்து உயிர்களையும் தம் உயிர்ப்போல கருதுவது சிறப்பு (தமிழ் இலக்கியத்தில் ஆளுமை. ப. 270)**

என முனைவர் ம. சித்ரகலா தனது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளது பொருத்தமாகும்.

**தூதின் ஒழுங்கு காத்த செம்மல்**

தூது என்பதற்கு இருவரிடையே சந்து செய்வித்தல், கூழாங்கல், செய்தி, பகை, தானாதிபதி எனப் பல பொருள்களை வாழ்வியல் களஞ்சியம் கூறுகிறது. இதனைத் திருமகள் அகராதி தூது மொழி என்றும் ஒரு வகை நூல் என்றும் செய்தி, கூழாங்கல் என்றும் இருவரிடையே பேச்சு நிகழ்வதற்கு உதவியாக உள்ளவர் என்றும் பொருள் தருவதோடு தூதன் என்பதற்கு ஒற்றன், செய்தியறிவிப்போன், ஏவலாளன், புதன், தேவ தூதன் என்றும் தூதி என்பதற்கு தூது செல்பவள் என்றும் பொருள் தருகிறது. சங்கஇலக்கியத்தில் தூதாகப் போவதை 'தூதாடுதல்' என்றும் கூறுவர். இதனைக் கலித்தொகைப் பாடலில் "நாடிநின் தூதாடித் துறைச் செல்லாள்" (கலித். 72) என்று குறிப்பிடுகின்றது. மேலும் தூதின் மெய்மைத் தன்மையிலிருந்து மாறுவது தூதிற்கு இழுக்கை ஏற்படுத்தும். தூது செல்பவர் தூது அனுப்பியவரை பாதிப்புக்குள்ளாக்காது இருத்தல் வேண்டும். அதாவது தலைவன் தலைவி தூதில் தலைவியிடம் தூதாகச் சென்றபொருள் தலைவனின் காதலின் புனிதத்தன்மையை எடுத்துரைக்க வேண்டுமே தவிர தன் காதலுக்கு வழிவகுத்தோ அல்லது தீங்கிளைத்துப் பிரிவு ஏற்படுமாறு செய்வதோ கூடாது. இதேபோல் புறத்தூதாக இருந்தால் புறச்செய்தியைக் கூறி தூதனுப்பிய மன்னனுக்கு இழுக்கோ, பகையோ ஏற்படாமலும், பொருள்மேல் உள்ள மோகத்தால் நாட்டையே காட்டிக் கொடுக்கும் கொடூரத் தூதனாக மாறாமலும், மண்ணாசை பிடித்து மன்னனையே வீழ்த்தி தான் அரியணையில் அமரத்திட திட்டமிடும் நன்றிகெட்ட தூதனாக மாறிவிடாமல் இருக்க வேண்டும் என்பதை தூதுஇலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. இன்றைய காலத்தில் காலத்திற்கேற்ப தன் பண்பை மாற்றிக் கொள்ளும் பச்சோந்தி இனத்தைச்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சேர்ந்தவர்களாக மனிதர்கள் மாறி இருப்பதால், அம்மாற்றம் தூதின் பண்பை மாற்றி விடக்கூடாது என்பதற்காகவே தூதின் உயர்தன்மையை ஒவ்வொரு இலக்கியமும் ஆணித்தரமாக கூறியது. இதனைக் கம்பர், **தூதரை எறிதல் என்பது பல்லியது. பழியொடு புணரும் (கம்ப. சுந்த., பா. 82)** என்று குறிப்பிடுகிறார். அவ்வகையில் அனுமன் இராமபிரானின் ஏவலின்படி சீதாப்பிராட்டியைத் தேடி இலங்கை நகரில் செல்கிறான். அங்கு சீதாப்பிராட்டி அரக்கியர் சூழ இருப்பதைக் கண்டு மகிழ்கின்றான். அதே சமயம் எப்படி சீதாதேவியிடம் தான் இராமனின் தூதுவன் என உரைப்பது என சிந்தித்து தன் திறனால் அரக்கியர்கள் அனைவரையும் தூக்கத்தில் ஆழ்த்துகிறான். பின் சீதாப்பிராட்டியைக் காணுகிறான். அப்போது சீதாதேவியோ தன் நிலையை எண்ணியும் தன் குலப்பெருமையை எண்ணியும், இராமபிரான் தன்னைக் காணாது தவிக்கும் தவிப்பை எண்ணியும், தன்னை எப்படி மீட்பார் என்பது பற்றியும் பலவாறு புலம்பி தவித்து இறுதியாக தான் கற்புடையவள் என்பதை எப்படி உணர்த்த முடியும் அது இயலாத காரியம் என முடிவு செய்ததை,

**ஆதலான், இறத்தலே அறத்தின் ஆறு எனா**
**சாதல் காப்பவரும் என் தவத்தின் சாம்பினார்,**
**ஈது லாது இடமும் வேறு இல்லை (கம்ப., பா. 5248)**

என்று இறப்பதே மேல் என தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்தாள் சீதாப்பிராட்டி. இதை உணர்ந்த அனுமன் நடுவுநிலையிலும் நிற்க வேண்டும், தேவியைக் காப்பாற்றி நம்பிக்கையும் அளிக்க வேண்டும், தேவியின் மெய் தீண்டவும் கூடாது என்ற நிலையில் உயிர்காக்கும் உயர்நெறியில் செயல்பட்டதை,

**கண்டனன் அனுமனும்; கருத்தும் எண்ணினாள்,**
**கொண்டனன் துணுக்கம்; மெய் தீண்டக் கூசுவான்,**
**'அண்டர் நாயகன் அருள் தூதன் யான்' எனா,**
**தொண்டை வாய் மயிலினைத் தொழுது, தோன்றினான். (கம்ப., பா. 5249)**

என்பதன் வழி அனுமன் இராம நாமத்தைக் குறிப்பாக சொன்னதன்வழி சீதாதேவியின் உயிரைக் காப்பாற்றினான். இதை உணர்ந்த தேவி அனுமானின் செயல்களால் நற்தூதன் என்று உணர்ந்ததோடு அவன் எக்குலத்தில் இருப்பவனாக இருந்தாலும் உயிரைக் காத்தவன் என்பதை நன்றி உணர்வோடும் அனுமன் மேல் கொண்ட உயர் எண்ணத்திலும் கூறிய செயல்வழி சீதாதேவியின் உள்ளப்பாங்கு புலப்படும். இவ்வாறு அனுமன் சீதாதேவியின் உயிரைக்காத்து, இராமன் வருவான், தன்னை மீட்பான் என்ற நம்பிக்கையூட்டி தூதிற்கு சிறப்பு செய்தான் என்பது குறிப்பிடத்தக்கது. அதோடு ஒருவருக்குத் துன்பம் வரும்போது அவர் துன்பத்தை நீக்கும் தன்மையை பழமொழி நானூறு,

**அல்ல லொருவர்க் கடைந்தக் கால் மற்றவர்க்கு**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நல்ல கிளைகள் எனப்படுவார் – நல்ல**
**வினை மரபின் மற்றதனை நீக்கும் அதுவே**
**மனைமர மாய மருந்து (பழ., பா. 305)**

என்ற பாடலின்வழி ஒருவர்க்குத் துன்பம் வந்தபோது அவர்க்கு மிக்க உறவினரென்று சொல்லப்படுகின்றவர் நல்ல செய்கை மரபினாலே அத்துன்பத்தை நீக்குதலான அச்செய்கை மனையின்கண் நின்ற மருந்தாய மரத்தோடு ஒக்கும் என்பது போல, இராமனின் துன்பத்திற்கு மருந்தாக, அனுமன் இராமபிரானிடமும் சென்று குறிப்பினாலேயே சீதாப்பிராட்டியைக் கண்டதை உணர்த்தியதோடு நன்மொழியும் நேயத்தோடு மொழிவதைக் கம்பர், "கண்டனென், கற்பினும் அணியைக் கண்களால்" என்றதோடு உலக நாயகனான இராமனிடம், "அண்டர் நாயக! இனி துறத்தி ஐயமும் பண்டு உளதுயரும்" போகும் என மிகத் தெளிவாகக் கூறி இராமனின் துயர் துடைத்த நற்தூதனாக அனுமன் விளங்கினான்.

**முடிவுரை**

பிறருக்கு நற்செயல்கள் செய்து பிறர் வாழ்க்கையில் மங்கலச் செயல்கள் நடக்க உதவுதல் வேண்டும் என்றும் ஒருவரைப் பார்த்து அவரின் பண்புநலன்களைப் புரிந்து நடத்தல் ஒரு கலை. அக்கலையை இன்றைய சமுதாயம் கற்றுணர்தல் வேண்டும் என்றும், நல்ல பெரிய விளக்கே ஆயினும் அது நல்ல வண்ணம் எரிய ஒரு தூண்டுதல் வேண்டும். அதுபோல ஒருவர் வாழ்க்கையில் துவண்டுவிடும் போது அவரை நல்ல முறையில் ஊக்கப்படுத்தி நம்பிக்கை ஊட்டல் என்பது சிறந்த அறச்செயல் என்பதோடு அச்செயலால் மனிதநேயம் பேணப்படும் என்பதும் இவ்வாராய்சியில் உறுதி செய்யப்பட்டது. மேலும் நல்ல நண்பர்கள் இருந்தால் மனித வாழ்வு நலம் பெற முடியும் என்றும், பிறர் நலம் பயக்க வாழ்தலே சிறப்பு என்றும் இக்கட்டுரையில் தெளிவுபட ஆராயப்பட்டது. ஆக சமுதாய ஒழுக்கத்தின் தேவையை மையமாகக் கொண்டு அநுமனின் நற்சிந்தனைவழி இக்கட்டுரை ஆராயப்பட்டது. வாழ்க சமுதாயம். வளர்க மனிதநேயம்.

**குறிப்பு நூல்கள்**

[1] அம்பலவாணக் கவிராயர். *அறப்பளீசுர சதகம்.* புலவர் அரசு (ப.ஆ). கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, டிசம்பர் 1958.

[2] வ. த. இராம சுப்பிரமணியம். *திருமகள் தமிழகராதி.* திருமகள் நிலையம், சென்னை, 1997.

[3] மு. இராசமாணிக்கம். *உளவியல் துறைகள் (இரண்டாம் தொகுதி).*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, ஜுன் 1973.

[4] கணபதி.வி. *கல்வியின் உளவியல் அடிப்படை.* கங்கை புத்தக நிலையம், சென்னை.

[5] கௌமாரீஸ்வரி. எஸ். *பழமொழி நானூறு.* சாரதா பதிப்பகம், சென்னை, 8ம் பதிப்பு, 2013.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[6] சாமிநாதையர். உ.வே. *கலித்தொகை.* ஸ்ரீ தியாகராயவிலாச வெளியீடு, சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1956.

[7] சாமிநாதையர். உ.வே. *புறநானூறு.* ஸ்ரீ தியாகராயவிலாச வெளியீடு, சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1956.

[8] சித்ரகலா. ம. *தமிழ் இலக்கியத்தில் ஆளுமை.* இராஜா பப்லிகேசன்ஸ், திருச்சிராப்பள்ளி, மார்ச் 2021.

[9] சிதம்பரநாதன். ஏ.சி (ஈ.டி). ஆங்கிலம் – தமிழ் அகராதி. மெட்ராஸ் பல்கலைக்கழகம், 1965.

[10] சுப்புரெட்டியார். ந. *அண்ணல் அனுமன்.* ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை - 600014.

[11] பரிமேலழகர். *திருக்குறள்.* கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 1972.

[12] பழனியப்பன். பா. *கம்பராமாயணம்.* சாந்த மங்கை பதிப்பகம், திருமகள் நிலைய வெளியீடு, முதற்பதிப்பு, பிப்ரவரி 2007.

[13] பாலமுருகன். த. *தேவார திருவாசகத்தில் விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும்.* தமிழ்த்துறை, ஸ்ரீ ராமகிருஸ்ண மிஷன் வித்யாலய கலை அறிவியல் கல்லூரி, 2018.

[14] பாலுசாமி. நா. (மு.ப.ஆ) வாழ்வியல் களஞ்சியம் – தொகுதி 11. தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாஊர்.

[15] பேராசிரியர்கள் தொகுப்பு நூல். பன்முக நோக்கில் வைணவ இலக்கியம். தமிழ்த்துறை, தர்மமூர்த்தி இராவ் பகதூர் கலவல கண்ணன் செட்டி இந்துக்கல்லூரி, பட்டாபிராம், சென்னை.

[16] மதுரை முதலியார்.கு. (உ. ஆ). நாலடியார். முல்லை நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1992.

[17] வேங்கடசாமி நாட்டார். சிலப்பதிகாரம். ராமையா பதிப்பகம், சென்னை – 600 014, ஜுலை 2011.

[18] மங்கல். எஸ்.கே. உளவியல் ஒரு அறிமுகம். ஸ்டெர்லிங் பப்ளிஷர்ஸ் பிரைவேட் லிமிடெட், புது தில்லி, நான்காவது மறுபதிப்பு, 2004.

[19] விஷ்ணுப்பிரியா. இரா. தமிழ் இலக்கியத்தில் மனித நேய மாண்புகள். இராஜா பப்லிகேசன்ஸ், திருச்சிராப்பள்ளி, ஜீலை 2019.

[20] ஜெயந்தி. தமிழ்மலர். நியூ சென்சுரி பதிப்பகம், சென்னை, ஆகஸ்ட். 2022.

**Reference**

[1] Ambalavana Kavirayar. *Arabaleeswarar Sathagam*, Pulavar Arasu (P. A.) Kalaka Veliyeedu, Chennai, 1958.

[2] Rama Subramaniyam. Va. Tha. *Thirumagal Tamil Agarathi*. Thrumagal nilayam, Channai. 1997.

[3] Rasha Manickam. M. *Ulaviyal Thurai (Second volume).* Tamil Naddu Pada Nool Niruvanam, Chennai 1973.

[4] Ganapathy. V. Kalvien *Ulaviyal Adippadai*. Gangai Book House, Chennai.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[5] Gowmarieehwari. S. *PalaMozhli Nanuru*. Saratha Pathippakam, Chennai – 14, 2013.
[6] Samy Natha Iyer. U.V. *Kaliththokai*. Shri Thiyagaraya Vilasam Veliyeedu, Chennai, 1956.
[7] Samy Natha Iyer. U.V. *Poorananooru*. Shri Thiyagaraya Vilasam Veliyeedu, Chennai, 1956.
[8] Chitrakala. M. *Tamil Elakkiyaththil Alumai*. Raja Publication, Thiruchirapalli, March 2021.
[9] Chidambaranathan. A.C (Ed.) English – Tamil Dictionary. University of Madras, 1965
[10] Subburaddiyar. N. *Annal Anuman*. Asian Printers, Chennai. 600 00=14
[11] Parimalzhalakar. *Thirukkural*. Kalaga Veliyeedu, Chennai, 1972
[12] Palaniyappan. P. *Kamparamayanam.* Shantha Mankai Pathippagam, Thrumagal Nilaya Veliyeedu, Chennai. 2007
[13] BalaMurugan. T. *Thevara Thiruvasakaththil Vizhanamum Maizhanamum*. Tamil Dept. Shri Ramakrishnan Mission Arts and Science College, 2018.
[14] Balusamy. N. (Mu. Pa. Aa) *Valviyal Kalanjiyam – Part 11*. Tamil University, Thanjavur.
[15] Prof. Thoguppu Nool. *Panmuga Nokkil Vainava Elakkiyam*. Tamil Department, Tharmamurthi Eravu Pagathur Kalavala Kannan Chitty Inthu Kalluri, Pattapiram, Chennai,
[16] Madurai Muthaliyar. K. (V. A). *Naladiyar*. *Mullai Nilayam*, 43, Pudhu Street, Mannadi, Chennai, 1992.
[17] Vengadasamy Nattar. *Silappathikaram.* Ramaiya Pathippagam, Chennai, July 2011.
[18] Mangal. S. K. *An Introduction to Psychology*. Sterling Publishers Private Ltd., New Delhi, Fourth Reprint – 2004.
[19] Vishnupriya.R, *Tamil Elakkiyaththil Manitha Neya Manpukal*. Raja Publication, Trichy, 2019.
[20] Jayanthi. R. *Tamil Malar*. New Century Pathippakam, Madurai, August 2022.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் *திருப்பாவை விளக்கம்* தரும் திருமாலின் திருவருள்

## Grace of Lord Thirumal in N. Subbu Reddiar's *Thirupaavai Vizhakkam*

**முனைவர் இரா. சிவகுமார்**, உதவிப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை, திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி (நிலை-1), விருத்தாசலம், கடலூர், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. R. Sivakumar**, Assistant Professor of Tamil, Thiru Kolanjiappar Government Arts College (Grade-1), Vriddhachalam, Cuddalore, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-7044-071X**

**DOI: 10.5281/zenodo.7252515**

### Abstract

*Tamil is the oldest language in the world. It contains authentic literary and grammatical resources. Devotional literature excels in Tamil Literature. One among them is the famous "Nalayira Dhivya Pirapantham". The crown jewel among them is the hymns of "Thirupaavai" by Sri Andal Nachiyar. It serves as the magnum opus for the Vaishnavas. "Thirupaavai" is designed in such a way that everyone can learn the Vaishnava faith. It also creates research interest among researchers. Although there are many texts for it as commentary, summary, subject matter, and dissertation, the explanation given by N. Subbu Reddiar is authentic and graceful. It is readable by all sorts of people. The ancient society was portrayed as Aayarkulam which rely on cattle. Kannan was born a baby in the Aayarkula caste. He is the incarnation of Lord Thirumal. He is the God for the Ayarkula maidens. His grace was excellent for Aayarpadi women. He is the entire world to them. For this perspective, Subbu Reddiar gives the interpretation of the Ayarpadi maidens and their love for Kannan as evinced in Andal's "Thirupaavai", In addition, he further explains that bathing is a blissful encounter with Lord Kannan, as Aayarkula women bathe in the cool pool water at dawn in the Margazhi month for the fast and worship with the God. Here, bathing means Love-making on Kannan by Andal. Thus, the nuances of the blissful thoughts and feelings of Andal are explained by Professor Subbu Reddiar in his "Thirupaavai Vizhakam". He also says that the hymns are pervasive by Thirumal's grace in his book. Hence, this study examines the features of Thirumal's grace in destroying the arrogant Mavali emperor, the giant Koman and the treacherous monsters, the love of Ayarkukla Maidens, and Kannan's love for all as sung in Andal's "Thirupaavai".*

**Keywords:** Grace, Lord, N. Subbu Reddiar, *Thirupaavai Vizhakkam.*

### ஆய்வுச்சுருக்கம்

உலகில் உயர்ந்த மொழி தமிழே ஆகும். அது இலக்கிய இலக்கண வளங்களைக் கொண்டு உள்ளது. இலக்கியத்துள் பக்தி இலக்கியம் சிறப்புற்றது. அதில் நாலாயிர திவ்ய பிரபந்தம் இன்றியமையா இடத்தை வகிக்கிறது. அதன் மணிமகுடமாக ஸ்ரீ ஆண்டாள் நாச்சியார் அருளிய திருப்பாவை விளங்குகிறது. அதோடு அது வைணவர்களின் பாலபாடமாக விளங்குகிறது. இந்தத் திருப்பாவை, சமுதாயத்தில் அனைவரும் கற்கும் வகையில் அமைந்துள்ளது. மேலும், இது ஆய்வாளர்களிடத்திலும் ஆய்வு வேட்கையை ஏற்படுத்துகிறது. அதற்குக் குறிப்புரை, சுருக்கவுரை, பொருளுரை, கருத்துரை, விளக்கவுரை, ஆய்வுரை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மேற்கோள் உரை எனப் பல உரைகள் இருக்கின்றன. அவற்றுள் ந. சுப்புரெட்டியார் தரும் விளக்கவுரை நயமிக்கதாக விளங்குகின்றது. அவ்வுரை அனைத்துத் தரப்பினரும் படித்து இன்புறத் தக்கத்தாய் அமைந்துள்ளது. பண்டைய சமுதாயம் ஆநிரைகளைக் கொண்ட ஆயர்குலம் ஆகும். அக்குலக் கொழுந்தாகக் கண்ணன் விளங்கினான். அவன் திருமாலின் அவதாரம் ஆவான். அவனே ஆயர்களின் வழிபடு கடவுளும் ஆவான். அவனின் அருள் ஆயர்பாடியில் வாழும் பாமரர்களான ஆயர்களுக்குச் சிறந்து இருந்தது. அவர்களே உலகினர் ஆவர். உலகே ஆயர்பாடி ஆகும் என்ற சுப்புரெட்டியார் தரும் ஆயர், ஆயர்பாடி என்பவற்றிற்கான விளக்கம் குறிப்பிடத்தக்கது. அதோடன்றி, அவர் மேலும் ஆயர்குலப் பெண்கள் பாவை நோன்பிற்காக மார்கழி மாதத்தில் விடியற்காலையில் குளிர்ந்த குளத்து நீரில் நீராடிக் கண்ணனுடன் அன்பு கொண்டு வழிபடுவது கண்ணனுடனான பேரின்பக் கலவி என்று நீராடல் குறித்து விளக்கம் தருகிறார். அதாவது நீராடல் என்பது கலவி என்னும் பொருள் ஆகும். ஆகவே பேராசிரியர் சுப்புரெட்டியார் கூறும் பேரின்ப வாழ்வியல் குறித்த நுணுக்கங்கள் திருப்பாவை விளக்கத்தில் திருமாலின் திருவருள்களாக நிரம்பக் காணக்கிடக்கின்றன. மேலும் அகங்காரங் கொண்ட மாவலிச் சக்கரவர்த்தியையும், பிறன்மனை நோக்கிய அரக்கர் கோமானையும், வஞ்சகச் செயல் புரியும் அசுரர்களையும் வதைத்து அழித்து ஒழிக்கும் திருமால் திருவருள்கள் திருப்பாவையில் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. அவற்றை ஆய்வதாக இந்த ஆய்வு அமைந்துள்ளது. இந்த ஆய்வில் பெண்கள் ஒற்றுமை, வேண்டல், தோன்றல், அருளல், காத்தல் என்னும் தலைப்புகள் கொண்டு ஆராய்ந்து உரைக்கப்பட்டுள்ளன.

**குறிப்புச்சொற்கள்**: ந. சுப்புரெட்டியார், *திருப்பாவை விளக்கம்*, திருமாலின் திருவருள்.

## முன்னுரை

உலக மொழிகளுள் ஓங்கு புகழ் கொண்டது தமிழ் மொழி. அம்மொழி இலக்கிய இலக்கண வளமுடையது. அதனுள் பக்தி இலக்கியம் போற்றுதற்குரியது. அதில் நாலாயிர திவ்ய பிரபந்தம் வைணவப் பெட்டகம். அதன் மணிமகுடமாக ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை விளங்கும். அது திருமாலின் திருவருள் சிறப்பைக் கூறுவதாகும். திருப்பாவையை வைணவர்கள் போற்றுவர். திருப்பாவையைப் பெரிதும் போற்றிய ராமானுஜர் ஜீயர் எனச் சிறப்பிக்கப்பெற்றார் (மு.கா.கோ.வேங்., த.இ.வ., ப. 169) என்பதும் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீ ஆண்டாளின் சிறப்பு அளவற்றது. அதனை வியாக்கியான சக்கரவர்த்தி ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை, சாதாரண மனிதர்களை விட ரிஷிகள் உயர்ந்தவர்கள். ரிஷிகளை விட ஆழ்வார்கள் உயர்ந்தவர்கள். ஆழ்வார்களை விட பெரியாழ்வார் உயர்ந்தவர். பெரியாழ்வாரை விட ஸ்ரீ ஆண்டாள் உயர்ந்தவள் (திருப்., சாண்டி. உ., ப. 6) என்று சிறப்பித்துக் கூறுகின்றார் என்பர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அதற்குக் காரணம் நாயகன் - நாயகி பாவத்தைக் கொண்ட பக்தி இலக்கியத்தில் புருஷன் பெண் வேடம் போடுவதைக் காட்டிலும் பெண்ணே பெண் பாத்திரத்தைத் தாங்குவது இயற்கையாகும். அவ்வாறே பெண்ணாகவே பிறந்த ஸ்ரீ ஆண்டாள், ஆண்டவனை நாயகனாக எண்ணி உறவாடிப் பேரின்பத்தில் மகிழ்ந்தது சாலச் சிறந்தது. அதுவல்லாது ஸ்ரீ ஆண்டாள் ஸ்ரீரங்கநாதனோடு கொண்டுள்ள பேரின்பக் காதல், நிலை, **‘உன்னித்தெழுந்த என் தட முலைகள் மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன்’ (நாச். திரு., பா. 5)** என்ற அவளின் மனப்பக்குவம் உயர்ந்த மனத்தையுடையது. அத்தகைய மனதில் ஆண்டவனைப் பற்றி எழுந்த பேரின்பக் கனவுகள், பேரின்ப உறவுகள் ஆகியவை கவிதைகளாய் உருவெடுத்துத் திருப்பாவை ஆயிற்று. ஆண்டாளின் மற்றுமொரு நூல் நாச்சியார் திருமொழி ஆகும். இந்த இரு நூல்கள் மட்டுமே அந்த ஆண்டாள் அருளியவையாகும்.

திருப்பாவை ஆற்றுப்படை என்னும் இலக்கண விகுதியாகும். ‘ஆற்றுப்படுத்துதல்’ என்பதற்கு வழி தெரிந்தான் ஒருவன் வழி தெரியாதவனுக்கு வழிகாட்டி அழைத்துச் செல்லுதல் என்னும் பொருளதாகும். அதன்படி ஆண்டவனை அடையும் வழியை அறிந்த ஸ்ரீ ஆண்டாள் அவ்வழியறியாதவர்களுக்கு ஆற்றுப்படுத்துகிறாள். ஆதலால் திருப்பாவை ஆற்றுப்படை இலக்கண விகுதியாகிறது. அதனாலே, அத்திருப்பாவை மார்கழித் திங்கள் வைகறையில் வைணவர்களால் பாராயணம் செய்யப்பெறும் சிறப்புமிக்கது (பாக்ய., த.இ.வ., ப. 339) ஆகும். ஆயர்குலம், தம்குலத்தில் உதித்த திருமாலின் அவதாரமான ஸ்ரீ கண்ணனை வணங்கி, வழிபடு கடவுளாகக் கொண்டது. ஆயர் பெண்கள் கண்ணனிடம் மிக்க அன்பு கொண்டு விளங்குவர். அவ்வன்பு அவனின் விருப்பத்திற்குரியது. அழகுடைய ஆய்ச்சியர் அனைவரும் மார்கழி மாதப் பனி நாட்கள் முழுவதும் கண்ணனோடு அன்பில் திளைக்க பாவை நோன்பு என்னும் நோன்பை நோற்பர். அப்போது அவர்களுக்குக் கண்ணனின் அன்பு அருளாகக் கிடைக்கின்றது.

பாவை நோன்பை நோற்க, மார்கழி மாதப் பனி நாட்களில் அதுவும் விடியற்காலையில் குளிர்ந்த குளத்து நீரில் நீராடி, உடல் உள்ளத்தூய்மையுடன் கண்ணனின் அன்பைப் பெற அவனை எழுப்புவோம். விருப்பமுள்ளவர்கள் என்னுடன் எழுந்து வாருங்கள் என்று ஸ்ரீ ஆண்டாள் திருவாய்ப்பாடிச் சிறுமியர்களை அழைக்கிறாள். அது, **‘மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால் நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்’ (திருப்., பா. 1)** என்பதாகும். செல்வச் செழிப்புடன் அழகு மிகுந்து விளங்கும் சிறுமியர்கள் என்று அவர்களைப் புகழ்ந்து அழைக்கின்றாள். அவர்களும் வந்து ஒன்று சேர்கிறார்கள். பாவை நோன்பை நோற்றுக் கண்ணனின் அருளைப்பெற அவனிடம் அவன் புகழைக் கூறி அன்புடன் வேண்டுகின்றனர். கண்ணன் அருள் கிடைக்கப் பெறுகின்றனர் எனத் திருப்பாவை அமைந்துள்ளது. அது 30 பாடல்களைக் கொண்டு எண்சீர் விருத்தத்தால் ஆனது. அதோடு,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உவமை நலமும், கருத்து வளமும், திருமாலின் திருவருளும் அதில் நிரம்பக் காணக்கிடக்கின்றன.

திருப்பாவைக்கு உரைகள், குறிப்புரை, கருத்துரை, பொருளுரை, விளக்கவுரை, நயவுரை என்று பல இருப்பினும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தந்துள்ள திருப்பாவை விளக்கம் ஆழ்வார்களிடையும், ஆய்வாளர்களிடையும் ஆர்வலர்களிடையும் போற்றப் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. அவர்தம் உரை பெரியவாச்சான் பிள்ளை, மு. இராகவயங்கார், சே. கிருஷ்ணமாச்சாரியார் முதலானோரின் உரைகள் உள்ளிட்டதாகும். திருப்பாவை விளக்கத்தில், ஆயர், ஆய்ப்பாடி, ஆயர்குலம் பாவை நோன்பு, திருமாலின் திருவருள் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளமை மிகச் சிறப்பு. ஆதலால் அவற்றை ஆராய்ந்துரைக்கும் பொருட்டு 'ந. சுப்புரெட்டியாரின் *திருப்பாவை விளக்கம்* தரும் திருமாலின் திருவருள்' என்னும் தலைப்பில் இந்த ஆய்வு அமைந்தது ஆய்வின் நோக்கமாகும். ஆய்வின் உட்தலைப்புகளாகப் பெண்களின் ஒற்றுமை, வேண்டல், தோன்றல், அருளல், காத்தல் ஆகியவை அமைந்துள்ளன.

**ஒற்றுமை**

ஆயர்குல மக்கள் அன்பால் ஒன்றுபட்டு ஒற்றுமையுடன் வாழ்வர். அவர்கள் பாமரர் ஆவர். கல்வியறிவு இல்லாதவர். பால் தரும் பசுக்களைக் கொண்டு பால் வளம் பெருக்கி வாழ்வின் பொருளாதாரத்தை மேம்படுத்திக் கொண்டவர் ஆயர் மக்கள். அவர்கள் வாழுமிடம் ஆயர்பாடி ஆகும். ஆயர் - பசுக்களை மேய்ப்பவர்; பாடி – ஊர்; பசுக்கள் ஆநிரைகள் ஆகும். ஆகவே ஆநிரைகளை மேய்ப்பவர் வாழும் ஊர் என்று பொருள் கொண்டு ஆயர்பாடி என்றழைக்கப் பெறுகிறது. மேலும், ஆய்ப்பாடி, திருவாய்ப்பாடி, கோகுலம் என்ற பெயர்கள் கொண்ட ஊர்களும் உலகில் உண்டு. மக்களும் ஆயர் ஆய்ச்சியர், கோவலர், கோபியர் என்ற பெயர்கள் பெற்று வாழ்வர். ஆதலாலே பண்டைய மக்கள் ஆயர் என்றும், அவர்கள் வாழுமிடமே உலகம் என்றும், அவர்களே உலகினர் என்றும் கருதப்படுவர் (திருப்., ந. சு.ரெ. உ., ப. 28) என்பது கொள்ளத்தக்கது. ஆயர் போற்றி வணங்கும் கடவுள் கண்ணனாவான். அவன்பால் மிக்க அன்பு பூண்டு வணங்குவர் அவ் ஆயர் மக்கள். அதனாலே அவர்களை அக்கண்ணன் காக்கின்றான். அவர்களே உலகினர் என்பதால் உலகைக் காக்கும் கடவுள் என்றும் அவன் போற்றப் பெறுகிறான் என்பதும் குறிப்பிடத்தக்கது.

ஆயர் செல்வச் செழிப்புடையவராகவும், ஆய்ப்பாடி புகழ் மிகு ஊராகவும் விளங்க கண்ணன் திருவருளே காரணமாகும். அதனாலே ஆய்ப்பாடி திருவாய்ப்பாடி என்றழைக்கப் பெறுவதுண்டு. வடக்கேயுள்ள உத்தரகாண்டப் பகுதியில் ஓடும் யமுனை நதிக்கரையில் அமைந்துள்ளது ஸ்ரீவில்லிபுத்தூர். அதன் வேறு பெயர்களாக, வராகசேத்திரம், வன்புதுவை, தன்விபுரம், திவ்யதேசம், ஸ்ரீவி ஆகியவை விளங்குகின்றன (த.ஆ.ஆ.ச.தே.ந.இ., ஆ.கோ.சி., ப.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

8). அத்தகைய சிறப்பு மிக்க ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்து வந்த பெரியாழ்வார், தாம் பராமரித்து வந்த பிருந்தாவனப் பகுதியில் துளசிச் செடியின் கீழ் கண்ட குழந்தையை வளர்த்து வந்த மகளே ஸ்ரீ ஆண்டாள் என்றும், பூமிப் பிராட்டியின் அவதாரம் என்றும் பெருமையுற்றாள். அத்தகைய ஆண்டாள் கண்ணனிடம் அளவற்ற அன்பு கொண்டு பேரின்பக் காதல் என்னும் திருவருளைப் பெற்று உலகப்புகழ் உற்றாள் ஆவாள். மனித சமுதாயத்தில் இறைவனை அப்பனாக, அம்மையாகப் பார்த்த காலத்தில் ஆண்டாள் மட்டுமே தன் ஆசை நாயகனாகக் கண்ணனைப் பார்த்தாள் (சா.ப.த.ஆ.இ., ஆ.பா.ம.மீ., ப. 142) என்பது அவ்ஆண்டாளின் சிந்தை ஒருவழிப் பட்டுள்ளமையைத் தெளிவுப்படுத்துகிறது.

ஆண்டாள் இளம் பருவத்தில் ஸ்ரீ வில்லிபுத்தூரை, திருவாய்ப்பாடியாகக் கற்பனை செய்து கொண்டாள். அவ்வூரிலே தான் மட்டும் கண்ணன் அன்பைப் பெற எண்ணாது அவ்வூரில் உள்ள சிறுமியர்களையும் அக்கண்ணனின் அன்பைப் பெற வைக்க வேண்டும் என்று எண்ணி அவர்களை அன்புடன் அழைக்கிறாள். இது, '**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' (திருமந்., பா. 85)** என்னும் திருமந்திரத்தை ஒக்கும். மேலும், அழகிய ஆபரணங்கள் அணிந்து மிகுந்த பேரழகுடன் விளங்கும் சிறுமியர்களே! என்று ஆண்டாள் அவர்களை அழைக்கின்ற போது, அவர்கள் அப்புகழுக்கு மயங்கி இளநகைப் பூத்து அவ் ஆண்டாளுடன் ஒன்றுபட்டனர். அப்போது நீங்கள் இவ்வுலகில் நலமுடன் வாழ்வீர்கள். கண்ணனுடைய அன்பைப் பெற மார்கழி மாதப் பாவை நோன்பு என்னும் நோன்பை நோற்போம். அதற்கு வேண்டும் பொருளைக் கடவுளான கண்ணன் தந்தருள்வான். வாருங்கள் என்று ஆண்டாள் அவன் உறங்கும் நந்தகோபன் திருமாளிகைக்கு அவர்களை அழைத்துச் செல்கிறாள். பாவை நோன்பு இன்றுவரை ஆண், பெண் இருபாலரும் மேற்கொள்ளும் விரதமாக வளர்ந்துவிட்டது. திருப்பாவைப் பாசுரங்களை ஆழமாக உற்று நோக்கினால் ஜீவாத்மா, பரமாத்மாவைத் தஞ்சம் அடைவதே ஜீவனின் குறிக்கோள் என்னும் தத்துவத்தை உடையது என்னும் புலனாகும் (இ. த., திருப். ம.பொ. - ஓ. ஆ., ப. 30) என்னும் கருத்தைத் தெளிவுப்படுத்தியுள்ளமை கருதத்தக்கது. மேலும், பாவை நோன்பு என்பது பருவப் பெண்கள் செல்வச் செழிப்புடன் இல்லறவாழ்வை வாழ விரும்பி, மார்கழி மாதப் பனிநாட்களில் விடியற்காலையில் பனி உறைந்த குளத்து குளிர்ந்த நீரில், நீராடி, உடல் உள்ளம் தூய்மையுடன் கண்ணன்பால் சிந்தை செலுத்தி அவனுடன் அன்பால் பேரின்பக் கலவெய்துவது ஆகும். இதில் நீராடல் என்பது கலவி என்னும் தொனிப் பொருள் கொண்டதாகும். சங்க இலக்கியம் சொல்லும் சுனை நீராடல், அருவியாடல் முதலியவை காதலனோடு (தலைவனோடு) கலத்தல் பொருள் கொண்டது (திருப்., ந. சு.ரெ. உ., ப. 18) என்பதை ஒப்பிடப்படுகிறது. ஆகையால் ஆண்டாள் அத்தகு கலவியைச் செய்து பேரின்பம் பெறுவோம் என்று தன்னை ஒத்த பெண்கள் அனைவரையும் அழைத்துள்ளமை பெண்களின் ஒற்றுமை நன்கு விளங்குகின்றதாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆண்டாள், சிறுமியர்களோடு கண்ணனுக்கு விருப்பமுள்ள கண்ணனுடனான நமது பேரின்பக் கலவி குறித்து, சொல்லிக் கொண்டு தெருவில் செல்கின்ற போது சில தோழியர்களின் வீட்டுக் கதவு திறவாது இருப்பதைப் பார்த்து, அவர்களையும் அழைத்துச் செல்வதற்கு விரும்புகின்றாள். அத்தோழியர்கள், தூக்கத்தில் ஆழ்ந்தவள், அழகுடையவள், உறக்கம் தெளியாதவள், செல்வச் செழிப்புடையவள், இளமை நலமுடையவள், சிறந்த குணமுடையவள், கண்ணழகி, நாணமில்லாதவள், பிடிவாதக்காரி எனப்படுபவர்களாவர். அவர்களையும் கண்ணன் அருளைப் பெற ஆண்டாள் அழைக்கின்றாள். அப்போது, 'கீழ்வானம் வெளுத்தல், எருமைகள் மேய ஓடல், ஆனைச்சாத்தானின் (இரட்டை வால் குருவி) கீசு கீசு ஒலிகள், இடைச்சிமார் கழுத்தில் கோத்துக் கட்டிய தங்கக்காசுகளும் குண்டுகளும் கலகலவென்று ஒலிக்க, மத்தினால் கடையும் தயிர் ஓசை, பறவைகள் இடும் சத்தங்கள், பெருமாள் கோவில் சங்கொலி, அரிநாம ஒலி, ராமனின் நாம ஒலி, சைவத் துறவிகள் தங்கள் கோவிலுக்குச் செல்லும் அரவ ஒலிகள்'முதலியவை கேட்கின்றன (க.மு., தி.உ., ப. 21). நீங்கள் அவற்றைக் 'கேட்க இயலாத செவிடா, ஊமையா, மீளா உறக்கமா, கும்பகர்ண உறக்கமா என்றெல்லாம் கூறி மான் போலும் பூப்போலும் கண்ளையுடைய கண்ணழகியே, மயிலன்ன சாயலுடையவளே, இளங்கிளியே என்றெல்லாம் கூறி அழைத்து கண்ணன் புகழ் பாட சீக்கிரம் எழுந்து வா. நாங்கள் உங்கள் வாசல் முன் காத்து நிற்கின்றோம். ஊரே எழுந்து விட்டது. சீக்கிரம் வா' (திருப். திருவெம். மூ. எ. த. உ., பா.அ. உ., ப. 32) என்றழைத்துள்ள ஆண்டாளின் அழைப்பு பெண்கள் ஒற்றுமைக்குச் சான்றாகின்றது. அதனை, கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறு வீடு மேய்வான் பரந்தனகாண்... (திருப்., பா. 8); கீசுகீ சென்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து பேசின பேச்சரவம் கேட்டிலையோ... (திருப்., பா. 7); காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால் ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ... (திருப்., பா. 7); புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயிலில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ... (திருப்., பா. 6); ...முனிவர்களும் யோகிகளும் மெள்ள வெழுந்து அரியென்ற பேரரவம்... (திருப்., பா. 6); ஊமையோ அன்றி செவிடோ அனந்தலோ ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ (திருப்., பா. 9); கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்ப கரணனும் தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ (திருப்., பா. 10); எல்லே இளங்கிளியே இன்னம் உறங்குதியோ... (திருப்., பா. 15) என்னும் பாடற்பகுதிகள் சுட்டுகின்றன. ஆகவே ஆண்டாள் ஆயர்பாடியில் உள்ள பெண்களை அன்பால் அழைத்து அரவணைத்துக் கொண்டு கண்ணனைக் காண ஒற்றுமையுடன் செல்கின்றாள் என விளங்குகிறது.

**வேண்டல்**

ஆண்டாள் சிறுமியர்களிடம் பாவை நோன்பிற்குரிய பொருள்களைக் கண்ணனிடம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கேட்டு வேண்டுவோம் வாருங்கள் என்று அழைக்கின்றாள். அப்பொழுது அவள், நாம் ஒன்று சேர்ந்து கண்ணன் புகழ் பாடி வேண்டுவோம் என்கின்றாள். அதாவது,

**பெண்களுக்கெல்லாம் தலைமையானவனே! உலகளந்த பெருமாளே! நப்பின்னையின் மார்பகத்தின் மீது தலை வைத்துப் படுத்துறங்கும் கண்ணனே! முப்பத்து மூன்று தேவர்கள் பயத்தைத் தீர்ப்பவனே! அடியார்களைக் காப்பவனே! பரிசுத்தனே! நந்தகோபன் குமரனே! உலகின் பெருஞ்சோதிமயமாக இருப்பவனே! பூப்போன்ற திருமேனியுடையவனே! நீலமணி போல் வண்ணமுடைய திருமாலே! ஆலிலை மேல் படுத்திருப்பவனே! கோவிந்தா! என்றபடி விளித்துக் கண்ணனை அவர்கள் அழைக்கின்றனர் என்பதை, அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த உம்பர் கோமானே... (திருப்., பா. 17) அன்றிவ் வுலகம் அளந்தாயடி போற்றி (திருப்., பா. 24); கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா... (திருப்., பா. 19); முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று கப்பம் தவிர்க்கும் கலியே... (திருப்., பா. 20); ...உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே... (திருப்., பா. 21); மாலே மணி வண்ணா... (திருப்., பா. 26); ஆலினிலையாய்... (திருப்., பா. 26); கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா... (திருப்., பா. 27) என்னும் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. அந்நிலையில், 'உன் எதிரிகள் உன் காலடியில் செயலற்று வீழ்வதைப் போல் நாங்களும் பரதீனர்களாய் அடியார்களாகிய நாங்களும் வீழ்ந்து கிடக்கின்றோம்' (வ.கி.சா., தி.ஒ.வி.பா., ப. 42).**

இவ்வுலக அரசர்களெல்லாம் தங்களின் அகங்காரங்களை விட்டொழிந்து, உன்னுடைய அரியணையின் கீழ் தாசர்களாகக் கூடியிருப்பார்கள். அதே போன்று நாங்களும் வந்திருக்கின்றோம். மலைக்குகையிலிருந்து வெளிவரும் சிங்கம், தன் பிடரி மயிர் சிலிர்த்து, உடலை முறித்து வருவதைப் போல் வருபவனே! சிங்காசனத்தில் அமர்ந்து நாங்கள் வந்த காரியத்தைச் சற்றுச் சொல்கிறோம் கேட்பாயாக. இன்று உன்னைப் போற்றி வந்தோம். தாமரைப் பூப்போலவும் சூரியனும் சந்திரனும் போல் உள்ள உன் கண்கள் இரண்டையும் எங்கள் மீது திருப்பினால் எங்கள் பாவமெல்லாம் ஒழியும். கண்ணா! நீ அருள் புரிந்தால் தீராத செல்வம் பெற்று வருத்தம் தீர்ந்து நாங்கள் மகிழ்ச்சியடைவோம்.

பெரியோர்கள் கடைப்பிடித்து வந்த பாவை நோன்பை நாங்கள் நோற்க வேண்டும். அதற்கு உன் பாஞ்ச சன்னியத்தை (வலம்புரி சங்கு) ஒத்த சங்குகள், கொட்டு மேளங்கள், மங்கல விளக்குகள், கொடி, கொடி மேல் கட்டும் துணிகள் இத்தனையும் வேண்டும். இத்தனை காலையில் உன்னை வந்து போற்றுவதற்கு மற்றும் ஒரு காரணம் உள்ளது. அது, **'மாடுகளை மேய்த்துண்ணும் குலத்தில் வந்த எங்களை நீ கண்டிப்பாக அடிமைகளாக வைத்துக் கொள்ள வேண்டும். இன்றைக்கு மாத்திரம் அல்ல, ஏழேழு ஜென்மத்திற்கும் உன்னைத் தான்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சேர்ந்திருப்போம். உனக்கு மட்டும் தான் நாங்கள் அடிமை செய்வோம். ஆதலால் எங்களுடைய மற்ற ஆசைகளை அறுத்து விடு. அருள் செய் கண்ணா!' (திருப்., சு. ந. சொ. எ. உ., ப. 21)** என்று ஆண்டாளும் அவளின் தோழியர்களும் கண்ணனிடம் வேண்டுகின்றனர் என்று அறியத்தக்கது.

**தோன்றல்**

ஆயர் மக்கள் உள்ளத்தில் கண்ணன் நாமம் நாராயணா தோன்றிக் கொண்டே இருக்கும். எண்ணம், சொல், செயல் ஆகியவற்றின் போதெல்லாம் அக்கண்ணனை எண்ணியும், நாமத்தைச் சொல்லி வணங்கியும் மகிழ்வர் ஆயர். திருமால் 108 திவ்ய தேசங்களையும் 10 அவதாரங்களையும் கொண்டு விளங்குகின்றார் (ச. த. ஆ., திருப். உ. தி.நெ., ப. 53). பகைவரைத் தாக்கிக் கொல்லும் கொடிய தொழிலை உடையவனும் ஆயர்குல அரசனுமாகிய நந்தகோபனுக்கும் அரசி யசோதைப் பிராட்டிக்கும் திருமகனாகக் கண்ணன் அவதரித்துத் தோன்றினான். அவனின் உருவ அழகு ஆயர்குலத்தாரை வியக்க வைத்தது. அதனால் அந்த ஆயர் மக்கள் அன்பு செலுத்தினர். அக்கண்ணனும் அவர்களிடம் அன்பு கொண்டு வந்தான். மக்களும் கடவுள் அவதாரம் கண்ணன் என்றும், நமது குலதெய்வம் என்றும் போற்றி அவன் நாமத்தை 'நாராயணா' என்று அழைத்து மகிழ்ந்தனர்.

கண்ணன், ஆயர் மக்களுக்கு அதுவும் குறிப்பாக ஆயர் சிறுமிகளுக்கு வேண்டும் பொருளைத் தந்தருளினான். அச்சிறுமியர்கள் கண்ணனின் அருள் வேண்டி அவன் புகழ்ப் பாடி அழைப்பர். அவ்வமயம், தான் படுத்திருந்த அறையை விட்டு வெளியில் வருகிறான். அதைக் கண்ட ஆயர்மகளிர் தாம் வந்த காரியத்தை மறந்து அவனின் புகழ் பாடுகின்றனர்.

> **பண்டைய காலத்தில் முனிவர்கள் இராமனைக் கண்டவுடன் இராக்கதர்களால் தமக்கு நேர்ந்த துன்பங்களைச் சொல்லி முறையிட வேண்டும் என்று எண்ணியிருந்தவர்கள், இராமனைக் கண்டவுடன் அரக்கர்களால் தமக்கு நேரிட்ட துன்பங்களை மறந்து இராமனுக்கு அவன் புகழ் பாடி வணங்கி மகிழ்ந்ததைப் போல் ஆயர்மகளிர்களும் தாங்கள் சொல்ல இருந்த விருப்பங்களை மறந்து கண்ணனைப் புகழ்ப்பாடி வணங்கி மகிழ்வதோடு மட்டும் அல்லாது மென்மையும் பேரழகும் கொண்ட அவனின் திருவடிகள் கொண்டோ நடக்கச் சொல்வது என வருந்துகிறார்கள் (திருப்., ந. சு.ரெ. உ., ப. 196)**

என்பது கண்ணனின் திருவடியழகு ஈடு இணையற்றது என விளங்குகின்றது. மேலும் அத்தகைய ஆயர் மகளிர்களுக்கு, உங்களுக்கு என்ன வேண்டும் என்று கேட்டருள கண்ணன் தோன்றினான் என்று குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கது.

**அருளல்**

திருமாலின் திருவடியே ஆயர்களுக்குச் சரணாகதியாகும். **'பரமனின் திருவடி தடமானது அவன் உலகங்களை அளந்த காரணத்தாலே நீக்கமற எங்கும் நிறைந்திருப்பதால் அவன்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**திருவடி நிழலே சரணாகதிக்குரிய ஒரே இருப்பிடம் என்பதை நாச்சியார் நமக்குப் புரிய வைக்கிறார்' (பா. கோ. க. த. ஆ., திருப். கா. தி.சி., ப. 6)** என்பது குறிப்பிடத்தக்கது. சான்றாக, ஆயர் மக்களிடையே சிற்றரசனாக அகங்காரத்தோடு விளங்கியவன் மாவலி என்பவன். அவன் மக்களைக் கொடுமை செய்து வந்தான். மக்கள் அனைவரும் திருமாலிடம் முறையிட்டுக் காத்தருள வேண்டினர். அம்மக்களைக் காக்க வேண்டி திருமால் மாவலியைச் சோதித்தார். மாவலியிடம் சென்று உனக்கு வேண்டுவது யாது? என்று கேட்டறிந்தார் திருமால். அப்போது மாவலியானவன் இறைவனைச் சோதிக்க எண்ணி, இவ்வுலகில் மூன்றடி மண் வேண்டும் என்றான். அப்படியே ஆகட்டும் என்று சொல்லிச் சென்றார். உடனே அம்மாவலி தாங்கள் தந்த அந்த மூன்றடி மண்ணை அளந்து கொடுக்க வேண்டும் என்று கேட்கின்றான். இது தான் தக்க நேரம் என்று திருமால் தன் திருவடியால் ஒரு அடியில் மண்ணையும், மற்றுமொரு அடியால் விண்ணையும் அளந்து காட்டி, இன்னும் ஒரு அடியை எங்கே வைத்து அளக்க என்று கேட்டார். அதிர்ந்து போன மாவலி தன் தலையைக் காட்டி இங்கே என்று காட்ட, அவன் தலையில் தன் திருவடியை வைத்து அழுத்தி அவன் அகங்காரத்தை ஒழித்து அருளினார் திருமால். இவ்வருளினானே திருமால் உலகளந்த உத்தமர் என்றழைக்கப் பெற்றார். ஆகவே, பாவம் செய்யும் பாவிகளை நெருப்பிலிட்ட தூசு போல் உருத் தெரியாமல் போவது போல் அழித்தொழித்து அருள் புரிபவன் இறைவன் என்பதாகும். மேலும், பூதனையின் நச்சு முலையுண்டு அவளை அழித்தவன். சகடாசுரனை உதைத்துக் கொன்றவன். இலங்கை சென்று பகையழித்தவன். கன்று உருவத்தில் வந்த அசுரனை விளாமரமாய் நின்ற அசுரன் மேல் எறிந்து இருவரையும் கொன்றவன். குன்றைக் குடையாய் பிடித்து எங்களைக் காத்தவன். தேவகிக்குப் பிறந்து யசோதை மகனாய் ஒரே இரவில் மாறி தீங்கு நினைத்த கம்ஸன் வயிற்றில் நெருப்பாய் நின்றவன் (திருப்., ந. சு.ரெ. உ., பக். 197 - 205) என்று திருமாலின் அருள் சிறப்புகள் காணக்கிடக்கின்றன. எனவே, திருமாலின் திருவருள் சிறப்புகளை எடுத்துக் கூறி, நம்மையெல்லாம் காத்தருளவே அவனின் அருளல் செயல் உள்ளது என்று பெண்களுக்கு ஆண்டாள் குறிப்பிட்டுள்ளமை போற்றத்தக்கதாகும்.

**காத்தல்**

ஆயர் மக்களைக் காத்து அருள ஸ்ரீ கிருஷ்ண அவதாரம் என்னும் ஒன்பதாவது அவதாரத்தை எடுத்துள்ளார் ஸ்ரீ கிருஷ்ணர். அம்மக்களுக்குப் பெரும்பாலும் தொல்லைத் தந்துள்ள அசுரர்களைக் கொன்றொழித்துக் காத்தருள் செய்தார். மக்களின் அன்பை ஏற்று அவர்களுக்கான செல்வ வளம் என்னும் அருளைத் தந்து காத்தருள் செய்துள்ளமையே காத்தல் தொழில் வல்லவர் என்னும் புகழடைந்தவர் திருமாலாவார்.

**முடிவுரை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியம் கொண்ட நாலாயிர திவ்ய பிரபந்தம் வைண சமயப் பெட்டகம். அதன் மணிமுடியாகப் பெரியாழ்வார் வளர்த்தெடுத்த ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை அமைந்தது. ஆண்டாள் அருளியவை இரண்டு நூல்கள் மட்டுமே. அதில் ஒன்று திருப்பாவை. மற்றொன்று நாச்சியார் திருமொழி. திருப்பாவை ஆயர் தோழியர் கூட்டம் ஆண்டாளோடு சேர்ந்து கண்ணனின் அன்பில் திளைக்க, கருவியாகப் பாவை நோன்பை மேற்கொள்ளவும் அதற்கு வேண்டிய பொருள்களைக் கண்ணனிடம் கேட்கவும், அதற்கு அவன் அருளவும் காக்கவும் ஆகிய திருமாலின் திருவருள்கள் கொண்டதாகவும் அமைந்துள்ளது. ஆயர், ஆய்ச்சியர், இடைச்சிமார், கோவலர், கோபியர், ஆயர்பாடி, ஆய்ப்பாடி, திருவாய்ப்பாடி, கோகுலம் என்னும் சொற்களுக்கு ந. சுப்புரெட்டியார், ஆநிரைகளைக் கொண்ட பாமரர் இருக்கும் இடம், என்றும் அவர்களையும் அவர்கள் வாழும் ஊர்களையும் காக்கும் தொழிலைச் செய்து, உலகைக் காத்தல் புரியவல்ல திருமால் என்று போற்றப்படுதலையும் குறிப்பிட்டு விளக்கியுள்ளமை, அவரின் நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்றாகிறது. ஆயர் பெண்கள் அன்பொற்றுமையையும், பாவை நோன்பு சிறப்பையும், கண்ணனோடு பேரின்பக் கலவி புரிவதையும் தக்க விளக்கங்களோடு ந. சுப்புரெட்டியார் தந்துள்ளமை பாராட்டத்தக்கது. திருமால் ஆயர்குலத்தினருக்கே தோன்றிய அவதாரமாகக் கண்ணன் விளங்கி அக்குலத்தினரை அருள் ஈந்து காத்துள்ளமையும் ஆயர்களுக்குத் துன்பம் விளைத்த அரக்கர்களை அழித்தொழித்துள்ள நிலையில் அவ்வரக்கர்களுக்குப் பாவ விமோசனம் அளித்து அருளியமையும் திருமாலின் திருவருள்களாகும். திருப்பாவைக்குத் தோன்றிய உரைச் செல்வங்களுள் ந. சுப்புரெட்டியார் அவர்களின் உரை விளக்கம், வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை உரை தொடங்கி, இன்று குறிப்பிடத்தக்கப் பெருமைப் பெற்றுள்ள பல வைணவ அறிஞர்களின் உரைகள் உள்ளிட்ட அனைத்தையும் உள் வாங்கிய விளக்கவுரையாக அமைந்திருப்பது மிகவும் சிறப்புடையது. ந. சுப்புரெட்டியாரின் திருப்பாவை விளக்கம் பழமரபு போற்றி வந்த உரை என்பது குறிப்பிடத்தக்கது. பெரியாழ்வாரின் மகள் ஆண்டாள், தந்தையைப் போலவே ரங்கநாதன்பால் அன்புடையவராகி, வணங்கி, ‘சூடிக்கொடுத்த சுடர்க்கொடி’ என்று போற்றப் பெற்றவராய் விளங்கி, நாராயணனைத் தன் மணாளனாகக் கருதி நிறைவேறிய அருளைப் பெற்றுள்ளமை போற்றத்தக்கது ஆகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] பா.அன்பரசு. *திருப்பாவை, திருவெம்பாவை மூலமும் எளிய தமிழ் உரையும்.* நர்மதா பதிப்பகம், சென்னை, 2015.

[2] ஆண்டாள். *நாச்சியார் திருமொழி, நாலாயிர திவ்ய பிரபந்தம்.* திருவேங்கடத்தான் திருமன்றம், , சென்னை – 14, மூன்றாம் பதிப்பு.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[3] கதிர்முருகு. *திருப்பாவை உரை.* சாரதா பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2013.

[4] முனைவர் வே. கவிதா. *திருப்பாவை காட்டும் திருவடிச்சிறப்பு.* பாண்டியன் கோவில் கலைகள் தமிழ் ஆய்விதழ், மே 2022.

[5] மா. கோபி. *திருப்பாவை உணர்த்தும் திருவருட்நெறிகள்.* சர்வதேச தமிழ் ஆய்விதழ், ஏப்ரல் 2021.

[6] சாண்டில்யன். *திருப்பாவை விளக்கவுரை.* வானதி பதிப்பகம், சென்னை – 17, 12 ஆம் பதிப்பு, மே 1989.

[7] பெ.சிவசக்தி. *திருப்பாவையின் மறைபொருள் – ஓர் ஆய்வு.* இந்தியத் தமிழ் ஆய்விதழ், மே 2021.

[8] முனைவர் ந. சுப்புரெட்டியார். *ஆண்டாள் திருப்பாவை விளக்கம்.* Centenary Committee Publications, சென்னை – 40, இரண்டாம் பதிப்பு, பிப்ரவரி 2020.

[9] சு.ந. சொக்கலிங்கம். *திருப்பாவை எளிய உரை.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 2009.

[10] திருமூலர். *திருமந்திரம்.* கம்பம் இராமலிங்கம் பிள்ளை அறக்கட்டளை, கம்பம், தேனி மாவட்டம், திருத்திய இரண்டாம் பதிப்பு, 2017.

[11] ந. திவ்யா. *ஆண்டாள் பாடல்களில் மரபு மீறல்கள்.* சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ், சனவரி 2018.

[12] முனைவர். பாக்யமேரி. *வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு.* NCBH, சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2013.

[13] ச.பிரபாகரன். *ஆண்டாள் கோவில் சிறப்புகள்.* தமிழ் ஆய்வு ஆராய்ச்சியின் சர்வதேச நடுவர் இதழ், டிசம்பர் 2019.

[14] வசந்தா கிருஷ்ணசாமி. *திருப்பாவை ஒரு விரிவான பார்வை.* மணிமேகலை பிரசுரம், சென்னை – 17, முதல் பதிப்பு, 2009.

[15] முனைவர் கா.கோ வேங்கடராமன். *தமிழ் இலக்கிய வரலாறு.* கலையக வெளியீடு, பரமத்தி வேலூர், சூன் 2006.

## References

[1] B. Anbarasu. *Thiruppavai Thiruvempavai Moolamum Eliya Thamizh Uraiyum*. Narmadha Publication, Chennai, 2015.

[2] Andal. Nachiyar *Thirumozhi. Nalayira Dhivya Prabantham*. Thiruvengadathan Thirumandram, Chennai - 14, Third Edition.

[3] Kathirmurugu. *Thiruppavai Urai*. Saradha Publication, Chennai, Third Edition, 2013.

[4] Dr. V. Kavitha. "*The Glory of the Bejewelled Feet as shown in Thiruppavai." Pandian Tamil Journal of Temple Studies*, May 2022.

[5] M.Gopi. "Tiruppavai Unarttum Tiruvarutnerikal." *International Research Journal of Tamil*, April 2021.

[6] Sandilyan. *Thiruppavai Vilakkavurai*. Vanathi Publication, Chennai - 17, 12th Edition, May 1989.

[7] P. Sivashakthi. "The Vedic truths in the Thiruppavai - An Analysis." *Indian Journal of Tamil*,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

May 2021.
[8] Dr. N. Subbu Reddiar. *Andal Thiruppavai Vilakkavurai*. Centenary Committee Publications, Chennai - 40, Second Edition, February 2020.
[9] S. N. Chokkalingam. *Thiruppavai Eliya Urai.* Palaniyappa Brothers, Chennai, 2009.
[10] Thirumoolar. *Thirumanthiram*. Kambam Ramalingam pillai Trust, Kambam, Theni District, Revised Second Edition, 2017.
[11] N. Dhivya. "Andal Padalgalil Marabu Meeralgal." *Shanlax International Journal of Tamil Studies*, January 2018.
[12] Dr. Bhakyamary. *Vagaimai Nokkil Tamil Ilakkiya Varalaru*. NCBH, Chennai, Fifth Edition, 2013.
[13] S. Prabakaran. "Andal Kovil Sirappugal." *International Refereed Journal of Tamil Studies Research*, December 2019.
[14] Vasantha Krishnasamy. *Thiruppavai Oru Virivana Paarvai*. Manimegalai Pirasuram, Chennai – 17, First Edition, 2009.
[15] Dr. K.G. *Venkataraman. Tamil Ilakkiya Varalaru.* Kalaiyaga Veliyeedu, Paramathi Vellore, June 2006.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


# பேராசிரியரும் அப்பர் பெருமானும்

## Professor and Appar Peruman


**முனைவர் கி. சிவகுமார்**, இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,

திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி, விருத்தாசலம், தமிழ்நாடு, இந்தியா.

**Dr. K. Sivakumar**, Associate Professor in Tamil, Thiru Kolanjiyappar Govt. Arts College, Vridhachalam, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0003-2727-1727**



**DOI: 10.5281/zenodo.7252831**



### Abstract

*Prof. Na. Subbu Reddiar is a renowned Tamil scholar who had contributed many books to the Tamil world. One of the books he wrote was 'Navukkarasar'. Navukkarasar was one of the four Shaiva poets who did charity through physical labour (Cariyai) in the temples. His other names are Marulnikiyar, Darumasenar, Thandaka Vendhar, Thirunavukkarasar and Appar Peruman. Thirunavukkarasar and Upper Peruman are also his names. The songs sung by him are featured in Thevaram in four, five and six of the twelve seasons. In the book, Navukkarasar, the life of the Appar Peruman, his journey with Almighty Lord Shiva and the benefits of his songs are explained to the people in a very clear manner. Thirunavukkarasar is credited with rescuing the Shiva temple from fasting in Palaiyar and receiving the best gold coin at Thiruveezhimalai. Also, in Thirumaraikattu, Thirugnanasambandar's songs praise Thiruvaimur Lord Shiva with his companion Thirugnanasambandar and went to Madurai carrying the Thirugnanasambandar's pallaku which had returned after defeating the Jains are noteworthy. According to Thirunavukkarasar's biography, the concept of 'Oodum Ponnum Samam' was generally sung by the Chekizhar. These are emphasized by Professor N. Subbu Reddiar in this book. His history is told based on "Periyapuranam" songs. "Thevaram" is said to be the historical evidence about him. Wherever there are differences of opinion in his history, relevant opinions are established with relevant sources by Subbu Reddiar. From the recordings on Thirunavukkarasar, it can be seen that Professor Subbu Reddiar has highlighted the songs. The readers of this book will have a complete understanding of the Appar Peruman. It creates the desire to learn fully about Appar from the writings of Professor Subbu Reddiar.*



**Keywords:** *Professor Subbu Reddiar*, Thirunavukkarasar, Appar, *Thevaram*, *Periyapuranam*.



### ஆய்வுச் சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், தமிழ்ப்புலமை மிக்கவர்; சமயப் பற்று உடையவர்; கற்பிக்கும் திறன் நிறைந்தவர். அவர் இயற்றிய நூல்களுள் ஒன்று, 'நாவுக்கரசர்' என்பதாகும். நாவுக்கரசர், சிவத்தைப் பரம்பொருளாகக் கொண்ட சைவ சமயக் குரவர் நால்வருள் ஒருவர்; உழவாரப்படை கொண்டு சரியைத் தொண்டு செய்தவர்; மருள்நீக்கியார், தருமசேனர், தாண்டக வேந்தர், திருநாவுக்கரசர், அப்பர் பெருமான் என்பனவும் இவர்தம் பெயர்களே ஆகும். இவர் அருளிச்செய்த பாடல்கள் பன்னிரு திருமுறைகளுள் தேவாரத்தில் நான்கு, ஐந்து, ஆறாம்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*திருமுறைகளாக இடம்பெற்றுள்ளன. 'நாவுக்கரசர்' என்னும் இந்நூலில் அப்பர் பெருமானின் அருள் வாழ்வு குறித்தும், அவர்தம் தலப் பயணம் குறித்தும், அவர்தம் பாடல்களில் அமைந்துள்ள நலன்கள் குறித்தும் கற்போருக்குப் பெரிதும் தெளிவு உண்டாகும் வண்ணம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. பழையாறையில் விரதம் இருந்து சிவன் கோயிலை மீட்டுத் திருவீழிமிழலையில் சிறந்த பொற்காசு பெற்ற பெருமை திருநாவுக்கரசருக்கு உண்டு. மேலும், திருமறைக்காட்டில் திருஞானசம்பந்தரின் பாடல்களைப் போற்றி, திருவாய்மூர் சிவபெருமானைத் திருஞானசம்பந்தரின் துணையுடன் தரிசனம் செய்து, மதுரைக்குச் சென்று சமணர்களை வென்று திரும்பிய திருஞானசம்பந்தரின் பல்லக்கினை ஏந்திச் சென்றதும் போற்றத் தக்கன. திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றின்படி, 'ஓடும் பொன்னும் சமம்' என்ற கருத்து சேக்கிழாரால் பொதுவாகப் பாடப்பட்டது. இவற்றை இந்நூலில் பேராசிரியர் வலியுறுத்தியுள்ளார். பெரிய புராணப் பாடல்களை அடியொற்றி திருநாவுக்கரசரின் வரலாறு பேசப்படுகிறது. வரலாற்று அகச்சான்றாகத் தேவாரப் பகுதிகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அவருடைய வரலாற்றில் கருத்து வேறுபாடு வரும் இடங்களில் பொருத்தமான கருத்துகள் உரிய ஆதாரங்களோடு நிறுவப்பட்டுள்ளன. திருநாவுக்கரசர் அருளிச்செய்த எல்லாப் பதிகங்களிலிருந்தும், பேராசிரியர் அவர்கள், ஒரு பாடலையாவது ஆங்காங்கே எடுத்துக்காட்டியுள்ளமையைக் காண முடிகிறது. 'நாவுக்கரசர்' என்னும் இந்நூலைக் கற்போர், அப்பர் பெருமான் குறித்து முழுமையான தெளிவினைப் பெறுவார்கள். பெரிய புராணத்தையும் அப்பர் தேவாரத்தையும் முழுதாகக் கற்க வேண்டும் என்கிற ஆர்வம் நிச்சயம் அவர்களுக்கு ஏற்படும் என்பது உறுதி.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், திருநாவுக்கரசர், அப்பர், *தேவாரம், பெரிய புராணம்.*

**முன்னுரை**

கிடைத்தற்கரியது மானிடப் பிறவி ஆகும். இந்தப் பிறவியைப் பெற்றவர்கள், மறுமுறை இவ்வுலகில் பிறக்க கூடாது என்னும் நிலையில், தம் ஆன்மாவை உயர்த்திக் கொள்ள முற்படவேண்டும். வெவ்வேறு காலகட்டங்களில் வெவ்வேறு நாடுகளில் ஆங்காங்கே சமயச் சான்றோர்கள் தோன்றித் தத்தம் அறிவுக்கும் அனுபவத்திற்கும் கேட்போர் தம் சூழலுக்கும் ஏற்ற வழிபாட்டு நெறிமுறைகளை அடையாளம் காட்டுகிறார்கள். அவ்வடிப்படையில் பல்வேறு சமயங்களைக் காட்டிலும் மிகத்தொன்மையானதாகவும் மிகச் சிறந்ததாகவும் திகழ்வது சைவ சமயமாகும். இது பன்னிரு திருமுறைகளும் பதினான்கு சாத்திரங்களும் ஆகிய நூல்களைத் தன்னகத்தே கொண்டது; தொல்திராவிடர்களின் சமயமாக அறியப்படுவது; தத்துவ ஞான

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நூல்களின் ஆராய்ச்சி அடிப்படையில் ஒப்பிட்டுப் பார்க்கும்போது எல்லாவற்றைக் காட்டிலும் உச்சியிலிருப்பதாகும். சைவ சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் மீதும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், நூல்கள் இயற்றியுள்ளார். திருநாவுக்கரசர் மீது இவர் இயற்றியுள்ள நூலின் பெயர், 'நாவுக்கரசர்' என்பதாகும். இந்நூலுக்கு இவர் இவ்வாறு பெயரிட்டதற்குக் காரணம், 'நாவுக்கரசர்' என்பது குரு பஞ்சாட்சரமாகத் திகழ்வது எனச் சிந்திக்க இடமுண்டு (ஒற்று தவிர்த்து ஐந்து எழுத்து வரும்). இவ்வாறு 'ஞானசம்பந்தர்', தம்பிரான் தோழர்' என அவர் எழுதிய பிற நூல்களையும் கருத இடமுண்டு. அப்பர் பெருமான் குறித்து முழுமையான தெளிவினைப் பெற இந்நூல் துணை புரியுமாற்றை இக்கட்டுரையில் காண்போம்.

**நூலமைப்பு**

திருநாவுக்கரசர் குறித்துப் பேராசிரியர், 20 தலைப்புகளில், 314 பக்கங்களைக் கொண்டதாக 'நாவுக்கரசர்' என்னும் நூலினை அருளிச் செய்துள்ளார்; பதினொன்றிற்கும் மேற்பட்ட நூல்களைத் துணையாகக் கொண்டுள்ளார். தெய்வச் சேக்கிழார் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தில் திருநாவுக்கரசு நாயனார் புராணம் முழுவதையும் நுண்ணிதின் கற்றுத்தேர்ந்து, திருநாவுக்கரசர் அருளிய தேவாரம் முழுவதையும் பயின்று, திருநாவுக்கரசரின் வாழ்வியல் குறித்துப் பல்வேறு உரையாசிரியர்களும் ஆய்வாளர்களும் எடுத்துரைக்கும் கருத்துக்களையும் முழுமையாகப் படித்துப் பேராசிரியர் இந்நூலைப் படித்திருக்கிறார். பெரியபுராணத்தை அடியொற்றி, திருநாவுக்கரசரின் அருள் வரலாற்றை, அவர் மேற்கொண்ட பயணங்கள், வழிபட்ட திருத்தலங்கள், அத்தலங்களில் பாடிய திருப்பதிகங்கள், பதிகம் பாடிய சூழல், அந்தத் திருத்தலங்களுக்குச் செல்லும் வழி, திருத்தலங்களின் பெருமை, திருத்தலங்களின் இன்றைய பெயர் என மிக அரிய செய்திகளோடு தொகுத்துத் தரக்கூடிய ஒப்பற்ற நூலாக இது உள்ளது. திருநாவுக்கரசர் தேவாரத்தில் காணும் திருப்பதிகங்களின் சுவையான பாடல்களையெல்லாம் தேர்ந்தெடுத்துக் கொடுத்து அவற்றைச் சுவைக்கும் முறை, அவற்றில் பொதிந்து கிடக்கும் வருணனைத் திறன், சொல்லாட்சி, தத்துவக் குறிப்புகள் ஆகியன குறித்து மிக அழகாக எடுத்துரைக்கும் பாங்கு பாராட்டுக்குரியதாகும். பதிகப் பாடல்களைச் சுட்டுமிடத்து அவற்றிற்குரிய அடிக்குறிப்பில் திருமுறை, பதிக எண், பாடலின் எண் என்பனவாகப் பிறைக்குறிக்குள் தந்துள்ள முறை குறிப்பிடத்தக்கது. விடியற்காலைப் பொழுதில் திருநாவுக்கரசரின் தேவாரங்களில் மனம் உருகி வாய்விட்டு படித்ததாகவும், அவை அவர் மனதை உருக்கியதாகவும், அதனால் கண்ணீர் ஆறாகப் பெருகியதாகவும் அதைத் தம் அனுபவத்தில் கண்டு உணர்ந்ததாகவும் நூல் முகத்திலே மிகச் சிறப்பாக இவர் குறிப்பிட்டுள்ள பாங்கு குறிப்பிடத்தக்கது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**திருமுறை வைப்பு முறைக்குக் காரணம் கூறல்**

திருஞான சம்பந்தர், சிவபெருமான் திருவடியை முதலில் அடைந்தவர். ஆகவே அவருடைய பதிகங்கள், முதல் மூன்று திருமுறைகளாக அமைக்கப்பெற்றன; பிள்ளையாருக்கு அடுத்து இறைவன் திருவடி நிழலை அடைந்தார் நாவுக்கரசர். ஆகவே அவருடைய அருள் நான்கு ஐந்து ஆறாம் திருமுறைகள் அமைக்கப்பட்டன; இவ்விருவருக்கும் காலத்தால் பிற்பட்ட நம்பியாரூரரின் திருப்பதிகங்கள் ஏழாம் திருமுறையாக அமைக்கப் பெற்றன என அவற்றுக்குரிய காரணத்தை முறையாக எடுத்துரைப்பதைக் காணமுடிகின்றது.

**திருநாவுக்கரசரின் முற்பிறப்பு வரலாறு உரைத்தல்**

திருநாவுக்கரசரின் முற்பிறப்பு வரலாறு குறித்து வாகீசர் கதை பற்றி மட்டுமே பரவலாக அனைவரும் அறிவர். இவர், கயிலை மலையைத் தூக்கிய இராவணன் செய்த குற்றத்திற்கு அவன் எவ்வளவு காலத்திற்கு எத்தகைய துன்பத்தைப் புசிக்க வேண்டும் என்று அறியாமல் வாகீச முனிவர், மாறாக அவனுக்குத் தவறாக வழி காட்டியதால் அவன் அனுபவிக்க வேண்டிய துன்பத்தை அனுபவித்து அடைவாயாக என்பதாக இறைவன் கட்டளை அமைகின்றது. இதனால் தான் வாகீசர் இப்பூவுலகில் தோன்றிச் சூலை நோயால் வருந்த நேரிட்டது (ப.தி.வ., ப.171) என்று பொருத்தமாகக் கதை புனைவர் என எடுத்துரைக்கும் பேராசிரியர், இவரைப் பற்றிய இன்னொரு வரலாற்றையும் சுட்டுகின்றார்: ஒரு நாள் கோதாவரி நதி தீரத்தில் சாந்திபத முனிவர் தவம் இயற்றிக் கொண்டு இருந்தார். அப்போது அவரை அணுகிய முனிவர் சிலர் ‘சிறந்த சமயம் யாது?’ என வினவச் சிவஞான முனிவர் ஆகிய அவரும் சமண சமயமே சமயம் ஆகும் என்று தன் வாதத் திறமையால் எடுத்துரைக்கின்றார். சினமுற்ற முனிவர்கள் சாபமிட, அவர் பிறவி எடுத்துச் சமணம் சார்ந்து தருமசேனர் ஆனார் என்றும் கூறுவர் (நாவு., ப.10). மேற்கண்டவற்றுள், இவ்விரண்டாவது வரலாறு பலராலும் அவ்வளவாக அறியப்படாதது.

**திருநாவுக்கரசரின் சமண்வாழ்வு உரைத்தல்**

இளமைப் பருவத்தில் தாய், தந்தை, சகோதரிக்கு மணம்பேசப்பட்ட கணவன் ஆகிய மூவரையும் இழந்த நிலையில் தன் கவனத்தைப் பொதுத்தொண்டின்பால் செலுத்துகின்றார் திருநாவுக்கரசர்.

> **அன்புடனே திரவியங்களைச் செலவழித்து அறச்சாலைகளையும், தண்ணீர்ப் பந்தர்களையும் அமைத்தார், சோலைகளை வைப்பித்தார்; குளங்களைத் தோண்டுவித்தார்; விருந்தினரை உபசரித்தார்; புலவர்களுக்குக் கனகமாரி பொழிந்தார். (திருநா. புரா., ப. 11)**

என விவரிப்பார் ஆறுமுக நாவலர். சிவபெருமானின் திருவருள் கைவரப் பெறாத நிலையில், இவர் கொல்லாமையை மேற்கொண்டுள்ள சமண சமயத்தில் சேரக் கருதுகின்றார். நீதிநூல் பயிற்சியும், தமிழ் இலக்கணத்தில் ஆழ்ந்த புலமையும் தர்க்க வாதத்தை மிக்க திறமையும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வாய்ந்தவர்கள் சமணர்கள். ஆகவே கல்வித்துறையிலும் சாத்திர ஆர்வத்திலும் விருப்பமுள்ள மருள்நீக்கியார் சமண சமயப் பெரியார்கள் கூடும் இடங்களில் எல்லாம் கலந்து அவர்தம் சமயச் சொற்பொழிவுகளைக் கேட்கும் வாய்ப்புகளை அதிகம் பெற்றிருந்தால் இவர் மனம் சமண நெறிகளில் செல்கின்றது. இதுகுறித்துப் பேராசிரியர்,

> **அறிவுப் பசி தீர்க்கச் சமணர் வழியே பொருத்தமாகவும் அமைகின்றது. மதிநுட்பம் உள்ள ஓர் இளைஞன் தம் சமயத்தின்பால் ஆர்வம் காட்டுவது கண்ட சமணத் துறவிகள் விரைவில் அவரைச் சிறந்த புலவர் ஆக்கித் தருமசேனர் என்ற பெயரும் நல்கி, ஆச்சாரிய பட்டமும் வழங்கிப் பெருமதிப்பு தந்தனர் (நாவு., ப. 44)**

எனக் குறிப்பிடுகின்றார். வளர் இளம் பருவத்து இளைஞனின் மனநிலையானது யாவரும் சமுதாயத்தில் தன்னைப் போற்ற வேண்டும்; தான் பல கலைகளைக் கற்று உயர வேண்டும் என்கிற எண்ணம் உடையவனாக இருப்பான் என்னும் ஒரு பதிவினையும், ந.சுப்பு ரெட்டியார், ஆசிரியப் பயிற்சி உளவியல் சார்ந்த நூல்களை எல்லாம் படைத்தவர் ஆகையினாலே அவற்றை மேற்கோள்காட்டி ஆங்காங்கே நிறுவுவதும் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. உண்மைச் சமயம் எங்கள் சமயமே என்று அவர்கள் கூறியதை நம்பி அச்சமயத்தில் சேர்ந்து கற்றுத் துறைபோகிய வித்தகராகி, 'தருமசேனர்' என்னும் பட்டம் பெற்று, பௌத்தருள் ஒரு சாரார் ஆகிய தேரரை வாதில் வென்று அமண் சமயத் தலைமையில் மேம்படுகின்றார். அவர் எத்தகைய சமய நிலையில் நின்றார் என்பதைக் குறிப்பிடுமிடத்தில் பேராசிரியர் நுணுகிய கருத்தை எடுத்துரைக்கின்றார்.

மருள்நீக்கியார் நின்று உண்ணும் பழக்கமுடையவர்கள் ஆகிய சமணர் குழுவைச் சேர்ந்தவர்; குண்டர் என்பது அவர் இருந்த குழுவின் பெயராகும்; இருந்து உண்ணும் பழக்கம் உடையவர்களாகிய தேரரை வென்றவர். 'குண்டரோடு பிரித்து எனை ஆட்கொண்டார் போலும்' (திரு., 6:54:8) என்பது அவர்தம் திருவாக்கு (நாவு., ப.15) என இனம்பிரித்துரைப்பதைப் பார்க்கமுடிகின்றது. அவ்வாறே, திருநாவுக்கரசர் சமணராய் இருந்த தோற்றம் குறித்து எடுத்துரைக்குமிடத்து, உடுத்த பாய், பிடித்த குண்டிகை, தொடுத்த மயிற்பீலி ஆகியவற்றை உடையவராக இருந்தார் (நாவு., ப.20) என இவர் குறிப்பிடுவதைக் காண்கிறோம்.

**சூலைக்கு நன்றிபாராட்டுதலைச் சுட்டல்**

பொய்ம்மை மிக்க புறச்சமயப் படுகுழியில் விழுந்து கிடக்கும் எளியேன் மாமலையாள் மணவாளன் திருவடிகளை அடைந்து உய்யும் வண்ணம் இத்தகைய நல்வாழ்வைத் தந்த சூலை நோய்க்குச் செய்யத் தக்க கைம்மாறு யாது என்று தம்மை நல்வழிப் படுத்துவதற்குக் காரணமாய் அமைந்த சூலை நோய்க்கு நன்றி தெரிவித்து இருக்கின்றார் (நாவு., ப.23) என்று இவர் நாவுக்கரசர் உளப்பாங்கை எடுத்துக் காட்டுவது மிகக் குறிப்பிடத்தக்கதாக உள்ளது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**அப்பர் பதிகங்களின் இயல்புரைத்தல்**

சம்பந்தரும் சுந்தரரும் பாடிய பதிகங்களின் இறுதிப் பாடல்களில் பாடினோர் ஆகிய தம் பெயரையும், திருப்பதிகங்களைக் காதலாகி ஒவ்வொருவரும் பயனையும் விரித்துரைத்தாற்போல, அப்பர் பெருமான் தாம் அருளிய திருப்பதிகத்தில் இறுதிப் பாடல்களில் அவற்றைக் குறிப்பிடும் வழக்கத்தை அவர் மேற்கொள்ளவில்லை. ஆயினும், **பிழை செய்த இராவணனை உய்வித்த அருளால், குற்றமுடைய என்னையும் கோது நீக்கி ஆட்கொண்டான்' என உலக மக்களுக்கு எடுத்துரைக்கின்றார். இது திருக்கடைக்காப்பு போல அமைந்துள்ளது (நாவு., ப. 306)** என்கிறார் பேராசிரியர்.

**பா நயம் பாராட்டல்**

திருநாவுக்கரசர் தேவாரம் நயம் பல உடையது. தொண்டை கொப்பளித்த செவ்வாய் (திரு. தே, 4: 24: 1) எனவரும் பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் 'கொப்பளித்தல்' என்னும் சொல் அமையச், 'சொல் பின்வருநிலையணி அமைத்துப் பாடுகிறார். இது, 'கொப்பளித்த திருநேரிசை' எனப்படுகின்றது. பாடலைப் பாடுங்கால் நம்முடைய பக்தி உணர்வும் கொப்பளித்து நிற்றலைக் காணலாம் (நாவு., ப. 47) என அந்தச் சொல்லை அப்பொருள் நயத்தோடு இவர் பயன்படுத்தும் பாங்கு குறிப்பிடத்தக்கது. அஞ்சினால் இயற்றப்பட்ட (திரு. தே., 4: 26: 5) என்ற பாடலில் ஐந்து பூதங்கள், ஐந்து புலன்கள், ஐந்து எழுத்தாகிய பஞ்சாட்சரம், சிவபெருமானின் ஐந்து தலைகள் ஆகியன இடம் பெற்றுள்ளன. அக்கருத்துக்களை எடுத்துரைக்கும் பேராசிரியர், இந்தப் பாடல் இப்பதிகத்தில் ஐந்தாம் பாடலாக உள்ளது எனச் சுவைபட அடையாளம் கண்டு எடுத்துரைக்கும் பாங்கு (நாவு., ப. 48) குறிப்பிடத்தக்கது. அப்பரின் நான்காம் திருமுறை 'விருத்தம்' எனப்படும். திருநாவுக்கரசர் பாடிய திருக்குறுந்தொகையே, பிற்கால யாப்பருங்கலக் கலிவிருத்தம் ஆயிற்று (திருநா., ப. 22) என்பார் சரவண ஆறுமுக முதலியார். விருத்தம் என்பது வடசொல். 'ஒன்றன் நிகழ்ச்சி அல்லது விருத்தாந்தம் என்பது இதன் பொருள்களுள் ஒன்றாகும். அப்பர் பெருமான் இறைவனிடம் முறையிட்டு தெரிவித்துக் கொள்வதற்குரிய செய்திகளாகவும், இறைவன் செய்தருளிய செயல்களாக உலகத்தாருக்கு அறிவுறுத்த வேண்டிய செய்திகளாகவும் அமைந்த இந்த நிகழ்ச்சிகளைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்ததால் இவை திருவிருத்தம் எனப்பட்டன. இவ்வாறே,

> **மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களுள் ஒருவராகிய நம்மாழ்வார் இறைவனை நோக்கி விண்ணப்பம் செய்யும் முறையில் கட்டளைக் கலித்துறை யாப்பில் அருளிய பனுவல்கள் திருவிருத்தம் என வழங்கப்பெறுவதும் இங்கு ஒப்பிடத்தக்கது. (நாவு., ப. 291)**

என்கிறார் பேராசிரியர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பதிகப் புதுவிளக்கம் தரல்**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், 'மாதர் பிறைக் கண்ணியானை' என்னும் பாடல் குறித்து மிக அற்புதமான விளக்கத்தை முன்வைக்கின்றார். இங்கு இரண்டு அற்புதக் காட்சிகள் சித்தரிக்கப்படுகின்றன. ஒன்று, திருவையாற்றில் ஐயாறு அடைகின்ற போது கண்டறியாதன கண்டேன் என்று அவர் பாடுவது, நிற்பனவும் நடனமும் ஆகிய யாவும் சிவமும் சக்தியுமாகத் துணையோடு தோன்றிய காட்சியை குறிக்கின்றது. இரண்டாவது, இக்கோயிலை அவர் அடைந்தபோதுதான் திருகயிலாயக் காட்சி அவருக்குக் கிடைக்கின்றது (நாவு., ப.246) எனப் பதிவு செய்கின்றார். இவ்விளக்கம் சிறப்புடையதாக அமைந்துள்ளது.

**பதிகத்திற்குப் புதுப் பெயரிடல்**

திருநாவுக்கரசரின் பதிகத்திற்குப் புதுப் பெயரிடும் பாங்கினைப் பேராசிரியர் ஆங்காங்கு மேற்கொண்டுள்ளார். நில்லாத நீர் சடைமேல் (திரு. தே., 6:43) எனத்தொடங்கும் திருப்பூந்துருத்திப் பதிகம் குறித்து எடுத்துரைக்கும் பேராசிரியர்,

> **பூந்துருத்தி நாதனான பொய்யிலியைக் கண்ட மகிழ்ச்சியில் பாடிய அற்புதப்பதிகம் இது. திருவாசகத்தின் கண்ட பத்து, தில்லை நடராசரின் தரிசனம் காணும் உணர்வைச் சித்திரிப்பது (திருவா., பா. 475). அதுபோல, இப்பதிகமும் 'கண்டேன் நானே' என்ற பாடல் தோறும் முடிவதால் இதனை அப்பரின் 'கண்ட பத்து' எனச் சொல்லத் தடை இல்லை (நாவு., ப. 257)**

எனக் கூறுவது மிக அருமை.

**தலக் குறிப்பு உரைத்தல்**

சைவத் தலங்கள் ஒவ்வொன்றும் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகியனவற்றால் சிறந்து விளங்குவனவாகும். வலம்புரம் என்னும் தலம் பற்றிக் கூறுமிடத்து, வலம்புரத் திருத்தலத்தில் பாடப்பெற்ற 'பட்டுடுத்துப் பவளம்போல் மேனியெல்லாம்…வட்டணைகள் பட நடந்து' (திரு.தே., 6:58:7) என்னும் அப்பர் பெருமானின் பாடலை மனத்தில் கொண்டு சிற்பி ஒருவன் வடித்த கவின்மிகு சிலை ஒன்று, 'வட்டணை காட்ட வந்த நாயகர்' என்னும் பெயரில் என்றும் திருவலம்புரத்தில் திகழ்வதைக் காணலாம் (நாவு., ப.83) எனப் பதிவுசெய்து பாடல் பெருமையையும் அப்பாடலை அனுபவித்த சிற்பியின் கலை உள்ளத்தையும் பேராசிரியர் புலப்படுத்துகின்றார். மேலும், இத்திருத்தலப் பதிகத்தில் சண்டேசுவர நாயனார், கண்ணப்ப நாயனார் எனப் பெரிய புராண வரலாறுகள் பதிவு செய்யப்பட்டுள்ளமை குறித்தும் விளக்கியுள்ளார். குடந்தைக் கீழ்க்கோட்டம் நாகேஸ்வரன் கோயில், கும்பகோணத்தின் ஊர் நடுவில் உள்ள பெரிய கோயில். சித்திரை மாதம் மூன்றாம் நாள் காலையில் பகலவன் கிரணங்கள் மூலத்தான மூர்த்தியின் மீது படுகின்றன. இதையே சூரிய பூசை என்பது மரபு (நாவு., ப.126) என இவர் எடுத்துரைப்பது குறிப்பிடத்தக்கது.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

சிராப்பள்ளி குறித்து விளக்குமிடத்து, திரிசிரன் என்ற அரக்கன் வழிபட்டதாலும் ஆதிசேஷனுக்கும் வாயு தேவனுக்கும் ஏற்பட்ட சச்சரவில் வாயுவின் ஆற்றலால் திருக்கயிலாயத்தில் இருந்து தூக்கி எறியப்பட்ட மூன்று துண்டுகளில் ஒன்று இங்கு வந்து மலை ஆயினதாலும் இப்பெயர் ஏற்பட்டது என்பது புராண வரலாறு. காளத்தி, சிராப்பள்ளி, திருகோணமலை ஆகிய மூன்றும் இதுபற்றித் தென்கயிலை எனப்படும் (நாவு., ப.208) என விளக்குதல் அருமை. ஐயாறு, பூந்துருத்தி, புகலூர் ஆகிய இடங்களில், 'அடிக்கீழ் இருத்தினையே, இருப்போம் திருவடிக்கீழ், உன்னடிக்கே போதுகின்றேன்' என முறையே அப்பர் பெருமான் பாடுவதைக் காணலாம். இவையெல்லாம் அப்பர் பெருமானின் வாழ்வில் அற்புதங்கள் நிகழ்ந்த தலங்களாகும். ஞான அனுபவம் சுடர் விட்ட இடங்களாகும். பிரிந்து வர முடியாமல் சிவானுபவம் பாடிய பாசுரங்களில் தான் 'அடிக்கீழ் இருப்போம்' முதலான சொற்களால் இப்பெருமான் பாடியதை அறிகின்றோம் (நாவு., ப.258) என்பது இவர் தேவாரத்தை நன்கு பயின்ற அனுபவத்தின் அடிப்படையில் கூறும் முடிந்த முடிவாக அமைந்துள்ளது.

**கல்வெட்டுச் செய்தி கூறல்**

இலக்கிய ஆதாரங்களைப் போலக் கல்வெட்டு ஆதாரங்களும் மிக மிக்கியமானவையாக உள்ளன. பேராசிரியர் திருவாமாத்தூர்த் தலம் குறித்துக் கூறுமிடத்து, பார்வையற்றோர் பதினாறு பேர் (16 குருடர்கள்) நாள்தோறும் தேவாரம் ஓதவும் இருவர் அவர்களைக் கைப்பிடித்து நடத்திச் செல்லவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததைக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது. இத்தலப் பாசுரங்கள் சிலவற்றில் அழகிய என்ற பெயர் காணப்படுவதால் கல்வெட்டுகளிலும் அழகிய நாயனார் என்ற பெயர் காணப்படுகின்றது (நாவு., ப.55) எனக் கல்வெட்டுச் செய்திகளை எடுத்துக்கூறும் பாங்கினைக் காணமுடிகின்றது.

**கருத்துத் தெளிவுபடுத்தல்**

திருவாய்மூர் இறைவனைத் திருஞானசம்பந்தருடன் திருநாவுக்கரசர் கண்டார் என்பதான குறிப்பு பெரிய புராணத்தில் இடம்பெற்றுள்ளது. இதனைக் கண்ட பலரும் பொதுவாக ஞானசம்பந்தர் கண்டார் என்றும், அவர் காட்ட நாவுக்கரசர் கண்டார் என்றும் கூறுவர். பெரியபுராணத்தில், 'அரசும் காணக் காட்டுதலும்' என வரும் தொடரில் காட்டுதல் என்கிற வினை இறைவனுக்குரியது; காணுதல் இருவருக்கும் பொதுவான தொழில் என்று பொருள்கொள்ளவேண்டும். இறைவன் ஞானசம்பந்தருக்குக் காட்சி கொடுத்ததாகவும் பின்பு அவர் இவருக்குக் காட்டியதாகவும் பொருள் கொள்ளுதல் சேக்கிழாரைச் சரியாக புரிந்து கொள்ளாததாக முடிந்துவிடும் (நாவு., ப.176) என இவர் எடுத்துரைத்தல் சிறப்புடையது.

**அகப்பொருள் குறித்தல்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அகத்துறைக் கருத்தமைந்த பாடல்களைக் குறித்துப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பதிவு செய்யும் பொழுது மகள் பாசுரம் தாய்ப்பாசுரம் என்பனவாக வகைப்படுத்தி உரைக்கும் கருத்து நாலாயிரத் திவ்யப் பிரபந்த ஈட்டுரைகளின் இயல்பையொட்டியுள்ளது. திருநாவுக்கரசரின் பாடல்களை ஆங்காங்கே திவ்யபிரபந்தப் பாடல்களோடு ஒப்பிட்டுப் பேசும் பாங்கினையும் ஆங்காங்கே காணமுடிகிறது.

> **பிற இலக்கியங்களில் 'நற்றாய் புலம்பல்' எனக் காணப்படுவது தாய்ப்பாசுரம் ஆகும். குழலும் கொன்றையும் (திரு.தே., 4:29:6) என்னும் பாடல் சிவபிரான்மீது காதல் கொண்ட தன் மகள் நிலையைத் தாய் விவரிப்பதாக நடைபெறுகின்றது இப்பதிகம். (நாவு., ப. 98)**

எனச் சுட்டுகிறார். மகள் பாசுரம், தாய்ப்பாசுரம் என இவர் குறிப்பிடுவது சிறப்புடையதாக அமைந்துள்ளது.

**சைவசித்தாந்தக் குறிப்புரைத்தல்**

எள்ளில் எண்ணெய் உள்ளவாறு போலத் திருமுறைப் பாடல்களில் சைவசித்தாந்தக் குறிப்புகள் அமைந்துள்ளன. 'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற பாடலை விளக்குமிடத்துப் பேராசிரியர்,

> **முதலில் தலைவி தலைவனின் பெயரைக் கேட்கின்றாள்; பின் அவனது வண்ணம் கேட்கின்றாள்; அவனுடைய ஆரூர் கேட்டாள்; அவனிடத்தில் பித்தாகினாள்; தன் நிலையையும் தன் பெயரையும் மறந்தாள். அதாவது பாசத்தை நீக்கிப் பதியை அடையும் உயிரின் தன்மை இதில் கூறப்பட்டுள்ளது. (நாவு., ப. 154)**

எனச் சைவசித்தாந்தக் குறிப்பினை மிக அழகாக எடுத்துரைக்கின்றார்.

**வாழ்வியல் கருத்துரைத்தல்**

இலக்கியங்கள், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருளைக் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ உரைப்பனவாகும். **இறை வழிபாட்டில் தம்மை நிலைநிறுத்தாமை குறித்து நாவரசர் கூறுவது, உலக மக்கள் நிலைடைத் தன் மேலிட்டுக் கூறுவதாகும் (திருநா.தே. மாயை, ப.200).** இதன அடியொற்றி, **தன் கடன் அடியேனையும் தாங்குதல் என் கடன் பணி செய்து கிடப்பதே (திரு. தே., 5:19:9)** என்பதாகிய பாடல் குறித்து விளக்க வரும் பேராசிரியர், அப்பர் பெருமானின் குறிக்கோளை நூற்பாப்போல் விளக்குவது இத்தொடர். இறைவன் கடமை அடியார்களைத் தாங்குதல். அடியாரின் பொறுப்பு பணிசெய்து கிடத்தல். இன்று நடைபெறுவது மக்களாட்சி. அனைத்து அரசு நிறுவனங்களிலும் பணியாற்றுவோருக்கு மக்கள் தாம் தேர்ந்தெடுத்த மன்றங்கள் மூலம் நிதி ஒதுக்கிப் படியளக்கின்றனர். நல்ல ஊதியம் பெறுகின்ற அரசு பணியாளர்கள் தாம் சமூகப் பணியாளர் என்ற உணர்ச்சியுடன் பணியாற்ற வேண்டும். எக்காரணத்தாலும் ஆணவம் மிகுந்து தாம் தலைவன் என்ற எண்ணமே அவரிடம்

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

எழக்கூடாது. அலுவலகத்திற்குத் தேவையைக் கோரி வரும் யாவரிடமும் மரியாதையுடன் நடந்து உதவ வேண்டும். ஆனால் இன்றைய நிலை என்ன? அமைச்சர் முதல் கடை ஊழியர் வரை எப்படி நடந்து கொள்கின்றனர்? அப்பர் பெருமானின் மனநிலையாகிய என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற நிலை, அவர்கள் மனத்தில் இருக்க வேண்டும். இருக்குமா? கைலை நாதன் தான் இவர்களைத் தடுத்துச் சில சங்கடங்களை அனுபவிக்கச் செய்து பின்னர் ஆட்கொள்ள வேண்டும் (நாவு., ப.92) என்று பேராசிரியர் குறிப்பது, இன்றைய சமூகம் குறித்த அவரது பார்வை, சிக்கலுக்கான தீர்வு, அவர்கள் இரக்க குணம் ஆகியவற்றை நமக்கு உணர்த்தி நிற்கின்றது.

**பேராசிரியர் திருநாவுக்கரசரைப் போற்றுதல்**

நடுநாட்டில் சமணத்தை விரட்டியடித்து அதன் கொட்டத்தை அடக்கியவர் அப்பர் பெருமான். அதுபோன்றதொரு வாய்ப்புப் புகலி வேந்தற்கும் வேண்டும் என்பது இறைவன் திருவுள்ளம் போலும்! தமிழகத்தில் சிவஞானக் கன்றின் பயணம் தொடர்வதற்கு, பாண்டிய நாட்டிலிருந்து அழைப்பு வருகின்றது. சமணர் கொடுமை கூறி மறுத்த அப்பரிடம் கோளறு பதிகம் பாடிச் சம்மதம் பெற்ற சம்பந்தர் செயல், **அன்பினால் மறுத்த தந்தையாரிடம் விடைபெற்றுப் போர்க்களம் செல்லும் மைந்தன் போலக் காணப்படுகின்றது (நாவு., ப. 186)** என உவமை கூறிப் போற்றும் திறம் பாராட்டத்தக்கது. நாவுக்கரசரின் பெருமை குறித்துக் கூறுமிடத்து, நாவுக்கரசர் வாழ்வு நலவாழ்வு; அற்புதத் திருவாழ்வு; தமிழோடு இசை பாடிச் சிவானந்தத்தை அனுபவித்த பெருவாழ்வு; திருநின்ற செம்மை இவரது வாழ்வில் எங்கெங்கும் ஒளிவிட்டு காட்டுகின்றது. இவர் சிறந்த கவியோகி; ஞானச் செம்மல்; பத்தியின் கொடுமுடியைக் கண்டவர். இவரைப் பாராட்டும் பேராசிரியர், வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப் பெற்றதால் அவர் வாழ்வு பூரணத்துவம் பெற்று விளங்குகின்றது. தம் முற்றிய வாழ்வின்கண் ஆன்மீகப் பயணத்தின் முழுமையை அவரது வாழ்வில் தெளிவாகக் காணமுடிகிறது (நாவு., ப.274) எனப் பதிவு செய்கின்றார்.

**பிரபந்த ஒப்பீடு**

பேராசிரியர், சைவ வைணவ இலக்கியங்களை ஆழ்ந்து கற்றவர். இரு சமய நூல்களையும் ஒருசேரச் சிந்திப்பவர். திருப்புறம்பயம் தலத்தின் அகத்துறைப் பாடலைக் குறிப்பிடுமிடத்து, திருப்புறம்பயப்பதிகத்தில் 'புறம்பயம் நம் ஊரென்று போயினார்' என வருகின்றது. ஒவ்வொரு பாடலும் நம்மூர் என்று கூறினார் என்று முடிவது போல் திருமங்கை ஆழ்வாரின் திருநெடுந்தாண்டகத்தில் புனலரங்கம் ஊரென்று போயினார் (திருநெடுந்., 24, 25) என வருவது, அப்பர் பெருமானின் அச்சு திருமங்கை மன்னனின் பாடலில்தெரிகின்றது (நாவு., ப.202) என்பது சிறப்புடையதாக உள்ளது.

**நிறைவுரை**

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேராசிரியர் எழுதியுள்ள நாவுக்கரசர் என்னும் நூல், பிற நூல்களில் இல்லாத பல்வேறு நுணுக்கங்களை தன்னகத்தே கொண்டு விளங்குகின்றது; பெரிய புராணத்தையும், பெரியபுராணத்தில் திருநாவுக்கரசர் புராணத்தையும், திருநாவுக்கரசரின் மூன்று திருமுறைகளையும் ஒட்டுமொத்தமாக நமக்குப் பிழிந்து தந்திருக்கின்றது; அவர் சென்ற திருத்தல யாத்திரையை இன்றைய நடையில், இன்றைய மக்களுக்கு, இன்றைய பெயர்களோடு தலப்பெயர்களோடு தெளிவுபடுத்துகின்றது; அப்பரின் தேவாரத்தைப் படித்து ரசிக்கும் பாங்கினை நமக்கு எடுத்துரைக்கின்றது; அவர்தம் தேவாரத்தின் வழி இன்றைய சமுதாயத்தில் மக்கள் தம் வாழ்வை அமைத்துக் கொள்ளும் முறையை விவரிக்கிறது. அவர் பாடலின் சொல் நயம், பொருள் நயம் ஆகியவற்றைப் புலப்படுத்துகின்றது. அவர்தம் வாழ்வியல் குறித்து ஏற்படக்கூடிய குறித்து ஏற்படக்கூடிய பல்வேறு ஐயங்களுக்குச் சிறந்த மேற்கோள்களை அடையாளம் காட்டி நமக்கு நல்ல முடிவுகளை எடுத்துரைக்கின்றது. சமயம், சமுதாயம் ஆகியன மேம்படவும், தமிழ் மொழி வளம் பெறவும் திருநாவுக்கரசர் பாடுபட்ட பாங்கினை மிக அற்புதமாகப் பேராசிரியர், இந்நூலிலே மிகச் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார். இவற்றால், பிற்காலத்தில் தோன்றிய பல நூல்களுக்கு ‘நாவுக்கரசர்’ என்னும் இந்நூல் சிறந்த முன்னோடி என்பது உறுதியாகின்றது.

**குறிப்பு நூல்கள்**

[1] ஆறுமுக நாவலர் புராணம். *திருநாவுக்கரசு நாயனார் புராணம்.* ஸ்ரீ ஆறுமுக நாவலர் சைவப்பிரகாச வித்தியாசாலை அறக்கட்டளை, ஆறுமுக நாவலர் நிலையம், 63/24 மாலைகட்டி தெரு, சிதம்பரம், ஏழாம் பதிப்பு, 2006.

[2] சரவண ஆறுமுக முதலியார். *திருநாவுக்கரசர்.* சொர்ணாம்பாள் சொற்பொழிவுகள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர் – 608 002, முதற்பதிப்பு, 1970.

[3] ந.சுப்புரெட்டியார் பேராசிரியர். *நாவுக்கரசர்.* ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை- 600 005, முதற்பதிப்பு, 1986.

[4] திருநாவுக்கரசர். *ஆறாம் திருமுறை.* தருமபுர ஆதீனம், மயிலாடுதுறை- 609 001, மூன்றாம் பதிப்பு, 2011.

[5] திருநாவுக்கரசர். *ஐந்தாம் திருமுறை.* தருமபுர ஆதீனம், மயிலாடுதுறை- 609 001, மூன்றாம் பதிப்பு, 2011.

[6] திருநாவுக்கரசர். *நான்காம் திருமுறை.* தருமபுர ஆதீனம், மயிலாடுதுறை- 609 001, மூன்றாம் பதிப்பு, 2011.

[7] திருமங்கையாழ்வார். *திருநெடுந்தாண்டகம்.* நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், திருவேங்கடத்தான் திருமன்றம், சென்னை – 600 014, மூன்றாம் பதிப்பு, 1987.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[8] பூங்கொடி முருகையா. "திருநாவுக்கரசர் தேவாரத்தில் மாயை : ஓர் ஆய்வு." *MJSSH இதழ்*, தொகுதி-2-3, ISSN: 2590-3691, ஜூலை, 2018.

[9] மாணிக்கவாசகர். *திருவாசகம்.* சைவ நூல் அறக்கட்டளை, மவுண்ட் ரோடு, சென்னை- 600 002, முதற்பதிப்பு, 2018.

[10] வித்துவான் க. வெள்ளைவாரணனார். *பன்னிரு திருமுறை வரலாறு* (பாகம்-1). அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம் – 608 002, இரண்டாம் பதிப்பு, 1997.

**Reference**

[1] Arumuga Navalar. *Thirunavukkarasar Puranam*. Sri Arumuga Navalar Saivapiragasa Vidhyasalai Arakkattalai, Arumuga Navalar Nilayam, 63/24, Malaikkatti Theru, Chidambaram, Seventh Edition, 2006.

[2] Saravana Arumuga Mudhaliyar. *Thirunavukkarasar.* Sornampal Sorpozhivugal, Annamalai University, Annamalainagar – 608 002, First Edition, 1970.

[3] Subbu Reddiar. N., Navukkarasar. *Ainthinai Pathippakam*, Thiruvallikkeni, Chennai – 600 005, First Edition, 1986.

[4] Thirunavukkarasar. *Araam Thirumurai*. Dharumapura Adhinam, Mayiladudhurai – 609 001, Third Edition, 2011.

[5] Thirunavukkarasar. *Aintham Thirumurai*. Dharumapura Adhinam, Mayiladudhurai – 609 001, Third Edition, 2011.

[6] Thirunavukkarasar. *Nangam Thirumurai.* Dharumapura Adhinam, Mayiladudhurai – 609 001, Third Edition, 2011.

[7] Thirumangaiyaazvar. *Thirunedundhandagam.* Nalayirath Thivviyap Pirabantham, Thiruvengadaththan Thirumandram, Chennai – 600 014, Third Edition, 1987.

[8] Poongodi Murugaiya. "Thirunavukkarasar Thevaraththil Maayai : Or Ayvu.*" MJSSH Online Journal*: Volume 2- Issue 3, ISSN: 2590-3691, July 2018.

[9] Vellai Varananar. K., *Panniru Thirumurai Varalaru (Vol.I).* Annamalai University, Chidambaram – 608 002, Second Edition, 1997.

[10] Manikkavaasagar. *Thiruvaasagam*. Saiva Nool Arakkattalai, Mount Road, Chennai – 600 002, First Edition, 2018.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரும் காரைக்குடி கல்வியியல் பணிகளும்
## Professor and Academic Work in Karaikudi

**கா. சிவமுருகன்,** முதுகலை தமிழ் இலக்கியம், தமிழ்த்துறை, திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம், ஆந்திரா.
**K. Siva Murugan,** M.A Tamil, Dravidian University, Kuppam, Andhra.
**ORCiD:** https://orcid.org/0000-0002-5578-0994
**DOI: 10.5281/zenodo.7256456**

### Abstract

*Professor Dr. N. Subbureddiar excelled in his academic work. He has won numerous awards and numerous prizes and has been a protector of Tamil in his lifetime. His writing is highly commendable as he has written more than 130 rare books in Tamil. He has many achievements in his Tamil work. The Professor first started his educational career in Karaikudi and flourished in his life as a Professor of Tamil. Professor had his academic work in Karaikudi and he remembers his experiences in his books. He had been involved much in academic work. His involvement also helped to plan and organize his academic work. He had dedicated a portion of his life to academic work. He is also an expert in developing and planning educational activities. It is noteworthy that Karaikudi was instrumental in improving the work and its progress. Professor is an enthusiastic performer of many tasks such as academic work and Tamil development work. He had written and published several books in Tamil. His books were published and nationalized by the Government of Tamil Nadu. Thus, Professor was called the (Tamil Grandmaster) as his Tamil development work was special. Based on this, it is clear that the Professor is more interested in Tamil work. When one knows the experience of the Professor, one can understand the meaning of the Professor's academic works at Karaikudi and how the Professor planned for education and handled various new ventures in academia for the development of Tamil. He also made various plans for academic work and then guided the progress of Karaikudi College. Since Karaikudi College has expanded and expanded into a College of Education. Thus diversified educational activities can be seen to have been improved and developed in Karaikudi by the extended service of Subbu Reddiar. The purpose of this article is to explore the significance of Professor Reddiar's educational work in Karaikudi.*

**Keywords:** Professor Subbu Reddiar, Teaching Involvement, Academic Work, Karaikudi.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கல்வியியல் பணிகளில் சிறந்து விளங்கியவர். இவர் எண்ணற்ற விருதுகளும், ஏராளமான பரிசுகளைப் பெற்று இயற்றமிழின் காவலராகத் திகழ்ந்தவர். இவரது நூல்கள் 130 க்கும் மேற்பட்ட அரியவகை நூல்களைத் தமிழுகிற்குத் தந்த அவரது எழுத்துப்பணி பெரும் பாராட்டுக்குரியதாகும். இவர் தனது தமிழ்ப் பணியில் புரிந்திருக்கும் சாதனைகள் ஏராளமாகும். பேராசிரியர் முதலில் காரைக்குடியிலிருந்து தொடங்கப்பட்ட கல்வி ஆல்போல் தழைத்து வளர்ந்தது. பேராசிரியரின் காரைக்குடி கல்வியியல் பணியேயாகும். அவரது ஈடுபாடு கல்வியியல் பணிகளைத் திட்டமிட்டு சீர்படுத்திடவும் உதவியதை அறியமுடிகின்றது. அவரது வாழ்நாளில் கல்வியியல் பணிக்காக*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*ஒரு பகுதியை அற்பணித்துள்ளார். கல்வியையும் வளர்த்துக் கொண்டு கல்வியியல் பணிகளை திட்டமிட்டு செயல்படுத்துவதில் வள்ளவர் ஆவர். காரைக்குடி பணிகளை மேம்படுத்தியும், அதன் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அரும்பாடுபட்டவர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். பேராசிரியர் கல்வியியல் பணிகள், தமிழ் வளர்ச்சி பணிகள் என பல பணிகளை மேற்கொண்டு அவற்றை ஓர் ஆர்வத்தோடு செவ்வென ஆற்றுபவராவர். தமிழ் வளர்ச்சி பணியில் பல வகை நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். அவரது நூல்கள் தமிழ் மக்களால் சிறப்பிக்கப்பட்டு, தமிழ்நாடு அரசு அரசுடமையாக்கபட்டதும் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு தமிழ் வளர்ச்சி பணி சிறப்புற்று இருந்ததால் பேராசிரியரை தமிழ்ப் பேரகராதி என்று அழைப்பர். இதன் அடிப்படையில் நோக்கும் போது பேராசிரியர் தமிழ் பணியில் அதிக ஆர்வம் மிக்கவர் என்பது தெளிவாகிறது. அந்தவகையில் பேராசிரியரின் அனுபவங்களை அறியும் போது ''பேராசிரியரும் காரைக்குடி கல்வியியல் பணிகளும்'' என்ற பொருண்மையில் அமைந்து பேராசிரியர் அவர்கள் கல்வியியலுக்கு திட்டமிட்டு, கல்வியியலில் பல்வேறு புதிய முயற்சியினை கையாண்டதையும், தமிழ் வளர்ச்சிக்கு பாடுபட்டது போல், கல்வியியல் பணிக்கும் பல்வகை திட்டமிட்டு பின் காரைக்குடி கல்லூரியினை முன்னேற்ற பாதையில் வழிக்கோணர்வதை அறியலாம். அதன் பின்னர் காரைக்குடி கல்லூரி மேம்பட்டு விரிவடைந்து, கல்வியியல் கல்லூரியாக மாறியதையும் காணலாம். இவ்வாறாக பலதரப்பட்ட கல்வியியல் பணிகளை காரைக்குடியில் மேம்படுத்தியும், வளர்ச்சி அடைந்ததை காணலாம். இதன் வாயிலாக காரைக்குடி கல்வியியல் பணிகளின் சிறப்புகளை ஆய்ந்து விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், கல்வி ஈடுபாடுகள், காரைக்குடி, கல்வியியல் பணி.

**முன்னுரை**

பேராசிரியர் டாக்டர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் ஆற்றிய பணிகள் பல வகை இருந்தாலும், அப்பணி வகைகளில் சிறந்தவை. பேராசிரியர் முதன்முதலில் ஆற்றிய காரைக்குடி கல்வியியல் பணியேயாகும். இக்காரைக்குடி கல்வியியல் பணியில் பேராசிரியர் திட்டமிட்டு, கல்வியியலை சீர்படுத்தி, ஒழுங்குற அமைத்தும், கல்வியியலுக்கு பல்வேறு புதிய முயற்சியினை எடுத்து, கையாண்டதையும், காரைக்குடி கல்வியியல் பணிகள் வளர்ச்சி மற்றும் முன்னேற்றம் அடைந்து விளங்கியதையும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**கல்வியியலில் கற்றது கை மண் அளவு**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கல்வியியலில் அதிக ஆர்வம் மிக்கவர். எண்ணற்ற

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

புத்தகங்கள் வெளி வந்த நிலையிலும் கூட, தான் இன்னும் கற்க வேண்டும். கல்வியியல் பெரும் மாற்றத்தையும், முன்னேற்றத்தையும் ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணியுள்ளார். பலரும் பேராசிரியரின் புத்தக அளவை கொண்டு பேரறிஞர் என்று நினைக்கிறார்கள். ஆனால் அவர்களின் நினைப்பை மெய்ப்பிப்தற்கு இன்னும் எவ்வளவோ கற்க வேண்டும் என எண்ணியே,

**கல்வி கரையில கற்பவர் நாள்சில**
**மெல்ல நினைக்கின் பிணிபல - தெள்ளிதின்**
**ஆராய்ந்த் தமைவுடைய கற்பவே நீரொழிய**
**பாலுண் குருகின் தெரிந்து. (நாலடியார், பா.135)**

என்ற பாடலின் வழி பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கற்றலில் பெரும் சிறப்புடையவராவார் என்பதை அறிய முடிகின்றது.

**காரைக்குடி கல்லூரியில் நூலகப் பொறுப்பாளர்**

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் காரைக்குடி பயிற்சி கல்லூரியில் பணியாற்றிய போது திரு. ஐ. என். மேனன் அவர்கள் முதல்வராக நியமிக்கப்பட்டார். முதல்வராகப் பொறுப்பேற்றவுடன் அக்கல்லூரியை மேம்படுத்துவதற்கான பணியினை திரு.வேங்கடாச்சாரியின் பொறுப்பில் விட்டு விட்டார். இக்கல்லூரில் திரு. மேனன் அவர்கள் இறையருளால் வள்ளல் அழகப்பரின் திருவுள்ளப்படி எல்லோரும் கல்லூரி முன்னேற்றத்திற்கு பாடுபட்டவர்களாவர். இவர்களுள் மிக முக்கியமானவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களை 'தமிழ்ப் பேரகராதி' என்று செல்லமாக திரு. மேனன் அழைப்பார். வாழ்வில் உயர்வதற்கு ஆங்கில மொழியை தாய்மொழியாகக் கற்பிப்பது பற்றியும், ஆலோசித்த்தை அறியலாம். 'கற்றது கைமண் அளவு கல்லாதது உலகளவு' என்ற பொன் மொழியின் ஒளி அவர்க்கு வழிகாட்டியதன் காரணமாக, பயிற்சிக் கல்லூரி நூலகம் தனித்தன்மை பெற வேண்டுமென்று திரு. மேனன் அவர்கள் நூலகப் பொறுப்பை பேராசிரியரிடம் ஒப்படைத்தார்கள். பொறுப்பு கிடைத்ததும் பேராசிரியர் ஒரு திட்டத்தை சீர்மிகுச் செம்மைப்படுத்தி கொண்டு நூல்களை வாங்குவதற்கு முன்பு நூல் நிறுவனங்கள் இடத்து விலைப்பட்டியல்களை வரவழைத்தார். விலைப்பட்டியல் அவரை வந்தடைந்தது பின்பு அனைத்து பாடத்துறைக்கும் வேண்டிய புத்தகங்களும், பல்வேறு அகராதிகள் மற்றும் கலைக்களஞ்சியங்கள், ஆய்வு நூல்கள் முக்கிய நாளிதழ்கள் என இவற்றையெல்லாம் வாங்கி வைக்க வேண்டும் என உறுதி செய்தார். பின்னர், நூலகத்திற்கு தேவையான புத்தகப் பெயர்ப்பட்டியலை தயாரித்து புத்தக நிறுவனங்களுக்கு அனுப்பினார். மேலும், நூலகம் செம்மையுற கண்ணாடி முகப்புடைய தேக்கு அலமாரிகளை தயார்படுத்தினார். இப்படியாக

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திட்டமிட்டு செயல்படுத்திபடுத்தினர். 10 மாதங்களில் கட்டட வேலைகள் நிறைவேறி, புத்தகங்கள் அடுக்கடுக்காய் வந்ததை விளக்கப்பட்டுள்ளது.

பேராசிரியரின் தலைமையில் 1955 இல் புதிய நிரந்தர கல் கட்டடம் தயாரானது, கீழ்ப்புறப் பகுதி முழுவதும் நூலகத்திற்காக ஒதுக்கப்பட்டு, பின்பு அவ்வறையில் அனைத்து புதிய நூல்களையும் அடுக்கி வைத்தார்கள். புதிய கட்டடத்தில் பேராசிரியருக்கென தனி அறை ஒதுக்கப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். அதன்பின் அக்கட்டடத்தின் நூலகம் சிறப்புற்று மேன்மையடைந்ததையும் உணர முடிகின்றது.

**கல்வியியல் இரண்டாமாண்டின் முன்னேற்றம்**

1951-பிப்ரவரி மாதத்திலேயே கலைக் கல்லூரி வளாகத்திலிருந்து சொந்தக் கட்டடத்தில் குடிபுகுந்தார்கள். அந்த புதிய கட்டடத்திற்கு மாணவர்கள் அமர்வதற்கு 300 சிறுமேசைகளும், கையில்லா 300 நாற்காலிகள், கண்ணாடிமுகப்புள்ள பல பீரோக்கள் என முதல்வர் அறைக்கு வேண்டிய பொருள்கள் அனைத்தும் வந்தன. அனைத்து கோப்புகளும் முயல் வேகத்தில் நடந்தன. சென்னைப் பல்கலைக்கழகம் ஆணையம் ஒன்றை ஏற்படுத்தியது. அதன் தலைவராக ஏ.என்.தம்பி என்பவரின் பரிந்துரையின் பெயரில் இக்கல்லூரிக்கு நல்ல அமைப்பு துணைநின்றன. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கல்வியியல் பணிகளை திட்டமிட்டு நன்முறையில் அமைத்தாலும் மற்றும் ஏனைய பேராசிரியரின் ஒத்துழைப்பாலும் இக்கல்லூரி செழிப்புற்று விளங்கியதை அறிய முடிகிறது. நிர்வாகக்குழு உறுப்பினர்களில் சா.கணேசன் முக்கியமானவராகத் திகழ்ந்தார். மாணவர்கள்மீது அளவற்ற அன்பு காட்டி வந்தவர் என்பதையும் அறியலாம்

**காரைக்குடி கல்வியியல் பொருட்காட்சி ஏற்பாடு**

1952 டிசம்பர் மாதம் என்பதாக நினைவு கல்லூரி வளாகத்தில் ஒரு பெரிய பொருட்காட்சிக்கு ஏற்பாடு நடந்தது. அப்போது பொறியியற் கல்லூரியும், கல்லூரியில் ஒவ்வொரு துறையிலும் பெரும் பணி நடைபெற்றது. பொறியியல்துறை அறிவியல் துறையாக இருப்பினும் பொருட்காட்சியை அமைப்பது எளிது. தமிழ்த்துறையிலும் பன்னிரண்டு மாணவர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். மிக சிறப்பாக திட்டம் தீட்டி உருவாக்கினார். இத்திட்டத்தில் எழுத்துக்கள் விளக்கப்படங்கள், எழுத்தாணி மற்றும் AIR MAIL தாள், போன்றவற்றை தயாரித்து கூரை வேயப்பட்ட கட்டடத்தில் வைத்திருந்தார்கள். அந்தோ! இவையெல்லாம் இரண்டு மூன்று நாட்கள் ஓயாது அடித்த புயல்மழையால் அழிந்தன. இச்சூழலில் சா.கணேசன் அவர்கள் தந்திருந்த எழுத்தாணி, ஓலைச்சுவடிகள் காணாமல் போய்விட்டது. அவர் மிகவும் வருந்தினார். நிலத்தைக் கடல் ஆக்கிரமித்தது போல, புயல் தமிழ்த்துறைக் கட்டடம் சேதமடைந்ததை குறிப்பிடப்பட்டுள்ளது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கடல்கோளுக்கு பிறகும் தமிழ் இன்றும் செழிப்புடன் இருக்கிறது. அங்கனமே துறைக் கட்டடமும் சீர்த்திருத்தப் பெற்ற இன்றளவும் (1989) துறையும் சீருடன் சிறப்புடனும் வளர்த்தோங்கி இருக்கிறது என்பதை அறியமுடிகிறது. பின்னர் 1962 - இல் பொறியியல் கல்லூரியில் மீண்டும் ஒரு பொருட்காட்சி நடைபெற்ற போது மிகச் சிறப்பாக அமைந்திருந்தது. கல்லூரியின் வயது பெரியதாக (10 ஆண்டுகள்) வசதிகள் பெருகி இருந்தன. பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் குடும்பம் 1966 வரை காரைக்குடியில் இருந்தது குறிப்பிடத்தக்கதாகும். இவர் திருப்பதியிலிருந்து காரைக்குடிக்கு வந்திருந்தார். பொருட் காட்சியையும் குடும்பத்தோடு பார்க்கச் சென்றிருந்தார். அப்பொருட்காட்சிக்கு மத்திய அமைச்சர் பல்கலைக்கழக ஆணையமும், தாளாளர் C.V.CT.V வேங்கடாசலம் செட்டியார் எல்லோரையும் சுற்றி காட்டிய போது பேராசிரியரும் அவர்களுடன் சேர்ந்து பார்வையிட்டார். பின்னர் சிறிது நேரம் உரையாடல்கள் நிகழ்த்தினார். அதன்பின் விடைப்பெற்றுக் கொண்டார் என்பதை அறியமுடிகிறது.

**பேராசிரியரின் கல்வியியல் பணி**

பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பணியேற்ற முதலாண்டில் வகுப்பு நடத்துவதற்குத் தேவையான அளவு படங்களைத் தயாரித்துக் கொண்டு காலத்தைக் கழித்தார். இரண்டாமாண்டில் இருந்து மும்முரமாகப் பணியில் இறங்கினார். தமிழ்ப் பயிற்றல் பற்றி ஒருபெரியநூல் எழுதுதல் வேண்டும் என்றஎண்ணம் பணியை ஒப்புக்கொண்ட அன்றே முகிழ்த்தது. ஒரு பெரிய நூல் எழுதுதல் என்பது ஓர் எளிய செயலன்று. பேராசிரியர் அவர்கள் இப்பணியினை கையாண்டு கல்வியியல் பற்றிய நூல்களில் சில வழிகாட்டும் உண்மைகள் உள்ளன. அவற்றை முறைவல்லார் சிறுசிறு சொற்கள் கூறினர். அவை தெரிந்தவற்றிலிருந்து தெரியாதவற்றை அறிதல், முழுதிலிருந்து பகுதிக்கு போதல், காட்சி நிலையிலிருந்து கருத்து நிலைக்கு செல்லல் என்று வரிசைமுறைப் படுத்தி கற்பித்தல் துறையில் புதிதாகப்புகும் இளைஞர்கட்கு இவை நல்ல வழிகாட்டிகளாக உதவும், என்றும் பண்டைய ஆசிரியர்கள் பயிற்றும் முறையைக் குறித்துக் கூறியுள்ள கருத்துகள் இக்கால முறை வள்ளலார் கூறும் கருத்துடன் ஒப்பிட்டுக் காட்டப்பெற்றுள்ளன. இந்நூலில் பயிற்றும் முறையைக் குறித்து நச்சினார்க்கினியார் நூலின் மூலம் வரும் பின்வருமாறு

**ஈதல் இயல்பே இயல்புறக் கிளப்பின்**
**பொழிப்பே அகலம் நுட்பம் எச்சமெனப்**
**பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்**
**புகழ்ந்த மதியிற் பொருந்தும் ஓரையில்**
**திகழ்ந்த அறிவினன் தெய்வம் வாழ்த்திக்**
**கொள்வோன் உணர்வகை அறிந்தவன் (நினைவுக் குமிழிகள் - 1, பக். 251)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கொள்வரக் கொடுத்தல் மரபெனக் கூறினர் புலவர் இதைபோல் நன்னூலாசிரியரும் பாடம் சொல்லுவதைப் பற்றிக் கூறியுள்ளார்.பேராசிரியர் அவர்கள் இந்த நூலில் படிப்பு என்பது பற்றியும், மொழிப்பயிற்சிகள் மற்றும் கட்டுரை பயிற்சிகள் மேலும் கற்பித்தல் தொடர்பான நிலையினை பற்றியும் இவை இந்நூலின் விரிவான விளக்கம் பெறுகின்றன. தாய்மொழி ஆசிரியர்கள் பற்றி ஓர் இயல் மூன்றாம் பதிப்பில் இருந்ததை அறியலாம். பேராசிரியர் ஆற்றிய காரைக்குடி கல்வியியல் பணிகளுள் ஒன்றாக தமிழ் பயிற்றுமுறை என்ற நூல் வெளியீட்டு பணியும் இடம்பெறுவதை அறியமுடிகிறது.

**காரைக்குடி கல்வியியல் பணியை மேம்படுத்துதல்**

பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் காரைக்குடி பணியாற்றிய போது காரைக்குடி கல்வியியலில் ஏற்பட்ட மாற்றங்களை நினைவுக் குமிழியில் – 3 பதிவு செய்ததை அறியலாம். பொறியியற் கல்லூரிக் கட்டடத்திற்கு அடிக்கல் போடும் விழாவிற்கு குடியரசுத் தலைவர் பாபு ராஜேந்திரப் பிரசாத்தும், கட்டடத் திறப்பு விழாவிற்குத் துணைத் தலைவர் டாக்டர் சர்வேபள்ளிதிறப்பு இராதாகிருஷ்ணனும் வந்தார்கள். விழாவிற்கு தலைமை பொறுப்பு டாக்டர் வள்ளல் விரைவாகச் செயலாற்றுவார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். அந்த வகையில் பல துறைகள் பெருகி மேம்பட்டு சீரும் சிறப்புமாக வள்ளல் அழகப்பர் அமைந்துள்ளார் என்பது காரைக்குடி கல்வியியல் பணியின் வளர்ச்சிக்கும் வழிவகுத்ததைக் காண முடிகிறது.

**காரைக்குடி கல்வியியல் விழாக்கள்**

பேராசிரியர் காரைக்குடி கல்வியியல் பணியாற்றிய போது பங்கெடுத்த விழாக்கள் மட்டும் நினைவு கூர்தல். பேராசிரியர் எஸ். சீநிவாசன் முதல்வராகப் பணியாற்றிய முதலாண்டே ஆண்டு விழா நடத்துவது பற்றிய பேராசிரியர் கூட்டம் நடைபெற்றது. அக்கூட்டத்தில் சிறப்பு விருந்தினர் யாரை அழைப்பது என்று வினா எழுந்தது. பேராசிரியர் தவத்திரு. சித்பவாநந்த அடிகள் பெயரை குறிப்பிட்டார். அனைவரும் சிறப்பு விருந்தினர் தவத்திரு என்று ஒப்புக்கொண்டனர். பின்னர் சிறப்பு விருந்தினரை சிறப்பு செய்து வரவழைத்து விழா தொடங்கியது. விழாவில் பல நிகழ்ச்சிகள் நடைபெற்றது. காரைக்குடி கல்வியியல் விழாக்களில் பேராசிரியரிடம் அனைத்தும் பொறுப்பு வகித்து சிறப்பாக கண்டதையும் அறிய முடிகிறது.

**பேராசிரியர் பதவி உயர்வு**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் காரைக்குடிக்கு வந்து பணியேற்ற போது பேராசிரியர் நிலையிலேயே பணி கிடைத்தது. அதற்கு பின் தமிழ்துறையில் சா.கணேசன் மூலம் விரிவுரையாளர் பதவி கிடைத்தது இது வினைப் பயன் என்றே கொள்ளுதல் வேண்டும். பேராசிரியர் பதவிக்காக பல முயற்சிகள் எடுத்தும் முயற்சியை கைவிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். பேராசிரியர் அவர்கள் திருவள்ளுவரின் வரிகளுக்கு இணங்க

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தெய்வத்தான் ஆகாதெனினும் முயற்சிதன்**
**மெய்வருத்தக் கூலி தரும் (குறள். 619)**

என்ற குறள்பாவின் வரிகளுக்கு ஏற்ப முயற்சியை பேராசிரியர் கைவிடவில்லை என்பதாகும். பேராசிரியரின் முயற்சிக்கு பலன் கிடைத்தது முதல்வர் துணைக்கண்ணு முதலியாரின் மகள் திருமண விழா கூட்டத்தில் நிகழ்ச்சி நடைப்பெற்றது. அந்நிகழ்வில் அனைத்து ஆசிரியர்களுக்கு ஒரு விருந்து அளித்தார். அதற்குத் தாளாளர் செட்டியாரும், அறக்கட்டளை மேலாளர் திரு. T.V.S மணியனும் வந்திருந்தனர். விருந்து பகல் பன்னிரண்டரை மணிக்கு நிறைவு பெற்றது. முதல்வர் வீட்டிற்கு முன்னால் போடப் பெற்றிருந்த ஒரு கொட்டகையில் எல்லாரும் உட்கார்த்திருந்தார்கள். அப்போது திடீர் நிகழ்ச்சி நடைபெற்றது. தாளாளர் செட்டியார் மணியனை நோக்கி மணியன் ரெட்டியாரின் பதவி உயர்வு வீணாக இரண்டாண்டுகளாக தாமதம் ஆகி விட்டது என்று கூறினார். உடனே ரெட்டியாரின் பதவி உயர்வு வீணாக இரண்டாண்டுகளாக தாமதம் ஆகி விட்டது என்று கூறினால் உடனே ரெட்டியாரின் பதவி உயர்வு ஆணையின் நகல் என் மேசையின் மீது இருக்க வேண்டும் அது இல்லாவிட்டால் தாளாளர் அறக்கட்டளை உறுப்பினர் பதவியை இதையே காரணம் காட்டி ராஜினாமா செய்து (ABLE) மூலம் தெரிவித்து விடுவேன் என்று அறிவித்ததை அறியலாம்.

**பேராசிரியரின் பதவி உயர்விற்கு ஏற்பட்ட தடைகள்**

பேராசிரியர் அவர்கள் காரைக்குடியில் பணியாற்றும் போது பதவி உயர்வு ஏற்பட்டது. அப்பதவி உயர்வுக்கு பேராசிரியர் ஆற்றிய உழைப்பு அதிகம். பதவி உயர்வுக்கு பல பேராசிரியர் பெருமக்களும் விண்ணப்பித்து இருந்த சூழலில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களுக்கும் காரைக்குடி கல்வியியல் கல்லூரியில் பதவி உயர்விற்கு விண்ணப்பித்து இருந்தார் என்பதை அறியலாம். அப்பதவி உயர்வுக்கு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் காரைக்குடி கல்வியியல் பணிகளை சிறப்பாகவும், செம்மையாகவும் வழிநடத்தி முன்னேற்றம் அடைய வழிவகுத்தார் அவரிடம் பல நல்லெண்ணங்களும், இறைவன் திருமாலின் மீதான நம்பிக்கையும் இருந்தும் கூட பதவி உயர்வுக்கு பல தடைகள் ஏற்பட்டத்தை அறியலாம். அந்த வகையில் பேராசிரியருக்கு ஏற்பட்ட தடைகள் குறித்தும், தடைக்கு காரணம் யார் என்பது குறித்தும், பின்னர் தடை நீங்கியது குறித்தும் பின்வருமாறு அறியலாம்.

**முதல் தடை**

பேராசிரியர் பதவி நிரப்பப் பெற வேண்டும் என்றவுடன் அங்கு போட்டியிடுவது என்பது இயல்பு. ஆகையால் பலரும் பேராசிரியர் பதவிக்கு விண்ணப்பித்து இருந்தார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரும் அப்பேராசிரியர் பதவிக்கு விண்ணப்பித்து இருந்தார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் விண்ணப்பித்து இருந்த்தை அறிந்து, சிலர் பேராசிரியருக்கு பதவி கிடைப்பது கூட உறுதி என்றும் நம்பினர். பேராசிரியருக்கு பதவியை

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நல்க வேண்டும் என்ற கருத்துக்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் என்று சுற்றறிக்கையின் மூலம் ஆட்சிக் குழுவினரைக் கேட்கப்பட்டது. அதற்கு C.V.CT.V வேங்கடாசலம் (தாளாளர்) கூட ஒப்புதல் அளித்திருக்கிறார். முதல்வர் ஒப்புதலுக்காகக் கோப்பு வந்திருக்க வேண்டும் என நினைத்தார். ஆனால் அலெக்ஸாண்டர் ஞான முத்து மட்டிலும், ஒருவரைப் பதவி உயர்த்தும் போது அவருடைய மூப்புடைமை மற்றும் உயர்த்த வேண்டிய இன்றியமையாமை, அவருடைய தகுதி, திறமைகள், நிர்வாகத்திற்கு நேரிடும் நிதிப்பொறுப்பு இவை அறுதியிட்ட பின்னரே பதவி உயர்வு செய்ய வேண்டும் என்று எழுதி கையெழுத்திட்டிருந்தார். அது பேராசிரியருக்கு ஓர் நிர்வாகத்தினருக்கு உரிய குறிப்பு போல் காணப்பெற்றாலும், அதில் ஓர் உள் நோக்கம் இருப்பதாக மூளையில் உதயமானது. அதை அறிய முடியாவிடினும், பதவி உயர்வைத் தள்ளிப் போட்டு விட்டால், பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்ற கருத்தை நோக்கமாகக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது வெள்ளிடை விலங்கலாகத் தெரிந்தது. இதெல்லாம் பதவி உயர்வு கோரி அனுப்பப் பெற்ற விண்ணப்பத்தின் விளைவு என்பதனை அறிந்தார். இதுவே பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களுக்கு பதவி உயர்விற்கு போடப்பட்ட முதல் தடையாக இருப்பதை விளக்கப்பட்டுள்ளது. முதல்தடையை எதிர் கொள்ளுவதற்கு மூளை சிந்திக்கத் தொடங்கியதாக பேராசிரியர் குறிப்பிடுகிறார். மறுநாள் விடுப்பு எடுத்து, M.கிருஷ்ணசாமி செட்டியாருடன் கலந்து யோசித்து ஓர் முடிவுக்கு வந்தும் மேலும் சுற்றறிக்கையைக் கண்டு கொள்ளாமல் முன் எழுதிய விண்ணப்பத்தைத் தொடர்ந்து எழுதுவது போல் ஒரு கடிதம் யாரித்தார்கள். அதில் மூப்புடைமையை நிர்வாகம் அறுதியிட வேண்டும், திறமை, தகுதியுடன் தேர்வு செய்தல் அவசியம் என்றும், பல்கலைக்கழக விதிப்படி ஆசிரியர் குழுவில் பேராசிரியர் நிலையில் இருவர் இருத்தல் வேண்டும், என்று குறிப்பிடுகிறார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பதவி உயர்வுக்கு எங்கும் தமிழ், எல்லாம் தமிழ் என்ற கொள்கை நடைமுறையில் இருக்கும் இக்காலத்தில் தமிழ்த்துறைக்கு முன்னுரிமை அளித்து பதவி உயர்வு செய்வது நிர்வாகத்திற்குப் பெருமையாகும் என்பதையும் குறிப்பிட்டு இருக்கப்பட்டதை அறியலாம்.

**இரண்டாவது தடை**

விரிவுரையாளர் நிலையில் இருக்கும் நால்வரில் பேராசிரியருக்கு பி.எஸ்.சி முதல் வகுப்பு, மூன்றாம் நிலை, பி.ஏ.யில் முதல் வகுப்பு, முதல் நிலை, தவிர வித்துவான் பட்டம் எல்.டி பட்டம் இருந்தது. வேலையில் சேர்ந்த அன்று பேராசிரியருக்கு தான் எல்லா தகுதிகளும் இருந்தன. விதிவிலக்கு பெறவேண்டிய நிலை இல்லை. பணியை ஒப்புகொண்ட ஓராண்டிற்குள் தமிழ் எம்.ஏ இரண்டாம் வகுப்பு இரண்டாம் நிலை பெற்றார். பேராசிரியரின் நூலான தமிழ் பயிற்று முறை என்னும் இன்றைய காலகட்டத்தில் ஓர் பெரிய நூல் என்றும் மேலும் மற்றொரு நூலான அறிவியல் பயிற்றும் முறை என்ற நூலும் வெளியிட்டிருந்தார். அதன் அடிப்படையில் இவரின் தகுதிகள், சிறப்புத் தகுதிகளை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். மேலும் வள்ளல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அழகப்பர் நிர்வாகத்திற்குக் கணக்கிற்கு எடுத்துக் கொள்ள முடியாத மிகச்சிறிய தொகை என்றெல்லாம் விவரமாகக் காட்டி மீண்டும் ஒரு கடிதம் அனுப்பியுள்ளார். பதவி உயர்வு கிடைக்கும் தருவாயில் புதுக்கரடி அவதூறு செய்தியாக விடப்பட்டது. இது மீண்டும் சில மாதங்கள் நடவடிக்கையை நிறுத்தி வைத்தது. இதுவே பேராசிரியருக்கு இரண்டாவது பெரிய தடையாக அமைக்கின்றது. பேராசிரியர்கள் அவர்கள் இச்செய்தியினை நினைக்கும்போதே மனம் கூசுகின்றது. கை எழுத மறுக்கின்றது, என்றும் இதைக் கிளப்பிவிட்ட புண்ணியாத்மாக்கள் எப்படி தான் திட்டம் போட்டார்களோ என்பது அந்த விநாயகப் பெருமானுக்கு வெளிச்சமாகிறது என்பதை வெளிப்படையாக கூறியதை பதிவு செய்யப்பட்டுள்ளது.

**விநாயகப்பெருமானின் வெளிச்சம்**

ஒரு நாள் T.V.S மணியன் சா.கணேசனிடம் வந்து அவதூறு செய்தியைசொல்லி பேராசிரியரைப் பற்றி அவதூறு செய்தியை கிழப்பினார். ஆனால் கணேசன் T.V.S மணியன் சொல்லிய செய்தியை நம்பாது இருந்தார். சா. கணேசன் T.V.S மணியனிடம் நீங்கள் கூறும் அவதூறு செய்தி தவறாது என்று கூறிவிட்டு இப்போது பேராசிரியரை சென்று பாருங்கள் அவர் எழுத்துப்பணியில் தீவிரமாக செயல்பட்டு இருப்பதை தவிர, இங்கு வரும்போது இதைச் சொல்லி விசாரிக்கின்றேன். நீ இதைக்பகருத்தில் கொள்ளாதே என்று சொல்லி அனுப்பிவிட்டாராம். பேராசிரியர் அவர்கள் விக்கினங்களைத் தடுக்கும் விநாயகப் பெருமானே சா.கணேசனின் வடிவில் நின்றது பேராசிரியருக்கு துணையாகிறது.

**கணபதி ராயன் – அவனிரு**
**காலைப் பிடித்திடுவோம்**
**குணமுயர்ந் திடவே – விடுதலை**
**கூடி மகிழ்ந்திடவே (நினைவுக் குமிழிகள் - 3, பக். 251)**

என்ற பாடல் நினைவிற்கு வந்தது. மற்றொரு நாள் பேராசிரியர் சா.கணேசனின் இல்லத்திற்கு சென்ற போது சா.கணேசன் அவதூறு கிளப்பிய செய்தி சொன்னதாகவும், அதை நான் நம்பாது T.V.S மணியனை அனுப்பிவிட்டதாகவும் சொன்னார். இதை அறிந்த பேராசிரியர் T.V.S மணியன் இல்லத்திற்கு சென்று அவரை சந்தித்து பேசினார். அப்போது பேராசிரியர் என்னுடைய பெருமை மானம் போகும் வண்ணம் கட்டிவிட்ட கரடியை என் முழுமூச்சு கொண்டு எதிர்ப்பேன், நீதிமன்றம் வரையில் இழுப்பேன் என்றார். பேராசிரியர் T.V.S மணியன் இப்பொழுதே புறப்படுங்கள் இரகசிய விசாரணை, நேருக்கு நேர் விசாரணை எதை வேண்டுமானாலும் மேற்கொள்ளலாம் நீங்கள் கோபமாகப் பேசாதீர்கள், நானும் கோபமாக பேசினால் உண்மை தெளிவாகாது. புறப்படுங்கள் என்று சொல்லிவிட்டு மிதிவண்டியில் திரும்பியதை அறியலாம். பேராசிரியர் கல்லூரி வாசலுக்கு வந்தபோது மாணவர் கூட்டம்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கொடியேற்று விழா நடந்து கொண்டிருந்தது இது குடிமைப் பயிற்சிக்கு ஒருவித ஒத்திகை முதல்வர் தொலைபேசியில் பேசி விட்டு கூட்டத்திற்கு வந்ததை அறிந்தார். உடனே புறப்பட்டு வருவதாகச் சொன்ன மணியன் வரவில்லை. விசாரணை பயன்படாது என்று எண்ணியிருந்தார். பேராசிரியரும் முதல்வரும் நெருங்கிய நண்பர்கள் என்பதால் மணியன் அஞ்சுவார் என்பது பேராசிரியரின் ஊகமாகிறது. இது பற்றிய செய்திகளை முதல்வரும் கேட்கவில்லை, என்று இப்படி ஒரு வாரம் கடந்து சென்றது. இந்தக் காலத்தில் பிரச்சனையை வேறு திசைக்குத் திருப்ப சதி நடந்திருக்க வேண்டும் என்பதைப் பின்னர் நடந்த நிகழ்ச்சியால் அறியமுடிகிறது. இப்படியாக பல நாட்கள் கழிந்த நிலையில் ஒரு நாள் முதல்வர் பேராசிரியரைச் சந்தித்திருந்தார். மிஸ்டர் ரெட்டியார் நிர்வாகத்துடன் (மணியன்) உங்கள் விஷயம் பற்றியக் கலந்தேன். வாய்தவறி எங்காவது இந்த அவதூறு செய்தியைச் சொல்லியிருப்பார் அதற்காக மிகவும் வருந்துகின்றார் என்று ஒரு கடிதம் கொடுத்தால் உடனே பதவி உயர்வு தருவதாகச் சொல்கின்றனர் இதனால் தொந்தரவு ஒன்றும் இராது கடிதம் கொடுக்கலாம் என்றார்.

உதட்டில் வெல்லமும் உள்ளத்தில் கள்ளமும் கொண்ட மனிதர்கள் உலகில் இருக்கும் போது முதல்வரை அவர்களில் ஒருவராக ஏன் கருதக்கூடாது என்று பேராசிரியரின் உள்ளது எண்ணியது. பேராசிரியர் அவர்கள் முதல்வரிடம் நீங்கள் என் அண்ணன் மாதிரி, நீங்களே எழுதி தட்டச்சு செய்து தாருங்கள் நான் கையெழுத்துப்போட்டு தருகிறேன் என்று பேராசிரியர் கூற அவ்வாறே செய்தார்கள். பின்னர் அன்று மாலையில் சா.கணேசனை சந்தித்து நடந்த பேச்சு வார்த்தையை கூட அவரே திடுக்கிட்டுப் போனார். சா.கணேசன் என்பவர் பேராசிரியரிடம் உங்களை மாட்ட வைக்க சதி உருவாகின்றது என்றார் இருவரும் ஒரு பாடத்தை அவருக்கு கற்பிக்க வேண்டுமென எண்ணி, சட்டப்படி நடவடிக்கை எடுத்தும், முதலியார் கொண்டு வரும் கடிதத்தை வாங்கி விடுங்கள் என்று கூறியும் அக்கடிதத்தில் கையெழுத்து போடவேண்டாம் எனவும் அறிவுரை கூறினார். சா.கணேசன். பின்னர் மறுநாள் முதல்வரை சந்தித்து இப்பிரச்சினை குறித்து ஆராய்ந்த போது அவர் முதல்வரை எச்சரித்தும், பலப் பரீட்சைக்கு தயாராகி விட்டதாகவும் ஒரு கடிதத்தை நீட்டினார். அந்த கடிதத்தை வாங்க மறுத்தார். முதல்வர் உடனே சுதி இறங்கி விட்டது. முதல்வர் பேராசிரியரிடம் அழாத குறையாக பொறுத்தருளுமாறு வேண்டினார். உடனே பேராசிரியர் விடைப்பெற்றுக் கொண்டு, திருமால் கோயில்கட்குச் சென்று வழிபட்டார். சூழ்ச்சிக்காரர்கட்கு நல்லறிவு வழங்குமாறு இறைவனிடம் வேண்டியதை காணமுடிகிறது.

பேராசிரியர் அவர்கள் மறுநாள் காலையில் சா.கணேசனை பார்த்து நடந்ததை எடுத்துரைத்தார். அதற்கு சா.கணேசன் பேராசிரியரிடம் இதில் நான் தலையிட முடியாது ஏன்னென்றால் தாளாளருக்கும் எனக்கும் சில கருத்து வேறுபாடு இருக்கின்றது. ஆகையால் நீங்கள் K.V.AL.M இராமநாதன் செட்டியாரை (முன்னாள் தாளாளர்) முதலில் அவரைப் பார்த்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நடந்தவற்றை விவரமாக எடுத்துரையுங்கள் என்றும், இங்கிருந்து நானும் தொலைபேசியில் அவரிடம் விஷயத்தை அவரிடம் கூறுகிறேன் என்றார். இதனால் நல்விளைவு நேரிடும் என்பது சா.கணேசன் நம்பிக்கையுடன் அனுப்புகிறார். ஒருவாரம் கழித்துக் கோட்டையூரில் முன்னாள் தாளாளரை சந்தித்து நடந்தவற்றை விவரமாக எடுத்துச் சொன்னார். பின்னர் எல்லாம் இந்த மணியின் வேலைதான் நான் பார்கிறேன். நீங்கள் கவலைப்படாதீர்கள் என்று கூறி விடை கொடுத்தார். அதன்பிறகு ஒருநாள் C.V.CT.V வேங்கடாசலம் செட்டியார் என்னைக் கானாடுகாத்தானிலுள்ள தன் இல்லத்தில் சந்திக்குமாறு சொல்ல, பேராசிரியர் சா.கணேசனிடம் செட்டியாரை சந்திக்க ஓர் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. அவரை சந்திக்கலாமா? என்று யோசனை கேட்க பார்ப்பதில் தவறு இல்லை என்றும், காரைக்குடிக்கு வரும்போது அவரை விளையாட்டரங்கிலுள்ள விருந்தினர் இல்லத்தில் பாருங்கள் கானாடுகாத்தான் போக வேண்டாம். (சிலவற்றைச்) சொல்லி எச்சிரித்தார். அவற்றை வெளியிட விரும்ப வில்லை என்று அறிவுறுத்தியதை அறியலாம்.

பேராசிரியரிடம் ராய.சொ.ஒருநாள் சங்கத்துக்கு வருமாறு வேண்டினார். அங்கு சென்று பார்த்த போது ரெட்டியார் C.V.CT.V உங்களை கானாடு காத்தான் வந்து தன்னைச் சந்திக்குமாறு சொல்லியனுப்பியிருந்தார். உடனே பேராசிரியர் கணேசனிடம் கூறிவிட்டு துணியுடன் செல்ல தீர்மானித்தார். உடனே கானாடுகாத்தான் சென்று செட்டியார் வீட்டை விசாரித்துக் கொண்டு அவர் இல்லத்தை அடைந்தார். வீட்டிலுள்ள சென்று பார்த்த போது அவர் நீராடுவதற்கு சென்றதை அறிந்த பேராசிரியர் ஒரு ஓரமாக நின்றார். சில நேரத்தில் இருவரும் சந்தித்து பேசினார்கள். செட்டியார் உணவு அருந்த சொல்ல பேராசிரியர் உணவு அருந்தினார். இவ்வாறாக பேசிகொண்டு இருக்கும் போது செட்டியார் நீங்கள் கவலை கொள்ளாதீர்கள் என்று கூறினார். இந்த மணியன் மற்றும் உடன் இருக்கக்கூடியோர்கள் தான் இதையெல்லாம் செய்வது எனக்கு தெரியும். பேராசிரியரிடம் சிறிய அறிவுரை கூறிவிட்டு உங்கள் கடமையைச் செய்து வாருங்கள். தக்க சமயத்தில் பதவி உயர்வு உங்களுக்கு வரும் என்று கூறி உற்சாகம் மூட்டினார். போய் வாருங்கள் என்றும், இவற்றைத் தெளிவுபடுத்தவே ராய.சொ.மூலமும் பிறர் வாயிலாகவும் சொல்லியனுப்பினார் என்று கூறி வழியனுப்பினார் என்பதையும் அறிய முடிகின்றது.

**அறிவியலைத் தமிழில் பயிற்றல் கருத்தரங்கங்கள்**

1958 - ஏப்ரல் திங்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலிருந்து P.U.C வகுப்பிற்குத் தமிழில் அறிவியல் பாடங்களைப் பயிற்றுவிப்பது பற்றிய ஆறுவாரக் கருத்தரங்கினை முன்னின்று நடத்தும்படி ஒரு அழைப்பு வந்தததை காணலாம். அந்த அழைப்பினையொட்டி பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அறிவியல் நூல்களைக் கண்ட துணைவேந்தர் T.M நாராயணசாமி பிள்ளை அவர்கள் பேராசிரியர்களுக்கு இந்த கருத்தரங்கு பொறுப்பினை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நல்கினார். இதன் அடிப்படையில் பேராசிரியர் அவர்களுக்கு ஆறுவார பல்கலைக்கழக விருந்தினன் என்ற கௌரவம் கிடைக்கப் பெற்றார். பேராசிரியரும் பணியே பரமன் வழிபாடு என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டார். மேலும் பேராசிரியர் அவர்களுக்கு சோமலெ பொதுமக்கள் தொடர்பு அதிகாரியாகப் பணியாற்றி வந்ததால் பேராசிரியருக்கு எல்லா வசதிகளையும் அந்த பொதுமக்களே செய்து தந்தார்கள். மேலும் பேராசிரியருக்கு சிறப்பு செய்யும் வகையில் அவ்விடத்தில் சோமலெயின் கட்டளைப்படி சின்னசாமி என்ற பணியாள் நியமிக்கப்பட்டதையும் அறியலாம்.

அறிவியல் துறைகளில் துறைக்கு இரண்டு அல்லது மூன்று ஆசிரியர்கள் வீதம் தேர்ந்தெடுக்கப் பெற்று நாடோறும் முற்பகல் 10 மணிக்கு அறிவியல் அறையொன்றில் கூடினர். நாடோறும் அறிவியல் பல துறைகளிலும் கலைச் சொற்கள் உருவாக்கம் பற்றி விரிவாகக் கலந்தாயப் பெற்றது. ஒவ்வொரு துறையிலும் மாதிரிப் பாடங்கள் நடத்திக் காட்டப் பெற்றன. இத்தகைய சூழலில் மாதிரிப் பாடங்கள் பலர் எடுத்தாலும், அதில் தலைசிறந்து விளங்கியவர்களில் மிகவும் குறிப்பிடத் தக்கவர். திரு.K அரங்கசாமி அய்யங்கார். இவர் எடுத்த பாடம் மிகவும் அற்புதமாக அமைந்திருந்தது 20 ஆண்டுகட்கு மேல் பணியாற்றிய இவர் அன்றுவரை விரிவுரையாளராகவே இருந்தார் என்பது வருந்தத்தக்கதாக இருந்தது. அரங்கசாமி அய்யங்கார் தமிழில் கற்பித்ததன் சிறப்பைத் துணைவேந்தரின் கவனத்திற்குக் கொணர்ந்தார். ஒருநாளாவது அவர் தமிழில் கற்பிப்பதைத் துணைவேந்தர் நேரில் காண வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். அவரும் ஒப்புக்கொண்டார். பேராசிரியர் அவர்கள் திரு. அரங்கசாமி அய்யங்காரிடம் துணைவேந்தர் ஒருநாள் நீங்கள் தமிழில் கற்பிப்பதை நேரில் பார்க்க விழைகின்றார் என்பதையும் தெரிவித்தார். உடனே திரு.அரங்கசாமி அவர்கள் சரி என்று ஒப்புக்கொண்டு, தயார் நிலையில் இருந்தால் ஒருநாள் துணைவேந்தர் எழுந்தருளி அவர் தமிழில் கற்பிப்பதைக் கண்டு வியந்து போனார். பிறகு ஒருநாள் அரங்கசாமி ரீடர் பதவி உயர்வு கிடைத்தது. அப்பதவி உதவி அவருக்கு உற்சாகம் அளித்தது. பின்னர் பேராசிரியர் பதவி உயர்வு பெற்றதை குறிப்பிடப்பட்டது.

பேராசிரியரின் தலைமையில் ஆறுவாரம் பயனுள்ள வகையில் நடைபெற்று வந்த கருத்தரங்கிற்கு பேராசிரியர் துணைவேந்தர் இல்லத்திற்குச் செல்வதும் அவர் பேராசிரியரைக் கருத்தரங்கு நடைபெறும் இடத்தில் இறக்கிவிட செய்வதும் தொடர்ந்து நடைபெற்று வந்தன. இந்தக் காலத்தில் பெருவள நல்லூர் கிருஷ்ணசாமி ரெட்டியார் துணைவேந்தர் இல்லத்தில் சில மாதங்கள் தங்கியிருந்தார். கிருஷ்ணசாமி ரெட்டியாரின் குடும்பத்திற்குப் பிள்ளையவர்கள் மிகவும் கடமைப்பட்டவர் திருச்சி புனித சூசையப்பர் கல்லூரிப் பொருளியல் பேராசிரியர் திரு.இருதயசாமி செட்டியாரும் அடிக்கடி அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வருவதும் துணைவேந்தர் இல்லத்தில் தங்குவதும் வழக்கமாக நடைபெற்று வந்தன. திரு. ரெட்டியார்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேராசிரியரை நன்கு அறிந்தவர். துணைவேந்தரின் செயல் வழவழ என்று விளக்கெண்ணையை ஒத்தது என்பதும் அவருக்கு தெரியும் ஒருநாள் காலை துணைவேந்தரைச் சந்தித்த பேராசிரியர் அவர்கள், இருதயசாமி ரெட்டியார் துணைவேந்தருடன் உரையாடிக் கொண்டிருந்ததை சந்திததை என்பதையும் அறிய முடிகின்றது.

துணைவேந்தர் 1930 முதல் பேராசிரியர் மீது தந்தை போல் பாசமும் அன்பும் உடையவர் 1958 வரை பேராசிரியரின் உழைப்பையும் வளர்ச்சியையும் நன்கு அறிந்தவர் அதனால் அவரிடம் பலவித உணர்ச்சிகளுடன் பேசினாலும் பேராசிரியரைத் தவறாகக் கருத மாட்டார். சினமும் கொள்ள மாட்டார். இதனை அறிந்த பேராசிரியர் அவரிடம் தந்தையிடம் பேசுவதைப் போன்ற உரிமையுடையவனாக இருந்தாக இருதயசாமிரெட்டியார் பேராசிரியரை நன்கு அறிந்தவராவர். அவர் முன்னதாகவே துணைவேந்தரிடம் பேசினார். ஐயாவிடம் பேராசிரியர் அவர்கள் பிஎச்.டி பட்டத்திற்கு ஆய்வு செய்ய விழைகின்றதை அறியலாம். காரைக்குடியில் அந்த வாய்ப்பில்லை பலமுறை முயன்றும் சென்னைப் பல்கலைக்கழக விதிகளும் பேராசிரியரை அனுமதிக்காமல் தடுத்து நிறுத்துகின்றன. ஓர் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் இங்கு பேராசிரியருக்குத் துணைப் பேராசிரியர் வேலை நல்கினால், விடுப்பில் வந்து பணியாற்றி பட்டத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பி விடுகின்றார். காரைக்குடி வேலையைத் துறக்க விரும்பவில்லை என்றார் உடனே துணைவேந்தர், உடன்பாட்டில் விடையளிக்காமல் சுற்றி வளைத்துப் பேசத்தொடங்கினார். பேராசிரியர் அவர்கள் கூட ரூ. 2000 வாங்குகின்றார். அதற்கும் இதற்கும் என்று செலவு செய்த பிறகு ஒன்றும் மிஞ்சமில்லை என்கிறார். துணைவேந்தர் அவர்கள் பேராசிரியரிடம் நீங்கள் இருக்கும் இடத்திலேயே இருங்கள் என்றும், பிறகு வாய்ப்பு வரும் போது கவனிக்கிறேன் என்றால் உடனே பழைய நினைவுகள் எல்லாம் பேராசிரியருக்கு படலம் படலமாக நினைவுக்கு வரத் தொடங்கின என்பதை விளங்கி கொள்ள முடிகிறது.

பேராசிரியர் 1949 - இல் தாங்கள் பொதுப்பணித்துறை ஆணையத்தின் தலைவராக இருந்தபோது பச்சையப்பன் கல்லூரியில் ஒரு Tutor வேலை வாங்கித்தருமாறு கேட்டார். தாங்கள் நன்கு அறிந்த பேராசிரியரின் ஆசிரியப் பெருந்தகை திரு. K. இராமச்சந்திர அய்யருடன் தாங்கள் குடியிருந்த இல்லத்தில்தான் கேட்டார் எம்.ஏ.படிக்கவும், பிஎச்.டிக்கு ஆய்வு செய்யவும் கொண்ட ஆசையால் தான் கேட்டார். பேராசிரியர் அவர்கள் அருமையான வாழ்க்கையை கௌரவமாக வாழ்ந்து கொண்டிருந்தார். அதன்பிறகு எம்.ஏ யை முடித்துக் கொண்ட பிறகு - 1953 என்று நினைக்கின்றார். திரு. நாராயணசாமி பிள்ளையின் உதவியை நாடினார். பின்னர் பலர் பேராசிரியருக்கு அறிவுரைகள் கூறினார்கள். இதன்பிறகு பேராசிரியரும் திரு.வேங்கடாச்சாரியும் 1956-இல் பிஎச்.டி க்கு பதிவு செய்து விண்ணப்பத்தை அனுப்பினார்கள். கல்வி சம்பந்தமான தலைப்புகளை ஆய்வுப் பொருளாகக்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

குறிப்பிட்டிருந்தார்கள். இந்நிலையில் திரு.வேங்கடாச்சாரி மட்டும் அனுமதி பெற்றார். பேராசிரியர் அவர்கள் பல ஏமாற்றங்களைக் கூறி துணை வேந்தரை மீண்டும் தற்காலிக ஏற்பாடு மூன்று ஆண்டுகட்குத் தருமாறு வேண்டினார். அது கூட ஓர் ஆறு நூல்களை எழுதி வெளியீட்டுள்ளார். அந்நூலானவை: **1. அறிவியல் பயிற்றும் முறை, 2. தமிழ் பயிற்றும் முறை, 3. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, 4. அணுவின் ஆக்கமும், 5. காலமும் கவிஞர்களும், 6. மானிட உடல் (தமிழாக்க நூல்).** இவை அனைத்தும் பல்கலைக்கழகத்தில் நிரந்தரமாக பணியை நியமித்துக் கொள்ள ஆசைப்பட்டார் என்பது தெரியவருகிறது. மீண்டும் மீண்டும் துணைவேந்தருக்கு பேராசிரியர் அவர்கள் நிலையை எடுத்துக் கூறியும், அவரது உணர்ச்சியையும் வெளிப்படுத்துகிறார். துணைவேந்தர் அவர்கள் பேராசிரியரை பார்த்து மிஸ்டர் ரெட்டியார், இருங்கள், நான் அலுவலகத்திற்கு போக ஆடையை மாற்றிக் கொண்டு வருகிறேன் என்று கூறியும் தங்களையும் கருத்தரங்கு நடைபெறும் இடத்தில் விட்டு விடுகிறேன் என்று சொல்லி மாடிக்குப் போனார். பின்னர் சிறிது நேரம் கழித்து துணைவேந்தர் கூப்பிட்டதாக ஒருசிறுவன் கூற, பேராசிரியர் துணைவேந்தரை மாடியில் சென்று பார்த்தபோது துணைவேந்தர் நான் வாய்ப்பு கிடைக்கும் போது உங்களை கவனிக்கிறேன் என்று பதிலிறுத்தார். அதற்கு பேராசிரியர் இறைவனது திருவுள்ளம் வேறுவிதமாக இருக்கும் போது எனக்கு எப்படி வேலை கிடைக்கும்? என்ற எண்ணம் கொண்டிருந்ததை அறியலாம்.

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாக தமிழ் செய்யு மாறே (திருமந்திரம், பா. 81)**

என்ற மூலன் மறைமொழியை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை. என்றும் தெய்விகத் திட்டத்தை மனிதன் புரிந்து கொள்ள முடியுமா? இதனால் துணைவேந்தர் பிள்ளை அவர்களின் எண்ணத்தை நிறைவேறாமல் செய்தான். தடுத்தாட் கொள்வதில் இறைவனைத் தவிர யாரால் முடியும் சிறிது நேரத்தில் துணைவேந்தர் கீழிறங்கி அலுவலகக் புறப்பட்டார். பிறிதொரு சமயத்தில் ஒருநாள் திரு.வீ.உலக ஊழியனாரைப் பற்றி அவர்களது பேச்சு எழுந்தது பேராசிரியர் துறையூரில் இருந்தபோதும் காரைக்குடிக்கு சென்ற பிறகும் அவரை எப்படியெல்லாம் பயன்படுத்திக்கொண்டார் என்பதை விளக்கினார். சில மாதங்களில் ஊழியனார் பல்கலைக்கழகத்திற்கு வந்துவிட்டார்.

**தில்லைப் பதியுடையான் சிற்றம்பலந் தன்னில்**
**அல்லும் பகலும்நின் றாடுகின்றான் – எல்லைக்கண்**
**அண்ணா மலைமன் அமைத்த கலைக்கழகம்**
**கண்ணாரக் கண்டு களித்து (கவிமணியின் தமிழ்ப்பணி-ஒரு மதிப்பீடு, பக். 163)**

என்பது கவிமணியின் வாக்கு. இத்தகைய பல்கலைக்கழகத்தில் பணியாற்றும் உலக ஊழியர் போன்ற தமிழ்ச் செல்வர்களின் நாவலில்பயிலும் தமிழையும் அவன் அனுபவிக்க வேண்டும்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பதேயாகும்பேராசிரியர் பல்கலைக்கழகத்தில் தங்கியிருந்த போது வேறொரு நிகழ்ச்சியும் நடைபெற்றது. விருந்தினர் இல்லத்திலேயே உணவு அருந்திகாலம் கழிக்கும் ஒருநாள் விருந்தினர் இல்லத்திலேயே சிற்றுண்டி அருந்த அழைத்தனர். அங்கு தெ.பொ.மீ அவர்களை சந்தித்தார் என்பதையும் தெ.பொ.மீ அவர்கள் பல்கலைக்கழகத்தில் பணியேற்றதை அறிந்து கொண்டார். பேராசிரியர் அவர்கள் பல்கலைக்கழக வளாகத்தில் தங்கியிருந்த ஆறுவார காலத்தில் உணவு விருந்தளித்தனர். அப்போது அவர் அடைந்த சொல்லொன துக்கத்தை பேராசிரியர் அறிவார். இந்தப் பெரும் பிரிவு பற்றிக் கவிமணி அவர்கள் கூட ஓர் இரங்கற்பா பாடியுள்ளார்.

**காரைக்குடியில் பதவி உயர்வு**

ஆறுவார அறிவியல் பயிற்று முறை கருத்தரங்கு முடிவுற்ற நிலையில் பல்கலைக்கழகத்தில் ஏதோ ஒரு பெரிய நிகழ்ச்சி நடந்த்தாகவும் அந்த நிகழ்ச்சியில் சென்னை மாநிலக் கல்வி நிதியமைச்சர் திரு.சி.சுப்பிரமணியம் இருந்ததையும் மேலும், இந்த நிகழ்ச்சியில் வந்திருந்திருந்தையும், மேலும், இந்த நிகழ்ச்சியில் பெருவளநல்லூர் இராஜா சிதம்பரமும் வந்திருந்திருந்தையும், துணைவேந்தர் அமைச்சருக்குப் பகல் விருந்து அளித்தார்.அவ்விருந்தில் கலந்து கொண்ட பேராசிரியரின் காரைக்குடி பதவி உயர்வு இழுபறியாகக் கிடந்ததை இராஜ சிதம்பரம் அவர்களிடம் எடுத்துக் கூறினார். பின்னர், இராஜ சிதம்பரம் பேராசிரியரை சி.சுப்பிரமணியம் அறைக்கு அழைத்துச் சென்றார். அறையில் திரு. சி.சுப்பிரமணியம் பேராசிரியரை பார்த்து நீங்கள் கவலை பட வேண்டாம் இதை நான் கவனத்தில் எடுத்துக் கொள்கிறேன் என்றார். சில நாட்கள் பதவி உயர்வு கிடைத்தது பின்னர் மறுநாள் காலையில் காரைக்குடிக்கு வந்தடைந்ததை அறிய முடிகிறது.

**முடிவுரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் காரைக்குடியில் சிறிது காலம் தங்கி கல்வியியலில் பணிகளை மேற்கொண்டு, அப்பணிகளை சரியான முறையில் திட்டமிட்டு, சீர்படுத்தி, செம்மையாக வளர்ச்சி பாதையில் கொண்டு செலுத்தி அப்பல்கழகத்தின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் ஓர் உந்து சக்தியாக செயல்பட்டதை காணமுடிகிறது. பல பதவி உயர்வினை அடைத்தும், பொது மக்களிடையே ஓர் நற்பெயர் பெற்றும் திகழ்கிறார். மேலும் இவர் பல நூல்களை எழுதியும் சிறப்புடையவராக விளங்கியதை அறியலாம். பேராசிரியர் காரைக்குடி கல்வியியலில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது பேராசிரியர் ஆற்றிய சாதனைகளில் பெரிதும் போற்றுதற்குரிய சாதனையாகும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை பேராசிரியர் அக்கல்லூரியில் பணி செய்து இன்றும் பல்வேறு வளர்ச்சி அடைந்தது குறிப்பிடதக்கதாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்பு நூல்கள்**

[1] மு. சண்முகம்பிள்ளை. பதினெண்கீழ்க்கணக்கு தெளிவுரை (நாலடியார்). முல்லை நிலையம், சென்னை, 1982.

**[2]** ந.சுப்புரெட்டியார். *சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்.* கழக வெளியீடு, திருநெல்வேலி, 2001.

[3] ந. சுப்புரெட்டியார். *நினைவு குமிழிகள் – 1.* பாரி நிலையம், சென்னை, 2001.

[4] ந.சுப்புரெட்டியார். *நினைவு குமிழிகள் – 3.* பாரி நிலையம், சென்னை, 2001.

[5] தமிழ்ப்பிரியன். நாலடியார். அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை, செப் 2016.

[6] நாமக்கல் கவிஞர், (உ.ஆ.) *திருக்குறள் தெளிவுரை*, தென்றல் நிலையம், சிதம்பரம், 2008.

[7] திருமூலர், திருமந்திரம், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள், 2000.

[8] கவிமணியின் தமிழ்ப்பணி-ஒரு மதிப்பீடு, https://tinyurl.com/mpbtm8ru

**References**

[1] M. Shanmugampillai. Pathnen Kelkanangu Thelivurai. Mullai Nilayam, Chennai, 1982.
[2] N.Subbu Reddiar. *Saiva Siddhantham Oor Arimugam.* Kazhagam Veliyeedu, Tirunelveli, 2001.
[3] N.Subbu Reddiar. *Ninaivu Kumizhigal– 1.* Paari Nilayam, Chennai, 2001.
[4] N.Subbu Reddiar. *Ninaivu Kumizhigal – 3.* Paari Nilayam, Chennai, 2001.
[5] Tamil Priyan. *Naladiyar*. Aruna Publications, Chennai, 2016.
[6] Namakkal Kavignar, (Eds) *Thirukkural Thelivurai*, Thenral Nilaiyam, Chidambaram, 2008.
[7] Thirumoolar, Thirumanthiram,Sri Kasimutt, Thiruppanandal.2000.
[8] KavimaniuinTamilpani oru Mathippetu, https://tinyurl.com/mpbtm8ru

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



**E-ISSN: 2581-7140**
**Volume - 5, Special Issue - 1, November 2022**
**UGC CARE Listed Journal**
**Available at: www.ijtlls.com**

# நடமாடும் கலைக்களஞ்சியம் ந.சுப்புரெட்டியாரின் காப்பியப் புலமையும் கழுகுப்பார்வையும்

# Scholarship of Epics and Astounding Vision of the Itinerant Encyclopedia N. Subbu Reddiar

**முனைவர் மு.சுதா,** இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, சிவகங்கை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. M. Sutha,** Associate Professor of Tamil, Alagappa University, Karaikudi, Sivagangai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-6938-7149**
**DOI: 10.5281/zenodo.7256484**

## Abstract

*One of the great learned scholars about Kamban is N. Subbu Reddiar, a best Tamil scholar, writer and author of 135 books nationalized by the Government of Tamil Nadu. He has written a book entitled, 'Kambanil Makkal Kural' (Peoples Voice in Kamban), in which he compiles essays on the uniqueness of Kamban with an eagle's vision. N. Subbu Reddiar, popularly known as Mobile Encyclopedia was titled like that by Rathinavel Pandian who delivers infallible justice like a 'balance scale'. His eleven review articles on Kamban are the subject of this research study. With his excellent scholarship in epics and affection for Kamban, and as a timeless researcher, the morality of research was carried out impeccably by Professor Subbu Reddiar with an eagle's eye. He raised questions logically about Kamban's poetry, explained the answers with evidence and performed research scientifically. He has shown his analytical ability through this book to the research world. N. Subbu Reddiar is also a prolific critic of Kamban's poetic ability, uniqueness, and mastery of classic epics. His research perspective reflected in these eleven articles has been considered as the hypothesis of this study. This descriptive approach outlines the contents of the article. Kamban's poems are portrayed as evidence for criticism in this book revealing the in-depth purpose of Professor Reddiar's study. Hence, this article is intended to help future researchers to know and follow the scholarship, research skills, and Tamil work of N. Subbu Reddiar, who has subtle research knowledge that has led to his reputation as an itinerant encyclopedia.*

**Keywords:** Scholarship, Epics, Astounding Vision, Itinerant Encyclopedia, N. Subbu Reddiar.

## ஆய்வுச்சுருக்கம்

*கம்பனை ஆழ்ந்து கற்றோருள் தமிழக அரசால் நாட்டுடைமையாக்கப்பட்ட 135 நூல்களுக்கு உருவாக்கியவர், சிறந்த தமிழறிஞர், எழுத்தாளர் மற்றும் பெரும்பேராசிரியருமான ந.சுப்புரெட்டியார் ஆவார். பல்துறை அறிவும் புலமையும் கொண்டதுடன் தம் ஆய்வு விருப்பத்தினால் கழுகுப்பார்வையின் வழிக் கம்பனை அவர்தம் தனித்தன்மைகளை அவர் கவிகள் கொண்டு ஆழ்ந்து நோக்கிக் கட்டுரைகளாகத் தொகுத்து கம்பனில் மக்கள் குரல் என்ற நூலாகத் தந்துள்ளார். சமன்செய்து சீர்தூக்கும்கோல் போல் வழுவா நீதி வழங்கும் இரத்தினவேல் பாண்டியரால் நுட்பமாய் ஆழம் காணப்பட்டு நடமாடும் கலைக்களஞ்சியம்*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*என்று புகழாரம் பெற்ற ந.சுப்புரெட்டியாரின் கம்பனைப்பற்றிய 11 திறனாய்வுக் கட்டுரைகள் ஆய்வுக்குரிய களமாக ஈண்டு கொள்ளப்படுகிறது. சிறந்த காப்பியப்புலமையும் கம்பனின் மீதுகொண்ட பற்றையும் அதேநேரத்தில் ஆய்வாளராகக் களம் கண்டு ஆய்வு அறம்வழுவாது கழுகுக் கண்கொண்டு கம்பனின் கவிநோக்கி தருக்கமுறையில் வினாக்களை எழுப்பி அதற்கான விடைகளைச் சான்றுடன் விளக்கி அறிவியல் ஆய்வாக நிகழ்த்தி தனது திறனாய்வுத் திறனை இந்நூலின் வழி ஆய்வுலகிற்கு அறிவித்துள்ளார் என்பதனைக் கருதுகோளாகக் கொண்டும் அவ்வாய்வுச் சிந்தனைகளை எடுத்துரைப்பதை நோக்கமாகக் கொண்டும் விளக்கவியல் திறனாய்வாக இவ்வாய்வுக் கட்டுரை அமைந்துள்ளது. நடமாடும் கலைக்களஞ்சியம் என்று புகழப்படுவதற்குக் காரணமாகிய நுண்மாண் நுழைபுலம் கொண்ட பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் புலமையை, ஆய்வுத்திறனைத், தமிழ்ப்பணியினை எதிர்கால ஆய்வாளர்கள் அறிந்து பின்பற்றத் துணைநிற்கும் வகையில் இவ்வாய்வுக்கட்டுரை அமைகின்றது.*

**குறிப்புச்சொற்கள்:** நடமாடும் கலைக்களஞ்சியம், ந.சுப்புரெட்டியார், காப்பியப் புலமை, கழுகுப் பார்வை.

**முன்னுரை**

கம்பனிடத்தும் அவரது காப்பியத்தின் மீதும் ஆழ்ந்த பற்று கொண்ட **பேரா.ந.சுப்புரெட்டியார்** ஆழங்காற்பட்ட புலமையைப் பயன்படுத்தி **குமரிமலர், ஜனநாயகம், தினமணிக்கதிர், தமிழ்நாடு ஞாயிறு மலர்** போன்ற இதழ்களில் பலகட்டுரைகளைப் படைத்துள்ளார். அவற்றுள் சிலவற்றைத் தொகுத்துக் **கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்** என்ற நூலாகத் தந்ததோடு எஞ்சிய பதினொரு கட்டுரைகளைக் **கம்பனில் மக்கள் குரல்** என்ற நூலாகத் தந்துள்ளார். காரைக்குடியில் (1950-1960) வாழ்ந்தபோது கம்பன் அடிப்பொடியுடன் கொண்ட தோழமையைச் சுட்டும் நன்றி மறவா நல்லெண்ணம் கொண்டவர் ந.சுப்புரெட்டியார். புதுவைக் கம்பன் விழாவில் 1983 இல் வெளியிடப் பெற்ற இந்நூல் பேராசிரியரின் 66 ஆவது அகவை நிறைவு வெளியீடு என்பது குறிக்கத்தக்கது. ந.சுப்புரெட்டியாரின் காப்பியப்புலமை மற்றும் கழுகுப்பார்வை குறித்து பேராசிரியரின் நூலான **கம்பனில் மக்கள் குரல்** கொண்டு ஆய்ந்து எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

**நடமாடும் கலைக்களஞ்சியம்**

கம்பனில் மக்கள் குரலுக்கு உரை எழுதிய மேனாள் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி சு.இரத்தினவேல் பாண்டியன் கூறுகையில்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

> **கம்பனை ஆழ்ந்து கற்றோருள் ஒருவர் டாக்டர் ந.சுப்புரெட்டியார்.பேராசிரியர் பல கோணங்களில் கம்பனைத் துய்த்தமையைக் கட்டுரைகள் பிரதிபலிக்கின்றன. இக்கட்டுரைகள் பேராசிரியரின் நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டுகின்றன. பேராசிரியர் டாக்டர் சுப்புரெட்டியார் பல்துறை அறிஞர். பல துறைகளையும் சிறப்பாகக், குறிப்பாக அறிவியல் துறைகளை முறையாகப் பயின்று அவற்றில் ஆழ்ந்த புலமையை அடைந்தவர். சிறந்த சிந்தனையாளர். பல்வேறு துறைகளில் படைப்பிலக்கியங்களை வழங்கி தமிழன்னையைப் பெருமிதத்துடன் களிக்கச்செய்து வருகின்றவர். அறிவியல் முறையில் பயிற்சி பெற்ற அறிஞரின் நோக்கும் போக்கும் ஆழமாகவே இருக்கும் என்ற உண்மைக்கு பேராசிரியர் எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறார். இவரை 'நடமாடும் கலைக்களஞ்சியம்' என்று கூறினாலும் மிகைபடக் கூறியதாகாது. (கம்பனில் மக்கள் குரல், ப. v-vii)**

என்று என்று அணிந்துரைக்கிறார். இத்தகைய புகழுக்கு உரித்தானவர் பேராசிரியர் என்பதற்கும் அவரது சீரிய திறனாய்வுச் சிந்தனைக்கும் தருக்கரீதியிலான அறிவியல் ஆய்வுப்பார்வைக்கும் இந்நூலில் உள்ள பதினொரு கட்டுரைகளும் சான்றெனத் திகழ்கின்றன. இக்கட்டுரைகளின் வழி கம்பனின் படைப்பாளுமைத்திறம், புலமை, காப்பியத்தனித்திறன் போன்றனவற்றையும், நுட்பமாய் உணர்ந்து ஆராய்ந்து மாறுபட்ட கோணத்தில் சிந்தித்து விவாதித்து சான்றுகளுடன் நிறுவி விடை தந்திருக்கும் பேராசிரியரின் காப்பியப் புலமையையும் ஆய்வுப்பார்வையையும் எடுத்துரைப்பதே இவ்வாய்வின் **நோக்கமாகின்றது.** ஆய்வுக்குரிய கட்டுரைகளில் ஒன்று ஏரெழுபது பற்றியதாதலால் கம்பராமாயணம் தொடர்பான பத்துக் கட்டுரைகள் மட்டும் **ஆய்வுக்குரிய எல்லையாகின்றன.** இக்கட்டுரைகள் அனைத்தும் திறனாய்வு நோக்குடன் அமைந்துள்ளன என்பதைக் **கருதுகோளாகக்** கொண்ட இவ்வாய்வுக்கட்டுரை அவற்றை **விளக்கவியல் நோக்கில்** அணுகி அக்கருதுகோளை நிறுவியுள்ளது.

**திறனாய்வுத்திறன்**

நூலில் முதலாக மலர்ந்துள்ள ஆய்வுக்கட்டுரை கம்பனில் மக்கள் குரல். இதுவே இந்நூலின் பெயராகவும் அமைக்கப்பட்டுள்ளது. கம்பனின் காப்பியத்தில் கருத்தாழமிக்கச் சிந்தனை காலம் தாண்டியும் வாழும் என்பதால் அதன் முக்கியத்துவம் கருதி நூல் பெயராக இட்டிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. சங்ககாலம் முதல் நடைபெற்றுவந்த கோனாட்சி முறை மாறி கம்பன் குடியாட்சிக்கு வித்திட்டதை ஆய்வின் வழி சான்றுகளுடன் பேராசிரியர் எடுத்துரைத்துள்ளமை இவரது திறனாய்வுச் சிந்தனைக்குச் சிறந்த சான்றாகக் கொள்ளலாம். புராணங்கள் கற்பனை, கதை என்ற கருத்தியல்களுக்கு நடுவில் தழுவி எழுந்த படைப்பாக இருந்தாலும் அதனிலும் மரபுகளையும் புதுமைகளையும் புகுத்திட்டவர் கம்பர். இந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தனித்திறனே தமிழுக்குக் கதி என முன்னதாக வைத்துப் போற்றப்படக் காரணமாயிருந்தது. அவ்வகையில் கம்பனில் மக்கள் குரல் மேம்பட்டு ஒலிக்கும் இடங்களை வரிசைப்படுத்தி எடுத்துரைத்திருக்கும் பாங்கு சிறப்பானது.

**நினைப்பிற்கும் எட்டாத நெடுங்காலமாகவே இவ்வுலககெங்கணுமுள்ள நாடுகளில் கோனாட்சியே நிலவி வந்திருக்கிறது. அரசர்கள் தம் கடமைகளில் தவறியதாலும் குடிமக்கள் அறிவு மிகுந்ததாலும் காலப்போக்கில் மக்களாட்சி என்ற கருத்து முகிழ்த்து நிலைத்துவிட்டது (கம்பனில் மக்கள்குரல், ப. 1)**

எனும் பேராசிரியரின் கருத்து, ஆட்சி மாற்றத்திற்கான காரணத்தையும், அது தோன்றுவதற்கான சூழலையும் எடுத்துரைப்பதோடு இது எக்காலத்திற்கு உரியது என்ற சிந்தனையையும் தருவதாய் உள்ளது. மக்கள் குரலுக்கு மதிப்பு கொடுத்தவன் கம்பன் என்பதை,

**வையம் மன்னுயி ராகவும் மன்னுயிர்**
**உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னன் (கம்ப. அயோ. மந்தரை, பா. 17)**

என்ற பாடலடிகள் மூலம் எடுத்துக்காட்டும் பேராசிரியர் பண்டைக்காலத்தில் அரசனை உயிராகப் போற்றிய மக்களை,

**நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் (புறநானூறு, பா. 186)**

என்று புறநானூறு காட்டுவதைச் சுட்டிக், கம்பனில் மக்கள் உயிராகவும், மன்னன் அவ்வுயிரைத் தாங்கும் உடலாகவும் மாறிவிட்டதை எடுத்துரைக்கும் எளிமை சிறப்பானது.

**மக்களுக்காக மக்களால் மக்களாட்சி என்று அமெரிக்க நாட்டு ஆப்ரஹாம்லிங்கன் குரல் எழுப்புவதற்கு முன்னரே கம்பநாடன் மக்களே நாட்டின் உயிர்நாடி என்ற குரலை எழுப்பிவிட்டான். (கம்பனில் மக்கள் குரல், ப. 3)**

என்று கம்பனின் தொலை நோக்குச் சிந்தனையை அன்றைய நடப்பியலோடு இணைத்து விளக்கியிருக்கும் பாங்கு சிறந்த ஆய்வுப் பார்வையைச் சுட்டுகிறது. தயரதன் நாடுபுரத்தலைக் கூறுமிடத்தில்,

**வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்**
**செய்யெனக் காத்தினி(து) அரசு செய்கின்றான் (கம்ப. பால. அரசியல், பா. 4)**

என்று உலகம் முழுவதையும் தயரதன் காத்து வருவதையும், அவனுடைய மகனாகிய இராமனை "என் மகன் என்று எண்ணவேண்டடா. நம்மகன் எனக் கருதி பாதுகாத்து வாருங்கள்" என்று மக்களிடமும் கூறுவது கொண்டு மக்கள் குரலுக்கு கம்பன் தரும் மதிப்பைப் பேராசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.

இராமனுக்குத் துன்பம் நேர்ந்த வேளையில் மக்கள் எழுப்பிய குரலையும், இராமனை அழைத்து வருவதற்காகப் பரதன் காட்டிற்கு சென்ற பொழுது அயோத்தி மக்கள் அனைவரும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பரதனுடன் சென்றமையையும் சுட்டி, ஆட்சியில் மக்களின் பங்களிப்பு இருந்தமையை கம்பன் கவிவழி பேராசிரியர் எடுத்துக்காட்டியுள்ளார். மிதிலையில் சீதை – இராமன் வில் வளைத்தல் நிகழ்ச்சியிலும் இது நடக்குமோ? நடக்காதோ? என்று மக்கள் பலப்பல கூறுவிதமாக தங்கள் கருத்தைப் பதிவு செய்வதை எடுத்துக்காட்டிய பேராசிரியர் அங்கும் மக்கள் குரல் ஒலிப்பதை எடுத்துக்காட்டுகிறார். இதுபோல கிட்கிந்தையில் மக்கள் கருத்திற்கிசைந்தே வானர ஆட்சியும் நடைபெற்று வந்தது என்பதற்கு, சுக்ரிவனுக்கு முடி அணிவித்து இராமன் அரச நீதிகளைப் புகட்டுகையில், **மக்கள் குரலுக்கு மதிப்பு கொடுக்க வேண்டும். மக்கள் கொதித்தெழுந்தால் பெரிய வல்லரசும் கவிழ்ந்துவிடும் (கம்பனில் மக்கள் குரல், பக். 15)** எனக் கூறுவதனை எடுத்துரைத்து கவிஞன் இராமன் மூலமாகப் பேசுகின்றான் என்று கம்பரின் மக்களாட்சி சிந்தனையை விளக்கிச் செல்லும் பாங்கு போற்றுதற்குரியது. மக்களைத் தாய்போல் பேண வேண்டும் என்பது மக்களாட்சியின் தத்துவம். அது கம்பனின் நிறைந்து கிடப்பதற்கு சான்று பல அடுக்கிச் செல்கிறார் பேராசிரியர்.

நிறைவாக இலங்கை அரசிலும் மக்கள் குரலுக்கு உள்ள மதிப்பினையும் விளக்கியுரைக்கின்றார். இங்கு இரண்டு விதமான மக்கள் குரல் எழும்புவதைச் சுட்டுகிறார்.

**என்னையே இராவணன் தங்கை என்றபின்**
**அன்னையே என்றடி வணங்கல் அன்றியே**
**உன்னவே யொண்ணுமோ ஒருவ ரால்இவள்**
**தன்னையே அரித்தனள் தான்என் றார்சிலர் (கம்ப. ஆரணிய. சூர்ப்., பா. 30)**

என்று சூர்ப்பனகைக்கு யாராவது தீங்கிழைத்திருக்கக் கூடும் அல்லது அவளாகவே அரிந்து கொண்டிருக்கக் கூடும் என்று கூறி அவளது செய்கையில் ஏதோ சூழ்ச்சி இருப்பதாக ஐயுறும் நடுவு நிலைமையை, இரு பக்கமாகச் சிந்திக்கும் மக்கள் குரல் இலங்கை அரசில் காணப்படுவதை பேராசிரியர் விளக்கியிருக்கும் திறன் தனித்த ஆய்வுக்குரியது. ஆனால் சூர்ப்பனகையைப் பற்றிப் பேசும் மக்கள் இராவணனின் செயல் குறித்துப் பேசாது அமைத்தக் காரணம்,

> **இலங்கையில் உள்ள மந்திரசபை அரசனுக்கிணங்க இயங்கியது என்றும், இராவணனின் ஆணைக்கும் ஆற்றலுக்கும் பயந்து ஒருசால் மக்கள் குரல் எழுப்புவதற்கே அஞ்சி வாழ்ந்தனரோ என்றும் கூட ஊகிக்க வேண்டியுள்ளது. (கம்பனில் மக்கள் குரல், ப. 21)**

என்றும் கூறிய பேராசிரியர்,

> **கம்பன் காவியத்தின் பல்வேறு சந்தர்ப்பங்களில் மக்கள் குரலைக் கண்டோம். கோனாட்சியாக இருப்பினும் குடியாட்சி கருத்துகளுக்கு கம்பன் முதலிடம் கொடுத்துள்ளான் மக்கள் குரலுக்கு மன்னர்கள் மதிப்பு கொடுத்தமையால் கோனாட்சி**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**மிகச் சிறப்பாக நடைபெற்று வந்தது. ஆளுவது முக்கியமல்ல ஆட்சி முறையே முக்கியம் என்ற மக்களின் குரலை கம்பனின் காவியத்தில் காணமுடிகின்றது.**

**(கம்பனில் மக்கள் குரல், பக். 21-22)**

என்று நிறைவு செய்யும் பேராசிரியரின் ஆய்வுமுடிவு கம்பனின் காணப்படும் மக்கள் குரலாக மட்டும் காணாமல், கம்பன் குரலாகவும், எண்ணிக்காணத்தக்க வகையில் இவரது ஆய்வுத்தேடல் மேலாய்வுக் களம் வகுத்துத் தந்துள்ளது என்றே கூறத்தோன்றுகிறது. மக்களாட்சி வேண்டும் கம்பன் குரலோ என்று எண்ணத்தக்க வகையில் அமைந்துள்ள இவரது ஆய்வுத்தேடல் பின்வரும் ஆய்வுகளுக்கு வழிகாட்டுகிறது.

**கம்பனின் படைப்பாளுமை குறித்த பரந்த பார்வை**

'தம்பியுடையான் பகைக்கஞ்சான்' என்பது கம்பன் கவி. இதற்கான சான்றுகளைக் கம்பன் கவிவழி காட்டும் கட்டுரை 'காவியத்தம்பி' என்ற இரண்டாம் கட்டுரையாகும். அதில் காவியத்தம்பி என்றழைப்பதற்கான தக்கத் தகுதிப்பாடு உடையவன் இலக்குவன் என்பதற்கானச் சான்றுகளை எடுத்துக்காட்டி விசாலப்பார்வையுடன் விரித்துரைத்துள்ளார் பேராசிரியர். இலக்குவனின் பன்முகத் தன்மையை கட்டுரை முழுவதிலும் விரித்துக் கூறிய பேராசிரியர் 'அன்பும் பக்தியும், சாமார்த்தியமும், தியாக உள்ளமும் உடையவன் இலக்குவன் என்றும், இவ்வுலகம் அழியும் வரை தம்பி என்பதற்கு இலக்கணம் தருபவனாய் அவன் ஒருவனே நிற்பான் என்றும் அறுதியிட்டு உரைக்கிறார். இத்தகைய தெளிவான முடிவைத் தருவதற்கு காப்பியம் முழுவதிலும் வருகின்ற அண்ணன், தம்பி உறவுகளை எடுத்துரைத்து இலக்குவன் எவ்வண்ணம் பிறரிடமிருந்து காவியத் தம்பியாய் உயர்ந்து நிற்கின்றான் என்பதற்குச் சான்றுபல காட்டி நிறுவியிருப்பது பேராசிரியரின் ஆய்வுத்திறனுக்குச் சிறந்ததொரு சான்றாகும்.

இராமனுக்குத் தம்பியர் – பலர். கூடப் பிறந்தோர் மூவர். பிறப்புத் தளையில்லாது போயினும் அதைவிட வலிமையாக அன்புத் தளையால் பிணிக்கப்பட்டு கூடச் சேர்ந்தோர் மூவர் என்பதைக்,

**குகனொடும் ஐவர் ஆனோம்**
**முன்புபின் குன்று சூழ்வான்**
**மகனொடும் அறுவர் ஆனோம்**
**எம்முழை அன்பின் வந்த**
**அகன்அமர் காதல் ஐயய!**
**நின்னோடும் எழுவர் ஆனேம்!**
**புகல்அரும் கானம் தந்து**
**புதல்வரால் பொழிந்தான் நுந்தை! (கம்ப. அயோ. குகப்., பா. 35)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எனக் கம்பர் கவிவழி எடுத்துரைத்தப் பேராசிரியர், இத்தம்பிகளால் இராமன் பெற்ற நன்மைகள் காப்பியம் முழுவதிலும் காணப்படுவதை எடுத்துக்காட்டி, அவற்றிலும் **இலக்குவன் தம்பியாக அமைந்த காரணத்தினால்தான் இராமன் எவ்விதப் பகைக்கும் அஞ்சவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது என்றும் நிறுவுகிறார். (காவியத்தம்பி, ப. 26)** இதற்கு,

**யான் என்றும் முடி(வு) இலாத**
**துன்பத்துக்(கு) ஏதுவானேன்**
**அரசன் அது துடைக்க நின்றான் (கம்ப. அயோ. குகப்., பா. 43)**

என இராமன் பாராட்டுவதாக அமையும் கம்பன் கவியைச் சான்றாய் எடுத்துக்காட்டி நிறுவுகின்றார். இராவணனின் புதல்வன் இந்திரசித்தினை வீழ்த்திய இலக்குவனைக் கண்டு 'தம்பி உடையான் பகைக்கு அஞ்சான்' என்பதற்கு நீயே சான்றானாய் என்று இராமன் கூறுவதாக அமைத்ததன் வழி கம்பர் காவியத் தம்பியாக இலக்குவனைப் படைத்திருப்பதை எடுத்துக்காட்டுகிறார். "இந்திரசித்து இறந்ததால் இராவணின் அழிவும் உறுதி, சீதையும் தன்னை அடைந்துவிடுவாள்" என்ற எண்ணம் இராமன் பெற்றதாகக் கூறுவதுவழி இலக்குவனின் மாந்தர் படைப்பைக் காப்பியத்தலைவனே போற்றும் சிறந்ததொரு மாந்தராகப் படைத்திருப்பதைப் பேராசிரியர் தெளிவாகச் சுட்டியிருக்கிறார்.

**நடுவு நிலைமைப்பண்பு**

இலக்குவனின் மாந்தர் படைப்பைக் கம்பர் படைத்திருக்கும் விதம் பற்றிக் கூறிவந்த பேராசிரியரிடம் ஆய்வாளருக்குரிய சிறந்த தகுதியான நடுவு நிலைமையை வெளிப்படுத்துவதையும் போற்றியாக வேண்டும். இலக்குவனின் வீரம் பற்றிக் கூறுகையில், அவ்விடத்து இந்திரசித்தின் வீரத்தையும் பட்டியலிடுகிறார். "இந்திரசித்தின் கடும்போர், அனுமன், சுக்ரீவன், அங்கதன், சாம்பவான், நளன், மயிந்தன், துமிந்தன் என அனைவரும் வீழ்ச்சி அடைய, இலக்குவனும் ஒடுங்கும் வண்ணம் சிம்மசொப்பனாய் விளங்கினான்" என்று கூறும் பேராசிரியர் **இளைய பெருமாளே அவனது ஆற்றலை கண்டு வியந்ததாகக் கூறுகிறார் (காவியத்தம்பி, ப. 31)**. மேலும் சுத்த வீரனான இந்திரசித்தை சுத்த வீரனான இலக்குவன் தானே மதிப்பிட முடியும்? என்ற வினா எழுப்பி இந்திரசித்தின் மறுக்கவியலா வீரத்தையும் விளக்கியிருப்பது ஓர் ஆய்வாளரின் நடுவுநிலைமைப் பண்பைக்காட்டுகிறது.

**தகுந்த மேற்கோள் காட்டுதலும் இலக்கியப் புலமையும்**

**ஒரு நூலிலிருந்து ஒரு செய்தியை எடுத்தாளும்போது அதனை முறையாகக் குறிப்பிடுதல் ஆய்வுத்துறைக்குரிய தலையாய அறமாகும். ஒரு நூலின் அடிகளை, வரிகளை, கருத்தைச், சாரத்தை எடுத்து மொழியும்போது அவற்றை மேற்கோள் குறிகள் இட்டுக்காட்டி இறுதியில் எண் கொடுத்து அடிக்குறிப்பில் அந்நூற்பகுதி குறித்த**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**விவரங்களைக் காட்ட வேண்டும். ஆராய்ச்சியில் உழைப்பையும் தரத்தையும் காட்டும் பகுதியிது. (ஆய்வியல்நெறிகள், பக். 220-221)**

இவ்வாறான முறையான ஆய்வு நெறிமுறைகள் பேராசியரிடத்துக் காணப்படுவது நோக்கத்தக்கது. கம்பன் காப்பியத்தின் சிறப்பைக் கூறுகையில் அதற்கு அரணாகப் பேராசிரியர் எடுத்துக்காட்டும் பிறநூல் பதிவுகள் அவரின் பிற இலக்கியப் புலமையையும், தகுந்த மேற்கோளைச் சுட்டும் ஆய்வுத் திறனையும் சுட்டுகின்றது. குறிப்பாக அம்மேற்கோள் எடுக்கப்பட்ட நூல் குறித்த சான்றெண் விளக்கங்கள் ஆய்வு நெறிமுறைகளைப் பின்பற்றும் அவரது ஆய்வுப் பண்பைச் சுட்டுகின்றது.

**தருக்க ரீதியிலான ஆய்வுப் பார்வை**

ஆய்விற்குரிய அடிப்படை மாற்றி யோசித்தலாகும். இவ்வாறு மாற்றியோசிக்கும் போது வினா எழுப்பி அதற்கான விடைகளைத் தக்கச்சான்றுகளுடன் எடுத்துக்காட்டி படைப்பாளுமையைச், சமூகத்திற்குப் படைப்பாளன் கூறவரும் கருத்துகளை விளக்கியுரைப்பதும் ஒரு சிறந்த ஆய்வுப்பார்வை. அதனைப் பேராசிரியரிடம் காணமுடிகின்றது. “அறங்கடந்தவர் செயல்” எனும் கட்டுரையில் கூறுகையில்,

**இராமயணக்கதையில் வரும் பாத்திரங்கள் பல உண்மைப் பொருள்களை விளக்குவனவாக உள்ளன. அவை அன்றாடவாழ்க்கைக்கு உதவுவன. அவ்வகையில் இராவணனது வரலாறும் படிப்பினைத் தருவது. (அறங்கடந்தவர் செயல், ப. 37)**

என்று கம்பனின் படைப்பு நோக்கத்தை, மாந்தர் படைப்பு ஆளுமையை எடுத்துக்காட்டும் பேராசிரியர் அதற்கு பல சான்றுகளையும் விரித்துரைக்கிறார்.

இராவணன் தோள்பலம், வரபலம், குலப்புகழ் பேசுபவன், நான்முகனின் சொந்தப்பேரன், கரையிலாக் கல்வியை முற்றுணர்ந்தவன், வேதம், சாத்திரம் பயின்றவன், படைபலமிக்கவன், பலமிக்கத்தம்பி கும்பக்கர்ணனையும், மகாவீரனான மகன் இந்திரசித்தையும் பெற்றவன் என்பதை எடுத்துரைப்பதோடு,

**தனயன் நான்முகன் தகைமகன்**
**சிறுவதற்குத் தவத்தால்**
**முனைவர் கோன்வரம் முக்கணான்**
**வரத்தொடும் உயர்ந்தான் (கம்ப. இலங்கை. கேள்வி, பா. 52)**

என அரிய தவமிருந்து நான்முகனிடமும் சிவபெருமானிடமும் பல வரங்களைப் பெற்றவன் எனக் கம்பன் விரிவாகக் காட்டும் இராவணனின் பலவகைச் சிறப்புகளையும், எடுத்துக்காட்டிய பேராசிரியர் இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த இராவணன் அழியக் காரணம் என்ன? சாதாரண மனிதர்களையும், வானரர்களையும் எதிர்த்து நிற்கக்கூடமுடியாமல் போனதன் காரணம் என்ன? என்ற வினாக்களை எழுப்பி பராக்கிரமங்கள் பர படைத்திருந்தும் காமம்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஒன்று நெஞ்சினுள் நுழைந்து அவை அனைத்தையும் அழித்து விடுகிறது என்ற உண்மையைச் சான்றுகாட்டி நிறுவியுள்ளார். "அறநெறிப்படி நில்லாது மனம் போனபடியெல்லாம் போவோர்களின் நிலை இப்படித்தான் முடியும், மேன்மைகள் நிறைந்திருந்தாலும் ஒரு குற்றம் அவனைச் சிறியோனாக்கும் என்றும், ஆசையை அடக்கும் போது அமரனாகி நின்றோம், ஆசைக்கு உட்படும் போது அசுரன் ஆகின்றோம்" என்ற உண்மைக்கு கட்டியம் கூறும் இவை மக்களுக்கான **இராவணத் தத்துவம்** என்றுணர்த்தும் படைப்பாளனின் சமூக நோக்கைப் புலப்படுத்துகிறார். கம்பனின் மாந்தர்படைப்புகள் தத்துவார்த்தமானது, சமூக மேம்படுத்துதலுக்கானது என்பதனை இக்கட்டுரை வாயிலாக ஆசிரியர் திறனாய்வு செய்து எடுத்துரைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**திறனாய்வு முறைகள் பயன்பாடு**

> **படைப்புகளை ஆராயும் போது படைப்பாளனையும் ஆராய்வது வரலாற்று முறைத்திறனாய்வு எனப்படும். இம்முறையில் ஆசிரியர் வரலாற்றினை அறிதலும் ஒரு பார்வையாகும். இதனை வாழ்க்கை வரலாற்று வழித் திறனாய்வு என்று அழைப்பர். படைப்பாளியின் வாழ்க்கை வரலாற்றைக் கொண்டு அவன் படைப்புகளை ஆராய்வதும் படைப்புகளைக் கொண்டு அவன் வாழ்க்கை வரலாற்றினை அறியமுயல்வதும் இவ்வகையில் அடங்கும். ஆசிரியன் தன் அநுபவங்களை நூலில் வெளிப்படுத்தக் கூடுமாதலால் அவன் வாழ்க்கை வரலாற்றினை அறிந்த பின்பு அவன் படைப்புகளைத் திறனாய்வு செய்தல் சில உண்மைகளை உணர வழி செய்யும்" என்று கூறுவர் (திறனாய்வுக்கோட்பாடு, ப. 24).**

இவ்வாய்வு முறையில் கம்பனைத் திறனாய்ந்திருப்பதைப் பேராசிரியரின் "கம்பனில் குழந்தையின்பம்" என்ற கட்டுரையில் காணமுடிகின்றது. கவித்திறனால் சக்கரவர்த்தியான கம்பன் தன் காவிய மாளிகையில் குழந்தையின்பம் குறித்து ஏன் பேசவில்லை? என வினவி, குழந்தை குறித்துப் பாடவேண்டிய சூழல்கள் காப்பியத்தில் இருந்தும் பாடாது விட்டதன் காரணம் என்ன? இராமன் முதலானோர்க்குப் பெயரிடல், வளர்ச்சி பெறுதல், நடத்தல், பலகலைகளைப் பயில்தல் என ஒவ்வொரு பாடல்களில் கூறப்பட்டுள்ளன. ஆனால் பெற்றோர்க்கும், மற்றோர்க்கும் குழந்தைகளால் ஏற்பட்ட மலர்ச்சியைக் குறிப்பினால் கூடக் கம்பன் காட்டப்படாத காரணம் என்ன? என்று வினவி, குழந்தையின்பத்தைச் சிறிதும் கூறாத கவிஞர் இறப்பைக் குறித்துப் பாடும்போது மட்டும் உள்ளத்தைக் கலங்கவைக்கின்றார் என்று பல சான்றுகளையும் காட்டியுள்ளார். இதற்குத் தயரதன், இராவணன், மண்டோதரி எனப் பலரின் புலம்பல்களைச் சான்று காட்டுவதோடு இவற்றில் கம்பனின் சோகத்துடிப்பு காணப்படுகிறது என்று படைப்பாளனை ஆய்வுக்கண் கொண்டு நோக்குகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இருப்பினும் கம்பனின் இச்சோகத்திற்குக் காரணம் என்ன என்பது புலப்படவில்லை. ஏனென்றால் கம்பனுடைய உண்மையான வரலாறு பற்றிய குறிப்புகள் இல்லை. தனிப்பாடல் திரட்டு, தமிழ் நாவலர் சரிதை, புலவர் புராணம் ஆகிய நூல்களில் எந்தக் குறிப்புகளும் நம்பத் தகுந்தவையாக இல்லை என்று வலிந்து காரணம் கூறாமல் உண்மையை சுட்டும் பேராசிரியர் அம்பிகாவதி, அமராவதி வரலாறைச் சுட்டி இதன் காரணமாகவும் சோகம் மேலிட்டிருக்கலாம் என்ற ஊகத்தினையும் ஆய்வுலகிற்குத் தருகிறார். தக்கச் சான்றுகளுடன் கம்பன் வரலாறு எழுதப்படவேண்டும் என்று **மேலாய்வுக்களம்** தரும் பேராசிரியர் இக்கட்டுரையை முந்நூற்களில் படைப்பு நோக்கில் வரலாற்று ஆய்வை மேற்கொண்டு காரண காரியத்துடன் உருவாக்கியிருக்கிறார். இது இவரது ஆய்வுத் தேடலைச் சுட்டுகிறது. மேலும் தன் ஆய்வு தொடர்பான பிற நூல்கள் பற்றிய புலமையைக் குறிப்பாகக் குழந்தையின்பம் பற்றிப் பேசும்போது,

**குழல்இனிது யாழ்இனிது என்பர் தம் மக்கள்**
**மழலைச் சொல் கேளாதவர் (குறள். 66)**

என்றுரைத்த வள்ளுவர், **கன்னத்தில் முத்தமிட்டால் உள்ளம் கள்வெறி கொள்ளுதடி (பாரதியார்கவிதைகள், ப. 243)** என்று பாடிய பாரதி, பிள்ளைத்தமிழ், பன்னிருபாட்டியல், **தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல் (தண்டியலங்காரம், நூ. 8)** எனும் தண்டியலங்காரம் மற்றும் பிற இலக்கண, இலக்கியங்களை விரிவாக எடுத்துக்காட்டி விளக்கியுரைத்திருப்பது முன்னாய்வுகள் பற்றிய இவரது விரிவான பார்வையைச் சுட்டுகிறது.

**காப்பியப் புலமையும் கழுகுப் பார்வையும்**

பேராசிரியர் கம்பனின் காப்பியத்தில் ஆழ்ந்த புலமை உடையவர் என்பதற்கு, அவர் எழுதிய இக்கட்டுரைகளில் காணலாகும் காப்பிய நிகழ்வுகளின் தொகுப்பும், மாந்தர் படைப்பு குறித்த ஆராய்ச்சிகளும் சான்றாகின்றன. பாலகாண்டத்திய நிகழ்வினையும், யுத்தகாண்ட நிகழ்வினையும் தொடர்புபடுத்துவது எடுத்துக்கொண்ட ஆய்வுத் தலைப்பிற்கான சான்றுகளைக் காப்பியம் முழுவதிலும் கண்டு வரிசைப்படுத்தித் தருவது எனப் பேராசிரியரின் கழுகுப் பார்வை கட்டுரைகள் முழுவதையும் ஆக்ரமித்துள்ளது. உதாரணமாக "அறிமுகம்" என்னும் கட்டுரையில், இராமனும் சீதையும் ஒன்றுசேரக் காரணமாய் நின்ற மாந்தர்கள் அறிமுகம் பற்றிக் குறிப்பிடுகையில் இராமனும் சீதையும் அறிமுகம் ஆவதை 'வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்' மாறி மாறி ஒருவர் உள்ளத்தில் ஒருவர் படிகின்றனர் என்றும், தொடர்ந்து, விசுவாமித்திரர் – சனகர் அறிமுகம், விசுவாமித்திரர் – சதானந்த முனிவர் அறிமுகம், சதானந்த முனிவர் – இராமன் அறிமுகம், இராமன் – விசுவாமித்திரர் பெருமை அறிதல், சனகன் – சதானநத்த முனிவரிடம் இராமன் அறிமுகம் வேண்டுதல், சதானந்த முனிவர் – வில் - சீதை தோன்றிய வரலாறு - அறிமுகம்" எனப் பல அறிமுகங்களைக் கம்பரின் கவி வழி

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எடுத்துரைக்கும் பேராசிரியர், **இங்ஙனம் கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர் ஒன்று சேர்வதற்கு விதி செய்து வைக்கும் அறிமுகம் வியப்பிற்குரியது. (அறிமுகம், பக். 58-67)** என்று விதியே இந்நிகழ்வுகளுக்குக் காரணம் என்றும், இந்த பல அறிமுகங்கள் வினையே மானிடப் பிறவியில் சீதையும் இராமனும் அறிமுகம் ஆகி ஒன்று சேரக் காரணம் என்று விரித்துரைத்திருப்பது காப்பியத்தின் மீதான பேராசிரியரின் பரந்துபட்ட, நுட்பமான பார்வையைச் சுட்டுவதாய் உள்ளது. மேலும்,

> **பெரியதொரு மாளிகையை அமைக்கும் கலைஞன் அதிலுள்ள ஒவ்வொரு தூணையும் எழில்பெற அமைப்பது போல் இலக்கியக்கலைஞனும் காப்பியத்தில் தோன்றும் சிறிய பாத்திரங்களை மிகவும் நுணுக்கமாகப் படைக்கிறார். பெரிய பாத்திரங்களின் படைப்பில் எத்துணை கவனம் செலுத்துகிறோமோ அத்துணைக் கவனம் சிறிய பாத்திரத்தின் படைப்பிலும் செலுத்தப்படுகிறது. (கம்பன் கலை, ப. 327)**

என்ற கருத்தின்படி கம்பரும் ஒவ்வொரு படைப்பிலும் ஆளுமை செலுத்தித் தனித்துக் காட்டியிருப்பதை அறிமுகக் கட்டுரையின் வழி விரித்துரைத்திருப்பது பேராசிரியர் கம்பர் மீது கொண்ட பற்றையும் கம்பன் படைப்பின் மீதான விரிந்த பார்வையையும் கம்பனின் படைப்பாளுமையையும், மாந்தர் படைப்புத்திறனையும் ஆய்வுலகில் பதிவு செய்கிறது.

கம்பன் இராமன் - சீதையின் இன்பமான தனிவாழ்க்கையைச் சுட்டுவதற்கு நாட்டைவிட்டு கானகம் சென்ற சூழலைப் பயன்படுத்திக் கொண்டமையை வாசித்து உணரும் வண்ணம், கானகச் சூழலை அழகுறக் காட்டி அங்கு இராமனும், சீதையும் மகிழ்ந்து வாழ்ந்த வனப்பையும் வருணனைகளின் வழி எடுத்துரைத்துள்ள கம்பனின் காப்பியச் சூழலுக்கேற்றவாறு, இயன்றவரை தமிழ் மரபு போற்றும் தனித்தன்மையையும், இயற்கைப் பின்புலத்தின் வழி காப்பியப் பொருளை விளக்கிச் செல்லும் திறனையும் பேராசிரியர் மலைக்காட்சி எனும் கட்டுரை சான்று காட்டி நிறுவுகின்றது.

> **இயற்கைப் பின்புலத்தை வெறும் இயற்கையாகக் கண்டு பாடும்போக்கு சங்கச் சான்றோர் செய்யுட்களிலும் இல்லை. இயற்கைப் பின்புலத்தில் மனிதன் எவ்வாறு செயல்படுகின்றான் என்பதை அவை விளக்குகின்றன. கம்பருடைய காப்பியமும் காப்பியப் பொருளை விளக்கும் முறையில் இயற்கைப் பின்புல வருணனைகளைக் கையாளுகிறது. (காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப. 191)**

என்ற அ.பாண்டுரங்கனின் கருத்திற்குப் பேராசிரியரின் இக்கட்டுரை துணைநிற்கிறது.

> **காப்பியத்தின் முக்கியக்கூறுகள் கதை,பாத்திரம், கிளைக்கதை என்பனவாகும். இம்மூன்றிலும் கூட மிக முக்கியமானத் தேவையான ஒன்று பாத்திரப்படைப்பே. பல்வேறுபட்ட பாத்திரங்களே காப்பியத்திற்கு உயிரூட்டுகின்றன. காப்பியத்திற்குப் பொலிவும் உணர்ச்சியும் ஊட்டுவதோடு வாசகருக்குச் சுவையூட்டி மகிழ்ச்சிப்படுத்தப்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**பாத்திரங்களே துணை செய்கின்றன என்பார் இரா. காசிராஜன் (உலகக் காப்பியங்கள், பக். 10-11)**

மாந்தர்கள் காப்பியத்தின் உயிர்நாடி போன்றவர்கள். படைப்பாளனின் நோக்கத்தை எடுத்துரைக்கும் இம்மாந்தர் படைப்பு ஒரு கவிஞனைக் காலம் வென்று வாழச் செய்கின்றது. இத்தகைய படைப்புகளைத் தந்தவன் கம்பன் என்பதனைப் பேராசிரியர் கட்டுரைகள் முழுவதிலும் தந்து சென்றாலும் குறிப்பாகக் "காவியத்தம்பி, விளையும் பயிர்" ஆகிய கட்டுரைகள் தனித்துவம் பெற்றுத் திகழ்கின்றன. இராமன், இலக்குவன் என பலராலும் அறியப்பட்ட முதல் நிலை மாந்தர்கள் மட்டுமன்றி காப்பியத்தில் இடம்பெறும் அனைத்து மாந்தர்களையும் கதைப்போக்கில் சிறப்பித்தமை கம்பனின் தனித்துவம். இதனைப் பேராசிரியர் விளையும் பயிர் கட்டுரையில், இந்திரசித்து என்ற சிறப்புப் பெயர் கொண்ட இலங்கை வேந்தனின் மூத்த மகனாகிய மேகநாதன் மாந்தர் படைப்பினை, விளக்கி எடுத்துரைப்பதிலிருந்து அறியலாம்

பஞ்சவடியில் கண்ட சீதையைக் குறித்துச் சூர்ப்பனகை ஊட்டிய காம மயக்கத்தால் சீதையின் மேல் இராவணன் மனச் சிறையில் வைத்த காதலை இராமன் விட்ட மலரவன் படை துருவித் துருவித் தேடி விடுதலை செய்திருப்பதைக் கம்பநாடன் நமக்குக் காட்டுகிறார். இலங்கைநாதன் இதயமாம் சிறையில் வைத்தக் காதலைத் தேடித்தான் இராவணனுடலை இராமன் அம்பு சல்லடைகளாகத் துளைத்திருக்கிறது என்று எவரும் ஒருகால் நினைக்கலாம் என்று காட்டுவதற்காகவே கம்பன் மண்டோதரியை, **இராமன் அம்பு சானகியை மனச் சிறையில் கரந்த காதல் உள்ளிருக்கும் எனக் கருதித் தடவியதோ? என்று புலம்பிப் பேசும்படி செய்கின்றன (சிறைவைத்தக்காதல், ப. 91)** எனச் சிறை வைத்தக் காதல் வெளிப்பட்ட விதத்தைக் கவிஞன் காட்டியதை விரித்துரைத்து பேராசிரியர் தந்திருப்பது அவரது காப்பியப் புலமைக்கும் கழுகுப் பார்வைக்கும் மற்றுமொரு சான்றாகும்.

**செவிக்குத் தேனென இராகவன்**

**புகழினைத் திருத்தும்**

**கவிக்கு நாயகன் (கம்ப. சுந்தர. ஊர்தேடு., பா. 132)**

எனக் கம்பநாடன் அநுமனைக் குறித்துக் 'கவிநாயகன்' என்ற தலைப்பில் உருவாக்கிய கட்டுரையின் பொருள்குறித்து பேராசிரியர் குறிப்பிடுகையில், **காடுறை வாழ்க்கைக் காலத்தில் இராமனது வரலாற்றில் எழுந்த கோணல்கள் எவை என்பதையும், அவற்றை நிமிர்த்தின அநுமனின் திறத்தினையும் (கவிநாயகன், ப. 97)** இக்கட்டுரை எடுத்துரைக்கிறது என்ற விளக்கம் தகுந்த தரவுகளுடன் ஆய்வுப் பொருளை நிறுவிய ஆய்வாளரின் தெளிவான, மிடுக்கான கருத்தைப் புலப்படுத்துகிறது. மேலும் சிறந்த திறனாய்வாளருக்கேயுரிய

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நெறிமுறைகளைப் பிறழாது பின்பற்றும் போக்கையும் பேராசிரியரிடத்துக் காணமுடிவது குறிக்கத்தக்கது.

**கோட்பாட்டாய்வுத்திறன்**

உருக்காட்சி என்பது சொற்களினால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒரு வகை உத்தியால், புலன்களின் மூலம் படிப்போரின் எழுச்சிகளையும், அறிவினையும் விரைவாகக் கிளர்ந்தெழச் செய்தல் இயலும். இதனைக் கருதியே கவிதையில் உருக்காட்சி கையாளப் பெறுகின்றது.

> **கம்பராமாயணத்தில் கட்புல உருக்காட்சி, இயக்கப்புல உருக்காட்சி, செவிப்புல உருக்காட்சி, தொகுபுல உருக்காட்சி, நாற்றப்புல உருக்காட்சி, சுவைப்புல உருக்காட்சி, இயக்கப்புல உருக்காட்சி, மரபுநிலை உருக்காட்சி என எண்ணற்ற உருக்காட்சிகள் ஒன்றும் பலவுமாகத் தம்மொரு தாமாகக் கலக்கச் செய்து கவிதைகட்கு கம்பன் மெருகேற்றியுள்ளார். (கம்பனில் உருக்காட்சிகள், ப. 123)**

என்று கூறுவதோடு அவை ஒவ்வொன்றிற்கும் தக்கச் சான்றுகளுடன் விரித்துரைத்திருப்பது, என்னே! ஒரு திறனாய்வுப் பார்வை என வியக்கவைக்கிறது.

"இடத்திற்கேற்ப, செய்யுள் நடைக்கேற்ப, உணர்ச்சிக்கேற்ப, சுவைக்கேற்ப யாதொரு தங்கு தடையின்றி சொற்கள் விரைந்துவந்து உதவும் நிலை கவிதையின் சொல் வளம்" என்பர். இந்த சொல்வளமே பல்வேறு உருக்காட்சிகளைத் தோற்றுவிக்கச் செய்து, படிப்போர் மனதில் கருத்து நிலையில் எழவைக்கும். அத்தகைய சொல் வளம் மிக்கவர் கம்பர் என்பதற்கு அவர் வெளிப்படுத்திய உருக்காட்சிகளை விளக்கி வரைந்திருக்கும் பேராசிரியர் தனது காப்பியப்புலமையை வெளிப்படுத்துவதோடு, ஆய்வுப் பார்வையை தெளிவுப் படுத்தியிருப்பதோடு பின்வரும் ஆய்வாளர்களுக்கு, கம்பனின் காணப்பெறும் உருக்காட்சிகளையெல்லாம் வேறுவிதமாகவும் தொகுத்து ஆராயலாம். இறைமையும் தத்துவமும் – இதில் பல்வேறு பொருள்கள், வான்பொருள்கள் கதிரவன் முதலிய பல இயற்கை – மலை, கடல் முதலாகிய பல்லுயிர்கள் – விலங்கு, பறவை முதலியவை. பொதுநிலை - அமுதம் – நஞ்சு, ஓவியம், ஊழ், கூற்றுவன், அடைமொழிகள், நுண்பொருள்கள், உலகியல் முறைகள், இங்ஙனம் காண்டல் ஒரு பெரிய ஆய்வு நூலாக வடிவடுக்கும். இவையெலாம் கவிதையநுபவத்திற்குப் பெருக்குவதற்குக் கவிஞன் கையாளும் உத்திகளாகும் என்று கூறி **மேலாய்வுக் களத்தையும்** வகுத்துத்தருவது பேராசிரியரின் திறனாய்வுத் திறனைக், காப்பியம் குறித்த பரந்த பார்வையைப் புலப்படுத்துகிறது.

**முடிவுரை**

ஆய்வுக் கட்டுரைக்காக எடுத்துக் கொள்ளப்பட்ட பதினொரு கட்டுரைகளில் ஏரெழுபது பற்றிய ஒன்றைத் தவிர பிற பத்துக் கட்டுரைகளும் கம்பனின் கவித்துவத்தை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நோக்கத்தை, படைப்பாளுமையை தமிழுலகில் தனித்த இடம் பெறுவதற்கான காரணத்தை விரித்து எடுத்துரைக்கின்றன. இதற்கு கம்பனில் ஆழ்ந்த புலமையும் நுணுக்கமான ஆய்வுப் பார்வையும், திறனாய்ந்து அணுகுவதும், பகுத்து எடுத்துரைப்பதும், பிற நூல்களைத் துணைக் கொள்ளுவதும், மாற்றியோசிக்கும் திறனும், நடுவு நிலை தவறாத நற்பண்பும் கொள்வதோடு வரும் ஆய்வுகளுக்கு வழிகாட்டியும், முறையான கருதுகோளும் அமைத்துக் கொண்டு பரந்த பார்வையில் தரவுகளைத் தேடி, விளக்கித் தருவதால் மட்டுமே இயலும். இத்தகைய காவியப் புலமையும், கழுகுப் பார்வையும் கொண்டு இன்றைய பல மேலைநாட்டுக் கோட்பாடுகள் பலவற்றிற்கு அன்றே தோன்றி சான்றாய்த் திகழும் கம்பனின் காப்பியப் புலமையை எடுத்துரைத்து சிறந்த ஆய்வுச் சிந்தனைகளை இலக்கிய உலகிற்குத் தந்த பேரா.ந.சுப்பு ரெட்டியாரை **"நடமாடும் கலைக்களஞ்சியம்"** என்று பாராட்டியுரைத்தது மிகையில்லை.

### குறிப்பு நூல்கள்

[1] ஔவை துரைசாமிப்பிள்ளை. (உ.ஆ) *புறநானூறு (மூலமும் உரையும்) (தொகுதி-1).* பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2009.

[2] ஔவை நடராஜன். *கம்பர் காட்சி.* சேகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு,1980.

கரிகாலன்.ப, *திறனாய்வுக்கோட்பாடு* (தொலைநிலைக்கல்வி இயக்கப் பாடநூல், அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, 2020

[3] கருத்திருமன். பி. ஜி. *கம்பர்.* தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதல் பதிப்பு, 1989.

[4] காசிராஜன்.இரா, *உலகக்காப்பியங்கள்.* தமிழ்ப்பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 1980.

[5] கோபாலகிருஷ்ணமாச்சாரியார். வை. மு, (உ.ஆ) *கம்பராமாயணம்.* உமா பதிப்பகம், இரண்டாவது பதிப்பு, 2011.

[6] சுதா.மு, *வால்மீகி இராமாயணம்-கம்பராமாயணம் (அயோத்தியா காண்டம்)* ஓர் ஒப்பீடு, முனைவர் பட்ட ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழகம், 2001.

[7] சுந்தரமூர்த்தி.இ, (ப.ஆ)) *பாரதியார்கவிதைகள்,* பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, எட்டாம்பதிப்பு, 2009.

[8] சுப்புரெட்டியார்.ந, *கம்பனில்மக்கள்குரல்,* வானதிபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1983.

[9] செயபால்.இரா, (உ.ஆ),*அகநானூறு (மூலமும் உரையும்),* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட். சென்னை, ஐந்தாம்பதிப்பு, 2014.

[10] ஞானசம்பந்தன்.அ.சா, *கம்பன்கலை,* கங்கைபுத்தகநிலையம், சென்னை, முதற்பதிப்பு, 1996

[11] நடராசன்.பி.ரா, (உ.ஆ) *தண்டியலங்காரம்,* சாரதாபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2012.

[12] பரிமேலழகர் (உ.ஆ), *திருக்குறள்,* கங்கைபுத்தகநிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2005.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[13] பாண்டுரங்கன்.அ, *காப்பியநோக்கில் கம்பராமாயணம்*, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, முதல் பதிப்பு, 1989.

[14] பாலசுப்பிரமணியன்.கு.வெ, *ஆராய்ச்சிநெறிகள்*, அனுராதாபப்ளிகேஷன்ஸ், சென்னை, 17 ஆம் பதிப்பு, 2012.

## References

[1] Avai Duraisami Pillai, (Urai). *Purananooru (Moolamum Uraum)(Vol-1),* Poombugar Pathipagam, Chennai, First Edition, 2009.
[2] Avai Nadarajan. *Kampar Kaatchi*, Sekar Pathipagam, Chennai, First Edition, 1980.
[3] Karikalan. P. *Thiranaivukotpadu (Tholai Nilai Kalvi Iyyaka Padanool)*, Alagappa University, Karaikudi, 2020
[4] Karuthiruman. P. G. *Kambar*. Tamil Puthahalayam, Chennai, First Edition, 1989.
[5] Kasirajan. R. *Ulakakappiyangal*. Tamil Pathipagam, Chennai, First Edition, 1980.
[6] Gobalakrisnamachariyar.Vai.Mu, (Urai). *Kambaramayanam*, Uma Pathipagam, Second Edition, 2011.
[7] Sutha. M. *Valmigi Ramayanam-Kamba Ramayanam (Ayothiya Kandam)*- Oor Opidu, Ph.D Thesis, Barathidasan University, 2001.
[8] Sundaramoorthi. E, (Pathi) *Bharathiyar Kavithaigal*, Pavai Publications, Chennai, Eigth Edition, 2009.
[9] Subbu Reddiar.N, *Kambanil Makkal Kural*, Vanathi Pathipagam, Chennai, First Edition, 1983.
[10] Jayabal. R (Urai), *Agananooru (Moolamum Uraium)*, New Century Book House Private Limited, Chennai, Fifth Edition, 2014.
[11] Gnana Sambanthan. A.S, *Kamban Kalai*, Gangai Puthaha Nilayam, Chennai, First Edition, 1996.
[12] Nadarasan. P. R., (Urai), *Thandiyalangaram*, Saratha Pathipagam, Chennai, First Edition, 2012.
[13] Parimelalagar, (Urai). *Thirukural*, Kangai Puthaga Nilayam, Chennai, Fifth Edition, 2005.
[14] Pandurangan. A. *Kappiya Nokkil Kamba Ramayanam*, New Century Book House Private Limited, Chennai, First edition, 1989.
[15] Balasubramaniyan. Ku.Ve. *Araichi Nerigal*, Anuradha Publications, Chennai, 17th Edition, 2012.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம்

## A Scientific Perspective of Tamil Literature by Dr. N. Subbu Reddiar

**முனைவர் ரெ. சுமதி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பார்க்ஸ் கல்லூரி, திருப்பூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. R. Sumathi,** Assistant Professor of Tamil, Park's College, Tirupur, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-1402-6757**
**DOI: 10.5281/zenodo.7295025**

### Abstract

*The Tamil language is a symbol of the entire Tamil society, embodying centuries of literary tradition and various literary forms. Historians have indeed acknowledged that Tamilians have long excelled in civilizations. World-renowned Tamilians excelled not only in civilized life but also in various fields such as religion, philosophy, astronomy, physics, biology, astrology, medicine, mathematics and engineering. During the Tamil language era, Tamilians have grown up acquiring many worldly concepts without any technological advancement. Thiruvalluvar has mentioned that knowledge is a tool to protect. Science is the subtle blooming in the formation of knowledge. Tamil arts and science focus on the inner and outer lives of human beings. Life is an indistinguishable duality. Therefore, life without art is not complete and life without science is not successful. Ancient Tamilians embodied many scientific facts in literature. The Tamil language has played an important role in the history of world languages since ancient times. As a Professor, Dr. N. Subbu Reddiar, a Tamil scholar, has established his scientific knowledge through pieces of evidence in literature such as 'EttuThogai', 'PathuPattu', 'Thirukkural', 'Puranangal' and 'Epics'. His Tamil expertise explores the scientific thinking of Tamilians on world origin referring to the 'Paripadal song'. He beautifully and emphatically articulated the ideology of enriching the goals of human biology into personal life and social life. Thus, the purpose of this article is to explore the meaning of Tamil literature from the scientific point of view of Professor N. Subbu Reddiar.*

**Keywords:** N.Subbu Reddiar, Tamil Literature, Scientific Perspective.

### ஆய்வுச்சுருக்கம்

*தமிழ்மொழி, பல நூற்றாண்டு இலக்கிய பாரம்பரியத்தையும், பல்வேறு வகையான இலக்கிய வடிவங்களையும் தன்னகத்தே கொண்டு இலங்கும் ஒட்டுமொத்த தமிழ்ச் சமுதாயத்தினரது அடையாளமாக விளங்குகின்றது. பன்நெடுங்காலமாய் தமிழர்கள் நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கினர் என்பது வரலாற்று அறிஞர்கள் ஒப்புக்கொண்ட பேருண்மையாகும். உலகம் போற்றும் தமிழர்கள் நாகரிக வாழ்வில் மட்டுமல்ல சமயம், தத்துவம், வானியல், இயற்பியல், உயிரியல், சோதிடவியல், மருத்துவஇயல், கணிதவியல், பொறியியல் போன்ற பல்வேறு துறைகளிலும் அறிவில் சிறந்து விளங்கினர். இன்றைய அறிவியல் வளர்ச்சியின் சிந்தனைச் சுவடுகள் சிறிதும் இடம்பெறாத காலம் சங்ககாலம். ஆயினும் சங்ககாலத் தமிழர்களிடையே இருந்த சிந்தனை இவ்வுலகை வியப்பில் ஆழ்த்துகின்றது. அறிவு அற்றம் காக்கும் கருவி என்று திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அறிவின் நுட்பமான மலர்ச்சியே அறிவியல் ஆகும். பண்டைத் தமிழரின் வாழ்வியல் அறம், பொருள், இன்பத்தை மட்டும் சார்ந்ததன்று. அறிவியலோடு பின்னிப்பிணைந்தவை ஆகும். கலையும் அறிவியலும் ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பவை ஆகும். தமிழ்மொழி காலத்திற்கேற்ப பல இலக்கண இலக்கியங்களைப் பெற்று வளர்ந்து வந்துள்ளமைக்குச் சான்றாகத் தமிழர்கள் வாழ்ந்து வந்துள்ளனர். மனிதனின் அகவாழ்க்கையும் புறவாழ்க்கையும் கலை அறிவியல் வழிப்பட்டது. இரண்டையும் பிரித்தறிய இயலாது. இரண்டறக்கலந்ததுதான் மானுடவாழ்க்கை. ஆதலால் கலையின்றி வாழ்க்கை முழுமையாகாது. அறிவியலின்றி வாழ்க்கை வெற்றியடையாது என்பதை உய்த்துணர்ந்த பண்டைத் தமிழர்கள் இலக்கியங்களில் பல அறிவியல் உண்மைகளைப் பொதிந்து வைத்துள்ளனர். பழங்காலந்தொட்டே உலகமொழி வரலாற்றில் தமிழ்மொழி மிகச் சிறப்பான ஓர் இடத்தை வகிக்கின்றது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பண்டைத்தமிழர்தம் அறிவியல் அறிவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, திருக்குறள், புராணங்கள், காப்பியங்கள் போன்ற இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள சான்றுகள் மூலம் நிலைநாட்டியுள்ளார். உலகத் தோற்றம் குறித்த தமிழரின் அறிவியல் சிந்தனைக்குப் பரிபாடல் பாடலை எடுத்துக்காட்டி ஆராய்ந்துள்ளமை அவர்தம் தமிழ்ப்புலமைக்குச் சான்றளிக்கிறது. மானுட வாழ்வியலின் இலக்கு நெறிகளை தனிமனித வாழ்விலும் சமூக வாழ்வியல் நெறிகளிலும் செழுமைப்படுத்துவதற்கான கருத்தியலை மிக அழகாகவும் அழுத்தமாகவும் ஊன்றியவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். இவ்வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பார்வையில் அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம் என்ற பொருண்மைப்பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** ந. சுப்புரெட்டியார், தமிழ் இலக்கியம், அறிவியல் நோக்கம்.

**முன்னுரை**

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்தகுடி எனும் பெருமை உடையது நம் தமிழினம். ஏறக்குறைய 3000 ஆண்டுகளுக்கு முன்னரே வளமான வாழ்வும் நிலையான பண்பாடும் நிகரில்லா நாகரிகமும் உடையவர்களாக தமிழர்கள் போற்றப்பட்டனர். பல நூற்றாண்டுகள் கடந்த பின்னரும் எத்தனையோ பிற மொழிகள் உலகில் தோன்றி இருந்தாலும் இன்றும் தனித்தன்மை மாறாமல் தனக்கென்று ஒரு உயரிய இடத்தைப் பெற்று பெருமை பெற்று விளங்குகின்றது. அக்கால மன்னர்களும் புலவர்களும் தமிழைப் போற்றி வளர்த்தனர். அறிவியல் சிந்தனை என்பது பண்டைக் காலந்தொட்டே தமிழர்களுடையவாழ்வில் பின்னிப்பிணைந்திருந்தது. அறிவியல் விஞ்ஞானம், வானியல் என்று தனிப்பட்ட பெயர்களில் வழங்கப்படாமல் அக்காலத்தில் மக்கள் வாழ்க்கையோடு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஒன்றிணைந்து அறிவியல் சிந்தனைகளாக இலக்கியங்களில் பிரதிபலித்தன. அன்றைய தமிழ்ப் புலவர்கள் இலக்கியவாதிகள் மட்டுமின்றி நீதி கூறும் அமைச்சர்களாகவும் கலை அழகினால் பாடும் திறன் பெற்றவர்களாகவும் எதிர்காலத்தை துல்லியமாக கணிக்கும் ஜோதிடர்களாகவும் விஞ்ஞானிகளாகவும் மருத்துவர்களாகவும் விளங்கினர் என்பதை மறுக்க இயலாது. பண்டைத் தமிழர்கள் இலக்கியத்தையும் அறிவியலையும் இரு கண்களாகப் போற்றினர். அறிவியலையும் இலக்கியத்தையும் ஒருபோதும் அவர்கள் பிரித்துப்பார்க்கவில்லை. தமிழர்கள் அறிவியல் சிந்தனையிலும் கண்டுபிடிப்பு ஆற்றலிலும் வல்லவர்களாக திகழ்ந்திருக்கிறார்கள். இவ்வகையில் பண்டையத்தமிழர்களின் பெருமைக்கு அணிசேர்க்கும் வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் சீரிய தமிழ்த்தொண்டு அளப்பரியது. பண்டையத்தமிழர் தம் அறிவியல் அறிவை சங்க இலக்கியம், பக்தி இலக்கியம், திருக்குறள், புராணங்கள், காப்பியங்கள் போன்ற இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள சான்றுகள் வாயிலாக புலப்படுத்தி உள்ளார். பேராசிரியரின் பரந்துபட்ட பார்வையில் தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள அறிவியல் சிந்தனைகளைப் பற்றி ஆய்வு செய்யும் முகமாக இக்கட்டுரை அமைகின்றது.

**தமிழரும் அறிவியலும்**

இன்றைய உலகம் தொழில்நுட்பத் துறையில் உயர்ந்த நிலையை அடைந்துள்ளது வானொலி தொலைக்காட்சி போன்ற கண்டுபிடிப்புகள் இன்றைய உலகத்தை மிகவும் சுருக்கி விட்டன. இத்தகைய அறிவியல் கண்டுபிடிப்புகள் தோன்றுவதற்கு முன்பே பழந்தமிழ் இலக்கியங்களை அறிவியல் பார்வையோடு இணைத்து படைத்துள்ளான் என்றால் மிகையாகாது. எதிர்கால சமுதாயம் அறிவியல் துறைகளில் முன்னேற வேண்டும் என்பதற்காக பாரதியார் வானை அளப்போம் கடல் மீனை அளப்போம் சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம் என்கின்றார். இதனால்தான் அறிவியல் என்னும் வாகனம் மீது ஆளும் தமிழை நிறுத்துங்கள் கரிகாலன் தன் பெருமை எல்லாம் கணிப்பொறிகளைப் பொருத்தங்கள் என தமிழை அறிவியலோடு வைத்து வளர்க்கச் சொல்கிறார் வைரமுத்து. உறையூர் முதுகண்ணன் சாத்தனார் என்ற சங்கப் புலவர் பண்டைக்காலத்தில் அறிவியல் அறிஞர்கள் இருந்தனர் என்பதை,

**செஞ்ஞாயிற்றுச் செலவும் அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்**
**பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும் வளி திரிதரு திசையும்**
**வறிது நிலைஇய காயமும் என்றிவை**
**சென்று அளந்து அறிந்தார் போல என்றும்**
**இனைத்து என்போரும் உளரே (புறம்., பா. 30, அடி 1-7)**

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது.

**அறிவியல் விளக்கம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பழமையான மொழி தமிழ். இலக்கிய வளமும் சொல் வளம் நிறைந்த மொழி. வலுவான அடிப்படை கொண்ட இலக்கண பாரம்பரிய மிக்கது. அறிவுத் துறைகள் அனைத்திலும் வல்லுநர்கள் தமிழர்கள். அறிவியல் என்பது வெளிப்படையான கருத்துக்களையும் சோதனை வழியாக வரப்பட்ட கருத்துக்களையும் அனைவராலும் சோதனை நடத்தி ஏற்றுக்கொள்ளவோ புறக்கணிக்கவும் வழிவகுக்கும் கருத்துக்களை விளக்கும் தன்மை கொண்டது. உலகில் இருப்பவற்றை இயற்கை நியதிகளைக் கவனித்தும் சோதித்தும் நிரூபித்தும் பெறும் அறிவு அல்லது மேற்குறிப்பிட்ட அறிவை வகைப்படுத்திய ஒரு துறை (க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப. 58) என்பது க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி தரும் விளக்கமாகும்.

> **சாயின்டிகா என்று அழைக்கப்படும் சயின்ஸ் எனும் சொல்லின் (scire - படித்தல், அறிதல்) பரந்த அளவிலான பொருள் கற்றல் அல்லது அறிவைப் பெறுதல் என்பது ஆகும். ஆங்கிலத்தில் சயின்ஸ் எனும் சொல் இயற்கை அறிவியல் (Natural Science) என்பதன் சுருங்கிய வடிவமே ஆகும். விசன்ஸ் சாப்டன் என்ற அறிஞரின் வரையறைப்படி வரலாறு, சமயம், மொழியியல் ஆகிய அனைத்து திட்டமிட்ட கல்வியும் அறிவியலே ஆகும். எனவே அறிவியல் என்பதை இயற்கைச் செயல்களின் வரிசைப்படுத்தப்பட்ட அறிவு இயற்கை செயல்களுக்கும் பகுத்தறிவுக்கும் உள்ள தொடர்பு என வரையறை செய்யலாம். (தமிழில் அறிவியல் இலக்கியம் சமயம் தத்துவம், ப.17)**

பண்டைத் தமிழர்கள் இலக்கியங்களை வாழ்க்கை அனுபவங்களுடன் கூறிச் செல்வதுடன் அறிவியல் கண்ணோட்டத்தோடும் ஆராய்ந்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

**வானியல் அறிவு**

அணுவில் தொடங்கி அண்டம் வரையிலான அறிவியல் சிந்தனைகளும் சூரியன், சந்திரன், விண்மீன்கள் ஆகியவற்றின் இயக்கங்களும் கடற்பயணங்களில் திசையையும் காலத்தையும் விண்மீன்களின் இருப்பிடத்தைக் கொண்டு தமிழர்கள் கணித்த முறை முதலானவை தமிழர்களின் வானியலாகப் பரிணமித்தன. பழந்தமிழர்கள் வானியல் அறிவு பெற்றவர்களாக வாழ்ந்துள்ளனர். இதனைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் புறநானூறு, பெரும்பாணாற்றுப்படை, போன்ற சங்க இலக்கிய பாடல்கள் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார். விண்ணில் செல்லும் வழியாகிய வட்டத்தை இருபத்தி ஏழு பிரிவுகளாகப் பிரித்து அறிந்து கொள்ளும் அடையாளமாக **எறி கடல் ஏழின் மணல் அளவாக (புறம்., பா. 16)** உள்ள விண்மீன்களில் இருபத்தேழு விண்மீன் தொகுதிகளைக் குறித்து அமைத்துள்ளனர்.

பண்டைய அறிஞர்கள் புறநானூற்றில், **மதிசேர்நாண்மீன்போல (புறம்., பா. 160: 8)** எனவரும் சொற்றொடருக்கு உரையாசிரியர் **திங்களைச் சேர்ந்த நாளாகிய மீனை ஒப்ப** எனக் கூறும் உரையால் இதனை அறியலாம். கோள்களின் இயக்கத்தால் இயற்கை நிகழ்ச்சிகள்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நடைபெறுகின்றன என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வெள்ளி என்பது ஒரு மழைக்கோள். அது தெற்கே விலகியிருப்பது மழை இல்லாமைக்கு அறிகுறி ஆகும். என்பதை,

**வெள்ளி தென்புல துறைய விளைவய**

**பள்ளம் வாடிய பயனில் காலை (புறம்., பா. 388: 1-2)**

என்ற மள்ளனார் பாடல் பகுதி விளக்குகின்றது. இக்கருத்தைப் போன்று வானில் வால்வெள்ளி தோன்றுவதும் சனி மீன் புகைவதும், எரி கொள்ளி வீழ்தலும் தீக்குறிகளாகக் கொள்ளப்பெற்றிருந்தன. **மைம்மீன் புகையினும் (புறம்., பா. 117:1-2)** என்ற பாடல் வரிகளால் அறியலாம். கோள்களின் முரணிய நிலையில் உலகின் பிற பகுதிகளில் மழை இல்லையாயினும் குடகு மலையில் மழை பெய்வதும் காவிரியில் நீர் பெருக்கெடுத்து வருவதும் தப்பா எனக் சிறப்புக் கூறுமிடத்து தமிழர்கள் கோள்களின் நிலைப்பாட்டை பதிவு செய்துள்ளனர். **குள மீனோடு தாட் புகையினும் (புறம்., பா. 315: 34 -35)** மேற்கண்ட குறிப்புகள் வழி பண்டைத் தமிழர்கள் கோள்களின் நிலைகளிலிருந்து மழை முதலியவற்றை அறியும் அறிவு உடையவர்களாக விளங்கினர் என்பதைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எடுத்துரைத்துள்ளார்.

**சோதிடவியல் அறிவு**

சோதிடம் என்பது கோள்களின் இயக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அவற்றினால் ஏற்படும் நன்மை தீமைகளை கணித்துக் கூறுவதாகும். ஒவ்வொரு தனி மனிதனுடைய வாழ்வையும் சோதிடத்தின் மூலம் கணித்துக் கூறுகின்றனர். பழந்தமிழர்கள் ஒரு செயலை செய்யத் தொடங்குவதற்கு முன் நாளும் கோளும் பார்த்து நல்ல நாளைத் தேர்வு செய்து அச் செயலைச் செய்துள்ளனர் என்பதனை, **குடையும் வாளும் நாள் கோள் அன்றி (தொல். புறத்., நூ.13)** இந்நூற்பா மூலம் அறியலாம். சங்கப் புலவர்கள் ஒரு சிலர் கணியர்களாக இருந்தனர். கூடலூர் கிழார் என்ற புலவர் ஒரு கணி. அவர் வானத்தில் ஒரு விண்மீன் தீப்பறக்க காற்றால் பிதிர்ந்து கிளர்ந்து விழுந்தது கண்டார். அதனால் அரசனுக்கு கேடு வரும் என அஞ்சினர். அஞ்சினப்படியே ஏழாம் நாள் சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை விண்ணகம் அடைந்தான். (புறம்., பா. 229)

**இராசி மண்டலம்**

சூரியன் பூமியை சுற்றும் பாதையை ராசி மண்டலம் என்று வழங்குவர். அந்த காலத்தில் பூமியைச் சூரியன் சுற்றுவதாக நம்பிக்கை இருந்து வந்தது. அறிவியல் வரலாற்றாலும் கலிலியோ என்ற அறிவியல் அறிஞரும் இக் கருத்தைக் கொண்டிருந்தார். கலிலியோவிற்கு பின்வந்த கோப்பர்னிகஸ் என்ற அறிவியல் அறிஞர் பூமி சூரியனை சுற்றுகிறது என்று நிறுவினார் என்பதை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் புலப்படுத்தி உள்ளார். பூமியும் சந்திரனும்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சேர்ந்து சூரியனைச் சுற்றுவதையும் சந்திரன் பூமியைச் சுற்றுவதையும் அழகிய உவமையால் விளக்கியுள்ளார்.

**அரச மரத்துப் பிள்ளையார், சூரியன்: பெண்மணி, பூமி: தாயின் முந்தானையைப் பிடித்துக் கொண்டு தாயைச் சுற்றிவரும் மகள் சந்திரன் என்று (தமிழில் அறிவியல் இலக்கியம் சமயம் தத்துவம், ப.113)**

விளக்குவதன் மூலம் அறிவியல் உண்மையை மிக எளிதாக உணர வைத்துள்ளப் பங்கு வெளிப்படுகிறது.

**கால தத்துவம்**

திருக்குறளில் யாக்கை நிலையாமையை விளக்க வந்த வள்ளுவப் பெருந்தகை,

**நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**
**வாளது உணர்வார்ப் பெறின் (குறள். 334)**

இதில் நாளை ஒருவரது வாழ்நாளை இடைவிடாது ஈறும் வாள் என்று உருவகித்துக் காட்டியுள்ளார். இதனைப் பேராசிரியர்

**காலம் என்பது அருவமாய் நிற்கும் ஒரே திரவியம் அதனை அளப்பதற்கு ஒரு கருவியும் இல்லை. ஆதித்தன் முதலிய கருவிகளால் கூறப்பட்டதாய் சொல்லப்படுவது ஒரு வித மயக்க நிலையே ஆகும். படிப்பறியாத பால்காரி சாணியால் கோடிட்டு வழக்கமாய் ஊற்றி வழங்கும் ஒர் அளவிற்கு அறிகுறியாய் நிற்பது போல என்று சொல்லி வைக்கலாம். ஒருவித மயக்கம் என்பது இன்னொரு செயலாலும் விளக்கலாம். எழும்பூர் நிலையத்தில் இருந்து பகல் பன்னிரண்டரை மணிக்குப் புறப்படும் வைகை என்னும் விரைவு வண்டியில் பயணம் செய்யும் ஒருவர் பத்தரை மணிக்கே நிலையத்திற்கு வந்து விட்டால் அவருக்கு இரண்டு மணி நேரம் கழிவது காலம் மெதுவாய்ப் போகிறது போல தோன்றும். அவரே வண்டி கிளம்புவதற்கு பத்து மணித்துளிக்கு முன் வந்து கொண்டிருந்தால் எங்கு வண்டி போய்விடுமோ என்று மனம் பதறும் போது இந்த குறுகிய காலமாகிய பத்து மணித்துளிகள் எனும் காலம் விரைவாய் ஓடுவது போல் தோற்றமளிக்கும். மெதுவாய்ப் போவதும் விரைவாய் ஓடுவதும் மனதில் எழும் மாயத் தோற்றங்களே என்பதை அறிந்து உணர வேண்டியதொன்றாகும். (தமிழில் அறிவியல் இலக்கியம் சமயம் தத்துவம், ப.14)**

என்று நடைமுறையிலுள்ள எளிய சான்றின் மூலம் விளக்கியுள்ளார்.

**அகிலம்**

வெட்ட வெளியும் அதனுள் அடங்கி இருக்கும் அண்டங்கள் யாவும் சேர்ந்ததுதான் அகிலம் ஆகும். இதில் கோடிக்கணக்கான விண்மீன் மண்டலங்களும் அவற்றினின்றும் விடுபட்ட தனித்தனி மண்டலங்களும், வால்மீன்களும், விண்கற்களும் எண்ணற்றவை

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மண்டலத்தை சுற்றிச் சுழன்று கொண்டுள்ளன. பேராசிரியர் அகிலம் இன்னது என்பதை மாணிக்கவாசகர் கருத்தை அடிப்படையாகக் கொண்டு விளக்கியுள்ளார்.

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**

**அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி**

**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன (திருவா. திருவண்டப்பகுதி, அடி 1-4)**

திருமழிசைஆழ்வார், திருமங்கைஆழ்வார், தாயுமானஅடிகள் இவர்களின் வாக்குகளைக் கொண்டு பரம்பொருள் இன்னது என்பதை சுட்டிக்காட்டியுள்ளார்.

**இல்லத்தினுள் காற்றில் மிதந்து கொண்டிருக்கின்ற தூசிகள் போன்றவை பூமி, சந்திரன், சூரியன் முதலிய கோளங்கள். தூசிகள் நமக்கு அற்பமானவைகளாய்த் தோன்றுவன போன்று இறைவனுக்கு அண்ட கோளங்கள் அற்பமானவைகளாகும். இறைவனைப் பற்றிய பேருணர்வு நமக்கு வரும் போது நமது உடலைப்பற்றிய நில உலகைப்பற்றியோ கவலை ஒன்றும் நமக்கு உண்டாகாது. (தமிழில் அறிவியல் இலக்கியம் சமயம் தத்துவம், ப.16)**

மாணிக்கவாசகரின் கருத்துக்கு இணையாக பாரதியார் பாடல்கள் விளக்கமாக அமைந்திருப்பதைப் புலப்படுத்தியுள்ளார். மேலும் இந்த அற்புதக் கருத்தை திரிகூடராசப்பக் கவிராயரின் கூற்று மூலம் சாட்டை துணையின்றியே இத்தனை அண்டங்களையும் பம்பரம்போல் ஆட்டி வைக்கிறான் இறைவன் என்று எடுத்துக்காட்டிய நிலை போற்றத்தக்கது. பேராசிரியர் ஐன்ஸ்டைன் அண்டத்தின் வெளி வளைந்துள்ளது என்றும் அது விரிந்து கொண்டே போகின்றது என்றும் கூறியுள்ளதை எடுத்துக்காட்டி ஐம்பெரும் பூதங்களில் ஆகாயம் மிகப் பெரியது என்றும் அதனுள் தான் ஏனைய பூதங்கள் அடங்கி உள்ளன என்றும் பண்டையோர் கூறும் கருத்துக்கு இது ஏற்புடையது என்று கூறியுள்ளார்.

**ரப்பர் பலூன் மேல் பல புள்ளிகளை வரைந்து அப் பலூனை ஊதினால் .அது பெரிதாக ஆக ஆக அப்புள்ளிகளில் இடையிட்ட தூரமும் அகன்று விடுகின்றது. இதைப் போல விண்வெளியும் விண்மீன் மண்டலங்களை ஏந்திக்கொண்டு அகன்று கொண்டே போகின்றது என்பது இன்றைய அறிவியலார் கண்ட முடிவு என்று உரைக்கின்றார். (தமிழில் அறிவியல் இலக்கியம் சமயம் தத்துவம், ப.21)**

ஊழியின் முடிவில் இந்த அகிலம் முழுவதும் அணுத்தத்துவமாய் மாறும் என்பதையும் மீண்டும் படைப்புக் காலத்தில் அது அண்டங்களாய் வடிவெடுக்கும் என்பதையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். இதனை திருச்சிற்றம்பலவனின் ஆனந்தக் கூத்து அற்புதமாய் விளக்குவதை தாயுமானவர்பாடல் (30) மூலம் விளக்கியுள்ளார். இது போன்ற எண்ணற்ற கருத்துக்கள் தமிழிலக்கியங்களில் பரவலாக இடம் பெற்றுள்ளன என்பதைச் சான்றுகளுடன் நிரூபித்துள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பொறியியல் அறிவு**

பண்டைத் தமிழர்கள் பொறியியல் துறையிலும் வல்லுனர்களாக விளங்கியுள்ளனர். இதற்கு ஏராளமான சான்றுகள் இலக்கியங்களில் பதிவாகியுள்ளன. பேராசிரியர் சீவகசிந்தாமணியில் விசையை ஏற்றிச்சென்ற மயிற்பொறியையும், பெருங்கதையில் குறிப்பிடப்படும் யூகியால் ஏற்றப்பட்ட இந்திர யானையையும், இராமாயணத்தில் இடம்பெற்ற புட்பக விமானமும் பொறியியல் அறிவினால் அமைக்கப்பட்ட சாதனங்களாக விளங்குவதைச் சுட்டிக்காட்டியுள்ளார். அக்கால கட்டிடக் கலைக்கு கம்பராமாயணப் பாடலையும் கரிகாலனால் கட்டப்பட்ட கல்லணையையும் சான்று காட்டியுள்ளார்.

**மருத்துவ அறிவு**

தமிழர்கள் மருத்துவத்தில் சிறந்து விளங்கினார் என்பதை திருக்குறள், கம்பராமாயணம், சீவகசிந்தாமணி போன்ற நூல்கள் வாயிலாக பேராசிரியர் புலப்படுத்தியுள்ளார். திருமூலரும் பதினெட்டுச் சித்தர்களும் சித்த மருத்துவ அறிஞர்களாக விளங்கி இருக்கின்றனர். திருவள்ளுவர் திருக்குறளில் மருத்துவத்திற்கு என்று ஒரு தனி அதிகாரத்தையே ஒதுக்கியுள்ளார். அது தவிர திருக்குறளின் வேறு பகுதிகளிலும் மருத்துவம் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன திருவள்ளுவருக்கு முன்னரே தமிழில் மருத்துவ நூல்கள் இருந்துள்ளன என்பதை திருக்குறளில் காணப்படும். **நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்று (குறள். 941)** என்ற குறட்பா மூலம் அறிய முடிகின்றது. இன்றைய காலத்தில் கண் முதலிய நுட்பமான பகுதிகளில் இரும்புத்தூள் முதலியவை புகுந்து கொண்டால் காந்தத்தை கொண்டு சிகிச்சை செய்கின்றனர். இம்முறை பழங்காலத்தில் இருந்து உள்ளதற்கு பேராசிரியர் கம்பராமாயணப் பாடல் வழி (கம்பரா. யுத்த. மீட்சி.118) தெளிவுபடுத்தியுள்ளார். உம்பர் உலகத்தில் இருந்து வந்த தசரதன் அன்று கைகேயி தன் இதயத்தில் பாய்ச்சின வரம் என்னும் கூரிய வேல் இன்று ராமனைத் தழுவியதனால் அவன் மார்பு ஆகிய காந்தம் அதனை வாங்கி விட்டது என்று கூறுவதன் மூலம் நவீன சிகிச்சை முறையின் குறிப்பைக் காணமுடிகின்றது.

**உயிரியல் அறிவு**

சங்க இலக்கியத்தில் இயற்கையில் காணப்படும் விலங்குகள் பறவைகள் மரம் செடி கொடிகள் முதலிய பல்லுயிர்களைப் பற்றியும் பல அரிய பெரிய நுண்ணிய அறிவியல் செய்திகள் காணப்படுகின்றன. சார்லஸ் டார்வின் என்ற மேலைநாட்டு அறிஞர் உயிர்களின் பரிணாம கொள்கையைக் கண்டுபிடித்து வெளியிட்டார். அவருக்கு பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த மாணிக்கவாசகர்,

**புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்**
**பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய் பேயாய்க்கணங்களாய்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்**

**செல்லா நின்றவித் தாவர சங்கமத்துள்**

**எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன் (திருவா. சிவபு., அடி 26-31)**

என்று கூறியுள்ளார். திருமாலின் பத்து அவதாரங்களைப் படிமலர்ச்சி கொள்கைக்கு எடுத்துக்காட்டாக அறிஞர்கள் கூறியுள்ளதைப் பேராசிரியர் பொருத்திக் காட்டியுள்ளார். புதியது புனையும் ஆற்றல் புராணத்தில் கதைபோல் அடங்கிக் கிடக்கின்றதைப் பலராமனின் பிறப்பு வாயிலாக பேராசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார். இதனை இன்றைய மலட்டுப் பெண் கருத்தரிப்புடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்.

இயற்கை அமைப்பில் இன மாற்றம் நிகழ்வதில்லை என்பதை கபிலரகவல் பாடல் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார். மரபுவழி மாற்றங்களை வள்ளுவரின் வாக்கு புராண குசேலரின் வரலாறு போன்றவற்றால் அறிவியல் ஆதாரங்களுடன் தெளிவாக விளக்கியுள்ளார்.

**கணிதவியல் அறிவு**

கணிதவியல் அறிவியல் துறைகளுக்கு எல்லாம் முன்னோடியாக விளங்குகின்றது. இதன் சிறப்பை உணர்ந்தே திருவள்ளுவர்

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**

**கண்ணென்ப வாழும் உயிர்க்கு. (குறள். 392)**

என்று குறிப்பிட்டுள்ளார். பண்டைத் தமிழர் ஆண்டு திங்கள் மற்றும் நாள் அளவை ஞாயிற்றின் செலவு கோள்களின் இருப்பிடம் திங்களின் இருப்பிடம் ஆகியவற்றை அறிந்து பகுத்துள்ளனர்.

**நின் நாள் திங்கள் அனைய வாக திங்கள்**

**ஆண்டோர் அனைய வாக ஆண்டே**

**ஊழி அனையவாக ஊழி**

**வெள்ள வரம்பினவாக என உள்ளிக்**

**காண்கு வந்திசின் யானே (பதிற்று. பா. 9, 10)**

என்ற பாடல் வரிகளின் மூலம் நாள், திங்கள், ஆண்டு, ஊழி, வெள்ளம் என்ற கால கணக்கீட்டை இலக்கியங்கள் பகுத்துள்ளதை அறிய முடிகிறது. கணித உண்மையையே கற்பனை கலந்த உண்மையாய் அற்புதமாய் கூற வல்ல ஆற்றல் மிக்கது கவிதை என்பதை கம்பராமாயணம் பிங்கலந்தை போன்றவற்றால் எடுத்துக்காட்டி பழந்தமிழர்களின் கணிதவியலில் திறனை போற்றியுள்ளார் பேராசிரியர்.

**வானொலி தொலைக்காட்சி**

வானொலி, தொலைக்காட்சி பற்றிய பழந்தமிழர்களின் சிந்தனையைப் பாவேந்தர் பாரதிதாசன் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் காவியத்தில் கற்பனை வடிவத்தில் வானொலியையும்

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

தொலைக்காட்சியையும் இரு மூலிகையாக காட்சிப்படுத்தி உள்ளதை பேராசிரியர் அவரது கவிதை மூலம் சுட்டிக்காட்டியுள்ளார்.

**ஒன்றைத் தின்றால் இவ்வுலக மக்கள் பேசுவது**
**நன்றாக கேட்கும் மற்றொன்றை வாயில் போட்டால்**
**மண்ணுலக காட்சியெலாம் மற்றிங் கிருந்தபடி**
**கண்ணுக் கெதிரிலே காணலாம் (சஞ்சீவி பர்வதத்தின் சாரல். அடி.43 -47)**

இக்கவிதையில் ஒரு மூலிகை வானொலியையும் மற்றொரு மூலிகை தொலைக்காட்சியையும் குறிப்பிடுவதன் மூலம் கவிஞரிடம் தோன்றிய கற்பனைதான் நாளடைவில் அறிஞர்களின் அறிவியல் பார்வையில் புதுப்புனைவுகளாய் தோற்றம் பெற்றன எனலாம்.

**முடிவுரை**

தமிழ்மொழி பழமைக்கும் பழமையாய் புதுமைக்குப் புதுமையாய் பெற்ற ஒரு உயர்தனிச் செம்மொழியாகும். பழங்காலத்தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்ந்தனர். அழகியல் உணர்வோடும் அறிவியல் சிந்தனையோடும் வாழ்ந்தனர் என்பதற்கு தமிழ் இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. தமிழர்கள் அறிவியலின் அனைத்துத் துறைகளிலும் கால்பதித்து உள்ளனர் என்பதைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் *புறநானூறு, பதிற்றுப்பத்து, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம், சீவக சிந்தாமணி, பெரியபுராணம், திருவாசகம், கபிலரகவல், திருவருட்பா, பெரியபுராணம்* போன்ற பல்வேறு இலக்கியங்கள் வழி சான்று காட்டித் தெளிவுபடுத்தியுள்ளார். இவை அறிவின் வளர்நிலையை ஆழமாக கண்டவர்கள் நம் தமிழர்களே என்பதை உணர்த்தி நிற்கின்றது. தமிழர்களின் வானியல் அறிவு, கணக்கியல் அறிவு, மருத்துவ இயல் அறிவு, பொறியியல் அறிவு போன்றவற்றில் அவர்கள் கொண்டிருந்த அறிவுத்திறம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. உயிர்களின் தோற்றம் பற்றிய மாணிக்கவாசகரின் கருத்து அறிவியலின் முன்னோடிகள் தமிழர்களே என்பதனை தெள்ளத் தெளிவாக எடுத்தியம்புகிறது. அண்டங்கள் மற்றும் அனுவைப் பற்றிய தமிழர்களின் சிந்தனை இறை உணர்வோடு அறிவியல் ரகசியத்தை வெளிப்படுத்தும்வண்ணமாக அமைந்திருப்பதை பேராசிரியர் திருவாசகம், கம்பராமாயணம் பாடல்கள் மூலம் சுட்டிக்காட்டி உள்ளமை சிந்தனைக்குரியது. திருக்குறள் வாயிலாக காலத்தத்துவத்தை மிக எளிமையாக கொண்டு செல்லும் விளக்கம் அற்புதமாக அமைந்துள்ளது. இன்றைய நவீன கால வளர்ச்சியாக வானொலி தொலைக்காட்சி விளங்குவதை பாரதிதாசனின் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் காவியத்தின் வழி வெளிப்படுத்தியுள்ளார். இவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டு சிந்திக்கும்பொழுது பண்டைத் தமிழர்கள் வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் அறிவியல் பயன்பாடு மிகுந்துள்ளது என்பதை உணரமுடிகின்றது.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்பு நூல்கள்**

[1] அ.ஆலிஸ். *பதிற்றுப்பத்து*. நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, முதல் பதிப்பு - 2007.

[2] கிரியா. *க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி*. சென்னை.

[3] வே. குருநாதன். *புறநானூறு மூலமும் உரையும்*. வடிவேல் பதிப்பகம், தஞ்சாவூர், முதல் பதிப்பு - 2003.

[4] ஆ. சிவலிங்கனார் (பதி.ஆ). *தொல்காப்பியம் உரைவளம் பொருளதிகாரம். புறத்திணையியல் பகுதி 2*. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு - 1996.

[5] ந. சுப்புரெட்டியார். *தமிழில் அறிவியல் இலக்கியம், சமயம், தத்துவம்*. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, முதல் பதிப்பு- 2001

[6] அ. ச. ஞானசம்பந்தன். *இலக்கியக்கலை*. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை. முதல் பதிப்பு - 2012.

[7] ஆ. திருவாசகன் (உ.ஆ). *திருவாசகம் மூலமும் உரையும்*. அருள்சுடர் பதிப்பகம், சென்னை. முதல் பதிப்பு- 1991.

[8] துரைசாமிப்பிள்ளை. *புறநானூறு மூலமும் உரையும்*. கழக வெளியீடு, ஐந்தாம் பதிப்பு -1972.

[9] பாரதியார். பாரதியார் கவிதைகள். கண்மணி பதிப்பகம், திருச்சி, முதல் பதிப்பு -1999.

[10] பாரதிதாசன். பாரதிதாசன் கவிதைகள். மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1999.

[11] இரா. பாவேந்தன். *தமிழில் அறிவியல் இதழ்கள்*. சாமுவேல் பிஸ்கிரீன் பதிப்பகம், தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக்கழகம், கோவை. முதல் பதிப்பு - 1998.

**References**

[1] A. Alice. Patirruppattu. New Century Book House, Chennai, First Edition, 2007.
[2] Kiriyā. *Kriyāvin Tarkālat Tamil Akarāti*. Chennai.
[3] Ve.Kurunathan. *Puranānūru Mūlamum Uraiyum.* Vadivel Publishing House, Thanjavur, First Edition - 2003.
[4] A. Sivalinganar, (Ed.). *Tolkāppiyam Uraivaḷam Poruḷatikāram, Purattiṇaiyiyal, Part 2.* World Institute of Tamil Research, Chennai, First Edition - 1996.
[5] N. Subbu Reddiar. *Scientific Literature in Tamil, Samayam, Philosophy*. Palaniappa Brothers, Chennai, First Edition 2001.
[6] A. S. Gnanasambathan. *Ilakkiyakkalai*. New Century Book House, Chennai, First Edition, 2012.
[7] A. Tiruvācakan *(urai. Ā). Tiruvācakam Mūlamum Uraiyum*. Arulsudar Publishing House, Chennai, First Edition, 1991.
[8] Duraisami Pillai. *Puranānūru Mūlamum Uraiyum*. Kazhaga Veliyeedu, Fifth Edition, 1972.
[9] Bharatiyar. *Bharatiyar Kavithaigal*. Kanmani Publishing House, Trichy, First Edition, 1999.
[10] Bharathidasan. *Bharathidasan Kavithaigal*. Manivaskar Publishing House, Chennai, Third Edition 1999.
[11] R. Bhavendan. *Tamilil Ariviyal Italkaḷ*. Samuel Bisgreen Publishing, Tamil Nadu Agricultural University, Coimbatore, First Edition - 1998.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பரணி ஆராய்ச்சியில் பேராசிரியரின் மொழி ஆளுமை

## Linguistic Mastery of Professor in Bharani Research

**முனைவர் நா. சுலோசனா,** உதவிப்பேராசிரியர், தமிழ்மொழி (ம) மொழியியல் புலம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. N. Sulochana,** Assistant Professor, Faculty of Tamil language & Linguistics,
International Institute of Tamil Studies, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-5196-7666**
**DOI: 10.5281/zenodo.7256664**

### Abstract

*Prof. N. Subbu Reddiar is a renowned person. He is a prolific writer, critic, researcher and professor who have written more than a hundred books. He was well-versed in Tamil literary genres like Sangam literature, Epic literature, Devotional literature, Minor literature and Contemporary literature. He is the author of "Kalingathu Bharani Research" and "Bharani Pozhivugal of Bharani literature" which comes under Minor literature. Literature travels to the next stage only when it captures the scenes it sees, the ideas it reads, and the messages it hears in a way that appeals to the reader. That is what Valluvar says in the chapter of "Sol Vanmai". Etymology is how language helps man to interpret what he perceives by his senses through the instrument of language. Language helps a lot to explain narration. A reader can visualize the pattern of Kali Temple, characters exhibiting expressions in the body, Omens, literary metaphors, the beauty of the autumn season, characterizations, overstatements, and personifications by the imaginative resources in "Kalingathup Bharani" through the books "Kalingathup Bharani Research" and "Bharani Pozhivugal" written by Subbu Reddiar. Hence, this article examines the technique used by Professor in detail to visualize Bharani using literary metaphors such as Uvamai, Oneban Suvai, Porulanigal, Yamagam, Madakku, Sileddai, Vellani Naal, Anjal alithal, Paavaadai poduthal, Velam, Paarvaikkarar, Nokkar, Thuruthiyaalar, Panjasayanam.*

**Keywords:** Linguistic Mastery, Professor Subbu Reddiar, Bharani Research.

### ஆய்வுச்சுருக்கம்

தாம் கண்ட காட்சிகளை, தான் படித்த கருத்துகளை, தான் கேட்ட செய்திகளைக் கேட்பவரைத் தம் பக்கம் ஈர்க்கும் விதமாக எடுத்துரைக்கும் பாங்கு கைவரப் பெற்றவர்களால் தான் இலக்கியம் அடுத்த கட்ட நகர்வைப் பயணிக்கிறது எனலாம். அதைத்தான் வள்ளுவர் "சொல் வன்மை" அதிகாரத்தில் விளக்குகிறார். மனிதன் தன் ஐம்புலன்களால் உணர்ந்தவற்றை மொழி என்னும் கருவியின் மூலம் விளக்க முனைய உதவும் வழிமுறையே எடுத்துரைப்பியல் எனப்படுகிறது. "ஓர் ஒழுங்கு முறையாக விரித்துரைக்கப்பட்ட நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பு என்கிறது வெப்ஸ்டர் அகராதி. எடுத்துரைப்பை விளக்க மொழி பெரிதும் உதவி செய்கிறது. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சியிலும் பரணிப் பொழிவிலும் காளிகோயில் அமைப்பு, புறத்தில் அகத்தைக் காட்சிப்படுத்தும் பாங்கைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சொல்லோவியங்களாகப் படைத்துள்ளார். கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சியில் பரணிக்கு அழகு சேர்க்கும் அணிகளான சொல்லணிகள், பொருளணிகள், இலக்கியச்சுவையை எடுத்தியம்பும் உவமைநடை, ஆசிரியரின் தனித்த நடையான மொழிநடை, வாழ்வியல் வழக்காறுகள், தமிழுக்கு வளம் சேர்க்கும் தொன்மையானச் சொற்கள் போன்றவற்றை ஆராய்ந்து தக்க சான்றுகளுடன் எடுத்துரைப்பதே இவ் ஆய்வுக்கட்டுரையின் நோக்கமாகும்.

**குறிப்புச்சொற்கள்:** மொழி ஆளுமை, பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், பரணி ஆராய்ச்சி.

**முன்னுரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்துள்ள பெரும் எழுத்தாளர், திறனாய்வாளர், ஆராய்ச்சியாளர், பேராசிரியர் எனப் பன்முக ஆளுமை கொண்டவராகத் திகழ்ந்தவர். அவர் சங்க இலக்கியம், காப்பிய இலக்கியம், பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், இக்கால இலக்கியம், கற்றல் கற்பித்தலின் வளத்தை மேன்மையடையச் செய்தல் எனத் தமிழ் இலக்கிய வகைமைகளுள் ஆழ்ந்த புலமை பெற்றவராக விளங்கியவர். அறம், பொருள், இன்பம், வீடு இவற்றுள் ஒன்று குறைந்து வருவது சிற்றிலக்கியம் ஆகும். இச்சிற்றிலக்கியங்கள் 'பிரபந்தங்கள்' எனப்படுகின்றன. அவை தொண்ணூற்றாறு வகை சிற்றிலக்கியங்கள் என வரையறுக்கப்பட்டுள்ளன. மேலும் அரசனையும் தெய்வத்தையும் பாடிய இலக்கியங்கள் குடிமக்களையும் பாடும் இலக்கியமாகச் சிற்றிலக்கியங்கள் திகழ்ந்தன. தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் பரணி இலக்கியமும் ஒன்று. பரணி எனும் சிற்றிலக்கிய வகைமைகளுள் கூடல் சங்கமத்துப்பரணி, கொப்பத்துப்பரணி, தக்கயாகப்பரணி, அக்ஞவதைப் பரணி, மோகவதைப்பரணி, பாசவதைப்பரணி, திருச்செந்தூர்ப்பரணி, கைலாச சிதம்பரேசர் பரணி என்பன பரணி வரிசையில் அடங்குகின்றன. தெய்வப்பரணி, கடைதிறப்பின் உட்பொருள், பேய்கள் உலகம், வரலாற்றுக் கருவூலம், கற்பனை ஊற்று, சுவைகளின் களஞ்சியம், கருணாகரத் தொண்டைமான், குலோத்துங்கன், செயங்கொண்டார் எனக் கலிங்கத்துப்பரணியை ஆய்ந்து 'கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி' என்றும் கடைதிறப்பு, பேய்கள் உலகம், வரலாற்றுக்குறிப்புகள், பரணி காட்டும் சுவைகள் எனக் கலிங்கத்துப்பரணி குறித்து தான் பேசிய சொற்பொழிவுகளைத் தொகுத்து 'பரணிப் பொழிவுகள்' எனும் நூலையும் யாத்துள்ளார். இவ்விரண்டு நூல்களும் பேராசிரியரின் இலக்கியப் புலமையையும் மொழி ஆளுமையையும் விரித்துரைக்கிறது. இவ்இரண்டு நூல்களின்வழி பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் மொழியாளுமையை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**மொழிநடை/மொழியாளுமை**

இலக்கியம் என்பது மொழியின் வழியாகவே தன்னை வெளிப்படுத்துகிறது. எனவே

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

இதனை மொழிசார் கலை (Verbal Art) என்கின்றனர். இவை இலக்கியத்தின் பண்புகளுக்குக் காரணியாகவும் அடையாளமாகவும் விளங்குகின்றன. இலக்கியத்திற்கு அதனுடைய இலக்கியத் தன்மை (Literariness) காரணம் என்றும் அதனைத் தருவது மொழியமைப்பே என்றும் ரோமன் யகோப்சன் (Roman Jacobson) கூறுவார். அந்த வகையில் கலிங்கத்துப் பரணியில் செயங்கொண்டார் கையாண்ட மொழிநடையே இலக்கிய நயத்திற்கும் பெரிதும் துணைசெய்கின்றன. நடையியல் கூறுகளை (Stylistic Features), ஒலியமைப்பு (Sound texture), சொல் அமைப்பு (Lexical diction), தொடரமைப்பு (Syntactic) ஆகிய நிலைகளில் ஆராயலாம். படைப்பாளன் தம் படைப்பில் கையாளும் எழுத்துநடை, பேச்சுநடையே மொழிநடை எனப்படும். ஓர் இலக்கியத்தைப் படிப்போர் ஆர்வத்தைக் கூட்டவும், இலக்கியச் சுவையை மேம்படுத்தவும் ஆசிரியர் கையாளக்கூடிய நடையே மொழிநடை ஆகும். இது ஆசிரியர் கையாளும் சொல்லாட்சிகளை வைத்து இலக்கியத்தரம் மதிப்பிடப்படுகிறது.

**எடும் எடும் எடும் என எடுத்ததோர்**
**இகல்ஒலி கடல்ஒலி இகக்கவே**
**விடுவிடு விடுபரி கரிக்குழாம்**
**விடும் விடும் எனும்ஒலி மிகைக்கவே (கலிங். பா. 404)**

போரின் வேகத்தையும், போர்க்கள ஒலியையும் பாடலின் சந்தமே சொல்லும். இப்படிப்பட்ட நடைதான் செயங்கொண்டாரின் நடை. கலிங்கத்துப்பரணி முழுவதும் தாழிசையால் பாடப்பெற்றது. தரவைக் காட்டிலும் தாழ்ந்த ஓசையுடையது தாழிசை எனப்படும். இது கலித்தொகையின் ஓர் உறுப்பாகும். பரணி தனித்த ஒரு பாவகையாக இடம்பெற்றுள்ளது.

**உவமை**

ஒன்று மற்றொன்றோடு ஒப்புமைபடுத்திச் சொல்வது உவமை எனப்படும். உவமையைக் கையாளாதக் கவிஞர்களே இல்லை எனலாம். இலக்கியங்களில் உவமை முக்கிய இடம்பெற்றிருக்கிறது. செய்யுளுக்கு அழகு சேர்ப்பவை 'அணிகள்' ஆகும். அணி என்றால் 'அழகு' என்று பொருள். எல்லா அணிகளுக்கும் தாய் 'உவமை' அணி ஆகும்.

**தன்மை உவமை உருவகந் தீவகம்**
**பின்வரு நிலையே முன்ன விலக்கே**
**வேற்றுப் பொருள் வைப்பே வேற்றுமை விபாவனை**
**ஒட்டே யதிசயந் தற்குறிப்பேற்றம்**
**ஏதுநுட்ப மிலேச நிரனிரை**
**ஆர்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை**
**பரியாய யம்மே சமாயித முதர்த்தம்**
**அரிதுண வெதுதி சிலேடை விசேடம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஒப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோதம்**
**மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி**
**நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே**
**வாழ்த்தொடு சங்கீரணம் பா விகமிவை**
**ஏற்ற செய்யுட் கணியே யைந்தே (தண்டி., நூ. 26)**

எனச் செய்யுளுக்கு அணிகள் 35 எனத் தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது.

**சூதளவு அளவெனும் இளமுலைத்**
**துடியளவு அளவெனும் நுண்இடைக்**
**காதளவு அவளவெனும் மாதர்விழிக்**
**கடலமுது சுனையவர் திறமினோ (கலிங். பா. 21)**

சூதாடும் கருவி அளவு இளமுலை, துடிபோல நுண்ணிய இடை, காதளவு விழிகள், செருக்கு கொண்ட பார்வை, கடலின் அமுதினை ஒத்த பெண்கள் என உவமை சொல்லப்படுகிறது.

**செந்நெருப்பினைத்தகடு செய்துபார்**
**செய்ததொக்கும் அச்செந்தரைப் பரப்பு (கலிங். பா. 82)**

சிவந்த நெருப்பைத் தகடாக அடித்துப் பரப்பியதுபோல் பாலை நிலப்பரப்பு இருந்ததாம்.

**கருநெ டும்பனங் காடுமு ழுமையும்**
**காலும் கையும் உடையன போல்வன**
**மரக்க லத்தின்ம றிப்புறம் ஒப்பன**
**கொட்டும் மேழியும் கோத்த பல்லின (கலிங். ஆராய்ச்சி, ப. 83)**

பேய்களின் கால் கைகளுக்குப் பனைமரங்களை உவமையாகக் காட்டுகின்றார் செயங்கொண்டார். பேய்களின் முதுகுத் தோற்றத்திற்கு மரக்கலத்தின் பின்புறத்தை உவமையாகக் காட்டுகிறார். பேய்களின் பற்கள் மண்வெட்டி போலவும் கலப்பை மேழியைப் போலவும் இருந்ததாக ஒப்புமைப்படுத்தியுள்ளார்.

**தற்குறிப்பேற்றம்**

கவிஞன் தான் கருதிய பொருளை வேறொன்றின்மீது ஏற்றிச் சொல்வது தற்குறிப்பேற்றம் ஆகும். பாலை நிலத்தின் வெம்மையைத் தாங்க முடியாமல் பருந்துகள் பறந்து செல்கின்றன. பறந்து செல்லும் பருந்துகளின் நிழல் பூமியின்மீது ஓடுவது போலிருக்குதாம். இது இயல்பான காட்சி ஆகும். இதனைக் கவிஞர், பாலை நிலத்தின் வெம்மையைத் தாங்கமுடியாமல் நிழல்கள் ஓடுகின்றன என்றும் அந்நிலத்தில் நிற்கும் நிழலையே காண்பது அரிதாக இருக்கும் பட்சத்தில் கவிஞர் தன் கற்பனைத் திறனை ஏற்றிக் கூறியிருக்கிறார்.

**ஆடுகின்ற சிறை வெம்பருந்தினிழல்**
**அஞ்சி யக்கடுவ னத்தைவிட்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**டோடு கின்றநிழல் ஒக்குநிற்கு நிழல்**

**ஓரிடத்துமுள வல்லவே (கலிங். ஆராய்ச்சி, ப. 87)**

இது கவிஞர் காட்டும் கற்பனைத் திறம் ஆகும். பாலை நிலத்தில் மரங்களின் நிழலே இருப்பதில்லை. அப்படியிருக்கும்போது கவிஞர் தன் கருத்தினை ஏற்றிப் புனைந்து கூறுவது படிப்பவர்க்கு இலக்கியச் சுவையைக் கூட்டுகிறது.

**இடையின் நிலைஅரிது இறும்இறும் எனஎழா**

**எமது புகலிடம் இனிஇலை என விழா**

**அடைய மதுகரம் எழுவது விழுவதாம்**

**அளக வனிதையர் அணிகடை திறமினோ (கலிங். ஆராய்ச்சி, ப. 89)**

மகளிர் கூந்தலில் கூடியிருக்கின்ற பூக்களிலுள்ள தேனைப் பருகுவதற்கு வண்டுகள் வந்து மொய்க்கின்றன. அவை மேலும் கீழும் பறப்பது இயல்பு. மகளிரின் கூந்தலில் தாம் உட்கார்ந்தால் அவர்களின் நுண்ணிய இடை முறிந்துவிடுமோ என்று எண்ணி அவை மேலே வருவதும் கீழே போவதுமாக இருந்தன எனக் கவிஞர் தன் கற்பனையை ஏற்றிக் கூறுகிறார்.

**தன்மை நவிற்சி**

ஒரு பொருளையோ ஒரு செயலையோ உள்ளது உள்ளபடி எடுத்துரைப்பது தன்மை நவிற்சி அணி என்பர். இயல்பு நவிற்சி அணி, இயல்பு அணி என வேறு பெயர்களும் உண்டு.

**சொருகு கொந்தளகம் ஒருகைமேல் அலைய**

**ஒருகை கீழ்அலைசெய் முகிலோட**

**திரு அனந்தலினும் முகமலர்ந்துவரு**

**தெரிவை மீர்கடைகள் திறமினோ (கலிங். பா. 46)**

காலையில் தூங்கி எழுந்த பெண்ணொருத்தியின் கூந்தல் அவிழ்ந்து கிடந்தது. ஆடை நெகிழ்ந்து நின்றது. அவிழ்ந்த கூந்தலை ஒருகையாலும் நெகிழ்ந்த ஆடையை மற்றொரு கையாலும் பற்றிக்கொண்டு நடப்பதையும் தூங்கி எழுந்த நிலையிலும் அவளின் முகமலர்ச்சியையும் காணமுடிகின்றது.

**உயர்வு நவிற்சி**

ஒரு பொருளின் இயல்பைக் கற்போர் வியக்குமாறு உயர்த்தி, மிகுத்து, சுவைபடக் கூறுவது, உயர்வு நவிற்சி ஆகும். நவிலுதல் என்றால் சொல்லுதல் என்று பொருள். உயர்வாகச் சொல்லுதல் உயர்வு நவிற்சி ஆகும். கருணாகரத் தொண்டைமானின் படையின் அளவைக் கூறும்போது,

**பார் சிறுத்தபின் படை பெருத்ததோ**

**படைபெருத்தலின் பார் சிறுத்ததோ**

**நேர் செறுத்தவர்க்(கு) அறிது நிற்பிடம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நெடுவி சும்பலால் இடமும் இல்லையே (கலிங். ஆராய்ச்சி. ப.90)**

மன்னனின் படைகளைப் பார்த்த மக்களில் சிலர் பூமி சிறியதாக இருப்பதால் படை பெரிதாகக் காணப்படுகிறதோ, வேறு சிலர் படைகள் மிகுதியாக உள்ளதால் பூமிதான் சிறிதாகத் தெரிகிறதோ எனப் பேசிக் கொண்டார்களாம்.

**சுரிகுழல் அசைவுற அசைவுறத்**
**துயிலெழும் மயிலென மயிலெனப்**
**பரிபுர ஒலிஎழ ஒலிஎழப்**
**பனிமொழி யவர்கடை திறமினோ (கலிங். ஆராய்ச்சி, ப. 80)**
**உபய தனம் அசையில் ஒடியும் இடை; நடையை**
**ஒழியும், ஒழியும்! என ஒண்சிலம்பு**
**அபயம்! அபயம்! என அலற நடை பயிலும்**
**அரிவைமீர் கடைகள் திறமினோ (கலிங்., பா. 58)**

**கற்பனை**

கற்பனை இல்லாமல் கதை இல்லை என்றே சொல்லலாம். கற்பனையில் மிகு கற்பனையும் உண்டு. கவிஞர்கள் கற்பனைத்திறனைக் கையாளப்பெற்றவர்கள். கலிங்கத்துப்பரணியிலும் கற்பனை அதிகமாக உள்ளது. இந்தக் கற்பனைத் திறன்தான் சொல்லணிகளாகவும் பொருளணிகளாகவும் வருவதுண்டு.

**கலவிக் களியின் மயக்கத்தால்**
**கலைபோய் அகலக் கலைமதியின்**
**நிலவைத் துகில் என்று எடுத்து உடுப்பீர்**
**நீள்பொன் கபாடம் திறமினோ (கலிங்., பா. 34)**

நிலவைத் துகில் என்று உடுத்திக்கொண்டது இங்கே கற்பனையாகிறது. களி என்றால் களிப்பு. அதாவது மகிழ்ச்சி என்று பொருள். மேலும் களி என்பதற்கு விளையாட்டு என்றும் பொருள் உண்டு. களியாட்டம் என்பதுமுண்டு. இச்சொல் இன்பம், கதக்களி, சீட்டுக்களி, வள்ளம் களி, கிரிக்கெட் களி என விளையாட்டைக் குறிக்கும் சொல்லாக மலையாளத்தில் இன்றும் பயன்பாட்டு வழக்காக இருக்கிறது.

**காடு இதனைக் கடத்தும் எனக் கருமுகிலும்**
**வெண்மதியும் கடக்க அப்பால்**
**ஓடி இளைத்து உடல் வியர்த்த வியர்வன்றோ**
**உருபுனலும் பனியும் ஐயே (கலிங்., பா. 86)**

வறண்ட நிலத்தில் அதிகாலையில் லேசாகப் பனி இருப்பது இயல்பு. வறண்ட அந்த வனத்தைப் பார்த்து கரிய மேகத்துக்கும் நிலாவுக்கும் அச்சம் வந்துவிட்டதாம். முதலில் இந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இடத்தைவிட்டு சீக்கிரம் ஓடிவிட வேண்டும் என்று ஓடியதால் அவற்றுக்கு வேர்த்துவிட்டதாம். அவை சிந்திய வியர்வைத் துளிகள்தான் அந்தப் பனிநீர். பாலைநிலத்தில் அதிகாலையில் இருக்கும் பனியைக் கற்பனையாக இப்படி வடித்திருக்கிறார்.

**சொல்லணிகள்: யமகம் - மடக்கு**

வளை, பாடகம், விடுகம்பி, இரட்டைவாளி என்னும் காதணி, தோளில் அணியும் வாகுவலயம், ஒற்றைச்சரடு, வன்னசரம், மணிமாலை, முத்து மாலை, பதக்கம், மகரக்குழை என்னும் காதணி, நெற்றிப்பட்டம் முதலியவை மகளிர் அணியும் அணிகளாகும். மகளிரை மட்டும் அழகு செய்வது அணிகள் அல்ல. செய்யுளின் சொல்லழகையும் பொருளழகையும் வரையறுத்துக் கூறுவதும் அணிகள்தான். அதைத்தான் அணி இலக்கணம் என்று கூறுவர். இது சொல்லணி, பொருளணி என இருவகைப்படும். மடக்கு, திரிபு முதலான அணிகள் சொல்லணிக்குள்ளும் உவமை, உருவகம், தற்குறிப்பேற்றம், உயர்வுநவிற்சி முதலானவை பொருளணிக்குள்ளும் அடங்கும்.

ஓரடியில் பல இடங்களிலோ பல அடிகளிலோ முன்வந்த எழுத்துக்களே மீண்டும் வந்து பொருள் வேறுபடுவது ‘மடக்கு’ எனப்படும்.

**எழுத்தின் கூட்டம் இடைபிறிது இன்றியும்**
**பெயர்த்தும் வேறுபொருள்தரின் மடக்கு எனும் பெயர்த்தே (தண்டி., நூ. 92)**

செய்யுளில் இடம்பெறும் சொற்களில் அடங்கியுள்ள எழுத்துகள் இடையிலே பிரிப்பு இல்லாமலும், அதே சொற்கள் இடையிலே பிரிக்கப் பெற்றும் வேறுவேறு பொருள்களைத் தந்தால் அதற்கு மடக்கு என்று பெயராகும். இது சொல்லணிக்குள் அடங்குவதாகும். இது முதல்மடக்கு, இடைமடக்கு, கடைமடக்கு என மூவகைப்படுகிறது.

மடங்கி வருவது மடக்கு. மடக்கு என்பது செய்யுளில் தொடை அமைக்கும் பாங்குகளில் ஒன்றாகும். இது அணி வகையில் மடக்கணி என்றும் யாப்பு வகையில் யமகம் என்றும் பெயர் பெறுகிறது.

**காஞ்சியிருக்கக் கலிங்கம் குலைந்த**
**கலவி மடவீர் கழற்சென்னி**
**காஞ்சி யிருக்கக் கலிங்கம் குலைந்த**
**களப்போர் பாடத் திறமினோ (கலிங். ஆராய்ச்சி, ப. 91)**

கூடலினால் மகளிரின் இடையணி அப்படியே இருக்க மேலாடை மட்டும் நிலைபெயர்ந்து இருந்ததாம். கருணாகரனது போரால் காஞ்சி அழியாதிருக்க, கலிங்காநடு அழிந்துவிட்டது என்ற வேறுபட்ட பொருள் முதல், இரண்டாவது அடிகளில் வந்துள்ளன. கருணாகரன் கலிங்க நாட்டை அழித்தபொழுது கலிங்கவீரர் மேலாடை வீழ்ந்ததையும் கவனிக்காது உயிர் பிழைக்க ஓடினர் என்ற செய்தியைச் சொல்லும் இடத்தில் மடக்கணியைப் பயன்படுத்தியுள்ளார் புலவர்.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வந்த எழுத்துக்களே பொருள் வேறுபடச் செய்யுளின் சீர் அல்லது அடிகளில் பின்னும் வருவதே மடக்கு ஆகும். யமகம் என்பது செய்யுள் இயற்றுவோர் கையாளும் ஒரு புலமை உத்தியாகும். இது சொல் விளையாட்டு எனவும் வழங்கப்படுகிறது. இதனை ‘மடக்கணி’ என்றும் கூறுவர்.

**திரிபு**

எல்லா அடிகளிலும் இரண்டாம் எழுத்து முதலிய பல எழுத்துகள் ஒன்றிநின்று பொருள்வேறுபடுவது ‘திரிபு’ என்று சொல்லப்படுகிறது. திரிபு என யாப்பு வகையாலும் அணி வகையில் ’திரிபணி’ எனவும் பெயர் பெறும். திரிபணியில் மோனை மாறிவர எதுகை மட்டும் அப்படியே வரும்.

**மனுக்கோட்டம் அழித்தபிரான்**
**வளவர்பிரான் திருப்புருவத்**
**தனுக்கோட்டம் நமன்கோட்டம்**
**பட்டதுசக் கரக்கோட்டம் (கலிங்.ஆராய்ச்சி, ப. 92)**

இப்பாடலடிகளில் ‘மனுக்கோட்டம்’, ‘தனுக்கோட்டம்’ இவ்விரண்டிலும் முதலெழுத்து ‘ம’, ‘த’ தவிர மற்ற எழுத்தகளும் ஒன்றிநின்று பொருள் வேறுபடுவதை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

**சிலேடை**

ஒரு சொல் அல்லது ஒரு தொடர் பல பொருள் படும்படி அமைவது சிலேடை எனப்படும். இந்நடை உரை நடையிலும், கவிதைகளிலும் மேடைப் பேச்சுகளிலும் பயன்படுத்தப்படுகின்றன.

**ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி**
**தெரிதர வருவது சிலேடையாகும் (தண்டி., நூ. 76)**

மகளிர் நடத்திய கலவிப்போரையும் குலோத்துங்கச்சோழன் நடத்திய ஆய்தப் போரையும் புலவர் சிலேடையாகப் பாடியுள்ளார்.

**நக் காஞ்சிக்கும் வடமலைக்கும்**
**நடுவில் வெளிக்கே வேடனை விட்(டு)**
**அக்கா கைத்தே உயிர் பறிப்பீர்**
**அம்பொற் கபாடம் திறமினோ (கலிங். ஆராய்ச்சி, ப. 93)**

இப்பாடலடியிலுள்ள ‘காஞ்சி’ என்பது காஞ்சி என்ற இடையணியையும், காஞ்சி மாநகரையும் குறிக்கிறது. ‘வடமலை’ என்பது வடமலை மாலையணிந்த கொங்கையையும் இமயத்தையும் குறிக்கிறது. ‘வெளி’ என்பத இடையணியையும் போர்க்களத்தையும் குறிக்கிறது. ‘வேடனை’ என்பது மன்மதனையும், வேடன் போன்ற கருணாகரனையும் குறிக்கிறது. ‘கானகம்’ என்பது ’காடு’ என்றும் ’மணம் பொருந்திய மலை போன்ற கொங்கை’ என்றும் இருபொருள்பட

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வந்துள்ளது. மகளிர் தம் இடையழகாலும் கொங்கையழகாலும் தம் கணவன்மார்களுக்குக் காமவேதனையை மிகுவித்து தம் வசமாக்கிக்கொள்வர். அதுபோல கருணாகரனும் விலங்கு, பறவை முதலியவற்றின் உயிரைக் கவர்தல்போல் தன் பகைவரின் உயிரைக் கவர்வான் என்பதால் இருபொருள்பட ‘சிலேடை’ நயம்பட வந்துள்ளது.

**சொல்லோவியங்கள்**

கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சியில் பேராசிரியர் தன்னுடைய கற்பனைத்திறத்தாலும் இன்றைய வழ்க்காறுகளோடும் ஒப்பிட்டு பலவகையான சொல்லோவியங்களைத் தீட்டியுள்ளார்.

**வெள்ளணி நாள்**

அரசன் மக்களை நல்வழிப்படுத்தியும் செங்கோல் தவறாமல், நீதி வழுவாமல் ஆட்சி புரியும் அரசனுக்கு மக்கள் தங்களின் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் பொருட்டு அரசனின் பிறந்தநாளைச் சிறப்பாகக் கொண்டாடுவர். கொண்டாடப்படும் அந்நாள் வெள்ளணிநாள் என்றும் நாண்மங்கலம் என்றும் வழங்கப்படுகிறது. பிறந்தநாள் ஒப்பனை, வெள்ளிய ஆடை, அரசன் பிறந்தநாள் விழா என வெள்ளணி என்பதற்குப் பல பொருள் இருக்கின்றன. வெள்ளணி என்ற சொல்லைக் கம்பரும் கையாண்டிருக்கிறார்.

**எற்றைப் பகலினும் வெள்ளணிநாள்**
**இருநிலப் பாவை நிழலுற்ற**
**கொற்றக் குடையினைப் பாடீரே**
**குலோத்துங்கச் சோழனைப் பாடீரே (கலிங்., ஆராய்ச்சி, ப. 68)**

என அரசனுக்குப் பிறந்தநாள் கொண்டாடியதை அறியமுடிகிறது. இன்றும் நல்லாட்சி புரியும் தலைவனுக்கு, அவரவர் ஏற்றுக்கொண்ட மக்கள் தலைவனுக்குப் பிறந்தநாள் கொண்டாடுவது வழக்கமாக இருப்பதையும் நோக்கலாம்.

**வேளம்**

சிற்றரசர்கள் பேரசர்களுக்கு மகளிரைத் திறைப் பொருளாகத் தருவதும் உண்டு. அம்மகளிர் தனியாக வாழும் இடத்தை வேளம் என்று குறிப்பிடுவர்.

**மீனம் புகு கொடி மீனவர்**
**விழி அம்பு உக ஓடிக்**
**கானம்புக வேளம்புகு**
**மடவீர் கடை திறமின் (கலிங்., பா. 40)**

சோழனால் சிறைபிடிக்கப்பட்ட உயர்குலத்து மகளிரைக் கொணர்ந்து தனிச் சிறையில் வைத்தான். அடிமையாக வாழும்படி அமைத்த இடத்தை வேளம் என்பர். இம்மகளிர் பாண்டியனிடமிருந்து கொணரப்பட்ட உரிமை மகளிர் ஆவர். பாண்டி வேளம்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உய்யங்கொண்டான் வேளம், பஞ்சவன் மகாதேவியார் வேளம், உத்தமசீலியார் வேளம், உடையார் கோதண்ட வேளம், அருமொழி தேவத் தெரிந்த வேளம் என்று தஞ்சை கல்வெட்டுகளில் காணப்படும் இப்பெயர்களிலுள்ள வேளம் எனும் சொல் வசிக்குமிடம் அல்லது இருப்பிடப் பகுதியைக் குறிப்பதாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். வேளம் என்பது பொதுமகளிருக்கான இருப்பிடம் அல்ல என்பது அவர்களின் கருத்தாகும்.

**பாவாடை போடுதல்**

உயர்ந்தோர்க்கு விருந்து அளிக்கும்போது பகல்விளக்கு வைப்பது, பரப்பிய ஆடையின்மேல் பொற்கலத்தை வைத்து அதில் உணவிடுவது வழக்கம். இன்றும் கோவிலில் கடவுளுக்குப் பாவாடை போடுதல் எனும் வழக்கத்தோடு ஒப்பிட்டிருக்கிறார் பேராசிரியர். (கலிங். ஆராய்ச்சி, ப. 70) தான் நினைத்த ஒரு செயல் நடக்குமா என்பதை எதிர்பார்த்து மகளிர் கூடல் இழைத்துப் பார்ப்பது, ஏடு பார்த்தல் வழக்கம். இந்த கூடல் வழக்கம் இன்று 'சோலி' போட்டுப்பார்த்தல், முத்துக்குறி இவற்றோடு தொடர்புபடுத்திப் பார்க்கலாம். கணவன் இறந்தபின் கற்புடைப் பெண்டிர் தீக்குளிப்பது வழக்கம்.

**பார்வைக்காரர்**

மை கொண்டும் மந்திரங்கற்றும் புதையல் காண்போரையும், நோய் தீர்ப்போரையும் 'பார்வைக்காரர்' என்றனர். இன்றைய 'பில்லி, சூன்யம், மையோட்டம், ஏவல்' போன்றவற்றோடும் ஒப்பிட்டுப் பார்க்கலாம். புதையல் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கவும், குடும்பத்தில் ஏதாவது தீவினைகளால் தொடர்ந்து துன்பம் ஏற்பட்டாலும் தீர்வுகாண மையோட்டம் பார்க்கும் மனநிலை இன்றும் மக்களிடையே இருக்கிறது.

**நோக்கர்**

இறந்தவர் வீட்டு முன் நீண்ட தாரையை வைத்து ஊதும் வழக்கம் கொண்டவர்கள் 'நோக்கர்' எனப்பட்டனர். இன்றைய காலத்தில் 'சங்கு' ஊதுவதோடு ஒப்பிடலாம்.

**துருத்தியாளர்**

நீண்ட குழாய் வடிவிலான நீரைச் சொரியும் துருத்தி என்னும் கருவியைத் தோளில் சுமந்து தொழில்புரிவோர் 'துருத்தியாளர்' எனப்பட்டனர். இதை இன்றைய தண்ணீர் வண்டியோடு ஒப்பிடலாம்.

**வாளில் வெட்டி வாரண கை தோளில் இட்ட மைந்தர் தாம்**
**தோளில் இட்டு நீர் விடும் துருத்தியாளர் ஒப்பரே (கலிங்., பா. 435)**

இங்கே வீரர்கள் துருத்தியாளரை ஒத்திருந்தனர் எனக் கலிங்கத்துப்பரணி குறிப்பிடுகிறது.

**பஞ்சசயனம்**

வெண்பஞ்சு, செம்பஞ்சு, இலவம்பஞ்சு, மயிர், அன்னத்தின்தூவி ஆகிய ஐந்து பொருள்களான மெத்தைகளை மக்கள் உறங்குவதற்காகப் பயன்படுத்தினர். இதையே

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பஞ்சசயனம் எனத் திவாகரம் நிகண்டு குறிப்பிடுகிறது. இவை அழகு, குளிர்ச்சி, மார்த்தவம், பரிமளம், வெண்மை என்ற ஐவகைத் தன்மைகளைக் கொண்டுள்ளன.

**குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில் மேல்**
**மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி**
**கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கை மேல்**
**வைத்துக் கிடந்த மலர்மார்பா (திருப்பாவை, பா. 19)**

என்று பஞ்சசயனம் குறித்து திருப்பாவை குறிப்பிடுகிறது. அரசன் முதலியோர் படுக்கையில் இந்த ஐவகை மெத்தைகளையும் ஒன்றன்மேல் ஒன்றாக இட்டு படுக்கையாகப் பயன்படுத்தினர். இதுவே 'பஞ்சசயனம்' ஆகும். காளிப்பேய்கள் இந்த பஞ்சசயனத்தின்மீது வீற்றிருந்ததாகக் கலிங்கத்துப்பரணி குறிப்பிடுகிறது. பஞ்ச என்றால் ஐந்து என்று பொருள். சயனம் என்றால் தூங்குவது என்று பொருள். சயனத்திருப்பது ஆனந்த சயனம், சயனக்கோலம், பாம்பனைமேல் பள்ளி கொண்டவன் போன்றவற்றையும் நோக்கலாம்.

**முடிவுரை**

கலிங்கத்துப்பரணியில் சோழர்கால நாட்டுநிலை, மக்களின் வாழ்க்கைமுறை, அவர்களின் பழக்கவழக்கங்கள், வழக்காறுகள், செய்யுளுக்கு அணி செய்யும் அணிகள், கற்பனைத்திறன், வருணனை, மெய்ப்பாடுகள், நகைச்சுவை போன்றவற்றை ஆராய்ந்து ஒட்டுமொத்தக் கருவூலமாகக் கொடுத்திருக்கிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். வெறும் பேய்கள் குறித்த இலக்கிய நயம் குறித்த பரணி என்றில்லாமல் அக்கால நடைமுறை இக்கால வழக்கத்திற்குப் பொருந்திப்போவதையும் ஆராய்ந்து வெளிப்படுத்தியிருப்பது சிறப்பம்சமாகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] மு.இராகவையங்கார். *கலிங்கத்துப்பரணியாராய்ச்சி.* சாரதா பதிப்பகம், சென்னை, 2013.
[2] ந.சி.கந்தையாபிள்ளை. *கலிங்கத்துப்பரணி வசனம்.* ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 1938.
[3] செ.வை.சண்முகம். *குயில்பாட்டுத் திறன்.* என்.சி.பி.எச், சென்னை, 2020.
[4] ஜெயங்கொண்டார். *கலிங்கத்துப்பரணி மூலமும் உரையும்.* ஸ்ரீபாரதி அச்சகம், சென்னை, 1955.
[5] டாக்டர் பா.சரவணன். *கலிங்கத்துப்பரணி.* சந்தியா பதிப்பகம், 2013.
[6] இ.சுந்தரமூர்த்தி. *நடையியல் அறிமுகம்.* அன்பு நூலகம், சென்னை, 1978.
[7] இ.சுந்தரமூர்த்தி. *நடையியல் சிந்தனைகள்.* என்.சி.பி.எச், சென்னை.
[8] ந.சுப்பு ரெட்டியார். *கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி.* செல்வி பதிப்பகம், காரைக்குடி, முதல் பதிப்பு, 1957.
[9] ந.சுப்பு ரெட்டியார். *பரணிப் பொழிவுகள்.* திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முதல் பதிப்பு, 1972.

[10] தி.செல்வக்கேசவராய முதலியார். *கலிங்கத்துப்பரணி*. கதாசங்கிரகம், கி.அ. சங்கத்தார் அச்சுக்கூடம், சென்னை, 1915.

[11] புலியூர்க்கேசிகன். *கலிங்கத்துப்பரணி மூலமும் உரையும்*. சாரதா பதிப்பகம், சென்னை, 9ஆம் பதிப்பு, 2018.

**References**

[1] M. Ragavaiyankar. *Kalingathup Bharani Araichi*. Saradha Publication, Chennai, 2013.
[2] N. C. Kandhaiya Pillai. *Kalingathup Bharani Vasanam.* Nurpathipuk Kazhakam, 1938.
[3] S. V. Shanmugam. *Kuyilpattuth Thiran*. N.C.B.H., Chennai, 2020.
[4] Jayankondar. *Kalingathup Bharani Muulamum Uraiyum.* Sribharathi Printers, Chennai, 1955.
[5] Dr. Pa. Saravanan. *Kalingathup Bharani.* Sandiya Publication, 2013.
[6] E. Sundaramurthi. *Nadaiyiyal Arimukam*. Anbu Nulakam, Chennai, 1978.
[7] E. Sundaramurthi. *Nadaiyiyal Chinthanaikal*. N.C.B.H., Chennai.
[8] Dr. Na. Subbu Reddiar. *Kalingathup Bharani Araichi.* Selvi Publication, Karaikkudi, First Edition, 1957.
[9] Dr. Na. Subbu Reddiar. *Bharani Pozhivugal*. Sri Venkateshwara University, Tirupati, First Edition, 1972.
[10] T. Selva Kesavaraya Mudaliyar. *Kalingathup Bharani.* Sadhasangkirakam, Ki.A.Sangkathar Achukkudam, Chennai, 1915.
[11] Puliyur Kesigan. *Kalingathup Bharani Muulamum Uraiyum.* Saradha Publication, Ninth Edition, Chennai, 2018.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியார் கண்ட வைணவ உரைவளம்

## Vaishnava Rhetoric Found by N. Subbu Reddiar

**முனைவர் ப.தனஞ்செயன்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சர் தியாகராயா கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. B. Dhananjayan,** Assistant Professor, Department of Tami, Sir Theagaraya College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-2003-6636**
**DOI: 10.5281/zenodo.7256701**

### Abstract

*There was a boom in medieval literature in the world of Tamil Literature. The Vaishnavite Alwars gifted the glories of Lord Vishnu to Tamil Literature. They have made a great contribution to Tamil literature by giving rich poetic hymns of literary taste. The songs sung by the twelve Alwars worshipping Thirumal and praising his glories became to known as "Nalayira Dhivya Prabantham" (Four Thousand Divine Hymns). The commentators on the Alwars were the ones who made the world of the Divine prophets and their meanings known to the admirers of Vaishnava philosophy. Among them, Nathamunigal compiled the Divine Prabhandas and evinced their significance all over the world. It is the tradition of Vaishnavism to make Nathamuni the first compiler. After him, Vuyakkondar and the Manakkalnambi, Aalavanthar, Periyanambikal, and Thirumalayantan seem to have come under discourses until the time of Ramanujar. Ramanujar is a great personality to have brought about a great upsurge in the Vaishnava tradition. He first wrote the text with his disciple Thirukurugaipiran Pillai in Six Thousand verses for Thiruvaimozhi. This was followed by the complete texts of Thiruvaimozhi, such as the nineteen thousand verses of Nanjiyar, the twelve thousand verses of Vadikesarialagiye Manavala Iyer and the twenty-four thousand verses of the Periyavachan Pillai and the thirty-six thousands of the Nampillai. The rise of the "Thiruvaimozhi" text led to the Four Thousand Divya Prabhanda. Periyavachan Pillai is credited with interpreting the entire Four Thousand Divya Prabhandas. Hence, Periyavachan Pillai is called the authority of vyakiyana (Commentary). In that connection, Prof. N. Subbu Reddiar presents various concepts embedded in the ancient commentaries of Vaishnava Manipravala texts, texts discourses, discourse physiology phrases, dissociation of Tamil language, ascendant therapeutic philosophy will be the main feature of this research paper.*

**Keywords:** Vaishnava, Rhetoric, N. Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*தமிழ் இலக்கிய உலகத்தில் இடைக்கால இலக்கியத்திற்கு ஓர் ஏற்றம் உண்டு. இடைக்காலத்தில் செந்தமிழை வளர்த்துச் செழிக்கச் செய்த பெருமை ஆழ்வார்களுக்கு உரியது. இலக்கியச் சுவை முதிர்ந்த வளமான கவிதைக் கனிகளை நல்கித் தமிழ் இலக்கியத்திற்கு அளப்பரும் தொண்டினை அவர்கள் செய்திருக்கின்றார்கள். ஆழ்வார்கள் பன்னிருவரும், திருமாலை வணங்கி வாழ்த்தி அவனது பெருமைகளைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் எனப் பெயரிடப்பட்டது. இவ்வரிய பாடல்கள் ஆழ்வார் அருளிச்செயல்,*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*ஸ்ரீகோசம் மற்றும் தென்மொழி மறை என்றும் போற்றியும் வந்தனர். திவ்வியப் பிரபந்தங்களையும் அவற்றின் பொருள் விளக்கங்களையும் உலகுய்யச் செய்தவர்கள் உரையாசிரியர்கள். இவர்களுள் திவ்வியப் பிரபந்தங்களையும் அவற்றின் பொருள் சிறப்புகளையும் ஆழ்வாரிடம் நேரில் பெற்று அவற்றை உலகில் பரவச் செய்தவர் நாதமுனிகள். ஸ்ரீமந் நாதமுனிகளை முதல் உரையாசிரியராகக் கொள்வது வைணவத்தின் மரபாகவே தொடர்கின்றது. நாதமுனிகள் தொடர்ந்து உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார் பெரிய நம்பிகள், திருமலையாண்டான், இராமானுசர் காலம் வரையில் கேள்வி வாயிலாக வந்தமை தெரிகிறது. இராமானுசரின் அளப்பரிய ஆளுமை வைணவ சம்பிரதாயத்தில் மிகப்பெரியதோர் ஏற்றத்தைக் கொண்டு வந்ததாகவே அறியமுடிகின்றது. ஆந்த ஏற்றமே உரைகள் பட்டோலைப்படுத்தப்பட்டன எனலாம். முதல் முதலாக தம் சீடரைக் கொண்டு திருவாய் மொழிக்கு ஆறாயிரப்படி என்னும் வியாக்கியானத்தை இராமானுசர் எழுத வைத்தார். அதன்படி முதல் வியாக்கியானம் எழுதியவர் திருக்குருகைக்பிள்ளான் என்னும் ஆசாரியருக்கு உரியதாகவே அமைகின்றது. இதனைத் தொடர்ந்து நஞ்சியரின் ஒன்பதினாயிரப்படி வாதிகேசரி அழகிய மணவாளசீயரின் பன்னீராயிரப்படி பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்தி நாலாயிரப்படி வடக்குத் திருவீதிப்பிள்ளையின் முப்பதாயிரப்படி என திருவாய்மொழிக்கு உரைகள் வழங்கியது அறிய முடிகின்றது. திருவாய்மொழியின் உரைக்கான எழுச்சியே "நாலாயிர திவ்வியப்பிரபந்தம்" முழுமைக்கும் உரைகள் எழக் காரணமாயின. நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முழுமைக்கும் உரை அதாவது வியாக்கியானம் செய்தவர் வியாக்கான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளை என்பது குறிப்பிடத்தக்கதாகும். இங்ஙனமான பழம்பெரும் உரைகளான மணிப்பிரவாள உரைகளில் பொதிந்துள்ள பல்வேறு கருத்தோவியங்களை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஐதீகங்கள், இதிகாசங்கள், சம்வாதங்கள், சரீரசரீரிபாவனை, அகப்பொருள் தத்துவம், பாசுரங்களின் பிரிவினை, எம்பெருமானை ஒப்புமைக் காட்டல், தமிழ்மொழி ஏற்றம், இலக்கிய நயம், எம்பெருமான், ஆழ்வார், ஆசாரியர், திருமேனிகளின் ஏற்றம், திருக்கோயில் அமைப்பு தத்துவம், சாம்பிரதாயப் பெயர்கள் எனப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் வைணவ உரைவளம் வழி கண்ட விளக்கங்கள் இக்கட்டுரையில் காண்பதே முக்கிய அம்சமாக அமையும்.*

**குறிப்புச்சொற்கள்:** ந. சுப்புரெட்டியார், வைணவ உரைவளம்.

**முன்னுரை**

உலகில் பழமையான மொழிகளில் ஒன்றாகிய தமிழ்மொழியின் இலக்கியம் பக்தி இயக்கத்தால் மேலும் இலக்கியம் செழுமை பெற்ற மொழியாக விளங்குகிறது. இந்தப் பக்தி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இயக்கமானது கி.பி 6ம் நூற்றாண்டு அரும்பத் தொடங்கி கி.பி. 9ம் நூற்றாண்டு வரை வளர்ந்து மலராகி தமிழ் இலக்கியத்தில் முழுமையான செல்வாக்குப் பெற்றது. இப்பக்தி இயக்கத்திற்கு வித்திட்டவர்கள் நாயன்மார்களும், ஆழ்வார்களும் ஆவார். அவர்களுள் ஆழ்வார்கள் பன்னிருவராவார். இவர்கள் அருளிய பாசுரங்களே நாலாயிரத் திவ்வியப்பிரபந்தமாகும். இப்பிரபந்தங்கள் 108 வைணவத் திருத்தலங்களில் எழுந்தருளியுள்ள அர்ச்சா மூர்த்திகளின் சிறப்பியல்புகளை இயம்புவதாகும். ஆழ்வார்களுக்கு அடுத்து ஆசாரிகள் தோன்றி செந்தமிழ்ப் பாசுரங்களுக்கு உரைகளை அமைத்துச் சிறப்பித்தனர்.

**வைணவ உரைச்சிற்பிகளும் உரைகளும்**

ஆழ்வார்களின் பாடல்களான நாலாயிரத் திவ்வியப் பிரபந்த உரைகள் பக்தி இலக்கியத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. இச்சிறப்பு ஆழ்வார்களின் பாடல்களை வளர்த்த நாதமுனிகள் தொடாக்கமான ஆசாரியர்களையே சாரும். இந்த ஆசாரிய மரபு ஸ்ரீமந்நாராயணனாகிய பரம்பொருளை முதலாகக் கொண்டு பெரிய பிராட்டியார், சேனைமுதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள் உய்யக் கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, உடையவர், எம்பார்பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்கு திருவீதிப்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை மற்றும் மாமுனிகள் ஈறாக அமைந்துள்ளனர்.

கி.பி. 12ம் நூற்றாண்டில் வைணவ ஆசாரியர்களில் தலைவரான இராமனுசர் ஆணையின்படி முதல் முதன் திருவாய்மொழிக்கு எழுத்து வடிவில் உரை வரையலாயிற்று. அதற்கு முன் பாடல்களுக்கு விளக்கங்களைப் பலருக்குச் சொல்லாமல் "ஓர் ஆசிரியர் ஓர் மாணாக்கருக்குச் சொல்வது" என்னும் ஓரான் வழியடைவாகவே - வாய் வழி உரையாகவே சொல்லப்பட்டு வந்தன. இதற்கு மாறாக ஆசாரியர் ஆளவந்தார் சிலரைக் கொண்டு திவ்வியப் பிரபந்த விளக்கங்கள் செய்துள்ள குறிப்பு காணப்படுகின்றது. எனினும் பாடப்பொருள்களைச் சிலருக்கே விரித்துரைக்கும் நிலையே இருந்தது. இதனை மாற்றிய பெருமை இராமனுசருக்கே சாரும். தனியுடைமையாக இருந்த திவ்வியப் பிரபந்தங்களுக்கு குறிப்பாக நம்மாழ்வாரின் திருவாய்மொழிக்கு விளக்கங்கள் உரைகள் மூலமாக இராமனுசரால் பொதுவுடைமையாக்கப் பட்டன. இப்படி பொதுவுடைமை ஆக்கப்பட்ட பிரபந்தங்களில் திருவாய்மொழியின் பொருளை எல்லோருக்கும் விளக்க வேண்டுமென்று பணித்தார். அதன் காரணமாக மிகச் சிறப்பு வாய்ந்த உரைகள் எழுத்து வடிவில் தோன்றலாயின. இவ்வாறாக, இராமனுசர் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்னும் ஆசாரியரைக் கொண்டு ஆளவந்தாரின் பாரிப்பை நிறைவேற்ற திருவாய்மொழிக்கு ஆராயிரப்படி என்னும் வியாக்கியானத்தை எழுதச் சொன்னார். இந்த உரையே வைணவத்தின் முதல் உரையாகும். நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, அழகிய மணவாளச்சீயர் ஆகியோர் முறையே ஒன்பதினாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி மற்றும் பன்னீராயிரப்படி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆகிய உரைகளைத் திருவாய்மொழிக்கு வழங்கியுள்ளனர். இது மட்டுமன்றிப் பெரிய வாச்சான்பிள்ளை நாலாயிரத்துக்கும் முழுமையான உரை வழங்கியுள்ளார். அதில் திருப்பாவைக்கு மூவாயிரப்படி என்ற எண்ணிக்கையில் உரை வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். திருவாய்மொழி நீங்கலாக மற்ற பிரபந்தங்களுக்கு அந்த எண்ணிக்கை இல்லை என்று இங்கே நோக்கத்தக்கதாகும். இவ்வாறு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்கே பெரியவாச்சான் பிள்ளை உரை வழங்கியதனால் ஆழ்வாருடைய பாசுரங்கள் அருளிச்செயல் என்றுப் பெயர் பெற்றதாக மணவாள மாமுனிவர்,

**பெரியவாச்சான் பிள்ளை பின்னுள்ளவைக்கும்**
**தெரிய வியாக்கியைகள் செய்வதால் – அரிய**
**அருளிச் செயற்பொருளை ஆரியர்கட்கிப்போது**
**அருளிச் செயலாய்த்தறிந்து. (வைணவ ஆசாரியர்களின் வாழ்வும் வாக்கும், பக். 292)**

என்ற பாடல் மூலம் உணர்த்துகிறார். இதற்கு உரையிட்ட சீயர்மிகவும் அரிதான பொருள்களை பெரியவாச்சான் பிள்ளை தம்முடைய உரை மூலமாக நன்றாக அறிந்து, அந்தக் கருத்தை தமது அனுபவமாகவும், பிறருக்கு உபதேசம் செய்வதன் மூலமாகவும் அருளிச்செய்தார்என்றும் இது பற்றியே “அல்லாத ஆசாரியர்களைக் காட்டிலும் இதுவன்றோ இவருக்கு வைபவம்” என்றும் உரைப்பர். இப்படியாக உரையாசிரியர்களின் மூலமாக வைணவத்தின் சிறப்புக் காணப்படுகின்றது.

ஆழ்வார்கள் பாடல்கள் தொடங்கி ஆசாரியர்களின் உரை மேம்பாட்டினால் வைணவம் உரைவளத்தால் ஏற்றம் பெற்றது என்பது பெரியோர்களின் வாக்கு. இந்த உரைகளுள் ஈட்டின் நடையழகு தனிச்சிறப்பு வாய்த்தது. பொருளுணர்வோடு பயிலப் பயிலப் பேரின்பம் பயப்பது. சொல்லாற்றல், பொருளாற்றல் அமைந்தது. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் என்னும் வனப்பு வாய்ந்தது. கூறப்புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப்பெறும் மேற்கோள் பொருள்கட்குப் பொருள் கூறும் முறை எத்தகையோரும் வியக்கத்தக்கது. பதச்சாரம் கூறுவதில் ஈட்டாசிரியருக்கு ஒத்தாரும், மிக்காரும் இத் தமிழ்நாட்டில் இலர். இங்ஙனம் மேன்மையான சிறப்பு வாய்ந்த வைணவ உரைகள் பற்றிய குறிப்புரைகளும், புத்தகங்களும், ஆய்வேடுகளுமாக நாளும் வந்த வண்ணமாக இருப்பின் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கண்ட வைணவ உரைவளம் தமிழக்கூறும் நல்லுலகில் ஏற்றதோர் இடத்தினைப் பெற்றுள்ளது. பேராசிரியர் அவர்கள் தாம் கண்ட உரைவளத்தை முதலாயிரம் என்றத் தலைப்பிட்டு பெரியாழ்வார் திருமொழி (1-5), திருப்பாவை (6), நாச்சியார் திருமொழி (7-9), பெருமாள் திருமொழி (10), திருச்சந்தவிருத்தம் (11), திருமாலை (12-17), அமலனாதிபிரான் (18-22) என்ற அடிப்படையில் 22 பாடல்களுக்கான விளக்கமும், அடுத்து பெரிய திருமொழி என்றுத் தலைப்பிட்டு முதல் பத்து (24-26), இரண்டாம் பத்து (27-40), மூன்றாம் பத்து (41-50), நான்காம் பத்து (51), ஐந்தாம் பத்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

(52-60), ஆறாம் பத்து (61-68), ஏழாம் பத்து (69-75), எட்டாம் பத்து (76-87) ஒன்பதாம் பத்து (88-94), பத்தாம் பத்து (95-100), பதினோராம் பத்து (101-102), திருநெடுந்தாண்டகம் (103105) அடுத்து திருவாய்மொழி என்ற உட்தலைப்போடு முதல் பத்து (106124) இரண்டாம் பத்து (125-136), மூன்றாம் பத்து (137-153), நான்காம் பத்து (154-169), ஐந்தாம் பத்து (170-182), ஆறாம் பத்து (183-202), ஏழாம் பத்து (203222), எட்டாம் பத்து (223-226) ஒன்பதாம் பத்து (227-239), பத்தாம் பத்து (240254), இயற்பா என்ற தலைப்போடு முதல் திருவந்தாதி - 555 என்ற வகைப்பாட்டில் தனியாகப் பிரித்து தொகுத்து உரை வகுத்து பேராசிரியர் அவர்கள் இந்த வைணவ உரைகளில் அதாவது வியாக்கியானங்களில் காணப்பெறும் ஐதிகங்கள், இதிகாசங்கள், சம்வாதங்கள் முன்னிருத்தி ஏடாக்கம் செய்துள்ளது தனிச் சிறப்பு.

**வியாக்கியானங்களின் சிறப்பு**

திவ்வியப்பிரபந்தங்களுக்கு அமைந்துள்ள வியாக்கியானங்கள் அனைத்துமே வியக்கத்தக்க வகையில் அமைந்துள்ளன. இதற்கு முன்னர் பல்வேறு நூல்களுக்கு இயற்றப்பட்டிருந்த எந்த உரைகளிலும் கையாளப்படாத பல உத்திகள் வைணவ உரையாசிரியர்களால் கையாளப் பெற்றுள்ளன. நான்கு வரிகளில் அமைந்துள்ள பாசுரங்களுக்கு மிக மிக விரிவான முறையில் விளக்கமான உரைகள் வைணவ உரையாசிரியர்களால் மட்டுமே எழுதப்பெற்றுள்ளன என்பதனைக் கண்கூடாகக் காணலாம். பல்வேறு ஆசாரியர்களால் இயற்றப்பட்டவையாக அமைந்திருந்த போதிலும், அவ்வுரைகள் அனைத்தும் சில பொதுவான தன்மைகளைக் கொண்டவைகளாக அமைந்துள்ளன. பிள்ளான் தொடங்கி, மணவாளமாமுனிகள் வரை ஆசாரியர்கள் அனைவராலும் எழுதப்பட்ட உரைகள் அனைத்தும் வடமொழியும், தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையிலேயே அமைந்துள்ளன. வேதங்கள், உபநிடதங்கள், ஸ்ம்ருதிகள், இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள் முதலிய பல நூல்களிலிருந்தும், தமிழிலியங்களில் இருந்தும் மேற்கோள்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. ஆங்காங்கே விசிஷ்டாத்தைக் கொள்கைகளைப் பற்றிய விளக்கங்கள் மிக நுணுக்கம்கவும் அதே சமயத்தில் மிகத் தெளிவாகவும் கூறப்பட்டுள்ளன.

**ஐதிகங்கள் நிர்வாகங்கள்**

ஐதிகங்கள் நிர்வாகங்கள் என்னும் வகையில் மேற்கூறிய எல்லாவற்றையும் விட மிகச்சிறந்த உத்தியாக வைணவ உரையாசிர்களால் கையாளப்பட்டுள்ளது. வைணவ உரையாசிரியர்கள், தங்கள் காலத்திலும், தங்கள் காலத்திற்குச் சிறிது முற்பட்ட காலத்திலும் வாழ்ந்திருந்த ஆசாரியர்கள் திருப் பெயர்களைத் தங்கள் உரைகளில் இடம்பெறச் செய்திருப்து குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதற்கு முன்னர் அமைந்த எந்த உரையிலும் இப்படிப்பட்ட உத்தியானது எவராலும் கைகொள்ளப்படவில்லை என்றே கூறலாம். பொதுவாக ஒரு நூலுக்கு உரை எழுதுபவர்கள், தனிப்பட்ட நபர்களைப் பற்றி அவ்வுரையில் குறிப்பிடுவது கிடையாது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பது வழக்கு. ஆனால், வைணவ உரையாசிரியர்கள் தங்கள் காலத்திலும், தங்கள் காலத்திற்குச் சற்று முற்பட்ட காலத்திலும் எழுந்தருளியிருந்த ஆசாரியர்களுடைய திருப்பெயர்கள் தங்கள் வியாக்கியானங்களில் ஆறு வகைகளில் இடம்பெறச் செய்துள்ளனர். அவை 1. ஐதிகம் 2. நிர்வாகம், 3. வார்த்தை, 4. சம்வாதம், 5. உதாரணம், 6. மேற்கோள்கள் என்றவாறு:

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தாம் ஆக்கம் செய்த உரைவளத்தில் இச்சிறப்பு வாய்ந்த வியாக்கியானங்களில் ஐதிகங்கள், இதிகாசங்கள், சம்வாதங்கள் என்ற வகைப்பாட்டில் உள்ளார்ந்த பொருள் நயத்தை வெளிக் கொணர்ந்துள்ளது தனிச்சிறப்பாக அமைகின்றது. அதன்படி,

**மெச்சூது சங்க மிடத்தான் நல் வேயூதி**
**பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்**
**பத்தூர் பெறாதன்று பாரதம் கைசெய்த**
**அத்தூதன் அப்பூச்சி காட்டுகின்றான்**
**அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான் (வைணவ உரைவளம், பக். 112, பெரியாழ்வார் திருமொழி பாசுரம், 2.1.1)**

இப்பாசுரத்தில் உரையாசிரியர் கையாண்டுள்ள ஐதிகம் பின்வருமாறு எடுத்தியம்பட்டுள்ளது. அதாவது கண்ணன் அப்பூச்சி காட்டுதல் பற்றிக் கூறும் பெரியாழ்வார் திருமொழியில் முதல் பாசுரம் இது. அப்பூச்சி காட்டு கதையாவது - கண்ணனை இறுத்துவது, மயிரால் முகத்தை மறைத்துக் காட்டுவது, முதலாகச் செய்யும் பயங்கர பால சேஷ்டைகள், சிறு பிள்ளைகள் பூச்சி காட்டி விளையாடுவதைப் போல் கண்ணபிரானும் தான் மானுடனாகப் பிறந்ததற்கேற்பப் பூச்சி காட்டி விளையாடியதை அக்காலத்திலுள்ள இடைப்பெண்கள் கண்டு அனுபவித்து உகந்தாப்போலே, பெரியாழ்வாரும் சிறந்த சிந்தனையாலே அச்சேஷ்டிதத்தை நேர்க்காட்சியாகக் கண்டதுபோல் கண்டு அனுபவித்து இனியராவதைக் காட்டும் திருமொழி இது. இதில் 'அத்தூதன் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றேன்' என்ற ஈற்றடியைக் குறித்து ஓர் ஐதிகம். இப்பாசுரத்தை நம் பெருமாள் சன்னதியில் உடையவர் குழுவில் உய்ந்த பிள்ளை என்ற பெயர் கொண்ட அரையர் ஒருவர் அபிநயத்துக்காட்டும்போது 'அத்தூதன்' என்னும் போது கண்ணபிரானையும், "அப்பூச்சி என்னும் போது கண் இமையை மடக்கிக் கொண்டு வருவதையும் காட்டி அபிநயித்தார். அப்போது உடையவரின் பின்புறம் எழுந்தருளியிருந்த எம்பார் என்னும் ஆசாரியர் தம் திருக்கைகளைத் திருத்தாள்களோடு சேர்த்துக் காட்ட, அரையரும் தாம் முன் அபிநயத்தைவிட்டு எம்பார் காட்டியதைப்போலவே எம்பெருமான் திருத்தோள்களில் சங்கு சக்கரங்கள் தரித்துக் கொண்டிருப்பதை அபிநயித்துக் காட்டினார். இதனைக் கண்ட உடையவர் மிகவும் மனமுவந்து கோவிந்தப் பெருமாள் இருந்தீரோ?

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்றாராம். இதனால் ஏற்படுவதாவது - தூதனாய்த் தன் சௌலப்பியத்தை வெளியிட்டு 'நம்மிலே ஒருவர்" என்று இவ்வுலகத்தவர் கொள்ளும்படி இருப்பவன் அவர்கள் அஞ்சும்படி சில காலங்களில் ஈசுவரத்துவ சின்னங்களை காட்டுகின்றான் என்று நடந்த நிகழ்வுகளை ஐதிகங்கள் என்றபடியாக செம்மையாக்குவர். மேலும், ஐதிகங்கள் பல கண்டறிந்த நிலையில் ஆழ்வார்களில் பாணர் குலத்தைச் சார்ந்த திருப்பாணாழ்வார் தாம் அருளிய அமலனாதிபிரான் பிரபந்தத்தில் முதல் பாசுரத்திற்கு அமைந்த உரையில் நிறைந்த ஐதிகத்தை வெளிப்படுத்துவது சிறப்பு. அதாவது,

**அமலனாதிபிரான் அடியார்க்**
**கென்னை ஆட்படுத்த**
**விமலன் விண்ணவர் கோன்விரை**
**யார்பொழில் வேங்டவன்**
**நிமலன் நின்மலன் நீதிவானவன்**
**நீள்மதிளரங்கத் தம்மான் திருக்**
**கமல பாதம்வந் தென் கண்ணி**
**னுள்ளன வொக்கின்றதே (வைணவ உரைவளம், பக். 93, அமலன் - 1)**

பெரியபெருமாள் திருவடிகளில் அழகுமேல் விழுந்த தம்மைப் பரவசமாக்கியவாறு கூறுகின்றார் ஆழ்வார். இதில் அமலன், விமலன், நிமலன், நின்மலன் என்ற நான்கு சொற்களுக்கும் பொருள் ஒன்றே! தாத்பரிய பேதம் மட்டுமே கொள்ள வேண்டும். அமலன் - தாழ்ந்த வகுப்பினரான தாம் சன்னதிக்குள்ளே புகுவதனால் பெருமாளுக்குப் பெரிய குற்றம் உண்டாகி விடும் என்று அஞ்சியிருந்தார். அந்த ஐயம் தவிர்ந்தமை தோற்ற 'அமலன்' என்கிறார்.

- விமலன் - தமது சிறுமையை நோக்காதே தம்மைப் பாகவதர்க்கு ஆட்படுத்தி ஒரு சீரிய பொருளாக ஆக்குகையாலே எம்பெருமானது திருமேனியிற் பிறந்த ஓர் அழகிய புகழ் அனுபவிப்பதால் 'விமலன்' என்றார்.
- 'நிமலன்' - பிரமன், சிவன் முதலானோரும் அஞ்சி அணுக வேண்டும்படியான ஐசுவரியம் இருக்கச் செய்தேயும் அடியார்க்கு எளியனாயிருக்கும் தன்மையை வெளியிட்டு நிற்குமவன் என்பார் 'அதனால்' 'நிமலன்' என்றார்.
- 'நின்மலன்' - அடியார்களின் குற்றங்களைக் காண்கையாகிற குற்றமில்லாதவன் என்றபடி, அடியார்களுடைய குற்றங்களைக் கண்டாலும், அவற்றை போக்கியமாகக் கொள்பவனல்லவா எம்பெருமான் எனவே 'நின்மலன்' என்கின்றார்.

**ஐதிகம்**

பிள்ளை திருநறையூர், அரையரைச் சிலர் "பெரிய பெருமாளை அனுபவிக்க இருந்த இவ் ஆழ்வாரினர் திருவேங்கடமுடையான் பக்கல் போவானேன்?" என்று கேட்க, "ஆற்றிலே

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அழுந்துகிறவன் ஒருகாலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ என்று கால் தாழ்க்குமாப் போலே, இவரும் பெரிய பெருமாள் அழகிலே அழுந்துகின்றவராகையாலே, திருமலையில் கால் தாழ்ந்தார்" என்றாராம். "ஒருவனைக் கவிபாடும் போது அவனுடைய வரலாறு சொல்லிக் கவிபாட வேணும். பரமபதத்தில் நின்றும் வடமதுரையிலே தங்கி திருவாய்ப்பாடிக்கு வந்தாப்போலே வைகுண்டத்தில் நின்றும் திருமலையிலே தங்கி அடுத்து கோயிலுக்கு வந்தது. அதாவது ஸ்ரீரங்கத்திற்கு வந்தது அவ்வரலாற்றைப் பாடுகிறபடி" என்றும் ஒருகால் அருளிச் செய்தாரம் என்று ஐதிகம் கூறுவது தனித்துவம் நிறைந்த ஒன்றாக அறியப்படுகிறது. மேலும், உரைகளில் தாம் பெற்ற அனுபவத்தை காட்டும் பேராசிரியர் திருப்பாவை ஜீயர் எனப் போற்றப்படும் இராமனுசரின் மேன்மை ஐதிகமாக இடம் பெற்றிருப்பதை எடுத்து இயம்பியுள்ளார். அதாவது,

**உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்**
**நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!**
**கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்!**
**வுந்து எங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்**
**பந்தர்மேல் பல்கால் குயில் இனங்கள் கூவினகாண்**
**பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்**
**செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப**
**வந்து திறவாய் மகிழ்ந்து ஏலோர் எம்பாவாய் (வைணவ ஆசாரியர்களின் வாழ்வும் வாக்கும், பக். 155, பா. 18)**

இது ஆயர் சிறுமிகள் நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்ற பாசுரம். இங்கு ஏம்பெருமானார் ஐதிகம் பின்வருமாறு காட்டப்பட்டுள்ளது. இராமனுசரைத் திருப்பாவை ஜீயர் என்றுப் பெருமையாகப் பேசுவவதுண்டு. காரணம் ஆண்டாள் அருளிய திருப்பாவைமீது இவருக்கு தனி ஈடுபாடு. இவர் மடாதிபதியாக இருந்தபோதும் கூட தாம் மேற்கொண்டிருந்த துறவு நெறிக்கு இணங்க, பிச்சை எடுத்துப் பசி தீர்த்துக் கொள்வார். பிச்சை எடுக்கப்போகும் போது திருப்பாவை பாசுரங்களை ஓதிக்கொண்டே செல்வார். ஒரு நாள் உந்து மதகளிற்றன் என்ற மேற்குறிப்பிட்ட திருப்பாவை பாசுரத்தை ஓதிய வண்ணம் பெரிய நம்பிகளின் திருவாசலை நெருங்கி வந்தார். அங்கு வருவதற்கு முன் பாசுரத்தில் பாதிக்குமேல் ஓதி முடிந்தது.

ஆண்டாள் தம் கால எல்லையை மானசீகத்தால் கடந்து கண்ணன் அவதரித்த காலத்துக்குச் சென்று தம்மை கோபியருள் ஒருத்தியாகக் கருதிக் கிருஷ்ணானுபவம் பெறுகின்றாள். இராமனுசரும் ஆண்டாள் பாசுரத்தை ஓதி உளங் கரைந்து அதே அனுபவத்தைப் பெறுகின்றார். இதை உளவியலார் 'ஒட்ட உணர்தல்' (Empathetic feeling)

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்றுக் கூறுவர். இங்கு ஆண்டாளும், இராமனுசரும் கோபியருள் ஒருவராகவே ஆகிவிடுகின்றனர். இருவரும் கோபியரின் உணர்ச்சியை பெரிதும் பெறுகின்றனர்.

**இதிகாசங்கள்**

வைணவ வியாக்கியானங்களில் அச்சமயத்தின் உயர்நிலைக் கோட்பாடு, வழிவழியாக வந்த மரபுநிலை, திருமாலின் அவதார மாண்புகள் விசிட்டாத்து வைத்தத்தின் தத்துவ நுட்பத்தோடு வடமொழியில் உள்ள வேதம் உபநிடதம், புராணம், இதிகாசம் முதலியவற்றிலிருந்து கணக்கற்ற மேற்கோள்களை காட்டிப் பல கருத்துகள் விளக்கம் பெற்றுள்ளன. ஆழ்வார் பாடல்களின் கருத்தையும் அவற்றின் உள்ளுரைக் கருத்தையும் சமய நோக்குடன் ஆராய்ந்து தம் நுண்ணறிவு தோன்ற உரையாசிரியர்கள் விரித்துரைத்துள்ளனர். வால்மீகி இராமயணத்தின் கதைப் போக்கையும் பொருளையும் சிறப்புடன் பல இடங்களில் எடுத்துக்காட்டி அந்நூலை வைணவ சமயத்திற்கு ஒரு சிறந்த பிராமண நூலகவே காட்டியுள்ளனர். அதன் மூலமாகத் தமக்கு உள்ள இலக்கிய படைப்புத் திறனையும், வளமான கற்பனை ஆற்றலையும் புலப்படுத்தியுள்ளனர். ஆழ்வார்கள் பாடல்களில் தோய்ந்து அவர்கள் கூறும் இராமன் கதையிலும் திருமாலின் அவதாரக் கதையிலும் ஈடுபட்டுள்ளனர். விஷ்ணு புராணம், பாகவதம் ஆகியவற்றிலும் மூழ்கி நனைந்திருக்கின்றனர். இவை எல்லாம் வியாக்கியான உரையாசிரியர்களின் சிந்தனையை வளர்த்துள்ளன. படைக்கும் திறனை பெருக்கியுள்ளன என அறியலாம். அந்த வகையில் இதிகாசங்களைப் பற்றி நோக்கும்போது,

**புரங்கள் மூன்றுமோர் மாத்திரை போதில்**
**பொங்கெரிக்கிரை கண்டவன் அம்பின்**
**சரங்களேகொடி தாயடு கின்ற**
**சாம்பவானுடன் நிற்கத் தொழுதோம்**
**இரங்கு நீயெமக் கெந்தைபிரானே!**
**இலங்கு வெங்கதிரோன்றன் சிறுவா!**
**குரங்கு கட்கரசே! எம்மைக் கொல்லேல்!**
**கூறினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ! (வைணவ உரைவளம், பக்.198, பெரிய திருமொழி பா. 10.3.9)**

புரங்கள் மூன்றும் பொங்கெரிக்கிரை கடை: இதில் உள்ள இதிகாசம், முற்காலத்தில் தாரகாசுரனுடைய புதல்வர்களான வித்யுமாலி, தாரகாட்சன், கமலாட்சன் என்னும் மூவரும் மிக்க தவம் செய்து பரமனிடம் பெருவரம் பெற்று வானத்துப் பறந்து செல்லும் தன்மை வாய்ந்த மூன்று பட்டணங்களை அடைந்தனர். மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்தவிடங்களில் பறந்து சென்று பல இடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கி வந்தனர். இத்துன்பத்தை பொறுக்கமாட்டாத தேவர், முனிவர் முதலானாருடைய

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைத் தேர்ச் சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரம்மனைச் சாரதியாகவும், மகா மேருவை வில்லாகவும், ஆதிசேடனை வில் நாணாகவும், திருமாலை வாயுவாகிய சிறகமைத்து அக்னியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக் கொண்டு போருக்குத் தயாராக் சென்று போர் தொடங்கும் போது சிரித்து அச்சிரிப்பினின்று உண்டான தீயினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன் என்றுக் குறிப்பது தொன்மையின் சிறப்புக்குச் சான்று. இங்ஙனமாக இதிகாசச் செய்திகள் மக்கள் விளக்கம் பெறுவதற்கு ஏற்ப சான்றாக அமைகின்றன. மேலும், வைரக்குவியல்களைப் போன்ற நிறைந்துக் கிடைக்கும் இதிகாசச் செய்திகளை ஆசாரியர்களின் பார்வையில் நோக்கும் பொழுது பெரிய திருமொழி பாசுர வியாக்கியானத்தில் பின்வருமாறு கூறுவதனை அறியலாம்.

**தருமான மழைமுகிலைப்**
**பிரியாது தன்னடைந்தார்**
**வருமானம் தவிர்க்கும்**
**மணியை அணியுருவில்**
**திருமாலை அம்மானை**
**யமுதத்தைத் கடல்கிடந்த**
**பெருமானை, அடியேன்**
**அடைந்துய்ந்து பிழைத்தேனே (நினைவுக்குமிழி, பக்.214)**

அதாவது, இப்பாடல் திருக்கண்ணபுர மங்களாசாசனப் பதிகத்திலுள்ள ஒரு பாசுரம். “சௌரிராசன் திருவடியை அடைந்து உய்ந்து பிழைத்தேன் என ஆழ்வார் பாரிக்கின்றார். இதனை மையப்படுத்தி வியாக்கியனத்தில் அமைந்துள்ள இதிகாசத்தை நோக்கும்போது, சூரிய வமிசத்து அரசர்களில் அம்பரீஷன் என்பான் ஒருவன்; இவன் பரமபகவத் பக்தன். இவனைப் பாதுகாக்க எம்பெருமான் தன் திருவாழியாழ்வானை எப்போதும் இவ்வரசனுடைய மாளிகையிலேயே கோயில் கொண்டிருக்கும்படி வைத்திருந்தான் என்பர். அடுத்து, இவன் பாகவதாராதன துவாதசி விரதமொன்றை அநுட்டித்து வந்தான். இந்த விரதம் முடிவாகும் துவாதசியன்று சிறப்பாக அந்தணர்கட்குத் தட்சிணை கொடுத்து அவர்களுடைய நியமனம் பெற்றுக்கொண்டு முதலுணவு பண்ணப்புகும் அளவில் தூர்வாச முனிவர் அதிதிபூசை பெற்றுக்கொள்ள அங்கு வந்து சேர்ந்தார். மிகச் சிறந்த தபோநிதியாகிய இந்த அதிதி எழுந்தருளினதைக் கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டு உபசாரங்களை விதிப்படி நடத்தினான். பின்னர் தாரண கோஷ்டியில் கலந்து கொள்ளுமாறு வேண்டினான். முனிவரும் அதற்கிசைந்து ‘மாத்யாஹ்திக அநுட்டானங்களை நிறைவேற்றி வருகிறேன் என்று கூறி யமுனைக்குச் சென்றார். சென்றவர் அனுட்டானங்களில் மிக ஊன்றித் தாமதிக்கையில் துவாதசித் திதி கழிந்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

போகும் தருணம் வரவே, சங்கல்ப பூர்வமாக இந்த விரதத்தை அனுட்டித்து வந்து அரசன் 'துவாதசி திதி முடிவதற்கு முன்பு பாரணை செய்யாவிடில் விரதத்திற்குக் குறைவு வரும்; எழுந்தருளின அதிதியை அலட்சியம் செய்து பாரணை செய்தால் பெரும் பாவம் விளையும்; இங்ஙனம் தர்ம சங்கடமாக நேர்ந்து விட்டதே! இதற்கு என்ன செய்வோம்! என்று மிக்க கவலை கொண்டான். வல்லவர்களான அந்தணர்களைக் கலந்து ஆலோசித்து அவர்கள் சொற்படி தீர்த்த பாரணை செய்துவிட்டு பிரசாத பாரணைக்காக தூர்வாச முனிவரை எதிர்பார்த்திருந்தான். தாமதித்து வந்த முனிவர் தம்மை அவமதித்து அரசன் தீர்த்த பாரணை செய்துவிட்டதாகக் கருதி மிகுந்த சீற்றங்கொண்டு தம் தலையிலிருந்து ஓர் கடைமயிரைக் களைந்தெடுத்து அதனால் காலாந்நியோடொத்த ஒரு பெண் பூதத்தை உண்டாக்கி அம்பரீஷனை நலியுமாறு ஏவினார். மிகப் பயங்கரமாய்த் தன்னை நோக்கி விசைத்து வருகின்ற அதனைக் கண்டும் அம்பரீஷன் சிறிதும் மனங்கலங்காது எம்பெருமானையே சிந்தித்திருந்தான். இவனுடைய பாதுகாவலின் பொருட்டு மாளிகையில் நிறுவப் பெற்றிருந்த சக்கரத்தாழ்வான் அந்தப் பூதத்தை நீராக்கி விட்டது அல்லாமல் தூர்வாச முனிவரையும் தொடரத் தொடங்கியது. முனிவர் எத்திசையும் உழன்றோயும் புகல் பெறாமல் திருமால் திருவடிகளில் வந்து விழ, சீமந் நாராயணனும் "அம்பரீஷர் திருவடியே உமக்குப் புகல்" என்று காட்டிக் கொடுக்க, முனிவரும் அரசனையே சரணம் புகுந்து உயிர் பிழைத்து வாழ்ந்தார் என்பது செய்தியாக அமைகின்றது.

திருவேங்கமுடையினைப் பற்றிய திருவாய்மொழி பாசரம் நோக்கும் போது,

**வேங்கடங்கள் மெய்ம்**
**மேல்வினை முற்றவும்**
**தாங்கள் தங்கட்கு**
**நல்லனவே செய்வார்**
**வேங்கடத்துறை**
**வார்க்கு நமவென்னல்**
**ஆங்கடமை,**
**அதுசுமந்தார்கட்கே (நினைவுக்குமிழி, பக். 284, திருவாய்மொழி, 336)**

உரையாசரியர்கள் ஆசாரியர்கள் தம் ஞானத்தின் வெளிப்பாட்டை வரியாக்கமாகப் மொழிந்துள்ளதைக் இங்குக் காணமுடிகிறது. அதாவது, திருவேங்கட முடையானுக்கு அடிமை செய்ய வேண்டும், என்பதைப் பற்றிய திருவாய்மொழியில் ஒரு பாசுரமாக மேலே குறித்த பாசுரம் அமையும். இதில் ஆழ்வார், "திருவேங்கடத்தில் எழுந்தருளி இருக்கின்றவர்க்கு வணக்கம் என்று சொல்லுதல் எளிதில் செய்யக்கூடிய காரியமாக முன்னிருத்துகின்றார். அதனைச் சுமந்தவர்கட்கு தீர்க்கக்கூடிய கடன்களும் சரீர சம்பந்தம் காரணமாக வருகின்ற நல்வினை தீவினைகளும் வெந்து அழிந்து விடும்; அடியார்களாகிய தாங்கள், தங்கட்குத்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தக்கதான கைங்கர்யத்தையே செய்வார்கள் என்பர். இங்ஙனம் அருமையான ஆக்கங்கள் எண்ணிலடங்கா வண்ணம் உரைகளில் நிறைந்திருப்பது தமிழ் சமுதாயத்திற்கு நற்பெருமை.

**சம்வாதம்**

ஆழ்வார்களுடைய பாசுரங்களை உள்வாங்கி அவற்றில் நிறைந்துள்ள கருத்தை விளக்கி வரும்போது, ஆங்கே சில ஐயங்கள் எழுவது இயற்கையே ஆகும். அப்போது, அங்கே ஆசாரியர்களுக்கு இடையே அவ்வையம் குறித்து நடைபெற்ற உரையாடல்கள் குறிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக, மாவலி வேள்வியில் தக்கது இது அன்று என்று தானம் விலக்கிய சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய சக்கரக்கையன் என்று பெரியாழ்வார் அருளிச்செய்துள்ளார். வந்திருப்பவன் உண்மையில் யாசகன் அல்லன் என்ற உண்மையைச் சொன்ன சுக்கிரன் கண்ணை இழந்தான்; தானம் கொடுத்த மகாபலி ராஜ்ஜியத்தை இழந்தான்; இது ஏன்? என்று சீடர் கேட்க ‘இருவருக்கும் இரண்டு குற்றங்கள் உண்டு; தானத்தை விலக்கியது சுக்கிரனுடைய குற்றம், ஆசாரியன் சொன்னதைக் கேளாதது மகாபலியின் குற்றம்’ என்று ஆசாரியர் பதிலுரைத்ததாக ஒரு உரையாடலை உரையாசிரியர் எடுத்துக்காட்டுகின்றார். இப்படிப்பட்ட உரையாடல்கள் சம்வாதங்கள் எனப்படுகின்றன. அதன்படி கூரத்தாழ்வானின் திருக்குமரரான பட்டருக்கும் சிறியாத்தான் என்பவருக்கும் இடையே நடந்த சம்வாதம் பற்றிய கருத்தை பின்வரும் பாசுரத்தின் வழி அருளப்பட்ட உரையின் வழி அறியலாம்.

**முன்னோர் தூது வானரத்தின்**
**வாயில் மொழிந்து அரக்கன்**
**மன்னூர் தன்னை வாளியினால்**
**மாள முனிந்து, அவனே**
**பின்னோர் தூது ஆகிமன்னர்க்**
**காகிப் பெருநிலத்தார்**
**இன்னார் தூதன் எனநின்றான்**
**எவ்வுள் கிடந்தானே (உரையாசிரியர்கள், பக். 312)**

திருஎவ்வுள்ளூர் மீது மங்களசாசனம் செய்யப் பெற்ற பெரிய திருமொழிப் பாசுரம், “திருஎவ்வுள் சயனத்திருக்கோலத்தில் உள்ள எம்பெருமான் யார்? என்னில்; திருவடிக்குத் தூது உரைத்தும், இலங்காபுரியை அழித்தவனும் ஆகிய இராமபிரானும், பாண்டவர்க்காக ஓலை எடுத்துக்கொண்டு தூதுபோன கண்ணபிரானுமே ஆவர் என்பது ஆழ்வாரின் வெளிப்பாடு.

உரையாசிரியர்களில் பட்டர் மேன்மையான ஆக்கத்தைக் கொண்டவர். கூரத்தாழ்வானின் திருக்குமரரான இவர் இராமாவதாரத்தில் அளவற்ற பட்சபாதம் கொண்டவர் என்பது எல்லோரும் அறிவர். சிறியாத்தான் என்பவர் பட்டருடைய அருளிச் செயல்களைக் கேட்க விரும்பி ஒரு நாள் அவர் சந்நிதியிலே விடை கொண்டு “சக்கரவர்த்தித் திருமகனாருக்கு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எல்லா ஏற்றமுண்டேயாகிலும், அன்பர்கட்காகக் கழுத்திலே ஓலைக் கட்டித் தூதுபோன ஏற்றமில்லையே அந்த ஏற்றம் கண்ணபிரானுக்கே அன்றோ உள்ளது “என்று கேட்க, அதைப் பட்டர் கேட்டருளி “ஓய்; குணக்கடலாகிய இராமபிரானுக்கு தூதுபோதல் அநிஷ்டம் அன்று காணும்; இட்சுவாகு வம்சத்திலே சார்வபௌவிமனாகப் பிறந்தானாரையாலே இராமன் தூது போகப் பெற்றிலனந்தனை; அந்த அவதாரத்திலே திருவடி அங்கும் இங்கும் போவது வருவது வருவதுமாய்க் கொண்டு தூதுகிருத்தியஞ் செய்து வார்த்தை சொல்லித்திரிந்த ஏற்றத்தைக் கண்டு ‘நாமும் இப்படி அண்டினவர்களுக்காக தூது போகப் பெற்றிலோமே’ என்று திருவுள்ளம் குறைபட்டு அக்குறை தீருகைக்காகவே பின்னை இழிகுலத்தில் வந்து பிறந்து தூது சென்றான், சத்திரியன் என்று நிச்சயிக்கில் தூது போக விடமாட்டார்கள் என்று அதனை மறைந்து வளர்ந்தான் காணும் என்றுச் சொல்லி அபிஷிக்தக்ஷத்திரிய குலத்திலே பிறந்தால் ‘தூது போ’ என்று ஒருவருக்கும் நா எழதிறே என்று அருளிச்செய்தார் என்று அறியலாகின்றது. இருவருக்குமான இந்த சம்வாதத்திற்கு இந்தப் பாசுரம் மூலமாக அமைகின்றது. மேலும், திருவாய்மொழிப் பாசுரத்தில் அமைந்த சம்வாதம் நோக்கும் போது அதில் பட்டர் அனந்தாழ்வான் சம்வாதம் இடம் பெற்றுள்ளதை காணமுடிகின்றது.

**முடிவுரை**

தமிழ்ச் சான்றோர்களாய் உலகத்தால் என்றும் போற்றப்படும் ஆழ்வார்கள். அருளிய செந்தமிழ்ப் பாக்கள் உலகம் உள்ளவரை செழித்து நிற்கும். இப்பாசுரங்களுக்கான வியாக்கியானங்கள் என்றுப் போற்றப்படும் உரைகளாய் பண்டைய தமிழ்ச் சமுதாயத்திற்கான வரலாற்றுப் பதிவுகள். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் அரியத் தொண்டாய் வைணவப் படைப்புகள் உலகளவில் வலம் வருவது கண்கூடு. குறிப்பாக இவ்வாழ்வுக் கட்டுரையில் வைணவ உரைவளத்தில் அவர் கண்டறிந்த ஐதிகங்கள் இதிகாசங்கள் மற்றும் சம்வாதங்கள் செவ்வனே எடுத்தியம்பப்பட்டுள்ளன.

**குறிப்பு நூல்கள்**

[1] ந.சுப்புரெட்டியார். *வைணவ உரைவளம்.* வேங்கடம் பதிப்பகம், சென்னை - 1985.
[2] மு.வை. அரவிந்தன். *உரையாசிரியர்கள்.* மணிவாசக நூலகம், சிதம்பரம், 1977.
[3] வரதராசனார்.மு. *தமிழ் இலக்கிய வரலாறு.* சாகித்ய அகாதமி, புதுடெல்லி, 1972.
[4] வேங்கடகிருஷ்ணன், எம்.எ. *வைணவ ஆசாரியர்களின் வாழ்வும் வாக்கும்,* கீதாசார்யன் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை - 2003.
[5] கே.ஏ.மணவாளன். *ஆண்டாள்.* சாகித்ய அகாதெமி, புது தில்லி, 1990.
[6] திரு. வி. கலியாணசுந்தரனார். *தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு.* பாரி நிலையம் சென்னை, 1990.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

[7] பூ.சு கணேஷ்மூர்த்தி. *திருமைக்கோயில் ஒழுகலாறுகளும் திருவிழாக்களும்.* டுடே பப்ளிகேஷன்ஸ், பெல்ஸ் சாலை, சென்னை, 2009.

[8] மா.வரதராஜன். *வைணவ விளக்கு.* ஸ்ரீ அனந்த் பதிப்பகம், திருச்சானூர், திருப்பதி, 1994.

[9] உ.வே. கோழியாலம் சடகோபாசாரியர். *திருவேங்கடவன் நூற்றெட்டு திருநாமங்கள்.* அயக்கிரிவா பதிப்பகம், சென்னை, 2017.

[10] ந. சுப்புரெட்டியார். *காஞ்சி பிரதிவாதி பயங்கர அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்.* அவ்வை பதிப்பகம், அசோக் நகர், சென்னை, 2004.

[11] பா.ர.கோவிந்தராச முதலியார். *ஆழ்வார்கள் வரலாறு.* கழக வெளியீடு, சென்னை, 1975.

[12] என்.எஸ்.கிருஷ்ணன் ஸ்வாமி. *அருளிச்செயல் அமுதமும் தொல்புகழ் அமுதமும்.* வரமங்கை பதிப்பகம், சென்னை, 2010.

[13] மதி.சீனிவாசன். *அருளிச் செயல் அமுத ஊற்று.* மாறன் அருள்நெறி வெளியீடு, திருவல்லிக்கேணி, சென்னை, 2013.

[14] ப. தனஞ்செயன். *திருப்பாணாழ்வார் அருளிய அமலனாதிபிரான் - ஓர் ஆய்வு.* பட்டு பாஸ்கர், ஏ.கே.பேடு, நாகலாபுரம், சித்தூர், 2001.

[15] தமிழ்த்துறை, தியாகராயகல்லூரி. *ஸ்ரீ ராமானுசரின் ஆன்மிக ஒருமைப்பாடு.* சென்னை, 2017.

## References

[1] N. Subbu Reddiar. Vainava Urai Valam. Vengadam Padippagam, Chennai, 1985.
[2] Aravindan. Mu. Vai, *Uraiyasiriyargal*. Manivasaga Nulagam, Sidambaram, 1977.
[3] Varadarasanar. Mu. *Tamil Ilakkiya Varalaru*. Sahitya Academy, New Delhi, 1972.
[4] Venkatakrishnan M. A. *Vainava Achayargal Vazvum Vakkum*, Geetha Charyan Padippagam. Tiruvellikeni, Chennai, 2003.
[5] K.A. Manavalan. *Andal*. Sahitya Academy, New Delhi, 1990.
[6] Thiru.Vi. Kalyanasundaranar. *Tamilsolai Alladhu Katturai Tirattu.* Parinilayam, Chennai, 1990.
[7] Pu.Su.Ganeshmoorthy. *Tirumalaikkoil Ozhukalarukalum Tiruvizhakkalum*. Today Publication, Bels Salai, Chennai, 2009.
[8] Ma. Varadarajan. *Vainava Vilakku.* Sri Ananth Publication, Tiruchanur, Tirupati,1994.
[9] U.Ve. Kozhiyaalam Sadagopachariyar. *Tiruvengadvan Nutriettu Tirunamangal.* Hayagriva Padippgam, Chennai, 2017.
[10] Na.Subbu Reddiar. *Kanchi Piradhivadi Payngara Annangaraaraccharya Swamigal*. Avvai Padhippagam, Ashok Nagar, Chennai, 2004.
[11] Pa.Ra.Govindarasamudaliyaar. *Azvargal Varalaru*. Kalaga Veliyeedu, Chennai, 1975.
[12] N. S. Ramakrishnan Swamy. *Aruli Seyal Amudamum Tholpugal Amudamum*, Varamangai Padippagam, Chennai, 2010.
[13] Mathi.Sinivasan. *Aruliseyal Amuda Utru.* Maran Aruneri Veliyeedu, Tiruvallikkeni, Chennai, 2013.
[14] Pa. Dhananjeyan. *Tiruppanazvar Aruliya Amaladi Piran – Or Ayvu*, Pattu Baskar, A.K.Pedu, Nagalapuram, Chiittoor, 2001.
[15] Tamil Department, Thiyagaraya College. *Sri Ramanujarin Anmiga Orumaippadu*, Chennai, 2017.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

# தமிழ் இலக்கியங்களில் அறம், நீதி, முறைமை - அறத்தொடு நிற்றல்

## Virtue, Justice, System in Tamil Literature – Araththodu Nirral (With Charity)

**முனைவர் ம. தனப்பிரியா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கலை அறிவியல் தமிழ்க்கல்லூரி, கோவை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. M. Dhanapriya,** Assistant Professor of Tamil,
Thavathiru Santhalinga Adigalar Arts Science Tamil College, Coimbatore, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-1979-8449**
**DOI: 10.5281/zenodo.7256802**

### Abstract

*Literature is what sets the goal for human life in motion. It is no exaggeration to say that the literature which records the lifestyle of the Tamils is the face of the virtues to be followed in the various contexts of their lives. The article provides details of the Tamil concept of life-based on the fourfold reality like Virtue (Aram), Material (Porul), Pleasure (Inban) and Salvation (Veeduperu). Knowing and following the virtues in the life of human society leads to living as an individual. Conflicts are natural in a social system. In such a period it becomes essential to follow a certain set of rules and live together without contradictions. Such morals were constructed by our ancestors as virtues. Although the way of life of human beings is changing from time to time, the basic virtues of their life can be found in various forms of Tamil literature such as Sangam literature, epics, and Puranas. Prof. Dr. N. Subbu Reddiar gave talks on the subject of "Virtue-Justice-System in Tamil Literature" at the University of Chennai from March 28, 29, and 30 in the year 1987 on the concepts of jurisprudence and literary systems mentioned in grammatical literature such as "Tolkappiyam", "Nannul", "Sangam literature", "Aimperuppiyam" etc. In printed form, the book has been published under the title "Virtue, Justice and System in Tamil Literature". In the subsection on the meaning of virtue in Tamil literature, the biographical virtues compiled by the author such as purity of mind, intrinsic biological virtue, virtue in devotion, domestic goddess, hospitality, hospitality, denial of animals, monasticism, war ethics, etc., have been elicited in a detailed manner. Hence, it is worthy to scrutinize the work of Subbu Reddiar to get the full meaning.*

**Keywords:** Virtue, Justice, System, Tamil Literature, Charity.

### ஆய்வுச் சுருக்கம்

*இலக்கியம் என்பது மனித வாழ்விற்கான இலக்கினை இயம்புவதாக அமைகின்றன. தமிழர் தம் வாழ்வியல் முறைகளின் பதிவாக அமைந்த இலக்கியங்கள் அவர்தம் வாழ்வின் பல்வேறு சூழல்களில் பின்பற்ற வேண்டிய அறங்களைக் கூறும் முகமாக அமைந்தவை என்றால் மிகையல்ல. கதை நிகழ்வுகளோடு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நாற்பொருள் உண்மைதனையும் பறைசாற்றுகின்றன. மனித சமூகத்தின் ஒன்றுபட்ட வாழ்வில் பல்வேறு அறங்களை அறிந்து பின்பற்றுவதால் ஒரு பக்குவப்பட்ட மேன்மையான இனமாக வாழ வழிவகுக்கின்றது. சமூகமாகக் கூடி வாழும் அமைப்புமுறையில் முரண்பாடுகள் வருவது இயல்பே. அத்தகைய காலகட்டத்தில் ஒரு குறிப்பிட்ட ஒழுங்குமுறைகளைப் பின்பற்றி*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*முரண்பாடுகள் தவிர்த்துக் கூடி வாழ்தல் இன்றியமையாததாகின்றது. அத்தகைய ஒழுக்கமுறைகளே அறங்கள் என்று நம் முன்னோர்களால் கட்டமைக்கப்பட்டுள்ளது. காலந்தோறும் மனித வாழ்வியல் முறைகள் மாறிக்கொண்டே வருவதாயினும் அவர்தம் வாழ்விற்கான அடிப்படை அறங்களை தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள், அறநூல்கள், காப்பியங்கள், புராணங்கள் என்ற பலவடிவங்களில் காணமுடிகின்றது. அவ்வகையில் தொல்காப்பியம், நன்னூல், சங்க இலக்கியம், ஐம்பெரும்காப்பியங்கள் முதலான இலக்கண இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அறக்கருத்துக்கள், நீதிக் கருத்துக்கள், இலக்கிய முறைமைகள் குறித்துப் பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் சென்னைப்பல்கலைக்கழகத்தில் "தமிழ் இலக்கியங்களில் அறம் – நீதி - முறைமை" என்ற தலைப்பில் 1987 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 28, 29, 30 ஆகிய மூன்று நாட்கள் மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். தமிழ் இலக்கியங்களில் அறம் என்ற பொருண்மையில் அமைந்த உட்பிரிவில் ஆசிரியரால் தொகுத்துக்காட்டப்பட்டுள்ள வாழ்வியல் அறங்களான மனத்தூய்மை, அகப்பொருள் வாழ்வியல் அறம், பக்திநிலையில் அறம், இல்லறம் நல்லறமாதல், விருந்தோம்பல், இனியவை கூறல், புலால் மறுத்தல், துறவறம், போர் நெறிகள் முதலான இலக்கியச் சான்றுகளைக் குறித்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.*

**குறிப்புச்சொற்கள்:** தமிழ் இலக்கியம், அறம், நீதி, முறைமை, அறத்தொடு நிற்றல்.

**ஆய்வுச்சாரம்**

காலந்தோறும் மனித வாழ்வியல் முறைகள் மாறிக்கொண்டே வருவதாயினும் அவர்தம் வாழ்விற்கான அடிப்படை அறங்களை தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள், அற நூல்கள், காப்பியங்கள், புராணங்கள் என்ற பலவடிவங்களில் காண முடிகின்றது. அவ்வகையில் தொல்காப்பியம், நன்னூல், சங்க இலக்கியம், ஐம்பெரும் காப்பியங்கள் முதலான இலக்கண இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள அறக்கருத்துக்கள், நீதிக் கருத்துக்கள், இலக்கிய முறைமைகள் குறித்துப் பேராசிரியர் டாக்டர். ந.சுப்புரெட்டியார் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் "தமிழ் இலக்கியங்களில் அறம்-நீதி-முறைமை" என்ற தலைப்பில் 1987 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 28, 29, 30 ஆகிய மூன்று நாட்கள் மூன்று சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அதன் அச்சு வடிவமாக 'தமிழ் இலக்கியங்களில் அறம், நீதி, முறைமை" என்ற தலைப்பில் நூல் வெளியிடப்பட்டுள்ளது. தமிழ் இலக்கியங்களில் அறம் என்ற பொருண்மையில் அமைந்த உட்பிரிவில் ஆசிரியரால் தொகுக்கப்பட்டுள்ள வாழ்வியல் அறம், பக்திநிலையில் அறம், இல்லறம் நல்லறமாதல், விருந்தோம்பல், இனியவை கூறல், புலால் மறுத்தல், துறவறம், போர் நெறிகள் முதலான கருத்துக்களுக்கு ந.சுப்புரெட்டியார் அவர்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எடுத்தாண்டுள்ள அற இலக்கியச் சான்றுகளில் விளக்க முறைத் திறனாய்வு அடிப்படையில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. ஆய்வில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களைக் குறிப்பிடும் இடங்களில் நூலாசிரியர் என்ற பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**முழுமுதற்பொருள்**

தமிழின் தொன்மை இலக்கண நூலான தொல்காப்பியத்தின் சான்றுகளைக் கொண்டு தம் அறக்கருத்துக்களுக்கு வலுவூட்டியுள்ளார் ஆசிரியர். உயிர்ப் பொருள்கள், உயிரில் பொருள்கள் என்று பாகுபடுத்தப்பட்ட அனைத்து உலக உயிர்களுக்கும் இன்ப, துன்பத்தினை உணரும் பொதுவான ஆற்றல் இருப்பினும், பகுத்தறிவு கொண்டு இன்பத்தை நுகருதல் மக்களது வாழ்வின் தனிச் சிறப்பாகின்றது என்பதனைக் கூற வந்த இடத்து தொல்காப்பியரின்,

**எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும் (தொல். பொருளியல், நூ. 27)**

என்ற நூட்பாவினைச் சான்று கூறி, மனிதன் ஐம்புலன்கள்வழி மட்டுமின்றி அதற்கு அப்பால் உணர்ந்து அறியும் மனம் ஆறாம் அறிவு கொண்டு அதனை பண்படுத்தவும், பயன்படுத்தவும் வல்லவனாக விளங்குகின்றான். அறியாமையால் வரும் துன்பங்களை நீக்கி இன்பத்தை அடைவதற்கான அறிவு விளக்கம் பெற்றுள்ளான் என்கிறார். அறம், பொருள், இன்பம் மூன்றினையும் மக்கள் வாழ்வில் அடைதற்கான உறுதிப்பொருட்கள் என்று கூற வந்தவர்,

**அந்நிலை மருங்கின் அறன்முத லாகி**
**மும்முதல் பொருட்கும் உரிய என்ப (தொல். செய்யுளியல், நூ. 106)**

தொல்காப்பியர் உலகப்பொருள் மூன்றினையும் "அறன் முதலாகிய மும்முதல் பொருள்" என்று கூறியுள்ளதனைச் சான்று கூறுகின்றார். அறம் செய்தல் நிலையினைக் கூறவந்த இடத்து அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்தி, எந்த உயிர்க்கும் தீங்கு செய்யாமல், புகழினை விரும்பாமல் நன்மை செய்வதே அறம் என்கிறார். இல்லறம், துறவறம் ஆகிய இரண்டும் ஓர் அறத்தின் வழி நிற்கும் இருவகை நிலைகள் என்பதனை,

**…அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (தொல். கற்பியல், நூ. 51)**

என்ற தொல்காப்பியர் நூற்பா வழி நிறுவுகின்றார்.

**உறுதிப்பொருள்**

வாழ்வின் பல நிலைகளையும் அறம், பொருள், இன்பம் என்ற மூவகைப்பாகுபாட்டில் பொருந்தி அதனை உட்பிரிவுகளாகக் கொண்டு அமைந்த தமிழ் நூல்களுள் தனிப்பெரும் சிறப்புடையதாகவும், சிறந்த அற நூலாகவும் விளங்குவதாக ஆசிரியர் திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளைக் கூறுகின்றார். உறுதிபொருள் குறித்து கூறுமிடத்து, "அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்…" (76) என்ற வள்ளுவரின் கூற்றினைக் கூறுகின்றார். காதல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாழ்க்கையில் மனம் பண்படுவதாகவும், பொது வாழ்வில் மனம் பயன்படுவதாகவும், தனிப்பட்ட வாழ்க்கையில் மனம் வாழ்வதாகவும் கூறும் ஆசிரியர், தன் கருத்திற்கு உரம் சேர்ப்பதாக, திருவள்ளுவர் காமத்துப்பாலில் காதல் கொண்டவரிடம் மனமானது கலந்தும், கரைந்தும் பண்படுவதாகவும், பொருட்பாலில் அறிவின் துணை கொண்டு பொது வாழ்வின் கடமைகளை அறிந்து தனக்கும், பிறருக்கும் பயன்படும் வகையினை தெளிவுபடுத்துவதாகவும், அறத்துப்பாலில் மனம் தூய்மை பெற்று வாழ்வின் வரையறையினை உணர்த்து அறத்தைப் போற்றுவதாகவும் கூறுகின்றார். பிறருக்குத் தீங்கு செய்தால் அறம் தண்டிக்கும் என்பதை,

**மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்**
**அறம்கூழும் சூழ்ந்தவன் கேடு (குறள்-204)**

என்ற குறள் வழியும் தெளிவுபடுத்தும் ஆசிரியர் மனம், உள்ளம் என்னும் சொற்கள் அறத்துப்பாலில் பல இடங்களிலும், காமத்துப்பாலிலும், பொருட்பாலிலும் எங்கோ ஓரிரு இடங்களில் மட்டுமே வருவதாக ஒப்பிட்டுக் கூறி, அறநெறியில் வாழ்ந்தால்தான் இன்பம் உண்டு, அந்நெறி தவறினால் துன்பம் ஏற்படும். மனத் தூய்மையோடு அறநெறி நிற்றலே இன்ப வாழ்க்கைக்குவழி வகுக்கும் என்பதே வள்ளுவரின் கருத்தாகின்றது என்கிறார்.

**இலக்கண நூற்பாக்கள்**

தமிழர்கள் வாழ்வில் பின்பற்றப்பட்ட வாழ்வியல் மரபுக் கருத்துக்கள் இலக்கணத்தில் நூற்பாக்காளாக வடிவம் பெற்றுள்ளதாகக் கூறுகின்றார். சான்றாக, **அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே (நன்னூல், நூ. 10)** என்று நன்னூல் சான்றினைக் கூறுகின்றார்.

**அறக்கோட்பாடு**

அறம் என்பதன் பொருள் கூறவந்த இடத்து, அறம் என்ற சொல் நல்லவற்றை எல்லாம் தம்முள் அடக்கியது என்று கொள்ளலாம். நல்லவை எல்லாம் முழுமுதற்கடவுள் சிவம் எனக்கொண்டால், அதன் இயக்கத்தை, செயலை, செயலாற்றலை, அருளினை அறம் என்று கூறலாம் என்கிறார். சிவத்தின் நெறிமுறையாக, எதிரற்ற இயக்க வல்லமையாக, ஆற்றலாகத் திகழும் அம்மையை அறத்தின் வடிவாகக் கூறி சிவமும் அம்மையும் வேறல்ல என்பது போன்றே சிவமும் அறமும் வேறல்ல என்கிறார். திருமுறுகாற்றுப்படையின்,

**அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்(டு)**
**ஆறினிற் கழிப்பிய அறனில் கொள்கை (திரு.முரு., அடி: 188-189)**

என்ற வரிகளைக் குறிப்பிட்டு அதில் "அறனில் கொள்கை"- என்பதற்கான பொருள் கூற வந்தவிடத்து திருக்குறள் போன்ற நூல்களில் நுவலப் பெற்றுள்ள கருத்துக்களையே நக்கீரர் குறிப்பிட்டுள்ளார் என்கிறார். அறம்-தக்கது, முறை என்று பொருள் கொள்ள வேண்டும் என்கிறார். சான்றாக,

**அறம் என்பது தக்கது, தக்கதனைச்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சொல்லி நிற்றல் உரித்தென்றவாறு;**

**அல்லதூஉம், பெண்டிற்கு அறம் என்பது**

**கற்பு, கற்பின்தலை நிற்றல் என்பதூஉம் (இறையனார் களவியலுரை, நூ. 23)**

**அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்**

**புறத்த புகழும் இல. (குறள் - 39)**

தொடர்புடைய குறள்கள் பலவற்றினையும் சான்றுகாட்டித் திருவள்ளுவரின் பொய்யாமொழியை மனம் என்றும் அசை போட்டு உண்மை எய்த வேண்டும் என்கிறார்.

**இல்லற நெறி**

இல்வாழ்க்கையின் நோன்பும் ஞானமும் குறித்துக் குறிப்பிடும் இடத்து திருக்குறளில் அறத்துப்பாலில் வள்ளுவப் பெருந்தகை கூறியுள்ள துறவற இயல்புகள் குறித்தும், இல்வாழ்வாரின் மிகநுட்பமான கடமை வகைகளுள் மிக முக்கியமானது அறம் செய்தல் என்ற கருத்தினையும் கூறுகின்றார். இல்வாழ்வின் அறங்கள் குறித்து வள்ளுவப் பெருந்தொகை கூறியுள்ள இருபது அதிகாரங்களின் கருத்துக்களை இல்வாழ்வான், இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம், மக்கட்பேறு என்று நான்கு பகுதிகளாகப் பிரித்து ஆராய்ந்தவர் குடும்ப உறுப்பினர் குறித்துக் கூறும் செய்திகளை இல்வாழ்வான், வாழ்க்கைத்துணை, மக்கட்பேறு என்ற மூன்று அதிகாரங்களில் வரையறுத்துக் கூறுகின்றார். இல்லறத்தில் அன்பு நெறி குறித்து கூறவந்தவிடத்து அன்புடைமை என்பது இல்வாழ்வின் அடிப்படைப் பண்பு என்கிறார். அன்பு பக்தியாக உரம் பெறும் பொழுது கண்ணீர் பெருகுவதைத் திருவாசகம், ஞானசம்பந்தர் தேவாரம், இரண்யவதைப் படலம் பிரகலாதன் பாடல், திருமூலர் திருமந்திரம் பாடல்களைச் சான்று காட்டி விளக்கியுள்ளார்.

**அரச நெறி**

அரசனின் வெற்றி என்பது படைபலத்தினைவிடவும் அறநெறி வழுவாத ஆட்சியினால் அமைவது என்பதனை,

**கடுஞ்சினத்த கொல்களிறும்**
**கதல்பரிய கலிமாவும்**
**நெடுங்கொடிய நிமிர்தேரும்**
**நெஞ்சுடைய புகன்மறவருமென**
**நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம் (புறநானூறு, பா. 55)**

என்ற இளநாகனார் பாண்டியன் இலவஞ்சிகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனுக்குப் பாடிய புறநானூற்றுப் பாடல் சான்றுவழித் தெளிவுபடுத்தி அக்கருத்தினை வள்ளுவரின்,

**வேலன்று வெற்றி தருவது; மன்னவன்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**கோல்; அதூஉம் கோடாது எனின். (குறள் - 546)**

என்ற குறளுடன் ஒப்பிட்டு நோக்குகிறார்.

**மனதை ஆற்றுப்படுத்துதல்**

மனதை ஆற்றுப்படுத்தும் வழிதனைக் கூற வந்த இடத்து பாரதியாரின்,

**பேயாய் உழலும் சிறுமனமே**
**பேணாய் என்சொல் இன்றுமுதல்;**
**ஓயா தேநின் றுழைத் திருவாய்**
**உரைத்தேன் அடங்கி உய்யுதியால். (பாரதியார் கவிதைகள்- 8)**

என்ற கவிதை வரி கூறி நெறிப்படுத்துகிறார்.

**அகப்பொருளில் அறம்**

நல் ஊழின் காரணமாக 'ஒத்த கிழவனும், கிழத்தியும் காண்ப' என்ற தொல்காப்பிய இலக்கண வரிகளை,

**பால்வரைந் தமைத்தல் அல்லது அவர்வயின்**
**சால்பளந் தறிதற்கு யாஅம் யாரோ (குறுந்தொகை - 366)**

என்ற குறுந்தொகை பேரிசாத்தனார் வரிகளோடும்,

**பிறிதொன் றாகக் கூறும்**
**ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே (ஐங்குறுநூறு - 110)**

என்ற ஐங்குறுநூற்று வரிகளோடும் ஒப்பிட்டுக் காண்கிறார். எந்த மொழி இலக்கியங்களிலும் காணப்படாத உயர்ந்த ஒழுக்க கூறாக அறத்தொடு நிற்றல் திகழ்வதாக ஆசிரியர் கூறுகிறார்.

**இளமை நிலையாமை**

காலதாமதம் செய்யாமல் அறம் செய்ய வேண்டும் என்பதை உணர்த்தும் இளமை நிலையாமை குறித்த பகுதியினை விளக்க வேண்டிய இடத்தில் "அறநெறிச்சாரம்" நூலின் பாடல்களை மேற்கோள் காட்டியுள்ளார்.

**மின்னும் இளமை உளதாம் எனமகிழ்ந்து**
**பின்னை அறிவென்என்றால் பேதமை – தன்னைத்**
**துணித்தானும் தூங்கா அறஞ்செய்க் கூற்றம்**
**அணித்தாய் வருதலும் உண்டு (அறநெறிச்சாரம், பா. 21)**
**முற்றி யிருந்த கனியொழியத் தீவளியான்**
**நற்காய் உதிர்தலும் உண்டு (நாலடியார், பா. 19)**

மேற்காண் இலக்கியங்களைச் சான்றுகாட்டி எமன் இளமையிலும் வருதலும் உண்டு. ஆதலால் தனது உடலை வருத்தியேனும் ஒவ்வொருவரும் காலதாமதமின்றி அறம் செய்தல் வேண்டும்" என்ற கருத்தினைப் பதிவு செய்கிறார். மேலும் சிலப்பதிகாரத்தில் மாடல மறையோன்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கதாப்பாத்திரத்தின்வழி எடுத்தோதப்பட்ட இளமை நிலையாமை செய்திகளையும் எடுத்துக்காட்டி உயிரின் தன்மையினைக் கூறுகின்றார்.

**ஆசிரியர் எடுத்தாண்டுள்ள சான்று நூற்கள் பட்டியல்**

| வ. எண் | நூற்பெயர் | நூற்பா / பாடல் எண் |
|---|---|---|
| 1 | தொல்காப்பியம் - பொருளியல் | 11, 12, 27, |
| 2 | தொல்காப்பியம் - களவியல் | 1, 2, 50, 5, 13, 23, 24, 47 |
| 3 | தொல்காப்பியம் - செய்யுளியல் | 106, 179 |
| 4 | தொல்காப்பியம் - கற்பியல் | 1, 5, 12, 51 |
| 5 | நன்னூல் | 10 |
| 6 | திருவாசகம் | 1, 3, 4, 87, 48, 26-31 (அடி) |
| 7 | திருமுருகாற்றுப்படை | 188-189 (அடி) |
| 8 | புறநானூறு | 5, 9, 34, 36, 55, 76, 62, 91, 139, 142, 165, 173, 175, 181, 182, 187, 189, 192, 195, 200, 201, 204, 312 |
| 9 | திருக்குறள் | 546, 31, 32, 33, 34, 36, 38, 39, 40, 41, 42, 45, 46, 47, 48, 50, 52, 54, 56, 57, 69, 70, 71, 72, 74, 75, 76, 77, 80, 81, 87, 90, 91, 93, 96, 101, 102, 103, 104, 105, 108, 109, 121, 110, 113, 114, 118, 119, 120, 121,125, 130, 133, 134, 138, 140, 141, 142, 144, 145, 148, 151, 155, 156, 157, 158, 161, 162, 164, 165, 166, 167, 169, 171, 172, 173, 174, 176, 177, 178, 179, 181, 182, 183, 184, 185, 186, 187, 189, 190, 196, 198, 199, 200, 201, 202, 203, 204, 205, 207, 208, 209, 211, 212, 213, 215, 216, 218, 219, 221, 222, 223, 224, 228, 229, 231, 232, 233, 236, 237, 238, 239, 240, 241, 242, 247, 248, 250, 251, 253, 257, 259, 260, 261, 262, 263, 265, 267, 269, 270, 271, 272, 273, 274, 277, 278, 279, 280, 281, 282, 284, 286, 288, 291, 292, 293, 294, 295, 300, 305, 307, 309, 310, 312, 313, 314, 316, 317, 320, 321, 332, 324, 327, 328, 332, 333, 334, 335, 336, 337, 339, 340, 341, 345, 346, 347, 348, 350, 354, 355, 356, 357, 358, 360, 363, 364, 365, 366, 368, 369, 428, 479, 517, 948, 994, 1075 |
| 10 | நாலடியார் | 19, 38, 39, 273, 333, 384, 386 |
| 11 | அறநெறிச்சாரம் | 21, 101, 102 |

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

| | | |
|---|---|---|
| 12 | பாரதியார் கவிதைகள் | 8 |
| 13 | தேவாரம் | 2.79:9, 3.49:1, 4.7:1, 5.90:9, 7.48:1 |
| 14 | குறுந்தொகை | 10, 40, 184, 366, |
| 15 | ஐங்குறு நூறு | 110, 249, 245 |
| 16 | குறுந்தொகை | 181, 229, 374 |
| 17 | இறையனார் களவியல் உரை | 15, 23, 29 |
| 18 | நம்பியகப்பொருள் | 48 |
| 19 | அகநானூறு | 22, 98, 112 |
| 20 | திருவாய்மொழி | 8-9, 67, 4.8:5, 1:2:5, 10.10:11 |
| 21 | நாச்சியார் திருமொழி | 1:5, 11:2 |
| 22 | பெரியாழ்வார் திருமொழி | 3.2:1, 3.4:5, 4.5:4, 4.5;5, 4.10:1, 8.2:2, 9.7:1 |
| 23 | கலித்தொகை | 41, 54, 86 |
| 24 | நற்றிணை | 14, 268 |
| 25 | ஐங்குறுநூறு | 241-250, 248 |
| 26 | சிலப்பதிகாரம் | 11, 12, 30-33, 35-37, 50-51, 53-55, 63-70, 71-73, 84-88, 175-182, 181-182 |
| 27 | திருவிருத்தம் | 29 |
| 28 | திருக்கோவை | 292 |
| 29 | பரிபாடல் | 11, 41-42 (அடி) |
| 30 | கொன்றை வேந்தன் | 3, 58, |
| 31 | கம்ப இராமாயணம் | 15, 29, 33, 35, 38, 42, 51, 56, 58, 59, 62, 64, 66, 67,91, 92, 132, 155, 157, 249, 250, 252, 253-255, 256, |
| 32 | ஸ்ரீவசன் பூஷ்ணம் | 5 |
| 33 | நான்மணிக்கடிகை | 101 |
| 34 | நால்வர் நான்மணி மாலை | 4 |
| 35 | திருமந்திரம் | 270, 298 |
| 36 | வாக்குண்டாம் | 21 |
| 37 | விவேக சிந்தாமணி | 7 |
| 38 | பெருங்கதை | 4.14: 98-99 |
| 39 | நறுந்தொகை | 17 |
| 40 | வில்லி பாரதம் | 6, 9, 11, 21, 248, 252 |
| 41 | நல்வழி | 24, 25, 28 |

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

| | | |
|---|---|---|
| 42 | பாரதிதாசன் கவிதைகள் | 53 |
| 43 | திரு ஏகம்ப மாலை | 7, 21, 205-207, 210-212 |
| 44 | பழமொழி | 15, 213, 339 |
| 45 | தொல்காப்பியம் - சொல்லதிகாரம் | 57 |
| 46 | தொல்காப்பியம் - புறத்திணை | 17, 18 |
| 47 | பாஞ்சாலி சபதம் | 19, 38, 39, 20, 273,274, 276-281 |
| 48 | தாயுமானவர் பாடல்கள் | 54, 65, 149, 192, 221, 297, 221 |
| 49 | அருள் விளக்க மாலை | 71 |
| 50 | பிள்ளைப் பெருவிண்ணப்பம் | 41 |
| 51 | திருவரங்க கலம்பகம் | 18 |
| 52 | மணிமேகலை | 30: 252-3 |

மேற்காண் பட்டியலின் அடிப்படையில் ஆசிரியர் அறம் குறித்த தனது உரைக்கு ஐம்பதிற்கும் மேற்பட்ட நூல்களை எடுத்தாண்டுள்ளார். என்பதும், அற இலக்கியங்கள் மட்டுமின்றி சங்க இலக்கியங்கள், சைவ-வைணவ பக்தி இலக்கியங்கள், இலக்கண நூல்கள், காப்பியங்கள், இதிகாசங்கள், தனிப்பாடல்கள் முதலானவற்றில் இருந்தும் சான்றுகள் கூறியுள்ளார் என்பதனை அறிய முடிகின்றது. பெரும்பான்மையான சான்றுகள் திருக்குறள் நூலில் இருந்து எடுத்தாண்டுள்ளார் என்பதனை அறிந்து கொள்ள முடிகின்றது.

**எதிர்கால ஆய்வுக்களம்**

தமிழ் இலக்கியங்களில் அறம் என்பதாக அமைந்த ஆசிரியரது நூலின் வழி தமிழ் இலக்கியங்கள் கூறும் வாழ்வியல் ஒழுக்க நெறிமுறைகளை அறிந்து கொள்ள முடிகின்றது. திருமூலர் திருமந்திரம் நூலின் அதிகாரங்களோடு ஆசிரியர் பெரும்பான்மையாக எடுத்தாண்டுள்ள திருக்குறள் அதிகாரங்களை ஒப்பிடுவதாக எதிர்கால ஆய்வினை மேற்கொள்வது பயனுடையதாக அமையும்.

**குறிப்பு நூல்கள்**

[1] இறையனார். *களவியல்.* நக்கீரர் உரை, கழக வெளியீடு, சாரதா பதிப்பகம், சென்னை, 2010.
[2] சங்கப்புலவர்கள். *ஐங்குறுநூறு.* சரண் பதிப்பகம், சென்னை, 2013.
[3] சங்கப்புலவர்கள். *புறநானூறு பழைய உரையுடன்.* சாரதா பதிப்பகம், சென்னை, 2010.
[4] சமண முனிவர்கள். *நாலடியார்.* வை.மு.கோ உரை. ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, 2013.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

[5] சுப்புரெட்டியார். ந. *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.

[6] *திருக்குறள் அறம்.* கழக வெளியீடு, விசா பதிப்பகம், சென்னை, 2015.

[7] *தொல்காப்பியம்.* தொல். பொருளதிகாரம், கழக வெளியீடு, ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, 2010.

[8] திருவள்ளுவர். *திருக்குறள்.* பரிமேலழகர் உரை, அருணா பதிப்பகம், சென்னை, 2016.

[9] நக்கீரர். *திருமுருகாற்றுப்படை.* கழக வெளியீடு, சரசுவதி மகால் பதிப்பகம், 2003.

[10] பவணந்தி முனிவர். *நன்னூல் காண்டிகை உரை.* ஆறுமுக நாவலர் பதிப்பு, பாரி நிலையம், சென்னை, 2017.

[11] முனைப்பாடியார். *அறநெறிச்சாரம். ஆ, பொன்னுசாமி பிள்ளை உரையுடன்.* கழக வெளியீடு, டியோசென் பதிப்பகம், 1930.

**References**

[1] Iraiyanaar. Kalaviyal. Nakkirai Urai, Kazhaka Veliyeedu. Saratha Pathippagam, Chennai, 2010.
[2] Sangha Pulavarkal. *Aikurunuuru.* Saran Pathippagam, Chennai, 2013.
[3] Sangha Pulavarkal. *Purananooru Pazhaiya Urai*. Saratha Patthippagam, Chennai, 2010.
[4] Samana Munivarkal. *Naaladiyar* – Vai.Mu.Ko Urai. Sri Senbha Pathippagam, Chennai 2013.
[5] Subu Reddiar. N. *Tholkaappiyam Kaattum Vaazhkkai*. Palaniyappa Brothers, Chennai-1968.
[6] *Thirukkural Aram*. Kazhaka Veliyeedu, Visa Publication, 2015.
[7] *Tholkaappiyam.* Thol. Porulathikaaram. Kazaka Veliyeedu, Sri Senbha Pathippagam, Chennai 2010.
[8] Thiruvalluvar. *Thirukkural*. Parimeelalagar Urai, Aruna Pathippagam, Chennai 2016.
[9] Nakkirar. *Thirumurukaarruppatai*. Kazhaka Veliyeedu, Sarashvaathi Mahal Publisher, 2003.
[10] Pavananthi Munivar. *Nannuul Kaantikai Urai*. Aarumuka Naavalar Pathippu, Pari Nilaiyam, Chennai 2017.
[11] Munaippaatiyar. *Aranerisaaram*. Ponnusamy Pillai Uraiyutan, Kazhaka Veliyeedu, Diocesan Publisher, 1930.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் பன்முகப் பார்வையில் கம்பராமாயணம்

## *Kambaramayanam* from the Perspective of N. Subbu Reddiar

**முனைவர் மா. தனலட்சுமி**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அரசினர் மகளிர் கல்லூரி, கும்பகோணம், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. M. Dhanalakshmi,** Assistant Professor of Tamil, Government College for Women, Kumbakonam, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-4023-2143**
**DOI: 10.5281/zenodo.7294881**

### Abstract

*It is a well-known fact that Tamil is the most ancient of all the languages of the world. Hence, it is conferred the status of the language. To its credit, it has a bulk volume of literary works and grammar texts. Dating back to the pre-Christian era down to the present age, Tamil is divided into Sangam Literature, Moral Literature, Epics and Modern Literature, Epics etc. As epics are very lengthy in size they are also known as long narrative poems. "Thandi Alangaram" gives us a detailed account of the rules and regulations for writing epics. "Kambaramayamam" was written by Kambar based on Valmigi's "Ramayana". Though there are many research books available on "Kambaramayanam", N.Subbu Reddiar's critical books are very famous. Reddiar approached "Kambaramayanam" from the viewpoint of culture. His analysis of the character of Hanuman is excellent. He brings out the character of Hanuman in the form of a vision to our eyes. While compared to Valmiki's "Ramayana", "Kambaramayana" is rich in the portraiture of culture. Parental love, brotherly love, people's mentality, beliefs and customs are beautifully brought out by the out Professor Subbu Reddiar. The scope of this paper is to show how Professor Subbu Reddiar has excellently analyzed "Kamba Ramayanam" with his in-depth study.*

**Keywords:** Tamil Literature, *Kambaramayanam*, Cultural Perspective, N. Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*உலகில் தோன்றிய தொன்மையான மொழி தமிழ்மொழி. அம்மொழியில் தோன்றிய இலக்கிய, இலக்கண நூல்கள் எண்ணற்றவை. இலக்கியங்களைச் சங்க இலக்கியம், அற இலக்கியம், காப்பிய இலக்கியம், இக்கால இலக்கியம் எனப் பல்வேறு கூறுகளாகப் பகுப்பர். அவற்றுள் முதன்மை இடத்தைப் பெறுவது காப்பியம். அக்காப்பியங்கள் நீண்ட தொடர்களாக இருப்பதால் அவற்றிற்குத் தொடர்நிலைச் செய்யுள் என்னும் பெயரும் உண்டு. காப்பியத்திற்குரிய இலக்கணத்தைத் "தண்டியலங்காரம்" பட்டியலிட்டுக் காட்டுகிறது. வடமொழி இராமாயணத்தை அடியொட்டிக் கம்பரால் எழுதப்பட்ட சிறப்பிற்குரியது "கம்பராமாயணம்". அக்கம்பராமாயணத்தை அடியொட்டி எண்ணற்ற திறனாய்வு நூல்கள் தமிழ்மொழியில் எழுந்த வண்ணம் உள்ளன. கம்பராமாணத் திறனாய்வு நூல்களை எழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவர் பண்பாட்டு நோக்கில் கம்பராமாயணத்தை ஆராய்ந்தவர். அனுமனை அண்ணல் அனுமன், கவிக்கு*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினன், அஞ்சா நெஞ்சன், இராமதூதன், இராம பக்தன், குணக்குன்றன் என்னும் பெயர்களில் ஆராய்ந்து அனுமனின் தனித்தன்மைகளை எடுத்துரைத்தவர் பேராசிரியர். கம்பராமாயணத்தில் இயற்கையை மலைக்காட்சி, விளையும் பயிர் என்னும் தலைப்பில் தேர்வு செய்து கருத்துக்களைப் பகிர்ந்தவர். வால்மீகி இராமாயணத்தைவிடக் கம்பராமாயணத்தில் பண்பாட்டுக் கூறுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. மக்கள் பாசம், சகோதரர்களின் அன்பு, மக்களின் பண்புகள், நம்பிக்கைகள் ஆகியவற்றைப் பேராசிரியர் தன் சொற்திறமையால் பதிவு செய்துள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கம்பராமாயணத்தைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்ததை எடுத்துரைப்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், *கம்பராமாயணம்*, பன்முகப்பார்வை.

**முன்னுரை**

உலகில் தோன்றிய தொன்மையான மொழி தமிழ்மொழி. அம்மொழியில் தோன்றிய இலக்கிய, இலக்கண நூல்கள் எண்ணற்றவை. இலக்கியங்களைச் சங்க இலக்கியம், அற இலக்கியம், காப்பிய இலக்கியம், இக்கால இலக்கியம் எனப் பல்வேறு கூறுகளாகப் பகுப்பர். அவற்றுள் முதன்மை இடத்தைப் பெறுவது காப்பியம். அக்காப்பியங்கள் நீண்ட தொடர்களாக இருப்பதால் அவற்றிற்குத் தொடர்நிலைச் செய்யுள் என்னும் பெயரும் உண்டு. காப்பியத்திற்குரிய இலக்கணத்தைத் *தண்டியலங்காரம்* பட்டியலிட்டுக் காட்டுகிறது. வடமொழி இராமாயணத்தை அடியொட்டிக் கம்பரால் எழுதப்பட்ட சிறப்பிற்குரியது *கம்பராமாயணம்.* அக்கம்பராமாயணத்தை அடியொட்டி எண்ணற்ற திறனாய்வு நூல்கள் தமிழ்மொழியில் எழுந்த வண்ணம் உள்ளன. கம்பராமாணத் திறனாய்வு நூல்களை எழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவர் பண்பாட்டு நோக்கில் கம்பராமாயணத்தை ஆராய்ந்தவர். அனுமனை அண்ணல் அனுமன், கவிக்கு நாயகன், சொல்லின் செல்வன், சிந்தனைச் செம்மல், விழையும் உருவினன், அஞ்சா நெஞ்சன், இராமதூதன், இராம பக்தன், குணக்குன்றன் என்னும் பெயர்களில் ஆராய்ந்து அனுமனின் தனித்தன்மைகளை எடுத்துரைத்தவர் பேராசிரியர். கம்பராமாயணத்தில் இயற்கையை மலைக்காட்சி, விளையும் பயிர் என்னும் தலைப்பில் தேர்வு செய்து கருத்துக்களைப் பகிர்ந்தவர். வால்மீகி இராமாயணத்தைவிடக் கம்பராமாயணத்தில் பண்பாட்டுக் கூறுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. மக்கள் பாசம், சகோதரர்களின் அன்பு, மக்களின் பண்புகள், நம்பிக்கைகள் ஆகியவற்றைப் பேராசிரியர் தன் சொற்திறமையால் பதிவு செய்துள்ளார். பேராசிரியர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ந.சுப்புரெட்டியார் கம்பராமாயணத்தைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்ததை எடுத்துரைப்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**தசரதன் இராமன்மீது பேரன்பு கொள்ளல்**

தசரதன் தனக்கு 'உடம்பும் உயிரும் வேறில்லை' என்னும்படி இராமன்மீது பேரன்பு கொண்டிருந்தான். வேள்வியைக் காவல் காப்பதற்காக இராமனை அனுப்பும்படி விசுவாமித்திரர் தசரதனிடம் கேட்பதை,

> **நின்சிறுவர் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி என உயிரிரக்கும் கொடும் கூற்றின் உளையச் சொன்னான். (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், ப. 19)**

என்னும் தொடர்வழிக் கம்பர் எடுத்துரைக்கிறார். இத்தொடர் மூலம் தசரதனுக்கு இராமன் உயிர் போன்றவன் என்பது பெறப்படுவதாக ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார்.

**சகோதர்களின் அன்பு**

உடன்பிறப்பு இல்லா உடம்பு பாழ் (நல்வழி, பா. 24) என்பது ஔவையார் கூற்று. இராமன் காட்டிற்குச் செல்ல வேண்டும் என்பதைக் கேட்டவுடன் இலக்குவன் வெகுண்டு எழுகிறான். இருப்பினும் தன் தாய் சுமித்திரையின் பேச்சைக் கேட்டு அமைதியுறுகிறான். இராமன் கூறும் ஏவல் தொழிலைச் செய்ய வேண்டும் என்றும் இராமன் அயோத்திக்கு வந்தால் மட்டுமே வரவேண்டும் என்றும் அப்படி இல்லாமல் போனால் நீ முன்னரே உயிரைத் துறந்து விடு என்றும் உரைக்கின்றாள். இக்கூற்று இலக்குவனின் சகோதர அன்பிற்கு முத்தாய்ப்பாய் இருப்பதாக ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார்.

**மக்கட்பண்புகள்**

நன்மக்களின் பண்புகளாகத் திருவள்ளுவர்,

> **அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு**
> **ஐந்துசால்பு ஊன்றிய தூண். (குறள். 983)**

என்பவற்றைக் குறிப்பிடுகிறார். கங்கைக் கரைக் குகன் ஆயிரம் மரக்கலத்திற்குத் தலைவன் ஆவான். அவன் இராமன்மீது பேரன்பு கொண்டவன். இராமனுக்குத் தேன், மீன் ஆகியவற்றைக் காணிக்கையாகக் கொடுக்கிறான். இராமனும் அவற்றை அன்புடன் ஏற்கிறான். இராமன், சுக்கீரிவன் வீடணனையும் அன்புடன் ஏற்றுக் கொண்டதைக் கம்பர் வழிநின்று விளக்குகிறார் ந. சுப்புரெட்டியார்.

**நம்பிக்கைகள்**

மானிடப் பிறப்பு கிடைத்தற்கரியது. இந்தப் பிறப்பிலும் கூன், குருடு இன்றிப் பிறந்தால் மிகவும் அரிது. இப்படிப் பிறந்தாலும் ஞானமும் கல்வியும் பெற்று வாழ்ந்தால் அதனைவிட அரிது. இப்படி ஒரு நம்பிக்கை மக்களின் மனத்தில் இருக்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சாபம்**

வேள்வியை முடித்து விசுவாமித்திரரோடு வரும் இராமன், இலக்குவனன் ஆகிய இருவரும் மிதிலையை நோக்கிச் செல்லும்போது கௌதம முனிவரின் மனைவி அகலிகை சாபத்தினால் கல்லாய்க் கிடக்கும் இடத்தைப் பார்க்கின்றனர். இராமனின் திருவடி பட்டுப் பெண்ணாக உருமாறுகிறாள். தசரதன் தான் பெற்ற சாபத்தைக் சோலையிடம் கூறுகிறாள்.

**ஊழ்வினை**

இராவணன் சீதையைக் கவர்ந்து வர மாரீசனின் துணையை நாடுகிறான். மாயமான் வடிவில் சென்று சீதையைக் கவர்ந்து வரச் சொல்கிறான். மாரீசனும் உடன்படுகிறான். ஊழ்வினையின் காரணமாகத் தான் தன் உயிர் இராமனால் போகப் போகிறது என்பதை மாரீசன் உணர்ந்து ஒகொண்டதாகப் பேராசிரியர் விளக்குகிறார்.

**ஒருவனுக்கு ஒருத்தி**

வால்மீகியின் *இராமாயணம்* ஒருவனுக்கு ஒருத்தி என்ற சிறந்த பண்பாட்டை வலியுறுத்தவில்லை. கம்பர் இப்பண்பாட்டை இராமனின் பாத்திரத்தின் வாயிலாக எடுத்துரைக்கிறார். மேலும், வாலியை இராமன் வதம் செய்தபிறகு வாலியின் மனைவியாகிய தாரையையும் சுக்கீரிவன் ஏற்றுக் கொண்டதாக வால்மீகி காட்டுகிறார். ஆனால் கம்பரோ தாரை கைம்மைநோன்பு மேற்கொண்டதாகக் காட்டுகிறார் (கோ.வெ. நடராஜன் கம்பராமாயணத்தில் மரபு வழிச் செல்வாக்கு பா. 188) இராமன் சீதையைக் கரம்பிடித்த நாளில் இப்பிறவியில் இருமாதரைச் சிந்தையாலும் தொடேன் எனக் கூறுவதைக் கம்பர் எடுத்துரைக்கிறார்.

**கற்பு**

உயிரை விடச் சிறந்ததாகக் கற்பினைப் போற்றுவர். கற்பின் முக்கியத்தவத்தைத் *தொல்காப்பியம்,*

**உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**

**செயிர்தீர்க் காட்சிக் கற்புச் சிறந்ததன்று (தொல்.பொருள்., நூ. 111)**

எனக் குறிப்பிடுகிறது. கற்பின் சிறப்பை வால்மீகியும் கம்பரும் பல இடங்களில் சுட்டிக் காட்டுகின்றனர். அசோக வனத்தில் சீதையைக் கண்ட அனுமன் அவளிடம் தன்தோளில் சுமந்து சென்று இராமனிடம் சேர்ப்பதாகக் கூறுகிறான். அனுமனிடம் சீதை வரமறுக்கிறாள். இராமனை அன்றி மற்ற யாவரையும் தொடமாட்டேன் எனக் கூறும் கருத்தை ஏற்றுக் கொண்ட அனுமன் சீதையின் கற்பினைப் புகழ்கிறான். இராவணன் இறந்ததும் மண்டோதரியும் அழுது புலம்பி அவன் மார்பில் விழுந்து உயிர் நீத்தாள். அத்தகைய கற்புடையவளாகப் போற்றப்படுகிறாள். வாலி இறந்த பின் கற்பின் சிறந்தவளாகத் தாரை கைம்மை நோன்பினை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மேற்கொள்கிறாள். இவ்வாறு கம்பர் படைத்துக் காட்டும் சீதை, மண்டோதரி, தாரை ஆகியோர் கற்பில் சிறந்தவர்களாகப் போற்றப்படுகின்றனர்.

**விருந்தோம்பல்**

இல்லற வாழ்வை மேற்கொண்டோர் அனைவரும் தம் இல்லம் நோக்கி வந்த விருந்தினர்களைப் பேணிப் போற்ற வேண்டும். இதனை,

**இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள். 81)**

என்னும் குறள்வழி விளக்குகிறார் வள்ளுவர். இல்லறப் பெண்களுக்குரிய கடமைகளுள் ஒன்றாக விருந்தோம்பலைக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். இதனைக்,

**கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்துபுறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள் (தொல்.பொருள்.நூ.150)**

என்னும் நூற்பா எடுத்துரைக்கிறது. இராமன், இலக்குவன், சீதை ஆகியோரை உபசரிக்கும் முனிவர்கள் காயும் கனியும் கிழங்கும் உண்ணக் கொடுத்தனர் என்பது கம்பரின் கூற்று.

**ஒழுக்கமுடைமை**

ஒழுக்கத்தின் மேன்மையை வள்ளுவர் ஒரு அதிகாரத்தின் வழி விளக்குகிறார். ஒழுக்கக் கேட்டினால் பழியை அடைவர் என்பதனை,

**ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்**
**எய்துவர் எய்தாப் பழி (குறள்.137)**

என்னும் குறள் எடுத்துரைக்கிறது. கம்பரும் “குலம் சுரக்கும் ஒழுக்கம்” (நாட்டுப்படலம். பா.9) எனக் குறிப்பிடுகிறார். கம்பர் ஒழுக்கத்தின் சிறப்பை இராமன், அனுமன், இலக்குவன், பரதன், கும்பகர்ணன், வீடணன் போன்ற பாத்திரங்களின்வழி எடுத்துரைக்கிறார்.

**அனுமனைப் போற்றல்**

இராமாயணத்தில் கம்பரால் இன்றியமையாமை பாத்திரமாகக் குறிப்பிடப்படுபவர் அனுமன். இராமாயணக் கதை மங்களகரமாக முடிய இருந்தவன் கவிக்கு நாயகனான அனுமன் ஆவான் என்கிறார் நா. சுப்புரெட்டியார். (அண்ணல் அனுமன். ப. 14) அனுமன், வாலி வதத்திற்கு வழி அமைத்ததால் இராமகாதை இனிமையாக அமைய வழிவகுத்தது. இரண்டு முறை மருத்துவ மலைக்குச் சென்று பல உயிர்களைக் காப்பாற்றியவன் அனுமன் ஆவான். சொல்லின் செல்வனாக அனுமன், விளங்கியதைக் கம்பர் வாலி, சுக்ரீவன், சீதை போன்றோரிடம் அனுமன் பேசிய வார்த்தையின் மூலமாக எடுத்துரைக்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சிந்திக்கும் ஆற்றல் மனிதன் ஒருவனுக்கே இறைவனால் வழங்கப் பெற்ற ஓர் அற்புத ஆற்றல். அதனை வளர்த்துக் கொண்டு அதனை செயற்படுத்துவது ஒவ்வொருவரின் கடமையும் பொறுப்பும் ஆகும். அனுமனிடம் இச்சிந்திக்கும் ஆற்றல் மிகுந்திருக்கிறது. கும்பகர்ணனை அரக்கன் என முதலில் கண்டுகொண்டவன் அனுமன் ஆவான். அனுமன் 'அஞ்சன கிரியனைய' இராமனை ஓர் அந்தண வடிவம் கொண்டு அணுக எண்ணுகின்றான். சற்று மறைவாக இருந்து இராம, இலக்குவனை ஆராய்கின்றான். எண்ணுகின்றான் என்கிறார் பேராசிரியர். (அண்ணல் அனுமன் ப.65)

அஞ்சா நெஞ்சத்தைத் தன்னகத்தே கொண்டு திகழ்வதற்கு இராமக் காதையில் வரும் அஞ்சனை வயிற்றில் வந்துதித்த ஆஞ்சநேயனைக் கூறுவர். கடலைத் தாவுதல், இலங்கையில் தூது சென்றபோது நிகழ்ந்த நிகழ்வுகள், இராவணன் ஏவலால் கிங்கரை வதைத்தல், சம்புமாலியை வதைத்தல், பஞ்சசேனாபதிகளை வதைத்தல், அக்ககுமாரனை வதைத்தல் ஆகிய நிகழ்வுகளில் அனுமனின் வீரம் வெளிப்படுவதாக ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார். இராவணன் அனுமனின் வாலில் தீயை வைக்குமாறு கட்டளையிட்டான். இராவணனின் கட்டளையை நிறைவேற்றினர். அரக்கர்களை அழிக்க இதுவே தகுந்த நேரம் என்பதனை உணர்ந்த அனுமன் திடீரென வானத்தில் எழும்புகின்றான். இந்நிகழ்வை,

**வழுவுர் காலம் ஈதென்று**
**எண்ணினன் வலிதிற் பற்றித்**
**தழுவினன்: இரண்டு நூறா**
**யிரம்புயன் தடக்கை தாம்போடு**
**எழு என நால விண்மேல்**
**எழுந்தனன் விழுந்த எல்லாம் (சுந்தர காண்டம், பா. 133)**

எனக் கம்பர் எடுத்துரைப்பதாக ந.சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார்.

அனுமன் என்னும் பெயரைச் சென்னாலே கற்றவர், கல்லாதவர் மனதில் 'இராமன் தூதன்' என்னும் கருத்து எழுவது இயல்பு. அறிவிற் சிறந்த அனுமனை இராமன் தன் கருத்துக்களை எடுத்துரைக்கப் பயன்படுத்திக் கொண்டான். இராவணனின் சிறையில் இருந்த சீதையைக் காணச் சென்றபோது கணையாழியைக் காட்டித் தான் இராமனின் தூதன் என்பதை அடையாளப்படுத்திக் கொள்கின்றான். சீதையைக் கண்களால் கண்டதை இராமனிடம்,

**கண்டனென் கற்பினுக்கு**
**அணியைக் கண்களால் (அண்ணல் அனுமன், ப. 126)**

என இரத்தினச் சுருக்கமாக அனுமன் கூறுகின்றான். அனுமன் வாக்கினாலேயே (கவிதையில்) கூறியுள்ளதை ஈண்டு என்சொற்களால் கூறுவேன் என வியக்கிறார் ந. சுப்புரெட்டியார். விசுவாமித்திரன் இராமனை அரக்கர்களுடன் போர் புரிவதற்காக அனுப்புக எனப் பணிவுடன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கேட்டவுடன் தசரதனால் மறுக்கமுடியவில்லை. கண் இல்லாதவன் ஒருமுறை கிடைத்து அதனால் இவ்வழியே உலகைக் கண்டு போய்விட்டால் அவன் எவ்வளவு வருந்துவானோ அந்த நிலையிலே தசரதனும் இருந்தான். இதனைக், கண்ணிலான் பெற்று இழந்தான் என உழந்தான் கருந்துயரம் என்னும் தொடரால் விளக்குகிறார் கம்பர் என்கிறார் அ.ச. ஞானசம்பந்தம். (கம்பன் கலை ப.71)

**ஆறும் நாடும்**

நாடு அமைவதற்கு ஆதாரமாக இருப்பது ஆறு. நாட்டிற்கு மிகவும் இன்றியமையாதது ஆறு. நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு வள்ளுவர்,

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு (குறள். 737)**

என இலக்கணம் வகுக்கிறார். இதில் வருபுனல் என்பது ஆற்றுநீரைக் குறிப்பதாகும். கோசல நாட்டைச் சூழ்ந்திருந்த ஆறு சரயூ என்னும் ஆறாகும். நாட்டிற்கு அழகைத் தருவது இயற்கை வளம் எனக் குறிப்பிடுகிறார் ஔவை நடராசன். (கம்பர் காட்சி ப. 157) அறிவில் சிறந்த உண்மையே துணையாக உடைய எனக்கு எந்தச் செயல்தான் அரியது எனச் சுக்கீரிவன் அனுமனின் சிறப்பினைக் கூறுவதாக மு. சதாசிவம் குறிப்பிடுகிறார். (கம்பனின் வைர வரிகள். ப. 72) கதிரவனை, கதிர்க் காட்சியை வருணிக்குமிடத்து உவமைச் பொருந்தும்படி அமைந்த பகுதிகள் பல கம்பனிடம் அமைகின்றன. கதிரவனுக்கு ஒப்பாகவும் உவமையாகவும் இராமன் காட்டப்படுகிறான். இவ்வாறன்றி இராமன், சடாயு, சுக்கீரிவன் முதலிய பல கதை மாந்தருக்கு உவமையாகக் கதிரவன் தரப்படுதலும் காணப்படுகிறது என்பர். (ச.வே.சுப்பிரமணியன் கம்பன் கற்பனை ப. 76)

**தொகுப்புரை**

இதிகாசங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்றாகத் திகழ்வது கம்பராமாயணம். இராமயணக் கதையை அறியாதவர் யாருமில்லை என்று எண்ணுமளவிற்கு நூல் அமைந்திருப்பது மிகவும் போற்றுதலுக்குரிய ஒன்று. இராமாயணத்தைத் திறனாய்வு செய்ததில் ஆழங்கால் பட்டவராக ந. சுப்புரெட்டியார் திகழ்கிறார் என்பது அவர்தம் நூலிலிருந்து புலனாகிறது. கதை மாந்தர்களின் ஆற்றலை வெளிக்கொணர்வதில் இவருக்கு இணையானவர் யாருமில்லை என்றளவிற்கு இவருடைய கருத்துகள் அமைந்துள்ளன. இராமனும் இலக்குவனும் ஒருவரை ஒருவர் பேரன்பு கொண்டிருந்தனர் என்பதைச் சுமத்திரையின் வாயிலாகக் கம்பர் வெளிப்படுத்துவதாகக் குறிப்பிடுகிறார் ந.சுப்புரெட்டியார் மேலும், தன் தம்பியை மட்டுமின்றிச் சுக்கீரிவன், வீடணன் ஆகியோரையும் இராமன் அன்புடன் ஏற்றுக்கொண்டான் என்பதைத் பதிவு செய்துள்ளார். தன் உயிர் போவதற்கு ஊழ்வினைதான் காரணம் என்பதை மாரீசன் உணர்ந்து கொண்டதாக ந.சுப்புரெட்டியார் எடுத்துரைக்கிறார். இராமாயணக்கதை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மங்கலகரமாக முடிவதற்குக் காரணமாக இருந்தவன் அனுமன் என்பதை வலியுறுத்திக் கூறுகிறார். அனுமன் அசுரர்களை வதை செய்ததன் மூலம் அவனுடைய வீரம் வெளிப்படுவதாகக் குறிப்பிடுகிறார். சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதில் அனுமன் சிறந்தவன் என்பதை ந.சுப்புரெட்டியாரின் சொற்திறத்தால் உணரமுடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] ஔவை நடராஜன். *கம்பர் காட்சி*. சேகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1980.
[2] மு.சதாசிவம். *கம்பனின் வைர வரிகள்*. மணிவாசகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு, 2005.
[3] ச.வே.சுப்பிரமணியன். *கம்பன் கற்பனை*. உலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், தமிழ் பதிப்பகம், சென்னை, 1978.
[4] ந.சுப்புரெட்டியார். *கம்பனின் மக்கள் குரல்*. வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1983.
[5] ந.சுப்புரெட்டியார். *பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம்*. வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1996.
[6] ந.சுப்புரெட்டியார். *அண்ணல் அநுமன்*. வானதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.
[7] அ.ச.ஞானசம்பந்தன். *கம்பன் கலை*. பாரதி நிலையம், சென்னை, பதிப்பு, 1961.
[8] கோ.வெ.நடராசன். *கம்பராமாயணத்தில் மரபுவழிச் செல்வாக்கு*. குகன் பதிப்பகம், திருவாரூர், பதிப்பு, 2002.

**References**

[1] Avvai Nadarajan. *Kambar Kaatchi*. Sekar Pathippagam, Chennai, Edition, 1980.
[2] Mu. Sadhasivam. *Kambanin Vaira Varigal*. Manivasagar Padhippagam, Chennai, Edition, 2005.
[3] Sa. Ve. Subramaniyan. *Kamban Karpanai*. Ulaga Tamil Aarachi Niruvanam, Tamil Pathipagam, Chennai, 1978.
[4] N. Subbbu Reddiar. *Kambanin Makkal Kural*. Vanathi Pathippagam, Chennai, First Edition, 1983.
[5] N. Subbbu Reddiar. *Panpattu Nokkil Kamban Kaviyam*. Vanathi Pathippagam,Chennai, First Ed. 1996.
[6] N. Subbbu Reddiar. *Annal Hanuman*. Vanathi Pathippagam, Chennai, First Edition, 2003.
[7] A. S. Gnanasambandham. *Kamban Kalai*. Bharathi Nilaiyam, Chennai, Edition, 1961.
[8] Go. Ve. Nadarajan. *Kambaramayanathil Marabuvali Selvakku*. Gukan Pathippagam,Thiruvarur, Edition, 2002.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to me to write an article on this topic.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் நா சுப்புரெட்டியார் ஆய்வில் அகத்திணை ஒழுக்க நெறிகள்

## Internal Ethics (Agathinai) in the Study of Prof. Na. Subbu Reddiar

**மோ. நித்தியலஷ்மி,** முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
முத்துரங்கம் அரசினர் கலைக்கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.
**M. Nithyalakshmi,** Ph.D. Research Scholar of Tamil, Muthurangam Govt. Arts College, Vellore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-9754-3498**
**DOI: 10.5281/zenodo.7252915**

### Abstract

*One can learn from the Sangam literature that the Sangakala people lived their lives with certain morals. They have divided these types of morals into two types, internal (Agam) and external (Puram). Tolkappiyar has divided the internal disciplines into two disciplines: Kalavu (Secret Love) and Karpu (Chaste Love). The Agam life-style is also categorized as Punarthal, Pirithal, Iruthal, Irangal, Oodal, Perunthinai and Kaikilai, according to the suitable natural environment. The Sangam literature reveals that the Sangam period was characterized by a variety of land distinctions that divided the land into ecological and climatic regions for each land and bestowed praise on the way of life and morals of the people. According to Tolkappiyar, internal life is two types Secret Love and Married Love. The secret love is the deep love of the Thalaivan (Leader) and Thalaivi (Beloved) pure love that others will not give. The ancients marked the coexistence of lovers with morality, just as we call the scriptures "hidden scriptures", which means that the Kalavu life of the lover and the beloved is pure and when they marry, it is called Karpu Kadal. Karpu Kadal is about the marriage of the leader and the beloved who enjoyed the Kalavu Kadal now has made an immortal transformation into social life. The Sangakala people called the marriage customs Karanam. Tolkappiyar points out that the wedding ceremony of Karanam took place without the parents. The leader and the beloved agree to marry by elopement (Udanpooku). The custom of beating drums, Chonch blowing, and chanting were practised in the Sangam times. It is noteworthy that in the book of Internal Life Policies (Agathinai policies) from Professor Subbu Reddiar's point of view. He has explained in detail about the internal life-style of the Sangam people and the Agam principles.*

**Keywords:** Internal Ethics, Agathinai, Study, Prof. Na. Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*சங்ககால மக்கள் ஒழுக்க நெறிகளை தங்களது உயிருக்கும் மேலாக கொண்டு வாழ்ந்தனர் என்பதனை நாம் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது. ஐவகை ஒழுக்க நெறிகளை வகுத்துள்ளனர் ஒழுக்க நெறிகளை அகம், புறம் என இரு வகையில் பிரித்து வகுத்துள்ளனர். அகத்திணை ஒழுக்கங்களை களவு, கற்பு என்றும் அகத்திணை ஏழு திணைகளாகக் கொண்டு ஏழு ஒழுக்கங்களை தொல்காப்பியர் வகுத்துள்ளார். அகத்திணை ஒழுக்க நிகழ்வுகளை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல், பெருந்திணை, கைக்கிளை என வகைப்படுத்தி ஒழுக்கத்திற்கு ஏற்ற இயற்கைச் சூழலை பாகுபடுத்தியும் திணைப் பாகுபாட்டில் கூறியுள்ளார். ஐவகை ஒழுக்க நெறிகளான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்,*

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*பாலை என்றும், ஒவ்வொரு திணைக்கும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என ஐவகை நிலப் பாகுபாடுகளைக் கொண்டு சங்ககால மக்கள் ஒவ்வொரு நிலத்திற்கும் இயற்கை சூழல், தட்பவெப்பநிலை காலம் இவற்றைக் கொண்டு பிரித்து மக்களின் வாழ்க்கை முறையையும், ஒழுக்க நெறிகளையும் சிறப்பாக போற்றிய காலமாக சங்ககாலம் விளங்கியதை சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. அகத்திணை ஒழுக்கநெறிகள் களவு கற்பு என இரண்டு வகைகளாக தொல்காப்பியர் கூறுகிறார். களவு என்பது தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்ப கொள்ளாது இருவரும் தூய்மையான அன்போடு சேர்ந்து இருத்தலே களவொழுக்கம் ஆகும். பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல் என்று பொருள் கூறுவர் இளம்பூரணர் களவியல் உரையில் வேதங்களை எவ்வாறு மறை நூல் என்று சொல்கிறோமோ அதுபோலவே அறநிலை வழுவாமல் காதலர்கள் இணைந்து வாழும் வாழ்க்கைக்கு களவு என்று பண்டையோர் குறித்துள்ளனர். களவு வாழ்க்கையை மேற்கொண்ட தலைவன் தலைவி ஊரறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழ்வதே கற்பு வாழ்க்கை ஆகும். இதற்கு சங்ககால மக்கள் கரணம் என்று வழங்கினர். கொடுப்போர் இல்லாமலும் கரணம் என்ற திருமண சடங்குகள் நடைபெற்றுள்ளன என்று தொல்காப்பியர் கூறுகிறார். தலைவி தலைவனுடன் உடன்போகி இருவரும் மணம் புரிந்து கொள்வதும் உண்டு. பறையும், சங்கும், மங்கல நாளில் முழங்கும் வழக்கம் சங்க இலக்கியங்களில் இருந்து வந்துள்ளன. பேராசிரியரின் பார்வையில் "அகத்திணைக் கொள்கைகள்" என்ற நூலில் நமக்கு சங்ககால மக்களின் அக வாழ்க்கை முறை பற்றியும் அகத்திணை கோட்பாடுகள் பற்றியும் விளங்கவைத்துள்ளார்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் நா. சுப்புரெட்டியார், அகத்திணை, ஒழுக்கநெறிகள்.

**முன்னுரை**

சங்ககால மக்கள் தங்களது வாழ்க்கை முறையினை வகுத்துக்கொள்ள எதுவாக இருந்த இலக்கியங்களே சங்க இலக்கியங்கள் ஆகும். சங்ககால மக்கள் ஒழுக்க நெறிகளை தங்களது உயிருக்கு மேலாக கொண்டு வாழ்ந்தனர். தமிழர்களின் வாழ்வு இரு பெரும் பிரிவுகளாக அமைந்திருந்தது அவை அக வாழ்க்கை என்றும் புற வாழ்க்கை என்றும் இருந்தன அகம் சார்ந்த கோட்பாடுகளை, கொள்கைகளை பேராசிரியர் நா சுப்புரெட்டியார் அவர்களின் *அகத்திணை கொள்கைகள்* என்னும் நூலின் மூலம் நம்மால் எளிமையாக அறிய இயலுகிறது அவர்களின் இந்நூலினை மையமாகக்கொண்டு இக்கட்டுரையானது தொடங்கப்பட்டுள்ளது.

**நிலங்களும் ஒழுக்க நெறிகளும்**

சங்ககால மக்கள் ஒழுக்கங்களை ஐவகை நிலங்களுக்குள் பிரித்து வாழ்ந்துள்ளனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று நாம் வாழும் நிலப் பகுதிகளை ஐந்து கூறுகளாகப் பிரித்து வாழ்ந்துள்ளனர்.

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என சொல்லிய முறையால்**
**சொல்லவும் பெறுமே. (தொல். அகத்திணையியல், நூ. 5 )**

தொல்காப்பியர் இவற்றை முறையே காடுறை உலகமும், மைவரை உலகம், தீம்புனல் உலகம், பெரும் புனல் உலகம் என்று குறிப்பிடுகிறார். இவற்றைத்தவிர ஐந்தாவது நிலம் ஒன்று உண்டு இதனை பாலை என்று கூறப்படுகிறது. தமிழகத்தில் பாலை நிலம் இல்லை இயற்கை மாறுபாட்டால் பருவ மழை பெய்யாது இருக்கிற காலத்தில் முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் இயல்பை இழந்து புதியதொரு தன்மையுடைய நிலத்தினை பாலை என்று வழங்குவர்.

**முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும் (சிலப். காடு., அடி 64 - 66 )**

ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய ஒழுக்க நெறிகளை வகுத்து வாழ்ந்துள்ளனர். களவு, கற்பு என்ற இரு வட்டத்திற்குள் வாழ்க்கை முறையினை அமைத்துக்கொண்டு வாழ்ந்துள்ளனர்

**அகத்திணை ஒழுக்கநெறிகள்**

அகத்திணை ஒழுக்க நெறிகளை ஐந்திணை என்று எண்ணுப் பெயரால் வழங்கினர். திணை என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்று பொருள்படும் ஐந்து ஒழுக்க நெறிகளை தொல்காப்பியர்,

**புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலைத் திணைக் குரிப் (அகத்திணை., பா. 16)**

இவ்வாறு ஒழுக்கங்கள் ஐந்து வகையாக பிரித்து சொல்லப்பட்டுள்ளது. ஐந்து ஒழுக்கங்களும் எல்லா நிலத்து மக்களிடமும் நிகழும் பொதுவான நிகழ்ச்சிகள் என்றும் மலைநாட்டில் புணர்தல் நிகழும், முல்லை நிலத்தில் இருத்தலும், மருத நிலத்தில் ஊடல் நிகழ்வதாகவும் நெய்தல் நிலத்தில் இரங்கல் நிகழ்வதாகவும் பாலை நிலத்தில் பிரிதல் நிகழ்வதாகவும் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன.

**குறிஞ்சித்திணை**

மலையும் மலையை சார்ந்த இடத்தையும் சங்க கால மக்கள் குறிஞ்சித்திணை என்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வழங்கினர். "குறிஞ்சி என்பது குறி என்பதன் அடியாக வந்ததாகவும் குறி என்பதற்கு அடையாளம், காலம், அளவு, தடவை" (டாக்டர் ராமநாதன் முன்னூல், ப. 15) என பொருள்படுவதாகவும் இவை பல்லாண்டு கால அளவை குறிக்கும் பூவாகவும், இயற்கையாக வளரும் மலைமேல் அமையப் பெற்றதாகும் குறிஞ்சி என்ற சொல்லுக்கு 'குருமுதல் எனும் பொருள்படுவதாக அமைகின்றது. அதாவது அணுகுதல், நெருங்குதல், இறுகுதல், அணைதல், சேர்தல், இணைதல் புணர்தல் என பொருளுனர்த்துகின்றன. தலைவன் தலைவியை கண்ணுற்று அணுகி நட்புறுதலே குறிஞ்சி என்ற ஒழுக்க பெயராயிற்று இவ்வாறு ஒழுக்கத்தின் வழித்தோன்றிய குறிஞ்சி என்னும் பெயர் பின்னர் புணர்தல் நிகழ்வதற்கு சிறந்து விளங்கிய மலைக்கும் மலை சார்ந்த இடத்திற்கும் குறிஞ்சி என்றாயிற்று.

**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைக்கும்**
**நாடனொடு நட்பே (குறுந்தொகை, பா. 3: 3 - 4)**

மலையின் இயற்கை சூழல்களையும் எழில் கொஞ்சும் அழகினையும் சங்க இலக்கியப் பாடல்கள் தெளிவாக விளங்க வைக்கிறது சந்தனமும் செண்பகமும் மலைக்கு தெய்வீகமாக காட்சியளிக்கின்றன. மலைக்கு அழகுட்டுவனவாகும். விண்ணை முட்டும் அளவிற்கு பெரிய மரங்கள் இருந்தன குறிஞ்சி, கொங்கு, மாதவி, மல்லிகை, முல்லை போன்ற மலர்கள் மலை எங்கும் மலர்ந்து மணம் பரப்பி இருந்தன. ஆண் குரங்குகள் வெடித்த பலாவின் சுளை கடித்து கடித்து பெண் குரங்குகளுக்கு ஊட்டின. பைங்கிளிகள் செம்பவள வாயால் தேமாங்கனிகளைக் கொத்திக் கொத்தி தம் துணைகட்டுக்கு கொடுத்தன. ஆண் யானைகள் மூங்கிலை ஒடித்து பெண் யானைக்கு கொடுத்தன.

**கருங்கோற் குறிஞ்சி நும் உறைவு இன் ஊர்க்கே**
**கருங்கோற் குறிஞ்சி யடுக்கம் (அகம்., பா. 308:16)**

இத்தனை சிறப்பு வாய்ந்த குறிஞ்சி நிலத்தின் சிறப்பு பற்றி புகழ்ந்து பாடாத புலவர்களே கிடையாது. சங்கப் புலவர்கள் காதலர்களை சந்தித்து இன்பம் நுகரும் இடமாக குறிஞ்சி நிலத்தினை கொண்டு பாடல்கள் அமைத்துள்ளனர். கூதிர் காலம் பெரும்பொழுது யாமம் என்ற சிறும் பொழுதையும் குறிஞ்சி நிலத்திற்குரிய தாக கூறியுள்ளனர்.

**முல்லைத்திணை**

காடும் காடு சார்ந்த இருக்கும் பகுதிகள் முல்லை எனப்படும். சங்க இலக்கியங்களில் குறும்பொறை, கொள்ளை, செந் நிலம், புறவு, பனம், புன் புலம், மென்புலம், முரம்பு, வன்புலம் போன்ற பெயர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. காடுகளில் கார்காலத்தில் மேகங்கள் மழை பெய்து குன்றுகளையும் காட்டினையும் குளிரச் செய்கிறது. பெரிய மயில்கள் தோகையை விரித்து கொண்டு ஆடுகிறது. நீரும் நிழலும் எங்கும் நிறைந்திருக்கும் முல்லை நிலத்தில் முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கி இருக்கும். முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்கள் காட்டில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உள்ள ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு மரநிழலில் ஓய்வெடுப்பர் மாலை நேரம் ஆநிரைகளுடன் வீடு திரும்புவர். 'காரும் மாலையும் முல்லை' (அகத்திணை. பா. 6) இந்நிலத்திற்குரிய பெரும்பொழுது கார் காலமும், சிறுபொழுது மாலை நேரமாகும் என்பதனை தொல்காப்பிய அகத்திணை நூற்பா விளக்குகிறது. பெரும்பாலும் மாலை தொடங்கி நள்ளிரவு வரை மழை பெய்யும் இயல்புடைய நிலப்பகுதி இது. தலைவன் தலைவியை விட்டு பிரிந்து சென்று வருவதற்கு தாமதமாகின்றன நேரத்தில் தலைவனின் வருகையை எதிர்நோக்கி காத்திருக்கும் தலைவி முல்லை மலரை சூடாது தலைவன் வந்து விடுவான் என்று காத்திருக்கிறாள்.

**மருதத்திணை**

வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருத நிலப் பகுதியாகும். நீர்வளமும் நிலவளமும் மிக்க நிலமாக மருதநில திகழ்கிறது. இது தமிழரின் வளமான வாழ்க்கை முறையினை விளக்கி நிற்பதனால் குறிஞ்சித்திணை, முல்லைத்திணை ஆகிய இரு திணை நாகரிகங்களின் முன்னோடியாக மருதத்திணை நாகரிகம் காணப்படுகின்றது. இந்நிலத்தில் உழவுத் தொழில் முதன்மையான தொழிலாகும் உழவர்கள் தங்களுக்கு கிடைத்த ஓய்வு நேரத்தை களியாட்டத்தில் பொழுதை கழித்தனர். உழைத்த எருமைகள் மருத மர நிழலில் படுத்திருந்தன. நெல் அரிபவர்களின் பறையொலி கேட்டு பறவைகள் பறந்து செல்லும் இத்தகைய வளம் நிறைந்த மருத நிலத்தில் வாழ்பவர்கள் இடையே விலைமகளிருடன் இன்பம் தேடும் வழக்கமும் இருந்தது. இதனை அறிந்த தலைமகள் தன் தலைவன் இல்லம் திரும்பும்போது அவனுடன் ஊடல் கொள்வாள். 'வைகறை விடியல் மருதம்' (அகத்திணை., பா. 9) மருத நிலத்திற்கான பெரும்பொழுது தொல்காப்பியர் சுட்டவில்லை அதனால் உரையாசிரியர்கள் எல்லா பெரும் பொழுதுகளும் இந்நிலத்திற்கு பொருந்தும் என்கின்றனர். சிறு பொழுது இரண்டு உள்ளன வைகறை, விடியல் என்ற இரண்டும் மருத நிலத்திற்குரிய என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

**நெய்தல் திணை**

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலப்பகுதி ஆகும். நெய்தல் கொடி மிகுதியாக இருந்ததால் இந்நிலத்திற்கு நெய்தல் என்று பெயர் உண்டாயிற்று. ஒருவகை மலரின் பெயரும் நெய்தல் ஆதலால் இப்பெயர் வந்திருக்கலாம், நெய்தல் என்ற சொல்லுக்கு சங்க இலக்கியங்களில் பலவாறு விளக்கங்கள் தரப்பட்டுள்ளது. 'கண்போல் பூண்டு நூண்பல சிறு சடைய நெய்தல்' (நற். பா. 8- 8), 'நிணாறு நெய்தல்' (குறிஞ்சி. பா. 79) நாரை, அன்றில், கொக்கு கடலில் உள்ள மீனை கொத்தி உண்ணும், கடல் அலை உயர்ந்து தாழ்தல் தலைவியிடம் இறக்க உணர்ச்சியினை இவ்வலைகள் தோற்றுவிக்கின்றன. நெய்தல் ஆதல் மெய்பெற் தோன்றும் (அகத்திணை, பா. 10) என்று தொல்காப்பியர் ஏற்பாடு சிறும் பொழுதாகவும் பெரும் பொழுதை குறிப்பிடவில்லை ஆகையால் ஆறு பொழுதையும் கூறியுள்ளார் எனக் கொள்வது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வழக்கமாகும். மக்கள் மீன்பிடித் தொழிலை செய்யும் பரதவர்கள் ஆவர். உப்பு விற்றல், மீன்பிடித்தலும், சங்கு எடுத்தல், முத்து குளித்தல் போன்ற தொழிலினை நெய்தல் நில மக்கள் செய்து வந்துள்ளனர்.

**பாலைத் திணை**

வறண்ட நிலப் பகுதியை பாலை நிலமாகும். இப்படிப்பட்ட ஒரு நிலப்பகுதி நம் நாட்டில் இல்லை ஆனால் குறிஞ்சி நிலமும், முல்லை நிலமும் இயற்கையின் விளைவால் சில சமயங்களில் அதன் வளம் குன்றிப் போகும். அப்படி வளம் குறைந்த நிலையில் இருக்கும் குறிஞ்சியும் முல்லையும் பாலை நிலமாக மாறும் என்பதனை

**வான்முர்ந்த வயங்கொலி மண்புலம்**
**நெருங்யெனச் சிவந்த வுருப்பவிரங்காட்**
**புலையில் மலர்ந்த முகையிலிலவம் (அகம்., பா. 111:3)**

முல்லை நிலம் பாலையாக மாறுவதையும்,

**விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு**
**வயங்கெழு மாமலை பயங்கெடத் தெறுதலின் (அகம்., பா. 96:12)**

என குறிஞ்சி நிலம் பாலையாக மாறுதலையும் இப்பாடல் மூலம் அறியலாம். காதலால் கூடி இருந்து பின்பு பிரிவு ஒழுக்கத்தினை கொண்டிருப்பது பாலை திணை ஆகும். கோடைகாலத்தில் வெப்பம் சுட்டெரிக்கும் அளவுக்கு வெப்பத்தை கொண்டது பாலை நிலமாகும். மழையே இல்லாத கொடிய நிலம் இத்தனை கூடிய பாலைநிலத்தில் கொழுத்திருந்த யானைகள் கானலை நீரென்று அதைப் பருக ஆசைப்படும் கொழுத்திருந்த யானைகள் இளைத்து நிலத்தை உழும் கலப்பை போல் மாறின. எவ்வித விளைச்சலும் இல்லாத பாலைநில மக்கள் வழிப்போக்கர்கள் வரும் சமயம் பார்த்துக்கொண்டு காத்திருந்து கொள்ளையடித்து பிழைப்பு நடத்தினர். பாலைக்கு பெரும்பொழுது இளவேனிலும், முதுவேனில் சிறுபொழுது நண்பகல் ஆகும்.

**களவொழுக்கம்**

களவு பிறர் கூறிய பொருளை மறையில் கோடல், என்று பொருள் கூறுவர் இளம்பூரணர் களவியல் முதல் நூற்பாவில்,வேதத்தை மறைநூல் என்று சொல்வது போலவே அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் ‘களவு’ என்று பண்டையோர் குறித்தனர். என்பது அறியத்தக்கது. (அகத்திணை., பா. 39) களவானது பிணி மூப்பு இவைகள் இன்றி ஒப்புமை உடைய தலைவனும் தலைவியும் கொடுப்போர் இல்லாமல் கொள்வது களவாகும்.

**காமப் புணர்ச்சியும் இடந்தலைப்படுதலும்**
**பாங்கொடு தழாலும், தோழியிற் புணர்வும் என்று**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஆங்க நால்வகையினும் அடைந்த என்று**

**மறையென மொழிதல் மறையோர் ஆறே (தொல். செய்யுளியல், நூ. 1442)**

ஊழ் காரணமாக ஆண், பெண் உறவு களவில் தொடங்கிவிட்டால் அது ஊரறிந்த காதல் வாழ்க்கையாக கற்பு ஒழுக்கத்தில் முடிய வேண்டும் என்பதே தமிழ்ச் சமுதாயம் கொண்ட அகவாழ்க்கை நாகரீகம் ஆகும்.

**கற்பொழுக்கம்**

கற்பொழுக்கத்துக்கான இலக்கணத்தை தொல்காப்பியர் பின்வரும் செய்யுள் மூலம் விளக்குகிறார்.

**மறை வெளிப்படுதலும் தமரின் பெறுதலும்**

**இவை முதலாகிய இயல் நெறி திரியாது**

**மலிவும் புலவியும், ஊடலும் உணர்வும்**

**பிரிவோடு புணர்ந்தது கற்பெனப்படுமே (தொல். செய்யுளியல், நூ. 1443)**

களவை வெளிப்படுத்தி களவு வாழ்க்கையின் தொடர்ச்சியாக சமுதாயம் அறிய தலைவனும் தலைவியும் காதல் வாழ்க்கையை தொடங்குவதும் அல்லது பெற்றோர் சம்மதித்து இல்லற வாழ்க்கை நடத்தினாலும், இருவருடைய வாழ்க்கை தொடருமானால் அது கற்பொழுக்கம் எனப்பட்டது. இங்கு தலைவனை விட தலைவிக்கு மன ஒழுக்கம் வலியுறுத்தப்பட்டுள்ளது. தலைவன் தலைவியின் பிரிவும் உண்டு. ஓதல், பகை, தூது ஆகிய மூன்று செயல்களில் தலைவன் ஈடுபடும் பொழுது தலைவியைப் பிரிந்து செல்லவேண்டிய சூழல் ஏற்படுகிறது இந்நிலையில் தலைவி தலைவனுக்காக காத்திருக்க வேண்டிய சூழல் ஏற்படுகிறது கற்பு ஒழுக்கத்தில் பெண்களே பெரிதும் மாண்பு உடையவர்களாக போற்றப்படுவது அறியலாம்.

**முடிவுரை**

சங்ககால மக்களின் வாழ்க்கை நெறிமுறைகள், கலாச்சாரம், பண்பாடு நாகரிகங்களை பிரதிபலிக்கும் காலக்கண்ணாடியாக பண்டைய தமிழரின் வாழ்க்கை முறைகள் அமைந்திருந்தன. இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறைகளையும் ஒவ்வொரு நிலத்திற்கு ஏற்ப மக்களின் பண்புகளையும் அவர்கள் இயற்கையோடு கூடி வாழ்ந்து உள்ளமை பற்றியும் களவு கற்பு என்னும் வாழ்க்கை விதிகளைப் பற்றி பேராசிரியரின் அகத்திணை கொள்கைகள் எனும் நூல் தெளிவாக நமக்கு விளக்கியுள்ளது.

**குறிப்பு நூல்கள்**

[1] பேராசிரியர் ந. சுப்புரொட்டியார். *அகத்திணைக் கொள்கைகள்.* நாவல் ஆர்ட்ஸ் பதிப்பகம், சென்னை-14, முதல்பதிப்பு, டிசம்பர் 1981.

[2] பேரா. மு. சண்முகம் பிள்ளை. *தொல்காப்பியம்,* இளம்புரணர், பொருளதிகாரம். முல்லை

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

நிலையம், சென்னை-17, முதல் பதிப்பு 2003.

[3] முனைவர் வி. நாகராசன். *குறுந்தொகை.* நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98, நான்காம் பதிப்பு, அக்டோபர்-2011.

[4] ஔவை துரைசாமிப்புள்ளை. *ஐங்குறுநூறு.* சாரதா பதிப்பகம், சென்னை-14, முதற்பதிப்பு-2019.

[5] புலியூர்கேசிகன். *நற்றிணை.* வனச்சுடர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு-2017.

**Reference Books**

[1] Dr. N. Subbu Reddiar. *Akattinai-Kolkaikal.* Novel Art Printers, Chennai-14, First edition, December 1981.

[2] Prof. M. Shanmugam Pillai. *Tolkappiyam, Ilampuranar, Porul Athikaram.* Mullai nilayam, Chennai-17, First Edition, 2003.

[3] Dr. V. Nagarasan. *Kurnththokai*. New Century Book House, Chennai, Fourth Edition, October-2011.

[4] Auvai Thuraisamy Pillai. *Ainkurunuru*. Saratha Pathippagam. Chennai-14, First Edition, 2019.

[5] Puliyurkesikan. *Natrinai*. Vanachchudar Pathippagam, Chennai, First Edition, 2019.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# சைவ சமயமும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் சமய சிந்தனையும்

## Religious Thoughts of Professor N. Subbureddiar with Special Reference to Shaivam

**முனைவர் கு. பத்மநாபன்**, உதவிப்பேராசிரியர், தமிழ்மொழி மற்றும் மொழி பெயர்ப்பியல் துறை, திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம், சித்தூர் மாவட்டம், ஆந்திரப்பிரதேசம் - 517 426.
**Dr. G. Padmanabhan,** Assistant Professor of Tamil Language and Translation Studies, Dravidian University, Kuppam, Chittoor Dist, Andhra Pradesh - 517 426.
**ORCiD: https://orcid.org/0000-0003-0486-4087**
**DOI: 10.5281/zenodo.7266040**

**Abstract**

*Shaivam is one of the ancient religions that still exist in India. Monuments of Indus Valley civilization and parts of Vedic literature are the early evidence of Saivism. The presence of Shaivism can be traced to the era of the Pre-Sangam Age by the sources of Sangam texts. Literature of the Pallava period explains the re-emergence of Saivisam; in the subsequent period, the literature produced by Cholas portrays the glory of Shaivism. "Saiva Samaya Vilakku" the book written by Prof. N. Subbu Reddiar explained the concept of Saiva Siddhantha to the benefit of the common man. Other than this work, the author produced another book named "Saivasidhantham Oru Arimugam". Professor N. Subbu Reddiar authored separate books in which he explained the contribution of Thiruganasambandar, Thirunavukkarasar, Sundarar, Manikkavasakar, Thaiyumanavar, Pattinathar and their contribution to the Shaivism and Tamil Bhakti Literature. The book "Saiva Samaya Vilakku" has six chapters. The book has been in the form of that a great scholar name Karthikeyan who has immense knowledge of Saivasiddhantha explains its eminence to a young person named Kannuthalappan through fifty-one letters. This book can be defined under a separate category of literature called letter (Aphoristic) writing. The first chapter of this book is called 'Pathiyal'. In this chapter, the author explained the elements of lord Siva. The second chapter explained the concept of the soul, the third chapter deals with the hindrance of the soul. The fourth and fifth chapter deals with the way of liberation and salvation of the soul respectively. The last chapter deals with the concept of worship in Saivasidhantha. By learning this book one can come to know about the deep knowledge of the professor. N.Subbureddiar in both literature and philosophy and also one can view and understand the features of a dedicated teacher in Saiva Siddartha.*

**Keywords:** Religious Thoughts, Professor N. Subbureddiar, Saivism.

**ஆய்வுச் சுருக்கம்**

*சிந்துவெளி நாகரிக தொல்சின்னங்கள், வேதஇலக்கியங்கள் முதலியவை சைவ சமயத்தின் தொன்மையை எடுத்துரைக்கின்றன. தமிழக வரலாற்றில் மிகத் தொன்மையான காலமாகிய சங்க காலத்திற்கு முற்பட்ட காலப்பகுதியிலேயே சைவ சமயம் குறித்த, எண்ணங்கள் சமுதாயத்தில் நிலைபெற்றிருப்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. பௌத்தம், சமணம் முதலிய சமயங்களுக்கு உட்பட்டிருந்த தமிழ்ச் சமுகத்தில் தோன்றிய சைவ சமயத்தின் எழுச்சியைப் பல்லவர் கால இலக்கியங்கள்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*எடுத்துரைக்க, சோழர் காலம் என்பது சைவ சமயத்தின் செல்வாக்கு நிலைபெற்ற காலமாகும். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் இயற்றிய சைவ சமய விளக்கு என்ற நூல் சைவ சித்தாந்த சாரத்தை எளியோரும் விழையும் வண்ணம் எடுத்துரைக்கும் நூல் ஆகும். இந்த நூல் மட்டுமன்றி சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம் என்ற நூலும் ஆசிரியரால் இயற்றப்பட்டுள்ளது. மேலும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், தாயுமானவர், பட்டினத்தார் முதலிய சைவ சமய சான்றோர்களின் சமயப்பணி குறித்தும், தமிழ்ப் பணி பற்றியும் ஆசிரியரால் விரிவான நூல்களில் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. “சைவ சமய விளக்கு” என்ற நூல் ஆறு பகுதிகளைக் கொண்ட நூல் ஆகும். சைவ சித்தாந்தத்தில் பெரும் பயிற்சி பெற்ற கார்த்திகேயன் என்ற முதியவர் கண்ணுதலப்பன் என்ற இளைஞருக்குச் சைவ சித்தாந்தக் கருத்துக்களை ஐம்பத்தொரு கடிதங்களில் எடுத்துரைப்பதாக அமைந்த நூல் இது. அந்த வகையில் இது ஒரு கடித இலக்கியமும் ஆகும். இந்த நூலின் முதற்பகுதி பதி எனப்பெறும். சிவபெருமானின் உருவ இயல்பு, அருவ இயல்பு, அருவுருவ இயல்பு, பொதுப்பண்பு, சிறப்புப் பண்பு ஆகியவற்றை எடுத்துரைப்பதாகத் திகழ்கிறது. இரண்டாவது இயல் பசு எனப் பெறும் உயிரின் இயல்பு குறித்துச் சைவ சித்தாந்தம் கூறும் கருத்துக்களைத் தொகுத்துத் தருகிறது. உயிர் அடையும் மூவகை நிலைகள், ஐந்து வகை இயல்புகள் முதலியவை பற்றியெல்லாம் இரண்டாவது இயல் எடுத்துரைக்கிறது. மூன்றாவது பகுதி உயிர்களின் தளைகளான ஆணவம், கன்மம், மாயை குறித்து எடுத்துரைக்க நான்காவது இயலோ உயிர்கள் அந்தத் தளைகளில் இருந்து விடுபடும் பான்மையை எடுத்துரைக்கிறது. ஐந்தாவது இயல், உயிர்களின் முக்தி அனுபவத்தை எடுத்துரைக்க, ஆறாவது இயலான வழிபாட்டியல் என்பதோ இறைவனை அன்றாட வாழ்வியல் அகநிலையிலும் புறநிலையிலும் வைத்து வழிபடுவதை எடுத்துரைக்கிறது. மேலும் திருக்குறள் முதல் தாயுமானவர் பாடல்கள் வரை ஆசிரியர்க்கமைந்த பெரும்புலமையைக் கீழை மேலைத் தத்துவப் பயிற்சியை, கற்போர் உளம் கொள கற்பிக்கும் பான்மையைச் சைவ சமய விளக்கு என்ற நூலைக் கற்பதன் மூலம் அறியமுடிகிறது.*

**குறிப்புச்சொற்கள்:** சமய சிந்தனை, பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவ சமயம்.

**முன்னுரை**

சைவம் சார்ந்த சொல்லாடல்கள் இந்தியாவிலும், இலங்கையிலும் தமிழ் மக்களிடையே காலனிய காலத்தில் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டதோடு, அவை இந்திய விடுதலைக்குப் பிறகும் தொடர்ந்தமையைப் பேராசிரியர். ந. சுப்புரெட்டியார் [1916-2006] முதலிய பல அறிஞர்களின் பணிகள் உணர்த்துகின்றன. திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தலைவராகவும் பேராசிரியராகவும் நெடுநாள் பணியாற்றிய சிறப்புக்குரிய ந. சுப்புரெட்டியார் சங்க இலக்கியம் முதல் புதுக்கவிதை வரைப் பல்வேறுபட்ட களங்களில் பங்களித்துள்ள நிலையில் அவர்தம் 'சைவசமய விளக்கு' என்ற நூலை முன்வைத்துப் பேராசிரியரின் சைவசித்தாந்தம் குறித்த முடிவுகளைத் தொகுத்துரைப்பதே, இந்தக் கட்டுரையின் நோக்கமாகும். 'சைவசமய விளக்கு' மட்டுமின்றி, 'சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்' என்ற நூலும். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், தாயுமானவர், பட்டினத்தார் ஆகிய சைவசமயச் சான்றோர்கள் குறித்த நூல்களும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் சைவ சமய நிலைப்பாடுகளை அறியத் துணைபுரிகின்றன.

**ந. சுப்புரெட்டியாரின் சைவ ஈடுபாடு**

இளமைக்காலத்தில் கல்விகற்கும்போது துறையூர் என்னும் ஊரிலிருந்த சின்னமடம் என்னும் மடத்தில் தங்கியிருந்து சிவலிங்க வழிபாட்டை அவ்வப்போது ந.சுப்புரெட்டியார் மேற்கொண்டிருந்தமை தெரிகிறது. சைவ ஆலயங்களைத் தேடிச் சென்று வழிபடுவதில் பேராசிரியருக்கு மிகுந்த ஈடுபாடு இருப்பதை அவர்தம் தன் வரலாற்று நூல்கள் உணர்த்துகின்றன. அவர் இராமேச்சுரம், மதுரை, திருநெல்வேலி, திருவண்ணாமலை ஆகிய தலங்களில் உள்ள சிவாலயங்களைச் சென்று வழிபட்டிருக்கிறார். (நினைவுக்குமிழிகள், இரண்டாம் பாகம்: பக். 170) ந.சுப்புரெட்டியார் காசியாத்திரை சென்றமை குறித்தும் எழுதியிருக்கிறார். (நினைவுக்குமிழிகள், நான்காம் பாகம்: பக். 283) குன்றக்குடி அடிகளார் போன்ற சைவத் துறவிகளுடன் இவருக்கு நெருக்கம் இருந்துள்ளது என்பதனையும் அறியமுடிகிறது. (நினைவுக்குமிழிகள், மூன்றாம் பாகம்: பக். 129)

**சைவம் குறித்த அறிஞர் நோக்குகள்**

கிழக்காசியாவிலும் அமெரிக்கக் கண்டத்திலும் கிடைக்கப்பெற்றிருக்கும் சான்றுகளின் அடிப்படையில் சைவம் சார் பார்வை உலகெங்கும் காணப்பட்டது என்று சி.சு.மணி கருதுகிறார். (தத்துவ தரிசனங்கள்: பக்.247) சைவ சமயம் இந்தியா முழுவதும் வழங்கிவரும் நிலையிலும் வடக்கில் காணப்பெறும் காஷ்மீர சைவத்திற்கும் தெற்கில் காணப்பெறும் சைவசித்தாந்தத்திற்கும் மிகப்பெரிய வேறுபாடுகள் திகழ்வதாக கி.லட்சுமணன் கருதுகிறார். (இந்தியத் தத்துவ ஞானம்: பக்.365) மேலும் தமிழகத்தில் வழங்கிவரும் சைவசமயம் ஒரே தன்மையில் நிலைபெற்றிராமல் அதற்குள் படிநிலைமாற்றங்கள் நிகழ்ந்திருப்பதை க.கதிரவன் சுட்டிக்காட்டுகிறார். (க. கதிரவன்) இன்று தமிழகத்தில் வழங்கிவரும் சைவசித்தாந்தக் கருத்துகளைத் தொகுத்து அறிமுகப் படுத்தும் பணியை 'சைவசமய விளக்கு' என்னும் நூல்வழி சுப்புரெட்டியார் திறம்பட மேற்கொண்டுள்ளார் எனலாம்.

**சைவசமய விளக்கு ஒரு பொது அறிமுகம்**

ஏழு உட்பகுதிகளைக் கொண்ட 'சைவசமய விளக்கு' என்ற நூலின் கருத்துகள் கடிதம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற உத்தியின் வாயிலாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. சிவபெருமானுக்கு முருகப்பெருமான் ஓம் என்ற பிரணவ மந்திரத்தின் உட்பொருளை எடுத்துரைத்தான் என்று கருதும் சைவ மரபின் அடிப்படையில் முதியவர் கார்த்திகேயன், இளைஞரான கண்ணுதலப்பனுக்குச் சைவ சித்தாந்த விழுமியங்களின் சாரத்தை எடுத்துரைப்பதாக நூல் திகழ்கிறது. பாயிரவியல், பதியியல், பசுவியல், பாசவியல், சாதனவியல், பயனியல், வழிபாட்டியல் என ஏழு பகுதிகளைக் கொண்டதாக சைவசமய விளக்குத் திகழ்கிறது. சைவசித்தாந்த அடிப்படைகளைப் பயிலும் மரபு, ஞான பரம்பரை குறித்த விளக்கங்கள் முதலிய அடிப்படைச் செய்திகள் ஆறு கடிதங்கள் வாயிலாக பாயிரவியலில் விளக்கப்பட்டுள்ளன.

**சைவம் கற்கும் மரபு**

நூல்களைப் பொதுநூல்கள், சிறப்புநூல்கள் என்று இரண்டாகப் பகுக்கும் சைவமரபு, இறைவனாலும் இறைநிலை எய்தியவர்களாலும் பக்குவமடைந்த மாந்தர்களுக்காக இயற்றப்பட்ட காரணத்தினால் சைவ சித்தாந்த நூல்கள் சிறப்பு நூல்களே ஆகும் என்றும் விளக்குகிறது. திருவருட்பயன், உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், சிவஞானசித்தியார் நூலுக்குச் சுப்பிரமணியதேசிகர் அவர்கள் வகுத்த உரை ஆகியவற்றை முதலில் கற்றுத் தேறிய பிறகு, ஒருவர் சிவஞானபோதத்தைக் கற்பதே சிறந்தது என்ற கருத்தின் மூலம் ஆசிரியரின் புலமையை அறியமுடிகிறது. (சைவ சமய விளக்கு: பக். 12)

**சிவபெருமான் – விளக்கம்**

இரண்டாவது பகுதியான பதியியலில் சைவ சித்தாந்தத்தின் முப்பெரும் உண்மைகளில் ஒன்றாகிய பதி எனப்படும் இறைவன் குறித்த கருத்துகள் பதினொரு கடிதங்களில் உரைக்கப்பெற்றுள்ளன. முப்பெரும் உண்மைகளின் பொது இயல்புகள், சிறப்பு இயல்புகள் ஆகிய இரண்டும். காட்சி, கருதல், உரை ஆகிய மூன்று அளவைகளில் உரைக்கே மிகு முதன்மை வழங்கி சைவசித்தாந்தத்தில் முன்வைக்கப்பெறும். இருப்பினும் கருதல் அளவையின் துணையால் இறைவனின் இருப்பிற்குச் சைவசித்தாந்தம் மூன்று காரணங்களை எடுத்துரைக்கும். பல பகுதிகளாகப் பிரிக்கப்பெறல், அறிவற்றதாகத் திகழ்தல், சுட்டி அறியப்பெறுதல் ஆகியவற்றைக் கொண்டிருக்கும் இந்த உலகை இயக்கிட ஓர் பேராற்றல் இன்றியமையாதது. பிரிக்க இயலாத ஒரு பெரும் பொருளாகத் திகழ்தல், பேரறிவுப் பொருளாக இருத்தல், முற்றறிவுப் பொருளாக விளங்குதல் ஆகிய தன்மைகளைக் கொண்டிருக்கும் அந்த ஆற்றலுக்கே சிவபெருமான் என்று பெயர். உயிர்களுக்கு இன்பமும் அறிவும் நல்கி, துயர் நீக்கி தன் ஆற்றலை உணர்த்த இறைவன் முறையே, போகம், யோகம், வேகம் என்ற மூன்று நிலைகளில் வடிவம் கொள்கிறான். இவ்வாறு நிலையான ஓர் பேரிருப்பாகவும், பேரறிவுப் பொருளாகவும், பேரின்பப் பொருளாகவும் திகழும் இறைவன் குறித்த உபநிடத வரையறைகள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சைவ சித்தாந்த விளக்கங்களுடன் சிறப்பாகப் பொருந்தியிருக்கும் பான்மையை இந்நூல் துலக்குகிறது. (சைவ சமய விளக்கு: பக்.56)

**இறைவனும் உயிர்களும்**

இறைவன் உயிர்களுடன் கொள்ளும் தொடர்பு குறித்து இந்திய மெய்யியல் மரபு அத்வைதம், சுத்தாத்வைதம், கேவலாத்வைதம், துவைதம், விசிட்டாத்வைதம் முதலிய கலைச்சொற்களைப் பயன்படுத்தி விரிவாக விவாதித்துள்ளது. உயிரும், உடலும் போல ஒன்றுபட்டும், கண்ணொளியும் கதிரவன் ஒளியும் போல வேறுபட்டும், கண்ணொளியும் ஆன்ம ஒளியும் போல ஒன்றுபட்டும், வேறுபட்டும் ஒரே சமயத்தில் இறைவன் மூன்று நிலையில் தொடர்பு கொண்டிருப்பதாக சைவசித்தாந்தம் விளக்குகிறது. (சைவ சமய விளக்கு: பக்.79) படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகியவை இறைவனின் பருநிலை ஐந்தொழில்கள் என்றும், அவற்றை ஆற்ற சிவபெருமான் தன்விழைவால் முயலும் தன்மை நுண்ணிலை ஐந்தொழில்கள் என்றும் உயிர்களுடன் தொடர்புகொண்டு தன் ஐந்தொழில்களை அறிவிக்கும் தன்மை மிகுநுண்ணிலை ஐந்தொழில்கள் என்றும் அறியப்பெறுகின்றன. (சைவ சமய விளக்கு: பக். 83) மாற்றத்துக்கே உட்படாத ஒரு பேரிருப்பாகவும், பேரறிவுப் பொருளாகவும் பேரின்பம் நல்கும் ஒரு பொருளாகவும் திகழ்வதே இறை என்பதன் விளக்கமாகும் என்று உபநிடதங்கள் உரைப்பது சைவசித்தாந்தம் முன்வைக்கும் இறை வரையறையுடன் சிறப்பாகப் பொருந்தியிருப்பதை அறியமுடிகிறது. இறைவன் சிவபெருமான் என்ற சிறப்புப்பெயர் பூண்டும் அவ்வாறு இன்றியும் சமய நூல்களில் குறிக்கப்பெறுகிறான். பிற கடவுளர்களின் பெயர்களும் சமயநூல்களில் இடம்பெற்றிருக்கும்போது அவை சிவபெருமானின் சிறப்புகளுடன் தொடர்புகொண்டிருந்தால் அவை சம்புபட்சம் என்றும், அவ்வாறு இன்றி பிற கடவுளர்களின் பெயர்களையும், செயல்களையும் தனித்து விளக்கும் வண்ணம் திகழ்ந்தால் அந்தப் பெயர்கள் அணுப் பட்சம் என்றும் இரண்டாக அறியப்பெறுகின்றன. (சைவ சமய விளக்கு: பக். 94)

உயிர்கள் புற உலகை அறியக் கைக்கொள்ளும் கருவிகளின் ஆற்றலாலும், அவற்றின் சிறிய அளவிலான ஆற்றலின் துணை கொண்டும் இறைவனை அறிய இயலாது. மாறாக இறைவனை அறிய இன்றியமையாததாகத் திகழும் இறையருள் பதிஞானம் என்று அழைக்கப்பெறும். (சைவ சமய விளக்கு: பக். 116)

**உயிர்குறித்த பிறசமயக் கருத்துகளும் மறுப்பும்**

நூலின் மூன்றாவது இயலான பசுவியலில் ஐந்து கடிதங்கள் இடம்பெற்றுள்ளன. உயிரின் இயல்புகளை வரையறுப்பதில் தத்துவ மரபுகளுக்கிடையே கருத்துவேறுபாடுகள் உள.. ஐம்பூத ஆற்றலே உடலுக்கு அறிவு என்ற தேகான்மாவாதக் கருத்தை உறக்கத்தில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உடலின் இயல்பைச் சுட்டிக்காட்டி சைவசித்தாந்தம் கடந்துசெல்கிறது. (சைவ சமய விளக்கு: பக். 135, 136)

**ஒரு குறிப்பிட்ட புலனையே அறியும் ஐம்பொறிகள் அனைத்துப் புலன்களையும் தொகுத்தறியாது, தம்மையும் அறிவதில்லை. எனவே ஐம்பொறிகளைச் செலுத்தி புலன்களை அறியும் ஒரு பொருளே உயிர் என ஐம்பொறியான்மக்கொள்கை மறுக்கப்பட்டுள்ளது. (சைவ சமய விளக்கு: பக். 137)**

நுண்ணுடம்பே உயிர், அகக்கருவிகளே உயிர் என்ற கருத்துகளும் மறுக்கப்பட்டுள்ளன... நுண்ணுடல், பருவுடல் ஆகிய இரண்டின் மூலமாக அறிவையும், அனுபவத்தையும் பெறும் ஒரு பொருளே உயிராகும் என்பது சைவசித்தாந்த விளக்கமாகும். (சைவ சமய விளக்கு: பக். 138) சிந்தித்தல் என்ற ஒரே பணியை மேற்கொள்ளும் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய நான்கு அகக்கருவிகளை ஒரு குறிப்பிட்ட கருத்தில் செலுத்த உதவும் பொருளே உயிராகும். இவ்வாறு அகக்கருவி உயிர்க்கொள்கையைச் சைவசித்தாந்தம் மறுக்கிறது. (சைவ சமய விளக்கு: பக். 138, 139)

மூச்சுக்காற்றே உயிர், அனைத்துக் கருவிகளின் விளைவாகத் தோன்றும் ஆற்றலே உயிர் என்ற கொள்கைகளையும் சைவசித்தாந்தம் ஏற்பதில்லை. உறக்கம் விழிப்பு ஆகிய நிலைகளில் மூச்சுக்காற்றுச் செயல்பட்டாலும் விளையும் அனுபவங்கள் வேறுபட்டவை. மேலும் அறிவற்ற காற்றை அறிவுடைய உயிர் என்று கருதுவதும் பொருத்தமற்றது என்பது சைவசித்தாந்த நிலைப்பாடு (சைவ சமய விளக்கு: பக். 139). அறிவற்ற பொருள்கள் தாமே செயல்படாத நிலையில் அவை உயிராகா. உயிரை ஒரு பொருளுடன் ஒப்பிட்டே பௌத்தம் வரையறுக்கிறது. அந்த ஒப்பீட்டிற்குக் காரணமான ஒரு பொருளே உயிரென பௌத்தத்தைச் சைவசித்தாந்தம் மறுக்கிறது. (சைவ சமய விளக்கு: பக். 139). எல்லையற்ற பேரறிவுப்பொருள் கருவிகளின் துணையால் அறிவதாலும், பிரும்மம் என்ற பேரறிவு வடிவான ஒருயிர் இன்பதுன்பங்களில் உழல்வதால் அனைத்தையும் கடந்த பிரும்மத்தை உயிரெனக் கருதுதல் தவறு. (சைவ சமய விளக்கு: பக். 178). சமணம், வைணவம் ஆகிய முதன்மைச் சமயங்களின் உயிர்க்கொள்கைகளும், அணுவே உயிர் என்ற கொள்கையும் சைவசித்தாந்தத்தால் மறுக்கப்படுகின்றன. அட்டைப்பூச்சி உண்ணும் குருதியின் அளவைப் பொருத்துப் பெருத்தும் சிறுத்தும் அமைவது போல உயிரும் தான் சார்ந்திருக்கும் உடலைப் பொருத்து அளவில் பெரியதாகவும் சிறிதாகவும் அமையும் என்ற சமணக்கொள்கையைச் சைவசித்தாந்தம் உடன்படுவதில்லை. (சைவ சமய விளக்கு: பக். 150)

விளக்குக் கண்களுக்குப் புலனாகக்கூடியது, உயிரோ கண்களுக்குப் புலனாகாத ஒன்று. மேலும் விளக்கின் ஒளி எல்லா இடங்களிலும் ஒரே தன்மையில் இருப்பது போல உயிரின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அறிவும் ஒரே தன்மையில் எப்போதும் தொடர்ந்து இருப்பதில்லை என வைணவம் மறுக்கப்படுகிறது (சைவ சமய விளக்கு: பக். 153).

> **பனித்துளி போன்ற நுண்ணிய அளவிலிருக்கும் உயிர் உடலில் உள்ள துளைகளின் வழியே வெளியே வந்துவிடாமல் தொடர்ந்திருப்பதற்குக் காரணம் யாது என வினவும் சைவசித்தாந்தம், அணுவே உயிர் என்னும் கொள்கையை மறுக்கிறது (சைவ சமய விளக்கு: பக். 153).**

அனுபவங்களும், அவற்றின் விளைவுகளும் பலவகைப்பட்டதாக இருப்பதால் அனுபவங்களை நுகரும் உயிர்களும் பலவாகவே இருக்கவேண்டும். முதலில் உயிர் என்பது இறைவனாகிய நிலைப்பொருளோடு ஒப்பிட அனுபவங்கள் காரணமாக மாற்றமடையும் பொருளே ஆகும். அதேசமயத்தில் எப்போதும் மாற்றமடைந்துகொண்டிருக்கும் தளைகளை ஒப்பிட மாறாத ஒரு பொருளாகவும் உயிரைக் கருதலாம். இவ்வாறு உயிர்களைச் சதசத்து என்று வரையறுப்பது சைவசித்தாந்தம் (சைவ சமய விளக்கு: பக். 154). மேலும், உயிர் இறைவனை ஒப்பிட, சிற்றறிவுடனும், தளைகளை ஒப்பிட அறிவுடனும் திகழ்வதால் உயிருக்குச் சிதசித்து என்பது பெயர். (சைவ சமய விளக்கு: பக். 145).

உயிர் இறைவனாகிய மிகு நுண்பொருளை ஒப்பிட, பருப்பொருளாகவும், பருநிலைத் தளைகளுடன் ஒப்பிட, நுண்பொருளாகவும் திகழ்கிறது. (சைவ சமய விளக்கு: பக். 145).

அறிவித்தால் அறியக்கூடிய, ஒரு பொழுது ஒன்றைமட்டும் அறியவல்ல, இடைவெளிவிட்டு அறிய வாய்ப்புள்ள பொருளே உயிர் எனப்படும். அறியும் இயல்பை உயிரும் பெற்றிருக்கிறது என்பது மட்டுமே இறைக்கும் உயிருக்கும் இடையே பொதுவாக அமைந்த ஒப்புமையாகும்.. இறை எதையும் சார்ந்திருக்காமல் தன் விழைவாற்றலால் அனைத்தையும் அறிந்திட உயிரோ ஒருபொருளைச் சார்ந்து மட்டுமே அறிகிறது. இறைவனைப் போன்றே உயிர்களுக்கும் விழைவாற்றல், அறிவாற்றல், செயலாற்றல் என மூவகை ஆற்றல்களும் உண்டு. ஆனால் அவை ஒரு எல்லைக்குட்பட்டவையேயாகும்.

> **முப்பெரும் தளைகளுள் ஆணவத்தால் மட்டும் பாதிக்கப்பெற்ற உயிர்களுக்கு விக்ஞானகலர் என்று பெயர். ஆணவம், கன்மம் ஆகிய இரு வகைத் தளைகளாலும் பீடிக்கப்பெற்ற உயிர்களுக்குப் பிரளயாகலர் என்றும் மூவகைத் தளைகளின் பாதிப்பைப் பெற்றுத்திகழும் உயிர்களுக்குச் சகலர் என்றும் பெயர் (சைவ சமய விளக்கு, பக். 154).**

உயிர்களுக்கு ஆணவத்தின் மிகு மறைப்பால் அமைந்த இழிநிலையான கேவல நிலையிலும், ஆணவ ஆற்றல் ஓரளவு குறைந்த நிலையிலும், ஆணவ ஆற்றல் அறவே நீங்கிய தூயநிலையாகிய முக்தி நிலைகளிலும் ஐவகை அனுபவநிலை [ஐந்தவத்தைகள்] வாய்க்கப்பெறும். முறையே நனவு, கனவு, உறக்கம், உயிர்ப்பு, உயிர்ப்படங்கல் என ஐந்து

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பெயர்களைப் பெறும் ஐந்தவத்தைகளை உயிர்கள் புருவம் முதல் உடலின் ஐந்து இடங்களில் நிலைகொண்டு அறிந்துகொள்ளும். முக்திநிலையில் இறைவனின் திருவடி நிழலில் அமைந்து உயிர்கள் எல்லையற்ற பேரின்பநிலையை அனுபவிக்கும் போதும். இறை, உயிர் ஆகிய இரு பொருள்களின் இருப்பின் வேறுபாடுகள் உறுதியாக உண்டு. இவ்வாறு உயிரின் இயல்புகள் பசுவியலில் கூறப்பட்டுள்ளன.

**மும்மல விளக்கம்- ஆணவம்**

பாசவியல் பன்னிரண்டு கடிதங்களை உள்ளடக்கித் திகழ்கிறது. ஆணவம் என்ற சொல்லுக்குப் பொதுநிலையில் செருக்கு என்றும், (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி, முதன்மடலம், இரண்டாம் பாகம்: பக். 74) சைவ சித்தாந்தத்தில் அறியாமையை விளைவிப்பது என்றும் பொருளாகும். (சைவ சித்தாந்த அகராதி: பக். 36) அவ்வாறே ஆதிசங்கரரின் அத்வைதக் கொள்கையில் மாயை என்பது முற்றிலும் எதிர்மறையான ஒன்று. ஆனால் சைவசித்தாந்தம் நேர்மறை ஆற்றலாகவே மாயையை மதிப்பிடுகிறது. பாசவியலில் முதலில் ஆணவமலத்தின் இயல்புகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. ஒரே நிலையில் இருக்கும் இருள் பலவகைப் பொருள்களையும் மறைப்பதுபோல ஆணவமலம் மறைப்பைச் செய்கிறது. ஆணவமலம் உயிர்களுடன் என்றும் இருப்பதால் இதன் தொடர்புக்கு அநாதிசேர்க்கை என்று பெயர் (சைவ சமய விளக்கு: பக். 183). உயிர்கள் முழு அறியாமையில் மூழ்கி இருக்கும் நிலைக்குக் கேவலநிலை என்று பெயர். இறையின் அருளால் உயிர்களுக்கு மாயையின் தொடர்பு ஏற்பட, உயிர்கள் வினையாற்றத் தொடங்கும்போதும் ஆணவமலம் உயிர்களைக் கீழ்நோக்கிச் செலுத்தும் பணியே தொடர்ந்து மேற்கொள்கிறது. உயிர்கள் இறைவனின் திருவடி அருளில் இளைப்பாறும் போது ஆணவமலம் ஒடுங்கியிருக்கிறது.

**மும்மல விளக்கம் – கன்மம்**

ஆணவம் எப்போதும் எதிர் ஆற்றலாகவே திகழ்வதால், உயிருடன் அமைந்த அதே தொடர்புக்குப் பிரதிபந்தம் என்று பெயர். கன்மமலமோ உயிர்களின் அறிவுக்கு நேர்நிலை, எதிர்நிலை ஆகிய இருநிலைகளிலும் பங்களிப்பதால் அதன் தொடர்பு சம்பந்தத்தொடர்பு என்று சுட்டப்படுகிறது. ஒப்பீட்டுநிலையில் மாயையுடன் உயிர்களுக்குள்ள தொடர்பு அனுபந்தத் தொடர்பு எனப்படுகிறது. செய்பவர் இல்லாத நிலையில் செயல் தனித்துத் திகழவியலாது. இல்லாதது எதுவும் தோன்ற இயலாது, இருப்பது எதுவும் முற்றாக இல்லாமல் போகவும் இயலாது என்பது சத்காரியவாதமாகும். இந்தக் கொள்கையின்படி செயல் என்பது எப்போதும் நிலைபெற்றிருக்கும் ஒன்றே ஆகும். அந்த முதற்செயலுக்கு ஆதிகர்மம் என்று பெயர் (சைவ சமய விளக்கு: பக். 195). உயிரின் சாதி, ஆயுள், இன்ப, துன்ப அனுபவம் ஆகியவற்றின் காரணமாக செயல்கள் வெவ்வேறுநிலையில் பாதிப்புகளை அவற்றுக்கு ஏற்படுத்துகின்றன. இங்குச் சாதி என்ற சொல்லுக்குப் பிரிவு என்பதே பொருள். (சைவ சமய விளக்கு: பக். 206).

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முழுமையான அறியாமையில் மூழ்கியிருக்கும் உயிர்களுக்கு இறைவன் மாயையிலிருந்து நுண்ணுடலைப் படைத்தளிக்க அவை நற்செயல், தீச்செயல் ஆகியவற்றை மேற்கொள்வதால், அவற்றுக்குப் பருவுடல் வாய்க்கப்பெறுகிறது.

சில பொழுது முதலில் இயற்றப்பட்ட சில செயல்கள் பிறகும், தாமதமாக இயற்றப்பட்ட செயல்கள் காலத்தால் முன்னதாக பயனளிக்கக் கூடும் என்று வினைக்கொள்கை நூலில் விளக்கப்பட்டுள்ளது. மேலும் ஒரு செயல் முற்றுப்பெறும் முன்பே அதன் பகுதியாகிய பயன், அதனொடு தொடர்புடைய பிறிதொரு செயல் என செயற்சுழற்சி உருவாகிவிடுவதை நாசோத்பத்தி என்ற சொல் குறிக்கிறது (சைவ சமய விளக்கு: பக். 211).

**நிகழ்த்தப்படும் செயலுக்கு ஆகாமியம் என்றும் உரிய காலத்தில் பயன் நல்குவதற்காக நுண்வடிவில் அது காத்திருக்கும்போது சஞ்சிதம் என்றும் பயன் நல்கும் நிலைக்குப் பிராரப்தம் என்றும் பெயர். (சைவ சமய விளக்கு: பக். 199).**

**பிற உயிர்களாலும், இயற்கைசார் தொடர்புகளாலும், அறிய இயலா ஆற்றல்களாலும் உயிர்களுக்கு இன்ப, துன்ப அனுபவங்கள் முறையே ஆதிபௌதீகம், ஆதிஆன்மீகம், ஆதிதைவீகம் என பகுக்கப்பட்டுள்ளன (சைவ சமய விளக்கு: பக். 207).**

தத்துவம் என்ற சொல்லைப் பொருள் என்பதைக் குறிக்கும் ஒரு கலைச்சொல்லாக சைவசித்தாந்தம் ஆள்கிறது (சைவ சமய விளக்கு: பக். 217). ஈச்சுரத் தத்துவம் என்றால் இறைவனுக்குரிய பொருள்கள் என்றும் வித்யா தத்துவம் என்றால் உயிர்களின் அறிவாற்றலுடன் தொடர்புடைய பொருள்கள் என்றும் விளக்குகின்ற சைவசித்தாந்தம் ஆன்ம தத்துவங்கள் எனின் உயிரின் விழைவாற்றல், செயலாற்றல் ஆகிய மற்ற இரு ஆற்றல்களுடன் தொடர்புடைய பொருள்கள் என்று விளக்குகிறது. மேலும், நாம் அறிந்த அனைத்துப் பொருள்களையும் சைவசித்தாந்தம் உடல் [தனு], கருவிகள் [கரணம்], உலகம் [புவனம்], இன்ப, துன்ப அனுபவம் [போகம்] என வகைப்படுத்துகிறது. இவையாவும் மாயை எனப்படும் ஒரு பொருளின் விளைவுகளே ஆகும்.

**மும்மல விளக்கம் – மாயை**

உள்பொருளான மாயை சுத்தமாயை, அசுத்தமாயை என வகைப்படுத்தப்பட்டுள்ளது (சைவ சமய விளக்கு: பக். 217). தனக்குரிய உடல், பொறிகள், உலகம் முதலியவை சுத்தமாயையிலிருந்தே இறைவனால் உருவாக்கிக்கொள்ளப்படுகின்றன. சுத்த மாயையில் திகழும் உலகங்களில் அறியாமை எனப்படும் ஆணவமலத்தின் பாதிப்பு மட்டும் உள்ள உயிர்கள் வாழ்கின்றன. அசுத்த மாயைக்கு மிச்சிரமாயை என்ற பிறிதொரு பெயரும் உண்டு. இது பிரகிருதி மாயை என்பதாக ஒருபுடைப் பரிணாமமும் கொள்ளும். அந்த நிலையில் அசுத்த மாயை இருமல உயிரிகளின் வாழ்விடமாகவும், பிரகிருதி மாயை மும்மல உயிரிகளின் வாழ்விடமாகவும் முறையே திகழும். சுத்தமாயை நுண்பொருள் ஒன்று பருப்பொருளாக

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விரிவடைந்து செயல்படுவதுபோல தூயவுலகு தோன்ற காரணமாகிறது. இதற்கு விருத்தி என்று பெயர். ஆனால் அசுத்தமாயையோ சாணத்தின் ஒரு பகுதி புழுவாக பரிணமிப்பதுபோல ஒருபுடைப் பரிணாமம் கொண்டு பிரகுருதி மாயையின் தோற்றத்துக்குக் காரணமாகிறது.

உலகின் தோற்றம் குறித்த மெய்யியல் விளக்கங்களை விருத்தி, ஆரம்பம், பரிணாமம், சமுதாயம், விவர்த்தனம் என ஐந்தாகத் தொகுத்தளிக்கிறார் ஆசிரியர் (சைவ சமய விளக்கு: பக். 230, 231). இவற்றுள் சைவசித்தாந்தம் விருத்தி, பரிணாமம் ஆகிய முறைமைகளின் துணையால் தூயவுலகம், மாசுலகம் ஆகிய இருவகை உலகங்களின் தோற்றம் குறித்து விளக்குவதாகக் கருதலாம். உலகங்களைச் சொல்லுலகம், பொருளுலகம் என பிறிதொரு நிலையில் சைவசித்தாந்தம் வகைப்படுத்தியுள்ளது (சைவ சமய விளக்கு: பக். 236). மந்திரம், பதம், வர்ணம் ஆகிய மூன்றும் சொல்நிலை உலகங்களாகும். புவனம், தத்துவம், கலைகள் ஆகிய மூன்றும் பொருள் நிலை உலகங்களாகும். நிவித்தி, பிரதிட்டா, வித்யா, சாந்தி, சாந்தியதீதம் ஆகியவை ஐந்து கலைகளாகும். இவை ஆறும் இணைந்து ஆறு அத்துவாக்கள் என்று குறிக்கப்படுகின்றன (சைவ சமய விளக்கு: பக். 217). உயிர்கள் விடுதலையடைய உதவும் காரணத்தால் சொல்நிலை, பொருள்நிலை ஆகிய இரண்டைச் சார்ந்த ஆறுவகை உலகங்களுக்கும் அத்துவாக்கள் என்ற பெயர் அமைந்ததாகக் கருதலாம்.

ஈச்சுர தத்துவம், வித்யா தத்துவம், ஆன்ம தத்துவம் என மூன்றுவகைப்பாடுகளுள் இதுவரை உரைக்கப்பட்டவை ஈச்சுர தத்துவம் என்ற வகைப்பாட்டில் இடம்பெற்றுள்ளன (சைவ சமய விளக்கு: பக். 267). இறைவனுக்கும் உரிய பொருள்களாகத் திகழ்வதால், மந்திரம், பதம், வர்ணம் ஆகிய சொல்நிலை உலகங்களும் புவனம், தத்துவம், கலைகள் ஆகிய பொருள்நிலை உலகங்களும் ஈச்சுர தத்துவம் என்ற பொதுச்சொல்லால் குறிக்கப்பட்டுள்ளன. பொருள்களை வித்யாதத்துவம், ஆன்மதத்துவம் என வேறுநிலைகளிலும் சைவ சித்தாந்தம் விளக்குகிறது. இவற்றை மாயையின் நான்கு பகுதிகளுள் உடல், பொறிகள் ஆகிய பகுப்புகளைச் சார்ந்த இரண்டாக வகைப்படுத்திக்கொள்ளலாம். காலம், நியதி, கலை, வித்தை, புருடன், அராகம், மாயை ஆகியவை வித்யா தத்துவங்கள் எனப்படும் (சைவ சமய விளக்கு: பக். 216, 219). இவற்றுள் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகியவை ஆன்மாவின் ஐந்து சட்டைகள் என்று பொருள் தரும் பஞ்ச கஞ்சுகங்கள் என்று குறிக்கப்படும். இவை அனைத்தின் களமாகத் திகழ்வது அசுத்த மாயையே ஆகும். இருமல உயிரிகள் ஐந்து சட்டைகள் வாயிலாகவும், அசுத்த மாயையின் விளைவாகத் தோன்றும் காரண சரீரம் என்பதன் துணைகொண்டும் இன்ப, துன்ப அனுபவங்களை அடையக்கூடும். ஆனால் மும்மல உயிரிகளோ பிரகிருதி மாயையின் விளைவாகப் பிறக்கும் குணசரீரம் வாயிலாக இன்ப, துன்ப அனுபவத்தைத் துய்ப்பர். ஆன்ம தத்துவங்கள் இருபத்துநான்கும் அகக்கருவிகள், செயற்கருவிகள், அறிகருவிகள், தன்மாத்திரைகள், ஐம்பூதங்கள் என

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வகைப்படுத்தப்பட்டுள்ளன (சைவ சமய விளக்கு: பக். 232). அகக்கருவிகள் செயல்பட்டு மற்ற தத்துவங்கள் தோன்ற எவ்வாறு வாயில்களாகத் திகழ்கின்றன என்பதும் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. அகக்கருவிகளுள் ஒன்றாகிய சித்தம் என்பது ஒரு பொருளைப் பொதுநிலையில் சென்று பற்றும். பிறகு புத்தி தத்துவம் செயல்படத் துவங்கும். புத்தி தத்துவம் தர்மம், ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம் ஆகிய நற்பண்புகளின், அவற்றுக்கு மாறான நான்கு தீய பண்புகளின் நிலைக்களமாகவும் தொடர்ந்து இருந்துவரும். உள்ளத்தின் எழுச்சிக்களமாகிய அகங்காரம் என்பது புத்தியைத் தொடர்ந்து செயல்படத் தொடங்கும். மேலான விழைவிலிருந்து மனம் என்பதும் ஐந்து அறிகருவிகளும் தோன்றும், அதன் இடைநிலைப் பண்பிலிருந்து ஐந்து செயற்கருவிகளும் அகங்காரத்தின் கீழ்நிலை இயல்பிலிருந்து ஐந்து தன்மாத்திரைகளும் தோன்றும்.

உயிருக்கு ஐவகை உடல்கள் அமையப்பெறுவதாக சைவசித்தாந்தம் எடுத்துரைக்கிறது. முதலில் புலப்படும் உடல் பருவுடலாகும். தொடர்ந்தமைவது நுண்ணுடல், மூன்றாவது பரவுடல். அதனைத் தொடர்ந்து கஞ்சுகசரீரம், காரண சரீரம் ஆகிய உடல்களும் உள்ளன. ஐம்பூதங்கள், ஐந்து அறிகருவிகள், ஐந்து செயற்கருவிகள் ஆகியவற்றைக் கொண்டது பருவுடலாகும். நுண்ணிய ஐம்பூதங்களாகிய தன்மாத்திரைகள், மனம், புத்தி, அகங்காரம் ஆகியவற்றைக் கொண்டது நுண்ணுடல். சித்தம் மற்றும் ஏழு வித்யா தத்துவங்கள் ஆகியவை இணையத் தோன்றுவது பரசரீரமாகும். தொடர்ந்து கஞ்சுக சரீரம் காரண சரீரம் ஆகியவையும் உயிரின் இருப்புக்கும், தேவைக்கும் இன்றியமையாதவை. பருவுடல் உணவாலும், நுண்ணுடல் மூச்சுக்காற்றாலும், அடுத்தமைந்த பரவுடல், மனத்தாலும் முறையே வளர்ச்சியடைகின்றன. நான்காவதாகிய கஞ்சுகசரீரம் அறிவாலும், இறுதியாக அமைந்த காரண சரீரம் ஆனந்தத்தாலும் வளர்ச்சியடைவதாக சைவசித்தாந்தம் எடுத்துரைக்கிறது. உடலை விடுத்து உயிர் நீங்கும்போது பருவுடல் மட்டுமே நீங்கும். ஆனால் முக்தி நிலையில் மட்டுமே உயிரை விடுத்து நுண்ணுடல் நீங்கும்.

**வீடுபேற்றின் படிநிலைகள்**

சரியை [இறைத்தொண்டு], கிரியை [இறை வழிபாடு], யோகம் [இறையனுபவம்], ஞானம் [இறையறிவு] ஆகியவை வீடுபேற்றுக்கு உதவும் படிநிலைகளாகும். இவற்றுள் ஞானம் எனப்படும் இறையறிவே இறுதிநிலை இலக்காகிய வீடுபேற்றை அடைய உதவும் (சைவ சமய விளக்கு: பக். 270). ஓர் ஆசிரியர் வடிவில் சிவபெருமான் எழுந்தருளி உயிர்களின் நலனை விழைந்து அவற்றுக்கு ஞானத்தை வழங்கிட அது அவற்றுக்குக் கைகூடும் என்பது சைவக் கொள்கை. உயிர்களால் மேற்கொள்ளப்பெறும் செயல்கள் யாவும் பசுபுண்ணியம், சிவபுண்ணியம் ஆகிய இரண்டாக வகைப்படுத்தப்பெறும் (சைவ சமய விளக்கு: பக். 282). சிவபுண்ணியங்களே உயிர்களுக்கு இறுதிநிலை முத்தியை அருளச்செய்யும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நற்செயலின் பயனறியாது தற்செயலாக அதைச் செய்வதும், சிவபெருமானின் பெருமையறியாது அவருக்கு மேற்கொள்ளும் வழிபாடும் அபுத்திபூர்வ சிவபுண்ணியம் என்றழைக்கப்படும். இவ்வாறன்றி பயன்கருதியும், சிவபெருமானின் பெருமையறிந்தும் மேற்கொள்ளப்பெறும் செயல்கள் யாவும் புத்திபூர்வ சிவபுண்ணியமாகும் (சைவ சமய விளக்கு: பக். 288, 289). மேலும் பொது சிவபுண்ணியம், சிறப்புச் சிவபுண்ணியம், உபாய சிவபுண்ணியம், உண்மைச் சிவபுண்ணியம் என்றும் செயல்கள் விளக்கப்படுகின்றன. சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நிலைகளிலும் சரியையுள் சரியை, சரியையுள் கிரியை, சரியையுள் யோகம், சரியையுள் ஞானம் எனப் பகுப்புகளை முன்வைக்கிறது சைவ சித்தாந்தம். இங்கு பயன்படுத்தப்பட்டுள்ள யோகம் என்னும் சொல் ஆறு தரிசனங்களில் ஒன்றாக முன்வைக்கப்பெறும் யோகம் என்பதிலிருந்து வேறுபட்டது எனலாம். ஆறுதரிசனங்களுள் ஒன்றான யோகத்தைக் குறித்து ஜெயமோகன் இந்து ஞான மரபின் ஆறுதரிசனங்கள் என்னும் நூலில் விரிவாகப் பேசுகிறார். (இந்து ஞான மரபின் ஆறுதரிசனங்கள், ப. 110-121) பொதுவாக இவற்றை இறைவனுக்குத் தொண்டுபுரியும்நிலை, அருகணையும்நிலை, ஒன்றிடும் நிலை, திளைக்கும் நிலை எனப் புரிந்துகொள்ளலாம். சரியை, கிரியை முதலியவற்றைத் தொடர்ந்து, சைவத்தில் யோகமும், யோகத்துள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என பகுத்து விளக்கப்பட்டுள்ளது (சைவ சமய விளக்கு: பக். 293). முக்திக்கு உதவும் படிநிலைகளில் இறுதியாக அமையும் ஞானம் ஆசிரியரின் வாயிலாக முறையாகத் தீக்கைபெற்று சிவவழிபாடு மேற்கொள்ளப்பட அதிகரிக்கும்.

**தீக்கைகள்**

தீக்கை சைவமரபில் சமய தீக்கை, விசேஷ தீக்கை, நிர்வாண தீக்கை என வகைப்படுத்தப்பட்டுள்ளது (சைவ சமய விளக்கு: பக். 280). நிர்வாண தீக்கைக்குப் பிறகே ஞானம் அடையும் சூழல் அமையப்பெறுகிறது. நிர்வாண தீக்கை பெற்றவருக்கு முத்தி இன்பத்தை அப்போதே நல்குமாயின் அது சத்தியோநிபாதை என்ற பெயரையும் உடம்பு விடுபட்டவுடன் அவருக்கு முத்திப்பேற்றை வழங்கிடும் எனில் அது அசத்தியோநிபாதை என்றும் பெயர் பெறுகிறது. மேலும் நிர்வாண தீக்கை நெருப்பின் துணை கொண்டும், அதன் துணை இல்லாமலும் வழங்கப்படலாம். நிர்வாண தீக்கை மந்திரங்களின் துணையாலும், அவை இன்றியும் வழங்கப்படலாம். நெருப்பின் துணையால் வழங்கப்பெறும் அங்கிதீக்கையில் நெருப்பை வளர்க்கும் பொருள்களை உள்ளத்தில் கருதி அவையின்றி மேற்கொள்ளப்பெறும் ஒருவகைத் தீக்கைக்கு ஞான தீக்கை என்றும், அந்தப் பொருள்களைப் பருநிலையில் அமைத்து முறையாக நெருப்பு வளர்த்து வழங்கப்பெறும் தீக்கைக்குக் கிரியா தீக்கை என்றும் பெயர். நெருப்பின் துணையின்றி வழங்கப்பெறும் அங்கதீக்கையில் ஆறுவகை உண்டு. ஆசிரியர் மாணவரை விழிகளால் நோக்கியும் உடலைத் தீண்டி யும். மந்திரங்களைக் கற்பித்தும்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வழிகாட்டலாம். ஆசிரியர் தம் உள்ளத்தால் மாணவரின் உள்ளத்தைத் தொடர்புகொண்டும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பயிலச்செய்தும், மாணவரை ஆசிரியர் சிவயோகம் பயிலுமாறு கட்டளையிட்டும் தீக்கை வழங்கலாம் (சைவ சமய விளக்கு: பக். 310).

**இறுதிநிலைப் பயன்கள்**

பாசநீக்கம், சிவப்பேறு ஆகியவை இறுதிநிலைப் பயன்களாகும். சரியையில் நிலைத்திருப்பவர்களுக்கு இறைவன் மறைந்து நின்றும். கிரியையில் திகழ்பவர்களுக்கு இறைவன் உரியபொழுதில் வெளிப்பட்டும், யோகத்தில் நிலைப்பவர்களின் உள்ளத்தில் தோன்றியும் ஞானத்தில் திகழ்பவர்களுக்கோ இறைவன் தோன்றி அருள்புரிவதாகவும் சைவசித்தாந்தம் உரைக்கிறது. கேட்டல், சிந்தித்தல், துணிதல், நிஷ்டையில் திளைத்தல் என ஞானப்பேறு உயிர்களுக்கு நிகழும். இவற்றின் வாயிலாக உயிர்கள் பாசம், பசு, பதி ஆகிய மூன்றின் பொதுவியல்பு, சிறப்பியல்பு ஆகிய இரண்டு குறித்தும் பொதுநிலையறிவு, சிறப்புநிலையறிவு இரண்டையும் எய்துவதோடு இறுதிநிலை இலக்காகிய சிவபேரின்பத்திலும் திளைக்கும். இந்தச் செயல்முறையைத் தசகாரியம் என்ற சொல்லால் சைவசித்தாந்தம் குறிக்கிறது (சைவ சமய விளக்கு: பக். 314). தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவ ரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகிய பத்துவகை நிகழ்வுகளே தசகாரியம் ஆகும். இவற்றுள் ரூபம் என்பது பொதுநிலை அறிவையும், தரிசனம் என்பது ஐயத்திற்கு இடம்தரும் அறிவையும் சுத்தி என்பது சிறப்புநிலையறிவையும் குறிக்கும். ரூபம் கேட்டலின் விளைவாகவும், தரிசனம் சிந்தித்தல் மற்றும் துணிதலின் வாயிலாகவும் சுத்தி என்பது ஆழ்ந்து செல்லுதலின் விளைவாகவும் தோன்றும்.

இறுதிநிலை முக்திக்கு அபர முக்தி என்பது பெயர். இந்த நிலையில் உயிர் சிவபெருமானின் திருவடியில் தொடர்ந்து எல்லையற்ற இன்பத்தை அனுபவிக்கும். உயிர்கள் அபரமுக்திக்குச் சற்றுக் கீழான நிலையில் திகழ்வது பரமுக்தியாகும். பரமுக்தி உயிர் சிவபெருமானின் மேலான உலகில் சென்று இன்புற்று ஒரு குறிப்பிட்ட காலம் கழிந்து மீளும் நிலையைக் குறிக்கும் (சைவ சமய விளக்கு: பக். 357, 358). சிவபெருமான் உலகிற்குச் செல்லுதல், அவனுடைய வடிவம் செயல் இவற்றுள் ஏதேனும் ஒன்றையோ சிலவற்றையோ பெற்றுத்திகழ்தல், அவன் அருகில் இருத்தல் முதலியவை உயிர்களுக்கு அபரமுக்தியில் வாய்க்கும். முக்திநிலையைப் பதமுக்தி, ஜீவன்முக்தி என பிரிதொரு நிலையிலும் பகுக்கலாம். உடலைத் துறந்தநிலையில் உயிர் இன்பம் நுகர்வது பதமுக்தியாகும். ஆனால் சில சிறந்த பக்குவமடைந்த உயிர்கள் பருவுடலுடன் வாழும்போதே வீட்டின்பத்தை அனுபவிக்கவும் கூடும். அந்த நிலைக்கு ஜீவன் முக்தி என்று பெயர். சைவசித்தாந்த இயல்புப்படி முக்திநிலையில் இறைவனின் திருவடியில் இளைப்பாறும் உயிர் கரைவதோ, மறைவதோ

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இல்லை. இந்த இயல்பை தாடலை என்ற சொற்புணர்ச்சியின் துணைகொண்டு அறியலாம். தாள் தலை என்ற இரு சொற்களும் புணரும்போது தாடலை என்று மாற்றமடையும். அந்த சொல்லில் தாள் தலை ஆகிய இரு சொற்களும் திகழ்வதுபோலவே முக்தி என்ற ஒரு நிலையில் இறையும், உயிரும் ஒன்றுபட்டுத் திகழ்கின்றன (சைவ சமய விளக்கு: பக். 340, 341). தாள் ஒன்றைத் தலை பணியும்போது தன்னைவிட மேலான ஒன்றைத் தான் பணிவதாக உள்ளம் கருதுவது போல முக்தியில் இறையின் இருப்பு உணரப்படுகிறது. நூலின் இறுதிப்பகுதி வழிபாட்டியல் என்பதாகும். புறத்தில் நிகழும் வழிபாடு [பாஹியபூசை], அகவழிபாடு [மானச பூசை] எனவும் இருநிலைகளில் குறிக்கப்பெறுகின்றன (சைவ சமய விளக்கு: பக். 341, 342). இருவகை வழிபாடும் ஒருவரால் இயற்றப் பெறவேண்டும். வழிபாட்டால் உள்ளம் தூய்மையடைவதோடு நாள்தோறும் வழிபாடு மேற்கொள்ள பெற உள்ளம் மேன்மையடையவும் செய்கிறது. ஆலயம் குறித்த வரலாற்று நோக்கு, குறியீட்டு விளக்கம், மானுடநேயம் சார்ந்த ஆலய வழிபாட்டு அணுகுமுறை ஆகியவை நூலில் முன்வைக்கப்பட்டுள்ளன.

**முடிவுரை**

மரபு குறித்து மிகுந்த நேர்மறை நோக்குக் கொண்ட ஓர் உள்ளம், முறையாக அதனைப் பயின்று பின் வந்த தலைமுறையினருக்கு விளக்கும் முயற்சியே அறிஞர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் இயற்றிய சைவசமய விளக்கு என்ற நூலாக வடிவம் கொண்டுள்ளது எனலாம்.

**குறிப்பு நூல்கள்**

[1] இலட்சுமணன்.கி. *இந்திய தத்துவ ஞானம்.* பழனியப்பா பிரதர்ஸ், 2009.
[2] க. கதிரவன். "பிற்காலச் சோழர்காலத் தமிழகச் சைவத்தில் இராசராசன் புகுத்திய புதுநெறி." *வல்லமை.* ஆன்லைன் இதழ். www.vallamai.com/?p=88170 23 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.
[3] சுப்புரெட்டியார். ந. *சைவ சமய விளக்கு.* பாரி நிலையம், சென்னை, 1984.
[4] சுப்புரெட்டியார். ந. *சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்.* கழக வெளியீடு, திருநெல்வேலி, 2001.
[5] சுப்புரெட்டியார். ந. *ஞானசம்பந்தர்.* மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.
[6] சுப்புரெட்டியார். ந. *தாயுமானவர்.* பாரி நிலையம் சென்னை, 2001.
[7] சுப்புரெட்டியார். ந. *நாவுக்கரசர்.* மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983.
[8] சுப்புரெட்டியார். ந. *நினைவு குமிழிகள் – 1.* பாரி நிலையம், சென்னை, 2001.
[9] சுப்புரெட்டியார். ந. *நினைவு குமிழிகள் – 2.* பாரி நிலையம், சென்னை, 2001.
[10] சுப்புரெட்டியார். ந. *நினைவு குமிழிகள் – 3.* பாரி நிலையம், சென்னை, 2001.
[11] சுப்புரெட்டியார். ந. *நினைவு குமிழிகள் – 4.* பாரி நிலையம், சென்னை, 2001.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[12] சுப்புரெட்டியார். ந. *பட்டினத்தடிகள்.* கலைஞன் பதிப்பகம், சென்னை, 2003.

[13] சுப்புரெட்டியார். ந. *மாணிக்கவாசகர்.* வேங்கடம் பதிப்பகம், 1989.

[14] இ.எஸ்.பி, ஞானம். செ. *தத்துவ தரிசனங்கள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1999.

[15] நுஃமான்.எம்.ஏ. *க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி.* க்ரியா பதிப்பகம், பதிப்பு 2008.

[16] மூர்த்தி. அ.கி. *சைவ சித்தாந்த அகராதி.* கழக வெளியீடு, சென்னை, 1999.

**References**

[1] Lakshmanan. K. *Indiya Thathuva Gnanam*, Palaniappa Brothers, 2009.
[2] K. Katiravan. "Pirkala Cholarkala Tamilaga Saivathil Raja Rajan Puthiya Pudu Neri." *Vallamai.* Online Journal. www.vallamai.com/?p=88170 Accessed 23 June 2022.
[3] Subbu Reddiar. N. *Saivasamaya Vilakku*. Paari Nilayam, Chennai, 1984
[4] Subbu Reddiar. N. *Saiva Siddhantham Oor Arimugam.* Kazhagam Veliyeedu, Tirunelveli, 2001.
[5] Subbu Reddiar. N. *Gnanasambandha*r. Manivasakar Pathipagam, Chidambaram, 1983.
[6] Subbu Reddiar. N. *Thaiyumaanavar.* Paari Nilayam, Chennai, 2001.
[7] Subbu Reddiar. N. *Navukkarasar*. Manivasakar Pathipagam, Chidambaram, 1983.
[8] Subbu Reddiar. N. *Ninaivu Kumizhigal– 1.* Paari Nilayam, Chennai, 2001.
[9] Subbu Reddiar. N. *Ninaivu Kumizhigal – 2.* Paari Nilayam, Chennai, 2001.
[10] Subbu Reddiar. N. *Ninaivu Kumizhigal – 3.* Paari Nilayam, Chennai, 2001.
[11] Subbu Reddiar. N. *Ninaivu Kumizhigal – 4.* Paari Nilayam, Chennai, 2001.
[12] Subbu Reddiar. N. *Pattinathadigal*. Kalaigan Pathipagam, Chennai, 2003.
[13] Subbu Reddiar. N. *Manikkavasakar.* Venkadam Pathipagam, 1989.
[14] ESP. Gnanam. Se. *Thathuva Dharisanam*. Manivaskar Pathipagam, Chennai, 1999.
[15] Nukmaan, M.A. *Kriyavin Tharkaala Thamizh Agarathi*. Kriya Pathipagam, 2008.
[16] Murthy. A.K. *Saiva Siddhanta Agarathi, Kazhagam Veliyeedu*. Chennai, 1999.
[16] Vaidyanathan. Ku. *Saiva Siddhanta Kuriythu Vilakkam*. Saiva Siddhanta Neermuga Payirchi Maiyam, Thiruvidaimarudur, 1992.
[17] Jayamohan. *Hindu Gnana Marabil Aaru Dharisanangal*. Kizhakku Pathipagam, Chennai, 2009.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** கட்டுரை எழுத அனுமதியளித்த ந.சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றி உரித்தாகுக. / My thanks go to N. Subpurediyar 100 Education Trust for allowing me to write this article. \

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந. சுப்புரெட்டியாரின் அறஇலக்கியங்களில் ஈகைநெறி

## Charity in Ethical Literature Evinced by Na. Subbu Reddiar

**முனைவர் ஜ. பபீதா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. J. Papeetha,** Assistant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-5470-0593**
**DOI: 10.5281/zenodo.7266055**

### Abstract

*Na. Subbureddiar lived his life gloriously glorifying his mother tongue Tamil. He crawled in the lap of the ever-famed Tamil and worked consciously to spread Tamil all over the world, and stood firm in the minds of the people of the Tamil world. He was a versatile man who had written many books. He had also written many books on the virtues that people should follow in their lives. This article is to know the quality of charity as seen in the ethical literature of Tamil Literature. The word EGAI means to give something to others for help, to alleviate the poverty of others. So, the foremost of the virtues is charity. Because other virtues are only useful to those who do them. The charity is beneficial not only to the doers but also to the recipients. Professor Reddiar's view is that giving charity should be carried out as a humanitarian norm. A good one should see the poverty and suffering of others as his suffering and helps them by giving them what they need. The professor says that the family man must try to alleviate the plight of the poor with a lovable facial expression, and that is the best way to curb the problem of others. It conveys the idea that one should give what we owe, that we should give without considering any exchange, and that one should donate without an expectation that it will come multiple times to the benevolent one. He says that it is the duty of the very rich to carry out the virtues, which will create a world free of poverty. Furthermore, Professor Subbu Reddiar makes it clear that it is not possible to attain the meaning of virtuous life if one thinks that one should enjoy wealth. The ethic literature helps us to understand life, especially through the lives of our ancestors. In that case, Prof. Subbu Reddiar has detailed the values of charity and donation in his works so, the article decodes the ideas related to charity from the writings of Subbu Reddiar.*

**Keywords:** Charity, Ethical Literature, Na. Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*எத்திசையிலும் புகழ்மிக்கதாய் ஒளிவீசும் தாய் மொழியை தம் உயிர்போல் போற்றி வாழ்ந்தவர் திருச்சி மாவட்டம் பெரகம்பியில் அவதரித்த ந.சுப்புரெட்டியார் அவர்கள். மங்காதப் புகழால் தமிழன்னையின் மடியில் தவழ்ந்தவர், உலகெங்கிலும் தமிழைப் பரப்பியவர், தமிழால் உலகமக்களின் மனதில் நிலையாக நின்றவர். பலநூல்களை படைத்த பல்துறை வித்தகர், மக்கள் தம் வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய நல்நெறிகளை தாம் இயற்றிய நூலான தமிழ் இலக்கியத்தில் அறம் என்ற நூலின் வழியே பலஅறங்களை ஆழமாய் எடுத்துரைத்தவர், குறிப்பாக ஈகைநெறி குறித்து பலரும் போற்றும் விதமாக நுட்பமான கருத்துக்களை முன்வைத்தவர். அவர் போற்றிய ஈகைநெறியை அறிந்துகொள்ளும் விதத்தில் இந்த ஆய்வு*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*கட்டுரை அமைந்துள்ளது. ஈகை என்ற சொல்லானது பிறருக்கு ஒன்றை தருவது, கொடுப்பது, பிறரின் வறுமையைக் களைவது போன்ற பொருள்களைத் தருகின்றது. ஆகவே அறங்களில் மிக முதன்மையானது ஈகையறமாகும். ஏனெனில் பிற அறங்கள் அதனை மேற்கொள்பவர்களுக்கு மட்டுமே பயன்தரும். ஈகை ஒன்றே மேற்கொள்பவர்களுக்கு மட்டுமல்லாமல் பெறுபவர்களுக்கும் பயனை அளிக்கக் கூடியதாக உள்ளது. ஆகவே ஈகை நெறியினை வாழ்வியலுக்குரிய நெறியாக மேற்கொள்ளுதல் வேண்டும் என்பதே சுப்புரெட்டியாரின் கருத்தாகும். ஈகை என்ற சொல்லானது பிறருக்கு ஒன்றை தருதல் என்ற பொருள்படுகிறது. இல்லறத்தில் வாழும் அன்புடையவர் பிறருடைய வறுமைத் துன்பத்தைக் கண்டு தன் துன்பம் போல் எண்ணி அவர்களுக்குத தேவையானவற்றை கொடுத்து உதவுவதாகும். வறுமையுற்றவர்களின் முகக்குறிப்பைக் கொண்டே அவர்களின் துயரைப் போக்க முயற்சியினை மேற்கொள்ளுதல் இல்லறத்தானின் கடமையாகும், அதுவே சிறந்த ஈகையுமாகும் என்கிறார் பேராசிரியர். தருவது என்பது தருமத்தையும், கொடுப்பது என்பது கொடையையும் குறிக்கின்ற சொல்லாகும். கொடுக்க வேண்டிய பொருளை யாருக்கு கொடுக்கின்றோம் என்பதனையும், கைமாறு கருதாமல் மாரி போன்று வாரி வழங்க வேண்டும் என்பதனையும், இன்று நாம் தந்தால் நாளை நம்மிடம் இந்த பொருளானது பன்மடங்காக வந்த சேரும் என்ற எண்ணத்தை கைவிட்டு எதிர்ப்பார்பின்றி கொடுத்தல் வேண்டும் என்பதனையும் உணர்த்துகின்றது. மிகுந்த செல்வம் பெற்றவர்கள் ஈதலாகிய அறத்தினை மேற்கொள்வதே தம் கடமையாக ஏற்றிட வேண்டும், அவ்வெண்ணமே வறுமையற்ற உலகத்தை உருவாக்கும் காரணியாக அமையும் என்கிறார். மேலும், தம்மிடம் உள்ள செல்வத்தை தாம் மட்டும் அனுபவிக்கவேண்டும் என்று எண்ணினால் அறம் பொருள் இன்பம் என்ற உறுதிப் பொருளை பெறுதல் இயலாது என்பதனையும் தெளிவுறுத்துகின்றார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். இத்தகைய சிறப்புமிக்க ஈகைநெறியினை நம் முன்னோர்களின் வாழ்வியல வழியாக அறிந்து கொள்வதற்கு இலக்கியங்கள் துணை செய்கின்றன. அவ்வகையில் ந. சுப்புரெட்டியாரின் அற இலக்கியங்களில் ஈகைநெறி என்ற இந்த ஆய்வு ஈகைநெறியினை அறிந்து கொள்ள வழிவகை செய்கிறது.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், அறஇலக்கியம், ஈகைநெறி.

**முன்னுரை**

மனிதன் நல்வாழ்வு வாழ தேவைப்படுவது நல்ல குணங்கள் ஆகும். நல்ல குணங்கள் தான் நல்ல அறங்களாக மாற்றம் பெறுகின்றன. யாருக்கும் தீமை எண்ணாமல் வாழக்கூடிய நல் மனமே நல்லறமாகும் இத்தகைய நல்லறத்தினை மக்கள் உணர்ந்து செயல்பட வழி வகுப்பவை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இலக்கியங்களாகும் அவ்வகையில், ந. சுப்புரெட்டியார் எழுதிய தமிழ் இலக்கியங்களில் அறம் எனும் நூல் வாழ்வியல் அறங்களை உள்ளடக்கியதாக அமையப்பெற்றுள்ளது. மனித வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துக் கூறுகளையும் விளக்கும் முகத்தான் இவ்விலக்கியப் பெட்டகம் காணக்கிடைக்கின்றது. வாழ்க்கையை சீரும் சிறப்புமிக்கதாய் வாழ பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டு அதனை பின்பற்றியதன் பயனால் இன்பத்தை அனுபவித்து பிறரும் அவ்வின்பத்தை அறத்தினூடாக அனுபவிக்க வேண்டும் என்று எண்ணினார், ஆசிரியரின் எண்ண வெளிப்பாட்டின் முயற்சியே நாம் அனைவரும் மேற்கொண்டு ஒழுகும் வாழ்வியல் முறையாகும். ஒரு மனிதன் இப்படித்தான் வாழவேண்டும் என்று அழகிய வரையறையோடு சமூகத்தைக் கட்டமைப்பது நீதி இலக்கியங்கள். அந்த இலக்கியப் பயனை அனுபவித்து வாழ்ந்து பிறரும் வாழ்தல் வேண்டும் என்ற எண்ணத்தை எழுத்தாக பதிவிட்டவர் ஆசிரியர். அவர்தம் எழுத்தாற்றல் அழகிய வாழ்வியலைப் பிரதிபலிக்கின்றது. உலக உயிர்கள் அனைத்தும் வாழ்வதற்கு ஆதாரமாக உள்ளது மனிதனிடமுள்ள ஈகை குணமே எனலாம். ஈகைநெறியானது மனிதனை பண்பட்டவனாக வாழ வழிவகை செய்கின்றது. தம்மிடமுள்ள பொருளைக் கொண்டு பிறரின் வறுமையும் துன்பத்தையும் போக்குகின்ற ஈகைநெறியினை பின்பற்றிட வேண்டும் அவ்வாறு வாழ்தலே அறநெறியாகும். அந்த அறநெறியைப் பின்பற்றினால் இன்ப வாழ்க்கைக்கு வழிவகுப்பதோடு புகழ்மிக்க வாழ்க்கைக்கும் உறுதுணையாக நிற்கும், அதுவே மறுமைக்கான பயனாகிய வீடுபேற்றினையும் தரவல்லது என்பதனை தெளிவுறுத்தும் விதமாய் ஆசிரியரின் ஈகைநெறி அமைந்துள்ளது, அதனை ஆராய்ந்து செல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**அறம் குறித்த சிநதனை**

மனம், சிந்தனை, சொல், செயல், என அனைத்தையும் அனைத்திலும் தூசிப்படியாமல் பாதுகாத்தலே அறமாகும். அறம் என்பது எதுவெனில் சாதி, குலம், பிறப்பு, பந்தம், பெயர், உருவம் என்று ஏதுமின்றி, பார்க்கின்ற இடம்தோறும் பொருள்தோறும் நிறைந்து நிற்கும் சோதியை தூய்மையான வெளியை நிறைவான வாழ்வுதனில் தீதின்றி நிற்கும் பரம்பொருளில் திருவருளில் சிந்தனையை செலுத்தி வாழ்வோமாக என்கிறார் தாயுமானவர். மனம் ஒன்றி வாழ்தலே அறத்திற்கும் அன்பிற்கும் வழியாக அமையும் என்பதோடு, அவ்வழியே இறைநெறியை பின்பற்றுதலுக்கும் உயர்நெறியில் உய்வதற்கும் பாலமாய் அமையும் என்பதனையே

**சாதி குலம் பிறப்புப் பந்தம் முத்தி**
**தீதில்பர மாம்பொருளைத் திருவருளே**
**நினைவாகச் சிந்தை செய்வோம் (தாயுமானவர் பாடல் தொகுப்பு, பா. 5)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்கிறார் தாயுமானவர். உலகத்திலுள்ள பொருள்களை உயிர்ப்பொருள்கள் உயிரில்லா பொருள்கள் என இரணடாக வகைப்படுத்துவர். உயிருள்ள பொருட்களின் நலனுக்காக வேண்டிய உயிரல்லாதன படைக்கப்பெற்றுள்ளன என்பதனை அனைவரும் அறிவோம். துன்பத்தை உணருகின்றபோது உயிரினங்கள் மகிழ்வதும் இயல்பான நிகழ்வே ஆகும். ஆனால் ஆறறிவு படைத்த மனிதர்களின் வாழ்வில் தனிச்சிறப்பு என்பது பகுத்தறிவும் சிந்திக்கும் திறனுமே எனலாம். மனிதர்கள் மனம் எனற கருவியை சிந்திக்கும் பொருட்டாக பெற்றுள்ளமையை அறிவோம். இச்சிந்தனை ஒன்றே மனிதனை சிறந்த முறையில் பயன்படுத்தவும பண்படுத்தவும் காரணமாய் அமைகின்றது எனலாம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி இவற்றை பெற்று வாழ்தலே சிறந்த வாழ்க்கை அன்று, இவற்றிற்கும் மேலாக உணர்ந்து அறிந்து மனத்தால் வாழும் வாழ்க்கையே சிறந்ததாகும். இதனை,

**எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
**தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும் (தொல். பொ., நூ. 27)**

என்றவாறு தொல்காப்பியர் கூறியுள்ளமையைக் கொண்டு சிந்திக்கத்தக்கது. ஆகவே அறியாமை வாயிலாக வரும் துன்பங்களை நீக்கி இன்பத்தை பெற்று வாழ அறிவு என்ற சாதனத்தை மனிதன் பெற்றுள்ளான் என்பதனை அனைவரும் அறிதல் அவசியமாகும். .

**உறுதிப்பொருள்கள்**

எல்லா உயிர்களாலும் விரும்பி நுகரப்படுவது இன்பம் என்பதனை அறிவோம். அந்த இன்பத்திற்கு காரணமாக அமைவது பொருள் என்றும், அந்தப் பொருளை நல்ல வழியில் பிறரை துன்புறுத்தாமல் பெற்று தானும் மகிழ்ந்து பிறரை மகிழவித்து வாழ்கின்ற வாழ்வியல் பகுதியே அறம் என்கிறோம். அறம் என்பது உண்மை, நேர்மை, மேன்மை, உயரிய பண்புடைமை, கொடுத்துதவும் தன்மை, மாசறு மனத்தின்மை என்றவாறு பொருள் கொள்ளலாம். எல்லா உயிர்களிடத்தில் இருக்க வேண்டிய நல்ல குணங்களுள் சிறந்த குணமாக போற்றப்படுவது கொடுத்தல் குணமாகிய ஈகை என்ற சிறந்த அறநெறியே எனலாம். அறம் பொருள் இன்பம் இம்மூன்றும் மனிதனுக்கு மிக அதிக அளவில் தேவைப்படுகின்ற காரணத்தால் இதனைப் பின்பற்றி வாழ்வது மரபாக உள்ளது. இதனை,

**அந்நிலை மருங்கின் அறம்முத லாகி**
**மும்முதல் பொருட்டும் உரிய என்ப (தொல். செ., நூ. 106)**

என்கிறார் தொல்காபபியர், இம் மூன்றையும் ஒரு மனிதன தவறாமல் பின்பற்றினால் வீடுபேறு என்பது தானாக கிடைக்கப்பெறும் என்பதனை இதன் வழியாக நம் முன்னோர்கள் மறைத்துக் கூறுகின்ற அறக்கருத்தாக அறிந்துகொள்ளலாம். மும்முதற்பொருள் என்று தொல்காப்பியர் கூறிய கூற்றினை ஏற்றுக் கொண்ட திருவள்ளுவரும் தம் குறட்கருத்துக்களை விளக்கு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முகத்தான் மூன்று பாடுபொருளாக்கி அறம், பொருள், இன்பம் என்றவாறு பகுத்துள்ளமைமைய உணரமுடிகின்றது. அறத்தை முதன்மைப் படுத்தியிருப்பினும் அவ்வறத்திற்கு அன்புதான் அடிப்படை என்பதனை மிகத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார் தொல்காப்பியர். இவரின கருத்தை அடியொற்றியே திருவள்ளுவரும் அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார் (திருக். 76) என்கிறார். அன்புடையவர்களால் மட்டுமே அற வழியில் பொருளை ஈட்டிட முடியும, ஈட்டிய பொருளை பிறருக்கும் வாரி வழங்கிட முடியும், அவ்வாறு கொடுப்பதன் காரணமாக இன்பம் மேலீடுகின்றது. அவ்வின்பமே இல்லற வாழ்விலும் நிலைபெறுகின்றது. இத்தகைய உயரிய நோக்கத்தோடு வாழ்தலே வாழ்க்கை பயணத்தின முடிவில் வீடுபேற்றைத் தரக்கூடியது என்றவாறு பகுத்தும் தொகுத்தும் ஆசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளமையை அறியலாம்.

வஞ்சனையால் பிறரை எள்ளி நகைக்கும்போது ஒருவன் கண்ணுக்கும், செவிக்கும், மூக்கிற்கும், நாக்கிற்க்கும், உடம்பிற்கும் இன்பத்தைத் தேடித் தந்தாலும் அவை இன்பத்தை நல்காது அவற்றால் மனமும் அமைதி பெறாது, மேன்மேலும் மனம் அலைந்து வருந்திக்கொண்டே இருக்கும். ஆகையால் அறம் ஒன்றே உண்மையான இன்பத்தைத் தரும். மற்ற இன்பஙகள் எல்லாம் போலியானவை, புகழுமில்லாதவை. அதனால் ஒருவன் வாழ்நாளில் செய்யத்தக்கது அறமே, செய்யாமல் விடத்தக்கது பழியே. இதனை,

**செயற்பால தொரும் அறனே ஒருவர்க்கு**
**உயர்பால தொரும் பழி (குறள். 40)**

என்று தெளிவாக எடுத்துரைக்கும் வள்ளுவனின் வாய்மொழியை நம் மனம் கேட்டு இன்புறுவதும் உண்மையே. ஆகையால் பழியைத் தூற்றி புகழ்மிக்க வாழ்வினை நாமும் வாழ்ந்து, பிறரையும் நல்வழியில் வாழ்விக்க முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

**அறத்தின் செய்வகைகள்**

இறைவனின் திருவடிகளை நினைத்து அறத்தினை மேற்கொண்டு யார் வாழ்கின்றார்களோ அவர்கள் நிலவுலகத்தில் அனைத்து புகழையும் பெற்று நீடுழி வாழ்வார்கள் என்ற வளளுவனின் அறக்கருத்தைப் போற்றும் விதமாக ஆசிரியரும் இவ்வுலக வாழ்வில் நீடித்து வாழ நினைத்தால் அறத்தினை பின்பற்றி வாழ்தல் நலம் பயக்கும் எனகிறார், ஏனெனில் அருள் உடையவன் தான் அறம் செய்வான் என்பதனை,

**பொருள் உடையான் கண்ணதே போகம்;**
**அறனும் அருள் உடையான் கண்ணதே ஆகும் (சிறுபஞ்ச., பா. 1)**

என்கிறார் காரியாசான். அறத்தை எப்போது செய்ய வேண்டும் என்ற தெளிவனை நமக்கு கற்றுத் தரும் வகையில் ஆசிரியர், இளைஞராக உள்ளவர், பிற்காலத்தில் பார்த்து கொள்ளலாம் என்று எண்ணாமல் அறம் செய்ய வேண்டும். அதுவே உடல் அழியும் காலத்தில் அழியாமல் செய்த அறமே நமக்குத துணையாக வரும் என்கிறார். ஒரு நாளும் விடுபடாதவாறு அறத்தை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தொடர்ந்து செய்துக் கொண்டே இருத்தல் வேண்டும், அவ்வாறு தொடர்ந்து செய்வதனால் மறுபிறப்பு என்ற பேரிழப்பிலிருந்து தற்காத்துக்கொள்ளும் சிறந்த நெறி என்பதனை உணர்ந்திடல் வேண்டும். நம்முடைய வாழ்நாளில் நாம் ஒவ்வொருவரும் செய்ய வேண்டியது அறச் செயல் ஒன்றே ஆகும். மற்றவற்றை அவன் செய்யாமல் காத்தலே உயர்வைத் தரும் வழியாகும் என்ற வள்ளுவரின் வாக்கிற்கிணங்க மனம் மாசு இன்றி செய்யும் அறமே சிறந்தது என்கிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள்.

அறங்களில் மிக உன்னதமானது ஈகையறமாகும், ஏனெனில் பிற அறங்கள் அதனை மேற்கொள்பவர்களுக்கு மட்டுமே பயன்தரும். ஈகை ஒன்றே மேற்கொள்பவர்களுககு மட்டும் அல்லாமல் பெறுபவர்களுக்கும் பயனை அளிக்கக்கூடியதாக உள்ளது. ஈகை என்ற சொல்லானது பிறருக்கு ஒன்றை தருதல் என்ற பொருள்படுகிறது. தருவது என்பது தருமத்தையும் கொடுப்பது என்பது கொடையையும் குறிக்கின்ற சொல்லாகும். கொடுக்க வேண்டிய பொருளை யாருக்கு கொடுக்கின்றோம் என்பதனையும் கைமாறு கருதாமலும் மழையைப் போன்று வாரி வழங்க வேண்டும் என்பதனையும் இன்று நாம் தந்தால் நாளை நம்மிடம் இந்த பொருளானது பன்மடங்காக வந்து சேரும் என்ற எண்ணத்தை கைவிட்டு எதிர்ப்பார்ப்பின்றி கொடுத்தல் வேண்டும் என்பதனையும் உணர்த்துகின்றது. மனித மனம் பண்படும் இடமாக பொது வாழ்க்கை என்று கொள்ளலாம். மனிதன் தன் அறிவின் வழியாக இயங்குவதோடு அந்த இயக்கத்தின் பயனால் பொது வாழ்க்கையில் ஈடுபட்டு தம் கடமைகளை சரிவரச்செய்து தன் மனதால் தனக்கு மட்டுமே நற்பயனை நாடாமல் பிறருக்கும் உதவி செய்து வாழ்கின்ற வாழ்வின் பயனை தெளிவாக எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

வள்ளுவப்பெருந்தகையின் கருத்தை ஏற்ற ஆசிரியர் அறம் - அறநெறி இவையிரண்டும் மனித வாழ்வின் முதன்மைக்கூறு என்கிறார். பிறருக்கு தீஙகு செய்ய எண்ணினால் அத்தீங்கானது மனிதனுக்கே மிகுந்த கெடுதியை ஏற்படுத்தும். அவ்வாறு கெடுதலை அந்த அறமே செய்துவிடும் எனகிறார்.

**ஈதலின் சிறப்பு**

பிறரின் நலனில் அக்கறைக்கொண்டு, ஏதேனும் உதவிகளை செய்திட வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்கள், ஈதல் என்ற அறத்தை மேற்கொள்வர். கொடுப்பதே நன்மையைப் பயக்கும செயலாகும். அந்த நன்மையால் மேலுலக நன்மை என்று சொல்லக்கூடிய வீடுபேற்றினை அடைவர். அவ்வாறு மேலுலகம் கிடைக்காவிட்டாலும் ஈதலே சிறப்பு வாய்ந்த நல்ல அறச்செயலாகும். என்பதனை, **அறவினையைக் காராண்மை போல ஒழுகுதல் (திரி., பா. 6)** என்ற திரிகடுகத்தின் வழியாக எடுத்துரைத்திருப்பது போற்றுதற்குரியது. பிறருக்கு பகிர்ந்தளித்தலால் மகிழ்ச்சி ஏற்படுகின்றது. பெற்றுக்கொண்டவர்கள் மகிழ்ந்து கொடுத்தவர்களை உயர்ந்தவர்களாக வைத்துப் போற்றுகின்றனர். நம் மக்களுக்கு உணவோடு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கொடையுணர்வையும் ஊட்டி வளர்க்கின்றது சமூகம், நம் முன்னோர்களைப் போலவே புகழைப் பெறவேண்டும் என்று விரும்புகிறது. ஆதலால் ஈகைநெறியை மெற்கொள்ளாத ஒருவனிடம் உன் முன்னோர்கள் சிறநத நெறியில் சென்றார்கள், ஆனால் நீ அந்த நெறியில் செல்லத் தெரியாதவன் என்பதனை,

**இன்மையின் இரப்போர்க்கு ஈயா மையின்**
**தோன்மை மாக்களின் தொடர்பறி யலரே (புறம்., பா. 165: 4-5)**

என்று இளங்குமணனை இடித்துரைக்கும் பெருஞ்சித்திரனாரின் பாடலடிகள் உணர்த்துகின்றன. அவ்வளவில் நில்லாமல் தமக்கென எதையும் வைத்துக்கொள்ளாமல் பிறருக்கெனக் கொடுத்து அதனால் வருகின்ற சிறப்பினைப் பெற்று வாழ்பவர்களை,

**உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்**
**……. புகழெனின் உயிரும கொடுக்குவர் (புறம்., பா. 182: 1-5)**

என்று கடலுள்மாய்ந்த இளம்பெருவழுதி வாழ்த்தி இருப்பதையும் அறியலாம். மேலும், ஈதலினால் வரும் சிறப்பு மேன்மை வாய்ந்தது என்பதனையும் இல்லறத்தின் நீட்சியே ஈதல் என்பதனையும் உணரலாம்.

**இல்லற வாழ்வும் ஈகை நெறியும்**

இல்லற வாழ்வில் அறப்பண்பு இழையோடுமாறு வாழ்தலே சிறந்ததாகும். இல்லற வாழ்வில ஈடுபடுபவர்கள் தம்மை சார்ந்தவர்களுக்கும் சுற்றத்தார்க்கும தன்னிடம் இரப்பவர்க்கும், துறவற நெறியில் ஒழுகுபவர்களுக்கும் தம்மால் முயன்றதைக் கொடுத்து அவர்களின் வாழ்வியலை போற்றும் முகத்தான் கடமைகளை சரிவர நிறைவேற்றிடல் வேண்டும் என்கிறார். அவ்வாறு நிறைவேற்றுவதற்கு எது தேவை என்பதனை ஆராயும்பொருட்டு தம் உழைப்பால் கிடைத்தப் பொருளே என்பதால் பொருள்தேடி செல்கின்ற சூழலையும இலக்கியங்கள் உணர்த்தி நிற்கின்றது. பொருளின தேவையை அறிந்தவர்கள் அதனை தேடும் பொருட்டு செல்கின்றனர், அதற்கு ஏற்ற காலமாக இளமைக் காலத்தைக் குறிப்பிடுவர். ஏனெனில் ஆற்றல், திறமை, கொடுக்க வேண்டும் என்ற எண்ணம், உயரிய உள்ளம் அனைத்தும் ஒன்றாக சேர்ந்த ஒரு நிலையே இளமைக் காலம் எனலாம்.

முதுமைக் காலத்தில் ஆற்றலும் திறனும் குறைந்து விடுவதால் முன்போன்று பொருளீட்டவும், பகுத்துண்ணவும் முடியாத நிலையே ஏற்படுகின்றது. அப்போது வாழ்க்கையை மாற்றியமைத்துக் கொண்டவர்களால் அனைத்து இன்பத்தையும துறந்து வாழும் நிலை ஏற்படும். ஆதலால் பொருளீட்டுவதற்கு இந்த இரண்டில் எந்தக் காலம் சிறந்தது என்று ஆராய தேவையில்லை, ஆனால் இதில் எதனை ஏற்பது என்று ஒப்பிட்டுக் காணலாம். அவ்வாறு காணும்போது எதனால் பிறருக்கு பயன் மிகுதி என்று ஆராய்ந்து அவ்வழியில் நாமும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாழ்ந்து பிறரையும் அறம் வழுவாது வாழவைப்பதே இல்வாழ்க்கைக்கான அடிப்படை என்பதனை உணர்த்தும் விதமாய் வாழ்தல் நலம் பயக்கும்.

தவம் செய்பவர்கள் கூட அத்தவத்தினால் தாம் மட்டுமே பயன் அடைந்து வாழ்வார்கள், ஆனால் இல்லறத்தில் ஈடுபட்டவர்கள் பிறருக்கு கொடுத்து வாழ்வதால் தானும் வாழ்ந்து பிறரையும் வாழ வைப்பதன் பயனை அடைவார்கள், சுயநலம் தவிர்த்து பொது நலத்திற்காக வாழ்பவர்கள் இல்லறத்தார்கள். ஆகவே இவர்களின் வாழ்க்கைப் பயணமானது பொது நலம் பேணி, புகழ் வாழ்வினை வாழ்ந்து உலக வாழ்வின் பயனைத் துய்ப்பதோடு, வீடுபேற்றினைப் பெறுவதற்கான வாய்ப்பினையும் பெற்றவர்களாகவே வாழ நேரிடுகின்றதனை,

**இல்லா இடத்தும் இயைந்த அளவினால்**
**உள்ள இடம் போல் பெரிது வந்து - மெல்லக்**
**கொடையொடு பட்ட குணனுடைய மாந்தர்க்கு**
**அடையாவாம் ஆண்டைக் கதவு (நாலடி., பா. 91)**

என்றவாறு கூறுகின்றார். ஆகையால் தவ வாழ்வைக் காட்டிலும் உயர்ந்தது பிறருக்கு கொடுத்து வாழ்கின்ற ஈகைநெறி அமைந்த வாழ்வே என்பதனை உணரலாம். இக்கருத்தினை ஏற்கும் முகத்தான் அமைந்த சங்க இலக்கியப் பாடலொன்றில்; ஈகையால் எய்தும் வீடுபேற்றை உலக்தில் மன்னர்கள் பலர் தோன்றி மறையினும் அவர்களுள் சிலரே கொடுக்கும் ஈகை குணத்தால் நிலையான வீடுபேற்றை அடைவர். அத்தகைய வீடுபேற்றை நீ அடைக என்றும் உன் பகைவர் கொடாதோராகி அடையாமல போக என்றும் புலவர் பாடுகிறார்.

**நிலைத்த புகழும் ஈகைநெறியும்**

கடையேழு வள்ளல்கள் வாழ்ந்த நம் நாட்டில் ஈகையைப் பற்றிப் பேசுவது சாலச் சிறந்ததாகும். ஏனெனில் அறம் நிறைந்ததுதான் இல்லற வாழக்கை, அதில் ஈகை சிறந்த கூறாகும். இல்லறத்தில் வாழக்கூடிய அன்புடையவர் பிறரின் வறுமைத் துன்பத்தைக் கண்டு அமைதியாக இருத்தல் கூடாது. பேச்சும் எண்ணமும் பிறரின் துன்பத்தைப் போக்க முடியாது, ஆகையால் தம்மால் இயன்ற வறுமைத் துன்பத்தை தீர்க்க முயற்சியினை மேற்கொள்ள வேண்டும், இல்லறத்தில வாழ்வானுடைய கடமை பிறரின் துன்பத்தை போக்குதலே ஆகும். அத்துன்பத்தைப் போக்குகின்ற சிறந்த முறையே ஈகை என்பதாகும். ஈகை என்னும் பெயரால் பொருள் பெற்றவருக்கு மேன்மேலும் கொடுத்து உதவுவதால் பயன் இல்லை, அஃது ஈகையும் இல்லை.

**வறியார்க்கொன்று ஈவதே ஈமைமற் றெல்லாம்**
**குறியெதிர்ப்பை நீரது உடைத்து (குறள். 221)**

என்பது வள்ளுவம், வறுமையுற்றவர்களுக்கு தம்மால் இயன்ற ஒன்றை கொடுப்பதே சிறந்த ஈகை எனப்படும். வறுமையுற்ற மற்றவர்களுக்குப் பொருள் தருதல் ஈகை ஆகாது, அஃது ஒரு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பயன் நோக்கிக் கொடுத்து வாங்கிக் கொள்ளும் முறையே ஆகும். குறியெதிர்ப்பானது அளவு குறித்து வாங்கி, அதனை அவ்வாறு எதிர் கொடுப்பது என்ற பரிமேலழகரின் உரை இதனைத் தெளிவாக்கும். இன்று நாம் ஒருவருக்கு ஒரு பொருளை கொடுத்துவிட்டு நாளை இந்த பொருள் பல மடங்கு நம்மிடம் வந்து சேரும் என்ற எண்ணத்தோடு கொடுத்தல் கைமாறு கருதி கொடுத்தல் என்ற அளவிலேயே அது நிற்கும் அதனை ஈகை என்று சொல்லுதல் இயலாது. வறியார்க்கு ஈவதால் பெறும் இன்பத்தையே ஈத்துவக்கும் இன்பம் ஆகும். நாம் ஒன்றைத் தருகின்ற போது அதனை சிறியது என்று கருதக் கூடாது, ஏனெனில் தவசிகள் கையில் உள்ள பாத்திரத்தில் சிறிது சிறிதாக உணவு நிரம்புவது போன்று நாம் செய்யும் சிறிய அறமும் பெரும் புண்ணியத்தை சேர்க்கும் என்பதனை,

**இறப்பச் சிறிதென்னாது இல்லென்னாது என்றும்**
**அறப்பயன் யார்மாட்டும் செய்க -முறைப் புதவின்**
**ஐயம் புகூஉம் தவசி கடிஞைபோல்**
**பைய நிறைத்து விடும். (நாலடி., பா. 99).**

என்ற நாலடியாரின் பாடல் வரிகள் எடுத்தியம்புகின்றது.

சமண முனிவரின் வாய்மொழியாக ஆசிரியர் குறிப்பிட்டிருப்பது "காரைக்குடி வள்ளல் அழகப்பரிடம் இதனை நான் கண்டு மகிழ்ந்ததுண்டு. தம்முடைய பொருளை ஈயாமல வைத்துப் பாதுகாத்துப் பின்னர் இழந்து தவிக்கும 'கஞ்சப் பிரபுக்கள்' இந்த இன்பத்தை என்றுமே அறியமுடியாது" என்பது உணர்த்தியுள்ளமைப் போற்றுதற்குரியது. மேலும் நக்கீரர் என்ற புலவர் மலை, காடு, நாடு, கடல் என்ற நானிலப் பகுதிகளில் வாழும் மக்கள் பலருடைய முயற்சியை முழுவதுமாக தம் புலமைக் கண்ணால் நோக்கினார். எல்லாருடைய உள்ளமும் பொருளீட்டலில் பேரார்வம் உடையதாக உள்ளதனை அறிந்தார். இதன் முடிவுதான் என்ன? என்பதனை அவர் உள்ளமானது ஆராய்கின்றது, அவ்வாய்வின் முடிவில் அவர் கண்டறிந்த உண்மையினை அழகாய் எடுத்து விளக்குகின்றார். இதனை, நாடுகட்குத் தலைமை தாங்கி ஆட்சிப்புரிகினற வேந்தர் அரசுப் புரிவதும், காடுகளில் வாழும் விலங்குகளை வேட்டையாடித் திரியும் வேட்டுவர் இரவும் பகலுமாய் விலங்குகளை வேட்டையாடிட முயல்வதும் இப்புலவரின் கருத்தினை ஈர்த்தன எனகிறார்.

உண்பது நாழியும் உடுப்பவை இரண்டுமாம் இவையன்றி பிறவகையில் வேந்தனுக்கும் வேடனுக்கும் எந்தவொரு தொடர்பும் இல்லை என்பதனை உணர்த்துகின்றார் நக்கீரர். இவற்றை உற்று நோக்கிப் பார்க்கையில் வேண்டுவன சிறிதும் ஈட்டுவன பெரிதும் ஆதலின் மிகுந்த செல்வத்தால் செய்ய வேண்டுவது ஈதலாகிய அறமே என்றும் செய்யாமல் தாம் மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்று எண்ணினால் அறமும் பொருளும் இன்பமும் பெறப்படும் என்பதனை நக்கீரர் அறிந்த உண்மையாகும். இந்தத் தெளிவுதனை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**உண்பது நாழி உடுப்பவை இரண்டே**
**பிறவும் எல்லாம் ஒரொக் கும்மே**
**செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்பேம் எனினே தப்புன பலவே (புறம்., பா. 106)**

என்ற புறநானூற்றுப் பாடலின் வழியே எடுத்துரைத்துள்ளார். ஆகையால் மனிதவாழ்க்கைக்கு அடிப்படை தேவையாக இருப்பது பசிக்கு உணவும் மானம் காக்க ஆடையும்தான். இந்த இரண்டிற்காக உலகத்ததையே தனக்கென வளைத்துக்கொண்டு, தான் ஒருவன் மட்டுமே வாழ வேண்டும் என்ற எண்ணம் மிகுந்தால் சுயநலமே எஞ்சும். அவ்வாழ்க்கை நீங்காத துன்பத்தையே தரும். இக்கருத்தானது மரபார்ந்த தொடர்ச்சியாக ஆயிரம் ஆண்டுகள் கடந்தும் தமிழ்ச்சமுதாயத்தில் மாறாமல இருந்தது என்பதற்கு அடையாளமாக பிற்கால ஔவையாரும்,

**உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்**
**எண்பது கோடி நினைந்தெண்ணுவன – கண்புதைத்த**
**மாந்தர் குடிவாழ்க்கை மண்ணின் கலம்போலச்**
**சாந்துணையும சஞ்சலமே தான் (நல்வழி, பா. 28)**

என்றவாறு பாடியுள்ளார். மக்கள் வாழ்வின் நிறைவின்மைக்குக் காரணம் பெரிதும் என்ற மனம் இன்மையே என்பதை விளக்கியுள்ளார். இதில் போதும் என்ற மனமின்மை பழியை ஏற்படுத்துகின்றது. அவ்வாறன்றிச் செல்வம் என்பது கொடுப்பதற்கான ஈகைநெறியே என்ற மன நிறைவே புகழைத் தரக்கூடியது. இதனை,

**தென்புல மருங்கின் விண்டு நிறைய**
**வாணன் வைத்த வழுநிதி பெறினும்**
**பழிநமக்கு எழுக என்னாய், விழு நிதி**
**ஈதல் உள்ளமொடு இசைவேட் குவையே (மதுரைக்., பா. 202 - 205)**

என்றவாறு மாங்குடி மருதனார் பாடியுள்ளார். இங்ஙனம் பிறருக்கு கொடுத்து வாழ்கின்ற வாழ்வின் நிறைவே புகழைத் தருகின்றது என்பதனை உணரலாம்.

**உலகப்பொதுமைக்கு சிறந்தது ஈகைநெறியே**

செல்வந்தர்கள் ஈதலைக் கடனாகக் கொள்ளாமல் அறனாகக் கொள்ளல் வேண்டும் என்று ஆசிரியர் வலியுறுத்துகின்றார். ஏனெனில் அறனாக அதனை ஏற்பின் பலரும் மனமுவந்து தருதல்; நலன் பயக்கும். இஃது செல்வந்தர்களுக்கு மட்டுமல்லாமல் மக்கள் அனைவருக்கும் நலம் தரக்கூடிய வகையில் அமையப்பெறும். இந்த அற உணர்வானது குறைந்து போனால்தான் தொழிலாளர்களின வாழ்வியல் சூழல் மாற்றம் பெறவும் கிளர்ச்சி ஏற்படவும் பொருள் தட்டுப்பாடு ஏற்படவும் வாழ்வு முழுமைப்பெறாமைக்கும் காரணமாதலை அறியலாம் என்கிறார். இவற்றை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**...ஓர் நொடிக்குள்**

**ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி**

**ஒப்பப்பார் ஆய்விடுவார் உணரப் பாநீ (பாரதி. கவி., பா. 53)**

என்றும் பாடியுள்ள பாவேந்தரின் கவிதை வரிகள் உலகப் பொதுமையை முன்னிறுத்தி ஈகைநெறியை வெளிப்படுத்துகின்றது.

**கொள்ளெனக் கொடுத்தலே உயரிய ஈகைநெறி**

ஆற்றுப்படுத்தல் என்ற சொல்லானது வழிகாட்டுதல் என்ற பொருளைத் தருகின்றது. சங்க இலக்கிய நூலான பத்துப்பாட்டில் ஆற்றுப்படை என்ற சொல் நூலின் பெயரோடு பொருந்தி வருவதை நாம் அனைவரும் அறிந்ததே. இவற்றின்கண் புலவன், பாணர் சுற்றம், இரவலர் போன்றோர் கொடுப்பவனின் இடம் தேடிச் செல்லும்போது அவ்வழியே அப்புரவலனிடம் பரிசுப்பெற்று திரும்பக்கூடியவர்கள் அவர்களை ஆற்றுப்படுத்திச் செல்வதனை நாம் இலக்கிய வாசிப்பின் வாயிலாக அறிந்த உண்மையே எனலாம். வல்லார் கிழான் பண்ணன் என்ற புரவலன் போர் வண்மையும் கொடுத்தல் இயல்புடைய கைவண்மையும் பெற்றவனாக உள்ளான். சிறுகருந்தும்பியார் என்ற புலவர் இவனின் வள்ளன்மையை விளக்கும் வகையில் பாணனை நோக்கி, பாணனே வல்லார் என்ற ஊரின்கண் உள்ள பண்ணனை அவன் போர்க்களத்தை நோக்கிச் செல்வதற்கு முன்பாக உன் பசிப்பகையைப் போக்கிக்கொள்ள உன் சுற்றத்தோடு சென்று அவனை இப்பொழுதே காண்பாயாக என்று ஆற்றுப்படுத்துகின்றார்.

இரவலர்களுக்கு புரவலர்கள் இல்லையென்று மறுப்பதால் பெறுபவர்களைக் காட்டிலும் இழிவானவர்களாக மதிக்கப்படுவர் என்றும், கொடுப்பவர்களிடம் பெறுபவர்கள் வேண்டாம் என்று மறுத்தால் ஈவோரைக் காட்டிலும் உயர்ந்தவராக மதிக்கப்படுவர் என்றும் கூறுகின்றார். மேலும் உண்ணும் நீர் நிலையானது வற்றிப் போனாலும் அதனை நாடிச் செல்பவர்களைப் போல கொடுப்பவர்களை நாடியே இரவலரும் செல்வார்கள். அவ்வாறு வந்த இரவலர்களுக்கு அவர்கள் விரும்பிய பொருளைத் தராவிட்டாலும் அவர்கள் புரவலர்களை நொந்துகொள்ளாமல் தம்மையே நொந்துக் கொள்வர். இதனை,

**ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர்**

**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று**

**கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதன்எதிர்**

**கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று (புறம்., பா. 204)**

என்ற பாடலின் வழியாக ஈயென இரத்தலும் ஈயேன் என மறுத்தலும் இழிவான ஒன்றாகும் என்றும் அவ்வாறே இரப்போர் குறிப்பறிந்து கொள்ளெனக் கொடுத்தலே உயர்ந்தது என்கிறார் ஆசிரியர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தொகுப்புரை**

பிறருக்கு ஈவதே ஈகைநெறியாகும், செல்வத்தைப் பெற்றதன் பயன் பிறருக்கு கொடுத்துப் புறப்பதுவே என்ற நிலையில் ஈகை சமூகத்தினோடு இரண்டறக்கலந்து தோற்றம் பெறுவதைக் காணமுடிகின்றது. தம்மிடம் இரந்து வருபவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் தேவையானதைக் கொடுத்து உதவும் உயர்ந்த பண்பாட்டு நெறியினை பின்பற்றுதல் வேண்டும். இரந்து வாழ்பவர்களின் தேவையை முகக்குறிப்பினால் அறிந்து பொருள் கொடுத்து இரவாமையை இல்லாமையாக்கும் முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இந்த உயரிய நெறியே ஈகைநெறியாகும். அந்நெறியே மக்களின் நல்வாழ்விற்கு ஒளிகாட்டும் நல்விளக்காய் அமையும் என்ற சுப்புரெட்டியாரின் வாக்கு இன்று மட்டுமல்லாமல் உலகம் உள்ளவரை போற்றவும் பின்பற்றவும் வேண்டிய ஒப்பற்ற நெறியாகும் எனில் மிகையாகாது எனலாம்.

**குறிப்பு நூல்கள்**

[1] மு. சண்முகப் பிள்ளை. (*இளம்பூரணர்*). *தொல்காப்பியம்.* முல்லை நிலையம், சென்னை, 2014.
[2] சங்கர் தாஸ், அ. "தமிழ் இலக்கியங்களில் மனித நேயம்." பன்னாட்டு கருத்தரங்கம், *சான்லாக்ஸ் பன்னாட்டு ஆய்விதழ்*, 2022.
[3] சுப்ரமணியன், ச.வே. *பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
[4] ந. சுப்புரெட்டியார். *தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி – முறைமை.* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1998.
[5] க.ந.சொக்கலிங்கம். *தாயுமானவர் பாடல் தொகுப்பு.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.
[6] கு.வெ, பாலசுப்பிரமணியன். *புறநானூறு மூலமும் உரையும்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2004.
[7] ஜ. பபீதா. *சங்க இலக்கியத்தில் பெருமிதம்.* பரிதி பதிப்பகம், வேலூர், 2019.
[8] அ.மாணிக்கம், ச.மெய்யப்பன். *திருக்குறள் தெளிவுரை.* தென்றல் நிலையம், சிதம்பரம், 2007.
[9] அ.மாணிக்கம். *பத்துப்பாட்டு மூலமும் உரையும்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

**Reference books**

[1] M. Shanmugappillai. *Ilampuranar, Tholkappiyam.* Mullai Nilaiyam, Chennai, 2014.
[2] A. Sankardas. "Tamil ilakkiyangalil Manidhaneyam." *Shanlax International Journal*, 2022.
[3] Subramaniyan, S.V. *Pathinenkeelkanaku Noolgal.* Manivasagar Pathippagam, Chennai.
[4] N. Subbureddiar. *Tamizh Ilakkiyangalil Aram – Neethi – Muraimai.* Ainthinai Pathippagam, Chennai, 1998.
[5] K.N. Sokkalingam. *Thayumanavar Padalgal Thoguppu*. Palaniyappa Brothers, Chennai.
[6] K.V. Balasubramaniyan. *Purananuru*. New Century Book House, Chennai, 2004.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[7] J. Papeetha. *Sangailakkiyathil Perumitham*. Parithi pathippagam, Vellore, 2019.
[8] A.Manikkam. S. Maiyappan. *Thirukkural*. Thenral Nilayam, Chidambaram, 2007.
[9] A.Manikkam. *Patthupattu*. Varthamanan Pathippagam, Chennai, 1999.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அமெரிக்கப் பயண அநுபவம்

## Professor Subbu Reddiar's US Travel Experience

**கு. பிரபாகரன்,** ரூசா 2.0 திட்ட ஆய்வாளர், தமிழ்மேம்பாட்டுச் சங்கப்பலகை,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**K. Prabakaran,** RUSA 2.0 Project Fellow, Sanagappalagai for Tamil Development,
University of Madras, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-5606-2663**
**DOI: 10.5281/zenodo.7266061**

### Abstract

*Professor Subbu Reddiar had American travel experience in his 88th life and registered his experiences through the book "My Journey to America" (En America Payanam). In line with the joyous experience of Travel, Professor Reddiar gave us the experience of his trip to the US like the taste of milk mixed with honey in the Tamil Language. Through this article, as a researcher, I also share the experience I gained while reading this book. In an age, when the cost was considered as a journey, now, travel is an expense and going to America relies on a dream for most people but Professor Reddiar recalled his experiences and satisfy others' dreams through his book, "My Journey to America". The uniqueness of this book is that it presents this travel experience with a lot of Tamil-language evidence to tell people in Tamil, especially Tamils. When one reads the information about each of the places featured in the professor's book, we all get the domain experience of going there ourselves. This is another feature of this travelogue. This article is designed to illustrate the professor's Tamil-speaking experience in a far land. In this work, one can see how the words are used in the poems written there to mean places and his experience. The structure of the book as a Tamil translator for English can be expressed here as 1,2,3, and the English words at the bottom of each page can be read throughout the book as some information can also be read in this paper for better understanding. Perungavi's poems have been quoted related to Niagara Falls in comparison. It is also worth exploring how Professor's experiential devotional literature compares many of the chanting and worship practices of each of the temple visions to his visit to the United States. As mentioned above our professor also tells Shaiva and Vaishnava cults and the architectural systems of America revealing the specialities of homelands. The culture, customs and other social conditions of the people of that country are also described. Hence, the main purpose of this article is to expose the dignity of Tamil culture through the temples, parks and museums he found in the four states of the country in his travel experience.*

**Keywords:** Travel View, Experience, Comparison, American Trip.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தனது 88வது அகவை வாழ்க்கைப் பயணத்தில் அமெரிக்கப் பயண அநுபவத்தை "என் அமெரிக்கப் பயணம்" என்ற நூலின் வாயிலாக விளக்கிக் காட்டியுள்ளார். பயணப்படுங்கள் அநுபவம் பெறுங்கள் என்ற வாசகத்திற்கு இணங்க பேராசிரியர் அவர்கள் அமெரிக்கப் பயணத்தில் தான் பெற்ற அநுபவத்தை நமக்காக, தேன்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*கலந்த பால் போலத் தமிழில் பருகச் சுவைப்பட நல்கியுள்ளார், இக்கட்டுரையின் வாயிலாக நான் இந்நூலில் பெற்ற அநுபவத்தையும் நல்கியுள்ளேன். செலவு என்பது பயணத்தைக் குறிக்கும் சங்ககாலத்தில், பயணம் என்பது செலவைக் (பொருள்) குறிக்கும் இக்காலத்தில் அவ்வாறான அமெரிக்கப் பயணம் என்பது நம்மில் பெரும்பாலானோர்க்கு நனவாகாத கனவே. இக்கனவை அமெரிக்கப் பயணம் என்ற இந்நூலின் வாயிலாக நினைவாக்கியுள்ளார் பேராசிரியர் அவர்கள். இப்பயண அநுபவத்தை மக்களுக்குத் தமிழ்மொழியில் குறிப்பாகத் தமிழர்களுக்குக் கூற வேண்டிய செய்திகள் பலவற்றைத் தமிழிலக்கியச் சான்றுகளுடன் காட்சிப்படுத்தியுள்ளமை இந்நூலின் தனிச்சிறப்பு. பேராசிரியரின் இந்நூலில் இடம்பெறும் ஒவ்வொரு இடங்களைப் பற்றிய தகவல்களைப் படிக்கும்போது, எல்லாம் நாமே அவ்விடத்திற்குச் சென்ற கள அநுபவத்தைப் பெறுகிறோம். இதுவும் இப்பனுவலின் மற்றொரு தனிச்சிறப்பு. இவ்வாய்வுக் கட்டுரை பேராசிரியரின் தமிழிலக்கிய அநுபவச் செறிவை எடுத்துக்காட்டும் விதமாக அமைக்கப்பெறுகிறது. இப்பனுவலில் இடங்களுக்கு என்பவை இடங்கட்கு என்றும் அனுபவம் என்பதை அநுபவம் என்றும் கவிநடையில் சொற்களைக் கையாண்டுள்ள விதங்களை எடுத்துக்காட்டுவது உள்ளே காணலாம். ஆங்கிலத்திற்கான தமிழ்ச் சொற்படுத்தும் நிலையாக நூலின் அமைப்பையே இங்கு வெளிப்படுத்தலாம் 1, 2, 3, என்று ஒவ்வொரு பக்கத்தின் கீழ் பகுதியிலும் ஆங்கில சொற்கள் சில தகவல்கள் என நூலின் முழுவதும் வாசிக்கலாம் இவற்றிக்கான வாசிப்பும் இவ்வாய்வில் வாசிக்கலாம். தமிழிலக்கிய ஒப்பீட்டாக நயாகரா அருவியில் பெருங்கவியின் கவிதைகளைக் கட்டியுள்ளார். மேலும், கோயில் தரிசனங்களின் ஒவ்வொரு சந்நிதிப் பெருமானைப் பாடி வணங்கும் முறைகளையும் இங்ஙனமே தான் கண்ட அமெரிக்காவின் பயணத்திலும் ஐயாவின் அநுபவ பக்தி இலக்கியங்கள் பலவற்றை ஒப்பீடாக்கியுள்ளதை ஆராய்வதாக இருக்கும். மேற்கூறியவாரே சமயப்பற்று மிக்க நம் பேராசிரியர் சைவ வைணவச் செய்திகள் கூறாமல் இருப்பாரா அவற்றையும் கூறுகிறது மற்றும் அமெரிக்காவின் கட்டட அமைப்புகள் வீடுகளின் சிறப்புகளை வெளிப்படுத்துவதைக் காணலாம். அந்நாட்டு மக்களின் பண்பாடு, பழக்க வழக்கம் இன்னபிற சமூக நிலைக்கலன்களும் விவரிக்கப்பட்டுள்ளது. அந்நாட்டின் நான்கு மாநிலங்களிலும் காணப்படும் திருக்கோயில்கள், பூங்காக்கள் மற்றும் அருங்காட்சியகங்கள் இவையான சுற்றுலாத்தலங்களை நம் கண்முன் வரைந்துள்ள பேராசிரியரின், பயண அநுபவத்தின் வாயிலாகத் தமிழ்ப்பற்றை வெளிக்கொணர்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் தலையாய நோக்கம் ஆகும்.*

**குறிப்புச்சொற்கள்:** பயணக்காட்சி, அனுபவம், செய்திகள், ஒப்பீடு, அமெரிக்கச்சிறப்பு

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**முன்னுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் ஐயாவால் 2002-இல் எழுதப்பெற்ற இந்நூலிற்கு நான் 2022-இல் ஆய்வுக்கட்டுரை செய்து அநுபவம் பெறுவதே பெருமையாகவுள்ளது. ஒருவர் இருக்கும் இடத்திலே இருந்தால் அவருக்கு அநுபவம் அபிவிருத்தி ஆகா. இடம் பெயருவதாலே அநுபவம் அபிவிருத்தியாகும். அதிலும் அறிவியல் அறிவும் தமிழ் மூப்புடன் வயதும் கூட்டிய பன்முக அநுபவம் வாய்ந்த பேராசிரியர்களின் பேராசிரியர் ந. சுப்புரெட்டி ஐயா போன்றவர்கள் ஒரு சிலராலே எழுதப்பெறும் தமிழில் அரிதான பயண இலக்கியத்தில் ஐயா தன்னுடைய 88-வது அகவையில் *என் அமெரிக்கப் பயணம்* என்ற பயண நூல், இல்லை அநுபவ நூலைப் படைத்துள்ளார். என் போன்ற இளைய தலைமுறைக்கு மிகவும் பயனுள்ள வகையிலும் இம்மாதிரி நூல்களை எழுதுவதற்கும் பெரியவர்களின் ஆசிஅநுபவம் பெறுவதாகவும் ஐயாவின் அநுபவப்படைப்பு இருக்கும் என்பதில் எனக்கு எந்தவித ஐயமும் இல்லை. அனுபவம் என்பதை அநுபவம் என்றும் இடங்களுக்கு என்பதை இடங்கட்கு எனவாறு சொற்களைக் கையாண்டுள்ள விதமாக பல இருப்பதைப் பனுவல் முழுவதும் பார்க்கலாம் இவற்றை என் ஆய்வுக்கட்டுரையிலும் பயன்படுத்தியுள்ளேன். ஆங்கிலத்திற்கான தமிழ்ச் சொற்படுத்துவதில் நூலின் அமைப்பையே சிறப்பிக்கலாம். இவற்றில் ஆங்கிலத் தமிழ் அகராதி உடைய அமைப்பைக் காணலாம். திருக்கோயில், நயகாரா அருவி, பல சுவாரசியமான செய்திகளை வைக்கும் இடங்களில் எல்லாம் தமிழிலக்கியங்களை ஒப்பீட்டு முறையாகக் காட்டியுள்ளார். அதிலும் சமய இலக்கியங்கள் பலவற்றைக் காட்சிப்படுத்தியுள்ளார். அமெரிக்காவின் கட்டட அமைப்பு, பண்பாடு, பழக்க வழக்கம், சமூக நிலைகளைக் கூறுகிறார். மேலும் அந்நாட்டின் நான்கு மாநிலத்தில் உள்ள திருக்கோயில்கள், பூங்கா, அருங்காட்சியகம் இவையான சுற்றுலாத்தலங்களை நம் கண்முன் காட்சிப்படுத்துகிறார். இவற்றினுள்ளே ஐயாவின் அநுபங்களைக் எடுத்துக்காட்டுவதே அடியேனின் ஆய்வு.

**சொற்கோவைப்படுத்தும் அநுபவம்**

நிறக்கோல்களை (Chromosomes) வைத்து காதலுக்கு விளக்கம் தருகிறார். கருநிலையில் ஆண்மகவு என்றால் விரைகளிலும், பெண் என்றால் சூற்பையிலும் சேமித்து வைக்கப்பெறுகிறதாம் இந்த நிறக்கோல்கள். ஆண்முன்குமரப்பருவம் எய்தும் வரையிலும் பெண்பூப்பெய்தும் காலம் வரையிலும் இவை உறங்கிய நிலையிலே கிடக்குமா. இப்பருவம் எய்தியதும் இவை ஒன்று சேரத்துடிக்குமாம். இத்துடிப்பு தான் காதல் என ஐயா தன் அறிவியல் கல்வி வழி சொற்கோவைப்படுத்தி இருப்பதிலிருந்து அவரின் அநுபத்தையே காட்டுகிறது. மக்கள் பிறந்த நாடுகளையொட்டி இந்தியர்கள், அமெரிக்கர்கள், ஆங்கிலேயர்கள், சீனர்கள் போன்ற பெயர்களால் வழங்கப்பெறுகின்றனர். சமயங்கள் சார்ந்த மக்களைச் சைவர்கள், வைணவர்கள், கிறித்தவர்கள், இஸ்லாமியர்கள் ஆகிய பெயர்களிலும் வழங்கப்பெறுகின்றனர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நாடுகளையொட்டி ஆங்கிலேயர்கள் என் ஆங்கில மொழியின் முக்கியத்துவத்தைச் சாடியுள்ளார். சமயம் சார்ந்தவற்றில் இந்துக்களைச் சைவர்கள், வைணவர்கள் என பாகுபடுத்தியிருப்பதில் பக்தி நெறி வெளிப்படுகிறது.

ஆதியில் மனிதன் வாகனங்களாக குதிரை, மாடு, எருமை, கோவேறு கழுதை முதலானவற்றைக் கொண்டிருந்தான். தான் வணங்கும் கடவுளர்கட்கும் பறவைகள் மிருகங்களையே வாகனங்களாக அமைத்தான். இன்று மிதிவண்டி, மகிழ்வுந்து, சிற்றுந்து, விமானம், இராக்கெட்டு என வாகனங்களாக வைத்துயுள்ளான். இன்றும் கடவுளர்கட்கு ஆதியில் இருக்கும் வாகனங்களே உள்ளது. இருந்தாலும் விநாயகர் சதுர்த்தி போன்ற விழாக்களில் தற்கால நடைமுறையில் விண்வெளி வீரர், விமானி ஓட்டுநர் என பல உருவங்களில் படைத்துச் சேவிக்கின்றனர் இக்கால மக்கள். ஆதியில் குடிசையில் வாழ்ந்தான் மனிதன், தான் வணங்கும் கடவுளர்கட்கு மட்டும் செங்கல்லாலான, கருங்கல்லாலான மாளிகையாகப் பெரிய கோயில் கடவுளர்களை வாழ வைத்தான். இன்று மனிதர்கள் அடுக்கு அடுக்கான மாளிகை வீடுகளிலும் வாழ்கிறான் என்ற கருத்தைச் சொல்லாமல் சொறப்படுத்துகிறார். பறவைகளுக்குக் கூடுகட்டுவதற்குத் தாவரச் சுள்ளிகள் பயன்படுவது போல், பெரும்பாலான அமெரிக்க மனிதர்கட்குத் தாவரப் பலகைகள் பயன்படுகிறது. நினைத்துப் பார்த்து வியப்படைகிறார். நான் சொற்கோவைப்படுத்தி இருப்பதைக் கண்டு வியப்படைகிறேன். தாவரப் பலகை என்பது மரப்பலகையால் கட்டப்பட்டுள்ள அமெரிக்க வீடுகளைச் சொறப்படுத்துகிறார்.

கணிதம், பொறியியல், பலதுறை அறிவியல், பொருளியல் இவற்றைக் கற்றால் வாழ்க்கை முறைகள் மாறுகின்றனவாம். பல இலக்கியங்கள், பல பக்திப் பனுவல்கள், தத்துவ நூல்கள் முதலியவற்றைக் கற்றால் நம்பிக்கைத் தோன்றி வாழ்க்கையையே மாற்றிவிடும் என்கிறார். தன்னுடைய வாழ்க்கைப் பயணம் இறைவன் செயலால் நடப்பவையே என்றும் தன்னை அதில் ஒரு செயற்படும் கருவியாக பாவிக்கிறார், இக்கூற்றை இருவினையொப்பு என்பதே தன்னை நெறிப்படுத்துகிறது என நம்புகிறார். தன்மகன் வீட்டின் பின்புறம் ஒரு முதியவர் தனிமையில் வாழ்கிறாராம் அவரின் தோட்டத்தில் பேரிக்கா மரம் இவற்றில் 30 புறாக்கள் தினந்தோறும் தீனி போடுவார் அவரும் இறக்கும் தருவாயில் புறாக்களின் தொகையும் குறைகிறது நாளுக்கு நாள் அவருக்கு பின் யார் தீனி வைப்பார்கள் என்ற வருத்தம். மகனும் வேறு வேலையின் காரணமாக வேறு இடம் செல்கிறார். பின் புறாக்களின் கதி என்ன என்ற இரக்கமும் தெரிகிறது. தொகை என்ற சொல் கவர்கிறது. ஐயாவை மிகவும் கவர்ந்த அமெரிக்கச் சாலை அமைப்பு பற்றிக் கூறும்பொழுது எங்கும் பள்ளமோ படுகுழியோ மருந்துக்கும் காணப் பெறா என்று மிக அற்புதமாகக் கருத்தை விளக்கிவிட்டு செல்கிறார் எதிர்மறையாக மருந்துக்கும் காணப் பெறா என்ற சொல் இரசிக்க வேண்டிய இடம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆலந்து சுரங்கப்பாதையுடைய பொறியியல் செய்திறன் வியத்தகு திறனில் ஒன்று என்று கூறுகிறார். இவற்றில் ஏமாந்த சோணகிரிகளுக்கு இஃது அற்புதங்களில் ஒன்று என்று ஆசை காட்டி பணம் பறிக்கும் நபர்களும் உண்டு. சோணகிரி என்பது பொன்மலை பொருள். கதிரவனின் கரம் பட்டால் பனிமலை பொன்மலை போல் காட்சிதரும் இதைப் பார்த்து பொன்மலை என்று ஏமாறும் அளவுக்கு அப்பாவிகளை ஏமாந்த சோணகிரி என அழைப்பர். சோணம் – சிவப்பு, பொன்; கிரி – பன்றி, மலை; சோணகிரி, சோணசைலம் – திருவண்ணாமலை (செந்தமிழ் அகராதி ப. 306,183) குறிப்பதாக ந.சி. கந்தையாப்பிள்ளையின் செந்தமிழ் அகராதி பக்கம் 306, 183-இல் இடம்பெற்றுள்ளது.

உலக வாணிக மையம் கட்டட உச்சி 110-வது தளம் பார்வையிட பாதுகாப்பு ஏற்பாடுகளால் சுணக்கம் அதிகம். இதில் சுணக்கம் என்ற கிளவி தாமதம் என்பதைக் குறிக்கிறது. ந.சி.க செந்தமிழ் அகராதி பக்கம் 282-இல் சுணக்கம் – தாமதம் என்றேயுள்ளது. தமக்குள் நேரிடும் முரண்பாடுகளையும் பிணக்குகளையும் சமாதான முறையில் தீர்த்துக் கொள்ள ஒப்புக் கொள்கிறனர். ஏழு அடிப்படை நம்பிக்கை விதிமுறையில் ஒன்று. இங்குப் பிணக்கு என்ற சொல் சிறு சண்டை, தகராறு, கருத்து மாறுபாடுகளைக் குறிக்கும். பிணக்குதல் – மாறுபடுதல், ஊடுதல், பின்னுதல் என்ற பொருளில் ந.சி.க. செந்தமிழ் அகராதி பக்கம் 485-இல் உள்ளது. பெரியதிருமொழி பாசுரம் கூறுவதில் நம்மனத்தில் குமிழியிட்ட வண்ணம் அப்பெருமானை வணங்கி மகிழ்கின்றோம். என்பதில் குமிழியிட்ட சொல்லாடல் உற்சாகம் பொங்குகிறது என்பதை விளக்குகிறார்.

குமிழ்த்தல் – குமிழியிடுதல், மயிர் சிலிர்த்தல், ஒலிக்கச் செய்தல், கொழித்தல் (செந்தமிழ் அகராதி ப.199)போன்ற பொருள்களில் ந.சி. கந்தையாப்பிள்ளையின் செந்தமிழ் அகராதியில் பக்கம் 199-இல் உள்ளது. அர்ச்சை நிலையிலுள்ள பிள்ளையார் அசையவில்லை. இதில் அலங்கரித்து வைக்கப்பெற்ற வழிபாட்டு நிலையையே கூறுகிறார். அர்ச்சை – மூர்த்தி; மூர்த்தி – உடல், வடிவம், கடவுள், அருகன், சிவன், பெரியார் என்ற பொருளில் வருகிறது ந.சி.க-வின் செந்தமிழ் அகராதியில் பக்கம் 24, 607 உள்ளது. மேற்கூறியவற்றை ஒப்பு நோக்க ஐயா இலக்கியங்களை எந்த அளவிற்கு உள்வாங்கியுள்ளார் என்பது கையாண்டுள்ள சொற்களைச் செந்தமிழ் அகராதியின் உதவியில் ஆராயத் தெரியவருகிறது.

**தமிழிலக்கிய ஒப்பீட்டு அநுபவம்**

கோயிலுக்குச் சென்றால் அங்குள்ள ஒவ்வொரு சந்நிதியின் பெருமானைப் பாடி வணங்கும் முறை மிகவும் சிறப்பாக உள்ளது. சில நிகழ்வுக்கான ஒப்பீட்டு முறை, நயாகரா அருவியின் அழகைப் பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன் ஐயாவின் கவிதை எடுத்தாண்டுயுள்ளர். சூது விரும்பேல் (ஆத்திசூடி, பா.49) ஒருபோதும் சூதாட்டத்தை விரும்பாதே என்ற ஔவைப்பாட்டியின் சொற்களுக்கு நேரெதிராக பாண்டவர்கள்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கவுரவர்களின் சூதாடுகளன் போல் அமெரிக்காவின் புகழ் பெற்ற அட்லாண்டிக் மாநகர் சூதாடுகளனில் சூதுகவ்வுகிறது இரவு பகல் காணா பலரையும். புராணக்கால குருட்சேத்திரப் போர்க்களத்துடன் சூதாட்டக்களநகரை சேர்க்கிறார். எனக்கு 'கவுரவர்களே பாண்டவர்களே உங்களை சூதுகவ்வட்டும்' என்ற மகான் படத்தின் வசனமே எனக்கு ஞாபகம் வருகிறது. புராணக்காலம் முதல் இக்காலம் வரை வயது வரம்பின்றி சூதுகவ்வுகிறது. திருத்த எத்தனை புராணக்கதைகள் படங்கள் வந்தாளும் முடிய போகுவதும் இல்லை முடிவிலியிலே செல்லும்.

'வான்குருவி யின் கூடு வல்லரக்குத் தொல்கரையான்' எனத் தொடங்கும் ஔவை மூதாட்டியின் பாடல் வழி வீடுகள் பல வியப்பேன் என தன் கருத்தை வெளிப்படுத்தும் ஐயா மனிதனின் மூதாதையான குரங்குகளுக்குக் குடிசை கூட போட்டுக்கொண்டு வாழத் தெரியவில்லை என்பதில் ஆதங்கத்தைக் காண்கிறேன். குரங்கிலிருந்து மனிதனாகிய ஆதி மனிதன் ஆதி மனிதனாகவே இருந்து இருக்கலாமே என்ற கருத்தைப்பார்க்கிறேன்.

நியூயார்க் மாநிலத்தில் கணபதி கோயில் பரிவார தேவதைகளை மணிவாசகப் பெருமான் திருப்பாடலான,

**மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து**
**உன்விரையார் கழற்கென்**
**கைதான் தலைவைத்துக் கண்ணீர்**
**ததும்பி வெதும்பி யுள்ளம்**
**பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி**
**சயசய போற்றி யென்னும்**
**கைதான் நெகிழவி டேன்உடை**
**யாய் என்னைக் கண்டு கொள்ளே (திருச்சதகம், பா. 1)**

என்ற திருவாசகம் திருச்சதகம் முதல் பாடல் நினைவுபடுத்தும்போது பேராசிரியர் எட்டாம் வகுப்பு பயின்றபோது (1932) ஆசிரியர் திரு. இராமசாமி அய்யர் இப்பாடலை இசையோடு பாடி அநுபவித்துக் கற்பித்து அழுதலை நினைவு கூர்கின்றார். தன்னுடைய 88வது அகவையிலும் எட்டாம் வகுப்பு நிகழ்வை நினைவுபடுத்துவதில் பேராசிரியரின் நினைவாற்றலின் அநுபவம் வெளிப்படுகிறது. என்போன்றவர்களுக்கு ஒரு வாரத்திற்கு முன் நிகழ்வைக் கேட்டாலே இக்காலத்தில் ஞாபகம் மறதியாகவேயுள்ளது. 88வது அகவை உடைய ஐயாவின் நினைவாற்றலிலே தெரிகிறது எத்தகைய புலமை பெற்றவர் என்பது. முப்பது வயது பெண்மணி சாலையில் எங்காவது சிறு காகிதத்துண்டு கிடைத்தாலும் அதனைப் பொறுப்புடன் குப்பைத்தொட்டியில் போடுவாளாம். பனிக்கட்டி இருக்கும் காலத்திலும் இப்பணி தவறாமல் செய்வாளாம். இதனைப் பெரியபுராணத்து அடியார்களுடன் ஒப்பிடுகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஐம்பது உள்ளன அவற்றை தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் அகர வரிசைப்படுத்தியுள்ளார். இந்த ஐம்பது மாநிலத்தில் நாற்பது மாநிலங்கள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் சூழ்நிலை திகழ்ந்து நாநிலத்தை அம்பலப்படுத்துகின்றது. மீதம் பத்து மாநிலங்கள் மட்டும் செழிப்பற்ற (பாலையல்ல) சூழ்நிலையே நிலவுகிறது என்று மறத்தமிழர்களின் பாலைநில கொடு வாழ்வைப் பாலையல்ல என்ற ஒற்றைச் சொல்லில் காட்டுகிறார். பிரபந்தங்களைப் பெற்ற நாதமுனிகள் வேதத்தை முனிவர்கள் இருக்கு, யசூர், சாமம், அதர்வணம் என்று நான்காக வகுத்தது போல் இப்பிரபந்தங்களை இசைக்கு ஏற்ற பாசுரங்களை முதலாயிரம், பெரியதிருமொழி, திருவாய்மொழி என்றும், இசைக்கு அடங்காதவற்றை இயற்பா என்று நான்காகத் தொகுத்து வெளியிட்டார்.

**நியூயார்க் கணபதி கோயில்** கணபதி பாரதியாரின் விநாயகர் நான்மணிமாலையில் 22-வது பாடல் வழியும். திருவேங்கடவனுக்கு நம்மாழ்வார் திருவாய்மொழி பத்தாம் பாசுரம் பத்தாவது பாடல் மற்றும் பரிவா தேவதைகள் திருவாசக திருச்சதகம் முதல் பாடலிலும். அம்மன் சந்நிதி அருணாசலப்புராணம் ஒன்பதாம் பாடலிலும் ஆறுமுகனை கந்தபுராணம் 14-வது பாடலிலும் பாடுகிறார். பூமகள் திருமகள் பாரதியாரின் தோத்திரப் பாடல் திருமகளைச் சரணம் புகுதல் 1,4 பாடலிலும். திருவரங்கன் சந்நிதியில் பெரிய திருமொழி 3.9 1 பாடலிலும் பின் நடராசர் சந்நிதிக்கு ஆறாம் திருமுறை-அருள்விளக்க மாலை இரண்டாம் பாடலிலும். காமாட்சியம்மை நான்காம் திருமுறை சிவகாமவல்லி துதி முதல் பாசுரத்தில் வணங்குகிறார். இராமன் சீதையுடன் தம்பி இலக்குவன் கம்பராமாயணம் அயோத்தியகாண்டம் கடவுள் வாழ்த்து பாடலில் வணங்குகிறார். ஐயப்பன் நவகிரகம் சம்பந்தனாரின் தேவாரம் 2.85-1 கோளறு பதிகம் பாசுரத்தில் பாடுகிறார்.

**பஃப்பலோ செயின் கோயில்** திருவேங்கடவனை பெரியாழ்வார் திருமொழி திருப்பல்லாண்டு ஏட்டைப் பார்த்துச் சேவிக்கிறார். பின் இராமன் சந்நிதியில் கம்பராமாயணம் யுத்தகாண்டம் பிரமாத்திர 224 பாடலில் துதிக்கின்றார். அடுத்து இராதை கிருட்டிணன் சந்நிதியில் பெருமாள் திருமொழி 7-9 சேவிக்கிறார். கண்ணனைப் பெரிய திருமொழி 2.5-4 பாசுரத்தில் சேவிக்கிறார். துர்க்கை திருவருட்பா 4-ஆம் திருமுறை சிவகாமவல்லி துதி 3-ஆம் பாடலை பாடுகிறார். கணபதியைப் பாரதியார் வாக்கில் விநாயகர் நான்மணிமாலை 23 பாடலில் கரைகிறார். இறுதியில் சிவபெருமான் திருவாசகம் திருச்சதகம் 26 பாடலைப் பாடி வணங்குகிறார்.

**நியுஜெர்ஸி திருவேங்கடவன் கோயில்** திருவேங்கடவன் நம்மாழ்வார் திருவாய்மொழி 6.10-7 ஓதுகிறார். கலியன் பெரிய திருமொழி1.9, நான்கு எட்டாவது பாடலில் வணங்குகிறார். தும்பிக்கையான் திருவருட்பா மூன்றாம் திருமறை சித்தி விநாயகர் பதிகம் 4,5 பாடல்களை ஓதி வள்ளலார் அடைந்த நிலையை அடைகிறார். சீதேவி(திருமகள்) பாரதியார் கவிதைகள்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தோத்திரப் பாடல் திருவேட்கை முதல் பாடலில் உள்ளங்கரைகிறார். பூதேவி திருவருட்பா ஆறாம் திருமுறை பரசிவ நிலை 7-இல் பாடுகிறார். அடுத்து முருகன் தெய்வானை கந்தபுராணம் பாடலால் வாழ்த்தி வணங்குகின்றார். இராமர் சந்நிதி பின் இராதா கிருட்டிணன் இருவரையும் திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழி 10.1, 7.10-3 பாடல்களில் நினைவுபடுத்துகிறார். லட்சுமி நாராயணன் அவர்களைப் பெரிய திருமொழி 2.7-7 தாய்ப் பாசுரமாக இருக்கும் பாடல் ஒலிக்கிறார். அநுமன் சந்நிதியில் அவன் ஆற்றிய கம்பராமாயணம் பாலகாண்டம் காப்பு அநுமன்துதி பாடுகிறார். கடைசியில் நவகிரக ஒன்பது கோல்களைச் சம்பந்தப் பெருமானின் கோளறு பதிகம் 2.85-1 பாடுகிறார்.

**டெக்சாஸ் மாநிலம் ஏக்தா மந்தீர் கோயில்** முழுமுதர் கடவுள் சந்நிதியில் விநாயகப்பெருமான் பாரதியார் விநாயகர் நான்மணிமாலை 23ஆம் பாடலை ஓதியும். கண்ணன் இராதா பிராட்டியைப் பாரதியார் கண்ணம்மா என் காதலி இரண்டாம் பாடலில் வழிப்பட்டு. அடுத்து சிரீநாத் பெருமானைத் திருவாய்மொழி பாசுரத்தில் 8.3-7 ஆஉள்ளங்கரைகிறார். விட்டல் உருக்குமினி சந்நிதியில் திருமங்கை ஆழ்வார் பாசுரத்தில் பெரிய திருமொழி 3.2-7 பாடலில் சேவிக்கிறார். மகாலட்சுமி அம்மைக்குப் பாரதியாரின் மூன்று காதல் பாடலில் இரண்டாவது பாடல் வழி வழிப்படுகிறார். பாலாஜி நாதர் சந்நிதியில் பெரிய திருமொழி 1.9-8 பாடல். வள்ளி தெய்வயானை முருகன் மூவரையும் கந்தபுராணம் வழி பாடுகிறார். இராமர் சீதை இலக்குவன் அநுமன் ஆகியோர் இணைந்த திருவுருவத்திற்கு திருவருட்பா இரண்டாம் திருமுறை இராம நாமப் பதிகம் ஓதி. இறுதியாக அநுமன் இராமதூதனுக்கு கம்பராமாயணம் பாலகாண்டம் காப்பு அநுமன்துதியில் நிறைவுசெய்கிறார். டெக்சாஸ் மாநிலம் சீரீ சுவாமி நாராயண மந்திர் கோயிலில் முதல் சந்நிதியில் முந்திவிநாயகர் பெருமானை வள்ளற் பெருமானுடைய மூன்றாம் திருமுறை சித்திவிநாயகர் பதிகத்திலும். கண்ணன் கடவுளைப் பாரதியார் தோத்திரப் பாடல்கள் கோவிந்தன் பாட்டாலும். அடுத்து நாராயணரை ஒரு பழம் பாடல் வழி ‘நாராயண நாராயண எனத் தொடங்கி மறைநூலும் விளம்பும்’ என்று முடிகிற பாசுரத்தை காட்டுகிறார். கடைசியில் அநுமன் சந்நிதிக்கு கம்பராமாயணம் பாலகாண்டம் காப்பு அநுமன்துதியை கம்பன் வாக்கில் வழிப்படுகிறார். டெக்சாஸ் மாநிலம் இரண்டு கோயிலும் இந்திய வடநாட்டுபாணியில் கட்டப்பட்டுள்ளதாம். அனைத்து சந்நிதியின் பெருமான்களையும் தன்னுடைய தமிழ் பக்தி இலக்கிய பாடல் வழி ஒப்பீட்டு வழிபடும் காட்சியைக்கண்டு நாமும் உள்ளங்கரையலாம். பிஎச்.டி. மாணாக்கரிடம் பேச்சில் அறிவுக்கூறுகள் பற்றிய கருத்தில் கீழ்வரும் குறளை விளக்குகிறார்.

**ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு**
**எழுமையும் ஏமாப் புடைத்து (குறள். 398)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற குறளில் அறிவுக்கூறுகள் கடத்தப்பெறும் குறிப்பு இருப்பதையும் ஆனால், அக்குறிப்பு சுற்றுப்புறச்சூழலைக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும் என்றும் விளக்குகிறார். ஐயா தன்னுடைய மாறுபட்ட கோணத்தில் குறளுக்கான விளக்கம் தருவது அனைவரும் ஏற்கும் விதத்தில் அருமையாகயுள்ளது.

**வைணவ சைவ ஒப்பீட்டு அநுபவம்**

இருசமய தத்துவங்களைப் பற்றிய ஒப்பீட்டைப் பேராசிரியர் கூறியவாறு காணலாம். தத்துவங்களை வைணவத்தில் சித்து, அசித்து, ஈசுவரன் என்றும் சைவத்தில் பதி, பசு, பாசம் என்றும் புல் முதல் தெய்வம் வரை பிரித்து உயிர்த் தொகுதிகளைக் காட்டுகிறார். இவற்றின் விளக்கங்களாகக் காணலாம். முதலில் வைணவத்தில் சித்து, சைவத்தில் பசு பார்க்கலாம், சிற்றறிவுடைய உயிர்களும் எறும்பு, கொசுமுதலாக மனிதன் ஈறாக அனைத்தும் உயிர்த்தொகுதிகளும் அடங்கும். சித்தாகிய உயிர்களை மூவகையாகப் பிரித்துப் பேசுமாம். அவை பத்தர், முத்தர், நித்தியர். பசுவாகிய உயிர்த் தொகுதிகள் இங்கும் மூவகையாகப் பிரித்துப் பேசப்பெறும். அவை விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர். இரண்டாவதாக வைணவ அசித்தும் சைவத்தின் பாசம் இவை அசித்தில் புல்பூண்டு முதல் அனைத்து தாவரவர்க்கங்களும் மண், கல் முதல் அண்டம் வரை அனைத்தும் அடங்கும். பாசம் என்பதற்குக் கட்டுவது என்பது பொருளாம். 14 அண்டங்களைப் பற்றிக் கூறுகிறதாம். வைணவம் சுத்த தத்துவம், மிச்ரத்துவம், சத்துவசூனியம் என்றும் சைவம் ஆணவம், கன்மம், மாயை மூவகை உயிர்களின் பொருட்டு உலகங்கள் மூவகையாம் சுத்தப்பிரபஞ்சம், மிச்சரப்பிரபஞ்சம், அசுத்தப்பிரபஞ்சம் என்றும் உள்ளதாம். இந்த 14 அண்டங்களை வைணவம் மற்றும் சைவம் அதலம், விதலம், நிதலம், தராதலம், மகாதலம், சுதலம், பாதலம் என பூலோகத்தின் கீழ் பகுதியைக் காட்டுகிறார். மேல் பகுதியாகப் புவலோகம், சுவலோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என ஆறு உலகங்கள் உள்ளனவாம்.

மூன்றாவதாகக் கடவுளர்களைக் குறிப்பிடுவது வைணவத்தில் ஈசுவரன் சைவத்தில் பதி என இருக்கிறதாம். வைணவத்தில் ஈசுவரன் என்பது திருமாலையே குறிக்கிறதாம் சிவன் வேறாம். சீமந் நாராயணனே முதற் கடவுளாம். அவரின் ஐந்து நிலையாகப் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் நிலைகளில் பெருமானை சேவிக்கரார்களாம். சைவத்தில் சிவபெருமானே முழுமுதர் கடவுள். இவரின் ஐந்து நிலையாக சொரூபநிலை, தடத்தநிலை, சக்தி, இந்த சக்தி நிலையில் தான் ஐந்து நிலைகள் உள்ளனவாம். பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என ஐந்து நிலைகளில் இருக்கிறது. மேலும் சில தகவலாக முக்தி அடைவதற்கான வழிகளை இருசமயம் குறிப்பவை, வைணவம் கர்மயோகம் (சாத்திரப்படி), ஞானயோகம் (தியானத்தில்), பக்தி யோகம் (தன்நிலை அறிதல்), பிரபத்தியோகம் (சரணாகதி). இதுவே சைவத்தில் முக்தியை அடை மனம், மொழி, மெய்களைப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பயன்படுத்துகின்றனர். சரியை (உருவத்தைத் தொட்டு வழிபடுதல்), கிரியை (உருவத்திற்கு மந்திரம் ஓதி வழிப்படுதல்), யோகம் (தியானம்), ஞானம் (மேல் மூன்றையும் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் நிட்டை கூடல்). மந்திரங்கள் வைணவத்தில் ‘ஓம் நமோ நாராயணாய’ என்பது பதரிகாசிரமத்தில் நரனுக்கு நாராயணன் உபதேசித்ததாம். மூலமந்திரம் எட்டெழுத்து மந்திரம். சைவத்திற்கு ‘சிவாய நம’ ஐந்தெழுத்து மந்திரம். வைணவம் சைவம் இரண்டிலும் நான்கு பொதுநிலைகள் காணப்பெறுகின்றன. சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். இவை இறைவனின் நிலையாக கூறுகிறார். வினைகளும் சஞ்சிதம் – பழவினை, பிராரப்தம் – நுகர்வினை, ஆகாமியம் – எதிர்வினை ஆகியவை பொதுவாம். பேராசிரியரின் இருசமய புரிதலும் இவற்றிலே எவ்வளவு அநுபவம் பெற்றவர் என்பது இந்த வைணவம் சைவம் ஒப்பீட்டு முறையிலே நமக்குத் தெரிய வருகிறது.

**ஆங்கிலத்திற்கான தமிழ்ச் சொற்படுத்தும் அநுபவம்**

நூலின் அமைப்பிலே தான் கூறவரும் கருத்தில் ஆங்கில சொற்கள் இருந்தாலும் புரியாதவற்றைத் தெளிவுபடுத்தும் விதமாகவும் மேலும் சில கருத்துகளை எடுத்துக்காட்டும் இடங்களிலும் 1, 2, 3 என எண்களைக் கொண்டு பனுவல் முழுமையிலும் ஒவ்வொரு பக்கத்தின் கீழ்ப் பகுதியில் விளக்கம் ஆங்கிலத்தில் விளக்கியுள்ளார் (சீமைக்காரை – CEMENT). மேலும் பனுவலின் தோரண பகுதிக்கு முன் தான் அநுபவத்த காட்சிகளைப் படக்காட்சியாகக் கோவைப்படுத்தி காட்சிக்குரிய கருத்துகள் வரும் இடங்களில் படங்களின் எண்களைப் பதிவிட்டுள்ளது தனிச்சிறப்பாகவே உள்ளது. பேராசிரியர் பதித்துள்ள கருத்துகளிலே அமெரிக்கா காட்சிகள் கண்முன் நிற்கிறது அவற்றில் மேலும் படக்காட்சிகளையும் காட்சிப்படுத்தியுள்ளது விருந்தளிக்கிறது. இவற்றில் எல்லாம் ஐயாவின் அநுபவம் தெளிவுபடுத்தியிருப்பதை நூலின் அமைப்பிலே காணலாம். ஓர் ஆங்கில தமிழ் அகராதிக்கான அமைப்பைப் பனுவலை வாசித்தவர்க்கும் வாசிப்பவருக்கும் தெரியவரும்.

ஆங்கிலத்திற்கான தமிழ்ச் சொற்படுத்தும் சொற்களைக் காணலாம்.

அவை,

- Chromosomes - நிறக்கோல்கள்
- Testicles - விரைகள்
- Ovaries - சூற்பைகள்
- Dormant state - உறங்கிய நிலை
- Germ Cell - கருஉயிரணு நிலை
- Fallopian tube - கருக்குழல்
- Uterus - கருப்பை
- Architecture - படங்கள் வரைந்து திட்டங்களை வகுத்தல்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

- Engineering - கட்டுவதில் பல்வேறு பொறியமைப்பு
- Basin - குழாய் அமைப்பு பொருத்தப் பெற்றுள்ள அமைப்பு
- Boulevard - 100 அடிக்கு சற்றுக் குறைவான தெரு
- Avenue - 72 அடி அகலமான தெரு
- Street - 60 அடி அகலமான தெரு
- Drive - 40 அடி அகலமான தெரு
- White Cement - வெள்ளைச் சீமைக்காரை
- Chanel - கால்வாய்
- Photo - ஒளிப்படம்
- Fine - தண்டம்
- Moving Staircase -இயங்கும் வெட்டவெளி தளங்கள்
- Periodicals - கலைபற்றிய பருவ ஏடுகள்
- Civil war - உள்நாட்டுப் போர்
- Mayor - நகரத்தந்தை
- Colonies - குடியிருப்பு நாடுகள்
- Delegates - சார்பாளர்கள்
- Referendum - பொதுமக்கள் தீர்ப்பு எடுப்பு
- Materialism - உலகாயதத்தால்
- Spiritualism - ஆன்மிகம்
- Lift - மின்விசை ஏற்றங்கள்
- Torpedo - குண்டுகட்கும் ஏவுகணை
- Hall Beam - சுக்கானின் குறுக்கு விட்டத்திம்
- Propellers - சுழலும் இயக்கிகள்
- Elevators - மின்கம்பித் தொகுப்புகள்
- Exhibits - சிறப்புக்காட்சிப் பொருட்கள்
- Simulators - சுழலும் அமைப்பு
- Emblem - சட்டையில் குத்திக்கொள்ளும் அடையாளம்
- Fall-Winter - இலையுதர் காலம்
- Crew-Mess Deck - வேனில் காலங்கள்
- East River - கீழாறு
- Ferry Services - படகு வசதிகள்
- Whirl pool - சுழலும் குட்டை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

Clock wise - இடப்பக்கம்

Anti-clockwise - வலப்பக்கம்

Generators - மின்சார இயக்கிகள்

Strait - நீர்சந்தி

மேற்காட்டியவாறு சொற்களுக்கு ஆங்கிலத் தமிழ் அகராதி அமைப்பில் விளக்கங்கள் உள்ளன. சில சொற்களை மட்டுமே நான் குறிப்பிட்டுள்ளேன். மேலும் ஐயா தான் கண்டு அநுபவத்த மாநிலங்களில் உள்ள கடைகளின் பொருட்களுடைய வகைகளைப் பக்கம் 74, 75 மற்றும் 76-இல் தமிழ் ஆங்கில விளக்கம் தருகிறார்.

**காட்சியை விளக்கி நிறுத்தும் அநுபவம்**

ஐக்கிய நாடுகளின் அமைப்பினை உருவாக்கிய நோக்கத்தைப் புரட்சிக் கவியின் கவிதையில்,

**புதியதோர் உலகம் செய்வோம் – கெட்ட**
**போரியிடும் உலகத்தை வேரொடு சாய்ப்போம் (புதிய உலகம், பா. 58)**

என்ற புரட்சிக் கவியின் வாக்கிற்கிணங்க ஐக்கிய நாடுகள் என்ற அமைப்பு உலக மக்களிடையே போர் நிகழாமல் இருக்கவும் பல பிரட்சனைகளைத் தீர்க்கும் பொறுப்பில் இவ்வமைப்பு திகழ்கிறது. ஐக்கிய நாடுகள் அமைப்பின் முக்கியத்துவம் இவற்றின் ஆறு முக்கிய அங்கங்களான 1.பொதுப் பேரவை 2.பாதுகாப்பு ஆலோசனை அவை 3.செயலகம் 4.பொருளாதார சமூக ஆலோசனை அவை 5.அனைத்துலக நாடுகளின் நீதிமன்றம் 6.அறக்கட்டளை ஆலோசனை அவை என இவற்றின் செயற்பாடுகளையும் காட்சிப்படுத்துகிறார். விதிமுறைகள், நோக்க முடிவுகள், அடிப்படை நம்பிக்கைகள், உறுப்பினராகும் முறை, விதிகள் மாற்றும் முறைகள் இவற்றைத் தான் விளக்கமாகக் கூறியுள்ளார். மேலும் ஐ.நா. -வினுடன் தொடர்புள்ள தனிப்பட்ட முறையில் செயற்படும் அமைப்பில் முக்கியமானவை ஐந்து அவை,

1. ஐ.நா. கல்வி அறிவியல் பற்றிய அமைப்பு
2. உலக உடல் நலப் பாதுகாப்பு அமைப்பு
3. ஐ.நா. குழந்தைகள் திடீர் அத்தியாவசிய நிதி
4. உணவு உழவுத் தொழில் அமைப்பு
5. அனைத்து நாடுகளின் தொழிலாளர் நல அமைப்பு

இந்த ஐந்து அமைப்பின் கீழ் அமெரிக்கா உலகத்தை ஆளுகின்றன. தன்னுடைய ஆற்றலை ஆளுமையுடன் வெளிக்காட்டுகிறது. இவ்வாறாக ஐக்கிய நாடுகளின் அமைப்பையும் செயல்பாடுகளையும் பனுவலைப் படிப்பவருக்கு ஒரு புரிதலை ஏற்படுத்தும் விதத்தில் காட்சிப்படுத்துகிறார். இக்காலகட்டத்தில் பல நாடுகள் இரண்டாகப் பிரிகிறது உதாரணமாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தென்கொரியா வடகொரியா போன்ற நாடுகள் அவைகள் ஐக்கிய நாடுகளில் எப்படி இணைவது என்பதை விளக்கமாக இப்பகுதியில் தந்துள்ளார். ஐயாவின் அமெரிக்கப் பயணத்தில் நான்கு திருக்கோயில்கட்குச் சென்றுவர வாய்ப்புகள் ஏற்பட்டத்து. நான்கு திருக்கோயில்கட்கு ஒவ்வொரு சந்நிதியிலும் பல இலக்கிய பாசுரங்களை ஓதி உளங்கரைந்து உருகி வணங்கி வழிப்படுவதைக் கட்டுரையின் தமிழிலக்கிய ஒப்பீட்டு முறை என்ற தலைப்பில் விளக்கியுள்ளேன். இத்திருக்கோயில்கள் போன்ற இடங்களை இல்லத்திலிருந்து செல்லும் தொலைவு, நாள், கிழமை, நேரம் இவற்றை சுட்டி செல்லும் காட்சி அற்புதமாகயுள்ளது. அருங்காட்சியகம், உயிர்காட்சி சாலை, கட்டட அமைப்பு போன்றவற்றைப் புள்ளிவிவரங்களுடன் விளக்குவது. தான் கண்ட காட்சிகளை தனக்கேயுரிய தனித்தன்மையில் விளக்கிச் செல்கிறார். நயாகரா அருவியை பஃப்பலோ நயாகரா அருவி என்றும் அழைப்பார்களாம். பஃப்பலோ நகரத்தில் இந்த அருவி இருக்கிறதாம். கிண்டலாக நோக்கினால் இந்த நகரத்தில் எருமை இருந்ததில்லை. ஃபிரஞ்சு சொல்லாகிய ‘beau flauve’ அழகான ஆறு என்ற பொருளைக் கொண்டதாம். தவறாக உச்சரிக்கப் பெற்று இப்பெயர் ஏற்பட காரணமாயிருக்குமாம். நம் ஊரிலும் பல ஊர் பெயர்கள் மாற்றம் ஏற்பட தவறான உச்சரிப்பு தான் காரணமாகவே உள்ளது. இதனால் ஊர் பெயர்களின் காரணங்களைப் பின்வரும் தலைமுறைக்கு தெரியாமலே போகிறது.

ஐயா தன்னுடை 88-வது அகவையிலும் நயாகரா அருவியின் அழகை

**பயணம் என்பது பலவிதமே**
**பயணம் மனிதரின் அவசியமே**
**பயமில் லாமல் நாமும் ஓர்**
**பயணம் செய்வோம் வாவா நீ! (எங்கள் உலகம், பா. 10)**

என்ற சி. உதயன் என்பவரின் கவிதையின் வழி ஐயா பயமில்லாமல் துணிவுடன் அருவியின் அருகிலே சென்று முதுமை வயதிலும் கண்டு நம்மையும் பயணம் மேற்கொள்ள வாவா என்று அழைப்பதாகயுள்ளது.

பாரதிதாசன் குடும்ப விளக்கு நூல் வரிகளில் பேராசிரியரைப் பார்த்தால்,

**ஒக்கநல் லிளமை கண்டீர்**
**கல்விநல் லொழுக்கம் கண்டீர்**
**மெய்க்காதல் மணமும் பெற்றீர்**
**இல்லற வெற்றி பெற்றீர்; வைய**
**வாழ்வெலாம் பெற்றீர் (குடும்ப விளக்கு, ப. 129)**

என்ற பாரதிதாசனின் வரிகளுக்கு இணங்க பேராசிரியர் வாழ்க்கையில் நல்லிளமை கண்டு, கல்வி நல்லொழுக்கம் கண்டு, மெய்க்காதல் மணமும் மக்களையும் பெற்று, கல்வியிலும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இல்லறத்திலும் வெற்றி பெற்று, இப்பறந்த வைய வாழ்வெல்லாம் அனுபவித்து வாழ்ந்த பேராசிரியர்.

**மெய்ப்படிநம் மறிஞரின் சொற் படிநடந்தால்,**
**மேற்படியால் செப்படி வித்தை பறக்கும்,**
**முற்படில் ஆகாததுண்டா? (பாரதிதாசன் கவி., ப. 128)**

என்ற தாசனின் வாக்கிற்கிணங்க ஐயாவின் சொற்படி நடந்ததால், எனக்கு வித்தை பறந்தது, அவற்றை என் முதல் ஆய்வுக்கட்டுரைக்கு முற்பட்டதால் ஆகியுள்ளது இக்கட்டுரை.

**முடிவுரை**

வேதியியலில் இளங்கலை படிப்பை முடித்த ஐயா தமிழ் மீதான ஓர் அவா காரணமாகத் தமிழ் வித்துவான் படிப்பைக் கற்று முனைவர் பட்டம் பெற்றுள்ளார். 1961 முதல் தான் வாழ்ந்த காலம் வரை குறிப்பிடத்தக்க பல நூல்களைப் படைத்தும் எண்ணற்ற தமிழ் தொண்டும் செய்துள்ளார். அவற்றில் என் அமெரிக்கப் பயணம் நூலும் ஒன்று. இந்நூலிலே என்னுடைய ஆய்வு பேராசிரியரின் அமெரிக்கப் பயண அநுபவம் என்ற தலைப்பில் சொற் கோவைப்படுத்தும் அநுபவம், தமிழிலக்கிய ஒப்பீட்டு அநுபவம், வைணவ சைவ ஒப்பீட்டு அநுபவம், ஆங்கிலத்திற்கான தமிழ்ச் சொற்படுத்தும் அநுபவம், காட்சியை விளக்கி நிறுத்தும் அநுபவம் என உட்தலைப்பின் கீழ் ஐயாவின் பயண அநுபவத்தை ஆய்வு செய்து முடித்துள்ளேன்.

**குறிப்பு நூல்கள்**

[1] சி. உதயன். *எங்கள் உலகம்.* முத்துப் பதிப்பகம், விழுப்புரம், முதல் பதிப்பு, 2000.
[2] பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார். *என் அமெரிக்கப் பயணம்.* வேங்கடம் வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 2004.
[3] கமலா முருகன். *குடும்ப விளக்கு.* சாரதா பதிப்பகம், சென்னை, எட்டாம் பதிப்பு, 2018.
[4] வெ. சத்திய நாராயணன். *சங்க இலக்கியம் எட்டுத்தொகை.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2014.
[5] ந. சி. கந்தையாப்பிள்ளை. *செந்தமிழ் அகராதி.* சாரதா பதிப்பகம், சென்னை, பதிப்பு, 2019.
[6] அழ. அண்ணாமலை. *பாரதிதாசன் கவிதைகள்.* அபிராமி பதிப்பகம், சென்னை, பதிப்பு,2001.

**Reference books**

[1] C. Udhayan. *Engal Ulaga.* Mutthu Pathipagam, Villlupuram, 2000.
[2] Professor Na. Suppu Rediyar. *En America Payanam.* Venkadam Publication, Chennai, 2004.
[3] Kamala Murugan. *Kudumba Vilhaku*. Saaratha Pathipagam, Chennai, 2008.
[4] V. Sathya Naryanan. *Sanga Illakiyam Ettuthokai.* New Century Book House Pvt. Ltd., Chennai, 2014.
[5] Na. C. Kandaiya Pillai. *Sentamil Agarathi*. Saaratha Pathipagam, Chennai, 2019.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[6] Azha. Annamalai. *Bharathidhasan Kavithaikal*. Abirami Pathipagam, Chennai, 2001.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் நா. சுப்புரெட்டியாரும் மலைநாட்டுத் திருப்பதிகளும்

## Professor Subbu Reddiar and the Mount Thirupathis

**முனைவர் ர. பிரித்தா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, அக்சிலியம் கல்லூரி, வேலூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. R. Preetha,** Assistant Professor of Tamil, Auxilium College, Vellore, Tamil Nadu, India.
**ORCiD:** https://orcid.org/0000-0002-1172-8043
**DOI: 10.5281/zenodo.7266069**

### Abstract

*Professor Na. Subbu Reddiar was born in a farming family in Perakambi, Trichy District. He holds a Bachelor's degree in Chemistry from Soosaipar College, Trichy, a Masters degree from the University of Chennai and a PhD from Tirupathi Thiruvenkatavan University. He is very fond of Tamil. He is the author of 130 books in the fields of teaching, Tamil literature, religion, philosophy, performance, history, biography, science and research. He belonged to the Veera Saiva Sect yet he is very devoted to Vaishnavism. They have devised several strategies at each time to interact with the reality. The worship strategies devised by the Vaishnava sages are unique. Devotion opens like a veil when the Vainava idols are not merely symbolic, but each is an Avatar and is associated with reality as an Archavatara taken by the Lord Vishnu. He has written revisions so that those who read such a fact will also realize it. His travel books include "Malai Nattu Tiruppathis", Thondai Nattu Tirupatis, Pandinatu Tirupatis, Northern Tirupatis and Cholanattu Tirupatis. With information on the location of temples in hill station Tirupatis, one can find not only Vaishnava philosophies, devotional positions, traditions, rituals, historical evidence but also the specialties of the Lord Vishnu and Subbu reddiar's devotion on HIM. There are thirteen Mount Tirupathis that have been categorized by the Alvars into four divisions. They are Thiruvanparicharam, Thiruvattar and Thiruvananthapuram as three divisions; Thiruvittuvakodu and Thirunavaya are the fourth. Thirumangai Alwar is the one who excelled in the above three categories. Kulasekara Perumal was the only to excel in one category. Thsu, the article will decode the first section of these four sections.*

**Keywords:** Professor Subbu Reddiar, Mount Thirupathis.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் நா. சுப்புரெட்டியார் திருச்சி மாவட்டம் பெரகம்பி என்ற ஊரில் வேளாண் குடும்பத்தில் பிறந்தவர். திருச்சி சூசையப்பர் கல்லூரியில் வேதியியல் துறையில் இளங்கலைப் பட்டமும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப் பட்டமும், திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றவர். தமிழ் மீது மிகுந்த பற்று கொண்டவர். இவர் ஆசிரியம், இலக்கியம், சமயம், தத்துவம், திறனாய்வு, வரலாறு, தன்வரலாறு, அறிவியல், ஆராய்ச்சி என்ற வகைமையில் 130 நூல்களை எழுதியவர். இவர் வீர சைவ சமயத்தைச் சேர்ந்தவர். ஆயினும் வைணவத்தின் மீது மிகுந்த ஆர்வம் கொண்டவர். மெய்ப்பொருளோடு ஊடாடுவதற்கென்று ஒவ்வொரு சமயத்திலும் பல உத்திகளை வகுத்து வைத்துள்ளனர். வைணவ ஞானிகள் வகுத்து வைத்திருக்கும் உத்திகள் தனிச்சிறப்புடையவை. வைணவ*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*மூர்த்திகளை வெறும் அடையாள பொருளாகக் கொள்ளாமல், ஒவ்வொரு மூர்த்தியும் இறைவன் எடுத்த அர்ச்சாவதாரம் என்று கொண்டு மெய்ப்பொருளோடு உறவாடும்போது, பக்தியானது மடை போல் திறக்கின்றது. அத்தகைய உண்மையைப் படிப்பவர்களும் உணரும் வகையில் திருத்தலங்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய திருத்தலப் பயண நூல்களான "மலை நாட்டுத் திருப்பதிகள்", "தொண்டைநாட்டுத் திருப்பதிகள்", "பாண்டிநாட்டுத் திருப்பதிகள்", "வடநாட்டுத் திருப்பதிகள்", "சோழநாட்டுத் திருப்பதிகள்" போன்றவையாகும். அவற்றுள் 1971இல் எழுதிய மலைநாட்டுத் திருப்பதிகளை மட்டுமே கொண்டு இக்கட்டுரை வடிவமைக்கப்பட்டுள்ளது. மலைநாட்டுத் திருப்பதிகளில் உள்ள திருக்கோயில்கள் அமைந்த இடங்களைக் குறித்த தகவல்களுடன், வைணவ சமய தத்துவங்கள், பக்தி நிலைகள், அங்குள்ள மரபு நிலைகள், சடங்குகள், வரலாற்றுச் சான்றுகள் மட்டுமின்றி இறைவனின் சிறப்புகளைக் குறித்தும் காணலாம். ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றும் நான்கு பிரிவுகளாக அமைந்துள்ளன. அவை திருவண்பரிசாரம், திருவாட்டாறு, திருவனந்தபுரம் இவை மூன்றும் ஒரு பிரிவாகவும், திருவாறன்விளை, திருச்சிற்றாறு, திருக்கடித்தானம், திருவல்லாழ், திருவண்டூர், திருப்புலியூர் இரண்டாம் பிரிவாகவும், திருக்காட்கரையும், திருமொழிக் களமும் மூன்றாம் பிரிவாகவும், திருவித்துவக்கோடும், திருநாவாயும் நான்காவது என நான்கு பிரிவுகளிலும் மங்களாசாசனம் செய்து அருளியவர் நம்மாழ்வார். மேற்கண்ட மூன்று பிரிவுகளில் பாடி சிறப்பித்தவர் திருமங்கை ஆழ்வார் ஆவார். குலசேகரப் பெருமாள் ஒரு பிரிவில் மட்டும் பாடி சிறப்பித்தவர். இந்நான்கு பிரிவில் முதல் பிரிவினை மட்டும் காண்போம்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் நா. சுப்புரெட்டியார், மலைநாட்டுத் திருப்பதிகள்.

**முன்னுரை**

பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்ற சிறப்புமிக்க வைணவத் திருத்தலங்கள் திவ்ய தேசம் என்று அழைக்கப்பட்டன. திவ்ய தேசங்களைப் பற்றிய பாடல்கள் மங்களாசாசனம் என அழைக்கப்படுகின்றன. ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருத்தலங்கள் 108 ஆகும். இவற்றில் இந்தியாவில் 105 தலங்கள் உள்ளன. ஒன்று நேபாளத்தில் காணப்படுகின்றன. இவைத் தவிர மற்ற 2 தலங்கள் வானுலகில் உள்ளன. 108 வைணவத் தலங்களுக்கும் தம் வாழ்நாளில் சென்று அத்தலத்தின் சிறப்புகளைப் பாடுதல் என்பது ஒரு வைணவ சமய வழிபாடாக இருந்துள்ளது. வைணவத் தலங்களைக் குறித்து பின்வரும் பாடலின் மூலம் அறியலாம்.

**ஈரிருபதாஞ் சோழம் ஈரொன்பதாம் பாண்டி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஓர்பதின்மூன்றாம் மலைநாடு ஓரிரண்டாம் - சீர்நடுநாடு**

**ஆறோடீரெட்டுத் தொண்டை அவ்வட**

**நாடாறிரண்டு கூறும் திருநாடு ஒன்றாக் கொள் (108, வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு, ப. 22-23)**

அவ்வாறு சிறப்புப் பெற்ற திவ்ய தேசங்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம். அவை சோழநாட்டுத் திருப்பதிகள்-40, நடு நாட்டுத் திருப்பதிகள்-02, தொண்டை நாட்டுத் திருப்பதிகள்-22, வட நாட்டுத் திருப்பதிகள்-12, மலைநாட்டுத் திருப்பதிகள்-13, பாண்டி நாட்டுத் திருப்பதிகள்-18, நில உலகில் காண முடியாத திருப்பதிகள்-02 ஆகும். மேற்கூறப்பட்ட 108 வைணவத் திருத்தலங்களுள் தமிழ் நாட்டில்-84, கேரளாவில்-11, ஆந்திராவில்-2, உத்திரப்பிரதேசத்தில்-4, உத்தரகாண்டத்தில்-3, குஜராத்தில்-1, நேபாளத்தில்-1, வானுலகில்-2 உள்ளன.

மேற்கண்ட திருத்தலங்களில் மலைநாட்டில் உள்ள 13 திவ்ய தேசங்களையும் பேராசிரியர் நா.சுப்புரெட்டியார் 4 பெரும் பிரிவுகளாகப் பிரித்துள்ளார். அவற்றைப் பற்றி வைணவ திவ்யதேச ஸ்தல வரலாற்று நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். அவை,

**மாவனந்த புரம் வண்பரிசாரம்**

**காவலுள்ள காட்கரை மூழிக்கும்**

**இலகிடு புலியூ ரெழிற் செங்குன்றூர்**

**…பதிமூன்று மவைப் பணிந்து போற்றுவோம் (108 வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு, ப. 398)**

மலைநாட்டுத் திருப்பதிகள் நான்கு பிரிவுகளாகப் பிரித்து, அதில் முதல் பிரிவான திருவண்பரிசாரம், திருவாட்டாறு, திருவனந்தபுரம் மூன்றை மட்டுமே கொண்டு இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது.

**திருவண்பரிசாரம்**

108 வைணவத் திருத்தலங்களில் இத்தலமும் ஒன்று. நம்மாழ்வாரால் பாடல் பெற்ற இத்தலத்தில் இறைவன் ஏழு முனிவர்களால் சூழப்பட்டு காட்சி தருகிறார். இலக்குமிதேவி ஆனந்தமடைந்து திருமாலின் திருமார்பில் நித்திய வாசம் செய்ததால் இத்தலத்தில் திருமால் திருவாழ்மார்பன் என்று அழைக்கப்படுகிறார். திருவாகிய இலக்குமி பதியாகிய திருமாலைச் சார்ந்து இந்த ஊரில் தங்கியதால் இவ்வூர் திருப்பதிசாரம் என அழைக்கப்படுகிறது. இத்தலத்தில் உள்ள இறைவன் திருவாழ் மார்பன். இறைவி கமலவல்லி நாச்சியார் ஆகும். இங்குள்ள திருவாழ்மார்பன் ஏழு அடி உயரத்தில் நான்கு கரங்களுடன் சங்கு சக்கரதாரியாக வலது காலை மடக்கியும், இடது காலைத் தொங்க விட்டும் அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கிக் கழுத்தில் லட்சுமி உருவம் பொறிக்கப்பட்ட பதக்கத்துடன் காட்சியளிக்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இத்தலத்தின் மூலவர் கடுகு, சர்க்கரை மற்றும் மலைதேசத்து மூலிகைகளால் செய்யப்பட்டுள்ளதால் இவருக்குத் திருமஞ்சனம் கிடையாது.

**வருவார் செல்வார் வண்பரி**

**சாரத்து இருந்தஎன்**

**...ஒருபாடு உழல்வான் ஓர்அடி**

**யானும் உளன்என்றே (மலைநாட்டுத் திருப்பதிகள், ப. 9)**

நம்மாழ்வாரால் திருவாய்மொழியில் பாடப்பட்ட தலம் திருப்பதிசாரம். இத்தலம் திருநெல்வேலி நாகர்கோவில் நெடுஞ்சாலையில் நாகர்கோவிலிலிருந்து சுமார் இரண்டு கல் தொலைவில் உள்ளது. நெடுஞ்சாலையில் ஒரு வாய்க்கால் பாலத்தருகில் இறங்கி முக்கால் மயில் நடந்து சென்றால் இவ்வூரை அடையலாம். நாகர்கோவிலிலிருந்து திருவண்பரிசாரத்திற்கு பேருந்தில் அரை மணி நேரத்திற்குள் சென்று விடலாம். மலைநாட்டுக் கோயில்களின் கலை வண்ணங்களோடு தூய்மை, அமைதி, ஒழுங்கு முதலிய பண்புகளும் இக்கோயிலின் சிறப்புகளாகக் காணப்படுகின்றது.

திருவண்பரிசாரம் நம்மாழ்வாரின் தாயார் உடையநங்கை பிறந்த இடம் இது. இளமையிலேயே உடைய நங்கை விஷ்ணு மீது மிகுந்த பக்தியுடையவள். மனம் முடிந்தபின் நீண்ட நாட்களாக உடைய நங்கைக்குக் குழந்தைப்பேறு கிடைக்கவில்லை. ஆகையால் திருவாழ்மார்பனை வேண்டி 41 நாட்கள் விரதம் மேற்கொண்டார். பெருமாளின் திருவருளால் கர்ப்பமுற்று பெற்றெடுத்த குழந்தைத்தான் நம்மாழ்வார். (வரலாறு பேசும் தமிழகத்துத் திருக்கோயில்கள், ப. 471) மேலும் திருமால் தனது பக்தன் பிரகலாதனுக்கு அவன் தந்தை இரணியனால் இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளைத் தாங்காமல் நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியனை சம்ஹாரம் செய்தார். அதன் பின்னும் உக்கிரமாக இருந்த பரந்தாமனைக் கண்டு பயந்துபோன லட்சுமி தேவி திருமாலை விட்டுப் பிரிந்து திருப்பதிசாரம் வந்தடைந்து தவம் மேற்கொண்டார். பின்னர் பிரகலாதனின் வேண்டுகோளுக்கிணங்க சாந்தமடைந்த இறைவன் லட்சுமியைத் தேடி திருப்பதிசாரம் வந்தார். அத்தகைய சிறப்புப்பெற்ற இத்தலத்தில் நம்மாழ்வாருக்குப் பெருமாள் காட்சியருளியுள்ளார்.

மலைநாட்டு வளமும் இயற்கை சூழலும் ஒருங்கே சூழப்பெற்ற இத்திருக்கோயிலுக்கு எதிரில் ஸ்ரீகாரியம் அலுவலகம் உள்ளது. இதனருகே திருக்குளமும், பளிங்கு போன்ற தூய்மையான நீர் நிறைந்த குளமும் காணப்படுகின்றது. உடைய நங்கையார் பிறந்த ஊரான திருவண்பரிசாரத்தில் எம்பெருமான் அம்மையாருக்குக் காட்சி தந்ததாகப் புராணம் கூறுகின்றது. திருக்குருகூரில் திருப்புளி ஆழ்வாரின் திருவடியில் அமர்ந்து இவ்வுலக ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்களை நம்மாழ்வார் பாடியுள்ளதாகப் பேராசிரியர் குறிப்பிடுகின்றார். திருவண்பரிசாரம் என்ற பெயர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருப்பரிசாரம் என்று திரிந்து திருப்பதிசாரம் என்று மருவி வழங்கி வருகின்றது. திருவண் பரிசாரத்து எம்பெருமானைத் தொழுதால் திருப்பதி எம்பெருமானையே சேவிக்கும் பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே வேரூன்றிக் கிடக்கின்றது. இந்த நம்பிக்கையால் திருவண்பரிசாரம் என்ற திவ்ய தேசத்தின் பெயர் திருப்பதி சாரம் என்று அவர்களிடம் நிலைத்துவிட்டது. திருப்பதி ஏழுமலையானை அறியாதவர் இவ்வுலகில் யாருமிலர்? அலர் மேல் மங்கை தாயாரையும் தனியாக ஒதுக்கி வைத்து விட்டு இரவும் பகலும் ஓயாமல் நின்ற கோலத்துடன் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு நாள்தோறும் அருள்பாலிக்கும் பெருமான் அங்ஙனம் நின்ற களைப்புத் தீரத் திருப்பதி சாரத்தில் இருந்த திருக்கோலத்திலிருந்துகொண்டு சேவை சாதிக்கின்றார் போல் பேராசிரியருக்குத் தோன்றியுள்ளது. இந்தத் திருக்கோயிலில் நம்மாழ்வாருக்கென்று தனி சன்னிதி உண்டு. தாயைப் பெற்ற பாட்டியார் ஊரில் அண்மையில் அடவியில் உள்ள சடாயுபுரம் என்ற கோயிலுக்குச் சொந்தமான நடராசர் சிலையும் வேறு பொருள்களும் பாதுகாப்பிற்காக இக்கோயிலில் இடம்பெற்றுள்ளன. அங்கே ஆடலரசனும் காணப்படுகிறார். மேலும் கருவறையில் திருவாழ்மார்பன் ஸ்ரீதேவி, பூதேவி, நிலாதேவி சகிதமாகக் காட்சியளிக்கிறார்.

நம்மாழ்வார் குழந்தையாகத் தவழ்ந்து செல்வது போன்ற அழகிய சிலை இங்குக் காணப்படுகின்றது. இக்கோயிலில் கருவறை அர்த்த மண்டபம், மகாமண்டபம், ஒற்றைக் கல் மண்டபம் ஆகிய மண்டபங்கள் காணப்படுகின்றன. கோயிலுக்கு வெளியே 40 அடி உயரமுள்ள கொடிமரமும், கொடிமரத்தின் பக்கத்தில் பெரிய பலிபீடம் ஒன்றும், சோமதீர்த்தமும் உள்ளது. உடைய நங்கையார் அவதரித்த இடம் கோயிலின் வடக்குப் பகுதியில் உள்ளது. அவ்விடம் தற்போது ஒரு பஜனை மடமாக உள்ளது. மலைநாட்டுத் திருப்பதிகளுள் திருமதில் சுவர்களிலும் உள்சுவர்களிலும் திருமண் காப்பிட்டதை இந்தத் திருப்பதியில் மட்டுமே உள்ளதை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கண்டறிந்துள்ளார். வடகலை சம்பிரதாயத்திலும் இதனைக் காணலாம். மேலும் இத்திருப்பதியில் தீர்த்தம் வழங்குவதோடு திருத்துழாயும் சந்தனமும் வழங்குகின்றனர். இத்தலத்தில் உள்ள எம்பெருமானை நம்மாழ்வார் மட்டுமே மங்களாசாசனம் செய்துள்ளார். அதற்கானச் சான்று திருவாய்மொழியில் காணப்படுகின்றன. இத்தகைய சிறப்பு கொண்ட திருக்கோயிலின் சிறப்பைப் பேராசிரியர் சுப்புரெட்டியார் அழகாக எடுத்துரைத்துள்ளார். அபிஷேகம் இல்லாத மூலவர் வீற்றிருக்கின்ற இத்தலம் பஞ்சகவ்யத்தால் தூய்மை செய்வது சிறப்பிற்குரியது. இங்குத் திருமகளுக்குத் தனியாகச் சந்நிதி கிடையாது. லட்சுமி மூலவரின் நெஞ்சில் குடியமர்த்தப் பட்டுள்ளதாக ஐதீகம் கூறப்பட்டுள்ளது. திருவாழ்மார்பன் சப்தரிஷிகள் புடைசூழக் காட்சியளிக்கிறார். இக்காட்சி எங்கும் காணமுடியாத காட்சியாகும். பேராசிரியர் சுப்புரெட்டியார் தம் எழுத்தின் மூலம் படிப்பவர்கள் அனைவருக்கும் அவரவர்கள் இருக்கும்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இடத்திலே தம் மனக்கண்ணிலே இறைவனை வழிபட வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டுகிறார்.

**திருவாட்டாறு**

திருவனந்தபுரத்திற்கும் முற்பட்ட ஆலயம் என்பதால் இக்கோயிலுக்கு ஆதிஅனந்தசயனம் என்றும் சேரநாட்டில் அமைந்துள்ளதால் சேர ஸ்ரீரங்கம் என்றும் இத்தலத்தில் ஆறுகள் வட்டமாக ஓடுவதால் வட்டாறு என்றும் அழைக்கப்பட்டது. காலவோட்டத்தில் அவை மருவித் திருவாட்டாறு எனப்பட்டது. நாகர்கோவிலிலிருந்து சுமார் 30 கி.மீ. தொலைவிலும், திருவனந்தபுரத்திலிருந்து சுமார் 50 கி.மீ. தூரத்திலும் இத்தலம் அமைந்துள்ளது. மலைநாட்டுத் திவ்ய தேசமாகக் கருதப்படும் இத்தலமும் திருவண்பரிசாரமும் தமிழகத்தின் கன்னியாகுமரி மாவட்டத்தில் அமைந்துள்ளன. இருக்கும் இடத்திற்கேற்ப ஆராதனைகள் இன்றும் கேரள பாணியிலேயே நடைபெறுகின்றது. இத்தலத்தைப் பற்றி புறநானூற்றில் பின்வரும் வரிகளின் மூலம் அறியலாம்.

**கேள் இலோர்க்குக் கேள் ஆகுவன்**
**கழுமிய வென்வேல் வேளே,**
**வளநீர் வாட்டாற்று எழுனி யாதன்**
**கிணையேம், பெரும! (புறநானூறு, 396: 11 - 14)**

மேற்கண்ட அடிகளின் மூலம் வாட்டாற்று என்ற பெயருடைய ஊர் ஒன்று சோழநாட்டிலும், அதே பெயருடைய மற்றொரு ஊர் சேரநாட்டில் இருந்ததாகவும் மாங்குடிகிழார் குறிப்பிட்டுள்ளார். மிகுந்த வளமுடையது வாட்டாற்று எழினியாதனின் நாடு. அவன் ஊக்கம் அளிப்பவன், உறவினன் போன்றவன். அவனை நாடி வருபவர்களுக்கு அனைத்தையும் வழங்கக் கூடியவன். அத்தகைய சிறப்புமிக்க இடத்தில் அமைந்துள்ள திருத்தலம்தான் திருவாட்டாறு. திருவாட்டாறு மூலவர் ஆதிகேசவர். அனந்த பத்மநாப சுவாமிக்கு மூத்தவர் என்பதால் இவரது நாபியில் கமலமும் இல்லை, அதில் தோன்றிய பிரம்மனும் இல்லை. கேசவர் மேற்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் சயனம் கொண்டுள்ளார். பத்மநாபன் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் காணப்படுகின்றார். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வது போலச் சிலைகள் உள்ளன. பொதுவாகப் பெருமாள் சயன கோலத்தில் சேவை சாதிக்கும் ஆலயங்களில் பெருமாளின் திருவடி சேவிக்கும் பக்தர்களின் வலப்புறமும், ஆதிசேஷனும் திருமுடியும் இடப்புறமும் இருக்கும். திருவாட்டாறு மற்றும் திருக்கச்சியின் திருவெஃகாவில் அரிதுயில் கொண்டுள்ள சொன்ன வண்ணம் செய்த பெருமாள் ஆகிய இருவர் மட்டும் மாறுசயனமாக உள்ளனர். அதனால் இத்தலத்தில் பெருமாளின் இடது திருக்கரம் சேவை கிட்டுகின்றது. இத்தலத்தில் உள்ள ஆதிகேசவர் 22 அடி நீளம் 16108 சாளக்கிராமங்களால் ஆனத் திருமேனி, பெருமாளின் திருவடி அருகில் சிவலிங்கம் உள்ளது. அனந்த பத்மநாபரோ 18

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அடி நீளம் 1200 சாளக்கிராமங்களால் ஆனத் திருமேனி, சிவலிங்கம் பெருமாளின் திருமுகப்பதியில் உள்ளது. ஒத்தக்கல் மண்டபங்களும் பெருமாளின் அளவிற்கேற்ப மாறுபடுகின்றன. திருவாட்டாற்றில் ஒரு கொடி மரம் மட்டுமே உள்ளது. 55 அடி உயரத்தில் மலை மாடக்கோவில் அமைப்பில் அமைந்துள்ளது.

புராணத்தில் அனந்த சயனத்திற்குத் தென்கிழக்கே பொன்பிரளை என்ற தலத்தில் பிரம்மா ஒரு யாகம் நடத்தினார். பிரசன்னரான பெருமாள் அவர் முன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று வினவினார். பிரம்மாவும் பெருமாளே தாங்கள் இராமாவதாரத்தில் காகாசுரனுடைய கண்ணைக் கிளறிய காகாக்ஷசைலம் என்னும் மலையில் தவம் செய்யும் முனிவர்களைக் கேசி என்னும் அசுரன் துன்புறுத்துகின்றான். என்னுடைய கேசத்திலிருந்து அவன் தோன்றியவன். அவன் என்னிடம் சாகாவரம் பெற்றவன். மேலும் அவனது ரத்தம் ஒரு துளி கீழே சிந்தினாலும் அது தன்னைப் போல உருமாற வேண்டும் என்றும் வரம் பெற்றுள்ளான். தேவர்தான் அவனை வென்று முனிவர்களை அவன் கொடுமையிலிருந்துக் காப்பாற்ற வேண்டும் என விண்ணப்பித்தார். பெருமாள் அங்குச் சென்று அவனுடன் மல்யுத்தம் செய்யும் போது கேசியை கீழே தள்ளி அனந்தனை அழைத்து அசுரன் வெளியே வராதபடி அவனை வளைத்துக்கொள் என்று கூற, அனந்தனும் அவ்வாறே செய்தான். கேசன் மேலே வரமுடியாதபடி பெருமாள் அனந்தன் மேல் சயனித்துக் கொண்டார். இதைக்கண்ட கேசியின் பத்தினி ஆஸுரி என்பவள் கங்கையைத் துணைக்கு அழைத்தாள். கங்கைத் தாமிரபரணியுடன் சேர்ந்து பெருமாளைக் கீழே தள்ளி அசுரனை விடுவிக்க ஆவேசமாகப் பாய்ந்தாள். தன் பார்த்தவைக் காப்பாற்ற பூமாதேவி அந்த இடத்தை உடனே மேடாக்கி விட்டாள். ஒன்றும் செய்ய முடியாத நதிகள் தமது ஆணவத்திற்காக வருந்திப் பெருமாளை வணங்கி வட்டமிட்டு ஓடின. இன்றும் பரளியாறு, கோதையாறு என்ற பெயரில் இரு நதிகளும் பெருமாளை வட்டமாகச் சுற்றி ஓடிக்கொண்டிருக்கின்றன. எனவே இத்தலத்திற்குத் திருவாட்டாறு என்னும் பெயர் பெற்றது.

திருவாட்டாறு குறித்து புராணத்தில் மேலும் ஒரு செய்தி காணப்படுகின்றது. அவை என்னவெனில் பிரம்மா யாகம் செய்யும்போது மகாவிஷ்ணுவை மதிக்காது செய்ததால் சரஸ்வதி தேவி இவரது நாக்கைப் பிரளச் செய்ததால் யாகத்திலிருந்து கேசன் மற்றும் கேசி தோன்றினர். இருவரும் பிரம்ம தேவரைக் குறித்துக் கடும் தவம் செய்து சாகாவரம் பெற்றனர். இதில் கேசனுடன் பெருமாள் போர் செய்யும் போது அவனை மகேந்திர மலை மேல் வீசினார். பெருமாள் சங்கை முழங்க அனந்தன் அவனைச் சுற்றிக் கொண்டான். அவன் வெளியே வராதபடி இன்றளவும் அனந்தன் மேல் சயனம் செய்கின்றார். கேசி தன் தோழி கோதையுடன் ஆறாக ஓடி வந்து தன் சகோதரனை விடுவிக்க முயலும்போது பூமாதேவி அந்த இடத்தை உயர்வாக்கினாள். இரண்டு நதிகளும் சாபம் பெற்று பின் பெருமாளின் அருளினால் ஆணவம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நீங்கி, சாப விமோசனம் பெற்று இன்றும் வட்டமாகப் பெருமாளைச் சுற்றிக்கொண்டு ஓடுகின்றன. இதை (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பாடல் 3730, ப.1814) பாடலின் மூலம் அறியமுடிகின்றது. அசுரர்களை அழித்துச் சகல சிறப்புகளையும் பெற்ற பெருமாள் சேர்ந்த இடம் திருவாட்டாறு ஆகும். இத்தலத்தைக் குறித்துப் பேராசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார். இக்கோயில் நாகர்கோவிலிலிருந்து பதினாறு கல் தொலைவில் உள்ளது. நாகர்கோவிலிலிருந்து பேருந்தில் செல்லும்போது இருமறுங்கிலும் உள்ள சோலைகள், தோட்டங்கள், நெல்வயல்கள், ஆறுகள் அவற்றினின்றும் பிரிந்து சென்ற நிலங்களை வளமாக்கும் கால்வாய்களையும் கண்டு அனுபவித்ததாகப் பேராசிரியர் சுப்புரெட்டியார் தம் நூலில் பதிவு செய்துள்ளார். பேருந்தினின்று இறங்கி கிட்டத்தட்ட இரண்டு பர்லாங்கு தூரம் நடந்தால் இத்திருக்கோயிலை அடையலாம். ஆறானது கால்வாய்களாக ஊரையும் கோயிலையும் சூழ்ந்திருப்பதால் திருவட்டாறு - திருவாட்டாறு என்று பெயர் ஏற்பட்டதாகப் பேராசிரியர் குறிப்பிடுகின்றார். இக்கோயில் அமைந்துள்ள இடமோ மிக உயரமானது. ஆனால் கோயிலோ சிறியது. பெரிய மதில் சுவர்களால் சூழப்பட்ட பெரும் பரபரப்பான இடத்தில் அமைந்துள்ளது. மழைக்காலங்களில் பக்தர்கள் எவ்வித சிரமமும் இல்லாமல் கோவிலை வலம் வர வேண்டும் என்பதற்காக மதிலுக்கு உட்புறமாகக் கோவிலைச் சுற்றி கல் பரப்பப்பெற்ற நடைபாதை அமைக்கப் பெற்று அதன் மீது கூடாரம் போன்று வேயப் பெற்றுள்ளது. நடைபாதையின் இருபுறங்களிலும் ஆயிரக்கணக்கான பித்தளை விளக்குகள் அமைக்கப்பெற்றுள்ளன. நடைபாதையின் கூரையிலும் வண்ண விளக்குகள் பல்வேறு வடிவங்களில் தொங்கவிடப்பட்டுள்ளன. திருவிழாக்காலங்களில் இவ்விளக்குகள் யாவும் எரியவிட பெற்று கண்கவர் காட்சிகளாகக் காணப்படுகின்றன.

திருவனந்தபுரம் அரசர்களின் கட்டளைக்குக் கீழ் உள்ள கோயில்கள் எப்படி இருக்கும் என்பதற்கு இக்கோயில் ஓர் உதாரணம் என்கிறார் பேராசிரியர். இத்திருக்கோயிலைக் குறித்து நம்மாழ்வார் திருவாட்டாறு என்ற திருப்பதியை பாடியுள்ள செய்திகளையும் சுப்புரெட்டியார் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை - தன்னோடும்**

**திகழ்கின்ற திருமாலார் சேர்விடம் தண்வாட்டாறு (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பா. 3730)**

அலர் மேல் மங்கை உறை மார்பன் வாழும் இடம் திருவாட்டாறு என்பது ஆழ்வாருடைய குறிப்பு. சாதாரணமாக உலக வழக்கில் எல்லோரும் திருவாளர் என்று சொல்லப் பெறுகின்றனரே, அப்படி இங்குத் திருமங்கை தன்னோடு திகழ்கையினாலே, அதாவது தன் மார்பில் இலக்குமியுடன் விளங்குகின்றவனாதலின் உண்மையிலேயே திருவாட்டாற்றான் என்பது திருவாளர் என்ற அடைமொழிக்குப் பாத்திரனாகின்றான். திருவாளர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருவாட்டாற்றான்மீது நம்மாழ்வார் மட்டும் ஒரு பதிகம் பாடியுள்ளார். வேறு ஆழ்வார்கள் யாரும் பாடவில்லை. திருவாட்டாற்றான் மீதுள்ள திருவாய்மொழி மிகமிக அற்புதமானது பன்முறை படித்துப் படித்து மனம் உருக கூடிய அளவில் உள்ளது. சீவான்மா வேட்டையில் சதா ஈடுபட்டுள்ள எம்பெருமான் திருவாரூரில் வந்து பாடி வீடு அமைத்துக் கொண்டுத் தங்குகின்றான். ஆழ்வாரைத் திருநாட்டில் கொண்டுபோய் அனுபவிக்க வேண்டும் என்று பாரித்து நிற்கின்றான்.

**மண் உலகில் வளம் மிக்க வாட்டாற்றான் வந்து இன்று**
**விண் உலகம் தருவானாய் விரைகின்றான், விதிவகையே (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பா. 3724)**

என்று ஆழ்வாரின் பாசுரத்தைப் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். வாட்டாற்று எம்பெருமான் மீதுள்ள திருவாய்மொழி ஆழ்வாரின் இந்த அனுபவ நிலையையே பேசுகின்றது. **அருள்பெறுவார் அடியார் - தம் அடியனேற்கு ஆழியான் (மேலது, பாடல் 3722, ப. 1812)** என்று இந்த அனுபவத்தோடு உணர்ச்சி ததும்ப பேராசிரியர் கூறுகின்றார். எம்பெருமானைச் சேவிக்கும் பொழுது நம்மாழ்வாரின் உணர்வு நம்மையும் பற்றுகின்றது. அத்தகையப் பற்றை பேராசிரியரும் நமக்கு உணர்த்துகின்றார்.

**திருவனந்தபுரம்**

நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரத்தை நோக்கிப் பேருந்தில் செல்லும் கால் இருமருங்கிலும் அடர்ந்த தோப்புக்கள், ஓங்கி உயர்ந்த மலைக் குன்றுகள், மணல்மேடுகள், பூங்கொத்துகள், சோலைகள், குறுக்கும் நெடுக்குமாக வலைப்பின்னல் போன்று பாய்ந்து செல்லும் சிற்றாறுகள் போன்ற கால்வாய்களைக் காணலாம். நாகர்கோவிலிலிருந்து சுமார் 50 கல் தொலைவில் உள்ள திருவனந்தபுரம் வரையிலும் இதே சூழல்தான் காணப்படுகின்றன. சில இடங்களில் கதிரவன் ஒளி உட்புகாத சூழலையும் காணலாம். இவற்றையெல்லாம் கடந்தால் அழகிய திருவனந்தபுரத்தை அடையலாம். திருவனந்தபுரம் ஓர் அழகிய சோலை சூழ்ந்த இடத்தில் அமைந்துள்ளது. இக்கோயில் குறித்து **குருத்து சேர் செருந்தி புன்னை, மன்று அலர் பொழில் அனந்தபுர நகர் (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பா. 3679, ப. 1794)** என்று திருவாய்மொழியில் நம்மாழ்வார் சிறப்பிக்கின்றார். பேராசிரியர் இப்பதியைக் குறித்து மேலும் கூறும்பொழுது **மடைத்தலை வாளை பாயும் வயல் அணி அனந்தபுரம் (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பா. 3684, ப. 1796) எழில் அணி அனந்தபுரம் (நாலாயிர திவ்யப்பிரபந்தம், பா. 3685, ப. 1796)** என்றும் குறிப்பிடுகின்றார். இவ்வாலயம் செல்வோர் இத்தன்மையை நேரில் கண்டு களிக்கலாம் என்கிறார் பேராசிரியர். இந்த அழகியத் திருப்பதியை நம்மாழ்வார் மட்டுமே மங்களாசாசனம் செய்துள்ளார். அதை மனதில் சிந்தித்த வண்ணம் பேராசிரியர் திருவனந்தபுரத்தை அடைந்தார். திருவனந்தபுரத்தை அடையும் பொழுது நம்மாழ்வார்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கூறியபடியே குன்று நேர் மாடங்களையுடைய திருப்பதி என்பதை பேராசிரியரும் உணர்ந்துள்ளார். இன்றும் தோப்புகளும் சோலைகளும் குறையாமல் இயற்கைச் சூழலையும் செயற்கை சூழ்நிலையும் ஒன்றோடு ஒன்று அணி செய்யும் வகையில் திருத்தலம் காணப்படுகின்றது. பேருந்து ஊரினுள் நுழையும்போது முதற் பாசுரத்தை நினைவு கூறியுள்ளார். அவை

**கெடும்இடர் ஆயஎல்லாம்**

**கேசவா! என்ன; நாளும்**

**...தடம்உடை வயல் அனந்த**

**புரநகர் புகுதும் இன்றே... (மலைநாட்டுத் திருப்பதிகள், ப. 35)**

என பாசுரத்தை வாய்விட்டு சொல்லிக்கொண்டே பேராசிரியர் நகரினுள் நுழைந்துள்ளார். ஆதிசேடன் மீது திருக்கண் வளரும் எம்பெருமான் அனந்தசயனன் விரும்பி எழுந்தருளியிருக்கும் நகர் அனந்தபுரம் இவ்விடத்தில் கேசவா என்று மூன்று எழுத்துக்களைச் சொன்ன அளவிலேயே வருகின்ற துன்பம் அனைத்தும் கெட்டு ஒழியும். இத்திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை அடையாளம் காட்டி அவனது திருநாமத்தை உச்சரிப்பதால் உண்டாகும் பலனைப் பற்றியும் பேராசிரியர் கூறுகின்றார். அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் கருடனை வாகனமாகக் கொண்டவன். எண்ணற்ற திருப்பெயர்களை உடையவன். அதில்

**பேரும் ஓர் ஆயிரத்துள்**

**ஒன்று நீர் பேசுமினே (மலை நாட்டுத் திருப்பதிகள், ப. 38)**

என்றும்

**மாயன் நாமம்**

**ஒன்றுவோர் ஆயிரமாம்**

**உள்ளுவார்க்கு உம்பர் ஊரே (மலை நாட்டுத் திருப்பதிகள், ப. 39)**

என்று குறிப்பிடுகின்றார். ஒரு திருநாமத்தை உரைத்தாலும் அஃது ஆயிரமாகச் செயல் புரியும் பெருமையுடையது என்பதை பேராசிரியரும் உணர்ந்து குறிப்பிட்டுள்ளார். திருவனந்தபுரம் என்ற திவ்ய தேசம் சாதாரணமானதன்று. என்றும் நறுமணம் கமழும் சோலையுள் அமைந்துள்ளது. அந்த நறுமணம் புறம்பு போகாதபடி மதில் இட்டாற் போன்று கடலால் சூழப்பட்டுள்ளது. அதனால் நறுமணம் வெளிச் செல்லாது அங்கேயே விஞ்சி நிற்கின்றது. இப்படிப்பட்ட சோலைகள் இந்நகருக்கு அணி செய்கின்றன.

**பெரியநீர் வேலை சூழ்ந்து**

**வாசமே கமலும் சோலை**

**வயலணி அனந்தபுரம் (மலைநாட்டுத் திருப்பதிகள், ப. 40)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பது ஆழ்வாரின் திருவாக்கு அடியார்களைக் காக்கும் பொருட்டு எம்பெருமான் பரமபதத்தைத் துறந்து இந்நகரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு எழுந்தருளிய செய்தியை விளக்குகின்றார் பேராசிரியர் நா. சுப்புரெட்டியார். "அயர்வறும் அமரர்களும்" வந்து அடிமை செய்யும் இடமாதலின் திருநாட்டைக் காட்டிலும் ஏற்றம் பெற்றது இக்கோயில். திருவாட்டாறு திருக்கோயில் போலவே சற்று உயரமான இடத்தில் அமைந்துள்ளது. பல படிகள் ஏறிதான் கோயிலுள் நுழைய வேண்டும். கை, கால்களைத் தூய்மை செய்வதற்கென்று கோயிலுக்கு அருகில் சன்னிதித் தெருவின் ஒரு புறமாகத் திருக்குளம் ஒன்று அமைந்துள்ளது. கோயிலின் நாற்புறமும் தடிமனான கோட்டைச் சுவர்கள் சூழ்ந்துள்ளன. இக்கோயிலுக்கு அருகிலேயே திருவாங்கூர் அரசரின் அரண்மனையும் உள்ளது. அரண்மனையிலிருந்து திருக்கோயிலுக்கென்று தனிச் சுரங்க வழி ஒன்றும் உண்டு என்பதையும் பேராசிரியர் பதிவு செய்துள்ளார். மேலும் கோபுரத்திலும் மண்டபங்களிலும் தூண்களிலும் பல்வேறு சிற்பங்களைக் காணலாம். இவையாவும் தென்னிந்தியச் சிற்பங்களே.

நுழைவாயில் உள்ள ராஜகோபுரம் சற்று ஏறக்குறைய 100 அடி உயரம் கொண்டது. ஏழு நிலைகள் காணப்படுகின்றது. அவை காண்பவர்களுக்கு இன்றும் கம்பீரமாக நின்று அனைவரையும் ஈர்க்கும் தன்மைக் கொண்டுள்ளது. கேரள நாட்டிலேயே இத்திருப்பதியின் திருக்கோயிலில் மட்டுமே தமிழக சிற்பங்களைக் காணலாம். இக்கோபுரத்தில் அடிக்கல் நாட்டு விழா கி.பி.1566இல் நடைபெற்றது. கி.பி.1604இல் கோபுர திருப்பணி நிறைவுற்றது. கோயிலினுள் பொன்வேய்ந்த கொடிமரம் கி.பி.1565இல் நிறுவப் பெற்றதாகப் பேராசிரியர் தன் கள ஆய்வின் மூலம் கண்டறிந்தது சிறப்பிற்குரியது. திருவாட்டாறு கோயிலில் உள்ளது போல, கோயிலைச் சுற்றிய பிரகாரத்தில் திருச்சுற்றில் ஆயிரக்கணக்கான பித்தளை விளக்குகள் பொருத்தப்பட்டுள்ளன. அவை மலைநாட்டுத் திருப்பதிகளில் கேரளாவில் பெரும்பாலும் திருவிழாக் காலங்களில் இவை ஏற்றப் பெற்று விழாவிற்கு மேலும் பொலிவு சேர்க்கப்படும்.
கோயிலின் உள்சுற்றில் கண்ணன் (கிருட்டிணன்), ஐயப்பன், நரசிம்மன், சிவபெருமான், ஆனைமுகன், இலக்குவனுடன் சேர்ந்த சீதாராமன் என இவர்களுக்குத் தனித்தனி சன்னிதிகள் உள்ளன. இந்த மூர்த்திகளை எல்லாம் வணங்கிக்கொண்டு இத்திருக்கோயிலை வலம் வந்தால் அங்குக் குலசேகர மண்டபம், ஆயிரங்கால் மண்டபம் என அனைத்து மண்டபங்களிலும் கண்ணைக் கவரும் கருங்கல்லால் ஆன சிற்பங்களைக் காணலாம். இவையாவும் பதினெட்டாவது நூற்றாண்டில் நிறுவப் பெற்றவையாகும். பலிபீட மண்டபத்திலும் இந்து சமயத்தினர் வழிபடும் பல்வேறு கடவுளர்களின் அழகிய சிலைகளும் இங்குக் காணப்படுகின்றன. கண்ணன் சந்நிதிக்கு முன்னுள்ள நவக்கிரக மண்டபத்தில் உள்ள மேல் கூரையில் ஒன்பது கோள்கள் பொறிக்கப்பெற்றுள்ளன. மேலும் கருவறையின் முன்புறமுள்ள அர்த்தமண்டபத்தில் அடித்தள கருங்கல் 20 அடி சதுரத்தைக் கொண்டது. இரண்டரை அடி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கனம் கொண்ட கல். இது கி.பி.1731 இல் நிறுவப்பெற்றது. இந்த மண்டபம் ஒற்றைக்கல் மண்டபம் என்றே வழங்கப்படுகின்றது. திருவாட்டாற்றுத் திருக்கோயிலும் இத்தகைய அடித்தளக் கல்லை உடைய மண்டபத்தைப் பேராசிரியரும் கண்டறிந்துள்ளார். கிட்டத்தட்ட இரு கோவில்களும் ஒரே மாதிரி அமைப்பினைக் கொண்டவையாகும். சிற்பங்கள் முதலியவற்றை நோக்க இவ்விரு கோவிலுள் திருவாட்டாறு கோவில் பழமை உடையது என்பதை கண்டறிந்துள்ளார். அக்கோயிலில் வழிபாடு பெரும்பாலும் கேரள நாட்டு பாணியே நடைபெறுகின்றது. திருவனந்தபுரத்து திருக்கோவில் தமிழ்ப் பண்பாடும் கேரள பண்பாடும் கலந்து மிளிர்கின்றது. இங்கு ஒற்றைக்கல் மண்டபத்தில் இருந்துகொண்டு மூன்று வாயில்கள் மூலமாகவும் தெற்கு நோக்கிச் சாய்ந்த திருவபிடேகமும் வடக்கு நோக்கி நீட்டிய திருவடிகளையும் கொண்டு கிழக்கு நோக்கிய நிலையில் அனந்தன் மீது பள்ளி கொண்டுள்ள அனந்தபதுமநாபனை நாமும் சென்று கண்ணாரக் கண்டு மகிழும் அளவிற்கு பேராசிரியரும் தம் நூலில் பதிவு செய்துள்ளார்.

**முடிவுரை**

வைணவ திவ்ய தேசங்கள் அனைத்தும் திருமால் கோயில் கொண்டிருக்கும் திருத்தலங்கள் ஆகும். இவை யாவும் பரம்பொருள் நிலையில் வைணவ தத்துவத்தை விளக்குபவன. அவ்வகையில் வைணவ தத்துவத்தை முழுமையாக (சித்து, அசித்து, ஈசுவரன்) மலைநாட்டுத் திருப்பதிகள் என்னும் நூலில் பேராசிரியர் விளக்குகின்றார். அவர் குறிப்பிட்டத் திருத்தலங்களில் திருவண்பரிசாரம், திருவாட்டாறு, திருவனந்தபுரம் மூன்றும் கேரளாவைச் சேர்ந்தவையாகும். இம்மூன்று கோவில்களின் வழிபாடும் கேரளாவின் பாணியிலேயே நடைபெறுகின்றது. வைணவ நெறிமுறைகளின் சிறப்புகளை விளக்குவதோடு கோயில்களின் அமைப்பு, வழிபாடுகள், பக்திநிலை, இயற்கைச்சூழல், திருவிழா, சடங்குகள், நம்பிக்கைகள் போன்றவற்றை தம் நூலில் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார். திருத்தலப் பயணம் செய்வோர் மட்டுமில்லாமல் அதை பற்றி படிப்பவருக்கும் பக்தியை ஏற்படுத்தும் விதத்தில் இந்நூலினைப் படைத்துள்ளார்.

**குறிப்பு நூல்கள்**

[1] முனைவர் தா. அனிதா (2019 சனவரி 3). “நம்மாழ்வார் பாடிய திருவாழ்மார்பன்.” கட்டுரை, *இந்து தமிழ்*. பார்த்த நாள் 5, சனவரி 2019.

[2] *திருவண்பரிசாரம்*. ta.wikipedia.org/ பார்த்த நாள் 5, சனவரி 2022.

[3] முனைவர் இரா. வ. கமலக்கண்ணன் (உ.ஆ.). *நாலாயிர திவ்யப்பிரபந்தம் மூலமும் தெளிவுரையும்- நான்காம் தொகுதி*. வர்த்தமானன் பதிப்பகம், சென்னை – 600017.

[4] முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன். *புறநானூறு (மூலமும் உரையும்)*. நியூ செஞ்சுரி புக்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஹவுஸ் (பி)லிட், சென்னை- 600 098, மு.ப. ஏப்ரல் 2004.

[5] ந. சுப்பு ரெட்டியார். *மலைநாட்டுத் திருப்பதிகள்.* பாரி நிலையம், சென்னை – 600108.

[6] “*வரலாறு பேசும் தமிழகத்துத் திருக்கோயில்கள்.” திருக்கோயில்கள் வளர்த்த தெய்வத்தமிழ்.* பதினோறாறவது அனைத்துலகத் தமிழ் ஆய்வு மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்பு, தமிழ் ஐயா வெளியீட்டகம், கண்ணகி கலைவேந்தன் (ப.தி.), திருவையாறு.

[7] *108 வைணவத் திருத்தலங்கள்.* ta.wikipedia.org/ பார்த்த நாள் 5, சனவரி 2022.

[8] டாக்டர். வைணவச் சுடராழி ஆ.எதிராஜன், *108 வைணவ திவ்யதேச ஸ்தல வரலாறு.* ஸ்ரீ வைணவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பு, காரைக்குடி.

**References**

[1] Dr. Tha. Anita (January 3, 2019) “Nammazhvar Padiya Thiruvazhmarpan.” Article, *Hindu Tamil*, Accessed 5, January 2019.

[2] *Thiruvanparisaaram*. ta.wikipedia.org/ Accessed 5, January 2022.

[3] Dr. Ira. W. Kamalakkannan (Text). *Through the Four Thousand Divyaprabandham and Clarification, Volume IV.* Vardhamanan Publishing House, Chennai – 600 017.

[4] Dr. K.V. Balasubramanian. *Purananuru (Source and text).*New Century Book House (P) Ltd, Chennai – 600098, April 2004.

[5] Na. Subbu Reddiar. *Malainattu Thirupathigal.* Parry Station, Chennai – 600108.

[6] “Varalaru Pesum Tamilaga Thiryukovilgal.” *Thirukovilgal Valartha Deiva Tamil*, Proceedings of the Eleventh International Tamil Studies Conference Symposium, Tamil Aiya Publishing House, Kannagi Kalaivendan (Editor), Thiruvaiyar.

[7] *108 Vaishnava Thiruthalangal*. ta.wikipedia.org/ Accessed 5, January 2022.

[8] Dr. Vainava Sudaraazhi A. Ethirajan. *108 Vaishnava Divyadesa Sthala Varalaru*. Sri Vaishnava Siddhanta Nurupathippuk Kazhagam Edition, Karaikudi.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# ந. சுப்பு ரெட்டியாரின் பார்வையில் பாவேந்தரின் பாட்டுத்திறன்

## Pavendar's Singing Ability in the View of N. Subbu Reddiar

**முனைவர் இல. பூர்ணிமா ஜோதி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சோனா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சேலம், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. L. Poornima Jothi,** Assistant Professor of Tamil, Sona College of Arts and Science, Salem, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-4705-7226**
**DOI: 10.5281/zenodo.7275388**

### Abstract

*This research paper is based on the ideas contained in the book Pavender's (Bharathidasan) Poetry Review ("Pavendar Pattuthiran Thiranaivu") from Professor N. Subbu Reddiar's point of view. Emotions take precedence in every human being. They play an important role in writing poetry. According to the Pavendar, there is an in-depth meaning in the poem. Emotions can vary depending on the formation of words. Social reform movements will stir our emotions; Pavendar's poems have such themes. The poet conveys the point in the poem that he is trying to convey a strong theme in his poems. It has been investigated in this research. Professor N. Subbu Reddiar had done a lucid study on the poetry of Pavendar and made it easy for understanding to his readers. Narration is one of the aesthetic interpretations of natural objects. These comments are examined in two ways. Allegorical skill is the first in poetry. A simile is another way of comparing one thing to another. Subbu Reddiar's perspective on Pavendar's vision is detailed keenly. Something unknown to the five senses is imagination. The way of explaining imagination is explained in three ways namely creative imagination, natural imagination, and conceptual imagination. Subbu Reddiar is said to have explained the images from various angles. Professor has found the use of supreme poetry in the poems of Pavendar Bharathidasan. There are nine elements in Tamil poetry. Yapu is written in the form of Paa. They are as Venba, Aasiriyapaa, and Kalipaa. The research paper aims to explore the above-mentioned qualities of Pavender's poetry as evinced by Subbu Reddiar.*

**Keywords:** Pavendar Bharathidasan, Singing Ability, N. Subbu Reddiar.

### ஆய்வுச் சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பார்வையில் "பாவேந்தர் பாட்டுத்திறன் திறனாய்வு" எனும் நூலில் இடம் பெற்றுள்ள கருத்துக்களின் அடிப்படையில் இந்த ஆய்வுக் கட்டுரை அமைந்துள்ளது. ஒவ்வொரு மனிதனுக்கும் உணர்ச்சி முதன்மை பெறுகிறது. கவிதை எழுதுவதற்கு உணர்ச்சிகள் முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கின்றது.உணர்ச்சிகளுக்கேற்ப கவிதையில் ஓசைநயம் இடம்பெறும். சொற்களின் உருவாக்கத்தினால் உணர்ச்சிகள் வேறுபட்டு அமையும். காதலில் உணர்ச்சி நிலை மாறுபடுகிறது. சமூகச் சீர்திருத்தத்தினாலும் தொழிலாளர் இயக்கத்தினாலும் உணர்ச்சிகள் அமையும். படைப்பாளர் தான் சொல்ல வந்த கருத்தினைக் குறிப்பால் உணர்த்துவார். அதனையே ஆய்வுக் கருதுகோளாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளன. இயற்கைப் பொருட்களை அழகோடு விளக்குவது வருணனையாகும்.*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*இந்த வருணனைகள் இரண்டு விதத்தில் ஆராயப்படுகின்றன. உவமைத் திறன் கவிதைகளில் முதலிடம் வகிக்கிறது. ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுக் கூறும் முறையே உவமையாகும். பேராசிரியர் சுப்புரெட்டியார் பார்வையில் உவமைகள் எடுத்தாண்ட விதம் விரிவாக கூறப்பட்டுள்ளது. ஐம்புலன்களால் அறியப்படாத ஒன்று கற்பனை. படைப்புக் கற்பனை, இயைபுத் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று மூவகையாகக் கற்பனையினை விளக்கிச் செல்லும் பாங்கு விளக்கிக் காட்டப்படுகிறது. ஒரு பொருளின் மேல் படிந்து இருப்பவை படிமங்கள் ஆகும். படிமங்களை பலவகையான கோணங்களில் சுப்புரெட்டியார் அவர்கள் பாகுபாடு செய்துள்ளமையைக் கூறப்பட்டுள்ளன. சுவனத்தின் என்பது மெய்ப்பாடுகளில் ஒன்று. அந்த வகையான ஒன்பது சுவைகளும் ஆராயப்பட்டு வந்துள்ளன. யாப்பு என்பது பாக்களின் வடிவில் எழுதப்படும் ஒன்றாகும். அவையாவன வெண்பா ஆசிரியப்பா கலிப்பா கோணத்தில் சிந்திக்கப்பட்டுள்ளன. மேற்சொல்லப்பட்ட உணர்ச்சி, வருணனை, உவமை, கற்பனை, படிமங்கள், சுவை, யாப்பு ஆகியவற்றினை ஆராய்வதே ஆய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச் சொற்கள்:** பாவேந்தர் பாரதிதாசன், பாடும் திறன், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

## முன்னுரை

கவிதையின் உயிர் போன்ற பகுதி அதில் பொதிந்துள்ள உணர்ச்சி. உணர்ச்சியில்லாத கவிதை வெற்றெனத் தொடுக்கப் பெற்ற சொற்கோவை. உடலும் உள்ளமும் நல்ல நிலையில் உறவு கொண்டு இருந்தால் தான் நல்ல உணர்ச்சிகள் தோன்றும். நல்ல உணர்ச்சிகளே கவிதையைப் படிப்பதற்குத் துணை செய்கின்றது. கவிதையின் தத்துவத்தில், பாட்டுத் திறனில், கற்பனை, சொல்வளம், யாப்பு முறை, உவமைகள், படிமங்கள், சுவைகள், கவிதை கூறும் உண்மைகள் போன்ற பொருள்கள் இலக்கிய உத்திகளில் அடங்குகின்றது என்பது ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்டவை. ஒரு பொருளை ஐம்புலன்களால் அனுபவிக்க முடியாத பொழுது அந்த பொருளை நினைவிற்குக் கொண்டு வந்து அனுபவத்தை வழங்குவது கற்பனையே. கற்போரின் மனதில் விரிந்த பார்வையை செலுத்தும் திறன் உடையது. கவிதைகளின் அனைத்துப் பண்பிற்கும் அடிநிலமாக இருக்கும் திறனுடையது. கவிஞன் கற்பனை செய்வது பகற்கனவு காண்பதைப் போன்று அமையும். கனவு காண்பவர்கள் உள்ளதை உள்ளவாறு கனவு காண்பதில்லை. நடந்த நிகழ்ச்சிகளின் மீது கற்பனையைப் பயன்படுத்துகின்றனர். கற்பனையைப் பலவாறாகப் பாகுபாடு செய்து காட்டுகின்றனர். கற்பனையை படைப்புக் கற்பனை, இடைமுகம் கற்பனை, கருத்து விளக்கக்கற்பனை என்ற மூவகை நிலைகளிலும் அமைகின்றது. இயற்கைப் பொருள்கள் அனைத்தும் அழகு கொழித்து

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

நிற்கும் ஆண்டவனின் படைப்பில் அற்புதப் படைப்புகளில் வருணனைத் திறன் மிகுந்திருக்கும். பாவேந்தர் பாடல்களில் இரண்டு வகையான வருணனைகள் இடம்பெற்றிருக்கின்றது. அதில் ஒன்று போய்க்கொண்டே காட்சிகளை வருணிப்பது, மற்றொன்று நின்ற நிலையில் வருணிப்பது என்பதாகும்.

கவிதை எழுதுவதற்கு சொல் வளம் முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. கவிதைகளில் யாப்பு முறையைப் பயன்படுத்தி வருகின்றனர். வரையறுக்கப்பட்ட ஒலிநயமே யாப்பாகும். முறைகளில் அமைந்த பாடல்களே வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆகியனவாகும். இடைக்காலத்தில் பாக்களுக்கேற்ப துறை தாழிசை விருத்தம் என்ற பாவினங்கள் தோன்றி வளர்ச்சி அடைந்துள்ளன. மனதில் படிந்திருக்கின்ற கருத்தினை வெளிப்படுத்துவதே படிமங்கள். படிமங்களை கட்புலப் படிமங்கள், செவிப்புலப் படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள், நாற்றப்புலப் படிமங்கள், ஊறு அல்லது தொடுபுலப் படிமங்கள், இயக்க நிலைப் படிமங்கள், மரபுநிலைப் படிமங்கள் என்று பலவகைகளில் காணமுடிகின்றது. ஐம்பெருங்பூதங்களால் ஆனதே இயற்கை. அறிவும் உணர்வும் இணைந்த மனித வாழ்வில் இயற்கையோடு அறிந்து கூறுபவன் அறிஞனாகவும், உணர்ந்து கூறுபவன் கவிஞராகவும் திகழ்கின்றான். காதலையும் வீரத்தையும் எடுத்துக்காட்டும் இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் ஆகும். சங்க இலக்கியத்தில் உள்ள பாடல்கள் அனைத்தும் வாழ்வியல் உண்மைகளை எடுத்துரைக்கும் களஞ்சியமாகத் திகழ்கின்றது. சங்க இலக்கியப் பாடல்களுக்கு உரையாசிரியர்கள் சிறந்த உரை எழுதியுள்ளனர். உரையாசிரியர்களின் உரையானது இந்த காலத்தில் வாழும் மக்களுக்கு புரியும் வண்ணம் அமைந்திருக்கின்றது. பாவேந்தர் பாடல்களில் சங்க இலக்கியங்களில் ஒன்றான குறுந்தொகைப் பாடல்கள் இடம்பெறும் பாங்கு சிறப்பிற்கு உரிய ஒன்றாகும். இலக்கியப் பாடல்களுக்கு அடுத்த நிலையில் காதல் பாடல்களைப் பாடியவர் பாவேந்தர் பாரதிதாசன். சுவைக்கு ஏற்றவாறு காதல் பாடல்களை அமைப்பதில் பாவேந்தருக்கு நிகரானவர் பாவேந்தரே என்ற சிறப்பிற்கு உரியவர். இவருடைய பாடல்களில் சமூகத்தில் எல்லா மட்டங்களில் இருப்பவர்களும் இடம்பெற்று சிறப்பு அடைகின்றனர்.

அன்றாட வாழ்வில் நடக்கும் நிகழ்வுகளின் தொகுப்பே இலக்கியம். எழுதப்பட்ட படைப்புகளில் தொகுப்பாக இலக்கியம் அமைந்துள்ளது. மனிதனுடைய வாழ்க்கையை எடுத்துக் காட்டுவன இலக்கியங்கள். இலக்கியங்களில் கூறப்படாத கருத்துகள் இல்லை. படைப்பாளரின் படைப்புக்கேற்றவாறு உத்திகளை பயன்படுத்துகின்றனர். அந்த வகையில் உணர்ச்சி முதலிடம் பெறுகின்றது. கவிதையின் உயிர் போன்ற பகுதி உணர்ச்சி ஆகும். உணர்ச்சி இல்லாத கவிதைகள் அனைத்தும் வெறும் உயிர் போன்றது. உடலும் உள்ளமும் நல்ல நிலையில் இருந்தால் உணர்ச்சிகள் சிறந்து விளங்குகின்றது. இலக்கிய உத்திகளில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உணர்ச்சித் திறன், வருணனைத் திறன், உவமைத் திறன், கற்பனைத் திறன், படிமத் திறன், சுவைத்திறன், யாப்புத்திறன் ஆகியவைகள் அடங்குகின்றது.

**உணர்ச்சித் திறன்**

மனிதனால் உணரப்படுவது உணர்ச்சி. மனிதனுக்கு ஆண்டவனால் வழங்கப்பட்ட அறிவைக் கொண்டே உணர்ச்சிகள் மேலோங்கி நிற்கிறது. கவிதை எழுதுவதற்கு உணர்ச்சிகள் அவசியமானதொன்று. **மனிதனிடத்துக் காணப்பெறும் அறிவு, உணர்ச்சி என்ற இரண்டனுள்ளும் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே கவிதை பிறக்கிறது (இலக்கியக்கலை, ப. 286).** என்று அ.ச.ஞானசம்பந்தன் கூறியுள்ளார். **கவிதையில் உணர்ச்சிக்கேற்ப ஓசை நயம் முதன்மை பெறுகின்றது. கவிதையின் தலையாய உணர்ச்சி எதுவாக உள்ளதோ அதற்கேற்ப ஓசையும் அமைய வேண்டும் (இலக்கியக்கலை, ப. 202).** உணர்ச்சியின் வெளிப்பாடாக சொல்வளம் திகழ்கின்றது. சொற்களின் கலப்பினால் உணர்ச்சிகள் வெளிப்படுகின்றது.

**சொற்கள் ஒன்றோடொன்று காதல் மணம் புரிந்து கலந்து வாழும் காட்சியும் சொல்வளத்தில் அடங்கும். (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 63).** சஞ்சீவி பர்வதத்தின் சாரல் எனும் காவியத்தில் காதலர்களின் நிலை கூறப்படுகிறது. 'கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால் மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர் கடுகாம்' என்று பாரதிதாசன் கூறிய கருத்தினைச் சுப்புரெட்டியார் *பாவேந்தர் பாட்டுத் திறன்* நூலில் கூறியுள்ளார். இந்தக் கவிதையின் மூலம் காதலின் உணர்ச்சி நிலை வெளிப்படுகிறது.

**சாதி மத பேதங்கள் மூடப் பழக்கங்கள்**
**தாங்கி நடைபெற்று வரும் சண்டை யுலகிதனை**
**ஊதையினில் துரும்பு போல் அலைக்கழிப்போம் (பாரதிதாசன் கவிதைகள், ப. 121)**

இந்த கவிதையின் மூலம் சமூக சீர்திருத்தத்தையும் தொழிலாளர் இயக்கத்தையும் உணர்ச்சி வெளிப்பாட்டோடு காண முடிகின்றது.

**அவளின் அழகு !**
**வஞ்சிக் கொடி போல இடை**
**அஞ்சத்தகு மாறுளது**
**நம்புக்கிணையோ (பாவேந்தரின் பாட்டுத்திறன், பக். 68-68).**

இதிலிருந்து பெண்ணின் அழகினை உணர்ச்சி வெளிப்பாடாகத் திகழும் நிலையினை உணர முடிகின்றது.

**வருணனைத்திறன்**

இயற்கைப் பொருள்கள் அனைத்தும் அழகோடு விளங்குவது ஆண்டவனின் அற்புதம் படைப்புகளாகும். வருணனை என்பது படிக்கின்றவருக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

"பாவேந்தரின் பாடல்களில் இரண்டு வகையான வருணனைகள் காண முடிகின்றது. ஒன்று போய்க்கொண்டே காட்சிகளை வருணிப்பது, மற்றொன்று நின்ற நிலையில் வருணிப்பது"என்று சுப்புரெட்டியார் கூறியுள்ளார். (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 74)

**போய்க்கொண்டே காட்சிகளை வருணிப்பவை**

பயணம் செய்யும் பொழுது மரம், செடி கொடிகள் நம்மை விட்டு மறைந்து செல்வதைத் தான் போய்க்கொண்டே காட்சிகளை வருணிப்பதாகும். குன்றூர்ப் பாட்டு, உதகைக் காட்சிகள், மாமல்லப்புரச் செலவு ஆகிய மூன்றிலும் வருணனைகள் இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தும் பார்க்கின்ற கோணத்தில் அமைந்திருக்கின்றது.

**நீலவான் காட்சியைக் கவிஞர் நீல உடையினைப் போர்த்திக்கொண்டு விட்டாள் நின்று கொண்டிருக்கின்றாள் என்று வருணிப்பது கவிதையின் மாற்றைப் பன்மடங்கு உயர்த்தி விடுகின்றது. (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.138)**

**நின்ற நிலையில் வருணிப்பவை**

ஒரு இடத்தில் நின்று கொண்டு நிகழ்ச்சிகளை வருணிப்பதாகும். குழந்தை, குயில், மயில், வானவில், அந்திப்போது, உறங்கா இரவு, இன்தமிழ்நாடு, ஏழையின் குடிசை, பனை ஆகிய நிலைகளில் வருணனை இடம்பெறுவதுண்டு.

**மெல்லென அதிர்ந்த மின்னல், அந்தச்**
**செல்வக் குழந்தையின் சிரிப்பு**
**சிரித்தது வையம்! சிரித்தது வானமே! (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.139)**

என்று குழந்தையை வருணிக்கும் விதத்தில் அமைந்துள்ளது. **அழகிய மயிலே! அழகிய மயிலே! அஞ்சுகம் கொஞ்ச அமுத கீதம்! (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.141)** என்று மயிலின் தோற்றத்தினை விவரிக்கிறது. கவிஞரின் வருணனைத் திறன் அவருடைய பாடல்களில் மிளிர்ந்துக் காணப்படுகின்றன.

**உவமைத் திறன்**

கவிதைக்கு அழகு செய்பவை அணிகள்.ஒரு கருத்தை இயல்பாகக் கூறாமல், கேட்கின்றவருக்கு இன்பம் தரும் வகையில் அழகாகக் கூறுவதாகும். ஒரு பொருளை மற்றொரு பொருளோடு ஒப்பிட்டுப் கூறுவது உவமையாகும். இந்த உவமை அணியானது அணிகளின் தாயாகத் திகழ்கின்றார். 'உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை' (தொல்.பொருள்., நூ. 3) என்று தொல்காப்பியர் உவமைக்கு விளக்கம் தருகின்றார். கவிதையில் உவமையாக வரும் பொருள் சிறப்புடையதாகும் உயர்ந்த கருத்தினைத் தருவதாகவும் இருக்க வேண்டும்.

**வினை பயன் மெய் உரு நான்கே**
**வகைபெற வந்த உவமைத் தோற்றம் (தொல்.பொருள்., நூ. 1)**

வினை, பயன், மெய், உரு என்ற நான்கும் உவமையின் பாகுபடுகளாகத் திகழ்கின்றது.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**படுமழை மொக்குளின் பல்காலும் தோன்றிக்**
**கெடுமிதோர் யாக்கை (நாலடியார், பா. 27)**

என்று நாலடியார் விளக்குகிறது. இதன்மூலம் மழை பெய்யும் பொழுது நீரில் தோன்றும் குமிழி போல மறைவது தான் உடம்பு என்பது புலப்படுகிறது.

**அணிகள் பலவற்றுள்ளும் எளிமையானது உவமையணியே. தான் கூற வந்த ஒன்றிற்கு விளக்கம் தரல் வேண்டியும் அப்பொருளினிடத்து உள்ளே அமைந்துக் கிடக்கும் ஓர் இயல்பையோ பல இயல்புகளையோ எடுத்துக் காட்ட வேண்டியும் கவிஞன் உவமையைக் கையாளுகிறான். (இலக்கியத் திறனாய்வியல், ப. 239)**

என்று உவமையின் தோற்றத்தினை ஞானசம்பந்தன் கூறியுள்ளார்.

**தென்றலிலே மெல்லச் சிலிர்க்கும் மலர் போல**
**கன்னி யுடல் சிலிர்க்கக் காதலரே (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.118)**

என்ற பாடலின் மூலம் காதலியின் நிலையினைக் காதலன் கூறுவதாக விளக்குகிறது. மென்மையான மலர்களைப் பெண்களுக்கு உவமையாகக் கூறுவதில் கவிஞர்கள் சளைத்தவர்கள் அல்லர். தென்றல் காற்று வீசும் போது சில மலர்கள் மலரும். காதலர்கள் சந்தித்துவிட்டு வீடு திரும்பும் நேரம் மாலை நேரம். காதலியான வள்ளியின் மேனி சிலிர்ப்பதாகக் காட்டுகின்றார்.

**மாவடு வொத்த கண்ணாளை – இள**
**வஞ்சிக் கொடிக் கிணையாளைத்**
**தாவிநல் வாயிதழ் ஓரம் – உயிர்**
**தாக்கிடும் புன்சிரிப்பாளை (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.119, 120)**

இந்த கவிதையில் பெண்ணின் சிறப்புகள் எடுத்தியம்புகின்றது. கவிஞர்கள் சில இடங்களில் உவமைகளை வரிசையாக அடுக்கிக் கூறுவதும் உண்டு.

**உவமை விரி**

பாரதிதாசனின் உவமைகள் தனித்தன்மை வாய்ந்தன. பரம்பரையாகப் புலவர்கள் கூறிய உவமைகளை விட புதிய நோக்கில் உவமைகளைக் கையாண்டுள்ளார்.

**மண்டையிலே கொட்டியது ஆயிரந்தேள்**
**போல மனமுடைந்து**
**மாளிகைக்குச் சென்றான் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப.115)**

என்ற பாடலின் மூலம் அரசன் வைத்துள்ள சினத்தினை அறிய முடிகின்றது. ஆயிரம் தேள் ஒரே சமயத்தில் கொட்டி மன உளைச்சல் தருவது போல் அரசன் துன்புறுகின்றான் என்கின்றார்.

சஞ்சீவி பர்வதத்தின் சாரல் எனும் காவியத்தில் குப்பனும் வள்ளியும் இடம் பெற்றுள்ளனர். வள்ளி கேட்க குப்பன் உரையாடுகின்றான்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கண்ணாடிப் பாத்திரத்தைக் கல்தரையில் வைப்பதுபோல்**
**தந்திரமாய் மண்ணில் தலைகுனிந்து வைத்திட்ட**
**அந்தப் பகுதிதான் ஆச்சரியம் ஆகுமடி (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 117)**

இதன் மூலம் கண்ணாடிப் பாத்திரத்தைக் கல் தரையில் வைத்தது போல் என்ற உவமை கையாளப்பட்டுள்ளது.

**கற்பனைத் திறன்**

கற்பனை என்பது ஐம்புலன்களால் அறியப்படாத ஒன்று.

**கற்பனைத்திறன் என்பது புதிர்நிலை வாய்ந்ததாகவும் விளக்க இயலாததாகவும் உள்ளது.அதனுடைய விளைவுகளைக் கொண்டே அத்திறனை உணரமுடிகின்றது (ஞானமூர்த்தி, ப. 121)**

என்று இரஸ்கின் கூறுகின்றார். கற்பனை என்பது புலன்கள் நேரே ஒரு பொருளை அனுபவியாத காலத்திலும் அந்த பொருளை நினைவிற்குக் கொண்டு வந்து அந்த பொருளினிடத்து வேண்டும் அனுபவத்தை ஏற்றவல்ல ஒரு வகை ஆற்றல் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 49) என்று கற்பனைக்கு விளக்கம் தருகின்றார். கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாதது. சொற்களால் உணர்த்த முடியாதது. அதன் பலன்களை மட்டிலும் அறியப்பெறுவதொன்றாகும் என்று ந.சுப்புரெட்டியார் விளக்கம் தருகின்றார்.

**…செங்குத்தாய் உயர்ந்த குன்றின்**
**மரகதத் திருமேனிக்கு**
**மங்காத பவளம் போர்த்து**
**வைத்தது வையங்காண் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 49)**

என்று குறிஞ்சிநிலக் காட்சி கொஞ்சும் தமிழ்க் காட்சியாக இடம்பெற்றுள்ளதை ந.சுப்புரெட்டியார் குறிப்பிட்டுள்ளார்.

**கற்பனை வகைகள்**

கற்பனையைப் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று மூவகையாகப் பாகுபடுத்திக் கூறுகின்றார் சி.டி.வின்செஸ்டர் என்று ந.சுப்புரெட்டியார் குறிப்பிட்டுள்ளார்.

**படைப்புக் கற்பனை**

கவிஞன் ஒருவன் பல சமயங்களில் கண்ட பண்புகளை ஒரு விதக் கட்டுப்பாடின்றி தானாகத் தேர்ந்தெடுத்து அவற்றினைத் தொகுத்துப் புதியதொரு வடிவினைப் படைப்பது படைப்புக் கற்பனையாகும் என்பர் வின்செஸ்டர். (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 54)

**அமிர்தம்மை வாழ்க என்றே**
**அனைவரும் வாழ்த்தினார்கள் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 55)**

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இதில் படைப்புக் கற்பனை விவரிக்கப்பட்டுள்ளது.

**இயைபுக் கற்பனை**

உணர்ச்சி, கருத்து, காட்சி, சூழல் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றால் இரண்டையும் இணைத்து அழகுணர்வோடு ஆக்கிக் காட்டுவது இயைபுக் கற்பனையாகும் என்று ந.சுப்புரெட்டியார் குறிப்பிட்டுள்ளார்.

**துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக் கொண்டற்று (குறள். 22)**

இயைபுக்கற்பனைப் பற்றி இக்குறள் எடுத்துரைக்கின்றது.

**தங்க இழையுடன் நூலை வைத்துப்**
**பின்னிய ஆடை காற்றில்**
**பெயர்ந்தாடி அசைவதைப் போல் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 56)**

இதில் தங்க இழையையும் நூலையும் இணைத்துப் பின்னிய ஆடையையும், அது காற்றில் அசைந்தாடுவதைச் சேர்த்து இயைபுக் கற்பனையைப் படைத்துள்ளார்.

**கருத்து விளக்கக் கற்பனை**

இயற்கைக் காட்சிகளைக் கண்ணுற்ற கவிஞன் தான் கண்டவற்றை அப்படியே கூறாமல் அக்காட்சிகளால் தன் உள்ளத்தில் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளை மட்டிலும் சித்தரித்தால் அதனைக் கருத்து விளக்கக் கற்பனை என்று சுப்புரெட்டியார் கூறியுள்ளார்.

**நின்ற செங்காந்தட்பூ நேரிற்கை யேந்தநெடுங்**
**கொன்றை மலர் பென்னைக் கொட்டுகின்றான்**
**கன்னற்**
**பொருள் தரும் தமிழே – நீ ஓர்**
**பூக்காடு,நானோர் தும்பி (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 61, 62)**

என்ற பாடலின் மூலம் கருத்துக்களும் காட்சிகளும் பரிமாறப் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது. இதன் மூலம் தமிழின் சிறப்பினைக் கவிதையின் வாயிலாகக் கூறிச் செல்கின்றார். மூவகைக் கற்பனையின் வகைகளுக்கேற்ப கவிதையைப் படைத்துள்ள பெருமைக்குரியவர் பாரதிதாசன் என்பதனை விளக்கிக் காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

**படிமத்திறன்**

இயற்கைப் பொருள்களில் மிகுதியாகக் காணப்படுபவை படிமங்கள். ஐம்புலன்கள் சார்ந்தவையாகவும் உளவியல் சார்ந்ததாகவும் படிமங்கள் அமைகின்றன.

**புலனுணர்வுப் பொருள்களைத் தனித்தனியாக மனத்தால் படைத்து மொழியால் புலப்படுத்தும் படிமங்களாகும். மனக்காட்சியிலும் அவற்றை வெளிப்படுத்தும் மொழியும் படிமங்கள் (இலக்கியத் திறனாய்வியல், ப. 137)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று தா.ஏ.ஞானமூர்த்தி கூறியுள்ளார்.

செலுத்தப்பெறும் புலன்களுக்கேற்ப படிமம் வகைப்படுத்தப் பெறுகின்றது. கட்புலப்படிமங்கள், செவிப்புலப்படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள், நாற்றப்புலப்படிமங்கள், தொடுபுலப்படிமங்கள், இயக்கநிலைப் படிமங்கள், கலவை நிலைப் படிமங்கள் என்று படிமங்களைப் பாகுபடுத்துகின்றார் ந.சுப்புரெட்டியார்.

**கட்புலப்படிமங்கள்**

**பழகும் இருட்டினில் நானிருந்தேன் – எதிர்**
**பால்நிலவாயிரம் போல் – அவன்**
**அழகு வெளிச்சம் அடித்த தென்மேல்**
**அடியேன் செய்த தொன்று மில்லை (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 158)**

இதில் கண்ணால் பார்க்கும் கட்புலப்படிமம் இடம்பெற்றுள்ளது.

**செவிப்புலப் படிமங்கள்**

**வீணையிலோர் தந்தி**
**மெதுவாய் அதிர்ந்தது போல்**
**ஆணழகன் என்றெண்ணி**
**அத்தான் என்றாள் நங்கை (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 162)**

வீணையின் தந்தியில் ஏற்படும் ஒலியானது செவிப்புலப் படிமங்கள் காணப்படுகின்றது.

**சுவைப்புலப் படிமங்கள்**

**தெள்ளுதமிழில் இசைந்தேனைப் பிரித்தெடுத்துத்**
**தின்னும் தமிழ்மறவர் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 164)**

இவை சுவை உணர்ச்சிகளை எழுப்பக்கூடிய சுவைப்புலப் படிமங்கள் உணர்த்தும் பாடல் வரியாகும்.

**நாற்றப்புலப் படிமங்கள்**

**குப்பை மணக்க குடித்தெருவெல்லாம் மணக்க**
**அப்பம் நிலாப்போல் அடுக்கிவைக்க மாட்டேனோ? (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 165)**

இவை மூக்கினால் சுவாசிக்கப்படும் நாற்றப்புலப் படிமங்கள் உணர்த்தும் பாடல் வரியாகும்.

**தொடுபுலப் படிமங்கள்**

**உன் அரும் உருவம் காணேன்**
**ஆயினும் உன்றன் ஒவ்வோர்**
**சின்னநல் அசைவும் ஒண்கைச்**
**சிலிர்த்திடச் செய்யும் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 166)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற பாடலில் தென்றல் என்பது மெல்லிய பூங்காற்றாக உடலில் வீசுவது போன்ற உணர்வாகும். இவை தொடுவதால் உணரக்கூடிய தொடுபுலப் படிமங்கள் உணர்த்தும் பாடல் வரியாகும்.

**இயக்கப்புலப் படிமங்கள்**

**தென்றல் மெள்ள உடல் குளிரும் வகை வீசா நிற்கும்**
**வீணை இல்லை காதினிலே இனிமை சேர்க்கும் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 167)**

தென்னாடுப் பெற்ற செல்வத் தென்றலின் இயக்கத்தினை உணர முடிகின்றது. பாடல்களைப் பயிலும் போது பொருள்கள் நகர்வன போன்ற ஒரு வித உணர்வை தருவன இயக்கநிலைப் படிமங்கள். இவை இயக்கநிலைப் படிமங்கள் உணர்த்தும் பாடல் வரியாகும்.

**கலவை நிலைப் படிமங்கள்**

பாடல்களில் ஒன்றுக்கு மேற்பட்ட படிமங்கள் வருவது.

**நிறத்தினிலே என் விழியை நிறுத்தினாள் – என்**
**நெஞ்சத்தில் குடியேறி மகிழ்ச்சி செய்தாள் (பாவேந்தரின் பாட்டுத்திறன், ப. 171).**

என்பதில் கலவைநிலைப் படிமங்கள் படிந்துள்ளது. படிமங்களின் பாகுபாடுகளைப் பாரதிதாசன் பாடல்களின் வழி உணர முடிகின்றது. படிப்போர் உள்ளத்தில் கொள்ளைக் கொள்ளும் அளவிற்கு படிமங்கள் இன்பம் பயப்பன என்று விளக்கிக் காட்டுகின்றார் ந.சுப்புரெட்டியார்.

**சுவைத்திறன்**

சுவை என்பதற்கு மெய்ப்பாடு என்று பொருள்.

**நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகை யென்று**
**அப்பால் எட்டே மெய்ப்பாடென்ப (தொல்.பொருள்., நூ. 252).**

என்று எட்டுவகையான மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர் கூறியுள்ளார். எட்டுவகையான மெய்ப்பாடுகளும் அமைய பாவேந்தரின் பாட்டுத்திறன் உள்ளது என்று ந.சுப்புரெட்டியார் கூறுகின்றார்.

**அம்மாஎனக் கூவிக் கைமேலேந்தி**
**அருகமர்ந்து பருக என்று பாலும் தந்தே**
**அம்முதல் எழுத்தளித்தான்; அறிவோ அன்னோன்**
**அன்பான திருமுகத்தை எண்ணி வாடும் ( ந.சுப்புரெட்டியார், ப. 217).**

பாண்டியன் பரிசு எனும் சிறுகாவியத்தில் அன்னம் என்ற கதாபாத்திரம் தாயையும் தந்தையையும் இழந்து அழும் பாடல்கள் அழுகைச் சுவை சார்ந்த பாடல்களாகும்.

**ஈயருந்த அழுகுததசை எறும்பு மொய்க்க**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**இற்றொழுகு புண்ணீர் மற்றிதிலோ நாட்டம் (ந.சுப்புரெட்டியார், ப. 220).**

இந்த பாடலில் இளிவரல் சுவையை அனுபவிக்க முடிகின்றது.

**தமிழர் தவம் கொடுத்த நன்கொடை**

**தன்மனம் பாயும் தலைமேடை**

**நமக்கத் தாண்டி வந்த வாட்ப்படை (ந.சுப்புரெட்டியார், ப. 219)**

என்ற பாடலில் பெருமிதச் சுவை மிளிர்கிறது.

தொல்காப்பியர் கூறுகின்ற மெய்ப்பாடுகள் பாவேந்தரின் பாடல்களில் இடம்பெற்றுள்ளமை மகிழ்விற்குரியதொன்றாகும் என்று ந.சுப்புரெட்டியார் எடுத்துரைக்கின்றார்.

**யாப்புத்திறன்**

இலக்கண முறைப்படி எழுதும் முறையே யாப்பாகும். யாப்பு என்றால் கட்டுதல் என்பது தெளிவாகிறது. வரையறுக்கப்பட்ட ஒலிநயமே யாப்பாகும். யாப்பு முறைமைகளில் அமைந்த பாடல்களே வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா முதலிய பெயர்களைப் பெறுகின்றன. இடைக்காலத்தில் தாழிசை துறை விருத்தம் என்ற பாவினங்கள் தோன்றி புதிய வகைப் பாடல்களின் வளர்ச்சிக்கு வழிவகுத்தன. யாப்பின் அடிப்படையில் பாரதிதாசன் பாடல்கள் இடம்பெற்றுள்ளது என்று ந.சுப்புரெட்டியார் கூறியுள்ளார்.

**வெண்பா**

பாக்களில் முதலாவதாக அமையும் பாவாகும். சங்க மருவிய காலத்தில் வெண்பாவாலான பாடல்களை மிகுதியாகப் புலவர்கள் பாடியுள்ளனர்.

**சாதிமதக் கட்டைவண்டி தன்னிலே செல்லுகையில்**

**கோதையும் சேயும் குளத்தூர்ப்போய் – ஓதியே**

**அன்புற்றார் வாழ்ந்த. அறிவுமண முடித்தே**

**இன்புற் றிருந்தார்கள் நன்கு (ந.சுப்புரெட்டியார், ப. 80)**

வெண்பாவின் வகைகளான நேரிசை வெண்பாவால் அமைந்துள்ள பாடலாகும்.

**ஆசிரியப்பா**

சங்க இலக்கியங்கள் தோன்றிய காலத்தில் ஆசிரியப்பாவால் அமைந்த பாடல்கள் மிகுதியாகப் பாடப்பெற்றுள்ளன.

**குளக்கரை தன்னில் கொம்பு கொண்டு பல**

**விளக்கும் அழகனை வேலன் அணுகி**

**எவ்வூர்? என அவன் இவ்வூர்? என்றான்**

**என்ன அலுவல்?என்றான் அழகன்**

**மன்னன் மகனின் துணையாய்**

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**என்றான் வேலன் வணக்கம் என்றான் (ந.சுப்புரெட்டியார், ப. 83)**

அழகனும் வேலனும் உரையாடுவதாக அமைந்த பாடலாகும்.

**கலிப்பா**

கலிப்பாவின் வகையான தரவுக் கொச்சகக் கலிப்பாவால் இடம்பெற்றுள்ள பாடலாகும்.

**தன்னலத்துக் கப்பால் தனித்தமணி வீட்டினிலே**
**இன்னார் இனியார் எனயாதும் பாராமல்**
**பொன்னைப் புதிதாய் வறியோன்கொள் இன்பத்தை**
**மன்னியருள் சாவே எனைத்தழுவ வாராயோ (ந.சுப்புரெட்டியார், ப. 32)**

கலிப்பாவுக்குரிய நான்கு அடிகளும் கலித்தளையும் பெற்று வந்த பாடலாகும். பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் வெண்பா ஆசிரியப்பா கலிப்பா ஆகிய மூன்று வகைகளில் அடங்கியுள்ள பாடல்கள் இடம்பெற்றிருப்பது சிறப்பிற்கு உரியதாகும்.

**தொகுப்புரை**

இலக்கியம் என்பது அன்றாட வாழ்வில் நடைபெறும் நிகழ்வுகளின் அடிப்படையில் அமைவதேயாகும். எழுத்தாளர்களின் படைப்புகளுக்கேற்ப உத்திகள் இடம்பெற்றுள்ளன. அந்த வகையில் உணர்ச்சித் திறன் முதலிடம் பெறுகின்றது. மனிதனால் உணரப்படுவது உணர்ச்சி. உணர்ச்சிகள் சொற்களின் ஒலியால் பெறும் பொருளினாலும், சொல்வோன் குறிப்பினால் பெறுவது என்ற இரு வகையில் பிரதிபலித்துக் காட்டுகின்றது. உணர்ச்சியின் வெளிப்பாடாகச் சொல்வளம் திகழ்கின்றது. பாவேந்தரின் பாடல்களில் இரண்டு வகையான வருணனைகளைக் காண முடிகின்றது. கவிதைக்கு அழகு செய்பவை அணிகள். ஒரு கருத்தை இயல்பாகக் கூறாமல் அழகாகக் கூறுவது இன்பம் பயப்பனவாகும். ஐம்புலன்களால் அறியப்படாத ஒன்று கற்பனை. கற்னையைப் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என்று மூவகை நிலைகளில் விளக்கிக் காட்டப்படுகின்றது. படிமத்திறனாவது கட்புலப் படிமங்கள், செவிப்புலப் படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள், நாற்றப்புலப் படிமங்கள், தொடுபுலப் படிமங்கள், இயக்க நிலைப் படிமங்கள், கலவை நிலைப் படிமங்கள் ஆகிய ஏழு வகையான படிமங்கள் விளக்கிக் காட்டப்படுகின்றது. தொல்காப்பியர் கூறுகின்ற சுவைகள் எட்டினையும் பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் இடம்பெற்றுள்ளமை சிறப்பிற்கு உரியதாகும். யாப்பு முறைகளில் அமைந்துள்ள நான்கு வகையான பாக்களில் வெண்பா ஆசிரியப்பா கலிப்பா ஆகிய மூன்று பாக்கள் இடம்பெற்றுள்ளதனை ஆராய்ந்து விளக்கிக் கூறப்படுகின்றது. பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் கூறப்பட்டுள்ள கருத்துகளின் அடிப்படையில் சுப்புரெட்டியார் அவர்கள் பாவேந்தர் பாட்டுத்திறன் எனும் தலைப்பில் கூறியுள்ள பாங்கு சிறப்பிடம் பெற்று திகழ்கின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்பு நூல்கள்**

[1] ஞானசம்பந்தன். அ. ச. *இலக்கியக்கலை.* முல்லை நிலையம், சென்னை, 2010.

[2] ஞானமூர்த்தி. தா.ஏ. *இலக்கியத் திறனாய்வியல்.* ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 2016.

[3] சுப்பு ரெட்டியார். ந. *பாவேந்தரின் பாட்டுத்திறன்.* ந .சுப்பு ரெட்டியார் 100 அறக்கட்டளை.

[4] திருஞானசம்பந்தம். *தொல்காப்பியம் பொருளதிகாரம்.* கதிர் பதிப்பகம், திருவையாறு, 2018.

[5] நாகராசன்.வி. *குறுந்தொகை.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2017.

[6] பெரியண்ணன்.கோ. *திருக்குறள்.* வனிதா பதிப்பகம், சென்னை, 2021.

[7] பரமசிவன். தொ. *பாரதிதாசன் கவிதைகள்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2005.

[8] மதுரை முதலியார்.கு. *நாலடியார்.* பாரி நிலையம், சென்னை, 1998.

**References**

[1] Gnanasambanthan. A. S. *IIakkiya Kalai.* Mullai Nilaiyam, Chennai, 2010.
[2] Gnanamoorthy. T. A. *IIakkiyathiranaiyuviyal.* Inthinai Pathippagam, Chennai, 2016.
[3] N.Subbu Reddiar. *Baventharin Pattuthiran.* N.Subbu Reddiar 100 Arakkatalai.
[4] Thirugnanasambantham. *Tholkkapiyam Porulathigaram*. Kathit Pathigam, Thiruvaiyaru, 2018.
[5] Nagarajan. V. *Kurunthogai*. New Century Book House. Chennai. 2017.
[6] Periyannan. K. *Thirukural.* Vanitha Pathippagam, Chennai, 2021.
[7] Paramasivam. T. *Bharathidasan Kavithigal*. New Century Book House, Chennai. 2005.
[8] Madurai Mudaliyar. K. *Nalladiyar.* Pari Nilaiyam, Chennai, 1998.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பார்வையில் கம்பர்

## Kambar in the Observation of Professor Subbu Reddiar

**முனைவர் ப.மகேஸ்வரி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, நிர்மலா மகளிர் கல்லூரி, கோவை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. P. Maheswari,** Assistant Professor of Tamil, Nirmala College for Women, Coimbatore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0001-6534-833X**
**DOI: 10.5281/zenodo.7275392**

### Abstract

*Prof. N. Subbu Reddiyar has recorded the beauty of the Sun in various contexts and looks at it from a scientific point of view like Kambar who recorded the beauty of the sun in various stages in his epic "Kambaramayana". Professor Reddiar has outlined the scientific points and literary style of Kambar in his works. The people of Tamil Nadu celebrate the Pongal festival as an important festival as a way of giving thanks to the Sun which gives hope to the farmers. Pongal festival in Tamil Nadu has been a festival for the Sun and is celebrated by all people. On Pongal, people worship the sun which gives light and heat. The scientific fact is that the Sun is the ultimate source of all energy. Kambar discovered in his life about dividing the atom into a hundred parts. So, the Gods can be one. Kambar has traditionally sung the sunrise at the beginning of most of his epic, and the sunset at the end, in more than a hundred songs. In the six cantos, Sun is portrayed as a symbol of neutrality, eloquence, knowledge, and energy. Both natural and vivid descriptions were in his poems. It is a fact that today most of the villagers are the ones who give importance to the light and grace of the Sun. Prof. Reddiar has given much attention to Sun in his works. So, This article is based on the study of nature worship, Sun Worship, Consciousness, Unconsciousness, Sunrise, benefits of the Sun, Energy, Lightning, Sunday Worship, Worship of Lord Shiva and History etc that are found in the writings of Subbu Reddiar.*

**Keywords:** Sun Worship, Kambar, Observation, Professor Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கதிரவனுக்கு முக்கியத்துவம் அளித்து, அறிவியல் நோக்கோடு பார்ப்பது போலவே கம்பரும் கதிரவனின் அழகைப் பல்வேறு நிலைகளில் தம் காப்பியத்தில் பதிவு செய்துள்ளார். அறிவியல் செய்திகளையும் இலக்கியநயத்தோடு பாடியுள்ளார் கம்பர் என்பதைக் கோடிட்டுக் காட்டியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள்.தமிழர்கள் கதிரவன் தென்திசைப் பயணத்தை முடித்து வடதிசை நோக்கித் திரும்பும் தை முதல்நாளில் (உத்தராயணம்) பொங்கலிட்டு வழிபாடு நடத்துகின்றனர்.உழவர்களின் நம்பிக்கையினின்றும் எழுந்த விழாவைத் தமிழர் திருநாளாகவும், நன்றி செலுத்தும்விதத்திலும் கொண்டாடி மகிழ்கின்றனர்.தமிழ்நாட்டில் பொங்கல் விழா கதிரவன் விழாவாகவும், ஆற்றல் விழாவாகவும் இருந்து வந்திருக்கின்றது.ஒரு சடங்கு போல நடந்து வந்த போதிலும் அதனடிப்படையில் பல அறிவியல் உண்மைகள்*

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

*பொதிந்து கிடக்கின்றன.பொங்கல் புதுநாளில் மருதநிலக் கடவுளான இந்திரனையும், ஒளியையும், வெப்பத்தையும் தரும் கதிரவனையும் மக்கள் வணங்குகின்றனர். “கதிரவனே ஆற்றலின் மூலம்” (The Sun is ultimate source of energy) என்பது அறிவியல் உண்மையாகும். ஆற்றல் முழுவதும் அணுவில் இருக்கிறது என்பது நவீன அணுவியல் மெய்ப்பித்த உண்மையாகும். தற்போது ஐரோப்பாவில் பௌதிக இயலில் அணுவிலும் சிறிய எலக்ட்ரான், மற்றும் நியூட்ரான் ஆகிய துகள்களைவிட மிகச்சிறிய துகள்களான கடவுள் துகள்கள் என்ற துகள்களைக் கண்டுபிடித்துள்ளனர். ஆனால் கம்பன் வாழ்ந்த காலத்திலேயே அணுவைக் கூறிடமுடியும் என்ற கருத்து நிலவியது.அணுவை நூறாகப் பிரித்துக் கோண் என்கின்றார்.ஆகக் கோணும், கடவுள் துகளும் ஒன்றெனக் கொள்ளலாம். கம்பர் நூற்றுக்கும் மேற்பட்ட பாடல்களில் இயற்கைநிலையிலும், உயிரும் உணர்வுமுள்ள ஒருமாந்தரைப் போன்றும், நடுநிலைமை, வாய்மை, அறிவு, ஆற்றல் ஆகியவற்றுக்கும் குறியீடாக விளங்கும் கதிரவனை ஆறு காண்டங்களிலும், பெரும்பாலான படலங்களின் தொடக்கத்தில் சூரிய உதயத்தையும், முடிவில் சூரிய அத்தமனத்தையும் பாடுவதை மரபாகக் கொண்டுள்ளார். இன்று கதிரவனின் ஒளி மற்றும் ஆற்றலுக்கு முக்கியத்துவம் கொடுப்பவர்களாகக் கிராமத்து மக்கள் பெரும்பாலானோர் விளங்குகின்றனர் என்பது உண்மையாகும்.சூரிய வழிபாடு, அணுவின் பேராற்றல், நனவிலியுளம், கம்பன் கண்ட கதிரவன், ஞாயிறு வழிபாடே சிவன் வழிபாடு - முதலியவற்றை ஆய்வு நோக்கில் கட்டுரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.*

**குறிப்புச் சொற்கள்:** சூரிய வழிபாடு, பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், பார்வை, கம்பர்.

**முன்னுரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கதிரவனுக்கு முக்கியத்துவம் அளித்து, அறிவியல் நோக்கோடு பார்ப்பது போலவே கம்பரும் கதிரவனின் அழகைப் பல்வேறுநிலைகளில் தம் காப்பியத்தில் பதிவுசெய்துள்ளார். அறிவியல் செய்திகளையும் இலக்கியநயத்தோடு பாடியுள்ளார் கம்பர் என்பதைக் கோடிட்டுக் காட்டியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். இயற்கையை வணங்குதல், வாழ்க்கையின் உயிர்நாடியாகத் திகழும் கதிரவனைப் போற்றும் சூரியவழிபாடு, அணுவின் பேராற்றல், நனவிலியுளம், கம்பன் கண்ட கதிரவன் - உதயம், மறைவு, கதிரவனால் உண்டாகும் நன்மைகள், ஆற்றல்கள், மதி, மின்னல், ஞாயிறு வழிபாடே சிவன் வழிபாடு, வரலாறு - முதலியவற்றை ஆய்வுநோக்கில் கட்டுரைப்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

**பேராசிரியர் பார்வையில் சூரிய வழிபாடும் அறிவியலும்**

கதிரவன் தென்திசைப்பயணத்தை முடித்து வடதிசை நோக்கித் திரும்பும் நாளாகிய தை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முதல்நாளில் (உத்தராயணம்) தமிழர்கள் கதிரவனுக்குப் பொங்கலிட்டு வழிபாடு நடத்துகின்றனர். அகலஉழுவதைக் காட்டிலும் ஆழஉழுவதே சிறந்தது என்பது பண்டைய உழவர்களின் கருத்தாக இருந்தது. அத்தகைய உழவர்களைச் செஞ்சால் உழவர்கள் (நற்.340) என்று போற்றினர். உழவர்களின் நம்பிக்கையினின்றும் எழுந்த விழாவைத் தமிழ்மக்கள் இன்று தமிழர்திருநாளாகக் கொண்டாடி வருகின்றனர். இதனைப் பொங்கல்புதுநாள் என்றும், பயன்காணும்பெருநாள் என்றும், உழைப்பின்திருநாள் என்றும், உழவர்திருநாள் என்றும் வழங்குகின்றனர். பண்டுதொட்டுத் தமிழ்நாட்டில் பொங்கல்விழா கதிரவன்விழாவாக – ஆற்றல்விழாவாக இருந்து வந்திருக்கின்றது. ஒரு சடங்குபோல நடந்துவந்தபோதிலும் அதனடிப்படையில் பலஉண்மைகள் உறைந்து கிடக்கின்றன **(ந.சுப்புரெட்டியார், அறிவியல் விருந்து, ப.8).** இயற்கைக்கு நன்றி செலுத்தும் விதமாக இவ்விழா கொண்டாடப்படுகிறது.

**பொங்கல் கொண்டாடுவதன் நோக்கம்**

பாரதியார் கதிரவனைக் காதலனாகவும், பூமியைக் காதலியாகவும் காண்கிறார். இவையிரண்டும் இணைந்து இயங்குவதால் அனைத்தும் நிலைபெற்றிருக்கின்றன. இதனை,

**காதல் கொண்டனை போலும் மண்மீதே**
**கண்பிறழ் வின்றி நோக்குகின் றாயே (பாரதியார் கவிதைகள், ஞாயிறு வணக்கம், பா. 3)**

என்ற வரிகள் விளக்குகின்றன.பொங்கல்புதுநாளில் மருதநிலக்கடவுளான இந்திரனையும், உயிர்களுக்கு இன்றியமையாத ஒளியையும், வெப்பத்தையும் தரும் கதிரவனையும் மக்கள் வணங்குகின்றனர். “கதிரவனே ஆற்றலின்மூலம்” (The Sun is ultimate source of energy) என்பது இன்றைய அறிவியல் உண்மை. ஆற்றல் முழுவதும் அணுவில் தேங்கிக்கிடக்கிறது என்பது நவீனஅணுவியல் மெய்ப்பித்த உண்மை (அறிவியல் விருந்து, ப.15). கதிரவன் வாழ்க்கையின் உயிர்நாடி.ஒளிச்சேர்க்கை சூரிய ஆற்றலைக் கொண்டு நடைபெறுகிறது. இந்த அறிவியலுண்மையினை அனுபவமாகக்கண்ட இளங்கோவடிகள் “ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும் காவிரிநாடன் திகிரிபோல் பொற்கோட்டு மேரு வலந்திரித லான்” (சிலப். மங்கலவாழ்த்து, அடி 4 – 6) என்கிறார். நக்கீரர் “உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு பலர் புகழ் ஞாயிறு” (திருமுருகாற்., பா.வரி. 1 - 2) என்று திருமுருகாற்றுப்படையைத் தொடங்குகின்றார். கதிரவனிடமிருந்து இயற்றப்பெற்ற அணுவாற்றல் தாவரங்களின் மூலம் பாய்ந்து பல்வேறு பொருள்களைத் தோற்றுவித்தன. இப்பொருள்கள்யாவும் ஒன்று சேர்ந்து பொங்கல் வடிவில் காட்சியளிக்கின்றன. பொங்கலில் இடம்பெறும் பொருள்கள்யாவும் உழவன் தாவரங்கள் மூலம் பெற்றவை. நெய், தாவரங்களை உணவாக உண்ட பசுவிடமிருந்து பெற்ற பொருளாகும். பொங்கல் வடிவமாக உள்ள ஆற்றல், ஆற்றல்வடிவாக உள்ள ஆண்டவனுக்கும், கதிரவனுக்கும் படைக்கப் பெறுகின்றது (அறிவியல் விருந்து, ப.15). கதிரவன் இன்றி உயிர்களில்லை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உயிரினங்கள் வாழத் தேவையான அனைத்தையும் கொடுக்கும் ஆற்றலைக் கொண்ட கதிரவனை உழவர்கள் வணங்குதல் போற்றுதற்குரியது.

**பேராசிரியர் பார்வையில் கம்பரது அறிவியல்**

பேராற்றல் படைத்த மேகநாதன் இலக்குவனுடன் செய்தபோரில் இறந்துபட்ட செய்தியைக்கேட்ட மண்டோதரி தன்மகனின் அளவற்ற ஆற்றலை எண்ணி வியக்கிறாள்.

**முக்கணான் முதலி னோரை உலகொரு மூன்றி னோடும் ...**

**உக்கிட அணுவொன்ற ஓடிஉதைத்தது போலும்அம்மா! (கம்ப. யுத்த. இராவ.சோகப். 52)**

என்று வியக்கிறாள். முக்கண்ணையுடைய சிவனை வென்றவன், இன்று ஒரு மனிதனால் கொல்லப்பட்டு விட்டானே, ஓங்கி நிற்கும் மேருமலையை அணு ஒன்று ஓடி உதைத்தது போல் இருக்கிறதே என்று அணுவின் பேராற்றலை அறியாத அப்பெண் கூறுவதை இப்பாடலில் காணமுடிகிறது (அறிவியல் விருந்து, ப. 23). பண்டையோரின் அணு பற்றிய அறிவியல் சிந்தனை பெறப்படுகிறது.

**பண்டையோரின் வேதியியல்அறிவு**

ஒன்றாய் இருந்த விதை பின்வேராய், அடிமரமாய், கிளையாய், கொம்பாய், கவடாய், இலையாய், பூவாய், காயாய் என்று பலவகையாய் மாறுவது போலவே வித்தென அருவமாய் இருந்தவை மரம் என உருமாறியது என்று நினைத்தான் மனிதன். இக்கொள்கைக்குப் **பரிணாமவாதம்** என்றுபெயர். **கூர்தல் அறம்** என்றும் இதனை வழங்குவர். தொல்காப்பியர்

**நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்**

**கலந்த மயக்கம் உலகம்... (தொல். பொருள். மரபு., நூ. 89)**

என்கிறார். இதற்கு உரைகண்ட பேராசிரியரும் "நிலனும் தீயும் நீரும் காற்றும் ஆகாயமும் என்னும் ஐம்பூதமும் கலந்த கலவையல்லது உலகம் என்பது பிறிது இல்லாமையின்" என்று விளக்குவார். மண்திணிந்த நிலனும் நிலனேந்திய விசும்பும் ...இயற்கைபோல (புறநா., பா. 2) என்கிறது புநானூறு. இதனைக் கம்பர் "பூதம்ஐந்தும் விளங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்" (சுந்தர. காப்பு) என்று கூறுவார். இவற்றைத் தனிமங்களோடு இணைக்கிறார் பேராசிரியர் (அணுக்கருபௌதிகம், ப. 5). ஐம்பூதங்களினால் ஆனது இயற்கை என்பதும் இதே கருத்தைக் கம்பர் இயம்புவது போல பேராசிரியரும் சுட்டியுள்ளமையும் பெறப்படுகிறது.

**அணுவின் அமைப்பு**

வானவெளியில் எண்ணற்ற அண்டங்கள் தொங்குகின்றன என்று அறிவியலறிஞர்கள் சொல்வர். மணிவாசகப்பெருமானும்

**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம் ...**

**நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன (திருவாச. திருவண்டப்பகுதி, பா. வரி 1-4)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்கிறார். அகண்டவெளியில் கோள்கள் சுற்றிக்கொண்டிருக்கின்றன. வால்நட்சத்திரங்கள், மற்றும் ஏனைய கோள்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும் வாய்ப்புகள் உள்ளன என்பது அறிவியல் கூற்று. இதையறிந்த கம்பர் வாலியும், சுக்கிரீவனும் போர் புரிந்தபோது இருகோள்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டதைப் போல் இருந்தது என்கிறார். இதனைத்

**தோளோடுதோள் தேய்த்தலின் தந்தழல் பிறங்கல் …கோளோடுகோள் உற்றென ஒத்து**
**அடர்ந்தார் கொதித்தார் (கம்ப., கிட். காண்., வாலிவதைப்பட., பா. 47)**

என்கிறார். கோளோடுகோள் உற்றென என்பது கோள்களின் இயற்கையைக் கம்பன் பாடிய அறிவியல் முறைமையாகும் (கம்பனில் இயற்கை, ப. 31). நம் முன்னோர் மேகம், மழை, இடி, மின்னல் முதலியன இந்திரனால் உண்டாகின்றன என்று கருதிவந்தனர்.அதனால்தான் அவனுக்கு ‘மேகநாதன்’ என்ற மற்றொருபெயரும் வழங்குகின்றது. கம்பர் கார்காலப்படலத்தில் மின்னல் பற்றிக் குறிப்பிடும்போது

**நீனிறப் பெருங்கரி நிறைத்த நீர்த்தெனச்**
**சூனிற முகிற்குலத் துவன்றிச் சூழ்திரை… (கம்ப. கிட்கிந்தை. கார்காலப்பட., பா. 6)**

என்று குறிப்பிடுகிறார். கடல்நீரைப் பருகிய காரணத்தால் கருமை வாய்ந்த மேகங்களின் இடையிடையே மின்னல்கள் தோன்றி மறைவதைக் கண்ட கம்பர் அது ஒரு போர்க்கள நிகழ்ச்சியைப் போன்றுள்ளது என்கிறார். மதி மண்டலச்செலவினைப்

**பெருந்திண் நெடுமால் வரை நிறுவிப் …**
**விசும்பின் மீனின் மேல் விளங்க. (கம்ப. பாலகாண். மிதிலைக்., பா. 70)**

என்று குறிப்பிட்டுள்ளார். எம்பிடாக்கிலீஸின் அணுக்கொள்கையாவது மண், காற்று, நெருப்பு, நீர் என்ற நான்கு தனிமங்கள் இவ்வுலகிலுள்ள எல்லா பொருள்களின் ஆதிவேர்கள் (Prime root) –மூலங்கள் என்ற கருத்தினைத் தோற்றுவித்தார். இதில் வேறுபாடு காணமுடியாத ஒரு படித்தான, தனிமங்களின் கலவையே இது. இத்தனிமங்கள் அன்பு (love) என்னும் தளையால் பிணைக்கப்பெற்று முடிவிலாப் பேரின்பநிலையில் உள்ளனஎன்றும், பகைமை (hate) என்ற பண்பு அவற்றைத் தனித்தனியாகப் பிரித்து அவற்றைக் கொண்டு பல்வேறு நிலைகளிலுள்ள வாழ்வு (life) என்ற நாடகத்தை நடத்தி வைக்கிறது என்றும் எண்ணினார் (அணுக்கருபௌதிகம், ப. 4). இது ஐம்பூதங்களோடு ஒப்பிடப்படுகிறது. அரிஸ்டாட்டிலின் கொள்கைப்படி நான்கோ, ஐந்தோ தனிப்பொருள்கள், தனிமங்கள்; மற்றவை யாவும் தனிமங்கள் பலவகையாகச் சேர்வதால் உண்டாகும் சேர்க்கைப் பொருள்களாகும்.இப்படிக் கலப்பதனைப் ‘**பஞ்சீகரணம்**’ என்று வேதாந்தம் கூறும். அறிவியலார் தனிமங்கள் என்பர்.டால்ட்டன் காலத்தில் அணு அழியாதது, பிரியாதது, என்றும் உளதாவது என்ற கொள்கை நிலவியது. தற்போது ஐரோப்பாவில் பௌதிகஇயலில் அணுவிலும் சிறியஎலக்ட்ரான், மற்றும் நியூட்ரான் ஆகிய துகள்களைவிட மிகச்சிறிய துகள்களான **கடவுள்துகள்கள்** என்ற துகள்களைக்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கண்டுபிடித்துள்ளார்கள். ஆனால், கம்பன் வாழ்ந்த காலத்திலேயே அணுவைக் கூறிடமுடியும் என்ற கருத்து தோன்றியது. அணுவை நூறாகப்பிரித்துக் **கோண்** என்று கூறுகின்றான். ஆகவே கோணும், கடவுள் துகளும் ஒன்றெனக் கொள்ளலாம்.

**சாணினும் உளன்ஓர் தன்மை அணுவினைச் சதகூறு இட்ட**

**கோணினும் உளன்மா மேருக் குன்றினும் உளன்; இந்நின்ற**

**தூணினும் உளன் நீ சொன்ன சொல்லினும் உளன் இத்தன்மை காணுதி (கம்ப. இரணியவதைப்., பா. 124)**

என்று இரணியனுக்குப் பிரகலாதன் கூறுவதாக அமைந்த பாடலில் இதனைக் காணமுடிகிறது (கம்பனில் இயற்கை, ப. 36). இறைவன் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்துள்ளான். இயற்கையும் இறைவனும் ஒன்றே என்பர்.

**நனவிலி உளம்**

ஃபிராய்ட் என்ற உளவியலறிஞர் நனவுநிலை (Conscious level), நனவிலிநிலை (Unconscious level), நனவடிநிலை (Subconscious level) என்று மூன்றுபகுதிகளாகச் செயற்படுவதாகக் குறிப்பிடுகின்றார் (அறிவியல் விருந்து, ப.160). மேலும் நாம் இவ்வுலகில் பல்வேறு வெப்பநிலைகள், காற்றுநிலைகள், பொழுதுநிலைகள் முதலிய இயற்கை தோற்றங்களிடையே வாழ்ந்துவருங்கால் அந்தந்தநிலைக்கேற்ப நம் குருதியும், நுரையீரலும், கல்லீரலும், பிறவுறுப்புகளும் நம்மையும் அறியாது இயங்கிவருவது இந்த நனவிலியுளத்தின் ஏவல்படியே ஆகும். நனவிலியுளத்தில் ஒருவரின் சொந்தஅனுபவங்களோடு அவரது மூதாதையர்அனுபவங்களும் அடைபட்டுள்ளன என்கிறார். இராவணன் தன்மருந்தனைய தங்கை சூர்ப்பநகையைக் காலகை என்பவளுடைய மக்களாகிய காலகேயருள் ஒருவனாகிய வித்யுத் சிகுவன் என்ற அரக்கர் தலைவன் ஒருவனுக்கு மணம் புரிவித்திருந்தான். அந்தமணமக்கள் இளவயதினராக இருந்த காலத்தில் இராவணன் திசைகள்தோறும்சென்று வெற்றிமுழக்கம் செய்துவந்தான். மைத்துன உறவு இராவணனுக்கு அடிபணியத் தூண்டவில்லை. மைத்துனர்களிடையே கடும்போர் நிகழ்ந்தது. சூர்ப்பநகையின்கணவன் கொல்லப்பட்டான்; அதனால் இராவணனுடன் இருக்க வேண்டியவள் ஆனாள். நாத்தியின் கொடுமை ஏற்படும் என்ற காரணத்தாலோ அல்லது வேறு என்ன காரணத்தாலோ தன்தங்கைக்குத் தண்டாவனத்தில் இருக்க இடம் அமைத்து அவளுக்குத் துணையாகத் தன்ஒன்றுவிட்ட இளவல்களாகிய கர-தூடணர்களை அறுபதினாயிரம் வீரர்கள் அடங்கிய சேனையுடன் காவலும்வைத்தான். இராமனைக் காதலித்த சூர்ப்பநகைக்கு நேர்ந்த அவமானத்தையும், இராவணனுக்குத் தங்கையால் சீதைமீது ஊட்டப்பெற்ற காதல் போதையையும், அதுகாரணமாக இராவணன் இராமன் கணையால் மாய்ந்ததும் உண்டு. இராவணனை நினைந்து புலம்பும் வீடணன்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**கொல்லாத மைத்துனனைக் கொன்றாய்என் …**

**நெடும்பாரப் பழிதீர்ந் தாளோ? (கம்ப. யுத்த. இராவணவதைப்., பா. 225)**

என்று வாய்விட்டுஅரற்றுவதில் சூர்ப்பநகையின் நனவிலியுளத்தின் போக்கினை வெளிப்படுத்துவதாகக் கருதலாம். இளமையில் தன் இன்பவாழ்க்கைக்கு ஊறுவிளைவித்த அண்ணனைக் கொல்வதற்குக் காரணமாக இருப்பதுடன் அவன் குலத்திற்கே காலனைக் கொண்டு வந்துவிட்டாளோ என்று வீடணன் கருதுவதாகக் கொள்ளலாம். சூர்ப்பநகையின் நனவிலியுளத்தின் செயலே இராவணவதத்திற்குக் காரணமாயிற்று.

**கம்பன் கண்ட கதிரவன்**

தமிழ்ச்சமூகம் ஞாயிற்றைப் போற்றிய சமூகமாகும். ஞாயிற்றை இயற்கைப்பொருளாய் மட்டும் கருதாது மனித வாழ்வியல் சார்ந்த கருத்துருவாய் பார்த்த சமூகமரபு தமிழ்மரபு. ஞாயிற்றைச் சேயோனின் வடிவோடும், செயலைச் செம்மையோடும் தொடர்புப்படுத்திச் சொல்வர். ஞாயிறு ஒளிப்பிழம்பாக விளங்குகின்ற இறைவனின் வடிவம் என்று நம்பப்படுகிறது (சக்தி வாழ்க, ப. 270). ‘கதிரவன் சென்றுகாணாத இடத்தையும் கவிஞன் சென்றுகாண்பான்’ என்பது தெலுங்கில் வழங்கும் ஒருமுதுமொழியாகும் (கம்பன் இயற்கை வர்ணனைகள், பக்.17). கதிரவனைக் குறிக்க அருக்கன், அலரி, ஆதித்தன், இரவி, கதிர், கதிரவன், கதிரோன், சுடரோன், சூரியன், ஞாயிறு, வெய்யோன், வெய்யவன், பகலவன், பகல், பருதி, தினகரன், எரிகதிர், செங்கதிர் முதலான சொற்கள் உள்ளன. கம்பர் நூற்றுக்கும் மேற்பட்டபாடல்களில் இயற்கை நிலையிலும், உயிரும் உணர்வுமுள்ள ஒருமாந்தரைப் போன்றும் படைத்துள்ளார். நடுநிலைமைக்கும், வாய்மைக்கும், அறிவுக்கும், ஆற்றலுக்கும் குறியீடாக விளங்கும் கதிரவனை ஆறுகாண்டங்களிலும், பெரும்பாலான படலங்களின் தொடக்கத்தில் சூரிய உதயத்தையும், முடிவில் சூரிய அத்தமனத்தையும் பாடுவதை மரபாகக் கொண்டுள்ளார். அதிலும் குறிப்பாகப் பாலகாண்டத்தில்மட்டும் பத்துக்கும் மேற்பட்ட பாடல்களில் சூரியன் உதித்தல் (பாலகா. 507), வெயில்பரவுதல் (பாலகா. 713), சூரியகிரணங்கள்விரிதல் (பாலகா. 715), சூரியஅத்தமம் (பாலகா. 1243) போன்ற காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இவை *தொல்காப்பியம்* குறிப்பிடும் இயற்கைப்பொருளை உள்ளதுஉள்ளபடி கூறுதல் எனும்நிலையில் அமைந்துள்ளன.நாளும்நிகழும் கதிர் எழுச்சி, மறைவு ஆகிய மிகஇயல்பான காட்சிகள் அழகும், முருகியல் இன்பமும் பொருந்தக் கம்பரால் படைக்கப்பெற்றுள்ளது.

**இயற்கை**

இயற்கையை இறைவனாகக் கருதி வழிபட்டனர் நம்முன்னோர். இருசுடர்கள் பெரிதும் போற்றப்பட்டன. இதைக் கருத்தில்கொண்டு சூரியநமஸ்காரம் செய்தனர். சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் கடவுள் வாழ்த்தாக இயற்கை அமைந்தது.தாலஸ் மைல்டஸ் (கிமு. 7 ஆம் நூற்றாண்டு) என்பார். “இயக்கங்களின் இறுதிநிலை இயற்கையே” என்கிறார். “இயற்கை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பது இறைநிலையாகும்" என்பார் அப்பர் (கம்பனில் இயற்கை, ப. 173). விக்கி தமிழ் அகராதியின்படி இயற்கை (Nature) என்பது இயல்பாக இருப்பது என்று பொருள் கொள்ளப்பட்டது. கம்பர் இயற்கை எனும் சொல்லாட்சியை 27 இடங்களில் பயன்படுத்தியுள்ளார் (கம்பனில் இயற்கை, ப. 39). இயற்கை பற்றிக் குறிப்பிடும்போது முல்லையைக் குறிஞ்சியாக்கி மருதத்தை முல்லையாக்கி...என்று இயற்கையின் போக்கைக் காட்டியுள்ளார். "தண்டலை மயில்கள் ஆட தாமரை விளக்கம் தாங்க...வண்டுகள் இனிது பாட மருதம் வீற்றிருக்கும் மாதோ" (கம்ப., பா. 35) என்ற பாடலில் மருதநில மாண்பைக் காட்டியுள்ளார். தசரதன் தன் சேனையோடு சோனை ஆற்றங்கரையிலுள்ள சோலையில் தங்கியிருந்தபோது கதிரவன் உதயமாகியதைக் கோர தந்தத்தையுடைய இரணியகசிபு எனும் அசுரனைக் கொல்வதற்கான நரசிங்கமூர்த்தி பலகைகளை வெளிக்காட்டிக்கொண்டு பொற்றூணினின்று தோன்றியதுபோல வெய்யோன் நட்சத்திரங்களுடன் விளங்கும் இருள்கொண்ட இரவை ஒழிப்பதற்காகத் தனது ஆயிரம் கிரணங்களை வெளிநீட்டிக்கொண்டு உதயகிரியினின்று தோன்றினன் என்றும், சூரியஅத்தமத்தைத் தசரதனும், இராமனும், பிறஅரசர்களும் தத்தமக்குரிய இடத்திற்குச் சென்றதைக் கண்டபின் தானும்தன் இடமாகிய மேருகிரியிலே சென்று மறைந்தான் (கம்ப., 1. 1243) என்றும் கூறியுள்ளார்.

**செஞ்சுட ரிருள்கீறித் தினகர னொருதேர் மேல்**
**மஞ்சனை யணிகோலம் காணிய வெனவந்தான் (கடிமணப்படல., கம்ப., 1.1243)**

என்று கதிரவனின் தேர்வருவது கடிமணப்படலத்தில் சொல்லப்பட்டுள்ளது (கம்பன் இயற்கை வர்ணனைகள், ப. 23). இயற்கையை மனிதன் போற்றக்காரணம், கதிரவனைக் கம்பர் அழகாக வருணித்தமை பற்றிச் சொல்லப்பட்டுள்ளது.

**ஞாயிறு காட்சிகள்**

ஞாயிறு காட்சிகள் பாலகாண்டத்தில் 11, 28, 2:1-2, 125, 1-2, 11: 1-2, 7:4, 630 ஆம் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. எழுஞாயிற்றுக்காட்சிகள் - 1, 21, 31, 150, 343 பாடல்களிலும், விழுஞாயிற்றுக் காட்சிகள் - 13: 2, 43, 70 பாடல்களிலும், எழுவிழு ஞாயிற்றுக்காட்சிகள் - 61, 117 பாடல்களிலும், பாலைநிலக்காட்சியில் ஞாயிறு – தாடகைவதைப்படலம் - 5 ஆம் பாடலிலும் இடம்பெற்றுள்ளன. கதிரவனின் தோற்றத்தைக் கம்பர்,

**எண்ணரிய மறையினொடு கின்னரங்கள் இசைபாட உலகம் ஏத்த ...**
**விரிந்த கதிர்கள் எல்லாம் (கம்ப., பா. 632)**

என வருணித்துள்ளார் (கம்பநாடர், புதியவெளிச்சம், ப. 69). கதிரவனின் முக்கியத்துவம் கருதி அதன் தோற்றம், மறைவு முதலியன வருணிக்கப்பட்டுள்ளது.

**ஞாயிற்றுவழிபாடு**

கதிரவனின் அமைப்பு உள்ளும்புறமும் ஒரேதிண்மையாக இல்லை. அது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வெங்காயத்தைப் போன்று புரைபுரையாகக் காணப்பெறுகின்றது. முதற்புரை ஒளிமுடி **(Corona)** என்பது. இதனைக் கண்ணால் காணமுடியாது. இந்த ஒளிமுடிக்கும், கதிரவனின் மேற்பரப்புக்கும் தொடர்பில்லை (அறிவியல் விருந்து, ப. 69). கதிரவனின் வெப்பம் இல்லையெனில் கடல்களும், ஆறுகளும், குளங்களும் மட்டுமல்லாமல் காற்றும்கூட உறைந்துபோகும். சூரியனின் ஆற்றலினால்தான் நாம் உயிர்வாழ்கிறோம் (சூரிய ஆற்றலும் பயன்களும், ப. 17). அக்காலத்தில் ஞாயிற்றுவழிபாடு ஓங்கியிருந்தது. அயர்லாந்து முதல் யப்பான் தீவுகள் வரையில் இவ்வழிபாடு பரவியிருந்தமையை எச்.சி.வெல்ஸ் (H.G.Wells) என்பார் *தமது வரலாற்றுக்காட்சி* (*Outline of History*) எனும் நூலில் படம் வரைந்து விளக்கியுள்ளார். ஞாயிறு ஒளிப்பிளம்பாக விளங்குகின்ற இறைவனின் வடிவம் என்றும், ஞாயிற்றினின்று வெடித்து வெளிப்பட்ட கோள்களைக் காலதேவன் வெகுதூரத்திற்கு இழுத்துச்சென்று, இருளிலே ஒன்றோடொன்று மோதவிட்டு, அவற்றை அழிக்கவேண்டுமென்றும் கருதுகிறான் எனக்கூறுகிறார். பாரதியார் ஞாயிற்றினின்றும் வெளிப்பட்ட கோள்களெல்லாம் காலத்தின் சுழற்சியிலே ஒளி குன்றிப்போனநிலையையும், ஞாயிற்றின் ஈர்ப்புச்சக்தியையும் எடுத்துக் கூறுகிறார் (சூரிய ஆற்றலும் பயன்களும், ப. 35). ஞாயிற்றின் சக்தியும், இயல்பும் தெளிவாகிறது.

**ஞாயிற்றுவழிபாடே சிவன்வழிபாடு**

ஞாயிற்றுக்கு ஆதியில் வழங்கிய பெயர் சிவன் என்பதாகும். உலகில் ஒருபெரிய வெள்ளப்பெருக்கு நேர்ந்ததென்றும் அதற்குப் பிழைத்திருந்த ஒருவரிலிருந்து மக்கள் பெருகினார்கள் என்றும், இவ்வுலகின் ஆங்காங்கு வாழும் மக்கள் எல்லோரிடையேயும் ஓர் ஐதீகம் வழங்குகின்றது. இதனால் உலகமக்கள் எல்லோரும் ஒரு கூட்டத்தினராக வாழ்ந்து கொண்டிருந்தபோது ஒருபெரிய வெள்ளப்பெருக்கு உண்டாயிற்றென்றும், அவ்வெள்ளப்பெருக்கில் பிழைத்திருந்த மக்கள் சிலரிடமிருந்து மீண்டும் இவ்வுலகில் மக்கள் பெருகினார்கள் என்றும் நாம் உய்த்துணர வேண்டியிருக்கின்றது. வெள்ளப்பெருக்குக்குப் பிழைத்திருந்த மனு ஞாயிற்றின் புதல்வன் என்று சொல்லப்படுகின்றார்.இதனால் பெரியவெள்ளப்பெருக்கு உண்டான காலத்திலேயே ஞாயிற்றுவணக்கம் மக்களிடையே நன்குவேரூன்றியிருந்தது என அறிகின்றோம் (சிவன், ப.2). ஞாயிறு வழிபாடு தோன்றுவதற்கான காரணம் சொல்லப்பட்டுள்ளது.

எகிப்தியமக்கள் ஞாயிற்றை அமன், ஒசிறிஸ், ரா முதலிய பெயர்களால் வழிபட்டார்கள். சுமேரியர் ஆண், எல் முதலிய பெயராலும், பபிலோனியர், பால் (Baal), பேல் (Bel), மாடுக் முதலிய பெயர்களாலும், அசீரியர், அசுர் என்னும் பெயராலும், பொனீசியர் பால் என்னும் பெயராலும், சின்ன ஆசியமக்கள் சூரியா, அதாத் என்னும் பெயர்களாலும், இந்திய மக்கள் ஆண், சிவன், எல் முதலிய பெயர்களாலும்வழிபட்டனர்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இந்தியா, சுமேரியா முதலிய நாடுகளில் ஆண் என்பதே கடவுளின் சாலப் பழைய பெயராகக் காணப்படுகின்றது. ஆண் என்பது தொடக்கத்தில் ஞாயிற்றையும், பின் கடவுளையும், பின் உயர்திணை ஆண்பால் படர்க்கை ஒருமையையும் குறிக்க வழங்கிற்று. "எல்லே இலக்கம்" (தொல். சொல். இடை. 21) என்பது தொல்காப்பியம். மற்ற பெயர்களைவிடச் சிவனையே சாலச்சிறந்த பெயராக மக்கள் ஞாயிற்றுக்குத் தொடக்கத்தில் இட்டு வழங்கினார்கள். மொகஞ்சதாரோ முத்திரைகளின் ஆண் தலைமையான தெய்வம் எனக்கூறப்பட்டுள்ளது. சிவனைக் குறிக்கும் பசு பதிக் கடவுளும் ஆண்கடவுளரே ஆவர். ஞாயிறு ஒவ்வொருமாதத்திலும் தங்கும் வீடும் ஒவ்வோர் வடிவுடையதாகக் கொள்ளப்பட்டு மக்களால் வழிபடப்பட்டது. இக்கடவுளுக்கு வாகனம் இடபம்.கிரேக்கர் இடபத்தை "எபாபஸ்" என்னும் பெயரால் வழிபட்டனர். யூதமக்கள், இஸ்ரவேலர், கிரேக்கர், உரோமர் ஆகியோர் இடபத்தை வணங்கினர். தெரபோஅம் (Teroboam) என்பவர் இரு இடபக் கன்றுகளைச் செய்து ஒன்றைப் பெத்தெலிலும், மற்றதைத் தாய் (Dai) என்னும் இடத்திலும் வைத்தனர் (சிவன், ப.8).

ஞாயிற்றைக் குறிக்க ஆங்கில மொழியில் வழங்கும் "சன்" என்னும் சொல் சிவன் என்பதன் திரிபு எனக்கருத இடமுண்டு. கிழக்குத்திசையினின்றும் இச்சொல் கொண்டு வரப்பட்டதாகக் கருதப்படுகிறது. பாலஸ்தீனியர் "சிவன்" என்பதைச் சியன் என வழங்கினார்கள். ஆதியில் மக்கள் சிவன் என்னும் ஞாயிற்றுக்கடவுளை மலைமுகடுகளில் கண்டு வணங்கினார்கள். ஆகவே மலைமுகடுகள் கடவுளுக்குஉறைவிடம் என்று கருதப்பட்டன. மலை இல்லாத நாடுகளில் மக்கள் மலைபோன்ற முக்கோணமான செங்குன்றுகளை எழுப்பி அவைமீது ஞாயிற்றைப் போன்ற வட்டவடிவமான வடிவத்தை வைத்து வழிபட்டார்கள். எகிப்தியரின் கூர்நுதிச்சமாதிகள் ஞாயிற்றுக்கடவுளின் கோயில்களே ஆகும். இலிங்கம் என்பதற்கு அடையாளம் என்பது பொருள். முக்கோண வடிவான கற்களே பின்பு அடிஅகன்று நுனிஒடுங்கிய கற்களாக மாறின. ஒபிலிஸ்க் (Obelisk) எனப்படும் சதுரவடிவான தூண்களும் ஞாயிற்றுத்தூண்களாகும். விவிலிய மறையில் பீதெல் என்று சொல்லப்படுவன மரங்களின்கீழ் நிறுத்தப்பட்ட சிவலிங்கங்களே ஆகும்.

புத்தமதத்தின் அடிப்படை ஞாயிற்றுவழிபாடே என்பது அவர்களின் மதக்குறியாகிய சுவத்திகத்தைக்கொண்டு நன்குஅறியலாகும். சுவத்திகம், சிலுவை முதலியன ஞாயிற்றைக் குறிக்கும் அடையாளங்கள் என்கின்றனர் உலக மத வரலாறுகளை ஆராய்ந்தோர். மேற்கு ஆசியநாடுகளில் மக்கள், தந்தைக்கடவுளாகக் கருதப்பட்ட கற்றூண்களை ஞாயிறென்றும், தாய்க்கடவுளாகக் கருதப்பட்ட மரத்தூண்களைத் திங்கள் என்றும் கொண்டு திங்களை ஞாயிற்றின் மனைவியாக்கினர். ஆகவே கற்றூண்களுக்குப் பக்கத்தில் மரத்தூண்கள் நடப்பட்டு வழிபடப்பட்டன. திங்களைப் பெண்கடவுளாகவும், பூமியைத் தாய்க்கடவுளாகவும், வானத்தைத் தந்தை கடவுளாகவும் கொள்ளும் மதமும் இலிங்க வழிபாட்டை ஒப்ப உலகம் முழுமையிலும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பரவியிருந்தது. ஞாயிற்றுவணக்கம் ஓங்கிய காலத்தில் அம்மையப்பர் கடவுளர் கற்றூண், மரத்தூண் வடிவுகள் வாயிலாக வழிபடப்பட்டனர். பின்பு அரசன் ஞாயிற்றுக்கடவுளாக மாறுகிறான். மக்கள் சிவனை அரசவடிவினராகக் கொண்டு வழிபடலாயினர். அரசி தாய்க் கடவுளாகக் கருதப்பட்டு வழிபடப்பட்டாள்.

ஞாயிற்று வணக்கமுள்ள நாடுகளில் சிவப்புஆடை மிகவும் உயர்ந்த உடையாகக் கருதப்பட்டது. ஞாயிறு சிவந்தநிறமுடையதாதலின் ஞாயிற்றுக்கடவுளை வழிபடும் குருமார் ஆதியில் செக்கர்வானம் போன்ற ஆடைகளை உடுத்தினர். எகிப்து, பாபிலோன் முதலிய நாடுகளில் கடவுள் விக்கிரகங்களுக்குச் சிவப்பு ஆடைகளே உடுக்கப்பட்டன. இன்றும் உரோமன் கத்தோலிக்க போப்பாண்டவர் ஸ்கார்லெட் (Scarlet) எனும் சிவப்பு ஆடையையே அணிவர். இம்முறையைப் பின்பற்றியே புத்த சமயத்தினரும் மஞ்சள் ஆடையை உடுத்துவர்.தமிழ், சிவன் என்னும் இருசொற்களும் ஒரே பொருளுடையன. சிவன் என்னும் சொல் ஆதியில் ஞாயிற்றைக் குறித்தது. தமிழ் - ஞாயிற்றைக் குறித்த சொல்லின் திரிபு என்பர். தமிழ் தாமம் எனும் சொல்லிலிருந்து தோன்றியது என மாகறல் கார்த்திகேய முதலியார் தமது மொழிநூலில் குறிப்பிட்டுள்ளார். தாமம் என்பதற்கு ஞாயிறு, ஒளி எனும் பொருள்கள் உள்ளன. தாமுஸ், தாமஸ், எல் எனும் பெயர்கள் ஆதிமக்களால் ஞாயிற்றைக் குறிக்க வழங்கிய பெயர்களுள் சிலவாகும். ஞாயிறு வழிபாட்டின் முக்கியத்துவம் கருதி நம் முன்னோர்கள் கண்கெட்ட பிறகு சூரியநமஸ்காரமா? என்று கேட்பதுண்டு. காலைக் கதிரவனின் ஒளி மேனியில்படுவதால் பலசத்துக்கள் உடலுக்குக் கிடைக்கின்றது. எனவே தான் இன்றும் கிராமப்புறங்களில் காலையில் சூரியவெளிச்சம் படும்படிக் குழந்தைகளைக் கிடத்துவதுண்டு. கண்பார்வை அதிகமாகக் கிடைக்கும் என்று நம்புகின்றனர். ஆக மொத்தத்தில் சூரியனின் ஆற்றலும், அதனால் கிடைக்கின்ற நன்மைகளும் அதிகம் என்பது தெளிவாகிறது. மக்கள் இன்று இதை உணர்ந்து செயல்படுகின்றனர்.

**தொகுப்புரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பொங்கலை அறிவியலோடு இணைத்துப் பார்த்தவிதம், கதிரவனைக் கம்பர் கண்டவிதம், இயற்கையை இறைவனாக வணங்குதல், சூரியவழிபாடு, அணுவின் பேராற்றல், நனவிலியுளம், ஞாயிறுவழிபாடு சிவன்வழிபாடாக மாறிய வரலாறு - முதலியன தெளிவாக்கப்பட்டுள்ளன.

**துணைநின்ற நூற்கள்**

[1] ஔவை துரைசாமிப்பிள்ளை. *புறநானூறு.* தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, முதல்பதிப்பு, 1970.

[2] ந.சி. கந்தையாபிள்ளை. *சிவன்.* திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

லிமிடெட், சென்னை, முதல்பதிப்பு, 1947.

[3] கல்லாடனார். *தொல்காப்பியம்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, முதல்பதிப்பு- 1964.

[4] ந. சுப்புரெட்டியார். *அணுக்கரு பௌதிகம்.* தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, முதல்பதிப்பு, 1966.

[5] ந .சுப்புரெட்டியார். *அறிவியல் விருந்து.* தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, முதல்பதிப்பு, 1967.

[6] செந்துறைமுத்து. *கம்பன் இயற்கை வர்ணனைகள்.* அருணோதயம் பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 1959.

[7] தெ. ஞானசுந்தரம். *கம்பநாடர் புதியவெளிச்சம்.* தாயம்மை பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு 2002.

[8] நாராயணவேலுப் பிள்ளை. *கம்பராமாயணம்.* திருமகள்நிலையம், சென்னை, முதல் பதிப்பு, 2005.

[9] பழ. பழனியப்பன். *கம்பனில் இயற்கை.* கபிலன் பதிப்பகம், புதுச்சேரி, முதல்பதிப்பு, 2016.

[10] அ.ப.பாலையன். *நற்றிணை.* சாரதா பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 2012.

[11] பாரதியார். *பாரதியார் கவிதைகள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, நான்காம்பதிப்பு, 1997.

[12] புலியூர்க்கேசிகன். *திருமுருகாற்றுப்படை.* சாரதா பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 2013.

[13] மெய்யப்பன். *சூரிய ஆற்றலும் பயன்களும்.* முருகன் பதிப்பகம், தஞ்சாவூர், முதல்பதிப்பு, 1987.

[14] விஜயபாரதி. *சக்தி வாழ்க.* மெர்க்குரி பதிப்பகம், கோயமுத்தூர், முதல்பதிப்பு, 1967.

[15] வேங்கடசாமிநாட்டார். *சிலப்பதிகாரம்.* சாரதா பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 2012.

## References

[1] Bharatiyar. *Bharatiyar Kavithaikal.* Manivaasakar Padipagam, Chennai, Fourth Edition, 1997
[2] D.Ganasundram. *Kambanadar - Puthiya velicham.* Thai Ammai Publishers, Chennai, Second Edition, 2002.
[3] Kalladanaar.*Tholkaapiyam*. Tirunelveli Thennindiya Saiva Siddantha Noorpathipu Kalagam, Tirunelveli, First Edition, 1964
[4] Na. C. Kanthayapillai. *Sivan*. Tirunelveli Thenindiya Saiva Siddandha Noorpathippu Kalagam Limited, Chennai, First Edition, 1947
[5] Meyappan. *Suriya Atralaum Payankalum.* Murugan Publishers, Tanjore, First Edition, 1987
[6] Narayanavelu Pillai. *Kambaramayanam.* Thirumagal Nilayam, Chennai, First Edition, 2005
[7] Ovai Duraisamy Pillai. *Puranaanooru*. Thennindiya Saiva Siddantha Noorpathipu Kalagam, Tirunelveli, First Edition, 1970
[8] A. Pa. Palayan. *Natrinai.* Sarada Pathipakam, Chennai, First Edition, 2012
[9] Pazha Pazhaniyapan. *Kambanil Iyarkai*. Kabilan Pathipagam, Puducherry, First Edition, 2016
[10] Puliyurkesikan. *Thirumurukattupadai*. Sarada Padipagam, Chennai, First Edition, 2013
[11] Senthuraimuthu. *Kamban Iyarkai Varunanaikal*. Arunothayam Publishers, Chennai, First Edition, 1959.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[12] Na. Subbu Reddiyar. *Anukkaru Powthikam*. Thamizh Puthakaalayam, Chennai, First Edition, 1966.
[13] Na. Subbu Reddiyar. *Ariviyal Virunthu*. Thamizh Puthakaalayam, Chennai, First Edition, 1967.
[14] Venkatasami Naatar. *Silapathikaaram.* Sarda Padipagam, Chennai, First Edition, 2012
[15] Vijayabharathi. *Sakthi Vazhlka.* Mercury Book Publishers, Coimbatore, First Edition, 1967

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் தருக்கவியல் அணுகுமுறை - *சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்*

## An Introduction to Prof. Na. Subbu Reddiar's Logical Approach of *Saiva Siddantham Or Arimugam*

**முனைவர் இரா. மணிமேகலை**, தலைவர் (பொ) & உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. R. Manimegalai**, Head (i/c) & Assistant Professor of Tamil,
Kongunadu Arts and Science College, Coimbatore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-0909-4181**
**DOI: 10.5281/zenodo.7279866**

### Abstract

*Prof. Na. Subbu Reddiar has been published texts in various contexts. He has written hundreds of books in the fields of religion, philosophy, literature, grammar, sociology, science and children's literature and has made great contributions to Tamil Society. The majority of the texts written by the professor are religious. Prof. Na. Subbu Reddiar's book, "Introduction to Saiva Sidhantham", explains the basic tenets of Saivam. In this book, he explains the philosophy of Saiva Sidhantham in a deep logical approach. Although the philosophical principles in Tamil have been developed through epics since the Sangam period, only "Panniru Thirumurai" form the basic texts of Tamil Saivam philosophy. Saiva Sidhantham has a unique place in the Indian philosophical tradition and is the basis for cultural heritage. Saiva Sidhantham is a philosophy that arose based on three facts. They are Pathi, Pasu, Paasam. This is called a triplet. In the introduction of this book, Prof. Subbu Reddiar has created based on the data on these ideals from Tamil spiritual texts. Prof. P. Krishnan mentions and records "Saiva Sidhantham Or Arimugam" as the first study book on Saiva Siddhanta. In the book, the professor writes logically on the three-dimensional interpretation of two thousand years of philosophical philosophies based on enlightenment, fact-finding, and theory.*

**Keywords:** Pathi - Lord, Pasu - Soul, Paasam - Strings, Philosophy, *Siddantham Or Arimugam*.

### ஆய்வுச் சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் படைப்புகள் பல்வேறு பொருண்மைகளில் நூல்களாக வெளிவந்துள்ளன. சமயம், தத்துவம், இலக்கியம், இலக்கணம், சமூகவியல், அறிவியல், சிறுவர் இலக்கியம் போன்ற துறைகளில் நூற்றுக்கணக்கான நூல்களை எழுதித் தமிழ் ஆய்வுலகிற்குப் பெரும் பங்களிப்பைச் செய்துள்ளார். பேராசிரியர் படைத்துள்ள நூல்கள் பெரும்பான்மையானவை சமயம் தொடர்பானவையாகும். பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் "சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்" என்னும் நூல் சைவ சமய அடிப்படை மெய்யியல்களை விளக்குகின்றது. இந்நூலில் சைவ சித்தாந்த மெய்யியலை ஆழமான தருக்கவியல் அணுகுமுறையில் விளக்குகின்றார். தமிழில் மெய்யியல் கோட்பாடுகள் சங்க காலம் தொடங்கி*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*காப்பியங்கள் வழியே வளரலாயிற்று என்றாலும் தமிழ்ச் சைவ மெய்யியலின் அடிப்படை நூல்களாகப் பன்னிரு திருமுறைகளே அமைகின்றன. இந்திய மெய்யியல் மரபில் தனக்கெனத் தனித்துவமான இடமும் பிற தரிசனங்களுக்கான அடித்தளமாகவும் விளங்குவது சைவ சித்தாந்தமாகும். சைவ சித்தாந்தம் மூன்று உண்மைகளின் அடித்தளத்தில் எழுந்த மெய்யியலாகும். அவை பதி, பசு, பாசம் என்பனவாகும். இதனை முப்பொருள் என்பர். இவை குறித்த தரவுகளைப் பேராசிரியர் தமிழ் நூல்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு இந்நூலைப் படைத்துள்ளதாக இந்நூலின் அணிந்துரையில் பேராசிரியர் பெ. கிருஷ்ணன் குறிப்பிடுவதுடன் சைவ சமயத்தின் முதல் ஆய்வு நூல் என்றும் பதிவு செய்துள்ளார். நூலில் பேராசிரியர் இரண்டாயிரம் ஆண்டுகால தத்துவ தரிசனங்களில் அறிவாராய்ச்சி, மெய்ப்பொருள் காணல், அறக்கோட்பாடு ஆகிய அடித்தளத்தில் முப்பொருள் விளக்கத்தை தருக்கவியல் முறையில் எழுதித் செல்கின்றார்.*

**குறிப்புச் சொற்கள்:** பதி – இறைவன், பசு – உயிர், பாசம் – தளைகள், *பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.*

**முகவுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் படைப்புகள் பல்வேறு பொருண்மைகளில் நூல்களாக வெளிவந்துள்ளன. சமயம், தத்துவம், இலக்கியம், சமூகவியல், அறிவியல், சிறுவர் இலக்கியம் போன்ற துறைகளில் நூற்றுக்கணக்கான நூல்களை எழுதித் தமிழ் ஆய்வுலகிற்குப் பெரும்பங்களிப்பினைச் செய்துள்ளார். தமிழில் வெளியாகியுள்ள நூல்களில் அன்னாரின் படைப்புகள் தனித்துவமான இடத்தைப் பெறுகின்றன. அவற்றுள் பெரும்பாலானவை சமயம் தொடர்பான நூல்கள் என்றாலும் அனைத்துச் சமயங்களுக்கும் அடிப்படை 'சமயங்கடந்த மெய்ப்பொருளே' என்பதையே அவர் தம் தனிப்பண்பாகக் கொண்டுள்ளமையும் அவரது எழுத்துகளின் வழியே அறியலாகிறது. இக்கட்டுரை அன்னாரின் 'சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்' நூலிற்குரிய ஆய்வுரையை வழங்குவதாக அமைகிறது.

**மெய்யியல் அடித்தளம்**

தமிழ் மக்களின் வாழ்வில் சிவமும் தமிழும் பிரிப்பின்றி இருந்துள்ளமை இலக்கியங்களின் வழி காணலாகின்றது. சிவம் என்னும் சொல்லின் அடிப்படைச் சொல்லாகச் செம்மை எனும் தமிழ்ச்சொல் விளங்குகிறது. சங்க நூல் தொடங்கித் தமிழ்ச் சமயத்தில் சைவம் செல்வாக்குடன் திகழ்ந்து வந்துள்ளது. தமிழில் மெய்யியல் தத்துவம் தொடக்க கால சங்க நூல்கள், காப்பியங்கள் ஆகியவற்றின் வழியே வளரலாயிற்று என்றாலும் தமிழ்ச் சைவ மெய்யியலின் அடிப்படை நூல்களாகப் பன்னிருதிருமுறைகளே அமைந்தன. மெய்யியல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பது உலகியல் வாழ்வுக்கு வேறான வறண்ட பாலை அல்ல என்ற கொள்கை வலுப்பெற்றது. சாதிமத வேறுபாடின்றித் தமிழ்ச் சைவம் என்ற பெருநிழலின் கீழ் அனைவரும் இணைந்து அறவாழ்வின் அடிப்படையில் இறையின்பத்தைத் துய்த்து வாழலாம் என்ற தெளிவினை உலகிற்கு வழங்கியது.

**சைவசித்தாந்தம்**

இந்திய மெய்யியல் மரபில் தனக்கெனத் தனித்துவமான இடமும் பிறதரிசனங்களுக்கான அடித்தளமாகவும் விளங்குவது சைவசித்தாந்தம் எனும் தென்னிந்திய தத்துவமாகும். சைவசித்தாந்தம் மூன்று உண்மைகளின் அடித்தளத்தில் எழுந்த தத்துவமாகும். அவை பதி, பசு, பாசம் என்பனவாகும். அதாவது இறைவன், உயிர், தளை எனும் முப்பொருள்களைக் குறிக்கும். இக்கொள்கைகளை விளக்க எழுந்த மெய்யியல் நூல்கள் பதினான்கு சாத்திர நூல்களாகும். பதிமூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய மெய்கண்டார் முதனூலாக மொழிந்த சிவஞானபோதம் சைவசமயத்தின் தத்துவக் கொள்கைகளை விளக்கும் இன்றியமையாத முதல் அடிப்படை நூலாகும்.

**நூல் அறிமுகம்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் இந்நூலினை மெய்கண்டார் திருவடிக்குக் காணிக்கை ஆக்கியுள்ளமை போற்றத்தக்கது.

**சாத்திர நெறியைத் தூவெனத் தள்ளித்**
**தன்முனைப்பு எனும்மது மாந்திப்**
**பூத்திரள் காவில் துழைமது கரம்போல**
**புல்லிய பொறிவழி யோடி**
**மீத்திகழ் கின்ற மூவகைப் பசுக்கள்**
**வெறியெலாம் ஒடுங்கமுந் நான்கு**
**சூத்திரம் தன்னால் யாத்தமெய் கண்டார்**
**துணையடிக்கு உரியதுஇந் நூலே (சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம், பக்திப் படையல்)**

என்று மிக அழகிய செய்யுளை நூலின் முகப்பில் தந்துள்ளார். 'புனிதம் எனும் அத்துவித மெய்கண்டநாதன் மெய்கண்ட தேவனின் பொன்னடிகட்கு' என்று சமர்ப்பணமும் செய்கிறார். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் நூலுக்குப் பதிப்புரை வழங்கியுள்ளனர். அதில் 'சைவசித்தாந்தத்தைப் பற்றிய விரிவான நூல் எழுதித் தர வேண்டுமென்று அருங்கலைக்கோன். கலைமாமணி பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களைக் கேட்டுக் கொண்டதற்கிணங்க இவ்விரிவான நூலை அவர் எழுதித் தந்துள்ளார். வைணவம், சைவம் ஆகிய இரு சமயக் கருத்துகளையும் நன்கு கற்றுத் துறை போனவர் இரண்டிலும் ஆழங்கால்பட்டவர்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இத்துறையில் இதுபோல் விரிவான நூல் இதுவரை வந்ததில்லை' என்று நூலின் தன்மையையும் பேராசிரியரின் திறமையையும் புகழ்ந்து எழுதியுள்ளார். இந்நூலுக்குரிய அணிந்துரையை சென்னைப் பல்கலைக்கழக சைவசித்தாந்தத் துறையின் தலைவர் பேராசிரியர் டாக்டர் பெ. கிருஷ்ணன் அவர்கள் தந்துள்ளமை சாலப் பொருத்தமானதாகும். சைவ சமயக் கருத்துகளை மையப்படுத்தித் தமிழ் நூல்களை மட்டுமே ஆதாரங்களாகக் கொண்டு வரலாற்று நோக்கில் எழுதப்பட்ட 'முதல் ஆய்வு நூல் இது என்றால் மிகையாகாது' (மேலது) என்று உரைப்பதனால் நூல் வெளிவந்த ஆண்டாகிய இரண்டாயிரத்தில் சைவசித்தாந்த ஆய்வு நூல்களின் முன்னோடியாகத் திகழ்கிறது எனலாம்.

நூல்முகம் எனும் தலைப்பின் கீழ் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் இந்த நூல் சைவ சமயத்தைச் சார்ந்த மக்களுக்கும் சைவ சமயத்தைச் சாராத பிறருக்கும் கல்லூரி மாணவர்கட்கும் பயன்படக் கூடியது' என்று உரைக்கின்றார்.

**நூலின் உள்ளடக்கம்**

சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம் எனும் இந்நூல் எட்டுத்தலைப்புகளின் வழியே சித்தாந்தச் செய்திகளை விளக்கிச் செல்கிறது.

- **சித்தாந்த சாத்திரங்கள்**
- **சந்தானாசாரியர்கள்**
- **தத்துவங்கள் 1 - பதி**
- **தத்துவங்கள் 2 - பசு**
- **தத்துவங்கள் 3 – பாசம்**
- **வீடுபேற்றுக்கு வழிகள்**
- **வீடுபேறு**
- **வழிபாட்டு முறைகள்**

என்று சைவசித்தாந்த தத்துவத்தின் அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கி நன்கு விளக்கிச் செல்கிறது.

**சித்தாந்த சாத்திரங்கள்**

சமயமும் தத்துவமும் இணைந்து செல்கின்ற தன்மையை இந்திய தரிசனங்களில் காணமுடிகிறது. மேற்கண்ட தலைப்பின் கீழ் சைவ சாத்திரங்களாகிய பதினான்கு நூல்கள் குறித்த தகவல்களை எந்தத் தரவுகளும் விடுபட்டு விடாமல் தருகின்றார். நூலின் தொடக்கத்திலேயே, "இந்திய தரிசனங்களில் மேனாட்டு தரிசனங்களில் இருப்பது போன்று சமயம் வேறு தத்துவம் வேறு என்று பிரித்துப் பேசும் மரபு இல்லை. சைவசித்தாந்தமாயினும் சரி விசிட்டாத்வைதமாயினும் சரி சமயமும் தத்துவமும் இணைந்தே (Integrated) இருக்கும் மரபுதான் உண்டு. இந்த நோக்கத்தின் அடிப்படையில் இந்நூலை அணுக வேண்டும்" என்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நூலை வாசிப்பவர்கள் அணுக வேண்டிய முறையை எடுத்துரைத்து, அதனோடு நில்லாமல் இந்தியத் தத்துவம் மற்றும் சமயம் ஆகிய இரண்டும் இணைந்து செல்லும் பாங்கைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

**சந்தானாசாரியர்கள்**

முதல் தலைப்பிலே பதினான்கு நூல்களை அறிமுகம் செய்த ஆசிரியர் இத்தலைப்பில் அப்பதினான்கு நூல்களையும் இயற்றிய ஆசிரியர்களைக் குறித்த வரலாற்றினை வழங்குகிறார். வரலாற்றினைக் கூறும்போது அவர்கள் வாழ்வில் நிகழ்ந்த செய்திகளைச் செவிவழிச் செய்திகளோடு ஒப்பிட்டும் கூறுகிறார். சைவசந்தானக் குரவர்களின் வாழ்வு நிகழ்வுகளோடு ஒப்புமையுள்ள வைணவ அடியார்களின் வரலாறுகளையும் ஆங்காங்குச் சொல்லிச் செல்வது இவரது சிறப்பாகும்.

**தத்துவங்கள் (பதி, பசு, பாசம்)**

மூன்று தலைப்புகளின் கீழ் சைவ சித்தாந்த அடிப்படைக் கோட்பாடுகளை விளக்குகிறார். சத்காரியவாதத்தை விளக்குவதற்கு எளிய எடுத்துக்காட்டுகளைக் கூறிப் புரியவைக்கின்றார். பன்னிருதிருமுறைகள், திருக்குறள், பதினான்கு சாத்திரங்களிலிருந்து மேற்கோள்களைக் காட்டுகிறார். குறிப்பாக, பதியின் இலக்கணத்தைப் பற்றிக் கூறும்போது, "பதியின் தடத்த நிலைகள் யாவும் அதன் சக்தியினால் ஆவனவாகும். இதனால் சொரூபநிலையில் பதி சிவம் என்றும், தடத்த நிலையில் சக்தி என்றும் பேசப்படும். சொரூப நிலையில் சக்தி செயற்படாது அடங்கியிருத்தலால் பதி சிவம் என ஒன்றேயாக இருக்கும். சக்தி செயற்படும் தடத்த நிலையில் சிவம் அதனோடு அச்செயலையெல்லாம் உடன் இயைந்து இயற்றி நிற்றலால் சிவமும் சக்தியும் இரண்டாய் – அம்மை அப்பனாய் – மாதொருபாகனாய் - இரண்டாய்த் தோற்றம் அளிக்கும்" என்று நுட்பமாக விளக்கிச் செல்கிறார் பேராசிரியர். இதற்குச் சான்றாக,

**பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுரு**
**தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும் (புறநானூறு, பா.1)**
**ஓர்உரு ஆயினை மானாங் காரத்து**
**ஈர் இயல்பாய் (திருஞானசம்பந்தர் தேவாரம், 1.128, அடி 1-2)**

என்னும் பாடல்களைக் காட்டிச் செல்கிறார். இதன் வாயிலாக, பேராசிரியரின் சங்க இலக்கியப் பயிற்சியும் தேவாரத் திருமுறைகளில் இருந்த தேர்ச்சியும் புலனாகிறது. பதிஉலகத்தை நோக்குங்கால் பராசக்தியில் ஒரு சிறுகூறு உலகத்தைத்தைத் தொழிற்பட முற்படும். அதனை ஆதிசக்தி என்று கூறுகின்றனர். அது, சிவம் தோன்றாது உலகமே தோன்றுமாறு பிறப்பு, இறப்புகளில் செலுத்தி நிற்றலால் திரோதான சக்தி என்ற திருப்பெயரையும் உடையது என்கிறார். சிவப்பிரகாசத்தில் உமாபதிசிவனார் சக்தியின் நிலைதனைக் கூறுமிடத்து,

**பரந்தபரா பரைஆதி பரந்து இச்சை**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பரஞானம்கிரியை ... (சிவப்பிரகாசம், உமாபதி சிவனார்-2)**

என்கிறார். சக்தியைக் குறித்து பாரதியார் குறிப்பிடும் பொழுது,

**பரிதிஎன்னும், பொருளிடையேய்ந்தனை;**

**பரவும் வெய்ய கதிரெனக் காய்ந்தனை;**

**கரிய மேகத் திரள் எனச் செல்லுவை;**

**காலு மேகத் திரள் எனச் செல்லுவை (மகா சக்தி வாழ்த்து, பாரதியார் – 3)**

என்கிறார்.மரபு வழியாக வந்த சக்தி குறித்த சிந்தனைத் தொடர்ச்சியைப் பாரதியாரின் கவிதைகளிலும் காணமுடிகிறது.

சக்தியின் வகைகளைக் கூறுமிடத்து திரோதானசக்தி உலகத்தைத் தொழிற்படுத்த வேண்டும் என இச்சித்தலால் அஃது இச்சா சக்தி என்று பெயர் பெறுகின்றது. அதற்கான வழிகளை அறிதலால் ஞான சக்தி என்ற திரு நாமத்தினை ஏற்கின்றது. அவ்வழியேதொழிற்படுதலால் கிரியா சக்தி என்ற திருப்பெயர் பெறுகிறது என்று கூறி பஞ்ச சக்திகளைத் தெளிவுபடுத்துகின்றார்.

**வீடுபேற்றுக்கு வழிகள்**

தத்துவ விசாரணைகள் மனிதனுக்கு வாழ்வியலுக்கும். பேரின்பத்துக்கும் வழிகாட்ட வேண்டும். இம்மைக்கும் மறுமைக்கும் உரிய நெறிகளைக் காட்டுவதே உண்மையான மெய்யியல் பண்பாகும். நூல்கள் கூறுகின்ற வழிகளெல்லாம் நடைமுறையில் பயன்பாட்டுக்கு வருவனவாக இருந்தலும் வேண்டும். ஆதலால் ஆசிரியர் நூல் நுவலும் வழிகள், ஞானம் வருவதற்குரிய வழிகள், சிவபுண்ணியங்கள், வீடுபேற்றிற்கு வழி, தீக்கை வகைகள், சிவநெறி ஒழுக்கம் என்னும் உட்தலைப்புகளின் மூலம் அரிய விரிவான விளக்கம் தந்து தெளிவுபடுத்தியுள்ளமை போற்றத்தக்கதாகும். இந்தத் தலைப்பை விளக்கம் செய்ய வந்த பேராசிரியர், ”பாசத்தினின்னும் நீங்கி பதியினை அடையும் வழிகள் சாதனங்கள் எனப் பெயர்பெறும். அவற்றை விளக்குவது இந்த இயல்” என எளிமையாகவும் இனிமையாகவும் குறிப்பிட்டுள்ளார். மேலும், தன் கருத்துக்கு வலிமை சேர்க்கும் வகையில்,

**சைவ சமய மேசமயம்**

**சமயா தீதப் பழம்பொருளைக்**

**கைவந் திடவே மன்றுள்வெளிக்**

**காட்டும் இந்தக் கருத்தைவிட்டு**

**பொய் வந்துழலும் சமயநெறி**

**புகுத வேண்டா முத்திதரும்**

**தெய்வ சபையைக் காண்பதற்குச்**

**சேர வாரும் செகத்தீரே (தாயுமானவர் பாடல்கள், காடும் கரையும் . 2)**

என்ற பாடலை மேற்கோள் காட்டிச் செல்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தருக்கவியல் அணுகுமுறை**

இரண்டாயிரம் ஆண்டுகால தத்துவ தரிசனங்களின்அறிவாராய்ச்சி, மெய்ப்பொருள், அறக்கோட்பாடு ஆகியவற்றின் பதிவுகளைத் தன்னகத்தே உள்வாங்கிக் கொண்டு உண்மைகள் மூன்று அவை இறை, உயிர், தளை என்ற நிச்சயத்தைத் தந்த தத்துவதரிசனம். சைவசித்தாந்தம் ஆகும். ஒன்றாய், உடனாய், வேறாய் எனும் மூன்று நிலைகளில் இறைவன் உயிர்களிடம் நிற்கின்ற நிலையை சங்கரர், இராமானுசர், மத்துவர் ஆகியோர் தனிக் கொள்கையாக வகுத்து, அதுவாக மட்டுமே இறைவன் நிற்பதாய்க் கணித்தனர். அக்கொள்கையை விளக்க விரிந்த நூல்களை இயற்றினர். ஆனால் சைவசித்தாந்தத்தின் தலைமணியாகத் திகழும் சிவஞானபோதம் இம்மூன்று கொள்கைகளையும் உள்ளடக்கித் தெளிவான கோட்பாட்டினை உருவாக்கியது. மேலும் உயிர் பற்றிய ஆய்வுகளில் உள்ள குழப்பங்களைத் தடைவிடை முறையில் விளக்கி எது உயிர் எனும் வினாவிற்கு எவையெல்லாம் உயிராகாது என்று கூறுவது மிகச்சிறந்த தர்க்கவியல் விளக்கமாகும்.

'இருதிறன் அறிவுளது இரண்டல ஆன்மா' (சிவஞானபோதம், சூத்திரம். 7) என்ற கோட்பாட்டைச் சித்தாந்த சைவம் உயிருக்கு வகுக்கின்றது. இதனை விளக்கும் பேராசிரியர் வேற்றுமை உருபுகளின் வழி வைத்து மிகத் தெளிவாக உயிரின் இயல்பைச் கட்டுகிறார்.

**1. இரண்டாம் வேற்றுமைத் தொகையில் வைத்து நோக்கு போது சத்து, அசத்து என்னும் இரண்டு பொருளையும் அறியும் அறிவினையுடையது.**

**2.மூன்றாம் வேற்றுமையைப் பொருத்திக் காணில் இருதிறன்களாகியசத்து அசத்துகளின் உதவியால் அறியும் அறிவினையுடையது.**

**3.ஏழாம் வேற்றுமைப் பொருளில் சிந்திக்கின் இருதிறன்களாகிய சத்து, அசத்து ஆகிய இரண்டின் கண்ணும் நின்று அறியும் அறிவுடையது என்னும் பொருளைத் தெளியலாம். இவ்வெடுத்துக்காட்டுகளின் மூலம் உயிரானது சார்ந்ததன் வண்ணம் செயல்படக் கூடியது. அறிவித்தால் அறியக் கூடியது. சிற்றறிவு உடையது என்பதையும் பேராசிரியர் விளக்கிச் செல்கிறார்.**

**நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு (குறள். 452)**

எனும் குறளை எடுத்துக்காட்டுவதும் சாலப்பொருத்தமேயாகும்.

வினைகளை உயிர் அனுபவிக்கும் முறைமை குறித்து விவரிக்கின்ற பகுதியில் அளப்பரிய கருணையால் இறைவன் உயிர்களுக்கு வினையை அருத்தி வைக்கின்ற அருமையை உருக்கமுடன் கூறுகிறார். அப்போது 'ஆருயிர்களின் மீது எல்லையற்ற கருணையுடைய இறைவன் ஆணவத்தின் ஆற்றல் கெடுத்தற்பொருட்டே வினையின் பயனை ஊட்டுவிக்கின்றான் என்பது சித்தாந்த உண்மை' என்கிறார். ஓர் உழவன் செய்த பயிர் தன்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பயனைக் கொடுக்கும் காலத்தில் அஃது அவனுக்கு உணவாய்ப் பயன்படுதலேயன்றி அடுத்த ஆண்டிற்கும் விதையாக அமைந்துவிடுவதைப் போலவே வினையானது நுகர்வினை, வருவினை, பழவினை என்று சக்கரம் போலச் சுழல்கிறது.

'ஆணவம்' என்ற அறியாமை நிலையைப் பல சமயங்கள் ஒப்புக் கொள்வதே இல்லை. ஏனெனில் அது எளிதாகக் காட்சியில் உணரக்கூடியது அல்ல. மாயை, கன்மம் குறித்த காட்சிகளை உணர்தல் என்பது இயலக்கூடியது. ஆனால் ஆணவம் உயிரின் அறிவை அணுத் தன்மைப் படுத்தித் தன் இருப்பையும் காட்டாமல் இருக்கக் கூடியது. அதனைப் பேராசிரியர் 'ஆணவம் இல்லாத பொருளன்று உள்ள பொருளே. அறிவுடைய பொருளாகிய உயிரை அறியாமையுடையதாகச் செய்வதே இதன் இயல்பாகும். அறிவே உயிரின் இயற்கை என்றும் அறியாமை அதற்கு ஆணவமலத்தின் சேர்க்கையாலாகிய செயற்கையே என்பதும் சித்தாந்த உண்மை' என்று தெள்ளத் தெளிவான விளக்கத்தைத் தருகிறார்.

பதி இலக்கணம் கூறும்போது உண்மை, பொது என்ற இருநிலைகளிலும் உயிர்களின் பொருட்டு அருள்புரிவதையும் எண்குணங்களையும், ஐந்தொழிலையும், திருமேனியின் வகைகளையும் பற்றி விரிவாக எடுத்துரைத்துள்ளார். இந்தியாவில் தோன்றிய சமயங்கள் முத்தொழிலை இறைவன் புரிவதைக் குறித்துப் பேசுவதைப் பரவலாகக் காணமுடிகிறது. ஆனால் சித்தாந்த சைவம் ஐந்தொழில் ஆற்றுதலே இறையின் பூரணப் பண்பு என்ற கொள்கையைக் கொண்டது. ஆனால், சித்தாந்த சைவம் ஐந்தொழில் ஆற்றுதலே இறையின் பூரணப்பண்பு என்ற கொள்கையைக் கொண்டது. சிவபெருமான் நிகழ்த்தும் ஊன நடனம் குறித்து மனவாசகங்கடந்தார் தனது உண்மை விளக்கம் நூலில் குறிப்பிடும் பொழுது,

**தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்**
**சாற்றியிடும்அங்கியிலே சங்காரம் – ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் முத்தி**
**நான்றமலர்ப்பதத்தே நாடு (உண்மை விளக்கம், மனவாசகங்கடந்தார் – 35)**

என்கிறார்.இறைவனது ஐந்தொழில்களைக் குறித்துப் பேராசிரியர் விளக்குமிடம் மிகச் சிறப்பு வாய்ந்தது.

- படைத்தல் என்பது 'அறிவில்லாத உலகினை அறிவுடைய ஆருயிர்கட்குத் துணையாகும் வகையில் அமைத்து இரண்டனையும் ஒன்றுபட பிணைத்து வைப்பதே படைத்தல் தொழிலாகும்' என்று உயிர்களுக்காக உலகைப் படைத்தல் எனும்விவரிக்கிறார்.
- காத்தல் - 'வினை நீக்கத்திற்கு உரித்தாகிய வழியில் நின்று நீக்கப் பெறுதலே காத்தலின் பயனாகிறது' என்கிறார். எனவே காத்தல் தொழில் என்பதற்கு உலகியலில் நாம் கொண்டிருக்கும் உடைகின்றது. ஏனெனில் 'காத்தல்' என்பதற்கு உடலினை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உயிரினை, உலகினைப் பாதுகாத்தல் என்ற புரிதலே பெரும்பாலான மக்களுக்கு உள்ளது. தத்துவ அடிப்படையில் அதனைக் கூர்ந்து நோக்கும் போது உண்மை புலனாகின்றது. வினைகள் நீங்கும் காலம் வரை காக்கப்படுதல் ஆண்டவன் கட்டளையாக இருக்கின்றது.

- அழித்தல் என்பது 'பிறப்பு இறப்புகளில் உழலுகின்ற இளைப்பு நீங்குதலே அழித்தலின் பயனாகிறது' என்கிறார். இதன் மூலமாக உடல், கருவி, உலகம். அனுபவம் ஆகியவற்றைப் பிரித்து விடுதல்தான் 'அழித்தல்' என்னும் கருணை மிகு தத்துவம் என்பது புரிகிறது.
- மறைத்தல் என்பது தன்னைக் காட்டாது உலகின்பங்களைக் காட்டி மறைத்தல் என்றும் தன்னைக் காட்டி உயிர்களை மலங்களிலிருந்து எடுத்தல் இருதிறப்படும். இவ்விடங்களில் மிக ஆழமான செய்திகளை எளிய முறையில் உணரவைத்தலினால் இந்நூலின் முதன்மை நோக்கம் நிறைவேறுகிறது எனலாம்.
- அருளல் என்பது மறைத்தலின் மற்றொரு நிலையாகிய இறைவன் தன்னைக் காட்டுதலே அருளாக மாறி ஆனந்தம் விளைவிக்கின்ற தன்மையை இன்ப அன்பு விளையுமாறு விவரிக்கின்றார்.

**முடிவுரை**

‘சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்' எனும் தலைப்பில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் படைத்துள்ள இந்நூல் சைவ அருங்கலைக் களஞ்சியமாக விளங்குகிறது. இந்நூலானது தொல்காப்பியம், இலக்கியம், திருக்குறள், பன்னிரு திருமுறைகள், மெய்கண்ட சாத்திரங்கள் முதலாய நூல்களில் இருந்து கருத்துக்களைப் பொருத்தமுற எடுத்தாண்டு ஆய்வுநெறிச் சுடராக வழிகாட்டி வாழ்விக்கின்றது.

**குறிப்பு நூல்கள்**

[1] சுப்புரெட்டியார், ந. *சைவசித்தாந்தம் ஓர் அறிமுகம்.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. இரண்டாம் பதிப்பு-2004.

[2] பரிமேலழகர் (உரையாசிரியர்). *திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. பதிப்பு-1982.

[3] சிவஞான சுவாமிகள். *சிவஞானபோதச் சிற்றுரை.* சைவசித்தாந்த மகா சமாஜம், சென்னை. பதிப்பு – 1940.

[4] ஔவை சு. துரைசாமிப் பிள்ளை (உரை). *புறநானூறு.* கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு 1968.

[5] *திருஞானசம்பந்தர் தேவாரம், முதல் திருமுறை.* தருமையாதீன பதிப்பு, மயிலாடுதுறை.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[6] உமாபதி சிவனார். *சிவப்பிரகாசம்.* அருள்நந்தி சிவம் அருட்பணி மன்றம், திருநெல்வேலி. பதிப்பு-1992.

[7] பாரதியார். *பாரதியார் கவிதைகள்.* கற்பகம் பதிப்பகம், சென்னை, பதிப்பு- 2015.

[8] மனவாசகம் கடந்தார். *உண்மை விளக்கம்.* திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு-2005.

[9] தாயுமானவர். *தாயுமானவர் பாடல்கள்.* மணிவாசர் பதிப்பகம், சிதம்பரம், நான்காம் பதிப்பு – 2004.

**References**

[1] Subbu Reddiar, N. *Saivasidhantham Oor Arimugam*. Saivasidhantha Nool Pathippu Kazham, Chennai, Second Edition – 2004.
[2] Parimelazhar (Uraiasiriar). *Thirukkural Moolamum Parimelazhar Uraium*. Saivasidhantha Nool Pathippu Kazham, Chennai. Edition – 1982.
[3] Shivagana Swamigal. *Shivagana Botha Chitrurai*. Saivasidhantha Maha Samajam, Chennai. Edition – 1940.
[4] Avaai S. Dhuraisamy Pillai (Uraiasiriar). *Purananooru*. Kazha Veliedu, Chennai. Reprint, 1968.
[5] *Thiruganasambanthar Thevaram, Muthal Thirumurai*. Dharumaiaathena Pathippu, Mayiladuthurai.
[6] Umapathisivanar. *Sivappirakaasam*. Arulnandhi Sivam Arutpanimanram, Thirunelveli. Edition – 1992.
[7] Bharathiar. Bharathiar Kavithaikal. Karpakam Pathippakam, Chennai, 2015.
[8] Manavasakam Katanthaar. *Unmaivilakkam.* Thirunelveli Saivasiththaantha Nurpathippu Kazhakam, Chennai. Edition – 2005.
[9] Thayumanavar. Thayumanavar Padalgal. Manivasagar Pathippagam, Chidambaram. Forth Edition – 2004.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பார்வையில் மாணிக்கவாசகர்

## Manikkavasakar in the Vision of Professor N. Subbu Reddiar

ச. மலர்விழி, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பச்சையப்பன் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**C. Malarvizhi,** Assistant Professor of Tamil, Pachaiyappa's College, Chennai, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-2997-1359
**DOI: 10.5281/zenodo.7275428**

### Abstract

*According to the Tamil proverb "A Flame Lamp always needs a stimulus. Professor Subbu Reddiar lit a Saiva renaissance and performed dedicated service to Saiva Bhakti literature. He also delineated Manikkavasakar's concepts Mukti Neri, and Bhakti Neri and clarifies the truth simply related to the devotional norms.* Cēkkiḻār *praised the history of the 63 Nayanmars in his "Periya Puranam". Manikkavasagar's "Tiruperundurai" has been described in awe what the fears and anxieties of the enlightened one in worldly life with the spiritual acts. Manikkavasakar also explained the merits of the Shivaneri ideology. The shiva principles tell about the three malevolent things that a man should avoid. They are Anava (Pride), Kanma (Hypocrisy) and Maya (Illusion) prevalent among human beings and the darkness that lurks outside them. When Manikkavasakar moves towards Thiruvannamalai on a pilgrimage, Markazhi Monday comes with the divinity power 'Thiru' and the power of 'EM' (Individual) combined with the vitality of the genre 'Pavai'. Standing outside the perception of Manikkavasaka's Thiruvembavai, Professor Reddiar has highlighted that the worldly life is the union of Shiva and Shakti intellectually in his writings. Manikkavasakar sings and turns in heartfelt introspection, worshipping the Lord of Thirukovaiyar and making himself the lover of the Lord and the leader who wants to attain the bliss of the Lord's Thiruvadi. Professor's views of the spiritual riches of the works of Manikkavasakar are admirable. Hence, the article elicits the chosen ideas of Saiva Poet Manikkavasakar from Subbu Reddiar's perspective.*

**Keywords:** Manikkavasakar, Vision, Professor N. Subbu Reddiar.

### ஆய்வுச்சுருக்கம்

*சுடர் விளக்காயினும் தூண்டுகோல் தேவை என்ற வாக்கிற்கு இணங்க பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் சைவ சமய விளக்கினை ஏற்றி சைவப்பணி ஆற்றியிருப்பினும் மாணிக்கவாசகரின் முக்தி நெறி, பக்தி நெறி, என்ற இரண்டடைப் பற்றி முக்தி நெறியின் அருமையையும், பக்திநெறியின் உண்மையையும் உணர்ந்து தெளிவுறுத்துகின்றார். சேக்கிழார் பெருமான் 63 நாயன்மார்களின் வரலாற்றினை அவரவர் அவதரித்தத் தலங்களுக்குச் சென்று பெருமைப்படுத்தினார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். திருவாதவூர் சென்று வந்தவுடன் அவ்வூரின் சிறப்பினையும் அவ்வூரில் அவதரித்த மாணிக்கவாசகரின் பிறப்பு, சிறப்புப் பற்றியும் வானோர்க்குக் கனவிலும் அகப்படாத மெய்ப்பொருள் மாணிக்கவாசகரின் கருணைத் தன்மையினால் அருளியச் சிறப்பினை விளக்குகின்றார். மாணிக்கவாசகர் திருப்பெருந்துறை முதல் திருத்தில்லையில் அருளியச் செயல்களைக் கொண்டு உலக வாழ்க்கையில்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*அறிவுடையோரின் அஞ்சத்தக்கன மற்றும் அஞ்சத்தகாதன இவை இவை என அச்சப்பத்தில் விளக்கியவற்றை கூறியுள்ளார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன்னை ஆட்கொண்ட இறைவனோடு உரையாடுவதாக அமைந்த திருவாசகத்தினைப் பற்றியும் சான்றோர் கருத்துக்களையும் கூறியுள்ளார். மாணிக்கவாசகர் ஆற்றிய சிவநெறிக் கொள்கையின் சிறப்புகளையும் விளக்கமுற எடுத்துரைத்துள்ளார். அஃதாவது ஆணவ மலத்தின் இயல்பினை உயிர்களின் அகத்தே மறைந்து நிறகும் மலமும் அவ்வுயிர்களின் புறத்தே மறைத்து நிற்கும் இருளும் ஆணவ மலத்தின் இரு வேறு திறங்கள் என விளக்குகின்றார். வாதவூரடிகள் திருத்தலங்கள் தோறும் சென்று வழிபடுகையில் திருவண்ணாமலைச் செல்லும்போது மார்கழித் திங்கள் வருகின்றது 'திரு' எனும் தெய்வத்தன்மையும், 'எம்' எனும் உயிர்த்தன்மையினையும் இணைத்து 'பாவை' எனும் பெண்களின் சக்தியினையும் சேர்த்து திருவெம்பாவையாக இறைவனை வைகறைப் பொழுதில் துயில் உணந்தெழுந்து ஆதியும் அந்தமும்இல்லா அருட்பெரும் சோதியாக பெண்கள் நீராடித் தொழும் இறைவனாகவும் வழிபடும் பெண்களுக்கு நற்குணங்கள் எல்லாம் நிறைந்த கணவன் வாய்க்கப் பெறுவான் என்றும் சிவனும் சக்தியும் இணைந்த நிலையே இவ்வுலக வாழ்வு என்பதனை மாணிக்கவாசகரின் திருவெம்பாவையினை புறத்தே நின்று அகப்பார்வையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் சிறப்பித்துள்ளார். திருக்கோவையாரில் தன்னேரில்லாத தலைவனை வணங்கி இறைவனை ஆருயிர் காதலனாகவும் இறைவனின் திருவடிப் பேரின்பத்தைப் பெற விரும்பும் தம்மை தலைவியாகவும் கொண்டு நெஞ்சுருக அகம்பொருள் துறையில் அமைந்தத் திருப்பாடல்களைப் பாடி மாணிக்கவாசகர் இருப்த்தைந்து கிளவிக் கொத்துகளாகப் பகுத்து இருபத்தைந்து அதிகாரங்களாக அதுவும் இறையனார் களவிய உரையின் அடியொற்றி மேற்கொள்ளப்பட்டுள்ளது எனவும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் விளக்கம் அளித்துள்ளார். மாணிக்கவாசகரின் அருளியச் செல்வங்களை பன்முகப்பார்வையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தனது 73வது அகவையில் ஆய்வு செய்த பாங்கு போற்றுதலுக்குரியதாக அமைந்துள்ளது.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர், சைவப்பணி.

**முன்னுரை**

சைவ சமயம் தழைத்தோங்க சைவ சமயச் குரவர்கள் நால்வரோடு, நாயன்மார்களும், சிவனடியார்களும், சைவப் பணி ஆற்றியுள்ளனர். அவர்களைப் போன்று நா.சுப்புரெட்டியாரும் சைவப் பணியினை சைவ சமய விளக்காக ஏற்றி சைவ சமயத்திற்கு கொடையாக அளித்துள்ளனர். சேக்கிழார்ப் பெருமானே பெரிய புராணத்தில் மாணிக்க வாசகரை

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இணைக்காத நிலையில் பரஞ்ஜோதி முனிவரின் திருவாதவூரடிகள் புராணம் கொண்டு சிறப்புற அமைத்துள்ள ஆய்வுநூலினைப் படித்து பயன் பெற்றதன் சிறப்பினை வெளிக்கொணவர்தே ஆய்வின் நோக்கமாகும்.

ந.சுப்புரெட்டியார் அவர்களின் 73வது அகவையின் நினைவாக வெளிவந்த நூல் மாணிக்கவாசகர். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் மாணிக்கவாசகர் என்ற ஆய்வுத் தேரினை சைவ சமய நன்னெறி வழியில் அழைத்துச் சென்றுள்ளார். திருநீறு அணிந்த நெற்றியுடன் தமிழ் மணம் கமழும் சிந்தனையுடனும் சொல்லிலே இனிமையுடனும் தமிழுணர்ச்சியுடனும் திருமாலை நெஞ்சில் நிறுத்தி பாமாலைத் தொடுத்திருந்தாலும் சைவ சமய விளக்கினையும் ஒளிப் பெற ஏற்றியுள்ளார். திருஞான சம்பந்தர், அப்பர், சுந்தரர் என மூவரைப்பற்றியும் ஆராய்ந்ததுப் போன்று மாணிக்கவாசகர் பற்றி அறிய பலச் செயல்களை படிக்க படிக்கத் திகட்டாத செந்தமிழில் திருவாதவூரையும், வாதவூரடிகளையும் பற்றித் தெரியாதவர்கள் கூட ஒரு முறை இந்நூலைப் படித்தால் திருவாதவூருக்கே சென்றது போன்றும் வாதவூரடிகளோடு வாழ்ந்த உணர்வும் தோன்றும் வண்ணமாகப் படைத்துள்ளார். பேராசிரியரின் பார்வையில் மாணிக்கவாசகர் அருளியச் செல்வங்களை எல்லாம் ஆய்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**வாதவூரடிகளின் பிறப்பும், சிறப்பும்**

மதுரை மாநகருக்கு சிறப்பும் புகழும் தரக்கூடியவைத் தமிழ்ச்சங்கமும், மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலும் இருப்பதும் போன்றே மதுரைக்கு அருகிலேயே உள்ள திருநகராம் திருவாதவூரின் சிறப்பே அவ்வூரில் பிறந்த வாதவூரர் அடிகளாலே சிறப்புப் பெற்றது. அவரின் பிறப்பினை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் பரஞ்சோதி முனிவர் வாயிலாக, எடுத்துரைக்கின்றார். சம்புபாத இருதயருக்கும், சிவஞானவதியாரும் செய்த தவப்பயனாலும், இறையருளாலும் ஒரு மகன் பிறந்தார். அவர் வேதநெறியும் சிவாகமநெறியும் விளங்க புத்த இருள் மறைய இளஞ்சூரியனாக திருவாதவூரர் என்ற திருநாமம் கொண்டு அவதரித்தார். திருவாதவூரடிகளின் முன்னையப் பிறப்பாக இவர் சிவகணத் தலைவராக இருந்தார் என்றும் சிவபெருமானின் கட்டளைப்படி திரு உத்திர கோசமங்கையில் திருமுறைகளைக் காக்கும் பொருட்டும் தலங்கள் தோறும் சென்று எம்மை புகழ்ந்து பாடுக ஒரு தளத்தில் மும்மலங்களை நீக்கி பேரின்ப வீடு பேற்றினை அளிப்போம் என உத்திரகோசமங்கை புராணத்தில் கூறப்பட்டதனைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறியுள்ளார். உத்திரகோசமங்கை ஆதி சிவன் எனப் போற்றப்படும் தலம் இங்கு தேவார மூவர் இக்கோயிலினை வழிபட்ட வரலாறு இல்லை. ஆனால் வாதவூரடிகள் அங்குத் தங்கியிருந்ததன் அடையாளமாக வாதவூரடிகளின் முனிவர் போன்றச் சிலை இன்றளவும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

காணப்படுவதால் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தலங்கள்தோறும் சென்று ஆய்வுகளை மேற்கொண்டுள்ளார் என்பது தெளிவுற அறிய முடிகின்றது.

**வாதவூரடிகளின் சிறப்புகள்**

திருவாதவூரடிகள் தவத்தினால் பெற்ற குழந்தை அல்லவா அவரை நலமுற பெற்றோர் வளர்த்தனர். ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் பதினாறு வயதிற்குள்ளாகவே கற்றுத் தெளிந்துள்ளார் என்பதை உறுதி செய்ய பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பரஞ்ஜோதி முனிவர்கள் பாடல்களையே மேற்கோளாகக் கொடுக்கின்றனர். பதினாறு வயதினிலே இத்தகு கல்வி ஆற்றல் சிறந்து விளங்குகின்றார் என்ற செய்தி மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரியும் அரிமர்த்தன பாண்டியன் செவிக்கு எட்டுகின்றன. உடனே மன்னன் அரசவையில் உயர்ந்த பதவியாம் அமைச்சர் பதவியினை வழங்க ஓலை அனுப்பியதனை அறிந்த வாதவூரடிகளின் பெற்றோரும் ஊர் மக்களும் ஆனந்தக் களிப்பில் வாதவூரரை மதுரைக்கு அனுப்பி வைத்தனர். இளம் வயதில் தன் திறமையினாலே வாதவூரர் உயர்ந்த பதவியினை அடைந்தார். பெற்றோர் தம் மக்களை பொருள் நிறைந்தவராக வளர்ப்பதை விட அறிவு நிறைந்தவர்களாகச் செய்வதே சிறப்புடைமை என்பதற்கு இணங்க வாதவூரடிகள் சிறப்புப் பெற்றார். மன்னன் மேலும், "தென்னவன் பிரம்மராயன்" என்ற விருதினையும் வழங்கி கௌரவித்தான். அமைச்சர் பதவி என்பது சாதாரண பதவியன்று, அரசனுக்கு தக்க வழிகளை ஆராய்ந்து கூற வல்லவராகவும், அறம் அறிந்து அறிவு நுட்பத்தோடு செயலாற்றும் வல்லமை படைத்தவராகவும் திருவாதவூரடிகள் செயல்பட்டார். பாண்டிய மன்னன் ஆட்சியில் அல்லல் இன்றி சிறப்புடன் ஆட்சிப் புரிந்து வந்தார். வாதவூரர் தற்பெருமை கொள்ளவில்லை. கடமை, கண்ணியம்,கட்டுப்பாடு என்பதனை பெரிதாக எண்ணி செயல்பட்டார். மக்கட்கு ஏற்படும் துன்பங்களை நீக்கி பஞ்சம் நீங்க அறச்சாலைகள் அமையவும் ஏற்பாடுகள் செய்தார். வள்ளுவன் வாக்கில்,

**தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்**
**சொல்லலும் வல்ல தமைச்சு (குறள். 634)**

என்ற வள்ளுவம் காட்டும் காரியங்களை ஆராய்ந்து திறனுடன் செயலாற்றும் அமைச்சராக தன்னை அர்ப்பணித்துச் செய்யும் செயலைச் செவ்வனேச் செய்யும் சிறப்புடையவராக திருவாதவூரடிகள் திகழ்ந்தார் என்கிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

**பெருந்துறையில் அருளியச் செயல்கள்**

மதுரையில் வாதவூரர் அமைச்சராக இருந்த நிலையில் காலச் சூழலுக்கேற்ப வெள்ளப் பெருக்கம், பஞ்சமும் மாறி மாறித் தோன்றுகின்றது. மேலும் புறச்சமய வாதிகள் சைவசமய உண்மைகளைக் கடிந்து பேசுவது இவையெல்லாம் வாதவூரடிகளின் நெஞ்சினை வருடியது. அமைச்சர் பணியில் துன்பம் இல்லையென்றாலும் உலக வாழ்வு என்பது நிலையற்றது

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்றும், அமைச்சர் பதவிக்கும் அன்புகனிந்த அகப்போராட்டத்திற்கும் சற்று தொடர்பற்ற நிலைத் தோன்றுகிறது. பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு என வாழ்க்கை வட்டத்தில் ஏற்படும் இன்ப துன்பங்களை எண்ணி வருந்தியதன் விளைவாகத் தான் அவர் மனதில் மனிதப் பிறப்பின் சித்தாந்தத்தினை டார்வின் கொள்கையோடு வாதவூரடிகள் சிந்தித்தார் என்கிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்,

**புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகியப்**
**பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்**
**கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
**வல்லசுராகி முனிவராய்த் தேவராய்ச்**
**செல்லாஅ நின்றத் தாவர சங்கமத்துள்**
**எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் (சிவபுராணம், 26 - 31)**

எனத் திருப்பெருந்துறையில் அருளிய சிவபுராணத்தை தெய்வத்தமிழில் உயிர்கள் மாறி மாறி பிறந்துழலும் நிலையை கூறியுள்ளார். சிவபுராணம் பாடுவதற்கு முன்னர் அமைச்சராக மனக் குழப்பத்தில் இருந்த போது அரசன் சோழநாட்டில் குதிரைகள் வாங்கி வர வாதவூரடிகளை அனுப்ப தேவையான பொருள்களை அரசுக் கருவூலத்தில் இருந்து எடுத்துச் சென்று குதிரைகள் வாங்க அரசர் உத்தரவிடுகின்றார். வாதவூரடிகள் ஆலவாய் "இறைவனிடம் குதிரை வாங்கச் செல்லும் இப்பயணம் இடையூறின்றி நிறைவேற அருள்புரிவாயாக" என இறைவனை வேண்டியே விடை பெறுகின்றனர். நல்லக் காரியங்களைத் தொடங்கும். முன் இறைவணக்கம் என்பது மாறாத மரபாக இருந்தமை அறியப்படுகின்றது. அரசனே நேரில் சென்று வாதவூரடிகளை வழியனுப்பும் செயல் அமைச்சரின் வாழ்வுக்கு இறுதி மரியாதை செலுத்துவதுப் போன்று இருப்பதாக பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கூறுகின்றார். இப்பயணம் புண்ணிய பயணமாக அமைவதாகும் என்றும் கூறுகின்றார்.

திருவாதவூரர் திருப்பெருந்துறையினை நெருங்க நெருங்க மனதில் ஏதோ ஒரு இனம் புரியா மாற்றம் மனமானது ஆனந்தக் களிப்பில் கூத்தாடுவதுப் போன்றும் இரண்டு கைகளும் தலைமேற்குவிப்பதும் போன்ற உணர்வு தோன்றியவராய் இருக்க, காதில் "நமசிவாய" என்ற ஒலி கேட்டவண்ணம் இருக்க அவ்வொலியைப் பின் தொடர்ந்துச் செல்கின்றார். சென்று பார்க்கையில் சீடர்கள் புடைசூழ அந்தணத் திருமேனிக் கொண்டு திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் அமர்ந்திருப்பதனைக் காண்கின்றார். வாதவூரடிகளின் உள்ளத்தில் தேனும் பாலும் அமுதமாகித் தித்தித்து ஊனையும் உள்ளத்தையும் உருக்கவல்ல சிவஉணர்வு மனத்தகத்தே தோன்றியவராய் நாவினில் கலைமகளே வந்து அமர்ந்ததும் போன்றும் உணர்கின்றனர். திருப்பெருந்துறைக்கு குதிரைகள் வாங்க அமைச்ச படைக் காப்பாளர்களுடனும், சேவகர்களுடன் வந்த வாதவூரடிகள், இறைவன் கண்டவுடன் அரசன்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கொடுத்தப் பொருட்கள் எல்லாம் தன்னுடையது என எண்ணி உரிமையோடு செலவிடும் நிலைக்கு மாறியமை இறைவனைக் கண்டவுடன் தன்னிலை மறத்தல் என்ற நிகழ்வே ஐம்புலன்களை அடங்கிய நிலையிலேயே இறைவனைக் காண இயலும் என்றத் தத்துவத்தினை நமக்கு உணர்த்துகின்றார். இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு மாணிக்கவாசகர் எனப் பெயர் மாற்றம் மட்டும் பெறவில்லை பல அரிய திருப்பதிகங்களை மாணிக்க வரிகளாக திருப்பெருந்துறையில் அருளியுள்ளார். இவற்றிற்கு காரணம் அந்தணர் வடிவில் இருந்த சிவபெருமாள் திருபெருந்துறையில் இருப்பது வாதவூரடிகளை ஆட்கொண்டுள்ளனர். தன்னை ஆட்கொண்ட இறைவனிடம் இரும்பைக் கவரும் காந்தமாக இறைவனையே பற்றிக் கொண்டார் வாதவூரடிகள். இறைவன் மீது மாணிக்கம் போன்று பாமாலைகளைத் தொடுத்ததனால் இறைவனே இவருக்கு "மாணிக்கவாசகர்" என்ற திருநாமத்தைச் சூட்டியருளினார். இறைவன் மாணிக்கவாசகருக்காக நரியை பரியாக்கியதும், பிட்டுக்கு மண் சுமந்ததும், பிரம்படிப்பட்டதும் என பலத் திருவிளையாடல்களை நிகழ்த்தியுள்ளார். இறைவன் மாணிக்கவாசகருக்கு அருளியதன் பயனாக மாணிக்கவாசகர் அமைச்சராகச் சென்றவர் ஆண்டினத் திருக்கோலம் பூண்டார். திருப்பெருந்துறையின் பெயர் காரணத்தை கடவுள் மாமுனிவர் அழகாக விளக்குகின்றார்.

**வெம்பிறவி வேலைதனில் வீழ்பவர்க ளெல்லாம்**
**நம் புசிவ நாமமெனு நற்புணை பிடித்தா**
**லெம்பர னருட்கரையி லேறுதுறையாமா**
**லம்புவி மொழிந்துள பெருந்துறை யதன்பேர்" (கடவுள் மாமுனிவர் – திருவாதவூரைகள் புராணம்)**

திருப்பெருந்துறையின் வழியில் செல்லும் போது மரம், செடி, கொடிகள் கூட உணர்ச்சிமிக்கவையாக இருப்பதனைப் போன்று உணர்கின்றார். அதனால் தான் மரத்தடியில் இருந்த இறைவனால் ஆட்கொள்ளப்பட்டார். இறைவனை இறைஞ்சி அழுதுப் பாடும் பாடல்கள் வாசகமாக மாணிக்க மழைபொழி மாமுகில் என்று போற்றும் முகமாகத் திருப்பாடல்கள் அமைந்துள்ளன. திருப்பெருந்துறையில் அற்புதம் நிகழ்ந்தமையால் "அற்புதப்பத்தும்" இறைவனை தலைமேற்குவித்து வணங்கியதனாலும் இறைவனை தலைமேல் வணங்க வேண்டும் என்பதனால் சென்னிப் பத்தும் இதில் இறைவனின் திருவடியினை மாணிக்கவாசகருக்கு சூட்டியதனால் தான் பெற்ற சுகத்தினை மற்ற அடியாரும் மகிழ்ந்து போற்றும் முறையில் அமைத்துள்ளார்.

**என்னையும் ஒருவனாக்கி இருங்கழல்**
**சென்னியில் வைத்த சேவக போற்றி (போற்றி திருவகவல், அடி 129, 130)**

என்ற அடிகளது வாய்மொழியினால் விளங்கும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**திருச்சதகத்தின் சிறப்புகள்**

இறைவன் திருப்பெருந்துறையில் இருந்து செல்கையில் குருந்தமரத்தடியில் என் திருவடிகளைக் கொண்டு வழிபடுக என மாணிக்கவாசகருக்கு ஆணையிட்டதன் பேரில் குருந்தமரத்தடியில் பீடம் வைத்து வழிபடுகின்றார். பரஞ்சோதியார் இவரை "அழுதடி அடைந்த அடிகள்" எனப் போற்றும் அளவுக்கு அடிகளின் வரிகளும் சரி. அவரது தோற்ற வெளிப்பாடும் அமைகின்றது. திருச்சதகப்பனுவலில் மெய்யுணர்தல், அறிவுறுத்தல், சுட்டறுத்தல், ஆத்துமசுத்தி, கைம்மாறு கொடுத்தல், அனுபோக சுத்தி, காருணியத்திரங்கல், ஆனந்தத் தழுங்கல், ஆனந்தபரவசம், ஆனந்தாதீதம் எனப் பத்துத் தலைப்புகளில் சிற்றிலக்கிய வகையில் அமைந்த பதிற்றுப் பத்தந்தாதி அமைப்பில் அமைந்தவை சிறப்புக்குரியது ஆகும். இவற்றில் "யான்" எனது என்ற பற்றுகள் அற்று போவது போன்றப் பயன் தருவனவாக அமைகின்றன. இறைவன் மீது பேரன்பு செலுத்துவதற்கு தடையாக உள்ள உலகப் பற்றுகளையெல்லாம் அறவே நீக்க வேண்டும் என்ற மனஉறுதியோடு அமைந்துள்ளன. குறிப்பாக மெய்யுணர்தலில் இறைவனை நினைந்த அளவில் உண்டாகும். உள்ளத்தோடு கொண்ட உணர்வு, உடம்பு, மயிர்சிலிர்த்தல், நடுக்கம் உண்டாதல், நெஞ்சம் உருகுதல், இறுதியில் கண்ணீர் அரும்புதல் என திருச்சதகத்தின் அன்புரிமைச் செயல்களாகவே, அருளியுள்ளார் வாதவூரடிகள் என பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் விளக்கமுற கையாண்டுள்ளார். மேலும், கைம்மாறு கொடுத்தல் என்பது ஒருவர் நமக்கு உதவி செய்தார். எனில் நம்மால் இயன்ற கைம்மாறு செய்தல் என்பது மனிதப் பண்புகளில் உயர்ந்தது. அதிலும் இறைவனுக்கு எனில் சற்றே மேம்படுத்தி அடிகள் அவர்கள் இறைவனின் பேரளுக்கு இரங்கி கைம்மாறாக தாம் ஒன்றும் செய்ய இயலாத நிலையினை நினைத்து இரங்கி அடிகள் தம்மையே கைமாறாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிப் போற்றுகின்றார்.

**ஆலவாயில் அருளியப் பதிகம்**

திருப்பெருந்துறையில் இருந்து மீண்டும் பாண்டிய மன்னனைக் காண இறைவன் குதிரைகளோடு வருவோம் என்ற ஆணையினைத் தலைமேல் கொண்டு திருஆலவாய் திரும்புகின்றார். பாண்டிய மன்னனைக் கண்டவுடன் வாதவூரடிகள் வணங்குகின்றார். மன்னன் கேள்விக்கணைகளுக்கு எல்லாம் இறைவனை நினைத்துப் பதில் அளித்து ஆலவாய் இறைவன் உறையும் திருக்கோயிலையடைந்து மனதளவில் புரவி வருமா இல்லையா என்ற மனக்குழப்பத்துடன் இருக்கையில 'அஞ்சேல் அஞ்சேல்' என்ற அருள்வாக்கு ஒலித்தனைக் கண்டு மனநிறைவு அடைகின்றார். மாணிக்கவாசகரைக் கண்டவுடன் உறவினர்கள் அரசர் பால் அவர் நடந்துக் கொண்டது. நெறியற்ற செயல் என கூறுயவர்களுக்கு வாதவூரர் தனது திருப்பாடலில்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**...செற்றமும் செருக்கும் காய்ந்தோம்**
**தீவினை இரண்டும் தீர்ந்தேம்**
**கற்றைவார் சடையான் கோலம்**
**காட்டியாட் கொண்ட அன்றே (திருச்சதகம் – திருவாசகம்)**

என உறவினர்களை நோக்கி உமக்கும் எனக்கும் தொடர்பும் இனி இல்லை, உலகத்தின் மீது வெறுப்பு, விருப்பும் இல்லை, இறைவன் என்னை மானிடத் திருமேனிக் கொண்டு ஆட்கொண்ட அன்றே என் பிறப்பு ஒழிந்தது. மன்னனின் கடனைத் தீர்ப்பேன் எனக் கூறி உறவினர்களைத் திருப்பி அனுப்புகின்றார். மன்னனிடம் அமைச்சர் பலரும் கூடி வாதவூரர் பித்தனாகி விட்டனர் எனக் கூறி பலத்துன்பங்களுக்கு ஆளாக்கியப் போதெல்லாம் இறைவன் துணை நின்று நரிகளைப் பரியாக்கி, பிட்டுக்கு மண் சுமந்து, பிரம்படிப்பட்டெல்லாம் மாணிக்கவாசகருடையத் துயரினைப் போக்குகின்றார். இறைவனே கதியென்பருக்கு அவர்களோடு ஒருவராக நின்று இன்பம் தீர்ப்பவனே ஆலவாய் இறைவன்.

**திருவுத்தர கோசமங்கையில் அருளியப் பதிகம்**

குருவடிவில் தோன்றிய இறைவன் ஆணைப்படி திருவுத்தர கோசமங்கையினை அடைகின்றார் மாணிக்கவாசகர். இறைவனை நோக்கி அடியேன் என்னைக் கைவிட்டு விடுவாயோ என்று நெஞ்சுருக நீத்தல் விண்ணப்பம் விடுக்கின்றார். ஐம்பது திருப்பாடல்களைக் கொண்டு அந்தாதித் தொடையில் அமைகின்றது.

**கடையவ னேனைக் கருணையி**
**னாற்கலந் தாண்டு கொண்ட**
**விடையவனே விட்டிடுதி... (நீர்த்தல் விண்ணப்பம் – திருவாசகம்)**

எனக் அனைவருக்கும் கடையவனான என்னையே ஆட்கொண்டாய் எனவும், நீரற்ற குளத்தில் சிறு மீன் துவண்டதுபோல, இறைவனைப் பிரிந்து யான் வாடினேன் என்றும், வாழ்த்தினாலும் வைதாலும் என் தவறுகளுக்கு யானே வருந்துவன், என்னை விட்டு விடாதே என்று விண்ணப்பம் விடுக்கின்றனர். இறைவனின் ஆணையான அட்டமா சித்திகளைப் பெறுவாய் என்பதனை,

**பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்**
**கட்டமா சித்தி அருளிய வதுவும் (கீர்த்தி திருஅகவல், 61-62)**

என இறைவன் இவருக்கு அட்டமாசித்திகளை உபதேசித்தார் என்பதனையும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறுகின்றார்.

**திருத்தோணிப்புரத்தில் அருளியமை**

திருப்பெருந்துறைப் புராணத்தில் மாணிக்கவாசருக்கும் இறைவனுக்கும் இடையேயுள்ள உறவு முறையினைப் பிடித்த பத்தில் அழகுறவும் உணர்வுப் பூர்வமாகவும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

திருத்தோணிப்புரத்து இறைவன் திருஞானசம்பந்தருக்கு அம்மையும், அப்பாவாகவும் வந்து அருள்புரிந்தமையினை மனதில் கொண்டு மாணிக்கவாசகர்.

**அம்மையே அப்பா ஒப்புஇலா மணியே**

**அன்பினில் விளைந்த ஆர் ஆமுதே**

**...இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்**

**எங்கு எழுந்தருளுவது இனியே (பிடித்து பத்து படம், 3)**

என எல்லா எண்ணங்களையும் விடுத்து நின் திருவடிகளையே சிக்கெனப் பிடித்தேன் என இறைவனைப் போற்றி அருளுகின்றார். பிறப்பற்றுகளையெல்லாம் அறவே நீங்குமாறு பற்றற்றான் பற்றினை இறுகப் பற்றிய பேரானந்தத்தின் முக்தியின்பத்தைப் வெளிப்படுத்துவதாகப் பிடித்தப் பத்துப் பற்றி திருப்பெருந்துறைப் புராணம் விளக்குவதாக பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் விளக்குகின்றன.

**திருக்கழுக்குன்றம் பதிகம்**

பதிகங்களால் பாடிச் சிறப்புப் பெற்ற தலங்களில் தலத்தின் பெயரிலேயே பதிகம் அமைத்தது திருக்கழுக்குன்றப் பதிகம் ஒன்று மட்டுமே, திருப்பெருந்துறையில் இறைவன் காட்சி நல்கியதுப் போன்றே திருக்கழுக்குன்றத்திலும் இறைவன் காட்சி தந்தார். அப்பெருங் காட்சியினைக் கண்ட மாணிக்க வாசகர் நெஞ்சம் உருக.

**உனக்கு இலாதது ஒர்வித்து**

**மேல்விளையாமல் என் வினை ஒத்தபின்**

**கணக்கு இலாத திருக்கோலம் நீவந்து**

**காட்டினாய் கழுக்குன்றிலே (திருக்கழுக்குன்றப்பதிகம் - 468)**

என்ற வரிகளினை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் மேற்கோள் காட்டியப் பாங்கு மாணிக்கவாசகரும் இறைவனுக்கும் இருந்தத் தொடர்பு நிலையினை உறுதிப்படுத்திக் கூறுகின்றார்.

**திருவண்ணாமலையில் அருளியச் செயல்கள்**

மாணிக்கவாசகர் மலையின் வடிவமாக இறைவன் காட்சித் தரும் திருவண்ணாமலைக்கு வருகின்றார். இந்நிலையில் மார்கழித் திங்கள் வருகின்றது. ஆண்டாள் கண்ணனை நினைத்துப் பாவைநீராடி இறைவனையே அடைந்தார். அவ்வாறே

**வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்**

**ஈண்டு முயலப் படும் (குறள். 265)**

என்ற வள்ளுவன் வாக்குப்படி பழங்காலம் தொட்டே தமிழ்ச் சான்றோர்கள் எல்லாச் செயலையும் இறைவனைத் தொழுது தொடங்குவதே வழக்கமாகக் கொண்டவர்கள் என்பதனால் மார்கழியில் இளமகளிர் ஒருவரை ஒருவர் துயில் எழுப்பி நீராடி

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அண்ணாமலையாரை வேண்டி வழிபடுகின்றார். இப்பாவை நோன்பானது திருவாதிரைக்கு பத்து நாட்களுக்கு முன் தொடங்கித் திருவாதிரையன்று முடிவு பெறும் 'திரு' எனும் தெய்வத்தன்மையும், 'எம்' எனும் உயிர்த்தன்மையும் பாவை என்பது வழிபாட்டிற்குரிய உருவத்தன்மை இவை இணைந்து ஆதியும் அந்தமும் இல்லா அருடபெருஞ்சோதியை காண மார்கழி நீராடுகின்றனர். இவற்றில் நவசக்திகளான மனோன்மணி, சர்வபூதமணி, பலப்பிரமனி, பல விகரணி, கலவிகரணி, காளி, இரௌத்திரி, சேட்டை என ஒன்பதின்மர் சேர்ந்து ஒரு சக்தி மற்றொரு சக்தியை எழுப்புவதனை திருவெம்பாவையின் தத்துவக் கருத்தாகக் கூறியுள்ளார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் திருவெம்பாவைச் சிறப்பை மட்டும் கூறாமல் திருப்பாவை, திருவெம்பாவை இரண்டையும் ஒப்பிட்டு விளக்கியுள்ளார். இரண்டின் முடிவிலும் 'எம்பாவாய்' என்ற முடிவுச் சொல் வரும். குறிப்பாக திருவெம்பாவையில்,

**முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளே**
**பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே**
**உன்னைப் பிரானாகப் பெற்ற உன் சீர் அடியோம்**
**உன் அடியார்தாள் பணிவோம் ஆங்கு அவர்க்கே பாங்கு ஆவோம்**
**அன்னவரே என் கணவர்... (திருவெம்பாவை, பா. 5)**

திருப்பாவையில் இறைவனையே கணவனாக அடைய ஆண்டாள் பாவை நோன்பிருந்தார். திருவெம்பாவையில் சிவபெருமானின் அடியவரானாலும் அவரையே என் கணவராகப் பெறும் பேற்றினை நல்குவாய் என வேண்டி வழிபடுதல் இறைவனின் அடியாரையும் மதித்துப் போற்றும் தன்மையினை மாணிக்கவாசகர் அருளியுள்ளார். திருவம்மானை என்பதும் திருவெம்பாவையில் சக்தியை முன்னிலைப்படுத்துவதுப் போன்று மகளிர் விளையாடும் விளையாட்டில் ஒன்று "அம்மானை" இவ்விளையாட்டினை ஆடுங்கால் இறைவனின் புகழினைப் பாடி விளையாடுவர் அதனால் திருவம்மானை எனப் பெயர் பெற்றது. மாணிக்கவாசகர் ஆட்கொண்டருளிய இறைவனை நினைந்து நினைந்து ஆனந்தக்களிப்பில் பேரானந்தத்தில் "அண்ணாமலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்" எனப் பாடி பரவசம் அடைகின்றார். திருவண்ணாமலையில் அருளியப் பனுவல்களில் மாலும் அயனும் கண்டற்கரிய இறைவனை திருபெருந்துறையில் கண்டதும், பந்தமெலாம் நீங்கப் பரிமேலழகராக எழுந்தருளி அளவிலா ஆனந்தம் அருளியதையும், தன்னை மதியாத இந்திரன், எச்சன், கதிரோன் முதலிய தேவர்களைத் தண்டித்துப் பெற்ற வெற்றியும், எனப் பலத் திருவிளையாடல்களையும் எடுத்துக் கையாண்டுள்ளார் எனப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் விளக்கம் அளித்துள்ளார். திருப்பாவையில் இருந்தும் மேற்கோள் காட்டியுள்ளார்.

**திருத்தில்லையில் அருளியச் செயல்கள்**

திருப்பெருந்துறையில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவுடன் இறைவனின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆணையினை ஏற்றுத் சிவத்தலங்கள் தோறும் சென்றது மட்டுமின்றி தலங்கள் – பதிகங்களையும் பாடி இறுதியாக திருத்தில்லையினை அடைகின்றார். தில்லைச் சிற்றம்பலனை வழிபட்டபடியே கண்டபத்துப்பாடியபடியே சிலையாக நிற்கின்றார். அங்குள்ளோர் இவர் பித்தனோ என எண்ணி பொன்னம்பலத்தை விட்டு வெளியேறும்படி பணிகின்றனர். சிறிது நேரத்தில் தன்னுணர்வுப் பெற்று சிவ சிவ போற்றி என்று கூறி தில்லை வீதியை வலம் வருகையில் குலாப்பத்து, கோயில் திருப்பதிகம், கோயில் மூத்த திருப்பதிகம், கீர்த்தித் திருஅகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல் என அருளிச் செய்தார்.

அச்சோப்பதிகத்தில் நாம் வியந்து ஒன்றைக் கண்டால் வியப்படைவோம் அஃதே "அச்சோ" எனக் கொண்டு இப்பதிக்கத்தில்

**முக்திநெறி யறியாத முர்க்கரொடு முயல்வேனைப்**
**பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்**
**சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட**
**அத்தனெனக் கருளியவா றார் பெறுவார் அச்சோவே (அச்சோப்பதிகம், பா.1)**

என்ற மாணிக்கவரிகளில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறுகையில் இறைவனை அடைவதற்குரிய நெறிகள் இரண்டு, ஒன்று முக்தி நெறி இது சரியை, கிரியை, யோகம், ஞானங்களால் முதிர்ந்த அறிவுடைய பெருமக்கள் மட்டுமே அறிந்து கடைப்பிடித்தற்கரிய சிறப்புடையது என்றும், பத்திநெறி என்பது பேரன்பின் முதிர்ச்சியே பத்தி என்றும் உலக மக்கள் அனைவரும் அன்பினால் பின்பற்றுதற்குரிய எளிமையானவழி, இப்பாடலில் அடிகள் முடரோடு கூடிய காலக் கிழத்திருந்த நிலையில் இறைவன் தானே எளிய வந்து பத்தி நெறி அறிவித்து பழவினைகளை எல்லாம் அறவே சிதைத்து ஒழியும்படி சித்தமலம் அறுவித்து சிவமாக்கி ஆண்டருளினான் என வியந்து கூறுகின்றார் அடிகள். மேலும், திருப்பெருந்துறையில் தன்னுடன் இருந்த அடியவர்களை வாதவூரருக்குக் காட்டிய இறைவன் "மாணிக்கவாசகர் இங்கு நில்" எனக் கூறி தன்னுடன் இருந்த அடியார்களோடு கயிலை, செல்கின்றார். இந்நிகழ்வினைக் கண்ட அடிகள் தாயினைப் பிரிந்த குழந்தைப்போல அளவிலாத் துயரம் கொண்டு அழுது புலம்புகின்றார் தம்மை ஆட்கொண்டு அருளிய குருமணியை நினைந்து நினைந்து கண்ணீர் பெருக, புணர்ச்சிப்பத்து, செத்திலாப்பத்து பிரார்த்தனைப் பத்து, ஆசைப்பத்து, உயிருண்ணிப் பத்து, திருப்புலம்பல் பத்து, வாழாப்பத்து, எண்ணப்பத்து என திருவாசகப் பாடல்களை உருகி உருகிப் பாடியுள்ளார். அதனால் தான் "திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்றப் பழமொழித் தோன்றியுள்ளது. மேற்குறிப்பிட்ட பலப் பதிகங்கள் சிந்தாந்தக் கருத்துக்களை உள்ளக்கியதாகவே உள்ளன.

திருப்பெருந்துறையில் குருநாதர் சீடர்களோடு மறைந்தமையை ஆற்றாதவராகவே பலப் பதிகங்களை அருளினார். அவற்றில் மற்றொன்றாக "திருப்பொற் சுண்ணம்" –

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருக்கோயில்களில் இறைவனது திருமேனியின் மீது பொன்னிறமான மணப்பொடிகளை பூசிஇளமகளிர் நறுமணம் பொடிய இடித்தப்படியே 'ஆடற் பொற்சுண்ணம் இடித்தும் நாமே' என வருவதால் திருப்பொற்சுண்ணம் எனப்பட்டது. இறைவனது உடல் முழுவதும் நறுமணவீசுவதை எட்டுத்திக்கும் மணக்க வேண்டும் என்பது மாணிக்கவாசகரின் எண்ணமாக இருந்துள்ளது என்பதுப் போன்றே பேராசிரியரின் விளக்கவுரையும் அமைந்துள்ளது.

**புத்தர்களை சைவர்களாக்குதல்**

இறைவனின் அடியவர் ஒருவர் சோழநாட்டு சிவத்தலங்களை வணங்கி தில்லையையும் தரிசித்து ஈழநாட்டிற்கு செல்கின்றார். பொன்னம்பலத்தைக் கண்டவர்கள் மனம் வேறொன்றையும் நாடாது என்பதற்கிணங்க அடியவர் 'பொன்னம்பலம்', 'பொன்னம்பலம்' என்றுக் கூறுவதையே வழக்கமாகக் கொண்டார். இவரது இயல்பினைக் கண்டு பொறுக்காதவராய் பொன்னம்பலம் அச்சொல்லின் இயல்பு யாது என புத்தகுரு வினவ அதற்கு அடியார் ஒரு முறை பொன்னம்பலம் என்று சொன்னால் நாம் ஒரு நாள் முழுவதும் மூச்சுவிடும் எண்ணிக்கையான 21600 முறை ஐந்தெழுத்து மந்திரமான "நமசிவாய" என ஓதியதற்கானப் பலனைத் தரும் எனக் கூறினார். அதனைக் கேட்டு புத்தகுரு கோபம் கொண்டவர்களாக எங்கள் தலைவனையன்றி வேறொரு தெய்வம் உண்டோ எனவும் பொன்னம்பலத்தை புத்தவிகாரமாக மாற்றுவேன் என சூளுரைத்து தங்களின் புத்தக்குழுக்களுடன் தில்லையை நோக்கிப் புறப்படுகின்றனர். புத்த குருமார்களைக் கண்ட மக்கள் தில்லையை விட்டு அகலுமாறு கூற புத்ததேவனே தெய்வம் என நிரூபிக்காமல் இவ்விடத்தை விட்டு அகலமாட்டேன் என்கின்றனர்.

மக்கள் அனைவரும் என்ன செய்வது எனக் குழம்பிய நிலையில் அன்று இரவு வைகறைப் பொழுதில் தில்லைப் பெருமான் சடை முடியும் முழு நீறு பூசிய திருமேனியுடன் கையில் பிரம்புத் தாங்கியவராய் தில்லை நகர மக்களது கனவில் தோன்றி "நீவிர்" அனைவரும் வருந்துதல் ஒழிமின், நம் ஊர் எல்லையில் வாதவூரன் வந்து தங்கியுள்ளான். அவன் புத்தகுருமார்களை வாதிலே "வெல்வான்" எனப் பணிந்தருளினார். மறுநாள் மூவாயிரம் பேர் வந்து திருவாதவூரடிகளை வணங்கி நடந்தவற்றை கூறுகையில் வாதவூரர் உடனே தில்லைப் பொன்னம்பலத்திற்கு சென்று புத்தகர்களோடு வாதிடச் செல்கின்றார். இறைவனைப் பழித்தவர்களை இறைவனைக் கண்டக் கண்ணால் பார்க்க மாட்டேன் என உரைத்து புத்தருக்கும் வாதவூரடிகளுக்கும் இடையில் திரையிட்டு மறைவில் ஓர் இருக்கையில் அமர்கின்றார். அவையில் சோழ மன்னன், அவைச் சான்றோர்களும் அமர்கின்றனர். வாதங்கள் தொடர்கின்றன. வாதவூரடிகளும் பதில் உரை அளிக்கின்றார். வாதவூரடிகள் கூறிய பதில்களுக்கு எல்லாம் புத்தகுருக்கள் இகழ்ந்துரைக்கின்றனர். இதனால் கோபம் அடைந்த வாதவூரடிகள் கலைமகளை நோக்கி, **நான்மறைகளை நவிலும் நாமகளே புத்தர்களுடைய**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நாவிலிருப்பது தகுதியோ?** எனச் சினந்துக் கூற புத்தர்கள் நாவிலிருந்து கலைமகள் நீங்கியதனால், அவர்கள் பேசயியலாது தவிக்கின்றனர். இந்நிகழ்வினைக் கண்ட சோழ மன்னன் புத்தர்களை ஊமையாக்கினீர். ஊமையான என் மகளை பேச வைப்பீர்களாக எனக் கூற மன்னன் மகளிடம் புத்த குருக்கள் விடுத்த வினாக்களுக்கு பதில் கூறுக எனக் கூற அவளும் அனைத்திற்கும் விடையளிக்கின்றனர். அனைவரும் மகிழ்கின்றனர். இந்நிகழ்வு பின்னாளில் நடந்த வினா விடைகளைத் தொகுத்து மங்கையர் விளையாட்டில் பாடிப் பயிலும் “திருச்சாழல்” பாடல்களாக பாடியருளினார். ஈழமன்னன் திருவாதவூரடிகளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி புத்த குருமார்கள். அனைவரும் சைவ சமயத்தில் இணைந்து தங்களுக்கு “தெய்வத் திருநீறும், அக்கமாலையும், கல்லாடையும் அளித்தருளல் வேண்டும்” என வேண்ட திருவாதவூரர் அவர்கள் வேண்டியதை அளித்து, கூத்தப் பெருமானை வணங்கி திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பதிகம், யாத்திரைப் பத்து என்ற பனுவல்களைப் பாடி இறைவனை மனமகிழ்வோடு போற்றிப் பாடுகின்றனர்.

சிவபெருமான் அந்தணர் வடிவில் வந்தமைப் போன்றே வேதியர் வடிவில் தோன்றி வாதவூரடிகளைக் கண்டு, “தாம் பாண்டிய நாட்டை சேர்ந்தவர்” என்றும், தங்களைக் காணவே வந்தோம். தாங்கள் இறைவனையே பரிமீது அமர்ந்து வரச்செய்தீர், தேவர்களும் அறிய முடியாதவரைக் கண்டீர், தலங்கள் தோறும் இறைவனைக் கண்டு மகிழ்ந்தீர், புத்தர்களை வாதில் வென்றீர், இவையெல்லாம் கேட்டறிந்து மகிழ்ந்தோம். சிவபெருமானின் மெய்ப்பொருள் விளங்க நீங்கள் இதுவரை அருளியத் திருப்பாடல்களை முழுவதையும் நீங்கள் ஓத வேண்டும். அவற்றை யாம் எழுதிக் கொள்ளும்படி விளங்கச் சொல்வீராக” என வேண்டி நிற்கின்றார். அவ்வாறே திருவாசகத்தையும், தில்லைச் சிற்றம்பலனை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அகப்பொருள் கோவையும் பாட அவற்றை திறம்பட எழுதிய வேதியர் திடீரென மறைகின்றார். வந்தவர் திருப்பாடல் தொகுப்பின் இறுதியில் “மாணிக்கவாசகர் சொற்படி அம்பலவாணன் எழுதியது” எனத் தனது கையொப்பமிட்டு இறைவனின் திருக்கோயில் வாயிற்படியில் வைத்து மறைந்தார். ஒரு கடிதமோ செய்தியோ எழுதிய பின் அடியில் கையொப்பம் இடும் முறையினையும் இறைவனே நமக்கு அளித்துள்ளார். மணிவாசகப் பெருமானுக்கும், தில்லைக் கூத்தனக்கு இடையே மானசீக உறவு இருந்தமையினை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தலங்கள் தோறும் அருளியச் செயல்களில் விளக்குகிறார்.

**மாணிக்கவாசகரின் சிவநெறிச் சிந்தனை**

சம்பந்தர், அப்பர், சுந்தரர் போன்றே சைவ சமயக் குரவராகச் சேர்ந்த மாணிக்கவாசகரும், சிவநெறியினை வளர்த்தச் செம்மலாகவேத் திகழ்ந்தார். சைவ சித்தாந்தம் என்ற சிவநெறிச் சிந்தனையும் மேற்கொண்டவர். சைவ சித்தாந்தத்தில் முடிந்த முடிபாகக்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கொள்ளப்படும். பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையினை திருவாசகத்தில் அதிக இடங்களில் பேசப்படுகின்றன. இதில் பதி இறைவன், பசு என்பது ஆன்மா, உயிர் என்றும், பாசம் என்பது தளை உயிரைப் பிணித்துள்ளக் கட்டு என்றும் பிணித்துள்ள என்பதில் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களைக் குறிக்கின்றார்.

ஆணவ மலத்தின் இயல்பாக உயிர்களின் அகத்தே மறைந்து நிற்கும் மலமும், அவ்வுயிர்களின் புறத்தே மறைந்து நிற்கும் இருளும் ஆணவ மலத்தின் இரு வேறு நிலைகளாக உள்ளன என்கின்றார். மாணிக்க வாசகப் பெருமான் ஆணவத்தை 'இருள்' என்கிறார்.

**வல் வினையேன் தன்னை மறைந்திட முடிய மாய இருளை (சிவபுராணம் - 50)**

**அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் வல்லறிவே (சிவபுராணம் – 39)**

**பாசமாம் பற்றறுத்து பாரிக்கும் ஆரியனே (சிவுபுராணம் – 64)**

என சிவபுராணத்தில் சிவநெறிச் சிந்தனையினைக் கூறியுள்ளார். பன்னிரு திருமுறைகள் எதிலும் இறைவனது திருநாமம் கொண்டு தொடங்க வில்லை. ஆனால் மாணிக்கவாசகரின் எட்டாம் திருமுறையான திருவாசகத்தில் சிவபுராணத்தில் 'நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க' எனத் தொடங்கி திருமுறைக்கே பெருமை சேர்க்கின்றன. மேலும் சிவபுராணத்தில் இறைவனின் காலங்கடந்த பழமையான அருவநிலையான நாதன், குருமணி, ஏகன், ஈசன், தேசன் என்ற உண்மை இலக்கணங்களையும் உணர்த்துகின்றார் மாணிக்கவாசகர். மலம் என்பது அழுக்கு என்றும் உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலால் அழுக்கு என்கின்றார். மாயை யால் ஆக்கப்பட்ட உடல், கருவி, உலகு, நுகர்பொருளைப் பெற்று அவற்றின் உதவியால் அறியாமை சிறிது சிறிதாக நீங்கி அறிவு விளங்கப் பெறும். உயிர்களின் அறிவு விளங்குவதற்குக் கருவியாய் நின்று உதவுதல் மாயையின் செயல் என ஆணவம், மலம், மாயை என்ற வினைக் கொள்கைகளைக் கொண்டு விளக்குகின்றார், கன்மம் என்பது ஆணவம், மாயை ஆகிய இரண்டிற்கும் இடைப்பட்ட பொருள் என்கின்றார்.

எம்பெருமான் துணையால் உயிர்கள் மாயை, கன்மங்களின் துணையால் அறியாமை தேய்ந்து சிவமாதலேக் கதியென மாணிக்கவாசகர் சிவசிந்தனையை விளக்குவதாக பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகின்றார்.

**சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன் (அச்சோப் பத்து பாடல்-1)**

என அச்சோபத்தில் மாணிக்கவாசகர் கூறிய பதிகவரிகளைக் குறிப்பிடுகின்றார்.

**முடிவுரை**

ந. சுப்புரெட்டியார் அவர்கள் இலக்கியம், வாழ்க்கை வரலாறு, சமயம், திறனாய்வு, அறிவியல், ஆராய்ச்சி எனப் பல அரிய நூல்களின் ஆசிரியராக இருந்து இனிமை, எளிமை, தெள்ளத் தெளிவு எனப் பல நூல்களைப் படைத்துள்ளதுப் போன்றே சைவ சமயத் தினைப் பற்றியும் சைவ சமயக் குரவர்களில் ஒருவரான மாணிக்கவாசகரைப் பற்றியும் அவர் இயற்றிய

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

திருவாசகம், திருச்சிற்றம் பலக்கோவைப் பற்றியும் விரிவாக விளக்கமாக எடுத்துரைத்துள்ளார். மாணிக்கவாசகரின் முன்னயைப் பிறப்பினையும், சிறப்புகளையும் கூறியுள்ளதுப் போன்றே குதிரைகள் வாங்க அமைச்சராகச் சென்றவர். திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் அந்தனர் வடிவில் வந்தவரால் ஆட்கொள்ளப்பட்டு ஆண்டி கோலத்துடன் மதுரைக்கு வருகின்றார். இதில் திருப்பெருந்துறை முதல் திருத்தில்லை வரை மாணிக்கவாசகர் சென்ற தலப் பயணங்களை கூறுகையில் அடிகள், அருளியச் செயல்களையும் குறிப்பிட்டுள்ளார். திருப்பதிகங்களை பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம், திருப்பெருந்துறைப் புராணம் எனப் பல பாடல்களை சான்றுகளுடன் விளக்கியுள்ளார். மாணிக்கவாசகரின் பதிகங்களில் கூறப்பட்டுள்ள சிவநெறிச் சிந்தனைகளை சைவ சித்தாந்தக் கருத்துக்களோடு கூறியுள்ளார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன்னுடையக் கருத்துகளை பலச் சான்றோர்களின் கருத்துக்களையோடு ஒப்பிட்டு சுவைபடத் தந்துள்ளார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரும்பணி ஆற்றியுள்ளார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பார்வையில் மாணிக்க வாசகர் என்ற ஆய்வுக் கட்டுரையின் மூலம் மாணிக்கவாசகரின் பிறப்பின் சிறப்பும் சிவத்தலங்கள்தோறும் சென்று மாணிக்கவாசகர் அருளிய செயல்களையும் மாணிக்கவாசகருடைய சிவநெறி கொள்கையையும் சைவத்திற்கு ஆற்றியப்பணியினையும் ஆய்வுக்கட்டுரையில் சிறப்புற விளக்கப்பட்டுள்ளது.

### குறிப்பு நூல்கள்

[1] டாக்டர் ப. அருணாசலம். *சைவ சமயம்.* அழகு பதிப்பகம், 2020
[2] டாக்டர் ப. அருணாசலம். *பக்தி இலக்கியம்.* பாரி நிலையம், முதல் பதிப்பு, 2002.
[3] ஔவை சு. துரைசாமிப்பிள்ளை. *சைவ இலக்கிய வரலாறு.* ஸ்ரீ செண்பகா பதிப்பகம், 2012.
[4] டாக்டர் ந. சுப்புரெட்டியார். *சைவ சமய விளக்கு.* பூம்புகார் பதிப்பகம், 2010.
[5] பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் (அ.ச.ஞானசம்பந்தன்). *திருவாசகம்.* உமா பதிப்பகம், 6ம் பதிப்பு 2018.
[6] முனைவர் கி. சுப்ரமணியம். *சிவபுராணம்.* ஆதிரை பதிப்பகம், 2012.
[7] கோ. திருமுருகன். *குறள் அமிர்தம்.* வைதேகி பதிப்பகம், முதல் பதிப்பு 2022.
[8] புலவர் பிரா. நடராசன். *திருவாசகம்.* உமா பதிப்பகம், 6ம் பதிப்பு, 2021.
[9] முனைவர் பழ. முத்தப்பன். *திருக்கோவையார்.* உமா பதிப்பகம், 6ம் பதிப்பு, 2021.

### References

[1] Dr. P. Arunachalam. *Saiva Samayam*. Azhagu Pathippagam, 2020.
[2] Dr. P. Arunachalam. *Bakthi Ilakkiam.* Pari Nilaiyam, 2002.
[3] Prof. S.Duraisamy Pillai. *Saiva Ilakkiya Varalaru.* Sri Shenbaga Pathippagam, 2012.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[4] Dr. N. Subbureddiar. *Saiva Samaya Vilakku*. Poompukar Pathippagam, 2010.
[5] Dr. N. Subbureddiar, (A.S. Ganasampanthan). *Thiruvasagam.* Uma Pathippagam, 6th Edition 2021.
[6] Dr.K.Subramaniam. *Sivapuranam.* Aadhithirai Pathippagam, 2012.
[7] K. Thirumurugan. *Kural Amirtham*. Vaidehi Pathipaggam, 2022.
[8] Poet. P. Natarajan. *Thiruvasagam*. Uma Pathippagam, 6th Edition, 2021.
[9] Dr. Pazha Mutthappan. *Thirukovaiyar*. Uma Pathippagam, 6th Edition, 2021.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் கல்விக்கொடை

## Professor's Educational Grants

**முனைவர் நா. மாலதி,** உதவிப்பேராசிரியர், நாட்டுப்புறவியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. N. Malathi,** Assistant Professor of Folk Lore, Tamil University, Thanjavur, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-5330-4345**
**DOI: 10.5281/zenodo.7275454**

### Abstract

*Perasiriyar Na. Subbu Reddiar is an educationalist. He worked as a school teacher, Professor in the education department and a University Professor. He had written many books in the Tamil Language on Bhakti Literature, Educational Psychology and Literature. He was a great supporter of poor people and helped with their education. He granted many books to the students. He formed methodologies for teaching and spread them as books. He contributed to the publication of many Tamil literary works, Tamil research and Curriculum development. His views on teaching and learning, his works on Tamil literary criticism and his Tamil research works are well-recognized among scholars. His meritorious students are evidence of his educational career. This research will give a broad idea of N.Subbu Reddiar and his unparalleled educational grants in his lifetime.*

**Keywords**: N. Subbu Reddiar, Education Grant, Tamil research, Education Policies.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அடிப்படையில் கல்வியாளர். பள்ளி ஆசிரியராகவும், கல்வியியல் கல்லூரிப் பேராசிரியராகவும், பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராகவும் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்தவர். அவர் பல ஏழை, எளிய மாணவர்கள் கல்வி பயில ஊகக் சத்தியாகத் திகழ்ந்தார். கல்வி சார்ந்த நூல்களைப் படைத்தளித்தார். பயிற்றுவித்தல் முறையில் புதிய முறைமைகளை உருவாக்கி அவற்றை நூல்களாகவும் வழங்கினார். தமிழ் இலக்கியத் திறனாய்வு வளர்ச்சிக்கும், தமிழ் ஆராய்ச்சி வளர்ச்சிக்கும். அரிய பங்களிப்புகளைச் செய்துள்ளார். ஆற்றல் – கற்பித்தல் முறைமைப் பற்றிய பேராசியரின் பார்வைகள், கற்பித்தல் முறைகள் பற்றிய கருத்துக்கள், திறனாய்வு, ஆராய்ச்சி நெறிகளைச் சுட்டும் ஆக்கங்கள், இவை குறித்த ஆக்கங்கள் – பேராசிரியர் உருவாக்கிய மாணவர்கள் ஆகிய அனைத்தையும் சேர்த்து மதிப்பிட்டால் பேராசியரின் 'கல்விக்கொடை'யை அறிய முடியும். இதனை இவ்வாய்வு வெளிக் கொணரும்.*

**குறிப்புச் சொற்கள்**: ந.சுப்புரெட்டியார், கல்விக் கொடையாளர், தமிழாய்வு, கல்விக் கொள்கை.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**முன்னுரை**

ந.சுப்புரெட்டியார் நாலாயிரத் திவ்வியபிரபந்தத்தில் உள்ள நம்மாழ்வார் பாடல்களைத் தத்துவநோக்கில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார். இவர் பள்ளியில் தலைமை ஆசிரியராகப் பணியாற்றி இருக்கிறார். ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றி உள்ளார். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகவும் தலைவராகவும் பதவி வகித்துள்ளார். சென்னைப் பல்கலைக்கழகத் தெற்கு தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநராகவும் இருந்துள்ளார். தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியர். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகக் காஞ்சி தத்துவ மையத்தில் தலைவராகப் பணியாற்றி உள்ளார். மொழி, இலக்கியம், அறிவியல், பயிற்றுவித்தல், ஆராய்ச்சி ஆகியவற்றில் புலமை உடையவர். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் கல்கி அறக்கட்டளை சார்பாக நடத்திய நிகழ்வில் ந.சுப்புரெட்டியார் இலக்கிய வகைமைகள் குறித்து உரை ஆற்றியுள்ளார். இந்த நூலே **‘இலக்கிய வகைமையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்’** என்னும் நூலாகும்.

> **பேராசிரியர் சுப்புரெட்டியாரின் நடை எளிய நடை; நயமான நடை; நுணுக்கமான நடை; ஒரு நிகழ்ச்சியை எடுத்துரைக்கும்போது, அது தொடர்பான ஒத்த மேற்கோளினை- கவிதை வரிகளை- அங்குத் தந்து சொல்ல வருகின்ற தகவலுக்கு உயிரூட்டுவது பேராசிரியர்க்குக் கை வந்த கலை எனலாம் (ந சுப்புரெட்டியார் 100 நூற்றாண்டு விழா நிகழ்வுகள், பேராசிரியரின் இலக்கிய நடை பகுதியிலிருந்து)**

இலக்கிய வகைகளை வகைப்படுத்திக் காணப் பலர் பல்வேறு முறைகளைக் கையாளுகின்றனர். தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர் கால அடிப்படையில் இலக்கியத்தை அணுகி, அச்சார்புடன் வகைகளைக் கண்டனர் எனலாம். சங்க இலக்கிய காலம், நீதி இலக்கிய காலம், காப்பிய காலம், பக்தி இலக்கிய காலம், சிற்றிலக்கிய காலம் உரைநடை இலக்கிய காலம், நாட்டுப்புறவியல் வகை, தற்கால வகைகள் எனப் பலவிதமாக அணுகுகின்றனர். கண்ணோட்ட நோக்கில், முதல் இலக்கிய வகைத்தோற்றம் - போக்கில் இது பொருத்தமுடையதாக அமையலாம். இவ்வாறான ஓரளவு பொருளடிப்படை எனும் பெருநோக்கில், தனிப்பாடல், காப்பியம், அற இலக்கியம் பக்திப் பாடல், சாத்திர இலக்கியம் சித்தர் பாடல், சிற்றிலக்கியங்கள், நாடகம், நாவல், சிறுகதை, கட்டுரை, பயண இலக்கியம், வாழ்க்கை வரலாறு, புதுக்கவிதை எனவும் காண்பது உண்டு. வகை மாதிரியியல் ஆய்வாளர், வேறு பல கோணப் பார்வையுடன் வகைப்படுத்துவதும் தெரிகின்றது. இலக்கிய வகைகளை இனம் பிரித்தல், தனி நிலக் கவிதை காப்பியம், பிரபந்தம், சிறுகதை, நாவல், இயக்கங்களின் அடிப்படையில் வகை மாதிரி செய்தல், பக்தி இலக்கியம், சுயமரியாதை இயக்கம், புதுக்கவிதை இயக்கம், தனித்தமிழ் இயக்கம். நடை அல்லது உத்தி அடிப்படையில் வகை மாதிரி செய்வது.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

உரிப்பொருள் என்பதனைப் பொதுமைக் கூறாகக் கொண்டு வகைமாதிரி செய்தல், அகப்பாடல், புறப்பாடல், இலக்கியப் போக்குகள் அடிப்படையில் வகை மாதிரியியல் செவ்வியல் நெறி, புனைவு நவிற்சி, இருத்தலியம், பிராய்டியம் ஆகியவற்றைக் காண்கிறார்.

**பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களுக்கும் பல அறிஞர் பெருமக்கள்- பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், நீதியரசர்கள், தமிழ்ச் சான்றோர், ஆளுநர்கள், அமைச்சர் பெருமக்கள், கல்வித்துறை சான்றோர்கள் மற்றும் பிற பல, பிரபல பேராசிரியர்கள் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளனர் (ந. சுப்புரெட்டியார் 100, பேராசிரியரின் நூல்களிலுள்ள அணிந்துரைகளின் தொகுப்பு)**

பதினேழாம் நாற்றாண்டில் தலப்புராணங்கள் எழுதுவதில் வல்லவராகச் சைவ எல்லப்ப நாவலரும், சிவப்பரகாச சுவாமிகளும், பரஞ்சோதி முனிவரும் சிறப்பிடம் பெறுகின்றனர். பதினெட்டாம் நூற்றாண்டில் தலப்புராண வளர்ச்சிக்குப் பெருங்காரணமாகத் திகழ்ந்தவர்கள் சிவஞான முனிவரும், கச்சியப்ப முனிவரும். ஆவார். பத்தொன்பதாம் நாற்றாண்டில் தனிப்பெரும் புலவராக விளங்கிய தமிழ் தலப்புராண வரலாற்றிலே மிகுதியான எண்ணிக்கையில் தலப்புராணங்களை இயற்றி சாதனை புரிந்தவர்களுள் மிக முக்கியமானவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம். பிள்ளை அவர்கள் ஆவார். இவர் தலப்புராணம் எழுதுவதில் முதன்மையானவராகவும் திகழ்கிறார். மேலும் தலப்புராண நூலாசிரியர்களாகச் சொக்கலிங்கம் செட்டியார், நிரம்ப அழகிய தேசிகர், பொன்னாயிரங் கவிராய மூர்த்திகள், ஆதியப்பனார், கச்சியப்ப முதலியார், தஞ்சை சுப்பிரமணிய ஐயர், சிவஞான முனிவர்கள், அசலாம்பிகை அம்மாள் ஆகியோர் மட்டும் அல்லாமல் தலப்புராண ஆசிரியர்கள் இருநூறுக்கும் மேற்பட்டோர் இருக்கின்றனர் என்பதை நம்மால் தெரிந்து கொள்ள முடிகிறது. தலப்புராணங்களுக்கு நூல் எழுதியவர்களுள் ந.சுப்புரெட்டியாரும் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர் 108 வைணவ திவ்விய தேசங்களை ஆய்வு செய்து தலப்புராணங்களை எழுதியுள்ளார்.

**ந. சுப்புரெட்டியாரின் வாழ்க்கை வரலாறு**

ந.சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ்நாட்டில் உள்ள **"சோழ வளநாடு சோறுடைத்து"** என்ற பெருமை பெற்ற சோழநாட்டின் தலைநகர் திருச்சி மாவட்டம், லால்குடி வட்டத்தில் உள்ள பெரகம்பியில் 1916-ல் பிறந்தார். இவருடைய தந்தையார் திரு நல்லப்பரெட்டியார், தாயார் திருமதி காமாட்சி அம்மாள் ஆவார். இவர் மூன்று வயதிலேயே தந்தையை இழந்தார். இளம் வயதிலேயே தந்தையை இழந்ததால் தாய்மாமன் தயவிலும், தாயின் அரவணைப்பிலும் கோட்டத்தூரில் வளர்ந்து அங்கு உள்ள தொடக்கப்பள்ளியில் சேர்ந்து படித்தார். அதன் பிறகு துறையூரில் உள்ள நடுநிலைப் பள்ளியிலும் முசிறியில் உள்ள ஜில்லாபோர்டு உயர்நிலைப் பள்ளியிலும் சேர்ந்து படித்துத் தேர்ந்தார். பின்னர் திருச்சியில் உள்ள புனித ஜோசப் கல்லூரியில் வேதியியல் பிரிவில் பயின்று இளங்கலைப் பட்டம் பெற்றார். அதன் பிறகு

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சென்னை சைதாப்பேட்டையில் ஆசிரியர் பயிற்சி கல்லூரியில் சேர்ந்து எல்.டி பட்டம் பெற்றார். இவருக்குத் தாய்மொழி தெலுங்காக இருந்தாலும் தமிழின் மீது இருந்த தனியாத ஆர்வம் காரணமாக இளநிலை மற்றும் முதுநிலைப் பட்டங்களையும் பெற்றார். இவரது கல்விப் பணி முதலில் பள்ளித் தலைமையாசிரியராகவும், பின்னர் கல்லூரிப் பேராசிரியர் மற்றும் துறைத்தலைவராகவும் பின்பு பல்கலைக் கழகத்தின் பேராசிரியர், துறைத்தலைவர் எனப் பள்ளி தொடங்கி பல்கலைக்கழகம் வரை இவரது பணி விரிவடைந்துள்ளது. மேலும் இவர் சென்னை அகாதெமி வெளியிட்ட தமிழ் அகர முதலியின் முதன்மை ஆசிரியராகப் பணியாற்றினார். தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் மற்றும் சென்னைப் பல்கலைக்கழகம் எமிரைட்ஸ் பேராசிரியராகவும் பணியாற்றினார்.

**அடிப்படையில் ஒரு கல்வியாளரான பேராசிரியர் முனைவர் சுப்புரெட்டியார் அவர்கள் பள்ளி ஆசிரியராகத் தனது பணியைத் தொடங்கி பேராசிரியர் வரை உயர்வுகளைக் கண்டவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அதாவது தமிழ்நாட்டுக்கு அப்பால் இன்னொரு மாநிலத்தில் அமைந்த பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் துறைத்தலைவராகப் பொறுப்பு வகித்தவர். பல பல்கலைக் கழகங்களிலும் இதுபோல சிறப்புநிலைப் பேராசிரியராகப் பணிபுரிந்திருக்கிறார். (ந.சுப்புரெட்டியார் 100, பேராசிரியரின் நூல்களிலுள்ள அணிந்துரைகளின் தொகுப்பு)**

மேலும், இவரைப் பண்பாட்டு கலாச்சார மையம் கௌரவ இயக்குனராகவும் இவரைப் பெருமைப்படுத்தியது. சாகித்திய அகாதெமி ஆலோசனைக்குழு உறுப்பினர், தமிழக அரசு தமிழ் வளர்ச்சி உயர்நிலைக்குழு உறுப்பினர், சென்னை, மதுரை, அண்ணாமலை. பெங்களூர், மைசூர், திருப்பதி, திருவேங்கடவன் பல்கலைக்கழகங்களில் அகாதெமிக் கவுன்சில் உறுப்பினர் எனப் பல்வேறு பதவிகளை வகித்தார்.

**பேராசிரியரின் நாட்களை அடித்தளமாகக் கொண்டு சுமார் 15 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக்கழகங்களில் ஆய்வு மேற்கொண்டு வருகின்றனர். இவ்வாய்வாளர்களை ஊக்குவிக்கும் நோக்கில், ந சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை, NSR100 Kamatchi Ammal Fellowship மற்றும் NSR100 Reasearch Fellowship வழங்கி வருகிறது. (ந. சுப்புரெட்டியார் 100, பேராசிரியரின் நூல்களிலுள்ள அணிந்துரைகளின் தொகுப்பு, பதிப்புரையில் இருந்தது)**

தமிழ்ப் பல்கலைக்கழகம் உருவாகக் காரணமாகவும் இருந்தவர் ந. சுப்புரெட்டியார். எனவே, இவரைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராக நியமிக்க வேண்டும் என்று அப்போதைய தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் விரும்பினார். ஆனால் இவர் அதனை ஏற்கத் தயக்கம் காட்டினார். ஏனெனில் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பதவி ஏற்றுக் கொள்வது

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பெருமையான விஷயம் தான். ஆனால் நான் தராசு தட்டைப் போன்று நடுவுநிலையோடு செயல்படுவேன் எது சரியோ அதை மட்டுமே செய்வேன் என்று கூறினார். எனவே பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். நேர்மையானவர், கண்டிப்பானவர் என்பதுடன் சட்ட விதிகளுக்கு மாறாக எதையும் செய்யத் துணியாதவர். எதற்கும் ஆசைப்படமாட்டார் என்பதற்கு இவை அனைத்தும் ஒரு உதாரணமாகவும் உள்ளது. ந.சுப்புரெட்டியார் பல கல்வி நிலையங்களில் கருத்தரங்கம் நடத்திச் சொற்பொழிவு ஆற்றி உள்ளார். பல ஆய்வாளர்களின் கட்டுரைகளை மதிப்பீடு செய்துள்ளார். பல கருத்தரங்க ஆய்வுக் கோவைகளை வெளியிட்டுள்ளார். அவருடைய படைப்புகளை வைத்துப் பலர் முனைவர் பட்டம் மேற்கொண்டுள்ளனர். அவரைப் பற்றிய பல திறனாய்வு நூல்களும் வெளி வந்துள்ளன.

> **தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சுப்புரெட்டியாரின் சோழ நாட்டுத் திருப்பதிகள், பாண்டிய நாட்டுத் திருப்பதிகள், மலை நாட்டுத் திருப்பதிகள் ஆகிய நூல்களை அடிப்படையாக வைத்து கள ஆய்வுகள் மேற்கொண்டு நாட்டுப்புறவியல், இலக்கியத்துறைகளில் ஆய்வியல் நிறைஞர் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. இவரின் படைப்புகள் பற்றிய ஆய்வுகளுக்கு அறக்கட்டளை நிதி உதவியும் வழங்குகிறது. ஆய்வுகளை நூலாக்கம் செய்தும் தருகிறது. இவர் பெயரில் நிறுவப்பட்டுள்ள அறக்கட்டளை ஆண்டு தோறும் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவு நடத்துகிறது. (தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம் சுப்புரெட்டியார் அறக்கட்டளை நிறுவனர் வரலாறு குறிப்புகளில் இருந்தது)**

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பெற்ற விருதுகள்**

ந. சுப்புரெட்டியார் தமிழக அரசின் கலைமாமணி விருது, திரு.வி.க விருது, சி.பா ஆதித்தனார் விருது, மதுரை காமராஜர் பல்கலைக்கழகத்தின் டி.லிட் பட்டம், ஆய்வு மையத்தின் இராமனுஜர் விருது, கம்பன் கழகத்தின் பேராசிரியர் இராதாகிருஷ்ணன் விருது, இராஜா சர் அண்ணாமலை செட்டியார் விருது, உலகத் திருக்குறள் மையத்தின் திருக்குறள் விருது, எனப் பல விருதுகளைப் பெற்ற பெருமையுடையவர்.

> **பேராசிரியர் முனைவர் த சுப்புரெட்டியார் எழுதிய 136 நூற்களில் 74 நூற்களைத் தேர்ந்தெடுத்து அவைகளுக்குத் தமிழறிஞர்கள். கல்வியாளர்கள், சமூகசிந்தனையாளர்கள் அளித்த அணித்துரைகளைத் தொகுத்து ஒரே நூலாகப் பார்க்கும்போது அவரது சிந்தனை வெளியையும், கருத்துக்குவையையும், நாவறிவையும் நாம் அறிவதற்கு, குறிப்பாக இளைய தலைமுறையினர் அறிவதற்கு வழிவகுத்துள்ளது எனலாம். தொல்காப்பியம் முதல் வாலியின் இராமாநுஜ காவியம் வரை பேராசிரியரின் அறிவுப் பயணம் நூற்களாக வெளிப்பட்டது போலவே அணிந்துரை வழங்கியவர்களால் "தேருக்குச் செய்த அலங்காரம்" போல மெருகூட்டி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**உள்ளன. (ந. சுப்புரெட்டியார் 100 நூற்றாண்டு விழா நிகழ்வுகள், அணிந்துரையில் இருந்தது)**

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எழுதிய நூல்கள்**

ந. சுப்புரெட்டியார் பணியில் இருந்து 16 ஆண்டுகள், ஓய்விற்குப் பிறகு 2 ஆண்டுகள் என இவரது தமிழ்ப் பணி 65 ஆண்டுகள் தொடர்ந்தது. அவரது வாழ்தானில் இவர் எழுதிய மொத்த நூல்களின் எண்ணிக்கை 136 ஆகும். இவர் எழுதிய நூல்கள் அனைத்தையும் 2006-ல் கலைஞர் அவர்கள் ரூபாய் 5 இலட்சம் தொகையை வழங்கி அவருடைய நூல்களை நாட்டுடைமையாக்கினார். இந்த 5 இலட்சம் தொகையை வைப்பு நிதியாக்கி அதில் வரும் வட்டியில் இருந்து பள்ளியில் படிக்கும் முதல் மூன்று மதிப்பெண் பெறும் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்படுகின்றன. இவர் பத்துக்கும் மேற்பட்ட அறக்கட்டளைகளையும் நிறுவியுள்ளார். சான்றோர்கள் பலருடனும் நெருங்கிய தொடர்பு கொண்டு இருந்தார்.

**ந.சுப்புரெட்டியாரின் வெளியீடு**

ந. சுப்புரெட்டியாரது வெளியீடுகள் கவிஞர் உள்ளம், தமிழ் பயிற்றும் முறை, கலிங்கத்துப்பரணி, அணுவின் ஆக்கம், காலமும் கவிஞர்களும், மனித உடல், கல்வி உளவியல், அறிவுக்கு விருந்து, இளைஞர் வானொலி, அதிசய மின்னணு, தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, இல்லற நெறி, முத்தொள்ளாயிர விளக்கம், மலைநாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், வைணவ உரைவளம், வைணவச் செல்வம் போன்ற இன்னும் எண்ணில் அடங்காத நூல்களை வெளியிட்டுள்ளார். எனவே ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ் வளர்ச்சிக்கு வித்திட்டும் மாணவர்களுக்குப் பயனுள்ள வகையில் பல படைப்புகளை வெளியிட்டுள்ளார்.

தமிழ்நாடு அரசு நாட்டுடைமை ஆக்கப்பட்ட சுப்புரெட்டியாரின் நூல்கள் 1. Collected Papers 2. Religion and Philosophy of Nalayaira Divya Prabhandham with Special Reference to Nammalwar 3. அகத்திணைக் கொள்கைகள் 4. அண்ணல் அனுமன் 5. அணுக்கரு பௌதிகம் 6. அணுவின் ஆக்கம் 7. அதிசய மின்னணு 8. அம்புலிப் பயணம் 9. அர்த்த பஞ்சகம் 10. அறிவியல் தமிழ் 11. அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம் 12. அறிவியல் பயிற்றும் முறை 13. அறிவியல் பயிற்றும் மூல முதல் நூல் (மொழிபெயர்ப்பு) 14. அறிவியல் விருந்து 15. அறிவுக்கு விருந்து 16. ஆழ்வார்களின் ஆராஅமுது 17. இராக்கெட்டுகள் 18. இராமலிங்க அடிகள் 19. இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும் 20. இல்லறநெறி 21. இளைஞர் தொலைக்காட்சி 22. இளைஞர் வானொலி 23. என் அமெரிக்கப் பயணம் 24. கண்ணன் பாட்டுத் திறன் 25. கம்பனின் மக்கள் குரல் 26. கல்வி உளவியல் 27. கல்வி உளவியல் கோட்பாடுகள் 28. கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி 29. கலியன் குரல் 30. கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி- ஒரு மதிப்பீடு 31. கவிஞன் உள்ளம் 32. கவிதை பயிற்றும் முறை 33. கவிமணியின் தமிழ்ப் பணி- ஒரு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மதிப்பீடு 34. காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் 35. காலமும் கவிஞர்களும் 36. குயில்பாட்டு ஒரு மதிப்பீடு 37. சடகோபன் செந்தமிழ் 38. சி.ஆர்.ரெட்டி (மொழிபெயர்ப்பு) 39. சைவ சமய விளக்கு 40. சைவ சித்தாந்தம்-ஓர் அறிமுகம் 41. சைவமும் தமிழும் 42. சோழநாட்டுத் திருப்பதிகள் 1, 2 தொகுதிகள் 43. ஞானசம்பந்தர் 44. தந்தை பெரியார் சிந்தனைகள் 45.தம்பிரான் தோழர் 46. தமிழ் இலக்கியத்தில் அறம், நீதி, முறைமை 47. தமிழ் பயிற்றும் முறை 48. தமிழ்க்கடல் இராய.சொ 49. தமிழில் அறிவியல் செல்வம் 50. தமிழில் அறிவியல் அன்றும் இன்றும் 51. தாயுமானவர் 52. திருக்குறள் தெளிவு- உரைநூல் 53. திருவேங்கடமும் தமிழிலக்கியமும் 54. தொண்டை நாட்டுத் திருப்பதிகள் 55. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை 56. தொலை உலகச் செலவு 57. நமது உடல் 58. நவவித சம்பந்தம் 59. நாவுக்கரசர் 60. நினைவுக்குமிழிகள் 1, 2, 3, 4 பாகங்கள் 61. நீங்காத நினைவுகள் 1, 2 தொகுதிகள் 62. பட்டினத்தடிகள் 63. பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம் 64. பிரகாலன் பைந்தமிழ் 65. பரணிப்பொழிவுகள் 66. பல்சுவை விருந்து 67. பாஞ்சாலி சபதம்- ஒரு நோக்கு 68. பாட்டுத் திறன் 69. புதுவை (மை)க் கவிஞர் பாரதியார்- ஒரு கண்ணோட்டம் 70. மலரும் நினைவுகள் 71. பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் 72. பாண்டியன் பரிசு- ஒரு மதிப்பீடு 73. பாரதீயம் 74. பாவேந்தரின் பாட்டுத் திறன் 75. மலை நாட்டுத் திருப்பதிகள் 76. மாணிக்கவாசகர் 77. மானிட உடல் 78. முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் 79. முத்தொள்ளாயிர விளக்கம் 80. மூவர் தேவாரம்- புதிய பார்வை 81. வடநாட்டுத் திருப்பதிகள் 82. வடவேங்கடமும் திருவேங்கடமும் 83. வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் 84. வாய்மொழியும் வாசகமும் 85. வாழும் கவிஞர்கள் 86. வாழையடி வாழை 87. விட்டுசித்தன் விரித்தமிழ் 88. வேமனர் (மொழிபெயர்ப்பு) 89. வைணவமும் தமிழும் 90. வைணவ உரைவளம் 91.வைணவ புராணங்கள் ஆகிய நூல்களாகும். (தமிழ் இணையக் கல்விக் கழகம் இணையத்திலிருந்து எடுத்தது. www.tamilvu.org)

சுப்புரெட்டியார் திறனாய்வு, மொழிபெயர்ப்பு, வரலாறு, பயண இலக்கியம், அறிவியல் தமிழ், பக்தி இயல் ஆகிய வகைமைகளுக்குள் நூல்களைப் படைத்துள்ளார். தமிழ், ஆங்கிலம், தெலுங்கு போன்ற மூன்று மொழிகளில் புலமை உடையவர்.

**கல்வி குறித்து அவர் எழுதிய கல்வி உளவியல், கல்வி உளவியல் கோட்பாடுகள் என்ற நூற்களுடன் தமிழ்க்கல்வி குறித்துப் பேசும் தமிழ்பயிற்றும் முறை என்ற நூலுக்குமான அணிந்துரைகளில் அறிஞர்கள் எழுதிய கருத்துக்கள் முனைவர் ந சுப்புரெட்டியாரின் ஆளுமையை மதிப்பிடப் போதுமானவையாகும். "தமிழ் பயிற்றும் முறை" நூலுக்கு அணிந்துரை எழுதிய முன்னாள் கல்வியமைச்சர் அவினாசிலிங்கம் அவர்கள். தாய்மொழிப்பயிற்சியை மட்டுமல்லாது அத்துடன் இருக்க வேண்டிய நவீனமுறைகள் பற்றிய புறசெய்திகளும் இந்தநூலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்கிறார். தமிழை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நவீனமாக்கும் சிந்தனை தமிழ்ப்பேராசிரியர்களில் வெகுசிலருக்கே வாய்த்திருக்கிறது. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களில் மூத்தவர். "கல்வி உளவியல்" நூலின் அணிந்துரையிலும் ஜி.ஆர்.தாமோதரன் அவர்கள் இதையே தெரிவிக்கிறார். தற்காலக்கல்வியியல் கொள்கைக்கும், நம்முடைய இலக்கியங்களிலிருந்து புலனாகும் பழங்காலக்கொள்கைகளுக்கும் ஒற்றுமை காணும் திறத்தில் சுப்புரெட்டியாரின் உளவியல் நுட்பம் புலனாகிறது என்று அவர் தெரிவிக்கிறார். (ந. சுப்புரெட்டியார் 100 நூற்றாண்டு விழா நிகழ்வுகள், அணிந்துரை)**

**ந. சுப்புரெட்டியாரின் தமிழ் பயிற்றும் முறை புத்தகம்**

தாய் மொழியின் இன்றியமையாமையை எல்லாத் துறைகளிலுள்ளவர்களும் உணர்ந்து வருகின்றனர். மக்களாட்சியில் தாய் மொழி பெரும்பங்கு கொள்ளவேண்டிய சிறந்ததொரு கருவியாகும். மன்னராட்சியின் நோக்கம் வேறு; குடியாட்சியின் நோக்கம் வேறு. மன்னராட்சியில் ஆள்வோர் தம் ஆணையைக் குடிமக்களிடம் அடையச் செய்வது; குடியாட்சியில் மக்கள் தம் விருப்பத்தை ஆள்வோர் அறியச் செய்வது. இதற்கு மக்கள் அறிந்த மொழிதான் தக்கதொரு கருவியாக இருக்க முடியும். எனவே, அனைவரும் தாய் மொழியில் தெளிவாகப் பேசவும் எழுதவும் ஆற்றல் பெறவேண்டும். இதை முக்கிய நோக்கமாகக்கொண்டு தொடக்க, இடை, உயர் நிலைப். பள்ளிகளில் பணியாற்றும் தாய்மொழி ஆசிரியர்கள் மொழியைக் கற்பிக்க வேண்டும்; தாய் மொழியிலேயே எல்லாப் பாடங்களும் கற்பிக்கப் பெற வேண்டியதாயிருத்தலின் பிற பாட ஆசிரியர்களும் இந்த நோக்கத்தை நினைவில் வைத்துக்கொண்டு பணியாற்றவேண்டும் என்கிறார். கல்வி கற்பித்தலில் 'தமிழ் பயிற்றும் முறையைக் கூறுவது' என்கிறார்.

**உளவியல் உண்மைகளை அடிப்படையாகக்கொண்டு மேற்புல அறிஞர்கள் எத்தனையோ பயிற்று முறைகளைக் கண்டறிந்துள்ளனர். அவற்றையெல்லாம் மொழியின் மரபு கெடாது எந்தெந்த அளவில் நம்தமிழ் மொழியைக் கற்பிப்பதில் மேற்கொள்ளலாம் என்பதை ஆராய்ந்துள்ளார். பொதுவாக எல்லா ஆசிரியர்களும், சிறப்பாகத் தமிழாசிரியர்களும், கல்வித் துறையில் பணியாற்றும் பிறரும், பொது மக்களும் சிந்திக்கவேண்டிய பல கருத்துக்கள் இதில் குறிப்பிடப்பெற்றுள்ளன. இவையே முடிந்த முடின்று அறுதியிட்டு உரைத்தேனில்லை. அவசியம் ஏற்படில் மாற்றங்கள் செய்துகொள்ளலாம்; செய்து கொள்ளத்தான் வேண்டும். தாய்மொழியறிவு செம்மையாக வாய்த்தால்தான் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப் போருக்கும் நாட்டு மக்களுக்கும் இடையில் நல்ல தொடர்பு ஏற்படும்; மேலும் அரசியல் போக்கை மக்கள் நன்குணரவும், தங்கள் விருப்பத்தை அரசினருக்குப் புலப்படுத்திக்கொள்ளவும் இயலும். சுருங்கக் கூறின், தாய்மொழியின் வளந்தான் அரசினருக்கும் மக்கட்கும் நேரடியான**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தொடர்பை உண்டாக்க முடியும். (ந.சுப்புரெட்டியார், தமிழ் பயிற்றும் முறை, நூல் முகம் பகுதியிலிருந்தது)**

தாய்மொழியை எல்லோரும் எளிதில் கற்றுக்கொள்ளலாமே; பிறந்த சில ஆண்டுகளில் குழந்தை, தான் வாழும் சூழ் நிலையில் பெற்றோர், உற்றார், உறவினர் சமூகம் ஆகியோரின் மூலமாகத் தாய்மொழியை மிக விரைவாகக் கற்றுக்கொள்வதிலிருந்து இவ்வுண்மை தெளிவாகுமே; இவ்வளவு எளிதாகக் கற்கக்கூடிய தாய் மொழியைக் கற்பித்தற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டம் தேவையில்லையே என்று சிலர் கருதலாம்; உண்மையாகப் பலர் அவ்வாறுதான் கருதுகின்றனர். ஒரு குழந்தையோ அல்லது படிக்காது வளர்ந்தவரோ தம் அன்றாடத் தேவைக்காகக் கற்கும் நிலை வேறு; பல நூற்றாண்டுகளாகப் பண்பட்டு இலக்கிய இலக்கண வளம் படைத்த மொழியை அறிவியல் நிலையில் வைத்துக் கற்பது வேறு என்பதை, எண்ணிப் பார்க்கும் அனைவரும் எளிதில் உணர்வர். உளவியல் உண்மைகள் பலவற்றைக் கண்டறிந்த பிறகு இஃது இன்னும் தெளிவாகப் புலனாகியுள்ளது. நீண்ட நாட்களாகவே நவீன முறையில் தமிழ் கற்பிப்பதைப்பற்றி ஒரு புத்தகம் எழுதி வெளியிட எண்ணியிருந்தேன். ஒன்பது ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளியில் தலைமையாசிரியனாக இருந்தபொழுது நேரில் கவனித்த பல்வேறு அனுபவங்களைக்கொண்டும், எட்டு ஆண்டுகள் பி. டி. மாணாக்கர்கட்குத் தமிழ் கற்பிப்பதைப்பற்றிப் போதித்துவந்த அனுபவத்தைக்கொண்டும் இப்புத்தகம் எழுதப் பெற்றுள்ளது. எழுதி முடிக்க இரண்டாண்டுகள் ஆயின. இப் புத்தகத்தில் குறிப்பிட்டுள்ள பல கருத்துக்களையும் நன்கு சிந்தித்து நடைமுறையில் செயலுக்குக் கொண்டுவந்தால் மாணாக்கர்களிடம் தமிழ்மொழியறிவு நன்முறையில் அமைவது உறுதி என்று எண்ணுகின்றேன்; நம்பிக்கையும் கொள்கின்றேன். முறைகளைக் கூறுவது எளிது; அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவந்து வெற்றி காண்பது மொழி கற்பிக்கும் ஆசிரியர்கள் மேற்கொள்ளும் முயற்சியையும், அவர்களின் திறனையும், ஈடுபாட்டையும் பொறுத்துள்ளது.

இப்புத்தகம் பதினாறு அத்தியாயங்களாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. முதல் அத்தியாயத்தில் தமிழ் கற்பிப்பதன் நோக்கங்கள் ஓரளவு விரிவாக ஆராயப்பெற்றிருக்கின்றன. இரண்டாவது அத்தியாயத்தில் இந் நோக்கங்கள் நடைமுறையில் நிறைவேறுவதற்கான பாடத்திட்டங்கள்பற்றியும் நடைமுறையிலுள்ள தொடக்க, இடை, உயர்நிலைகளிலுள்ள பாடத்திட்டங்கள் பற்றியும் விளக்கம் தரப்பெற்றுள்ளது. நமது மாநிலத்திலுள்ள உயர் நிலைப் பள்ளிகளில் கல்வி பெறும் மாணாக்கர்கள் பயிலவேண்டிய மொழிகள் பற்றியும் விளக்கம் கொடுக்கப்பெற்றிருக்கின்றது. மூன்றிலிருந்து ஆறு முடியவுள்ள அத்தியாயங்களில் பயிற்றுவதற்கு மேற்கொள்ளப்பெறும் பல்வேறு முறைகளைப்பற்றிய விதிகளும் விவரங்களும் தரப்பெற்றிருப்பதுடன் தமிழ்மொழி பயிற்றுங்கால் அவற்றை எவ்வெவ்வாறு கையாளலாம் என்பதும் விளக்கப்பெற்றிருக்கின்றது. ஏழிலிருந்து பன்னிரண்டு முடியவுள்ள

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அத்தியாயங்களில் மேற்கூறப்பெற்ற விதிகள் முதலியவற்றைத் தமிழாசிரியர்கள் நடைமுறையில் எவ்வெவ்வாறு கையாளலாம் என்று எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கப் பெற்றிருக்கின்றது.

**தொகுப்புரை**

சுப்புரெட்டியார் சைவம், வைணவம் சார்ந்த நூல்களை வெளியிட்டுள்ளார். தமிழ் மொழிக்கு ஆய்வு நூல்களை, மொழிபெயர்ப்புகளை வழங்கியுள்ளார். அவர் எழுதிய வைணவம் சார்ந்த நூல்களுக்குத் திருமலை தேவஸ்தானம் நிதி வழங்கியுள்ளது. அவர் கல்வி ஆற்றிய இடங்களில் அவருடைய நூல்கள் வைக்கப்பட்டுள்ளன. அவர் எழுதிய திறனாய்வு நூல்களே கல்விக் கொடையாகத் திகழ்கின்றன.

**குறிப்பு நூல்கள்**

[1] சுப்புரெட்டியார். ந. *கல்வி உளவியல்.* ஏ.எஸ். வாசன் கம்பெனி, சென்னை.
[2] சுப்புரெட்டியார். ந. *தமிழ் பயிற்றும் முறை.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
[3] சுப்புரெட்டியார். ந. *கல்வி உளவியல் கோட்பாடுகள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை.
[4] *சுப்புரெட்டியார், ந. 100 பேராசிரியரின் நூல்களிலுள்ள அணிந்துரைகளின் தொகுப்பு.* நூற்றாண்டுக் குழு வெளியீடுகள், அண்ணாநகர் மேற்கு, சென்னை.
[5] *சுப்புரெட்டியார், ந. 100 நூற்றாண்டு விழா நிகழ்வுகள்.* நூற்றாண்டுக் குழு வெளியீடுகள், அண்ணாநகர் மேற்கு, சென்னை.
[6] சுப்புரெட்டியார், ந. *(வேமனார்- என்.ஆர்.நார்லா) தமிழாக்கம்.* சாகித்திய அகாதெமி, புது டெல்லி, முதற்பதிப்பு, 1978.
[7] சுப்புரெட்டியார், ந. *(சி.ஆர்.ரெட்டி- டி.ஆஞ்சனேயலு) தமிழாக்கம்.* சாகித்திய அகாதெமி, புதுடெல்லி, முதற்பதிப்பு, 1981.
[8] சுப்புரெட்டியார், ந. *அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல், தமிழாக்கம்.* ஓரியண்ட் லாங்மென்ஸ், முதற்பதிப்பு, 1969.
[9] சுப்புரெட்டியார், ந. *நினைவுக் குமிழ்கள். முதல் பகுதி.* பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, 1988.
[10] சுப்புரெட்டியார், ந. *கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு.* தேன்மழை பதிப்பகம், சென்னை, பதிப்பு, 1989.
[11] www.tamilvu.org 25 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

**Reference books**

[1] Subbu Reddiar, N. *Kalvi Ulaviyal*. A.S. Vasan Company, Chennai.
[2] Subbu Reddiar, N. *Tamil Payitrum Murai*. Manivaskar Publishing House, Chennai.
[3] Subbu Reddiar, N. *Kalvi Ulaviyal Kotpadugal*. Manivaskar Publishing House, Chennai.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[4] Subbu Reddiar, N. *100 Perasiriyarin Noolkalilulla Aninthurai Thoguppu*. Centenary Committee Publications, Anna Nagar West, Chennai.
[5] Subbu Reddiar, N. *100 Nootrandu Vizha Nigalvugal*. Centenary Committee Publications, Chennai.
[6] Subbu Reddiar, N. (Vemanar- NR Narla) Translation in Tamil. Sahitya Academy, New Delhi, First Edition, 1978.
[7] Subbu Reddiar, N. (C.R. Reddy- D. Anjanayalu) Translation in Tamil. Sahitya Academy, New Delhi, First Edition, 1981.
[8] Subbu Reddiar, N. *Ariviyal Payitrum Moola Mudal Nool*. Translation in Tamil. Orient Longmans, First Edition, 1969.
[9] Subbu Reddiar, N. *Ninaivu Kumilgal*. First Part. Pari Station, Chennai, First Edition, 1988.
[10] Subbu Reddiar, N. *Kavimaniyin Tamilpani Or Mathipeedu*. Thenmalai Publishing House, Chennai, Edition, 1989.
[11] www.tamilvu.org Accessed on 25 Jume 2022.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for allowing me to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# ந. சுப்பு ரெட்டியாரின் அறிவியல் சிந்தனைகள்

## Scientific Thoughts of N. Subbu Reddiar

**முனைவர் அர. மீனா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

அண்ணா ஆதர்ஷ் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. R. Meena**, Assistant Professor of Tamil, Anna Adarsh College for Women, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-7094-5814**

**DOI: 10.5281/zenodo.7275458**

### Abstract

*Language specializes in the aid of knowledge. If a language has to transcend many periods and excel, it must adapt itself to future changes. Realizing this, Professor N. Subbu Reddiar, who had an unquenchable love for Tamil, sought to explore the greatness of Tamil with the help of science and found success in that endeavour. His research thought is oriented to the philosophy of anthropology, Biology, physiological anatomy, physical and chemical sciences that related to human life and continued the need for future inventions. Therefore, among the innumerable works of N. Subbu Reddiar who have linked spirituality with science, scientific Tamil, atomic creation, electrons, nuclear physics, the human body, tradition, home ethics, youth and science teaching methodology. The purpose of this study is to reveal the scientific messages embedded in Tamil literature as evinced by Subbu Reddiar in his works. The style of teaching the Tamil language with the help of science and the need to create scientific art words in Tamil and the ability to see any context of life through a scientific perspective is seen through the thoughts of Professor Reddiar. Therefore, this study explores topics such as atomics, anthropology, domestic life, biology, cosmology, science in spirituality, psychology in literature, linguistics, teaching science as portrayed by Prof. Subbu Reddiar.*

**Keywords:** Scientific Thoughts, Prof. Subbu Reddiar, Tamil Language.

### ஆய்வுச் சுருக்கம்

*அறிவின் துணை கொண்டு இயங்கும் கருவிகளுள் சிறப்பிடம் பெறுவது மொழி. ஒரு மொழி காலங்கள் பல கடந்து, சீர்மிகு சிறப்புடனும், இறவாத் தன்மை பெற்றும் விளங்க வேண்டுமெனில், அம்மொழி எதிர்கால மாற்றங்களுக்குத் தன்னை ஏற்புடையதாக்கிக் கொள்ள வேண்டியது அவசியம். இதனை உணர்ந்தே தமிழின்பால் தீராத காதல் கொண்ட பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் தமிழின் பெருமையை அறிவியலின் துணை கொண்டு ஆராய முற்பட்டு, அதன் காரண காரியங்களில் ஈடுபட்டு, அம் முயற்சியில் வெற்றியும் கண்டார். பேராசிரியரின் அறிவியல் படைப்புகள் தமிழை வளப்படுத்தியதோடு புதிய மாற்றங்களுக்கு வழி வகுத்தது. அவர்தம் ஆய்வுச் சிந்தனை, மானிடவியலின் தத்துவத்தை மெய்யியல் ஆக்கியது; மானிடப் பிறப்பின் மகத்துவத்தை உயிரியல் ஆக்கியது; மானிட உலகின் இன்பத்தைக் கலையியல் ஆக்கியது; மானிடர்சூழ் அண்டத்தை வானியல் ஆக்கியது; மானிடர் உடற் கூற்று அதிசயங்களை உடலியல் ஆக்கியது; மானிடர் வாழ்வின் இயற்பியல் வேதியியல்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*மாற்றங்களை அணுவியல் ஆக்கியது; எதிர்காலக் கண்டுபிடிப்புகளின் தேவையைப் பறை சாற்றியது. ஆகவே, ஆன்மிகத்தை அறிவியலோடு பிணைத்துக் காட்டிய ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் படைத்த எண்ணற்ற படைப்புகளுள் அறிவியல் விருந்து, அறிவியல் தமிழ், அணுவின் ஆக்கம், அதிசய மின்னணு, அணுக்கரு பௌதிகம், தமிழில் அறிவியல் அன்றும் இன்றும், தமிழில் அறிவியல் செல்வம், மானிட உடல், நமது உடல், தொலை உலகச் செலவு, வாழையடி வாழை, இல்லற நெறி, இளைஞர் வானொலி, இளைஞர் தொலைக்காட்சி, அறிவியல் பயிற்றும் முறை ஆகிய பதினைந்து நூல்களை ஆய்வுக் களங்களாகக் கொண்டு பருந்துப் பார்வையில் இவ் ஆய்வு மேற்கொள்ளப் படுகின்றது. தமிழ் இலக்கியங்களில் பொதிந்து கிடக்கும் அறிவியல் செய்திகளை, தமிழ் மொழியை அறிவியல் துணை கொண்டு கற்பிக்கும் பாங்கை, தமிழில் அறிவியல் கலைச் சொற்கள் உருவாக்க வேண்டியதன் அவசியத்தை, வாழ்வின் எத்தகைய சூழலையும் அறிவியல் கண்ணோடு காணும் திறத்தைப் பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்களின் சிந்தனைகளின் வாயிலாக வெளிப்படுத்துவதே இவ் ஆய்வின் நோக்கம் ஆகும். எனவே, இவ் ஆய்வு அணுவியல், மானிடப் பிறப்பியல், இல்லற வாழ்வியல், அண்டவியல், ஆன்மிகத்தில் அறிவியல், இலக்கியங்களில் உளவியல், மொழியியல், அறிவியல்சார் கருவிகள், அறிவியல் பயிற்றும் முறை என்ற தலைப்புகளில் அமைகின்றது.*

**குறிப்புச்சொற்கள்:** ந. சுப்பு ரெட்டியார், அறிவியல் சிந்தனைகள், தமிழ்மொழி.

### புகுமுன்

பல்துறை சார்ந்த நூல்களைத் தமிழ் மொழியில் இயற்றி, அளப்பரிய தொண்டுகள் புரிந்த பெருமைக்குரிய பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள், வேதியியல் துறையில் பட்டம் பெற்ற சிறப்பும், தமிழ் மொழியின் மீதான காதலும் அவரைத் தமிழுலகில் தவிர்க்க முடியாத ஆளுமையாக உருப்பெற வைத்தது. தமிழை அறிவியலோடு அவர் இணைக்க தமிழுலகம் மாபெரும் புரட்சியைச் சந்தித்தது. அறிவியல் உலகை எதிர்கொள்ளும் துணிவும், ஆற்றலும் தமிழுக்கு உண்டு என்பதை உலகுக்கு உணர்த்தியது.

### பேராசிரியரின் நூல்களும் அறிவியல் செய்திகளும்

பாமர மக்களும் அறிவியலைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற பேராசிரியரின் நோக்கம் அவருடைய நூல்களில் வெளிப்படுகின்றது.

- உலக இயக்கத்திற்குக் காரணமான அணு குறித்த பார்வையைப் பல நூல்களில் அவர் குறிப்பிட்டுள்ளார். சிறப்பாக **அணுக்கரு பௌதிகம் (மொழிபெயர்ப்பு நூல்), அணுவின் ஆக்கம், அதிசய மின்னணு** ஆகிய நூல்கள் வெளிப்படுத்துகின்றன.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

- ஒலி அலைகளால் உண்டாகின்ற மாற்றங்களை, மாற்றங்களின் வாயிலாக உண்டாகும் ஆற்றல்களை **இளையோர் வானொலி, இளையோர் தொலைக்காட்சி** என்ற இரண்டு நூல்களும் தெளிவுபடுத்துகின்றன.
- விண்வெளிப் பயணம் குறித்த செய்திகளைத் **தொலை உலகச் செலவு** என்னும் நூல் கூறுகின்றது. (ஆய்வுக்குட்படாத அம்புலிப்பயணம், இராக்கெட் ஆகிய நூல்களும் விண்வெளிச் செய்திகளைத் தருகின்றன).
- மனித உடல் குறித்த ஆய்வினை **நமது உடல், மானிட உடல்** (மொழிபெயர்ப்பு நூல்) ஆகிய நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன.
- இல்லற வாழ்வின் இனிமையை **இல்லற நெறி** என்ற நூலும், மரபியல் குறித்த செய்திகளை **வாழையடி வாழை** என்ற நூலும் அறிவியல் பார்வையில் அலசுகின்றன.
- உளவியல், உயிரியல், கணிதவியல், வானவியல் உள்ளிட்ட பல அறிவியல் துறைகளின் வளர்ச்சியைத் **தமிழில் அறிவியல் அன்றும் இன்றும்** என்ற நூல் விவாதிக்கின்றது.
- ஞாயிறு, விண்வெளி, அணு ஆற்றல், மானிடப் பிறப்பியல், கால்வழி இயல் (மரபியல்) குறித்த செய்திகளைத் **தமிழில் அறிவியல் செல்வம்** என்ற நூல் இயம்புகின்றது.
- சமயங்களுக்கும் அறிவியலுக்கும் இடையே உள்ள தொடர்பை **அறிவியல் தமிழ்** உரைக்கின்றது. (ஆய்வுக்குட்படாத ‘அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்’ என்ற நூல் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பொதிந்துள்ள அறிவியல் செய்திகளைப் பட்டியலிடுகின்றது)
- மின்னல், இடி, அம்புலிப் பயணம், நனவிலி மனம் ஆகியன குறித்த செய்திகளை **அறிவியல் விருந்து** என்ற நூல் விளக்குகின்றது.
- அறிவியலை எவ்வாறு கற்பிக்க வேண்டும் என்பதை **அறிவியல் பயிற்றும் முறை** என்ற நூல் காட்டுகின்றது.

பேராசிரியரின் இந்நூல்கள் யாவும் அவருடைய ஆழமான அறிவுத் திறனை வெளிப்படுத்துகின்றன. தமிழில் அறிவியல் நூல்கள் இல்லை என்ற குறையைப் போக்கும் வண்ணம் எளிய தமிழில் அறிவியல் செய்திகளை விளக்கிச் சென்றிருப்பது அவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்றளிக்கின்றது. அறிவியலைத் தமிழோடு இணைக்க அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும், தமிழ் மொழியின் மீதான அவருடைய ஆர்வத்தையும், அவர்தம் நூல்களின் வாயிலாக வெளிப்படுத்துவதே இவ் ஆய்வின் நோக்கமாக அமைகின்றது.

**அணுவியல்**

உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் அணு எனப்படும் மிகச் சிறிய துகள்களால் ஆனவை. அணு இன்றி உலகம் அசைவதில்லை.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**அணுக்களெல்லாம் புரோட்டான், நியூட்ரான், எலக்ட்ரான் என்ற மூவகைத் துகள்களால் ஆகியவையே. ஆனால் அணுவில் அடங்கியுள்ள துகள்களின் மாறுபட்ட எண்ணிக்கைச் சேர்க்கையால் ஓர் அணுவிலிருந்து மற்றோர் அணு வேறுபடுகின்றது (இலக்கியத்தில் அறிவியல், பக். 100)**

என்ற வகையில் அணு குறித்த அறிமுகத்தையும், அணுவின் அமைப்பையும், அதன் செயலாற்றலையும் அணுவின் ஆக்கம் என்ற நூலில் விளக்கி உரைக்கின்றார் பேராசிரியர்.

**அணுக்கரு என்ற சொல்லைச் சுமார் நாற்பது ஆண்டுகட்கு முன்னர் ரதர் ஃபோர்டு என்பார் முதன் முதலாகக் கையாண்டார். (அணுக்கரு பௌதிகம், பக். 1).**

அவருக்குப் பின்னர் தேலஸ், பிளேட்டோ, டால்டன், ஜெ.ஜெ.தாம்சன் உள்ளிட்ட பல அறிஞர்கள் வெவ்வேறு நிலைகளில் அணுவினை ஆராய்ந்து அதன் தன்மைகளை உலகறியச் செய்தனர் என்பதை அணுக்கரு பௌதிகம் என்ற நூலில் மிக விரிவாக விளக்குகின்றார்.

தொடக்கத்தில் சில நாடுகளில் ஏற்பட்ட அணுக்குண்டு வீச்சால், மக்கள் தங்கள் இன்னுயிரையும், வாழ்வாதாரத்தையும் இழந்தனர். அதனால் அணு என்பது அழிவுக்கே வழிவகுக்கும் என்ற கருத்து மக்களின் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது. அணு பற்றிய விழிப்புணர்வு இல்லாமையே இதற்குக் காரணம் எனலாம்.

**உலகில் உள்ள எல்லாப் பொருள்களும் மின்னணுக்களாலானவை. மேசை, நாற்காலி, கண்ணாடி போன்ற உயிரில்லாத பொருள்களும், மரம், செடி, கொடி, பிராணிகள் போன்ற உயிருள்ள பொருள்களும் மின்னணுக்களாலானவை. எனவே பொருள்கள் எந்த வடிவத்திலிருப்பினும் அவை மின்னணுக்களாலானவை என்பதை நாம் அறிதல் வேண்டும் (அதிசய மின்னணு, பக். 2)**

என்று அணு ஆற்றலால் விளைந்த பெரும் பயனான மின்னாற்றலைக் கோடிட்டுக் காட்டி, அணு பல நன்மைகளுக்கு வழிவகுக்கும் என்பதை மக்கள் மனதில் பதிய வைக்க முயற்சி செய்கின்றார். அளப்பரிய ஆற்றல் கொண்டிலங்கும் அணுக் கருவின் தன்மைகளை, அணுக் கருவின் துகள்களை, அணுக் கரு விசைகளை, அதன் இயக்கங்களை, அணு உலைகளின் செயல்பாடுகளை, மின் ஆற்றலால் உண்டாகும் விளைவுகளை, மின் அணுக் குழல்களை, கதிர் இயக்கங்களை, அணு ஆராய்ச்சிக் கருவிகளை, பல்வேறு துறைகளில் அணுவின் ஆக்கத்தை மிக நுட்பமாக எளிய தமிழில் கற்றுத் தருகின்றார் பேராசிரியர். சான்றாக,

**எல்லாப் பொருள்களும் சில அடிப்படைப் பொருள்களாலானவை என்பது நமக்குத் தெரியும். இந்த அடிப்படைப் பொருள்களைத்தான் தனிமங்கள் என்று வழங்குகின்றோம். இத் தனிமங்கள் யாவும் அணுக்களாலானவை. ஒவ்வொரு அணுவிலும் பல பகுதிகள் உள்ளன. அணுவின் நடுவில் இருப்பது உட்கரு. அதனைச்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **சுற்றிப் பல வட்டமான கூடுகளில் எதிர் மின்னிகள் சுற்றி வருகின்றன (அணுவின் ஆக்கம், பக். 179)**

என்று பதிவு செய்கின்றார். அணுவின் அமைப்பை இதைவிட எளிதாக எவராலும் கூறிவிட முடியாது. அணு அறிவியலை அறிந்து கொள்ளும் ஆர்வம் உடையோர் பேராசிரியரின் இத்தகு நூல்களைப் படித்தால் பயன் பெறலாம் என்பது வெள்ளிடைமலை.

மருத்துவத் துறையில் அணுக் கதிர்வீச்சுகள் எத்துணை ஆற்றலைப் பெற்றிருக்கின்றன என்பதும், நோய்களின் தீவிரத்தைக் கட்டுப்படுத்துவதற்கு அவை பெருமளவு துணைபுரிகின்றன என்பதும் நாம் காண்கின்ற பேருண்மை. அதே போன்று, உழவுத்துறையில் பயிர்கள் செழித்து வளர, ஒளிச் சேர்க்கை நிகழ எனப் பல்வேறு நிலைகளில் அணுக் கதிர்கள் பயன் தருகின்றன. தொழில் துறையில் பல இயந்திரங்களின் செயல்பாடுகளுக்கு அணுவே மூலாதாரமாக விளங்குகின்றது. தொலைத் தொடர்புத் துறைகள், விமானப் போக்குவரத்து, பாதுகாப்புத் துறை எனப் பல துறைகளில் அணுவின் பேராதிக்கம் செயல்படுகின்றது. இத்தகு செய்திகள் யாவற்றையும் மிக நேர்த்தியாக, தொடர்புடைய படங்களுடன் விளக்கி உரைக்கின்றார் பேராசிரியர். அதே வேளையில் அணு ஆற்றல் வளர்ச்சியில்,

- **முதலாவது மக்கள் சுகாதாரத்தைக் காப்பது,**
- **இரண்டாவது கதிரியக்க ஓரிடத்தான்களை மருத்துவம், நோய்களைப் பரிசீலனை செய்தல், மருத்துவ ஆராய்ச்சி ஆகிய துறைகளில் பயன்படுத்துவது (அணுவின் ஆக்கம், பக். 305)**

என்ற முறையில் அறிவியல் அறிஞர்களும், ஆட்சியாளர்களும் சிந்தித்தால் அணுக் கருவினால் பல நன்மைகளைப் பெற முடியும் என்று பேராசிரியர் வழி காட்டுகின்றார். எதிர்காலத்தில் அணுவின் ஆற்றலே உலகை இயக்கும் என்று ஆணித்தரமாக அவர் கூறிய கூற்று, இன்று மெய்யாகி உள்ளது என்பதும் ஏற்றுக் கொள்ள வேண்டிய ஒன்றாகும்.

**அண்டவியல்**

உலகம் பல அண்டங்களால் நிறைந்தது. அண்டங்களில் சூரியன் உள்ளிட்ட எண்ணிறந்த விண்மீன்களும், கோள்களும், விண்கற்களும் அடங்கியுள்ளன. வான்வெளியில் நிகழ்கின்ற அதிசயங்கள் யாவும் அண்டங்களின் வினையால் உருவாகின்றன. **அணுக்கள் தம்மோடு தாமும் பிறிதுமாகச் சேர்ந்து பல்லாயிரம் பொருள்களை உண்டாக்கி உலகத்தை உய்விக்கின்றன (இலக்கியத்தில் அறிவியல், பக். 101)** என்ற கருத்து சிந்திக்கத்தக்கது. பேராசிரியர் அவர்களும்,

> **உலகில் உள்ள 92 தனிமங்களின் அணுக்களும் தம்மொடு தாமும் பிறிதுமாய்ச் சேர்ந்து அணுத் திரளைகள் ஆகிய திரட்சியே அண்டங்கள் என்பது அறிவியல் கண்ட உண்மை (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், பக். 19)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்றுரைக்கின்றார். மேலும், இந்த அண்டங்களில் உலாவுகின்ற சூரியன், இடி, மின்னல், கோள்கள் ஆகியவற்றின் செயல்பாடுகளை வரிசைப்படுத்திக் காட்டுகின்றார். சான்றாக,

- **எண்ணற்ற விண்வெளியில் நமது கதிரவன் ஒரு சாதாரண விண்மீனேயாகும் (தொலை உலகச் செலவு, பக்.19)**
- **மின்னல் என்பது பேராற்றல் வாய்ந்த ஒரு மின்பொறியே (அறிவியல் விருந்து, பக். 62)**

என்றவாறு விளக்குகின்றார். ஒவ்வொரு கோள்களின் அமைப்பை, அதன் செயல்பாடுகளை, கோள்களினால் வானில் நிகழ்கின்ற மாற்றங்களை மிக விளக்கமாக அறிவியல் விருந்து என்னும் நூலில் எடுத்துரைக்கின்றார். அணு இன்றி உலகம் இல்லை. உலகம் இன்றி உயிர்கள் இல்லை என்ற கருத்தை ஆழமாக முன் வைக்கின்றார். இக்கருத்தினை அணுக்கரு பௌதிகம், அணுவின் ஆக்கம், அதிசய மின்னணு, அறிவியல் விருந்து, அறிவியல் தமிழ் ஆகிய நூல்கள் மிகச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன.

**விண்வெளியியல்**

இயல்பாகவே மனிதன் விண்ணைத் தொட்டு விட வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவன். அதனால் தாம் இயற்றும் கவிதைகளில், கூறுகின்ற கதைகளில், தன்னுடைய கனவுகளில் வானுலகைப் பற்றிய எண்ணற்ற சிந்தனைகளை உலாவ விட்டு மகிழ்கின்றான். தமிழ் இலக்கியமும் வானியலும் ஒன்றையொன்று பிரிக்க முடியாதவை.

**வான்கண் வழியா வைகறை யாமத்து**
**மீன் திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்**
**காரிருள் நின்ற கடைநாட் கங்குல் (சிலம்பு. 10: 1-3)**

என்று சிலப்பதிகார வரிகளில், வளர்பிறை நாட்களில் ஞாயிறு எழுவதற்கு முன்னர் திங்கள் சென்று மறைந்து விடும் என்ற உண்மை வெளிப்படுகின்றது. சூரியனில் நடைபெறுகின்ற அணுப் பிணைவு காரணமாக வெப்பமும் ஒளியும் ஏற்படுகின்றன என்பதை,

**வானம் மூழ்கிய வயங்கு ஒளி நெடுஞ்சுடர்க்**
**கதிர் காய்ந்து எழுந்து அகம் கனலி ஞாயிற்று (நற். பா. 163: 9-10)**

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது. இக்கருத்துகளை ஆய்ந்தறிந்த பேராசிரியர் வானுலகில் புதியதொரு அண்டங்களை ஆய்ந்து, விண்வெளி உலகைத் தன் வசப்படுத்திக் கொண்டிருக்கும் இன்றைய அறிவியல் முன்னேற்றங்களைத் தொலை உலகச் செலவு என்ற நூலில் விரித்துரைக்கின்றார்.

**ஞாயிற்றுக் குடும்பத்தைச் சேர்ந்த உலகுகள் யாவும் கோள்களே. அவை யாவும் வெப்பமுடையவை அல்ல. அவை திண்ணிய குளிர்ந்த உலகுகளாகும். அவை யாவும் பகலவனை விட அளவில் மிகச் சிறியவை (தொலை உலகச் செலவு, பக். 19)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பன போன்ற வானியல் உண்மைகளை மிக எளிய தமிழில் படைத்துக் காட்டுகின்றார் பேராசிரியர். சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்ட இந்நூலில், சந்திர மண்டலத்தை ஆராய்ந்த தொடக்ககால நிலை, விண்வெளிப் பயணத் திட்டங்கள், விண்வெளிக் கருவிகள், விண்வெளிப் பேரிடர்கள், விண்வெளி நிலையங்கள் என நம் கற்பனைக்கு அப்பாற்பட்ட செய்திகள் யாவும் நம் கண் முன் விரிகின்றன. இவை யாவும் அவருடைய வானியல் அறிவைப் பறை சாற்றுகின்றன.

**இல்லறவியல்**

திருமணப் பந்தத்தில் இணைகின்ற ஆணும், பெண்ணும் இல்லறத்தை நல்லறமாக்க வேண்டுமெனில், அதற்கு சில ஒழுங்கமைவு விதிகளைப் பின்பற்ற வேண்டியது அவசியமாகின்றது. **திருமணம் என்பது தனிப்பட்டோரின் உடல் பற்றியதும், உளம் பற்றியதும், உள்ளக்கிளர்ச்சி பற்றியதும், ஆன்ம உறவு பற்றியதுமான முதிர்ச்சியினைக் காட்டும் சமூகச் சான்றாகும் (இல்லற நெறி, பக். 3)** என்பது பேராசிரியரின் கூற்று. பேராசிரியரின் இல்லறநெறி என்ற நூல் சற்றே வித்தியாசமாகத் திருமணத்திற்குத் தயாராகின்ற மணமகன் செந்தில்வேலனுக்கு திருவேங்கடத்தான் எழுதிய கடிதமாக அமையப் பெற்று படிப்போரைக் கவர்ந்திழுக்கின்றது. திருமணத்திற்கு முன்பு ஆண், பெண் இருவரும் தங்கள் உடல் குறித்த தெளிவைப் பெற்றிருக்க வேண்டும், தங்கள் உடலைப் பரிசோதித்துத் திருமண வாழ்விற்கு தகுதியுடையோராக இருக்கின்றோமா என்பதைக் காண வேண்டும். ஏதேனும் குறைகள் இருப்பின் இருவரும் திருமணத்திற்கு முன்பே அதனை சீர் செய்து கொள்ள வேண்டும். அதன் பிறகே திருமணம் செய்து இல்லற வாழ்வில் ஈடுபட வேண்டும் என்ற அறிவுரைகளை அறிவியல் நோக்கில் மிக ஆழமாகப் பதிவு செய்கின்றார் பேராசிரியர். **உடல் – மனம் – அறிவு என்னும் மூன்றும் ஒருமைப்பட்ட வாழ்வே அன்புக்குரிய இல்வாழ்வாகும் (இல்லற நெறி, பக்.573)** என்று குறிப்பிடுகின்றார். மேலும், குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளையும், மக்கட்பேறு குறித்த செய்திகளையும் விளக்குகின்ற பேராசிரியர், கலவியில் ஈடுபடும் முறை குறித்தும் மிக ஆழமாக அலசுகின்றார். அறிவியல் அடிப்படையில் திருமணத்தை வரையறுத்துக் காட்டிய அதே வேளையில் சமூகவியல் அடிப்படையிலும் மணப் பொருத்தத்தைக் கோடிட்டுக் காட்டுகின்றார்.

**பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு**
**உருவு நிறுத்த காம வாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (தொல். மெய். நூ. 25)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று தொல்காப்பியர் கூறிய பத்து வகையான மணப் பொருத்தங்கள் இன்றைய வாழ்விற்குத் தேவை என்பதைச் சூழல் அடிப்படையிலும், சில சான்றுகளின் அடிப்படையிலும் விளக்கிச் செல்கின்றார். இருவரின் மணவாழ்வில்,

> **கணவனோ மனைவியோ அல்லது இருவருமோ உள்ளக்கிளர்ச்சியில் முதிராத நிலையில் இருக்கலாம். இருவரிடையே போதுமான காதலும் அன்பும் இல்லாதிருக்கலாம். இருவரிடையே எழும் முரண்பாடுகள் சமூகப் பொருளாதார நிலைகள், பெற்றோர் தலையீடு போன்ற புறவிசைகளால் எழலாம் (இல்லற நெறி, பக். 534 - 535)**

என்பன போன்ற காரணிகள் இடையூறாக அமைந்து திருமண உறவை முரண்பாடாக ஆக்குகின்றமையும் கவனிக்கத் தக்கது என்றுரைக்கின்றார். எனவே, மகிழ்வுடைய இல்லற வாழ்க்கை அமைய வேண்டுமெனில், துணைவியைப் போற்றிப் பாராட்டுதல், தக்காரின் அறிவுரையைக் கேட்டல், திருமண உறவைப் பிரிக்கும் சூழலில் இருந்து தங்களைத் தற்காத்துக் கொள்ளல், முடிந்தால் தனிக்குடும்பம் சென்று விடல், தம்மைப் பிறர் நிலையில் வைத்து எண்ணுதல் உள்ளிட்ட பத்து வழிகளைக் கூறி, இல்லற வாழ்வின் இனிமையை எடுத்துரைக்கின்றார்.

**மானிடப் பிறப்பியல்**

மானிடப் பிறப்பு என்பது விந்தை மிகுந்தது, வியப்புக்குரியது. மனிதப் பிறப்பை அறிந்து கொள்ளும் முன், ஒரு மனிதன் தன் உடல் உறுப்புகளின் நலன்களைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும். **மனிதன் புதிதாகப் புனைந்துள்ள பொறிகள் அனைத்தையும் விடப் பல வியத்தகு செல்களைப் புரிய வல்லது நமது உடல் (மனித உடல், பக். 11)** என்பதால் உடல் குறித்த தெளிவுடன் செயல்படல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார் பேராசிரியர். நமது உடல், மானிட உடல், தமிழில் அறிவியல் செல்வம் ஆகிய நூல்களில் மனித உடல் உறுப்புகளின் செயல்பாடுகளையும், அவை இயங்குவதற்கான காரணிகளையும் அறிவியல் நோக்கில் தெளிந்த தமிழில் விளக்குகின்றார். சான்றாக,

- **உயிரினங்கள் யாவும் உயிரணுக்கள் எனப்படும் மிகச் சிறிய அலகுகளால் ஆனவை (நமது உடல், பக்.2)**
- **தோல் புலனை அறியும் உள்ளுறுப்பாகவும் செயற்படுகின்றது (நமது உடல், பக்.17)**
- **நமது எலும்புக்கூட்டின் பல்வேறு பகுதிகளையும் இயக்குவதற்கு நமது உடலில் 600க்கும் மேற்பட்ட தசைகள் இருக்கின்றன (நமது உடல், பக்.33)**

என்றவாறு செறிவுறுப்பு மண்டலம், இரத்த ஓட்ட மண்டலம், மூச்சுறுப்பு மண்டலம், கழிவு மண்டலம், இனப்பெருக்க மண்டலம் என நம் உடலின் ஒவ்வோர் அங்கங்களையும் அறிவியல்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நோக்கில் விளக்கம் உரைக்கின்றார். அதே நேரத்தில் நமது உடல் உறுப்புகளைப் பேணிக் காத்து வாழ வேண்டிய வழிமுறைகளைத் தெளிவுறக் காட்டுகின்றார்.

உலகம் உயிர்களின் இனப்பெருக்கத்தை அடிப்படையாகக் கொண்டே இயங்குகின்றது. ஆண், பெண் இருவரின் கலவியால் ஓர் உயிர் பிறக்கின்றது. ஆணின் விந்தணுவும், பெண்ணின் முட்டையணுவும் இதற்கு ஒத்துழைப்பு நல்குகின்றன.

- **உயிரணுக்களை உற்பத்தி செய்யும் காமச் சுரப்பிகள் – ஆணிடம் இவை விரைகள் என்றும், பெண்ணிடம் இவை சூற்பைகள் என்றும் வழங்கப் பெறுகின்றன.**
- **இந்த உயிரணுக்களை உரிய இடங்களுக்கு அனுப்பிக் கருவுறுதலைச் சாத்தியமடையச் செய்யும் தூம்புகள் – ஆணிடம் விந்தேறு குழல், எபிடிடைமஸ், விந்து பாய்ச்சும் தூம்பு, சிறுநீர்ப்புறவழி ஆகியவையும், பெண்ணிடம் கருக்குழலும் இங்ஙனம் செயல்களைப் புரிகின்றன (தமிழில் அறிவியல் செல்வம், பக். 99)**

என்று ஆண், பெண் இருவருடைய இனப்பெருக்க மண்டலத்தின் ஒற்றுமைகளை விளக்கி மானிடப் பிறப்பின் மகத்துவத்தை வெளிக்காட்டுகின்றார் பேராசிரியர். இதனை,

**புருடன் உடலில் பொருந்து மற்று ஓரார்**
**திருவின் கருக்குழி தேடிப் புகுந்த**
**உருவம் இரண்டாக ஓடி விழுந்ததே (திருமந்., பா. 454)**

என்ற திருமூலரின் பாடலோடு ஒப்பிட்டுக் காணலாம். கருப்பையில் தங்கிய கரு மெல்ல மெல்ல வளர்ந்து ஒவ்வொரு நிலையாக எட்டுகின்றது. பல்வேறு உறுப்புகள் முளைக்கத் தொடங்குகின்றன. தாயின் வயிற்றில் உள்ள குழந்தை நஞ்சுக் கொடியின் மூலமாக உணவைப் பெற்று தன்னைப் பாதுகாத்துக் கொள்கின்றது. முழுவளர்ச்சி பெற்றதும் கருப்பையை விட்டு வெளியே வர முயற்சி செய்கின்றது. இதனை மூன்று நிலைகளாகப் கூறுகின்றார் பேராசிரியர்.

- **முதல் நிலை – கருப்பை சுருங்கத் தொடங்கி வலி தோன்றியதில் இருந்து கருப்பையின் வாய் நன்றாக விரிந்து குழந்தையைத் தள்ளுவதற்கு ஏற்ற நிலையை அடையும் வரையில் உள்ள நிலை (தமிழில் அறிவியல் அன்றும் இன்றும், பக். 160)**
- **இரண்டாம் நிலை – குழந்தை வெளியே தள்ளப்பெறும் இந்நிலையில் சாதரணமாத் தலை முதலிலும், ஏனைய உடல் உறுப்புகள் அடுத்தும் வெளியே வருகின்றன. இப்பொழுது பிரசவ வேதனை மிகவும் அதிகமாகவும் கடுமையாகவும் இருக்கும் (தமிழில் அறிவியல் அன்றும் இன்றும், பக். 162)**
- **மூன்றாம் நிலை - கருப்பையை ஒட்டிக் கொண்டிருக்கும் நஞ்சு மெல்லப் பிரிந்து கருப்பை சுருங்கி வருவதனால் அது கீழே தள்ளப்பெற்று வெளியே வந்து விடுகின்றது. அஃதுடன் குருதியும் சிறிதளவு கொட்டுகின்றது. இது பின்னிலைப் பிரசவம் என்று வழங்கப்பெறும் (தமிழில் அறிவியல் அன்றும் இன்றும், பக். 163)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்றவாறு ஓர் உயிர் கருவுற்று, வளர்ச்சியடைந்து இந்த உலகத்திற்கு வரும் வரையிலான நிகழ்வை ஆற்றொழுக்கமான நடையில் தெளிவுபடுத்திக் காட்டுகின்றார். அதோடு கருவுற்ற பெண்ணின் மார்பகங்கள் குழந்தைக்குப் பாலூட்டுவதற்காகத் தயாராகின்ற முறையையும், குழந்தை பிறந்த பின்பு கருப்பை சுருங்கி தன்னிலை அடையும் நிலையையும் மிக நேர்த்தியாகக் கோடிட்டுக் காட்டுகின்றார். பிறக்கின்ற உயிர் ஆணா, பெண்ணா, இரண்டும் அல்லாத உயிரா என்பதற்கு நிறக்கோள்களின் அடிப்படையில் விளக்கம் தருகின்றார். பிறக்கின்ற உயிர் வளர்ந்த பின்பு, அவை கொண்டிருக்கும் நிறம், குணம், வடிவம், ஒழுக்கம், நடத்தை இவை யாவும் மரபுவழிப்பட்டனவா? அன்றி சூழல்வழியில் உண்டாவதா? என்ற கேள்விக்கு, **ஒரு குழந்தை தன்னுடைய ஒவ்வொரு பெற்றோரிடமிருந்து பெறும் ஒவ்வொரு 23 நிறக்கோள்களும் தன்னுடைய இருவழிப் பாட்டன் பாட்டிமாரிடமிருந்து பெற்றவையாகும் (வாழையடி வாழை, பக். 47)** என்று மரபியல் நோக்கில் வாழையடிவாழை என்ற நூல் தக்க சான்றுகளுடன் விடையிறுக்கின்றது. இத்தகு செய்திகள் யாவும் தமிழில் அறிவியல் செல்வம், தமிழில் அறிவியல் அன்றும் இன்றும், மானிட உடல், வாழையடி வாழையாக ஆகிய நூல்களில் ஒரே மாதிரியான கருத்துகளைக் கொண்டு அமைகின்றன. சிறப்பாக, வாழையடி வாழை என்னும் நூல் இரட்டைக் குழந்தைகள் அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட குழந்தைகளின் பிறப்பு, குறைபாடுள்ள குழந்தையின் பிறப்பு, நோய் உடைய குழந்தை, மந்த மனமுடைய குழந்தை, பெற்றோரின் குருதி மாறுபடுவதால் குறையுடன் பிறக்கும் குழந்தை எனப் பல்வேறு நிலைகளில் குழந்தைகள் பிறக்கின்ற தன்மையை மிக ஆழமாக பதிவு செய்கின்றது. ஆகவே, திருமணமான தம்பதியர் தங்கள் உடல் குறித்த தெளிவைப் பெற்றுக் கொண்டு, இந்த உலகிற்கு அரியதொரு உயிரைக் கொடுக்கும் மிக உன்னதமான பணி நமக்கு உண்டு என்பதை உணர்ந்து கொண்டு செயலாற்றினால் மானிட வாழ்வு தழைக்கும் என்பது பேராசிரியரின் கருத்து.

**இலக்கியங்களில் உளவியல்**

உளவியல் துறை மனித மனங்களின் வியப்பிற்குரிய செய்திகளை, மனித மனத்தின் ஆழத்தை வெளிக்காட்டுகின்ற ஓர் அறிவியல் ஆய்வு என்பதை அறியலாம். **உளவியல் மிகவும் கவர்ச்சி வாய்ந்த ஒரு துறை. இது நம்முடைய உள்ளத்தைப் பற்றிப் பல செய்திகளைத் தொகுத்தும் வகுத்தும் விளக்குவது (அறிவியல் விருந்து, பக். 163)** என்ற பேராசிரியர் கூற்றும் இக்கருத்தை அரண் செய்கின்றது.

> **மனம் என்பது கற்பனை சார்ந்த ஒன்று, அதன் வெளிப்பாடு செயல்களில் தெரிவதால் உளவியல் என்பது மனித மற்றும் உயிரினங்களின் நடத்தையை, அவற்றின் செயல்களை ஆராயும் அறிவியல் கலை என்பதே சரியானது (தமிழிலக்கியத்தில் உளவியல், பக். 10)**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்ற பிராய்டு, வுண்ட், வில்லியம் ஜேம்ஸ் முதலான உளவியல் அறிஞர்களின் கருத்துரைகளோடு, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்ற உளவியல் செய்திகளை விளக்க முற்படுகின்றார் பேராசிரியர். கம்பராமாயணத்தில் சூர்ப்பனகையின் கணவனைத் தான் கொல்ல நேர்ந்ததால், அவளுக்கு அனைத்து வசதிகளையும் செய்து கொடுத்து, தன் இருப்பிடத்தில், தன்னுடனேயே இருக்க வைக்கின்றான் இராவணன். இராமனைக் காதலித்து அவமானப்பட்ட சூர்ப்பனகை, சீதையின் மீது காதல் கொள்ள இராவணனை ஏவுகின்றாள். **கொல்லாத மைத்துனனைக் கொன்றாய் (கம்ப. இராவணன் வதைப் படலம். பா. எ. 3865)** என்று புலம்புகின்ற வீடணனின் வரிகளால், தன் கணவனைக் கொன்றதால் இராவணனை இதன் மூலம் பழி தீர்த்துக் கொண்ட சூர்ப்பனகையின் நனவிலி மனத்தைச் சுட்டிக் காட்டுகின்றார். இந்தக் கருத்து அறிவியல் விருந்து, தமிழில் அறிவியல் அன்றும் இன்றும் ஆகிய இரண்டு நூல்களிலும் குறிக்கப் பெற்றுள்ளது. மேலும், உருவெளித் தோற்றம் குறித்த உளவியல் பார்வையை, திருமங்கையாழ்வாரின் திருநெடுந் தாண்டகம் நம்மாழ்வாரின் திருவாய்மொழிப் பாடல் மூலமாகவும் விளக்குகின்றார். நாயகியாக நிற்கும் ஆழ்வாருக்கு திருக்குறுங்குடி நம்பி கண்ணுக்கு நேராகத் தோன்றாமல் நெஞ்சுக்கு நேராகத் தோன்றுகின்றான். இதைப் புரிந்து கொள்ளாத ஆழ்வார்,

**என் நெஞ்சினால் நோக்கிக் காணீர்**
**என்னை முனியாதே (திருவாய். 5. 5 - 2)**

என்று பாடுகின்றார். நேருக்கு நேர் நிற்கும் இறைவனைக் காண முடியாமல் கனவுலகில் தவித்துக் கொண்டிருக்கும் மனநிலையை உருவெளித் தோற்றத்திற்குச் சான்றாகக் காட்டுகின்றார் பேராசிரியர். இதனால், தமிழிலக்கியங்களில் தோய்ந்த அவர் மனமும், இலக்கியங்களில் அறிவியலைக் காண முற்பட்ட திறமும் போற்றலுக்குரியதாக அமைகின்றது.

**ஆன்மிகத்தில் அறிவியல்**

எதையும் காரண காரியத்தோடு ஆராய முற்படும் பேராசிரியரின் சிந்தனைத் திறன் ஆன்மிகத்திலும் அறிவியலைக் காண முயல்கின்றது. ஆகவே அறிவியலை விளக்க வரும் இடங்களில் எல்லாம் இறைத் தத்துவத்தை இழையோடச் செய்கின்றார்.

> **சிவனிடம் இருந்து சட சக்தி வந்துள்ளது. சட சக்தி ஐம்பெரும் பூதங்களாகியது. அவற்றிலிருந்து எண்ணிறந்த அண்டங்கள் தோன்றின. அவை யாவும் சிவபெருமானுக்கு உடலாய் அமைந்துள்ளன என்ற கூற்றை வைணவ தத்துவத்தின் சரீர - சரீரி பாவனையோடு ஒப்பிட்டு உணரலாம் (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், பக். 15)**

என்றுரைக்கின்றார்.

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

**அணுக் கோயிலின் முன் நிற்கும் விஞ்ஞானிகளும் அண்டக் கோயிலின் முன் நிற்கும் மெய்ஞ்ஞானிகளும் ஒரே உண்மையைக் காண்கின்றனர் (அறிவியல் தமிழ், பக். 36)** என்பது அவர்தம் ஆணித்தரக் கொள்கை என்பதை அறிவியல் தமிழ் என்ற நூல் தெளிவுறக் காட்டுகின்றது. தமிழ் இலக்கியங்களில் காணப் பெறுகின்ற அறிவியல் செய்திகளையும், ஆன்மிக இலக்கியங்கள் காட்டுகின்ற உலகத்தின் பேருண்மைகளையும் அந்நூல் தக்க சான்றுகளுடன் விளக்குகின்றது. அதோடு அறிவியல் தமிழைக் கற்பிக்க வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்துகின்றது.

**மொழியியல்**

பேராசிரியரின் ஒவ்வொரு நூல்களும் வியத்தகு அறிவியல் உண்மைகளைக் கூறுவது ஒரு சிறப்பு என்றால், அவை யாவும் தெள்ளத் தெளிந்த தமிழில் பல கலைச் சொற்களோடு அமையக் காண்பது வியப்பிலும் வியப்பே.

**பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும் (பாரதியார் பாடல், பக். 189)**

என்ற பாரதியின் கனவைப் பேராசிரியர் பெருமளவு நிறைவேற்றிவிட்டார் என்பதை அவர்தம் நூல்கள் பறைசாற்றுகின்றன ஒவ்வொரு நூலின் இறுதியில் தாம் பயன்படுத்திய கலைச் சொற்களைப் பட்டியலிட்டுக் காட்டியுள்ளமை அவர்தம் பேரறிவுக்கு மூலங்களாக அமைகின்றன.

**இலக்கிய இலக்கண வளமும் சொற்களஞ்சியப் பேறும் பெற்றுள்ள தமிழ் மொழியின் நீர்மையை அறிந்து, பிற கலைகளைத் தமிழ்மொழியில் வடித்துத் தரும் பணியில் ஈடுபடுவோர்கள்தாம் தமிழ் மொழி அனைத்திற்கும் வளைந்து கொடுக்கும் என்ற உண்மையை அறிவர் (அறிவியல் பயிற்றும் முறை, நூல் முகம், பக். 7)**

என்ற அவர்தம் கூற்றினின்று தமிழ்மொழியை வளப்படுத்த விரும்பும் அவர்தம் உள்ளக் கிடக்கை வெளிப்படுகின்றது.

**அறிவியல்சார் கருவிகள்**

அன்றாட வாழ்வின் அறிவியலுக்கு ஆக்கமுரைக்கின்ற பேராசிரியர், நம்மைச் சுற்றிலும் நாம் பயன்படுத்துகின்ற அறிவியல்சார் கருவிகள் குறித்தும் அறிமுகம் செய்கின்றார். **ஒலியலைகள் மின்னோட்டமாக மாற்றப் பெறுகின்றன. அந்த மின்னோட்டம் திரும்பவும் ஒலியலைகளாகின்றன (இளையோர் வானொலி, பக். 23)** என்பது தொலைபேசியைக் கண்டுபிடித்த கிரகாம்பெல்லின் தத்துவம் என்று குறிப்பிடுகின்றார்.

**வானொலி ஒலிபரப்பில் தொடக்கத்திலும் இறுதியிலும் ஒலி அலைகள் தோன்றுகின்றன. ஒலி அலைகளாகத் தொடங்கி மின் அலைகளாக மாறி, மீண்டும் ஒலி அலைகளாக மாறுவதே ஒலிபரப்பு நிகழ்ச்சியாகும். ஆனால், தொலைக்காட்சி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நிகழ்ச்சிகளைப் பரப்புவதில் ஒளிக் கதிர்களைப் பயன்படுத்துகின்றனர். ஆதலால், இந்த நிகழ்ச்சிகள் ஒளிக்கதிர்களாகத் தொடங்கி மின்சார அலைகளாக மாறி திரும்பவும் ஒளிக்கதிர்களாகத் தோன்றுகின்றன இதனை ஒளிபரப்பு என்று வழங்கலாம் (இளையோர் தொலைக்காட்சி, பக். 7)**

என வானொலிக்கும் தொலைக்காட்சிக்கும் இடையே உள்ள ஒற்றுமையைக் கோடிட்டுக் காட்டுவதோடு அவை இயங்கும் முறைகளும் குறிப்பிட்டுச் செல்கின்றார். வானொலி, தொலைக்காட்சி இரண்டின் செயல்பாடுகளைக் கூறுமிடத்தில், அவை இரண்டும் நுகர்வதற்கான கண், செவிப்புலன்களின் தன்மைகளையும் அவர் விளக்கிச் சென்றிருப்பது மிகச் சிறப்பு. இவை தவிர மின்காந்தம், வானொலி, தொலைக்காட்சி, தொலைபேசி, ஒலி பெருக்கி, ஒலி வாங்கி, லெய்டன் சாடி, அணு உலைக் கருவிகள், மருத்துவத் துறையில் மனித உடற்கூறுகளை ஆராய்கின்ற கருவிகள் என எண்ணற்ற கருவிகளை, அதன் செயல்முறைகளை விளக்கிச் செல்கின்றார்.

**அறிவியல் பயிற்றுவதற்கான வழிமுறை**

குழந்தைகள் எதையும் காரண காரியத்தோடு காணுகின்ற அறிவைக் கைவரப் பெற்றவர்களாக விளங்குகின்றனர். அதனால் அவர்களின் அறிவை மேலும் வளர்ச்சிப் பாதையில் செலுத்த அறிவியல் துறைகளை மிகக் கவனமுடன் அவர்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டியது அவசியம்.

**அறிவியல் என்பது பரிசோதனைகள் மூலம் அறிந்து கொள்ளக் கூடியது. சில நுட்பங்களை உன்னிப்பாகப் பார்த்து அவற்றைப் பற்றி ஒரு கோட்பாடு அமைப்பது. அந்தக் கோட்பாடு பொதுமைப்படுத்தப்பட்டு விதிகளாக மாறுவது, அந்த விதிகள் எல்லாச் சந்தர்ப்பத்திலும் சரிதானா என்று கண்டறிந்து எங்காவது அவ்விதி தவறினால் அதைத் தூர எறிந்துவிட்டு வேறு விதிகளை அமைப்பது (விஞ்ஞானச் சிறுகதைகள், பக். 11)**

என்ற எழுத்தாளர் சுஜாதாவின் கருத்திற்கு ஏற்ப, அறிவியலைக் கற்பிக்கும் வழிமுறைகள் குறித்து "யுனெஸ்கோ அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்" (மொழிபெயர்ப்பு), "அறிவியல் பயிற்றும் முறை" ஆகிய நூல்களைப் பேராசிரியர் படைத்துள்ளார். அறிவியலின் பல்வேறு துறைகள், பயிற்றுவதன் நோக்கம், பயிற்றும் முறை, ஆய்வக அமைப்பு, பாட நூல்கள் ஆகியன பற்றிய தகவல்கள் மிக விரிவாக இந்நூல்களில் எடுத்துக் காட்டப்படுகின்றன. அறிவியல் பயிற்றும் நூல்கள்

**நம் நாட்டுப் பள்ளிச் சூழ்நிலைக்கேற்ப நம் சிறார்களின் மனப்பான்மை, கவர்ச்சி முறை, செயல்பாடு ஆகியவற்றை ஒட்டியும் அமைதல் வேண்டும் (அறிவியல் பயிற்றும் முறை, பக். 138)**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று கூறுகின்றார். மேலும், அறிவியலைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர், அறிவியல் பயிற்றலை நம்பிக்கையாக அணுகுதல், சிறுவர்கள் விடுக்கும் வினாகட்கு விடை காணும் திட்டத்தை அவர்களாலேயே அமைக்கச் செய்தல் உள்ளிட்ட பத்து வழிமுறைகளைக் கருத்தேற்றங்களாகக் கொண்டு செயலாற்றினால் கற்பித்தலில் அவர்கள் வெற்றி பெறலாம் என்று வழி கூறுகின்றார். மேலும்,

> **அறிவியல் மனப்பான்மையாளர்களாக உருமாறுவதும், அதற்கான சூழலை உருவாக்குவதும் காலத்தின் போக்குக்கு அவசியமான இன்றியமையாத தேவையாகும் (தமிழில் அறிவியல் படைப்பிலக்கியம், பக். 15)**

என்ற கருத்திற்கு அரண் சேர்க்கும் வண்ணம், அறிவியலைத் தமிழ் மொழியில் கற்பிக்க முடியும் என்றும், கற்பிக்கக் கூடிய அளவிற்குத் தமிழ் வளமுடையது என்றும் தம் நூல்களின் வழி விளக்கமுரைக்கின்றார் பேராசிரியர்.

**ஆய்வு முடிவுகள்**

- அணு அழிவுக்கு அன்று, ஆக்கத்திற்கே,
- உயிரை உலகத்திற்குத் தரும் உடலை ஓம்புவதே சிறந்த நெறி,
- மனப் பொருத்தத்தோடு உடற்பொருத்தமும் அமைவதே சிறந்த இல்லற நெறி,
- அண்டங்களில் உள்ள கோள்களினாலேயே இவ்வுலகம் இயங்குகின்றது,
- ஆன்மிகமும் அறிவியலும் ஒரே நேர்க்கோட்டில் பயணிக்கின்றன,
- தமிழ் இலக்கியங்கள் உளவியல் நோக்கிலேயே எழுதப்பட்டுள்ளன,
- தமிழில் கலைச் சொற்களை உருவாக்குவதே தமிழுக்குச் செய்யும் தொண்டு,
- அறிவியலோடு அறிவியல்சார் கருவிகளின் அறிவினைப் பெறுவது அவசியம்,
- அறிவியலை முறையான வழிமுறைகளில் பயிற்றுவிக்க வேண்டும்,

என்ற கருத்துகளை ஆய்வு முடிவுகளாகப் பெறமுடிகின்றது. தமிழை வளப்படுத்துவது மட்டுமன்று தமிழை அறிவியலோடு இணைக்கின்ற பெருமுயற்சியில் பேராசிரியர் ஈடுபட்டு வெற்றியும் பெற்றுள்ளார் என்பதை இதன்வழி அறிய முடிகின்றது. பேராசிரியரின் ஒவ்வொரு அறிவியல் நூல்களும் ஆழமான ஆய்வுக்குட்படுத்தினால் எதிர்வரும் தலைமுறையினர் அறிவியல் உலகைப் புரிந்து கொள்ள ஏதுவாகும். தமிழ்வழியில் அறிவியல் ஆய்வை மேற்கொள்ள விரும்பும் மாணவர்களுக்குப் பேராசிரியரின் நூல்கள் பெருமளவு துணை புரியும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**குறிப்பு நூல்கள்**

[1] கீதா வாசன். *தமிழிலக்கியத்தில் உளவியல்*. மெய்யப்பன் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2009.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[2] சரவணன், லோ. "அறிவியல் தமிழியல் நோக்கில் நண்டுகள் தீவில் நிற்கின்றன". *அறிவியல் புனைவுகள்*. அனைத்திந்திய அறிவியல் கழகம், தஞ்சை, முதற்பதிப்பு, 2019.

[3] சீனிவாசன் (உ.ஆ). *கம்பராமாயணம்*. அணியகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2000.

[4] சீனிவாசன்.மதி (உ.ஆ). *திருவாய்மொழி*. ஸ்ரீ வராகி பிரிண்டர்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 2000.

[5] ந.சுப்பு ரெட்டியார். *அணுக்கரு பௌதிகம்*. தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, முதற் பதிப்பு, 1966.

[6] ந.சுப்பு ரெட்டியார். *அணுவின் ஆக்கம்*. எஸ்.ஆர்.சுப்பிரமணிய பாவை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, முதற்பதிப்பு,1958.

[7] ந.சுப்பு ரெட்டியார். *அதிசய மின்னணு*. சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1963.

[8] ந.சுப்பு ரெட்டியார். *அறிவியல் தமிழ்*. பாரிநிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1981.

[9] ந.சுப்பு ரெட்டியார். *அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்*. பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 2001.

[10] ந.சுப்பு ரெட்டியார். *அறிவியல் பயிற்றும் முறை*. ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1971.

[11] ந.சுப்பு ரெட்டியார். *அறிவியல் விருந்து*. பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1981.

[12] ந.சுப்பு ரெட்டியார். *இல்லற நெறி*. தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1976.

[13] ந.சுப்பு ரெட்டியார். *இளையோர் தொலைக்காட்சி*. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1966.

[14] ந.சுப்பு ரெட்டியார். *இளையோர் வானொலி*. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1962.

[15] ந.சுப்பு ரெட்டியார். *தமிழில் அறிவியல் அன்றும் இன்றும்*. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1990.

[16] ந.சுப்பு ரெட்டியார். *தமிழில் அறிவியல் செல்வம்*. மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2002.

[17] ந.சுப்பு ரெட்டியார். *தொலை உலகச் செலவு*. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், 1976.

[18] ந.சுப்பு ரெட்டியார். *நமது உடல்*. தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம், சென்னை, மறுபதிப்பு, 1974.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[19] ந.சுப்பு ரெட்டியார். *மானிட உடல்.* புதுமைப் பதிப்பகம் லிமிடெட், சென்னை, 1958.

[20] ந.சுப்பு ரெட்டியார். *வாழையடி வாழை.* மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு, 1984.

[21] சுஜாதா. *விஞ்ஞானச் சிறுகதைகள்.* உயிர்மைப் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2007.

[22] மு.துரைராசன். *இலக்கியத்தில் அறிவியல்.* கீதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1988.

[23] *பாரதியார் பாடல்கள்.* கவிதா பப்ளிகேஷன்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2010.

[24] பாரதிதாசன். *தமிழியக்கம்.* செந்தமிழ் நிலையம், புதுக்கோட்டை, எட்டாம் பதிப்பு, 1978.

[25] கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ). *நற்றிணை.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி.லிமிடெட், சென்னை, முதற்பதிப்பு, 2004.

[26] பூவண்ணன் (உ.ஆ). *கம்பராமாயணம்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை.

[27] அ.மாணிக்கம் (உ.ஆ). *திருமந்திரம்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 2006.

[28] மணவை முஸ்தபா. *தமிழில் அறிவியல் படைப்பிலக்கியம்.* மணவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, முதற்பதிப்பு, 1997.

[29] ச.மெய்யப்பன் (ப.ஆ). *சித்தர் பாடல்கள்.* மணிவாசகர் பதிப்பகம், மறு பதிப்பு, 1998.

[30] வ.த.இராமசுப்பிரமணியம் (உ.ஆ). *சிலப்பதிகாரம்.* பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2009.

[31] க.வெள்ளை வாரணன் (உ.ஆ). *தொல்காப்பியம் – மெய்ப்பாட்டியல்.* காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1986.

**கருத்தரங்க நூல்**

**References**

[1] Geetha Vaasan. *Thamizhilakkiyathil Ulaviyal*. Maiappan Pathippagam, Chennai, 1st Edition, 2009.

[2] Saravanan, L. ‘Ariviyal Thamizhiyal Nokkil Nandugal Theevil Nirkinrana’. *Ariviyal Punaivugal*, Anaithinthiya Ariviayal Kazhagam, Tanjore, 1st Edition, 2019.

[3] Seenivaasan (U.A). *Kamabaramayanam.* Aniyagam, Chennai, 3rd Edition, 2000.

[4] Seenivaasan (U.A). *Thiruvaaimozhi*. Sri Varagi Printers, Chennai, 1st Edition, 2000.

[5] Na. Subbu Reddiar. *Anukkaru Bowthigam*. Tamil Buddhakalayam, Chennai, First Edition, 1966.

[6] Na. Subbu Reddiar. *Anuvin Aakkam*. S.R.Subramania Pavai Publishers, Tirunelveli, First Edition, 1958.

[7] Na. Subbu Reddiar. *Athisaya Minnanu*. Saiva Siddhanta Noor Pathippu Kazhagam, Chennai, First Edition, 1963.

[8] Na. Subbu Reddiar. *Ariviya Tamil.* Paari Nilayam, Chennai, Second Edition, 1981.

[9] Na. Subbu Reddiar. *Ariviyal Nokkil Ilakkiyam Samayam Thathuvam*. Palaniappa Brothers, Chennai, First Edition, 2001.

[10] Na. Subbu Reddiar. *Ariviyal Payitrum Murai.* Asian Printers, Chennai, Second Edition, 1971.

[11] Na. Subbu Reddiar. *Ariviyal Virunthu*. Paari Nilayam, Chennai, Second Edition, 1981.

[12] Na. Subbu Reddiar. *Illara Neri*. Tamil Buddhakalayam, Chennai, Second Edition, 1976.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[13] Na. Subbu Reddiar. *Ilayor Tholaikaatchi*. South Indian Saiva Siddhanta Noor Pthippu Kazhagam, Chennai, First Edition, 1966.
[14] Na. Subbu Reddiar. *Ilayor Vaanoli*. South Indian Saiva Siddhanta Noor Pathippu Kazhagam, First Edition, 1962.
[15] Na. Subbu Reddiar. *Thamizhil Ariviyal Anrum Indrum.* International Institute of Tamil Studies, Chennai, 1990.
[16] Na. Subbu Reddiar. *Thamizhil Ariviyal Selvam*. Manivaasagar Publications, Chennai, First Edition, 2002.
[17] Na. Subbu Reddiar. *Tholai Ulaga Chelavu*. South Indian Saiva Siddhanta Noor Pathippu Kazhagam,1976.
[18] Na. Subbu Reddiar. *Namathu Udal.* South Indian Saiva Siddhanta Noor Pathippu Kazhagam, Chennai, Reprint, 1974.
[19] Na. Subbu Reddiar. *Maanida Udal*. Pudumai Publications Limited, Chennai, 1958.
[20] Na. Subbu Reddiar. *Vaazhayadi Vaazhai*. Manivasagar Publications, Chidambaram, First Edition -1984.
[21] Sujatha, *Vinganana Sirugathaigal*. Uyirmai Pathippagam, Chennai, 3rd Edition, 2007
[22] M.Durairasan, *Ilakkiyathil Ariviyal*, Geetha Pathippagam, Chennai, 1st Edition, 1988.
[23] *Bharathiyar Paadalgal*. Kavitha Publications, Chennai, 2nd Edition, 2010.
[24] Bharathithasan. *Thamizhiyakkam.* Senthamizh Nilaiyam, Puthukottai, 8th Edition, 1978.
[25] Ku. Ve. Balasubramaniyan (U.A). *Natrinai.* New century book house (P) Ltd. Chennai, 1st Edition, 2004.
[26] Poovannan (U.A). *Kambaramayanam*. Yutha Kaandam. Varthamanan Pathippagam, Chennai.
[27] Maanikkam (U.A). *Thirumanthiram*. Varthamanan Pathippagam, Chennai, 9th Edition, 2006.
[28] Manavai Mustafa. *Thamizhil Ariviyal Padaippilakkiyam*, Manavai Publications, Chennai, 1st Edition, 1992.
[29] Sa. Meiaappan (P.A). *Sitthar Paadalgal*. Manivasagar Pathippagam, Re Edition, 1998.
[30] Va. Tha. Raamasubramaniyan (U.A). *Silappathigaram.* Poombugar Pathippagam, Chennai, 1st Edition, 2009.
[31] K.Vellaivaaranar (U.A). *Tholkappiyam – Meippatiyal*. Kamarasar University, Madurai, 1986.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் பார்வையில் அகத்திணை – புறத்திணை ஓர் இயங்கியல்

# A Dialectic View of Professor N. Subbureddiar in Inner Life (Agathinai) and External Life (Purathinai)

**இ. முன்னி,** முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வு துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**E. Munni**, Ph.D Research Scholar, PG & Research Department of Tamil,
Women's College, Chennai, Tamil Nadu, India.

ORCiD: https://orcid.org/0000-0003-3292-8973

**முனைவர் செ. ஹேமலதா**, உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வு துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. S. Hemalatha,** Assistant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.

ORCiD: https://orcid.org/0000-0002-3227-7616

**DOI: 10.5281/zenodo.7294939**

## Abseract

*"Tolkappiam" is an ancient Tamil literature book written by Tolkappiyar. This Tamil treatise on grammar and life deals with the ancient Sangam lifestyle. "Tolkappiam" also says about the inner spirit and external capabilities of ancient life. The inner life (Agam) deals with love, compassion, affection, and forgiveness; the external life (Puram) reveals courage, valour, generosity and war ethics. This is how the two sides of human life are considered in the Tamil research world but Professor N. Subbu Reddiar in his version of "Tolkappiyum" has researched in another perspective contrary to the above-stated ideas that are related to socio-economic hierarchy, growth and status of the people based on the Sangam habitats in regard with the regions and environmental conditions. Tholkappiyar has classified the earth into Five Regions as Hilly Regions (Kurunchi), Forests Regions (Mullai), Farmlands (Marutham), Coastal (Neithal) and Desert (Palai) regions. Professor N. Subbu Reddiar has seen a perspective related to the lifestyle and status of the people. His "Tolkappiyum" describes in detail the lifestyle lived by the Sangam people with a tinge on the culture and heritage of the Tamil People of Ancient and Medieval Times. The lifestyle, culture and heritage of the people of the ancient and medieval times of Tamil Nadu had been investigated by Mr. Reddiar under the scrutiny of "Tolkappiam" and "Thirukurral". Professor N. Subbu Reddiar suggests that this literature should be considered for the betterment of the life of every human on the earth. Regarding to the lifestyle of humans and culture said by Tolkappiar; Professor N. Subbu Reddiar authored the same ideals from a different perspective in his book "Lifestyle shown as in 'Tholkappiam" (Tolkappiam Kattum Valkai)'.*

**Keywords:** Dialectic View, Professor N. Subbu Reddiar, Inner Life (Agathinai), External Life (Purathinai)

## ஆய்வுச்சுருக்கம்

*தமிழ்நூல்களில் மிகத் தொன்மையானதும், பழமையானதுமாக இருப்பது தொல்காப்பியம் ஆகும். இது உலகத்திற்கு ஏற்ற பொது நூலாகவும், அறிவுச்சுரங்கமாகவும்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*திகழ்கிறது. உலகத் தோற்றம், உயிர்களின் வகைப்பாடு, உயிர்களின் வளர்ச்சி நிலைகள், மனித சமுதாயத்திற்குத் தேவையான செய்திகள், உலக இலக்கியங்களுக்கு அடிப்படையான கருத்துக்கள் அனைத்தும் தொல்காப்பியத்தில் உள்ளன. தொல்காப்பியத்தை ஆழமாக நோக்க புதிய புதிய கருத்துக்களைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. பிற்காலத் தமிழ் இலக்கியங்கள் அனைத்திற்கும் அடிப்படை மூல ஆதாரமாய் தொல்காப்பியம் விளங்குகிறது. தொல்காப்பியத்தின் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் தமிழ்மொழியின் இலக்கணத்திற்கு அடிப்படையாக அமைகின்றன. பொருளதிகாரம் சங்க இலக்கியங்களை வரையறுக்கின்ற இலக்கண நூலாக அமைந்தாலும் அதனையும் தாண்டி அறிவியல் பூர்வ சிந்தனையோடும், வாழ்வியலை வரையறுக்கின்ற ஒரு புது கோட்பாட்டுத் தன்மையோடும் விளங்குவது காணத்தக்கதாகும். உலகப்பொதுமறையான வள்ளுவரின் திருக்குறள் மனித சமூகம் எப்படி வாழ வேண்டும் என்று வரையறுக்கிறது. ஆனால் தொல்காப்பிய பொருளதிகாரம் மனித சமூகம் எப்படி வாழ்ந்தன என்பதை வரையறுத்துக் காட்டுகிறது. இதனை நாம் தமிழ் மரபு என்கிறோம். தமிழ் மரபு என்பது ஒரு பகுத்தறிவு மரபு. இதற்கு அடிப்படை மூலமாய் விளங்குவது தொல்காப்பியமும், வள்ளுவமும் ஆகும். இயங்கியல் பார்வை என்பது ஓர் அறிவியல் பார்வை. இலக்கியங்களை இயங்கியல் நோக்கோடும், வரலாற்று நோக்கோடும் காணும் போது தான் தெளிவானவிடயங்களை ஆய்வுத்துறையில் காண முடியும். இயங்கியலுக்கு அகமும், புறமும் அடிப்படையாக அமைகின்றன. இயங்கியல் கோட்பாட்டிற்கு அடிப்படையாக உள்ள அகமும், புறமும் தொல்காப்பியரின் அகத்திணை, புறத்திணை கொள்கையும் இயைபு படுவதை பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை என்ற நூல் விளக்குகிறது. தொல்காப்பிய பொருளதிகாரத்தில் வருகின்ற அகத்திணை, புறத்திணை அகம் என்பதை காதல் என்றும், புறம் என்பதை வீரம், கொடை, போர் என்றும் பாகுபடுத்தும் போக்கே ஆய்வுலகில் நடந்து வருகின்றது. ஆனால் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் அகத்திணை புறத்திணை இயைபு பற்றிய பார்வை திணைக் கோட்பாடான சமூக படிநிலை வளர்ச்சி பார்வைக்கு பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆய்வு முன்னோட்டமாய் அமைகிறது. குறிஞ்சிக்குப் புறனாக அமைந்துள்ள வெட்சி, இனக்குழு சமூகத்தைச் சுட்டுவதாகவும், மருதத்திற்குப் புறனாக அமைந்துள்ள உழிஞை, பலப்படுத்தப்பட்ட சொத்துடைமை சமூக அமைப்பையும், அதனால் பரத்தமை தோற்றம் பெற்றதையும் விளக்குகிறது. நெய்தலுக்குப் புறனாக அமைந்துள்ள வாகை மூவேந்தர்களின் முற்றிய போர்களையும், காஞ்சி, பாடான் திணைகள் மூவேந்தர்களின் வீழ்ச்சிக்குப் பின் தமிழகத்தில் நிலவிய சூழலை திணைக் கோட்பாடு பார்வை விளக்குகிறது. இந்த திணைக் கோட்பாட்டு பார்வைக்கு ந. சுப்புரெட்டியாரின் "தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை" என்ற நூல் மூலமாக பயன்படுகிறது.*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், பார்வை, அகத்திணை, புறத்திணை, இயங்கியல்.

**முகவுரை**

தமிழ்நூல்களில் மிகத் தொன்மையானதும், பழமையானதுமாக இருப்பது *தொல்காப்பியம்* ஆகும். இது உலகத்திற்கு ஏற்ற பொது நூலாகவும், அறிவுச்சுரங்கமாகவும் திகழ்கிறது. உலகத் தோற்றம், உயிர்களின் வகைப்பாடு, உயிர்களின் வளர்ச்சி நிலைகள், மனித சமுதாயத்திற்குத் தேவையான செய்திகள், உலக இலக்கியங்களுக்கு அடிப்படையான கருத்துக்கள் அனைத்தும் தொல்காப்பியத்தில் உள்ளன. தொல்காப்பியத்தை ஆழமாக நோக்க புதிய புதிய கருத்துக்களைக் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. தொல்காப்பிய பொருளதிகாரத்தில் வருகின்ற அகத்திணை, புறத்திணை அகம் என்பதை காதல் என்றும், புறம் என்பதை வீரம், கொடை, போர் என்றும் பாகுபடுத்தும் போக்கே ஆய்வுலகில் நடந்து வருகின்றது. ஆனால் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் அகத்திணை புறத்திணை இயைபு பற்றிய பார்வை திணைக் கோட்பாடான சமூக படிநிலை வளர்ச்சி பார்வைக்கு பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆய்வு முன்னோட்டமாய் அமைகிறது. குறிஞ்சிக்குப் புறனாக அமைந்துள்ள வெட்சி, இனக்குழு சமூகத்தைச் சுட்டுவதாகவும், மருதத்திற்குப் புறனாக அமைந்துள்ள உழிஞை, பலப்படுத்தப்பட்ட சொத்துடைமை சமூக அமைப்பையும், அதனால் பரத்தமை தோற்றம் பெற்றதையும் விளக்குகிறது. நெய்தலுக்குப் புறனாக அமைந்துள்ள வாகை மூவேந்தர்களின் முற்றிய போர்களையும், காஞ்சி, பாடான் திணைகள் மூவேந்தர்களின் வீழ்ச்சிக்குப் பின் தமிழகத்தில் நிலவிய சூழலை திணைக் கோட்பாடு பார்வை விளக்குகிறது. இந்த திணைக் கோட்பாட்டு பார்வைக்கு ந. சுப்புரெட்டியாரின் “தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை” என்ற நூல் மூலமாக பயன்படுகிறது.

**குறிஞ்சி – வெட்சி காட்டும் இனக்குழு சமூகம்**

` சங்க இலக்கியத்தில் காணப்படும் பெரும்பாலான குறிஞ்சி நிலப்பாடல்கள் உணவு சேகரிக்கும் தொழிலைச் சுட்டுவதாக உள்ளன. தொல்காப்பியர் சுட்டும் குறிஞ்சி நிலத்திற்கான வரையறைகளும், இனக்குழு சமூகத்தின் வாழ்வியலைக் குறிப்பனவாக அமைகின்றன. குறிஞ்சித் திணைக்கு புறனாக உள்ள வெட்சித்திணையும் இனக்குழு சமூகத்தின் எச்சமாகவும் அதனோடு இணைந்த கரந்தைத் திணை சிறுஅரசு தோன்றியதையும் காட்சிப்படுத்துகின்றன. தொல்காப்பியரின் கூற்றினைக் கொண்டு குறிஞ்சி, வெட்சி திணைகளை ஆராய்ந்தால் இனக்குழு சமூகத்தின் தோற்றத்தினை அறிந்து கொள்ள முடிகிறது. இத்திணைகளை உரையாசிரியர்கள் வெவ்வேறு பார்வையில் தங்களுடைய கருத்தினைப் பதிவு செய்கின்றனர். கு.வெ.பாலசுப்பிரமணியன் அவர்கள் தன்னுடைய கருத்தை பின்வருமாறு கூறுகிறார்.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காதற்களவும், ஆநிரைக் களவும் நிகழும் ஒப்புமை பற்றி வெட்சி, குறிஞ்சிக்குப் புறனென்கிறார் இளம்பூரணர். கருதிய பொருளை இரவின் கண் முடித்து மீளல் காரணமாக வெட்சி, குறிஞ்சிக்குப் புறமாயிற்று என்கிறார் நச்சினார்க்கினியர். குறிஞ்சியும் வெட்சியும் ஒருங்கே களவில் நிகழ்கின்றமையால் வெட்சி, குறிஞ்சிக்குப் புறமாகும் (சங்க இலக்கியத்தில் புறப்பொருள் ப. 40) என்று சோமசுந்தர பாரதியார் கூறுகிறார். சான்றோர் கூறியது போலவே ந. சுப்புரெட்டியாரும் தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார்.

ஒரு திணையை எடுத்து விளக்க வேண்டுமானால், அந்தத் திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களை ஆராய்தல் வேண்டும். முதற்பொருளாவன நிலமும், பொழுதும்; கருப்பொருளாவன தெய்வம், உணா, மா, மரம் முதலியன; உரிப்பொருளாவன புணர்தல் பிரிதல் இருத்தல் முதலியன. இவற்றுள் முதன்மையாய் ஈண்டைக்கு வேண்டிய வகையாய்க் குறிஞ்சித் திணைக்குக் கொள்ளத் தகுவன நிலமும் பொழுதும் என்னும் முதற்பொருளும், பூவென்னும் கருப்பொருளும் புணர்தல் என்னும் உரிப்பொருளுமாகும். குறிஞ்சிக்கு நிலம், மலை சார்ந்த இடம், பொழுது நள்ளிரவே; பூ அம்மலை நிலத்துப் பூ, புணர்தல் களவுப் புணர்ச்சியாகும். அங்ஙனமே வெட்சியொழுக்கத்திற்கு நிலம் மலைக் கானகமே; பொழுது நள்ளிரவே; பூ அம்மலைக் காட்டிற்கும் வெட்சிப்பூவே; புணர்தல் களவினால் ஆநிரை கோடலே. இவற்றால் வெட்சி குறிஞ்சிக்குப் புறனாக அமைந்ததைத் தெரியலாம். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப. 229) ஆனால் இத்திணைகளின் இயைபு பற்றி தொல்காப்பியர் எந்த இடத்திலும் விளக்கிச் சொல்லவில்லை. அகத்திணையோடு தொடர்புடைய களவியல், கற்பியல், பொருளியல் போன்ற இயல்களை அகத்திணைக்குப் பிறகு வைக்காமல் அகத்திணை, புறத்திணைக்கு பிறகு வைக்கும் முறையில் தொல்காப்பியர் அகப்புற இயைபு பற்றி விளக்குகிறார் என்பதை உணர்ந்து கொள்ள முடிகிறது. இவ்வாய்வின் கருதுகோளை உறுதிப்படுத்தும் விதமாக சில அறிஞர்களும் தங்களுடைய கருத்தினைப் பதிவு செய்கின்றனர். கா.சுப்பிரமணியன்அவர்கள் தன்னுடைய கருத்தினை பின்வருமாறு பதிவு செய்கிறார்.

ஆதிசமுதாய அமைப்பாக (Social Institution) உலகெங்கும் இனக்குழுக்கள் (Tribes) நிலவின. தமிழகத்தின் இனக்குழுக்கள் திணைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப் பட்டிருந்தன. இப்பாகுபாடு மானிடவியல் விளக்கத்திற்குப் பொருந்தி வருவதை அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர். (சங்க காலச் சமுதாயம், ப.1) என்று சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுகிறார். மானுடவியல் அறிஞர்கள் கூறும் சமூகப்படிநிலை வளர்ச்சி நிலையும், தொல்காப்பியர் குறிப்பிடும் திணை வாழ்க்கை நிலைகளும் ஒத்திருத்தலைக் காணமுடிகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக முனைவர் அ. ஆறுமுகம் தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வேட்டைச் தொழில் அடிப்படையில் – குறிஞ்சி, கால்நடை வளர்ப்புத் தொழிலினடிப்படையில் – முல்லை, உழவுத் தொழிலினடிப்படையில் – மருதம், வணிகத் தொழிலினடிப்படையில் – நெய்தல், பொருளீட்டல் அடிப்படையில் - பாலை ஆகிய பிரிவுகள் அமைந்துள்ளன. (சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு. ப. 32) இனக்குழு சமூகம் என்பது வேட்டைத் தொழில் புரியும் சமூகமாகும். குறிஞ்சி என்பது உணவு சேகரித்தல் மட்டுமே தொழில்களாகக் கொண்டது. குறிஞ்சிக்குப் புறனாக உள்ள வெட்சித்திணை ஆநிரைகவர்தல், மீட்டல் என்னும் சிறிய போர் முறையை அடிப்படையாகக் கொண்டது. இவை இனக்குழு சமூகத்தின் செயல்பாட்டைக் குறிப்பதாகவே அமைகின்றன. குறிஞ்சி திணையின் உரிப்பொருளாக அமைகின்ற புணர்தலும் புணர்தல் நிமித்தமும் இனக்குழு சமூகத்தின் ஒழுக்கத்தைக் குறிப்பிடுவதாக அமைகிறது.வெட்சித்திணையில் அரசுகள் தோன்றுவதற்கு முன் மக்கள் ஊரில் சேர்ந்து வாழ்ந்த காலத்தில் அவர்கள் மற்ற இனக்குழுவோடு கொண்ட பூசலையும், மாறுபாட்டையும் விளக்குவதாக அமைகின்றன.படை இயங்கு அவரம் தொடங்கி பதினான்கு துறைகளும் பெரும்போர்ச் செயல்களைக் கூறுவதாக அமையவில்லை. வெட்சித்திணையில் வரும் ஊர்க்கொலை, பூசல் மாற்று என்னும் துறைகள் இனக்குழு சண்டைகளை உறுதிப்படுத்துவதாக அமைகின்றன. பூசல் மாற்று என்ற சொல்லாட்சி குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது. சான்றாக ‘அம்ம நின் பூசல்’ (குறுந் பா.29). புறநானூற்றில் அமைந்த வெட்சித்திணைக்குரிய ஐந்து பாடல்களிலும் பெரும் போர்ச் செய்திகளோ, வேந்தர்கள் பற்றிய குறிப்போ, படைகளின் பெருக்கமோ பேசப்படவில்லை. அவற்றுக்கு மாறாக பெயர் அறியப்படாத வீரர்கள் “செவியிறந்து தாழ்தரும் கவுளன்” ; “புல்லணற்காளை”, “வில்லோன்” என்னும் பொதுப்பெயர்களால் குறிக்கப்பட்டனர்.

மாடுகளைப் பிடித்து வந்த பின்னர் உண்டாட்டில் ஈடுபடுவது “உண்டாட்டுத்” துறையிலும் பிடித்து வந்ததை பிடித்து வந்தவர்க்குப் பிரித்துக் கொடுத்ததை “பாதீடு” துறையிலும் விளக்குவதன் மூலம் குறிஞ்சி – வெட்சி சமூகம் கருநிலையில் இருக்கக் கூடிய இனக்குழு சமூகம் என்றும் உண்மையில் இது உணவு சேகரிக்கும் சமூகம் என்றும் அறிந்து கொள்ள முடிகிறது.பழங்குடியினரிடம் ஒரே குழுவைச் சார்ந்த ஆடவரும் பெண்டிரும் தம்முள் மணவினை கொள்வதில்லை என்பதை இலக்கியங்கள் தெளிவாக கூறுகின்றன. அதனால் தான் குறிஞ்சி நிலப்பாடல்கள் அனைத்திலும் வேறு மலையைச் சார்ந்தவனாகவே காட்டப்பட்டுள்ளான். எனவே குழு வாழ்வு வாழ்ந்த பழஞ்சமுதாய ஆடவர் வேறு ஒரு குழுவில் உள்ள பெண்ணைக் களவில் சந்தித்து இருவர் மனங்களும் ஒத்துப்போன பின் உடன்போக்குகள் நிகழ்ந்தன. வேறு குழுவிலிருந்து பெண்ணைக் கவர்ந்த செயல் போன்று தம் குழுவிலுள்ளோரின் உணவுத் தேவைக்காகவோ கள்ளுக்கு விலையாகத் தரும் பொருட்டோ பிறர்க்குக் கொடுத்து மகிழும் கொடைச் செயலுக்காகவோ, சுற்றம் காக்கவோ, மற்றொரு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

குழுவினரிடமிருந்து செல்வமாகக் கருதப்பெற்று ஆநிரைகளைக் கவர்ந்து வந்தனர். மேலும் குறிஞ்சி – வெட்சி சமூகம் இனக்குழு சமூகத்தின் எச்சங்கள் என்பதை தொல்காப்பியர் விளக்குகிறார்.

**மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே (தொல். நூ. 1005)**

என்னும் நூற்பா, குடிநிலையில் உள்ள வீர மறவர்களின் சிறப்பை எடுத்துக் கூறலும், கொற்றவை தெய்வத்தை வணங்குதலையும் விளக்குகிறது. வேட்டைச் சமுதாயத்தில் தாய்த் தெய்வ வழிபாடு நிலவியது. காடுகிழாள், கொற்றவை போன்றவை வேட்டைச் சமுதாய தெய்வங்கள் ஆகும். இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக கு. வெ. பாலசுப்பிரமணியன் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார்.

**தொல்காப்பியர் பாலை நிலத்துக்குரிய தெய்வமாகக் கொற்றவையை எங்கும் குறிக்கவில்லை. பழைய மக்களின் தாய்த் தெய்வ வழிபாட்டின் அடையாளமே குடிநிலைச் சிறந்த கொற்றவை எனக் குறிக்கப்படுவதாகும். கருப்பொருட்களாகிய நிலத் தெய்வங்கள் தோன்றுவதற்கு முன்னர் இனக்குழு மக்கள் இத்தாய்த் தெய்வத்தையே வழிபட்டனர் (சங்க இலக்கியத்தில் புறப்பொருள், ப. 44)**

என்பதை இந்நூற்பாவால் அறியலாம். மேலும் இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக நா. தர்மராஜன் தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார்.

**எங்கெல்ஸ் குடும்பம், திருமணம் இரண்டையும் தாய்வழிச் சமூக அமைப்பிலிருந்து தொடங்குகிறார். மனித குலத்தில் தோன்றிய முதல் சமூக அமைப்பு தாய்வழிச் சமூக முறையே ஆகும். (எங்கல்ஸ் குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம். ப. 2)**

சான்றோர்களின் கருத்திற்கேற்ப வெட்சித்திணையில் கொற்றவை தெய்வம் குறிக்கப்படுவதையும் அது தாய்வழிச் சமூகத்தின் குறியீடாய் விளங்குவதையும் கொண்டு குறிஞ்சி – வெட்சி சமூகம் இனக்குழு சமூகத்தின் கடைசிநிலை என்பதை நாம் உறுதியாகக் கூற முடியும். மேலும் பொதுமைப்பாலுறவும், குழுமணங்களும் அக்காலத்தின் நியதி. அந்நிலையின் விளைவாக தந்தைவழி அற்ற தாய்வழியே முக்கியத்துவம் பெற்றிருந்தது போன்ற கருத்துக்களை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன் தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை என்னும் நூலில் குறிப்பிட்டுச் சொல்கிறார்.

**முல்லை – வஞ்சி காட்டும் குடும்பம், அரசு தோற்றம்**

முல்லை – வஞ்சி என்பது உடைமைச் சமூக அரசமைப்பு உருவாகிய காலம். கொல்லைச் செய்கை (விவசாயத் தொடக்கம்,) மாடு மேய்த்தல், விலங்குகளைப் பாதுகாத்தல் போன்றவற்றோடு மண்ணாசை நிமித்தமாகப் போர் தொடங்கலும் நடைபெற்றன. முல்லை


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நிலத்திற்குரிய ஒழுக்கமாவது "இருத்தலும் இருத்தல் நிமித்தமும்" ஆகும். மனமொத்த காதலர் உடைமை நிமித்தமாக வந்த மண்ணாசைப் போரால் பிரிந்திருக்க வேண்டிய தவிர்க்க முடியாத அகவாழ்வுத் துயரம் தொடங்குகிறது. நிலைப்பெற்று விட்ட குடும்ப அமைப்பு பிரிவில்லாத வாழ்விற்கு ஏங்கும் கனவுகளாய் முல்லை நிலப்பாடல்கள் அமைகின்றன. ஆனால் பிரிவு தவிர்க்க முடியாததாய் அமைகிறது. அதனால் வந்துவிடுவார் என்று தலைவி ஆற்றியிருக்க வேண்டியிருக்கிறது. அதனோடு குறு அரசமைப்பிற்கு ஏற்றவாறு தொழில் அடிப்படைப் பிரிவுகளும் அதிகார அரசமைப்பால் கட்டமைக்கப்படுகின்றன. இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக ந. சுப்புரெட்டியார் தன்னுடைய கருத்தை பின்வருமாறு பதிவு செய்கிறார்.

> **முல்லைக்கு நிலம் காடு சார்ந்த இடம்; பொழுது, கார் கால மாலை; பூ அக்காட்டிடத்துப் பூ ; இருப்பு, இளமரக்கா சூழ்ந்த வீடு. அங்ஙனமே, வஞ்சி யொழுக்கத்திற்கும் முதல் கரு உரிப்பொருள்களான இடமும் பொழுதும், பூவும் இருப்பும் முறையே காடும், வேனில் இறுதியாகிய கார்கால இயல்பமைந்த மாலையும், காட்டிடத்திற் பூக்கும் வஞ்சிப்பூவும், பாடி வீட்டிருப்புமாகும். தலைவி தனது வீட்டில் போர் மேற்சென்ற தலைவனின் வரவை எதிர்நோக்கி இருத்தல் போலத் தலைவன் பாடி வீட்டில் இருப்பான். இவ்விருவகை இருப்பு நிகழ்ச்சிகளும் வேனிற்காலத்தே நிகழ்வனவாயினும், அவ்விருப்பைப் பற்றிய உணர்ச்சி முனைப்பு கார்கால இயற்கையதான வேனிலிறுதிக்கண் விளையுமாதலின் ஆசிரியர் அதற்குக் கார்காலமே காலமாக வரைந்து ஓதினார் என்று அறிதல் வேண்டும். இவ்வாற்றான் வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப. 231)**

முல்லை என்கிற தனியுடைமைக் கொண்ட சிறுஅரசு தோற்றத்திற்கான மூலத்தை இதற்கு முன்னால் சொல்லப்பட்ட வெட்சித்திணையில் வருகின்ற கரந்தைத்திணை தெளிவாக விளக்குகிறது. இனக்குழுக்கள் பல்கிப் பெருகியதால் அவைகள் தங்கள் தேவைகளுக்காக ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்வது தவிர்க்க இயலாமல் போனதால் இறுதியில் ஒவ்வொரு குழுவாக அழிந்து இனக்குழு வாழ்வு முடிவுற்று அரசு உருவாக்க நிலைக்குத் தள்ளப்படுவது இயல்பாகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக ஆ. வேலுப்பிள்ளை தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார். முல்லை நிலத்தலைவனாகிய கோ அல்லது கோன் தமிழ்நாட்டு முடிவேந்தரின் முன்னோடியாகலாம் என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். (தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும் ப. 2)

அரசு உருவாக்கம் ஏற்பட்ட நிலையில் தான் குணக்கூறுகளான குடும்ப அமைப்பு, தனியுடைமை என்பதையும் இயல்பாகவே தோற்றம் பெறுகின்றன. இதில் "இயங்குபடை அரவம்" முதலாக "பொருளின்றுஉய்த்தபேராண்" துறை வரை மண்ணாசை உடைய வேந்தனுக்கும் "ஒருவன்தாங்கிய பெருமை முதலாகத் தழிஞ்சி" வரையுள்ள ஆறு துறைகளை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


மண்ணை விட்டுக் கொடுக்காமல் காக்கின்ற வேந்தனுக்கும் உரிமையாக்கலாம். இத்துறைகளுக்குள்ளே வென்றோர் விளக்கமும், தோற்றோர் தேய்வும் என்கிற துறைகள் வருகின்றன. இதனடிப்படையில் பார்த்தால் இனக்குழு அமைப்பு முடிவடைந்து மண்ணை விரிவுப்படுத்தும் அரசுருவாக்க அமைப்பு வஞ்சிக்குப் புறனாகிய முல்லை நிலத்திலே தொடங்குகிறது என்று அறிய முடிகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக ந. சுப்புரெட்டியார் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார்.

> **வஞ்சியொழுக்கம் மேற்கொண்ட வேந்தன் முடிவில் பகையரசன் மேல் ஒருவித அன்பு கொள்வான் முன்பெல்லாம் தன்னுடன் நட்புக் கொண்டிருந்தவன் இஞ்ஞான்று பிரிந்து தேய்ந்து தன் கையை எதிர்பார்க்கும் நிலையிலிருப்பதே இவ்வன்பினை ஊற்றெடுக்கச் செய்யும். இதனை ஆசிரியர் தொல்காப்பியரும் குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளை என்று ஒரு துறையமைத்துச் சிறப்பிப்பர். இங்ஙனமே, முல்லையின் முடிவிலும் முன்பெல்லாம் கூடியிருந்த தலைவி தன் தலைவனது வஞ்சிச்செலவால் பிரிவு நேர்ந்து மிகப்பெரிதும் பொறுத்திருந்து அவ்விருப்பின் பயனாகப் பின்பு கூடுங் கூட்டவியல்பியனால் முதிர்ந்த அன்பு உணர்ச்சியினை ஊற்றுப் பெருக்குபோல் பெறுவாள். எனவே, இரண்டிலும் ஆற்றிறித்குரியோர் பெரிது பழகிப்பயன் என்று பெறும் பொருள் அன்பேயாகும். இங்ஙனம் முல்லையும் வஞ்சியும் அகம் புறமாய் இயைத்து நிற்பதையும், நீரின் பொருட்பயிற்சி வஞ்சி என்னும் தன்மையுணர்ச்சியாய் நுணுகிச் சுவைக்கும் செயலால் முல்லை என்னும் அன்பு வளர்ச்சியாய்ப் பின்னும் நுணுகி அகப்பொருள் காதலர்க்குப் பேரா இன்பம் பெருகி நிற்பதையும் கண்டு கொள்க (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை. ப. 232)**

என்று வஞ்சி – முல்லை இயைபுப் பற்றி பேராசிரியர் விளக்குகிறார். முல்லை நிலப்பாடல்களை ஆராய்ந்தால் மிருகங்கள் கொல்லப்படாமல் அவை வளர்க்கப்பட்டதைக் காணமுடிகிறது. மாடு என்னும் சொல்லுக்குத் தமிழில் சொத்து என்று பொருள் கொள்ளப்படும். ஆநிரை கவர்தலில் தொடங்கி அதை சொத்தாக பாவிக்கும் முறை முல்லையில் நிலவியதை நாம் உணர முடிகிறது.

மண்ணை விரிவுப்படுத்தும் நோக்கத்தாலும் மண்ணை விரிவுப்படுத்த வருபவனிடமிருந்து தற்காத்துக் கொள்ளும் நிகழ்வாலும் முல்லையில் தலைவனும், தலைவியும் பிரிந்து எதிர்பார்த்து ஆற்றியிருக்கும் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் என்ற ஒழுக்கம் தவிர்க்கப்பட முடியாத பண்பாடாக அமைகிறது. மேலும், வஞ்சித்திணையின் போர்முறை வெட்சித் திணையின் போர்முறையைவிட வளர்ந்த போர் முறையாகத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. ஆகவே முல்லைத் திணையையும், வஞ்சித் திணையையும் இயைபுப்படுத்திப் பார்த்தால் அரசு தோற்றத்தையும், குடும்பம், அரசு சொத்துடமை, கற்பு போன்றவை தோற்றம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பெற்றதை அறிய முடிகிறது. இதற்கு ஆதார ஸ்ருதியாய் பேரா. ந. சுப்புரெட்டியாரின் கருத்துகள் அமைகின்றன.

**மருதம் – உழிஞை காட்டும் சமூகம்**

அரசுகளும் நாடுகளும் உருவாகிய பின்னர் நாட்டின் தலைவரான வேந்தர் தாம் வாழ்வதற்கென இயற்கை அரண்களும், செயற்கை அரண்களும் சூழ்ந்த கோட்டைகளை அமைத்துக் கொண்டனர். நாட்டின் அரண்கள் வலிமையற்று இருப்பின் பகை வேந்தர் நாட்டினுள் நுழைந்து கோட்டையைக் கைப்பற்றுவர். உழிஞைப் பூவைச் சூடி மதிலை வளைத்துப் பெரிய நகரங்களையும், அரண்மனைகளையும், கைப்பற்றச் செய்யும் போர் இது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக வாணி அறிவாளன் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார். பகைவரின் நாட்டிலுள்ள கடுங்காவல்களையும், அனைத்து வகை எயில்களையும் ஒரு பொருட்டென மதியாது விரைந்து தன் படையைக் கோட்டைக்குச் செலுத்திய மறமே உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு எனும் துறையாயிற்று. (வீரம் விளைந்த நிலம். ப. 150) உழிஞைத்திணையில் இத்துறை அமைந்துள்ளது. உள்ளிருப்போர் நொச்சிப்பூவைச் சூடி தம்மைக் காத்துக் கொள்வர். முழுமையான அடித்தளத்தையுடைய வலிய அரணை முற்றுகையிடுதலும், கைக்கொள்ளுதலும் ஆகிய நெறிமரபினை உடையது உழிஞை. உழிஞைத்திணையை தொல்காப்பியர் பின்வருமாறு விளக்குகிறார்.

**முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்**
**அனைநெறி மரபிற்று ஆகும் என்ப; (தொல்., நூ. 1011)**

**மருதம்- உழிஞைக்குப் புறன்**

மருதநிலத்தைச் சுற்றி அமைந்திருந்த நிலங்களான பரந்த கடற்பகுதியும், அடர்ந்த காடுகளும், உயர்ந்த மலைகளும் நாட்டின் இயற்கை அரண்களாக விளங்கின. அரண் அமைக்க தகுந்த நிலம் பற்றி வள்ளுவர் கூறுகிறார்.

**மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழல்**
**காடும் உடையது அரண் (குறள். 742)**

வற்றாத நீரும், வெட்ட வெளி நிலமும், மலையும் குளிர்ந்த நிழல் தரும் காடும் உடையதே அரண். மருத நிலத்தில் கோட்டையும், அரணும் அமைக்கப்பெற்றன. இதனால் உழிஞை மருதத்திற்குப் புறனானது. உழிஞை மருதத்திற்குப் புறனானது குறித்து தொல்காப்பியர் பின்வருமாறு கூறுகிறார். உழிஞை தானே மருதத்துப் புறனே (தொல். நூற் 1010) இக்கருத்தை உறுதிப்படுத்தும் விதமாக ந. சுப்புரெட்டியார் தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார். நொச்சி ஒழுக்கத்தை உள்ளிட்ட புறத்திணை உழிஞை அகத்திணை மருதத்துடன் கொண்டுள்ள ஒற்றுமை மிகவும் நுணுக்கமுடையது. மருதத்திற்கு உரிய இடம், வயல் சார்ந்த நிலம் சிறுபொழுது வைகுறு விடியல்; பெரும் பொழுது, அறுவகைப் பொழுதும்; தலைவனும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தலைவியும் பயன்படுத்தும் பூக்கள் தாமரை, செங்கழுநீர் முதலியன. ஒழுக்கம், ஊடல்; அஃதாவது தலைவனது பரத்தமையைக் குறித்தும் மனங்கவன்று வாயிலடைத்து நிற்கும் தலைவியை இரவெல்லாம் பரத்தையர் வீட்டில் தங்கியிருந்த தலைவன் விடியற்காலையில் வந்து வாயில் திறக்குமாறு வேண்டி நிற்றல். இங்ஙனமே, புறத்திணை உழிஞையொழுக்கம் நிகழும். அரசனது கோட்டையும் பெரும்பாலும் வயல் சூழ்ந்த நிலத்தின் கண் இருக்கும். பகைமேற்செல்லுதல் ஆண்டின் எல்லாக் காலத்திலும் நடைபெறும் செயல்; அங்ஙனம் செல்லும் வஞ்சி மன்னன் இரவெல்லாம் பாசறையில் தங்கியிருந்து விடியற்காலையில் போர்க்கெழுந்து மதில் முற்றுவான். உழிஞையொழுக்கத்திற்கு அதன்கன் அடங்கும் நொச்சியொழுக்கத்திற்கும் அரசர் அணியும் உழிஞைத்தழையும் நொச்சிப்பூவும் மருத நிலத்தில் உள்ளனவே. உரிப்பொருள் நிகழ்ச்சியிலும் இவ்வகப்புறத்திணைகள் மிகவும் ஒற்றுமையுடையனவாய் விளங்குகின்றன. புறத்திணை உழிஞையிலும் கோட்டைக்கு வெளியில் நிற்கும் அரசன் உள்ளிடத்தைக் கதுவ விழைகின்றனனாக, கோட்டையின் உள்ளிருக்கும் அரசன் அதற்கு மறுத்து வாயிலடைத்துக் கொண்டு உள்ளிருக்கின்றனன். இன்னும் வீட்டினுள் கதவடைத்து நிற்கும் தலைவி உற்ற நேரத்தில் வாயிலைத் திறந்து தன் தலைவனோடு ஊடற்போர் புரிய விரும்புதல் போலவே, கோட்டையின் உள்ளிருக்கும் அரசனும் உற்ற நேரத்தில் வாயில் திறந்து வெளிப்பட்டுப் புறத்தரசனோடு போர் புரியவே விரும்புகின்றான். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப. 232, 233) மேலும், இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் கு.வெ. பாலசுப்பிரமணியன் அவர்கள் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார்.

உழிஞைத்திணை மருதத்திற்குப் புறனாவது அரசன் முற்றுதலும், கொள்ளுதலுமாகிய செயல்களையுடையது. மருதத்துப்புறம் எயிலழித்தலும், எயில்காத்தலும் என்னும் வேறுபாடு குறித்து உழுஞையெனவும், நொச்சியெனவும் இரண்டும் குறிபெனும் என்பர் இளம்பூரணர்.சென்ற வேந்தன் வளைத்தலும் இருந்த வேந்தன் காத்தலுமாகிய இருகிறத்தார் வினையென்பர் நச்சினார்க்கினியர். முற்றியார் வென்று அரண் கொள்ளுதல் (சங்க இலக்கியத்தில் புறப்பொருள் ப. 49) என்பர் சோமசுந்தர பாரதியார். இவ்வாறு உழிஞை மருதத்திணைக்குப் புறமாவது குறித்து தொல்காப்பியரும், மற்ற அறிஞர் பெருமக்களும் தங்கள் சான்றுகளைப் பதிவு செய்துள்ளனர்.

**மருதத்திணை**

மருதம் என்பது தனிச்சொத்து நிலைநிறுத்தப்பட்ட காலம். இக்காலத்தில் சொத்துரிமை நிலைப்பெற்றது. உழவுத்தொழில் சிறப்புற்று இருந்த்து. கால்நடைகளைக் கொண்டு உழவும், பிறதொழில்களைச் செய்யவும் இயலும் என எண்ணிய மனிதன் ஓரிடத்தில் நிலைப்பெற்று நிலத்தைப் பண்படுத்தித் தேவையான பொருள்களை விளைவிக்கத் தொடங்கினான். சமுதாய இயக்கத்தின் மையப் புள்ளியாக உழவுத்தொழில் இடம் பெற்றுவிட்டது. மருதத்திணையில்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

உழவுடைமையில் நிலம் குடும்பச் சொத்தாக இருந்து உபரியைச் சேமிக்கும் பழக்கம் உழவர்களிடம் இருந்தது. இந்நிலத்தில் குடும்பம் என்ற அமைப்பு முழுமையடைந்தது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் அ. ஆறுமுகம் அவர்கள் தன்னுடைய கருத்தை கூறுகிறார்.

**வளமிக்கதாக நிலத்தைப் பண்படுத்தி நீர்வளத்துடன் உழவைச் சிறப்பாகச் செய்யும் வாழ்வே மருதநில வாழ்க்கை வளமிக்க வாழ்க்கை . உழவின் உயர்வைக் கூறும் குடும்ப வாழ்வுமாகும், வேட்டைத் தொழிலும், கால்நடை வளர்ப்பும், பூகோள வளங்களுக்கு நேரடியாகக் கட்டுப்பட்டதாகும். இதில் மனித முயற்சி என்பது இவ்வளங்களைப் பயன்படுத்துவதாகும் எனவே இத்தொழிலைக் கொண்ட சமூக வாழ்வு "இடம் பெயரலுக்கும்" உட்பட்டதாகும். ஆனால் மனித மூளை கருவி – உற்பத்தி – மண்வளம் ஆகியவற்றோடு இணைந்த உழவு உற்பத்தி மருத நில வாழ்க்கை ஒப்பீட்டளவில் இடம் பெயரலுக்கு அவ்வளவாக இடந்தராதது ஆகும். எனவே இங்கே குடும்பம் என்பது ஒரு நிலையான நிறுவன அமைப்பாக உருவாகியமைக்கு அனைத்து வாய்புகளும் இருக்கின்றன. (சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு, ப. 35)**

மேற்குறிப்பிட்ட சான்று மருதநிலத்தில் நிலையான குடும்ப அமைப்பு நிலைநிறுத்தப்பட்டது என்பதைக் காட்டுகிறது.

ஒரு சமூகத்தில் ஒருவனோ அல்லது ஒரு ஸ்தாபனமோ கட்டளையிட அக்கட்டளைக்கு அடங்கி, அச்சமூகத்தைச் சார்ந்த மற்றவர்கள் நடந்து வந்தால் அந்த மனிதனை, அல்லது ஸ்தாபனத்தை, அரசாங்கம் என்று சொல்வார்கள். அரசாங்கம் இல்லாத சமூகம் கிடையாது. சமூகமும் அரசாங்கமில்லாமல் நிலைக்க முடியாது. (தமிழ் கலைக்களஞ்சியம் தொகுதி.1 ப.153) செல்வம் உபரியாக இருந்ததால் பரந்தை என்ற சமூக அமைப்பும் தோன்றிவிட்டது. தனிச் சொத்து சேர்த்து வைத்தலும் தோன்றிவிட்டது.வெட்சி இனக்குழு மக்களின் "விரிச்சி" என்ற நம்பிக்கையில் வளர்ந்து மருத – உழிஞையில் ஆரிய சோதிட நம்பிக்கையோடு கலந்து 'நாள் – கோள்' என்கிற நம்பிக்கையின் அடிப்படையில் சகுனம் பார்ப்பது வளர்ந்து வந்த நிலையினைக் காணமுடிகிறது. மேலும், வெட்சி, வஞ்சியில் இல்லாத மதிலை அழித்தல், மதிலை காத்தல் என்னும் துறைகள் நிலைப்பெற்று விட்ட சொத்துடைமைச் சமூக அரசமைப்பு உருவாகிவிட்டதையும் காண முடிகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார்.

வெட்சி முதலிய திணைகளில் பெரும்பான்மையும் ஊக்கத்தினாலும் உடலுறுதியினாலுமே செயல்கள் நடைபெறுகின்றன. பகைவர் நெருங்க முடியாமல் நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்ற நால்வகையரண்களையும் சூழ்ச்சிகளும் வஞ்சனைகளும் பொருந்த அமைத்து, அவற்றின் நடுவில் வலிமை சான்ற மதிலரண்கள் பலவும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கோட்டைகளும் எழுப்பிப் பல்வேறு வகையான போர்ப்பொறிகளையும், கருவிகளையும் ஆண்டு நிறுத்தி, எத்தனை நாள்களாயினும் அங்கேயேயிருந்து கொண்டு தனி வாழ்க்கை செலுத்தும் அருநிலையுடைய அகத்தரசர் புறத்தரசரோடு பொருதலும், இங்ஙனமே புறத்தரசரும் மேற்காட்டிய அணுகுதற்குரிய இத்தனை இடையூறுகளுக்கும் தப்பி அவ்வலிய அரண்களையும் அழித்து அகத்தரசனைக் கைப்பற்றுதலும் அறிவின் திறத்தால் நடைபெறும் செயல்களன்றோ? இங்ஙனமே குறிஞ்சி முதலிய ஏனை நிலங்களைவிட மருத நிலத்திலேயே வாழ்விடங்களும் வாழ்முறைகளும் நன்கு விளக்கம் பெற்றிருப்பதை அறிக (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப. 234)

மாடு வளர்த்தல், கொல்லைச் செய்தல் (விவசாயத் தொடக்கம்) என்னும் முல்லை நிலப்பண்பாட்டைத் தொடர்ந்து உழிஞைக்குப் புறனாக வருகிறது மருதப்பண்பாடு. புது வயலும் வயலைச் சார்ந்த வாழ்க்கையைக் குறிக்கிறது. ஆற்றுநீரை வழிமறித்து விவசாயம் செய்கின்ற விஞ்ஞானம் வளர்ந்து விட்டதை இது குறிக்கிறது. நிலம் வயலாவதற்கும், வயலில் பயிர் பயிரிடுவதற்கும் அந்தப் பயிரை அறுவடை செய்வதற்கும் மருத நிலத்தில் சொத்துடைமை, தொழில் அமைப்பு பலப்படுத்தப்பட்டிருந்தது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் இரா. காமராசு தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார்.

> **ஆற்றங்கரை நாகரீகம், நீர்ப்பாசன முறை, நிரந்தரக் குடியிருப்பு, நிரந்தர வேளாண்மை, வேளாண் கருவிகள் என நிலவுடைமைச் சமூகத்தோற்றம் மருத நிலத்தில் அரங்கேறுகின்றது. (படுவழிப்படுக சங்க இலக்கிய கட்டுரைகள். ப.3)**

பெரும்பாலும் சிலர் நிலத்தின் சொந்தக்காரர்களாகவும் பலர் அந்நிலங்களிலே உழைக்கின்ற உழைப்பாளிகளாகவும் இருப்பர். நிலத்தின் சொந்தக்காரர்களிடம் எப்பொழுதும் செல்வம் உபரியாக இருக்கும். அதாவது வயலிலிருந்து கிடைக்கும் அறுவடை நெல் தேவைகளுக்கு அதிகப்படியாக அமையும் பொழுது அந்நெல் செல்வமாக மாறும். இதனைத் தான் தொல்காப்பியர் உழிஞை திணையில் மதிற்குள் இருக்கும் செல்வம் என்ற நிலையில் விளக்குகிறார். இந்த செல்வத்தினால் பெறக்கூடிய இன்பங்களையும், கேளிக்கைகளையும் நிலச்சொந்தக்காரர்கள் அனுபவிக்கும் வாய்ப்பு ஏற்படும். அப்படி வாய்ப்பு அமையும் போது தான் மனைவியை அடுத்து பரத்தை என்கிற காமக்கிழத்தியை வைத்திருத்தல் வழக்கமாகிறது. இதனடிப்படையிலேயே மருதத்தில் ஊடலும் ஊடல் நிமித்தமும் பண்பாடாய் அமைகிறது. இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் கார்த்திகேசு சிவதம்பி தம் நூலில் பதிவு செய்கிறார்.

நிலவுடைமை எத்துணைப் பலமானதாக உள்ளதோ அத்துணைப் பலமானதாகக் குடும்ப அமைப்பும் அமையும். ஏனென்றால் அப்பின்புலத்தில் விவாகம் செய்யும் பெண்ணும் சொத்தைக் கொண்டே வருகிறாள். உண்மையில் அவள் தான் வீட்டுத் தலைவி. மனை என்பது அவளாலேயே தோற்றுவிக்கப்படுகிறது. அதனாலேயே அவள் மனைவியாகிறாள். மனை + இ

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

= மனைவி. அதனால் அவள் கணவனை மீறமுடியாத நிலைமை அவனது செல்வக்கெடுபிடிக்குள்ளே கட்டுப்பட வேண்டிய நிலைமை.செல்வம் என்று வருகிற பொழுது மனைவியை விட இன்னொருத்தி காமக்கிழத்தியாக வைத்திருத்தல் என்பது உலக இயல்பு. இதனை ஏறத்தாழ எல்லாப் பண்பாடுகளிலும் காணலாம். தமிழ்நாட்டுக் கிராமப்புறங்களிலே வைப்பாட்டி அங்கீகரிக்கப்பட்ட ஒரு சமூக அங்கீகாரம் உள்ள பெண்ணே. ஆனால் மருதத்தின் ஒரு பிரதான அம்சம் என்னவென்றால் வைப்பாட்டியுடன் செல்பவன் அங்கேயே நின்று விடுவதில்லை. மனைவியிடம் திரும்பி வர வேண்டும். ஏனெனில், மனைவிதான் சொத்துகையளிப்பான வாரிசைப் பெற்றுத்தருபவள். உண்மையில் அவளது கற்பிலே சொத்துரிமையின் தொடர்ச்சி தாங்கி நிற்கின்றது. (சங்க இலக்கியத்தில் கவிதையும் கருத்தும் ப. 52) இந்த மருதப்பண்பாட்டில் தான் காந்தர்வ மணமாகிய காதல் மணம் நிலைமாறி ஒப்பந்த மணமுறை உருவாகுகிறது. பொருளதிகாரத்தின் கற்பியல் என்னும் இயல் விரிந்து தோன்றுவதற்கு முக்கிய காரணம் இந்த மருதப்பண்பாடுதான், என்று கூறமுடியும். போரினால் விதவையாக்கப்பட்ட பெண்கள், வேறு மற்ற பொருளாதாரக் காரணங்களினால் தனித்து விடப்பட்ட பெண்கள், சொத்துடைமைச் சமூகத்தில் காணும் ஒரு நுகர் பொருளாய் ஆக்கப்படுவதையும், அது பின்னர் பரந்தை என்கிற புது சமூகம் உருவாக காரணமாக அமைவதையும் மருதத்தின் வழி நாம் புரிந்து கொள்ள முடிகிறது. இது ஒவ்வொரு கட்டமாக வளர்ச்சிப் பெற்று இன்று பாலியல் தொழிலாளர் சமூக அமைப்பாக மாறியதைக் கண்கூடாய் காணமுடிகிறது. ஊடலும் ஊடல் நிமித்தமும் என்னும் மருதப்பண்பாட்டின் மூலம் குறிப்பிட்ட நிலத்தின் வாழ்க்கைப் பண்பாட்டு வட்டத்தினுள் குறிப்பிட்ட ஒழுக்கம் சமூக பொருளாதார முக்கியத்துவம் கொண்டதாக அமைகிறது.

**வாகை தானே பாலையது புறனே**

வெற்றிக்குத் தொல்காப்பியர் வைத்து வழங்கும் பெயர் வாகை என்பதாகும். வாகைத்திணை பாலைத் திணைக்கு புறனாக உள்ளது என்று தொல்காப்பியர் கூறுகிறார். இக்கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தன்னுடைய கருத்தைப் பதிவு செய்கிறார். வாகையொழுக்கத்திற்கும் பாலையொழுக்கத்திற்கும் உரிய இடம் குறிஞ்சி முதலான நானிலத்துக்கும் நடுப்பட்ட வெறு நிலமாகும். இதுவே பாலை நிலமாகும். வெற்றியெய்திய அரசன் அவ்வெற்றித் தோற்றம் விளங்கும்படி நெய்தலை நீங்கி வழிப்பற்றுவான் இவன் பற்றி வரும் அவ்வழிநிலமே வெற்றிக்குரிய நிலமாகும். அது பாலை நிலம் அங்ஙனமே தலைவியைப் பிரிந்த தலைவனும் தமது பாலையொழுக்கத்தை நிகழ்த்தும் இடம் அவ்ழிநிலமே என்பது ஈண்டறிதற்பாலது. எனவே இரண்டிற்கும் உரிய நிலம் பாலையாகும். பாலைக்குப் பொழுது, இளவேனிலும் நண்பகலும் ஆகும். தலைவன் நண்பகலில் தலைவியைப் பிரிந்து மணல் வெளியில் வழிச்செல்லுதலைப் போலவே, அரசனும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாகையுடையவனாய் வெயிலிலெல்லாம் வழியில் தங்கி மாலையில் தலைவியை அடைக்கின்றான். வாகையரசன் முடியில் அணியும் வெற்றிப்பூ "கொத்தான் வாகை" ஆகும். அது பாலை நிலப்பூவாகும். பாலைக்கு உரிப்பொருள் பிரிதல். தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் பிரிதல். வாகைத்திணையிலும் அரசன் கலந்து புரிந்த போரினின்றும் பகைவரைக் பிரிந்து நிற்றல் காண்க. எனவே, முதல் கரு உரிப்பொருள்களால் இரண்டு திணைகளும் இயைந்து நிற்றலை அறிக. (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப. 237)

**காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**

தொல்காப்பியர் காஞ்சித்திணையில் இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை ஆகிய பல்வகை நிலையாமைகளைப் பாடுவதே இத்திணையின் நோக்கம். காஞ்சித்திணையின் முதற்பிரிவில் பத்துத் துறைகளில் போரியல் இறப்பையும் இரண்டாம் பிரிவில் பத்துத்துறைகளில் உலகியல் இறப்பையும் கூறுகிறார். பேராசியர் ந. சுப்புரெட்டியாரும் தொல்காப்பியர் கூறியதற்கு சான்று பகரும் விதமாக தன்னுடைய கருத்தினைப் பதிவு செய்கிறார்.

காஞ்சி என்பது நிலையாமையைக் கூறுவது. அறம், பொருள், இன்பங்களின் நிலையின்மை உலகியலை நோக்க நற்பொருள் அன்றென விலக்கப்படுகின்றது. அங்ஙனமே ஏறிய மடல் திறம், இளமை தீர் திறம் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம், மிக்க காமத்து மிடல் ஆகிய நான்கும் தீயகாமம் என விலக்கப்பெறுகின்றன. அறம், பொருள், இன்பம் ஆகியவை பற்றியன்றி நிலையாமையென்ப தொன்றில்லை. அங்ஙனமே, பெருந்திணையும் ஐந்திணைக்குரிய நிலத்தின்கண் நிகழ்தலன்றித் தனக்கென ஒரு நிலத்தைப் பெற்றிருக்கவில்லை. காஞ்சித்திணையில் அரசனைப் புலவர்கள் வலிந்து நிலையாமை யறிவுரைத்துத் தம் வழிப்படுத்துகின்றனர். அங்ஙனமே, பெருந்திணையிலும் காதலர்கள் தம்முள் ஒருவரையொருவர் வலிந்து வழிப்படுத்திக் கொள்ளுகின்றனர். இவ்வாற்றான் இவையிரண்டன் உறவு முறை அறியப்பெறும். (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப.239) இவ்வாறு காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனாக அமைகிறது.

**பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே**

ஒருவன் போரிட்டுப் பெறலாகும் சிறப்பினை மட்டுமேயல்லாமல் கொடையாலும், கொள்கை நலத்தாலும் பெறும் சிறப்புகளைப் பாராட்டுவதும் பாடாண் என்றே தொல்காப்பியர் கூறுகிறார். பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரும் பாடாண் கைக்கிளை குறித்து தன்னுடைய கருத்தை பதிவு செய்கிறார். ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒருதலைக் காமமாகி வருவது கைக்கிளையாகிய அகத்திணை. அங்ஙனமே, பாடாண் திணையும் ஒருபாங்கு உரித்தன்றி ஒருவனையொருவன் யாதானுமோர் பயன் கருதியவழி மொழிந்து நிற்பது. இயற்பெயர் கூறப்படுதலும் கழிபேரிரக்கமல்லாத செந்திறத்தால் வருவதும் இரண்டற்கும் ஒக்கும். ஒரு

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

தலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒரு புலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டுதலின், அவை தம்மின் வேறாகிய ஒருதலைக் காமமாகிய கைக்கிளையோ டொத்தலின் பாடாண்திணை கைக்கிளைக்குப் புறனாயிற்று (தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப.239) என்று கூறுவர் நச்சினார்க்கினியர். வெட்சி முதலாகப் பல திணைகள் போர்ச்செயல்களைக் கூற பாடாண் வீரர்களின் பெருமையும், புகழும் பேசுவதாக அமைகிறது.

**முடிவுரை**

குறிஞ்சி என்பது உணவு சேகரிக்கும் சமூகம் வேட்டையாடுதல், உணவு சேகரித்தல் மட்டுமே தொழில்களாகக் கொண்டது. குறிஞ்சிக்குப் புறனாக உள்ள வெட்சித்திணை ஆநிரைகவர்தல், மீட்டல் என்னும் சிறிய போர் முறையை அடிப்படையாகக் கொண்டது. இவை இனக்குழு சமூகத்தின் செயல்பாட்டைக் குறிப்பதாக அமைவதை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார். குறிஞ்சித்திணையில் அமைந்துள்ள களவுப்பாடல்கள் கருநிலையில் குடும்ப அமைப்பு தோன்றியதை விளக்குவதாக அமைந்துள்ளன. பழைய இனக்குழு மக்களின் தாய்த்தெய்வ வழிபாட்டின் அடையாளமே குடிநிலைச் சிறந்த கொற்றவை எனக் குறிக்கப்படுவதாகும். கருப்பொருட்களாகிய நிலத் தெய்வங்கள் தோன்றுவதற்கு முன்னர் இனக்குழு மக்கள் இத்தாய்த் தெய்வத்தையே வழிப்பட்டனர். குறிஞ்சி – வெட்சி சமூகம் கருநிலையில் இருக்கக்கூடிய இனக்குழு சமூகம் என்ற பார்வையை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தம் நூலில் விதைக்கிறார்.

முல்லை நிலப்பாடல்களை ஆராய்ந்தால் மிருகங்கள் கொல்லப்படாமல் அவை வளர்க்கப்பட்டதைக் காண முடிகிறது. சொத்தாக ஆகிவிட்ட ஆநிரைகளைக் காத்தல், அதை வளர்த்தல், அதன் இனத்தைப் பராமரித்தல் ஆகியவை முல்லை நிலத்தின் முக்கியப் பொருளாதார அம்சமாக உள்ளன என்பதையும், மாடுகளைப் பிடிப்பது, அதனை வளர்ப்பது ஆண்களின் கடமையாகிறது. மாடுகளைப் பிடிப்பது தான் இன்று ஜல்லிக்கட்டு என்று அழைக்கப்படும் ஏறுதழுவுதல் ஆகும். முல்லையில் விவசாயத்தின் தொடக்க நிலையைக் காணமுடிகிறது. அதனுடன் மாடு, மனை என்னும் சொற்களும் முல்லையில் பேசப்படுவதைக் கொண்டு சொத்துடைமை சார்ந்த குடும்ப அமைப்பு முல்லையில் இருந்ததை பேரா. ந. சுப்புரெட்டியாரின் நூலின் மூலம் அறியமுடிகிறது. மண்ணை விரிவுபடுத்தும் நோக்கத்தாலும் மண்ணை விரிவுபடுத்த வருபவனிடமிருந்து தற்காத்துக் கொள்ளும் நிகழ்வாலும் முல்லையில் தலைவனும் தலைவியும் பிரிந்து எதிர்பார்த்து ஆற்றியிருக்கும் ஒழுக்கம் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் தவிர்க்கப்பட முடியாத பண்பாடாய் அமைகிறது. முல்லை – வஞ்சியில் குடும்பம், அரசு தோற்றம் பெற்றதை அறிய முடிகிறதுஎன்று பேரா. ந. சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார். செல்வம் படைத்தவன், மனைவியை அடுத்து பரத்தை என்கிற காமக்கிழத்தியை வைத்திருத்தல் வழக்கமாகிறது. இதனடிப்படையிலேயே மருதத்தில் ஊடலும் ஊடல் நிமித்தமும் பண்பாடாய்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைகிறது. மருதத்தில் வளமான அரசு தோற்றம் பெற்றது. தொழிலமைப்பு, சொத்துடைமை பலப்படுத்தப்பட்டிருந்தது. உழிஞைத் திணையின் போர் முறையை ஆராய்ந்தால் ஒரு வளமான அரசு உருவாயிற்று என்ற கருத்தை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பதிவு செய்கிறார்.

தும்பைக்குப் புறனாக இருக்கின்ற நெய்தலின் உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். மீன்பிடிக்க கடலுக்குச் சென்ற தலைவன் வருவானோ, வராமல் போவானோ என்று அச்ச உணர்வோடு இருப்பதே நெய்தலின் உரிப்பொருளாகும். நெய்தலில் வருவானோ, வரமட்டானோ என்ற ஐயப்பாடு கடலுக்குச் சென்று மீன்பிடித்தல் செயலை மட்டும் பொருள் கொள்ளாமல் இந்த தும்பைத்திணை போரையும் மனதிற் கொண்டு அதில் வரும். இருபெரும் வேந்தர் ஒருவரும் ஒழியாத் தொகை நிலை துறையின் மூலம் நெய்தலின் ஒழுக்கமாகிய இரங்கலும் இரங்கல் நிமித்தமும் என்பதின் ஆழ்ந்த பொருளை விளங்கிக் கொள்ள முடிகிறது.

புறத்திணையியலில் இதுவரை போர்குறித்த செய்திகள் அமைந்துள்ளன. ஆனால் வாகைத்திணையில் அறத்துறையென்ற புதுத்துறை பேசப்படுகிறது. வாகைத்திணையில் அறிவுப்போர்களும், வெற்றிகளும், பொறிபுலன்களை அடக்கி மேம்படுதலும் துறவுக்கோட்பாடும், பண்பட்ட சமூகத்தின் வளர்ச்சிகளாக இத்திணை காட்டுகிறது. வாகைக்குப் புறனாக இருக்கின்ற பாலையின் உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தம் என்னும் ஒழுக்கம். போரினால் சிதைவுற்றும், சீரழிந்தும் கிடந்த சமூகம் அறிவைத்தேடும் முயற்சியிலும், பொருள் தேடும் முயற்சியிலும் பிரிகின்ற பிரிவாக அமைவதையும், குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்து என்று கூறுவதால் வறட்சியின் காரணமாகவும், போரின் காரணமாகவும் ஏற்பட்ட வறுமையின் காரணமாகவும் பிரியும் பிரிவாக பாலைப்பிரிவு அமைவதையும், காஞ்சித்திணை இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை ஆகிய பல்வகை நிலையாமைகளைப் பாடுவதே இத்திணையின் நோக்கமாக அமைவதையும், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் விரிவாக விளக்குகிறார். பெருந்திணைக்கு உரிப்பொருள் ஒழுக்கம் இல்லை. ஏனெனில் நிலத்தின் அடிப்படையில் பண்பட்டு வளர்ந்து வந்த தமிழ் சமூக வளர்ச்சி, எல்லா நிலங்களும் கலந்த ஒரு பொது வாழ்வியல் சூழலுக்கும், ஒரு புதுப்பண்பாட்டு கலப்பிற்கும் தயாராகி விட்ட படியால் அங்கு உரிப்பொருள் ஒழுக்கம் கூற அவசியமில்லை என்பது இங்கு கவனிக்கத்தக்கதாகும். விருப்பத்திற்குரிய தலைவரையும், தெய்வத்தையும் பல்வேறு வகை இலக்கிய உத்திகளால் புனைந்து போற்றுவது பாடாண்திணை ஆகும். பாடாண் திணை மூலமாக மன்னனும், மக்களும் அந்நியப்பட்டுப் போவதை அறிய முடிகிறது. மற்றதிணைகளில் வீர மறவர்களின் போர்ச் செயல்களைக் கூறியது போல இத்திணையில் கூறப்படவில்லை. வேந்தனைப் பற்றி துதி பாடுவதாகவே இத்துறை அமைந்துள்ளது. எனவே, பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அகத்திணை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

புறத்திணை இயைபு பற்றிய பார்வை அகம், புறம் இயங்கியல் பார்வையாக அமைவதை இவ்வாய்வுக் கட்டுரை மூலம் அறிய முடிகிறது. மேலும் சான்றோர் பெருமக்களின் திணைக்கோட்பாட்டுப் பார்வைக்கு பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் அகத்திணை, புறத்திணை இயைபு பார்வை அடித்தளமாக அமைவதை இவ்வாய்வுக் கட்டுரை நிறுவுகிறது.

### குறிப்பு நூல்கள்

[1] ஆறுமுகம், அ. முனைவர். *சங்க இலக்கியத்தில் குடும்பம் உடைமை அரசு.* பாவேந்தர் பதிப்பகம், அரியலூர் மாவட்டம், மறுபதிப்பு, 2008.

[2] இராசேந்திரன், இரா. *எளிய நடையில் திருக்குறள்.* பரிமேலழகர் உரை, நந்தினி பதிப்பகம், சென்னை, 2007.

[3] இளங்குமரன், இரா (உ.ஆ). *புறநானூறு.* கோவிலூர் மடாலயம், கோவிலூர், 2003.

[4] காமராசு, இரா. *படுவழிப்படுக சங்க இலக்கியக் கட்டுரைகள்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2014.

[5] கார்த்திகேசு சிவத்தம்பி. *சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2009.

[6] கோவிந்தன், கா. *பண்டைத் தமிழர் போர் நெறி.* ராமையா பதிப்பகம், சென்னை, 2011.

[7] சாமிநாதையர், உ.வே. டாக்டர், *குறுந்தொகை மூலமும் உரையும்.* உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 2018.

[8] சுப்பிரமணியன், கா. *சங்க காலச் சமுதாயம்.* நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2011.

[9] சுப்புரெட்டியார், ந. *தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை மூன்றாம் பதிப்பு, 1988.

[10] தமிழ் கலைக்களஞ்சியம். தொகுதி ஒன்று. இந்தோனீசியா, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 2019.

[11] தமிழண்ணல். *தொல்காப்பியம் பொருளதிகாரம், தொகுதி-1.* அகத்திணையியல், புறத்திணையியல் (புதிய முறை எளிய உரை), மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2008.

[12] தர்மராஜன், நா. *எங்கல்ஸ் குடும்பம். தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,* qகருத்துபட்டறை, மதுரை, 2008.

[13] பாலசுப்பிரமணியன், கு. வெ. *சங்க இலக்கியத்தில் புறப்பொருள்.* மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2007.

[14] வாணி அறிவாளன், முனைவர். *வீரம் விளைந்த நிலம்.* அருண் அகில் பதிப்பகம், சென்னை, 2010.

[15] வேலுப்பிள்ளை, ஆ. *தமிழிலக்கியத்தில் காலமும் கருத்தும்.* பாரி புத்தகப் பண்ணை,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சென்னை, இரண்டாம் பதிப்பு, 1978.

## References

[1] Arumugham, A. Munaivar *Sangha Illakiyathil Kudumbam Uttamai Arachi*. Pavendhar Pubhlishing, Ariyalur District, Reprinted on 2008.
[2] Rajendrasu, R. *Ezhlaiya Nataiyal Thirukurral*. Parimelalagar Urai; Nandhini Publishing, Chennai, Year 2007.
[3] Ilangumaran, R (Narrator). *Purananuru*. Kovilur Matalayam, Kovilur, 2003.
[4] Kamarasu, R. *Pattuvazhipattuku Sangha Ellakiyal Katturaigal*; New Century Book House, Chennai, Year 2004.
[5] Karthikesu Sivathambi. *Sangha Illakiya Kavithaiyum Karuthum*. Ulaga Tamilar Araichi Niruvanam, Chennai, Year 2009.
[6] Govindhan, Ka. *Pandaiya Thamizhar Poorneri*. Ramaiya Pathipagam, Chennai, Year 2011.
[7] Swaminatha Iyer, U.V. *Kuruntogai (Mulamum Uraiyum).* Dr. U.V. Swaminatha Iyer Library, Chennai, 2018.
[8] Subbramanian, Ka. *Sangha Kaala Samuthayam*. New Century Book House, Chennai, 2011.
[9] Subbu Reddiar, N. *Tholkappiyum Kattum Vazhkai*, Palaniappa Bros, Chennai, Third Reprint, 1988.
[10] Tamil Encyclopedia. Volume One, Indonesia, Tamil Development Corporation, Chennai, 2019.
[11] Thamizhannal, *Tholkappiyum Porulathigaram Thoguthi I*, Agatheenieyal Puratheenieyal (Puthiyamurai EliyaUrai), Meenatchi Puthaga Nilayam, Madurai, Year 2008.
[12] Dharmarajan, N. *Aankels Kudumbam. Thanisothu Arasu Agiyavatrin Thotram*. Karuthupattarai, Madurai Year 2008.
[13] Balasubramaniyan, Ku.Ve. *Sangha Illakiyathil Puraporul*. Meiyappan Pathipagam, Chidabaram, Year 2007.
[14] Vani Arivalan, Dr. *Viram Vilainta Nilam*. Arun Akhil Publishing House, Chennai. 2010.
[15] Velupillai, A. *Tamililakkiyattil Kalamum Karuttum*. Paari Nilayam, Chennai, 1978.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர்.சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S.Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியாரின் 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' தெளிவுறுத்தும் அறமும், அறவியல் வாழ்வும்

# Virtue and Moral Life in Professor N. Subbu Reddiar's 'Valluvarin Vaazhviyal Sinthanaigal'

**முனைவர் ப. சு. மூவேந்தன்**, இணைப்பேராசிரியர், தமிழியல்துறை,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர் 608002, தமிழ்நாடு, இந்தியா
**Dr. P. S. Mooventhan**, Associate Professor, Department of Tamil Studies,
Annamalai University, annamalai Nagar 608002, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-1353-4821**
**DOI:**

**Abstract**

*Virtue is the chief moral code of common life in Tamil society. Virtues arose with the primary aim of emphasizing virtue. "Tirukkural" is the chief among the didactic books. "Tirukkural" has created many ideas with very few words like the English saying "Brevity is the Soul of Wit. Professor Subbu Reddiar studied the concept of "Tirukkural" in his commentary, speech and writing. Such interpretations were in texts, paraphrases, translations, textual interpretations, and textual refutations. Prof. N. Subbu Reddiar has authored many books related to "Tirukkural" and didactic books. One of them is 'Vaḷḷuvariṉ Vāḻviyal Cintaṉaikaḷ'. This is a testament to Professor's introspective vision. In this book, he has explained the meaning of virtue and how it has been followed in Tamil tradition. The virtues created by "Tirukkural" and its functions, the need for virtue in life, the virtues and the ability of Tirukkural's thoughts are seen in his works. In this way, this book also serves as an explanatory manual for "Tirukkural". In this, he has revealed the meaning of virtue, material, and pleasure in terms of virtue in virtue, virtue in material, and virtue in pleasure. Moreover, he has tried to realize through this book that virtue is proof of the excellence of the Tamil language. He has also shown that he has been continuously associated with "Tirukkural" since his youth with his life events. In this article, Prof. N. Subbu Reddiar's ability to analyze "Tirukkural" with Tamil life and the compatibility of "Tirukkural" with his life has been evident. Hence, the objective of this research paper is to examine the importance of virtue, meaning, and pleasure, and the relevance of virtue with evidence through the book 'Valluvarin Vaazhviyal Sinthanaigal'.*

**Keywords:** Virtue, Moral Life, Professor N. Subbu Reddiar, *Valluvarin Vaazhviyal Sinthanaigal*.

**ஆய்வுச்சுருக்கம்**

*மக்கள் அனைவரும் ஏற்கத்தக்க வாழ்வியல் அறங்களைக் கூறுவது திருக்குறள். திருக்குறள் கருத்துகள் இன்றைக்கும் நமக்குத் தேவைப்படுகின்றன. திருக்குறள் பல்லாண்டுகள் உரையாசிரியர்கள் தந்த விளக்கங்களால் வாசிக்கப்பட்டு வந்தது. பின்னர். பல்கலைக்கழகப் பேராசிரியர்களால் திருக்குறள் குறித்த ஆய்வுகள் வளர்ச்சி அடைந்தன அதனால் திருக்குறளுக்குப் புதிய விளக்கங்கள் கிடைத்தன. பேராசிரியர்கள் தாங்கள் பாடம்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*நடத்தும்போது தந்த விளக்கங்கள் பின்னாட்களில் திருக்குறள் குறித்த நூல்களாக வெளிவந்தன. அவ்வகையில் பல்கலைக்கழகப் பேராசிரியராகத் திகழ்ந்து நூல்கள் பலவற்றைப் படைத்து, இன்றும் நூல்களால் வாழ்ந்து கொண்டிருக்கும் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் திருக்குறள் குறித்த சிந்தனைகளை 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' என்னும் தலைப்பில் நூலாக வெளியிட்டுள்ளார். இந்நூலில் பேராசிரியரின் திருக்குறள் வாசிப்பு, தொடர்பு, ஈடுபாடு, அது வாழ்க்கை வழிகாட்டியாக விளக்கும் திறன் ஆகியன விளக்கப்பட்டுள்ளன. தமிழில் 'அறம்' என்னும் சொல், எந்தெந்த பொருள்களைத் தருகிறது என்பதும் விளக்கப்பட்டுள்ளது. 'அறம்' என்பதற்குப் பலவகையான புதுமை விளக்கங்கள் இந்நூலில் தரப்பட்டுள்ளன. இந்நூலின்வழியாகப் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியாரின் திருக்குறள் வழிபட்ட வாழ்வியல் சிந்தனைகள் குறித்தும், அவரது அறவியல் சிந்தனைகள் குறித்தும் ஆராய்வது இவ்ஆய்வுக்கட்டுரையின் முதன்மையான ஆய்வு நோக்கமாக அமைகிறது.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார், அறம், அறவியல் வாழ்வு, *வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்.*

**முன்னுரை**

மானுட வாழ்க்கையை வளப்படுத்த எழுந்த நூல்களில் தலைமைத் தன்மையுடைய நூலாகத் திகழ்வது திருக்குறள் மட்டுமே. அது கால, இடச் சூழல்களுக்குக் கட்டுப்படாமல் எல்லாக் காலத்திற்கும் ஏற்றதாகப் பொதுநிலையில் அமைந்துள்ளது. திருக்குறள் கருத்துரைகள் இன்றைக்கும் நமக்குத் தேவைப்படுகின்றன. திருக்குறளின் இலக்கியத் தகுதிப்பாட்டிலும், பொருளமைதியிலும் இடையறாது ஈடுபட்ட பேராசிரியர்கள் தம் பல்துறை ஆய்வுகளால் பொருளுணர்ந்துகொண்ட நிலையினையும், திருக்குறள் குறித்த தமது மன உணர்வுகளையும் எண்ணங்களையும் உரைகளாகவும், விளக்கங்களாகவும் ஆய்வுரைகளாகவும் பலநிலைகளில் வெளிப்படுத்தி வந்துள்ளனர். மேற்கோள், பதிப்பு, உரை, விளக்கம், மொழிபெயர்ப்பு என அனைத்துத் துறை வெளியீடுகளிலும் தமைமைத் தன்மை பெற்றது திருக்குறள். அவ்வகையில் உலகறிந்த பெரும்பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், திருக்குறள் கருத்துக்களில் தமது ஆழ்ந்து நுண்ணகன்ற தெளிதிறனையும், தம் வாழ்வியல் நிலைகளோடு பொருந்தவரும் குறட் பொருத்தப்பாட்டினையும், அது மானுட வாழ்வியலைச் சீர்மைப்படுத்தும் தனித்துவமிக்க நூலாகத் திகழும் பாங்கினையும் விளக்கும் விதத்தில் 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' என்னும் தலைப்பில் ஆய்வுநூல் வெளியிட்டுள்ளார். இந்நூலின் வழியாக பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் புலப்படுத்தும் அறவியல் பொருள்விளக்க நிலைகள் குறித்தும், திருக்குறள்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வாழ்வியல் சிந்தனைகளில் உலகியல் பொருத்தப்பாடு குறித்தும் திருவள்ளுவரின் சிறப்பு குறித்தும் ஆராய்வது இவ்ஆய்வுக்கட்டுரையின் முதன்மை ஆய்வு நோக்கமாகும்.

**வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்**

பல்கலைக்கழகப் பேராசிரியராக, நாடறிந்த நற்றமிழ் வித்தகராக, கருத்தால், செயலால், சொல்லால் அறவோராக விளங்கிய ந. சுப்பு ரெட்டியார் செந்தமிழ் இலக்கியத்தின்பால் மாறாத பற்றினைக் கொண்டிருந்தார் என்பதற்குச் சான்றாகத் திகழ்வது அவரது திருக்குறள் குறித்த படைப்புகளாகும். அதன் விளைவால் எழுந்தது ‘வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்’ என்னும் நூலாகும். இளமைக்காலம் முதலாகத் திருக்குறள்மீது அவர் கொண்டிருந்த பற்றுதலும், தேர்ச்சியும், சிந்தனைத் தெளிவும் அவரது பல நூல்களிலும் பரவலாக இடம்பெற்றிருந்தாலும் இந்நூல் திருக்குறள் சிந்தனைகளில் தனித்திறம் பெற்றதாகத் திகழ்கிறது. இதில் திருக்குறளின் சிறப்பு, பால் பகுப்பின் சிறப்பு, அறம்-பொருள்-இன்பம் ஆகியன ஒவ்வொரு நிலையிலும் தொடர்ந்து அறக்கூறாக இடம்பெற்று வரும் திறன் ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

**பேராசிரியரின் திருக்குறள் ஈடுபாடு**

திருக்குறள் எளிய சொற்களால் அமைந்தது. எளியமையான அமைப்பில் அமைந்திருந்தாலும், அந்நூலில் இடம்பெற்றுள்ள கருத்துகள் ஆழ்ந்து அகன்ற பொருள்களைக் கொண்டவை. இதன் சிறப்பு பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் பார்வையில் நூலின் முன்னுரையில் ‘ஓதற்கெளிதாகி, உணர்தற்கரிதாகி’ என்று எடுத்துரைக்கப்படுகிறது. இதனால் திருக்குறள் பயில்வார்க்கு எளிமையாக மனத்தில் பதிந்துவிடும சிறப்புடைய தன்மை புலப்படுத்தப்படுகிறது. உற்றுநோக்கின் ஆழமான பொருள் பொதிந்து கிடக்கும் திறமும் உணர்த்தப்படுகிறது. திருக்குறள் பயிற்சி அவரது வாழ்வின் இளமைக்காலம் முதலாகவே தொடர்ந்து வந்துள்ளது. இதன் பொருட்டே இந்நூல் உருவாக்கம் பெற்றுள்ளது என்பது “எந்த நூலைப் படித்தாலும் அப்போதெல்லாம்கூட குறட்பாக்கள் அடிக்கடித் தலை காட்டிக்கொண்டே இருக்கும்” (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், p. xx) என்பதன் வழி தெளிவாகிறது.

“உரையாசிரியர் தான் உரை எழுதப்புகும் நூலில் தெளிவான கருத்துடையவராய் இருத்தல் வேண்டும். மேலும், தான் உரைவிளக்கம் தர முனையும் நூலின்கண் ஆழ்ந்த பற்று உடையவராய் இருத்தல் வேண்டும்” (உரையாசிரியர்கள், ப. 23) என்னும் மு.வை. அரவிந்தனின் கருத்துக்கு ஏற்ப, பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் திருக்குறளில் தெளிவான சிந்தனையோட்டம் பெற்றவராகத் திகழ்கிறார். அவை, திருக்குறளின் அறப்பொருளை எடுத்துரைப்பதாகவும், தமிழர்கள் திருக்குறளைப் போற்றவேண்டியதன் தேவையை வலியுறுத்துவதாகவும், வாழ்வியலில் திருக்குறளைப் பின்பற்ற வேண்டியதன் தேவையை

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

எடுத்துரைப்பதாகவும் அமைந்துள்ளது. திருக்குறளின் சிறப்பினையும் அதனைப் பின்பற்ற வேண்டிய சமூகக் கடமையினையும், பொறுப்புணர்வினையும், அதனை முன்னெடுத்துச் செல்ல வேண்டிய நிலைப்பாட்டினையும்,

> **வாழ்வது எல்லா மனிதர்க்கும் பொது; ஆதலால் வாழ்க்கை விளக்கங்களும் பொதுவாக அமைதல் வேண்டும். நாடு, இனம், மதம், நிறம், மொழி முதலிய பிரிவுகளை யெல்லாம் கடந்து எக்காலத்திற்கும் பொருந்துவனவான கருத்துகளைக் கொண்டு இயங்கும் ஒரே நூல் இது (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 2)**

என்று எடுத்துரைக்கின்றார். இதனால் *திருக்குறள்* மீதான பேராசிரியரின் கருத்து புலனாகின்றது.

**வாழ்வியல் வழிகாட்டியாகத் திகழும் திறன்**

மானுட வாழ்வில் ஏற்படும் அனைத்து சிக்கல்களுக்கும் உரிய விடைகளையும், உரிய தீர்வுகளையும் தரவல்லதாய்த் திகழ்வது *திருக்குறள்* ஒன்றே. அது வாழ்வியல் வழிகாட்டியாக மட்டுமல்லாது, பண்பாட்டை வளப்படுத்தும் கையேடாகவும் திகழ்கிறது என்பதனைப் பேராசிரியர் மிகத் தெளிவாக உணர்ந்திருக்கிறார். மனித வாழ்வில் சிக்கல்கள் நேரும் போதெல்லாம் நினைந்துபோற்ற வேண்டிய நூலாகத் *திருக்குறள்* திகழ்கிறது என்பதனையும் அது நமது மனச்சூழல்களுக்கு ஏற்றவாறு பொருள்தர வல்லது என்பதனையும்,

> **திருக்குறள் ஓர் உயர்ந்த மணிகள் வைக்கப் பெற்றுள்ள ஒரு பெட்டகத்திற்கு ஒப்பிடலாம். …பெரும்புலவர்கள் தம் இலக்கிய நகைகளைப் படைக்கும்போது கதைகளில் அல்லது காவியங்களில் ஆங்காங்குள்ள சந்தர்ப்பங்களுக்கேற்றவாறு, காவிய மாந்தர்களின் தேவைக்கேற்றவாறு திருக்குறள் மணிகளைப் பதித்து அழகு செய்வர். இம்மணிகள் தாம் விடும் கருத்தொளிகளினால் காவியத்தில் அல்லது கதைகளின் அழகினைப் பெருக்குகின்றன. இந்த ஒளி அக ஒளி; உள் ஒளி. இந்த ஒளி படிப்போர் உள்ளத்திற்கு வழிகாட்டி அவர்தம் பண்பாட்டையும் ஒழுக்கத்தையும் பெருமையுறச் செய்கின்றன (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 58).**

என்று வெளிப்படுத்தவும் செய்கிறார். ஒழுக்கமான வாழ்க்கையை மேற்கொள்ள விரும்புவார்க்குத் திருக்குறள் அணிகலனாக விளங்கும் திறம் பெற்றது என்பதும், அது ஒளிவீசும் மணியாக எப்போதும் திகழ்வது என்பதும் இதன்வழியாக உணர்த்துகிறார்.

**மானுட வளர்ச்சியில் திருக்குறள்**

ஒவ்வொரு குறட்பாவிலும் அறத்தைக் கட்டமைத்திருக்கும் வள்ளுவப் பெருமானின் வாழ்வியல் சிந்தனைகளைப் படித்தறிந்து கொள்வதோடு நில்லாது, அறவழி வாழ்தலே நமது கடமையாக இருத்தல் வேண்டும் என்பதனை, “பன்னெடுங்காலமாக மரபு கொண்டு நிலைநின்று வருகின்ற வள்ளுவரின் வான்மறைக் கருத்துகளை அவற்றின் உறுதி தேர்ந்து

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சிதைக்காமல் தழுவி வாழ்வது நல்லோராகிய பெருமக்களின் கடமை. மேலும் திருக்குறள் காலத்தால் மாறுபடாத, தேயத்தால் பிற சூழலால் கிளர்ச்சி புரட்சிகளால் நிலை திரியாத மாபெரும் உண்மைகளையே தொகுத்துரைக்கும் நூலாகும்.” (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 212) என்று சிறப்பித்து உரைப்பதன்வழியாகத் தெளிவாகிறது.

**தமிழும் அறமும்**

சங்கத்தமிழ் இலக்கியங்களின் மூலமாகத் திகழ்வது அறம் ஆகும். அறம் என்பது பரந்துவிரிந்த பொருள்களைத் தன்னுள் கொண்டது. அறம் என்பதனைச் செயல்வடிவத்தில் கட்டமைக்க எழுந்த நூலே திருக்குறள் என்பது பேராசிரியரின் கருத்தாகத் திகழ்வது இந்நூலின் வழியாக உணர்த்தப்பட்டுள்ளது. திருவள்ளுவரின் வாழ்வியல் அறக்கோட்பாடுகள் இல்லறம், துறவறம் என்னும் நிலைகளில் அமைந்துள்ளன. இல்லறத்தின் முதிர்ந்த நிலையே துறவறமாகும். திருவள்ளுவர் வகுத்துரைக்கும் அறம் வாழ்வதற்கு உரியநெறி என்பதை, “அறமாவது மக்கள் ஒருவருக் கொருவர் இசைவாக இணங்கியும் ஒருவருக்கொருவர் இடையூறு இல்லாமல் தனித்தும் வாழுவதற்கு உரிய நெறியும் முறையும் ஆகும்” (திருக்குறள் உரைவிளக்கம், தொகுதி-1, ப. 14) என்ற பேராசிரியர் பொற்கோ கருத்தின்வழியாகவும் உணர்ந்து கொள்ளலாம். இலக்கியத்தின் பயனாக அமைவது அறமாகும். ‘அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே’ (நன்னூல், நூ. 10) என்பது பவணந்தியார் கருத்து. அறத்தின் வழியாகவே வாழ்வின் உயர்நிலையினைப் பெறமுடியும் என்பது சங்கச் சான்றோர் கொள்கையாகும். அதனால் சங்கப் பாடல்களில் அறத்திற்கே முதன்மை தரப்பட்டது. வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் அறத்தைப் பின்பற்றி வழுவாது வாழ்வதே உயர் வாழ்வு எனப் புலவர்களால் உணர்த்தப்பட்டது.

**அறம் - அகராதி விளக்கம்**

‘அறம்’ என்னும் சொல் ‘அறு’ என்னும் முதனிலை அடியாகப் பிறந்து, தீவினையை அறுப்பது எனப்பொருள் தருகிறது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரகராதி ‘அறம்’ என்ற சொல்லுக்கு வழக்கம், நீதி, கடமை, புண்ணியம், ஈகை, அறக்கடவுள், சமயம் என்ற பல்வேறு பொருள்களைத் தருகின்றது. இவையனைத்தும் நற்பண்பு என்ற பொருளிலேயே ஆளப்படுகின்றன. இந்த ஒழுக்க நியதிகளின் தொகுதியே திருக்குறள் முழுமையும் காணப்பெறுகிறது. அறம் என்னும் சொல்லிற்கு, “மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியே, முழு நிறை வடிவமே, அறம் என்றும், பிறவிதொறும் மனிதனைப் பற்றிக் கொண்டு வரும் தீவினையின் பயனாகிய அறியாமையை அறுத்தெறிவதே அறம்” (திருக்குறள் நீதி இலக்கியம், ப. 23) என்றும் பொருளுரைக்கிறார் க.த. திருநாவுக்கரசு.

**திருக்குறளில் அறத்தின் பொதுமைப்பண்பு**

திருக்குறளின் பேசப்படும் அறம், எல்லா மக்களுக்கும் பொதுவானது, எல்லோர்க்கும்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

உரித்தானது. பொதுநிலையில் உலக அறங்களைப் பேசுவது. குறிக்கோள் வாழ்க்கைக்கு வழிஏற்படுத்தித் தருவது. இதன் சிறப்பினை, “வாழ்வில் வேறுபட்டு விளங்கும் நெறிமுறைகளைப் பற்றிப் பேசாமல் எல்லோருக்கும் பொதுவாக உள்ள நெறிமுறைகளைப் பற்றியும் எல்லோரும் ஏற்றுக் கொள்ளத்தக்க உயர்ந்த நெறிமுறைகளைப் பற்றியும் உயர்ந்த குறிக்கோள் உணர்ச்சியோடு திருக்குறளில் அறம் பொதுநிலையில் வைத்துப் பேசப்பட்டுள்ளது” (திருக்குறள் உரைவிளக்கம், தொகுதி-1, ப. 14) என்றுரைக்கிறார் பொற்கோ. இதன் கருத்தியல் வடிவம் பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியாரின் இந்நூலின்வழியாகத் தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

**பேராசிரியர் பார்வையில் அறம் - வைப்புமுறை**

‘அறம்’ என்பது தமிழர் கண்ட வாழ்வியலின் உறுதிப்பொருள் என்றும், அது மும்முதற்பொருள் என்றும் பேராசிரியரால் விதந்தோதப்படுகிறது. திருக்குறளின் முதற்பாலாக அமைவது அறம்-பொருள்-இன்பமா?, இன்பம்-பொருள்-அறமா? என்ற வினா இன்றுவரை தொடர்ந்து கொண்டிருக்கிறது. தொல்காப்பியம் (களவி. நூ. 1) இன்பம்-பொருள்-அறம் என்ற முறை வைப்பில் அமைந்திருக்க அதன் அடிப்படையில் திருக்குறளை வைத்தெண்ணுவதும் வழக்கில் உள்ளது. பேராசிரியர் இம்முறைவைப்பினை ஆழ்ந்தகன்று உற்று ஆராய்ந்து, அறத்தைக் கட்டமைக்க எழுந்த திருக்குறளில் அறத்துப்பாலே முதலாவதாக வைத்துப் போற்ற வேண்டும் என்று குறிப்பிடுகிறார். “இந்நிலவுலக வாழ்வில் மக்கள் எல்லோரும் அடைதற்கரிய உறுதிப் பொருள்களை அறம், பொருள், இன்பம், வீடு என உலகத்தோரும் சமயத்தோரும் பாகுபடுத்திக் கூறுவதை நாம் அறிவோம். எல்லா உயிர்களாலும் விரும்பி நுகரப்படுவது இன்பம்; அந்த இன்பத்திற்குக் காரணமாக அறிவுடைய மக்களால் ஈட்டப்படுவது பொருள்; பிறர்க்குத் தீங்கு நினையாத மாசற்ற மனத்தால் பொருள் செய்தொழுகும் முறை அறம். நுகர்தல், வேட்கை முறைபற்றி இன்பம்-பொருள்-அறம் என ‘இன்பமும் பொருளும் அறனும்’ என்ற நூற்பாவால் காட்டினார் தொல்காப்பியர். செய்கை முறை பற்றி அறம்-பொருள்-இன்பம் எனவும் எண்ணுதல் மரபு” (தமிழ் இலக்கியங்களில் அறம், நீதி, முறைமை, ப. 7) என்று தனது நூலின் வழியாகத் தெளிவுபடுத்துகிறார். இதனால் வேட்கை நோக்கில் இன்பத்தை முதலாவதாகவும், செயல் நோக்கில் அறத்தை முதலாகவும் வைத்திடுவதே சிறப்பு என்று தெளிவுபடுத்துகிறார். மேலும் இதனை விளக்கும் விதத்தில்,

> **அறவழியில் பொருளாக்கி அப்பொருளால் இன்பம் நுகர்தலே மக்களது விழுமிய நல்வாழ்க்கை முறையாகும். இவ்வாறு மூன்று பகுதிகளாக விளங்கும் இவ்வுலக வாழ்க்கையினை ‘மூன்றன் பகுதி’ எனத் தொகுத்துரைப்பார் தொல்காப்பியர். வள்ளுவப் பெருந்தகையும் தொல்காப்பியரின் முறையையொட்டியே தம் நூலை அறம்,**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**பொருள், இன்பம் என முப்பால்களாக வகுத்தருளினார் என்பது ஈண்டு நோக்கி உணரத்தக்கது (தமிழ் இலக்கியங்களில் அறம், நீதி, முறைமை, பக். 7 - 8)**

என்று தெளிவுபடுத்திக் காட்டுகிறார். அறநூல்களில் தலைமை நூலாகத் திகழ்வது திருக்குறளேயாதலால், அறத்தை முதற்கண் வைத்துப் பேசுவதே அதற்குச்சிறப்பாகும் என்பதனை, "திருக்குறள் ஓர் அறநூல்; அருமறைக் கருத்துக்கள் நிறைந்தது. அறத்தின் வீறு நூலெங்கும் பிரதிபலிக்கும் வேகத்தைத் தருவதற்காகப் பாயிரமான இப்பகுதியில் அறம் நன்கு வலியுறுத்தப் பெறுகின்றது. ...அறம், பொருள், இன்பம் இவற்றில் அறம் வீறுமிக்கது. இப்பண்பே அறத்துப்பாலை நூலின் தொடக்கத்தில் முன்னிறுத்தும் கட்டாயத்தையும் பெற்றது." (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 28) என்று தெளிவுபடுத்தி, அறத்துப்பாலே முதலாவதாக அமைத்திட வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

**வாழ்வியல் அறநெறி**

அறமே மனித வாழ்வை நெறிப்படுத்துகிறது. ஆதலால், அறத்தைப் பின்பற்றி வாழ்தல்தான் வாழ்வாங்கு வாழ்ந்ததன் பொருளாக அமைந்திருக்கும் என்று அறத்திற்குப் பெருமை சேர்க்கிறார் ந. சுப்பு ரெட்டியார். "அறம் என்றது அறத்தாற்றை உணர்த்தும். அறத்தொடு நிற்றல்தான் வாழ்வாங்கு வாழ்தல் என்பதாகும்." (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 3) என்று கூறி, அறம் என்பது மனித வாழ்வியலைச் சிக்கலின்றி, சீர்மையோடு வழிநடத்திச் செல்வதற்கான பாதை என்றும், அப்பாதையில் பயணம் செய்வதே இலக்கைச் சென்றடைவதற்குத் துணையாக நிற்கும் என்றும் உணர்த்துகிறார்.

**அறம் - புதுவிளக்கம் காணும் போக்கு**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அறம் என்பதற்குத் தமிழ், மனத்தூய்மை, செய்கை, கடமை, நன்றாற்றுதல் என்ற பொருள்களைத் தந்து அறத்திற்கு மேலும் விளக்கங்களைத் தந்துள்ளார். இதனால் அறம் என்பதன் பொருள் மேன்மேலும் விளக்கம் பெறுகிறது.

வள்ளுவர் வகுத்துரைக்கும் அறம் என்பது அறத்தில் அறம், பொருளில் அறம், இன்பத்தில் அறம் எனப் பரந்துவிரிந்த பொருள்தருவதாக உள்ளதனைக் காட்டி "அறம் பற்றிப் பேசும்போது முப்பால் எனப்படும் திருக்குறள் முழுவதையும் அறம் என்றே சொல்லும் வழக்கு உண்டு என்பது நம் நினைவுக்கு வருகிறது. இதனால் அறம் என்பது பொருளையும் இன்பத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருத்தல் தெளிவாகிறது" (தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி - முறைமை, ப. 61) என்ற விளக்கமளித்துக் காட்டுவது சிறப்பு.

**அறமும் தமிழும்**

'அறம்' என்னும் சொல்லுக்குப் பல்வகையான விளக்கங்களை இந்நூலின்வழியாகத் தந்துள்ளார் பேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார். திருக்குறள் மீதான நுண்ணாய்வின் வழியாக இதனை உணர்த்தவும் செய்துள்ளார். சங்க அகமும் புறமும் அறம்-பொருள்-இன்பம்-வீடாக

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

வளர்ச்சிப் பெற்ற நிலையினையும் சான்றுடன் தெளிவுறுத்துகிறார். சங்க கால வாழ்வியல் அக மரபான இல்லறம், துறவறம் இரண்டும் ஆண்-பெண் இருவரின் இணைச்சேர்க்கையால் உறுதிபெறுவது என்று அறிவுறுத்துவதோடு அதுவே தமிழர் கண்ட அறம் எனவும் எடுத்துரைக்கிறார். இதனை, "வள்ளுவர் பெருமான் வாக்கின்படி அகம், புறம் இரண்டும் 'திரு' என்றும், அறமும் வீடும் அமையும் நிலையில் ஆண் பெண் இருபாலரும் பாலுணர்ச்சி நீங்கித் தெள்ளியராவர் என்றும் மாற்றம் அடைவதை அறிந்து கொள்ளலாம். இன்பம் என்பது பாலுணர்ச்சியோடு கூடிய அகம் என்றால், அறமும் வீடும் பாலுணர்ச்சி குன்றியும் அற்றும் திகழும் மிக நுணுகிய அக நிலைகளாகும். ஆயினும் பாலுணர்ச்சியில் இவை சேர்வதில்லையாதலின் அதற்குப் புறமாயின. ஆகவே, பாலுணர்ச்சி இன்பம் அகம் எனவும், செல்வம் புறம் எனவும் சொல்லுவதே சிறப்பு!

உயிர் உணர்ச்சிகளாகிய இவ்விரண்டுக்கும் அப்பாற்பட்டதாய், கடந்ததாய், இவ்விரண்டையும் நெறிப்படுத்துவதாய் உள்ளதே அறம் என்பதும், அதன் பயனாகிய வீடு என்பதும் தெய்வ நிலைகள்; செல்வத்துச் செல்வங்கள். செல்வம் புறம் எனப்பட்டதனால், செல்வத்துச் செல்வமாயின. அறம் வீடு என்னும் அருளியல்புகளும் புறம் எனப்பட்டனவே யன்றி வேறில்லை. மற்று அறமும் வீடும் அகத்துள் அகம் என்பதே தெளிவுக்குரியது. 'அறம் புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல்' என்றது அறத்தொடு நிற்றலை உணர்த்தும். அறநிலையை மேற்கொண்டு சிறந்ததாகிய வீடுபேற்றுக்குப் பழகுதல் என்பது இதன் கருத்து. இதில் தலைவன் தலைவி இருவரும் கூறப்படுதலின் மாதர்க்கு வீட்டு நிலை கூறாத சிலருடைய கொள்கை போன்றவை, தொல்காப்பியக் கொள்கையல்ல என்பது உணர்தற்கரியது. இவ்வாற்றால் தமிழ்மொழியில் கூறப்பெறுவன அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களுமே எனவும், அவற்றின் பாலுணர்ச்சியோடு கூடிய வாழ்க்கைத் தொடக்கமாகிய பொருள்வழி இன்பம் என்பதிலிருந்தே அறத்தையும் வீட்டையும் உணர்த்தும் முக்கிய பொருட்பேறுடையதாகித் தமிழ் திகழ்கின்றது! ஆதலால், தமிழ் என்பது அறமேயாதல் தெளிந்து துணியப்படும்" (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், பக். 4-5) என்பதன் வழியாகத் தெளிவுபடுத்துகிறார். தமிழ் என்பதற்கு அறம் என்று பொருள் கொள்வதே சாலச் சிறந்தது, பொருந்துவதாக உள்ளது என்பதற்குத் தரும் விளக்கத்தால் பேராசிரியரின் புதுவிளக்கம் காணும் நோக்கு புலனாகிறது. வீடுபேற்றுக்கு உரியோர் ஆண்களே என்பதனை மறுத்து, அது ஆண்-பெண் இருவருக்கும் பொதுவானது என்ற கருத்தினை விளக்கும் திறனும் சிறப்புடையதாக அமைந்திருக்கிறது. திருவள்ளுவரின் பொதுமை காணும் நோக்கிற்கு மேலும் அணிசெய்வதாக உள்ளது.

**அறமும் கடமையும்**

தனிமனிதன் தன் வாழ்வில் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகளை, அறத்துப்பாலில்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

வாழ்வியற் கடமைகளாகத் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். இதனால் அறம் என்பதனைக் கடமை எனக் கொள்ளல் தகும் என்கிறார் பேராசிரியர் ந.சு. அறம் பூண்டார் என்ற சொல்லாட்சியின் பொருளை விளக்குமிடத்து, பூணுதல் என்பது கடமையை மேற்கொண்டு ஒழுகுதல் என்ற நிலையில் அது மனித வாழ்வின் கடமை எனக் கொள்ளல் ஆகும் என்கிறார். இதனை, "அறம் பூண்டார் (3) இங்கு இருமை என்ற சொல் இம்மை மறுமைகளைக் குறிப்பதுடன் நன்மை-தீமை, அறிவு-அறியாமை, உயர்வு-தாழ்வு, பிறப்பு-இறப்பு முதலாக இரண்டிரண்டாக வரும். இம்மையான வாழ்க்கைக் கூறுகளையும் குறிக்கும். இங்ஙனமே மறுமையையும் சிந்திக்கலாம். இப்பிறவி, மறுபிறவி என்னும் இம்மை மறுமைகளின் இயல்புகளை நன்றாகத் தெரிந்தவர்களே இப்பிறவியில் அவற்றிற்கேற்றபடி பொருத்தமாகக் கடமைகளைச் செய்யமுடியும். ஈண்டு அறம் என்னும் சொல் கடமையை உணர்த்துகிறது. இங்ஙனம் கடமையை மேற்கொண்டவர்களின் பெருமை உயர்ந்தது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 24) என்று கூறுகிறார். இதனை மேலும் விளக்குவதற்காகத் தனது 'தமிழிலக்கியங்களில் அறம், நீதி, முறைமை' என்னும் நூலில் இடம்பெற்றுள்ள பகுதியையும் காட்டுகிறார்.

> **அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் இவற்றில் வரும் செயல் முகமான கடமைகள் பொதுவாக அறச்செயல்கள் என்று கருதப்பெறுகின்றன. இதனால் செய்கை ஒவ்வொன்றும் அறத்தின் வகையாகிறது. அந்த அறச்செய்கைகட்கும் வகைகள் உள்ளன. வகைகட்கு அறத்துப்பாலில் வரும் கடமைகள் முக்கியமானவை" (தமிழிலக்கியங்களில் அறம், நீதி, முறைமை, ப. 62)**

என்று விளக்கம் தருகிறார். மனித வாழ்வில் அறமே எல்லா நிலைகளிலும் உயர்வானது என்பதனையும், அது கடமைகளாக அறத்துப்பாலில் இயம்பப்பட்டுள்ளதும் இதன்வழி தெளிவாகிறது.

**அறமும் மனத்தூய்மையும்**

அறம் என்பது மனத்தூய்மை என்னும் பொருளையும் கொண்டுள்ளதனை பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் இந்நூலின் வழியாக உணர்த்தியுள்ளார். இந்நூலில் மனத்தூய்மையே அறத்தின் சான்றாக அமைவதைச் சுட்டுகிறார். 'மனம் தூய்மை உடையார்க்கு எச்சம் நன்றாகும்' (குறள். 456) என்பது அவர் வாக்கு. மனத்தூய்மை என்பது எண்ணம், சொல், செயல் ஆகிய எல்லாவற்றிலும், எல்லா நிலைகளிலும் இருத்தல் வேண்டும். மனத்தூய்மையுடன் நடத்தலே அறவழிப்பட்ட வாழ்வாக அமைகிறது என்று அறிவுறுத்தவும் செய்கிறார். இதனை, "மனத்தூய்மையின் அடிப்படையில் அமைவதுதான் அறவாழ்க்கையாக இருக்க முடியும். மனத்தூய்மை இல்லையாயின் காதல் வாழ்க்கையால் மனம் பண்படுவதும் இல்லை. பொதுவாழ்க்கையிலும் அந்த மனம் தக்கவாறு பயன்படுவதுமில்லை. தூய்மையற்ற மனம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தானும் பண்படுவதுமில்லை. பிறர்க்கும் பயன்படுவதுமில்லை. தூய்மையே மனத்தின் ஆற்றல். தூய்மை மிகுவதற்கேற்ப மனத்தின் ஆற்றலும் பெருகும். வளர்ந்தோங்கும்; தூய்மையுள்ள மனமே முற்றிலும் பண்படும்; முழுதும் பயன்படும். முழுவாழ்வு வாழும். இந்தத் தூய்மையை விளக்குவதே திருவள்ளுவரின் அறத்துப்பாலின் நோக்கமாகும். அறத்தின் அடிப்படை மனத்தூய்மை என்பார்" (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 18) என்று வள்ளுவர் வாய்மொழிவழி விளக்குகிறார். இதனால் மனத்தூய்மையே அறவாழ்வின் சான்றாக விளங்கும் திறன் தெளிவாகிறது.

மனத்தின் வழியாகப் பிறப்பது எண்ணம். எண்ணமே சொல்லாகவும், செயலாகவும் உருவெடுக்கிறது. மனத்தூய்மையுள்ளவழி எண்ணம் தெளிவாகிறது. தெளிவான எண்ணத்தால் உயர்வான சொற்கள் பிறக்கின்றன. நல்லெண்ணமே நற்சொல்லாகவும் நற்செயலாகவும் உருவெடுக்கிறது. ஆதலால், 'அறம்' என்பது இம்மூன்றின் வழிப்பட்டதுதான் என்பதனை, "அறம் என்பது யாது? செயலா? சொல்லா? எண்ணமா? என்பது ஒருவித ஐயம். வள்ளுவர் பெருமான் இம்மூன்றும் அடங்கியதேயாகும் என்ற கருத்துடையவர். இம்மூன்றனுள்ளும் செயலுக்கும் சொல்லுக்கும் எண்ணமே அடிப்படையாதலால், எண்ணத்தின் தூய்மை முதன்மையானது. ஆகையால் மனதில் மாசு இல்லாத தன்மை பெற வேண்டும். அறம் அவ்வளவே. மனமாசு நீங்காமல் செய்யும் செயலும் சொல்லும் சொல்லும் வீண் ஆரவாரமானவை; அறம் அல்ல." (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 30) என்று சொல்லி, அறம் என்பது யாது என்பதனையும், அறமல்லாதன யாவை? என்பதனையும் வரையறுத்துக் கூறுகிறார்.

**அறமும் செய்கையும்**

மனத்தின் வழியாகப் பிறக்கும் செய்கையே அறம் என்ற பொருள்படும் என்பதனை, "மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன் என்பதில் அறன் என்று வரும் சொல் செய்கை என்னும் பொருளுக்கு உரியது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 31) என்று எடுத்துரைத்து, எண்ணத்தின் வெளிப்பாடாக அமையும் மனமாசுகளான, "பொறாமை, அவா, வெகுளி, இன்னாச்சொல் இந்த நான்கையும் கடிந்து நடப்பது அறமாகும்." (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 31) என்பதில் அறம் என்பதற்குச் செய்கை என்ற பொருள் விளக்கம் தருகிறார்.

**அறமும் நன்றும்**

நல்லன ஆற்றுதல் அறத்தின் பாற்படும் என்பதால் அறம் என்ற சொல்லுக்கு நன்று என்ற பெயரும் உண்டு என்று தெளிவுறுத்துகிறார். இதனை, "அறம் என்ற சொல்லுக்கு 'நன்று' என ஒரு பெயர் உண்டு. 'வீழ்நாள் படாமை நன்று ஆற்றின்' (38) என்னும் குறட்பாவில் இது குறிக்கப்பெறுகின்றது. இதிலிருந்து நோக்கினால் நற்செய்கைகளைத் தான் அறம் என்று

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

என்னும் கருத்து தெளியப் பெறும். அறம் அழியாதது; இதைப் 'பொன்றாத்துணை' (35) என்பர் வள்ளுவர் பெருமான்." என்பதன்வழியாக உணர்த்துகிறார். நன்று என்பது நன்மை என்ற பொருளில் நிற்றலால் நன்மையால் விளைவன யாவும் அறத்தின் பாற்பட்டதே என்பதே ந.சுப்பு ரெட்டியாரின் கருத்தாக உள்ளமை தெளிவாகிறது.

**அறத்தின் அளவுகோல்**

அறம், 'இத்தன்மையது' என்று எவ்வாறு விளக்கமுடியாதோ, அதேபோன்று அறத்தை எந்தவொரு அளவீடுகளாலும் அளந்துகாட்ட இயலாது என்கிறார் பேராசிரியர்.

> **வாழ்க்கையில் அறியாமை காரணமாகக் கொள்ளப்படும் உயர்வு தாழ்வுகளை வைத்து அறத்தை அளந்தறியக் கூடாது. அகத்தே எண்ணும் எண்ணங்களின் தூய்மையாலும் நெஞ்சின் இன்ப, துன்ப உணர்வுகளாலும் அறத்தை அறியக்கூடுமே அல்லாமல் புறத்தே உள்ள உயர்வு தாழ்வுகளால் அறியமுடியாது (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.** 33)

என்று குறிப்பிடுகிறார். அறம் அகத்தின் வழிப்பட்டது என்பதும், புறத்தே தோன்றும் நிகழ்வுகளால் அது அளந்து காட்ட இயலாதது என்பதும் இதன்வழியாகத் தெளிவாகிறது.

**அறமும் இன்பமும்**

இன்பம் என்பது இத்தன்மைத்து என எவராலும் உணர்த்தவியலாது. அத்தகு அருவப் பொருளான இன்பத்தை நோக்கியே உயிரினங்கள் தம்மை இயக்கிக் கொண்டுள்ளன. திருவள்ளுவர் வாழ்வின் எல்லா நிலைகளிலும் அறத்தைப் பின்பற்றி நடப்பதன்வழியாகவே இன்பநிலை எய்தமுடியும் என்று வலியுறுத்துகிறார். "அறத்தான் வருவதே இன்பம் என்பது வள்ளுவரின் அசைக்கமுடியாத முடிபு." (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 35) என்பதால் இன்பத்திலும் அறமே முதன்மையானது என்பது வலியுறுத்தப்படுகிறது. ஒருவரது மனத்தூய்மையே அவரது மனச்சான்றாக அமையத் தக்கது. ஆதலால், மனச்சான்றின்படி நடப்பவர்க்கு மனமே இன்பத்தை விளைவிக்கும் நிலையினதாக அமைந்திருக்கும் என்பதனை, "அறம் ஒன்றே மனச்சான்றை மகிழ்விக்கும். அந்த மனச்சான்றின் மகிழ்ச்சியே உண்மையான இன்பமாகும். (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 35) என்று எடுத்துரைக்கிறார். இவ்வாறு பல்வேறு பொருள்களைச் சுட்டி, அவற்றின் வழியாக வள்ளுவத்தின் சிறப்பினையும் அறத்தின் பெருமையினையும் இந்நூலில் உணர்த்த முயன்றிருப்பது தெளிவாகிறது.

**அறம்-பொருள்-இன்பம்-வீட்டுணர்வுக்குச் சான்று**

அறம், பொருள், இன்பம், வீடு என்பதனை இந்நூலில் மிகஎளிய முறையில் விளக்கியுள்ளார். எல்லோரும் அறிந்த வாழை மரத்தைக் காட்டி அதன்வழியாக அறம்-பொருள்-இன்பம்-வீட்டுணர்வினை விளக்குவது சிறப்பு. வாழை ஏனை எல்லா உயிர்களையும்விட ஆறறிவும் அற உணர்வும் உடைய மக்கள் இனத்திற்குப் பேருதவியாக இருத்தலால் உயர்ந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இனத்துடன் சேரும் அருகதை உடையதாகத் திகழ்கிறது. இத்தகைய பெருந்தகுதியை இயற்கையிலேயே பெற்றுள்ள வாழை மரம் மக்கள் இனத்திற்கு வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருளுக்கும் உள்ளுறையாகத் திகழ்வதையும் குறிப்பாற் புலப்படுத்துகின்றது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 66) என்று சொல்லி, வாழையின் சிறப்புகளை எண்ணி வியக்கிறார்.

**இன்பத்திறம்**

இன்பம் என்பது காட்சிப்பொலிவால் தோன்றும் மெய்ப்பாட்டுணர்வு என்பதனை, இன்பம் : வாழையின் தோற்றமே இன்பத்தின் உள்ளுறையாகும். அது வழுவழுப்பாய், ஒழுங்காய், நீண்டு பசிய இலைகளை உடையதாய் மிக அழகாய் அழகிய நங்கையைப் போல் காட்சி அளிக்கின்றது. அதன் அழகு கண்டார் கண்ணைக் கவரும் திறத்ததாய்த் திகழ்கின்றது. ‘தகையணங்கு உறுத்தல்’ என்பதிலுள்ள குறள் பாக்களைப் படிக்கும்போது நம்மனத்திலும் எழும் காட்சி உணர்வுகளும், வாழையைக் காணும்போது உண்டாகும் உணர்வுகளும் ஏறக்குறைய ஒன்றாக இருப்பதை ஒருவாறு உணரலாம். ‘மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்’ (குறள். 65) என்ற மொழிக்கேற்ப தொட்டுணர்வுக்கு இதமாக இருப்பதை உணரலாம். இவையே வாழையின் இன்பத்திறன். (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 67) என்று காட்டுகிறார். இதில் இன்பம் என்பது உள்ளத்தில் ஏற்படும் உருவஅமைதி எனப் பொருள் விளக்கம் தந்துள்ளார்.

**பொருள் திறம்**

பொருள் ஈட்டி வாழ்தல் என்பது, தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் நிலை ஆகும். தனக்கென வாழாது பிறர்பயன்பட வாழும் அறவாழ்க்கை வாழையில் மட்டுமே உள்ளது என்பதை,

> **வாழையில் கிடைக்கும் தண்டு, இலை, பூ, காய், கனி முதலியவை அனைத்தும் வாழையின் பொருள் அதிகாரம். வாழையின் எல்லாப் பொருள்களும் மக்களுக்குத் தேவைப்படுகின்றன. தன்னுடைய பொருள்கள் அனைத்தையும் தனக்காகவோ, தன் கன்றுகளுக்காகவோ ஒரு சிறிதும் வைத்துக் கொள்ளாமல் முழுவதையும் பிறர்க்காகவே அஃதாவது உலகுக்காகவே வழங்கிவிடுவது அதன் ஒப்பற்ற தனிச்சிறப்பாகும். (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 68)**
>
> **தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு**
> **வேளாண்மை செய்தற் பொருட்டு (குறள். 348)**

என்ற பொய்யாமொழிக்குச் சான்றாகத் திகழ்வது வாழை. வாழையில் பயன்படாத பொருள் எதுவுமில்லை. முற்றிலும் பயன்பட்டு வாழை, இங்ஙனமே பொருள்திறனைப் புலப்படுத்துகின்றது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 69) என்று எடுத்துரைக்கிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இதனால் பொருள் செயல் வகை என்பது பிறர் பயன்பட வாழ்வது என்பது இவ்விளக்கத்தால் தெளிவாகிறது.

**அறத்திறம்**

அறம் என்பது ஒழுங்குமுறை எனப் பொருள் கொண்டு, "வாழையின் அறத்திறமோ உள்ளத்தை உருக்கி ஒருங்கே கொள்ளை கொள்ளுகின்றது. அறத்தின் திறம் என்பது இங்கு ஒழுங்குமுறை. கரவற்ற ஒழுங்கு முறை. …வாழை வளைவு ஒழுங்கு; அடுக்கு ஒழுங்கு; வரிசை ஒழுங்குகளோடு நேர்மை ஒழுங்கிலும் மேம்பட்டு அறத்திறம் என்னும் ஒழுங்குமுறையில் தன்னிரகற்று விளங்குகிறது." (ப. 70) என்று விளக்கியுள்ளார்.

**வீடுபேற்றுத்திறம்**

உயிரினங்களில் வாழை மட்டுமே வீடுபேறு அடையும் தன்மை கொண்டதாக விளங்கும் தன்மையினைப் பின்வருமாறு விளக்குகிறார். வாழை மரத்தில் வீட்டுத் தன்மை அமைந்திருப்பதை எண்ணும் தோறும் வியப்பினை விளைக்கின்றது. வீடு என்பது விடுதலை; பற்று விடுதலை. பற்று என்பதை ஒரே சொல்லால் சொன்னால் தன்னலம் என்று சொல்லிவிடலாம்.

> **வாழையின் எல்லாப் பொருள்களும் நன்முறையில் பயன்பட்டு விடுதலை பெறுகின்றது. விடுதலையே வீட்டுணர்ச்சி என்பது. வீட்டுணர்ச்சி மிக்கது வாழை. இதனால் வாழை மங்கலமுடையதாய் நிலைத்த இல்லறப் புகழும், அந்நிலையே பேராத இயற்கையுடையதாய்ச் சென்றே புகும் கதியின்றித் தான் நின்று வளர்ந்த இடத்திலேயே நிலை கொண்ட துறவறத்து வான்புகழும் பெற்றுச் சிறந்து திகழ்ந்து அடியார் மரபில் வாழை வீடு பெறுடையதாகின்றது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 72)**

என்றவாறு அறம்-பொருள்-இன்பம்-வீடு என்பதற்கு வாழையைக் காட்டி விளக்கும் திறம் வெகுசிறப்பான நிலையில் அமைந்திருக்கிறது. பேராசிரியரின் சான்று காட்டி விளக்கும் திறனுக்குத் தக்க சான்றாக இப்பகுதி அமைந்திருக்கிறது.

**முடிவுரை**

திருக்குறள் விளக்கநிலைகள் பல திறத்தன. அவற்றுள் ஒன்றாகவே பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியாரின் 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' நூல் விளங்குகிறது. இந்நூலின் பல பகுதிகள் வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனையைக் காட்டுவதோடு, பேராசிரியரின் வாழ்வியல் சிந்தனையையும் இணைத்துக் காட்டுவதாக அமைந்திருக்கிறது. பேராசிரியரின் வாழ்வியலோடு இணைந்து பயணித்தது திருக்குறளே என்பது அவரது விளக்கநிலைகளால் தெளிவாகிறது. பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு சூழல்களில் எழுதப்பெற்ற நூலாக இந்நூல் திகழினும் திருக்குறளின் பொருளை நுணுக்கமாக விளக்குவதாக இந்நூல் அமைந்துள்ளது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சங்க அகம், புறம் என்ற மரபின் நீட்சியாகவே திருக்குறள் அறம், பொருள், இன்பம் ஆகியன வகுத்துக் கொள்ளப்பட்டதைக் காட்டுவதோடு, இவை யாவற்றிலும் அறமே முதன்மையான இடம் பெற்றுள்ளதனைக் காட்டுகிறார். மேலும், அறம் என்பது திருக்குறளில் தமிழ், கடமை, செய்கை, நன்றாற்றல் என்ற பொருள்களில் திருக்குறளிலேயே இடம் பெற்றுள்ளதனைக் காட்டியுள்ளார். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் யாவற்றிலும் அறமே நிலையாக உள்ளதனைக் காட்டியுள்ள திறமும், அதற்குத் தக்க சான்றுகள் காட்டி விளக்கமளிக்கும் திறனும் சிறப்பாக அமைந்திருக்கின்றன. திருக்குறள் வாழ்வியல் சிந்தனைகளில் மேலும் பல ஆய்வுக்களங்கள் உள்ளதனையும் சிந்திப்பார்க்குப் பல விளக்கங்கள் மேலும் கிடைக்கும் என்பதாகவும் இந்நூற்கருத்துகள் அமைந்துள்ளன.

**குறிப்புகள்**

[1] க.த. திருநாவுக்கரசு. *திருக்குறள் நீதி இலக்கியம்.* சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, முதற்பதிப்பு 1977.

[2] கழகப் புலவர் குழுவினர். *நன்னூல் - மயிலைநாதர் உரை.* கழக வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு 1968.

[3] *சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி.* சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, திருத்தப்பட்ட பதிப்பு, 1982.

[4] தமிழண்ணல். *தொல்காப்பியம் பொருளதிகாரம்.* மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, ஆறாம் பதிப்பு, 2019.

[5] ந. சுப்பு ரெட்டியார். *தமிழ் இலக்கியங்களில் அறம் - நீதி – முறைமை.* தேன்மழைப் பதிப்பகம், ஆலந்தூர், சென்னை, முதற்பதிப்பு 1988.

[6] ந. சுப்பு ரெட்டியார். *வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்.* அவ்வை, அசோக் நகர், சென்னை, முதற்பதிப்பு 2004.

[7] பரிமேலழகர் (உ.ஆ.). *திருக்குறள்.* பாரி நிலையம், சென்னை, ஆறாம் பதிப்பு 2019.

[8] பொற்கோ, (உ.ஆ.). *திருக்குறள் உரைவிளக்கம். தொகுதி-1*, பூம்பொழில் வெளியீடு, சென்னை, சென்னை, சீராக்கப்பதிப்பு 2008.

[9] மு.வை. அரவிந்தன். *உரையாசிரியர்கள்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1995.

**References**

[1] K.T. Thirunavukkarasu. *Tirukkural Needhi Ilakkiyam*. Madras University, Madras, First Edition 1977.

[2] Kazhaga Pulavarkal. *Nannul - Mayilainathar Urai*. Kazhagam Publications, Chennai, First Edition 1968.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[3] N. Subbu Reddiar. *Aram-Neethi-Muraimai*. Thenmazhai Publications, Alandur, Chennai, First Edition 1988.
[4] N. Subbu Reddiar. *Valluvarin Vazhviyal Chinthanaikal*. Avvai, Ashok Nagar, Chennai, First Edition 2004.
[5] *Tamil Lexicon*. University of Chennai, Chennai, Revised Edition, 1982.
[6] Tamilannal. *Tolkappiyam Porulathikaram.* Meenakshi Book Stall, Madurai, Sixth Edition, 2019.
[7] Parimelazakar (U.A.). *Thirukkural.* Pari Nilayam, Chennai, Sixth Edition 2019.
[8] Porko, (U.A.). *Tirukkural Text Commentary*. Volume-1, Poompozil Publication, Chennai, Revised Edition 2008.
[9] Mu.Vai. *Aravindan. Uraiyasiriyarkal.* Manivaskar Publications, Chennai, Third Edition 1995.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# ந. சுப்பு ரெட்டியாரின் கல்வி உளவியல்

## Professor N. Subbu Reddiar's Educational Psychology

**லோ. விண்ணரசி**, முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வுத்துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**L.Vinnarasi**, Ph.D Research scholar PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-8365-1575**
**DOI: 10.5281/zenodo.7275488**

### Abstract

*Educational psychology in progressive educational psychology is the science of introducing psychological principles and roles into the processes and procedures followed in education, the science of describing human behaviour and the nature of human behaviour. Psychology is a branch of psychology that describes the relationship between educational psychology and the teaching methods of the student learning environment. Educational psychology has many dimensions making sustainability and achievement rectifying the likes and dislikes and the flaws found in methodology, emotions, attitudes, etc. It determines the understanding of students' behaviors and stimulates the student's interest in learning. The basic purpose of the article is to assist the teacher with the help of Professor Na. Subbu Reddiar's educational psychology has long been regarded as how the student absorbs the knowledge and attitudes he had seen and the applicable principles in educational principles that Prof. Reddiar has quoted. Psychology and the limits of educational psychology are detailed by him. Prof. Reddiar as a psychologist says that educational psychology is the study of the behaviour of students as appropriate to the educational environment that fosters one's learning experiences from birth to old age. According to him, educational psychology covers the whole range of behavioral persona related to education. Hence, this study explains the points of educational psychology rendered by Prof. Reddiar.*

**Keywords:** Professor N. Subbu Reddiar, Educational Psychology, Students, Teachers.

### ஆய்வுச்சுருக்கம்

*முற்போக்குக் கல்வி உளவியலில் வருகின்ற கல்வி உளவியல் என்பது கல்வியில் மேற்கொள்ளப்படும் செயல் முறைகளிலும், பின்பற்றப்படும் வழிமுறைகளிலும் உளவியல் கோட்பாடுகளையும், விதிமுறைகளையும் புகுத்தி கற்றல் – கற்பித்தலை மேம்படுத்தல் மற்றும் மனித நடத்தையைப் பற்றி விவரிக்கும் அறிவியலாகவும் உளவியல் இருக்கின்றது. உளவியலின் ஒரு பிரிவே கல்வி உளவியல் ஆகும். இது மாணவர் கற்கும் சூழல், கற்பிக்கும் முறை ஆகிய மூன்றுக்குமுள்ள உறவை விவரிக்கிறது.கல்வி உளவியல் பல்வேறுபட்ட பரிமாணங்களை உடையது. கல்வி கற்கும் மாணவரின் இயல்பு கற்றல் – கற்பித்தல் சூழ்நிலை, கற்றல் – கற்பித்தல் பொருள்கள், கற்றலை எளிமையாக்கும் முறைகள் போன்ற காரணிகளை நன்கு அறிந்து கொள்ள கல்வி உதவுகின்றது.மனப்பான்மைகள் போன்றவற்றைத் உணர்த்து*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*கொள்கிறார்.விளையாட்டு முறை, செயல்முறையில் கற்றல், கதை, பாட்டு போன்ற பல்வேறு கற்றல் – கற்பித்தல் முறைகளை மாணவர் விரும்பும் வண்ணம் அவர்களின் தேவைக்கேற்ப கையாளுகிறார். ஆனால் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் கல்வி உளவியல் என்பது நீண்ட கலமாக மாணாக்கன் தான் கண்ட அறிவையும், மனப்பான்மைகளையும், எப்படியாவது உட்கொள்வதாகவும், கல்வி அவனுக்குள் ஊற்றப்பெறுவதாகவும் கருதப் பெற்றது. மாணக்கனின் உள்ளம் ஒரு வெற்றிடமாகவும் அதை ஆசிரியர் அறிவுத் துணுக்குக்களால் நிரப்புவதாகவும், கொள்ளப்பெற்றது.ஊட்டக்கூடிய பொருளுமன்று.அதை அவனே அடைய வேண்டும் என்ற அடிப்படைக் கூறுகளை பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் ஆய்வு முன்னோட்டமாய் பயன்படுகிறது. அதாவது கல்வியால் முன்று அடிப்படைக் கூறுக்கள் (தனியாள், சூழ்நிலை, இடைவினை) சொல்லப்படுகின்றது.மற்றும் உளவியலும் ஓர் அறிவியல், உளவியலுக்கும், கல்வி உளவியலுக்கும் உள்ள தொடர்பு உளவியல் நோக்கங்கள், மற்றவர்களை சரியாக, உணர்ந்து கொள்ள உதவுதல். அறிவின் பொருட்டே அனைத்தையும் அறிதல், உளவியலறிஞன் மனிதனை எங்ஙனம் காணகின்றான், கல்வி உளவியல் இயல்பு/தன்மை, கல்வி உளவியலின் பொருள், கல்வி உளவியலின் வரம்பு/எல்லை என்னும் தலைப்புகளைக் கொண்டு விளக்குகின்றது. “ஸ்கின்னர், கல்வி உளவியல் என்பது கல்வியைப்பற்றி படிக்கும் அறிவியல் ஆகும்.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், கல்வி உளவியல், மாணவர்கள், ஆசிரியர்கள்.

**முன்னுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய **“கல்வி உளவியல்”** என்னும் நூல் இப்பொருள் பற்றி தமிழில் வெளிவந்துள்ள நூல்களில் சிறந்ததொன்று.இன்றைய சூழ்நிலையில் விஞ்ஞானம் போன்ற துறைகளில் தமிழில் நன்கு எழுதப்பட்ட நூல்களுக்கு தேவையதிகம்.ஆனால் இம்மாதிரி நூல்களை நல்ல தமிழில் எழுதுவது அவ்வளவு எளிதான காரியமல்ல. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் எழுதியுள்ள இந்நூலின் முலம் அந்தக் குறையை ஓரளவு நிவர்த்தி செய்து கொள்ள முடிகின்றது.இந்நூல் **“கல்வி உளவியல்”** என்ற பெயரைத் தாங்குகின்ற போதிலும் பொதுவாக பெற்றோர்கள், பொதுமக்கள் ஆகியாவருமே படித்துப் பயன்பெறக்கூடியது.பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்களின் எளிய நடையும், நகைச்சுவையும் இப்புத்தகத்தைப் பலருக்கும் பயன் படச் செய்கின்றன.

**கல்வி உளவியலின் வரையறை (Definition of Educational Psychology)**

பள்ளி வகுப்பறையே கல்வி உளவியலாளர்களின் ஆய்வுக்கூடம் ஆகும்.கற்றல்,

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கற்பித்தல், பயிற்சி அளித்தல் போன்றவற்றில் எதிர்படும் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முற்படுவதே கல்வி உளவியல் ஆகும். கல்விச் சூழலுக்குத் தகுத்தாற்போல மாணவர்களிடையே ஏற்படும் நடத்தையைப் பற்றிக் கற்பதுதான் கல்வி உளவியல் விளக்கம் என எளிமையாகக் கூறலாம்.“பிறப்பிலிருந்து முதுமை வரைக்கும் ஒருவரது கற்றல் அனுபவங்களை விவரிப்பது தான் கல்வி உளவியல் ஆகும்”. “கல்வி உளவியல் கல்வியுடன் சம்பத்தப்பட்ட நடத்தை மற்றும் ஆளுமைத் திறனில் முழு அளவையும் உள்ளடக்கியது”. ”கல்வி உளவியல் என்பது கல்வியைப் பற்றிப்படிக்கும் அறிவியல் ஆகும்”

> **கல்வி உளவியல் என்பது கல்வியல் மேற்கொள்ளப்படும் செயல் முறைகளிலும், பின்பற்றப்படும் வழிமுறைகளிலும் உளவியல் கோட்பாடுகளையும், விதிமுறைகளையும் புகுத்திக் கற்றல் – கற்பித்தலை மேம்படுத்துதல் ஆகும். என்று கோலஸ்னிக் (kolasnik) என்னும் இரஷ்ய அறிஞர் கூறுகிறார். (முற்போக்கு கல்வி உளவியல், ப. 2.)**

நீண்ட காலமாக, மாணாக்கன் தான் கண்ட அறிவையும் மனப்பான்மைகளையும் எப்படியாவது உட்கொள்வதாகவும், கல்வி அவனுக்குள் ஊற்றப்பெறுவதாகவும் கருதப் பெற்றது.மாணக்களின் உள்ளம் ஒரு வெற்றிடமாகவும், அதை ஆசிரியர் அறிவுத் துணுக்குக்களால் நிரப்புவதாகவும் கொள்ளப் பெற்றது.கல்வி என்பது நாம் ஒருவனுக்கு ஊற்றக்கூடிய பொருளன்று; ஊட்டக்கூடிய பொருளுமன்று அதை அவனே அடைய வேண்டும்.

**கல்வியில் மூன்று அடிப்படைக் கூறுகள் உள. அவை;**

- தனியாள் (Individual)
- சூழ்நிலை (Environment)
- இடைவினை (Interaction)

தனியாள் சூழ்நிலையால் பாதிக்கப் பெறுகின்றான் சூழ்நிலை அவனை மாற்றுகின்றது. அவன் இடையறாது இயற்றும் இடைவினைகளால் சூழ்நிலையும் மாற்ற பெறுகின்றது. இந்த இடைவினைகளால் தான் கல்வி ஏற்படுகின்றது. உளவியல் என்பது உயிரியின் (organism) மனச்செயல்களை வரையறுத்துக் கூறும் ஓர் அறிவியல் துறை. உயிருள்ள ஒரு மனிதன் மாறிமாறி வரும் உலகிலுள்ள பொருள்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும் ஏனையோருக்கும் இடைவினையாற்றுவதைப் படிப்பதே உளவியலாகும்.

**உளவியலும் ஓர் அறிவியலே**

அறிவியல் என்பது ஓர் ஒழுங்காக முறையில், ஒருங்கமைத்த – நன்கு சோதிக்கப்பெற்ற – செய்திகளின் தொகுப்பு.அது ஒரு குறிப்பிட்ட துறையையோ அல்லது ஒரு சிலவகைத் தகவல்களையோ, நிகழ்ச்சிகளையோ பற்றி விரித்து உரைக்கும். எடுத்துக்காட்டாக – பௌதிகம் (Physics) ஆற்றலைப்பற்றி, அஃதாவது வெப்பம், ஒளி, ஒலி,மின்சாரம்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

போன்றவற்றின் சில மெய்மைகளைப்பற்றி எடுத்துரைக்கின்றது. அறிவியல் முறையில் பல படிகள் உள்ளன.கட்டுப்பாட்டுக்குப்பட்ட உற்றுநோக்களால் தகவல்களைத் திரட்டி அவைகளை ஒரு பிரச்சனைபோல் கூறுதல் முதற்படியாகும், இவற்றைக் கொண்டு கருது கோள்கள் (hypothesis).அமைத்துக்கொள்வது இரண்டாவது படியாகும்.பொதுவிதிகளை புதிய செயல்களில் அல்லது நிகழ்ச்சிகளில் பொருத்திப் பார்த்தல் ஐந்தாவது படியாகும். சூழ்நிலைக் கேற்றவாறு தனிப்பட்ட உயிரியின் செயல்களைப் பற்றிய தகவல்களே இத்துறை விரித்துரைக்கும் பொருள் ஏனைய அறிவியல் துறைகளில் போலவே இத்துறையிலும் தகவல்கள் கட்டுப்பாட்டுக்குப்பட்ட உற்று நோக்கலால் திரட்டப் பெருகின்றன.

**உளவியலுக்கும் கல்வி உளவியலுக்கும் உள்ள தொடர்பு**

உளவியல் என்பது உயிரிகளின் நடத்தையையும், அவை எவ்வாறு பல்வேறு விதமாக மாறும் இயல்புள்ள தூண்டல்களுக்கு எற்றவாறு எதிர்வினைகள் புரிகின்றன என்பதையும் விரித்துறைக்கும்நூலாகும். அது மக்கள் நடத்தையையேயன்றி, பிராணிகளின் நடத்தையும் எடுத்துக்கூறும். ஆகவே உளவியல்வல்லார் எலிகள், பூனைகள், வாலில்லாக் குரங்குகள் (Chimpanzee) போன்றவை எவ்வாறு சிக்கறைகளில் ஒடுகின்றன என்பது பற்றியும், அது போன்ற செயல்கள் புரிவதுபற்றியும் சோதனைகள் நடத்துவதில் அதிகக் காலத்தைச் செலவிடுகின்றனர்.

கல்வி உளவியல் ஒரு வகை நடைமுறை நூல் பயன்முறை உளவியல் (Applied psychology) பொது உளவியலில் கண்ட உண்மைகள் கல்வித்துறையில் கையாளப்பெற்றன. இதனால் கற்பவர்களின் இயல்பும் செயல்களும் விளக்கம் பெற்றன. இதனால் அது கற்றலுக்கும் பயிற்றலுக்கும் உரிய உளவியல் ஆயிற்று.சில காலமாகச் செழித்தோங்கித் தனித்துறையாய்ச் சிறப்புற்று வருகின்றது. கல்வி உளவியல் இன்று குழந்தை உளவியல் குமாரப்பருவ உளவியல் மனநலத்துறை, சமுக உளவியல் ஆகிய துறைகளினின்றும் பல தகவல்களைப் பெறுகின்றது.பொது உளவியலோடு வைத்து ஒப்பிட்டால், கல்வி உளவியல் அண்மையில் தோன்றியது என்பது தெளிவாகும். மக்கள் ஆதியிலிருந்தே ஒருவரையொருவர் கவனிக்கும் திறனுடைராயிருந்தனராதலின் உளவியலும் மிகத் தொன்மை வாய்ந்தது. ஆனால் கி.பி. 1879இல் வில்ஹெல்ம்வுண்ட் (Wilhelm Wundt) லீப்ஸிக் பல்கலைக்கழகத்தில் உளவியல் ஆராய்ச்சி நிலையத்தைத் தொடங்கிய நாள் தொட்டு ‘அறிவியல்’ சிறப்பு கிடைத்தது.

**உளவியலின் நோக்கங்கள்**

மக்கள், விலங்குகள் ஆகியவற்றின் செயல்களைப் பற்றிய விவரங்களை ஒழுங்காகவும், திட்டமாகவும் முற்றிலும் வரையறுத்து விளக்க முயல்வது உளவியல். நம் முடைய நடத்தையை அறிந்து அதன்மேல் ஆட்சிகொள்வது ஒன்று: பிறருடைய நடத்தையை அறிந்து அதன் மேல் ஆட்சி கொள்வது மற்றொன்று: நம்முடைய நடத்தையையும் பிறருடைய நடத்தையையும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அவற்றின் பொருட்டே அறிதல் இன்னொன்று; மக்களின் இயல்பை அறிந்ததன் மூலம் சமூகப் பிரச்சனைகளைத் தீர்ப்பது பிறிதொன்று: உளவியலறிஞனுக்கு மனிதன் எவ்வாறு தோன்றுகின்றான் எனப்தை அறிவது வேறொன்று: பயிற்றலில் ஆசிரியருக்கு மிகவும் பயன்பட்டு அதற்குத் துணையாக நிற்பது நாம் அறிய வேண்டியதொன்று இவற்றைச் சற்று விரிவாக ஆராய்வோம். தன்னைப் பற்றிய மெய்யறிவு உண்டாதல்; தன்னைப் பற்றிய மெய்யறிவு மிகவும் இன்றியமையாதது. ஒவ்வொருவருக்கும் முக்கியமாக வேண்டப் பெறுவது நமது வாழ்க்கைத்தொழிலும் நிலையும் எங்ஙனமிருப்பினும், வாழவேண்டியவர்கள் நாம் என்பது ஒருநிலை மிகச் சிக்கலான தனிவீற்றினை (Individulity) கொண்ட நாம் எண்ணங்களிலும் உணர்ச்சிகளிலும்; நடத்தையிலும் வேறுபடுகின்றோம். உளவியல் என்பது பொதுவனை முறைகளை பற்றிக் கூறும் ஒரு துறை அதனால் நம் சொந்தப் பிரச்சனைகளுக்கு உளவியலைக் கொண்டு தீர்வும் விளக்கமும் காண்பதென்று இயலாதொன்று.எனினும் எண்ணம், உணர்ச்சி, நடத்தை போன்றவற்றைப் பற்றிப் படிப்பதனால் அறிந்துகொள்ளுங் கருத்துக்களை நமது சொந்தப் பிரச்சனையிலும் பயன்படுத்தலாம்.

**கற்பித்தலில் உளவியல் கொள்கைகள் (Psychological Principles in Teaching)**

> **பாடப்பொருள் பகுதியிலிருந்தும், கற்றல் மற்றும் கற்பித்தலுடன் தொடர்புடைய நீண்ட அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட சோதனை முடிவுகளிலிருந்தும் கல்வி உளவியல் கொள்கைகள் உருவாக்கப்படுகின்றன. (முற்போக்கு பயிற்று முறைகள், ப - 227)**

என்று ஆசிரியர் கூறுகிறார் .உளவியல் கொள்கைகளை முற்போக்கு பயிற்றுமுறைகள் மூலம் கற்பித்தல் மற்றும் கற்றல் தொடர்புடைய அனுபவத்தை மாணவர்கள் பெறமுடியும்.

**மற்றாவர்களைச் சரியாக உணர்ந்துகொள்ள உதவுதல்**

மாணாக்கர்களில் சிலர் அதிகம் உழைக்காமலேயே குறைந்த முயற்சியல் உயர்ந்த மதிப்பெண்கள் பெறுவதற்கும்.வேறு சிலர் எவ்வளவு வருத்தி உழைத்தாலும். தேர்ச்சியடையாமல் இருப்பதற்கும் காரணம் என்ன? இவ்வளவு வேற்றுமை ஏன் காணப்படுகின்றது? உலகிலுள்ள பல்வேறு மக்களிடையே காணப்பெறும் பல்வேறுபட்ட அனுபவங்கள், கருத்துக்கள், உணர்ச்சிகள் முதலியவற்றிகுக் காரணம் யாது? அவர்களது பிறப்பிலேயே இவ்வேற்றுமைகள் அமைந்திருந்தனவா? அல்லது அவர்கள் வாழும் சூழ்நிலை காரணமாக அவை ஏற்பட்டனவா? சமுகத்திலுள்ள மனிதர்களின் நடத்தை பல்வேறு விதமாகக் காணப்பெறுவதற்குக் காரணம் என்ன? என்பன போன்ற விலைக்களுக்கு விடை காண உளவியல் துணைசெய்கின்றது.

**அறிவின் பொதுவே அனைத்தையும் அறிதல்**

மனிதன் அறிவுள்ளவன், பயனுக்காகச் சிலர் செய்திகளைஅறியினும் அறிவுக்காகவும்

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

செய்திகளை அறியும் அவாவுள்ளவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். அறிவுத் தினவினைப் போக்கிக் கொள்ள அவ்வாறு செய்கின்றனர். எப்பொழுதாவது இவை பயன்படும் என்ற நம்பிக்கையால் தம்முடைய நடத்தையையும் பிறருடைய நடத்தையையும் கூர்ந்து ஆராய்கின்றனர்.தனியாட்கள் எவ்வாறு சூழ்நிலைக் கேற்பத் துலக்க முறுகின்றனர் என்பதைத் தெளிவாக அறிதல் வேண்டும் என்று அறிவியல் உளவியல் அறிஞர்கள் விழைகின்றான்.

சமூகப் பிரச்சினைகளை அறிவியல் முறையில் ஆராய்ந்து தீர்வு காண்பதற்கு உளவியல் உண்மைகள் பயன்படுகின்றன.இத்துறை இன்று, **"சமூக உளவியல்"** என்ற ஒரு தனித்துறையாகவே வடிவு பெற்றுள்ளது.அண்மையில் உளவியலறிவின் பயனாலும், ஆராய்ச்சியாலும், பொருளியல், அரசியல், வரலாறு, சமுகவியல் மனிதவியல் போன்ற பல சமூகப் பிரச்சனைகளுக்கு விளகமும் தெளிவும் ஏற்பட்டுள்ளன. சமூக நடத்தை என்பது கற்றுக் கொண்ட நடத்தையாகும் ஒவ்வொரு குழந்தையும் சமூகத்தினிடையே பிறந்து. சமூகத்தினிடையே வாழ்வதால் அதனுடைய நடத்தை சமூகத்திகம் உண்டாகும் பலவிதமான மாறுதல்களால் அமைக்கின்றன்.

மனிதனுடைய நடத்தை அவன் வாழும் குடும்பம், சாதி சமூதாயம் ஆகியவற்றால் வரையறுக்கப் பெறுகின்றது.இவ்வரையறை ஒழுங்கு செய்யாத வரையறை ஒழுங்கு செய்த வரையறை என இரு வகைப்படும்.ஒழுங்கு செய்யாத வரையறை மனிதனுடைய வலிமைக் குறைவை அடிப்படையாகக் கொண்டது.ஏதேனும் ஒரு வதந்தி கிளம்பியதும் மக்கள் கூட்டங் கூட்டமாகக் கூடித் தவறான செயல்களில் இறங்குவது இதற்கு ஓர் எடுத்துக்காட்டு.மக்களை ஒன்றாக இணைக்கும் ஆற்றல்களும், அவற்றைப் பயன்படுத்தக் கூடிய தலைவனும், மக்களிடையே குறிக்கோள் ஒற்றுமையும் இருக்குமாயின், அப்பொழுது ஒழுங்கானவரையறை உண்டாகும்.இவையாவற்றையும் அனுதாபம், கருத்தேற்றம் பார்த்துச்செய்தல் கூடிவாழ் இயல் பூக்கம் முதலிய உளவியல் கூறுகளை சாத்தியமாக்குகின்றன.

**உளவியலறிஞன் மனிதனை எங்ஙனம் காண்கின்றான்**

உளவியலறிஞன் மனிதன் ஓர் உயிரியாகவே கருதுகின்றன் பொருள்களடங்கிய சூழ்நிலையும் பிற மக்கள் அடங்கிய சூழ்நிலையும் உண்டாக்கும் தூண்டல்களுக்கு மனிதன் எங்ஙனம் துலங்குகின்றான் என்பதைக் காண்கின்றான். மனிதனுடைய உடலுக்குப் புறம்பே, ஆனால் அவனுடைய புலன் எல்லைக்குள்ளடங்கிய, எல்லாப் பொருள்களும் விசைகளும் அடங்கிய ஓர் அமைப்பே சூழ்நிலை. ஒவ்வொருவருடைய வாழ்க்கையையும் ஊன்றி நோக்கினால், அவரவர் தமக்கு அமைந்துள்ள சூழ்நிலையோடு ஒயாமல் ஊடாடிக் கொடுக்கல் – வாங்கல் செய்து கொண்டிருப்பது புலனாகும்.சில சமயம் தனியாள் சூழ்நிலையையொட்டித் தன்னைப் பொருத்திக் கொள்கின்றன். மனிதன் தன்னை மாற்றிக்கொள்வதிலும் சூழ்நிலையை மாற்றிக் கொள்வதிலும் அல்லது மாற்றியமைத்துக் கொள்வதிலும், தனக்கும் சூழ்நிலைக்கும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இடையிலுள்ள தொடர்பை மாற்றுகின்றான். இவ்வாறு தனியாளும் சூழ்நிலையும் இடையறது இடைவினை இயற்றும் செயலை அடியிற்கானும் வாய்பாடுகளால் உணர்த்தலாம்.

i. ம - உ ம

ii. உ - ம உ

ஆகையால் பொது உளவியல் குறிக்கோள்களைக் கல்விப் புலத்தில் செயல்படுத்துகிறது.

**கல்வி உளவியலின் இயல்பு / தன்மை (Nature of educational psyaelogy)**

“கல்வியில் குழந்தைகளுக்கு எதை கற்பிக்க வேண்டும் எத்தகைய அளவிற்கு கல்வித் துணை செய்ய வேண்டும், என்பது விளக்குவது கல்வித் தத்துவயியல் ஆகும்”. ஆனால், அப்பாட முறைகள் எப்படி கற்பிக்க வேண்டும். மாணவர்களை எப்படி கற்கச் செய்ய வேண்டும் கற்றல் கற்பித்தலில் பின் பற்ற வேண்டிய விதிமுறைகள் கற்பவரையும் கற்றலையும் ஒருங்கிணைக்கும் முறைகள் யாவற்றையும் விளக்குவது கல்வி உளவியல் ஆகும்.

கல்வி உளவியல் என்பது கல்வி, உளவியல் ஆகிய இரண்டின் இணைப்பின் விளைவு ஆகும்.

- **இது ஒரு செயல்படுத்தப்பட்ட அறிவியல் ஆகும்.**
- **கல்வி உளவியல் என்பது ஒரு கொள்கையும் செயல் முறையும் ஆகும். ஏனெனில்மாணவர்களின் நடத்தையைப் பற்றிய ஆய்வு முடிவுகளைக் கூறுகின்றது. பிறகு அந்த நடத்தையை மாற்றியமைப்பதற்கான முறைகளையும் செயல்படுத்துகின்றது.**
- **கல்வி உளவியல் என்பது கல்வி மற்றும் கல்விப்பிரச்சனைகளுக்கு ஓர் அணுகுமுறையாகும். குழந்தைகளின் நடத்தை கல்வி உளவியலில் முக்கியமானதாகும். காரணம் குழந்தைகள் தான் கல்வி பெறுகின்றனர்.**

இதனால் தான் கல்வி பெறுபவர்களின் நடத்தையில் கல்வி உளவியல் பெரும் பங்கு வகிக்கிறது.என்று கூறலாம்.

**கல்வி உளவியல் விளக்கம்**

மனித நடத்தையைப் பற்றி விவரிக்கும் அறிவியலே உளவியல் எனப்படும்.மனித நடத்தையில் உள்ளார்ந்த பண்புகள் எளிதில் புலப்படக்கூடிய வெளிப்புற பண்புகள் ஆகியவற்றை உளவியல் ஆராய்கிறது. உளவியலின் ஒரு பிரிவே கல்வி உளவியல் ஆகும்.இது மாணவர் கற்கும் சூழல் கற்பிக்கும் முறை ஆகிய முன்றுக்குமுள்ள உறவை விவரிக்கிறது. கல்வி உளவியல் என்பது பல்வேறுபட்ட பரிமாணங்களை உடையது. கல்வி கற்கும் மாணவவனின்,

**a) இயல்பு**

**b) கற்றல் – கற்பித்தல் சூழ்நிலை**

**c) கற்றல் – கற்பித்தல் பொருள்கள்**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**d) கற்றலை எளிமையாக்கும் முறைகள்**

போன்ற காரணிகளை நன்கு அறிந்து கொள்ள கல்வி உதவுகின்றது. மாணவரின் கற்றலைப் பயனுள்ளதாக்குதல். தாம் கற்பனவற்றை நிலைப்பெறச் செய்து வழ்க்கையில் பயன்பாடு அடையச்செய்தல், கற்றல் – கற்பித்தலில் ஈடுபடும் ஆசிரியரும் மாணவரும் உடல்நலமும், உளநலமும் உள்ளவர்களாக அவர்களுக்கு உதவுதல் குறித்த கருத்துக்களைக் கல்வி உளவியல் விவரிக்கின்றது. ஆசிரியர் தம்மிடம் காணப்படும் நிறை குறைகள், விரும்பு வெறுப்புகள் மனவெழுச்சிகள், மனப்பான்மைகள் போன்றவற்றைத் தாமே உணர்ந்து கொள்கிறார். தனக்கும் சமுதாயத்திற்கும் பயன்படும் வகையில் நல்ல குறிக்கோள்களை வகுத்துக் கொண்டு செயல்படுகிறார். முறைகளை மாணவர், விரும்பும் வண்ணம், அவர்களின் தேவைக்கேற்பகையாளுகிறார். கற்றலில் கவர்ச்சியை ஏற்படுத்த கவனத்தை ஈர்க்க காட்சிப் பொருள்களை பயன்படுத்துகிறார். மாணவர்கள் தாங்களாகவே கற்பதற்கு உதவி புரிந்து கற்றலை எளிமைப்படுத்துகிறார். இவ்வாறு ஆசிரியர் செயல்பட கல்வி உளவியல் அறிவு ஆசிரியருக்கு உதவி புரிகிறது. இதுவே கல்வி உளவியல் அடிப்படை நோக்கமாகும்.

**கல்வி உளவியலின் வரம்பு / எல்லை**

கல்வி உளவியல், கற்றல் – கற்பித்தலில் பின்பற்ற வேண்டிய வழி முறைகளையும், செயல்பாடுகளையும் பற்றியே ஈடுபாடு கொள்கிறது. ப்ளோர், ஜோன்ஸ், சிம்பன் போன்றோர் கூறுவது போன்று கல்வி தத்துவ இயல் எதைக் கற்பிக்க வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்ட கல்வி உளவியல், உதவியோடு அதை எப்படிக் கற்பிக்க வேண்டும் என்று இயம்புகிறது. கல்வி உளவியலின் வரம்புகளாகக் கீழ்க்கண்டவற்றை கோலஸ்னிக் (kolesnik) குறிப்பிடுகிறார்.

- ❖ மாணவர்களிடையே காணப்படும் தனியாள் வேறுபாடுகள் (individual Differences)
- ❖ ஊக்கம் (Motivation)
- ❖ கற்பித்தல் முறைகள் (Methods of Learning)
- ❖ மதிப்பிடும் முறைகளும் (Methods of Evolution and its merits Demorest)
- ❖ வகுப்பறை (Classroom Management)
- ❖ மனநலம் (Mental Health)
- ❖ ஒழுக்கத்தை உருவாக்குதல்எச். சி. லிண்ட்கிரேன் (H.C.Lindgren) கூற்றுப்படி கல்வி உளவியலின் பாடப்பொருட்கள், கீழ்க்கண்ட பிரிவுகளை மையமாக வைத்து அமைக்கப்படுகின்றன.
- ❖ கற்பவர் (Learner)
- ❖ கற்கும் முறைகள் (Learnes Process)
- ❖ கற்கும் சூழ்நிலைகள் (Learning Situation)

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

- 'கற்பவர்' என்ற முதற்பிரிவின் கீழ் மாணாக்களின் திறமைகள், தேவைகள், வாழ்க்கை – இலக்குகள், தற்கருத்து (Self – Concept) போன்றவைகளும், அவை எவ்வாறு ஒவ்வொருவரிடமும் வேறுபடுகின்றன என்பதும் இடம் பெறுகின்றன. இப்பிரிவு மாணவனது வளர்ச்சிப் படிநிலைகள், மாணவரது ஆளுமையை உருவாக்குவதில் சூழ்நிலைகளின் தாக்கம், மனநலத்தைப் பாதிக்கும் பிரச்சனைகள் போன்றவைகளும் உள்ளடக்குகிறது.
- 'கற்கும் முறைகள்' என்ற இரண்டாம் பிரிவின் கீழ், கற்றலைப் பாதிக்கும் காரணிகள், பல்வேறு கற்கும் முறைகளும் அவைகளின் நிறை – குறைகள், மறத்தல், மனத்திலிருத்தல் (Remembering), கற்றல் மாற்றம் (Transter of learning) போன்றவை அடங்கும்.
- முன்றாம் பிரிவான 'கற்கும் – சூழ்நிலைகள்' என்பதில் வகுப்பறை மேலாண்மை, ஒழுக்கமும் – கட்டுப்பாடும் அசாதாரண குழந்தைகளுக்கு (Exceptional Childern), கற்பித்தல் வழிகாட்டுதலும், அறிவுறைப் பகர்தலும் (Guidance and Counselling), கவன ஈர்ப்புக் காரணிகள், கவனக் குறைவிற்கான காரணங்கள் போன்றவை அலசி ஆராய்ப்படுகின்றன. கற்றல், சூழ்நிலையில், ஆசிரியரே ஒரு முக்கிய காரணியாக விளங்குகிறார்.

**கல்வி என்பது பொருத்தப்பாடே**

பிறந்த குழந்தை பள்ளியில் சேரும் மாணக்கனும் பௌதிகச் சூழ்நிலைக்கும், சமூகச் சூழ்நிலைக்கும் பொருத்தப்பாடு அடைவதில் பிறர் உதவியை நாடுகின்றனர்.பெற்றோரும், ஆசிரியரும் தக்கவாறு இவர்கட்கு உதவவேண்டும்.எல்லாவிதப் பொருத்தப்பாடுகளுள்ளும் தனியாளின் தேவைகளுக்கும், திறமைக்கும் இடையேயுள்ளதோர் சிக்கலான சம்பந்தம் அடங்கியுள்ளது.ஒரு குழந்தை சூழ்நிலையில் இயங்குவதற்கும் வளர்த்த ஒருவர் சூழ்நிலையில் இயங்குவதற்கும் அதிக வேற்றுமை உண்டு.குழந்தையின் நடத்தை எளிதானது.வளர்த்தவரின் நடத்தைக் கோலம் மிகவும் சிக்கலானது.

**உளவியலால் ஆசிரியருக்குப் பயன்**

உளவியலைக் கற்றல் ஆசிரியருக்கு எப்படி இன்றியமையாதாகின்றது? இதைச் சிறிது ஆராய்வோம். ஒரு காலத்தில் ஆசிரியர் கற்பிக்கும் பாடப்பொருளை மட்டிலும் நன்கு அறிந்தால் போதும் என்ற கருத்து நிலவியது.அனால் சிறிது காலமாக அது மட்டிலும் போதாதென்று கருதப்பெறுகின்றது. பயில்விக்கும் மாணக்கனையும் அறிய வேண்டியது மிக இன்றியமையாதது என்று பல கல்வி நிபுணர்கள் கூறிவருகின்றனர். ஸ்விட்ஸர்லாந்து நாட்டு உளவியலறிஞர் பெஸ்டலாஜி என்பர் 'கல்விக்கலையை உளவியல் மயமாக்கு என்று

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கூறிப்போந்தார். எனவே உளவியல் ஆசிரியருக்கு மிகவும் இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது.

**உற்றுநோக்கல் முறை**

எல்லா நூல்களும் கையாளும் முறைகளில் முதலில் தோன்றுவது உற்றுநோக்கல் முறையாகும். இதில் இரண்டு வகையுண்டு, ஒன்று, அகக்காட்சி, மற்றொன்று, புறக்காட்சி உளவியலார் பண்டை நாள் தொட்டுக் கையாள்வது அகக் காட்சியாகும். அகக்காட்சி என்பது ஒருவர் தம்முடைய மனத்தில் செயலையோ அனுபவத்தையோ உள் நோக்கி ஆராய்வது என்பது சற்றுக் கடினமே. மேலும் உள்ளத்தின் நிலைகளும் செயல்களும் மாறிக்கொண்டே போகும் இயல்புடையவை; அவற்றைச் சரியாகக் கவனிப்பது எளிதன்று. ஆகவே அது காட்சி அனைத்தும் பின்னோக்கம் (retrospection) ஆகும். உணவை உண்டு உவப்பதைவிட அதனைக் கண்டு களிப்பதற்கு ஈது ஒப்பாகும். சில உளவியலார் பௌதிகம் போன்ற பிறநூல்களிலுள்ளதைப் போல் புறாக் காட்சியையும் கையாளுகின்றனர். இக்காரணத்தால் உளவியல் அண்மைக்காலத்தில் விரிவடைந்துள்ளது. உள்ளம் உடலுடன் நெடுங்கிய தொடர்புடையதாயிருப்பதால் உள்ளச் செயல்கள் தோன்றும் போது உடல் மாறுபாடுகளும் தோன்றுகின்றன. ஒருவர் சினங்கொள்ளும் பொழுது அவர் கண்கள் சிவக்கின்றன. பற்கள் நற நற வென்கின்றன. கைமுட்டுக்கண்டு நெம்புகின்றன. சுவாசித்தலும் குருதியோட்டமும் பாதிக்கப்பெறுகின்றன. இம்மாறுபாடுகளால் அவர் சினங்க்கொண்டார் என்று எளிதில் ஊகிக்கலாம் எனவே இப்புறக்காட்சி முறையில் பல உண்மைகள் கன்டறிப் பெறுருக்கினான.

**கற்றல்**

மக்களின் செயல்களனைத்தையும் கல்லாத பிறவிச் செயல்கள், பட்டறிவால் கற்ற செயல்கள் என இக கூறிக்குப் பேசலாம். மூச்சு வாங்குதல், உமிழ்நீர் சுரத்தல், போர் தொடுத்தல், கட்டுதல், தப்பித்து ஓடுதல், தன்னைப் போற்றுதல் போன்றவை கல்லாத பிறவிச் செயல்களாகும். ஆனால், இப்பிறவில் பேறுகளைக் கையாளும் வழிகள் கற்கப் பெறுகின்றன. சூழ்நிலையுடன் மனிதன் ஊடாடுதால் பிறவிச் செயல்கள் மாறுபடுவதும்.புதிய செயல்கள் தோன்றுவதும் இல்லை.

**கற்றலின் அடிப்படை இயல்பு**

கற்றல் வாழ்க்கைக்கு இன்றியமையாதது அது வாழ்க்கைமுழுவதும் இடையறாது நடைபெற்று வருகின்றது. உயிர்கள் அனைத்தும் சூழ்நிலைக் கேற்றவாறு பொருத்தப்பாடடைய வேண்டியிருக்கின்றது.

**கற்றல் விதிகள்**

தார்ண்டைக் என்ற அமெரிக்க நாட்டுக் கல்வி நிபுணர் பிராணிகளும் மனிதர்களும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கற்கும் செயலைப் பற்றி முன்று விதிகளைக் கூறியுள்ளார். முதலாவது – பயன் விதிஇவ்விதி ஒரு செயலைப் பெறும் பொழுது ஏற்படும் விளைவின் சிறப்பை வலியுறுத்துகின்றது.

**கற்றல் என்பதற்கு அளிக்கபடும் சில வரையறைகள்**

கற்றல் என்பதற்கு ஏராளமான வரையறைகள் தரப்படுகின்றன.அவற்றுள் முக்கியமான சில கீழே தரப்பட்டுள்ளன. 'கற்றல்' என்பது பயிற்ச்சி, அனுபவங்கள் அடிப்படையில் ஒருவரது மனப்பான்மையில் ஏற்படும் ஒரளவு நிலையான மாற்றமாகும். பல்வேறு தூண்டல்களுக்கு வெவ்வேறு விதமான துலங்கலை வெளிப்படுத்தும் ஆற்றலைப் பெறுவதே 'கற்றல்' ஆகும்.

> **'கற்றல்' என்பது அனுபவங்கள் பெருகுவதன் மூலம் வளர்ச்சி ஏற்பட்டு, நம்மைச் சுற்றியுள்ள உலகத்தை நன்கு புரிந்துகொள்ள முடிவதாகும் என்று கிரிஸ்டி மெக்ராத் (Kristi mcgrath) கூறுகிறார். (கற்றலும் கற்பித்தலும், ப. 93)**

கற்றல் என்பது வாழ்நாள் முழுவதும் தகவல்களைப் பெற்று பயன்படுத்திரும் செயல்முறை (Process).ஆகும் என்று 'தாமஸ் கொரேல்' (Thomas Correll) கற்றலுக்கு அளித்திடும் வரையறையாகும்.

**பள்ளியில் மற்றும் பள்ளிக்கு வெளியே கற்றலின் நோக்கங்கள் (Purposes of Learning in and out of School)**

**பள்ளியில் கற்பதற்கான நோக்கங்கள்**

- **அன்றாட வாழ்க்கையை வெற்றிகரமாக வாழ்ந்திடத் தேவைப்படும் அறிவுசார் திறன்களையும் உடல்சார் செய்திறன்களையும் மாணவர்களிடம் வளர்த்திடல்.**
- **உயர் மனத்திற்ன்களான ஆராய்ந்தறிதல் (Enquiry), தர்க்கரீதியாக சிந்தித்தல் (Logical thinking),**
- **சிறந்த குடிமகனாக தமது கடமைகளைச் செய்தி ஆயத்தப்படுத்துதில்.பள்ளிக்கு வெளியே கற்றலின் முக்கிய நோக்கங்களாவன.**
- **கூர்ந்து நோக்கல், ஆராய்ந்தறிதல், சூழ்நிலைக்கு ஏற்ற கருவிகளையும் உத்திகளையும் தேர்வு செய்து பயன்படுத்துதல் அறிவியல் மனப்பான்மை மற்றும் அழகு உணர்ச்சியை வளர்த்தல்.**
- **சக மாணவர்களோடு இணக்கமாக செயல்படுதல்,**
- **குறிப்பிட்ட சூழலுக்கு (Conter – specifil) உரிய செய்திறன்களில் (skills) பயிற்சி பெறுதல்.**
- **ஏற்கனவே பெற்ற தகவல்கள், வகுப்பரை சொல்லாடல், முடிவுகள், தனியாள் சோதனை முடிவுகள், ஆகியவற்றை சரிபார்த்தல்.**

ஒரு குறிப்பிட்ட பாடம் தொடர்பான அடிப்படை தகவல்களை சேகரித்தல். கற்றல் என்பது ஒருவரது வாழ்க்கையை செழிப்படையச் செய்யும் திறன் மட்டும் அல்ல அவரின் பயிற்ச்சி, அனுபவங்கள், நடத்தை, மனப்பான்மை போன்ற பல்வேறு தூண்டல்களுக்கு வெவ்வேறு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விதமான துலங்களை வெளிப்படுத்தும் ஆற்றலைப் பெற்று வாழ்நாள் முழுவதும், அறிவுசார் திறன்களையும், உடல்சார் திறன்களையும் வளர்த்து அவற்றின்வழி செயல்படுத்துதலே கற்றல் எனப்படும்.

**இரண்டாவது – பயிற்சி விதி**

இரண்டாவது – பயிற்சி விதியின் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றது. ஒரு துண்டலுக்கும் துலங்களுக்கும் உள்ள இணைப்பு பயிற்சியால் வலியுறுகின்றது; பயன் விதி பயிற்சி விதியால் முடிகின்றது. ஒரு செய்யுளை மனப்பாடம் செய்யவும், ஓர் இராகத்தைநன்றாகப்பாடவும், மிதிவண்டியிலேறிப் பாங்காகச் செல்லவும்.அவற்றைப் பல முறை பயில வேண்டும். (எ. கா) மிதிவண்டி ஏறிப்பழகுதல், கையெழுத்து, தட்டச்சுப் பொறியினை இயக்குதல் போன்றவற்றில் தொடக்கத்தில் கைவரப் பெறாத எளிமை, திருத்தம், பொருத்தம் முதலியவை பயிற்சியின் பயனாக நாளடைவில் ஏற்படுகின்றன. (பயிற்சி விதி – Law of Exercise)

**மூன்றாவது – ஆய்த்த விதி**

மூன்றாவது – ஆய்த்தவிதி கற்பவனின் ஆயத்தத்தை வற்புறுத்துகின்றது. படித்தலுக்கு ஆய்த்தம் வராத குழந்தைக்குப் படித்தலைக் கற்பித்தல் பயந்தராது. படித்தாலுக்கு ஏதுவான பாண்புகளைவன: ஆறரை மனவயது நிறைவு பெற்றிருத்தல், போதுமான அளவு கேட்கும் ஆற்றல், உள்ளக்கிளாச்சியின் மீது ஒரளவு ஆட்சி பெறல் ஆகியவை ஆயத்தமாக இருப்பதற்குச் சில எடுத்துக்காட்டுக்கள் தருவோம் வகுப்பில் அடங்கிக் கிடந்து வெளிவந்த சிறுவர் மாலை ஐந்து மணிக்கு விளையாட ஆயத்தமாக இருக்கின்றார்.

**செயல் திட்டமும் செய்து கற்றலும்**

ஒவ்வொரு குழந்தையும் செயலை அடிப்படைத் தேவையாக விழைகின்றது என்பதற்கு ஏராளமான சான்றுகளும் உள்ளன. இச்செயல்"விடுப்பு", உடலியக்கங்கள், "தேடி ஆராய்தல்", விளையாட்டுக்கள், "புதிர் தீர்த்தல்" என்ற வடிவங்களில் பரிணமிக்கின்றன. செயல் முறைப்பள்ளியில் மாணாக்கர்கள் பொருள்களை ஏட்டுப்பாடமாகப் பயில்வதில்லை; அங்கு பொருள்களைக் கையாளுவதாலும், இயற்றுதலாலும் நேரான அனுபவத்தைப் பெறுகின்றனர்.கற்றல்துலங்கல்களினாலேயே நடைபெறுகின்றதுஎன்பது செயல்முறை நிபுணர்கள் கூறும் உண்மை இக்கருத்துப்படி ஆசிரியர் கற்பிக்கலாமேயேயன்று, குழந்தையில் கல்வி தன் சொந்தச் செயலாலேயே நடைபெறுகின்றது. எனவே, அறிவைத் திரட்டிப் பெருக்குவதான் பயன் இல்லை அதனை நடைமுறையில் கையாளுவதே பயன் தருவது.

**உயிரியல் கற்பித்தல் நுணுக்கங்கள்**

ஆசிரியர்கள் மாணவர்களுக்கு கற்பித்தல்- கற்றல் வளங்கள், கவர்ச்சி, புதுமை என

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பல்வேறு வகையான கற்பித்தல் – கற்றல்மூலம் மாணவர்களின் மதிப்பும், தலைசிறந்த பண்புகள் வெளிப்படுகின்றன.

**கற்பித்தல் – கற்றல் வளங்களின் சிறப்பியல்புகள், கவர்ச்சி, நெருக்கமாணவை, புதுமை, பயனாளி, பல பயன்பாடு மற்றும் கையாளுதலின் எள்ளிமை என டாக்டர் நளினி லதா குறிப்பிடுகின்றார். (கற்பித்தல் – கற்றல் வளங்களில் சிறப்பியல்புகள், ப. 147- 148)**

**கவர்ச்சி**

கற்றல் வளங்களை கற்பிப்பதன் முக்கிய பண்புகளில் ஒன்றாக கவர்ச்சி கருதப்படுகிறது.

**நெருக்கமானவை**

பல்வேறு வகையான கற்பித்தல் – கற்றல் வளங்களுடன் மாணவர்களிடையே நெருக்கத்தை வளர்ப்பது ஆசிரியரின் ஒருங்கிணைந்த பகுதியாகும்.

**புதுமை**

கற்பித்தல் – கற்றல் செயல்முறைகளை எளிதாக்குவதில் ஆசிரியர்கள் புதிய, அசல் நவீன எந்தவொரு முன்னோடி முறைகளையும், பயன்படுத்த வேண்டும்.இது மாணவர்கள் தங்கள் அறிவைப் பெற்றவும் நவீன, அறிவியல் மற்றும் புதுமையான முறைகளைப் புரிந்து கொள்ளவும் உதவுகிறது.

**பயனாளி**

ஆராய்ச்சி ஆய்வுகளின் படி, மாணவர்களுக்கு தகவல்களை வழங்குவதில் ஆசிரியரால் செயல்படுத்தப்படும் கற்பித்தல் வளங்களை அதிக பயனுள்ளமதிப்பைக் கொண்டுள்ளன என அறியப்படுகிறது.

**பல பயன்பாடு**

கற்பித்தல் கற்றல் வளங்களின் குறிப்பிடத்தக்க பண்புகளில் ஒன்றாக பல பயன்பாடு கருதப்படுகிறது. (எ.க) தொழில் நுட்பம் மற்றும் இணையம்.

**சுற்று சுழல் கல்வி**

பள்ளி நிலையில் சுற்றுச் சூழல் கல்வி, சுற்றுச் சூழல் விழிப்புணர்ச்சி தோற்றுவிப்பதை நோக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். சுற்றுச் சூழல் கருத்துகள் நடைமுறையில் உள்ள இயற்பியல், இயற்கை மற்றும் சமுக அறிவியல்களுடன் ஒருங்கிணைக்கப் படவேண்டும். மாணவர்கள் இயற்கைக் கல்வியில் பங்கு பெறுவதற்கும், பாதுகாப்பு நிகழ்ச்சிகளில் பங்கு பெற்று அனுபவங்களைப் பெறுவற்கும் வாய்பளிக்க வேண்டும்.

**பாட புத்தகங்களுடன் வழிகாட்டிகள், கையேடுகள், நவேல், தாட்டுகள், படங்கள் (films) மாதிரிகள், போன்ற பிற கற்பித்தல் துணைக்கருவிகளும் சுற்றுச்சூழல் கல்விக்காக உருவாக்கப்பட வேண்டும். (சுற்றுச் சூழல் கல்வி – பக் - 282-283)**

**பள்ளிக் கல்வி ஏற்பாடபாட்டில் சுற்றுச் சூழல் கல்வியின் இன்றைய நிலை**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சுற்றுச் சூழல் கல்வி, பள்ளிக் கல்வி ஏற்பாட்ட்ல் முன் பள்ளிக் கல்வி நிலையிலும், தொடக்கக் கல்வி, நிலையிலும், மேல்நிலைக் கல்வி நிலையிலும் சேர்க்கப்பட்டுள்ளது. மாநில வாரியப் பள்ளிகள் (State Board Schools) மற்றும் மத்திய செகண்டரி போர்டு பள்ளிகள் (CBSE) என்னும் இருவகைப் பள்ளிகளிலுமே சுற்றுச்சுழல் கல்வி இன்று கற்பிக்கப்படுகிறது.

**உயிரியல் கற்பித்தல் நுணுக்கங்கள் – I**

> **செய்தித்தாள்கள், புத்தங்கள், சஞ்சிகைகள், இதழ்கள், கலைக் களஞ்சியம் முதலியன அச்சுவளங்கள் எனப்படும்.இவை பலவகையான உண்மையான தகவல்களை நமக்கு அளிக்கிறது தகவல்கள் அளிக்கின்றார் என்று கே அஸ்லாம் அவர்கள் குறிப்பிடுகின்றார். (கற்பித்தல் ஊடகம், பக். 219 -220)**

**செய்தித்தாள் (NEWS Papers)**

கடந்த சில வருடங்களாக எல்லா வகுப்பு மாணவர்களுக்கும் மக்கள் தொடர்பு சாதனங்களை கற்பித்தல் சுருஷ்களாக வகுப்புறையில் பயன்படுத்துவது அதிகமாகிக் கொண்டு வருகிறது. கற்றல் செயல்பாடுகள் மூலம் கலைத்திட்ட அறிவை பெருக்கிக் கொள்ள செய்தித்தாள்கள் உதவுகின்றன.

**இதழ்கள் (Magazines)**

ஒரு குறிப்பிட்ட தலைப்பு அல்லது குறிப்பிட்ட வாசகர்களுக்காக கட்டுரைகள் எடுத்துக்காட்டுகளோடு சீரான இடைவெளியில் வெளிவருவது இதழ்களாகும். பல வகையான இதழ்கள் வெளிவருகின்றன. அவை:

- **செய்தி இதழ்கள்**
- **விளையாட்டு இதழ்கள்**
- **கலாச்சார இதழ்கள்**
- **அறிவாற்றால் சார்ந்த இதழ்கள்**
- **குழந்தைகளுக்கான இதழ்கள்**
- **ஆண்களுக்கான இதழ்கள்**
- **பெண்களுக்கான இதழ்கள்**
- **வியபாரம் இதழ்கள்**
- **கல்வி இதழ்கள்**

**கல்வி இதழ்களின் பயன்கள்**

- **வகுப்பு கற்பித்தலுக்கு துணையாக பல்வேறு இதழ்களை அளிக்கின்றன.**
- **இதழ்கள் படிப்பதன் மூலம் மாணவர்கள் படிக்கம் திறன் இலக்கணம், புதிர்கள், ஆகியவற்றை அறிந்து கொள்கின்றான.**
- **ஒய்வு நேரத்தை மாணவர்கள் பயனுள்ள முறையில் செலவழிக்க இதழ்கள் உதவுகின்றன.**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

- **வெளியுலக செய்திகல், பண்பாடு, கலாச்சாரத்தை இதழ்கள் மூலம் அறிந்துக் கொள்ள முடிகிறது.**
- **இதழ்களில் வெளியாகும் கட்டுரைகள் மூலம் மாணவர்களின் சிந்தனைத் திறன் மேம்படுகிறது.**

**கல்வி ஆராய்ச்சியின் தேவை**

> **கல்விச் செயல்திட்டங்களை வகுப்பதிலும், அவற்றைச் செயல் படுத்துவதிலும் உள்ள பிரச்சினைகளுக்கு கல்வி ஆராய்ச்சிகள் மூலம்தீர்வு காணமுடியும் (முற்போக்கு கல்வி ஆராய்ச்சி மற்றும் புள்ளியில், ப. 9)**

என்று பேராசிரியர் முனைவர் அ. மீனாட்சிசுந்தரம் தெளிவுப்படுத்துகிறார். மேலும் கல்வியல் சிறப்பு அறிவு பெறவும் கற்றல் சூழலை மேம்படுத்தவும் கற்றலுக்கான வாய்ப்புகளை பயன்படுத்தவும் மாணவர்களுக்கு கல்வியில் ஆய்வு தேவைப்படுகிறது என்று பேராசிரியர் முனைவர் மீனாட்சி சுந்தரம் .அ குறிப்பிடுகிறார்.

**மாணவர்கள் கற்றல் முன்னேற்றாத்தை மதிப்பிடும் தற்போதைய நடைமுறைகள் (Present Practices of Assessment of Student's Learning)**

மாணவர்களின் கற்றல் நிலையானது முந்திய நிலையிலிருந்து தற்போதைய நடமுறைகளில் மாறுப்பட்டு அமைகின்றன.

> **2009 – ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கல்வி உரிமைகள் சட்டத்தை தொடர்ந்து – 2011ஆம் கல்வியாண்டு முதல் இடைநிலைக் கல்வியில் ஆறாம் வகுப்பு முதல் ஒன்பதாம் வகுப்பு வரை தொடர் மற்றும் அகல் விரிவான மதிப்பீடு (CCE) முறை அமல்படுத்தபட்டது இது, (கற்றலுக்காக மதிப்பிடுதல் ப.412)**

மாணவர்களது ஆளுமை வளர்ச்சியின் பல்வேறு அம்சங்களையும் மதிப்பிட்டு அறியும் வகையில், கல்வித் தேர்ச்சி (Scholastic Proficiency) மற்றும் கல்வித்துணை செயல்களில் பெற்றிடும் அடைவுகளை (Co – Scholastic Achievement) ஆண்டு முழுவதும் வளரறி மதிப்பீடு அமைப்புமுறைகள் (Assessment System) உருவாக்கியது. இது பள்ளி சார்ந்த கற்றலை மதிப்பிடும் முறையாக அமைந்துள்ளது.ஆனால் X, XI மற்றும் XII வகுப்புத் தேர்வுகள், பழைய முறையிலேயே எழுத்து வடிவிலான தேர்வுகளாக நீடித்தன என்பதை கி.நாகராஜன் குறிப்பிடுகிறார்.

**அடைவுச்சோதனையை உருவாக்கிடல் (Construction of Achievement Test)**

மாணவர்கள் ஒரு படிப்பிற்கான பாடப்பொருளை (Course contempt) எந்த அளவு கற்றுத்தேர்ந்துள்ளனர்.என்பதை மதிப்பிடும் சோதனைகளை தயாரித்தல், என்பது, கல்வி, மதிப்பிடலில் முக்கிய பங்கு வகிக்கிறது.

1. **சோதனையை திட்டமிடல் (Planning the Test)**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**2. சோதனையின் வடிவமைப்பைத் தீர்மானித்தல் (Determining the Design of the Test)**

**3. வினாத்தாள் திட்டவரைவைத் தயாரித்தல் (Preparing the Blue print of the Test)**

**4. சோதனை வினாக்களை எழுதி, விடைத்தாளைத் தயாரித்தல்**

**(Writing the Test items and preparing the question paper) என பேரா. சா. நடராஜன் குறிப்பிடுகிறார் (அஸ்லம்).**

**கற்பித்தல் முறைகள்**

சில முறைகள் குழு கற்பித்தலுக்கு ஏற்றவாறு அமைந்திருக்கும். சில முறைகள் தனிக்கற்பித்தலுக்கு மட்டும் ஏற்றவாறு அமைந்திருக்கும். எனவே எந்த முறையை யாருக்கு எப்போது அளிக்க வேண்டும்.என்பதை ஆசிரியர் பெரும்பாலான வகுப்பு தகவல்களை கொண்டு தீர்மானித்து கொள்ள வேண்டும். இம்முறையில் ஆசிரியர் பாடக்கருத்தை தன் சொந்த வேகத்தில் அளிக்கிறார்.மாணர்கள் அதனை புரிந்து கொண்டார்களா என்று கவனிப்பதில்லை.சில நேரங்களில் ஆசிரியர் கரும்பலகையை பயன்படுத்துவார். ஆசிரியர் கூறும் பொருளை நுண்ணறிவு மிக்க மாணவர்களால் மட்டுமே புரிந்து கொண்டு நினைவில் வைப்பர். இது ஒரு குருட்டுத்தனமான கற்பித்தல் முறையாகும். இம்முறையைச் சிறந்த முறையில் பின்பற்ற வேண்டும் என்றால்

1. **திட்டமிடுதல்**
2. **பாடத்தை தொடங்குதல்**
3. **பரிசோதனை செய்தல்**

மேலும் மாணவர்களின் உற்று நோக்கு திறனை எவ்வாறு மேம்படுத்தலாம்.என்றும் மாணவர்களின் கவனத்தை ஈர்க்க என்னென்ன வினாக்கள் கேட்கலாம்.என்றும் ஆசிரியர் மனதில் கொண்டு திட்டமிடவேண்டும்.பின்னர்செய்து காட்டலில் சிறு சிறு வினாக்கள் மற்றும் சிறு சிறு சோதனைகள் மூலம் அறிமுகப்படுத்தலாம்.பரிசோதனை செய்தல் போது சோதனைக்கருவிகளை மாணவர்களின் எதிரிலேயே அமைத்துக் காட்ட வேண்டும் என்று அஸ்லாம் அவர்கள் கூறுகிறார்.

**கலைத்திட்ட உருவாக்கத்தில் உளவியலின் பங்கு**

குழந்தை வளர்ச்சி கருத்து உருவாகுதல் பல்வேறு பாடக்கருத்துக் கற்றல், மாணவர்களைக் கற்றலில் ஊக்குவித்தல் கல்வித் தொழில் நுட்பம் மதிப்பீடு முறைகள் போன்றவை ஊவியல் ஆராய்ச்சி உண்மைகளை கலைத்திட்டம் தயாரிக்கும் போது மிகுந்த கவனத்தில் கொள்ள வேண்டும் என கலைத்திட்ட உருவாக்கத்தில் உளவியல் பங்காக ஆசிரியர் கூறிகின்றார்.

**கல்வி மூலம் தேசிய ஒருமைப்பாட்டை வளர்த்திடும் வழிகள் (Historical and Political Economy of Education in India)**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**தேசிய ஒருமைப்பாட்டை வளர்ப்பதில் ஆசிரியர், பள்ளிகள், பாடநூல்கள், பள்ளிச் செயல்கள் ஆகியன முக்கியப் பங்கு வகுக்கின்றன என்று வி.சித்ரா குறிப்பிடுகின்றார். (இந்தியக் கல்வியில் வரலாறு மற்றும் அரசியல் பொருளாதார நிலை, ப. 175)**

- **பாடத்திட்டம்**
- **பள்ளிச்சுழல்**
- **பல மொழிகளைக் கற்பித்தல்**
- **பள்ளிப்புறச் செயல்கள்**
- **தேசிய கலை விழாக்கள்**
- **தேசிய அறிவியல் கண்காட்சிகள்**
- **பள்ளிச் செயல்கள்**
- **சமுதய விழாக்களில் கலந்து கொள்ளதல்**

போன்ற செயல்களில் மாணவர்கள் ஈடுபடுவதன் முலம் தேசிய ஒருமைபாட்டை வளர்க்க முடியும் என ஆசிரியர் கூறுகிறார். இந்தியக் கல்வியியல் வரலாறு மற்றும் அரசியல் பொருளாதரநிலை பற்றி ஆசிரியர் மாணவர்களுக்கு பாடநூல் வழியாக குறிப்பிடுவதால் மாணவர்களிடையே தேசிய ஒருமைபாடு வளரும்.

**தொழிற்சார் பயிற்சிக்கான தேசிய கவுன்சில் ஓர் அறிவுசார் கட்டமைப்பு.இது இந்திய அரசால் 1956 ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது.என தேசிய தொழிற்சார் பயிற்சி நிறுவனம் பற்றி (NCVT) ஆசிரியர் கூறியுள்ளார். (இடைநிலைக் கல்வியின் திட்டமிடுதலும் நிர்வாகமும், ப. 93)**

மாணவர்கள் தொழிற்சார்பயிற்சி மற்றும் அவற்றை சார்ந்த அறிவுசார் கூட்டமைப்பு இந்தியஅரசால் அமைக்கப்பட்டது மிகவும் சிறப்புவாய்ந்தவை. மாணவர்களின் ஒட்டுமொத்த வளர்ச்சியும், கல்வியின்திட்டமிடுதலும், நிர்வாகமும் இன்றைய கல்விதரத்தை மேபடுத்தும் என்பது நன்றாகபுரிகிறது.

**கல்வி நிற்வாகம் என்பது மிகவும் விரிவானதாகும்.ஒரு அமைப்புச் செயல் பாட்டின் தரத்தை மேம்படுத்தும் பணியை நிர்வாகம் மேற்கொள்கிறது. (தொடகக் கல்வியின் திட்டமிடுதலும் நிர்வாகமும், ப. 184)**

இதில் மாணவர்களின் ஒட்டுமொத்த வளர்ச்சியும் நிறுவனத்தின் மேம்பாடும் அடங்கியுள்ளது என ஆசிரியர் மீனாட்சி சுந்தரம் .அ கூறியுள்ளனார்.

**வகுப்பறை சூழலை சிறந்ததாக அமைக்க ஆசிரியர் சோதனையை அமைப்பதிலும் தரப்படுத்துவதிலும் உள்ள முறைகளை அறிந்து கொள்ள வேண்டும்.(கல்வி ஆராய்ச்சியில் அடிப்படைகள் ப- 176)**

- **சோதனையைத் தயாரிப்பதற்கு திட்டமிகுதல் (Planning the test)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

- **சோதனையைத் தயாரித்தல் (Paning the test)**
- **சோதனையைச் செயல்படுத்துதல் (Trying on the test)**
- **சோதனையை மதிப்பிடுதல் (Evaluting the test)**

என ஆசிரியர் கூறுகின்றார். கல்விஆராய்ச்சி அடிப்படைகள் மூலம் வகுப்பறைச் சூழலைசிறந்ததாக அமைப்பதால் கல்விவளர்ச்சியும், ஒழுக்கமும் மாணவர்களிடம் காணப்படும்.

**முடிவுரை**

குழந்தைகள் பள்ளிகளிலும், பள்ளிக்கு வெளியிலும் கற்றவற்றை அளந்தறியப் பயன்படுத்தும் ஆய்வுகளைக் கல்வித்துறை ஆய்வுகள் என்று குறிப்பிடலாம். ஆசிரியர்கள் கற்பித்தலால் குழந்தைகள் அறிந்து கொண்டவற்றையும், பள்ளிக்கு வெளியில் பெறும் அனுபவங்களால் அறிந்து கொண்டவற்றையும் தனித்தனியாகப் பிரித்து அறிவதும், ஒவ்வொரு வகையிலும் அறிந்து கொண்டது. எவ்வளவு என்பதைக் கணக்கிட்டு அறிவதும் இயலாத காரியம். எனவே எல்லாத்துறைகளிலும் கற்றவற்றை ஒரு சேரத்தான் அறிந்துகொள்ள இயலும்.

**குறிப்பு நூல்கள்**

[1] அஸ்லம். *பொருளறிவியல் கற்பித்தல் நூணுக்கங்கள்-1.* முதல் பதிப்பு, எவரஸ்ட் பதிப்பகம், ஜனவரி 2022. சென்னை 26.

[2] டாக்டர். நளினிலதா, கே. *அஸ்லம், உயிரியல் கற்பித்தல் நுணுக்கங்கள்.* எவரஸ்ட்பதிப்பகம், முதல் பதிப்பு 2022, சென்னை 26.

[3] திருமதி. V. அனிதா ஸ்டாலின். *உயிரியல் கற்பித்தல் நுணுக்கங்கள்.* எவரஸ்ட் பதிப்பகம்.,
` முதல் பதிப்பு ஜனவரி 2022.

[4] முனைவர் பி. செல்வம். *முற்போக்கு கல்வி உளவியல்.* சம்யுக்தா பதிப்பகம் ஆண்டு– 2018.

[5] முனைவர். மீனாட்சி சுந்தரம் .அ. *முற்போக்கு கல்வி ஆராய்ச்சி மற்றும் புள்ளியில்.* காவ்யமாலா பப்ளிஷர்ஸ், முதற்பதிப்பு – டிசம்பர் 2018.

[6] பேரா. நாகராஜன். கி: பேரா. சா.நடராஜன், *கற்றலுக்காக மதிப்பிடுதல்.* ஸ்ரீராம் பதிப்பகம், முதல் பதிப்பு நவம்பர் – 2017.

[7] பேரா. நாகராஜன். கி., பேரா. சா.நடராஜன், *கற்றலுக்காக மதிப்பிடுதல்,* ஸ்ரீராம் பதிப்பகம், முதல் பதிப்பு நவம்பர் – 2017.

[8] பேரா. கி.நாகராஜன். *சுற்றுச் சூழல் கல்வி (Environment Education).* ஸ்ரீ ராம் பதிப்பகம், மார்ச்-2022.

[9] பேரா. நாகராஜன். *கற்றலும் கற்பித்தலும்.* ஸ்ரீராம் பதிப்பம், சென்னை 93, முதல் பதிப்பு – ஜனவரி 2022.

[10] டாக்டர். நளினிலதா, கே.அஸ்லம். *உயிரியல் கற்பித்தல் நுணுக்கங்கள்.* எவரஸ்ட்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பதிப்பகம், முதல் பதிப்பு ஜனவரி 2022.

[11] முனைவர் மீனாட்சி சுந்தரம், அ. *இடைநிலைக் கல்வியின் திட்டமிடுதலும் நிர்வாகமும்.* காவ்யமாலா பப்ளிஷ்ஸ், பதிப்பு – மார்ச் 2018.

[12] முனைவர். மீனாட்சி சுந்தரம். அ. *கலைத்திட்டம்கற்பித்தல்* மதிப்பிடுதல். காவ்யமாலா பப்ளிஷர்ஸ், பதிப்பு ஏபரல் 2018.

[13] முனைவர். மீனாட்சி சுந்தரம். அ. *கல்வி ஆராய்ச்சியில் அடிப்படைகள்.* காவ்யமாலா பப்ளிஷர்ஸ், பதிப்பு மே - 2018.

[14] முனைவர். மீனாட்சி சுந்தரம். அ. *தொடகக் கல்வியின் திட்டமிடுதலும் நிர்வாகமும்.* காவ்யமாலா பப்ளிஷர்ஸ், பதிப்பு ஏபரல் 2018.

[15] சித்ரா, V. *இந்தியக் கல்வியில் வரலாறு மற்றும் அரசியல் பொருளாதார நிலை.* சம்யுத்தா பதிப்பகம், முதற்பதிப்பு, பிப்ரவரி 2019.

[16] முனைவர் மீனாட்சி சாந்தரம், *இடைநிலக் கல்வி அளவில் கல்வித்திட்ட கற்பித்தல் மற்றும் மதிப்பிடுதல்.* காவ்ய மாலா பப்ளிஷர்ஸ் பதிப்பகம், இரண்டாம் பதிப்பு - எப்ரல் 2018.

[17] முனைவர் மீனாட்சி சாந்தரம், *இடைநிலக் கல்வி அளவில் கல்வித்திட்ட கற்பித்தல் மற்றும் மதிப்பிடுதல்.* காவ்ய மாலா பப்ளிஷர்ஸ் பதிப்பகம், இரண்டாம் பதிப்பு - எப்ரல் 2018.

**References**

[1] Aslam. *Economics Teaching Techniques-1*. First Edition, Everest Publishing, January 2022. Chennai 26.
[2] Chitra, V. *History and Political Economy in Indian Education,* Samyuta Publications, First Edition February 2019.
[3] Doctor. Nalinilatha, K. *Aslam, Techniques in Teaching Biology,* Everest Publishing, 1st Edition 2022, Chennai 26.
[4] Dr. Nalinilatha, K. *Aslam, Techniques in Teaching Biology,* Everest Publishing, 1st Edition 2022, Chennai 26.
[5] Mrs. V. Anitha Stalin, *Techniques in Teaching Biology.* Everest Press. First Edition, January 2022.
[6] Dr. P. Selvam, *Progressive Educational Psychology.* Samyuktha Publishing, 2018.
[7] Prof. N. Subbu Reddiar, S. *Vasan Company,* Mylapore, Chennai-4, 1961,
[8] Pera. Nagarajan. K. Prof. D. Natarajan. *Assessing for Learning.* Sriram Publishing, 1st edition November – 2017.
[9] Pera. Nagarajan. K. Prof. D. Natarajan, *Assessing for Learning.* Sriram Publishing, 1st edition November – 2017.
[10] Prof. K. Nagarajan, *Environment Education.* Sri Ram Publications, March-2022.
[11] Prof. Nagarajan. *Learning and Teaching.* Sriram Edition, First Edition, January 2022, Chennai.
[12] Dr. Meenakshi Sundaram. A. *Progressive Educational Research and Point.* Kavyamala Publishers, First Edition – December 2018.
[13] Dr. Meenakshi Sundaram. A. *Planning and Administration of Secondary Education.* Issue – Kavyamala Publications, Edition – March 2018.
[14] Dr. Meenakshi Sundaram, A. *Evaluating curriculum teaching.* Kavyamala Publishers, ed. April 2018.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[15] Dr. Meenakshi Sundaram, A. *Fundamentals in Educational Research*. Kavyamala Publishers, ed. May - 2018.
[16] Dr. Meenakshi Sundaram, A. *Planning and Administration of Elementary Education*. Kavyamala Publishers, ed. April 2018.
[17] Dr. Meenakshi Shantham. *Pedagogical Teaching and Evaluation at the Secondary Level*. Kavya Mala Publishers Publishing House, Second Edition – April 2018.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.



தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரும் பெரியாரிசமும்

## Professor and Periyarism

**முனைவர் ப. விமலா,** தலைவர் (ம) உதவிப்பேராசிரியர், முதுகலைத்தமிழியல் (ம) உயராய்வுத்துறை,

செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. P. Vimala,** Head & Assitant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0003-4486-118X**

**DOI: 10.5281/zenodo.7275494**

### Abstract

*Prof. Dr. N. Subbu Reddiar is a profound Tamil scholar who had studied many grammar, literature, religion and science-related artefacts in the Tamil language. He is a prolific writer in the fields such as grammar, literature, genealogy, poetry and religion. Thanthai Periyar's principles of atheism, the negation of superstitions, the development of rationality, the abolition of castes, abolition of female slavery are known as Periyarism. Prof. Dr. N. Subbu Reddiar had an immense love for Thanthai Periyar even though he was spiritual in nature. He wished to research Thanthai Periyar's thoughts and expressions as much as other nobles like Ramanujar, Thayumanavar, Ramalinga Swamigal, Ramakrishna Paramahamsa and others. In 2001 at the Anna Public Center, the University of Madras organised an endowment lecture in the name of Professor C.A. Perumal, where he delivered a series of lectures on Thanthai Periyar. In the first lecture, he decoded the excogitation of Periyar's stand on atheism. Prof. N. Subbu Reddiar interprets and explains in great detail the fundamental reasons behind his atheistic policies. In the second lecture, he maps out Periyar's views on what society is. Periyar is a man who had dedicated his entire life to social work. In the third episode, he explains what he thinks about the Tamil language and his views on the notion of compulsory Hindi and even sent to jail. The purpose of this article is to examine the thoughts of Prof. N. Subbu Reddiar, a Tamil scholar with deep knowledge, long experience and great responsibility for Thanthai Periyar who rationalized the Tamil society in the twentieth century.*

**Keywords:** Subburettiyar, Thanthai Periyar, Atheism, Periyarism, Tamil language.

### ஆய்வுச்சுருக்கம்

*பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆழ்ந்த தமிழறிவு படைத்தவர். ஏராளமான இலக்கணம், இலக்கியம், சமயம், விஞ்ஞானம் சார்ந்த நூல்களைக் கற்றவர். கசடற கற்றதன் மூலம் இலக்கணம் இலக்கியம் மரபுக்கவிதை புதுக்கவிதை சமயம் அறிவியல் விஞ்ஞானம் போன்ற துறைகளில் நுண்மான் நுழைபுலம் மிக்க நூல்களைப் படைத்தவர். கடவுள்மறுப்பு கொள்கை, மூடநம்பிக்கைகளை வேரறுத்து பகுத்தறிவை வளர்த்தல், சாதிகளை ஒழித்தல், பெண் அடிமைத்தனத்தை ஒழித்தல் போன்றவை தந்தை பெரியார் முன்வைத்த கொள்கைகள். இவற்றையே பெரியாரிசம்என்கிறோம்.பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் ஆழ்ந்த ஆன்மீகபற்றுடையவர் இருந்தாலும் தந்தை பெரியாரின் மீது அளவில்லாத அன்பு வைத்து இருந்தார். இராமாநுசர், தாயுமானவர், இராமலிங்கஅடிகள், இராமகிருஷ்ண*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*பரமஹம்சர் போன்றவர்களின் படைப்புகளை அறிஞர்கள் ஆராய்ந்து வருவதைப்போல் தந்தை பெரியாரின் எழுத்து, பேச்சுகளை அறிஞர்கள் என்றும் ஆய்ந்து வரவேண்டும் என்ற விருப்பமுடையவர். 2001 ஆம் ஆண்டு சென்னை பல்கலைக்கழக அண்ணா பொதுவாழ்வியல் மையத்தில் உருவாக்கப்பட்டுள்ள பேராசிரியர் சி. அ. பெருமாள் அவர்களின் அறக்கட்டளைச் சொற்பொழிவுக்காக தந்தை பெரியார் குறித்த ஆழமான செய்திகளை மூன்று சொற்பொழிவுகளில் அருமையாக விளக்கியுள்ளார். முதலாவது பொழிவில், பெரியாரின் சிந்தனைகளில் முதலிடம் வகிப்பது கடவுள் மறுப்புக்கொள்கை. அவரின் கடவுள் மறுப்புக்கொள்கைகளின் பின்னணியில் அமைந்த அடிப்படைக்காரணங்களை மிகவிரிவாகத் தெளிவுபடுத்தியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இரண்டாவது பொழிவில் ,சமூகம் என்ன என்பதைப் பெரியார் வழி நின்று விளக்குகிறார். மனிதன் ஒரு போதும் தனித்து வாழக்கூடியவன் அல்லன் – அப்படி வாழவும் அவனால் முடியாது; இங்ஙனம் வாழ்நாள் முழுவதும் சமூகப்பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் பெரியார். தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார். மூன்றாவது பொழிவில், தமிழ்மொழியின்மீது அவர் கொண்ட எண்ணம் என்ன என்பதை விளக்குகிறார். "நான் தமிழுக்குத் தொண்டு செய்வது தமிழுக்காக அல்ல; தாய்மொழியைப் பாதுகாத்தல் ஒவ்வொருவருடைய கடனுமாகும். ஆழ்ந்த அறிவும், நீண்ட அனுபவமும், மிகுந்த பொறுப்புணர்வும் கொண்ட தமிழறிஞரானபேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள், இருபதாம் நூற்றாண்டில் தமிழ்ச்சமுதாயத்தைத் தட்டி எழுப்பிய தந்தை பெரியாரைப் பற்றிக் கூறியுள்ள சிந்தனைகளை ஆய்வு செய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.*

**குறிப்புச்சொற்கள்:** ந. சுப்புரெட்டியார், தந்தை பெரியார், கடவுள் மறுப்பு, பெரியாரிசம், தமிழ்மொழி.

**முன்னுரை**

தமிழ் உலகில் எழுச்சிமிக்க சிந்தனைகளால் சமுதாயத்தை ஒளிப்பெறச் செய்தவர் தந்தை பெரியார் அவர்கள். அவர் கடவுள் மறுப்பாளராகவும் சமூக சீர்திருத்தவாதியாகவும் அனைவராலும் பார்க்கப்பட்டார். அத்தகைய எழுச்சிமிக்க கருத்தாளரின் கருத்துக்களில் உள்ள உண்மைத்தன்மையை சமூகத்திடம் கொண்டு செல்லும் விதமாக சொற்பொழிவாற்றியவர் பேராசிரியர். ந.சுப்பு ரெட்டியார் அவர்கள். சுப்பு ரெட்டியார் அவர்களை பொறுத்தவரை சிறந்த ஆன்மீக பற்றுடையவர். அறிவியல் இலக்கியம் போன்ற துறைகளில் தனக்கே உரியமுறையில் ஆய்வுகளைஆற்றியவர். அத்தகைய பேரறிஞர் பெரியார் அவர்களைப் பற்றிய கருத்துக்களில் உள்ள உண்மைத் தன்மையை தன்மையை சமூகத்திற்கு எடுத்துரைக்கும் விதமாக சொற்பொழிவு ஆற்றியுள்ளார். அத்தகைய சொற்பொழிவில் உள்ளகருத்துக்களை


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

விவரிப்பதோடு பேராசிரியர் அவர்களின் ஆய்வு திறனையும் சொற்பொழிவாற்றும் திறனையும் எடுத்துரைப்பதை இக்கட்டுரையின் மையமாகும்.

**பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்**

தமிழ் மூதறிஞரும், அறிவியல் இலக்கிய ஆர்வலருமான பேராசிரியர் டாக்டர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் ஆழ்ந்த ஆன்மீகப் பற்றுடையவர். ஏராளமான இலக்கணம், இலக்கியம், சமயம், விஞ்ஞானம் சார்ந்த நூல்களைக் கற்றவர்.கசடற கற்றதன் மூலம் இலக்கணம், இலக்கியம், மரபுக்கவிதை, புதுக்கவிதை, சமயம், அறிவியல், விஞ்ஞானம் போன்ற துறைகளில் நுண்மான் நுழைபுலம் மிக்க நூல்களைப்படைத்தவர்.

**இசம்**

ஒரு முக்கிய கொள்கையின் பிழிவுச்சாரம் என்பது இகம் – இயம் – இசம் – இயல் எனப் பல பெயர்களில் வழங்கப்படும். (தினமணி, சொல் அறிவோம் -28.06.2015)

**பெரியாரிசம்**

பெரியாரின் கொள்கை பிழிவுச்சாரம் பெரியாரிசம் எனப்படும்.ஜாதிகள் ஒழிய வேண்டும், பெண் அடிமைத்தனம் ஒழிய வேண்டும், இதற்கு பெரியாரின் தீர்வு : ஜாதிகள் ஒழிய கடவுள் மறுப்புக் கொள்கையும், பெண் அடிமைத்தனம் ஒழிய ஆண்களைப்போல பெண்களும் கற்பு நெறியிலிருந்து வெளியே வரவேண்டும், ஆகியவை பெரியாரிசத்தின் கொள்கையின் சாராம்சம். (ஈகரை தமிழ் களஞ்சியம் – வலை தளம்) பகுத்தறிவு பகலவன் தந்தை பெரியார் அவர்கள் குறித்து பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆராய்ந்து உரைத்த செய்திகளின் வழி உருவான “**தந்தை பெரியாரின் சிந்தனைகள்**” என்ற நூலை முன்வைத்து இவ்வாய்வுக் கட்டுரை அமைந்துள்ளது. தந்தை பெரியார் என்னும் ஆளுமை குறித்து பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் என்னும் ஒரு ஆளுமை அவரை எப்படி புரிந்து வைத்திருக்கின்றார். அவரை எவ்வாறெல்லாம் அணுகுகிறார் என்பதை ஆராய்வதே நோக்கம்.

**நூல் உருவான பின்புலம்**

2001 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழக அண்ணா பொதுவாழ்வியல் மையம் வழி பேராசிரியர் சி.அ.பெருமாள் அறக்கட்டளைச் சொற்பொழிவில் ஆற்றிய சொற்பொழிவே **தந்தை பெரியார் சிந்தனைகள்** என்னும் தலைப்பில் நூலாக வடிவம் பெற்றது.தந்தை பெரியாரின் சிந்தனைகளை மூன்று நிலைகளில் வகைப்படுத்தி இந்த நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

1. **கடவுள் சமயம் பற்றிய சிந்தனைகள்**
2. **சமூகம் பற்றிய சிந்தனைகள்**
3. **மொழி பற்றிய சிந்தனைகள்**

**தந்தை பெரியாருக்கும் பேராசிரியருக்குமான உறவு**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தந்தை பெரியாருக்கும் பேராசிரியருக்குமான உறவு 1934 முதல் பெரியார் மறையும் வரையிலும் இருந்தது என்பதை பெருமையுடன் தனது பொழிவில் குறிப்பிடுகிறார்.

பள்ளி கல்லூரி வாழ்வில் பேராசிரியரின் வளர்ச்சிக்கு காரணியாக விளங்கியவர்கள் அவரது ஆசிரியர்கள். ஆனால் பொதுவாழ்வில் பேராசிரியரின் பல்வேறு சிந்தனைகளைத் தூண்டியவர் தந்தை பெரியார் அவர்கள் என்று குறிப்பிடுகிறார்.

> **என்மாணாக்கர் வாழ்வில் - நான் அறிவியல் மாணாக்கன்- என் சிந்தனையைத் தூண்டியவர்கள் எனக்குக் கணிதம், அறிவியல் கற்பித்த பேராசிரியப் பெருமக்கள் (1934-1939) நன்முறையில் அமைந்தமையால் அறிவியலில் முதன்வகுப்பு - கல்லூரியில் முதல்நிலை- மாநிலத்தில் மூன்றாம் நிலையில்- தேர்ச்சியடைய முடிந்தது. ஆனால் பொது வாழ்வில் என் சிந்தனையைத் தூண்டி அது வளரக் காரணமாக இருந்தவர் தந்தை பெரியார் தான் என்பதை இன்றளவும் நீள நினைந்து பார்க்கின்றேன் (தந்தை பெரியார் சிந்தனைகள், பக். 5, 6)**

என்ற வரிகள் இளைஞராகப் பேராசிரியர் இருந்தபோதே அவரது மனத்தை அதிகமாகக் கவர்ந்த தலைவர் பெரியார் என அறிய முடிகிறது. குடியரசு, விடுதலை இதழ்களில் வந்த அவருடைய கட்டுரைகளைத் தொடர்ந்து வாசித்தும் வந்திருக்கின்றார்; துறையூரில் பேராசிரியரின் முயற்சியால் தொடங்கப்பெற்ற உயர்நிலைப் பள்ளியில், தலைமையாசிரியராக இருந்த காலத்தில் தந்தை பெரியாரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிடைத்துள்ளது. ஏழை மாணாக்கர்கட்கு உதவுவதை தன் வாழ்வில் முக்கிய நோக்கமாகக் கொண்ட பேராசிரியரின் பள்ளி வளர்ச்சிக்கு பல்வேறு முறைகளில் தந்தை பெரியார் உதவிகள் செய்துள்ளார்.

**பேராசிரியரைப் பாராட்டிய பெரியார்**

தந்தை பெரியாரை பற்றிய சொற்பொழிவிற்கான செய்திக்குள் நுழைவதற்கு முன்னால் அவருடன் நடந்த மூன்று சுவையான நிகழ்ச்சிகளை நினைவு கூறுகிறார். அவற்றுள் ஒன்று பேராசிரியர் வியந்த பெரியாரின் மதிநுட்பம். மற்றொன்று பெரியார் வியந்த பேராசிரியரின் மதிநுட்பம். அந்த இரண்டு செய்திகளை இங்கு பார்க்கலாம்.

ஒரு சமயம் பெரியார் வாழ்வில் நிகழ்ந்த 'மிதியடி வரலாறு' பற்றிக் கேட்டேன். ஒரு சமயம் அவர் திறந்த மகிழ்வுந்தில் சென்று கொண்டிருந்த பொழுது அவர்மீது அவருக்குப் பிடிக்காத ஒருவன் ஒரு மிதியடியை வீசினான். அஃது அவர் மடியின்மீது விழுந்தது. அவர் அதை எடுத்து நோக்கியபோது அது புதியதாக இருந்தது. வண்டியோட்டியிடம் ‘வண்டியைத் திருப்பு; மற்றொன்று சாலையில் கிடக்கும்; அதை எடுத்து வரலாம்! அது ஒருவருக்கும் பயன்படாது; இது நமக்கும் பயன்படாது. இரண்டும் நம் கைக்குக் கிட்டினால் நமது அலுவலகத்தில் யாராவது பயன்படுத்திக் கொள்ளலாம்’ என்று கூறி சாலையில் கிடந்த மிதியடியை எடுத்து வந்தார்.தந்தை பெரியாரைப் பார்த்து ‘செருப்பு உங்கள்மீதுப் பட்டும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கோபம் வரவில்லையே ஏன்?' என்று கேட்டேன். அதற்கவர் 'தம்பி, பொதுத்தொண்டில் இருப்பவர்கட்கு இது போன்றவை அடிக்கடி நிகழக்கூடியவை. படித்தவனாக இருந்தால் கூட்டத்தில் மறுத்துப் பேசுவான்; அல்லது செய்தித்தாளில் மறுப்பு தெரிவிப்பான். இவன் படிக்காத முட்டாள். இவன் தன் எதிர்ப்பைச் செருப்புமூலம் காட்டினான். இதில் கோபப் படுவதற்கு என்ன இருக்கின்றது?' என்று அமைதியாகக் கூறினார் 'பெரியார், பெரியாரே' என்பது என் அறியா மதிக்குத் தெளிவாயிற்று.

பிறிதொரு சமயம்: தந்தை பெரியாரிடம் "ஆத்திகர் 'கடவுள் உண்டு' என்கின்றார்கள். தாங்கள் 'கடவுள் இல்லை' என்கிறீர்கள். அவர்கள் ஏதோ ஒரு பொருளை நினைத்து உண்டு என்கிறார்கள். அவர்கள் பேச்சில் உண்டு என்பதன் எழுவாய் 'கடவுள்' நீங்கள் 'இல்லை' என்கிறீர்கள்? எந்தப் பொருளை நினைத்து இல்லை என்கிறீர்கள்?" என்று வினவினேன். அவர் சிறிதுசிந்தித்து 'ஒன்றும் தெரியவில்லையே. கிழவனை மடக்கி விட்டீர்களே' என்று சொல்லிச் சிரித்தார். 'நான் சொல்லட்டுமா?' என்றேன். 'சொல்லுங்கள்' என்றார். 'அய்யா, அவர்கள் விநாயகர், முருகன், சிவபெருமான், திருமால், துர்க்கை முதலிய எண்ணற்ற தெய்வங்களை நினைந்து கடவுள் உண்டு என்கிறார்கள். நீங்கள் அவர்கள் எழுவாயாகக் கொண்டுள்ள அனைத்து தெய்வங்களையும் ஒன்றாகக் கட்டி, உங்கள் பக்கம் இழுத்து அதையே எழுவாயாகக் கொண்டு 'இல்லை' என்கிறீர்கள் என்றேன். 'ஆமாம், ஆமாம்; அதுதான், அதுதான்' என்று சொல்லி, 'ஒன்றையும் நினையாமல் ஏதோ சொல்லிக் கொண்டு வந்தேன். நீங்கள் சிந்தித்துப் பேசுகிறீர்கள். உங்கள் சிந்தனை வளர்க' என்று வாழ்த்தினார். அந்த வாழ்த்துதான் இன்றளவும் என்னைச் சிந்திக்கத் தூண்டுகின்றது. (தந்தை பெரியார் சிந்தனைகள், பக். 5, 6)

**இவர்தான் பெரியார்**

நூற்றுக்கணக்கான மலைகள் ஆயினும் நோக்கமுடியாத உயரம் இமயம்! அலைகள் ஆயிரக்கணக்கானவைகள் எனினும் அளக்கமுடியாத ஆழம் கடல்! இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் தோன்றிய தலைவர்கள் எண்ணற்றோர்! மக்களின் மனதில் நிற்பவர்களோ மிகச் சிலரே. மிகச் சிலரில் முதன்மை இடம் வகிப்பவர் தந்தை பெரியார்.

> **தமிழ் இலக்கிய வரலாற்றில் முதன்முதலில் பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பிய பெருமை சித்தர்களைச் சாரும். "கோயிலாவதேதடா! குளங்களாவதேதடா!" "நட்ட கல்லும் பேசுமோ - நாதன் உள்ளிருக்கையில்" என்று பல நிலைகளில் எடுத்தியம்பினர். ஆனால் சித்தர்களின் சித்தாந்தங்களினால் பாமரமக்களின் மத்தியில் பயன் பெரிய அளவில் விளையவில்லை என்றே கூறலாம். சித்தர்களுக்குப் பிறகு பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பத் தமிழில் எளிய வழிகளில் எல்லோரும் புரிந்துகொள்ளும்படி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


**விளங்கப்பேசி மக்களைத் தட்டியெழுப்பிய பெருமை தந்தை பெரியாரையே சாரும். (தந்தை பெரியார் சிந்தனைகள், அணிந்துரை)**

பெரியார் சமூக சீர்திருத்தப் போராளியாகவும். அறிவுலகின் திறவுகோலாகவும். ஆதிக்கவாதிகளுக்கு அபாய சங்காகவும். மனித சமுதாயத்தின் நல்வாழ்விற்கான வழிகாட்டியாகவும் விளங்கியவர் தந்தை பெரியார். ‘பெரியார் மட்டும் பிறந்திருக்காவிட்டால் இன்று சமத்துவபுரங்களும், தாழ்த்தப்பட்ட மக்களின் மேம்பாடும் கனவாகவே போயிருக்கும்.

**பெரியாரின் பொன்மொழிகள்**

- **உனக்கு பெருமை வேண்டுமானாலும.உற்சாகம் வேண்டுமானாலும் பிற மனிதனுக்கு தொண்டு செய்வதன் மூலம் தேடிக்கொள்.**
- **மதம் மனிதனை மிருகமாக்கும் சாதி மனிதனை சாக்கடையாக்கும்**
- **யார் சொல்லி இருந்தாலும் எங்கு படித்திருந்தாலும் நானே சொன்னாலும் உனது புத்திக்கும் அறிவுக்கும் பொருந்தாத எதையும் நம்பாதே.**
- **ஒருவன் தன்னிடம் பிறர் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென எதிர்பார்க்கிறானோ அப்படி எல்லோரிடமும் தான் நடந்து கொள்வதே ஒழுக்கமாகும்.**
- **கல்வி அறிவும் சுயமரியாதை எண்ணமும் பகுத்தறிவு தன்மையுமே தாழ்ந்து கிடக்கும் மக்களை உயர்த்தும்.**

போன்ற பல்வேறு சிந்தனைகளை தனது உரை மொழிகளால் பொன்மொழியாக்கியவர் .தமிழ் நூல்களில் திருக்குறளுக்கு முக்கியத்துவம் அளித்தவர்.

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு (குறள். 423)**
**எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள். 355)**

என்னும் குறளுக்கு வாழ்வியல் எடுத்துக்காட்டு பெரியார்.அதையே அனைவரும் பின்பற்ற வேண்டும் என விரும்பியவர்.நான் சொல்லுகின்ற செய்திகளைக் கூட அப்படியே நம்பிவிடாதீர்கள். ஆராய்ந்துப்பார்த்து உண்மையிருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள் என மக்களுக்கு எடுத்துக் கூறியவர். கடவுளின் பெயரால் யாகம், பூஜை, திருவிழாக்கள், சடங்குகள் நடத்தி பண விரயம் செய்து அதனால் மனிதநேயத்திற்கு புறம்பாக நடைமுறையில் நடந்து வரும் கொடுஞ்செயல்களைக் கண்டு மனம் பொறுக்காத பெரியார், **“கடவுளை மற, மனிதனை நினை”** என்றார். மானமும் அறிவும் மனிதனுக்கு அழகு என்பதைத் தொடர்ந்து வலியுறுத்தியவர்.

**கடவுள் சமயம் பற்றிய சிந்தனைகள்**

தந்தை பெரியாரின் கடவுள் சமயம் பற்றிய கருத்துகளைக் கூறுவதற்கு முன்னதாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சமயங்கள் கடவுளைப் பற்றிக் கூறும் கருத்துகளைக் கூறி, அப்போதுதான் பெரியாரின் கருத்துகள் புரியும் என்பதையும் குறிப்பிடுகிறார் ந.சுப்புரெட்டியார். மேலும் சமயம் குறித்த செய்திகளைபேசும்போது சைவம் குறித்தும், சைவசமயக் கடவுளர்களின் தோற்றப் பின்புலம் பற்றியும் பல்வேறு பக்தி இலக்கியங்கள் வழி விளக்குகின்றார்.வைணவத்தில் இறைவனின் திருமேனி, கணபதி, முருகன் முதலானோருக்குச் சொல்லப் படுகின்ற தோற்றப் பின்புலங்களை விளக்குதல் திருமால் வடிவம், திருச்சங்கு, திருவாழி ஆகியவற்றை விளக்குகிறார் .

அதற்குப் பிறகு பெரியாரின் கடவுள் பற்றிய சிந்தனைகளைத் தொகுத்து முன்வைக்கின்றார். கடவுள் தோற்றம், கடவுள் நம்பிக்கை, எல்லாம் வல்லவர், உருவ வழிபாடு, கோயில்கள், கடவுள் மறுப்பு, கடவுள் ஒழிப்பு என ஒவ்வொரு தலைப்பின் கீழும் பல்வேறு உட்தலைப்புகளின் வழி பெரியாரின் மறுப்புச் சிந்தனைகளைத் தொகுத்துக் கூறுவதோடு அவற்றில் சிலவற்றிற்கு உடன்பட்டும், சிலவற்றிற்கு மாற்றுக் கருத்துகளைப்பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கூறிச் செல்வதை காணலாம்.

> **மக்கள் முன்னேற்றத்தில் மதம் வந்து தடைசெய்தால் அஃது எந்த மதமாக இருந்தாலும் ஒழித்துத்தான் ஆகவேண்டும். உன்னைப் பறையனாய்ப் படைத்தார்; அவனைப் பார்ப்பனனாய்ப் படைத்தார்; என்னைச் சூத்திரனாய்ப் படைத்தார் என்று கடவுள்மேல் பழிபோடும் கொடுமைகள் ஒழிக்கப்பட வேண்டும் என்றால் கடவுள் ஒழிக்கப்பட வேண்டும் (தந்தை பெரியார் சிந்தனைகள், பக். 49)**

என்று தந்தை பெரியார் சிந்தித்ததை தெளிவாக விளக்குகிறார் நூலாசிரியர்.

**பெரியார் கூற்று வழி:**

கடவுள் ஒருவர் உண்டு என்று சொல்லிக்கொண்டு எடுத்ததற்கெல்லாம் அவர்மீது பழிபோட்டுக் கொண்டு திரிகின்றவன் முழுமூடன்; அடிமுட்டாள் என்பது அய்யாவின் கருத்து. சர்வத்திலும் வியாபகமாக இருக்கிற கடவுள் மக்களுக்கு, ஏன் தான் இருப்பதாக, தன்னைத் தானாகத் தெரிந்து கொள்ளச் செய்ய முடியவில்லை?. கடவுளைக் கற்பித்தவன் முட்டாள் என்கின்றவனைப் பார்த்து கேட்டு ஒருவன் கோபம் அடைகிறான். ஒருவரின் மனம் நோகிறது என்றால் அவன் கடவுள் தானாகத் தோன்றினாரா என்பதை நம்பவில்லை என்பதோடு கடவுள் ஒருவனால் உண்டாக்கப்பெற்றது என்று கருதுகிறான் என்பதுதானே பொருள்.

**பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூற்று**

திருக்கோயில்களுக்குச் சென்று வருவதால் பெறும் பயனைப் பற்றியும் நூல்கள் உள்ளன. அங்கு சென்று வருவது மூடத்தனம் என்று பெரியார் அவர்கள் பேசிய பேச்சும், எழுதிய கட்டுரைகளும் நூல்களாக உள்ளன. இரண்டையும் மக்கள் படித்து அவரவர்கள் விரும்பும் பயனைப் பெற்று வருகின்றனர். இவ்வாறு இரண்டு விதக் கருத்துகளும்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மன்பதையின் நடுவே என்றும் உலவிவரும் என்பதுதான் உண்மை. (தந்தை பெரியார் சிந்தனைகள், ப.37)

**சமயம் பற்றிய சிந்தனைகள்**

மதத்தின் உருவாக்கத்தையும் சிக்கல்களையும்பேசுகிறார். மதக்கேடுகள், மதவாதிகளின் கொடுமை, மதஒழிப்பு ஆகிய பெருந் தலைப்புகளின் கீழ் பெரியார் அவர்களின் சிந்தனைகளைத் தொகுத்து வழங்குகிறார் பேராசிரியர். மதவாதி மோட்சத்திற்குப் போகக் கோயில் கட்டச் செய்வான். குளம் வெட்டச் செய்வான். எறும்புப் புற்றுக்கு அரிசி போடச் செய்வான், பாம்புப் புற்றுக்கு பால் வார்க்கச் செய்வான். ஆனால் மனிதனுக்கு தொண்டு செய்வதன் மூலம் மனித இனம் மேன்மை அடையவேண்டும் என்று எந்த மத நிறுவனமோ மதவாதிகளோ போதிப்பதில்லை

**சமூகம் பற்றிய சிந்தனைகள்**

சமூக விடுதலையில் மிகுந்த விருப்பமுடையவர் தந்தை பெரியார் தாழ்த்தப்பட்ட மக்களின் விடுதலைக்காகவும்,அறியாமையில் கிடந்து உழலும் மக்களின் அறிவுக்கண்களை அகலத் திறந்து வைத்து, ஏன், எதற்கு என்கிற வினாக்களின் அணிவகுப்பை நடத்திக் காட்டியவர். அவரது உள்ளம் கட்டற்ற சிந்தனைகளின் உலைக்களமாய் எப்பொழுதும் கனன்று கொண்டே இருந்தது எனலாம்.தனது இறுதி மூச்சு வரையிலும் பகுத்தறிவு சிந்தனைகளை மக்களிடையே விதைக்கும் முகமாய் சிற்றூர் பேரூர் என தமிழகம் முழுவதும் தன்மானச் சுடரொளியாய்ச் சுற்றிச் சுழன்றவர். மொழி, இனம், நாடு, கலை, இலக்கியம், பண்பாடு எனப் பல்வேறு தளங்களில் சூறாவளியாய் சுழன்று தத்துவ ஒளி பாய்ச்சிய சிந்தனை கணல். சிறப்பு வாய்ந்த தந்தை பெரியார் அவர்களின் சமூகம் பற்றிய சிந்தனைகளைப் பேராசிரியர் அவர்கள் தனது இரண்டாவத சொற்பொழிவில் பின்வரும் தலைப்புகளில் தொகுத்துள்ளார் ஒரு சமூகமாக வாழும் பண்புடையவன் மனிதன்.அவன் குழுவாக வாழ திருமணம் என்பது தான் அடிப்படை. அதனால் இத்தலைப்பிலான பொழிவை திருமணத்தில் தொடங்குகிறார். அவை ஆட்சிமுறை, திருமணம், காதல் மணம், கலப்பு மணம், தம்பதிகளுக்கு அய்யாவின் அறிவுரை, சீர்திருத்தத் திருமணம், மறுமணம், குழந்தை மணம், திருமண அடையாளம், மூடநம்பிக்கை, விரத ஒழிப்பு (மனைவி நாகம்மை), கோயில் செல்லல் ஒழிப்பு (மனைவி நாகம்மை) சாதிக்கொள்கை, தாழ்த்தப்பட்டோர் குறித்த சிந்தனைகள், தீண்டாமை, தீண்டாமை விலக்கு, சாதித் தொழில், பார்ப்பனர், சாதி ஒழிப்பு. மதுவிலக்கு, புதுமை வேட்கை, மூடநம்பிக்கை, ஆத்மா, சோதிடம், விழாக்கள், தலைவர்கள் குறித்த பெரியாரின் கருத்துகள், பெரியாரைக் குறித்து பேராசிரியர் குறிப்பு போன்றவையாகும்.

**திருமணம்**

சுயமரியாதை இயக்கம் கண்ட தலைவர் தந்தை பெரியார் அவர்கள், பகுத்தறிவு

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அடிப்படையில் சுயமரியாதைக் கொள்கையை ஒரு வாழ்க்கை முறையாகவே (way of life) ஆக்கிக் கொண்டார் எனலாம். மதவாதிகள் எப்படி உண்பதிலும், உடுப்பதிலும் மற்றும் அன்றாட வாழ்க்கையிலும் ஒரு சில முறைகளைத் தங்களுக்கென்று வகுத்து, அதனைப் பின்பற்ற ஏற்பாடு செய்தார்களோ அதை நல்ல வண்ணம் புரிந்து, அதற்கு அறிவு வழிமாற்று முறைகளை உருவாக்கி ஒரு மாபெரும் கருத்துப் புரட்சியை நாட்டிலே உருவாக்கிய தலைவர் தந்தை பெரியார் அவர்கள். கடந்த 50 ஆண்டுக்கால எதிர்நீச்சலில் சுயமரியாதை இயக்கம் பெற்ற வெற்றிகளில், இந்தச் சுயமரியாதைத் திருமணமுறை மிகவும் குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். இதைத் தனது பொழிவில் முதன்மையாக்கி தந்தை பெரியாரின் கருத்துக்களை முன்வைக்கிறார்.

> **திருமணம் என்பது - வாழ்க்கைத் துணை ஒப்பந்தம் என்றால் ஒரு பெண்ணும் ஓர் ஆணும் சேர்ந்து உலக வாழ்வு வாழ்வதற்காக ஏற்படுத்திக் கொள்ளுகின்ற ஒப்பந்தம் என்பதாக இருக்க வேண்டுமே தவிர திருமணம் என்றால் ஆண் வீட்டாருக்குச் சம்பளம் இல்லாமல் வெறும் சோற்றுச் செலவோடு மட்டுமே ஒரு வேலைக்கு ஆள் (பெண்) சம்பாதிப்பதாக இருக்கக் கூடாது . (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 62)**

***சீர்திருத்தக் கல்யாணம்***:

பெண்கள் உலகம் முன்னேற்றம் அடைய வேண்டுமானால் அவர்களுக்கும் மனிதத்தன்மை ஏற்பட வேண்டுமானால், ஆண்களுக்கும் திருப்தியும், இன்பமும் உண்மையான காதலும் ஒழுக்கமும் ஏற்படவேண்டுமானால் சீர்திருத்தக் கல்யாணத்துக்கு இடம் அளிக்கப்பெற வேண்டியது முக்கியமான காரியமாகும். (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 67)

**விதவைத் திருமணம்**

இந்த உலகில் கணவனை இழந்த பெண்கள்தான் அதிகம். மனைவியை இழந்த ஆண்கள் அதிகம் இல்லை. காரணம் மனைவியை இழந்தவன் மறுமணம் செய்து கொள்கிறான். ஆனால் கணவனை இழந்த பெண்களை மணக்க யாரும் முன்வருவதில்லை. (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 70)

**தாலி**

ஆண் பெண் இருவரும் சம அந்தஸ்து உள்ளவர்கள் என்பதற்கு இருவர் கழுத்திலும் தாலி கட்டிக்கொள்ள வேண்டும். இல்லையேல் இருவருக்கும் இல்லாமல் இருக்க வேண்டும். (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 71) உயர்சாதி ஆணவமும் அதைத்தாங்கி நிற்கும் பழக்கவழக்கமும் என்று சரிந்து விழுந்து தரை மட்டமாகிறதோ அன்றுதான் நம்நாடும் மக்களும் நம்நாட்டு நாகரிகமும் தழைத்தோங்க முடியும் (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 96).

**பகுத்தறிவு**

பகுத்தறிவே இளைஞர்களை ஆள வேண்டும். “பட்டதாரிகளான இளைஞர்கள்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அவர்களின் குடும்பங்களுடைய நன்னிலைக்குப் பாடுபடுவதோடு, சமூகத்திற்கான பணிகளையும் செய்ய வேண்டியதுடன், பகுத்தறிவு வாதத்தின் ஒளியை எங்கும் வீசச் செய்பவர்களாக திகழவேண்டும் என விரும்பியவர். பகுத்தறிவு வாதம் என்பது அடிப்படை உண்மைகளை, நெறிகளை மறுப்பதாகாது; எதையும் காரணங்கண்டு ஆராய்ந்து உண்மை காண்பதாகும். போலித் தனங்களை அழித்தொழிப்பது தான் பகுத்தறிவு ஆகும். எண்ணங்களை செயல்களை – அறிவின் எந்த ஒரு துறையாயினும் அதில் நமக்கென்று ஒருமுறை இல்லாமலில்லை; நம்முடைய வாழ்க்கை முறைகள் அழியாதவை என்று நாம் கொண்டாடலாம். ஆயினும், அந்த முறைகளை இளமை குன்றாது தீவிரத் தன்மையோடு கூடியதாக வைத்திருக்க நாம் தவறி விட்டோம். நம் வாழ்க்கை முறை நிலைக்க வேண்டுமானால், மாறுதலை ஏற்றுக் கொள்ளத்தக்க புதிய கருத்துகளை ஏற்றுக் கொள்ளக்கூடிய இளம் இதயத்தைப் போல் நமது இதயம் பசுமையானதாக விளங்கவேண்டும் என்று ஆணித்தரமாக கூறியவர் தந்தை பெரியார். இந்த கருத்தினை அடியொற்றி பேராசிரியர். மூடநம்பிக்கை என்பது **பெருநோயாகும்** (தந்தை பெரியாரின் சிந்தனைகள், ப. 99) என பெரியார் சொன்னதை வலியுறுத்துகிறார்.

**மொழி பற்றிய சிந்தனைகள்**

'மொழி உணர்ச்சி இல்லாதவர்களுக்கு நாட்டு உணர்ச்சியோ, நாட்டு நினைவோ எப்படி வரும்? நம் பிற்காலச் சந்ததிக்காவது சிறிது நாட்டு உணர்ச்சி ஏற்படும்படி செய்ய வேண்டுமானால் மொழி உணர்ச்சி சிறிதாவது இருந்தால்தான் முடியும். அன்றியும் சமுதாய இனஉணர்ச்சி சிறிதாவது இருக்க வேண்டுமானாலும் மொழி உணர்ச்சி இருந்தால்தான் முடியும்! (பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் பகுதி 6, பக்கம் 2797). தாய்மொழி உணர்வு என்பது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது என்பதை மேலே சொன்ன பெரியார், 'மொழிப்பற்று' என்கிற செய்தியில் வேறு மாதிரியும் பதிவு செய்கிறார். 'மொழி என்பது ஒரு மனிதனுக்கு அவ்வளவு முக்கியமான சாதனம் அல்ல; அது இயற்கை ஆனதும் அல்ல; அதற்கு ஒரு கட்டாயமும் தேவையில்லை. மொழி மனிதனுக்குக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளும் அளவிற்கு - விஷயங்களைப் புரிந்து கொள்ள வாய்ப்பளிக்கும் அளவிற்குத் தேவையானதேயொழிய பற்றுக் கொள்வதற்கு அவசியமானதல்ல. (பெரியார் சிந்தனைகள் 3-2, பக்கம் 1752). இங்ஙனம் இருவேறு கருத்துக்களைப் பதிவு செய்வதற்கு அடிப்படை காரணம் மொழியாக இருந்தாலும் வேறு எதுவாக இருந்தாலும் மக்களின் மீது ஆதிக்கம் செலுத்தக்கூடாது என்பதில் தெளிவாக இருந்தார்.இத்தகைய பெரியாரின் சிந்தனைகளை பல நூல்களின் வழி உள்வாங்கிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தனத மூன்றாவது சொற்பொழிவான மொழி பற்றிய சிந்தனைகளில் பெரியார் வாழ்க்கைக் குறிப்புகள் , மொழியின் தோற்றம் , மொழிக்கலப்பு , மொழி ஆராய்ச்சி முதலானவை குறித்து பேராசிரியர் ந

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

. சுப்புரெட்டியார் அவர்கள் முதலில் தொகுத்து உரைக்கின்றார். இதனைத் தொடர்ந்து பெரியார் அவர்களின் மொழி பற்றிய சிந்தனைகளைத் தொகுத்தளிக்கின்றார்.

மொழி என்பது ஒருவர் கருத்தை மற்றவருக்கு அறிவிக்கப் பயன்படுவது என்பது தவிர வேறு எதற்குப் பயன்படுவது? இது தவிர மொழியில் வேறு என்ன இருக்கிறது? இதற்காகத் தாய்மொழி என்பதும் தகப்பன் மொழி என்பதும் ஆகியவற்றை முன்னோர் மொழி என்பதும் மொழியெல்லாம் எதற்காக மொழிக்குப் பொருத்துவது என்பது எனக்குப் புரியவில்லை (தந்தை பெரியார் சிந்தனைகள், ப. 127) பயன்படும் முறையால் தான் ஒரு மொழியின் பெருமை அமைகின்றதேயன்றி வேறு எவற்றாலும் மொழிக்குப் பெருமை இல்லை என்ற கருத்துடையவர் என்பதை நாம் அறியமுடிகின்றது. (தந்தை பெரியார் சிந்தனைகள், ப. 128)

தமிழ் மொழி குறித்து உருவாக்கப்பட்ட பல்வேறு கற்பிதங்களை கேள்விக்குட்படுத்தும் பெரியாரின் சிந்தனைகளைப் பேராசிரியர் தொகுத்தளிப்பதோடு அவற்றோடு உடன்பட முடியாதவை குறித்தும் விளக்கம் அளிக்கின்றார். பெரியார் அவர்களின் ஆங்கில மொழி பற்றிய கருத்தாக்கங்களைப் பல்வேறு நிலைகளில் பேராசிரியர் தொகுத்தளிக்கின்றார். மொழிக்கல்வி, சமஸ்கிருதம், இந்தி எதிர்ப்புக் கொள்கை ஆகியவை குறித்தும் பேராசிரியர் பெரியார் அவர்களின் கருத்துகளை விளக்குகிறார். தமிழ் மொழி ஆய்வு குறித்த பெரியாரின் சிந்தனைகளைத் தொகுத்து பேராசிரியர் விளக்குகிறார். திராவிட மொழிகள் என்று சொல்லப்பெறும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் என்பவை பிரித்துக் கொள்ளப்பெற்ற மொழிகளேயல்லாமல் கிளை மொழிகள் அல்ல என்கிறார். பிரிக்கப் பெற்ற பெரியார் அவர்களின் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிக் கூறுகிறார். தமிழ்ப்புலவர்கள் குறித்த பெரியாரின் மதிப்பீட்டையும் எடுத்துரைக்கிறார். தமிழ்ப் படிப்போடு அறிவியலையும் இணைத்து எவ்வாறு பேசவேண்டும் என்று பெரியார் சொன்ன கருத்தோடு தம் கருத்தையும் பேராசிரியர் இணைத்துச் சொல்கின்றார். (தந்தை பெரியார் சிந்தனைகள், பக். 159, 160)

**முடிவுரை**

மனித வாழ்விற்குத் தேவையான பண்பாடு, நாகரிகம், கலை, கலாச்சாரம், இலக்கியம், அறிவியல் என்ற அனைத்திலும் நம்பிக்கையும் பற்றும் கொண்டவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்அவர்கள். ஆனால் தந்தை பெரியாரோ மனித வாழ்வின், முன்னேற்றத்திற்கு தடை என்று தோன்றுகிற எல்லாவற்றையுமே தகர்த்தெறிய வேண்டும் என்று எண்ணம் கொண்டவர். இருவரும் இருவேறு பரிமாணங்களில் சிந்திக்கின்ற போதும் பெரியார் சிந்தனைகளைப் பற்றி ஒரு ஆழமான ஆய்வை மிகச் சிறப்பாக வழங்கியிருக்கிறார். சமூக நீதி என்பது பேதங்களைப் பேணுவதன்று.பேதங்கள் நீங்கப் பாலங்கள் அமைப்பது என்ற முறையில் சமூக நீதியைக் கட்டமைத்த தந்தை பெரியாரை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் வழி பயின்ற நிறைவை இந்நூல் நமக்கு வழங்குகின்றது. பேராசிரியர்பெரியாரின் எழுச்சி

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மிகுகருத்துகளும் பேராசிரியரின் சொற்பொழிவாற்றும் திறனும், ஆய்வு பாணியும் இக்கட்டுரை வழியே அறிய முடிகிறது.

### குறிப்பு நூல்கள்

[1] ந.சுப்புரெட்டியார். *தந்தைப் பெரியார் சிந்தனைகள்.* யாழ் வெளியீடு, சென்னை - 40.
[2] பதிப்பாசிரியர் வே.ஆனைமுத்து. *ஈ.வெ.ரா.சிந்தனைகள்.* சிந்தனையாளர் கழகம், திருச்சிராப்பள்ளி.
[3] கி.வீரமணி. *பெரியார் களஞ்சியம்-ஜாதி தீண்டாமை.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[4] தந்தை பெரியார். *திராவிடர் - ஆரியர் உண்மை.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[5] தந்தை பெரியார். *இளைஞர்களுக்கு தந்தை பெரியார் அறிவுரை.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு.
[6] கி.வீரமணி. *தமிழுக்கு என்ன செய்தார் பெரியார்?.* பதிப்பாளர்: திராவிடர் கழகம்.
[7] தந்தை பெரியார். *சிந்தனையும் பகுத்தறிவும்.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[8] தந்தை பெரியார். *சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்ததேன்?.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[9] தந்தை பெரியார். *தமிழும் தமிழரும்.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[10] தந்தை *பெரியார். மனித வாழ்வின் பெருமை எது?.* பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம்.
[11] கி.வீரமணி. திராவிடப் பொழில் (காலாண்டு இதழ்). ஏப்ரல் – ஜுன் 2021.
[12] முனைவர் ப.கமலக்கண்ணன். *தந்தை பெரியாரின் திறனாய்வு நெறிமுறைகள் ஒரு மதிப்பீடு* (ஆய்வு கட்டுரை). சிறகு. காம், (வலைத்தள இதழ்), 19/4/2018.
[13] து.மூர்த்தி. *பெரியார் இன்றும் தேவைப்படுகிறார்* (ஆய்வு கட்டுரை). கீற்று. காம் (வலைத்தளம்), 16/09/2013.
[14] பேராசிரியர் ந.வெற்றியழகன். *தந்தை பெரியாரின் கல்விச் சிந்தனைகள்* (ஆய்வு கட்டுரை). யதார்த்தம்.காம், (வலைத்தள இதழ்), 13/02/2020.
[15] செ.சௌந்தரி. *சிந்தனை முறையியல்.* பதிவுகள், (வலைத்தள இதழ்), 02/01/2020.

### References

[1] Prof. Dr. N. Subburettiyar. *Thandai Periyar Sinthanaigal.* Yazh Publication, Chennai-40.
[2] V. Anaimuthu, Editor. *Periyar E.Ve.Ra Sinthanaigal.* Sinthanaiyalar Kalagam, Tiruchirappalli.
[3] Thandhai Periyar. Editor: K. Veeramani. *Periyar Kalangiyam-Caste Untouchability.* Periyar Suyamariyaadai Iyakkam.
[4] Thanthai Periyar, Author. *Dravidian-Aryan unmai.* Periyar Suyamariyaadai Iyakkam.
[5] Thanthai Periyar. *Periyar Advice to the Youth.* Periyar Suyamariyaadai Iyakkam Publication.
[6] K. Veeramani, Author. *What did Periyar do to Tamil?* Publisher: Dravidar Kazhagam
[7] Thanthai Periyar, Author. *Thinking and* Reasoning. Periyar Suyamariyaadai Iyakkam Publication.
[8] Thanthai Periyar, Author. *Who Created the Self-Esteem Movement?* Periyar Suyamariyaadai Iyakkam Publication.
[9] Thanthai Periyar, Author. *Tamilum Tamilarum.* Periyar Suyamariyaadai Iyakkam Publication.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[10] Thanthai Periyar, Author. *What is the pride of human life?* Periyar Suyamariyaadai Iyakkam Publication.
[11] K. Veeramani, Magazine Editor. *Dravida Pozil.* (Quarterly Magazine). April – June 2021.
[12] Dr. P. Kamalakannan. *An Appraisal of Thanthai Periyar's Critical Ethics.* (Aayvu Katturai). siraku.com, (web magazine), 19/4/2018.
[13] D. Murthy. *Periyar Still Needed Today.* (Aayvu Katturai). keetru.com (website), 16/09/2013.
[14] Professor N. Vetiyazhagan. *Thanthai Periyar's Educational Thoughts.* (Research Paper).yathartham.com, (web magazine), 13/02/2020.
[15] S.Soundary. *Periyar's Methodology of Thought.* (Research Paper). Pathivugal, (Web Magazine), 02/01/2022.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் பார்வையில் காலமும் கவிஞர்களும்

## Time and Poets in the View of Professor

**முனைவர் இரா.விமலா தேவி,** உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வுத்துறை,

செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. R. Vimala Devi,** Assistant Professor, PG & Research Department of Tamil,

Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0001-7235-6311**

**DOI: 10.5281/zenodo.7275498**

### Abstract

*Literature narrates the experiences of human life. The ideas prevailing in the society of the people are regulated by the literary evidence and the people of the society through the literary works lead the society to improve. Thus the writer benefits society through his/her books. Scholars have lived over time through their books and ideas created. Their thoughts are cherished and preserved from generation to generation. One of the greatest scholars known for such thoughts was Professor Na. Subbu Rediar. He is a versatile scholar, religious thinker, and creator and is deeply attached to the Vaishnava sect. His book "Time and Poets" (Kalamum Kavingarkalum) is a collection of articles published in various magazines. In this collection, he did studies on "Vilibharatham" that has been compared with Bharathi's "Panchali's Vow" (Panchali Sabatham) with those of the norms of standard Poetry, embellishing the imagination with the scenes he sees naturally, and reveals the characteristics of Bharathi's "Panchali's Vow". He points to the glories of the Tamil language and explains "Thirupavai" and "Thiruvembavai" as great proofs of the fact that Paavai Nonpu is Thai neeradal and Margazhi Nieradal is called Amba aadal. He has researched scientific ideas and epic characteristics of Tamils' place in business. Hence, the article seeks to explore how poets evolve through the mind, time, environment, and creative thinking, and explores Professor Subbu Reddiar's multifaceted thinking through his book "Time and Poets".*

**Keywords:** Creative Thought, Motivational Mind, Environmental Behavior, Social Thinker.

### ஆய்வுச்சுருக்கம்

*இலக்கியம் மனித வாழ்க்கையின் அனுபவங்களை பறைசாற்றுகிறது. காலந் தோறும் படைப்பாளர்கள் தம் படைப்புகளில் தான் வாழ்ந்த காலத்து நடப்பியல் நிகழ்வுகளையும் மனித வாழ்க்கை நிலைகளையும் தான் பெற்ற அனுபவங்களையும் கற்பனை கலந்து சமூகத்திற்கு வழங்கும் பொருட்டு படைப்புகளை படைக்கின்றனர். இதனால் இலக்கியம் மக்கள் சமுதாயத்தில் நிலவும் கருத்துக்கள் ஒழுங்குபடுத்தப்பட்டு தான் படைக்கும் நூல் வழியாக மக்கள் சமுதாயத்தை அடைந்து சமுதாயம் மேம்பட வழிவகுக்கின்றது. இதனால் எழுச்சி பெற்ற படைப்பாளன் தன் நூல்கள் வழி சமுதாயத்திற்கு பயன் விளைவிக்கின்றான். இவ்வாறு படைக்கப் பெற்ற நூல்கள், சிந்தனைகள் வழி அறிஞர்கள் காலம் கடந்தும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் சிந்தனைகள் அடுத்தடுத்த தலைமுறைகளாலும் போற்றி*


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*பாதுகாக்கப்படுகின்றன. அத்தகைய சிந்தனைகள் வழி அறியப்படும் அறிஞர் பெருமக்களுள் ஒருவர் பேராசிரியர் நா சுப்புரெட்டியார். அவர் பன்முக அறிஞர். சமயச் சிந்தனையாளர். படைப்பாளர். வைணவத்தில் ஆழ்ந்த பற்றுக்கொண்டவர். இவர் இயற்றிய "காலமும் கவிஞர்களும்" என்னும் நூல் பல இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பு. இத்தொகுப்பில் இயற்கையாக தான் கண்ட காட்சிகளில் கற்பனையை புகுத்தி சொல் ஓவியங்களால் அழகுபடுத்தி கவிதை புனையும் கவிஞர்கள் குறித்தும் பாரதியின் பாஞ்சாலி சபதத்தை வில்லிபாரதம் பாஞ்சாலி சபதத்துடன் ஒப்பிட்டு ஆராய்ந்து பாரதியின் பாஞ்சாலி சபதத்தின் சிறப்பியல்புகளை தெற்றென வெளிப்படுத்தியுள்ளார். அறிவியல் சிந்தனைகளையும் காவியத்தின் சிறப்பியல்புகளையும் வணிகத்தில் தமிழர் பெற்ற இடம் குறித்தும் ஆராய்ந்துள்ளார். தமிழ் மொழியின் பெருமைகளையும்,பாவை நோன்பு என்பது தைநீராடல் என்றும் மார்கழி நீராடல் என்றும் அம்பா ஆடல் என்று அழைக்கப்படுவதையும் இதற்கு சான்றாக திருப்பாவையும் திருவெம்பாவையும் விளங்குவதையும் சுட்டிச்செல்கிறார். சமயச் சிந்தனைகள் குறித்தும் சமூகம் மேம்படுவதற்கு மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள், ஆட்சியாளர்கள் இவர்களின் கூட்டுழைப்பு அவசியம் என்பது குறித்தும் நுண்மாண் நுழைபுலத்துடன் வரையப்பட்ட 12 கட்டுரைகள் அணி செய்கின்றன. தூண்டுகோல் மனம், காலம், சுற்றுப்புறச் சூழல், படைப்பாக்க சிந்தனை இவற்றின் வழி கவிஞர்கள் எவ்விதம் காலந் தோறும் உருவாகின்றனர் என்பதையும் பேராசிரியரின் பன்முகச் சிந்தனைகளையும் காலமும் கவிஞர்களும் என்னும் நூலின் வழி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.*

**குறிப்புச் சொற்கள்:** படைப்பாக்க சிந்தனை, தூண்டுகோல் மனம், சுற்றுப்புறச்சூழல், நடப்பியல் நிகழ்வுகள், சமூகச்சிந்தனையாளர்.

**முன்னுரை**

மனிதன் தன் சிந்தனையை வெளிப்படுத்த உதவும் ஊடகம் மொழி. மொழி வாயிலாகவே இலக்கியம் படைக்கப்படுகிறது. இலக்கியப் படைப்பாளி தன் படைப்புக்கு மொழியை எங்ஙனம் பயன்படுத்துகிறான் என்பதைப் பொறுத்தே படைப்பாளியின் மொழி ஆளுமை அமைகிறது. மொழியை ஊடகமாகக் கொண்டு அமையும் கவிதை இலக்கியம் மனித இனத்தின் வரலாற்றினையும் சமூக நிகழ்வுகளையும் பிரதிபலிக்கிறது. அரசியல், சமூகம், பொருளாதாரம் ஆகிய காரணங்களால் சமூகம் தொடர்ந்து மாற்றம் பெற்று வருகிறது. சங்ககாலம் முதல் சமகாலம் வரை பல்வேறு காலகட்டங்களில் கவிஞர்கள் பலர் வாழ்ந்து வந்துள்ளனர். கவி என்ற சொல் கவிஞனையும் அவன் படைப்பான கவிதையையும் சேர்த்தே குறிக்கிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**காலமும் கவிஞர்களும்**

கவிஞர்கள் தம் படைப்புகளை உருவாக்க படைப்பாற்றல் திறனுடன் தகுந்த கால சூழ்நிலையும் அமைதல் இன்றியமையாதது. இலக்கியம் தோன்றிய கால வரலாற்றினை உற்று நோக்குவோமானால் எல்லா காலங்களிலும் பேரிலக்கியங்கள் தோன்றி சிறப்பினை எய்தவில்லை. எல்லா காலகட்டங்களிலும் பேரிலக்கியங்கள் புனையும் ஆற்றல் உடையவர்கள் இருந்தாலும் அந்தக்கால அரசியல் பொருளியல் காரணங்களால் பேரிலக்கியங்கள் தோன்றி நிலை பெற முடியவில்லை. இதனை விளக்க வந்த பேராசிரியர் பக்தி இலக்கியம் சிறப்புற்று விளங்கிய காலத்தில் சமணர்கள் இயற்றிய நூல்கள் மக்களிடம் செல்வாக்குப் பெறவில்லை என்பதையும் கம்பன் காவியம் செல்வாக்குப் பெற்றதையும் சுட்டிச் செல்கிறார். மேலும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய நாட்டுப்பற்றும் விடுதலை வேட்கையுமே பாரதி போன்ற மகா கவிஞன் உருவாக காரணமாக அமைந்தன எனக் கூறுவதிலிருந்து கவிஞர்கள் காலத்தால் நிலைத்து நிற்க காலமும் ஒரு களமாக அமைகிறது என்பதை நிரூபிக்கிறார்.

> **ஆற்றல்மிக்க உணர்ச்சிகள் தடையின்றி உடனடியாக பொங்கி வழிதல் கவிதை என்ற மேனாட்டுக் கோட்பாட்டின்படி பொங்கி எழும் ஆக்க திறமை ஆகிய ஆற்றலே கவி இலக்கணத்தில் முன் நிற்பது எனினும் ஆற்றலும் அறிவுத் திறனும் பற்றிய மேற்சுட்டிய கருத்துக்களுடன் நின்றுவிடாமல் சில யாப்பு பாட்டியல்கள் கவிஞனுக்கு சில பின் புலன்களையும் தேவையாக சுட்டுவது திறனாய்வுக்கு உரியது (படைப்பியல், ப. 5)**

திராவிட இயக்கம் உச்சம் பெற்ற காலத்தில் திராவிட இயக்கக் கவிஞர்கள் திராவிடச் சிந்தனையை மக்கள் மனதில் தன் கவிதைகள் மூலம் விதைத்தனர். இதற்கு அக்காலகட்டத்தில் மக்களிடம் மிகுந்திருந்த மூடநம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களுமே காரணமாக அமைந்தன. இந்தித் திணிப்புக்கு எதிராக குரல்கொடுத்த கவிஞர்கள் தம் கவிதைகளில் இந்தி திணிப்பால் ஏற்படும் தீமைகளையும் தமிழ் மொழிக்கு அதனால் ஏற்படும் பாதிப்புகளையும் மக்களிடம் எடுத்துக் கூறியதோடு தமிழின் மேன்மைகளையும் தமிழே ஆட்சி மொழியாக நிலைக்க வேண்டும் என்பதையும் வலியுறுத்தினர். இதற்கு அக்கால சூழ்நிலையே காரணமாக அமைந்தது என்பதனையும் கருத்தில் கொள்ளலாம்.

**கற்பனை**

கற்போனைக் கனிவித்து கற்போரின் மனத்தை விரிந்த பார்வையில் செலுத்துவது. கற்பனைத்திறன் கற்பனை மிகுந்த பரப்பும் விரிவும் காட்டும் துறை. இதற்கு வரையறை அல்லது எல்லை வகுத்தல் அத்துணை எளிதன்று. கற்பனையின் வகைகளும் நிலைகளும் அதிகம்.

> **கவிதைக்கு சுவை சேர்ப்பதில் கவிஞனின் கற்பனை முக்கிய பங்கு வகிக்கிறது கவிஞன் தன்னுடைய மொழி ஆற்றலாலும் உலக அனுபவமும் துணை நிற்க உவமை உருவகம்**

**போன்ற அணிகளை கையாண்டு கவிதைக்கு சுவை சேர்க்கின்றான் (சங்கத்ததமிழ் கவிதை அழகியல் ப. 104)**

படைப்பாற்றல், சமுதாய நோக்கம், சுற்றுப்புறச்சூழல், காலம், கற்பனைத்திறன் ஆகியவை கவிதை உருவாக்கக் கூறுகளாக அமைகின்றன. இவற்றில் கவிஞர் தன் மனதில் உதித்த சிந்தனையுடன் கற்பனை ஆற்றலை கூட்டி தன் சிந்தனைக்கு மற்றவர் ரசிக்கும் வண்ணம் ஒரு உருவத்தை அல்லது படைப்பை உருவாக்குகின்றான்

**தங்கம் உருக்கி**
**தழல் குறைத்துத்தேனாக்கி**
**எங்கும் பரப்பியதோர்**
**இங்கிதமோ? (காலமும் கவிஞர்களும், ப.10)**

என்கின்ற கவிதையில் சூரியனின் கதிர்கள் தங்கம்போல் தக தகவென மின்னுவதை கவிஞர் எடுத்துக்காட்டுகிறார். கற்பனையின் ஆற்றலை இதில் காணலாம்.

**நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து**
**நிலாவென்று காட்டுகின்றாய் ஒளி முகத்தைக்**
**கோல முழுதுங் காட்டிவிட்டால் காதற்**
**கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்**
**சோலையிலே பூத்த தனிப் பூவோ நீதான்!**
**சொக்க வெள்ளிப் பாற் குடமோ? அமுத ஊற்றோ?**
**காலை வந்த செம்பரிதிக் கடலில் மூழ்கிக்**
**கனல்மாறிக் குளிர் அடைந்த ஒளிப்பிழம்போ (காலமும் கவிஞர்களும், ப. 27)**

என முழு மதியை பாரதிதாசன் இயற்கையாகிய பெண் தன் உடலை எல்லாம் நீல வானம் ஆகிய ஆடைக்குள் மறைத்துக் கொண்டு முகத்தை மட்டும் காட்டுகிறாளாம். முழு வடிவையும் காட்டி விட்டாள் இவ்வுலக மக்கள் காதல் கொள்ளையிலே இறந்துவிடுவார்கள். கவிஞனுக்கு குளிர்மதி சோலையிலே பூத்த தனி பூவாகவும் சொக்கர் வெள்ளி பாற் குடமாகவும் அமுத ஊற்றாகவும் காலையில் தோன்றிய கதிரவன் கடலில் மூழ்கி எழுந்தால் குளிர் அடைந்த ஒளி பிளம்பாகவும் தோன்றுகிறது. கவிஞனின் கற்பனைத்திறன் படிப்போரையும் அழகியல் சிந்தனையில் திளைக்கச் செய்கிறது. தான் கண்ட நிகழ்வை சிந்தனையில் ஏற்றி கற்பனையை புகுத்தி படிப்போரை பரவசம் ஆக்கும் கவிதையை படைக்கின்றனர் கவிஞர்கள்.

**இயற்கை**

இயல்பாக தோன்றி மறையும் பொருட்கள் அவற்றின் இயக்கம் அவை இயங்கும் காலம் இயங்கும் இடம் ஆகியவை அனைத்தையும் இணைத்து இயற்கை என்கிறோம்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**இயற்கை அரங்கு, மனித அரங்கு ஆகிய இரண்டு களங்களே கவிஞனின் தொழிற்சாலைகள் என்று ஜே.சி.ஷார்ப் என்ற அறிஞர் கூறினார். சங்க காலப் புலவர்கள் இங்கு குறிப்பிட்ட இரண்டு அரங்கங்களிலும் ஊடாடி வந்து சொல் ஓவியங்களைத் தீட்டினர். ஆகையால் தான் அச்சொல் ஓவியங்களை பயில்வோர் பால்க் குரோவ் என்பார் கூறுவது போல இயற்கையும் மனிதனும் மணம் செய்து கொள்ளும் காட்சியை காண்கின்றனர். தறியின் ஊடும் பாவும் போல குறுக்கிழையும் நெட்டிழையுமாய் இவ்விரு கூறுகளும் பண்டைத் தமிழ் இலக்கியத்தில் நெய்யப்பட்டுள்ளன. பரந்து விரிந்து ஒளிரும் இயற்கை நுணித்துணரும் அகக் காட்சியையும் பண்டைத் தமிழ்ப் புலவர்கள் ஒருங்கிணைத்துப் பாடியுள்ளனர். (பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப.21)**

**பழங்கால மக்கள் இயற்கையை போற்றினர். அவர்கள் இயற்கையோடு ஒன்றிணைந்து வாழ்ந்ததுடன் இயற்கையை தெய்வமாகவும் வழிபட்டனர். இயற்கை தோற்றமான சூரியன் மதி மலை ஆகியவற்றிற்கு விழா எடுத்து மகிழ்ந்தனர். (புனிதம்.பா. கலித்தொகை உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள், ப.2)**

இவ்வகையில் சங்கப்புலவர் கபிலர் மயில் நடனம் ஆடும் காட்சியையும் கலை கூத்தாடும் நிகழ்வையும் இணைத்துப்பார்க்கிறார்

**ஆடமை குயின்ற அவிர் துளை மருங்கில்**
**கோடையவ்வழி குழல்இசை யாகப்**
**பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்**
**தோடமை முழவின் துதை குரலாகக்**
**கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு**
**மலைப்பூஞ் சாரல் வண்டுயாழ் ஆக**
**இன்பல் இமிழ்இசை கேட்டுக் கலிசிறந்து**
**மந்தி நல்லவை மருள்வன நோக்கக்**
**கழைவளர் அடுக்கத்து இயலி ஆடும்மயில்**
**நனவுப்புகு விறலில் தோன்றும்... (அகநானூறு, பா. 82)**

மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனார் கதிரவனின் கதிர்கள் நுழையமுடியாத சோலையில் சோலை குயிலின் இசையையும் வண்டினங்கள் பாடல்களையும் பக்கவாத்தியமாக கொண்டு மயில்கள் நடனம் ஆடுவதாக காட்டுகிறார்

திருத்தக்க தேவர் வண்டுகள் யாழ் போல் ஒலிக்க தும்பிகள் புல்லாங்குழல் போல ஓசை எழுப்ப குயில்கள் மத்தள ஒலிபோல் கூவ பண் பாட, இளவேனில் என்ற கூத்தன் நடனம் ஆடுவதாகவும் சுட்டுகிறார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கம்பரோ மயில்கள் நடனமாட இடி முழக்கம் செய்ய குவளை கொடிகள் கூத்துப் பார்ப்பதாகவும் குவளை மலர்கள் அவர்தம் கண்களாகவும் வண்டுகள் ரீங்காரம் இன்னிசை இசைக்க மருதத்திணை அரசு இவற்றை கண்டு கழிப்பதுமாக காட்சிப்படுத்துகிறார். இவ்வாறு கவிஞர்கள் தாம் இயற்கையாகக் கண்டுகளித்த காட்சிகளை ஒப்பிட்டு கற்பனை கலந்து கவிதையாக வடித்துள்ளனர். இயற்கையாக மயில் ஆடும் நடனத்தை மற்றைய இயற்கை காட்சிகளுடன் ஒப்பிட்டு அவர்தம் கற்பனையை கலந்து படிப்போர் இன்புறத் தக்க வகையில் கவிதை வடிக்கின்றனர். இக்காட்சிகளை காட்சிப்படுத்தும் பேராசிரியர் கவிஞர்கள் கவிதை வடிக்க இயற்கையும் ஒரு கூறாக விளங்குவதை தெற்றென விளக்குகிறார். கவிதை உருவாக்கத்தில் காலம், கற்பனை, இயற்கை, மட்டுமின்றி கவிஞனின் மனநிலையும் வெளிப்படுகிறது. ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த் என்பார் தத்துவத்தையும் கம்பர் உலகியலையும் இறைவன் தன்மையையும், திருத்தக்கதேவர் நிலையாமையையும் தன் பாடல்களில் கலந்து தருகிறார் என்பது பேராசிரியரின் கருத்தாக உள்ளது.

**பாரதியின் பாஞ்சாலி சபதம்**

பாரதி இயற்றிய பாஞ்சாலி சபதம் இருபதாம் நூற்றாண்டில் உருவான ஒரு தமிழ் காப்பியம்.

> **பாரதி தனித்துவம் கொண்டு தனக்காக மட்டும் இன்றி நாட்டுக்காகவும் வாழ்ந்தவர். தமிழ்த்தாய்க்கு பாமாலையால் புகழ் மாலை சாத்தியவன். பாரதி கவிதை சுவையில் கற்பனைத் திறனில் சொல் வளத்தில் பாடுபொருளில் விளக்கிடும் உவமையில் புதுமைகள் புகுத்தி இசை நாதமும் தாளமும் இணங்க கவி சமைத்து தமிழ் மொழியின் மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் (துஸ்யந்தி சுகுணன். பாரதியின் தமிழ் கவிதை இலக்கியங்களில் பன்முகத்தன்மை. ப.2)**

2500க்கும் மேற்பட்ட வரிகளை உடைய பாஞ்சாலி சபதம் கவிதை சுவையுடனும் நாடகப் பண்புகள் உடனும் புதிய கருத்துக்களுடனும் விளங்குகிறது. இக்காப்பியத்தில் காப்பியத்திற்கு உரிய இலக்கணங்கள் எவ்விதம் பொருந்துகின்றன என்பதை பேராசிரியர் ஆய்வுக்கு உட்படுத்தி பாஞ்சாலி சபதம் காப்பியத்திற்கு உரிய இலக்கணங்கள் உடன் பொருந்துகிறது என நிரூபிக்கிறார்.

**கதைப் பொருள்**

அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்பதே காப்பியத்தின் கதைப் பொருள்.

**கதை புணர்ப்பு**

பாண்டவர்கள் ராஜசூய யாகம் செய்து பெற்ற புகழ் துரியோதனன் மனதில் பொறாமைத் தீயை மூட்டியது. அத்தீ சூதும் பொய்யும் உருவெனக் கொண்ட துட்ட மாமனுடன் ஆலோசனை செய்து பாண்டவர்களை வஞ்சனையால் சூதுக்கிழுத்து பாஞ்சாலியின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சபதத்திற்கு வித்திடுகிறது. பாரதப்போர் வளர்ச்சி அடைகிறது. பாஞ்சாலியின் சபதம் காப்பியத்திற்கு மகுடமாக திகழ்கிறது.

**தர்மத்தின் வாழ்வுதனை சூது கவ்வும்**
**தருமம் மறுபடி வெல்லும் என்னும் இயற்கை**
**தருமத்தை நம்மாலே உலகம் கற்கும் (காலமும் கவிஞர்களும், ப. 47)**

என்ற விதுரன் கூற்று வழியாக காப்பியத்தின் கருப்பொருள் வலியுறுத்தப்படுகிறது.

**காப்பியத்தின் ஒருமைப்பாடு**

அரிஸ்டாட்டில் கருத்துப்படி ஒரு காப்பியத்திற்கு தொடக்கம், நடு, முடிவு என இருத்தல் வேண்டும். அவ்வகையில் சூதாட்டத்தில் கதை துவங்கி அடிமை சருக்கத்தில் வளர்ச்சி பெற்று துகிலுரிதல் சருக்கத்தில் உச்சநிலையை அடைகிறது. திரௌபதி கண்ணனை துதி செய்தல், பீமன் அர்ஜுனன் சபதத்துடன் கதை முடிவுக்கு வருகிறது.

**காவிய மாந்தர் குணநலன்**

கதையில் வரும் கதைமாந்தர்களால் அவர்தம் குண நலன்களால் காப்பியம் சிறப்பினை எய்துகின்றது. வில்லிபாரதத்தில் வரும் திருதராட்டிரன் அயோக்கியனாகவே காட்டுகிறார். "விரகினுக்கோர் வீடு போல்வான்" ஆக படைக்கப்பட்டிருக்கிறான். ஆனால் பாரதியின் திருதராட்டிரன் நல்ல பண்புகளை உடையவனாக தன் தம்பி மக்கள் மீது அன்பு கொண்டவனாக விளங்குகின்றான். துச்சாதனன், கர்ணன், தருமன், பீமன், அர்ஜுனன் ஆகியோரின் பாத்திரங்கள் வில்லியின் பாத்திரங்களுடன் ஒப்புமையாக விளங்குவதாக பேராசிரியர் சுட்டிச் செல்கிறார்.

**தெய்வ சக்தி**

பாஞ்சாலி சபதத்தில் கண்ணன் தெய்வசக்தி உடையவனாக படைக்கப்பட்டுள்ளான். அவன் அருளால் காப்பியம் முழுமைதன்மையை எய்துகிறது. பரம்பொருளாகிய இறைத்தன்மை மனிதர்களால் நிகழ்த்த முடியாததை நிகழ்த்திக் காட்டுகிறது. பாரதியின் பாஞ்சாலி சபதத்தில் இப்பகுதி சிறக்கவில்லை என்பதையும் பேராசிரியர் சுட்டிச் செல்கிறார்.

**காப்பிய நடை**

காப்பியம் சிறப்பை எய்த காப்பிய நடையும் முக்கியப் பங்கு வகிக்கிறது. இவ்வகையில் பாரதி பாஞ்சாலி சபதத்தில் யாப்பிலக்கணத்திற்குப் புறம்பான நொண்டிச்சிந்து போன்ற சாதாரண நடையை கையாண்டாலும் அவரது ஒரு சொல் அல்லது சொற்றொடரில் மிகச்சிறந்த காட்சிகளை உருவகப்படுத்தி விடுகிறார். எடுத்துக்காட்டாக கலைமகளை, வேதத் திருவிழியாள், கற்பனைத் தேனிதழாள், சுவைக் காவியம் எனுமணிக் கொங்கையினாள், அத்தினாப் புரத்து பெண்களைச் சுட்டும் மலர்விழி காந்தங்கள் என்கின்ற சொற்றொடர்களால் அவர்களின் முழு உருவத்தையும் காட்சிப்படுத்தி விடுகிறார். இது காப்பியத்தின் சிறப்பாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அமைந்துள்ளது. மேலும், தண்டியாசிரியர் கூற்றுப்படி கடவுள் வாழ்த்து, தன்னிகரில்லாத் தலைவன் அல்லது தலைவி, நாடு, நகர் இவற்றின் வருணனைகள் சூரியன், சந்திரன் இவற்றின் காட்சிகள், மந்திரம், தூது, செலவு இகல் போன்ற கூறுகள் முதலியவை யாவும் பயின்று சருக்கங்கள் ஆக காப்பியம் அமைக்கப்பட்டுள்ளதால் பாஞ்சாலி சபதம் ஓர் உயர்ந்த காப்பியமே என நிறுவுகிறார்.

**நாடு**

நாடு என்பது பூகோள ஒற்றுமையின் வழியே ஓர் எல்லைக்கு உட்பட்டு மக்கள் வாழும் நிலப்பரப்பு எனலாம். நெல் முதலியன நட்டு பயிர் செய்து வளம் கொழித்து விளங்குவது நாடு இவ்வாறன்றி பேர் இருளாய் கடுமையாய் அஞ்சத்தக்கதாய் இருப்பது காடு. ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும் என்பதில் அறிஞர்களும் கவிஞர்களும் வேறுபடுகின்றனர். அறிஞர்கள் கூறும் நாடு ஒத்த கருத்துடையவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டும் மாறுபட்ட கருத்து உடையவர்களால் எதிர்க்கவும்படுகிறது. காரணம் ஒருவருடைய கொள்கை பற்றி மற்றவர்களுக்கு கருத்து வேற்றுமை காரணமாக இருந்தது. ஆனால் கவிஞர்கள் கம்பன், வள்ளுவன், ஷேக்ஸ்பியர் போன்ற மகா மேதைகள் நாடு பற்றிய கருத்துக்கள் எல்லா நாட்டினருக்கும் எல்லா காலத்திற்கும் பொருந்துவனவாக உள்ளன. வள்ளுவன் கண்ட நாடு எல்லா காலத்திற்கும் எவ்விதம் பொருந்துகிறது என ஆராய்கிறார் பேராசிரியர்,

**படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும்**
**உடையான் அரசருள் ஏறு (குறள். 387)**

வட நூல்கள் அரசியலை ஏழு உறுப்பாக கொண்டனர். அவை நாடு, அரசன், அமைச்சர், பொருள் வருவாய், படை, பாதுகாக்கும் அரண், பிற நாட்டு அரசுகளின் நட்பு எனக் கூறுகின்றனர். ஆனால் திருவள்ளுவர் அரசனை உயிராகவும், ஆறு உறுப்புகளையும் அரசனுக்கு துணையாக்குகின்றார். இந்த ஆறும் உடையான் அரசருள் ஏறு என்பது தெ.பொ.மீயின் கருத்தாக உள்ளது. மேலும் நாடு என்பது கேடு இல்லாததாக இருக்கவேண்டும். பகைவர்களால் துன்பம் நேரிட்டாலும் மழைவளம் குறைந்தாலும் தன் வளம் குறையாது இருக்கும் நாடே சிறந்த நாடு. நல்ல கிணறுகள், குளங்கள், ஏரிகள் ஆகியவற்றின் கீழ் நீரும் ஆறுகள், அணைகள் முதலியவற்றின் மேல் நீரும் ஒரு நாட்டிற்கு உறுப்பாகும் என குடபுலவியனார் என்ற புலவர் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்தியுள்ளார்.

**அடுபோர்ச் செழிய இகழாது வல்லே**
**நிலன் நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்**
**தட் டோர் அம்ம இவன் தட்டோரே**
**தள்ளாதார் இவண் தள்ளா தோரே (காலமும் கவிஞர்களும், ப.78)**

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

நீர் நிலைகளை உண்டாக்குபவர் புகழ் அடைவர். உண்டாக்காதவர் புகழ் அடையமுடியாது என்பதனை அரசனுக்கு அறிவுறுத்தி நாட்டின் வளத்திற்கு அடிகோலினர்.

**இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்**
**வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு (குறள். 237)**

இவ்வாறு வள்ளுவர் கருத்தை ஒட்டியே மற்ற புலவர்களும் தங்கள் கருத்துக்களை தெரிவித்துள்ளனர். இதன் மூலம் கவிஞர்களிடையே கருத்து வேறுபாடு இல்லை என்பது பேராசிரியரின் கருத்தாக உள்ளது.

**பேராசிரியரின் அறிவியல் சிந்தனைகள்**

கல்வெட்டுக்கள் செப்பேடுகள் போன்றவை ஒரு இனத்தின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் எடுத்துக் காட்டுவன. இலக்கியங்கள் மக்கள் வாழ்ந்த காலகட்டத்தில் அவர்களின் வாழ்வியலை பதிவு செய்யும் கால கண்ணாடிகள் ஆகும். சங்க கால மக்கள் தங்களின் அறிவு சார்ந்த அனுபவம் மற்றும் நுட்பமான திறன் மூலம் அறிவியல் செய்திகளை இலக்கியங்களில் பதிவு செய்துள்ளனர். இவ்வகையில் தமிழர்களின் வானியல், உயிரியல், மருத்துவ இயல் பௌதிகம் குறித்த அறிவியல் சிந்தனைகள் எவ்விதம் இலக்கியங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன என்பதை பேராசிரியரின் பார்வையில் காணலாம்.

**வானத்தில் உள்ள நாள் (நட்சத்திரம்) கோள் (கிரகம்) ஓரை (இராசி) முதலியவற்றை விளக்கி கூறுவது வான நூல். 27 நாட்களும் ஏழு கோள்களும் பன்னீரோரைகளும் குமரிக்கண்ட தமிழர் கண்டிருந்தனர். ஏழு கோள்களின் பெயரால் ஏழு நாட்கிழமையை முதன் முதலில் ஏற்படுத்தியவர் தமிழரே. அது பின்னர் உலகம் முழுவதும் பரவியுள்ளது'' (தங்கராஜ்.இல. பண்டையத் தமிழர் நாகரிகம் பண்பாட்டில் அறிவியல் சிந்தனைகள். ப.21)**

**சிலேட்டர் என்பவர் தமிழருடைய வானநூற் கணித முறையே வழக்கில் உள்ள எல்லாக் கணிதங்களிலும் நிதானமானது என்று கூறுவதன் மூலம் தமிழரின் பழமையான வானியல் அறிவு புலப்படுகிறது. ஞாயிறு குடும்பத்தின் முதலாவது கோள் புதன். ஞாயிறு குடும்பத்தின் இரண்டாவது கோள் வெள்ளி. ஞாயிறு உதயத்திற்கு முன் வெள்ளி கோள் கிழக்கிலும் ஞாயிறு மறைவிற்குப்பின் மேற்கிலும் மிகுந்த ஒளியுடன் காணப்படும். வெள்ளியும் பூமியும் ஒத்த அமைப்புடைய இரு கோள்கள் என்று அறிவியலாளர்கள் கூறுகின்றனர். பூமியிலுள்ள உயிரினத் தோற்றம் போல் வெள்ளியில் உயிர்கள் வாழ முடியாது ஏனெனில் ஞாயிற்றின் அருகில் வெள்ளி இருப்பதால் வெப்பம் அதிகமாக இருப்பதே காரணமாகும் (சங்க இலக்கியத்தில் அறிவியல் சிந்தனைகள், ப.35)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கோள்களின் இயக்கத்தால் இயற்கை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன என்பதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். வெள்ளி ஒரு மழைக்கோள். அது தெற்கே விலகியிருப்பது மழை இல்லாமைக்கு அறிகுறியாகும்.

**வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்**

**பள்ளம் வாடிய பயனில் காலை (புறநானூறு, பா. 388)**

என்பதை மள்ளனார் பாட்டின் வழி அறியலாம். இதைப்போலவே வால்வெள்ளி தோன்றுவதும், சனிமீன் புகைவதும் எரிகொள்ளி வீழ்தலும் தீக்குறிகளாகக் கொள்ளப்பெற்றிருந்தன.

**மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்**

**தென் திசை மருங்கில் வெள்ளி ஓடினும்**

**வயலகம் நிறையப் புதற்பூ மலர (காலமும் கவிஞர்களும், ப. 100)**

என்ற அடிகளால் அறியலாம். சனி கரிய நிறமுடையதாதலின் மை மீன் என்றார். சனி புகைதலாவது இடபம், சிங்கம், மீனம் இவற்றோடு மாறுபடுதல். இவற்றுள் சனி தனக்கு பகை வீடாகிய சிங்க ராசியில் புகின் உலகிற்குப் பெரும் தீங்கு விளைவிக்கும் என்பதை மகத்திற் புக்கதோர் சனியெனக் காணாய் ...(தேவாரம்) என்பவற்றால் உணர்க. விண்மீன்களுள் மகம், பூரம், உத்தரத்தின் முதற்பாகம் சிங்க ராசிக்கு உரியவை. தூமம் புகைக்குடி என்று கூறப்படும் தூமகேது என்பதும் இதுவே. இது வட்டம், சிலை, நுட்பம், தூமம் என்னும் கரந்துறை கோள்கள் நான்கனுள் ஒன்று. இதன் தோற்றம் உலகிற்கு பெரும் தீங்கு விளைவிக்கும் என்பர் என்ற இவற்றின் உரைப்பகுதி இதனை நன்கு விளக்குகின்றது.

**மிகவானுள் எரி தோன்றினும்**

**குளமீனோடுந் தாட் புகையினும் (புறநானூறு, பா. 385)**

என்ற அடிகளும் ஏரி, குளமீன், தாள் என்பன வான் மீன் விசேடங்கள். இவை முறையை தோன்றுதலும் புகைதலும் உலக வறுமைக்கு ஏதுக்கள். இதே செய்தியை இளங்கோவடிகள் காவிரியின் சிறப்பைக் கூறுமிடத்து,

**கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**

**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும் (நாடுகாண் காதை, வரி 102 – 103)**

என்று குறிப்பிடுகின்றார். இதிலிருந்து தமிழர்களின் வானியல் சிந்தனை அறிவு சிறப்பாக இருந்தது தெற்றெனத் தெரிவதாக பேராசிரியர் அறிவியல் சிந்தனையில் விளக்கியுள்ளார்.

**சமுதாய மேம்பாடு**

பேராசிரியர் கல்விப்பணியில் இருப்பதால் அதில் ஏற்படும் இடர்பாடுகளையும் மாணவர்களின் வளர்ச்சிக்கு ஆசிரியர்கள், அரசாங்கம், ஆட்சியாளர்கள், பெற்றோர், மாணவர்கள் ஆற்ற வேண்டிய பங்கு குறித்து இக்கட்டுரையில் வலியுறுத்துகிறார். வருங்கால

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சமுதாயத்தை உருவாக்குபவர்கள் ஆசிரியர்கள் என்பதை அறிந்து அரசாங்கம் ஆசிரியர்களின் பொருளாதார நிலையை உயர்த்த வேண்டும்.

வாழ்க்கை நிலையினை உயர்த்தும் பொறுப்பு அரசாங்கத்திற்கு இருந்தாலும் ஆசிரியர்கள் தங்கள் அறிவை வளர்த்துக் கொள்வதுடன் உயர்ந்த எண்ணங்களையும் குறிக்கோள்களையும் கொண்டு மாணவர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டும். ஆசிரியர்களின் ஆளுமையே மாணவர்களை உருவாக்கும் சக்தி உடையது. கல்விக்கூடங்களை ஆட்சி செய்பவர்களும் பெற்றோர்களும் இதில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். பெற்றோர்கள் தன் பிள்ளைகளுக்கு நூல்களை வாங்கி கொடுப்பதுடன் கல்விக் கட்டணம் செலுத்துவதுடன் தன் கடமை முடிந்துவிட்டது எனக் கருதக்கூடாது. ஒவ்வொரு சூழலிலும் அவர்களுடன் இருந்து அவர்கள் வளர்ச்சியில் அக்கறை செலுத்தினால் மட்டுமே மாணவர்கள் வெளிப்புற பாதிப்புகளிலிருந்து விடுபட்டு கல்வியில் கவனம் செலுத்துவர். மேலும் மாணவர்களும் தாம் பெரும் கல்வியறிவும் அனுபவமே பிற்கால வளர்ச்சிக்கு உதவும் என்ற பொறுப்புணர்ந்து செயல்பட வேண்டும்.

ஒரு மரம் பலன் கொடுப்பதற்கு முன்பு சீராக வளர்ச்சியடையும். அதன் பிறகே பலன் கொடுக்க ஆரம்பிக்கும். அதுபோலவே மாணவர்களும் தங்கள் கற்றல் நிலையை சிறப்பாக உருவாக்கினால் வாழ்க்கையில் உயர்ந்த நிலையை அடைவர் என்பதை வளரும் பயிர் என்னும் கட்டுரை வழியாக இச்சமூகத்திற்கு அறிவுறுத்துகிறார்.

> **படைப்போனின் குறிக்கோள் படைப்புவழி படிப்போனைச் சென்றடையும் போது அவன் கருதிய பயன் விளையும் போது அது கனமான எழுத்து ஆகிறது. மேம்போக்கான எழுத்து நகையும் உவகையும் போல் பெரும் பரப்பினரால் எளிதாக அணுகி அசை போடாமல் சுவைக்க தக்கதாகி களிப்பூட்டும் நோக்கில் முதன்மை கொண்டதாகி நீர் பாசிபோல் வேர் கொள்ளாது செவ் வானத்து வண்ணம் போல விரைந்து விலகக்கூடியது. (இலக்கியவியல் கோட்பாடும் அணுகுமுறையும், ப. 29)**

பேராசிரியரின் படைப்புகள் வழி அவர் தம் சிந்தனைகள் காலம் கடந்தும் நிலைபெற்றிருக்கிறது

**முடிவுரை**

அறிவுறுத்தல், மேம்படுத்தல், வளர்த்தல், செயல்படுத்துதல் என்ற துலங்குதல்கள் இங்கு இலக்கிய தூண்டுதல்கள் ஆகும் வகையில் பேராசிரியரின் எழுத்துக்கள் கனமான எழுத்துக்கள் ஆகிநமக்கு அறிவுறுத்தி நம் சிந்தனையை மேம்படுத்தி வளர்ப்பதோடு இதுதொடர்பான பல செய்திகளை அறிந்து செயல்படுத்துதல் என்ற வழி நம் சிந்தனை மேம்பட உதவுகிறது. எனவே காலத்தால் அழிக்க முடியாத எழுத்து வன்மை உடையதாக விளங்குகிறது. இதன் மூலம் பேராசிரியர் தத்துவம், அறிவியல், மருத்துவம், சமயம், பொதுநலம், இயற்கை ஆகியவற்றின் மீதான பன்முகச் சிந்தனையை அறிந்து கொள்ள முடிகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**குறிப்பு நூல்கள்**

[1] அல்போன்ஸ்.எம். *சங்கத்தமிழ் கவிதை அழகியல்.* பொதிகை பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2020.

[2] அன்னி தாமசு. *இலக்கிய இயல் கோட்பாடும் அணுகுமுறையும்.* அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், சென்னை, முதற்பதிப்பு, 1999.

[3] அன்னி தாமசு. *படைப்பியல்.* அமுத நிலையம் அறக்கட்டளை, சென்னை, முதற் பதிப்பு, 2007.

[4] கந்தையா.ந.சி. *அகநானூறு.* அமிழ்தம் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2009.

[5] சாமி சிதம்பரனார் (உரை). *திருக்குறள்.* கொற்றவை பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2009.

[6] சுப்புரெட்டியார்.ந. *காலமும் கவிஞர்களும்.* சுப்பிரமணியபிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, இரண்டாம் பதிப்பு, 1971.

[7] தங்கராஜ்.இல. "பண்டையத் தமிழர் நாகரிகம் பண்பாட்டில் அறிவியல் சிந்தனைகள்." *நவீனத் தமிழாய்வு*, தொகுதி - 8, ஏப்ரல் – ஜீன் 2020, ராஜா பதிப்பகம், திருச்சி.

[8] துரைசாமிப்பிள்ளை.சு ஔவை. (உரை). *புறநானூறு.* சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி, மறுபதிப்பு, 1967.

[9] துஸ்யந்தி சுகுணன். "பாரதியின் தமிழ் கவிதை இலக்கியங்களில் பன்முகத்தன்மை." *சர்வதேச தமிழ் ஆய்விதழ்*, தொகுதி - 4, ISSN : 2582-1113, சென்னை, 2022.

[10] பல்லடம் மாணிக்கம். காமாட்சி சண்முகம். (தொகுப்பு ஆசிரியர்) *திருக்குறள் வள்ளுவர் கண்ட தத்துவம். தெ.பொ.மீ களஞ்சியம் - 3,* காவியா, சென்னை, முதற்பதிப்பு, 2004.

[11] புலியூர்க்கேசிகன் (உரை). *சிலப்பதிகாரம்.* பாரிநிலையம், சென்னை, மறுபதிப்பு, 2015.

[12] புனிதம்.பா. "கலித்தொகை உணர்த்தும் வாழ்வியல் சிந்தனைகள்." *நவீனத்தமிழாய்வு* தொகுதி - 8, ஏப்ரல் – ஜீன் 2020, இராஜா பதிப்பகம், திருச்சி.

[13] மோகன் காந்தி. கா. *சங்க இலக்கியத்தில் அறிவியல் சிந்தனைகள்.* செம்மூதாய் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 2015.

[14] மோகனராசு. *திருக்குறள் மக்கள் உரை.* உலகத் திருக்குறள் மையம், சென்னை, 13ஆவது பதிப்பு, 1998.

[15] வரதராசன்.மு. *பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை.* பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2006.

**References**

[1] Alpons. M. *Sanka Thamizh Kavithai Aayakiyal.* Pothikai Pathippagam, Chennai, First

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

Edition, 2020.
[2] Annie Thomas. *Illakkia Iyal kotpadukalum Anukumuraikalum*. Amutha Nilayam Pvt Ltd, First Edition, 1999.
[3] Annie Thomas. *Padaippiyal.* Amutha Nilayam Foundation, Chennai, First Edition, 2007.
[4] Kanthaiya. N. S. *Agananuru.* Amizhtham Pathippagam, Chennai, Second Edition, 2009.
[5] Sami Chithamparanar (Urai). *Thirukkural.* Kotrravai Pathippagam, Chennai, Second Edition, 2009.
[6] Subbu Reddiar. N. *Kalamum Kavigarkalum*. Subramaniya Pillai Publishers, Tirunelveli, Second Edition, 1971.
[7] Thangaraj. ILA. "Pandaiya Thamizhar Nagarigam Panpattil Ariviyal Sinthanaigal." *Modern Thamizh Research*, Vol – 8, ISSN NO: 2321- 984, APRIL – JUNE 2020, Raja Pathippagam, Thiruchi.
[8] Thuraisami Pillai. S. Avvai. (Urai) *Purananuru.* Saiva Siddantha Nurpathipu Kalagam, Thirunelveli, Reprint, 1967.
[9] Thushyanthi Sugunan. "Barathiyin Thamizh Kavithai Illakkiyankalil Panmugaththanmai." *International Research Journal of Tamil*, Vol – 4, E-ISSN: 2582-1113, Chennai, 2022.
[10] Palladam Manikkam. Kamatchi Shanmugam. *Thirukkural Valluvar Kanda Thathuvam.* (Collection Author Su Shanmugasundaram), Kavia, Chennai, First Edition, 2005.
[11] Puliyurkesikan (Urai). *Silappathikaram.* Paari Nelayam, Chennai, Reprint, 2015.
[12] Punitham. P. *Kaliththogai Unarththum Vaziviyal Sinthanaikal. Modern Thamizh Research*, Vol – 8, APRIL – JUNE 2020, Raja Pathippagam, Trichy.
[13] Mohan Gandhi.ka. *Sanga Illakkiathil Ariviyal Sinthanaigal.* Chemmodai Publishing House, Chennai, First Edition 2015.
[14] Mohanarasu. *Thirukkural Makkal Urai.* World Thirukkural Center, Chennai, 13th Edition, 1998.
[15] Varadharasan. M. *Pazhanthamil Illakkiathil Iyarkai.* Pari Nilayam, Chennai, Second Edition, 2006.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com


# பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் பார்வையில் கம்பராமாயணம்

## Professor N. Subbu Reddiar's Views on *Kambaramayanam*


**முனைவர் மு. விஜய சாரதா,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

அண்ணா ஆதர்ஷ் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. M.Vijaya Saratha,** Assistant Professor of Tamil, Anna Adarsh College for women, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-8858-5853**



**DOI: 10.5281/zenodo.7275506**



### Abstract

*The story of the epic "Kambaramayana" is briefed along the lines of a folk song "Ayodhi Endroru Rajiyamam Athanai Dasaratha Andaram" which means there was a kingdom called Ayodhi which was ruled by Dasaratha. In the last line of this song, it is written as children do not mock any elder because you would have heard that Rama also wandered and suffered in the forest for fourteen years. After all, he teased Mandarai, an aged person who is also known as Kooni in the epic. The purpose of writing this folk song is contrary to the theme of the epic "Ramayana" written by Kambar. Similarly, whether it is literature or grammar it gets conceived in the mind of the creator as a crux and finally, it will become a piece of work which would vary depending on the creator's feeling or atmosphere that he is trying to evoke in the readers. But the view of the work can be contrastive, depending on the person who reads it and the period in which he reads it. On that basis, Prof N. Subbu Reddiar has highlighted the relationship levels among the characters, their emotions, the problems he finds in it and Kambar's expression of culture and beliefs, love, affection, hospitality and devotion of Dasaratha, Lakshmana, Bharatha, Hanuman, Guhan, and Sukrivan towards Rama is explicated in "Kambaramayanam". Hence, this article elicits a study from the viewpoint of Prof. Subbu Reddiar on "Kambaramayanam".*



**Keywords**: *Prof. Subbu Reddiar, Kambaramayanam,* Views.



### ஆய்வுச்சுருக்கம்

*பெருங்காப்பியத்திற்கு உரிய இலக்கணங்களை முழுமையாகப் பெற்று எழுதப்பட்ட கம்பராமாயணக் கதையை நாட்டுப்புறப்பாடல் ஒன்று பதினைந்து வரிகளில் சுருக்கமாகக் கூறுகின்றது. அதன் இறுதி வரிகளில் மந்தரை எனும் வயதில் மூத்த கூன் விழுந்த பெண்ணைக் கேலி செய்ததினால் இராமன் காட்டிற்குச் சென்று சிரமப்பட்டான் என்னும் பொருளில் அமைந்துள்ளது. அவ்வாறே இலக்கியம், இலக்கணம் எதுவாக இருப்பினும் அது படைப்பாளியின் மனதில் கருவாக உருவாகி, சிறப்பான படைப்பாகும்போது, படைப்பவனின் மனநிலையைப் பொறுத்தும், படைக்கப்பட்ட காலத்தைப் பொறுத்தும் குறிப்பிட்ட ஓரிரு நோக்கங்கள் கொண்டதாகத் தான் திகழ்ந்திருக்கும். ஆனால், அந்தப் படைப்பைப் படிப்பவருக்கு ஏற்ப, படிக்கின்ற காலக்கட்டத்திற்கு ஏற்ப, அதனைப் பார்க்கும் பார்வை ஒவ்வொரு முறையும் முடிவிலியாய் நீளும். அதன் அடிப்படையில் பேராசிரியர் அவர்கள்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*இராமாயணக் காப்பியத்தில் காணக் கிடைக்கின்ற கதாபாத்திரங்களின் உறவு நிலைகளையும், உணர்ச்சிகளையும், உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் விதத்தினையும், அதில் காணக் கிடைக்கின்ற உளவியல் சிக்கல்களையும் எடுத்து இயம்பியுள்ளார். கம்பர்வழி பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் பண்பாட்டையும், நம்பிக்கைகளையும் வெளிப்படுத்த முயல்கின்றார். இராமனிடத்துப் பெருங்காதல் கொண்ட உடன் பிறப்புகளான இலக்குவன், பரதன், அனுமன், குகன், சுக்ரீவன் முதலியவர்களின் அன்புடைமை, சகோதரத்துவம், இராமாயணக் கதை மாந்தர்களின் வழியாக வெளிப்படும் விருந்தோம்பல், இராமன் மீது கொண்ட பக்தி ஆகியவற்றைப் பற்றி மிகத்தெளிவாக விவரிக்கின்றார். கம்பனது இராமாயணத்தைப் படிக்கும் பொழுதெல்லாம் ஒரு வைணவராகப் பெருமிதம் கொண்டும், அதேவேளையில் தமிழ்ப்பேராசிரியராகத் தீரா வேட்கைகொண்டும், இன்னும் கம்ப நயத்தில் தோய வேண்டும் என்பது போல் மிக நேர்த்தியாகத் தன் கருத்துக்கள் அனைத்தையும் அழகியல் முறையில் ஒவ்வாரு தலைப்பின் கீழும் விளக்கி இருக்கும் விதங்கள் ஆராயப் பட்டுள்ளன.*

**குறிப்புச் சொற்கள்**: உளவியல், உறவு நிலை, உணர்ச்சிகள், நம்பிக்கை, சகோதரத்துவம்.

**முன்னுரை**

பேராசிரியரின் கம்பராமாயணம் சார்ந்த கட்டுரைகளைப் படிக்கும்பொழுது அவரின் ஆய்வுப் பார்வை, நங்கூரம் போன்றதொரு ஆழமான கருத்துக்களை முன்வைப்பதை நம்மால் காண இயலுகின்றது. கம்பராமாயணம் மட்டுமின்றி அவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களில் ஆழ்ந்து ஆள்பவர்என்பது நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது.

**தமிழும் பேராசிரியரும்**

தமிழின் சிறப்பைக் கண்டு மயங்காத மனமே இவ்வுலகில் இல்லை. இதற்கு வெளிநாட்டவரின் தமிழ்க் கொடைகளே நமக்குச் சான்றாகின்றன. தமிழைப் பாற்கடல் அமுதம் என மகிழ்ந்து பேராசிரியரின் தமிழ்ப் பற்றைக் கண்டு, தமிழக அரசு சிறப்பித்ததை,

> **தமிழாய்வுத் துறை முன்னோடிகளில் ஒருவரான இவருக்குத் தமிழக அரசு ஆறு முறை சிறந்த நூலாசிரியருக்கான பரிசு வழங்கியிருப்பது இவரின் தமிழ்த் தகவிற்கு கிடைத்தபெருமையாகும். தொல்காப்பியம், சங்க இலக்கியம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம், கம்பன், பாரதி, புதுக்கவிதை எனத் தம் இலக்கியப் பற்றை, பயிற்சியைத் தம் ஆய்வு நூல்களில் மிகத்தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார் (தமிழாய்வுத் தடங்கள், பக்.187)**

என்பதன் வாயிலாக அறியலாம்.

**பேராசிரியரும் கம்பரும்**

பேராசிரியருக்குக் கம்பரின் மீதும், கம்பராமாயணத்தின் மீதும் உள்ள அன்பும்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

ஈடுபாடும் அசாதாரணமானது. **உள்ளத்து உள்ளது கவிதை இன்பம் உருவெடுப்பது கவிதை** (முனைவர் அரங்க. மல்லிகா) என்பார் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை. ஆனால், பேராசிரியருக்கு உள்ளத்தில் உள்ளதும் இன்பமாக உருவெடுப்பதும் கம்பராமாயணமே எனலாம்.

**உள்ள மகிழ உரை நா அமுதூறக்**
**கொள்ளும் இரு காதும் குளிரவே - தெள்ளரிய**
**செந்தமிழ்க் கம்பத் திருநாடன்செய் நூலுக்கு**
**எந்த நூலாகும் இணை**

**என்று கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை சிறப்பித்த கம்பனைப் பல்லாண்டுகளாக அநுபவித்து வருகிறேன். காரைக்குடியில் வாழ்ந்த பொழுது (1950 - 1960) கம்பனில் ஆழங்கால்பட்ட நிலையில் 'குமரி மலர்', 'தினமணிக் கதிர்', தமிழ்நாடு ஞாயிறு மலர்' போன்ற இதழ்களில் பல கட்டுரைகள் வெளிவந்தன. சிலவற்றைத் தொகுத்து கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள் என்ற தலைப்பில் நூலாக வெளிவரச் செய்தேன். வேறு நூல்களில் சேர்ந்தவை போக எஞ்சிய பதினொரு கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்று இப்போது வருகின்றன (கம்பனில் மக்கள் குரல், பக் . viii)**

என்று கம்பராமாயணத்துடனான தன்தொடர்பைப் பற்றி, கம்பனில் மக்கள் குரல் எனும் நூலின் நூல் முகத்தில் குறிப்பிட்டுள்ளார். கம்பனில் மக்கள்குரல் எனும் இந்நூல் 1983இல் வெளிவந்திருக்கின்றது. இந்நூலுக்கு பின்னர் 1996-இல் ஏ.வி.எம் அறக்கட்டளைநினைவுச் சொற்பொழிவு நூலாக பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம் என்னும் நூல் வெளிவந்திருக்கின்றது. 1950 இலிருந்து 1990 வரை ஏறத்தாழ 45 ஆண்டுகளாகப் பேராசிரியர் கம்பராமாயணத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதை இதன்வழி அறிய முடிகின்றது. இதனை, **எனக்கும் கம்பனுக்கும் உள்ள உறவு 50 ஆண்டுகளுக்கு மேற்பட்டது (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக். v)** என்று அவரே கூறுவதிலிருந்து நாம் தெளிவு பெறலாம்.

**பேராசிரியரும் வைணவமும்**

உலகப் பொதுமறையாம் வள்ளுவத்தை ஈந்தளித்த வள்ளுவனை, ஒவ்வொரு மதத்தைச் சார்ந்தவரும் தங்கள் மதத்தைத் தழுவியவராகக் காட்ட முற்படுவர். அதற்குசான்று பலவும் காட்டுவர். இது நாம் அனைவரும் அறிந்ததே. அது போலவேபேராசிரியர் ந.சுப்பு ரெட்டியார் அவர்கள் கம்பனை வைணவராகவே காண்கிறார். பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதத்தினைக் கொடுத்த திருமாலின் மீது மாறாத அன்பும், தீராத காதலும் கொண்ட கம்பன், திருமாலின் அவதாரமாகவே இராமனைப் படைத்துள்ளான் என்று கூறுகிறார். அதற்கு வலு சேர்க்கும் விதமாகப் பல்வேறு சான்றுகளைக் காட்டுகிறார். கம்பன் சைவன் என்று சிலர் கூறுவதையும், சமரசவாதிகள் கம்பன் எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்தையும் சாராதவன் என்று

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கூறுவதற்கு ஆதாரத்தைத் தேடுவதையும் கூறி இத்தகைய போக்கினை தான் விரும்பததையும் சுட்டிக்காட்டுகிறார் . இதனை,

**கம்பன் ஏதோ பத்தரை மாற்று தங்கம் போல் தனது கவிதைகளை வைத்துப் போனான். அதனைச் செம்பு போன்ற உலோகத்தைச் சேர்த்து பணிப்பொன் ஆக்குவது போல், சமயச் சார்புடைய புலவர்கள் பாட பேதத்தைச் சேர்த்து தமக்குவேண்டியவாறு பொருளுரைத்துக் கொள்வர் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .7)**

என்று சாடுகிறார். அதற்குத் துணையாக இராமாயணத்தில் தெளிவுள்ள அவர்,

**பல பாடல்களில் வைணவத் தத்துவக் குறிப்புகள் காணப்படுகின்றனவேயன்றி எந்த ஒரு பாடலிலாவது சைவ சித்தாந்தக் குறிப்புகள் காணப் பெறவில்லை என்பது ஈண்டு சிந்திக்கத்தக்கது. இக் கூறியவற்றால் கம்பன் கருத்திலே இராமனே பரம்பொருள் என்பது உறுதிப் படுவதால் கம்பன் ஒரு சிறந்த வைணவன் என்பது தெளிவாகின்றது (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .11)**

என்று எடுத்துக்காட்டும் பேராசிரியர், கம்பனை வைணவனாகவே காண விழைகின்றமையும், அதற்குத் தக்க சான்றுகளைக் கூறுகின்ற விதத்திலும் அவர் வைணவத்தில் தோய்ந்தவர் என்பது புலப்படுகிறது.

**உளவியல் நோக்கு**

இலக்கியங்களின் பாடுபொருள் எதுவாக இருப்பினும் அதனுள் படைப்பாளனின் உளவியல் பண்புகள் வெளிப்படுத்துவது இயல்பு. சொற்பொழிவாளர் சுகி சிவம் அவர்கள் **உளவியலில் பெரும் புலவன் கம்பன்** (https://www.dinamani.com) என்று கூறியிருப்பது கருதத்தக்கது. கம்பன் ஓர் உளவியல் பேராசிரியன் என்பதற்கு, படிப்போரின் எண்ணத்தைக் கம்பன் எழுத்தாக்கிய விதம் உறுதுணையாகிறது. இதனையே பேராசிரியர்,

**உலக உண்மைகளை எல்லாம் மனித மனம் உணரக்கூடியது தன் மந்திரச் சொல்லால் உள்ளம் மயங்கச் செய்துவிடும் ஆற்றல் பெற்றவன் கம்பநாடன் என்கிறார் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .12)**

என்பதிலிருந்தும் நம்மால் உணரமுடிகிறது.

**அரக்கர், வேடர், பறவை முதலியோரின் நெஞ்சங்களையெல்லாம் மனித நெஞ்சங்களாக மாற்றிக் காட்டும் ஆற்றல் பெற்றவன் கம்பன் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .12)**

இதனை வெளிப்படுத்தும் விதமாக, இராவணன் தன்னுடைய மகன் இந்திரஜித் போரில் இறந்து படும்போது பாடிய பாடல்களை மேற்கோளாகக் காணலாம். தன் மைந்தனை எண்ணி எண்ணி இராவணனின் பத்துத் தலைகள் புலம்புவதையும், மண்டோதரி புலம்புவதையும் துன்பச்சுவை ததும்பத் ததும்பப் பாடியதை நோக்கும் பேராசிரியர், இச்சூழலை தயரதன் நீண்ட

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

நாட்களாகப் பிள்ளைப் பேறு இன்றி பின்னர் இராமன் பிறந்த சூழலுடன் ஒப்பிடுகிறார். அதாவது,

> **கம்பன் மாபெரும் கவிஞன். நீண்டகாலமாக மக்கட்பேறு இல்லாத தயரதனுக்கு மக்கட்பேறு உண்டாகிறது. மன்னனுக்கும் அரசமா தேவியருக்கும் எவ்வளவு மகிழ்ச்சிப் பெருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். இந்த உணர்வுக்கு ஏற்றவாறு ஒரு நூறு பாடல்களையாவது பாடி இருக்க வேண்டாமா? தக்க வாய்ப்புகள் இருந்தும் ஏன் பாடவில்லை. (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக்.31-32)**

என்று உளவியல் நோக்கில் கேள்வி எழுப்புகிறார். அதோடு அதற்குக் காரணம் என்னவாக இருக்கும் என்பதற்கும் உளவியல் நோக்கிலேயே பதில் தந்திருக்கிறார். கம்பன் பிள்ளைப் பேற்றின் மகிழ்ச்சியைப் பாடாமல், இராமாயணத்தில் அட்சயகுமாரன் முதல் இராவணன் வரை இறக்கும்போது அவர்களின் அன்புக்குரியவர்களின் கையறு நிலையை உள்ளம் உருக்கும் வகையில் பாடி இருக்கின்றான். அதற்குக் காரணம்

> **கம்பனுக்கு ஒரே ஒரு மகன் அம்பிகாபதி என்ற பெயருடன் இருந்ததாகச் செவிவழிச் செய்தி உள்ளது. ஆனால், எந்த இலக்கிய ஆசிரியரும் இவனைப் பற்றி குறிப்பிடவில்லை. இந்த அம்பிகாபதி சோழ அரசன் மகளைக் காதலித்ததாகவும், அரசன் வெகுண்டு அம்பிகாபதியைச் சிறையில் அடைத்து மரண தண்டனை விதித்ததாகவும் மற்றொரு செவிவழிச் செய்தியும் கேள்வியுறுகின்றோம். இந்த மரண தண்டனைக்குப் பிறகு கம்பன் இராமகாதையை இயற்றி இருக்க வேண்டும் என்று எனக்கு தோன்றுகிறது. இதனால் இவன் குழந்தையின்பத்தைப் பாடவில்லை என்பதும், பாட விரும்பவில்லை என்பதும் என் ஊகம். துக்கம் நெஞ்சை அடைக்கும் போது பாடல்கள் எப்படித் தோன்றும் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக்.32)**

என்று உளவியல் நோக்கில் கூறுகிறார். நம் அன்றாட வாழ்வில்கூட மகிழ்ச்சியாக இருக்கும் போது அதற்கேற்ற பாடல்களையும், துக்கம், துன்பம் அல்லது வருத்தம் போன்ற சூழலில் அதற்கேற்ற பாடல்களையும் கேட்பது இயல்புதானே. அதைத்தான் பேராசிரியர் விளக்குகிறார். அதோடு மட்டுமின்றி இதே போன்றதொரு கருத்தை அவர் குழந்தை இன்பம் (கம்பனில் மக்கள் குரல், ப.57) எனும் கட்டுரையிலும் கூறி இருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது. இதற்குப் பேராசிரியரின் மற்றொரு கருத்தும் வலுசேர்க்கிறது.

> **உலகில் ஒரு தாய் தன் இள மகன் இறந்ததைக் குறித்து அழுதலைக் கேட்குங்கால் நமக்குத் துயரம் உண்டாகிறது. ஆனால், மேகநாதன் இறந்துபட்ட போது மண்டோதரி புலம்புவதாக உள்ள பாடல்களைப் படிக்கும் போதும் அல்லது படிக்கக் கேட்கும்போதும் அளவிலா மகிழ்ச்சி உண்டாகிறது. அவலத்திலும் இன்பத்தைக்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**காண்பதால் தான் அப்பாடல்களைப் பன்முறை படிக்கக் கேட்டும் இன்புறுகிறோம் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக்.34).**

இதனைக் காணும்பொழுது கம்பன் வாசகனுக்குக் கிடைத்த மன நிலையைக் காட்டிலும், பேராசிரியரின் மன நிலை நமக்குத் தெளிவாகத் தெரிகிறது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. கம்பனில் மக்கள் குரல் எனும் நூலில் காணப்படும் கம்பனில் குழந்தை இன்பம் என்ற கட்டுரை முழுமையும் இதே போன்ற கருத்துக்களையே முன்வைக்கிறது. **உற்றவர்க்கே கண்ணீர் கம்பலை உண்டாகும்** (www.projectmadurai.org/pm_etexts/pdf/pm0471.pdf) எனும் தாயுமானவர் பாடலும் இக்கருத்தை அரண் செய்கிறது.

**தாயன்பும் தந்தையின் பிள்ளை பாசமும்**

தாய் உள்ளத்தையும், தந்தைக்குப் பிள்ளைகள் மீதான பாசத்தையும் பேராசிரியர் இராமாயணத்தை நினைக்கும்போதெல்லாம் அவர் மனம் உணரத் தவறியது இல்லை என்பதை நம்மால் உணர முடியும்.

**பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை பெறா பேதை**
**அறிவாளோபேரானந்தம் (www.projectmadurai.org/pm_etexts/pdf/pm0471.pdf)**

என்பார் தாயுமானவர். தாய்மை என்னும் சொல்லுக்கு,

**அருகுபோல் தழைத்து ஆல்போல் வேரூன்றி, பல்கிப் பெருகி வளவாழ்வு வாழ்வதற்கு மூலமாயுள்ள முதல் நிதி (செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, பக். 396)**

என்று பொருள் கூறுகிறது. பேராசிரியரின் மனதில் உள்ள இவ் அன்பு, சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம் வெளிப்பட்டு விடுகிறது. தயரதன் இராமன் மீது கொண்ட பாசத்தை பற்றிக் கூறும் தருணத்தில், இராமன் தனக்கு மகனாகப் பிறந்த போது ஏற்பட வேண்டிய மகிழ்ச்சிப் பெருக்கை வெளிப்படுத்தும் விதமாகக் கம்பன் பாடல்களைப் பாடவில்லை. ஆனால்,இராமன் கானகத்திற்குச் சென்று காடாள வேண்டும் என்ற சூழல் வரும் பொழுதுதான் கையறுநிலையில் தன் பாசத்தை வெளிப்படுத்துகின்றான் தயரத மன்னன். இதுபோன்ற பல சூழல்களைப் பேராசிரியர் கூறினாலும் இராமன் கானகம் செல்வான் என்றும், முடிசூட்டிக் கொள்ளப் போவதில்லை என்றும் கூறியதைக் கேட்டு தசரதன் புலம்பத் தொடங்குவதாகக் காணலாகும் பன்னிரண்டு பாடல்களைப் பேராசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.

**என் கண்ணீர் ஆறாய்ப் பெருக, என் உயிரும் நீங்கப் போகின்றது. வேத மந்திரங்களை ஜெபித்து ஓமம் செய்து உனக்கு நீராட்டும் பொருட்டு கங்கை முதலிய புண்ணிய நதிகளில் இருந்து கொண்டு வந்துள்ள நீரை இறந்து விட்ட எனக்கு தர்ப்பண நீராய்க் கொடுத்துப் பின்கானகம் செல்வாய் என்று தசரதன் கூறும் போது அவன் இராமன் மீது வைத்திருக்கும் பிள்ளைப்பாசம் நமக்குப் புலனாகின்றது. (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக். 23)**

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பதன் வாயிலாக உணரலாம். இதுபோலவே கோசலை, தன் மகன் பற்றிய கனவினை வெளிப்படுத்தும் இடத்தைத் தாய் அன்பிற்குச் சான்று கூறலாம்.

> **இராமன் வருகையைச் சித்தரிக்கும் பாடல். இப்பாடலில் மழைக்குன்றம் அனையான் மௌலிகவித்தான் வரும் என்பது எதிர்பார்த்து நிற்கும் தாய் உள்ளத்தை உணர்த்துகிறது. என்று என்று என்ற அடுக்குத் தொடரில் பெற்ற தாயின் உள்ளம் பலமுறை எண்ணிக் கனவு கண்டிருந்த ஆசையும் ஆவலும் புலனாகின்றன. தழைக்கின்ற உள்ளம் என்ற சொற்றொடரின் பொருள் அன்பால் கிளர்த்தெழும் தாயுள்ளத்தைக் காட்டுகின்றது. தழைக்கின்ற என்பது, இதற்கு முன் எங்குமே கண்டிராத ஒரு புதுப் பொருள் உணர்த்துவதை அறிகின்றோம். அன்னாள் என்ற சொல் அத்தாயை தொலைவில் நிறுத்திக் காட்டி இறக்கமுறச் செய்கின்றது. (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக்.21)**

என்று பேராசிரியர் அச்சூழலை விவரிப்பதன் மூலம் தாய் கோசலையின் உள்ளத்தை அறியலாம்.

> **கடித்துக் கரும்பினைக் கண்தகர நூறி**
> **இடித்துநீர் கொள்ளினும் இன்சுவைத்தே யாகும்;**
> **வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்**
> **கூறார்தம் வாயிற் சிதைந்து. (நாலடியார், பா. 156)**

என்னும் பாடலுக்கு ஏற்ப தன் மகன் அதுவும் அரசாள வேண்டிய மகன் காட்டிற்குச் சென்று வாழும் நிலையில் கூட கோசலையின் நற்குணங்கள் கைகேயி போல் மாற்றம் அடையாது திகழ்கின்றது. தன் மகன் இராமனுக்கு உதவும் குகனைப் பற்றிக் கேள்வியுறும் போது, அவனையும் தன் மகனாக ஏற்று கொள்ளுகின்ற சூழலையும் நம்மால் காணமுடிகிறது. தாய் அன்பிற்கு மற்றொரு சான்றாக, சுபத்திரையின் உபதேச மொழிகளைக் கூறலாம். இதுசகோதர வாஞ்சைக்கு எடுத்துக்காட்டாகப் பேராசிரியர் கூறியிருந்தாலும் சுமத்திரை இராமன் மீது வைத்த தாய் அன்பைக் கூறுவதாக இவ்விடத்தை நம்மால் சுட்ட இயலும். இராமன் காடு செல்லும் போது,

> **மகனே, இராமன் செல்லும் காடுதான் அயோத்தி; அந்த இராமனே நினக்கு தயரதன் மன்னன்; பூங்குழள் சீதையே நினது தாய்' என்று கருதிய வண்ணம் செல்க இனி இங்கு நிற்பது குற்றமாகும் என்று கூறியவள், இராமனுக்குப் பின் தம்பி என்று கருத இடம் தராமல் அடியானைப் போல் அவன் ஏவுந்தொழிலைச் செய்க. இராமன் மீண்டும் அயோத்திக்கு வந்தால் அவனுடன் வருக அப்படியில்லாமல் போனால் நீ முன்னரே உயிரைத் துறந்து விடு. (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .40)**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எனக் கூறும் பாடல் சுமத்திரைக்கு இராமன் மீதான தாய் அன்பை நமக்குத் தெளிவாகக் காட்டுகின்றது. தன் மகனை விட இராமன் மீது பூண்ட அன்பால் இரண்டாம் தாயாகக் காணக் கிடைக்கின்றாள். அதோடு நில்லாது தன் மகனிடம் சீதையைத் தாயாக எண்ணச் சொல்கிறாள். அவ்வாறே மண்டோதரி, அதிகாயனின் தாய் தானியமாலினி போன்றோரின் பாசத்தையும் நாம் உணரும் வகையில் பேராசிரியர் காட்சிப்படுத்துகின்றார். இவர்கள் பெற்ற பிள்ளைகளின் குணங்கள் வேறுவேறாக இருப்பினும், **என் செயினும் தாயின் சிறந்த தமரில்லை (நான்மணிக்கடிகை,பா.35)** என்று நவில்வது போல் பெற்ற பிள்ளைகள் மீதான அன்பில் குறையேதும் காண இயலா நிலையை பேராசிரியர் காட்சிப் படுத்துகின்றார்.

**உணர்ச்சிப் பெருக்கு**

சங்ககாலப் பாக்கள் காதலையும் வீரத்தையும் மட்டும் பாடவில்லை. மாறாக, கையறு நிலையைப் பற்றியும் பாடியுள்ளன. இவை உணர்ச்சியின் வெளிப்பாடே. காதல், வீரம் இரண்டைக் காட்டிலும் கையறுநிலைப் பாடல்கள் உணர்ச்சிப் பெருக்கு மிகுந்தனவாகக் காணப்படுகின்றன. அன்றாட வாழ்வில் நமக்கு ஏற்படும் கோபம், மகிழ்ச்சி, துக்கம் போன்ற அனைத்துமே உணர்ச்சியின் வெளிப்பாடுகள்தான். இதனையே தொல்காப்பியம் மெய்ப்பாடுகள் என்றுரைக்கின்றது. கம்பராமாயணத்திலும் கம்பன் பல இடங்களைக் காட்டினாலும் முத்தாய்ப்பாகச் சில இடங்களைப் பேராசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

> **நீ மணிமுடி சூடி வெண்கொற்றக்கொடி நிழற்றப் பேரணி நலம் பூண்டு அரியணையில் இலக்குமி தங்கும் மார்போடு வீற்றிருக்கக் காணுதற்குரிய யான், அதற்கு மாறாய் மரவுரிதரித்து மான்தோல் போர்த்துச் சடை முடியுடன் இருக்கும் தவக் கோலத்தை காணாது வானுலகம் சேர்தல் எனக்கு நேருமாயின் அதுவே எனக்கு நன்று என்று வருந்துகிறான் தசரதன். (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக். 23)**

என்று கூறுவதிலிருந்து தயரதனின் உணர்ச்சிப் பெருக்கைக் காணலாம். இதுபோலவே கைகேயியை, நீ என் மனைவி இல்லை, பரதன் என் பிள்ளையும் இல்லை என்றும் கூறி, தனக்கு அவன் ஈமக்கடன் செய்யக் கூடாது என்கின்றான். தன் மனைவியின் மீதான வெறுப்பை வெளிப்படுத்தும் வேகத்தில் உணர்ச்சிப் பெருக்கில் தன் மைந்தனையும் தண்டிக்கிறான் என்று கூறினால் அது மிகையல்ல. தயரதனின் இச்செயலால் சத்துருக்கனனை வைத்து இறுதிச் சடங்குகளை நிறைவேற்றி வைக்கின்றனர்.

**சகோதரத்துவம்**

நீர் வற்றிப்போன குளத்தை விட்டு எவ்வாறு அதில் வாழ்ந்த பறவைகள் சென்று விடுமோ அதுபோலத் துன்பம் வந்த நேரத்தில் விலகிப் போய்விடுபவர்களை உறவினர் என்று உரைக்க மாட்டோம். நீர் வற்றிப் போனாலும் அந்தக் குளத்தில் உள்ள கொட்டி, ஆம்பல்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

நெய்தல் போன்ற கொடிகள் எவ்வாறு ஒட்டிக்கொண்டே இருக்குமோ அது போலத் துன்பம் வந்த நேரத்திலும் துணை நின்று உதவுபவரே உறவினர் ஆவார் என்ற கருத்தை,

**அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்**
**உற்றுழித் தீர்வார் உறவு அல்லர் -அக்குளத்தில்**
**கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே**
**ஒட்டி உறவார் உறவு (மூதுரை, பா. 17)**

என்ற பாடல் வாயிலாகத் தெரிவிக்கின்றார் ஔவை. அத்தகைய சிறப்பு வாய்ந்த உறவான உடன்பிறப்பு பற்றி உடன் பிறப்புகளுக்கு ஊடான அன்பைப் பற்றிக் கூறும்பொழுது பேராசிரியர் சகோதர வாஞ்சை என்ற சொல்லை எடுத்தாள்கிறார்.

> **உடன் பிறப்பின் இன்றியமையாமையை, *உடன்பிறப்பில்லா உடம்புபாழ் என்கின்றார் தமிழ் மூதாட்டி ஔவைப் பெருமாட்டி. உடன் வந்தோன் மரித்துவிடில் வாகுவலிப்போம்* என்கின்றது நீதிவெண்பா. தம்பியுடையான் பகைக்கஞ்சான் என்பது நம் நாட்டு பழமொழி. இது கம்பர் பெருமானால் தம் நூலில் எழுதப் பெற்றுள்ளது. (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக். 35)**

என்று சகோதரத்துவத்தின் தன்மையை வெளிப்படுத்தும் பேராசிரியர் மனிதர்கள், வானரங்கள், வேடர்குல குகன், அரக்கர்கள் எனும் பிரிவுகளில் சகோதரத்துவத்தை எடுத்தாள்கிறார். மனிதர்கள் எனும் வகைப்பாட்டில் இலக்குவன், பரதன், சத்துருக்கனன் போன்றோர் மீது கொண்ட சகோதர பாசத்தைக் கூறுகிறார். மூவரும் தமிழ் இலக்கிய உலகில் மிகவும் பரிச்சயமானவர்கள். ஆனால், பேராசிரியர் சத்ருக்கனனைப் பற்றி விளக்கும் இடம் மிகவும் உன்னதமானது. இராமாயணத்தில் மற்றவர்களைப் போல் அதிகம் பேசாத பாத்திரப் படைப்பான இவன் பேசினால், அவ்வார்த்தைகள் மிகுந்த மதிப்பு வாய்ந்ததாக இருக்கும் என்பதை,

> **என்றுமே அதிகம் பேசாத சத்துருக்கனன் பேசும் போது அவனிடம் உணர்ச்சி வெள்ளம் பொங்கி வழிவதைக் காண்கின்றோம். உணர்ச்சிப் பெருக்கிலும் கோபத்திலும் நேர்மையிலும் எள்ளளவும் இலக்குவனுக்குக் குறைந்தவன் அல்லன் என்பதைக் காண்கின்றோம். (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக்.46)**

என்று கூறுகின்றார்.தயரதன் மக்கள் நால்வரும் எவ்வாறு சகோதரர்கள் இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டுகளாகின்றனரோ,அதுபோலவே சகோதரர்கள் எவ்வாறெல்லாம் இருக்கக்கூடாது என்பதற்கு வாலியையும் சுக்ரீவனையும் தக்க சான்றுகளுடன் எடுத்துக் காட்டுகின்றார். அரக்கர்களின் சகோதரத்துவத்தைக் கூற விழையும்போது இராவணன், கும்பகர்ணன் மற்றும் வீடணன் ஆகிய மூவரையும், அவர்களது பண்புகளையும் விளக்கும்போது,


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**முக்குணங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாதவை. அங்ஙனமே மூவரிடமும் சகோதர வாஞ்சை அதிகமாகக் காணப் பெறவில்லை. உலகில் நாம் பல நிலைகளைக் காண்கின்றோம் அவற்றை ஒட்டியே இந்த நிலையும் (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .56)**

என்று கூறுகிறார். இராமன், இலட்சுமணன், பரதன் மற்றும் சத்ருக்கனன் ஆகியோர் வேறு தாயருக்குப் பிறந்திருந்தாலும் அவர்களிடையே காணப்படும் அன்பு அபரிமிதமானது என்பது பேராசிரியரின் எண்ணம்.

**மக்கட்பண்பு**

இராமாயணக் காப்பியத்தின் வழியாக பேராசிரியர் மக்களது பண்புகளை நான்கு விதங்களாக விளக்குகின்றார்.

**அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து பண்புகளும் சால்பு என்னும் பாரத்தைத் தாங்கும் தூண்கள் ஆகும் என்று குறிப்பிடுவர். இவை போக நான் மக்களின் பண்புகளுக்கும் அளவில்லை. பெருங்காப்பியம் படைப்போர் இத்தகைய பண்புகளைக் கதைமாந்தர்களின் மீது ஏற்றிக் கூறுவது உண்டு. இதனால் காவியத்தைப் படிப்போர் இதனை கட்டாயம் அடைவர். ஓமியோபதி மருந்து போல் பயன் தரும். (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக். 64)**

என்று கூறுகிறார்.

மக்கட் பண்பினை விருந்தோம்பல், பரதமுனிவர், சபரி, சுக்ரீவன்,செய்நன்றி அறிதல், ஈகை போன்ற தலைப்புகளில் தனது பார்வையை எடுத்தாள்கிறார். அன்பு பற்றி கூறும்போது,

**அன்பு ஓர் நிகழ்ச்சி பண்பு அது தொடர்புடைய இடத்தில் கண்ணீராய்த் தோன்றும். தடுக்க முடியாத நிலையில் வாய்வாளாமையோடு செயல் அடக்கத்தோடு, கண்ணீர் வழியாக எப்படியும் அன்பு புலப்பட்டு விடுகின்றது. உடலால் தொண்டு செய்ய அன்பு தயங்காது. தேவை என்றால் உடலை வழங்கவும் அன்பு துணிந்துவிடும். தன்னகம் புக்க குறுநடைப் புறவின் தபுதியஞ்சிச் சீரை புக்க சோழனது பேரன்பை ஈண்டு நினைவுகூர்ந்து மகிழலாம். (பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம், பக் .70)**

என்று அன்பின் தன்மையைக் கூறுகின்றார். கற்பை மக்கட் பண்பில் வகுத்துக் கூறும் பேராசிரியர், கற்பின் தன்மையைத் திருக்குறளின் கற்பியல் வழியும், கொன்றை வேந்தன் போன்ற நூல்களின் துணைகொண்டு விளக்குகிறார். சீதையின் கற்புக்கு எந்த ஒரு களங்கமும் வரவில்லை என்பதை அனுமன் அறியும் அதே நேரத்தில், மண்டோதரியைக் கண்டு அவள்தான் சீதை எனத் தவறாக நினைத்தசூழலும் உண்டு. இதன்வழி சீதை, மண்டோதரி யாராயினும், குலம் எதுவாயினும் கற்பு நிலையில் இருவரும் ஒரே தராசில் வைத்து எண்ணத் தகுந்தவர்கள் என்பது திண்ணம். இதுபோன்றே விருந்தோம்பல் பற்றியும், கோசல நாட்டில் களத்தில் குவித்த

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

நெல்லைப் பற்றியும், களப்பிச்சை பற்றியும் தெளிவாகக் கூறுகிறார். வருவிருந்து அயரும் தன்மையைக் கூறும்போது இக்காலகட்டத்தின் சூழலையும் அவர் சாடத் தவறவில்லை. ஈகை பற்றி விளக்கும்போது காணவேண்டிய முக்கியமான பண்பு, இல்லாதவருக்கும் இயலாதவருக்கும் கொடுப்பது, தனக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்று பாராமல் தேவை இருப்பவருக்கே கொடுக்க வேண்டும் என்று சிறப்பாக விளக்குகின்றார்.

**நம்பிக்கைகள்**

பழங்காலம் முதல் இன்று வரை புழக்கத்தில் உள்ளவை நம்பிக்கை, நிமித்தம், சடங்கு போன்றவை. நம்பிக்கைகளில் ஒன்றான சாபங்களைப் பற்றியும், கம்பராமாயணத்தில் மூன்று இடங்களில் அவை இடம் பெறுவதைப் பற்றியும் விரிவாக விளக்குகிறார். அகலிகைக்கு நேர்ந்த சாபத்தையும், தசரதனுக்கு நேர்ந்த சாபத்தையும் இராவணனுக்கு நேர்ந்ததையும் விளக்கிக் கூறுகிறார். அவ்வாறே ஊழ் பற்றிய இடங்களையும் தெளிவாக விளக்குகிறார்.

**அறம்**

அறம் பொருள் இன்பம் வீடு பேறு என்று காப்பியத்தின் உறுதிப் பொருள்கள் ஆகட்டும் சங்க இலக்கிய அறத்தோடு நிற்றல் ஆகட்டும் அறம் என்பது தமிழ் இலக்கிய உலகிலும் வாழ்வியலிலும் தவிர்க்க இயலாத ஒன்று.

> **முன்னோர் அறம் என்னும் சொல்லிற்குத் தந்துள்ள விளக்கத்தோடு எதிக்ஸ் (ethics) என்னும் ஆங்கிலச் சொல்லிற்குத் தரப்படும் பொருள் விளக்கம் மிகவும் பொருந்துவதாக உள்ளது. நல்ல அல்லது தீய செயல்கள் மூலம் தானே வெளிப்படும் மக்களுடைய நடத்தையைப் பற்றிய ஆய்வியல் கலையே எதிக்ஸ் என்பதாகும். இதைத் தமிழில் அறிவியல் எனலாம். எதிக்ஸ் எனும் சொல் கிரேக்க மொழிச் சொல்லாகும். முதன் முதலில் இச்சொல் பழகிப்போன நடத்தை, வழக்கம், மரபு என்னும் பொருளை உணர்த்தி வந்தது. பின்னர் நடத்தை எனும் பொருளே போற்றப்பட்டது. ஒழுக்கத்தைக் குறிப்பிடும் moral எனும் ஆங்கிலச் சொல்லும் பழக்க வழக்கம் எனும் பொருளையே குறித்தது. இதனால் தனி மனித நடத்தை பெரும்பாலோரால் பின்பற்றபட்டபொழுது ஒழுக்கம் எனும் பண்பாக மலர்ந்து வாழ்க்கை நெறியாக மாண்புற்றது எனலாம்.**
> (www.tamilvu.org/courses/degree/c012/c0121/html/c012111.htm)

இதன் அடிப்படையில் இராவணன் பற்றிப் பேராசிரியர் கூறும் கருத்து இங்கு மிகவும் குறிப்பிடத்தகுந்தது. பல்வேறு சிறப்புகளை உடைய இராவணனின் அழிவிற்குக் காரணமாகப் பேராசிரியர் கூறும் "அறத்தைக் கடத்தல்" எனும் செயல் இங்கு மிகவும் இன்றியமையாதது.

> **சீரும் சிறப்பும் வாய்ந்த இலங்கை வேந்தன் அழியக் காரணமாக அறத்தைக் கூறுகிறார். சாதாரண மனிதர் இருவரையும் வானவர்களையும் எதிர்த்து நிற்க முடியாமல் போனதன் காரணம் என்ன? பராக்கிரமங்களைப் பல படைத்திருந்தும் காமம் ஒன்று நெஞ்சில்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **நுழைந்து அவைகளை எல்லாம் தேய்த்து விடுகின்றது. இந்த குற்றம் அவனிடம் இல்லாதிருந்தால் அவன் எவ்வளவோ மேலானவனா யிருந்திருப்பான். எல்லா மேன்மைகளும் பொருந்தியிருந்தும் இந்த ஒரு குற்றம் அவனை எவ்வளவு சிறியவன்ஆக்கி விடுகின்றது! இறுதியில் அழிவையன்றோ அவனுக்குத் தந்து விடுகின்றது. நமது ஆசையை அடக்கும்போது நாம் அமரர் ஆகின்றோம் என்றும் நாம் ஆசைக்கு உட்படும்போது அசுரன் ஆகின்றோம் என்றும் ஆன்றோர் கூறும் உண்மைக்கு இராவணத்துவம் ஓர் எடுத்துக்காட்டாக இருக்கின்றதல்லவா. (கம்பனில் மக்கள் குரல், பக் .47)**

என்று கூறி, சாதாரண மக்களும் அறிந்து கொள்ளும்படி இராவண காவியம் கூறும் அறத்தை நமக்குத் தெளிவுபடுத்தி அதன் இன்றியமையாமையை விளக்குகிறார்.

### தொகுப்புரை

கம்பராமாயணத்தை வைணவ நோக்கிலேயே கம்பர் எழுதி இருக்கின்றார் என்பது பேராசிரியர் கருத்து. கம்பன் பிள்ளை பாசத்தை விட புத்திர சோகத்தை அதிகமாகப் பாடியதற்கு உளவியல் காரணங்களைக் கூறித் தெளிவுபடுத்தியுள்ளார். கோசலை, சுமத்திரை, தான்யமாலினி, மண்டோதரி போன்றோரின் தாய் உள்ளத்தைக் காட்சிப்படுத்துகிறார். பிள்ளைகள் மீதான அன்பையும் அவர்களுக்குத் துன்பம் நேரும்போது பெற்றோருக்கு ஏற்படும் துன்பத்தையும், அவர்களின் உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் விதத்தையும் விளக்கியுள்ளார். சகோதரத்துவத்தின் இன்றியமையாமையையும், இராமன், இலட்சுமணன் சத்துருக்கனன், பரதன் போன்றோருக்கு இடையே உள்ள அன்பையும், இராவணன் கும்பகர்ணன் போன்றோருக்கு இடையே உள்ள பாசத்தையும் அதற்கான வேறுபாடுகளையும் விளக்குகிறார். கம்பராமாயணத்தின் வழியாக அக்கால மக்கட் பண்புகள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகளை எடுத்துரைக்கிறார். தனிமனித ஒழுக்கம் என்பதன் முக்கியத்துவத்தையும், ஒழுக்கமின்மை எவ்வாறு ஒரு மனிதனின் அழிவிற்குக் காரணமாக அமைகின்றது என்பதையும் காட்சிப்படுத்தியுள்ளார்.

### குறிப்பு நூல்கள்

[1] சிவம், சுகி. *உளவியலில் பெரும்புலவன் கம்பன்.* https://tinyurl.com/3tyt7372 25 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

[2] முனைவர் ச. சிவகாமி. *தமிழாய்வுத் தடங்கள்.* மாதவி பதிப்பகம், அமுதா நிலையம், சென்னை, முதற்பதிப்பு, 2017.

[3] பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். *திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்.* சென்னை, 1975.

[4] பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். *கம்பனில் மக்கள் குரல்.* வானதி பதிப்பகம், சென்னை,

**E-ISSN: 2581-7140** **UGC CARE Listed Journal**
**Volume - 5, Special Issue - 1, November 2022** **Available at: www.ijtlls.com**

முதற் பதிப்பு, 1983.

[5] பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். *பண்பாட்டு நோக்கில் கம்பன் காவியம்.* வானதி பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1996.

[6] *செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி.* செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி இயக்கம், அண்ணா நகர், சென்னை 40.

[7] *தாயுமானவர் பாடல்கள்.* www.projectmadurai.org/pm_etexts/pdf/pm0471.pdf 25 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

[8] *நாலடியார்.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை. பதிப்பு, 2007.

[9] *நான்மணிக்கடிகை.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு, 2007.

[10] முனைவர் அரங்க. மல்லிகா. *கவிமணி தேசிகவிநாயகத்தின் கவிதைகள், பாடம் – 4, p10314.* www.tamilvu.org/courses/degree/p103/p1031/html/p1031004.htm 25 ஜூன் 2022 அன்று அணுகப்பட்டது.

[11] *மூதுரை.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை 18. பதிப்பு, 2007.

**References**

[1] Sivam, Suki. *Ulaviyalil Perum Pulavan Kamban.* https://tinyurl.com/3tyt7372 Accessed 25 June 2022.

[2] Sa. Sivakaami. *Thamizhaivu Thadangal*. Maathavi Pathippagam & Amudha Nilaiyam, Chennai, 2017.

[3] Subbu Reddiar. Na. *Thiruvengadamum Tamil Ilakkiyamum*. Pari Nilayam, Chennai First Edition 1975.

[4] *Senthamizh Sorpirappiyal Perakarathi. S*enthamizh Sorpirappiyal Iyakkakam, Tamilnadu Veettu Vasathi Vaariya Aluvalaka Kattidam, Chennai- 40.

[5] Prof. Na. Subbu Reddiar. *Kambanil Makkal Kural*. Vanathi Pathippagam, Chennai, First Edition, 1983.

[6] Prof. Na. Subbu Reddiar. *Panpaattu Nokkil Kamban Kaaviyam.* Vanathi Pathippagam, Chennai, First Edition, 1996.

[7] *Thayumanavar Padalkal*. https://www.projectmadurai.org/pm_etexts/pdf/pm0471.pdf Accessed 25 June 2022.

[8] *Naladiyar*. Thirunelveli Saiva Siddandha Nool Pathippu Kalagam, Chennai, 2007.

[9] *Nanmanikadikai*. Thirunelveli Saiva Sidhandha Nool Pathippu Kalagam, Chennai, 2007.

[10] *Kavimani Desiga Vinaayagam Pillai*. Accessed 25 June 2022. https://www.tamilvu.org/courses/degree/p103/p1031/html/p1031004.htm Accessed 25 June 2022.

[11] *Moothurai*. Thirunelveli Saiva Sidhandha Nool Pathippu Kalagam, Chennai, 2007.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# நிலமிசை நீடு வாழ்வர்

## Nilamisai Needu Vazhvar

**முனைவர் வீ. விஜியலட்சுமி**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
சி. கந்தசாமி நாயுடு மகளிர் கல்லூரி, கடலூர், தமிழ்நாடு, இந்தியா.
**Dr. V. Vijiyalakshmi**, Assistant Professor, Department of Tamil,
C. Kandaswami Naidu College for Women's, Cuddalore, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-3838-5105**
**DOI: 10.5281/zenodo.7294914**

### Abstract

*Among the kinds of literature in the Tamil language, Moral literature is praised next to Sangam literature. The family is like a leaf of a tree. It is through this that love like green gives the tree like family gets love. Love is the foundation of Kalavu's (Secret love) life. This feeling of love encompasses all of the love, affection, desire, anger, and fear. These traits are fundamental in the secret life of Tamil society. It also leads to a chaste (Karpu - Married) life. Hospitality is one of the main responsibilities of both husband and wife in marriage life. Hospitality and their domestic duties are associated with the community. The housewife should explain the habit of removing the fear of reproach and distributing the earned material to the relatives. It embodies a sense of duty to society and paves the way for maintaining contact with society. Although the values of literature are constant, they are not all contemporaneous. There are some changes and innovations in the customs from time to time. It is possible to know the lifestyle and true nature of the people of that time through the works mentioned by the witnesses. These suggest that people can live a clean life by removing impurities from their minds and paving the way for future rewards. Hence, the conception of Professor Subbu Reddiar can be seen in the text written by him for Valluvar. It is also commendable for realizing the need of human society, the family relationship, customs and social bonds of the individual, which are relevant for all time, emphasize that the home and the nation will be better off as they are governed by the principle of virtue.*

**Keywords:** Hospitality, Justice Literature, Family Responsibility, Culture, Social Relation.

### ஆய்வுச்சுருக்கம்

*தமிழ்மொழியில் உள்ள இலக்கியங்களில் சங்க இலக்கியத்திற்கு அடுத்த நிலையில் வைத்து போற்றப்படுவது நீதி இலக்கியம். குடும்பம் என்பது சமுதாய மரத்தின் ஒரு இலையாகும். இதன் வழியே மரத்திற்கு ஊட்டம் தரத்தக்க அன்பு எனும் பச்சையம் உருவாகின்றது. களவு வாழ்க்கைக்கு அடிக்கல் அமைப்பதே காதலுணர்வு. இக்காதல் உணர்வானது அன்பு, பாசம், ஆசை, கோபம், பயம் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியதாகும். களவுவாழ்க்கையில் நம்பிக்கைதான் அடிப்படை ஒருவர் மீது ஒருவர் கொண்டுள்ள நம்பிக்கையே கற்புவாழ்க்கைக்கு இட்டுச் செல்கிறது. கற்பெனும் செம்மை திறம்பாது தற்காத்து வாழ்தல், புதல்வரைப் பெறுதல், கணவனின் காதல் வாழ்க்கையில் இணையாக இன்பம்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*துய்த்தல் ஆகிய அனைத்து கடமைகளும் தொல்காப்பியர் கூறும் பெண்ணிற்குரிய பண்புகளின் வழி நின்று குடும்ப வாழ்க்கை பொறுப்பை பெண்கள் சிறப்புற நடத்தி இருக்கவேண்டும் என்பது பறைசாற்றபடுகின்றது. இல்வாழ்க்கையில் தலைவன் தலைவி இருவரும் இணைந்து ஆற்ற வேண்டிய கடமைகளில் விருந்தோம்பல் தலையாயனது. இல்லறக் கடமைகளில் விருந்தோம்பலும் சுற்றத்தை பேணுதலும் சமுதாயத்தோடு தொடர்புபடுத்துகின்றன. பழிக்கு அஞ்சி அல்லவை நீக்கி அறவழியில் ஈட்டிய பொருளை உற்றார் உறவினர்களுக்கு பகிர்ந்தளித்து உண்ணும் பண்பை இல்லறத்தார் கொண்டு விளங்க வேண்டும். இது சமுதாயத்திற்கு ஆற்றும் கடமை உணர்வை உள்ளடக்கி சமுதாயத்தோடு கொண்ட தொடர்பை நிலைநாட்டுவதற்கான வழியாக அமைகின்றது. இலக்கியங்கள் கூறும் பண்பு நெறிகள் என்றும் மாறாத்தன்மை கொண்டதாக இருந்தாலும் அனைத்தும் சமகாலத்தில் தோன்றியவை கிடையாது. பழக்க வழக்கங்கள் என்பதில் காலத்திற்குக் காலம் சில மாற்றங்களையும், புதுமைகளையும் பெற்ற வண்ணமே இருக்கின்றது. சான்றோர்கள் கூறும் படைப்புகளின் மூலமாக அன்றைய மக்களின் வாழ்வியலையும், உண்மைத் தன்மையையும் அறிய முடிகின்றது. மனிதர்களின் மனதில் உள்ள மாசுக்களைப் போக்கிச் செம்மையாக வாழ்ந்து இம்மை மறுமைப் பயன்களை அடைய வழிவகுப்பது சான்றோர்கள் அருளிய நல்லுரைகள் எனலாம். அந்த வரிசையில் வள்ளுவரும் வள்ளுவத்திற்கு உரை எழுதிய பேராசிரியர் சுப்புரெட்டியாரின் கருத்தாழமும் போற்றுவதற்கு உரியனவாகும். மானிட சமூகத்தின் தேவையான தேவையை உணர்ந்து எக்காலத்திற்கும் பொருந்தும் பொருண்மையான தனிமனிதனுடைய குடும்ப இணைப்பு, பழக்க வழக்கங்கள், சமூக பிணைப்பு அனைத்தும் அறத்தின் கோட்பாட்டினால் கட்டுப்படுத்தப்படுவதால் வீடும் நாடும் சீர்மை பெற்று சிறப்படையும் என்பதை வலியுறுத்துகின்றன.*

**குறிப்புச் சொற்கள்:** விருந்தோம்பல், நீதி இலக்கியம், இல்லறக் கடமை, பழக்கவழக்கங்கள், சுற்றம் பேணுதல், பண்பாடு, சமுதாயத் தொடர்பு.

**முன்னுரை**

சான்றோர் என்னும் சொல் தமிழ் மொழிக்கே உரிய தனிச்சிறப்புடைய ஒன்றாகும். சான்றோர் என்னும் சொல் 'சால்' என்னும் அடிச்சொல்லிலிருந்து தோன்றியது. 'சாலுதல்' என்றால் நிறைதல் என்ற பொருள். எனவே இச்சொல்லுக்கு ஏற்ற ஒரு வேற்று மொழிச் சொல்லைக் கண்டறிய இயலாதவாறு பொருளும் வரையறையும் இலக்கணம் தந்து இச்சொல்லைப் போற்றியுள்ள தமிழர்களின் பேரறிவுத் திறன் வியக்கத்தக்கது. சங்க நூல்கள் வாயிலாக சான்றோர் என்பதற்கு நற்பண்புகள் நிறைந்தவர்கள் என்னும் பொருள் இருப்பதை அறியமுடிகிறது. அதற்கும் மேலாக தமிழில் இன்று கிடைத்துள்ள பழைய நூலாகிய

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தொல்காப்பியத்தில் சான்றோர் என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது. சான்றோர் எனும் சொல் ஆன்றோர் எனத் திரிந்து வருதலும் உண்டு. இவ்வழக்கு மூலத் திராவிட மொழியிலிருந்து தமிழில் கிளைத்தெழுந்த போது இருந்த ஒரு வழக்கு என மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுவர். மக்களாய்ப் பிறந்து, மக்களாய் வாழ்ந்து மக்களாகவே மடிய விரும்பும் எவரும் ஒழுக்கத்தைப் போற்றி வளர்த்துக் காப்பாற்றக் கடமைப்பட்டவர். அதன்வழி வந்த தமிழ் சான்றோர்களில் வள்ளுவர் வழி தோன்றலாக கருதக் கூடிய பெரும்பேறு பெற்றவர் சுப்புரெட்டியார் அவர்கள், குணம், நலம், புகழ், பெருமை, உயர்வு போன்ற இத்தகைய நலன்கள் அனைத்தையும் கொண்ட சிறப்புக்குரியவர் ஆவார். "இவ்வுலகில் இழந்தால் திரும்பப் பெற முடியாதவை இரண்டு. ஒன்று ஒழுக்கம் மற்றொன்று உயிர்". பொன்னை, பொருளை, மனைவியை, மக்களைக் காப்பாற்றுவதைப் போல ஒழுக்கத்தையும் காப்பாற்ற வேண்டும் எனக் கூறலாம். இவற்றுள் பெற இயலாது அதன் காரணமாக உயிரைக் காப்பாற்றுவதைவிட அதிகமாக ஒழுக்கத்தைக் காப்பாற்றியாக வேண்டும் என்கின்றனர்.

**துறவறத்தின் சிறந்தது இல்வாழ்க்கை**

தலைவனும் தலைவியும் இணைந்து வாழ்க்கை நடத்தும் இல்வாழ்க்கையானது அவர்களுக்கு மக்கட்பேறு வாய்க்கும்போதுதான் முழுமையான வாழ்வை அடைந்ததாக எண்ணுகின்றனர். சங்க காலத்தில் அக இலக்கியங்களில் தலைவன் தலைவியின் உயர்வான எண்ணங்கள் களவு காலத்திலும் அவர்கள் பின் ஏற்படுத்திக் கொண்ட கற்பு காலத்திலும் மிக விரிந்து காணப்படுகின்றன.

**பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு**
**உருவு நிறுத்த காமவாயில்**
**நிறையே அருளே உணர்வொடு, திரு என**
**முறையுக் கிளந்த ஒப்பினது வகையே (தொல்., மெய். 1219)**

மேற்கூறிய தொல்காப்பியத்திலும் தலைவன் தலைவிக்குரிய பொருத்ததங்களை அழகுற எடுத்துரைக்கின்றன. தொல்காப்பியம் சுட்டியுள்ள நெறி தாங்கிய போக்கானது சங்க காலத்திலும் அதனைத் தொடர்ந்து சங்க மருவிய காலத்திலும் நின்றுவிடாமல் இன்றுவரையில் அதனின் செல்வாக்கானது உயிர்ப்பிதமாய் அனைத்து வகையான இலக்கியங்களிலும் பதிவாக்கப்பட்டுள்ளன. செயலாக்க நிலையில் இன்றைய குடும்பங்களிலும் அவை பசுமையாக இருந்து வருவதையும் மறுப்பதற்கு இல்லை. ஆணும் பெண்ணும் இணைந்து குடும்பமாதல் என்பது உயிரின் இயல்பு. 'மிக நலம் பெற்றாள் தமியள்மூத்து அற்று' என்ற வரியானது இல்லறத்துக்கு பயன்படாமல் தனிந்து வாழும் பெண்ணின் நிலையினை சாடுகின்றார். இது காமஞ்சான்ற உயிர்ப்பிறப்புக்கு இயற்கை ஆகாது.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கண்ணிருந்தும் தீயது காண மறுப்பவன், செவியிருந்தும் தீயது கேட்க மறுப்பவன் நாவிருந்தும் தீயது சொல்ல மறுப்பவன் அடக்கமுடையவன் என்று கூற இயலாது. இந்நிலையான காம நுகர்ச்சிக்கும் பொருந்தும். பரத்தை நச்சாது, பிறன் மனை நயவாது ஒழுகும் ஒரு மனை வாழ்க்கை உண்மையாகவே 'காமவடக்கம்' எனப்படும். இவ்வுலகில் ஒழுக்கத்தை பிறப்பொழுக்கத்தை தன் நெஞ்சு அறியத் துறத்தல் என்பது மாய்ப்போர்க் கடை போவதாகும். ஒரு மனை வாழ்க்கையில் இல்லறம் நன்றா? அல்லது இளமைத் துறவறம் நன்றா? என்று ஆராயும் பொழுது வள்ளுவர் துறவு நெறியை இயற்கைக்கும் புறத்தாறு என்றும், இத்துறவோரை இயற்கை கடக்க முயல்வார் என்றும், இத்துறவுப் பயனை, 'போஒய்ப் பெறுவது எவன்' என்றும் பொருந்தாமையைக் காட்டினார்.

**வாழ்க்கைத் துணை**

ஒருவருக்கு வாய்க்கும் மனைவி இல்லறத்திற்குத் தக்க நல்ல பண்பு உடையவளாக இருக்க வேண்டும். தன்னை துணையாகக் கொண்ட கவணனுடைய வருவாய்க்குத் தக்க வாழ்க்கை நடத்த வேண்டும். அத்தகையவளே நல்வாழ்க்கைத் துணை. இல்லறத்திற்கு ஏற்ற பண்பு மனைவி இடத்தில் இல்லையானால், அந்த இல்வாழ்க்கை வேறு என்ன சிறப்பு பெற்றிருந்தாலும் பயன் இல்லை.

**மனைமாட்சி இல்லாள்கண் இல்வாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல் (குறள். 52)**

என்ற குறட்பாவின் பொருண்மையில் கூறப்பட்டுள்ளது. மனிதன் பிறந்து வளர்ந்து வரும் சூழ்நிலைக்கேற்பவும் தேவைக்கேற்பவும் அறிவுக்கு ஏற்பவும் தனது எண்ணங்களை உருவாக்குகின்றான். தனது எண்ணங்களின் படி செயல்பட்டு தனது வாழ்க்கையை உருவாக்கிக் கொள்கிறான். ஒருவன் வாழும் வாழ்க்கை முறையினைப் புரிந்துக் கொண்டால் அவனது உள்ளத்தில் உள்ள உணர்ச்சிகளின் வெளிப்பாட்டை உணரலாம். குணங்களின் வெளிப்பாடே எண்ணங்கள், எண்ணங்களின் வெளிப்பாடே செயல்கள், செயல்களின் வெளிப்பாடே அவன் யார்? என அடையாளம் காட்டிக்கொடுக்கிறது.

வாழ்க்கை என்பது துணைவியோடு கூடியது என்பதும், அது சிறப்பானதாக அமைய வேண்டும் என்றும், துணை என்பது துணைவனையோ துணைவியையோ குறிக்காமல் ஒருவருக்கு ஒருவர் துணை என்னும் பொதுக் குறிப்பானது ஆகும். இல் வாழ்க்கையின் சிறப்பினை இனிதுறக்கிளத்திய செந்நாப் போதார் இல்வாழ்க்கைக்கு உறுதுணையாக உதவும் வாழ்க்கைத் துணை நலத்தை வகையுறப் பேசுகின்றார்.

**மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை (குறள். 51)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

மேற்கூறிய குறட்பாவானது திருவள்ளுவரின் சீரிய சிந்தனையை உணர்த்தி நிற்கிறது. வாழ்க்கையில் பெற வேண்டிய பேறுகள் பல ஆயினும் அனைத்திற்கும் மேலாக ஓர் ஆணுக்கு அமைய வேண்டியது நல்ல வாழ்க்கைத் துணை. வாழ்க்கைத் துணையாகிய மனையாளின் குணத்தை மங்களம் என் மனைமாட்சி என்பதில் 'மங்கலம்' என்னும் சொல்லால் வள்ளுவர் பெருமான் சிறப்பித்துள்ளார். 'மங்கலம்' என்பதை இயற்கை அழகு என்று சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுவர்.

**மக்கட் செல்வம்**

பொன், பொருள் என்று நிறைந்த வசதியோடு வாழ்க்கையினை மேற்கொள்பவர்கள் செல்வந்தர்கள் என்று அழைக்கின்றனர். குழந்தைகள் பெற்று இல்லறம் நடத்துபவர்களை 'மக்கட் செல்வம்' உடையவர்கள் என்று பொது மக்களின் பேச்சானது அமையும். வள்ளுவர் பெருமான் குழந்தைகளை 'மக்கட்பேறு' என்றே வழங்குகின்றார். இவ்வதிகாரத்தில் அப்பனுக்கு மகன் செய்யும் உதவி இன்னது என்றும் அன்னைக்கு அருமருந்தனைய மகன் செய்யும் உதவி யாது என்று தெரிவிக்காமல் விட்டுவிட்டார். வள்ளுவர் என்று கருதுவது தவறான எண்ணம் என்று விளக்கியுள்ளார் சுப்புரெட்டியார் அவர்கள். இவ்வாறு எண்ணுபவர்களின் சிந்தனை என்பது வள்ளுவப் பெருமானின் உள்ளத்தின் நுட்பத்தை அறியாதவர்களே என்று கருதவேண்டும். அப்படியொன்றும் ஆண் மக்களை மட்டுமே சிறப்பு செய்யவில்லை என்பது அறியப்படும். மக்கட் பேறு என்ற அதிகாரத்தில்

**தந்தை மகற் காற்றும் (குறள். 67)**

**ஈன்ற பொழுதில் பெரிது உவக்கும் தன் மகனை (குறள். 69)**

**மகன் தந்தைக்கு ஆற்றும் (குறள். 70)**

என்ற பத்து குறட்பாவில் மூன்றில் மட்டுமே 'மகன்' என்ற ஆண்பாற் சொல் வந்துள்ளது. மற்ற ஏழு குறள்களில் மக்கள் என்று கூறும் பொதுச் சொற்களையே பெற்றுள்ளன. ஆண், பெண் என்ற இருபாலாருள் ஆண் மக்கள் உடல் வலிமையால் புறம் உலாவிச் செயல் புரியும் இயல்பினர். பெண் மக்கள் மன வலிமையால் இல்லத்தில் இருந்து துணை புரிய வல்லவர்கள். ஆனால் நிகழ்ச்சி ஆடவருடையது என்றும் சிறப்பு மகளிருடையது என்றும் காரணம் கூறப்படுகிறது. உடல் வலிமையைவிட உள்ளத்தின் வலிமையே சிறப்பும் நுட்பமும் இயல்பாகவே செயலாற்றிலும் மிக்கது என்பது மிகவும் தெளிவாக புலனாகின்றது. பெற்றோர் மக்களை ஆண், பெண் என்ற வேற்றுமை கருதாது தனது மக்கட் செல்வமாக போற்றுகின்றனர் என்பதே உண்மையாகும்.

**அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**
**சிறுகை அளாவிய கூழ் (குறள். 64)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்பன போன்ற குறட்பாவின் வழி தனது பிள்ளை செல்வங்களை ‘மக்கட்பேறு’ என்ற தலைப்பில் அதிகாரத்தின் பெயரைக் கொண்டு உறுதிப்படுத்தலாம்.

**வாழை உணர்த்தும் வாழ்வியல்**

‘வாழ்’ என்ற முதனிலையிலிருந்து வாழை என்னும் அழகிய பெயரைப் பெற்றுள்ளது. வாழை மரம் உலகப்பொருள்களில் ஒன்றாக இருப்பினும் அதற்கு என்று தனிச்சிறப்புகள் உண்டு. முக்கனிகளிலும் சிறந்த முதன்மைக் கனி வாழையாகும். அதனை ஞானமரம் என்றும், ஞானத்தின் சன்மார்க்கமரம் என்றும், அறத்துக்கு ஒரு மரம் என்றும் கூறும் சுப்பு ரெட்டியாரின் வாழ்வியல் சிந்தனை என்பது போற்றுதற்குரியது ஆகும். திருக்கழுக்குன்றத்தின் தலமரம் வாழை ஆகும். வள்ளலார் அடியார் மரபுக்கு இதனை உவமானமாகக் கொண்டு “வாழையடி வாழையென வந்ததிருக் கூட்டம்” என்று அருளிச் செய்திருப்பதை நாம் நினைவு கூறத்தக்கது. நம் சான்றோர்கள் படைத்த மறைகளும் அறிஞர்கள் படைத்த நூல்களும் ஏதோ ஒரு வகையில் எல்லாப் பொருள்களும் உள்ளுறையாக அமைந்து மனித குலத்திற்கு அறிவுரை நல்கும் வழிவகைகளை அறிந்து படைத்துள்ளனர் என்றால் அது மிகையாகாது.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்**
**என்பும் உயிர் பிறர்க்கு (குறள். 72)**

என்ற பாடல் வரிகளானது எல்லாப் பொருள்கைளையும் தமக்கே பயன்படுத்திக் கொள்வர் அன்பில்லாதவர்கள் என்றும் அன்புடையவரே தம் உடம்பையும் பிறர்க்குப் பயன்படுத்துவர் என்பதை உணர்த்துகிறது. இயற்கையில் தோன்றிய முக்கனிகளில் ஒன்றான வாழைமரமானது மனித குலத்திற்கு சுயநலம் கருதாமல் பிறர் நலத்துக்கென வாழ்ந்து மறைவதற்கு சான்றாக விளங்குகிறது. எல்லா உயிர்களையும் விட ஆறறிவும் அற உணர்வும் உடைய மக்களுக்கு பேருதவியாக இருப்பதால் உயர்ந்த இனத்துடன் சேரும் தன்மை உடையதாகத் திகழ்கிறது வாழைமரம்.

**இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை (தொல்., களவியல். 1038)**

என்ற தொல்காப்பியர் கூறும் கருத்திற்கு ஏற்ப இம்மரம் இயைந்து போவது சிந்திக்கதக்கதாகும். இன்பத்தின் நோக்கில் காணும் பொழுது இதன் தோற்றமே இன்பத்தை தரும் என்பது உள்ளுறை அது வழுவழுப்பாய், ஒழுங்காய், நீண்டு பசிய இலைகளை உடையதாய் மிக அழகான நங்கையைப் போல் காட்சி அளிக்கின்றது. பொருள் என்ற எண்ணத்தில் கவனித்தால் இதில் கிடைக்கும் தண்டு, இலை, பூ, காய், கனி முதலியன அனைத்து வாழையின் பொருள்களும் மக்களுக்குத் தேவைப்படுகின்றன. தன்னுடைய பொருள்கள் அனைத்தையும் தனக்கோ தன் இனத்திற்கு என்று சுயநலம் சிறிதும் இல்லாமல் முழுவதையும் பிறர்க்காகவே வழங்கி விடுவது அதன் ஒப்பற்ற தனிச்சிறப்பாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அறம் என்ற வகையில் சிந்திக்கின்றபொழுது வாழையின் அறத்திறமோ உள்ளத்தை உருக்கி ஒருங்கே கொள்ளை கொள்ளுகின்றது. வளத்திற்கு ஏற்றபடி வஞ்சனை இல்லாமல் வளர்ந்து குழந்தைகள் போல் இல்லங்களில் ஆடி அசைந்து குழைவாய் விளங்குவன. அடியில் தோன்றும் கன்றுகளும் தம்தாய் வாழையைச் சுற்றி அணைவதைப்போல் வளைத்துக் கொண்டு அதன் ஆதரவிலும் அரவணைப்பிலும் அதன் மடியிலேயே அவ்வளவு ஒழுங்கில் வளர்ந்து எழுகின்றன. இவ்வமைப்பு இல்லற வாழ்வின் குடும்ப அறத்தை புலப்படுத்துவனவாக உள்ளன.

வீடுபேறு என்று எண்ணத்தக்க வகையில் வாழை மரத்தில் வீட்டுத்தன்மை அமைந்திருப்பதை காணலாம். ‘வீடு’ என்பது விடுதலை. அந்த வகையில் வாழையின் எல்லாப் பொருள்களும் நன்முறையில் பயன்பட்டு விடுதலை பெறுகின்றது. “வாழை, மங்கலம் உடையதாய் நிலைத்து இல்லறப் புகழும், அந்நிலையே பேராத இயற்கை உடையதாய்ச் ‘சென்றே புகும் கதி’யின்றித் தான் நின்று வளர்ந்த இடத்திலேயே நிலை கொண்ட துறவறத்து வான் புகழும் பெற்றுச் சிறந்து திகழ்ந்து அடியார் மரமான வாழை வீடு பேறுடையனதாகின்றது” என்று சுப்புரெட்டியார் அவர்கள் வாழையின் வாழ்க்கையினை மனிதனின் வாழ்நாள் செயல்பாட்டோடு ஒப்பிட்டு காண்பது அவரது சிந்தனை செழிப்பு உணர்த்தப்படுகிறது.

**பண்பாட்டின் பொருத்தப்பாடு**

இன்றைய வாழ்க்கையில் எத்தனையோ மாற்றங்கள் நடைபெற்றுள்ளன. விரைவாக ஏற்பட்டு வரும் மாற்றங்கள் இன்னும் நம் நாட்டுப் பண்பாட்டுடன் நன்றாக இணையவில்லை. படித்தவர்களின் வாழ்க்கை ஒரு விதமாகவும் படிக்காதவர்களின் வாழ்க்கையானது மற்றொரு விதமாகவும் அமைந்திருக்கின்றன. கல்வி மக்களிடையே மிக வேகமாக வளர்ந்து வருகின்றது. ஓரளவு விரைவாக வளர்ந்துவரும் தொழில் முன்னேற்றங்களும் மக்களின் வாழ்வியல் முறைகளை மாற்றி வருகின்றது. இத்தகைய பல்வேறு காரணங்களால் பழமையான குடும்ப வாழ்க்கை மாறிப் புதியவிதமான குடும்ப அமைப்பு ஏற்பட்டுள்ளது.

குடும்ப அமைப்பின் நன்மையாக கருதப்படுவது யாதெனில் அன்பிற்கு இருப்பிடமாகவும் உள்ளக்கிளர்ச்சிப் பாதுகாப்பிற்காகவும், பாலுறவில் மனம் நிறைவு பெறவும், மக்கட் செல்வம் அமையவும் வழிவழியாக வரும் மரபுவழிப் பண்புகள் சரியாக இயங்கும் களமாக குடும்பமானது இருந்து வருகின்றது. இத்தகைய முக்கிய செயல்களைத் திருமண உறவு குடும்ப அமைப்பு நிறைவேற்றி வருகின்றது. இது சிறந்த பண்பாட்டின் அங்கமாகும்.

**ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்**
**உயிரினும் ஓம்பப் படும் (குறள். 131)**

மேற்கூறிய குறளில் விழுப்பம் என்பது சிறப்பு என்று பொருள்படும். அது முறையே மனிதனின் மேன்மையான வாழ்க்கைக்கு வழி கோல்கின்றது. மேலும் இவ்வொழுக்கமானதை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

உயிரைவிடவும் மேலானதாக சான்றோர்கள் கருதுகின்றனர். எதிர்பார்ப்புகள், நம்பிக்கைகள், கருத்துகள், புரிந்து கொள்ளுதல் இலக்கிய நோக்கங்கள், விருப்பங்கள், தேர்வுகள் போன்ற அனைத்தையும் பரவலாகப் பங்கிட்டுக் கொள்வதையே பண்பாடு என்ற சொல் வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு வாழ்க்கைச் சூழல்களுக்கு ஏற்ப மேற்கொள்ளும் வழிகள் அனைத்தையும் மொத்தமாகவும் பண்பாடு என்று கூறலாம்.

**பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுவின்றேல்**
**மண்புக்கு மாய்வது மன் (குறள். 996)**

என்ற பாடலின் மூலமாக வள்ளுவப்பெருந்தகையர், பண்புடையவர்களின் மூலமே இவ்வுலகமானது மாய்ந்து விடாமல் எப்பொழுதும் உளதானதாய் வாழ்ந்து கொண்டிருக்கின்றது என்றால் மிகையாகாது.

'தான் ஆடாவிட்டாலும் தன் தசை ஆடும்' என்னும் பழமொழி உறவின் மனநிலையை உணர்த்தும் விதமாய் அமைவதாகும். உறவு என்பது பல நிலைகளிலும் நம் வாழ்வில் வருவதாகும். நட்பு என்பதும் ஓர் உறவுதான். நம் இரத்த சம்பந்தமான உறவுகளும், உறவுதான். நம்மீது அக்கறை கொண்ட அனைவருமே உறவினரே ஆவார்.

**யாதும் ஊரே யாவரும் கேளிர் (புறம்., பா. 192)** என்ற வரியானது தமிழரின் பண்பை உணர்த்தும் உன்னதமான சான்றாகும். இவ்வுலகில் வாழும் அனைவருமே உடன் பிறந்த உறவுகளே என்ற சீரிய சிந்தனையைப் பறைசாற்றுகின்றன. உலகம் உலகமாய் உள்ளதற்கு வள்ளுவர் பெருமானின் கருத்து என்ற வகையில் நீதியையும் அறத்தையும், தர்மத்தையும், ஒழுக்கத்தையும் காக்கும் விரும்பும் தன்மையுடையதாகும். இவற்றை விரும்புகின்றவர்களே உலகிற்குப் பயன்படுவார்கள் அவர்களுடைய பண்பையே இவ்வுலகமும் பாராட்டும். மண்ணும், கல்லுமாய் உள்ள இவ்வுலகானது மரம், செடி, கொடி, மற்றும் பிற உயிரினங்கள் இருப்பதை விட மானிட வர்க்கம் வாழ்வதே இம்மண்ணுலகின் சிறப்பாகும். கை, கால் முதலிய உறுப்புகளால் மக்களைப்போல் இருப்பவர்கள் எல்லோரும் மக்களாக கருதபடமாட்டாது. உண்மைப் பெருமையுடைய உலகமாகத் தோன்றச் செய்யும் நெஞ்ச பண்பைக் கொண்டிருப்பவர்களே மக்கள் எனத் தக்கவர்கள் என்று சுப்புரெட்டியார் மனிதர்களின் மாண்பினை விளக்குகின்றார்.

**மலர்மிசை எய்தினார் மானடி சேர்ந்தார்**
**மிலர்மிசை நீடுவாழ் வார் (குறள். 03)**

என்ற குறட்பாவின் வழி நின்று இவ்வுலகில் நீண்ட அழியா புகழ் பெற்று வாழவேண்டுமாயின் மக்கள் ஒருவேராடு ஒருவர் பழகும் போது மனம் கலந்து மகிழவேண்டும். இந்த மகிழ்ச்சியை அடைய முடியாதவர்கள் முயலாதவர்கள் வாழ்ந்தும் பயனற்றவர்களே. இப்பரந்த பெரிய உலகானது இவர்களுக்கு பகலிலும் இருளாகவே தோன்றும். எனவே மனிதன் நிறைந்த

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பண்புகளோடு சான்றோனாய் வாழ்தலே சிறந்த வாழ்வியலின் அடிப்படை என்பதை அரிதிட்டு கூறுகிறார் சுப்புரெட்டியார்.

**மானமிகு வாழ்க்கை**

ஓரறிவு உயிர்முதல் ஐந்தறிவு கொண்ட உயிரினங்கள் வரை உயிர் வாழ்வதற்கு உணவு தேடுவதில் பல்வேறு வகையாகப் போராடுகின்றன. ஆறறிவு உடைய மனித குலத்தின் வாழ்க்கையும் போராட்டம் மிக்கதே. உணவு தேடுவதற்கு மட்டும் இல்லாமல் அதையும் விட எல்லையைக் கடந்த வாழ்க்கைப் போராட்டமும் உண்டு. வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள்களை வைத்துக் கொண்டு அவற்றைப் பின்பற்றி போற்றி வாழப் போராடுவது குறிப்பிடத்தக்கதாகும். மானம் உடையவர்கள் உயிர் வாழ்க்கையின் அடிப்படை கெடுவதாக இருந்தாலும், உயிரே நீங்குவதாக இருந்தாலும் உயர்ந்த நெறியில் இருந்து தடம் மாறமாட்டார்கள். உயர்ந்த கொள்கைகள் இழக்கும் நிலை வந்தால் அந்தக் கொள்கைகளை வாழவைத்துத் தம் உயிர் விடுவார்கள். இத்தகைய உணர்வே 'மானம்' என்பதாகும்.

**இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்**
**குன்ற வருப விடல் (குறள். 961)**

மேற்கூறிய குறட்பாவில் ஒரு செயலைச் செய்யும் பொருட்டு அது சிறப்பினை குடிப்பிறப்பிற்கு இழிவு தரும் செயலாக இருந்தால் அதைச் செய்யாது இருத்தல் நலம் பயக்கும் என்கிறார். சிலர் தகாது செயல் செய்தாவது சிறந்த பதவியைப் பெறுவார்கள். பதவி கிடைத்தபிறகு அந்தப் பழியைப் போக்கிக் கொள்ளலாம் என்று துணிந்து தீமை செய்பவர்களை வள்ளுவர் பெருமாள் அவர்களுடைய போக்கைக் கடிகின்றார்.

***சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு***
**பேராண்மை வேண்டு பவர் (குறள். 962)**

மேற்கூறிய பாடலில் கூறும் பொய்யாமொழி யாதெனில் சீர் பெற வேண்டும் என்பதற்காக தகாதவற்றைச் செய்தல் கூடாது. உண்மையான சிறப்பையும் மானத்தையும் விரும்புகின்றவர்கள் இதனை மேற்கொள்வர் என்பதை தெளிவுப்படுத்துகின்றார். மானத்தைப் பற்றி கூறும் கருத்து மறைமொழிபோல் எல்லோரும் கடைப்பிடித்துப் போற்ற வேண்டிய வாழ்வியல் அறமாகும் என்பதை ரெட்டியார் அவர்கள் வலியுறுத்துகின்றார்.

**முடிவுரை**

உலகில் உயிர் வாழும் மானிட சமுதாயமானது இறவாத நிலை பெற வேண்டுமாயின் இல்வாழ்வில் இணைந்து இல்லறத்தை சிறப்புற பேணுதல் வேண்டும். உற்றார் உறவினரோடு சுற்றம் பாதுகாத்து பெற்ற செல்வத்தை பகிர்ந்து கொண்டு அனைவரோடும் அன்பினால் சேர்ந்து நேசமிகு வாழ்வை வாழ வேண்டும். பிறர் பழி பேசி தூற்றாமல் நல்லறம் போற்றி வாழ வேண்டும் மானம் அழிந்தால் உயிரும் அழிவதால் பயன் ஒன்றும் இல்லை. ஏதேனும் ஒன்றை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

காத்தல் புத்திசாலித்தனம் என்றாலும் உயிரை நெடுங்காலம் காக்க முடியாது. இறைவனின் வழி நின்று நினைப்பவர்களின் உள்ளத்தில் நினைத்தவுடன் வருகின்ற இறைவனின் மாட்சிமை பொருந்திய திருவடியைச் சேரவேண்டுமாயின் நல்ல நெறியின் வழி நின்று வாழ்க்கையை மேன்மையுற அமைத்து சான்றோர் உரையினை உடன்கொண்டு வாழும் முறையானது இறந்தும் இறவாமல் வாழ வழி செய்யும் என்பதை வள்ளுவர் மற்றும் சுப்புரெட்டியார் அவர்களின் போதனையினை பின் பற்றி வாழ உறுதி கொள்வோம்.

### குறிப்பு நூல்கள்

[1] அறவாணன், க.ப. *அறஇலக்கியக் களஞ்சியம்.* தமிழ்க்கோட்டம் பதிப்பகம், சென்னை.

[2] இளம்பூரணர் (உ.ஆ). *தொல்காப்பியம் பொருளதிகாரம்.* கழகவெளியீடு, சென்னை, 2000.

[3] கனிமொழி, க. *புறநானூறு காட்டும் மனித வாழ்வியல்.* ஆய்த எழுத்து ஆய்விதழ், 2020.

[4] குருசாமி, சோ. *இலக்கிய வாழ்வியல் நெறி.* நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2009.

[5] சுப்பரமணியன், ச.வே. *பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2012.

[6] சுப்பிரமணியன், ச.வே. *சங்க இலக்கியம் மூலமும் தெளிவுரையும். தொகுதி-2, 3.* மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2010.

[7] சுப்புரெட்டியார், ந. *இல்லறநெறி.* தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1976.

[8] சுப்புரெட்டியார், ந. *வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்.* அவ்வை பதிப்பகம், சென்னை, 2004.

[9] சுப்ரமண்யன், ந. *சங்க கால வாழ்வியல்.* நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.

[10] பிரேமா, க. & வளர்மதி, அ. "தமிழ் இலக்கியங்கள் காட்டும் வாழ்வியல் நெறிகள்." *நவீனத் தமிழாய்வு ஆய்விதழ்,* 2021.

[11] பிளோரா பவுலின் மேரி. *சங்க இலக்கியங்களில் வாழ்வியல் சிந்தனைகள்.* நவீனத் தமிழாய்வு, 2021.

[12] மாணிக்கம், வ.சுப. *வள்ளுவம்.* மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2009.

[13] முனுசாமி, வே. *அகநானூறு காட்டும் அரிய வாழ்வியல் கருத்துகள்.* மணிமேகலை பிரசுரம், சென்னை, 2018.

[14] ரெங்கராஜ், கா. *அகநானூற்றில் மானுட அறம்.* செம்மொழித் தமிழ் ஆய்விதழ், 2019.

[15] விஜியலட்சுமி, வீ. *அற இலக்கியங்களில் இல்லறம்.* சித்ரா பதிப்பகம், சென்னை, 2021.

[16] விஜியலட்சுமி, வீ. "முதுமொழிக் காஞ்சி உணர்த்தும் வாழ்வியல் கூறுகள்." *சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்,* 2019.

### References

[1] Aravanan, K.P. *Arailakkiya Kalanjiyam.* Tamilkottam Pathipagam, Chennai.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

[2] Illampuranar. *Tholkakppiyam Porulathigaram.* Kazhaga Veliedu, Chennai – 2000.
[3] Kanimozhi, *K. Purananuru Kattum Manitha Vazhviyal.* Ayidha Ezhuth, 2020.
[4] Guruswami, *S. Ilakkiya Vazhviyal Neri.* New Centuray Book House, Chennai, 2009.
[5] Subramaniyan, S.V. *Pathinenkzhukanaku Noolgal Mulamum Theliooraiyum.* Manivasagar Pathipagam, Chennai, 2012.
[6] Subbiramaniyan, S.V. *Sanga Ilakkiyam Mulamum Theliooraiyum Part-2, 3.* Manivasagar Pathipagam, Chennai, 2010.
[7] Subbu Reddiar, N. *Illaraneri.* Tamil Puthagalayam, Chennai, 1976.
[8] Subbu Reddiar, N. *Valluvarin Vazhiviyal Sinthanaigal.* Avai Pathipagam, Chennai, 2004.
[9] Subramanyan, N. *Sanga Kala Vazhiviyal.* New Centuray Book House, Chennai, 2010.
[10] Prema, K. & Valarmathi, A. “Tamil Ilakkiyangal Kattum Vazhiviyal Nerigal.” *Journal of Modern Thamizh Research*, 2020.
[11] Peelora Pouline Meri. “Sanga Ilakkiyangalil Vazhiviyal Sinthanaigal.” *Journal of Modern Thamizh Research*, 2021.
[12] Manickam, V. Suba. *Valluvam.* Maiyappan Pathippagam, Chidambaram, 2009.
[13] Munusamy, V. *Agananooru Kattum Ariya Vazhiviyal Karuthugal.* Manimagalai Parasuram, Chennai, 2018.
[14] Rangaraj, K. “Agananootril Manuda Aram.” *Journal of Classical Thamizh*, 2019.
[15] Vijiyalakshmi. V. *Aara Ilakkiyangalil Illaram.* Chithra Pathipagam, Chennai, 2021.
[16] Vijiyalakshmi. V. “Muthumozhikanji Oonarthum Vazhiviyal Kurugal.” *Shanlax International Journal of Tamil Studies*, 2019.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருமணத்திற்கு பிறகு தாயாகவும் சமுதாயத்திற்கு பொறுப்பு உடையவளாகவும் மாற்றம் அடைகிறாள். அவளுக்கு உரிய நெறிமுறைகளை தொல்காப்பியர்,

**கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்துபுறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் (தொல். கற்., நூ. 11)**

என்று நவிலும் நூற்பா வழியாக தலைவிக்கு உரிய கடமைகள் கூறப்படுவதை பேராசிரியர் சுட்டிக்காட்டுகிறார். இல்லறத்தின் நல்லறம் என்பது விருந்தோம்பல் ஆகும். தன்னை தேடி வரும் புதியவர்களுக்கு விருந்து அளித்து மகிழ்தல் என்பது உலகின் தலைசிறந்த அறங்களில் ஒன்றாக கருதப்படுகிறது. இல்லற வாழ்வின் அறத்தை தொடர்ந்து பெருமகிழ்ச்சி அளிப்பது பிள்ளைப்பேறு ஆகும். திருக்குறளில்

**பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த**
**மக்கட்பேறு அல்ல பிற. (குறள். 61)**

என்ற குறள் தலைவனும் தலைவியும் பெறுகின்ற பெரும் செல்வத்துள் பிள்ளைகளே சிறப்புடையது என்பதை எடுத்துரைக்கிறது. இக்குறளைப் போலவே பிள்ளை பெற்ற தலைவி உலகத்தில் அடையமுடியாத பேரின்பத்தை பெருமிதத்தை அடைகின்றாள். தலைவி தலைவனை நோக்கி நீர் பரத்தையுடன் எவ்வளவு தான் இன்பமாக இருந்தாலும் அத்தகைய பரத்தையையே குலமகளாக கொண்டு வந்தாலும் அவள் பிள்ளை பெறுதல் என்பது அரிதாகும். அத்தகைய பிள்ளையை நான் பெற்றுள்ளேன் என தலைவி கூறுவது பெருமிதத்தின் வெளிப்பாடாக காணப்படுகிறது.

**அவரும்,**
**பைந் தொடி மகளிரொடு சிறுவர்ப் பயந்து,**
**நன்றி சான்ற கற்பொடு**
**எம் பாடு ஆதல் அதனினும் அரிதே. (நற்றிணை, பா. 330)**

என்ற நற்றிணை பாடல் வழியாக பிள்ளை பேற்றினை அடைதலில் தலைவி எத்தனை பெருமிதம் கொள்கிறாள் என்பதையும், பரத்தையர்கள் குலமகளாக இருந்தாலும் பிள்ளைப்பேறு அடையமுடியாது என்பதையும் பேராசிரியர் நன்கு விளக்குகிறார். இவ்வாறாக தலைவியின் வாழ்வியல் நெறிமுறையானது இரண்டு நிலைகளில் நோக்கப்படுகிறது. முதலாவது களவுக் காலத்தில் பெற்றோர்களுக்கு செல்லப்பிள்ளையாக பெருமகிழ்வோடு வளர்கிறாள் தலைவி. உரிய பருவம் பெற்ற பிறகு தலைவனை காணும்பொழுது தன் உள்ள புணர்ச்சியை வெளிப்படுத்துகிறாள். இரண்டாவது கற்புக் காலத்தில் தலைவனின் உள்ளத்தை உணர்ந்து பக்குவம் உள்ளவளாக செயல்படுகிறாள். தன் தந்தையின் வீட்டில் செல்வ

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

செழிப்புடன் வாழ்ந்தாலும் கணவன் வீட்டிற்கு ஏற்ப வறுமையிலும் வாழ பழகி கொள்கிறாள். கணவனின் இன்பம் மட்டுமே தன்னுடைய இன்பம் என கருதுபவளாக விளங்குகிறாள். இல்லற வாழ்வின் அறமான விருந்தோம்பலை கடைப்பிடித்து பிள்ளைகளைப் பெற்று உரிய நேரத்தில் தலைவனை இடித்துரைத்து இளவயதிலேயே முதிர்ச்சி நிலையுடன் தலைவி காணப்படுவதை பேராசிரியர் சுட்டிக்காட்டி தலைவியின் இயல்புகளையும் வாழ்வியல் நெறிமுறைகளையும் விரிவாக விளக்குகிறார்.

**தலைமக்களுடன் உறவுடையோர்**

தலை மக்களுடன் நெருங்கிய உறவில் உடையவர்களை தலைமக்களுடன் உறவுடையோர் என்று பேராசிரியர் குறிப்பிடுகிறார்.தாய்,தந்தை,செவிலித்தாய்,தோழி மற்றும் பரத்தை இந்த ஆறு பேரும் தலைமக்களின் வாழ்வில் நெருங்கிய உறவுடையவர்கள் ஆவர்.

**தந்தையும் தந்தையும்**

நற்றாய் தலைவியை மிகவும் செல்லமாக வளர்த்துஎடுக்கிறாள். தலைவி மட்டுமே தன் வாழ்க்கையின் இன்பம் என்பதை உணர்ந்தவளாக நற்றாய் இருக்கிறாள். தாயின் இயல்புகளை இலக்கியங்களிலிருந்து, "**வல்லுரைக்கடுஞ்சொல் அன்னை, பிணிகோளருஞ் சிறைஅன்னை, அறனில்யாய்**" என்றெல்லாம் நற்றாயின் இயல்புகளை பேராசிரியர் வெளிப்படுத்துகிறார். தலைவியின் நற்றாய் போலவே தலைவனின் தாயும் வருத்தப்படக்கூடிய நிலை இருக்கும் என பேராசிரியர் கூறுகிறார். தலைவியின் தந்தை தலைவி மீது பேரன்பு கொண்டவராக விளங்குகிறார் ஒவ்வொரு தந்தைக்கும் தான் பெற்ற பெண்மகளுக்கு நல்ல முறையில் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்பதே கடமையாக உள்ளது. தலைவியின் களவு ஒழுக்கத்தை நற்றாயின் வழியாகவே தந்தை அறிந்து கொள்கிறார். இவ்வாறாக தந்தையின் இயல்புகள் குறித்து பேராசிரியர் கூறுகிறார்.

**செவிலித்தாயும் தோழியும்**

தலைவியை நன்முறையில் வளர்க்கக்கூடிய மற்றொரு தாயே செவிலித்தாய் எனப்படுகிறாள். செவிலித்தாய் பற்றி நம்பியகப்பொருளில்

**செவிலி நற்றாய் தோழியாகி**
**அவலம் நீக்கி அறிவும் ஆசாரமும்**
**கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே (நம்பியகப்பொருள்., நூ. 111)**

என்ற நூற்பா வழியாக நாற்கவிராச நம்பி செவிலித்தாயின் மேன்மையைக் குறிப்பிடுகிறார். பேராசிரியர் செவிலித்தாய் பற்றி கூறும்பொழுதுகளவு மற்றும் கற்பு வாழ்க்கையில் தலைவிக்கு அறிவுரை கூறுவதில் பெரும் இடத்தை வகிக்கிறார் என நவில்கிறார். தலைவி பிறந்தது முதல் அவளை வளர்த்தெடுத்து அவளுக்குத் தேவையான அறிவுரைகளை வழங்கி சீரும் சிறப்புமாக வளர்ப்பவள் செவிலித்தாய் ஆவாள். இந்த செவிலித்தாய் தலைவியை கண்ணும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கருத்துமாக ஒவ்வொரு செயலிலும் கவனிக்கிறாள். தலைவி களவொழுக்கத்தில் இருக்கும் பொழுது அதை எளிமையாக அவள் நடத்தையின் மூலம் சந்தேகிக்க கூடியவளாகவும் இருக்கிறாள். களவுக் காலத்தில் தலைவிக்கு ஏற்படக்கூடிய பசலை நோயை அணங்கு தீண்டியதால் ஏற்பட்டிருக்குமோ என்றெண்ணி வேலன் மூலம் வெறியாட்டு நடத்துகிறாள். பிறகு கட்டுவிச்சியை அழைத்து தலைவிக்கு நேர்ந்ததென்ன என்பதையெல்லாம் குறி கேட்டு அறிந்து கொள்கிறாள்.தலைவனும் காண வருகின்ற இரவுக் குறியில் செவிலித்தாய் நீண்ட நேரம் உறங்காமல் தலைவி குறித்து சிந்திப்பவளாகவும் இருக்கிறாள்.

இறுதியாக தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டதை தோழி வாயிலாக அறிந்தவுடன் எல்லையில்லா துன்பத்தை மனதில் ஏந்திக்கொண்டு தலைவி சென்ற வழியில் அவளைத் தேடி ஓடுகிறாள். தலைவி மிகவும் பக்குவப்பட்டவளைப் போல் இல்லறம் நடத்துவதைக் கண்டு வியந்து ஊர் முழுவதும் தலைவியின் பெருமையினை எடுத்துரைத்து தானும் பெருமிதம் கொள்கிறாள். இவ்வாறாக செவிலித்தாய் தலைவியின் கற்பு வாழ்க்கையிலும் களவு வாழ்க்கையிலும் தலைவியின் மீது அக்கறை கொண்டவளாக விளங்குவதை பேராசிரியர் எடுத்துரைக்கிறார்.

செவிலித்தாயை போலவே தோழியும் தலைவியின் களவு மற்றும் கற்பு வாழ்க்கையில் முக்கிய பங்கு வகிக்கக் கூடியவள் ஆவாள். இந்த தோழி என்பவள் செவிலித் தாயின் மகள் ஆவாள். தோழியே தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் பாலம் போல செயல்படுபவள். தலைவியைத் தலைவன் அடைவதற்கு முக்கிய காரணம் தோழியே. தோழி இல்லையெனில் தலைவியின் களவு காலம் சிறப்பாக இருக்காது. தலைவியின் களவு காலம் அலராக மாறும் பொழுது பலராலும் தலைவி பழிக்கப்படுகிறாள். எனவே தலைவி மீதுள்ள அக்கறையால் தோழி தலைவனை விரைந்து மணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்துவாள்.

**பொய்யா மரபின் ஊர் முது வேலன்**
**கழங்கு மெய்ப்படுத்து, கன்னம் தூக்கி,**
**'முருகு' என மொழியும்ஆயின்,**
**கெழுதகைகொல் இவள் அணங்கியோற்கே? (ஐங்குறுநூறு, பா. 245)**

என்ற பாடல் தோழி தலைவனை விரைந்து தலைவியை மணம் செய்து கொள்ளுமாறு கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடல் வழி தோழியின் நல்லெண்ணத்தையும், அறிவுத் திறத்தையும் அறிந்து கொள்ளலாம். தோழியின் சிறப்பியல்புகளை குறித்து பேராசிரியர் பல இலக்கிய ஆதாரங்களுடன் விளக்குகிறார்.

**பாங்கனும் பரத்தையும்**

தலைவன் வாழ்வில் இருக்கக்கூடிய ஒரே ஆறுதல் பாங்கன் மட்டுமே. தலைவன் தன் நெஞ்சில் உள்ள வருத்தத்தையும் இன்பத்தையும் பாங்கனிடம் பகிர்ந்து கொள்கிறான்.

 தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இவ்வாறாக பாங்கனின் இயல்புகளை பேராசிரியர் எடுத்துரைக்கிறார். பரத்தை தலைவன் தலைவியின் இல்லற வாழ்வின் பிரிவிற்கும் அவர்களின் நெருக்கத்திற்கும் மிக முக்கிய காரணமாக விளங்குகிறாள். தலைவன் பெருமையும் வீரமும் உடையவனாக இருந்தாலும் பரத்தையரின் விஷயத்தில் தலைவியை காயப்படுத்தக் கூடியவனாக விளங்குகிறான். மருத நிலத்தில் பரத்தையரிடம் தலைவன் செல்வதாலேயே தலைவி தலைவனுடன் ஊடல் கொள்கிறாள்.

**மகிழ்நன் மாண்குணம் வண்டு கொண்டனகொல்?**
**வண்டின் மாண்குணம் மகிழ்நன் கொண்டான்கொல்?**
**அன்னது ஆகலும் அறியாள்,**
**எம்மொடு புலக்கும், அவன் புதல்வன் தாயே. (ஐங்குறுநூறு, பா. 90)**

என்ற பாடல் தலைவனின் இயல்பையும் பரத்தையரின் இயல்பையும் ஒருங்கே சேர்த்து விளக்குகிறது. காதல் பரத்தையர் தங்களை தலைவர்கள் விரும்பி வரும்பொழுது இன்பம் கொடுப்பவர்களாகவும் அவர்கள் செல்லும் பொழுது அதற்கு வருத்தப்படாதவர்களாகவும் இருக்கக் கூடிய நிலையையும் அறிந்து கொள்ளலாம். இவ்வாறாக பேராசிரியர் பரத்தையின் இயல்புகளை குறித்து விளக்குகிறார்.

**தலைமக்களோடு தொடர்புடையவர்கள்**

தலைவன் பரத்தையரின் வீட்டிற்கு சென்று வருவதால் தலைவி தலைவன் மீது ஊடல் கொள்கிறாள். ஊடலைத் தீர்த்து வைக்க சிலர் வாயிலாக இருப்பவர்கள், மேலும் தலைவன் தலைவியின் மீது அக்கறை கொண்டு அவர்களின் இல்லற வாழ்விற்கு அறிவுரை வழங்கக் கூடியவர்கள் இவர்களை எல்லாம் தலை மக்களோடு தொடர்புடையவர்கள் என பேராசிரியர் கூறுகிறார். தலை மக்களோடு தொடர்புடையோர் ஒன்பது பேர் ஆவர். அவர்கள் கண்டடோர், அறிவர், பாணன், பார்ப்பர், விறலியர், கூத்தர், இளையர், விருந்தினர் மற்றும் தேர்ப்பாகன் போன்றோர் ஆவர். தலைவன் தலைவியுடன் உடன்போக்கு மேற்கொள்ளும் பொழுது கண்டோர்கள் அவர்களைப் பார்த்து இரக்கம் கொள்கின்றனர். அதேபோல் தலைவன் தலைவியை தேடி வரும் செவிலித்தாயிடம் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப மணம் செய்து வைக்குமாறு அறிவுரையை அறிவுறுத்துபவர்களாகவும் கண்டவர்கள் செயல்படுவதை பேராசிரியர் பதிவு செய்கிறார். அறிவர் என்பர் முற்றும் துறந்தவரும் அனைத்து அறிவையும் பெற்றவராவர். அதேபோல் பார்ப்பார் என்பவரும் பார்ப்பன குலத்தை சார்ந்தவர். இவர்களும் தலைவன் தலைவியின் இல்லற வாழ்விற்கு அறிவுரைகளை பகர்பவர்களாக இருக்கிறார். விறலியர் கூத்தர் இளையர் போன்றோர் தலைவன் தலைவியின் தேவைகளை நிறைவேற்றுபவர்களாக விளங்குகின்றனர். இவர்கள் பெரும்பாலும் தலைவியின் ஊடலைத்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தீர்க்க கூடியவர்கள் ஆவர். பல நேரங்களில் விருந்தினர்கள் ஊடல் தீர்க்கும் வாயிலாக செயல்படுகின்றனர் என பேராசிரியர் பதிவுசெய்கிறார்.

பாணன் தலைவனுக்காகவே பிறந்த ஒரு மாந்தராக அகப்பாடல்களில் விளங்குகிறார். சரி தவறு என்பதை விட தலைவனின் இன்பமே முக்கியமாக கருதப்படுகிறது. பாணனின் நோக்கில் பரத்தையரும் தலைவியும் ஒரே மாதிரியாகவே நோக்கப்படுகின்றனர். இதன்காரணமாக பல சமயங்களில் தலைவியிடம் ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளாகிறார்.

**ஈட்டுபுகழ் நந்தி பாண ! நீ எங்கையர் தம்**
**வீட்டிருந்து பாட, விடிவளவும் காட்டில் அழும்**
**“பேய்” என்றாள் அன்னை: பிறர் “நரி” என்றார்; தோழி,**
**“நாய்” என்றாள்; “நீ”என்றேன் நான்! (நந்திக் கலம்பகம், பா. 106)**

என்ற பாடல் வாயிலாக பேராசிரியர் பாணனின் இழிநிலையை உணர்த்துகிறார். ஆனால் அதே சமயம் ஐங்குறுநூற்றில் 480 ஆம் பாடலில் பாணனின் மேன்மையும் பேராசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

தேர்ப்பாகன் அக இலக்கியங்களில் பெரும்பாலும் பேசியதற்கான குறிப்புகள் இல்லை ஆனால் வினை முடிந்த தலைவன் தன் மன உணர்வுகளை தேர்ப்பாகனிடமே வெளிக் காட்டுகிறான்.

**அப்பொழுது நம் போரின் வெற்றிப் பெருமிதத்தை அவள் சுற்றத்தவர் கூறக்கேட்ட பின்பு நம்மைத் தழுவினாற் போல் மகிழ்வாள் எனக்கூறி மகிழ்கின்றான். அவளைக் குறிப்பிட்ட காலத்துள் சந்திக்க முடியவில்லையே எனக் குற்ற உணர்வு ஏற்பட்டாலும் அவள் செயல் குறித்துப் பாகனுக்குக் கூறுகின்றான். வினை முடிந்து தலைவன் பாகனிடம் பேசும்போது தலைவன் மீதுள்ள மதிப்பால் இடையிட்டுப் பேசுவதில்லை.காரணம் தேரை விரைவாகச் செலுத்துதலே தலைவனுக்குத் தரும் தக்க மறுமொழி என்பதுபோலப் பாகன் செயல்படுகின்றான் (சங்க இலக்கியத்தில் உரையாடல், ப. 19)**

இவ்வாறாக பேசாத பாகனுக்கு விளக்கம் அளிக்கிறார் ஆ.ஆமிர்தகௌரி. இவரின் கருத்து போலவே பேராசிரியரும் பாகனின் இயல்பை விவரிக்கிறார். தலைவனின் எண்ண ஓட்டங்களை அறிந்து பாணன் தேரை விரைவாக செலுத்துகிறான். பேராசிரியர் தலைவன் தலைவியுடன் தொடர்புடையவர்களான 9 பேரின் சிறப்பியல்புகளையும் சங்க இலக்கியங்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் ஒப்பிட்டு நோக்கி விரிவாக விளக்குகிறார்.

**முடிவுரை**

சங்க காலத்தில் மக்கள் இல்லற வாழ்க்கையை எவ்வாறு வாழ்ந்தனர் என்பது இக்கட்டுரையின் வாயிலாக புலனாகிறது. ஒரு ஆணும் பெண்ணும் இணைந்து சிறப்பாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இல்லறம் நடத்தினால் மட்டுமே சமுதாயம் சிறப்புடையதாக இருக்கும் என்ற அடிப்படையை மையப்படுத்தியதாக சங்க இலக்கியங்கள் அமைகின்றன என்பதை பேராசிரியர் எடுத்துரைக்கிறார். தலைவனும் தலைவியும் இல்லற வாழ்வில் இருந்தாலும் விருந்தோம்பல் ஈகை போன்ற சமூகம் சார்ந்த அறச்செயல்களில் ஈடுபடுவதையும் அறிந்துகொள்ள முடிகிறது. இத்தகைய வழிகாட்டுதல் இன்றைய தலைமுறைகளுக்கு மட்டுமல்லாமல் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்து வரும் அனைத்து தலைமுறையினருக்கும் எக்காலத்திற்கும் பொருந்தக் கூடியதாக இருப்பதை உணரமுடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] பேராசிரியர் டாக்டர்.ந.சுப்புரெட்டியார். *அகத்திணைக் கொள்கைகள்.* நாவல் ஆர் பிரிண்டர்ஸ், மதராஸ், முதற்பதிப்பு 1981.

[2] புலியூர்கேசிகன். *அகநானூறு.* சாரதா பதிப்பகம்,சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2018.

[3] அ. தாமோதரன் (பதிப்பாசிரியர்). *இறையனார் களவியல்.* செம்மொழி தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு 2021.

[4] ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. *ஐங்குறுநூறு.* சாரதா பதிப்பகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 2006.

[5] புலியூர்கேசிகன். *கலித்தொகை.* கௌரா புத்தகமையம், சென்னை, முதற்பதிப்பு, 2019.

[6] புலியூர்கேசிகன். *குறுந்தொகை.* ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 2017.

[7] டாக்டர். ஆ. அமிர்தகௌரி. *சங்க இலக்கியத்தில் உரையாடல்.* பாரி நிலையம், சென்னை.

[8] டாக்டர். க. தமிழ்ச்செல்வன் மற்றும் அ.ப.பாலையன் (உரையாசிரியர்). *நம்பியகப்பொருள்.* சாரதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2010.

[9] முனைவர் கதிர்.மகாதேவன். *நற்றிணை.* முல்லை பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2012.

[10] இளம்பூரணர் (உரை). *தொல்காப்பியம்.* சாரதா பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 2019.

[11] பதிப்பாசிரியர் அரங்க.மு.முருகையன். இரா.அறவேந்தன். *தொல்காப்பிய ஆய்வுகள்.* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113.

[12] *இனம் பன்னாட்டு மின்னாய்விதழ். தொல்காப்பிய வழி அகத்திணை மாந்தர்கள்.* 10/08/2019 அன்று அணுகப்பட்டது.

[13] புலவர் முனைவர் கோ.சுந்தராம்பாள். *அகத்திணையில் முதற்பொருளும் கருப்பொருளும்* (ஆய்வுக்கட்டுரை). வல்லமை.காம். 10/08/2019 அன்று அணுகப்பட்டது.

[14] சுவாதி. *அக வாழ்வில் தோழி* (ஆய்வுக்கட்டுரை). வலைத்தமிழ்.காம், 28/03/2013 அன்று அணுகப்பட்டது.

[15] முனைவர் ச. மாசிலாதேவி. *தொல்காப்பியம் காட்டும் வாழ்வியல்* (ஆய்வுக்கட்டுரை).

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

முத்துக்கமலம் (மின்னாய்விதழ்), E - ISSN 2454-1990. 10/08/2019 அன்று அணுகப்பட்டது.

## References

[1] Professor. Dr. Na.Subbu Reddiar. *Akattinai Kolkaigal*. Novel Art Printer, Madras, Year 1981.
[2] Puliyur Kesigan. *Aganaanuru*. Sarathaa Pathippagam, Chennai, Year 2018.
[3] A. Thamodharan (Pathippachiriyar). Eraiyanaar Kalaviyal. Central Institute of Classical Tamil, Chennai, Year 2010.
[4] Avvai.Su.Thuraisamipillai. *Inkurunuru*. Sarathaa Pathippagam, Chennai, Year 2006.
[5] PuliyurKesigan. *Kaliththogai*. Gowra Puthaga Nilaiyam, Year 2019.
[6] PuliyurKesigan. *Kurunthogai*. Sri Senbaga Pathippagam, Chennai, Year 2017.
[7] Dr.A.Amirtha Gowri. *Sanga Elakkiyaththil Uraiyadal*. Paari Nilaiyam, Chennai.
[8] Dr.K.Thamil Selvan and A.P. Paalaiyan (Uraiyachiriyar). *Nambiyakaporul*. Saratha Pathippagam, Chennai,
[9] Dr.Kathir. Mahadevan. *Narttinai*. Mullai Pathippagam, Chennai, Year 2012.
[10] Elampuranar Urai. *Tolkappiam*. Sarathaa Pathippagam, Chennai, Year 2019.
[11] Editor. Aranga. MU. Murukaiyan. Ira. Araventhan. *Tolkappiya Aayvugal*. *International Tamil Research Institute*, Chennai – 600 113.
[12] *Inam International E-Journal of Tamil Studies*. *Tolkippian way Internal Matters*. 10/08/2019.
[13] Dr.Go.Sundarampal. *Mutharporulum and Karuporulum in Akanainthinai*. (Research Paper). Vallamai.com. Accessed on 10/08/2019.
[14] Swathi. *Aga VaalvizhThozhi*. (Research Paper), webtamil.com, Accessed on 28/03/2013.
[15] Dr.Ch.Masiladevi. *Tholkappiyam Kattum Vaalviyazh* (Research Paper). Muthukamalam (Minnaivitha), E – ISSN 2454-1990, Accessed on 10/08/2019.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் பார்வையில் கல்வி உளவியல் கோட்பாடுகள்
## Professor's Theories of Educational Psychology

**முனைவர் பா. வைடூரியம்மாள்,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
ராணிஅண்ணாஅரசுமகளிர்கல்லூரி, திருநெல்வேலி, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. B. Vaiduriammal,** Assistant Professor of Tamil,
Ranianna Government College for Women, Tirunelveli, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-9400-2765**
**DOI: 10.5281/zenodo.7275577**

### Abstract

*Psychology is the interpretation of man's inner behaviours. The condition of today's students in educational institutions is a major problem. To rectify this, the teacher needs to know the psychology of the students. Many witnesses are well aware of this and emphasize its update in educational psychology. Professor N. Subbu Reddiar has published a separate book on educational psychology. A clear understanding of the two essentials of education is needed if the teacher-student relationship has to be well established. The teacher should treat the students without waiting or helping. A teacher ought to be well-versed in the developmental potential of students. These are all guidelines that teachers generally follow. Professor Reddiar explains the educational messages like this. The academic principles stated by Professor from the guidelines rather than the instructions for the teacher and students will surely help them to achieve new vistas. People who are working in the field of teaching, parents concerned with the education of children, and the general public should be familiar with educational psychology because education is not something that can be poured into one. It is the opinion of Professor Subbu Reddiar that one should achieve by himself. The comments made by Prof. N. Subbu Reddiar are very relevant today. There are many kinds of problems in learning and teaching education. Educational psychology is one of the topics in focus at Global unity. This article is designed to explain, analyze, and compare the psychological knowledge that a teacher should have, students' awareness, motivation for students, applications of educational psychology, etc. Overall, this article illustrates the views of Prof. N. Subbu Reddiar on the need for educational psychology in today's context.*

**Keywords:** Professor Subbu Reddiar, Theories, Educational Psychology.

### ஆய்வுச்சுருக்கம்

*மனிதனின் அகப்புற மாறுபாடுகளை, நடத்தைகளை, விளக்குவது உளவியல். கல்வி நிலையங்களில் இன்றைய மாணவர்களின் நிலை பெரும் சிக்கல் நிறைந்ததாக உள்ளது. இதனை நன்கு உணர்ந்த தகைமைசான்ற அறிஞர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியர் அவர்கள் கல்விஉளவியல் குறித்து ஆராய்ந்து தனிநூலே வெளியிட்டுள்ளார். கல்வி என்பது ஒருவனுக்கு ஊற்றக்கூடிய பொருளல்ல. ஊட்டக்கூடிய பொருளுமல்ல. அவனே அடைய வேண்டியது என்பது பேராசிரியரின் கருத்தாகும். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் குறிப்பிடும் கருத்துகள் இன்றைய காலகட்டத்தில் மிகவும் இன்றியமையானவையாகும். கல்வி கற்பதிலும், கல்வியை*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*கற்பிப்பதிலும் பலவகையான பிரச்சினைகள் ஏற்படுகின்றன. அப்பிரச்சினைகளை அணுகுவதற்கு உதவுகின்ற ஒன்றாக இக்கல்வி உளவியல் அமைகின்றது. மொத்தத்தில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் கருத்துக்களை, இன்றைய சூழலில் கல்வி உளவியலின் அவசியத்தை எடுத்துரைப்பதாக இக்கட்டுரை அமைகிறது.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், கல்வி, உளவியல் கோட்பாடுகள்.

**முன்னுரை**

மனித நடத்தையைப் பற்றி விவரிக்கும் அறிவியலே உளவியல். இன்றைய தலைமுறையினர் நாட்டை ஆளும் வருங்காலத் தூண்களாவர். அத்தகைய மாணவர்களின் மனநிலையை மனதில் கொண்டு உருவாக்கப்பட்டதே கல்வி உளவியலாகும். கல்வி உளவியல் குறித்து பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தனிநூலே படைத்துள்ளார். அதில் தமது ஆசிரியப்பணியில் கண்ட மாணவர்களின் மனநிலையைப் புரிந்து, கல்வி எப்படி அமைய வேண்டும். அதைக் கற்பிக்கும் ஆசிரியர் எவ்வாறு இருக்க வேண்டும் என்பது போன்ற பல கல்விசார் உளவியல் பதிவுகளைத் தந்துள்ளார். அவ்வகையில் பேராசிரியர் தரும் கல்வி உளவியல் கோட்பாடுகளை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

**பேராசிரியர் புலமை**

கலைபயில் தெளிவும் கட்டுரை வளமையும் கொண்டவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள். ஓர் உயர்நிலைப் பள்ளியை நிறுவி அதன் தலைமையாசிரியராகத் தம் கல்விப்பணியைத் தொடங்கி ஒன்பதாண்டுகள் பணியாற்றியவர். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழக அரசு மானியத்தைக் கொண்டு தமிழ்த்துறையைப் புதிதாக நிறுவியவர். பதினேழு ஆண்டுகள் தமிழை, அப்பல்கலைக் கழகத்தில் தலைவராகவும் பேராசிரியராகவும் இருந்து வளர்த்தவர். பல நூல்களை எழுதியுள்ளார். அவை தமிழ் இலக்கியக் கல்விக்கும் கல்வியியல் கல்விக்கும் அடிப்படைத் தரவுகளாக அமைகின்றன.

**கல்வி – உளவியல் விளக்கம்**

வாழ்க்கைப் போராட்டங்கள் அனைத்தும் தனிமனிதனின் உள்ளத்திலேதான் ஆரம்பமாகின்றன. மனிதமனமானது மூன்று நிலைகளில் இயங்குகிறது. அவை சிந்தித்தல், உணர்தல் மற்றும் புறச்செயல்களைத் தூண்டுதல் என்பனவாகும். அதனடிப்படையில் உளவியல் என்பது மனிதன் உணர்ந்து செயல்படும் நடத்தைகளை (Conscious behavior) மட்டுமே ஆராய்வதாகும். உயிருள்ள ஒரு மனிதன், மாறிவரும் உலகிலுள்ள பொருள்களுக்கும், நிகழ்ச்சிகளுக்கும;, ஏனையோருக்கும்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இடைவினை ஆற்றுவதைப் படிப்பதே உளவியலாகும் என்று பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் குறிப்பிடுகிறார்.

கல்வி என்பது கற்பவரின் செயலை, உணர்ச்சியை எண்ணத்தை மாற்றுவதாகும். கல்வியின் நோக்கமாகப் பேராசிரியர்,

**நல்வாழ்க்கை நடத்த நம்மை, நமது சூழ்நிலைக்குப் பொருத்தமுறச் செய்வதில் துணை செய்வதாகும். கல்வியின் இலக்கணம் என்பது ஒருவரை வாழ்க்கைக்குப் பொருத்தமுறுதற் பொருட்டு மாற்றம் செய்வதாகும் (கல்வி உளவியல், ப. 2)**

என்கிறார். கல்வித்துறையில் எழும் பிரச்சினைகளுக்கும் உளவியல் அடிப்படையில் பலகோணங்களில் தீர்வினைக் கூறுகிறார்.

**உடல் வளர்ச்சி**

உடலுக்கும் உள்ளத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. **ஒரு குழந்தை வளர்ச்சியடையும் போது அதன் உயரம், எடை, மொத்த பரிணாமம் ஆகியவை அதிகரிக்கின்றன. (இளநிலைக் கல்வியியல் சிறப்புக் கல்வி., ப. 10)** உடல் வளர்ந்த பின்புதான் அதன் செயல்பாடுகள் உள்ளம் மூலம் வெளிப்படுகின்றன. உடலின் வளர்ச்சி குடிவழியிலேயே உறுதி செய்யப்படுகின்றன. வளரும் முறைகளில் ஒவ்வொரு குழந்தைக்கும் மாறுபாடு காணப்படுகிறது. குழந்தையின் நான்கு வயதுவரை மூளை 100 - க்கு 75 பங்கும், எட்டு வயதில் 90 பங்கும் இருபது வயதில் முழுக்கவனமும் அடைகிறது. எனவே உடல் வளர்ச்சியைப் பொறுத்தே உள்ள வளர்ச்சி அமைகிறது எனலாம். மனிதனின் வயது கூடக்கூட அவன் வெளிப்படுத்தும் உள்ளக் கிளர்ச்சியும் மாற்றம் அடைகிறது. குழந்தைகளின் கிளர்ச்சி நடத்தையைப் புரிந்து கொள்ள வேண்டும். குழந்தை சமூகத்துடன் தொடர்பு கொண்டு வளர்ச்சி பெறுவதும் உண்டு. குடும்பமே சமூக உணர்ச்சியை முதன் முதலாக உருவாக்குகிறது. சிறுவயதில் ஆண் பெண் என்ற வேறுபாடு தோன்றுவதில்லை. பின்னர் இவ்வேறுபாடு தோன்றுகிறது. இதில் ஆசிரியர் பெற்றோர், பாகுபாடு காட்டாமல் சமமாக நடந்து கொள்ள வேண்டும்.

**பரம்பரையும் சூழலும்**

மனித வளர்ச்சிக்கு பரம்பரையும் சூழலும் முக்கிய காரணங்களாக அமைகின்றன. ஏனெனில் ஒருவரின் நடத்தையும் உடல் பண்புகளும், அவரது பரம்பரையையும் இயல்புகளையும் கொண்டும், அவர்வாழும் சூழல்களைக் கொண்டுமே அமைகின்றன என்பது பல ஆய்வாளர்களின் கருத்தாகும். சிறந்த கல்வி முறை என்பது இத்தகைய பரம்பரைக் குணத்தையும் அவன் சார்ந்த சமூகச் சூழல் அமைப்புகளையும் மாற்றி, அவனைச் சிறந்த கல்வியாளனாக உருவாக்க வேண்டும். இயல்பாக போதிய நுண்ணறிவு பெறாத குழந்தையாக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இருந்தாலும் சிறப்பான முறையில் கற்பிக்கப்பட்டால் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை அடைய முடியும்.

**வகுப்பறை ஆசிரியரும் உளவியலறிவும்**

உளவியல் பற்றிய அறிவு ஓர் வகுப்பறை ஆசிரியருக்கு மிக முக்கியமானதாகும். மாணவன் தனது திறமையையும், மனப்பாங்கையும், அறிவையும், விழுமியங்களையும் வளர்க்கும்படி அவனுக்கு உதவும் பணியே கற்பித்தல் எனப்படுகிறது. வகுப்பில் சில மாணவர்கள் மந்தகதியிலே செயலாற்றுவார்கள். ஆசிரியர்கள் மாணவர்களின் கவனம் பெற சில யுக்திகளை அறிந்து கொள்ள வேண்டும். பேராசிரியர் கூறுவதைப் போன்று, **அனிச்சைக் கவனம், இச்சைக் கவனம், பழக்கக் கவனம் (கல்வி உளவியல்., ப. 236)** ஆகியவை கவனத்தின் வளர்ச்சிப் படிநிலைகளாகும். இதில் அனிச்சைக் கவனம் என்பது குழந்தைப் பருவத்தில் இருப்பது,. பழக்கவழக்கம் என்பது நிபுணர்களிடம் இருப்பது. மாணவர்களின் கவனம் மாறிக்கொண்டே இருக்கும். மாணவர்களின் வயது மனநிலை அறிந்து அவர்களின் கவனத்தை அறிய வேண்டும். குழந்தைகளிடம் கவனமின்மை இல்லை என்றால் அதனை ஆசிரியர் சமாளிக்க வேண்டும். எனவே ஆசிரியர், அனைவருக்கும் ஒரேமாதிரியான கற்பித்தல் முறையினைக்கொண்டு கற்பித்தல் கூடாது. அவர்களின் இயல்பு நிலையை அறிந்து கற்பிக்க வேண்டும். ஏனெனில் கல்வி என்பது ஒருவனுக்கு ஊற்றக்கூடிய பொருளுமல்ல. ஊட்டக்கூடிய பொருளுமல்ல. அவனே அடைய வேண்டியது என்பது பேராசிரியரின் கருத்தாகும்.

**ஆசிரியர் – மாணவர் உளவியலை அறிதல்**

தாம் கற்பிக்கும் மாணவர்களை தனித்தனியாகவும் குழுவாகவும் ஆசிரியர் நன்கு அறிந்து கொள்ள வேண்டும். அனைத்து வயது குழந்தைகளின் கற்றலை ஊக்குவிக்கும் வகையில் பொருத்தமான ஊக்கிகளாக ஆசிரியர்கள் செயல்பட வேண்டும். மாணவர்கள் கற்கும் பாடங்களினால் அவர்களுக்குப் பயன் ஏற்படும் என்ற கருத்தை மாணவர்கள் மனதில் பதிய வைக்க வேண்டும். அதேநேரத்தில் நடைமுறை வாழ்க்கையோடு தொடர்புபடுத்தி கற்பிக்க வேண்டும். மனித மனமானது பிறரின் பாராட்டையும் பிறரால் தனக்கு ஏற்படும் அங்கீகாரத்தையும் விரும்புகிறது. **வெகுமதி ஒருசெயலை விருப்பத்துடன் செய்வதற்குப் பயன்படுகிறது. ஆனால் தண்டனை வேண்டாத ஒரு செயலைத் தவிர்ப்பதற்கு உதவுகின்றது. (கல்வியில் முன்னேற., ப.1)** அதிலும் மாணவர் பருவத்தில் புறக்கணிப்பைவிட பாராட்டே பெரிதும் போற்றப்படுகிறது. எனவே ஆசிரியர் மாணவர்களின் சிறுசிறு செயல்களையும் பாராட்டி, அவர்களுக்கு குறையை உணரும் வகையில் சொல்லி, சிறந்த ஊக்கிகளாகச் செயல்பட வேண்டும்.

**உற்று நோக்கல் முறை**

பிறரின் நடத்தைக் கோலங்களைப் புறத்தை நின்று தொடர்ந்து கூர்ந்து கவனித்து

உண்மைகளை அறியும் முறையே உற்று நோக்கல் முறை எனப்படும். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கட்டுப்பாட்டிற்கு உட்படாத உற்று நோக்கல், கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட உற்று நோக்கல் என இருவகை உற்று நோக்கலை குறிப்பிட்டுள்ளார். இதில் மாணவர்களை உற்று நோக்கல் என்பதை கட்டுப்பாட்டிற்குள் உட்பட்ட உற்று நோக்கல் வகையில் அடக்குகிறார். உற்று நோக்கல் முறையைப் பயன்படுத்தும்போது அதில், **புலன்காட்சி, நடத்தையை குறித்துக் கொள்ளுதல், சேகரிக்கப்பட்ட நடத்தைக்கூறு விபரங்களைப் பகுத்து ஆராய்தல், பொது உண்மைகளைப் பெறுதல் (Educational Psychology, p. 3)** என்ற நான்கு விதச் செயல் நிலைகள் இடம்பெறுவதாக கல்வி உளவியல் நூல் குறிப்பிடுகிறது. இந்நான்கு செயல்நிலைகளே மாணவர்களைச் சிறந்த ஆளுமையாளர்களாக மாற்றும். உற்று நோக்கலின் மூலம் வகுப்பில் மாணவனின் பங்கு பெறும் திறன், பழக்கவழக்கம், சுயகட்டுப்பாட்டின் (Self Control) அளவுமொழி, உடல், கவனம் ஆகியவை உற்றுநோக்கப்பட வேண்டும். ஆசிரியர்கள் மாணவர்களை உற்று நோக்குவது மட்டுமன்றி, மாணவர்களையும் உற்று நோக்கலில் பயிற்சி தர வேண்டும். ஏனெனில் ஒருதுறையில் திறமையாக உற்று நோக்குபவர்கள் பிறவற்றில் திறமையாக அதைச் செய்ய முடிவதில்லை. இதை நிவர்த்தி செய்வதற்கு மாணவர்களைச் சுற்றுலா அழைத்துச் செல்ல வேண்டும்.

**ஆசிரியர் சிறப்பு**

கல்வி உளவியல் என்பது ஆசிரியர் பற்றியதும், மாணவர் பற்றியதும் ஆன ஒன்றாகும். எனவே ஆசிரியர் மாணவர்களைப் பற்றி மட்டும் அறிந்து கொள்ளாமல் தன்னைப் பற்றியும் அறிந்J கொள்வது மிகமிக அவசியமான ஒன்றாகும். ஆசிரியர், தான் பயிற்றுவிக்கும் முறையில் மாற்றம் செய்ய வேண்டும். தொழிலில் முதிர்ச்சி பெற்ற ஆசிரியர் தன்னுடைய தேவைகளை அறிந்து அதனை எவ்வாறு நிறைவேற்றிக் கொள்கிறாரோ அதைப் போன்று மாணவர்களின் வளர்ச்சிக்கும் கல்விக்கும் எடுத்துக்காட்டாகத் திகழ வேண்டும். சிக்கல் நிறைந்த உலகில் தன்னலம், இறுமாப்பு, அதிகார வெறி, போட்டி மனப்பான்மை, போன்றவை தலைவிரித்தாடுகின்றன. அதிலும் ஆசிரியர்கள் வாழ்க்கையில் பல ஏமாற்றங்களும், இடர்ப்பாடுகளுமே உள்ளன. இவற்றிற்கு எல்லாம் ஆசிரியர் பூட்டுப் போட்டுவிட்டு இந்த முரண்பாடுகளை உணர்ந்து அவற்றைத் தமது பணிக்கு ஏற்றவாறு குறைக்க வேண்டும்.

**பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையினானே (நன்னூல்., நூ . 462)**

என்ற நன்னூல் நூற்பாவிற்கு ஏற்ப ஆசிரியர் தமது தொழிலை மேற்கொள்ள வேண்டும் நிலம், மலை, துலாக்கோல், மலர் என்று நன்னூல் குறிப்பிடும் நல்லாசிரியர்போல் செயல்பட வேண்டும் என்றும் பேராசிரியர் அவர்கள் குறிப்பிடுகிறார். ஆசிரியர் பெற்றுள்ள அறிவு வேறு. மாணவர்களுக்கு எடுத்துரைக்கும் திறன் வேறு. எனவே, தான்பெற்ற அறிவைச் சரியான

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

சான்றுகளுடன் குழந்தைகளின் அனுபவத்துடன் கற்றுக் கொடுக்க வேண்டும். அதற்கு ஆசிரியருக்கு உளவியல் அறிவு அவசியம். குழந்தையோடு குழந்தையாக மாறி உயிரோட்டமுடன் பாடத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டும். ஊதியத்திற்கு முக்கரயத்துவம் குடுத்து குழந்தைகளின் கற்றலில் குறை வைக்கக் கூடாது. வாழ்நாள் முழுவதும் ஆசிரியர் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும். பட்டம் பெற்ற பின்பு தான் கற்றல் தொடங்குகிறது என்பதை ஆசிரியர் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். நவீன வாழ்க்கையில் அறிவின் வளர்ச்சி அனைத்து துறைகளிலும் பறந்து விரிந்து கொண்டே வருகிறது. ஒருவற்கு அறிவு, ஆசிரியர் கற்றுக் கொடுக்கும் போது கால்பங்கும், தன்னுடன் பயிலும் மாணவர்களுடன் உறவாடும் போது மற்றொரு கால்பங்கும், தான் படித்ததை பிறருக்கு கூறும்போது மீதம் உள்ள அரைப் பங்குமாக அறிவு வளர்ச்சி பெறுகிறது. எனவே தொடர்ந்து கற்றுக் கொண்டே இருக்க வேண்டும் என்பது பேராசிரியரின் கூற்றாகும். ஆசிரியர் மாணவர்களுடனும், நிர்வாகத்துடனும் மனம் ஒன்றுபட்டு இருக்க வேண்டும். சமூகத் தேவைக்கு ஏற்ப, பள்ளி நிகழ்ச்சிகளை அமைக்க வேண்டும். மக்கள் சமுதாயம் அனைத்தும் ஆசிரியர்களால்தான் உருவாக்கப்படுகின்றனர். இதனை மனதில் பதியவைத்து ஆசிரியர் செயல்பட வேண்டும்.

**ஆசிரியரின் ஊக்குவித்தல்**

ஒருவர் கற்று மேம்பாடு அடைவது அவருக்குக் கிடைக்கும் ஊக்கத்தைப் பொறுத்தே அமைகிறது. மாணவர்களின் கல்விச் சாதனைகளை உருவாக்குவதில் பெரும்பங்கு வகிப்பது ஊக்கம் என்பதாகும். **ஊக்குவித்தல் (Motivation) என்ற சொல் இலத்தின் மொழிச் சொல்லின் "Moveror Motum" என்னும் சொல்லிலிருந்து உருவானது. இச்சொல்லிற்குச் செயல்படு அல்லது செயல்பாட்டிற்கு உட்படுத்து என்று பொருள் (கற்றலை எளிதாக்குதலும் மேம்படுத்துதலும், தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்., ப. 2)** ஊக்கம் என்பது ஒரு செயலைத் தொடர்ந்து செய்யவும், தொய்வில்லாமல் முடிக்கவும் துணை செய்கிறது. இதனால் கற்றலின் ஆர்வம் ஏற்படுகிறது. கற்போர்க்குத் தன்னம்பிக்கையை வளர்க்கிறது. சமூகஊக்கிகளாக சமூகத்திடமிருந்து அன்பு, கனிவு, போன்றவை மாணவனுக்கு கிடைக்க வேண்டும். ஆசிரியர் கற்றுத்தரும் பாடத்தைப் புரிந்து கொள்ளும் அளவிற்கு முதிர்ச்சி இருக்கவேண்டும். மாணவனுக்கான இலக்கு எது என்பதை அவனை உணர வைக்கவேண்டும். கற்றலின் ஊக்கத்தை ஏற்படுத்த வேண்டும். வெற்றி தோல்வி இரண்டிலும் ஒரு அனுபவத்தைக் கற்கும் அளவிற்கு ஊக்கம் தரவேண்டும்.

**எண்ண உருவாக்கம்**

கற்பித்தலின் தலையாயப்பணி மாணவனுக்குத் தவறில்லாத தெளிவான எண்ணங்களைப் பெற்றுத்தருவதே ஆகும். மாணவன் தான் நினைத்த எண்ணக் கருவுடன் தொடபர்புடைய செய்திகளை உய்த்துணரும் அறிவு பெற்றவனாகத் திகழ வேண்டும்.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அதேநேரத்தில் தான்பெற்ற அனுபவத்தில் இருந்து எண்ணங்களை உருவாக்கத் தெரிந்திருக்க வேண்டும். இவையெல்லாம் சரிவர அமையவேண்டும் எனில் ஆசிரியர் அரம்பபாடசாலை காலத்திலேயே இதற்கான முயற்சியை மாணவர்களிடம் புகட்டுதல் வேண்டும்.

**தலைமைப்பண்பை வளர்த்தல்**

இளைஞர்களைச் சிறந்த தலைமைப்பண்பு உள்ளவர்களாக கல்வி ஒன்றே மாற்றும் என்பது பேராசிரியரின் கருத்தாகும். தலைமைப்பண்பை வளர்க்க வேண்டுமெனில் அதற்கு,

> **தோழமை, பகைமை ஏற்படுத்திக்கொள்ளாமை, பழகக் கற்றுக்கொடுத்தல், விட்டுக்கொடுக்கும் இயல்பு, மதிப்பு தருதல், ஏமாற்றமில்லா உழைப்பு, ஒத்துழைப்பு, குறிக்கோள், மரியாதை போன்ற பண்புகளை பள்ளியில் கற்பிக்க வேண்டும் என்கிறார் (கல்வி உளவியல், ப. 95)**

கல்வி என்பது தனித்துவமான அறிவினை மட்டும் வழங்குகின்ற ஒருசெயலாக அமைவதில்லை. மாணவர்களின் பல்வேறு வகையான திறமைகளை அடையாளம் கண்டு அவற்றை வளர்த்து விடுவதாக அமைவதாகும். ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையில் பல்வேறு சந்தர்ப்பங்களில் தலைமை தாங்க வேண்டிய சூழல் ஏற்படும். அதற்கு மாணவர்களைச் சிறந்த தலைமைப்பண்பு உடையவர்களாக மாற்றுவது ஆசிரியரின் கடமையாகும்.

**மதிப்பீடும் சோதனையும்**

பள்ளியிலும் பள்ளிக்கு வெளியிலும் குழந்தைகள் எந்தளவு கற்கிறார்கள் என்பதை ஆசிரியர் மதீப்பீடு செய்ய வேண்டும். தேர்வுகளே மாணவர்களின் திறமையை, தேர்ச்சித் திறனை அளவிட்டுக் காட்டும் அளவுகோலாகத் திகழ்கின்றன. ஒரே கட்டுப்பாடு அமைந்துள்ள சூழ்நிலையில் அனைவரையும் ஒரேசமயத்தில் மதிப்பிடும் மதிப்பீட்டுமானியாகத் தேர்வு அமைகிறது. தேர்வுமுறை ஆய்விலே புதியமுறை ஆய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன. இதிலே 35கும் மேற்பட்ட ஆய்வு முறைகள் உள்ளன. சரிதவறு அய்வுகள், பல்விடையிற்பொறுக்கு ஆய்வுகள், நிரப்பும் ஆய்வுகள், இணைக்கும் ஆய்வுகள், இன ஆய்வுகள், ஒப்பிட்டுக்காட்டும் ஆய்வுகள், நல்லாய்வு, தகுதிஆற்றல் அல்லது ஏற்புடைமை, முரண்படாமை, புறவயம் போன்ற பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருவதாகப் பேராசிரியர் அவர்கள் குறிப்பிடுகிறார்.

**ஆசிரியரின் விழிப்புணர்வு**

மாணவர்கள் மத்தியில் ஆசிரியர் விழிப்புணர்வுடன் இருக்கவேண்டும். வகுப்பில் இருக்கும் மாணவர்கள் அனைவரும் ஆசிரியர் ஒருவரையே உற்றுநோக்கி இருப்பர். அதனால் ஆசிரியர் பாரபட்சமின்றி உள்ளன்போடு நடந்துகொள்ள வேண்டும். மாணவர்களை மதிக்க கற்றுக்கொள்ள வேண்டும். பாராட்டத் தெரிந்திருக்க வேண்டும். சில குழந்தைகள்,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

> **பள்ளிக்கு வந்த பின்னர் இரகசியம் பேசுவர். இரைச்சல் போடுவர். குறும்பு செய்வர். பள்ளிக்கு வராமல் ஒழிந்து திரிவர். கோள் சொல்வர். கற்பனையாற்றல் வளர்ந்து விட்டால் பல முறைகளில் பழிக்குப்பழி வாங்கும் வழிவகைகளை யோசிப்பர். (கல்வி உளவியல்., ப. 172)**

எனவே ஆசிரியர்கள் விழிப்புணர்வுடன் இருந்து இவற்றைச் சமாளிக்க வேண்டும் எனப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.

**ஆளுமை வளர்ச்சியை அறிதல்**

மனிதனுடைய ஆளுமை வளர்ச்சிக்குக் குடிவழியும் சூழ்நிலையும் அடிப்படைக் கூறுகளாக அமைகின்றன. **வீட்டில் மட்டுக்குமிஞ்சிய செல்வம் கொடுத்தல், மாணாக்கர்களைப் புறக்கணித்தல், உடற்குறைபாடுகள் போன்ற காரணங்களால் ஒருவருடைய ஆளுமை பாதிக்கப்பெறலாம் (கல்வி உளவியல்., ப. 79)** என்கிறார். இதன்காரணமாக ஆசிரியர்கள் மாணவர்களின் ஆளுமை வளர்ச்சித்திறனை நன்கு அறிதல் வேண்டும். தேவையான பொருந்தக்கூடிய எடுகோள்களைத் திரட்ட வைக்கவேண்டும். பொருத்தமில்லாத முடிவுகளைப் புறக்கணிக்கச் செய்யவேண்டும். சரியான முடிவுகளை மதிப்பிட வைக்க வேண்டும். அதே நேரத்தில் எடுத்த முடிவுகளை அகப்புறச் சூழலுக்கு ஏற்ப சோதித்துப் பார்த்து திருத்தம் செய்யவும் வேண்டும் என்பது பேராசிரியர் அவர்களின் கருத்தாகும்.

**கல்வி உளவியல் பயன்கள்**

அறியாமையைப் போக்க மக்கள் கல்வி கற்கிறார்கள் என்றாலும் அக்கல்வியை ஒழுங்காகவும், பயனுடனும் கற்க வேண்டும். மனித உடலும் உள்ளமும் நெருங்கிய தொடர்புடையவை. இதனால்தான் கல்வியில், உளவியலை உள்ளடக்கிக்காண வேண்டும் என்பது பேராசிரியர் கருத்தாக அமைகிறது எனலாம்.

> **கல்வியில் மேற்கொள்ளப்படும் செயல்முறைகளிலும் பின்பற்றப்படும் வழிமுறைகளிலும், உளவியல் கோட்பாடுகளையும், விதிகளையும் புகுத்தி, கற்றல், கற்பித்தலில் மேம்படுத்த வேண்டும். இதுவே கல்விஉளவியல் (Education Psychology, P. 8 )**

என்று கோலெஸ்னிக் என்ற இரஷ்ய அறிஞர் கூறுகிறார். கல்வி உளவியலில் மாணவர்களின் நடத்தையை அறிய வேண்டும். மனிதர்களின் நடத்தைகள் உளவியலில் கோட்பாடுகளாகக் கூறப்பட்டுள்ளன. **இந்நடத்தைக் கோட்பாட்டை உருவாக்கியவர் வாட்சன் என்னும் உளவியலறிஞராவார். (கல்வி உளவியல் அடிப்படைகள், ப.7** கல்வியில் உளவியலைப் புகுத்திப் பார்ப்பதால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. இதன் பயன்களாக பெனிடிக்ற்பாலன் அவர்கள் சிலவற்றைக் குறிப்பிடுகிறார். அவை,

- **ஆசிரியர் தம்மைத் தாமே புரிந்து கொள்ள இயலும்**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

- **மாணவரைப் புரிந்து கொள்ள முடியும்**
- **மாணவரின் தனியாள் வேற்றுமைகளை அறிய முடியும்**
- **வகுப்பறைச் செயல்பாடுகளைச் சீர் செய்ய முடியும்.**
- **மாணவர்களின் செயல்களைக் கட்டுப்படுத்த முடியும்**
- **மாணவரைச் சிறந்தவராக மாற்ற முடியும்.**
- **கற்றல், கற்பித்தல், முறையில் எழும் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முடியும் (கல்வி அடிப்படைகள்., ப. 9)**

என கல்வி உளவியலின் பயன்களை விளக்குகிறார்.

**கல்வி கற்கும் முறை**

கல்வி கற்பதில் பல வழிமுறைகள் உள்ளன. அதில் முயன்று தவறிக்கற்றல், பார்த்துச் செய்து கற்றல், உற்று நோக்கிக் கற்றல், ஆக்க நிலை ஏற்றிய மறிவினை, உள் நோக்குவழிக் கற்றல், போன்ற பல வழிமுறைகள் உள்ளன. கல்வி கற்றலில் நிகழ்வு, கால அண்மை, முதன்மை, தெளிவு, எண்ணத் தொடர்பு, மனநிறைவு, மகிழ்ச்சி, கவர்ச்சி, நினைவு கூர்தல் போன்றவை அமைய வேண்டும். குழந்தைகளுக்குப் பொருட்களின் பொதுத்தன்மையை அறியச் செய்ய வேண்டும். கல்வியின் நோக்கமாகப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள்

> **குழந்தைகளின் தேவைகளை உணர்ந்து அவர்களுக்கும் அவர்களின் தனி வேற்றுமைகளுக்கும் ஏற்றவாறு ஆசிரியர் பள்ளியையும் பாடத்திட்டங்களைப் பயிற்றும் முறைகளையும் மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும் (கல்வி உளவியல்., ப. 301).**

என்கிறார். கற்பவரின் இயல்புகளை அறிந்து அதற்கு ஏற்றாற்போன்று கற்றல் அனுபவங்களை மாணவர்களுக்கு எடுத்துரைக்க வேண்டும். இவ்வேளையில்,

> **கற்றல் எவ்வாறு நிகழ்கிறது. கற்றலைப் பாதிக்கும் காரணிகள் எவை. கற்றல் தொடர்பான கொள்கைகள் மற்றும் கோட்பாடுகள் என்னென்ன உள்ளன என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும் (Education Pshyclogy, P. 8)**

ஒரு நாட்டின் நிலை மாணவனின் நிலையைப் பொறுத்து இருக்கிறது. அதிலும் அம்மாணவனை உருவாக்கும் ஆசிரியரைப் பொறுத்து அமைகிறது. அதனால்தான் பேராசிரியர் அவர்களும், **ஒருநாட்டின் பெருமை, அதன் பரப்பு, மலைகள், காடுகள், கனிகள், ஆயுதச் சாலைகள், கட்டடங்கள் ஆகியவற்றைப் பொறுத்ததன்று. ஆனால் அது அந்நாட்டின் பள்ளிகளின் நிலையையும், ஆசிரியரின் தன்மையையும் பொறுத்ததாகும் (கல்வி உளவியல்., ப. 421)** என்று கூறியிருக்கிறார். அனைத்துத் தொழில்களிலும் சமூக சேவையிலும் கூட சமூகம் ஈடுபட வேண்டுமெனில் அத்தகைய சமூக உறுப்பினர்களை உருவாக்கும் அருட்பணி ஆசிரியர் பொறுப்பில்தான் இருக்கிறது.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**முடிவுகள்**

இன்றைய தலைமுறையினர் நாட்டை ஆளும் வருங்காலத் தூண்களாவர். அத்தகைய மாணவர்களின் மனநிலையை மனதில் கொண்டு உருவாக்கப்பட்டதே கல்வி உளவியலாகும். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கலைபயில் தெளிவும் கட்டுரை வளமையும் கொண்டவர். ஓர் உயர்நிலைப் பள்ளியை நிறுவி அதன் தலைமையாசிரியராகத் தம் கல்விப் பணியில் அனுபவசாலியான பேராசிரியர் அவர்கள் கல்வியியல் உளவியல் குறித்து தனிநூலே வெளியிட்டுள்ளார் எனலாம். ஆசிரியர்கள் கைத்திறன், கையெழுத்துத்திறன் இவற்றை கற்பிப்பதுபோல, இயக்கத்திறனையும் கற்பித்தல் வேண்டும். அதற்குத் தகுந்த மதிப்பு தருதல் வேண்டும். கல்வி கற்றலில் நிகழ்வு, காலஅண்மை, முதன்மை, தெளிவு, எண்ணத் தொடர்பு, மனநிறைவு, மகிழ்ச்சி, கவர்ச்சி, நினைவு கூர்தல் போன்றவை அமைய வேண்டும். மாணவர்களின் கவனம் மாறிக் கொண்டே இருக்கும். மாணவர்களின் வயது மனநிலை அறிந்து ஆசிரியர் அவர்களின் கவனத்தை அறிய வேண்டும். எனவே அனைவருக்கும் ஒரேமாதிரியான கற்பித்தல் முறையினைக் கொண்டு கற்பித்தல் கூடாது. அவ்வாறு கற்பித்தால் அம்மாணவர்கள் உள்வாங்கிப் பெற்றுக்கொள்ளும் அறிவின் அளவு வித்தியாசப்படும். எனவே அவர்களின் இயல்பு நிலையை அறிந்து கற்பிக்க வேண்டும். குழந்தைகளை நல்ல முறையில் கற்க வைக்க வேண்டும் எனில் அக்குழந்தைகள் வளரும் பல்வேறு கோலங்களையும் அறிந்து கொள்ள வேண்டும். மனித உடலும் உள்ளமும் நெருங்கிய தொடர்புடையவை. இதனால்தான் கல்வியில், உளவியலை உள்ளடக்கிக் காண வேண்டும் என்பது பேராசிரியர் கருத்தாக அமைகிறது எனலாம். மாணவர்களுக்கு அவையறிதல் தன்மையை கற்றுக் கொடுக்க வேண்டும். ஏனெனில் இன்றைய சமூகச் சூழ்நிலையில் இளைய சமூகம் பல துறைகளில் வெற்றி பெற்று ஒளிமயமாக வாழ்வதற்குத் தேவைப்படுகிற பண்புகளில் முக்கியமானதாகக் கருதப்படுவது தலைமைப் பண்பாகும்.

குழந்தைகள் பள்ளியிலும் பள்ளிக்கு வெளியிலும் எந்தளவு கற்கிறார்கள் என்பதை ஆசிரியர் மதீப்பீடு செய்ய வேண்டும். மாணவர்கள் மத்தியில் ஆசிரியர் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். வகுப்பில் இருக்கும் மாணவர்கள் அனைவரும் ஆசிரியர் ஒருவரையே உற்றுநோக்கி இருப்பர். அதனால் ஆசிரியர் பாரபட்சமின்றி உள்ளன்போடு நடந்து கொள்ள வேண்டும். மனிதனுடைய ஆளுமை வளர்ச்சிக்குக் குடிவழியும், சூழ்நிலையும் அடிப்படைக் கூறுகளாக அமைகின்றன. ஆளுமை வளர்ச்சிக்கு கற்பனையாற்றல் அவசியம். ஆசிரியர் பாடங்களை கற்பனை நயத்துடன் நடத்த வேண்டும். குழந்தைகளின் படைப்புச் செயல்களை ஊக்குவிக்க வேண்டும். மாணவர்களின் சிந்தனைத் திறனைத் தூண்ட வேண்டும். மக்கள் அறியாமையைப் போக்க கல்வி கற்கிறார்கள் என்றாலும் அக்கல்வியை ஒழுங்காகவும், பயனுடனும் கற்க வேண்டும். அதற்கு உளவியல் அறிவு கட்டாயம் வேண்டும். உளவியல்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

என்பது முழுமனிதனின் செயல்களைக் கூறுவதாகும். கல்வி கற்பதில் பல வழிமுறைகள் உள்ளன. அதில் முயன்றுதவறிக் கற்றல், பார்த்துச்செய்து கற்றல், உற்றுநோக்கிக் கற்றல், ஆக்கநிலை ஏற்றியமறிவினை, உள்நோக்குவழிக்கற்றல், போன்ற பல வழிமுறைகள் உள்ளன.

**குறிப்பு நூல்கள்**

[1] *இளநிலைக் கல்வியியல் சிறப்புக் கல்வி.* தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக் கழகம், சென்னை, மார்ச் – 2021.

[2] *கற்றலை எளிதாக்குதலும் மேம்படுத்துதலும்.* தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம், சென்னை, முதற்பதிப்பு -2008.

[3] Dr. A. R. சரவணகுமார். *கல்வி உளவியல்.* சான்லாக்ஸ் பதிப்பகம், மதுரை, முதல் பதிப்பு - 2019.

[4] இரா. சசிகலா. முனைவர் பட்ட ஆய்வாளர். *செவ்வியல் பண்புகளும் சமுதாயச் சிந்தனைகளும்,* ReTeLL, Vol.18, December – 2017.

[5] திருமதி. பஞ்சநாயகி பிரான்சிஸ்கா சின்னத்துரை. *கல்வியில் முன்னேற.* நான் வெளியீடு, யாழ்ப்பாணம் – 2004.

[6] ஆறுமுகநாவலர். *நன்னூல் காண்டிகை உரை.* வி.அச்சகம், 24- ஆம்பதிப்பு, சிதம்பரம் – 1966.

[7] நவாஸ். நாதா. *திருமண மறுப்புக்காரணங்களும் நடத்தைவாத மற்றும் தன்னின உயர்வுவாத கோட்பாடுகளும் ஒரு சமூகவியல் ஆய்வு.* 7வது பன்னாட்டுக் கருத்தரங்கு, 2020.

[8] யோ.பெனடிக்ற்பாலன். *கல்வி உளவியல் அடிப்படைகள்.* Benedict Balan, KalviUlaviyal Adipadaikal, Dwani 25 III Trust Cross Sterrt, Madras, I Edition , Feb -1996.

[9] வித்வான் ந. சுப்புரெட்டியர். *கல்வி உளவியல்.* எஸ் வாஸன் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை -1961.

**References**

[1] *ElanilaiKalviyil sirappu Kalvi.* Tamilnadu thiranthanilai palkalaikazhakam. saithapettai, Chennai, march -2021.

[2] *Kartralai Elithakkuthalum Mempaduthuthalum*. Tamilnadu Padanool Kazhakam, Chennai, Muthal Pathippu- 2008.

[3] Dr.AR. Saravana Kumar. *Kalviualviyal.* Sanlax Pathippagam, Madurai, Muthal Pathippu-2009.

[4] Era.Sasikala. Munaivarpatta Aaivaalar. *Sevviyal Panpukalum Samuthaya Sinthanaikalum*, Retell Vol.18, December- 2017.

[5] Thirumathi Panjanayaki Piranciska Cinnadurai. *Kalviyil Munnera.* Nann Veliyeedu, Yazhpanam- 2004.

[6] Aarumuganavalar. *Nannool Kandikaiurai*. V. Achakam, 24-Mpathippu, Chidambaram- 1966.

[7] Navas. Nata. *Thirumana Maruppukaaranankalum Nadathaivathamarttum Thanninauyarvatha Kotpadukalum Orusamukaviyal Aaivu.* 7th Pannattukarutharanku- 2020.

[8] Benedict Balan. *Kalvi Ulaviyal Adipadaikal*. Dwani 25 III Trust Crosssterrt, Madras, I Edition - 1996.

[9] Vithvan N. Subbureddiyar. *Kalviuzhaviyal.* S Vasan Company, Mayilappoor, Chennai, -1961.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140 | UGC CARE Listed Journal

Volume - 5, Special Issue - 1, November 2022 | Available at: www.ijtlls.com

# பெரியாழ்வாரும் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரும்

## Periyazhvar Professor and N. Subbu Reddiar

**முனைவர் அ. யசோதா**, இணைப்பேராசிரியர், தமிழாய்வுத்துறை

காவேரி மகளிர்கல்லூரி, திருச்சி, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. A. Yasodha,** Associate Professor of Tamil, Cauvery College for Women, Trichy, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-7865-9273**

**DOI: 10.5281/zenodo.7275587**

### Abstract

*One of the twentieth-century notable personalities is Professor N. Subbu Reddiar. From ancient literature to present-day literature he is an erudite personality. Though he belongs to Shaiva Samaya, he has a passion for Vainava worship too. He is well-versed in Vaishnava literature. This article examines the history of Periyazhvar and his poems in a multifaceted way. Among the twelve Alwars, the significant personality who worshipped Tirumal is Periyazhvar. He won by arguing with many religious people in Madurai with the grace of Lord Vishnu. He is familiarly known as pattarpiran since he sang Pallandu and was revered as Periyazhvar. He sang holy hymns on the incarnation of Kannan. He enjoys celebrating the incarnation of Kannan in a very deep manner. He worships Lord Krishna from Thiruvadi to Thirumudi. For Lord Kanna, the songs are like singing lullabies, looking at the moon and feeding, and adorning with flowers as depicted in Periyazhvar's poems. The lullabies sung by Periyazhvar have developed into the literary genre of Pillai Tamil. Periyazhvar is very much involved in Kannan's mischief and youthful activities. Periyazhvar has written hymns praising the beauty of child Kannan from Yasodha's point of view. In Brindavan, young girls and all living beings are mesmerized by the flute of Kannan. He has also sung hymns in various places in praise of Thirumal. Periyazhvar's poems contain internal components and folk literary elements. The purpose of this article is to explore the various divine experience of Periyazhvar written by N. Subbu Reddiar.*

**Keywords:** Periyazhvar, Kannan, Incarnation, Professor Subbu Reddiar.

### ஆய்வுச் சுருக்கம்

*பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் இருபதாம் நூற்றாண்டின் தலை சிறந்த அறிஞர் பெருமக்களுள் குறிப்பிடத்தக்கவர். பழந்தமிழ் இலக்கியம் முதல் தற்கால இலக்கியம் வரை பல தளங்களில் இயங்கியவர். சைவ சமயத்தைச் சார்ந்த பேராசிரியர் வைணவ இலக்கியங்கள் மீது ஆழ்ந்த பற்று கொண்டவர். பெரியாழ்வாரின் வரலாற்றையும் அவர் அருளிச் செய்த பாசுரங்களையும் பல கோணங்களில் ஆய்வு செய்துள்ளதை இக்கட்டுரை ஆராய்கிறது. திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்ட பன்னிரு ஆழ்வார்களில் குறிப்பிடத்தக்கவர் பெரியாழ்வார். எம்பெருமானுக்கு பூமாலையுடன் பாமாலை பாடும்இறைத் தொண்டில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர். இறையருளால் மதுரையில் பல சமயவாதிகளுடன் வாதிட்டு வெற்றி பெற்றார். பட்டர்பிரான் என்று பாராட்டப்பட்ட ஆழ்வார் எம்பெருமானுக்கு பல்லாண்டு*


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*பாடியதால் பெரியாழ்வார் என்று அழைக்கப்பட்டார். கிருஷ்ண அவதாரத்தின் பல்வேறு செயல்பாடுகளில் மனம் தோய்ந்து பக்திச்சுவை ததும்ப பாடியிருக்கிறார். கண்ணனுடைய திருஅவதாரச் சிறப்பினைக் கொண்டாடி மகிழ்கிறார். கண்ணனின் திருமேனி நிலையை திருவடி முதல் திருமுடி வரை பாதாதிகேசமாக அனுபவிக்கின்றார். கண்ணனின் குழந்தை அழகில் ஈடுபட்ட பெரியாழ்வார் யசோதை நிலையிலிருந்து பாடுகிறார். கண்ணனுக்கு தாலாட்டு பாடுதல், நிலவு காட்டுதல், பூச்சூட்டல் என கண்ணனின் வளர்ச்சி நிலைகளைப் பல்வேறு விதமாக அனுபவித்த விதத்தைப் பாசுரத்தின் வழி ஆராய முற்படுகிறது. கண்ணனைக் குழந்தையாக வைத்து இவர் பாடிய தாலாட்டுப் பாடல்கள் பிற்காலப் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகை வளர்ந்திட வித்திட்டன. கண்ணனின் குறும்புகளிலும் இளம்பருவ வீரச் செயல்களிலும் பெரியாழ்வார் மிகவும் ஈடுபாடு கொண்டவர். பிருந்தாவனத்தில் கண்ணனின் புல்லாங்குழலோசைக் கேட்டுக் கோபியரும், எல்லா உயிரினங்களும் மயங்கி நிற்றலைப் பாசுரங்கள் எடுத்தியம்புகிறது.பெரியாழ்வார் சில திவ்ய தேசங்களுக்கு முழு பாசுரங்களாகப் பாடியுள்ள தன்மையை விவரிக்கின்றது.பெரியாழ்வார் பாசுரங்களில் படிமங்கள் அமைந்திருப்பதால் பாசுரங்களைப் பயில்வோரின்மனதில் தோன்றும் கவியனுபவம் பக்தியனுபவத்திற்கு இட்டுச் செல்கின்றது. நாம் காணும் ஒவ்வொரு பொருளிலும் இறைவன் நீக்கமற நிறைந்திருப்பவன் என்பதை இவ்வாய்வு விளக்கியுரைக்கிறது. பெரியாழ்வார் பாசுரங்களில் அகத்திணைக் கூறுகள், நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் இடம் பெற்றிருக்கின்றன. பெரியாழ்வாருக்கு எம்பெருமானோடு ஏற்பட்ட பல்வேறு இறையனுபவ நிலைகளைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கூறியதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாக அமைகிறது.*

**குறிப்புச் சொற்கள்**: பெரியாழ்வார், கண்ணன், அவதாரம், பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்

**முன்னுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் தமிழின் குறிப்பிடத்தக்க அறிஞர். சைவம் வைணவம் ஆகிய இரு சமயங்கள் பற்றி மிக அதிக எண்ணிக்கையிலான நூல்களைப் படைத்தவர். பெரியாழ்வார் திருமொழியைத் திறனாய்வு நோக்கில் ஆராய்ந்தவர்.பதினான்கு கட்டுரைகள் அடங்கிய விட்டுச் சித்தன் விரித்த தமிழ் என்னும் நூலின் வழி பேராசிரியர் புலப்படுத்துகின்ற பெரியாழ்வார் பற்றிய பல கருத்துகளையும் அவர் அருளிய பாசுரங்களையும்ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**பெரியாழ்வார் அவதாரம்**

வைணவ சமயத்தில் ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருக்கோயில்கள் திவ்ய தேசங்கள்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

எனப் போற்றப்படுகின்றன. அவற்றுள் ஸ்ரீவில்லிபுத்தூர் என்ற திருத்தலம் புராண வரலாற்றுச் சிறப்புகள் வாய்ந்தது. இத்தலத்தில் தான் முகுந்தபட்டருக்கும் பதுமவல்லியார்க்கும் கருடாழ்வானது அம்சமாய் பெரியாழ்வார் பிறந்தார். இவருடைய பகவத் பக்தியின் காரணமாக விஷ்ணுசித்தர் என்று அழைக்கப்பட்டார். ஸ்ரீவில்லிபுத்தூரில் கோயில்கொண்ட வடபத்ரசாயி எம்பெருமானுக்கு மாலை சாத்தும் கைங்கர்யம் செய்து வந்தார். பூமாலையை கட்டுவதுபோல பாமாலை கட்டுவதிலும் மிகுந்த ஆவல் கொண்டவர். உரிய பருவத்தில் அந்தணர் மரபில் பிறந்த விரஜை எனும் பெண்ணை மணந்தார். ஒரு நாள் நந்தவனத்தில்துளசிச் செடியருகில் ஒரு குழந்தையைக் கண்டெடுத்து அக்குழந்தைக்குக் 'கோதை' என்றுதிருநாமம்சூட்டிவளர்த்து வந்தார்.

**பரத்துவ நிர்ணயம்**

விஷ்ணுசித்தர் வில்லிபுத்தூரில் வாழ்ந்த காலத்தில் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஸ்ரீவல்லபதேவன் என்னும் அரசன் பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்து வந்தான். ஒரு நாள் இரவில் அவன் நகர சோதனை செய்து வருகையில் ஓர் அந்தண வழிப்போக்கனைச் சந்தித்தான். அவ்வந்தணன் கூறிய கருத்துக்கள் பாண்டியனைச் சிந்திக்க வைத்தன. மறுமையில் பேரின்பம் பெறுவதற்கு உறுதி பயக்கும் பொருள்கள் குறித்து அறிய விரும்பினான். நாடெங்கிலும் உள்ள சமயவாதிகள் அனைவரையும் வருமாறு அழைப்பு விடுத்தான். பரத்துவ நிர்ணயம்செய்வோருக்குப் பொற்கிழி அளிப்பதாக அறிவித்தான். இவ்வறிவிப்பினைக் கேட்டுப் பல சமய வாதிகளும் மதுரைவந்தனர். ஸ்ரீவில்லிபுத்தூர் எம்பெருமான் விஷ்ணுசித்தரின் கனவில் தோன்றி மதுரை சென்று பரத்துவ நிர்ணயம் செய்து பொற்கிழி அறுத்து வருமாறு பணித்தார். விஷ்ணுசித்தரும் எம்பெருமான் ஆணைப்படி மதுரைக்குச் சென்று பரசமயவாதிகளோடும் வித்துவான்களோடும் வாதித்து விஷ்ணுவே பரம்பொருள் என்று நிலைநாட்டினார். அப்போது கம்பத்தில் கட்டப்பட்டிருந்த பொற்கிழி தானாக அவர் முன்னே வளைந்தது. பாண்டியன் பொற்கிழியை அறுத்து அவரது திருவடிகளில் வைத்துவணங்கினான்.

**பல்லாண்டு பாடிய பட்டர்பிரான்**

பாண்டிய மன்னன், விஷ்ணுசித்தர் பரத்துவ நிர்ணயம் செய்து வெற்றி பெற்றதைக் கொண்டாடும் வகையில் அவருக்கு பட்டர்பிரான் என்னும் சிறப்புப் பெயரைச் சூட்டி அவரை யானையின் மேல் ஏற்றி வைத்து பல விருதுகளைக் கூறி நகர்வலம் வரச்செய்தான். மகனின் விழாவைக் காணவரும் பெற்றோர் போல பெருமாள் பிராட்டியுடன் கருடன் மீதமர்ந்து வான்வெளியில் தோன்றி விஷ்ணுசித்தருக்குக் காட்சி தந்தார். அப்போது விஷ்ணுசித்தர் அவரது அழகில் ஈடுபட்டு பொங்கிவரும் பரிவினால் இறைவனுக்குப் பல்லாண்டு பாடத் தொடங்கினார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு**

**பலகோடி நூறாயிரம்**

**மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்**

**சேவடி செவ்வித் திருக்காப்பு (திருப்பல்லாண்டு, பாசுரம் -1)**

என்று பல்லாண்டு பாடத் தொடங்கினார். இறைவனுக்குப்பல்லாண்டு பாடியதாலேயே விஷ்ணுசித்தர் 'பெரியாழ்வார்' என்று அழைக்கப்பட்டார்.

**மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள்ஆர் வத்தளவு தானன்றிப் பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார்என்னும் பெயர்**

**(உபதேசரத்தின மாலை, பா. 18)**

என்று மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் பாடியுள்ளார். பொற்கிழியாகத் தமக்குக் கிடைத்த செல்வத்தை வடபெருங் கோயிலுடையானுக்கு சமர்பித்தார். முன்போலவே எம்பெருமானுக்கு மாலை கட்டிக் கொடுக்கும் இறைத்தொண்டில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். பூமாலையோடு பாமாலை சூட்டவும் அவர் மறக்கவில்லை. கிருஷ்ண அவதாரத்தில் மிகவும் ஈடுபட்டு கண்ணனின் பிறப்பு முதல் இளம்பருவ விளையாட்டுக்கள் வரை அனுபவித்து 'பெரியாழ்வார் திருமொழி' என்னும் பிரபந்தத்தைப் பாடினார். நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் பெரியாழ்வார் திருமொழிமுதலாயிரத்தில் இடம்பெற்றுள்ளது. அவற்றுள் திருப்பல்லாண்டு பன்னிரண்டு பாசுரங்களைக் கொண்டதாகும். ஒவ்வொரு பாசுரத்திலும் பல்லாண்டு பல்லாண்டு என்று சொல்லி இறைவனுக்கு நன்மையை வேண்டி காப்பிட்டிருப்பதனால் இதற்கு பல்லாண்டு என்று பெயர் ஏற்பட்டது. திருக்கோயில்களில் முதலில் ஓதப் பெறுகிறது. திரு என்ற அடைமொழியால் சிறப்பிக்கப்பட்ட திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் தொடக்கத் திருமொழியேயன்றித் தனிபிரபந்தமன்றுஎன்பது தெளிவாகின்றது.

**பிள்ளைப் பெருமாள் அவதாரம்**

இறைவன் விண்ணுலகிலிருந்து மண்ணுலகிற்கு இறங்கி வரும் நிலை விபவமாகும். ‘விபவம்’ என்பதற்கு ‘அவதாரம்’ எனப் பொருள்படும். **அவதாரம் என்னும் சொல் குறிப்பிட்டதொரு உருவத்தில் அவதரிப்பதற்கு இயைந்து இறங்கி வரும் இறைவனின் இயல்பான உயர்வைச் சுட்டுகிறது. (வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப. 85)** நரசிம்ம அவதாரம் செய்த இறைவனே மீண்டும் கண்ணனாக அவதாரம் செய்தான்.

**உண்டோ என்றான்ஒருவன்**

**உண்டாம் என்றே தூணை**

**உடைத்து வந்தான்! (ஸ்ரீ கிருஷ்ண அந்தாதி, பா. 48)**

என்னும் கண்ணதாசன் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

ஆழ்வார்கள் திருமாலை பல்வேறு விதமாகப் பாராட்டி பாடல்கள் பாடியுள்ளனர். குறிப்பாக பெரியாழ்வார் கண்ணனது பிள்ளைக் குணங்களிலும் இளம்பருவச் செயல்களிலும் பெரிதும் ஈடுபாடு கொண்டு தம்மை யசோதையாகவே பாவித்துக் கொண்டு பாடுகிறார். கண்ணனின் அவதாரம் தொடங்கி அதில் உண்டான இன்பத்தை அனுபவிக்கின்றார். கண்ணனின் பிறப்பை திருவாய்பாடி மக்கள் ஆடிப்பாடி கொண்டாடும் நிலையில் பெரியாழ்வார் திருமொழி தொடங்குகின்றது. 'வண்ணமாடங்கள்' என்னும் திருமொழி கண்ணனின் திரு அவதாரத்தையும் அதனால் ஆயர்பாடியில் நிகழ்ந்த கொண்டாட்டங்களையும் வருணிக்கிறது. ஆய்ப்பாடி மக்கள் மகிழ்ச்சியினால் ஆடியும் பாடியும் கூத்தாடுகின்றனர். எண்ணையையும் மஞ்சள் பொடியையும் ஒருவர் மேல் ஒருவர் தூவிக் கொள்கின்றனர்.

**எண்ணெய் சுண்ணம்**
**எதிர்எதிர் தூவிட**
**கண்நல் முற்றம்**
**கலந்து அளறு ஆயிற்றே (பெரியாழ்வார் திருமொழி, 1.2: 1)**

நெய்யையும் பாலையும் தயிரையும் வாரி வழங்குகின்றனர்.

**உறியை முற்றத்து உருட்டி நின்று ஆடுவர்**
**நறுநெய் பால் தயிர் நன்றாக தூவுவார் (பெரியாழ்வார் திருமொழி, 1.2: 4)**
**இவ்வளவு அழகுள்ள ஆண் குழந்தையைப் பார்த்ததே இல்லை;**
**ஓணத்தான் உலகாளும்! (பெரியாழ்வார் திருமொழி, 12: 3)**

என்பர். குழந்தைக் கண்ணனின் கைகால்களை நீட்டி நிமிர்த்தி பசுமஞ்சள் பூசி நீராட்டுகின்றாள் யசோதை. குழந்தையின் நாக்கு வழிக்க திறந்த வாய்க்குள் சகல உலகங்களையும் கண்டாள். பத்து நாளும் கடந்தஇரண்டாம் நாள் குழந்தைக்குக் 'கிருஷ்ணன்'என்று திருநாமமிட்டு ஆய்ப்பாடி மக்கள் கொண்டாடி மகிழ்ந்தனர்.

**கிடக்கில்தொட்டில் கிழிய உதைத்திடும்**
**எடுத்துக் கொள்ளில் மருங்கை இறுத்திடும்**
**ஒடுக்கிப் புல்கில் உதரத்தைப் பாய்ந்திடும்**
**மிடுக்கில்லாமையால் நான் மெலிந்தேன் நங்காய் (பெரியாழ்வார் திருமொழி, 1.2: 9)**

என்று யசோதை தன் தோழியிடம் கண்ணன் செய்யும் குறும்புகளைத் தாங்கிக்கொள்ளும் சக்தி இல்லாமையால் நான் மிகவும் இளைத்து விட்டேன் என்கிறாள். கிருஷ்ணானுபவத்தில் ஈடுபடும் பெரியாழ்வார் '**சீதக்கடல்**' என்னும் திருமொழியில் கண்ணனின் திருமேனியழகைத் திருவடி முதல் திருமுடி வரை பாதாதிகேசமாக அனுபவிக்கின்றார். யசோதைப் பிராட்டி ஆய்ப்பாடி பெண்களை அழைத்து, **பாதக் கமலங்கள் காணிரேபவளவாயீர் காணிரே (பெரியாழ்வார் திருமொழி, 1.3: 1)** என்று காட்டுகின்றாள். கண்ணனின் தலை, உடல், கைகள்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கால்கள் என நான்கு பகுதிகளிலும் உள்ள உடல் உறுப்புகளின் அழகைப் புகழ்ந்து பெரியாழ்வார் பாடுவதைக் காணமுடிகிறது. பிள்ளைப் பெருமாளின் பிறப்பைப் பாரதியார், **கண்ணன் பிறந்தான் - எங்கள் கண்ணன் பிறந்தான் (பாரதியார் கவிதைகள், தோத்திரப் பாடல்கள், கண்ணன் பிறப்பு, பா. 1)** என்று மகிழ்ந்து பாடுகின்றார்.

**பிள்ளை பெருமாளின் வளர்ச்சி நிலைகள்**

யசோதைக்கு பல்வேறு விதமாக இன்பம் தந்தவன் பிள்ளைப் பெருமாள். இவனது வளர்ச்சி நிலைகளை பெரியாழ்வார் யசோதை நிலையில் நின்று அனுபவிக்கின்றார்.

**மாணிக்கம் கட்டி வயிரம் இடைகட்டி**
**ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறுத் தொட்டில்**
**பேணி உனக்குபிரமன் விடு தந்தான்**
**மாணிக் குறளனே தாலேலோ**
**வையம் அளந்தானே தாலேலோ! (பெரியாழ்வார் திருமொழி, 1.4: 1)**

என்று தாலாட்டுகின்றார். ஆழ்வார் கண்ணனுக்காக சந்திரனை அழைத்தல், கண்ணன்செங்கீரை ஆடுதல், சப்பாணி கொட்டுதல், தளர்நடை நடத்தல், தாயை அணைத்துக் கொள்ளுதல், தாயின் பின்புறமாக வந்து முதுகினை தழுவி நிற்றல் ஆகிய செயல்களை அனுபவித்து மகிழ்கின்றார். கண்ணன் அப்பூச்சி காட்டி விளையாடுவதை 'மெச்சூது சங்கம்' என்னும்திருமொழி விவரிக்கின்றது. கண்ணனைத் தாய்ப்பால் உண்ண அழைத்தல், காது குத்தல், நீராட்டம், குழல்வார காக்கையை வா எனல், கோல் கொண்டு வா என்னல், பூச்சூட்டல்,காப்பிடல் போன்ற தலைப்புகளில் எல்லாம் தெய்வக் குழந்தையின் அனுபவத்தில் திளைத்து பாடுகின்றார். இவற்றிலிருந்தே பிற்காலத்தில் எழுந்த பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டவர் 'விஷ்ணு சித்தர்' என்பதை உறுதியாக அறிய முடிகிறது.

**கண்ணன் விளைத்த குறும்புகள்**

கண்ணன் செய்த சிறு குறும்புகளை யசோதையாக மாறிய பெரியாழ்வார் அனுபவித்து மகிழ்கின்றார். யசோதை (பெரியாழ்வார்) கண்ணன் விளைத்த விளையாட்டைக் கண்டு கண் படைத்த பயனைப் பெறுமாறு அம்புலியை அழைக்கின்றாள். கண்ணன் புழுதியில் விளையாடி வியர்வையுடன் தாயை அணைத்துக் கொள்வான்.அந்தச் சேரும் புழுதியும் தாயின் உடலின்மீது படிந்துவிடும். பின்னர் அன்னைக்கு தெரியாமல் தயிரையும் வெண்ணையையும் உண்பான். அவன் பட்டி மேய்ந்து திரியும் கன்று போன்றவன். இதனைப் பெரியாழ்வார்,

**புட்டியிற் சேறும் புழுதியும் கொண்டுவந்து**
**வட்டி அமுக்கிஅகப்புக் கறியாமே**
**சட்டித் தயிறும் தடாவினில்**
**வெண்ணையும் உண்பட்டிக் கன்றே (பெரியாழ்வார் திருமொழி, 1.7: 5)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று அனுபவித்து மகிழ்கின்றார். ஓர் ஆய்ச்சி யசோதையிடம் கண்ணனைப் பற்றி குறை கூறுகிறாள்.அசோதாய் உன் மகன் வீட்டில் வயிறு வளர்ப்பதற்கு ஒன்றுமில்லாமல் இவ்வாறு தீம்பு செய்பவன் அன்றே; செல்வச் செருக்கினாலன்றோ செய்கின்றான். நாம் இங்ஙனம் செய்தால் நம்முடைய ஐஸ்வரியத்திற்கும் பிறப்புக்கும் தகுமோ? என்றும் இவன் ஆலோசிப்பதில்லை. தவிரவும் இப்படி தீம்பு செய்வதே தனக்குப் புகழ் எனவும் நினைக்கின்றான். இவன் இப்போது என் வீட்டில் வந்து உருக்குவதற்காக வைத்திருந்த வெண்ணையைச் சிறிதும் மிஞ்சாத படி புசித்து கடைசியில் **வெறும் கலத்தை வெற்பிடையிட்டு அதன் ஓசைகேட்டு (பெரியாழ்வார் திருமொழி, 2.9: 1)** மகிழ்கின்றான். இவன் செய்த தீம்புகளை எங்களால் பொறுக்க முடியவில்லை. புண்ணிலே புளிச்சாற்றைப் பிழிந்தாற் போல் பொறுக்கமுடியாத தீமைகளை ஒவ்வொரு வீட்டிலும் செய்கின்றான். அவனது திருட்டுத் தொழிலைத் தடுக்க எங்களால் முடியவில்லை. ஆகையால் உன் பிள்ளையை கூவியழைத்து தீம்பு செய்யாதபடி வீட்டிலே உன் பக்கத்திலேயே வைத்துக் கொள். இல்லாவிடில் நாங்கள் ஆயர்பாடியில் குடியிருக்கவே முடியாது என்கின்றாள். இந்நிகழ்ச்சியை பெரியாழ்வார் 'திருவுடை பிள்ளைதான்' என்னும் திருமொழியிலும், 'வெண்ணெய் விழுங்கி' என்னும் திருமொழியிலும் எடுத்துக்காட்டியுள்ளார்.

ஆய்ச்சியின் குற்றச்சாட்டைக் கேட்ட யசோதை கண்ணனை நோக்கி அஞ்சன வண்ணா! உன்னை பிறர் பழித்துச் சொன்னால் என்னால் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருக்க முடியாது. ஆகவே, அயலகத்தார் ஒன்றும் சொல்ல இடம் இல்லாதபடி நீ இங்கே வந்து சேர்க என்று அழைக்கின்றாள். இந்தகாட்சியில் ஈடுபட்ட ஆழ்வார்,

**அஞ்சன வண்ணா! அசலகத்தார்**
**பரிபவம் பேசத் தரிக்க கில்லேன்**
**பாவியே னுக்கிங்கே போத ராயே (பெரியாழ்வார் திருமொழி, 2.9: 2)**

என்று அனுபவித்து மகிழ்கின்றார். கண்ணன் சிறுவனாக இருந்தபோது சில கட்டெறும்புகளைப் பிடித்துக் கன்றுகளின் காதில் விடுவான். அதனால் அக்கன்றுகள் வெருண்டு சிதறிப்போய்க் கண்டுபிடிக்க முடியாதபடி ஓடிப்போய்விடும். இதைக் கண்டு கண்ணன் மகிழ்வான்.

**கன்றுகள் ஓடச் செவியிற்**
**கட்டெறும்பு பிடித்து இட்டால்**
**தென்றிக் கெடும் ஆகில் வெண்ணெய்**
**திரட்டி விழுங்குமா காண்பன் (பெரியாழ்வார்திருமொழி, 2.4: 2)**

என்று ஒரு பாசுரத்தில் பெரியாழ்வார் அநுசந்தித்து மகிழ்கின்றார். கண்ணன் கட்டெறும்பைக் கன்றின் காதில் விட்டதைப் பாரதியார் வேறுவிதமாக அனுபவிக்கிறார்.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**அங்காந் திருக்கும்வாய் தனிலே- கண்ணன்**
**ஆறேழுகட்டெறும் பைப்போட்டு விடுவான்;**
**எங்காகி லும்பார்த்த துண்டோ? கண்ணன்**
**எங்களைச் செய்கின்ற வேடிக்கை ஒன்றோ?**
**(பாரதியார் கவிதைகள், கண்ணன் பாட்டு, கண்ணன் விளையாட்டு பிள்ளை, பா. 7)**

என்று கூறி பாரதியார் மகிழ்வார். ஆயர்பாடியில் ஐந்து இலட்சம் குடிகள் உள்ளனர்.இவ்வூரில் தீம்பு செய்யும் பிள்ளைகள் எத்தனையோ பேர் இருப்பர். அப்படி இருக்கவும் அவர்கள் செய்யும் தீமைகளையெல்லாம் உன்மேல் ஏற்றிப் பேசுகின்றார்கள். உன் மீது குற்றம் சுமத்தும் அவர்களை விட்டு என்னிடம் வந்துவிடுஎன்று யசோதை வேண்டியதை ஆழ்வார்,

**பல்லா யிரவர் இவ்வூரில்**
**பிள்ளைகள் தீமைகள் செய்வார்**
**எல்லாம்உன் மேலன்றிப் போகாது**
**எம்பிரான்! நீ இங்கே வாராய் (பெரியாழ்வார் திருமொழி, 2.8: 5)**

என்ற பாசுரத்தில் மிக்க ஈடுபாட்டுடன்அநுசந்திக்கின்றார். இங்ஙனம் பெரியாழ்வார் தாயாக நின்று அனுபவிக்கும் கண்ணனின்சிறு குறும்புகள் நம் உள்ளத்தைக்கொள்ளை கொள்ளுகின்றன.

**கண்ணனின் தீரச்செயல்கள்**

பெரியாழ்வார் கண்ணன் ஆற்றிய தீரச் செயல்களில் ஆழங்கால் பட்டு மகிழ்ந்தவர். இத்தீரச்செயல்கள் 'அதிமாநுஷ்டிய சேஷ்டிதங்கள்' என்று குறிப்பிடுவர் வைணவ மக்கள். தமிழர்கள் இதைச் 'சிறு சேவகங்கள்' என்று குறிப்பிடுவர். கம்சனது ஏவலால் கள்ளச் சகடமாகி வந்த அசுரனை தன் பிஞ்சுக் கால்களால் உதைத்து அழித்தான் கண்ணன். பூதனையென்னும் பேய் மகள் குழந்தைக் கண்ணனை எடுத்து தாய்போல 'பால் உண்' என்று நச்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுக்கிறாள். கண்ணனும் முலை உண்பதுபோல அவளது உயிரை உண்டான். பேய்மகள் அலறிக்கொண்டே மண்ணில் விழுந்து மாண்டாள். இதனை

**கள்ளத்தி னால்வந்த**
**பேய்ச்சி முலைஉயிர்**
**துள்ளச் சுவைத்தானால் (பெரியாழ்வார் திருமொழி, 2.10: 6)**

என்ற பாசுரத்தால் அறியலாம். இவனை **பேயின் முலை உண்ட பிள்ளை இவன்** (பெரியாழ்வார் திருமொழி, 2.5:2) என்றும் குறிப்பிடுவர். கம்சன் ஏவிவிட்ட மல்லர்கள் குழந்தைக் கண்ணனைக் கொல்லப் பார்க்கின்றனர். ஆனால் கண்ணனோ அவர்களைக் கொன்று தான் உயிர்ப்பிழைத்து நிற்கிறான்.

**இரு மலை போல் எதிர்த்த மல்லர்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**இருவர் அங்கம் எரி செய்தாய் (பெரியாழ்வார் திருமொழி, 2.28)**

என்றும்,

**தெருவின் கண் தீமைகள் செய்து**
**சிக்கென மல்லர்களோடு**
**பொருதுவருகின்றபொன்னே! (பெரியாழ்வார் திருமொழி, 2.7: 6)**

என்றும் ஆழ்வார் அநுசந்திக்கின்றார். காளியன் எனும் நாகத்தின் மேலேறி அதன் வலியை அடக்கி கண்ணன் நர்த்தனம் ஆடினான். ஒரு முறை கம்சன் ஏவலால் வந்த அசுரர்களுள் ஒருவன் விளாமரத்தின் வடிவாய் கண்ணன் மேல் விழுந்துக் கொல்லுவதாக எண்ணி நின்றான். இன்னொருவன் கன்றின் உருவம் கொண்டு கண்ணனைக் கொல்ல காத்திருக்கிறான். இதனை அறிந்த கண்ணன் கன்றாகி நின்ற அரக்கனின் கால்களைப் பற்றி விளாமரத்தின் மீது எறிந்து இருவரையும் கொன்று தீர்த்தான். **கன்றுகுனிலாக் கனி உதிர்த்த மாயவன் (சிலப். மதுரை. ஆய்ச்சியர் குரவை, பா. 01)** என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. பெரியாழ்வார் பாசுரங்களில் பூதனை வதம், சகடம் உதைத்தது, காளிங்கநர்த்தனம்,வில்விழவு அழித்தது, குவலயாபீட வதம், கம்ச வதம், காளிங்க நர்த்தனம், கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தது, நரகாசுர வதம் முதலான நிகழ்ச்சிகள் ஆழ்வாரின் கிருஷ்ணானுபவத்தை தெளிவாக விளக்குகின்றன.

**பிருந்தாவனத்தில் வேணுகோபாலன்**

கண்ணன் ஆநிரை மேய்த்த மகிழ்ச்சி பெருக்காலே தன்னை பல்வேறு விதமாக அணி செய்து கொண்டு குழலூதுவது இசைபாடுவது என்பவற்றை மேற்கொள்பவனாய் தன் தோழருடன் திருவாய்ப்பாடி திரும்பும் கோலத்தைக் கண்டு இடைப்பெண்கள் காமுறுகின்றனர். அப்போது கண்ணன் வரும் வழியில் நின்று கொண்டிருந்த பெண்களில் வளையிழவாதார் ஒருவரும் இலர்.நீங்களாவது விழிப்புடன் இருந்து உங்கள் கைவளையல்களை பாதுகாப்பாக நோக்கிக் கொள்ளுங்கள் என்று மங்கை ஒருத்தி தோழிமார்களுக்கு எச்சரிக்கை விடுக்கின்றாள்.

**அந்தம் ஒன்றில்லாத ஆயப்பிள்ளை**
**அறிந்தறிந்து இவ்வீதி போதுமாகிப்**
**பந்துகொண் டான் என வளைத்துவைத்துப்**
**பவளவாய் முறுவலும் காண்போம்தோழி! (பெரியாழ்வார் திருமொழி, 3.4: 6)**

என்ற பாசுரத்தில் ஆயமங்கை கண்ணனின் பவளவாய் முறுவலைக் காணவேண்டும் என்று தனது திட்டம் பற்றி விளக்குகிறாள். இப்படி கன்னியர் ஒருவருக்கொருவர் கண்ணனிடத்துக் கொண்ட காதலைச் சொல்லி களிப்படைகின்றார் ஆழ்வார்.

**வேணுகானத்தின் பெருமை**

பெரியாழ்வாரின் பாசுரங்கள் கண்ணனின் குழலோசையின் சிறப்பினை பேசுகின்றன.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கண்ணனின் குழலோசை கேட்டு ஆழ்வார் ஓர் இடைப் பெண்ணாகி தான் கண்டதையும், கேட்டதையும், அனுபவித்தையும்,

**நாவலம் பெரிய தீவினில் வாழும்**
**நங்கைமீர்கள் இதோர் அற்புதம் கேளீர் (பெரியாழ்வார் திருமொழி, 3.6: 1)**

என்று வேணுகானத்தின் சிறப்பினை உலகறிய அறிவிக்கிறார். கண்ணன் எழுப்பும் புல்லாங்குழல் ஓசை மேனகை, திலோத்தமை, அரம்பை, ஊர்வசி ஆகிய தேவ மாதர் செவிக்கும் எட்டுகின்றது. அவர்களின் நடையழகும், பாட்டழகும் கண்ணனின் நடையழகு, குழலோசை இவற்றின் முன் தோற்றுப் போகவே நாணம் கொண்டனர்.

**மேனகை யோடு திலோத்தமை அரம்பை**
**உருப்பசி யர்அவர் வெள்கி மயங்கி**
**வானகப் படியில் வாய்த்திறப் பின்றி**
**ஆடல் பாடலவை மாறினர் தாமே (பெரியாழ்வார் திருமொழி, 3.6: 4)**

தும்புருவும் நாரதரும் கண்ணனின் குழலோசை கேட்டதும் வீணை மறந்தனர்.கண்ணனின் குழலோசை கேட்டு பறவைக் கூட்டங்கள் கூடுகளை விட்டு காட்டில் வெட்டி வீழ்த்தப்பட்டகிளைகள் போல் அசையாது நிலத்தில் கிடைக்கின்றன. மான்கனங்கள் மெய்மறந்து அறிவழிந்து போகின்றன.

**பறவையின் கணங்கள் கூடுதுறந்து**
**வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்**
**கறவையின் கணங்கள் கால்பரப் பிட்டுக்**
**கவிழ்ந்து இறங்கிச் செவிஆட்டகில்லாவே (பெரியாழ்வார் திருமொழி, 3.6: 8)**

என்று பேசுவர் ஆழ்வார். கண்ணனின் கானமிழ்தம் செவியில் பட்டதும் நிலைத் திணைகளும் இயங்கு திணைகளும் பெறு மாற்றங்களை அடைகின்றன. குழலோசையைக் கேட்டவுடனேயே மரங்கள் மகரந்த தாரைகளைப் பெருக்குகின்றன; மலர்கள் வீழ்ந்தன. கிளைகள் தாழ்த்தி நிழலை விளைவிக்கின்றன.இவை அனைத்தும் கண்ணன் நிற்கும் பக்கங்களையெல்லாம் நோக்கி வழிபாடுகள் நடத்துகின்றன. விருந்தாவனம் எங்கும் செவிகளாய் கண்ணனின் வேணுகானத்தைக் கேட்டுக்கொண்டுள்ளது. கண்ணனின் அருட்கீதம் மறுமையிலுள்ள பேரின்பத்தையும் இம்மை இன்பமாக காட்டி விடுகின்றது. வேற்றுமையில் ஒற்றுமையை உணர்த்தி விடுகின்றது என்று விஷ்ணுசித்தர் உபதேசிப்பதை அவரது பாசுரங்களில் காணமுடிகிறது.

கண்ணன் தரிசனம் அளிக்கும் கோலங்களில் மூன்று பக்தர்களின் உள்ளங்களைச் சிறப்பாக கவருகின்றன. ஆயர்பாடி சிறுவனாக வருவது ஒன்று; பசுக்களுக்கும் இடையர் பெண்களுக்கும் தோழனாக தோன்றுவது மற்றொன்று; வேணுகோபாலனாகத்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தோற்றமளிப்பது பிறிதொன்று. இந்த மூன்று கோலங்களையும் பெரியாழ்வார் நேர்க் காட்சிகளாக அனுபவித்து மகிழ்பவர். ஆயினும் இசையுலகின் அதிசயமான தத்துவங்களோடு வேதாந்தத்தின் பெரிய பெரிய தத்துவங்களும் சரித்திர முடிவுகளான சித்தாந்தங்களோடு பல்வேறு கலைகளின் பொருளும், கவிஞர்களின் புதிய புதிய கனவுகளும் வேணுகோபாலனின் குரலிசையிலே விதையில் அடங்கிய ஆலமரம் போல அடங்கியுள்ளன என்பது கண்ணன் அடியார்களின் கொள்கையாக மலர்ந்துள்ளது என்ற விளக்கத்தில் பேராசிரியர் சுப்புரெட்டியாரின் ஒவ்வொரு சொற்றொடரும் கருத்தாழமும் சுவையும் மிக்கதாக அமைந்துள்ளது.

**அர்ச்சாவதார அநுபவம்**

திவ்ய தேசங்களில் இறைவன் எழுந்தருளியுள்ள நிலையே அர்ச்சாவதாரம் என்று கூறுவர்.

> **இவ்வுலகினை படைத்து காப்பதற்காகவும், ஜீவர்களுக்குத் தரிசனம் செய்யவும் எம்பெருமான் ஐந்து நிலைகள் எடுப்பதாக சொல்லப்படுகிறது. அவை முறையே பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை எனப்படும் (வைணவமும் ஆழ்வார்களும், பாகம் 2, ப. 678)**

இந்நிலையானது சம்சாரிகள் கண்ணுக்கு தோன்றும் படியான எளிமையும் அவர் வேண்டுவன அனைத்தையும் தரவல்ல பெருமையும் உடையது.

> **அந்தர்யாமியாக உள்ள ஆண்டவனை அறிதல் என்பது அறிஞருக்கும் ஞானிகட்குமே முடிந்த செயலாகும். சாதாரண மக்களுக்குச் சிலை வழிபாடு ஒன்றுதான் சிறந்த வழி .கோயில்களிலும் வீடுகளிலும் அவரவர் விரும்பும் வடிவத்தில் மண்ணாலோ, கல்லாலோ, சதையாலோ, செம்பாலோ சிலை வடிவில் அமைந்திருப்பது தான் அர்ச்சை நிலை எனப்படும். (பெரிய திருமொழி - ஒரு பார்வை, ப. 204)**

ஆகவே ஆழ்வார் அர்ச்சாவதார பெருமாள் கோயில் கொண்டுள்ள திவ்ய தேசங்களின் பெருமையைப் பேசுகிறார்.ஆழ்வார்களால் பாடப்பெற்ற அர்ச்சாவதார மூர்த்தி கோயில் கொண்ட இடங்கள் திவ்ய தேசங்கள் எனப்படுகின்றன.ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருப்பதிகள் நூற்றெட்டு ஆகும் இவற்றுள் பத்தொன்பது திவ்யதேசங்களில் உள்ள அர்ச்சாவதார மூர்த்திகளை பெரியாழ்வார் பாடியிருக்கிறார்.திருவெள்ளறை, கண்டம், திருக்கோட்டியூர், திருவரங்கம், திருமாலிருஞ்சோலை ஆகிய ஐந்து திருப்பதிகளிலும் ஆழ்வார் எல்லையற்ற ஈடுபாடு கொண்டு முழு பதிகங்கள் பாடியுள்ளார். ஏனைய பதினான்கு திவ்ய தேசங்களுக்கு உதிரி பாசுரங்களால் மங்களாசாசனம் செய்திருக்கிறார்.

திருவெள்ளறை திருத்தலத்தில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் குழந்தைக் கண்ணனாகப் பாவித்து யசோதை பிராட்டி அக்குழந்தையை நீராட்டி குழல்வாரிப்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பூச்சூட்டின பிறகு அவனுக்குப் பிறர் கண்ணெச்சில் வாராதபடி காப்பிட அழைத்து இனிய ராகின்றார். அழகர்கோயில் என வழங்கும் திருமாலிருஞ்சோலை மலையில் சிலம்பாறு பாய்கின்றது. இந்த தீர்த்தத்தில் அயச்சத்தும் தாமிரச்சத்தும் இருப்பதாகவும் இதில் நீராடுபவர்க்குத் தீராத நோய்கள் எல்லாம் நீங்குவதாகவும் திருமாலிருஞ்சோலை மலையின் வளத்தைக் கூறுகின்றார்.திருவரங்கம் எனும் திவ்ய தேசத்தைப் பெரியாழ்வார் மூன்று திருமொழிகளில் மங்களாசாசனம் செய்துள்ளார். முதல் இரண்டு அடிகளில் திவ்ய தேசத்தின் வளத்தைச் சிறப்பித்து பேசுகின்றார்.அழகுக் கடவுளின் முழுமை நிறைந்த அவதாரம் என்று கண்ணனைப் போற்றுகின்ற ஆழ்வார்,

**குன்றாடு கொழுமுகில்போல்**
**குவளைகள்போல்குறைகடல்போல்**
**நின்றாடு கணமயில்போல்**
**நிறமுடைய நெடுமால் (பெரியாழ்வார் திருமொழி, 4.8: 9)**

என்றவாறு அப்பெருமானை இயற்கை எங்கும் காண்கின்றார். விண்ணிலும் மண்ணிலும் காண்கின்றார்; காட்டிலும் நாட்டிலும் காண்கின்றார்; குன்றிலும் கடலிலும் காண்கின்றார்; பூவிலும் மயிலிலும் காண்கின்றார்.இத்தகைய இயற்கை அழகு நிறைந்த ஊர்தான் திருவரங்கம் என்பது பெரியாழ்வாரின் கொள்கையாக வெளிப்படுகிறது.

**அண்டர் கோன் அணியரங்கன்**
**என் அமுதினைக் கண்டகண்கள்**
**மற்றொன்றினைக் காணாவே (அமலனாதிபிரான் பதிகம், பா. 10)**

என்று திருப்பாணாழ்வார் இறைவனின் அழகில் ஈடுபட்டுப் பேசுவார்.

**அந்தர்யாமித்துவ அநுபவம்**

ஒவ்வொரு பொருளிலும் வியாபித்து நிற்பவன் ஸ்ரீமன் நாராயணன் என்பது வைணவ கொள்கையாகும். இயங்கு பொருள், இயங்கா பொருள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் நிலையே அந்தர்யாமித்துவ நிலையாகும். இறைவன் தமக்குள்ளே வந்துறைகின்ற அந்தர்யாமித்துவ அநுபவத்தை பெரியாழ்வார் பல பாசுரங்களில் வெளியிட்டுள்ளார் .அர்ச்சாவதார எம்பெருமான்கள் அனைவருமே பெரியாழ்வார் மனதில் அந்தர்யாமியாய் எழுந்தருளியிருப்பர். எம்பெருமான் திருப்பாற்கடலில் பள்ளிகொள்ளுதலை விட்டு அங்கிருந்து ஓடி வந்து என் இதயத்தைத் தமக்குரிய இடமாக வாழ வந்து விட்டான். குளிர்ந்த திருப்பாற்கடல், ஆதித்ய மண்டலம், ஒப்பற்ற பரமபதம் இவை உனக்கு ஏற்ற இடங்களாக இருந்தும் அவற்றை துறந்துவிட்டு மிகவும் நீசனான அடியேனை உனக்கு உரிய வசிக்கும் இடமாக கொண்டனையே என்று கூறுவதிலிருந்து ஆழ்வாரின் அந்தர்யாமித்துவ அநுபவம் வெளிப்படுகின்றது.

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**பாசுரங்களில் அகப்பொருள் கலப்பு**

பெரியாழ்வார் பரமாத்மாவைத் தலைவனாகவும் ஜீவாத்மாவைத் தலைவியாகவும் வைத்து விளக்கும் பாசுரங்கள் யாவும் அகப்பொருள் பற்றியவை. ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அனுபவிக்கும் பொழுது அவர்கள் தோழி, தாய், மகள் என்ற மூவருள் ஒருவர் தன்மையை தாம் அடைந்து கூற்று நிகழ்த்துவர். இதன்காரணமாக பாசுரங்களும் தோழி பாசுரம், தாய் பாசுரம், மகள் பாசுரம் என்று வழங்கப்பெறுகிறது இங்ஙனம் மூன்று வகையாக கூற்றுகள் நிகழ்ந்து பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரங்கள் பேசுபவர்கள் ஆழ்வார்களேயாவர்.

**நற்றாய் இரங்கல்**

தலைமகனை களவொழுக்கத்தில் புணர்ந்த தலைமகள் அவன் பிரிந்த நிலையில் ஆற்றாது வருந்தி வாய் பிதற்றிக் கண்ணீர் சொரிந்து மேனி மெலிந்து வடிவம் வேறுபடுகின்றாள். இவ்வேறுபாட்டை காணும் தாய் இதற்கு காரணம் என்ன? என்று அவளது தோழியை வினவ அவள் உண்மையான காரணத்தைக் கூற, அது கேட்ட தாய் இவ்வளவு இளமையையும், செயலின் பெருமையையும் கூறி முறையிடுவது போல் அமைந்தது.தாயின் நிலையை அடைகின்றார் பெரியாழ்வார்.தலைவனை வசப்படுத்த உடல் அழகு, பேச்சு அழகு, உடை அழகு ஆகிய மூன்றும் என் செல்ல மகளுக்கு இல்லை. உடல் புழுதி படிந்த நிலையில் உள்ளது. சொல்லும் திருத்தமற்ற மழலைச் சொல்லாக உள்ளது. ஆடையையும் நன்றாக உடுத்தத் தெரியவில்லை என்று மாயவன் மேல் மையல் கொண்ட மகள் நிலை குறித்து தாயொருத்தி இரங்குவதாகப் பெரியாழ்வாரின் பாசுரம் அமைந்துள்ளது.

**உடன்போக்கு**

அக இலக்கியத் துறையாகிய உடன்போக்கு என்ற துறையில் இரண்டாம் திருமொழி அமைந்துள்ளது. காதலனுடன் உடன் போக்கில் சென்ற மகளைக் குறித்துத் தாயார் வருந்துகின்றாள். கம்சன் இருப்பிடமான மதுரையில் புகுந்தாளோ? அன்றி மதுரைக்குப் புறத்தேயுள்ள திருவாய்பாடியிற் புகுந்தாளா? என்று ஐயமுறுகின்றாள். கண்ணபிரான் என் மகளைத் திருடிக்கொண்டுப் போனது எங்கள் குலத்துக்குக்கு நிரந்தர பழிப்பாகுமா? என்கின்றாள். என் மகளுக்கு கொண்டாட்டத்துடன் திருமணம் நிகழுமா? அன்றி கொண்டாட்டம் எதற்கு? என்று உதாசீனப்படுத்துவார்களா? என்று ஐயறுகின்றாள் திருத்தாயார்.யசோதை மருமகளைக் கண்டு மகிழ்ந்து அவளுக்குச் செய்யத்தக்க சிறப்புகளைச் செய்வாளா? மாட்டாளா? என்று ஐயுறுகின்றாள் திருத்தாயார்.

**பெருமகளாய்குடி வாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற அசோதை**
**மருமகளைக் கண்டுகந்து மணாட்டுப் புறஞ்செய்யும் கொலோ**

**(பெரியாழ்வார் திருமொழி, 3.8: 4)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று பலபடியாகப் புலம்புகின்றாள். உலகில் குற்றமே கண்ணாயிருப்பவர் எப்படிப்பட்ட பொருள்களிலும் ஏதாவது ஒரு குறையை கூறுவதுபோல் வழக்கம். அதுபோல கண்ணனும் என் மகளிடத்து காணப்படும் குணங்களில் ஏதேனும் ஒரு குறையைக் கூறி இழிவுபடுத்துவானா? அன்றி கோவலப் பட்டம் கட்டுவானா? என்று ஐயுறுகின்றாள். அகப்பொருள் நுட்பங்கள் பக்தியாய் பரிணமிக்கும் போது எவ்வளவு உயர்நிலையை அடைகின்றன என்பதை சுப்புரெட்டியார் விளக்கும் பகுதி தனிச்சிறப்பாக அமைகின்றது.

**உந்தி பறத்தல்**

மகளிர் விளையாட்டு வகைகளுள் ஒன்று உந்தி பறத்தல். பெரியாழ்வார் திருமொழியில் வரும் மங்கையர் இருவருள் ஒருத்தி கண்ணனைப் புகழ்ந்தும், மற்றொருத்தி இராமனைப் புகழ்ந்தும் ஒருவருக்கொருவர் எதிரிடையாகச் சொல்லி 'உந்தி பறத்தல்' என்னும் விளையாட்டை விளையாடுகின்றனர். **பஞ்சவர் தூதனாய் பாரதம் கைசெய்து (பெரியாழ்வார் திருமொழி, 3.9: 5)** இது கிருஷ்ணாவதாரப் பற்றுடைய ஒருத்தியின் பாசுரம். **முடிஒன்றி மூவுல கங்களும் ஆண்டுஉன் (பெரியாழ்வார் திருமொழி, 3.9: 6)** இஃது இராமாவதாரப் பற்றுடைய மற்றொருத்தியின் பாசுரம்.

**பிள்ளைகட்குத் திருநாமம் இடுதல்**

எம்பெருமான் திருநாமங்களை அனைவரும் உச்சரித்து வாழ்வில் உயர்வடையலாம் என்பதற்கு பெரியாழ்வார் ஓர் புதிய உத்தியைக் கையாளுகிறார். எம்பெருமானின் திருநாமங்களானகேசவன், சிரிதரன், மாதவன், கோவிந்தன், தாமோதரன் என்று குழந்தைகளுக்குப் பெயரிடுமாறு தாய்மார்களுக்கு அறிவுரை கூறும் பாசுரங்கள் பெரியாழ்வாரின் பக்தி நெறியை விளக்குகின்றன. நீங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு இறைவன் பெயர்களை இடுங்கள். வாயார அழைத்து மகிழுங்கள். அவனுடைய அன்னை நரகத்திற்குப் போகாமல் உய்வடைவாள் என்கிறார்

**செம்பெருந் தாமரைக்**
**கண்ணன்பேரிட்டழைத்தக்கால்**
**நம்பிகாள்! நாரணன்**
**தம்மன்னை நரகம்புகாள் (பெரியாழ்வார் திருமொழி, 4.6: 8)**

என்கின்றார். எம்பெருமான் பெயர்களையே தங்கள் குழந்தைக்கு இடுமாறு பெரியாழ்வார் அறிவுறுத்துகின்றார். மண்ணில் பிறந்து மண்ணாகும் மானிடப் பேரிட்டு மகிழாமல் கண்ணுக்கினிய கருமுகில் வண்ணன் நாமமே நண்ணுமின் என்றும் அறிவுரை பகர்கின்றார். இறைவன் பெயர்களை தங்கள் பிள்ளைகளுக்கு இடாமல் வேறு பெயர்களைப் பல்வேறு காரணங்களுக்காக இடும் மக்களை நோக்கி கேசவன், நாயகன், நாரணன் என்ற திருநாமங்களைத் தம் பிள்ளைகளுக்கு பெயர்களாக இட்டால் அவர்களைப் பெற்றெடுத்த தாய்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

தந்தையர் எமன் கையில் அகப்பட்டு நலிவு படாமல் உய்வடைவார் என்கின்றார் ஆழ்வார்.உயிர் உடலை விட்டு நீங்குவதற்கு முன்னர் சகல வேதங்களுக்கும் காரணமாகின்ற 'ஓம்' என்ற பிரணவத்தை உச்சரிக்க வேண்டிய முறையில் உச்சரித்து கடல் நிறவண்ணனாகிய எம்பெருமானை அர்ச்சித்தால் வைகுண்டத்தில் அடியார் குழாத்துடன் கூடலாம் என்கின்றார். உடல் கட்டு குறைவதற்கு முன்னரே எம்பெருமானைப் பற்றிக்கொண்டால் எம தண்டனையில் இருந்து தப்பிப் பிழைக்கலாம் என்கின்றார்.இவ்வாறு இடைவிடாது எம்பெருமானுடைய திருநாமத்தை உச்சரிப்பதைத் தவிர எனக்கு வேறொன்றும் தெரியாதுஎன்று பெரியாழ்வார் கூறுவதிலிருந்து அவருடைய பக்தி நெறியைத் தெரிந்துக் கொள்ள முடிகிறது.

**முடிவுரை**

விட்டுச்சித்தன் விரித்த தமிழ் என்ற சொற்றொடரையே நூலின் பெயராக ஆசிரியர் இட்டு வழங்குவது நூலுக்கு தனிச்சிறப்பாக அமைந்துள்ளது. பரத்துவ நிர்ணயத்தில் விட்டு சித்தரின் வாதத்திறனை உணர்ச்சியோடு பேராசிரியர் எடுத்துக் காட்டியிருக்கின்றார். கண்ணனைப் பிள்ளைப்பெருமாள் என்று பெயரிட்டு அழைப்பது புதுமையாக அமைந்துள்ளது. பிள்ளைப் பெருமாளின் வளர்ச்சி நிலைகள், கண்ணனின் சிறு குறும்புகள், தீரச் செயல்கள் என்ற பகுதிகளில் ஆழ்வாரின் கிருஷ்ணாநுபவத்தை எடுத்துரைப்பது ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலத் திறனைக் காட்டுவதாக அமைந்துள்ளது. இவ்வாறு பல்வேறு கோணங்களில் பெரியாழ்வாரையும் அவரது திருமொழிகளின் விளக்கங்களையும் எடுத்துக்கூறி விளக்கும் திறன் பேராசிரியரின் தனிச்சிறப்பாக அமைந்துள்ளது.

**குறிப்பு நூல்கள்**

[1] இளங்கோ அடிகள். *சிலப்பதிகாரம்*. கிழக்கு பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 2010.
[2] ந.சுப்புரெட்டியார். *விட்டுச்சித்தன் விரித்த தமிழ்*. வேங்கடம் பதிப்பகம், அண்ணா நகர், சென்னை, 1987.
[3] சுவீரா ஜெயஸ்வால். *வைணவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்*. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2010.
[4] தே.ந.ச.தேவராஜன். *வைணவமும் ஆழ்வார்களும்–பாகம் 2*. ஸ்ரீ செண்பகா பதிப்பகம், சென்னை 17, 2009.
[5] பாரதியார். *பாரதியார் கவிதைகள் முழுவதும்*. திருமகள் நிலையம், இரண்டாம் பதிப்பு,சென்னை, 2019.
[6] பாவலரேறு ச.பாலசுந்தரம். *திருக்குறள் தெளிவுரை*. உலகத் திருக்குறள் பேரவை, தஞ்சாவூர், முதற்பதிப்பு, 1987.
[7] முனைவர் து லலிதா. *பெரிய திருமொழி ஒரு பார்வை*. வீர ஓவு பதிப்பகம், கோயமுத்தூர்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

641043, 2002.

[8] முனைவர் ஜெகத்ரட்சகன். *நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்.* ஆழ்வார்கள் ஆய்வுமையம், சென்னை, 1993.

[9] கண்ணதாசன். *ஸ்ரீ கிருஷ்ண அந்தாதி.* கண்ணதாசன் பதிப்பகம், சென்னை, 600017, 2010.

**References**

[1] Elango Adigal. *Silapathikaram.* Killaku Pathipakam, Chennai, First Edition, 2010.
[2] Kannadasan. *Sri Krishna Anthathi*. Kannadasan Pathipagam, Chennai, 600017, 2010.
[3] N. Subbu Reddiar. *Vittucchitan Viritha Tamil*. Venkadam Padhipakam, Anna Nagar, Chennai, 600040, First Edition, 1987.
[4] Suveeraa Jeyasvall. *Vainavathin Thotramum Valarchiyum*. New Century Book House, Chennai, 2010.
[5] D. N. S. Devarajan.V*vaishnavism and Azhwars.* Sri Senbaga Publishing, Chennai, 2009.
[6] Bharathiyar. *Bharathiyar Kavithaigal.* Thirumagal Nilaiyam, Chennai, Second Edition, 2019.
[7]Pavalareru S. Balasundrem, *Tirukkurl Thelivurai.* Ulakathirukural Peravai, Thanjavur, First Edition, 1987.
[8] Dr. D. Lalitha. *Periya Thirumozhi-An Overview*. Veera Ovu Publishing, Coimbatore, 2002.
[9] Dr. Jagathratsakan. *Nallayira Dhivya Prapandham*. Alvarkal Ayvumaiyam, Chennai, 1993.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust and IJTLLS for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com


# *பரணிப்பொழிவுகள்* வெளிப்படுத்தும் பேராசிரியரின் மொழி ஆளுமை

## Professor N. Subbu Reddiar's Language Style from *Parani Discourses*


**முனைவர் மா. ரமாதேவி**, உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வு துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. M. Ramadevi,** Assistant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-2268-1164**


**DOI: 10.5281/zenodo.7275594**



### Abstract

*Prof. Dr. N. Subbu Reddiar delivered lectures on "Kalingattuparani" in the series jointly conducted by Sri Venkateswara University and Pakkala Tamil Sangam which has been compiled into a book titled "Parani Discourses". (Parani Polivukal). The six-day series has featured professor's lectures titled, Arimugham, Kadai Thirappu, Peigal Ulagam, Varalatru-Kurippugal, Parani Kattum Suvaigal, and Mummanikal. This article is the study of the professor's language personality, which is expressed in these lectures. Generally, personality can be referred to as a superior trait that distinguishes one from others. The personality traits can be found in society, sports, science and politics and can be expressed sometimes as a source of power and a hatred of the ruling but the personality expressed in the fields of literature and language are special to use and stimulate the thought process. In that way, Kalingattuparani's Sol suvai (word power), Porul suvai (meaning), and Nayam (quality) as explained by Professor Subbu Reddiar stand as an example of his language authority. Perasiriyar explains how "Kalingattuparani" has followed the Tamil literary tradition evinced in "Nannul", "Munnor mozhli porule yandri avar mozhliyum ponnae pore potruvom". Perasiriyar's lectures are examples of how a language can act as an instrument for exchanging ideas if expressed by a person who is proficient in that language. The introduction to "Kalingattuparani", the reason for the name Parani, Parani grammar, the appearance and origin of Parani books, the situation in which it appeared, the elements of Parani books and a lot of other information are given by Perasiriyar Subbu Reddiar never ending as from Akshaya Patra, such is the language personality. Perasiriyar approached through review method, descriptive method, comparative method, historical method, analytical method, and synthetic research method in this research article in his parani discourse on "Kalingattuparani", Hence, this article delineates the linguistic verve of Perasiriyar Subbu Reddiar.*



**Keywords:** Professor N. Subbu Reddiar, Language Style, Parani Discourses**,** *Kalingattuparani.*



### ஆய்வுச்சுருக்கம்

*திருவேங்கடவன் பல்கலைக்கழகம் மற்றும் பாக்காலா தமிழ்ச் சங்கம் இணைந்து நடத்திய கூட்டத் தொடர்களில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் ஆற்றிய கலிங்கத்துப்பரணி பற்றிய சொற்பொழிவுகளே "பரணிப் பொழிவுகள்" என்ற தலைப்பில் நூல்வடிவம் பெற்றுள்ளது. ஆறு நாட்கள் நடைபெற்ற இக்கூட்டத் தொடர்களில் அறிமுகம், கடை திறப்பு, பேய்கள் உலகம், வரலாற்றுக் குறிப்புக்கள், பரணி காட்டும் சுவைகள்,*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*மும்மணிகள் என்ற தலைப்புகளில் பேராசிரியர் சொற்பொழிவு ஆற்றியுள்ளார். இப்பரணிப் பொழிவுகளில் வெளிப்படும் பேராசிரியரின் மொழி ஆளுமையை ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது. பொதுவாக, ஆளுமை என்பது ஒருவரை மற்றவரிடமிருந்து வேறுபடுத்தி காட்டும் மேலோங்கிய பண்பு என்று குறிப்பிடலாம். சமூகம், விளையாட்டு, அறிவியல், அரசியல் எனப் பலத் துறைகளிலும் காணப்படும் இவ்வாளுமைப் பண்பு சில வேளைகளில் அதிகாரப் போக்கினை வெளிப்படுத்துவனவாகவும், ஆளப்படுவோரின் வெறுப்பினை பெறுவதாகவும் அமைந்து விடும். ஆனால், இலக்கியம், மொழி ஆகிய அறிவுத் துறைகளில் வெளிப்படும் இவ்வாளுமைகள் சுவைப் பயப்பனவாகவும், சிந்தனையை தூண்டுவதாகவும் அமையும் சிறப்புடையது. அவ்வகையில் கலிங்கத்துப்பரணியின் சொற் சுவை, பொருட் சுவை, ஓசை நயம் ஆகியவை வெளிப்படும் வகையில் பேராசிரியர் அவர்கள் ஆற்றிய இப்பொழிவுகள் அவர்தம் மொழி ஆளுமையை பறைசாற்றும் சான்றாதாரங்கள் எனலாம். "முன்னோர் மொழிப் பொருளே யன்றி அவர்மொழியும் பொன்னே போற் போற்றுவம்" என்று நன்னூல் கூறும் தமிழ் இலக்கிய மரபினை பின்பற்றி கலிங்கத்துப்பரணி பாடப்பட்டுள்ள சிறப்பினை மிக அழகாக எடுத்தியம்பியுள்ளார். கருத்து பரிமாற்றத்திற்கான கருவியாக விளங்கும் மொழியானது ஆற்றலுடன், பக்குவப்பட்ட நிலையில் புலமைத்துவம் பெற்ற ஒருவரால் வெளிப்படுத்தப்படும் பொழுது, எத்தகைய சிறப்பெய்துகின்றது என்பதற்கு பேராசிரியரின் இப்பொழிவுகள் உதாரணங்களாகின்றன. கலிங்கத்துப் பரணி பற்றிய அறிமுகம், பரணி பெயர்க் காரணம், பரணி இலக்கணம், பரணி நூல்களின் தோற்றமும் தோன்றிய காரணமும், நூல் தோன்றும் சூழ்நிலை, பரணி நூலின் உறுப்புக்கள், கலிங்கத்துப் பரணி தோன்றிய காரணம், நூலமைப்பு ஆகியவற்றை தெவிட்டாத தேனென, தொட்டணைத்து ஊறும் மணற்கேணியென, எடுக்க எடுக்க குறையாத அட்சய பாத்திரமென அள்ளி வழங்கிய பேராசிரியரின் மொழி ஆளுமையை திறனாய்வு முறை, விளக்கவியல் முறை, ஒப்பீட்டு முறை, வரலாற்றியல் முறை, பகுப்பாய்வு முறை, தொகுப்பு முறை ஆகிய ஆய்வுமுறைகளை பின்பற்றி ஆராய்வதாக இக்கட்டுரை அமைகின்றது*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் ந.சுப்புரெட்டியார், *பரணிப் பொழிவுகள், கலிங்கத்துப் பரணி.*

**முன்னுரை**

பேச்சு என்பது ஒரு கலையாகும். இது நூல்கள் பல கற்பவர்களுக்கே வாய்க்கப் பெற்ற வரமாக அமைகின்றது. பொதுவாக, சொற்பொழிவுக்கு கருத்துகளே உயிர்நாடி என்றாலும், கருத்துகளை வெளிப்படுத்த மொழி இன்றியமையாததாகின்றது. சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம் என்பார்கள். அவ்வகையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

கலிங்கத்துப்பரணிப் பற்றி ஆறு நாட்கள் ஆற்றிய சொற்பொழிவுளை உள்ளடக்கியதாக அமைந்த பரணிப்பொழிவுகள் என்ற நூல் அவர்தம் மொழி வளமைக்கு சிறந்ததொரு சான்றாக அமைகின்றது. இந்நூல் அறிமுகம், கடைதிறப்பு, பேய்கள் உலகம், வரலாற்றுக் குறிப்புக்கள், பரணிக்காட்டும் சுவைகள், மும்மணிகள் என்ற ஆறு தலைப்புகளை கொண்டு அமைந்துள்ளது. இப்பரணிப் பொழிவுகள் வெளிப்படுத்தும் பேராசிரியரின் மொழி ஆளுமையை ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

**கற்றதையும் பெற்றதையும் விரித்துரைக்கும் சொல்வன்மை**

சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகக் கருதப்படும் பரணி இலக்கியத்தின் பெயருக்கான காரணம் வரலாற்றில் பலவாகச் சொல்லப்படுகின்றது.

> **பரணி என்பது நட்சத்திரத்தின் பெயர் என்றும், இப்பரணி நாளில் கொண்டாடப் பெறும் போர் வெற்றி விழாவைச் சிறப்பித்து பாடுவதாலும், போருக்குரிய கடவுள் கொற்றவைக்குரிய நாளாக அமைவதாலும் பரணி என்று பெயர்ப் பெற்றது என்பர்.**
>
> **(பரணிப் பொழிவுகள், ப. 4)**

இதனை பேராசிரியர் தமது பரணிப் பொழிவில் மிக விரிவாக பேசுகின்றார். தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவிற்கு உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் எழுதிய உரையினையும், பேராசிரியர் எழுதிய உரையினையும் மேற்கோள் காட்டி எடுத்துரைக்கும் போக்கு சிறப்புடைத்து.

> **பரணியாவது – காடு கெழு செல்விக்குப் பரணி நாட் கூழும் துணங்கையும் கொடுத்து வழிபடுவதோர் வழக்குபற்றியது. அது பாட்டுடைத் தலைவனைப் பெய்து கூறலிற் புறத்திணை பலவும் விராயிற்று** என்றும் **(பரணிப் பொழிவுகள், ப.4) தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாத அய்யர் அவர்கள் பரணி என்ற நட்சத்திரம் காளியையும் யமனையும் தன் தெய்வமாகப் பெற்றது என்றும், அந்நாள்மீனால் வந்த பெயரே நூலுக்கும் பெயராக அமைந்தது என்றும் அவ்வாறு கொள்வதே ஏற்புடைத்து (பரணிப் பொழிவுகள், ப. 5)**

என்றும் கூறியுள்ளதையும் எடுத்துக்காட்டுகின்றார். மற்றோரிடத்தில் பேராசிரியர் ந.சேதுரகுநாதன் அவர்கள் ‘பரணி’ என்ற சொல்லுக்குக் கூறும் பொருளை விளக்குமிடத்து, அருமையாக அண்மி இருக்கின்ற காரணத்தால் கோட்டையையும் காட்டுப் பொழிலையும் ’அரண்’ என்று கூறுகின்றோம். பருமை அண்ணுதல் (அண்ணுதல் – பொருந்துதல்) காரணமாக யானைக்கும் எட்டாத உயர்வுடைய பரிய தூண்களுடையதாக அமைக்கப்பெற்றதைப் ‘பரண்’ என்று வழங்குவதையும் நாம் அறிவோம். அங்ஙனமே பருமையாகிய அணியாகிய யானைப் படையே பரணி எனப் பெயர் பெற்றது என்று கூறுவர்.

> **நால்வகை அணிகளுள் தேர் அஃறிணையுள் உயிரில் பொருளாக இருத்தலின் அதனை நீக்கிப் பரிய யானைப் படை மட்டிலும் சிறந்ததாகக் கொள்ளப் பெற்றது. பருமையாகிய**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**அணி பரணியாகும் என்பது என் நண்பரின் கருத்து. இந்த யானைப்படை, ஏனைய மூன்று வகைப்படைகள் போலன்றி, மேலாள் இல்லாத வழியும் கதமும் மதமும் சிறந்து தாக்குவதாதலின் அதுவே ஈண்டுப் பரணியாக, பெரிய அணியாக, மதிக்கப் பெற்றதது என்று கொள்ளல் ஏற்புடைத்தாகும். அத்தகைய படையிலும் ஆயிரம் யானைகளைக் கொன்றவனுக்கே பரணி பாடப்பெறும் என்பதுவும் அறியத்தக்கது. இவ்வழக்கே பின்னர் இலக்கண வழக்காகவும் வந்துவிட்டது. (பரணிப் பொழிவுகள், பக்.5, 6)**

என்கிறார். இவ்வாறு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தாம் கூற வந்த பொருளை அரண் செய்யும் வகையிலான தகுந்த எடுத்துக்காட்டை ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார். தான் கற்றதையும் பெற்றதையும் தமது ஈடு இணையற்ற சொல்வன்மையால் விரித்துரைக்கும் பாங்கு போற்றுதற்குரியதாகும்.

கலிங்கத்துப்பரணி தோன்றிய காரணம் பற்றி கூறும்பொழுது, கலிங்கத்துப் போருக்கு பின்னர் மன்னன் குலோத்துங்கனும், அவைப்புலவர் சயங்கொண்டாரும் உரையாடும் சமயத்தில், புவியரசன் கவியரசனை நோக்கி வேடிக்கையாக கவிஞரேறே, கலிங்க நாட்டைச் சயங்கொண்டமையால் யானும் தங்களைப்போல் சயங்கொண்டான் ஆயினேன் என்று கூறினான். அதனைச் செவிமடுத்த கவிஞர் கோமான், அங்ஙனமாயின் சயங்கொண்டானைச் சயங்கொண்டான் பாடுதல் சாலப் பொருத்தமாகும் என்று மறுமாற்றம் உரைத்து இந்நூலைப் பாடி முடித்தாக ஒரு செவிவழிச் செய்தியால் அறிகின்றோம்.

**இந்நூல் அரங்கேற்றம் நிகழுங்கால் அந்நூலின் சொற்சுவை பொருட்சுவைகளை நன்கு அனுபவித்த மன்னன் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டி அவரையும் அவரது நூலையும் சிறப்பித்தான் என்று அச்செவிவழிச் செய்தியாலேயே அறிகின்றோம் (பரணிப் பொழிவுகள், ப. 15)**

என்று குறிப்பிடும் பேராசிரியர் இதில் உண்மை உண்டோ, இல்லையோ கேட்பதற்கு இனிமையாக உள்ளது என்கிறார். மேலும், இது குறித்து பேசும் பொழுது,

**காவலர் ஈகை கருதுங்கால் காவலர்க்குப்**
**பாவலர் நல்கும் பரிசுஒவ்வா – பூவில்நிலை**
**யாகாப் பொருளை அபயன் அளித் தான்புகழாம்**
**ஏகாப் பொருள் அளித்தேம் யாம் (தமிழ் நாவலர் சரிதை, பா. 118)**

என்ற தமிழ் நாவலர் சரிதையில் காணப்பெறும் வெண்பாவை சுட்டிக்காட்டும் பேராசிரியர், மன்னர் வழங்கிய நிலையாப் பொருட் கொடையிலும் தான் மன்னனுக்கு நல்கிய நிலைத்த புகழ்க் கொடையே பல்லாயிரம் மடங்கு பெரியது என்று சயங்கொண்டார் கருதினார் என வழங்கும் வரலாற்றையும் குறிப்பிடுகின்றார்.

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

பேராசிரியர் தமது சொற்பொழிவுக்கு மேலும் மெருகேற்றும் விதமாக அச்சபையிலே கூடியிருந்த மக்களைப் பார்த்து கதைக்குக் கால் இல்லை அல்லவா? இக்கதையையே நாம் இன்னும் நீட்டி இதற்கு சுவையூட்டலாம் என்று கூறி தமது கற்பனை வளத்தால் செவிவழிச் செய்தியாக வழங்கும் இக்கதைக்கு நல்லதொரு முடிவுரை எழுத முனைகின்றார். ஒரு வாசிப்பாளனாக பேராசிரியரின் பரணிப் பொழிவில் இக்குறிப்பிட்ட வரியை படிக்கும் பொழுது பேராசிரியர் என்ன கூறப்போகிறார் என்ற ஆர்வத்தில் அடுத்தத்தடுத்த வரிகளை படிக்க விரைவு காட்டும் இடத்து அக்கூட்டத்தில் பங்கேற்ற மக்கள் எத்தகைய ஈர்ப்பை பெற்றிருப்பர் என்று உணர முடிகின்றது.

> **பேராசிரியரின் கற்பனை வளத்தால் மேலும் அந்த கதை இவ்வாறு நீள்கின்றது. மேற்கூறிய வெண்பாவைக் கண்ட அரசமாதேவி அதனைப் படித்து அதன் கருத்தினையும் அதனைப் பாடிய கவிஞரின் உட்கிடக்கையையும் நன்கு அறிந்தாள். அவளோ கற்றுத்துறைபோகிய வித்தகி, 'மாதர் முன்னேற்றக் கழகத்தின்' ஆதரவில் மற்றோர் அரங்கேற்ற விழாவிற்கு ஏற்பாடு செய்தாள் புவியரசி. இவ்விழாவில் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டிச் சிறப்பித்தாள். ஆனால், இவள் உருட்டச் செய்த ஒவ்வொரு தேங்காயிலும் வயிரம், மரகதம், மாணிக்கம் ஆகிய மூன்று கற்கள் மூன்று கண்களாகப் பதிக்கப்பெற்றிருந்தன. அரசமாதேவியின் கூர்த்த மதியினையும் கவிதையின் நுட்பத்தை அறியும் அவள் திறமையையும் வியந்து போற்றினார் கவிஞர். அவர்தம் உள்ளம் குளிர்ந்து அரசன் மீது கொண்டிருந்த முனிவும் அகன்றது. இப்படியெல்லாம் வேண்டியவாறு கதையை நீட்டிக் கொண்டே போகலாம். (பரணிப் பொழிவுகள், ப. 6)**

என்று கூறி கதையை நிறைவு செய்தார். சொல்ல வந்த செய்தியை மேலும். சுவையூட்டி தருவதற்காகவே பேராசிரியர் இவ்யுக்தியை பயன்படுத்தினார் எனலாம். நீண்டதொரு சொற்பொழிவில் நடுநடுவே கூடியுள்ள மக்களுக்கு உற்சாகம் ஊட்டுவதற்காக இக்கதைப் புனைவில் பேராசிரியர் ஈடுபட்டிருப்பார் என்பதை உணர முடிகின்றது.

> **விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது**
> **சொல்லுதல் வல்லார்ப் பெறின் (குறள். 648)**

என்ற வள்ளுவனின் வாய்மொழிக்கேற்ப தாம் சொல்ல வேண்டிய செய்திகளை மிகச் சரியாக வரிசைப்படுத்தி இனிதாகச் சொல்லும் வல்லமைப் பெற்ற பேராசிரியரின் மொழி ஆளுமை அங்கு குழுமியிருந்த மக்களை ஈர்த்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

**உள்ளார்ந்த நூலறிவும், உலகத்துப் பொது அறிவும்**

கலிங்கத்துப்பரணியில் 'கடைதிறப்பு' என்பது கதவைத் திறக்குமாறு வேண்டுதலை

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022
Available at: www.ijtlls.com

உணர்த்தும் செய்யுட்களின் பகுதி என்பர். கடை திறப்பு என்ற பகுதி பற்றி இருவேறு கருத்துக்கள் நிலவுகின்றன. ஒன்று

**செருக்களம் சென்ற தம் கொழுநர் குறித்த காலத்து வாராது காலம் தாழ்த்த அவர்களுடைய மகளிர் ஊடல் கொண்டு கதவை தாழிட்டுக் கொள்ள, சயங்கொண்டார் அவர்கள் வீட்டின் முன்புறம் நின்று முன்னாட்களில் அவர்கள் ஊடியும் கூடியும் துய்த்த இன்பம் முதலியவற்றை எடுத்துக் கூறி அவர்களை அழைத்துக் கதவு திறக்கவும் கலிங்கப் போரின் வெற்றியைக் கேட்கவும் வேண்டுதல் என்பது மற்றொன்று, செருக்களம் சென்ற தம் கொழுநர் குறித்த காலத்து வாராது காலம் தாழ்த்த, கவலையுற்றும் ஊடியும் கதவுகளைத் தாழிட்டு கொண்ட மகளிரைத் தம் மன்னனும் அவனுடைய தானைத்தலைவனும் அடைந்த கலிங்க வெற்றியைப் பாடுவதற்குத் தலைநகரிலுள்ள பல்வேறு மகளிரும் நாட்காலையே எழுந்து வாயிற்கடை நின்று துயிலெழுப்புதல் என்பது (பரணிப் பொழிவுகள், ப. 26)**

என இலக்கிய சமுதாயத்தில் நிலவும் இருவேறு கருத்துகளை பேராசிரியர் எடுத்துரைப்பதோடு இதில் எது சரி என்ற ஆராய்ச்சிப் பார்வையோடு மேலும் தனது பொழிவை இட்டு செல்கின்றார். எடுத்துக்காட்டாக,

**கூடிய இன்கன வதனிலே**
**கொடைநர துங்கனொடு அணைவுறாது**
**ஊடிய நெஞ்சினொடு ஊடுவீர்**
**உமது நெடுங்கடை திறமினோ (கலிங்கத்துப்பரணி, பா. 24)**

என்ற பாடலைக் குறிப்பிடும் பேராசிரியர், இதில் கனவில் கண்ட குலோத்துங்கனைப் புணராது விட்டத் தம் நெஞ்சுடன் நொந்தனராக மகளிர் சிலர் காட்டப் பெறுகின்றனர்.

**இதில் குறிப்பிடப் பெறும் மகளிர் வீரர்தம் மனைவியர் என கருத இயலாது. அவ்வாறு கருதினால் அது பிழையெனவாகும். மேலும், ஊடிய மகளிரை சயங்கொண்டார் முன் நடந்தனவற்றை எடுத்துக்கூறி கதவை திறக்குமாறு பாடினார் என கருதுவதும் பொருந்தாது. புலவர் ஒருவர் மகளிர் ஊடல் போக்க பாடல் பாடும் மரபு வழக்கில் இல்லை. அடுத்து, முன்னர் நடந்தனவற்றை எடுத்துக் கூறி பாடியது என கொள்ளவும் இயலாது. ஏனெனில், இறந்தகாலத்தை நினைவூட்டியிருப்பின் ஊடினீர் என்றே பாடியிருப்பார். ஆனால் இப்பாடலில் ஊடுவீர் என எதிர்காலமே சுட்டப்பட்டுள்ளது எனவே, பழைய செய்திகளை நினைவூட்டினார் என்ற கொள்கையை ஏற்றுக்கொள்வதற்கே இடமில்லை (பரணிப் பொழிவுகள், ப. 28)** என்கிறார்.

**தக்கயாகப் பரணி, இரணியவதைப் பரணி ஆகிய நூல்களில் இடம் பெற்ற கடைத்திறப்பு பற்றி கூறும்பொழுது, ஒட்டக்கூத்தரும், இரணிய வதைப்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **பரணியாசிரியரும் வானம், மேரு, கயிலை முதலான இடங்கட்குச் சென்று அவ்விடங்களில் உறக்கத்தினால் பகலில் கதவடைத்திருக்கும் மகளிரைக் கதவு தட்டுபவராகக் கூறுதல் வேண்டும் இஃது எவ்வாற்றானும் பொருந்தாது என்பது எண்ணிப் பார்ப்பார் அனைவருக்கும் எளிதில் புலனாகும். (பரணிப் பொழிவுகள், ப. 29)**

என்றுரைக்கின்றார். கடைத்திறப்பு என்ற பகுதி ஊடல் கொண்ட மகளிரை பல்வேறு மகளிரும், நாட்காலையே எழுந்து தம் தோழியரின் வாயிற்கடை முன்னின்று அவர்களைத் துயிலெழுப்புவதாகக் கொள்வதுதான் மிகவும் பொருத்தமுடையது எனக் கூறும் பேராசிரியர், இதற்கு திருப்பாவை, திருவெம்பாவை போன்ற நூல்களை சான்றாதாரமாகக் காட்டுகின்றார்.

> **சொற்கட்டிலும், பொருளாழத்திலும், பல்வேறு இலக்கியச்சுவைகளிலும், மெய்ப்பாடுகளிலும் இணையற்று விளங்குவது இந்நூல். (தமிழக வரலாறும் – மக்களும் பண்பாடும், ப. 292)**

> **களம் பாடியவன்; வீரவளம் பாடியவன்; சோழர் குலம் பாடியவன்' காளி தலம் பாடியவன்; பெண்ணின் நலம் பாடியவன்; பகைவர் புலம் பாடியவன்; குருதிக்குளம் பாடியவன்; பாலை நிலம் பாடியவன்; சொல்லில் சிலம்பாடியவன் என்ற அத்துணை மிகுமொழிகளுக்கும் தகுமொழியாளரே (இந்து தமிழ் திசை, 13 ஜீலை 2018)**

என வைரமுத்து அவர்கள் பரணியாசிரியரை புகழ்ந்துள்ளார். சொற்கட்டிலும், களம்பாடிய முறையிலும் சிறந்து விளங்குகின்ற இந்நூலை இயற்றிய சயங்கொண்டார், **முன்னோர் மொழிப்பொருளே யன்றி அவர்மொழியும் பொன்னே போற் போற்றுவம் (நன்னூல், நூ. 9)** என்னும் தமிழ் இலக்கிய மரபினையொட்டிப் பண்டைய மரபினை ஒட்டியே கடைதிறப்பு பகுதியை அமைத்திருப்பார் என்பது பேராசிரியரின் முடிபு.

> **'கடைதிறப்பின் உட்பொருள்' என்ற பகுதியில் திரு.ரெட்டியார் காட்டியிருக்கும் கருத்தே கொள்ளத்தக்கது என வி.ஆர்.எம்.செட்டியாரும் கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி என்ற நூலின் அறிமுகவுரையில் குறிப்பிட்டுள்ளார். (கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி, நூல் அறிமுகவுரை)**

> **ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம் புலவர்**
> **வார்த்தை பதினா யிரத்தொருவர் (தனிப்பாடல் திரட்டு, பா. 42)**

என அவ்வையார் உயர்ந்த சபைகளில் அமரும் தகுதி நூறு பேரில் ஒருவருக்கு வாய்க்கும். ஆயிரம் பேரில் ஒருவரே கவிஞராய் திகழ்வர். ஆனால் பேச்சாளராக இருப்பவர் பதினாயிரம் பேரில் ஒருவரே என்கிறார். அவ்வகையில், உள்ளார்ந்த நூலறிவும், உலகத்துப் பொது அறிவும் கொண்ட பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பதினாயிரம் பேரில் ஒருவர் என்பது திண்ணம்.

**அளவிட முடியாத மொழி வளமையும், அளக்க முடியாத ஆளுமைத் திறனும்**

கலிங்கப் போரில் சில வீரர்கள் கடமையுணர்ச்சியுடன் போர் புரிந்து களிப்புடன்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

உயிர்த்துறந்தமையால் அவர்களின் முகம் மலர்ச்சியுடன் காணப்பட்டது என்றும், இக்காட்சி விருந்தோம்பும் மேலோரின் உயர்ப் பண்பினை விளக்கி நிற்கின்றது என்றும் கவிஞர் சயங்கொண்டார் கவிதைப் புனைந்துள்ளார்.

**விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண**
**மேன்மேலும் முகமலரும் மேலோர் போலப்**
**பருந்தினமும் கழுகினமும் தாமே யுண்ணப்**
**பதுமமுகம் மலர்ந்தாரைப் பார்மின் பார்மின் (கலிங்கத்துப்பரணி, பா. 477)**

இதனை தமது பொழிவுரையில் சுட்டிக்காட்டும் பேராசிரியர், கவிஞரின் புனைந்துரையினையும், கற்பனைச் சிறப்பினையும் வெகுவாக புகழ்கின்றார். மேலும் இதனை,

**செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்**
**நல்விருந்து வானத் தவர்க்கு (குறள். 86)**

என்ற வள்ளுவரின் வாய்மொழியுடன் ஒப்புநோக்கி விளக்கியுள்ளார். அடுத்து கவிஞர் சயங்கொண்டார் குறிப்பிடும் உலோபிகளை பற்றி பேசுகின்றார். உலோபிகள் என்போர் உயிர்ப் போகுமளவும் தமது உடைமையை விடாத தன்மையுடையவர் ஆவர். ஆனால், சிலர் உலோபிகளின் தன்மையறியாது அவரைச் சுற்றி வருவர். போர்க்களத்தில் குற்றுயிராகக் கிடக்கும் உலோபிகளின் தன்மையுடைய வீரர்கள் தன் உயிர்ப்போகுமளவும் நரிகளுக்குத் தம் உறுப்புக்களை தருவதில்லையாம்.

**சாமளவும் பிறர்க்குதவா தவரை நச்சிச்**
**சாருநர் போல் வீரருடல் தரிக்கும் ஆவி**
**போமளவும் அவரருகே இருந்து விட்டுப்**
**போகாத நரிக்குலத்தின் புணர்ச்சி காண்மீன் (கலிங்கத்துப்பரணி, பா. 478)**

என்ற தாழிசையால் இச்செய்தியை விளக்கியுரைக்கும் பேராசிரியர் இதனைப் புறத்திணை இலக்கணம் ‘பேய்நிலை’ என்று கூறுவதையும், **ஏமச் சுற்ற மின்றிப் புண்ணோர் பேஎயோம்பிய பேஎய்ப் பக்கமும் (தொல். பொருள். புறத்திணை, நூ. 24)** என்று தொல்காப்பியத்தில் குறிப்பிட்டிருப்பதையும் எடுத்துரைக்கிறார். ஓம்புதலாவது, அவன் உயிர் போந்துணையும் ஒரியும் பேயும் நரியும் கடிந்து அவன் தலையைக் கோடலஞ்சிப் பாதுகாத்தலாம் என்ற நச்சினார்க்கினியர் உரையையும் மேற்கோள் காட்டி விரித்துரைக்கின்றார். மின்சாரம் செல்ல கம்பி கருவியாக இருப்பது போல கருத்தை விளக்க மொழி கருவியாக உள்ளமையை விளக்கும் பேராசிரியரின் சிறந்த ஆளுமைத்திறன் போற்றுதற்குரியது.

**பொருளை நிறுத்தக் காட்டுதலும், நடுநிற்றலும்**

பேராசிரியர் இப்பரணிப் பொழிவில் சொல்லும் சொல் ஒவ்வொன்றும் அதனை வெல்லும் சொல் இன்றி சிறப்புற அமைந்துள்ள தன்மை,


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை**
**வெல்லும்சொல் இன்மை அறிந்து (குறள். 645)**

என்ற குறள் மொழிக்கு இணங்க அமைந்துள்ளது. குறிப்பாக, வரலாற்றுக் குறிப்புக்கள் என்னும் பகுதியில் கலிங்கத்துப்பரணி குறிப்பிடும் சோழ மன்னர்கள் பற்றி கூறுமிடத்து, அம்மன்னர்களின் சிறப்புத் தோன்ற எடுத்துரைத்துள்ளார். மேலும்,

**முற்கால சோழர் தோன்றலாக திருமால் குறிக்கப்படுவதையும், திருமாலின் உந்திக் கமலத்திலிருந்து நான்முகன் தோன்றின செய்தியும், நான்முகன் மரீசியைப் பெற்றெடுத்ததையும், மரீசிக்கு காசிபன் மகனாகப் பிறந்ததையும், காசிபனுக்குக் கதிரவன் குமாரனாக உதித்ததையும் (கலிங்கத்துப்பரணி, பா. 186)**

நிரல்பட எடுத்து மொழியும் கலிங்கத்துப்பரணிப் பாடலை எடுத்துக்காட்டி கேட்பவர் எளிதில் அறியும்படியாக தன் சொல் வன்மையால் அணி செய்துள்ளார். அடுத்து,

**அரிய காதலனை ஆவினது**
**கன்று நிகரென்று**
**எவ்வ ருக்கமும்வி யப்பமுறை செய்த பரிசும் (கலிங்கத்துப்பரணி, பா. 187)**

என நீதிக்கும், நேர்மைக்கும் அறம் வழுவாச் செங்கோலாட்சிக்கும் எடுத்துக்காட்டாக விளங்கிய மனுநீதி சோழனின் சிறப்பை எடுத்தோதும் பாடலை மொழிவதுடன், முற்கால சோழர் பரம்பரையை எடுத்துரைக்கின்றார். மேலும், மாந்தாதா என்ற மன்னனை விளக்குமிடத்து,

**ஒருது றைப்புனல்சி னப்புலியும்**
**மானும் உடனே**
**உண்ண வைத்தஉர வோன் (கலிங்கத்துப்பரணி, பா. 189)**

என புலியும், மானும் ஒரு துறையுள் ஒன்றாக நின்று நீர் பருகச் செய்தான் என்ற செய்தியையும், சிபி சக்கரவர்த்தி தன் தசையை புறவு அடைந்த துன்பத்தை போக்க தராசுத் தட்டில் வைத்த செய்தியையும் எடுத்து கூறுவதால் சோழர்களின் எவ்வுயிர்க்கும் இரங்கும் தன்மையை அறிய வாய்ப்பாக அமைந்தது. மேலும் கோச்செங்கணான், விக்கிர சோழன், குலோத்துங்கன், இராசராசன் போன்ற சோழ மன்னர்களின் பெருமையை உணர்த்தும் வகையாக களவழி நாற்பது, விக்கிரம சோழன் உலா, குலோத்துங்கன் உலா, இராசராசன் உலா ஆகிய நூல்களை மேற்கோள் காட்டியும், இம்மன்னர்கள் பற்றி கலிங்கத்துப்பரணி பதிவுச் செய்யும் செய்திகளை எடுத்துக் கூறியும் செல்லும் பேராசிரியரின் இப்பொழிவு அவர்தம் பலநூற் புலமையையும், பொருளை நடுநிலையோடு நிறுத்துக் காட்டும் பேரறிவையும் அறிய துணைப்புரிகின்றது.

**சொலல் வன்மையும், சோர்விலாமையும்**

இறையனுபவத்திற்கு அடுத்த நிலையில் வைத்தெண்ணக் கூடியது இலக்கியச் சுவை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

என்று கூறும் பேராசிரியர் பரணி காட்டும் சுவைகள் குறித்து தனித்து பொழிவுரை ஆற்றியுள்ளார்.

**கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்**
**உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்**
**நன்மைப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே (தொல். பொருள். மெய்ப், நூ. 24)**

கண்ணாலும் செவியாலும் அறியக்கூடிய நுண்ணறிவுடைய சான்றோர்க்கே சுவைகளின் நுட்பம் புலப்படும் என தொல்காப்பியம் கூறியுள்ளதை மேற்கோள்காட்டி சுவைகள் பற்றி பேசத் துவங்கும் பேராசிரியர், சுவைகளின் தொகை, சுவைகளின் தோற்றம், சுவை பற்றிய வடநூலார் கொள்கை, சுவைப் பாகுபாடு என பலவற்றையும் விளக்கிச் செல்கின்றார்

கலிங்கத்துப்பரணியில் போரில் தன் கணவன் விழுப்புண்பட்டு குற்றுயிராக நிலத்தில் கிடக்கும் காட்சியைக் கண்ட பெண்ணொருத்தி தன் கணவனை நிலமகள் தாங்கலாகாது எனக் கருதி அவனை தன் மடியில் கிடத்திக் கொண்டாள். விண்ணுலகம் செல்லும் அவன் உயிர் அங்குள்ள மகளிரால் தழுவக்கூடும் என்று கருதி அவன் உயிர் போகும் போதே தன் உயிரையும் போக்கிக் கொள்கின்றாள்.

**தரைமகள்தன் கொழுநன்றன் உடலந் தன்னைத்**
**தாங்காமல் தன்னுடலால் தாங்கி விண்ணாட்டு**
**அரமகளிர் அவ்வுயிரைப் புணரா முன்னம்**
**ஆவிஒக்க விடுவாளைக் காண்பின் காண்பின் (கலிங்கத்துப்பரணி, பா. 483)**

இக்காட்சியை தமது பொழிவுரையில் சுட்டும் பேராசிரியர்

**‘கருணம்’ (அழுகைச்சுவை) ஒரு சாணை போன்றது. தங்கத்தை நெருப்பிலிட்டு உருக்குவதால் அது தூய்மையாதல் போல் மனிதன் மனமும் சோகம் என்னும் நெருப்பில் வாட்டப்படுவதால் பதப்படுகின்றது. மேனாட்டு அறிஞர் கூறும் Cathartic என்பதும் இதுவேயாகும். இதுபற்றியே இந்த ரசம் சிறப்பாகப் போற்றப்படுகின்றது (பரணிப் பொழிவுகள், ப. 138)**

என்கிறார். இதில் அழுகைச் சுவைக்கு சிறந்தோர் உவமை கூறியதோடு மேனாட்டார் கொள்கையோடு அதனை ஒப்பிட்டு காட்டிய தன்மை அவர்தம் பன்மொழிப் புலமைக்கு எடுத்துக்காட்டாகவும் அமைகின்றது. ஆறாம் நாள் பொழிவில் மும்மணிகள் என்ற தலைப்பில் உரையாற்றும் பேராசிரியர் இப்பகுதியில் பாட்டுடைத் தலைவனாகிய முதற்குலோத்துங்கன், அவன் தளபதியாகிய கருணாகரத் தொண்டைமான், இவ்விலக்கியத்தை படைத்தளித்த சயங்கொண்டார் ஆகியோரைப் பற்றிய குறிப்புகளைத் தருகின்றார். இதில்,

**பிற்கால சோழ மன்னர்களைப் பற்றி அவர்தம் வரிசை முறையில் எடுத்துரைக்கின்றார். சளுக்கிய மன்னன் இராசராசனுக்கும், கங்கைகொண்ட சோழனின் மகளாகிய**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **அம்மங்கைதேவி ஆகியோருக்கு மகனாகப் பிறந்த குலோத்துங்கன் சளுக்கிய மரபினனாயினும் சோழர் குலத்தை விளங்க வைத்துப் பெருவீரனாய்த் திகழ்ந்தான் என்ற செய்தியை கூறும் பேராசிரியர், தந்தையின் மரபையே தமது மரபாகக் கூறிக் கொள்வது வழிவழி மரபாக இருந்து வர குலோத்துங்கனோ தமது தாய்ப்பாட்டன் அரண்மனையில் பிறந்து வளர்ந்ததால் தமிழ்மொழியையே தாய்மொழியாகக் கொண்டு தன்னைச் சோழ அரசகுமரனாகவே கருதிக் கொண்டான். (பரணிப் பொழிவுகள், ப. 152)**

என்கிறார். கருணாகரத் தொண்டைமான் பற்றி உரைக்கையில், "ஏவுதற் கருத்தனான அபயனுடன் இயற்றுதற் கருத்தனான இக்கருணாகரனையும் சயங்கொண்டார் தம் பரணியில் பலவிடங்களிலும் சிறப்பித்து உள்ளமையையும், கல்வெட்டுகளாலும் வரலாற்று அறிஞர்களின் கூற்றாலும் அறியலாகும் அவனைப்பற்றிய செய்திகளையும் எடுத்துக்கூறி பேராசிரியர் தன் உரையை வரலாற்றுப் பெட்டகமாக்கியுள்ளார். மேலும் கவிஞர் பெருமான் சயங்கொண்டார் அபயனைக் காண விரும்பி அவனது அவைக்களம் சென்றபொழுது அவர் ஊர் யாது என அரசன் வினவ,

> **செய்யும் வினையும் இருளுண் பதுவும்**
> **தேனும் நறவும் ஊனும் களவும்**
> **பொய்யும் கொலையும் அறமும் தவிரப்**
> **பொய்தீர் அறநூல் செய்தார் தமதூர்**
> **கையும் முகமும் இதழும் விழியும்**
> **காலும் நிறமும் போலும் கமலம்**
> **கொய்யும் மடவார் கண்வாய் அதரம்**
> **கோபம் கமரும் தீபங்குடியே (தமிழ் நாவலர் சரிதை, பா. 114)**

என்ற கவிதையைப் பாடினார். இக்கவிதையை பேராசிரியர் சுட்டிக்காட்டி சயங்கொண்டாரின் கல்விப் பெருக்கையும், கலையுணர்ச்சியையும் வெகுவாகப் புகழ்கின்றார்.

> **சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை**
> **இகல்வெல்லல் யார்க்கும் அரிது (குறள். 647)**

என்ற குறளுக்கு தகுந்த சான்றாக விளங்கும் பேராசிரியரின் சொலல்வன்மையும், கூறவந்த செய்தியை தொடக்கம் முதல் இறுதி வரை கருத்திலும், அதை எடுத்துச் சொல்லும் முறையிலும் எந்தவித சோர்வுமின்றி எடுத்துரைத்தப் பாங்கும் உண்மையில் வியப்பை தருவதாக அமைகின்றது.

### முடிவுரை

இல்லது இனியது நல்லது என்று புலவரால் படைத்துக் காட்டப்பெறும் அகத்திணை உலகம் போல, சயங்கொண்டாரும் தன் கற்பனையாற்றலால் தமது இலக்கியத்திற்கு அணி

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சேர்த்து இருப்பதை பேராசிரியர் தமது சொற்பொழிவில் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார். பரணி நூலுக்கான பெயர்க் காரணத்தை தான் கற்றதையும் பெற்றதையும் கொண்டு தமது ஈடு இணையற்ற சொல்வன்மையால் விரித்துரைக்கும் பாங்கு சிறப்புடைத்து. சயங்கொண்டார் பரணி நூலை இயற்றியமைக்காக பெற்ற பரிசினை சுவைப்பட எடுத்தோதிய தன்மை அவர்தம் கற்பனையாற்றலையும், நகைச்சுவை உணர்வினையும் அறிய துணைச் செய்கின்றது. கடைத் திறப்பு பகுதி பற்றிய இருவேறு கருத்துகளை எடுத்துக் கூறி இரண்டில் எது ஏற்கத்தக்கது என்பதை தகுந்த மேற்கோள் காட்டி விளக்கியமை பேராசிரியரின் உள்ளார்ந்த நூலறிவையும், உலகத்துப் பொது அறிவையும் உணர்த்துகின்றது. சோழ மன்னர்களின் பரம்பரை பற்றிய பேராசிரியரின் பார்வை அவர்தம் வரலாற்றுப் பேரறிவிற்குச் சான்றாக அமைகின்றது. பரணிக் காட்டும் சுவைகள் பற்றி குறிப்பிடுமிடுத்து மேனாட்டார் கொள்கையோடு ஒப்பிட்டு காட்டிய தன்மை அவர்தம் பன்மொழிப் புலமைக்குச் சான்றுகளாகும்.

**குறிப்பு நூல்கள்**

[1] இளம்பூரணம். *தொல்காப்பியம் பொருளதிகாரம்.* தமிழ்மண் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

[2] சயங்கொண்டார். *கலிங்கத்துப்பரணி.* சந்தியா பதிப்பகம், மறுபதிப்பு, 2003.

[3] சுப்புரெட்டியார். ந. *கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி.* செல்வி பதிப்பகம், காரைக்குடி, முதற்பதிப்பு, 1957.

[4] சுப்புரெட்டியார். ந. *பரணிப் பொழிவுகள்.* ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக்கழக வெளியீடு, முதற்பதிப்பு, 1992.

[5] துரைசாமிப்பிள்ளை. சு. ஔவை. *தமிழ் நாவலர் சரிதை.* சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1949.

[6] பிள்ளை.கே.கே. *தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்.* உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 2002.

[7] புலியூர்க் கேசிகன். *திருக்குறள்.* பூம்புகார் பதிப்பகம், சென்னை, 26ம் பதிப்பு, 2009.

[8] வைரமுத்து. *செயங்கொண்டன் களங்கண்ட கவிஞன். இந்து தமிழ் திசை,* 13 ஜூன் 2018 அன்று அணுகப்பட்டது. www.hinhutamil.in/news/opinion/columns/136488-3.html

**References**

[1] Elampuranam. *Tholkappiyam Porulathikaram.* Thamizhman Pathipagam, Chennai, First Edition, 2003.

[2] Jayankondaar. *Kalingathu Parani.* Sandhiya Pathipagam, Reprint, 2013.

[3] Dr. N. Subbu Reddiar. *Kalingathu Parani Aaraichi.* Selvi Pathipagam, Karaikkudi, First Edition, 1957.

[4] Dr. N.Subbu Reddiar. *Paranip – Polivukal.* Sri Venkateswara University, First Edition, 1972.

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[5] Avvai Duraisamy Pillai. *Thamizh Navalar Sarithai.* Saiva Siddantha Noorpathipu Kazhagam, Chennai, First Edition, 1949.
[6] K. K. Pillai. *Thamizhyaga Varalarum Makkalum Panpadum.* International Institute of Tamil Studies, Chennai, Reprint, 2002.
[7] Puliyoor Kesigan. *Thirukkural.* Poompuhar Pathipagam, Chennai, 23rd Edition, 2009.
[8] Vairamuthu. *Jayankondan Kalankanda Kavinan.* Hindu Thamizh Thisai, www.hinhutamil.in/news/opinion/columns/136488-3.html Accessed 23 June 2022.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இக்கட்டுரையை எழுத வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் அறக்கட்டளையினருக்கும் தமிழ் மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust and IJTLLS for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் – வள்ளுவர் பார்வையில் அறக்கோட்பாடுகள்

## Ethics in the View of Perasiriyar - Valluvar

**முனைவர் மோ. ரூபா,** உதவிப்பேராசிரியர், முதுகலைத்தமிழியல் (ம) உயராய்வுத்துறை,
செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. M. Roopa,** Assitant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0003-0374-4235**
**DOI: 10.5281/zenodo.7275602**

### Abstract

*Aram is the first of the four ethical virtues in Tamil society. The virtues are namely Aram, Porul, Inbam and Veeduperu. Our ancestors have made Aram a priority because Aram thrives in this world and if a man becomes honourable, Porul and Inbum will automatically come to Veeduperu. Perasiriyar Subbu Reddiar explains that Aram transcends the sensual pleasures of life and wealth, which can be equated to God. According to Perasiriyar, good deeds and good thoughts are all considered Aram. Perasiriyar stands in the way of Valluvar, he explains that those who attain the highest state of eliminating their births and deaths by dependence on the Lord are the ones who stand on the path of the Lord, both in terms of thought, rationality and virtue. That is in the essence of belonging without showing any difference to other earthly beings. The one who owns it is Anthanar. Also, Perasiriyar emphasises Aram through Valluvar's way and insists that an unvirtuous person who is selfish cannot become Anthanar. Perasiriyar's explanation for each Kural in the Aran Valiyuruthal Athikaram comes with thought-provoking and insightful ideas that are to be entrenched in our hearts. Perasiriyar also explains that the pleasures that can come from Aram are true. It is the only way to live a virtuous life. It is the way to work for the good of others and to live a virtuous life through the examples of Valluvar. Perasiriyar describes the banana tree as an example of Aram and explains the nature of Aram and its significance such as gratitude, charity, humbleness, respect and obedience towards elders in a clear manner. The purpose of this research article is to analyse how Perasiriyar has explored and explained the general principles that are acceptable to all, such as Valluvam.*

**Keywords:** Ethics, View, Perasiriyar – Valluvar.

### ஆய்வுச்சுருக்கம்

*அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகை உறுதிப்பொருட்களில் முதலில் வைத்து போற்றப்படுவது அறம். இவ்வுலகில் அறம் தழைத்தோங்கி மனிதம் மாண்புற்று விளங்கினால் பொருளும், இன்பமும் தாமாகவே கிடைக்கப்பெற்று வீடுபேற்றிற்கும் வழிவகுக்கும் என்பதனாலேயே நம் முன்னோர்கள் அறத்தை முதன்மைப்படுத்தி வைத்துள்ளனர். உயிர் உணர்ச்சிகளாகிய பாலுணர்ச்சி இன்பம், செல்வம் இவ்விரண்டுக்கும் அப்பாற்பட்டு இதனை நெறிப்படுத்துவதாய் அமைவதே அறம் என்று பேராசிரியர் அறத்திற்கு விளக்கம் அளிக்கிறார் அறத்தை தெய்வ நிலையில் வைத்து போற்றுகிறார். நல்ல செயல்கள், நற்சிந்தனைகள், நற்கடமைகள் எல்லாமே அறச்செயல்கள் தாம் என்பது பேராசிரியர் கருத்து. இறைவனைச்*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*சார்ந்து தம் பிறப்பு இறப்புகளை நீக்கிக் கொள்ளும் உயர்ந்த நிலையை பெறுபவர்களே மேல்நிலையில் நிலைத்து வாழ்பவர்கள் என்பதை வள்ளுவர் வழி நின்று விளக்கும் பேராசிரியர் கோயில், இறைவன் ஆகிய இரண்டிற்கும் சிந்தனை நோக்கிலும், பகுத்தறிவு நோக்கிலும், அற நோக்கிலும் விளக்கமளித்துள்ளார். எவ்வுயிருக்கும் வேற்றுமை காட்டாமல் செந்தண்மை பூண்பதே அந்தண்மை. அதனை உடையவரே அந்தணர். இத்தகைய அறச்செய்கை அல்லாதவர் தன்னலப் பற்று கொண்டவர், நீத்தார் அல்லாதவர் அந்தணர் ஆகார் என்று புதுமையான நெறியில் கருத்தை தெரிவித்து வள்ளுவர் வழியில் அறத்தை வலியுறுத்தியுள்ளார் பேராசிரியர். அறன்வலியுறுத்தல் என்ற அதிகாரத்தில் வரும் ஒவ்வொரு குறட்பாவுக்கும் பேராசிரியர் தரும் விளக்கங்கள் அனைவரின் சிந்தனையையும் தூண்டி, ஆழ்மனதில் பதியத் தக்கன. அறத்தினால் வரக்கூடியதே முழுமையான இன்பம் எனவும், மற்ற எந்த செயல்களாலும் வரக்கூடிய இன்பங்கள் போலித் தன்மை உடையன என்றும் பேராசிரியர் விளக்குகிறார். தானும் அறநெறியிலிருந்து வழுவாது மற்றவர்களையும் நல்வழியில் வாழ செய்வது தான் இல்லறம் என்றும், அறத்தைப் போற்றி வாழ்வது தான் இல்வாழ்க்கையின் பயன் என்றும் அறக்கோட்பாடுகளை வள்ளுவரின் சான்று வழி புலப்படுத்தியுள்ளார். அறத்துக்கு ஒரு மரம் என்று வாழை மரத்தைக் குறிப்பிட்டு அதன் இயல்பையும், சிறப்பையும் புதுமையான நோக்கில் விளக்கியுள்ளார் பேராசிரியர். நன்றி மறவாமை, ஈகை, துறவு, கல்வி, கேள்வி, பெரியார் சொற்கேட்டல், பெரியாரை மதித்தல், ஆக்கம் போன்ற பல்வேறு வாழ்வியல் அறக்கோட்பாடுகளை வள்ளுவர் வழி நின்று விளக்கினாலும் பேராசிரியர் தமக்கே உரிய சிறப்புத் தன்மையில் நுணுகி ஆராய்ந்து வள்ளுவம் எங்ஙனம் பொதுமறையாக விளங்குகிறதோ அதுபோல அனைவருக்கும் ஏற்கத்தக்க பொதுவான அறக்கோட்பாடுகளை விளக்கியுள்ளார். அதனை ஆய்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.*

**குறிப்புச் சொற்கள்**: பேராசிரியர் – வள்ளுவர், பார்வை, அறக்கோட்பாடுகள்.

## முன்னுரை

உயர்தனிச் செம்மொழியாகத் திகழ்வது நம் தமிழ்மொழி. இதில் பல்வேறு இலக்கியங்கள் தோன்றி கால மாற்றங்களுக்கு ஏற்றாற்போல சில நிலைத்தும் சில மறைந்தும் போயின. சாதி, சமய வேறுபாட்டை பறைசாற்றும் விதமாக அமைந்த இலக்கியங்கள் அனைவராலும் ஏற்றுக்கொள்ளத்தக்க கருத்துக்களை அளிப்பதில்லை. அனைவருக்கும் பொதுவாக, முக்காலத்துக்கும் ஏற்கத்தக்கதாக வாழும் நெறிமுறைகளை தெள்ளென விளக்கும் இலக்கிய நூல் திருக்குறள். ஆதலால் தான் இது பொதுமறை என்று போற்றப்படுகிறது. திருக்குறள் தமிழில் தோன்றிய தலைசிறந்த அறநூல்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**திருக்குறள் மக்கள் சமுதாயத்திற்கு அறநெறியை உணர்த்துகின்ற அறநூலாகவும், தவம் செய்யும் துறவிகளுக்கு அறநெறி உணர்த்துகின்ற ஞான நூலாகவும், அரசனுக்கு அரசியல் நெறி, செங்கோண்மை பற்றி விளக்கிக் கூறுகின்ற அரசியல் நூலாகவும், பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை என்று பொருளின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகின்ற பொருளியல் நூலாகவும், உலக அரங்கில் கல்வியை இயக்கமாக்கி கற்க என்று ஆணையிட்ட கல்வி நூலாகவும், அறிவுடையார் எல்லாம் உடையார் என்று அறிவை முதன்மைப்படுத்திய அறிவியல் நூலாகவும், சமய நெறிகளுக்குரிய அடிப்படை உரிமைகளைக் கூறுகின்றமையால் அறநூலாகவும், காதல் இருவர் கருத்து ஒருமித்து வாழும் மனையற நெறிகள் பேசுகின்றமையால் குடும்பவியல் நூலாகவும் அமைந்திருப்பதை பெருமையோடு குறிப்பிடுவதற்குரிய பேறு பெற்றவர்களாக தமிழர் திகழ முடிகிறது. (விக்னேஸ்வரி. திருவள்ளுவரின் எதிர்காலவியல் அணுகுமுறை விளக்கம். ப. 146)**

அறம், பொருள், இன்பம் ஆகிய உறுதிப்பொருட்களை முப்பாலாக அமைத்து பாடப்பட்டது திருக்குறள். முப்பொருளும் முப்பாலாகப் பாடப்பட்டாலும் அறமே முதன்மைப் பொருளாக வைத்து திருக்குறள் பாடப்பட்டிருக்கிறது. இதிலிருந்து அறமே அனைத்திற்கும் ஆதாரம் என்பது புலனாகிறது. திருக்குறளைப் பற்றி பலரும் பல்வேறு ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர். பேராசிரியர் ந. சுப்புசெட்டியார் அவர்கள் திருக்குறளில் சொல்லப்பட்டிருக்கும் வாழ்வியல் நெறிமுறைகளையும் அறக்கருத்துக்களையும் தொகுத்து 'வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்' என்ற நூலை எழுதியுள்ளார். அந்நூலை மையாக வைத்து திருவள்ளுவர் வழி பேராசிரியர் கூறிய அறக்கோட்பாடுகளை ஆய்வு செய்வதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

**அறம் என்னும் சொல்லாட்சி**

அறம் என்ற சொல் நற்சிந்தனை, நற்செயல் என பல்வேறு பரிமாணங்களில் பிரதிபலிக்கக் கூடியது. அறம் என்ற சொல் குறித்து பல்வேறு ஆய்வறிஞர்களும், இலக்கியவாதிகளும் தங்கள் எண்ணத்தில் பரிணமித்த பல்வேறு கருத்துக்களை பதிவு செய்துள்ளனர். எண்ணம், சொல், செயலால் மற்றவர்களுக்கு துன்பம் தராமல் வாழும் வாழ்க்கையே அற வாழ்க்கையாக கொள்ளப்படுகிறது.

**அறம் என்றால் கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை என கழகத் தமிழகராதி விளக்கம் அளிக்கிறது. (கழகத் தமிழ் அகராதி, ப. 60)**

செய்கின்ற கடமையாக இருந்தாலும், தருமமாக இருந்தாலும், கற்பு நிறைந்த வாழ்க்கையாக இருந்தாலும், அன்பு நிறைந்த இல்லற ஒழுக்கமாக இருந்தாலும், மேன்மை பொருந்திய துறவு நிலையாக இருந்தாலும் உயிர்களுக்கு நன்மை பயக்கக் கூடிய எதுவும் அறமாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**உயிர் உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டு, அவைகளைக் கடந்து, அவற்றை நெறிபடுத்துவதே அறம் என பேராசிரியர் அவர்கள் விளக்கமளிக்கிறார். (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள். ப. 5)**

மனிதன் கண், காது, மூக்கு, வாய், தொடு உணர்வு என்னும் ஐம்புலன்களையும் அடக்கி உணர்ச்சிகளுக்கு ஆட்படாமல் நெறிமுறையோடு வாழ்வதே அறம் என்று பேராசிரியர் குறிப்பிடுவதை அறிய முடிகிறது.

**அறம் என்பது ஒழுக்கம், கடமை, ஈகை என்ற மூன்றும் இணைந்த வாழ்க்கை நெறி. ஒழுக்கம் என்பது தனக்கோ பிறருக்கோ தற்காலத்திலோ, பிற்காலத்திலோ உடலுக்கோ, மனதிற்கோ நன்மை தரக்கூடிய எண்ணம், சொல், செயல் என மாத்துறவி கூறுவார். (செ. கணேசன். திருக்குறளில் அறம். 2018)**

அறம் என்பது முக்காலத்திலும் மனதாலோ, செயலாலோ, பேச்சாலோ நன்மை தரக்கூடியதாக இருக்க வேண்டும் என்பதை ஆய்வாளர்கள் கருத்து உறுதிப்படுத்துகிறது. பல்வேறு காலங்களில் வாழ்ந்த தவயோகிகளும், தத்துவஞானிகளும் அறம் என்பதற்கான விளக்கங்களை தாங்கள் அறிந்த அனுபவத்தின் சாரங்களாக வெளிப்படுத்தியுள்ளனர்.

**அன்னமிடல் முதலிய முப்பதிரண்டு வகை அறமுறைகளைக் கூறுதல் ஒரு மரபு. ஓர் ஏழைக்கு எழுத்து அறிவித்தல் புண்ணியம் தரும் புது அறம் என்று பாடுகிறான் பாரதி. பிறர் உள்ளத்தைத் தூண்டாத அளவுக்கு உடுப்பதும் அணிவதும் அறமாகும் என்ற இக்காலத்திற்கேற்ற அறத்தை அறிவித்தார் அறிஞர் மு.வ. எது அறம் என்ற வினாவுக்குரிய விடை, இடம் தோறும் வேறுபடும், காலம்தோறும் மாறுபடும். ‘அறம்’ என்பதற்கு வள்ளுவர் புதுவிளக்கம் தருகிறார். அது என்றும் மாறாதது. எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கது. (திருக்குறள் சிந்தனைகள், ப. 53. ) .**

எதிலும் புதுமைக் காண்பவன் பாரதி அதனால் தான் அறச்செயல்களில் புதுமைக் கருத்தை தெரிவித்துள்ளான். ஆடை அணிவதில் கூட அறமுறை பின்பற்றப்பட வேண்டும் என்று மு.வ. அவர்கள் கூறியுள்ளமை புலப்படுகிறது. ஆகையால் உண்ணும் உணவு, உடுக்கும் உடை என எல்லாவற்றிலும் அறமுறை கடைப்பிடிக்க வேண்டும் என்பதை அறிய முடிகிறது.

**இன்றைய மனித சமுதாயத்தில் ஆடம்பரமும், வறட்டுக் கௌரவமும், சாதியும் மதமும் மக்களுக்குள்ளும், மக்கள் மனங்களுக்குள்ளும் பிளவுகளை உண்டாக்கிக் கலவரங்களைத் தூண்டி வன்முறைக்கு வித்திட்டு மனித உயிர்களைப் பறிக்கும் தீயசக்திகளாக உருவாகி வருகின்றன. மனிதரிடத்தில் அன்பை வளர்ப்பதற்கு மாறாகப் பகையை உருவாக்கிப் பயன்பெறுகின்றன. இத்தகைய சூழலில் பிறர் அன்பு பேணி அயலார்க்கு நாம் உதவ வேண்டும் என்பதை,**

**அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**தம்நோய்ப்போல் போற்றாக் கடை**

**என்று விளக்கியுள்ளார் வள்ளுவர். (தன்னில் பிறரைக் காட்டும் பைந்தமிழ்க் குறள், பக். 62, 63)**

இன்றைய சமுதாயத்தில் சாதி மத பேதங்களைக் காரணங்காட்டி சண்டைகளும், சச்சரவுகளும், போராட்டஙகளும், வன்முறைகளும் மக்களிடையே பிளவினை ஏற்படுத்தியுள்ளமையை நாம் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் அன்பில்லாத் தன்மையே ஆகும். அன்பு என்ற அறம் இருந்தால் போதும் நன்மை நடக்கும். ஒற்றுமை ஓங்கும். சமுதாயம் முன்னேறும். எனவே அறத்தினை கடைப்பிடிக்க வேண்டும் என்ற நம் முன்னோர்களின் கருத்தை பின்பற்றுவோம்.

**பலருக்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு, பல உயிர்களையும் கொல்லாமல் காப்பாற்றுவதே அறநூலோர் அறங்கள் அனைத்திலும் சிறந்த அறமாகும். என்று வள்ளுவர் வழி நின்று சாமி. சிதம்பரனார் கருத்து தெரிவித்துள்ளார். (பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும், ப. 178.)**

தன்னிடம் இருப்பதை மற்றவர்களுக்கு பகிர்ந்துக் கொடுத்தல், பிற உயிர்களுக்கு தீங்கு செய்யாதிருத்தல், மனதளவில் கூட ஒருவருக்கு தீங்கு செய்ய நினையாமை இவையெல்லாம் சிறந்த அறங்களாக சான்றோர்கள் குறிப்பிடுகின்றனர்.

**ஒருவன் தன் மனத்தில், சிந்தனையில் தீய எண்ணங்கள் நீங்கி குற்றம் இல்லாத் தூய்மையுடையவனாகயிருக்க வேண்டும். அதுவே அறம் (திருக்குறளில் இல்லறமும் இறைமைக் கோட்பாடும், ப. 17.)**

என்று வள்ளுவர் வழி நின்று விளக்குகிறார் முத்துராமன் அவர்கள். தூய்மையான மனத்துடன் செய்யப்படுவனவே 'அறம்' என்று கூறுகின்றது குறள்.

**மனத்தூய்மை இல்லாமல் எவ்வளவு பெரிய அறத்தைச் செய்தாலும் அதனால் பயன் ஒன்றும் இல்லை. அது வெற்று ஆடம்பரத்தின் பாற்படும் என்று அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். (குறள் கண்ட வாழ்வு, ப. 28)**

இங்ஙனம் பல்வேறு ஆய்வாளர்கள் திருக்குறளைப் பற்றி ஆராய்ந்து திருக்குறளில் கூறப்பட்டுள்ள அறம் என்ற சொல்லுக்கான விளக்கத்தை அளித்துள்ளனர்.

**அறம் என்பது யாது? செயலா? சொல்லா? எண்ணமா? என்பது ஒரு வித ஐயம். வள்ளுவர் பெருமான் இம்மூன்றும் அடங்கியதேயாகும் என்ற கருத்துடையவர். (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.30.)**

என்று பேராசிரியர் அறம் என்ற சொல்லுக்கு விளக்கம் அளிக்கிறார்.

**வள்ளுவர் வழியில் பேராசிரியர்**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் சிறந்த வாசிப்பாளர், எழுத்தாளர். அதனால்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

தான் திருக்குறளை நன்றாக முழுவதுமாக வாசித்து அதை மூச்சாக சுவாசித்து வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் என்னும் நூலை இயற்றியுள்ளார். கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் கருத்துக்களை நயமானமுறையில் புதுமையான கண்ணோட்டத்துடன் பேராசிரியர் விளக்கியுள்ளார்.

**உருவ வடிவான கடவுளை எண்ணத் தொடங்கிய மனமும் சிறந்த உருவம் ஒன்றைத் தேடிக் கொள்கிறது. இந்த இயல்பை நன்கு உணர்ந்த வள்ளுவர் பெருமான் 'தொழுதல்' என்று குறிக்கும் போது உருவவழிபாட்டைச் சுட்டும் போக்கில் 'நற்றாள்' என்று கூறியுள்ளமையும் சிந்திக்கத் தக்கது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.12.)**

இதனை,

**கற்றதனால் ஆள பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழார் எனின். (குறள். 2)**

என்ற குறள் வழி அறியலாம். பக்தி இலக்கியம் காலம் தொடங்கி இக்காலம் வரை கடவுளைப் பற்றிய பல்வேறு கருத்து மாற்றங்கள் வந்த வண்ணம் உள்ளன. உருவ வழிபாட்டை பின்பற்ற வேண்டும் என்று சொல்பவர் சிலர், உருவ வழிபாடே வேண்டாம் அருவ வழிபாடே போதும் கடவுள் எப்பொருளிலும் நீக்கமற நிறைந்திருப்பவர் என்று மறுப்பவர் சிலர். இப்படி பலகாலமாக கடவுட்கொள்கைகள் மக்களை தன்வயப்படுத்த முனைந்துள்ளன.

**உருவ வழிபாட்டைப் பற்றி கூறினாலும் கடவுள் ஒருவரே. அவரை அடுத்து இரண்டாவதாக உள்ளவர்கள் எவ்வளவு பேராற்றல் உடையவராகப் பெரிய அவதாரங்களாக, பெரிய குருமார்களாகப், பெரிய தேவர்களாக எவராக இருந்தாலும் அவர்கள் எல்லாரும் உயிரினங்களே.(வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 16.)**

என்ற கடவுள் கொள்கையை வள்ளுவர் வழி நின்று புலப்படுத்துகிறார் பேராசிரியர்.

**பேராசிரியரின் புதுமைக் கண்ணோட்டம்**

பேராசிரியர் அவர்கள் திருவள்ளுவரின் வழியில் வாழ்வியல் சிந்தனைகளையும் அறக்கோட்பாட்களையும் எழுதினாலும் அவற்றை புதிய கண்ணோட்டத்துடன் அணுகி ஆராயும் பாங்கு சிறப்பிற்குரியது. கடவுள் உண்டு என்று சொல்லும் பேராசிரியர் அவர்கள் கடவுளின் பெயரால் செய்யப்படும் சில செயல்களை பகுத்தறிவு நோக்கோடு புலப்படுத்தியிருக்கிறார்.

**மக்களுடைய பக்தி உண்ணும், பருகும் உணவுப் பொருள்களை பால், தயிர், பஞ்சாமிர்தம் போன்றவற்றை அபிடேகப் பொருள்களாக்கிப்பது தான் பகுத்தறிவுடன் சிந்திப்பவர்கட்கு விளங்காப்புதிர்களாகவே உள்ளன. நாட்டில் ஆயிரக்கணக்கான பெரிய, சிறிய கோயில்களில் அபிடேகப் பொருள்களாக வீணாவதைக் காண அருள் நெஞ்சு பொறுக்க முடியாத நிலையை உண்டாக்குகின்றது. இவற்றை**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

> **நைவேத்தியமாகப் படையல் பொருள்களாக்கி பக்தர்கட்கும் ஏழை பெருமக்களுக்கும் வழங்கலாமே என எண்ணத் தோன்றுகின்றது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.17.)**

எனப் பேராசிரியர் உரைப்பதிலிருந்து அவருடைய பக்தியிலும் அறத்தன்மையைக் கடைப்பிடிக்கும் அவருடைய பாங்கு நயமுற விளங்குகின்றது. இன்றும் பல்வேறு கோயில்களில் அபிடேகப் பொருட்களான பால், தயிர், பழங்கள், உணவுப் பொருட்கள் யாவும் கீழே வீணாவதை நாம் காண முடிகிறது. இதை பார்க்கும் ஒவ்வொருவரும் அவரவர் மனதில் நினைக்கும் எண்ணங்களின் அடிப்படையில் அறமானது முகிழ்க்கிறது. அங்கு ஊற்றப்படுவது பக்தி கண்ணோட்டத்தில் பார்க்கும் போது அது அபிடேகப் பால். அதையே அறவழியில் பகுத்தறிவோடு நோக்கும் போது அது ஒரு ஏழைக்குழந்தையின் உணவு என்பதை பேராசிரியர் உரை வழி நம்மால் உணர முடிகின்றது.

> **வள்ளுவர் மனிதன் செய்ய வேண்டுவது சமயச்சடங்கு கடவுள் வழிபாடு என்பதைக்கூட வற்புறுத்தவில்லை ஆனால் அறம் தொண்டு என்கிறார். (திருக்குறளும் உலகச் சமய தத்துவங்களும், ப. 128)**

வள்ளுவர் அறம் செய்வதே கடவுள் வழிபாடு. மற்றவருக்கு உதவி செய்வதே கடவுளை நாம் அடையும் வழி என்று கூறியுள்ளதை அறிய முடிகிறது. இறைவனின் அருளைப் பெறுவதற்கு பெரிதும் துணையாக இருப்பது அறமே என்பதை வள்ளலாரும் குறிப்பிட்டுள்ளார்.

> **இறைவனின் அருளைப் பெறுவதற்கு அறமே துணையாக நிற்கவல்லது என்பது வள்ளலாரின் கொள்கை.(த. குருநாதன். நா. சாந்தகுமாரி. வள்ளலாரின் வாழ்வியல் நெறி, ப. 890)**

> **அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்**
> **செந்தண்மை பூண்டுஒழுக லான் (குறள். 30)**

என்ற குறட்பாவில் அந்தணர் என்ற சொல்லுக்கு வள்ளுவர் வழிநின்று பேராசிரியர் தரும் விளக்கம் நோக்கத் தக்கது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் அறவோர் ஆகின்றார். இதிலிருந்து ஓர் அழகிய உண்மையை நாம் உன்னி அறியலாம். எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுதலே . அது எவ்வுயிரினிடத்தும் வேற்றுமை காட்டாமல் செந்தண்மை பூண்பதே அந்தண்மை. அதனை உடையவரே அந்தணர். இத்தகைய அறச்செய்கை அல்லாதவர், தன்னலப் பற்று அறாதவர், நீத்தார் அல்லாதவர் அந்தணர் ஆகார் என்று பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதே கருத்தை கா. கோவிந்தனார் அவர்களும் தம்முடைய **(வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி பக். 48, 49)** என்ற நூலில் குறிப்பிட்டுள்ளமை அறிய முடிகிறது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

திருக்குறள் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றியிருந்தாலும் இக்காலத்திற்கும் ஏற்ற புதுமைக் கருத்துக்கள் அதில் நிரம்பியுள்ளன.

> **வயதால் மூத்தவரைப் பெரியவர் என்பது உலக வழக்கு. ஆனால், வள்ளுவர் காட்டும் பெரியவர் 'வயது' என்ற அளவுகோலுக்கு ஆட்படவில்லை. அவர், செயற்கு அரிய செய்வார் பெரியர்,(கு.26) என்ற புதுக்கருத்தைக் கூறுகிறார்.(திருக்குறள் சிந்தனைகள், பக். 52, 53.)**

என்று மலையமான் வள்ளுவரின் புதுமைச் சிந்தனைகளை விளக்குகின்றார். வள்ளுவரின் வழியில் வாழ்ந்த பேராசிரியர் அவர்களும் வள்ளுவரின் கருத்துக்களில் புதுமைக் கண்டவர்.

**வள்ளுவர் வழியில் பேராசிரியரின் அறக்கருத்துகள்**

அறம் என்பதை இல்லறம், துறவறம் என இரண்டாகப் பிரித்து வள்ளுவப் பெருந்தகை தனி அதிகாரமே வகுத்தளித்துள்ளார். அறத்தைப் பின்பற்றி வாழ்வது தான் இல்வாழ்க்கையின் பயன் என்று குறிப்பிட்டுள்ளார். பேராசிரியர் அவர்கள் வள்ளுவரின் கருத்தை தமக்கே உரிய நடையில் புலப்படுத்துகிறார். இதனை,

> **மற்றவர்களையும் நல்வழியில் வாழச் செய்து தானும் அறநெறியிலிருந்து தவறாமல் வாழவல்லது இல்வாழ்க்கை. ஆகையால் தாம் மட்டிலும் நன்மை அடைவதற்காக தவம் செய்வோரின் (துறவற) வாழ்க்கையைவிடப் பிறர் நலம்கருதிய இல்வாழ்க்கையே சிறந்தது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.37.)**

என்ற கருத்தால் அறிகிறோம். இல்வாழ்க்கை என்பது கணவன் மனைவி இருவரும் கருத்தொருமித்து வாழும் இல்லற வாழ்க்கை என்று மட்டுமே அறிந்த நமக்கு பேராசிரியர் புதுமையான கருத்தை விளக்கியுள்ளார். மற்றவர்களையும் நல்வழிப் படுத்தி நாமும் நல்வழியில் நடந்து அறத்தோடு வாழ்தலே இல்லறம் என்ற உண்மை புலப்படுகிறது.

> **இடது கண்ணில் வலி வந்தால் வலது கண்ணும் கலங்குவது போல மனைவியின் சுக துக்கங்களில் பங்கெடுக்கும் தலைவனே மிகச் சிறந்த இல்லாளன் ஆவான். (ப. விக்னேஸ்வரி. திருக்குறள் கூறும் இல்லாளின் மாண்புகள். ப. 4).**

மனைவியை வெறும் வீட்டு வேலை செய்கின்ற இல்லாளாகப் பார்க்காமல் அவளுக்கும் உணர்வுகள் உண்டு. அவளுக்கென்று ஆசைகள் உண்டு. அவளுக்குகென்று சுயமரியாதை உண்டு என்பதை நன்றாக புரிந்து அறவழியில் ஒரு கணவன் நடக்கும் போது அந்தக் குடும்பம் சிறப்புற்று இருக்கும். மனைவி என்பவள் கட்டிலறைக்கும் சமையலறைக்கும் ரன்கள் எடுத்தெடுத்தே ரணமாகிப் போனாள் என்ற வைரமுத்துவின் வரிகள் இங்கு நோக்கத்தக்கது. வைரமுத்து கூறுவதைப் போல் அல்லாமல் அல்லாளன் மனைவியின் இன்ப துன்பங்களில் பங்கெடுக்க வேண்டும் என்பதும் அதுவும் மிகச்சிறந்த அறம் என்பதும் அறிய முடிகிறது.இத்தகைய சிறந்த,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**அறத்தின் அடிப்படையில் அமைந்து, அன்பு வழியில் வளரும் இன்பப் பூங்காவெனும் இனிய வாழ்க்கையில் மலரும் மலர்களே குழந்தைகள். (திருக்குறளில் இல்லறமும் இறைமைக் கோட்பாடும், ப. 12.)**

என அறத்தின் வழியில் இல்வாழ்க்கை அமைந்தால் நல்ல குழந்தைகள் பிறப்பர் என்பதனை திருக்குறள் வழி முத்துராமன் விளக்கியுள்ளதை அறியமுடிகிறது.

**பழி பாவமில்லாத பிள்ளைகளைப் பெற்றால் ஏழேழு தலைமுறைக்கும் தீமை அக்குடும்பத்தைத் தீண்டவே செய்யாது" என்ற யதார்த்த வாழ்வியல் அடிப்படையில் பொருள் தேடுவதன் மூலம் வள்ளுவரை உணர்ந்த அறிவியல் வாதியாக, அறவியல் ஞானியாக இனம் புரிந்து கொள்கிறோம்.(வள்ளுவர் கண்ட அறிவியல் , ப. 62)**

நல்ல இல்லறம் நடத்துவது மட்டும் அறம் அன்று. இந்த சமுதாயத்திற்கு பயனுள்ள வகையில் நல்ல புதல்வர்களைப் பெற்றெடுப்பதும் அறமாகும். நல்ல பிள்ளைகளைப் பெற்றால் ஒரு தலைமுறைக்கு மட்டுமல்லாமல் பல தலைமுறைகளுக்கும் நன்மை வந்து சேரும் என்பதை அறிய முடிகிறது. உலகில் தோன்றி மறைந்த பல்வேறு ஞானிகளும் தவயோகிகளும் துறவறமே அனைத்திலும் இன்பம் பயக்கக் கூடியது என்று உரைத்தாலும் மாபெரும் ஞானியான வள்ளுவர் துறவறம் முழுமை அடைய அடிப்படையாக இருப்பது இல்லறமே என்கிறார்.

**துறவறத்தை வள்ளுவர் இணையற்ற வாழ்க்கை நிலையாகக் கூறினாராயினும் இல்லறத்தையே நன்றாக விளக்கி இல்லறமே துறவுக்கும் உறுதுணையாக நிற்பது என்பதை நிலைநாட்டுகின்றார். என்று தனிநாயக அடிகள் தம் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.( திருக்குறள் பன்முக வாசிப்பு, ப. 37)**

உலகில் யாவரையும் சிந்திக்கத் தூண்டும் விதமாக பேராசிரியரின் கருத்துக்கள் அமைந்திருக்கும். அவ்வகையில் வாழை மரத்தின் இயல்பை அறத்தின் செயலாக கண்ணுற்று எழுதும் பேராசிரியரின் வரிகள் அவரின் பெருந்தன்மையை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன.

**வாழை ஏனை எல்லா உயிர்களையும் விட ஆறறிவும் அற உணர்வும் உடைய மக்கள் இனத்திற்கு பேருதவியாக இருத்தலால் உயர்ந்த இனத்துடன் சேரும் அருகதை உடையதாகத் திகழ்கின்றது. இத்தகைய பெருந் தகுதியை இயற்கையிலேயே பெற்றுள்ள வாழை மரம் மக்கள் இனத்திற்கு வேண்டிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு உறுதிப் பொருளுக்கும் உள்ளுறையாகத் திகழ்வதையும் குறிப்பாற் புலப்படுத்துகின்றது. (வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப. 66.)**

என்ற பேராசிரியர் அவர்களின் கருத்து மனித உயிர்களிடத்தில் மட்டுமல்ல மரங்களிலும் அறஉணர்வு இருப்பதை நமக்கு புலப்படுத்துகிறது. வாடியப் பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன். என்று வள்ளலார் அவர்கள் பயிர்களுக்கும் உயிர் உண்டு என்பதை பாடியுள்ளார்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

அதுபோல பேராசிரியர் அவர்கள் வாழைமரத்துக்கும் அறத் தன்மை உண்டு என்பதை புலப்படுத்துகிறார். உயிர்களிடத்தில் அன்று வேண்டும் , அற உணர்வு வேண்டும் என்று நம் சான்றோர் பெருமக்கள் கூறியது மனித உயிர்களிடத்தில் மட்டுமல்ல ஓரறிவு முதல் ஆறறிவு வரை உள்ள அனைத்து உயிரினடத்திலும் தான் என்பதை பேராசிரியரின் உரை வழி தெளிய முடிகிறது. வாழையின் வளர்ச்சி, அதன் பயன்பாடு ஆகியவற்றில் அமைந்திருக்கும் ஒரு ஒழுங்குமுறையையே பேராசிரியர் அறத்திறம் என்று போற்றுகின்றார். இது போலும் மனிதர்கள் எண்ணும் எண்ணங்கள், பேசும் வார்த்தைகள், செய்யும் செயல்கள் என எல்லாவற்றிலும் ஒழுங்கமைவு இருக்க வேண்டும் என்கிறார். அதுவே மிகச் சிறந்த அறமாகும்.

**முடிவுரை**

அறம் என்ற சொல்லாட்சியை பின்பற்றி பல தத்துவஞானிகளும் பல்வேறு கருத்துக்களை பதிவு செய்தாலும் அவற்றின் அடிப்படை ஒன்று தான் நல்லதையே நினைத்து நல்லதையே செய்ய வேண்டும். அதை வள்ளுவப் பெருந்தகை ஒரு அதிகாரமாகவே வகுத்தளித்துள்ளார். கடவுள் வாழ்த்து தொடங்கி அறன் வலியுறுத்தல், இல்வாழ்க்கை, விருந்தோம்பல், நடுவு நிலைமை, ஒழுக்கமுடைமை, பொறை, அழுக்காறாமை, புறங்கூறாமை, துறவு முதலான முப்பத்தெட்டு அதிகாரங்களாகப் பிரித்து மக்களின் வாழ்வியல் நெறிமுறைகளை தெவிட்டாத அமுதமாக அள்ளித் தந்துள்ளார் வள்ளுவப் பெருந்தகை. அவரின் அறக்கோட்பாட்டை பின்பற்றி பல்வேறு ஆய்வாளர்கள் ஆய்வுகளை மேற்கொண்டு தங்கள் கருத்துகளைப் பதிவு செய்த போதிலும் ந. சுப்புரெட்டியார் அவர்கள் பகுத்தறிவு நோக்கோடு புதிய கண்ணோட்டத்துடன் தம் கருத்துக்களை பதிவு செய்துள்ளார். மனிதன் வாழும் அறநெறிகளை வள்ளுவர் விளக்கினார். ஆனால் மரங்களுக்கும் அறத்தன்மை இருப்பதாக பேராசிரியர் விளக்குகின்றார். எனவே எண்ணம், சொல், செயல் என்ற மூன்றாலும் தனக்கும் பிறருக்கும் நல்லதையே நினைப்பது அறம் என்று இருவருமே கூறியுள்ளமை பேராசிரியர் நூல் வழி புலப்படுகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] ஞானசம்பந்தன். அ.ச. *குறள் கண்ட வாழ்வு*. கங்கை புத்தக நிலையம், சென்னை, முதல் பதிப்பு, 1994.

[2] கணேசன். செ. *திருக்குறளில் அறம்*. தமிழ்ப்பேழை, தமிழ் இலக்கியக் களஞ்சியம், இணையம். சனவரி 21, 2018 அன்று அணுகப்பட்டது. http://thamilpezhai.blogspot.com

[3] கழகப் புலவர் குழு. *கழகத் தமிழ் அகராதி*. திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதினான்காம் பதிப்பு, 1998.

[4] குருநாதன்.த. சாந்தகுமாரி.நா. “வள்ளலாரின் வாழ்வியல் நெறி.’ *நவீனத் தமிழாய்வு*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ* ISSN- 2321-984X, தொகுதி.8, எண். 3, ஜீலை - செப்டம்பர். 2020.

[5] கோவிந்தனார். கா. *வள்ளுவர் சொல்லாட்சி மாட்சி.* எழிலகம், செய்யாறு, முதல் பதிப்பு, 1991.

[6] கோவிந்தசாமி.மு. *திருக்குறளும் உலகச் சமய தத்துவங்களும்.* வாசுகி பதிப்பகம், சிதம்பரம், முதல் பதிப்பு, 1998.

[7] சிதம்பரனார். சாமி. *பதினெண்கீழ்க்கணக்கும் தமிழர் வாழ்வும்.* அறிவுப் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 2003.

[8] சுப்புரெட்டியார். ந. *வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்.* அவ்வை பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 2004.

[9] பாண்டியம்மாள். செ. "தன்னில் பிறரைக் காட்டும் பைந்தமிழ்க் குறள்." *தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்,* E-ISSN. 2581-7140. தொகுதி 2, வெளியீடு 2, சனவரி 2020.

[10] பிரகாஷ். வெ. (ப.ஆ). *திருக்குறள் பன்முக வாசிப்பு.* மாற்று பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 2009.

[11] மலையமான். *திருக்குறள் சிந்தனைகள்.* அன்புப் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 1997.

[12] முத்து. சு. வள்ளுவர் கண்ட அறிவியல். வானதி பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 1994.

[13] முத்துராமன். *திருக்குறளில் இல்லறமும் இறைமைக் கோட்பாடும்.* ஹை டெக் ஆப்செட் (பி) லிட், சென்னை, முதல் பதிப்பு, 1995.

[14] விக்னேஷ்வரி.ப. "திருக்குறள் கூறும் இல்லாளின் மாண்புகள்." *சர்வதேசத் தமிழ் ஆய்விதழ்,* E-ISSN- 2582-1113, தொகுதி.4, வெளியீடு3, 2022.

[15] விக்னேஸ்வரி. "திருவள்ளுவரின் எதிர்காலவியல் அணுகுமுறை விளக்கம்." *பன்முகப் பார்வையில் சமய இலக்கியங்கள்,* ISBN – 978-93-89658-83-5, *சான்லேக்ஸ் இதழ்* பதிப்பு, மதுரை, முதல் பதிப்பு, 2020.

## References

[1] Gnanasambandhan.A.Sa. *Kural Kanda Vazhu*. Gangai Book House, Chennai, First Edition, 1994.

[2] Ganesan.S. *Thirukuralil Aram.* Thamizh Pezhai, Ilakkiya Kalanjiyam, Inayam. Accessed on January 21, 2018. http://thamilpezhai.blogspot.com

[3] Kazhaga Pulavar Kuzhu. *Kazhaga Thamizh Agarathi.* Thirunelveli Thenindia Saiva Siddhandha Noorpadhippu Kazhagam, Chennai, Fourteenth Edition, 1998.

[4] Gurunadhan.T. Shanthakumari.N. "Vallalarin Vazhviyal Neri." *Journal of Modern Thamizh Research*, ISSN- 2321-984X, Volume.2, No.3, July-September. 2020.

[5] Govindhanar. Ka. *Valluvar Sollatchi Maatchi.* Ezhilagam, Cheyyar, First Edition, 1991.

[6] Govindhaswamy. Mu. *Thirukkuralum Ulaga Samaya Thathuvangalum*. Vasugi Pathippagam, Chidambaram, First Edition, 1998.

[7] Sidhambaranar.Saami. *Pathinen Keezhkanakkum Thamizhar Vazhvum*. Arivu Pathippagam,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

Chennai, First Edition, 2003.

[8] Subbu Reddiar.Na. *Valluvarin Vzhviyal Sindhanaigal*. Avvai Pathippagam, Chennai, First Edition, 2004.

[9] Pandiyammal. S. *Thannil Pirarai Kattum Pinthamizhkural*. *International Journal of Tamil Language and Literary Studies*, E-ISSN- 2581-7140, Volume.2, Issue.2, January 2020.

[10] Prakash.V. (Editor). *Thirukkural Panmuga Vaasippu*. Maattru Pathippagam, Chennai, First Edition, 2009.

[11] Malayamaan. *Thirukkural Sinthanaigal*. Anbu Pathippagam, Chennai, First Edition, 1997.

[12] Muthu. Su. *Valluvar Kanda Ariviyal.* Vanathi Pathippagam, Chennai, First Edition, 1994.

[13] Muthuraman. *Thirukkuralil Illaramum Iraimai Kotpadum*. Hitech Offset (P) Ltd, Chennai, First Edition, 1995.

[14] Vigneshwari. P. *Thirukkural Koorum Illalin Manbugal*. *International Research Journal of Tamil*, E-ISSN-2582-1113, Volume.4, Issue.3, 2022.

[15] Vigneshwari. "Thiruvalluvarin Ethikalaviyal Anugumurai Vilakkam." Panmuga Parvayil Samaya Ilakkiyangal, *Shanlax Publication*, Madurai, First Edition, 2020.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் பெரியாழ்வார் காட்டும் ஆன்மீகநெறியும் சமுதாயநெறியும்

## Spiritual and Social Ethics revealed by Professor's Periyazhvar

**முனைவர் ந. ஜெயசுதா**, உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,

நல்லமுத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி, பொள்ளாச்சி, கோவை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. N. Jayasudha,** Assistant Professor of Tamil,
Nallamuthu Gounder Mahalingam College, Pollachi, Coimbatore, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-0957-9229**

**DOI: 10.5281/zenodo.7275611**

### Abstract

*Periyazhvar is the natural name obtained by him for his contributions and devotion among the twelve alwars of Almighty Lord Vishnu. To express the devotion of Periyazhvar (Vishnu Sidhan), Prof. N. Suppuratiyar has published a book bearing his name which has disclosed many specialities on Periyazhvar. In modern life, from the birth of the child to death. everything is planned but they forget to put the credits. Mukunda Pattar and Padmavalliyamai of Sri Viliputhur named their son Vishnu Siddhan. He started to explore from his young days what kind of work and service he can do for Lord Vishnu. He set up a beautiful Nandavanam and prepared garlands for Tirumal every day. His books are "Tirupallandu" and "Periyazhvar Thirumozhi". Alwar lived till the age of 85. He finds Andal in his Nandavanam and says that she is the divine flower and belongs to Lord Vishnu. All this devotion to God paves the way to salvation. Nowadays, people fail to know the benefits of worship and the chances to accumulate with God. As a Professor, Subbu Reddiar got a great chance to know about the great value and happiness hidden in Vaishnavism and he dug out the secrets of the Tamil world. Professor shares that Periyazhvar has lived his life uniting him with God. He has recorded his ideas that make sense of the spiritual longings of Periyazhvar.*

**Keywords:** Spiritual, Social Ethics, Professor Periyazhvar.

### ஆய்வுச்சுருக்கம்

*எல்லாம் வல்லவிஷ்ணுவின் திருநாமத்தை இயற்பெயராகப் பெற்றவர் பெரியாழ்வார். விஷ்ணுசித்தன் என்ற பெரியாழ்வாரின் பக்தியை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் வெளிப்படுத்த, அவர் பெயர் தாங்கியே தன்நூலைப்படைத்துள்ளது மிகவும் சிறப்புடையது. இன்றைய காலகட்டங்களில் குழந்தை பிறந்தது முதற்கொண்டு இறுதிக்காலம் வரைக்கும் செலவுக்கணக்குகள் போட்டு வாழ்க்கையை முன்னேற்பாட்டுடன் வாழ்கின்றனர். ஆனால் வரவுக்கணக்குப் போட மறந்துவிட்டனர். இங்கு வரவு செலவுக்குத்தக்க புண்ணிய வரவாக இருக்க வேண்டும். ஸ்ரீவில்லிபுத்தூரில் பிறந்த தன்மகனை முகுந்தபட்டரும் பதுமவல்லியம்மையும் இறைவன் விஷ்ணுவைத் தம்சித்தத்தில் கொண்டிருக்க வேண்டி, விஷ்ணுசித்தன் என்ற பெயரைச் சூட்டியுள்ளனர். அப்பெயரைத்தாங்கியவர், இறைவனுக்குத் தான் என்ன பணிசெய்ய வேண்டும் என ஆய்ந்து தன்பணியை மேற்கொண்டவிதம், அழகிய*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

*நந்தவனம் அமைத்து திருமாலுக்கு நாள்தோறும் மலர்மாலை தொடுக்கும் பணியைச் செய்தவரும், பட்டர்பிரான் என்றவிருதையும் பெற்றவர். "திருப்பல்லாண்டு", "பெரியாழ்வார் திருமொழி" ஆகிய இரண்டு பிரபந்த நூல்களை எழுதியவர். 85 வயது வரை வாழ்ந்து தன் திருப்பணியைச் செய்துள்ளார். ஆண்டாளை தன் நந்தவனத்திலே கண்டெடுத்து இறைவன் கொடுத்த தெய்வமலர் என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாளை இறைவனுக்கே உரியதாக்குகின்றார். இதெல்லாம் இறைவன் மீது கொண்ட பக்தி. அதனால் முக்தியும் அடைந்தார் அன்று. இன்றைய பக்தியில் விரக்திதான் அதிகம். காரணம் வழிபடத் தெரியவில்லை. இறைவனோடு ஒன்றத் தெரியவில்லை. புராணங்கள் சொல்லும் கதைகளில் உண்மை பொய் தெரிவதில்லை. விவாதிக்கின்றோமே தவிர. அக்கதைகள் உணர்த்தும் பக்தியையும் வாழ்வியலையும் நம்வாழ்வோடு பொறுத்திப் பார்க்க தவறிவட்டோம் என்றே சொல்லலாம். இம்மையிலே மறுமைக்கும் உரிய செல்வத்தைத் தேடிக்கொள்ளும் வழி குறித்த வரலாற்றை படிக்கும் போது வைணவத்துள் பெரிதும் ஈடுபாடு இல்லாத நான் பேராசிரியரால் மிகுந்த மதிப்பும் மகிழ்ச்சியும் என்னுள் எழுகின்றது. இன்னும் பெரியாழ்வார் குறித்த தகவல்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகின்றது. பெரியாழ்வார் தன் வாழ்வோடு இறைவனை ஐக்கியப்படுத்தியே வாழ்ந்துள்ளார். அவர் வாழ்வைப் பேராசிரியர் படித்து உணர்ந்தவை பலவாகும். அதன் வழிப் பெறப்பட்ட கருத்துக்களையெல்லாம் ஒன்று திரட்டி நூலாக்கங்கள் செய்துள்ளார். அதன் வழிப்பட்ட ஆன்மீக சமுதாய நெறிகளை உணர்த்தும் கருத்துக்களை என்புலனின் உதவியோடு இவ்வாய்வில் பதிவு செய்ய விளைகிறேன்.*

**குறிப்புச்சொற்கள்:** பேராசிரியர் – பெரியாழ்வார், காட்டும், ஆன்மீகநெறியும், சமுதாயநெறியும்.

**முன்னுரை**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எழுதிய விட்டு சித்தன் விரித்த தமிழ் என்ற இந்நூலில் பெரியாழ்வாரின் பாடல்களையெல்லாம் தொகுத்தளித்துள்ளார். விஷ்ணுவின் பக்தரான பொ◌ியாழ்வாரின் இறைவனுடைய பெருமைகளையெல்லாம் எடுத்துப் பாடிய பாடல்களில் உள்ள சுவைபெரும் பகுதிகளையெல்லாம் வைணவப்பாங்கிலேயே கட்டுரையாக அமைத்துள்ளார் .சைவமும் வைணவமும் வேறு மதங்களாயினும் இரண்டுமே இவ்வுலகில் நிலைத்து நிற்கின்றன. சமுதாயத்தில் ஆன்மீக ஒழுக்கங்களை நிலைநிறுத்தவே சமயஇலக்கியங்களைப் பாடியுள்ளனர். அவ்வகையில் தமிழ் மொழித்துவத்தோடு அமைந்த இந்நூலில் ஆன்மீக சமுதாயக் கருத்துக்களைக் காண்பதாக இக்கட்டுரை அமைகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**ஆழ்வார்கள்**

ஆழ்வார்கள் என்பதற்குப் பொருளாகப் பல ஆய்வறிஞர்கள் விளக்கமளிக்கின்றனர். அவர்களுள் தேவநாதன், **தங்கள் பாசுரங்கள் மூலம் உலகவுயிர்கள் நலமாய்த்திகழவும், உயிர்களைப் படைத்த இறைவன் மகிழவும் தொண்டாற்றியவர்கள் ஆழ்வார்கள் (பன்னிரு ஆழ்வார்கள், ப.6)** என்றும், சுஜாதா அவர்கள் ஆழ்வார் என்ற சொல்லுக்கு, **பகவானின் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுபவர்களை ஆழ்வார்கள் என்று சொல்லுவார்கள் (ஆழ்வார்கள் ஓர் எளிய அறிமுகம், ப.5)** என்றும் விளக்கமளிக்கின்றனர். ஆழ்வார்கள் அனைவருமே உலகில் உள்ள அனைத்து உயிர்களும் இன்பமுற்றிருக்க வேண்டி, இறைவனுக்காகவே இறைவன் மீது முழுமையாக ஆழ்ந்து தொண்டாற்றியுள்ளவர் ஆழ்வார்கள் என்பதை அறியமுடிகின்றது.

**பெரியாழ்வாரும் பாண்டியனும்**

நடுநிலை நின்று அரசாட்சி செய்து மக்களைக் காப்பாற்றும் மன்னனை இறைவனாக மதிக்கப்படுவான் என்று வள்ளுவப் பெருந்தகை கூறுவார்.

**முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு**
**இறையென்று வைக்கப் படும் (குறள். 383)**

இறைவனுக்கு நிகராக மதிக்கப்படும் பாண்டிய மன்னன், அரச வாழ்வினின்று நீங்கி ஆன்மீக நெறிச்சென்று இறைவனை அடையமுயலுகிறார். வ.சுப. மாணிக்கம் தனது நூலில், **திருவாசகத்தில் ஊண் வாழ்க்கையை ஊன் வாழ்க்கை என மாணிக்கவாகர் இகழ்வார் (தொல்காப்பியத்திறன், ப.130)** என்ற இக்கருத்தினை மன்னன் உணர்ந்தும் இருக்கலாம் .பாண்டிய மன்னனின் ஆன்ம வாழ்க்கைப் பயணத்திற்கு வழி காட்டுகிறார் ஒரு திருத்தலப்பயணி,

**இரவில் வேண்டிய உணவு முதலியவற்றைப் பகலில் தேடிக் கொள்ளுகின்றனர். மழைக்காலங்களில் தேவையானவற்றை மற்றை எட்டுத்திங்களில் தேடிவைத்துக் கொள்கின்றனர். முதுமையில் தேவையானவற்றை இம்மையில் முயற்சி செய்கின்றனர். ஆனால் இப்படிப்பட்ட விவேகிகள் மறுமைக்கு வேண்டியவற்றை இம்மையில் தேட முயல வேண்டாவோ? என்று தானும் இப்போது அந்த வழியைத் தான் நாடிச் செல்லுவதாக உரைக்கின்றான். (விட்டு சித்தன் விரித்த தமிழ், ப. 11)**

என்பதைப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பதிவுசெய்கின்றார்.

பயணியின் சொற்கள் மன்னனின் அடி மனதில் பல கேள்விகளை எழுப்பி சிந்தனையில் ஆழ்த்தியது. மறுமைக்குரிய செல்வம் எது? என்பதைக் கண்டறிய வேத ஆகம முறைகள் கற்றுத் தேர்ந்த புலவர்கள், தர்க்க வாதிகள், யோகிகள், நார்த்திகர்களின் விவாதங்களில் வல்லவர்கள் அனைவருக்கும் அழைப்பு விடுத்து பல பொன்னும் மணியும் நிறைந்த பொற்கிழியை அரசவையின் தோரணவாயிலில் பரிசுப் பொருளாகத் தொங்கவிட்டான். பலரின் உரையும்,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

செவிமடுத்த மன்னனுக்கு பெரியாழ்வாரின் சொல்லின் உண்மையில் மயங்கிப் போகின்றார். இறைவனோடு ஒன்றிய பெரியாழ்வார், **வாழ்வின் நோக்கமே மனித நிலையிலிருந்து சரிந்து விலங்கு நிலைக்குச் செல்லாமல் முயன்று முயன்று தெய்வ நிலைக்குச் செல்வதேயாகும். (சிந்தனைச்சித்திரங்கள், ப. 167)** என்கின்ற கருத்துச் சிந்தனையில் ஊறிய ஆழ்வார், அமைதியும் பொறுமையும் கொண்டு அன்பு உணர்ச்சியால் சமயவாதிகள் கேட்ட கேள்விகளுக்கு விடை கூறுவதாகவும், தீய எண்ணங்களை நல்லெண்ணங்களாலும், அறியாமையை அறிவினாலும், வீண்பெருமையைப் பணிவினாலும் வென்று வாகை சூடுகின்றார்.

காரணப்பொருளே கடவுள் என்று விளங்க வைத்துள்ளார். எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் உண்டாகின்றனவோ, எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் நிறைவு பெறுகின்றனவோ, எந்த ஒரு பொருளால் எல்லாப் பொருள்களும் இறுதியில் சேர்ந்து விடுகின்றனவோ அந்தப்பரம் பொருளே தியானத்திற்கு உரிய இறைவன் என்றும், அவனை நோக்கி வழிபடுவதும் அவனுடைய ஆயிரம் திருநாமங்களை நாவால் உரைத்து வழிபடும் போது பக்தி என்ற பெரும் ஆன்மீக நெறியில் எளிதாகக் கொண்டு சேர்க்கும். அதுவே முக்திக்கு வழி கொடுக்கும் என்ற பெரும் பேருரையின் இறுதியில் ஞானபக்தியே இம்மைக்கும் மறுமைக்கும் உறுபெருஞ்செல்வம்' என்று சொல்லிமுடிக்கின்றார். அப்பொழுது பரிசுப் பொருளான பொற்கிழி பெரியாழ்வாரை நோக்கி வளைய, பாண்டியன் அக்கிழியை அறுத்து ஆழ்வாரின் பாதத்தில் வைத்து வணங்கிய வரலாற்றை பாண்டியபட்டர் என்ற பிற்கால ஆசிரியர் பதிவு செய்துள்ளதை பேராசிரியர் விளக்குகின்றர். இதன்வழி ஆன்மீக நெறியை சென்றடைய இறைவன் மீது நாம் கொண்ட நம்பிக்கையும், அவன் நாமத்தையும் என்றென்றும் நம் மனதில் எண்ணிக் கொண்டு, அவனின்றி எதுவுமில்லை என்பதை உணர வேண்டும். அவன்மீது தீராத பக்தி கொண்டு வழிபட்டால் இறைவனை அடையலாம் என்பதை உலகிற்கு உணர்த்த முற்படுகிறார் பேராசிரியர்.

**பெரியாழ்வாரின் ஆன்மீகம்**

> **சுப்புரெட்டியார் தமது நூலில் பெரியாழ்வாரின் பக்தி நெறியை விளக்கும் போது, எம்பெருமானின் ஆயிர நாமங்களை நவிற்றுவதற்கு வாய்ப்பில்லாது போயினும் திருமண்காப்பின் போது நவிற்றப்படும் பன்னிரண்டு திருநாமங்களையாவது நவிற்றுவது பயன்தருவது. இந்தப்பன்னிரண்டு திருநாமங்களாவன - கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், வீட்டுணு, மதுசூதணன், திரிவிக்கிரமன், வாமணன், சிரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பனவாகும். (விட்டுச்சித்தன் விரித்த தமிழ், ப. 252)**

இதன் வழி இறைவனின் திருநாமத்தை மனதார ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தாலும்இறைவனை அடையலாம், திருமாலின் ஆயிரம் நாமத்தை நாவால்

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சொல்லும் போது பக்தி பெருகும் என்கிறார் அவருடைய திருப்பெயர்களுள் 12 பெயர்கள் மிகுந்த சிறப்புடையது என்பதை, **திருமாலுக்கு ஆயிரத்தெட்டு திருநாமங்களே இருந்த போதிலும் அவற்றுள் பன்னிரண்டு திருப்பெயர்களே மிகுந்த சிறப்பு வாய்ந்ததாக வேதங்கள் முதலாக இதிகாச புராணங்கள் கூறுகின்றன. (திருமால் நெறிக் கட்டுரைகள், ப.8)** என்று பரந்தாமன் கூறுவதன் வழியும், மேலும், காரியதரிசி, **ஓம்விச்வஸ்மைநம- அகிலாண்டமாயிருப்பவர் என்ற முதற் பெயர் கொண்டும் 1000. ஸர்வப்ரஹரண ஆயுதாய- எய்துவன எல்லாம் ஆயுதமாய்க் கொண்டவர் (விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள், ப.5-55)** ஆயிரம் பெயர்களையும் அதன் விளக்கமும் கொண்டு எழுதப் பெற்ற மிகச்சிறப்பான நூலை இவ்விடத்தில் பதிவு செய்கிறேன். ஏனென்றால் திருப்பல்லாண்டில் ஆழ்வார், இரண்டு திருநாமங்களை மட்டும் அற்பபலனுக்கு உருப்போட்டுக் கொண்டுள்ளீர்களே இதுதகாது! ஆயிரம் திருநாமங்களையும் வாயாரச் சொல்லி மகிழலாம் என்று வாழ்த்துப்பாட அழைக்கும் பாடலில் பாடியிருப்பதன் வழி இங்கு இதை கவனத்தில் கொள்ளலாம்.

**பல்லாண்டு பாடிய விஷ்ணுசித்தர்**

பன்னிரண்டு வைணவ ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வார் நூல் பாடிய நூல் திருப்பல்லாண்டு. இது 12 பாடல்களால் வைணவப் பக்தி கொண்டு நூல்களின் தொகுப்பான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் முதல் 1000 பாக்களில் முதல் 12 பாடல்கள் திருப்பல்லாண்டுப் பாடல்களாக அமைத்துள்ளார் நாதமுனிகள். பல்லாண்டு என்பதற்கு ரேவதி, **பல்லாண்டு என்பதன் பொருள் பல ஆண்டுகள் என்பதாகும். நீடுவாழ்க என்று வாழ்த்துப் பொருள் உடையதாகவும் விளங்குகிறது. (,ஆழ்வார் பாடல்களில் உருக்காட்சி, ப.125)** இவ்வரிகளின் மூலம் இறைவனைப் பல்லாண்டு வாழ்க என வாழ்த்திப் பாடியமைக்கு வலுசேர்க்கின்றது. அவர்பாடியபாடல்களில்,

**பல்லாண்டுபல்லாண்டு**
**பல்லாயிரத்தாண்டு**
**பலகோடிநூறாயிரம்**
**மல்லாண்டதிண்தோள்மணிவண்ணா**
**உன், செவ்வடிசெவ்விதிருக்காப்பு (நாலாயிர திவ்வியப் பிரபந்தம், ப. 41)**

என்ற பாடலும்,

**அடியோமோடும்நின்னோடும்**
**பிரிவின்றிஆயிரம்பல்லாண்டு**
**வடிவாய்நின்வலமார்பினில்**
**வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு (நாலாயிர திவ்வியப் பிரபந்தம், ப. 41)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இறைவனை அடைவதற்கான பக்தி மார்க்கத்தை கூறிய பொியாழ்வாரான பட்டரை பட்டத்து யானையின் மீது ஏற்றி நகர்வலம் வரச் செய்து பெருமைப்படுத்தினான் மன்னன். அப்போது இறைவன் இறைவியோடு ஆழ்வார்க்குக்காட்சி அளிப்பதகவும் அக்காட்சி கண்டவர் மெய்சிலிர்த்து மகிழ்ந்ததோடு இறைவனுக்கு, “பாவிகளின் கண்ணெச்சில் பட்டு எம் பெருமானுக்கு என்ன தீங்குவருமோ? என்று அஞ்சியவர் போல் யானைக்கழுத்தின் மேல் கிடக்கும் மணியையே கைத்தாளமாகக் கொண்டு மங்களாசாசனம் செய்து பல்லாண்டு பாடுகின்றார் என்று ஆசிரியர் பல்லாண்டு பாடியதன் காரணத்தைக் குறிப்பிடுகின்றார். இதில் இறைவன் என்ற நிலையை மறந்து பல்லாண்டு வாழ்க என இறைவனைப் பாடுகின்றார். எக்கெடுதலும் இறைவனுக்கு இல்லை என்றால் தானே உலக உயிர்கள் நன்மை அடைய முடியும் என்ற சமுதாயக் கருத்தை முன்னிட்டு பாடியுள்ளார். ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்வதாகப் பல இடங்களில் பதிவு செய்கின்றார். அச்சொல்லுக்கான பொருளாக இராமசுப்பிரமணியம், **பெரியோர்கள் வழிபாடு ஆழ்வார்களால் துதிக்கப் பெறுதல்** (திருமகள் தமிழ் அகராதி, ப. 750). மேலும் இணையத்தில், **மங்களாசாசனம் என்பதற்கு நன்மையை வேண்டுகை** (https://agarathi.com/word) என்று பொருள் கூறுகிறது. ஆக, உலக உயிர்களின் நன்மையை வேண்டி இறைவனை வாழ்த்தி பெரியாழ்வார் பாடியுள்ளமைய அறியமுடிகின்றது.

**திருக்கோட்டியூரும் பெரியாழ்வாரும்**

திருக்கோட்டியூர் என்று பெயர் பெறுவதற்கு மணிமுத்தாநதிக்கரையில் உள்ள இத்திருப்பதி முற்காலத்தில் கதம்பமுனிவரின் புண்ணிய ஆசிரமமாக இருந்தது. இரணியன் மூவுலகங்களையும் ஆட்சிசெய்து தேவர்களை துன்புறுத்துகிறான். அவனை எப்படி ஒழிப்பது என்று வழி அறியாது திகைக்கின்றனர். தேவர்கள் கதம்பமுனிவர் உரையும் இத்திருத்தலத்தில் அரக்கர் எவரும் புகமுடியாது என்ற சாபம் இருந்ததால் மும்மூர்த்திகளும் தேவர்களும் சூழ்ந்து ஆழ்ந்து, ஆராய்ந்து ஒருமுடிவுக்கு வர இவ்விடத்தை தேர்ந்தெடுத்து ஒன்று கூடுகின்றனர். திருமால் நரசிம்ம அவதாரம் எடுத்து இரணியனை வதைப்பது என்று முடிவு செய்கின்றார். தேவர்கள் யாவரும் கூட்டமாகச் சேர்ந்து ஆலோசனை செய்த இடமாதலின் இதனைக் கோட்டியூர் என்று வழங்குகின்றனர். திரு என்ற அடையுடன் இந்த ஊர் திருக்கோட்டியூர் என்று திருநாமம் பெற்று வழங்கலாயிற்று என்றும் இக்காரணம் உண்மையாகும் வகையில் இத்தலத்தில் மும்மூர்த்திகளும் காட்சி அளிக்கின்றனர் போலும் என பேராசிரியரின் இந்த ஊர் பற்றிய ஆய்வில் உள்ள கருத்து போன்றே மூவரில் லிங்கம் சுயம்புவாக அமைந்துள்ளதும் இத்தலப் பெருமையில் ஒன்றாக அறியமுடிகின்றதுன்றது.

**திருக்கோஷ்டியூர் கருந்தடமுகில் வண்ணனை**
**கடைக் கொண்டு கைதொழும் பக்தர்கள்**
**இருந்த ஊரில் இருக்கும் மானிடர்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**எத்தவம் செய்தார் கொலோ** (https://ta.wikipedia.org/wiki/)

என்று பரவசமாகப் பாடியுள்ளார். ஒன்றுபட்ட சமுதாயத்திற்கு ஏற்ப அனைவரும் கூடியிருந்து ஒரு செயலைச் சிறப்பாக முடிப்பதற்கு வழிவகுத்துள்ளனர்.

திருக்கோட்டியூருக்கு தன் நண்பண் செல்வநம்பியைச் சந்திக்கச் சென்ற பெரியாழ்வார் அங்கே கோயில் கொண்டுள்ள நாராயணமூர்த்தியைத் தரிசிக்கும் போது கிருஷ்ண அவதாரம் நினைவுக்கு வந்ததாகவும், அந்தக் கோயில் நந்தகோபன் மாளிகையாகவும், அந்த ஊர் ஆயர்பாடியாகவும் பெரியாழ்வாரின் மனக்கண்ணுக்கு மாறிவிடுகின்றன. மேலும், கண்ணனின் குழந்தைப் பருவநிலையில் காட்சிப்படுத்திய தன்மனம், தன்னை யசோதையாகவே எண்ணி தாயுள்ளம் கொண்டு பக்திப்பரவசத்தால் நாராயணமூர்த்தி, பிள்ளைப் பெருமானாகப் போற்றிப்பாடியுள்ளார் விஷ்ணுசித்தன். இவ்வாறு விஷ்ணு சித்தர் பக்தியினால், தான் இருக்கும் இடத்திலேயே தன் நினைவுகளால் பலமாற்றங்களைக் கொண்டு பரவசமாகப் பாடியுள்ளார்.இத்தகு மாற்றங்கள் தன்மனத்தால் இறைவனைப் பற்றிய தீராத எண்ணமே இவ்வாறு கற்பனை செய்ய முடியாதநிலையில் மனக்கண்ணால் கண்டு இன்புறுகிறார். இவர் மட்டுமல்ல எல்லா ஆழ்வார்களும் மனமொன்றி இறைவனை வழிபட்டுள்ளனர். இதை எவ்வாறு பெற்றார்? என்றால், தன் மனதைப் பக்குவப்படுத்தி ஐம்புலன்களையும் அடக்கியாளும் திறம் வாய்ந்த மனத்தைப் பெற்றுள்ளதே காரணமாகலாம். ஆழ்வார்கள், பெற்ற மனதை எவ்வாறு அனைவரும் பெறமுடியும்? என்ற வினா நம்முள் எழுகிறது.

மனித மனம் ஆராயும் ஆறாம் அறிவுபடைத்தது. இயற்கையெல்லாம் படைத்தது யார்? என்ற நம்மனச்சிந்தனை ஆராய்கிறது. அதன் பொருட்டு இயற்கைக்கும் மீறியசக்தி உண்டு என்பதை உணர்கிறோம். பின் மனம் நம் அறிவின்பால் செல்லாது எல்லாம் வல்ல இறை சக்தியின் மீது செல்கிறது.

**எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்**
**அங்கங்கேஇருப்பதுநீயன்றோபராபரமே (தமிழ் இலக்கியத்தில் இறைநெறிகள், ப. 158)**

என்ற வரிகள் எங்கும் இருப்பது இறை என்பதை வலியுறுத்துகிறது. இந்த இறைவன் எப்படி இருப்பான்?. கருப்பா சிவப்பா ஆணா பெண்ணா. என்ற கேள்விகளுள் ‘இயற்கையே இறைவன்’ என்று உணர்ந்த சான்றோர் பலர். அதனால் தான் சிலப்பதிகாரத்தில்,

**திங்களைப் போற்றுதும் திங்களைப்போற்றுதும்**
**ஞாயிறு போற்றுதும் ஞாயிறுபோற்றுதும்**
**மாமழை போற்றுதும் மாமழைபோற்றுதும் (சிலப்பதிகாரம், ப. 45)**

என்று இளங்கோவடிகள் இயற்கையைப் போற்றியுள்ளார். அதன் வழி வழிபட்டுள்ளனர். அந்த இயற்கையை வழிபட தன் ஐம்புலன்களையும் அடக்கியாளும் திறம் தன்னிடம் வேண்டும் அதற்கு,

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**மெய்வாய்கண்மூக்குசெவியெனப்பேர்பெற்ற**
**ஐயவாயவேட்கைஅவாவினைக்கைவாய்க்**
**கலங்காமல்காத்துய்க்கும்ஆற்றல்உடையார்**
**விலங்காதுவீடுபெறும் (நாலடியார், பா. 59)**

என்ற பாடல் ஐம்புலன்களையும் அடக்கும் ஒருவன் வீடுபேறு என்ற இறைவனை அடையலாம் என்கிறது. இந்த வீடுபேறு தான் இம்மையில் மறுமைக்கானது. இறைவனை அடைவது என்று ஆழ்வார் விளக்கம் தந்துள்ளார்.

ஆழ்வார்கள் இயற்கை என்ற சக்திக்கு உருவம், வரலாறு கொடுத்து பக்தியை, இறை நிலையை உலகெங்கும் பரப்பினார்கள் என்பதை உணரலாம். அவ்வகையே பெரியாழ்வார்,

**கடல்கடைந்துஅமுதம்கொண்டு**
**கலசத்தைநிறைத்தாற்போல்**
**உடல்உருகிவாய்திறந்து**
**மடுத்தன்னைநிறைத்துக்கொண்டேன் (நாலாயிர திவ்வியப் பிரபந்தம், ப. 44)**

என்று விஷ்ணு சித்தன் தன்னுள் பெருமானை நிரப்பிக் கொள்கிறார். ஆம்! சித்தர் ஒருவரும், தன்னை அறியாது அறிந்த செய்தியை, **என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்தது இல்லையே என்னிலே இருந்த ஒன்றை யான் அறிந்து கொண்டேன் (தமிழ் இலக்கியத்தில் மனித நேய மாண்புகள், ப. 318)** இவ்வழியே இறைவனைப் பல கோணங்களிலும் அகக்கண்ணால் உற்று நோக்கி அடி முதல் தலை வரையிலும் உள்ள ஒவ்வொரு உறுப்புக்களையும் கண்டு அறிந்து, இன்பமுற்று ஆய்ச்சிமார்களை வந்து காணுமாறு பிள்ளைப் பெருமானின் பெருமைகளைப் பாடியுள்ளார்.

**பெயர்சூட்டுதல்**

` இல்வாழ்க்கையில் மிகமுக்கியப்பங்கு பிள்ளைப் பேறாகும். அப்பிள்ளை வேண்டி இன்றைய கால கட்டங்களில் இறைவனிடம் தவமாய்த் தவமிருக்கின்றனர். அன்றும் அந்நிலையில் இருந்த பெரியாழ்வாருக்கு நந்தவனத்திலே கிடைத்த பெண் குழந்தையை எடுத்து *கோதை* என்று திருமாலுக்கு சூட்டும் மலர்மாலையாகக்கருதி அழகிய பெயரைச்சூட்டிய பெரியாழ்வார். அவர் பாடல்களில் குழந்தைகளுக்கு இறைவனுடைய திருநாமத்தை வைக்க வேண்டும் என்கிறார். எம்பெருமான் திரு நாமங்களாகிய மாதவன், கோவிந்தன் என்பன போன்ற பெயர்களிட்டால் மறுமையில் அப்பேறுபெறக் குறையில்லை என ஆழ்வார் எண்ணங்களை வெளிப்படுத்துகிறார் பேராசிரியர். மேலும், மண்ணிற்பிறந்து மண்ணாகும் மானிடப் பேரிட்டு மகிழாமல் கண்ணுக்கு இனிய கருமுகில் வண்ணன் நாமமே நண்ணுமின் என்றவார்களை எடுத்துக்காட்டுகின்றார். மனிதனாகப் பிறந்த அனைவருமே இறைவனின் பெயரைவைக்க வேண்டும் என்று சமய இலக்கியங்கள் சொல்லியதன் வழியே இன்றும் பலர்


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

இறைவனுடைய திருநாமத்தில் இருப்பதைக் காண்கிறோம். தனது குழந்தைக்கு பெயர் வைக்கும் முன்னே நாம்கண்ணா, கண்ணா! என்று இறைவனின் திருநாமத்தையே இயல்பாக அழைக்கின்றோம். இறைவன் பெயர்வைத்தால் தினமும் அவன் நாமத்தைச் சொல்லும் வாய்ப்பு கிடைக்கின்றது.

இன்றும் நாட்டுப்புறம் சார்ந்த மக்களிடையே, சிறுதெய்வப் பெயர்களாக, மாரியம்மாள், காளீஸ்வரி, துர்க்கா, மகாலட்சுமி, கருப்புசாமி, கருப்பன், காமாட்சி என்ற பெயர்களும், பெருந் தெய்வப்பெயர்களாக, நடராஜன், திருமால், ஈஸ்வரன், பிரகதீஸ்வரன், விஷ்ணுப்பிரியா, லட்சுமி, அருணாச்சலம், குமரன், கதிரவன், தியாகராஜன், கண்ணன், மாதவன், கிருஷ்ணன், மீனாட்சி, சபரீஸ்வரன் போன்ற சிறுதெய்வ பெருந்தெய்வப் பெயர்களும் மனிதப் பெயர்களோடு கலந்து எல்லோர் இல்லங்களிலும் வலம் வருகின்றது.

அறிந்தும் அறியாமலும் தினமும் இறைவனின் பெயரை நாம் உச்சரித்துக் கொண்டு தான் உள்ளோம். மேலும், குழந்தைகளை அடித்தல், திட்டுதல் போன்ற காரியங்களைச் செய்யாமல் இருப்பதற்காகவும் இவ்வாறு இறைவன் பெயர் வைத்ததன் காரணமாகவும் இருக்கலாம். ஆக, இறைவனின் பெயரையே ஆழ்வார் சொன்னது போல இன்றளவும் வைத்துக் கொண்டுள்ளோம் என்பது பெருமைமிகு சிறப்புக்குரியது எனலாம். மேலும், இறைவன்மீது கொண்ட பக்தியால் நோன்பு (விரதம்) இருக்கும் பழக்கம் இருந்துள்ளதையும், சமுதாயத்தில் நடனமாடிய நிகழ்வுகுறித்தும், பிறந்த நாளன்று நீராடும் பழக்கமும் போன்ற சமூகநிகழ்வுகளும் இவர்பாடல்களில் அமைந்துள்ளமையை பேராசிரியர்ந.சுப்புரெட்டியார் விரிவாகப் பதிவுசெய்துள்ளார். இத்தகு பெருமையுடைய பெரியாழ்வார் பாடல்களிலும், பேராசிரியரின் விளக்கவுரையிலும் மனிதர்கள் பக்தியோடும் நல்பழக்கவழக்கங்களோடும் வாழ்க்கையில் பயணித்துவந்தால் இறைவனைஅடைவோம்.மோட்சம் அடையலாம்.

ஆழ்வாரும்சமுதாயமும்:

தமிழகத்தில் சமயப்பெரியோர்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஊர் ஊராகச் சென்று தங்களது சமயங்களைப் பரப்பினார்கள். நாட்டு மக்களை நல்வழிப்படுத்த சமயமே சிறந்தது என்பதைக் கண்டுணர்ந்து அதைக்கைக் கொண்டு உலகெங்கும் தங்களது சமய போதனைகளைப் பரைசாற்றியுள்ளனர் என்பதை அறிவோம்

**செய்க தவம் செய்த தவம் நெஞ்சே தவம் செய்தால்**

**அன்பிற் சிறந்த தவம் இல்லை (பாரதியார் கவிதைகள், ப. 155)**

அன்புடையவர் ஆனந்தமாக வாழ்வார் எனலாம். பொரியாழ்வார் சமயத்தின் வழியாகச் சமுதாயத்தைச் சென்றடைந்தார். இறைவனை எப்படி அடையலாம் என்பதற்கு சொன்ன வழிமுறைகள் அனைத்தும் சமூகத்திற்கானது, சமுதாயமக்கள் நல்வழிப்படுத்துவதற்கானது. இது போன்றும் பல, சமூகத்தில் ஆழ்வார்களின் பங்களிப்பைக் காணமுடிகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 5, Special Issue - 1, November 2022 Available at: www.ijtlls.com

**மனிதனால் உலகத்தை பார்க்கத்தான் முடிகின்றது. நாம் புறக் காட்சியை பார்க்கின்றோம் ஞானிகளும் அறிவியல் வல்லுநர்களும் உலகை உற்று நோக்கி ஆராய்கிறார்கள் (தமிழ் இலக்கியத்தில் ஆளுமைகள், ப. 325)**

இக்கருத்தின் வழியும் ஆழ்வார் போன்ற சமயவாதிகளின் போக்கையும் உணர்ந்து சமுதாயத்திற்கு நல்வழி காட்டலாம். பகவானைத் தொழுபவர்களை தேவராஜன் மூன்று வகையாகப் பகுத்துக் கூறுகிறார்.

**செல்வத்தை அடைய வேண்டி இறைவனைத் தொழுபவர்கள். இவர்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.முதல் வகையினர் தாம் இழந்த பொருளை மீண்டும் அடைய வேண்டித் தொழுபவர்கள்.இரண்டாவது வகையினர் புதிதாகச் செல்வங்களைப் பெற வேண்டி இறைவனைத் தொழுபவர்கள். பரமபதத்தை அடைந்து பகவானுடைய திருவடிகளில் தினமும் கைங்கர்யம் செய்ய வேண்டும் என நினைப்பவர்கள் மூன்றாம் வகையினர். (வைணவமும் ஆழ்வார்களும், ப. 593)**

இக்கருத்தில் முதல் இருவரும் பிரதிபலன் எதிர்பார்த்து வழிபாடு செய்பாவர்கள்,மூன்றாம் வகையினர் இறைவனிடமிருந்து எப்பலனும் எதிர்பாராது முதல் இருவர் நிலைப்பட்ட மக்களையும் அழைத்து இறைவனைப் பற்றி பாடலாம் , வாழ்த்தலாம் என்று அழைக்கும் ஆழ்வார் பெரியாழ்வார் மட்டுமே எனலாம்.

**முடிவுரை**

விட்டுசித்தனாகிய பெரியாழ்வார் இம்மண்ணுலகில் உள்ளோர் வானுலக்த்தில் உள்ள இறைவனை அடைவதற்கான வழிமுறைகளை தன் பாடல் கருத்துகளில் விட்டுசென்று உள்ளார். இறையோடு தன் வழிபாட்டில் ஆன்மீகத்தையும் சமுதாய நலனையும் மனதில் கொண்டவராகவே வாழ்ந்துள்ளனர். அவ்வகையில் நாமும் நம் வாழ்வோடு ஆன்மீகத்தையும் இணைத்துக்கொண்டு வாழும்போது மனிதனுனுக்கு அன்பும் அறனும் பெற்று சமூக நலனில் அக்கரைகொண்டு வாழ்வோம் என்பதை உணர்வோம்.

**குறிப்பு நூல்கள்**

[1] இராமசுப்பிரமணியம். வ. *திருமகள் தமிழகராதி.* சுகான்ஸ் அப்பார்ட்மெண்ட்ஸ், சிவப்பிரகாசம்தெரு, சென்னை. 2004

[2] காரியதரிசி. *விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்கள்.* ஸ்ரீராம கிருஷ்ண தபோவனம், திருப்பெருந்துறை, முதல்பதிப்பு.1991.

[3] தேவநாதன். *பன்னிரு ஆழ்வார்கள்.* விஜயா பதிப்பகம், கோவை, 2007.

[4] தேவராஜன். *வைணவமும் ஆழ்வார்களும்.* ஸ்ரீசென்பகா பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு-2009.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[5] பரந்தாமன். *திருமால் நெறிக்கட்டுரைகள்.* திருவேங்கடவன் பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு - 1990.

[6] பரிமேலழகர் (உ.ஆ). *திருக்குறள்.* பும்புகார்பதிப்பகம், சென்னை, 2001.

[7] மகாலிங்கம். *சிந்தனைச்சித்திரங்கள்.* அன்னம், நிர்மலா நகர், தஞ்சாவுர், பதிப்பு-2003.

[8] மாணிக்கம். *தொல்காப்பியத்திறன்.* மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், பதிப்பு-1984.

[9] சுஜாதா. *ஆழ்வார்கள் ஓர் எளிய அறிமுகம்.* கிழக்குப் பதிப்பகம், பதிப்பு-2011.

[10] சுப்புரெட்டியார்.ந. *விட்டுச்சித்தன் விரித்த தமிழ்.* பாரி நிலையம், சென்னை, முதல்பதிப்பு-1987.

[11] ரரவஸ். *நாலாயர திவ்ய ப்ரபந்தம்.* ஸ்ரீ பகவான் நாம பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2016.

[12] ரேவதி. *ஆழ்வார் பாடல்களில் உருக்காட்சி.* லட்சுமிபதிப்பகம், கூட்டுறவு நகர்திருவாரூர்-613701, முதற்பதிப்பு, 2004

[13] வரதராசனார் (உ.ஆ).*திருக்குறள் (தெளிவுரை).* திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், திருநெல்வேலி, மு.ப.1959.

[14] சுப்பிரமணிய பாரதி. *பாரதியார் கவிதைகள்.* பாப்புலர் பப்ளி கேசன்ஸ், திருநகர், மூ.ப.-2002.

[15] ஸ்ரீசந்திரன் (உ.ஆ). *சிலப்பதிகாரம்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, பதிப்பு-2000.

[16] ஸ்ரீசந்திரன். *நாலடியார்.* வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-34, மு.ப.-1989.

[17] கீதாஞ்சலி த. *பன்முக நோக்கில் தமிழ் இலக்கியம்.* காவேரி டெக், பொள்ளாச்சி, மு.ப.2018.

[18] சித்ரகலா, ம. *தமிழ் இலக்கியத்தில் ஆளுமைகள்.* ராஜா பப்ளிகேசன், திருச்சிராப்பள்ளி, 2021.

[19] விஷ்ணுப்பிரியா, இரா. *தமிழ்இலக்கியத்தில் மனிதநேய மாண்புகள்.* ராஜா பப்ளிகேசன்ஸ், திருச்சிராப்பள்ளி, மு.ப.-2019.

[20] ஜெயசுதா.ந. *தமிழ் இலக்கியத்தில் இறைநெறிகள்.* டுடே பதிப்பகம், சென்னை, மு.ப.-2018.

[21] சித்ரகலா. *தமிழ் ஆழி.* நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, மு.ப.-2020.

[22] https://ta.wikipedia.org/wiki/ 21 டிசம்பர் 2021 அன்று அணுகப்பட்டது.

[23] https://agarathi.com/word 21 டிசம்பர் 2021 அன்று அணுகப்பட்டது.

## References

[1] Ramasubiramaniyam. V. T. *Thirumagal Tamil Agarath*i. Sugans Apartments, Chennai, 600017.

[2] Kariyatharisi. *Visnuvin Aayiram Thirunamangal*. Sri Ramakirushna Thapovanam, Thiruparaithurai, 1991.

[3] Devanathan. *Panniru Aalvarkal*. Vijaya Pathippagam, Kovai, 2007.

[4] Paranthaman. *Thirumaal Nerik Katturaikal*, Thiruvengadavan Pathipagam, No 5, Thiruvalluvar Theru, Methha Nagar, Thamparam Chennai 600073, 1990.

[5] Devarajan. *Vainavamum Aalwarkalum*. Sri Senbaga Pathippagam, 32, b Kirushna Theru, Paandi Bazar, Chennai. Second Edition, 2009.

E-ISSN: 2581-7140
Volume - 5, Special Issue - 1, November 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

[6] Parimelalgar. *Thirukural*. Poompugar Pathipagam, Chennai, 2001.
[7] Mahalingam. *Sinthanai Sithirangal*. Annam, Nirmala Nagar, Thanjavur, 2013.
[8] Maanikam. *Tholkapiya Thiran*. Manivasakar Pathippagam, Sithamparam, 1984.
[9] Sujatha. *Aalvaarkal Oor Eliya Arimugam*. Kilakku Pathippagam, First Edition, 2011.
[10] Suppurettiyar. *N. Vittu Sithhan Virthha Tamil*. First Edition, 1985.
[11] Raravas. *Nalayira Thivya Pirapantham*. Sri Pakavan Nama Papli Kesan, Chennai, 2016.
[12] Revathi, *Alvaar Padalkail Urukkatchi*, Lakshmi Pathippagam, Thiruvaarur, First Edition, 2004.
[13] Varatharaasanar. *Thirukkural Thelivurai*, Thirunelveli Thenindia Saiva Siddantha Nootpathippu Kalagam, Thirunelveli, First Edition 1959.
[14] Sri Chandran. *Silapathikaram.* Varthhamanan Pathippagam, Chennai-17, First Edition 2000.
[15] Sri Chandran. *Naaladiyaar*. Varthhamanan Pathippagam, Mahalingapuram, Chennai - 34, First Edition 1989.
[16] Bharathiyaar *Kavithaikal*. Popular Puplication, Thirunagar, Third Edition, 2003.
[17] Geethanjali. *Panmuga Nookil Tamil Ilakkiyam*. Kaveri Tech., Pollachi, First Edition, 2018.
[18] Chitrakala. *Tamil Ilakkiyathil Aalumaikal.* Raja Publications, Thiruchirapalli, First Edition, 2019.
[19] Vishnupriya. *Tamil Ilakkiyathil Manithaneya Maanpugal*. Raja Publications, Thiruchirapalli, First Edition, 2022.
[20] Jayasudha, Prakash. *Tamil Ilakkiyathil Irai Nerikal*, Today Pathippagam, Chennai, First Edition, December 2018.
[21] Chitrakala. *Tamil Aali*. New Century Book House, Chennai, First Edition, 2020.
[22] https://ta.wikipedia.org/wiki/ Accessed on 21 December 2021.
[23] https://agarathi.com/word Accessed on 21 December 2021.

**நிதிசார் கட்டுரையாளர்உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு. இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.




தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பார்வையில் இராமகாதை

## *Ramakatha* in the View of Professor N. Subbu Reddiar

**முனைவர் சி. ஜெயலட்சுமி,** உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, ஸ்ரீவாசவி கல்லூரி, ஈரோடு, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. C. Jayalakshmi,** Assistant Professor of Tamil, Sri Vasavi College, Erode, Tamil Nadu, India.
**ORCiD: https://orcid.org/0000-0002-1157-5470**
**DOI: 10.5281/zenodo.7280162**

**Abstract**

*It would be beautiful for any poet to compose the greatest epic "Ramayana" in any language. Professor Subbu Reddiar wrote the story as good as the great Valmiki who sang the "Ramayana." The epic "Ramakatha" tells the story of Rama and his wife Sita, a prince of the Isvaku dynasty from Ayodhya, the capital of Kosala. This story covers many aspects such as duty, heroism, love, femininity, marriage, relationships between relationships, war etc. Everyone born on this earth is indebted to someone in some way. According to Rama, the son must go into exile for 14 years without saying a word. He fulfilled it. It is the duty of the husband to rescue his wife when she is seduced by another man. Love is also beyond many senses. From one sense to the other, this feeling will appear in some way in the epics. Many Sangam literature songs are about love and war. Sangam literature and ancient Tamil grammar tell us about love and heroism. The heroism of Rama, Lakshmana, Hanuman, Ravana, Kumbha Karna, Indrajith and Vali are still talked about by the people today. Marriage is the formation of a bond between the couple. This bond will continue till the end of life. Life thrives on the exchange of love for one another. No one has the power to make love because it is immortal. Professor Subbu Reddiar has seen all such glimpses of Tamil culture in the epic "Ramayana". So, he wanted to elicit to his reading audience, he had written many articles on "Ramayana" with startling comments analyzing the characters. Hence, this article focuses to bring forth the perspectives of Professor Subbu Reddiar to the present-day admirers of Subbu Reddiar and the Tamil academic world.*

**Keywords**: Professor Subbu Reddiar, Epic, *Ramayana, Ramakatha*, Tamil Literature.

**ஆய்வுச்சுருக்கம்**

*இராமாயணக் கதைகளை எந்த மொழியில் எந்த கவிஞர் இயற்றினாலும் அது அழகாகவே இருக்கும். இராமாயணத்தை பாடிய பெருங்கவிஞர் வால்மீகி சிறப்பது போல் இக்கதையை பாடிய ஆசிரியரும் சிறந்து விளங்குகின்றார். கோசல நாட்டின் தலைநகரமான அயோத்தி நாட்டைச் சேர்ந்த இரகு வம்ச இளவரசரான ராமர் மற்றும் மனைவி சீதையின் வாழ்க்கையினை எடுத்துக் கூறுகின்ற இதிகாசம் இராமகாதை. இக்காதை உறவுகளுக்கு இடையே உள்ள கடமை, வீரம், காதல், பெண்ணியம், திருமண முறை, உறவுகள் போன்ற பல பொருண்மைகளில் அடங்குகின்றது. இம்மண்ணில் பிறந்த அனைவரும் ஏதோ ஒரு வகையில் யாரோ ஒருவருக்கு கடமைப்பட்டுள்ளோம். இராமன் தாயின் சொல்லான பதினான்கு ஆண்டுகள் வனவாசம் செல்ல வேண்டும் என்றதும் மறுவார்த்தைக் கூறாமல் செல்ல*

E-ISSN: 2581-7140
UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022
Available at: www.ijtlls.com

*வேண்டியது மகனின் கடமை. தன் மனைவியை மாற்றான் கவர்ந்து சென்றதும் அவளை மீட்பது கணவனின் கடமை.தன் உடன் பிறப்பான அண்ணன் எவ்வழியோ அவ்வழியே தம்பி என்று உடன் பிறப்பின் கடமையை எடுத்துள்ளது. காதல் என்பது பல உணர்வுகளுக்கு அப்பாற்பட்டது. ஓரறிவு முதல் ஆறறிவு வரை இவ்வுணர்வு ஏதோ ஒரு வகையில் தோன்றும்." காதல் காதல் காதல் காதல் போயின் சாதல் சாதல் சாதல் "என்கிறார் பாரதியார். இராமனைக் கண்டதும் அழகில் மயங்கி காதல் கொண்டு அவனை நெருங்குவதாகவும், சீதையின் அழகில் மயங்கி அவள் மேல் காதல் கொண்டு அவளை கடத்துவதாகவும் அமைந்துள்ளது. காதலைப்பற்றி பல சங்க இலக்கியப் பாடல்கள் பகர்கின்றன.ஒரு ஆண்மகனுக்கு உரிய வெற்றியின் அடையாளமாக விளங்கக்கூடியது வீரமே.வீரத்தைப் பற்றி சங்க இலக்கியங்களும், இலக்கணங்களும் நமக்கு பறைசாற்றுகின்றன. கும்ப கர்ணனின் வீரம், ராவணன் வீரம், இந்திரஜித் வீரம், வாலியின் வீரம் போன்றோரின் வீரம் இன்றளவும் மக்களால் பேசப்படும் வகையில் அமைந்துள்ளது. திருமணம் என்பது புதிதாக இருவருக்குமிடையே ஒரு பந்தத்தை உருவாக்குவது. இப்பந்தம் வாழ்வின் இறுதி வரை தொடரும். ஒருவருக்கொருவர் அன்பு பரிமாற்றத்தில் வாழ்க்கை சிறக்கிறது. ஒரு உயிரை எடுக்கும் அதிகாரம் யாருக்கும் இல்லை. ஆனால் தன் உயிர் ஒருவரால் அழியப்போகின்றது என்றதும் தன் உயிரைக் காக்க ஓர் உயிரைக் கொல்வது பற்றி கூறுகிறது. ஒரு பெண்ணின் விருப்பம் இல்லாமல் அவளை கடத்துவது இன்று மட்டுமல்ல அன்றே நடந்துள்ளதை இதிகாசங்கள் வழி அறியமுடிகிறது.*

**குறிப்புச்சொற்கள்:** இதிகாசம், *இராமாயணம், இராமகாதை,* அதிகாயன், தமிழ் இலக்கியம்.

**முன்னுரை**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் 1916ம் ஆண்டு லால்குடி வட்டம் பெரகம்பியில் நல்லப்பரெட்டியார், காமாட்சி அம்மாள் தம்பதியருக்கு மகன்கள் பிறந்தவர். மூன்று வயதில் தந்தையை இழந்தார். இவர் தாயின் அரவணைப்பில் பள்ளிப் படிப்பினையும், பட்டப்படிப்பினையும் முடித்த இவர் ஆசிரியராக பணியைத் தொடங்கி பேராசிரியராக தம் பணியை உயர்த்திக் கொண்டவர். தமிழ் மொழி பற்றின் காரணமாக தன்னை தமிழ் மொழிக்கே அர்ப்பணித்து பல நூல்களைப் படைத்தவர். திரு.வி.க. விருது, ராதாகிருஷ்ணன் விருது, ராமானுஜர் விருது, கலைமாமணி விருது, தினத்தந்தி சி.பா.ஆதித்தனார் விருது என பல விருதுகளுக்குச் சொந்தக்காரர். இவர் படைத்த இராமகாதை என்ற நூலை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**இதிகாசம்**

இதி என்றால் இது. காசம் என்றால் நடந்தது. இதிகாசம் என்றால் நிகழ்ந்த வரலாற்றைக்

தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

கூறுவது என்று பொருள்படுகிறது. நம்முடைய முகத்தில் கண்கள் எவ்வளவு அழகாக உள்ளனவோ அதுபோல் இதிகாசங்களும் இரண்டு என்பர். ஒன்று இராமாயணம். மற்றொன்று மகாபாரதம்.

***இராமாயணம்***

*இராமாயணம்* வால்மீகி என்பவரால் எழுதப்பட்டது. இராமன் தன் பேச்சிலும், எண்ணத்திலும், செயலிலும் அறம் வழுவாது நடந்து கொள்வதை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

**இராமகாதை**

இராவணன் தேவர்களையும், முனிவர்களையும் கொடுமைப்படுத்தியதால் அனைவரும் விஷ்ணுவிடம் சென்று முறையிட மனித உருவமாக அவதாரம் எடுத்து இராவணனை அளிப்பேன் என்றார். அதன்படி இராவணனை அழிக்க தசரதனுக்கு மகனாக அவதரித்தார். இலங்கையில் மகாலட்சுமி பிறந்த நேரத்தை கணித்த குலகுரு முறைப்பெண்ணான இவளால் உனக்கு மரணம் ஏற்படும் என்று இராவணனிடம் கூற அவளைப்பெட்டியில் அடைத்து கடலில் வீசி விடுகிறான். இலட்சுமி ஜனகனிடம் கிடைக்க அவரும் அக்குழந்தைக்கு சீதை என்று பெயர் சூட்டி தன் குழந்தைப்போல் பாவித்து வளர்க்க சீதையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். ஒருநாள் எவராலும் அசைக்க முடியாத சிவதனுசை சீதை தன் விரலால் நகர்த்துவதை பார்த்த ஜனகன் இவ்வில்லை வளைத்து நாண் ஏற்றுபவருக்கே தன் மகளை மணமுடித்து தருவேன் என்று அறிவிப்பு விடுகிறார். இவ்வறிப்பைக் கேட்ட பல மன்னர்கள் வந்து சிவ தனுசை எடுக்க முயன்றும் முடியாமல் தோற்றுப் போயினர். அவர்களுள் ஒருவன் இராவணனும் கூட. ஆனால் இராமன் எந்த ஒரு பரபரப்பும் இல்லாமல் சிவதனுசை எடுத்து நாண் ஏற்றி உடைத்து சீதையை மணக்கிறார். இராமன் முடிசூட்டு விழா நடைபெறுவதை ஒட்டி அனைவரும் மகிழும் சமயத்தில் மந்தரையின் சூழ்ச்சி வார்த்தைக்கு மயங்கி இராமனை காட்டிற்கு அனுப்புகிறாள். வனத்தில் இராமன் அழகில் மயங்கிய சூர்ப்பனகைக்கு களங்கம் ஏற்பட்டதை ஒட்டி, சீதையின் அழகை இராவணனிடம் கூற, சீதையை கடத்த இராவண யுத்தம் தோன்றுகிறது. இறுதியில் இராவணனை அழிந்து சீதையை மீட்ட இராமன், சீதையை கற்புக்கரசி என்பதை நிருபிக்க அக்னிபிரவேசம் செய்ய சொல்லவும் கற்புக்கரசி என்பதை நிருபித்து அயோத்தி திரும்புவதாக *இராமகாதை* அமைந்துள்ளது.

**வீரம்**

வீரம் என்றால் துணிவு. தான் எதிர் கொள்ளும் எந்த நிகழ்வுகளையும் துணிந்து எதிர் கொள்வதே வீரம். வாழ்க்கைக்கு பொருள் தருகின்ற கருத்துக்களை விளக்குவது பொருள் இலக்கணம் ஆகும். பொருள் இலக்கணம் இரண்டு வகைப்படும். அவை அகம்,புறம். அகம் என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே ஏற்படுகின்ற அக உணர்வுகளைக் கூறுவது. புறம் என்பது கொடை, வீரம், வெற்றி, போர் போன்ற புறப்பொருள்களைக் கூறுகிறது.

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

சங்க காலத்தில் தமிழர்களின் வீரம் பெருமையாகப் பேசப்பட்டுள்ளது என்பதை,

**வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனை**

**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**

**ஒளிருவா ளருஞ்சம முருக்கிக்**

**களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே (புறம்., பா. 312)**

என்று வீரமிக்க இளைஞர்களைப் பற்றி புறநானூறு எடுத்துக் கூறுகிறது. சங்க இலக்கியங்கள் காட்டுவது போல் இராமகாதையும் வீரமிக்கவர்களைக் காட்டுகிறது.

**கும்பகர்ணனின் வீரம்**

கும்பகர்ணன் இராவணனின் தம்பி. செஞ்சோற்றுக்கடன் தீர்த்தவன். கருமை நிறம் உடையவன். கூர்மையான சூலப்படைக்குச் சொந்தக்காரன்.

**காலன் மேல் நிமிர் மத்தன்; கழல் பொரு**

**காலன்; மேல் நிமிர் செம் மயிர்க் கற்றையான் (கம்ப. கும்பகர்ணன் வதை, பா. 65)**

என்று கூறுவதன் மூலம் கும்பகர்ணனின் உருவ அமைப்பு கூறப்பட்டுள்ளது. இராவணன் இராமனுடன் நடைபெற்ற போர்களை கூறியபின் "கதம்-கதம்-ஏவது" (ராமாயன ரஸானுபவம், ப.512) போனால் போகட்டும் இனி நடப்பவைகளைப் பார்ப்போம் என்று கூறி இராவணன் பயத்தில் இருப்பதை உணர்ந்த கும்பகர்ணன், "யத்க்ருதே- பரிதப்யஸே-தம்-அஹம்-நாசயிஷ்யாமி" (ராமாயன ரஸானுபவம், ப.512) உன்னுடைய மன வேதனையை அழித்து விட்டு இராமனுடன் போர் செய்து தலையைக் கொண்டு வருகின்றேன் என்பதை, "மயா-ரணாத்-ஆனிதம்-ராமஸ்ய-தத்-சிர:-த்ருஷ்ட்வா-சுகீ-பவ" (ராமாயன ரஸானுபவம்,ப.512) என்று கூறுவதன் மூலம் கும்பகர்ணனின் வீரத்தை உணர முடிகிறது. அதுமட்டுமல்ல,

**என்னை வென்று உளர்எனில் இலங்கை காவல**

**உன்னை வென்று உயர்தல் உண்மை (கம்ப. கும்பகர்ணன் வதை, பா. 97)**

என்பதன் மூலம் இராவணனை விட கும்பகர்ணன் பலசாலி என்பது புலனாகிறது. மேலும் ராஜதந்திரம் உடையவனாகவும், சிறந்த போர்த் தலைவனாகவும் விளங்குவதை கம்பராமாயணப் பாடல் விளக்குகிறது.

**பந்தியில் பந்தியில் படையை விட்டு அவை**

**சிந்துதல் கண்டுநீ இருந்து தேம்புதல் (கம்ப. கும்பகர்ணன் வதை, பா. 89)**

வரிசையாக ஒன்றன் பின் ஒன்றாக படைகளை அனுப்பி அழிவதைக் காட்டிலும் ஒன்றாக சேர்ந்து பகைவர் மேல் போரிட்டு வெற்றிக்கு முயல்வதே சிறந்தது என்பதன் மூலம் அவனின் புத்திக்கூர்மையை உணரமுடிகிறது.

**வாலியின் வீரம்**

கிட்கிந்தை மலையின் அரசன். பெரும் பலசாலி. இந்திரனின் மகனாகச் சொல்லப்படும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

வாலி சிறந்த சிவபக்தன். சிவனை வேண்டி தன்னுடன் போரிட வருபவரின் பலத்தில் பாதி தனக்கு கிடைக்கும் படி வரம் பெற்றவன். வாசுகி என்ற பாம்பை கயிறாகக் கொண்டு தேவர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடையும் வலிமை இன்மையால் நான் ஒருவனே பாம்பின் தலையையும், வாலையும் பற்றிக் கொண்டு கடைந்ததாக, "யான் அது, தயிர்எனக் கடைந்து அவர்க்கு அமுதம் தந்தது" (கம்ப. கிட்கிந்தா காண்டம், பா. 123) என்ற வரிகள் வாலி தன் பலத்தை தாரையிடம் கூறும் வரிகள் வழி அறிய முடிகிறது. அதுபோல் சுக்கிரீவன் வாலியின் பலத்தை இராமனிடம்,

**நிலனும் நீருமாய் நெருப்பும் காற்றும் என்று**
**உலைவு இல்பூதம் நான்கு உடைய ஆற்றலான்;**
**அலையின் வேலை சூழ் கிடந்த ஆழிமா**
**மலையின் நின்றும் இம்மலையில் வாவுவான் (கம்ப. நட்புகோள் படலம், பா. 39)**

பெரிய சக்கரவாளகிரி என்னும் மலையிலிருந்து இங்கு தாவும் வலிமை படைத்தவன் என்றும் மேலும், "ஸீர்யே-அனுதிதே-பஸ்சிமாத்-ஸமுத்ராத்-பூர்வம்ச-தக்ஷிணாத்-உத்ரம் அபி-வ்யபதக்-லம:-க்ராமதி" (ராமாயன ரஸானுபவம், ப. 342) குரங்குகள் ஒரே தாவில் உயரத்திற்கு தாவிச் செல்லும் வாலியும் சூரியன் உதிக்கும் முன்பே மேற்கு சமுத்திரத்திலிருந்து கிழக்கு சமுத்திரத்திற்கும், தெற்கு சமுத்திரத்திலிருந்து வடக்கு சமுத்திரத்திற்கும் சுலபமாகத் தாண்டிச் செல்வான் என்றும் கூறுகிறான்.

வாலியின் வீரத்தைக் கண்டு அவர்முன் வாயுதேவனும் செல்லமாட்டார். முருகனின் வேல்படையும் வாலியின் முன் நிற்காது. வாலியின் வால் சென்ற இடம் கூட இராவணனுக்கு

**வெற்றி தராது என்ற கருத்தை,**
**கால்செ லாதவன் முன்னர்க் கந்தவேள்**
**வேல்செ லாதவன் மார்பின் வென்றியான்**
**வால்செ லாதவாய் அலது இராவணன்**
**கோல்செ லாதவன் குடைசெ லாதரோ (கம்ப. கிட்கிந்தா காண்டம், பா. 123)**

இப்பாடல் மூலம் உணர முடிகிறது. வாலி சிவ பூசை செய்யும் போது இராவணன் இவனைப் பிடிக்க பின்னால் இருந்து வருவதை அறிந்து தன் வாலால் கட்டி உலகம் முழுக்க இழுத்துச் சென்றதால் இராவணனின் உடல் எங்கும் புண்ணாகி இரத்தம் பெருகியது. அன்று முதல் இராவணன் வாலியை வெல்ல முடியாது என்று கூறி நட்பு பாராட்டும் அளவிற்கு மிகவும் வாலி வீரமிக்கவன் என்பதை உணர முடிகிறது.

**அதிகாயனின் வீரம்**

இராவணனின் மகன். கும்பகர்ணன் இறந்த செய்தியைக் கேட்டு என் சித்தப்பாவைக் கொன்றவர்களை நான் கொன்று வருகிறேன். "நான் தனியாகப் போகவா? அல்லது என்னுடன்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

சேனைகளை அழைத்துச் செல்லவா" என்று உரைப்பதன் மூலம் அதிகாயனின் வீரம் தென்படுகிறது.

**இந்திரஜித் வீரம்**

அதிகாயன் இறந்துவிட்ட செய்தியைக் கேட்டு மனம் வருந்தி பொங்கி எழுந்தான் இராவணனின் மூத்தமகன். பொய்யாக தவவேடம் பூண்ட இருவரையும் கொன்று தங்களுக்கு வெற்றி செய்தியைக் கூறுகிறேன் என்று போர்க்களம் செல்கிறான். முன்பு பல தவங்களை செய்து தேவர்களிடம் மாயசக்தி வரம் பெற்றவன். அதுமட்டுமல்ல நாகபாசனம் என்ற கொடிய ஆயுதமும் அவனிடம் இருந்தது. ஆகையால் அவன் போரின் போது உடலை மறைத்து இலக்குமணன் மீதும், வானவர்கள் மீதும் அம்பு மழைகளைப் பொழிந்தான் மாய வீரன் இந்திரஜித்.

**"ந-அஸ்ய-வேத-கதிம்"**

**"ஸரித்-நச-ரூபம்"**

**"தனு:-ஸரன்" (ராமாயன ரஸானுபவம், ப. 517)**

பிறகு நாகாஸ்திரத்தை விடுத்து இலட்சுமணன் உட்பட அனைவரையும் மூர்ச்சையடையும் படி செய்து தன் வீரத்தை இராவணன் முன் நிலை நாட்டியவன்.

**ஜடாயு வீரம்**

இராவணன் சீதையைத் தூக்கிச் செல்லும் போது ஜடாயு இராவணனுடன் வீரத்துடன் போராடுகிறது. தன் கூர்மையான நகங்களாலும், அலகினாலும் இராவணனின் முகம் மற்றும் தோள்களில் கீற இரத்தம் வடிந்தது.மற்றும் இராவணனின் தேரோட்டியை கொன்றதால் தேர் தடுமாறி கீழே இறங்கியது. கோபத்தால் சந்திரகாசம் என்ற வாளால் ஜடாயுவின் இறக்கைகளை வெட்டினான். தான் ஒரு பறவையாக இருந்தாலும் தன் நண்பனின் மருமகளைக் காக்கும் பொறுப்பில் வீரத்துடன் செயல்பட்டதைக் காணமுடிகிறது.

**உறவு**

தனித்தனியாக உள்ள உறவுகளை ஒரே குழுவாக ஒழுங்கு படுத்துவது உறவு. மனிதன் பிறக்கும் பொழுதே தாய், தந்தை, சகோதரன், சகோதரி, தாய்வழி உறவு, தந்தை வழி உறவு என்று குழந்தை பிறக்கும் போதே உறவுகள் வளர்ந்து கொண்டே செல்லும்.

**சம்பாதி ஜடாயு உறவு**

இருவரும் அண்ணன் தம்பி.இருவரில் யார் உயரமாக பறக்கிறார்கள் என்பதில் போட்டி போட்டு ஜடாயு தான் ஜெயிக்க வேண்டும் என்பதற்காக சூரியக்கதிர்கள் வரை சென்ற ஜடாயுவின் இறகுகள் எரிய தொடங்கின. அப்பொழுது தம்பிக்கு இவ்வாறு நேர்ந்து விட்டதே என்று காக்கும் பொறுப்பில் ஜடாயுவை விட மேலெழும்பி சூரியக் கதிர்கள் தம்பியின் மேல் விழாமல் காக்கப்பட்டான். ஆனால் சிறகுகளை இழந்த சம்பாதி நிசாகரர் என்ற முனிவரின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

வாசலில் விழுந்தார். அதுபோல் ஜடாயுவும் ஆற்றின் ஓரம் கீழே விழுந்தது. போட்டியாகவே இருந்தாலும் தன் தம்பியின் உயிருக்கு ஆபத்து என்று உணர்ந்தும் தன் உயிரையும் பொருட்படுத்தாது தன் தம்பியின் உயிரைக்காக்கும் அன்பின் உறவை நம்மால் உணரமுடிகிறது.

**கும்பகர்ணன் விபீஷ்ணன் உறவு**

விபீஷ்ணன் மேல் அளவு கடந்த பாசம். தான் இறக்கும் தருவாயில் இராமனிடம் இரண்டு வரங்கள் கேட்டான். முதல் வரமாக விபீஷ்ணனைக் காக்க வேண்டும்.

**தம்பி என நினைந்து இரங்கித் தவிரான் அத்தகவு இல்லான்**
**நம்பி! இவன்தனைக் காணின் கொல்லும் இறை நல்காணால்**
**உம்பியைத்தான் உன்னைத்தான் அனுமனைத்தான் ஒருபொழுது**
**எம்பி பிரியனாக அருளுதி யான் வேண்டினேன் (கம்ப. கும்பகர்ணன் வதை, பா. 350)**

என்று தன் உடன் பிறப்பிற்காக வேண்டும் அண்ணனின் அன்பை இராமகாதை வழி உணரமுடிகிறது.

**ஜடாயு-தசரதன் உறவு**

வானில் இருந்து விழுந்த ஜடாயு சிவபெருமான் கோவிலை அடைந்து சிவனை வழிப்பட்ட வேளையில் தசரதன் தன் படைகளுடன் வேட்டைக்கு வந்தார். களைப்பால் அக்கோவில் மரத்தடியில் உறங்கினார். களைப்பின் மிகுதியால் அருகிலிருந்த பாம்பு புற்றினை உறங்கும் பொழுது உதைத்தார். பாம்பு வெளியேறி கொத்தும் சமயத்தில் ஜடாயு அதனைப் பார்த்து பாம்பினைக் கொன்று தசரதனின் உயிரைக் காத்தது. அன்று முதல் இருவருக்குமிடையே நட்புறவு ஏற்பட்டது அதுமட்டுமல்ல காட்டில் இராம இலட்சுமணர்களைச் சந்தித்ததும் தன் நண்பன் தசரதனை விசாரிக்க, அயோத்தியில் நடந்த நிகழ்வுகளைக் கூறி தன் தந்தை இறந்ததைக் கூறியவுடன் தன் நண்பன் இல்லாத உலகில் நான் வாழ விரும்பவில்லை. இப்பொழுதே நெருப்பில் விழுந்து இறக்கப் போகிறேன் என்பதன் மூலம் அவர்களின் நட்புறவு தென்படுகிறது.

**பெண்ணியம்**

பெண்ணியம் என்பது உலகளாவியது. இஃது உலகில் உள்ள எல்லா குலத்துள்ளும் ஒவ்வொரு காலகட்டத்திலும் பெண்களின் முன்னேற்றத்தை விமர்சிக்க ஏற்பட்டது. குறிப்பாக பெண்களின் சமத்துவத்தையும் முன்னேற்றத்தையும் வலியுறுத்துவதாகும். பெண்ணியம் என்ற சொல் 1890லிருந்து தோன்றியது. தமிழில் பெண்ணியம், பெண்நிலை, வாதம், பெண்ணுரிமை ஏற்பு என்ற சொற்களாக வழங்கப் படுகின்றன. பெண்ணியம் என்ற சொல் அண்மைக் காலத்தில் தான் தோன்றி வளர்ச்சி அடைந்துள்ளது. இது பெண்களின் உரிமைக்காகப் போராடும் ஒரு புதிய இயக்கமாகும். அத்தோடு பெண்ணின் தனிப்பட்ட வாழ்க்கையிலும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

சமுதாய அரசியல் பொருளாதாரச் சூழ்நிலையிலும் அவள் ஆண்களுக்குச் சமமானவள் எனும் உயர்நெறியை நிலைநாட்டும் நோக்கத்தைக் கொண்டு இயங்குகிறது.

தொல்காப்பியரும் பெண்ணிற்குரிய இலக்கணத்தை,

**அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப (தொல்.பொருள்.கள., நூ. 100)**
**கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்**
**மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள் (தொல்.பொருள்.கற்., நூ. 1098)**

அச்சம், மடம், நாணம், கற்பு ஒழுக்கம், பொறுமை போன்ற குணங்கள் பெண்களிடம் இருக்க வேண்டும் என்று தொல்காப்பியம் கூறுகிறது. இது அறியாமை பெண்களை அறியாமை உடையவர்களாகவே சித்தரிக்கின்றது. இராமகாதையிலும் பெண்களைக் கீழ் நிலையில் வைத்தே பேசுவதைக் கீழ்க்கண்ட கூற்றுகளால் அறிய முடிகிறது.

இராவணனின் தங்கை சூர்ப்பனகை. தண்டகாரண்யம் என்ற காட்டில் வசித்து வந்த சூர்ப்பனகை, வனவாசம் வந்த இராமனின் அழகில் மயங்கி, அவனை அடைய வேண்டும் என்ற நோக்கில் தன் உருவத்தை அழகான பெண்ணாக மாற்றி இராமன் அருகில் செல்கிறாள். இராமன் ஏகபக்தவிரதன் என்பதால் அவள் அழகில் மயங்காமல் இலட்சுமணன் உனக்கு ஏற்றவன் என்று கூறி அவனிடம் அனுப்ப, அவன் கோபத்தால் அவளின் மூக்கையும் காதையும் அறுக்க, அசிங்கமான உருவத்தை அடைகிறாள். கவி பாடும் கவிஞர்கள் புலவர்கள் அனைவருமே பெண்களின் உருவத்தை குறைவாகவே மதிப்பீடு செய்கின்றனர். வால்மீகி தன் காப்பியத்தில் சூர்ப்பனகையை கிழப்பருவம் எய்திய ஒரு அரக்கியாகவே காட்டுகிறாள். அதுபோலவே பெண்களே மோகம் கொண்டவர்களாகவும், திருமணம் முடிந்த ஒரு ஆடவனுடன் ஒரு பெண்ணை சேர்த்து வைத்து காவியம் படைக்கின்றனர். ஆனால் கம்பர் மாறாக பெண்ணை அழகாக உருவகிக்கிறார் என்பதை,

**செங்கயல் போல் கருநெடுங்கண் தேமரு தாமரை உறையும்**
**நங்கைஇவர் எனநெருநல் நடந்தவரோ நாம்? (கம்ப. ஆரண்ய காண்டம், பா.117)**

கற்பில் சிறந்தவளாகப் பேசப்படுபவள் சீதை. பெண்கள் தவறே செய்யாதவர்களாக இருந்தாலும் அதை நிருபித்துக் காட்ட வேண்டிய காலம். சோதனையில் தான் கற்புக்கரசி என்று நிருபித்துக் காட்டுகிறாள் சீதை. சீதையைத் தூக்கிச்சென்ற இராவணனின் சுண்டு விரல் கூட சீதையின் மேல் படவில்லை. சீதையை மீட்ட இராமன் பல மாதங்கள் ஒரு ஆடவனின் இல்லத்தில் இருந்து வந்தவள். இவள் கற்பில் சிறந்தவளா என்று இந்த உலக மக்கள் கேள்வி கணைகளைத் தொடுப்பார். ஆகவே கற்பில் சிறந்தவள் என்று நிருபித்துக் காட்டு என்றதும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

சற்றும் சிந்திக்காமல் தீயினுள் புகுகிறாள். ஒரு பெண் என்றும் பாராமல் தீயினுள் விழச்செய்யும் போக்கு எவ்வாறு சரியாகும். ஏன் பெண்களைத்தான் இவ்வாறு புனைய வேண்டுமா. எந்த ஒரு ஆடவரையும் கவிஞர்கள் இவ்வாறு புனைந்து எழுதவில்லையே.

பெண் என்றால் மென்மையானவர்கள் என்று கூறுபவர்களே இவ்வாறு படைத்தால் பெண்களின் நிலை என்னவாகும். இராவணன் சீதையைக் கடத்தும் போது கூட என் கணவனால் உனக்கு அழிவுவரப் போகிறது. என்று ஒரு பெண் தன் கணவனுக்கு பெருமை சேர்க்கிறாள் என்பதை,

**தீமத: தஸ்ய- ராமஸ்ய**

**அஹம்- அபஹார்த்தும்- ந- சக்தா**

**தவ- வதார்த்தாய- விதி:**

**அத்ர- விஹிதக: ஹம்ஸா ந (ராமாயன ரஸானுபவம், ப. 297)**

என்று கூறுவதைப் பார்க்க முடிகிறது. ஆனால் இவ்வாறு கூறிய சீதையை இராமன் சந்தேகத்தால் மற்றவர்களுக்காக தீயினுள் புகச்செய்கிறான். ஆனால் அக்னியோ அவளை எரிக்காமல் கடவுளே முன் வந்து சீதை அப்பழுக்கற்றவள் என்று கூறிய பின் இராமன் ஏற்றுக்கொள்வதாக படைத்துள்ளார். தசரதனின் இளைய மனைவி கைகேயி.வீரமும், விவேகமும் உடையவள். தன் அன்பாலும் பாசத்தாலும் எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்தவள். அதுமட்டுமல்ல தன் மகன் பரதனை விட இராமன் மேல் அன்பு வைத்திருப்பவள். ஆனால் மந்தரை என்ற கூனியின் வார்த்தையால் மனமாறி இராமனை பதினான்கு ஆண்டுகள் வனத்திற்கு அனுப்பியவள்.

குரங்கு எப்படி ஒரு கிளையில் நில்லாது மரத்திற்கு மரம் தாவிக் கொண்டே இருக்கும். அதைப்போலவே பெண்ணின் மனமும் முதலில் தன் மகன் இராமன் பட்டம் சூடுகிறான் என்றதும் ஆனந்த களிப்பில் இருந்தவள் கூனியின் வார்த்தையால் இராமனைக் காட்டிற்கு அனுப்பத் துணிந்தாள். எப்படி என்றால் முன்னொரு காலத்தில் தசரதனின் தேருக்கு சாரதையாக இருந்து, தேரின் அச்சாணி உடைந்ததால் தன் ஆள்காட்டி விரலை அச்சாணியாக மாற்றி இரதத்தை ஓட்டியதால் இவளுக்கு இரண்டு வரங்களைக் கொடுத்தார். அன்றே தன் மகனுக்கு பதவி வேண்டும் என்றால் வரத்தைக் கொண்டு வாங்கி இருக்கலாம். திடீரென்று வரும் காட்டாற்று வெள்ளம் போல் கூனியின் வார்த்தையால் மனமாறி இந்நிலைக்குத் தள்ளப்படுகிறாள். பெண் என்பவள் எப்பொழுதும் தங்களின் நற்குணம், சிந்தனையில் இருத்தால் வாழ்க்கை வசப்படும். அடுத்தவர்களின் பேச்சில் செயலில் இறங்கினால் இவ்வாறே நடைபெறும்.

பெண்மை என்பது பெண்ணின் அடையாளம். அடிமையின் அடையாளம் அன்று ஒருவனுக்கு ஒருத்தி என்பது பழமொழி. ஆனால் அன்றைய அரசர்களோ பல மனைவியருடன்

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

கூடி சந்தோஷமாகவே வாழ்ந்துள்ளனர். அதுபோல இராமகாதையில் தசரதன் அறுபத்தினான்காயிரம் மனைவியருடன் வாழ்ந்தார் என்பதைக் காண முடிகிறது. ஆண் நிறைய பெண்களிடம் உறவு வைத்தால் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு பெண் கணவனைத் தவிர வேறு ஆடவனிடம் பேசக் கூடாது என்பதன் மூலம் பெண்ணின் அடிமைத்தனத்தைக் காணமுடிகிறது.

**கடமை**

பிறப்பையும் வாழ்க்கை நிலையையும் கொண்டு நாம் எந்த சமூகத்தில் பிறந்துள்ளோமோ அந்த சமூகத்தின் இலட்சியங்களுக்கு நம்மை உயர்த்தவும் உன்னதப்படுத்தவும் உதவுகின்ற ஒன்றே கடமை. கடமையில் அன்பு என்ற எண்ணை இடாமல் கடமைச் சக்கரம் சுற்றாது. பெற்றோர் பிள்ளைகளுக்கும் கணவன் மனைவிக்கும் குழந்தைகள் பெற்றோர்க்கும் என்று கடமை நீண்டு கொண்டே செல்லும். இராமகாதையிலும் இவ்வகைக் கடமைகள் இடம் பெற்றுள்ளது. “தந்தை மகற்குக் கடனே” என்பதைப் போல் தன் மகனைப் பாடசாலைக்கு அனுப்பி வைத்து, பல கலைகளையும் கற்று வர உறுதுணையாக இருப்பவர் தந்தையே. இக்கடமையை தசரதன் இராமன் மற்றும் பிற குமாரர்களையும் பாடசாலைக்கு அனுப்பி சிறந்த வீரர்கள் என்று பெயர் பெறும் அளவிற்கு உயர்த்திய தந்தையின் கடமையை நம்மால் உணரமுடிகிறது. “தாயிற் சிறந்த கோயிலும் இல்லை” என்பது போல் தன் தாயாகப் பாவிக்கப்படும் கைகேயி “நீ பதினான்கு ஆண்டுகள் வனத்திற்கு செல்ல வேண்டும் பரதன் நாடாள வேண்டும்” என்று கூறியதும் அவளின் வார்த்தைக்கு இராமன் எதுவும் கூறாமல் சிரித்த முகத்துடன் காட்டிற்கு செல்லும் மகனின் கடமையைக் காண முடிகிறது. அதுமட்டுமா அண்ணன் எவ்வழியோ தம்பியும் அவ்வழியே என்றாற் போல் இராமன் கானகம் செல்லும் போது தன் தாயிடம் கூட கூறாமல் தன் அண்ணனுடன் கானகம் செல்லத் துணிந்த தம்பியின் கடமையை இராமகாதை வழி உணரமுடிகிறது. கொடுத்த வாக்கைக் காப்பாற்றல் சிறந்த கடமையாகும். முன்பு போரில் தன் உயிரைக் காத்த கைகேயிக்கு இரண்டு வரங்கள் கேட்கும் போது வழங்குவதாகக் கூறினார். அதற்குரிய காலமாக இராமன் பட்டாபிஷேக நாளில் கேட்க, தசரதன் மறுப்பு கூறாமல் தன் வாக்கைக் காப்பாற்றி தன் கடமையிலிருந்து தவறாமல் இருந்து இன்னுயிரை ஈந்தவர்.

“கணவனே கண் கண்ட தெய்வம்” என்று அன்றைய பெண்கள் உயிர் வாழ்ந்தனர். இராமன் காட்டிற்கு செல்கிறான் என்றதும் துறவு ஆடை பூண்டு இராமன் பின் சென்ற சீதையின் கடமையையும் பக்தியும் உணரமுடிகிறது. செஞ்சோற்றுக்கடனுக்காக தன் உயிர் போய்விடும் என்ற நிலையிலும் தன் நிலை மாறாமல் இராமனுடன் போர் செய்து இறந்த கும்பகர்ணன். இறக்கும் தருவாயிலும் தன் தம்பி விபீஷ்ணனைக் காக்கும் படி வேண்டுவதன் மூலமும் தம்பி அண்ணனுக்கு செய்ய வேண்டிய கடமை மற்றும் ஒரு அண்ணணாக இருந்து தன் தம்பியைக் காக்கும் கடமையிலிருந்து வழுவாமல் இருந்ததை இராமகாதை வழி அறிய

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

முடிகிறது. மாற்றான் மனைவியைக் கவர்ந்து வந்தது தவறு என்று தெரிந்தும் தன் தங்கையின் மான அவமானங்களுக்காக தன் உயிரையும் விடத் துணியும் இராவணனின் கடமை உணர்வு புலப்படுகிறது.

**முடிவுரை**

சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், புராணங்கள் அனைத்தும் வீரத்தைப் பறை சாற்றுவது போலவே இராமகாதை யிலும் கும்பகர்ணனின் வீரம், வாலியின் வீரம், அதிகாயனின் வீரம், இந்திரஜித்தின் வீரம், ஜடாயுவின் வீரத்தை மிக அழகாகக் கூறுவதை இராமகாதை வழி அறிய முடிகிறது. உறவின் முறைகளாக அண்ணன் தம்பி உறவாக ஜடாயு சம்பாதி உறவு, கும்பகர்ணன் விபீஷ்ணன் உறவையும், தசரத மன்னன் ஜடாயு என்ற பறவையுடன் நட்புறவு கொள்வதையும் இராமகாதையில் காணமுடிகிறது. பெண்களைப் புலவர்கள் உயர்ந்த நிலையிலும், தாழ்ந்த நிலையில் வைத்து பேசுவதையும், பெண்ணின் வீரம் பற்றியும் கூறப்பட்டுள்ளதை இராமகாதை வழி அறியமுடிகிறது. தாய், தந்தை கூறிய வார்த்தைக்கு மறுப்பு ஏதும் கூறாமல் காட்டிற்குச் சென்ற இராமனின் கடமை பற்றியும், இராமனுடன் போரிட்டால் தன் உயிர் பிரிந்து விடும் என்று தெரிந்தும் இராவணனுக்காக தன்னுயிரை விட்ட கும்பகர்ணனின் கடமை உணர்வையும், தன் தங்கைக்காக தன் உயிரை மாய்க்க முன் வந்த இராவணனின் கடமைப் பற்றியும் ந.சுப்புரெட்டியார் இயற்றிய நூலைக் கொண்டு பூ.சு.கணேசமூர்த்தி அவர்கள் தமிழாக்கம் செய்த இராமகாதை வழி உணரமுடிகிறது.

**குறிப்பு நூல்கள்**

[1] இளம்பூரணார். *தொல்காப்பியம். பொருளதிகாரம்.* கௌரா ஏஜென்ஸீஸ், திருவல்லிக்கேணி, சென்னை, 2005

[2] கம்பர். *கம்பராமாயணம்.* வை.மு.கோ.பதிப்பகம், சென்னை.

[3] கணேஷ்மூர்த்தி பூ.சு. *இராமகாதை காட்சியும் கருத்தும்.* ந. சுப்புரெட்டியார் 100, கல்வி அறக்கட்டளை, மேற்கு அண்ணா நகர், சென்னை, 2020.

[4] கிருஷ்ணமூர்த்தி எஸ்.வி. *ராமாயண ரஸானுபவம்.* திருவல்லிக்கேணி,சென்னை, 2015.

[5] சக்திவேல்.சு. *நாட்டுப்புறவியல் ஆய்வு.* மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 2006.

[6] சுப்புரெட்டியார். ந. *அண்ணல் அனுமன்.* ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை, முதற் பதிப்பு, 2003.

[7] பழனிவேல் பிள்ளை பெ வித்துவான். *கலிங்கத்துப் பரணி.* திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1965.

[8] பாலுசாமி நா. *திருக்குறள்.* பாண்டியன் புக் டிப்போ, மதுரை, 1987.

[9] புலியூர்க்கேசிகன். *புறநானூறு.* பாரி நிலையம், சென்னை.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

[10] வேங்கடாசலம் பிள்ளை இரா. *அகநானூறு.* ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை, தமிழ் மண் பதிப்பகம், சென்னை.

**References**

[1] Ellampuranar. *Tholkappiyam,* Porulathikaram, Gaura Agency, Thiruvellikeni, Chennai, 2005.
[2] Kambar. *Kambaramayanam.* Vai.Mu.Ko. Publication, Chennai.
[3] Ganasamoorthi P.S. *Ramakathi Kachium Karuthum,* Na. Subbu Reddiar 100, Educational Trust, Anna Nagar West, Chennai. 2020.
[4] Krishnamoorthi. S. V. *Ramayana Rasaanubavam*. Thiruvellikeni, Chennai, 2015.
[5] Sakthivel S. *Nattupuraviyal Aaivu*. Manivasagar Publication, Chithambaram. 2006.
[6] Subbu Reddiar. N. *Annal Hanuman*. Azhiyan Printers, Chennai, First Edition, 2003.
[7] Palanivel Pillai P. Vitthuvan. *Kaliggathupparani.* Thirunelveli Thenindia Saivasiddaanta Noorpathippu Kalagam, Chennai. 1965.
[8] Balusamy N. *Thirukkural*. Pandian Book Depot, Madurai. 1987.
[9] Puliyurkkecian. *Purananuru.* Parinilaiyam, Chennai.
[10] Vengadasalam Pillai R. *Agananuru*. N.M.Veggadasamy Nattar Urai, Tamil Man Publication, Chennai.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.





தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்

அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்



International Journal of Tamil Language and Literary Studies

*A Bi-Yearly Peer-Reviewed International Journal*

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

# பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியாரின் சோழ நாட்டு திருப்பதிகள் - ஓர் ஆய்வு

## A Study on Professor Subbu Reddiar's Holy Thirupathis in Cholas Regime

**தி. ஹேமாவதி**, முனைவர் பட்ட ஆய்வாளர், முதுகலைத்தமிழியல் (ம) உயராய்வுத்துறை,

செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**T. Hemavathy**, Ph.D Research scholar, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0002-1289-537X**

**முனைவர் ப. விமலா,** தலைவர் (ம) உதவிப்பேராசிரியர், முதுகலைத்தமிழியல் (ம) உயராய்வுத்துறை,

செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.

**Dr. P. Vimala,** Head & Assitant Professor, PG & Research Department of Tamil,
Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.

**ORCiD: https://orcid.org/0000-0003-4486-118X**

**DOI: 10.5281/zenodo.7280334**

### Abstract

*During the kingdom of Aaditya Karigala Cholan, there were around Forty Holy Thirupathis in the Chola regime out of 108 Vaishnava Holy Scripts. Prof. N. Subbu Reddiar in his book elicits about the importance of Holy Thirupathis, the specialities of the temples, the architectural design of the temples, the significant beauty of Perumal, the melody of Mangala Saasanam sung by the Alwars and their worship. In this research paper, the study is specific to the Holy Thirupathis of the Chola regime, which magnifies the inherent and boundless affection rendered by Alwars to Perumal. The Alwars' devotion to the lord and the sweet melodies sung by them has been gathered through the book "Oorum Perum". Further, it had been the customary practice of Alwars to visit the temples and praise the Lord Vishnu shows their devotion to reach Perumal. With this miraculous power, Thirumazhaisai Alwar made the king marry the lady. The importance of the faith of Vaishnavism is popularly envisioned with the spiritual adherence to Perumal by the Twelve Alwars. When Karmega Kannan visits the place, the young girls of the place who has attained maturity attract him with melodious and romantic songs. Krishna's magical tune in dancing style on the forehead of "Five Headed Serpent" (Kaarkodak) and protecting the Aayarpadi people by lifting the mountain "Kovarthan" and also killing the female monster had been the greatest wonders of Krishna and the alwars sing of these chivalric actions through their melodious songs. Consequently, the collection of hymns and melody songs was compiled into a series of 4000 songs called "Nalayira Divya Prapantham" sung by Alwars. The divine respect for Perumal by Periyalwar can be seen through the wedlock of Aandal with Perumal. Aandal became popular as Goddess, thereby attaining glory with Perumal. Hence, Perumal is glorified by the incarnation of Archavathara through the observations of Subbu Reddiar based on the Thirupathis flourished at the times of the Chola Regime. The article elaborates on the ideas of Reddiar on the holy Thirupathis at the time of the Chola regime.*

**Keywords:** N. Subbu Reddiar, Vaishnavism, Thirupathis, Cholas Regime.

### ஆய்வுச்சுருக்கம்

*சோழ நாட்டு திருப்பதிகளின் வரலாறானது கரிகால சோழன் மன்னனுடைய காலத்தில் கட்டப்பட்ட கோயில்களின் 108 வைணவத் திருத்தலங்களில் சோழ நாட்டில் 40 திருப்பதிகங்கள்*

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

*உள்ளன. இச்செய்தியை பேராசிரியர் திரு. ந. சுப்புரெட்டியார் அவர்களின் நூலின் வாயிலாக அறிய முடிகிறது. திரு. ந. சுப்புரெட்டி அவர்கள் தன்னுடைய நூலில் திருப்பதிகங்களையும், கோயிலின் சிறப்புகளையும், கோயிலின் அமைப்புகளையும், திருத்தலங்களில் எழுந்தறியுள்ள பெருமானின் சிறப்பினையும், ஆழ்வார்கள் பாடிய மங்களாசனம், ஆழ்வார்கள் வணங்கிய விதத்தையும் நாம் புரிந்துக் கொள்ளும் வகையில் இந்த நூலானது அமைகின்றது. ஆய்வுக்கட்டுரையில் சோழ நாட்டு திருப்பதிகங்களில் சில திருத்தலங்கள் மட்டுமே எடுத்துள்ளேன். ஆழ்வார்கள் எம்பெருமான் மீதுக் கொண்ட அளவில்லா அன்பினையும், அவர்கள் இறைவனுக்கு செய்த பணியையும், ஆழ்வார்கள் மனம் உருகி பாடிய பாடல்கள் ஆய்வுக் கட்டுரையின் மூலமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஊரும் பேரும் என்னும் நூலில் இருந்து திருத்தலங்கள் அமைந்துள்ள ஊரின் சிறப்புகளை அறியலாம். திருமால் எழுந்தருளியுள்ள கோயில்களுக்கு ஆழ்வார்கள் சென்று திருமாலின் சிறப்புகளைப் பாடியுள்ளனர். பெருமாளின் மீது இருந்த பக்தியினால் திருமழிசை ஆழ்வாரின் கதையில் மூதாட்டி இளமை பருவம் அடைந்த நிலை, திருமழிசை ஆழ்வார் பெருமானை அழைத்த நிலை, மன்னன் மனமாறிய நிலை எடுத்துரைக்கிறது. ஆழ்வார்கள் அனைத்து வைணவத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிப்பட்டு இறைவனை புகழ்ந்து பாடுவதையும் நூல்களின் வாயிலாக அறியலாம். கார்மேகக் கண்ணன் உலா வரும் போது பருவப்பெண்கள் காதல் கொள்ளும் நிலையினை பாடல்கள் மூலமாக விளக்குகின்றன. கிருஷ்ணன் ஐந்தலை நாகத்தின் மீது நடனமாடுவதையும், கோவர்தன் மலையை தூக்கிப் பிடித்து ஆயர்பாடி மக்களை காப்பாற்றியததையும், பூதனை பெண் அரக்கி பால் கொடுத்ததை கிருஷ்ணருடைய லீலைகளில் பெருமானின் அவதாரத்தில் ஒரு அவதாரமாக விளங்குகின்றது. ஆழ்வார்களுடைய பாசுரங்களை நாலாயிரத் திவ்ய பிரபந்தமாக தொகுக்கப்பட்டது. பெரியாழ்வார் இறைவனுக்கு தொண்டுச் செய்ததையும் ஆண்டாளை வளர்த்து சூடிக்கொடுத்த மலர் கொடி பெயர் பெற்று திருவரங்கத்தில் இறைவனுடன் ஐக்கியம் ஆனதையும் விளக்குகிறது. இறைவன் மீது கொண்ட பக்தியால் இறைவன் அவர்களுக்கு காட்சி தந்ததை எடுத்துரைக்கிறது. திருமாலுக்கு வழங்கப்படும் பெயர்கள், அர்ச்சாவதார பெருமைகள், இறைவனை பாடாது தம் குருவை பாடிய மதுரக்கவி ஆழ்வாரையும், முல்லை நில மக்கள் திருமாலை வணங்கியதை எடுத்து காட்டுகின்றது. சந்திரன் சாபம் பெற்ற கதையினை நூலின் மூலம் விளக்குகிறது. திருமாலின் தசவதாரத்தின் பெயர்கள் திருமால் அவதாரம் எடுத்த கதை ஆகியவற்றை இக்கட்டுரையானது எடுத்து இயம்புகிறது.*

**குறிப்புச் சொற்கள்:** ந. சுப்புரெட்டியார், வைணவம், ஆழ்வார்கள், சோழ நாட்டு திருப்பதிகள்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

**முன்னுரை**

ஆழ்வார்கள் உள்ளம் உருகி அனுபவித்த ஆனந்த பரவசம் அடைந்த ஆசிரியர்கள் ஒவ்வொரு திருப்பதியின் பெருமாள் அவதாரப் பெருமையைப் பக்தர்களுக்கு கூறியும், "யான் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக" என்ற பாடலுக்கேற்ப அனைவருக்கும் திருப்பதிகளில் எழுத்தருளியிருக்கும் பெருமானை நேரில் கண்டு மகிழ்ச்சி பெறுதல் வேண்டும். திருவரங்கத்தின் சிறப்பு வரலாற்றுக் காலத்தையும் கடந்து நிற்கின்றது என்பதை இத்திருப்பதி குறித்து வழங்குவது புராணக் கதைகளாகும். தமிழ் நாட்டில் பக்தி இயக்கம் தோன்றிய காலத்திலும் வைணவத்தின் வளர்ப்புப் பண்ணைகளாக திகழ்ந்த பெருந்தலங்களில் திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவெங்கடம், காஞ்சிபுரம், இவற்றுள் பெரிய கோவில் என வழங்கப் பெறும் திருவரங்கம் தனிச் சிறப்புரிய தலமாகும். ஆழ்வார்கள் திரு அரங்கத்தைப் பற்றியும் அரங்கநாதனையும் பக்தி பாடல்கலைப் பாடியுள்ளார்கள். 'அரங்கநாதன் பள்ளி கொண்டுள்ள அத்திசையை நோக்கிக் கைதொழுதேன் கண்டேன்" என்று பாடினார்கள் இக்கட்டுரையில் ஆழ்வார் பெருமக்களின் பக்தியுணர்ச்சியினையும், பாசுரங்களின் சொல் வளமும் பாசுரங்களில் ஆழங்கால் பட்ட பாங்கு சிறப்பினையும் அரங்க நாதனின் திருவடிகளை அடையும் முறையினை இதில் காணலாம்.

ந. சுப்புரெட்டி அவர்கள் சோழ நாட்டு திருப்பதிகப் பாடல்களில் ஊர்களின் பெருமைகளையும், எம்பெருமானின் பெருமைகளையும் இலக்கிய நூல்களின் மூலமாகவும், பன்னிரெண்டு ஆழ்வார்கள் மூலமாகவும் எடுத்துரைக்கும் வகையில் நான்காம் திருமொழியில் திருவரங்கம் பற்றி ஐந்தாம் பத்து பாடலின் மூலமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**உந்திமேல் நான் முகனைப் படைத்தான், உலகுண்டவன்**
**எந்தை பெம்மான் இமையோர்கள் தாதைக்கு இடம் என்பரால்**
**சந்திேனாடு மணியும் கொழிக்கும் புனல்காவிரி**
**அந்திபோலும் நிரந்தார் வயல்சூழ் தென்னரங்கமே (நான்காம் திருமொழி, 5-1378)**

திருவரங்கம் பிறந்த கதையினை தன்னுடைய ஆழ்மனதில் இருந்து பிரம்மனைப் படைத்தவன் பயிர் செய்யும் காலத்தில் உலகை உண்டாக்கியவன். என் குலத்திற்கு நாதனாக விளங்கியவன். சூரியனை தந்தை இடமாகவும், சந்தனைக் கட்டையாகவும், நவரத்தினம் போல் இருக்கும் காவேரி நதியை படைத்தவனாகவும் அதில் பயிர்கள் வழித் தோன்றிய வயல்களால் சூழப்பட்ட திருவரங்கமே கழிநிறைத்துறைப் பாடலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. சோழ நாட்டு திருப்பதிகளில் 108 வைணவ தளங்களில் முதன்மைத் தலமாக விளங்கக்கூடிய திருவரங்கம் அரங்கநாத சுவாமி திருக்கோவிலாகும். முதன்மைத் தலமாக விளங்கக்கூடிய இத்தலத்திற்கான சிறப்பு பெயர்கள் ஸ்ரீரங்கம், பூலோக வைகுண்டம், அருள்மிகு ரங்கநாதன் என்பவையாகும்.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

திருவரங்கம் கோவிலில் எழுந்தருளியுள்ள அருள்மிகு ரெங்கநாதனை அருள் செய்து பூஜித்து தினமும் அவர் பெருமைகளையும் சிறப்புகளையும் பாடி மகிழ்ந்தனர் ஆழ்வார்கள்.

காவிரியாற்றின் நடுவே அமைந்த திருவரங்கம் வைணவ உலகத்தில் தலைசிறந்து திகழும் திருப்பதியாகும். அதன் பெருமையறிந்த தென்னார்க்காடு மக்கள் கள்ளக் குறிச்சி வட்டத்தில் பெருமாளுக்கு ஒரு திருக்கோயில் கட்டி, அதற்கு உத்தர திருவரங்கம் என்று பெயரிட்டார்கள். திருமாலிடம் தலைசிறந்த அன்பு வாய்ந்த கிருஷ்ண தேவராய மன்னர் காலத்தில் உத்தர திருவரங்கத்தில் உள்ள அரங்கநாதர் கோவிலுக்கு மூன்று ஊர்கள் வழங்கப்பட்ட செய்தி கல்வெட்டால் விளங்குகின்றது. இக்காலத்தில் திருவரங்கம் என்பதே அவ்வூரின் பெயர்.

**போயவனியிற் சிலபுரச் சமய நாடும்**
**பேயரிவை விட்டெமு பிறப்பையு மறுப்பீ**
**ராயனை யனந்தனைய னந்தசய நத்தெம்**
**மாயனை யரங்கனை வணங்கி மருவீரே (திருவரங்க கலம். மூலமும் உரையும், ப. 38)**

ஆயர்குலத்தில் பிறந்த மைந்தன், அனந்தன் என்று பெயர் பெற்று பாம்பை படுக்கையாக கொண்டிருக்கின்ற பல வித்தைகளை செய்யும் பெருமானை கூட்டமாகச் சென்று வழிபடுவீர்கள் ஆயினும் எழு பிறப்பியுள்ள பாவங்கள் நீங்க வேண்டும் என்றால் திருவங்கம் சென்று பெருமானை வணங்குவீராக.

**திருவரங்கம்**

வைணவ திருத்தலங்களில் முதல் திருத்தலம் திருவரங்கம் ஆகும். ஸ்ரீரங்கம் என்னும் வைணவத்தலம் திருச்சி மாவட்டத்தில் ஸ்ரீரங்கம் என்னும் இடத்தில் உள்ளது. ஸ்ரீரங்க நாதர் மூலவராக இருந்து அவரை காண வரும் பக்தர்களுக்கு காட்சித் தருகிறார். திருவரங்கம் தெற்கு பார்த்தவாறு சன்னதி அமைந்துள்ளது. ஸ்ரீரங்க நாச்சியார் தாயாராகவும், எம்பெருமாள் உற்சவராகவும், ப்ரணவாக்ருதி விமானமகவும், புன்னை தலவிருட்சகமாகவும், தீர்த்தமாக சந்திர புஷ்கரணி, வில்வ தீர்த்தம், நாவல் தீர்த்தம், அரசு தீர்த்தம், புன்னை தீர்த்தம், மகிழ தீர்த்தம், புரசு தீர்த்தம், மா தீர்த்தம் போன்ற தீர்த்தங்கள் திருவரங்க கோவில்களில் வழங்கப்படுகின்றன மற்றும் ஸ்ரீரங்கநாத பெருமாளை தரிசனம் கண்டவர்கள் சந்திரன், விபீஷணன், தர்மவர்மன், ரவிதர்மன், கிள்ளிவளவன் ஆகியோர் ஆவர். இவற்றை திருவரங்கம் என்னும் நூலில் மூலம் அறியப்படுகிறது.

**திருவரங்கம் வரலாறு**

திருவரங்கத்திற்கு பூலோக வைகுண்டம் என்ற பெயரும் உண்டு. ஸ்ரீரங்கத்தை பற்றி புகழ்ந்து**ப்** பன்னிரெண்டு ஆழ்வார்கள் பாடியுள்ளனர். இராமனை காண வந்த விபீஷணன் பிரம்மா பூஜித்து வந்த மூர்த்ததை ராமனிடம் இருந்து பெற்றுக்கொண்டு செல்லும் போது கை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

தவறி அரங்கன் காவேரி கரையில் விழுந்து விடுகின்றன. உடனே விபீஷ்ணன் அதை எடுக்க முயன்ற போது எடுக்கமுடியாததால் இங்கு இருந்தே அருள் தருவாயாக என்பாதை **இலங்கைக்கு வரவில்லையென்றாலும் பரவாயில்லை இலங்கையை நோக்கியவாறு தாங்கள் சயனித்திருக்க வேண்டும் (சிறப்புப் பெற்ற வைஷ்ணவ தலங்கள், ப. 9)** என்று விபீஷணன் கேட்டுக்கொண்டார் என்பதை சிறப்புப் பெற்ற வைஷ்ணவ தலங்கள் என்னும் நூலின் வாயிலாக காணலாம்.

**திருவெள்ளாறை**

திருவெள்ளாறை என்பது திருவரங்கத்திற்கும் தொன்மையான ஊர் ஆதி வெள்ளாறை ஆகும். ஆதி என்பது இறைவன் முதல் பொருள். வெண்மையான பாறையினால் ஆன மலை என்று பொருள்.

**வென்றி மாமழுவேந்திமுன் மண்மிசை மன்னரை மூவெழுகால்**
**கொன்றதேவ! நின்குரை கழல் தொழுவது ஓர்வகை எனக்கருள் புரிய**
**மன்றில் மாம்பொழில் நுழைதந்து மல்லிகைமௌவலின் போது அலர்த்தி**
**தென்றல் மாமணம் கமழ்தரவரு திருவெள்ளறை நின்றானே. (நாலாயிர திவ்யப்பரபந்தம் மூலமும் விளக்கவுரையும், நான்காம் தொகுதி, ப. 1725)**

அந்தி மாலைப்பொழுதியின் போது குளிர்க்காற்றில் மலர்ந்த மலர்களின் வாசமானது மாந்தோப்பின் வழியாக சென்று மலர செய்த பெருமானே! வெற்றி வாகை சூடிய பெருமானே இருபத்தொரு தலைமுறையை கொண்ட அரக்கர்களைக் கொன்று வெற்றி வாகை சூடிய பெருமானே எமக்கு காட்சியருள்வாயாக.

**திருமாலின் அவதாரங்கள்**

அவதாரம் என்பது உலகில் வாழும் மக்களுக்கு தீங்கு விளைவித்து உயிர்களை துன்புறுத்தும் அரக்கர்கள் மற்றும் அசுரர்களை அழிக்கும் பொருட்டு இறைவன் பூமியில் அவதாரம் எடுத்தல் அதாவது இறங்கி வருதல் என்பதாகும். திருமால் என்றாலே அவதாரம் என்று பொருள். திருமால் அவதாரங்கள் பத்து அவற்றை தசாவதாரம் என்று கூறப்படுகிறது. அவை மச்சாவதாரம், கூர்மாவதாரம், வராகவதாரம், நரசிம்மவதாரம், வாமனவதாரம், பரசுராமாவதாரம், ராமவதராம், பலராமவதாரம், கிருஷ்ணாவதாரம், கல்கி அவதாரம் ஆகியனவாம். உலகில் உள்ள உயிர்கள் இன்புற்று வாழ்வதற்கு இறைவன் எடுத்த அவதாரம் ஆகும் இவற்றை வைணவ நூல்களின் வாயிலாக அறியமுடிகிறது. தசாவதாரங்களில் ஒன்றான கல்கி அவதாரத்தினை பற்றி நம்மாழ்வார் பாடலில் கூறப்படுகிறது என்பதை,

**தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாயரியாய் குறளாய்**
**மூவுருவிலி ராமனாய் கண்ணனாய் கற்சியாய் (பெரியாழ்வார் திருமொழி, ப. 99)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

மீனம், ஆமை, ஏனம், அரி, குறள், பரசுராமன், பலராமன், சீத்தாராமன், கண்ணன், கற்கி போன்ற அவதாரங்களை திருமால் எடுத்து உலக மக்களை ஆபத்து வரும்போது எல்லாம் இறைவன் ஆட்கொண்டான் என்பதை மேலே உள்ள பாடல் வரியின் மூலம் விளக்கப்படுகிறது.

**நாராயண நாமம்**

பெருமாளின் நாமத்தை தினமும் உச்சரித்தால் மக்களுக்கு பல நன்மைகள் தரும் என்று திருமாலின் நாமத்தை பெரியவர்கள் உச்சரிக்க சொன்னார்கள் இதனுடைய நூற் குறிப்பானது பெரிய திருமுறைகளில் காணலாயின.

**நற்றுனையாகப் பற்றினேன் அடியேன்**

**நாராயணா என்னும் நாமம் (பெ.தி.1:1:8, வளம் தரும் வைணவம், ப. 26)**

மூன்று உலகத்தையும் பாற்கடலில் பள்ளிக் கொண்டுள்ள இறைவன் எம்பெருமான் திருவடியை சரணாகதி என்று அடைந்தவர்களையும் இறைவன் நாமத்தை நாள்தோறும் உச்சரித்தவர்களையும் திருமால் தம் அருளால் காப்பாற்றியதை மேலே உள்ள அடியின் மூலம் அறியலாம். நாராயண நாமம் உச்சரிப்பதால் நம் பிறவி பயன் நீங்கி சொர்கலோகம் எளிதில் அடையலாம் என்பதை அறியும் வகையில் ஆழ்வார்கள் நாள்தோறும் இறைவனின் மீது கொண்ட பக்தியின் விளைவாக நாராயண என்னும் நாமத்தை அவர்கள் வாழ்நாள் முழுவதும் உரைத்து நாராயணன் திருவடியை அடைந்தனர் என்பதை பன்னிரு திருநாமப் பெருமைகள் என்னும் நூலின் வாயிலாக அறியலாம். **நாராயணா என்னாத நா என்ன நாவே?** இவ்வுலகில் நான் இருக்கும் வரையில் அதாவது நான் உயிர் வாழும் வரை என் உயிர், ஆவி, உடல் மற்றும் என்னுடைய அனைத்து உறுப்புக்களும் இறைவனின் நாமத்தை உச்சரிப்பதே ஆகும். நாராயணன் நாமத்தை உச்சரிக்காமல் இருப்பவர்கள் வாழும் வாழ்க்கை பயனற்றதாகும் என்பதை வைணவ நூல்களின் வாயிலாக எடுத்துரைக்கப்படுகிறது. நாரயணன் நாமத்தை உச்சரித்தால் சொர்கலோகம் கிட்டும். நம் செய்த பாவங்கள் விலகும் புண்ணியம் கை கொடுத்து நம் பாவ காரியங்கள் கரைந்து போகும் என்பதை திருமாலின் நாமம் எடுத்துரைக்கிறது. எவ்வளவு அரக்க குணம் கொண்டுயிருந்தாலும் பெருமாளின் நாமத்தை சொல்வதல் அவர்களுடைய பாவங்கள் நீங்கி புண்ணியங்கள் சேறும் என்பதை, **நாராயணனைத் துதியாதார் நரகம் சேர்வர் (பார்த்தசாரதி மாலை)** இவ்வரியானது பார்த்தசாரதி நூலின் வாயிலாக அறியமுடிகிறது.

மகாபாரத்தில் பாண்டவர்கள் சூதாட்டத்தில் கௌரவர்களிடம் நாடு, வீடு, அரசாட்சி, மனைவி என அனைத்தையும் இழந்தனர். திரௌபதியை அவமானம் படுத்தும் பொருட்டு பெரியோர்கள் சூழ்ந்தியிருக்கும் அவையில் தூரியோதனன் திரௌபதியின் துகில் இழுக்கப்பட்டு ஒன்றும் செய்ய முடியாத பெரியவர்களின் நிலையைக்கண்டு திரௌபதியானவள் கண்ணனை நினைத்து ‘கோவிந்தா’ என்னும் நாமத்தை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

உச்சரித்துக்கொண்டு தன் மானத்தைக் காத்துக் கொண்டாள். கண்ணன் மீது அளவுக்கிடந்த பக்தியால் கண்ணனே இறங்கி வந்து திரௌபதியின் மானத்தை காத்ததை புராணச் செய்திகள் மூலம் அறியப்படுகிறது என்பதை, **துரௌபதிக்கு ஆபத்தில் புடவை சுரந்த்து கோவிந்த நாமமிறே (முட்சுப்படி – 16)** ஓர் ஊரில் க்ஷத்திரியக் குலத்தில் ஒரு கொடியவன் இருந்தான். அவனுடைய பாவசெயல்களைக் கண்டு ஊர் மக்கள் அவனை ஊரைவிட்டு துரத்திவிட்டனர் அந்த கொடியவன் காட்டில் வாழ்ந்து வந்தான். க்ஷத்திய குலத்தில் பிறந்த கூத்திரிய பந்தன் (கத்திரிபந்து) பலருக்கு இன்னல்களை செய்தவன் கடவுளின் அருளால் புதிய ஞான ஒளிப்பெற்று முனிவர் வடிவில் சென்று கூத்தரிய பந்தனுக்கு கோவிந்த என்ற நாமத்தை தினமும் தொழுவ செய்து அவன் பாவக் கண்ணக்குகளை அவர் நாமத்தின் மூலமாக வெளிகொணரச் செய்து திருந்திய வைணவ தல சீடராக மாற்றினார். இது பெருமாலுடையச் சிறப்புமிக்க ஒன்றாகும்.

**திருமாலின் சிறப்பு பெயர்கள்**

திருமாலின் பெயர்களை பல்வேறு தேசங்களில், பல்வேறு ஊர்களில், பல்வேறு இடங்களில் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றன அதாவது திருமலை தேவன், கோவிந்தன், ரமணன், நாராயணன், பரசுராமன், கிருஷ்ணன், வெங்கடேசன், விக்ஷ்ணு, தசாவதாரன், திருவங்கநாதன், ஆதிகேசவன், அழகிய மணவாளன், மாயக்கண்ணன், பாற்கடல்வாசன், வீரராகவன் என் இன்னும் பல பெயர்கள் சொல்லிக் கொண்டே போகலாம் என்பதை,

**அச்சுதா, அனந்தா, கோவிந்த என்று**
**திருமாலின் பெயர்களை சொல்வதால்: நம்முடைய**
**வியாதிகள் எல்லாம் அழிந்துவிடுகின்றன.**
**இது சத்தியம்: சத்தியம் (வைஷ்ணவ சிம்மம் - வித்யா பூசண ப. 13)**

திருமாலின் பெயர்களை உச்சரிப்பதால் நம் உடலில் உள்ள நோய்கள் உடலை விட்டு நீங்கிவிடுகின்றன என்பதை மேலே உள்ள பாடல் வரியின் மூலம் எடுத்துரைக்கப்படுகிறது.

**முல்லை நில தெய்வம்**

சங்க காலத்தில் இருந்து சொல்லப்படுகின்ற குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் போன்ற நிலங்களுக்கு ஒவ்வொரு தெய்வங்கள் வணங்கப்பட்டு வந்துள்ளன என்பதை சங்க நூல்களின் மூலம் அறியலாம். முல்லை நிலத்திற்கு உரிய தெய்வம் திருமால் என்பதையும், முல்லை நில மக்கள் திருமாலை வணங்கி வந்தனர் என்பதை சங்க நூல்களின் வாயிலாக அறியலாம் என்பதை,

**மாயோன் மேய காடுறை உலகம்**
**சேயோன் மேய மைவரை உலகம்**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

**வேந்தன் மேய தீம்புனலுலகம்**

**வருணன் மேய பெரு மணலுலகமே (தமிழும் வைணவமும், ப. 1)**

முல்லை நிலத்தை மாயோன் மேய காடுறை உலகம் என்றார் காடு சார்ந்த இடத்திற்கு உரிய தெய்வம் திருமால் என்றும், மலையும் மலை சார்ந்த குறிஞ்சி நிலத்திற்கு உரிய தெய்வம் முருகன் என்றும், வயலும் வயல் சார்ந்த நிலத்திற்கு உரிய தெய்வம் இந்திரன் என்றும், கடலும் கடல் சார்ந்த நிலத்திற்கு உரிய தெய்வம் வருணன் என்றும் மேலே உள்ள பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

**ஆழ்வார்களின் பெயர்கள்**

பன்னிரெண்டு ஆழ்வார்கள் திருமாலின் புகழை பாடுவதும், பகலும், மாலை பொழுதும் இறைவனை தொழுவதே தன் வாழ்கையின் நோக்கமாகும். திருமாலின் திருவடியே கதி என்று இருந்த பன்னிரெண்டு ஆழ்வார்களின் பெயர்கள் அவை பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், தொண்டரடிப் பொடி ஆழ்வார், பெரியாழ்வார், ஸ்ரீஆண்டாள், குலசேகர ஆழ்வார், மதுரகவி ஆழ்வார், திருப்பாணாழ்வார் ஆவர். இவர்கள் திருமால் எழுந்தருளியுள்ள கோவிலுக்குச் சென்று இறைவனை வழிப்பட்டனர் என்பதை வைணவ நூல்களின் வாயிலாக அறியலாம்.

**சூடிக்கொடுத்த சுடர்க்கொடி**

ஸ்ரீ வில்லிபுத்துரில் வாழ்ந்து வந்த பெரியாழ்வார் பாரந்தாமன் மீது கொண்ட பக்தியால் பெரியாழ்வார் ஒரு மலர்த்தோட்டத்தினை அமைத்து அவற்றில் பூக்கின்ற பூக்களை மாலையாகக் கட்டி இறைவருக்கு நாள்தோறும் அணிவித்து வந்தார். பெரியாழ்வார் காட்டு வழியாகச் சென்ற போது ஒரு பெண் குழந்தையை கண்டு அக்குழந்தையை வளர்த்து வந்தார். அக்குழந்தை ஆண்டாள் ஆவர். பருவம் அடைந்து அப்பெண் பெரியாழ்வார் செய்யும் வேலைக்கு உதவியாக இருந்து வந்தாள். பெரியாழ்வார் கோத்து வந்த மாலைகளை தினமும் ஆண்டாள் அணிந்த பிறகே பாரந்தாமனுக்கு அணியப்பட்டது. ஒரு நாள் அதைக் கண்டு பெரியாழ்வார் மனம் வருந்தி அன்று இறைவனுக்கு மாலையை அணியாமல் விட்டுவிட்டார். அன்று இரவு இறைவன் ஆழ்வார் கனவில் தோன்றி "கோதை சூடிக் கொடுத்த மாலையைத் தாம் பெரிதும் விரும்புவதாகவும் அவளின் செய்கைகளுக்குத் தடை விதிக்க வேண்டாம், என்றும் கூறினார். அப்போதுதான் பெரியாழ்வார் தன் மகள் கோதை ஒரு தெய்வாம்சம் பொருந்தியவள் என்பதை உணர்ந்தார் அன்று முதல் கோதை **சூடிக் கொடுத்த சுடர்கொடி (கோதை சொல் அமுதம், பக் 8-9)** ஆனாள். பரந்தாமன் மனதை ஆண்டதால் ஆண்டாள் என்னும் பெயர் பெற்றாள் என்பதை கோதை சொல் அமுதம் நூலில் மூலம் காணலாம்.

**கிருஷ்ணன் லீலைகள்**

திருமாலின் அவதாரத்தில் கிருஷ்ணன் அவதாரம் எட்டாவது அவதாரமாகும்.

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

மகாபாரதத்திலும், பாகவத் புராணத்திலும் காணலாம். கண்ணன் அவதாரத்தில் கண்ணனை ஆயர்பாடி மக்கள் மாயக்கண்ணன், கேசவன், கோவிந்தன், கோபாலன், என்று அழைத்தனர். ஆண்டுந்தோறும் கிருஷ்ண ஜெயந்தி இந்து மக்களால் கொண்டாடப்பட்டு வருகின்றன. கிருஷ்ணன் அவதாரத்தில் இந்திரனை வணங்காது கோவர்தன் மலையை வணங்கினர் ஆயர்பாடி மக்கள் இதனை அறிந்த இந்திரன் கோபம் அடைந்து ஆயர்பாடியில் மழை பெய்து அழிக்க நினைத்தார். அதனை தடுக்க கிருஷ்ணன் கோவர்தன் மலையை தன் சுண்டு விரலால் தூக்கிபிடித்து ஆயர்பாடி மக்களை காப்பற்றினார் என்பதை கண்ணனின் அவதாரம் என்னும் நூலில் காணலாம்.

**ஐந்தலை நாகம்**

யமுனை ஆற்றங்கரையில் காளிங்கன் என்னும் ஐந்தலை நாகம் நஞ்சினைக் கக்கி குளத்தின் தண்ணீரைக் குடிக்கவிடாமல் செய்து அங்கு வருபவர்களின் உயிரையும் எடுத்தன. இதை அறிந்த கிருஷ்ணன் அந்த ஐந்தலை நாகத்தின் ஆணவத்தை அடக்கி நாகத்தின் தலையின் மீது நடனம் ஆடி யமுனை ஆற்றங்கரையினை விட்டு போகவைத்து ஆயர்பாடி மக்களை காப்பாற்றினார் என்பதை விளக்கும் விதமாக,

**ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிப்**
**பூத்த நீள் கடம்பு எறிப் புகப் பாய்ந்து**
**வாய்ந்த காளியன் மேல் நடம் ஆடிய**
**கூத்தனார் வரில் கூடிடு கூடலே (மேலது, ப. 42)**

மேல் உள்ள வரிகளின் மூலம் விளக்கப்படுகிறது.

**பூதனை பெண் பால் கொடுத்தல்**

கம்சனை கொல்வதற்கு அவதாரம் எடுத்த கண்ணனை கொள்வதற்காக அரக்கியான பூதனை என்னும் பெண் கண்ணன் குழந்தையாக இருக்கும் போது நஞ்சு பால் கொடுத்துக் கொல்ல வந்த பூதனை பெண்ணின் முலையை சுவைத்து உயிர் உண்ட கண்ணனை கீழே உள்ள வரிகளின் மூலம் விளக்கப்படுக்கப்படுகிறது.

**பள்ளியாவது பாற்கட லரங்கம்**
**இரங்க வன்பேய் முலை**
**பிரானவன் யுயிருண்ட வெந்தை**
**பிரானவன் பெருகுமிடம்**
**வெள்ளியான் கரியான் மணிநிறவண்ண**
**னென்றெண்ணீ நாடொறும்**
**தெள்ளியார் வணங்கும் மலைத்**
**திருவேங்கட மடை நெஞ்சமே! (பெரிய திருமொழி (ஐந்து பத்துகள்), ப. 58)**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

பாற்கடலில் பள்ளிக் கொண்டுள்ள திருமாலின் அவதாரமான கண்ணனுக்கு நஞ்சு பால் கொடுக்க வந்த அரக்கியின் உயிரை உண்ட இறைவன் கார்மேக கண்ணன், நீலமணிவண்ணன் நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் வணங்கும் திருவெங்கட மலைக்கு சொந்தக்கார் எம்பெருமான் என்பதை மேலே உள்ள வரிகளின் மூலம் அறியாலம்.

**மங்களாசனம்**

மங்கள்+ஆசனம்=மங்களாசனம் என்பது மங்கல வாழ்த்து அல்லது இறைவனுடைய அருள் பெறுதல் திருமாலை ஆழ்வார்கள் மங்கலகரமாக வாழ்த்தி பாடுவதே மங்களாசனம். இறைவன் எழுந்தருளியுள்ள இடங்களுக்கு மங்கல பாசுரங்களைக் கொண்டு பாடுவதை மங்களாசனம் எனப்படும். இறைவனை துயிலில் இருந்து எழுப்புவதற்காக விடியாற்காலையில் இறைவனை வாழ்த்தி பாடப்படுகிறது. ஆழ்வார்கள் இறைவனின் கோவில்கள் எங்கெல்லாம் உள்ளதோ அங்கெல்லாம் சென்று இறைவனை புகழ்ந்து பாடுவதும் மற்றும் இறைவனுடைய திருவிளையாடல்களையும் பாடலாகப் பாடுவதே மங்களாசம் ஆகும். மஞ்சள், குங்குமம் என்பது மங்கலகரமான சொல் ஒரு பெண்ணானவள் பிறப்பு முதல் கணவன் இறப்பு வரை மஞ்சள் குங்குமத்தோடு வாழ வேண்டும் என்ற வாழ்த்தொலியை வாழ பெருமாளின் மங்களசனம் கொண்டு பூசிக்கின்றார்கள். மன்னர்கள் போருக்கு கிளம்பும் முன் தன் குல தெய்வத்தை வணங்கி மங்களாசனம் பாடி வெற்றி பெற வேண்டும் என்று இறைவனை வணங்கி வழிபட்டு செல்வார்கள். போருக்கு செல்லும் தருவாயில் பெருமாளுடைய திருமாலையை சூடிக்கொண்டு செல்லும் போது மன்னனுக்கு நம்பிக்கை உண்டாகும் விதமாக அமைகின்றது. ஆழ்வார்கள் பாடிய பாடல்களை மங்களசானம் என்று அழைக்கப்படுகிறது என்பதை ஆழ்வார்களின் பாடல்களின் வாயிலாக அறியலாம்.

**வயதான மூதாட்டியை இளம் பெண்ணாக மாற்றுதல்**

பன்னிரெண்டு ஆழ்வார்களும் இறைவனை நாள்தோறும் நினைத்துக் கொண்டு வீடு, தூக்கம், பசி இவையெல்லாம் மறந்து இறைவன் மீது கொண்ட பக்தியினை விளக்கும் விதமாக மூன்று உலகத்தை உருவாக்கிய நாராயணன் பூவுலகத்தில் மட்டும் மனிதர்களைக் கொடுத்து அறம், பொருள், இன்பம் என்னும் மூவகை நெறியோடு பன்னிரெண்டு ஆழ்வார்கள் எம்பெருமான் மூலமாக நல்ல கருத்துக்களை இவ்வுலகத்திற்கு விளக்கியுள்ளனர். ஒரு வயதான பெண்மணியை திருமழிசை ஆழ்வாரால் இளம் பெண்மணியாக மாற்றப்பட்டார். அந்த பெண்ணை மன்னன் மணந்தான் திருமழிசையாழ்வாரின் அற்புத செயலை கண்டு கணிகண்ணன் என்னும் திருமழிசை சீடரிடம் என்னை பாடுக என்று கூறியும் பாடாமல் இறைவனை பாடியதால் மன்னன் இந்த ஊரை விட்டு சென்று விடு என்றதும் திருமழிசை ஆழ்வார் பெருமானிடம் சென்று நீயும் என்னுடன் வந்துவிடுக என்று கூறும் விதமாக,

**கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி**

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

**மணிவண்ணா நீகிடக்க வேண்டா துணியுடைய**

**செந்நா புலவனும் போகின்றேன் பீயுமுன்றன்**

**பைநாகப் பாய் சுருட்டிக் கொள் (வைணவத்தில் பக்திநெறி, ப. 63)**

அதாவது எம்பெருமான் மீது கொண்ட பக்தியின் காரணமாக இறைவா! நான் செல்கிறேன். நீயும் என்னுடன் வந்துவிடு என்று திருமழிசை ஆழ்வார் கூறியதும் இறைவனும் சென்றுவிடுவதாகவும் தெரிகிறது. ஆழ்வார் மீது இறைவன் கொண்ட அன்பையும் விளக்கும் விதமாக இப்பாடலின் வாயிலாக அறியலாம்.

**ஆழ்வார்கள் சிறப்பு**

ஒவ்வொரு ஆழ்வார்களும் சிறப்பு அம்சத்துடன் பிறந்துள்ளனர். அவற்றின் முதல் ஆழ்வார் பொய்கையாழ்வார் சங்கின் அம்சமாகவும், பூதத்தாழ்வார் கதாயுதத்தின் அம்சமாகவும், பேயாழ்வார் வாளியின் அம்சமாகவும், திருங்கையாழ்வார் சக்கரத்தின் அம்சமாகவும், பெரியாழ்வார் கருபாழ்வார் அம்சமாகவும், ஆண்டாள் பூமகள் அம்சமாகவும், குலசேகராழ்வார் கௌத்துவ மணியின் அம்சமாகவும், தொண்டரடிப் பொடியாழ்வார் வனமாலை அம்சமாகவும், திருமங்கையாழ்வார் வில்லின் அம்சமாகவும், நம்மாழ்வார் இறைவன் அம்சமாகவும், மதுரகவியாழ்வார் கருடாழ்வார் அம்சமாகவும், திருபாணாழ்வார் ஸ்ரீவத்சம் அம்சமாகவும் என பன்னிரெண்டு ஆழ்வார்களும் பிறக்கும் போது ஒவ்வொரு சிறப்பு அம்சத்துடன் இறைவனின் திருவடியினை தொழுது வைணவத்தின் சிறப்பினை எடுத்துரைத்துள்ளனர். பன்னிரெண்டு ஆழ்வார்களில் ஒருவரான பொய்கையாழ்வார் பாடல்

**வையக் தகளியா வார்கடலே நெய்யாக**

**வெய்ய கதிரோன் விளக்காகச் – செய்ய**

**சுடராழியான் அடிகட்கே சூட்டினேன் சொன்மாலை**

**இடராழி நீங்குகவே என்று (ஆழ்வார்கள் வரலாறு முதற்பதிப்பகம், ப. 18)**

இவ்வுலகத்தை ஆளும் இறைவனுக்கு சின்ன அகல் விளக்கு ஏற்றுவதற்கு தகுதியற்றவை. இறைவனுக்கு தகுந்த பெரிய விளக்கேற்ற வேண்டுமெனில் இவ்வுலகத்தை அகலாக கொண்டும், அதனை வளைத்தும் கிடைக்கும் பெரிய கடல் நீரை நெய்யாக ஊற்றியும், அக்கடற்பரப்பின் ஒரு விளிம்பில் தோன்றி காட்சியளிக்கும் சூரியன் அதிலேற்றும் சுடராக்கி ஞான விளக்கேற்றி வழிபட்டார். அது அகவிருள் அகற்றும் விளக்காதவர்களுக்கு அது மாயையாகும். உலகம் மாயையையே உண்மையெனக் கருதுபவருக்கு துன்பம் நீங்கிய வீடுபேரளிக்கும் என்னும் நம்பிக்கைக் கொள்வார்கள்.

**சந்திரன் சாபம் பெற்ற கதை**

நவ கோள்களில் இரண்டாம் இடத்தில் இருப்பவர் சந்திரன். சந்திரன் திருமாலை நோக்கி தவம் செய்து பல வரங்களைப் பெற்றவர். பிரபதியின் 27 பெண்களை மணந்தவர்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

சந்திரன். அதில் இரண்டு மனைவியிடம் மட்டுமே அன்பு கொண்டு விளங்கியதால் பிரகபதியின் சாபத்திற்கு ஆளாகினார். தன் சாபத்தை நீக்குமாறு இறைவனிடம் வேண்டினார். அதற்கு இறைவன் சாபத்தை நீக்க இயலாது. ஒரு மாதத்தில் உள்ள 30 நாட்களில் பாதி நாட்களில் கொஞ்ச கொஞ்சமாக தேய்ந்து காணாமல் போய் அமாவாசையாகவும் மறுநாள் கொஞ்ச கொஞ்சமாக வளர்ந்து ஒரு நாள் முழுமையாக வளர்ந்து பௌர்ணமியாகக் காட்சி தருவாயக என்று கூறினார் என்பதை பேராசிரியர் நா. சுப்புரெட்டியின் *சோழநாட்டுத் திருப்பதிகள்* என்னும் நூலின் மூலம் அறியலாம்.

**அர்ச்சவதாரம்**

வைணவத்தில் வணங்கப்படும் இறைவன் திருமால் ப்ரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், இவை ஐந்தும் அர்ச்சவதாரம் ஆகும். இதில் பரம் என்பது மனிதர்களால் பார்க்க முடியாது தேவர்களால் மட்டுமே காண முடியும். வியூகம் என்பது இறைவன் தன் மனைவியுடன் பாம்பு படுக்கையில் இருக்கும் நிலை இதுவும் நம்மால் பார்க்க முடியாது. விபவம் என்பது பாவ செயல்கள் செய்யக்கூடிய அரக்கர்களால் மக்களுக்குத் தீங்கு எற்படும் போது இறைவன் அவதாரம் எடுத்து மக்களைப் பாதுகப்பது ஆகும். அந்தர்யாமித்துவம் என்பது இறைவனை தன் அறிவு கண்களால் மட்டுமே காணமுடியும். அதுவும் இறைவன் மீது உள்ள அளவுக்கடந்த அன்பினால் மட்டுமே காணலாம். அர்ச்சவதாரம் என்பது இறைவனை தாம் விரும்பும் நிலையில் அதாவது படுத்த நிலையிலும், நின்ற நிலையிலும் இறைவனின் அழகினை தம் இருக்கண்களால் கண்டு வணங்கும் உருவ நிலையாகும் என்பதை விளக்கும் விதமாக,

**பரவி வானவர் ஏத்த நின்ற**
**பரமனைப் பரஞ்சோதியை,**
**குரவை கோத்த குழகனை, மணி**
**வண்ணனைக் குடக்கூத்தனை,**
**அரவம் ஏறி அலைகடல் அமரும்**
**துயில் கொண்ட அண்ணலை,**
**இரவும் நன்பகலும் விடாது, என்றும்**
**ஏத்துதல் மனம் வைம்மினோ (திவ்யப் பிரபந்தம், ப. 237)**

வானவர்களுக்கெல்லாம் தலைவனே இருளில் உள்ள மக்களுக்கு வெளிச்சத்தை அளிக்கவல்ல பெருமாளே, குரவையாரிடம் கூத்தாடும் தெய்வமே, ஐந்தலை நாகத்தின் மேல் படுப்பவனே, நான் பூமியில் வாழும் வரை என் உள்ளத்தில் உன்னை வைத்து நாளும் வணங்கும் இறைவனே என்று திவ்விய பாசுரம் பாடல் மூலம் அறியலாம்.

**கார்மேகக்கண்ணன் உலா வருதல்**

கார்மேகக்கண்ணன் வீதியில் சுற்றி வரும் போது இறைவனைக் கண்டுக் காதல்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

கொள்ளுதல் ஆகும். உலா வரும் போது எழு பருவப்பெண்கள் காதல் கொள்ளுதல் மற்றும் இது போன்று கணவன் வேண்டும் என்று மனம் ஏங்கும் நிலையினை அவர்கள் பார்வைகள் மூலம் விளங்குகிறது. எழு பருவப்பெண்கள் பற்றி உலா இலக்கியங்களின் மூலம் கணலாம் என்பதை

**பேதை முதல் எழ்பருவப் பெண்கள் மயக்கமுற**
**ஓதுமறு குற்றானொள் வேலோனென் – றேதம்**
**அறக்கலி வெண்பாவின் ஆக்கல் உலாவாம்**
**புறத்தசாங் கந்தாங்கிப் போற்று (காளமேகப் புலவர் பாடிய திரு ஆனைக்கா உலா, ப. 9)**

இறைவனையோ மன்னனையோ உலா வரும் போது எழு பருவப்பெண்கள் அதாவது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் போன்ற பெண்கள் காதல் கொள்ளும் நிலையினை உலா என்னும் சிற்றிலக்கியங்கள் நூல்களில் காணலாம்.

**திருவிழாக்கள்**

வைணத்தலங்களில் புரட்டாசி மாதம் சிறப்பான பூஜைகள் நடைப்பெறும். திருவிழாக்கள் சமயங்களில் கோவில்களில் உள்ள கொடிமரத்தில் இறைவனுடைய வாகனங்களின் சின்னங்களைப் பொறிக்கப்பட்டு கொடிமரத்தில் எற்றப்படுகிறது. இத்திருவிழாக்கள் ஆண்டுந்தோறும் நடைப்பெற்று வருகிறது. திருவிழா நாட்களில் சிறப்பு பூஜைகள் நடைபெறும். இறைவனை அலங்கரித்து அவருடன் தேவியையும் அலங்கரித்து தெருக்களில் ஊர்வலம் வரும். அப்படி வரும் போது மக்கள் இறைவனுக்குப் பிடித்த பொருட்களையெல்லாம் வைத்து கற்பூர தீபம் காட்டுகிறார்கள். இதனை,

**குலவும் இடபக் கொடியேற்றி வீதி**
**உலவுதிரு நாள் தனில் ஒர் நாள் – தலவயம் (மேலது, ப. 54)**

இறைவன் உலா வருவதை மேலே உள்ள பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

**முடிவுரை**

சோழ நாட்டுத் திருப்பதிகள் ஆசிரியர்கள் மாயோன் திருநாமத்தைப் போற்றியும் அவரின் திருப்புகழினைப் பாடியும் திருவடிகளை அடைந்தனர். ஆழ்வார்கள் பாடிய திருப்பதி பூலோக வைகுந்தம் என்று போற்றிப் புகழ்ந்துள்ளவை, மேலும் திருவரங்கத்தின் சிறப்பினையும், சோழ நாட்டு திருப்பதிகளில் 108 வைணவ தலங்களில் வரலாற்றுச் சிறப்பினையும், பன்னிரெண்டு ஆழ்வார்கள் பெருமாளின் மகிமையை மக்களிடையே பல பாடல்களின் மூலம் பரப்பினார்கள். திருமாலின் நாமத்தை உச்சரித்தால் மக்களுக்கு நன்மைகள் தரும் திருப்புகழ் பாடல்கள் பாடியுள்ளார்கள் என்பதை இதில் காண்கிறோம். ஆழ்வார்கள் தமிழ் மொழியை வளர்ப்பதற்கு பெரும் பங்கினை வகிக்கின்றனர். சங்க காலத்தில் பல நூல்கள் இறைவனைப் பற்றியும் பாடம்ப்படுகின்றது. போருக்கு செல்வோரும் திருமாலினை வணங்கிய பின்புதன் செல்வார்கள். ஆசிரியர்கள் இறைவனை மட்டும் போற்றுவதில்லை. அவ்வூரின்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

சிறப்பினையும் திருத்தலங்களை பற்றியும் பாடியுள்ளார். திருமாலின் அவதாரங்களையும், திருவிழாக்களின் நடைமுறைகள், ஆழ்வார்கள் சிறப்பு அம்சங்களையும் இக்கட்டுரையில் அறிகின்றோம்.

**குறிப்புநூல்கள்**

[1] கா.ர.கோவிந்தராச முதலியார். *ஆழ்வார்கள் வரலாறு*. தென்னிந்திய சைவ சித்தார்ந்த வெளியீடு, முதற்பதிப்பு 1948.

[2] வ.ந.கோபால தேசிகாசாரியர். *கீத கோவிந்தம் அஷ்டபதி, விளக்க உரை*. வானதி பதிப்பகம், பதிப்பு 2016.

[3] க.துரியானந்தம். *கோதை சொல் அமுதம்*. கங்கை புத்தக வெளியீடு, முதற் பதிப்பு 2009.

[4] ரிஷபானந்தர். *சிறப்புப்பெற்ற வைஷ்ணவ தலங்கள்*. கெம்பு அரங்கம், அனுராகம் வெளியீடு, முதற் பதிப்பு 2011.

[5] காளமேகப்புலவர், மு.அருணாசலம். *திரு ஆணை உலா*. செந்தமிழ்க் கழகம் வெளியீடு, 1944.

[6] எம். ராதாகிருஷ்ண பிள்ளை. *தமிழும் வைணவமும்*. வாசன் பதிப்பகம், முதற் பதிப்பு 2009.

[7] ம.பெ.ஸ்ரீனிவாசன். (தொகுப்பாசிரியர்) *திவ்வியப்பிரபந்தம் (பாசுரத்தொகுப்பு)*. முதல் பதிப்பு 2010.

[8] முனைவர் கதிர்முருகு. *திருவரங்க கலம்பகம் மூலமும் உரையும்*. கௌரா பதிப்பகம், முதற் பதிப்பு 2001.

[9] *திருமங்கையாழ்வார் இயற்றிய திவ்யப்பிரபந்தம்*, பெரிய திருமொழி பண், தாளத்துடன் கூடிய பைந்தமிழ்ப் பனுவல், பரதம் பதிப்பகம், பதிப்பு மே 2003.

[10] முனைவர் கமலகண்ணன், (உரையாசிரியர்) *நாலாயிர திவ்வியப் பிரபந்தம் மூலமும் விளக்கவுரையும்*, பாகம் 4, வர்த்தமானன் பதிப்பகம், முதற்பதிப்பு 2001, மூன்றாம் பதிப்பு 2004.

[11] முனைவர் ஏ. பரந்தாமன். *பன்னிரு திருநாமப் பெருமைகள்*. முதற் பதிப்பு 2005.

[12] பெரியவாச்சான் பிள்ளை. *பெரியாழ்வார் திருமொழி*. வெளியீடு ஸ்ரீனிவாசன், மறுபதிப்பு 1995.

[13] இரா.பத்மாவதி. *வளம் தரும் வைணவம்*. ஸ்ரீ வெங்கடேஸ்வரா பதிப்பகம், முதற் பதிப்பு 1999.

[14] வேணு சீனிவாசன். *வளமான வாழ்வுக்கு வைணவம்*. வானதி பதிப்பகம், முதற் பதிப்பு 2012.

[15] முனைவர் ஜோ.அருணாதேவி. *வைணவத்தில் பக்திநெறி*. நலங்கிள்ளி பதிப்பகம், முதற்பதிப்பு ஆகஸ்ட் 2009.

[16] இரண்டாயிரம். *ஸ்ரீநாலாயிர திவ்யப்பிரபந்தம்* (உரையுடன்). கங்கை புத்தக

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

நிலையம், முதற்பதிப்பு டிசம்பர் 2007.

**References**

[1] K.R.Govindarasa Mudhaliyar. *Ahvargal Varalaru*. Thennindhiya Saiva Siddantha Veliyedu, First Edition, 1948.
[2] Vashnava Simma-Vidhya Pusana V.N.Gopala Desiga Achariyar. *Geetha Govindam Ashdapathi*, Villakka Uraium. Vanathi Pathippakam, Edtion 2016.
[3] K.Dhuriyananantham. *Gothai Sol Amutham*. Gangai Puththaka Veliyedu, First Edition, 2009.
[4] Rishabananantham. *Serapu Petra Vaishnava Thalangal*. Kembu Arangam, Anuragam Veliyedu, First Edition, 2011.
[5] *Kalamegapulavar*, Mu.Arunachalam. *Thiru Aanai Ulla*, Senthamizh Kazhaka Veliyidu, 1944.
[6] M.Radhakrishna Pillai, *Tamizhum Vainavamum*. Vasan Pathippakam, First Edition, 2009.
[7] M.P. Srinivasan, (Thoguppasiriyar). *Divya Prabandam* (Pasuram). First Edition, 2010.
[8] *Thiruvaranga Kalambagam Moolamum Uraium*, Munaivar Kadhirmurugu Gowra Pathippakam, First Edition, 2001.
[9] *Thirumangaiyazhvar Iyatriya Divya Prabandham*, Periya Thirumozhi Pan, Thalathudan Kodiya Painthamizh Panuval, Bharatham Pathipakam, Edition, May 2003.
[10] Munaivar Kamalakannan. (Uraiyasiriyar). *Nalayira Divyaprabjantham Mooramum Vilakkamum*, Part-4, Vardhamanan Pathippakam, First Edition, 2001.
[11] Munaivar A.Parandhaman. *Panniru Thirunamma Perumaigal*. Published by A.Parandhaman, First Edition, 2005.
[12] Periyavashan Pillai. *Periyalvar Thirumozhi*. Published by Sri Vaishnavam, Marupathippu, 1995.
[13] R.Padmavathi. *Valam Tharum Vainavam*. Sri Venkadeshwara Pathipakam, First Edition, 1999.
[14] Venu Srinivasan. *Valamana Vazhvukku Vainavam*. Vanathi Pathipakam, First Edition, 2012.
[15] Munaivar J.Arunadevi. *Vainavathil Bakthi Neri*. Nalankilli Pathipakam, First Edition. August 2009.
[16] Irandayiram. *Sri Nalayira Divya Prabhandham* (Uraiyudan), Gangai Puthaga Nilayam, First Edition, December 2007.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். பேராசிரியர். சு.இராமலிங்கம் ஐயா அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic. I Thank Prof. S. Ramalingam for rendering valuable suggestions in research methodology

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ் 
International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

# பேராசிரியரின் சமயக் கொடை

# The Religious Gift of Professor N. Subbu Reddiar

**முனைவர் செ. ஹேமலதா**, உதவிப்பேராசிரியர், முதுகலைத் தமிழியல் மற்றும் உயராய்வு துறை, செல்லம்மாள் மகளிர் கல்லூரி, சென்னை, தமிழ்நாடு, இந்தியா.
**Dr. S. Hemalatha,** Assistant Professor, PG & Research Department of Tamil, Chellammal Women's College, Chennai, Tamil Nadu, India.
ORCiD: https://orcid.org/0000-0002-3227-7616
DOI: 10.5281/zenodo.7276027

## Absract

*Religion has been at the centre of tradition that has been followed for a long time in Tamil Culture. Saivam and Vaishnavism are two religions which have been practised since ancient times in Tamil Nadu. Due to the passage of time many religions spread in Tamil Nadu and degraded the status of the Vedic and Vaishnava religions. During the Pallava period, Nayanmars and Alvars defended, contributed and developed the Vedic and Vaishnava religions. Perasiriyar Subbu Reddiar belongs to the Saivam sect, he is well-versed in Saiva Sithandham and Thirumurai. He has written many texts explaining many of the messages implied in this literature for the easy understanding of the common people. Although he belonged to the Saivam religion, he was interested in Vaishnavism for which he produced Vaishnavaite Puranas and epics (Ithihasangal) in simple Tamil and added pride to the Tamil language. He visited the holy shrines of Vaishnavism and also sang the specialities of each verse with his songs, dividing the verses region-wise in the way it is said in ancient times. Through this, he has further developed both the religions of Saivism and Vaishnavism. Thus, Professor has made personal pride not only for religions but also for the Tamil Language. Professor Subbu Reddiar has written more religious texts and has learned through Tamil literature. Hence, the purpose of this study is to establish the religious contributions of Professor Subbu Reddiar.*

**Keywords:** Professor Subbu Reddiar, Saivam, Vaishnavism, Ilakkiyam, Nayanmars, Alvaras.

## ஆய்வுச்சுருக்கம்

*சமயம் காலம் காலமாக பின்பற்றப்படும் மரபு ஆகும். தமிழகத்தில் சைவம் வைணவம் என்ற இரு சமயங்கள் பழங்காலம் முதல் தற்போது வரை பின்பற்றப்பட்டு வருகின்ற சமயங்கள் ஆகும். காலச் சூழலால் பல சமயங்கள் தமிழகத்தில் பரவி சைவ, வைணவ சமயங்களின் நிலைகளைக் குன்றச் செய்தன. பல்லவர் காலத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றி சைவ, வைணவ சமயங்களை வளர்ச்சி அடையச் செய்தனர். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் சைவ சமயத்தைச் சேர்ந்தவர். சைவ சமய இலக்கியங்களான சித்தாந்தங்கள், திருமுறைகள் ஆகியவற்றில் புலமை மிக்கவர். இவர் இவ்விலக்கியங்களில் மறைமுகமாகக் கூறப்பட்ட பல செய்திகளைச் சாதாரண மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும்படி தனது நூல்களில் விளக்கி எழுதியுள்ளார். சைவ சமயத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் வைணவ சமயத்தின் மீது கொண்ட பற்றின் காரணமாக ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள், வைணவ*

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022

UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

*புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றைக் கற்று மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட இந்த இலக்கியங்களை எளிமையான தமிழால் எழுதி தமிழுக்கு பெருமை சேர்த்துள்ளார். வைணவ திவ்ய தேசங்களை நேரில் சென்று கண்டு அங்கு உறைகின்ற இறைவனைத் தொழுது பாடி ஆழ்வார்கள் அடைந்த இன்பத்தைத் தானும் அடைந்ததாகக் கூறுகிறார். அது மட்டுமன்று பழங்காலத்தில் கூறப்படும் முறையில் மண்டலம் வாரியாக திருப்பதிகளைப் பகுத்து ஒவ்வொரு பதியின் சிறப்புகளையும் தனது பாடல்களால் பாடியுள்ளார் இதன்மூலம் தனிப் பெருமைகளைப் பேராசிரியர் செய்துள்ளார். சைவ சமய நூல்களைக் காட்டிலும் வைணவம் தொடர்பான சமய நூல்களை அதிகம் எழுதியுள்ள பேராசிரியர் மரபு வழியாக சைவ சமயத்தையும் ஈடுபாட்டினால் வைணவ சமயத்தையும் ஏற்று இரு சமயங்களையும் போற்றிப் பரவி வந்துள்ளார் என்பதை அவரது இலக்கியங்கள் வழி அறியலாம். இதன்மூலம் சமயசார்பற்றவராகவும் பரிணமிக்கிறார். சைவ, வைணவ சமயங்களைத் தொல்காப்பியம் முதல் பாரதிதாசன் கவிதைகள் வரை உள்ளவற்றைக் கற்று தமது சமய இலக்கியங்களைப் படைத்துள்ளார். சைவ சமய குரவர்கள் நால்வர் குறித்தும், ஆழ்வார்கள் குறித்தும், தாயுமானவர், இராமலிங்க அடிகளார், பட்டினத்தடிகளார் போன்றோரின் வாழ்வினை மீட்டுருவாக்கம் செய்துள்ளார் என்பதை நிறுவுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.*

**குறிப்புச் சொற்கள்:** பேராசிரியர் ந. சுப்புரெட்டியார், சைவம், வைணவம், இலக்கியம், நாயன்மார்கள், ஆழ்வார்கள்.

**முன்னுரை**

சமயம் என்றால் மனிதரை சமைப்பது அல்லது பக்குவப்படுத்துவது என்று பொருள்படும். சமயம் என்பது பக்குவப்படுத்தும் கொள்கைநெறி எனவும் பொருள்படும். இதற்கு மதம் என்ற பெயரும் உண்டு என்பர் சான்றோர். இயற்கையை வழிப்பட்டு வந்த மக்கள் பிற்காலத்தில் அவற்றிற்கு உருவம் கொடுத்து, உருவ வழிபாட்டால் பல்வேறு சமயங்களாக பிரிந்தனர். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் பல்வேறு இலக்கியங்களை எழுதியிருந்தாலும், அவரது நூல்களில் பல இடங்களில் இறைக்கொள்கைகள் வெளிப்படுகின்றன. அவை பெரும்பாலும் சைவம், வைணவம் பற்றிய குறிப்புகளாகவே காணப்படுகின்றன. அதற்கு காரணமாக அவரது வாழ்வின் நிலைகளே எனலாம். தமிழகத்திலும், ஆந்திராவிலும் வாழ்ந்த பேராசிரியர் அவர்கள் இவ்விரு சமயங்களைப் பற்றியும் அறிந்திருப்பதில் வியப்பில்லை. மேலும், பிற சமயங்களின் கொள்கைகளையும் அவற்றின் முறைகளையும் அறிந்த பேராசிரியர் அவர்கள் அறிவியல் நோக்கில் அவற்றை ஆய்ந்து சமயங்கள் அனைத்தும் ஒரே கருத்தைதான் வலியுறுத்துகின்றன என்பதை

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

விளக்கியுள்ளார். சைவம், வைணவம் என்ற இரு சமயங்கள் தமிழகத்தில் ஆதிகாலம் முதல் இருந்த செய்திகளை தமிழ் இலக்கியங்கள் வழி விளக்கியுள்ளார். மேலும், இவ்விரு சமயங்களின் பக்தி இலக்கியங்களை ஆழ்ந்து அனுபவித்து பிறரும் அறியும்படி பல இலக்கியங்களை எழுதியுள்ளார் என்பதை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

**பேராசிரியரும் சமயமும்**

பிறப்பால் சைவராய், ஈடுபாட்டால் வைணவத்தையும் ஏற்று வாழ்ந்தவர் மேலும் தமிழகத்திலுள்ள பல சமயங்களையும் அவற்றின் கொள்கைகளையும் நன்கு அறிந்தவர். நம் நாட்டினரின் சமயமும் அதன் வளர்ச்சியும் பற்றி பேராசிரியர் கூறும் கருத்து ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாக உள்ளது.

> **ஆன்மா, இறைவன் என்ற இரு பொருள்களை ஆய்ந்து சமயமாய் வளர்த்தது என்றும் கருதலாம். ஆன்மா, இறைவன் பற்றிய எண்ணத் தெளிவுகளே சமயமாகவும் ஆன்மிகமாகவும் வளர்வதற்கு காரணமாயின. (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம். ப. 78)**

**என** சமயத்தின் மூலத்தை ஆசிரியர் விளக்குகிறார். சமயத்தின் மூலத்தை மட்டுமன்று அவை பல பிரிவுகளாகப் பிரிந்து காணப்படுகின்றன என்பதை

> **நம் நாட்டுச் சமயங்கள் நடைமுறையில் பல கடவுள்களை வழிபாட்டு முறையில் ஏற்றுக் கொண்டுள்ளன. சிவன், திருமால், முருகன், கலைமகள், திருமகள், விநாயகர் என்பவை இதற்கு எடுத்துக்காட்டுகள். (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம். ப. 78)**

என்று கூறுகிறார். சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சைவ சமயமும், திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்ட வைணவ சமயமும் முற்காலத்தில் இணைந்தே காணப்பட்டன. பிற்காலத்தில்தான் அவை பிரிந்தன என்ற பேராசிரியரது கருத்தைப் போல

> **சேரன் செங்குட்டுவன் வடநாட்டு யாத்திரைக்குப் புறப்படுமுன் சிவபூசை செய்து சிவப்பிரசாதத்தைத் தன் முடியில் தாங்கியிருந்தான். பின்னர் வந்து திருமால் பிரசாதத்தைத் தன் தோளில் தாங்கினான் என்று சிலப்பதிகாரம் செப்புகிறது. அதே நூலின் சிவனுக்குரிய ஐந்தெழுத்தும் திருமாலுக்குரிய எட்டெழுத்தும் சமநிலையில் மதிக்கும்படி பக்தனுக்குக் கூறப்பட்டுள்ளது. (சைவ சமய வளர்ச்சி, ப. 22)**

என்ற கருத்தை பேராசிரியர் கருத்தோடு ஒப்பிட்டு காணும்பொழுது இவ்விருவரின் கருத்தும் ஒரே விதமாக அமைந்திருப்பதை அறிமுடிகிறது. இதன் மூலம் ஒரே சமயமாய் இருந்த தன்மை, காலச்சூழலாலும் வழிபாட்டு முறைகளாலும், கொள்கைகளாலும், சடங்குகள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றாலும் பல்வேறாகப் பிரிந்து காணப்பட்டது என்கிறார் பேராசிரியர். ஒரு சமயமே பலவாறாகப் பிரிந்த தன்மையை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

**உலக வரலாற்றின் தொன்னெடுங் காலமாகவே அருளாளர்களும், மெய்ந்நெறி கண்ட சான்றோர்களும் மானுட சமுதாயத்தை நெறிப்படுத்த முயன்று வந்துள்ளார்கள். (தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ப. 1)**

**அறநெறிச் சான்றோர்களின் கருத்துக் கருவூலமே பிற்காலத்தில் அவ்வவர் பெயரில் மதமாகப் பரிணமித்துள்ளது. சமுதாயத்தை நெறிப்படுத்தும் சமயமாக அமைந்துள்ளது. (தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ப. 2)**

**மதக் கோட்பாடுகளில் புலன்கடந்த தத்துவங்களில் ஏற்பட்ட முரண்பாடுகளாலும், ஒரு சில சீர்த்திருத்தக் கருத்துக்களாலும், மீண்டும் பல்வேறு பிரிவுகள் உருவாகி தனித்தனி நிறுவனங்களாகவும், சமயப்பிரிவுகளாகவும் மடங்களாகவும் இயங்கத் தொடங்கின. (தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ப. 2)**

பன்மொழி புலவர் மு.கு. ஜகந்நாத ராஜா வழி அறிமுடிகின்றது. மேற்கண்ட செய்திகளின் வழி சமயம் ஒன்றாய் இருந்து பலவாராகப் பிரிந்தது என்ற பேராசிரியரின் கொள்கை மேலும் வலுப்படுகிறது. இவ்வாறு பேராசிரியர் சமயம் பற்றியக் கொள்கைகளை அவரது நூல்களின் வழி வெளிக்காட்டியுள்ளார்.

**பேராசிரியரின் சமய ஒருமைப்பாடு**

பேராசிரியர் சைவம், வைணவம் தொடர்பான பல நூல்களை எழுதியுள்ளார். அந்நூல்களில் எவ்விடத்திலும் பிற சமயங்கள் மீது காழ்ப்புணர்வை வெளிப்படுத்தாத தன்மையே அவரது சமய ஒருமைப்பாட்டை வெளிப்படுத்தியுள்ளார். **ஒரு நாமம் ஒருருவம் இல்லாத கடவுளுக்கு ஆயிரம் திருநாமங்கள். (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், ப. 78)** என்று பேராசிரியர் கூறுவதன் மூலம் பல வடிவங்கள் உடையவன் இறைவன் என்றும் அவனுக்கு பல நாமங்கள் இருப்பதையும் சுட்டிக்காட்டுகிறார். இதன்மூலம் அனைத்து சமயங்களிலும் வழிபடும் இறைவனும் அவனது நாமங்களும் பலவாக இருப்பினும் இறைவன் ஒருவன் என்ற கருத்தை உறுதிப்படுத்துகிறார். **சமயம் என்பது நம்பிக்கையால் தோன்றிற்று. (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், ப. 79)** என்ற ஒரு கருத்தே அனைத்து சமயங்களுக்கும் பொதுவான கருத்தாக அமைவதால் அவரது சமய ஒருமைப்பாட்டின் தன்மை வெளிப்படுகிறது. அதுமட்டுமன்றி தன் கருத்தை வலிமைப்டுத்த சமய ஒருமைப்பாட்டை விளக்கும் பிறரது வரிகளை மேற்கோள் காட்டியும் சமயம் என்பது ஒரு நெறிமுறையாகவோ, கொள்கையாகவோ பின்பற்ற வகுக்கப்பட்டதே என்றும் சமயத்தைப் பின்பற்றி பிற சமயங்களின் மீது காழ்ப்புணர்வு அமையக் கூடாது என்பதயும் விளக்குகிறார். பேராசிரியர் மேற்கோள் காட்டிய சில பாடல் வரிகள்

**ஒன்றே குலம் ஒருவனே தெய்வம் (சைவமும் தமிழும், ப. 80)**

**தொக்கு இலங்கி யாறு எல்லாம் பரந்து ஓடித் தொடுகடலே**

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**புக்குஅன்றிப் புறம்நிற்க மாட்டாத (அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம், ப. 81)**

இப்பாடல் வரிகள் குலம் என்பது மனித குலம் ஒன்றே என்றும் அக்குலத்திற்கு இறைவன் ஒருவனே என்பதையும், ஆறுகள் பலவாக இருப்பினும் அவை அனைத்தும் கடலில் வந்து கலப்பதைப் போல சமயங்கள் பலவாக இருப்பினும் அவை கூறும் கருத்துக்கள் அனைத்தும் இறைவனை அடைவதற்காகத்தான் என்பதையும் விளக்குகின்றன. **அடிப்படையில் சமயங்கள் மக்களின் நல்வாழ்வுக்காக பல்வேறு அறக்கருத்துக்களையும் கட்டளைகளையும் போதிக்கின்றன. (சகவாழ்வு மற்றும் சமூக ஒற்றுமையை வலியுறுத்துவதில் சமயங்களின் வகிபாகம் இஸ்லாம், இந்து, பௌத்த, மற்றும் கிறிஸ்துவ சமயங்களின் கோட்பாடுகளை மையப்படுத்திய ஆய்வு, ப. 182)** என்ற இக்கருத்தை வலியுறுத்துவதாக பேராசிரியரின் நூல்கள் பறைசாற்றுகின்றன.

பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான **திருமங்கையாழ்வார்** வைணவ சமயத்தைக் சார்ந்தவராக இருப்பினும் சைவ சமயத்தின் கடவுளைப் பாடியுள்ள செய்தியை பேராசிரியர் சைவ சமயத்தைக் கூறும் இடங்களில் இணைத்துக் கூறுகிறார்.

**இருக்குஇலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு**
**எழில்மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட (சைவமும் தமிழும், ப. 15)**

அக்காலத்தில் வைணவ சமயத்தினரும் ஈசனைப் பாடியுள்ளனர் என்பதை எடுத்துக்காட்டி பேராசிரியர் அவர்கள் சமய ஒருமைப்பாட்டை தனது இலக்கியங்கள் வழி வலியுறுத்துகிறார். இப்பாடல்வழி சைவராய் இருந்தும் வைணவ சமய நூல்களையும் கற்றுத் தேர்ந்துள்ளார் என்பதை அறிய முடிகின்றது.

**சிவனுக்கு மேல் பிரிதோர் தெய்வம் இல்லை என்றும் சைவத்தின் மேற் சமயம் பிறிதொன்றில்லை என்றும் சைவர்கள் தம் சமயத்தையும் கடவுளையும் புகழ்ந்து கூறுவர். (சமயமும் சிற்றிலக்கியமும், ப. 51)**

என்பார் வெ. கிருட்டிணசாமி. சைவ சமயத்தை சார்ந்த பேராசிரியர் **சைவமும் தமிழும்** என்ற நூலில் சிவபெருமானைப் பற்றி ஆய்கின்ற இடங்களில் திருமால் இடம்பெற்றுள்ள செய்தியை நீக்காது எடுத்து உரைக்கின்றார். அதே போல **வைணவமும் தமிழும்** என்ற நூலில் திருமாலைப் பற்றி ஆய்கின்ற இடங்களில் சிவபெருமான் இடம்பெற்றுள்ள செய்தியை நீக்காது எடுத்து உரைக்கின்றார்.

**பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்**
**…நீலமேனி நெடியோன் கோயிலும் (சிலம்பு., 169-172)**

என்ற பாடலை சைவமும் தமிழும் என்ற நூலில் எடுத்துக் கூறிய பேராசிரியர் சிவனைப் பற்றிய வரியை மட்டும் குறிப்பிட்டு ஆய்வு செய்திருக்கலாம். அவ்வாறு செய்யாமல் திருமாலையும்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

குறிப்பிட்டு எழுதியுள்ளார். இதன் மூலம் அவர் சமய ஒருமைப்பாடு உடையவர் என்பதை அறியமுடிகிறது. இதுபோல் பல இடங்களில் சிவனை மட்டுமன்று திருமாலும் இடம் பெற்றிருக்கும் இடங்களையும் பேராசிரியர் சுட்டிக்காட்டுவது சிறப்பாகும்.

வைணவத்தின் மீது பேராசிரியர் ஈடுபாடு உடையவர் ஆதலால் வைணவ சமய நூல்களையும் எழுதியுள்ளார். பேராசிரியரது சமய நூல்களில் வைணவ சமய நூல்களே அதிகம் என்பதை அவரது நூல்களின்மூலம் அறியமுடிகின்றது. பேராசிரியரின் **அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்** என்ற நூல் அறிவியல் நோக்கில் சைவம், வைணவம் என்ற இரு சமயங்களை மட்டும் ஆயாமல் சமணம், பௌத்தம் முதலான பிற சமயங்களையும் பேராசிரியர் ஆய்வு செய்ததன் மூலம் அவர் சமய ஒருமைப்பாட்டை விரும்புகின்றவர் என்பது புலனாகிறது. சித்தாந்தம், வேதாந்தம் பற்றி மட்டுமன்றி பிற சமயக் கொள்கைகளையும் பேராசிரியர் ஆய்ந்து உரைப்பதன் மூலம் பல்வேறு சமயங்களின் கொள்கைகளையும் கற்றுத் தேர்ந்து அதில் கூறப்பட்டுள்ள செய்திகளை பிற சமயங்களுடன் ஒப்பிட்டு அவற்றை பிறரும் அறியும்படி தனது இலக்கியங்கள் வழி விளக்குகிறார்.

> **மெய்யறிவு விளங்கப் பெற்றவர்கட்கும் அவ்வறிவுண்மையைக் கலையறிவினால் உணர்ந்தமை கூறிக்கொண்டு நிற்பவர்க்கும் சமயம் ஒன்றே. மெய்யறிவு பெறாதார்க்குச் சமயம் பலவாகவே தோன்றும் என இராசகோபாலன் குறிப்பிடுகிறார். (இலக்கியங்கள் காட்டும் சமயம், ப. 43)**

இக்கூற்று பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் மெய்யறிவு பெற்றவர் என்பதை உறுதிபடுத்துகிறது.

**பேராசிரியரும் சைவசமயமும்**

சைவ சமயத்தின் முழு முதற் கடவுளான சிவபெருமானை தொல்காப்பியம் முதல் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல்கள் ஈறாக உள்ள தமிழ் இலக்கியங்களை எடுத்து அதிலுள்ள சிவபெருமான் பற்றிய குறிப்புகளையும் சைவ சமயக் கடவுளராகப் போற்றப்படும் முருகன், சக்தி முதலியோரின் குறிப்புகளையும் ஆய்ந்து **சைவமும் தமிழும்** என்ற நூலாக வெளியிட்டுள்ளார். இந்நூலின் மூலம் தமிழ் மொழியின் ஆதிகாலம் தொட்டே சைவ சமயம் தமிழுடன் இணைந்து வளர்ந்து வந்துள்ளதை அறியமுடிகின்றது. இந்நூலில் பேராசிரியர் அவர்கள் சிவபெருமானின் உருவ அமைப்பு, அணிகலன்கள், இயல்புகள் போன்றவற்றை விளக்கியுள்ளார். அது போன்றே சக்தி, முருகன் பற்றிய செய்திகளையும் ஆய்ந்துள்ளார்.

*திருக்குறள்* அற இலக்கியமாக போற்றுகின்ற நூல். பொதுமறை என சிறப்பிக்கப்படும் நூல் இந்நூலிலும் சைவ சமயக் கொள்கைகளும் சிவபெருமானும் இடம்பெற்றுள்ளனர் என்பதை பேராசிரியரது கருத்தின் மூலம் அறிய முடிகின்றது.

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

**கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (குறள். 9)**

எனும் குறள் சிவபெருமான் எண்குணத்தை உடையவன் என்று பேராசிரியர் உரை கூறுகிறார். எண்குணங்கள் என்பதை

> **தன் வயத்தனனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசத்தின்கண் நீங்குதல், பொருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகக் கூறுவர். இவை சைவ ஆகமத்தில் உள்ளவை (சைவமும் தமிழும், ப. 12)**

எனப் பேராசிரியர் நூலில் சுட்டுகிறார். எண்குணங்களை பேராசிரியர் சைவ ஆகமத்தில் உள்ளது எனச் சுட்டும் பொழுது 'ஆன்' என்ற விகுதி எண்குணங்களையுடைய சிவபெருமானையே குறிக்கும் என்பது புலப்படுகிறது.

> **சைவத் தமிழ் நூல்களுட் சிறந்தன பன்னிரண்டு திருமுறைகளும் பதினான்கு சாத்திரங்களுமேயாகும். முன்னவற்றில் சித்தாந்த கருத்துக்கள் ஆங்காங்கு விரவியுள்ளன. பின்னவற்றில் அவை நிரல்படக் கூறப்பட்டுள்ளன. (சைவ சமய வளர்ச்சி, ப. 238)**

என்று முனைவர் ம. இராசமாணிக்கனார் சைவ சமய வளர்ச்சி என்ற நூலில் குறிப்பிடுகிறார். பேராசிரியரும் பன்னிரு திருமுறைகளையும் சைவ சித்தாந்தக் கருத்துக்களையும் தனது நூல்களில் விளக்கியுள்ளார். பன்னிரு திருமுறைகளைப் பற்றி **சைவமும் தமிழும்** என்ற நூலில் பன்னிரு திருமுறைகளில் இடம்பெறும் சிவபெருமான் பற்றிய செய்திகளை ஆய்ந்தும் **மூவர் தேவாரம் புதிய பார்வை** என்ற நூலில் தேவாரப் பாடல்களில் இடம்பெற்றுள்ள பல அரிய செய்திகளை ஆய்வுக் கண்ணோட்டத்திலும் சைவ சமய விளக்கு என்ற நூலில் பன்னிரு திருமுறைகள் மற்றும் சைவசித்தாந்தக் கருத்துக்களை கடித முறையிலும் சைவ சித்தாந்தத்தைப் பற்றி **சைவ சித்தாந்தம்** என்ற நூலையும் எழுதியுள்ளார். பன்னிரு திருமுறைகளில் முதல் எட்டு திருமுறைகளை எழுதிய சமயக்குரவர் நால்வரை **உரைநடை வடிவில் மீட்டுருவாக்கம்** செய்த பெருமை பேராசிரியரையே சாரும்.

**தம்பிரான் தோழர்** என்று சுந்தரரது வரலாற்றைக் கூறும் நூலுக்குப் பெயர் வைத்துள்ள பேராசிரியர் திருத்தலப் பயணத்தை கற்பனைப் பயணத்தினால் விளைந்தது என்பதை,

> **சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் காட்டியுள்ள வழியைக் கடைப்பிடித்துக்கொண்டு அவருடன் மேற்கொண்ட கற்பனை பயணத்தின் விளைவாக இந்நூல் உருவாகியது (தம்பிரான் தோழர். அணிந்துரை, ப. xxxiii)**

என்று குறிப்பிடுகிறார். இந்நூலில் மட்டுமன்று தான் எழுதிய **நாவுக்கரசர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசர்** என்ற இவர்களது வரலாற்றில் அமைந்துள்ள திருத்தலப் பயணங்கள்

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

கற்பனையே என்கிறார். அவர் மட்டுமன்று அவரது நூல்களைப் படிப்பவர்களும் அவ்விடங்களுக்குப் பயணம் செய்த அனுபவத்தைப் பெற முடிகிறது.

**இனிமையான இசைத் தொடருடைய ஒலி உருவ அமைப்பைப் பண் என்று கூறலாம். (தமிழிசையியல் வளர்ச்சியில் குடந்தை ப. சுந்தரேசனாரின் பங்கு, ப. 22)** என பண் குறித்து பேராசிரியர் கூறுவதிலிருந்து இசையனுபவமும் உடையவர் என்பதை அவரது பண்ணாராய்ச்சி மூலம் அறியலாம். **மூவர் தேவாரம் புதியப் பார்வை** என்ற நூலில் 24 பண்களையும், யாப்பு வகையினையும் ஆய்ந்து விளக்கி எழுதியுள்ளார். **குறுந்தொகை யாப்பு** என்ற ஒரு யாப்பு வகையை காணமுடிகிறது. இந்த யாப்பானது சிலப்பதிகாரம், யாழ்நூல், யாப்பருங்கலம் ஆகிய நூல்களில் இடம்பெற்றுள்ளது என்று கூறி குறுந்தொகை யாப்பிற்கு உரிய இலக்கணத்தை,

> **குறுந்தொகை யாப்பு என்பது நாற்சீர் நாலடியாய் அடிதோறும் தேமா, புளிமா என்னும் மாச் சீர்களுள் ஒன்று முதற்சீராகவும் கருவிளம், கூவிளம் என்னும் விளச்சீர்களுள் ஒன்று நான்காம் சீராகவும் இடையிலுள்ள இரண்டு மூன்றாம் சீர்கள் பெரும்பாலும் விளச்சீர்களாகவும் அமைய வரும் செய்யுள் விகற்பமாகும். (மூவர் தேவாரம் புதிய பார்வை, ப. 147)**

என்று உரைக்கிறார்.

சைவ சித்தாந்தத்தையும் சைவ சமய வரலாற்றினையும் **சைவ சமய விளக்கு** என்ற நூலில் சிவபெருமானுக்கு கடிதம் எழுதி விளக்குவது போல அமைத்துள்ளார். **சைவ சமய விளக்கு என்ற இந்நூல் கண்ணுதலப்பனுக்கு கார்த்திகேயன் எழுதும் கடிதங்களாக வெளிவருகின்றது. (சைவ சமய விளக்கு- நூல்முகம், ப. xix)** கண்ணுதலப்பனுக்கு என்ற சொல் சிவபெருமானைக் குறிக்கின்றது. ஏனென்றால் நுதல் என்ற நெற்றியில் கண்ணுடைய அப்பனே என்பதை இதன் பொருளாக கொள்ளலாம். இந்நூலில் ஆசிரியர் மாணவனுக்கு பாடங்களை விளக்குவது போல பேராசிரியர் சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளான சிவபெருமானுக்கே சைவ சமயத்தின் கொள்கைகளையும், ஆகமங்களையும், திருமுறைகளையும் விளக்குவதால் **அப்பனுக்கு பாடம் சொன்ன பிள்ளையாக** அவரை நாம் கருதலாம்.

**பேராசிரியரும் வைணவ சமயமும்**

திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் வைணவ சமயமாகும். தமிழகத்தில் பேராசிரியர் கூறியது போல சைவமும் வைணவமும் இணைந்தே இருந்தன. வைணவ சமயமும் பண்ணெடுங்காலமாக நிலவி வருவதையும் வைணவ சமயமும் பலகாலமாக மக்களால் பின்பற்றப்படும் சமயமாக உள்ளது.

> **உலகிலுள்ள மிகப் பழமையான சமயங்களில் வைணவமும் ஒன்றாகும். அது நமது வேத காலந்தொட்டு இடையறாது இயங்கிவரும் ஒரு வாழ்நெறித் தத்துவச் சமயமாகும்.**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
A Bi-Yearly Peer-Reviewed International Journal
E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**பண்பட்ட சமயங்களில் வைணவமும் ஒன்று. (தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ப. 3)**

என்பதால் வைணவ சமயத்தின் தொன்மையை நாம் அறியமுடிகிறது. பேராசிரியர் வைணவ சமயத்தை தனது ஈடுபாட்டால் ஏற்றவர். தொல்காப்பியம் முதல் பண்டைய தமிழிலக்கியங்களிலிருந்து வைணவ சமய முழுமுதற்கடவுளான திருமாலையும், வைணவ சமயக் குறிப்புகளையும் **வைணவமும் தமிழும்** என்ற தனது நூலில் விளக்கியுள்ளார். பேராசிரியர் அவர்கள்,

**கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை (குறள். 9)**

என்ற நூலில் இக்குறளில் எண்குணத்தான் என்பது சிவபெருமானைக் குறித்ததாகக் கூறிய பேராசிரியர் **வைணவமும் தமிழும்** என்ற நூலில், **எண்குணத்தான் என்பது எளிமைக் குணமுடையான் என்று பொருள்படும். இது திருமாலைக் குறிப்பதாகக் கூறி விளக்கம் தந்துள்ளார். (வைணவமும் தமிழும், ப. 20)** சைவமும் வைணவமும் இணைந்திருந்த தன்மையையும் இவ்விரு சமயங்களையும் பேராசிரியர் சமமாகவே பாவித்துள்ளார் என்பதையும் அறியமுடிகிறது. சைவ சமயத்தில் எவ்வாறு நாயன்மார்கள், சித்தாந்திகள் என்று கூறுகிறோமோ அது போல வைணவ சமயத்தில் வளர்ச்சிக்கு பாடுபட்டவர்களை ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் என்று கூறுவர். பேராசிரியர்கள் அவர்கள் ஆழ்வார்களின் பாடல்களையும் நன்கு அனுபவித்து தான் உணர்ந்த கருத்துக்களை எல்லாம் **ஆழ்வார்களின் ஆராஅமுது** என்ற நூல் வடிவமாகத் தந்துள்ளார். இந்நூல் மற்ற வைணவ உரைநடை போல் இல்லாமல் **எவ்வித மொழிக் கலப்பும் இன்றி தமிழ் மொழியில் மட்டும் அமைந்திருப்பதே** இந்நூலின் சிறப்பாகும்.

ஆழ்வார்கள் மட்டுமன்றி ஆச்சாரியர்கள் பற்றிய விளக்கங்களையும் வைணவமும் தமிழும் என்ற நூலில் விளக்கியுள்ளார்.

**ஆழ்வார்கள் ஆராஅமுதப் பெருமானை எப்படி அனுபவித்தார்கள், அவ்வநுபவ ஆனந்தத்தை வெளியிடுவதற்கு எத்தகைய உயர்ந்த பாசுரங்களைப் பயன்படுத்தினார்கள். அப்பாசுரங்கட்டு ஆசாரியப் பெருமக்களின் மணிப்பிரவாள நடையிலமைந்த வியாக்கியாணங்கள் தெள்ளத் தெளிந்த ஆற்றொழுக்கான தீந்தமிழ் நடையில் விளங்க வைக்கும் முறையை இயல்பாகப் பெற்றவர் பேராசிரியர் டாக்டர் ரெட்டியார். (ஆழ்வார்களின் ஆராஅமுது, அணிந்துரை, xix)**

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் போன்ற சமயங்கள் பல துறவினைப் பெரிதும் பாரட்டுகின்றன. வைணவம் ஆனது இல்வாழ்வையும் சிறப்பிக்கின்றது என்பதை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

> **இறைவனோடு இறைவியையும் இணைத்துப் பார்த்து துறவு நெறி போன்றே இறை நெறியும் மாண்புடையதே என்று வற்புறுத்திக் கூறுகின்றன. (தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள், ப. 9)**

பேராசிரியர் அவர்களும் தாய், தோழி, மகள் என்ற நிலையில் ஆழ்வார்கள் பாசுரங்களைப் பாடிய நிலையை வருணித்துள்ளார்.

> **ஆழ்வார்களாகிய ஞானச் செல்வர்களிடத்து சில சமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும்; சில சமயம் பிரேமம் (காதல்) தலைதூக்கி நிற்கும். இந்த இரண்டு நிலைகளிலிருக்கும் பொழுதும் அவர்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். (விட்ணுசித்தன் விரித்த தமிழ், ப. 229) ஞான நிலையில் இருக்கும் பொழுது அவர்கள் தாமான தன்மையில் நின்றுபேசுவர் பிரேம நிலையிலிருக்கும் பொழுது பிராட்டி நிலைமையடைந்து வேற்று வாயாலே பெண் பேச்சாகப் பேசுவர் இந்த நிலையில் ஆழ்வார்கள் ஆண்மைப் பெயர் நீங்கி ஆழ்வார் நாயகி என்ற பெண்மைப் பெயரால் வழங்கப் பெறுவர். (விட்ணு சித்தன் விரித்த தமிழ், ப. 230)**

இந்நிலைகளில் இருந்து மாறுபட்ட நிலையில் ஆண்டாள் இறைவனை காதலி நிலையில் கண்டு இறைவனையே அடைந்த செய்தியையும் விளக்குகிறார். சிறு வயது முதலே கண்ணன் மீது காதல் கொண்டு சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாக இறைவனையே மணந்தவள் கோதை என்று கூறுகிறார்.

வைணவ சமய புராணங்களை விளக்கும் இடத்தில் புராணம் என்ற சொல்லுக்கு, **பழமையான எந்த வராலாறுகள் இன்னும்கூட மக்களிடையே சொல்லப் பெற்று வழங்குகின்றனவோ அவையே புராணம். (வைணவ புராணங்கள், ப. 5)** என்பதாகும் என்று புதிய விளக்கம் தருகிறார். அதே போல வைணவத்தில் வழங்கும் புராணங்களை வகைப்படுத்தி விளக்கும் பொழுது,

> **ஒரு தலத்திலுள்ள சிவ மற்றும் விஷ்ணு ஆலயத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் அல்லது திருமால் புகழை விரித்துச் சொல்வது தலபுராணம். இத்தலத்தின் பெருமையையும் அங்குள்ள மூர்த்தியின் பெருமையையும் தீர்த்தத்தின் பெருமையையும் கூறி இந்த மூர்த்தியைப் பூசித்து நற்பேறு பெற்றவர்களின் வரலாற்றையும் கூறுவது. (வைணவ புராணங்கள், ப. 10)**

என்று தலபுராணத்திற்கும் புதிய விளக்கம் தருகிறார். புராணம், தலபுராணம் இரண்டும் சமயங்களுக்கு உரியவையவை.

வைணவ பக்தி இலக்கியங்களுக்கு இதுவரை உரையெழுதியவர்கள் மணிப்பிரவாள நடை என்ற வடமொழி, தமிழ் கலந்த நடையில்தான் உரை எழுதியிருக்கின்றனர். ஆனால் பேராசிரியரது “**வைணவ உரைவளம்**” என்ற நூல் பக்தி இலக்கியங்கள் தமிழ் மொழியால்

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

எழுதப்பட்டது சிறப்பானதாகும். வைணவ சமயத்தின் கடவுளாகப் போற்றப்படுபவர் அனுமன். இராமனை திருமாலின் அவதாரமாகக் போற்றிய கம்பர் எழுதிய நூல் கம்பராமாயணம் இக்கம்பராமாயணத்தில் **அனுமன்** என்பவர் இராமனது தூதுவனாகப் போற்றப்படுவர். அவ்வனுமனின் தன்மைகளை எட்டுப் பிரிவுகளாக பிரித்து விளக்குவதாக அண்ணல் அனுமன் என்ற நூல் அமைந்துள்ளது. நவ்வித சம்பந்தம், அர்த்த பஞ்சகம் என்ற நூலும், வைணவ இலக்கியத்திற்கு பேராசிரியர் வழங்கிய நூல்கள் ஆகும். இதில் அண்ணல் அனுமன் என்ற நூலில்

> **அடியேனுக்கு எல்லா நலன்களையும் ஈந்து உடல் நலத்துடனும் மனவளத்துடனும் வாழ அருள்சுரந்து எட்டெழுத்து மந்திரம் போல் எட்டு இயல்களாக அமைந்த இந்நூல் எழுதவும் வெளிவரவும் நிமித்த காரணமாக இருந்து என் இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலையப்பன் திருவடிகளை வாழ்த்தி வணங்கி (அண்ணல் அனுமன், நூல்முகம், ப. 10)**

எழுதியுள்ளார். இதன்மூலம் சிவனை மட்டுமன்று திருமாலையும் வணங்கியதால் சமய ஒருமைப்பாட்டை பேராசிரியரிடம் காணமுடிகிறது.

பேராசிரியர் எழுதிய வைணவ சமய நூல்கள் ஒரு புறமிருக்க நூற்றெட்டு திவ்விய தேசங்களுக்கும் நேரில் சென்று ஆழ்வார்கள் அத்தலங்களில் பாடிய பாடல்களை தானும் பாடி அனுபவித்து அவ்வனுபவத்தை தனது இலக்கியங்களை வாயிலாகக் கொண்டு பிறரும் அறியும் படி மலைநாட்டுத் திருப்பதிகள், பாண்டிநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள் என சேர, சோழ, பாண்டிய, மலை நாடு எனப் பல பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு இடத்திற்கும் பயணித்து வைணவ சமயத்திற்கு அவ்வனுபங்களை இலக்கியங்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்.

> **எம்பெருமானைப் பல்வேறு விதமாக அநுபவிக்கலாம். அவற்றுள் ஒன்று அவன் உகந்தருளின திவ்விய தேசங்கட்கு யாத்திரை செய்வதாகும். (தொண்டை நாட்டுத் திருப்பதிகள், நூல் முகம், ப.viii)**

இவ்வாறு சைவராய் இருந்தும் பல வைணவ திருத்தலங்களுக்கு பயணம் செய்து இறைவனை வணங்கியதன் மூலம் அவரது சமய ஒருமைப்பாட்டை அறியமுடிகிறது. அதுமட்டுமன்று அவற்றை தன் தமிழ்ச்சொல்லால் வடித்து படிப்பவரும் அத்தலங்களைக் கண்ட மகிழ்ச்சி பெரும்படியும் அவ்விடத்திற்கு நேரில் செல்லும்படி தூண்டும்படி நூல்களை அமைத்துள்ளார்.

**பேராசிரியரின் சைவ வைணவ ஆய்வுக் களங்களும் வேறுபாடும்**

பேராசிரியர் அவர்கள் சைவ, வைணவ சமயங்களைப் பற்றி பல ஆய்வு நூல்களை எழுதியுள்ளார். அந்நூல்களில் ஆய்வுக் களங்களாக அச்சமயத்தின் கடவுள் பற்றியும், அச்சமயத்தைச் சார்ந்த அடியவர்கள் பற்றியும், அச்சமயத்தின் இலக்கியங்களையும் ஆய்வுக்

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

களங்களாகக் கொண்டு பிற ஆய்வாளர்களைப் போலவே ஆய்வு செய்துள்ள பேராசிரியர் அவர்கள் அவ்வாய்வுகளின் பார்வையை மட்டும் புதிய கண்ணோட்டத்தில் வெளிப்படுத்தியுள்ளார். சைவ சமயத்தில் திருமுறைகள் தொகுக்கப்பட்ட விதத்தை அனைவரும் அறிந்திருப்போம். ஆனால் பேராசிரியர் அவர்கள் நாலாயிர திவ்விய பிரபந்தத்தை நாதமுனி தொகுத்த விதத்தை தனது ஆய்வு நூலில் பதிவு செய்துள்ள விதம் சிந்திக்கத்தக்கதாக உள்ளது.**திருமுறைத் தொகுப்பைப் போலவே நாலாயிரத் தொகுப்பும் அமைந்துள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. (மூவர் தேவாரம் புதிய பார்வை, ப.11)** நாதமுனிகள் காலத்தில் மேலைநாட்டிலிருந்து வந்த சீரிவைணவர்கள் இறைவனை வாழ்த்திப்பாடும் பொழுது **குருகூர்சடகோபன் குழலின் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்** என்ற வரிகளை நாதமுனிகள் கேட்கவும் ஆயிரம் பாடல்களையும் நீங்கள் அறிவீர்களா என்ற அவர்களிடம் நாதமுனி வினவ, இல்லை எங்களுக்கு இவ்வளவு தான் தெரியும் இதற்கு மேல் யாரும் அறிந்திலர் என்று விடைகூறினர். நாதமுனிகள் பிரபந்தங்களை வெளிக்கொணர வேண்டும் என்ற நோக்கில் குருகூருக்குச் சென்று அங்கிருந்த அவரது சீடர் மதுரகவியாழ்வார் வழி வந்தவரை அணுகி இவ்விடத்தில் பிரபந்தங்கள் பாடுபவர்களோ அப்பிரபந்தங்களின் சுவடிகளோ கிடைக்குமா என்று கேட்கவும், அதைக் கேட்ட மதுரகவியாழ்வாரின் சீடர் எனது குருநாதர் அருளிய **கண்ணிநுண் சிறுதாம்பு** என்ற ஒரு பிரபந்தம் மட்டுமே உள்ளது என்றும் அதனை ஆழ்வார் அடிகளை தியானித்து நியம விதிகள் படி பன்னீராயிரம் முறை பாராயணம் செய்தால் ஆழ்வார் தோன்றுவார் என்று கூறவும் நாதமுனிகள் அவர் கூறியபடி செய்ய ஆழ்வார் நாதமுனிகள் முன்பு தோன்றி ஞானக் கண் வழங்கியதோடு பிரபந்தங்களையும் பல இரகசிய செய்திகளையும் கூறியதாக பேராசிரியர் அவர்கள் மூவர் தேவாரம் புதிய பார்வை என்ற நூலில் விளக்குகிறார்.

நாதமுனிவர் திருமுறையை நான்காகப் பகுத்த காரணத்தையும் பேராசிரியர் விளக்குகிறார். நாதமுனிவர் வேதவியாசர் எவ்வாறு வேதங்களை நான்காகப் பகுத்தாறோ அது போலவே பிரபந்தத்தை நான்காகப் பகுத்துள்ளார் என்கிறார். இதனை, **நாதமுனிகளும் வேதவியாசர் திருமறைகளை நான்காக வகுத்தது போல நாலாயிரத்தையும் நான்காக வகுத்தார். (மூவர் தேவாரம் புதிய பார்வை, 12)** என்ற வரிகள் மூலம் அறியலாம்.

தேவாரம் என்ற சொல்லை நாம் இதுவரை தே+ஆரம், தே+வாரம் என பிரித்தே பொருள் கொண்டு வருகிறோம்.

> **தேவாரம் என்ற சொல்லை தே+வாரம் எனப் பிரித்து இறைவனை அன்பினால் புகழ்ந்துபாடுவது என்றும், தே+ஆரம் எனப்பிரித்து தெய்வத்தைப் புகழ்ந்து பாடிய பாமாலை என்றும் (மூவர் தேவாரம் புதிய பார்வை, 12)**


தமிழ்மொழி மற்றும் இலக்கிய பன்னாட்டு ஆய்விதழ்
அறிஞர்களால் மதிப்பீடு செய்யப்படும் அரையாண்டு பன்னாட்டு ஆய்விதழ்

International Journal of Tamil Language and Literary Studies
*A Bi-Yearly Peer-Reviewed International Journal*
E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

கூறுகிறோம். ஆனால் பேராசிரியர் அவர்கள் தே+வாரம் எனப் பிரிப்பதில் மாற்றம் கொள்ளாமல் அதன் மூலத்தை ஆய்வு செய்து விளக்குகிறார். தே என்றால் தெய்வம் என்றும் வாரம் என்றால் இசையின் கூறுபாட்டினைக் குறித்து வழங்கும் தமிழ்ச்சொல் என்றும் கூறுகிறார்.

வாரம் என்பது முதல் நடை, வாரம், கூடை, திரள் என்று நான்காக வகுத்து இதில் மந்த நடையுடையதாய்த் தாழ்ந்து செல்லும் இன்னிசை இயக்கம் முதல்நடை எனப்படும். முருகிச் செல்லும் விரைந்த நடையினையுடைய இசையியக்கம் திரள் எனப்படும். இவ்விரண்டிற்கும் இடை நிகர்த்தமாய்ச் சொல்லொழுக்கம் இசையொழுக்கம் பொருந்திய பாடல் வாரம் எனப்படும். சொற்செறிவும் இசைச்செறிவும் உடைய பாடல் கூடை எனப்படும் என்று சிலப்பதிகாரம் வழி விளக்குகிறார். தேவாரங்களை பண்முறையால் முதல் திருமுறை இரண்டாம் திருமுறை என வகுத்திருந்தாலும் முதலில் பாலக வயது சம்பந்தரும், அவரை அடுத்து நாவுக்கரசரும், அவரை அடுத்து வாலிப வயது சுந்தரரும் வருவது இன்றளவும் பலரது மனதில் எழுகின்ற கேள்வியே ஆகும். பேராசிரியர் அவர்கள் அதற்கும் உரிய காரணத்தை தனது இலக்கியங்களில் பதிவிட்டுள்ளார்.

> **தேவாரத் திருப்பதிகங்களின் வரிசை முறை அவ்வாசிரியர்கள் பிறந்த குலம், வயது முதலிய உலகியல் முறைகளை ஒரு சிறிதும் கருதாமல், அப்பெருமக்கள் இவ்வுலக வாழ்வினைத் துறந்து இறைவன் திருவருளிற் கலந்து வீடுபேற்றடைவினை உளத்தில் கொண்டு அமைக்கப் பெற்றதாகும். (மூவர் தேவாரம் புதிய பார்வை, 12)**

என்று கூறுகிறார். இதற்கு அவர் தரும் விளக்கமும் சாலப் பொருத்தம் உடையதாகவே உள்ளது. திருஞான சம்பந்தர் திருமணத்தின் போது அத்திருமணத்தில் பங்கேற்ற அனைவரும் வீடுபேறு பெற்றனர். திருநாவுக்கரசர் அத்திருமணத்திற்கு வராததன் காரணம் யாது? என்ற ஐயத்தையும் அவ்விடத்தில் பதிவிட்டுள்ளார். சம்பந்தரை அடுத்து நாவுக்கரசர் வீடுபேறு அடைந்தார். பிறகு சுந்தரர் வீடுபேறு அடைந்தார் என்ற கருத்தையும் நோக்குமிடத்து பேராசிரியரது தேவார வரிசை அமைப்பைப் பற்றிய கருத்து உண்மையானது என்பதை அறியமுடிகிறது. பேராசிரியரது ஆய்வில் **மற்றொரு புதுமை** என்னவெனில் அவர் அறிவியல் முறையில் சமயங்களை ஆய்வு செய்து கூறியது ஆகும். ஏனெனில் இக்காலத்தில் ஒரு இலக்கியத்தை அறிவியல் முறையில் ஆய்வு செய்தல் முறை இருந்தாலும், சமயங்களை அறிவியல் முறையில் ஆய்வு செய்த பெருமை பேராசிரியருக்கே உரியதாகும். இவ்வாறு பேராசிரியரது சமயம் சார்ந்த ஆய்வுக்களங்களும் கண்ணோட்டமும் மாறுபடுகின்றன.

## முடிவுரை

பேராசிரியர் அவர்கள் சமயங்கள் பற்றிய பல அரிய செய்திகளை தனது இலக்கியங்களில் வெளிப்படுத்தியுள்ளார். தனது வாழ்நாள் முழுவதும் இதுபோன்ற பல

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

இலக்கியங்களை எழுதுவதில் முனைந்திருந்த பேராசிரியர் அவர்கள் பல சமய நூல்களை எளிய நடையில் எழுதியுள்ளார். மேலும், சாஸ்திரங்களில் மறைபொருளாக இருந்த பல அரிய கருத்துக்களை தனது நூல்களின் வழி எளிமையாக அனைவரும் அறியும்படி எழுதியுள்ளார். தனது சமய இலக்கியங்களையும் அவ்விலக்கியம் தோன்றுவதற்கான அனுபவம், சிந்தனைகள், காலம் ஆகியவற்றையே சமயங்களுக்கு பேராசிரியர் வழங்கிய கொடையாகும் என்றால் மிகையாகாது.

**குறிப்பு நூல்கள்**

[1] அங்கயற்கண்ணி. இ. *தமிழிசையியல் வளர்ச்சியில் குடந்தை ப. சுந்தரேசனாரின் பங்கு.* தமிழ்ப் பல்கைலைக்கழகம், தஞ்சாவூர், முதற் பதிப்பு, 2006.

[2] இராசமாணிக்கனார். ம. *சைவ சமய வளர்ச்சி.* பூம்புகார் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2011.

[3] கவிதா.சி.முனைவர். “இலக்கியங்கள் காட்டும் சமயம்.” *சான்லாக்ஸ் பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்,* மலர் 2, இதழ் 3, ISSN: 2454-3993, ஜனவரி 2018.

[4] கிருட்டிணசாமி.வெ. *சமயமும் சிற்றிலக்கியமும்.* அருள் ஆனந்தர் தன்னாட்சிக் கல்லூரி தமிழ்த்துறை, மதுரை, மூன்றாம் பதிப்பு, 2006.

[5] சுப்புரெட்டியார்.ந. *அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்.* பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, முதற் பதிப்பு, 2001.

[6] சுப்புரெட்டியார்.ந. *சைவமும் தமிழும்.* திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதற் பதிப்பு, 2001.

[7] சுப்புரெட்டியார். ந. *ஆழ்வார்களின் ஆராஅமுது.* ஐந்திணைப்பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, 1987.

[8] சுப்புரெட்டியார். *மூவர் தேவாரம் புதிய பார்வை.* நிவேதா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

[9] சுப்புரெட்டியார்.ந. *வைணவ புராணங்கள்.* சுரா புக்ஸ் லிமிடெட், சென்னை, முதற் பதிப்பு, 2003.

[10] சுப்புரெட்டியார்.ந. *விட்ணு சித்தன் விரித்த தமிழ்.* பாரி நிலையம், சென்னை, 1987.

[11] சுப்புரெட்டியார்.ந. *வைணவமும் தமிழும்.* திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, முதற் பதிப்பு, 1998.

[12] சுப்புரெட்டியார்.ந. *சைவ சமய விளக்கு.* பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, 1984.

[13] சுப்புரெட்டியார்.ந. *தம்பிரான் தோழர்.* பாரி நிலையம், முதற் பதிப்பு, 1985.

[14] சுப்புரெட்டியார். ந. *தொண்டைநாட்டுத் திருப்பதிகள்.* அவ்வை, சென்னை,

E-ISSN: 2581-7140 UGC CARE Listed Journal
Volume - 4, Special Issue - 2, June 2022 Available at: www.ijtlls.com

முதற்பதிப்பு, 2006.

[15] சுப்புரெட்டியார். ந. *அண்ணல் அனுமன்.* ஏஷியன் பிரிண்டர்ஸ், சென்னை, முதற் பதிப்பு, 2003.

[16] செபா.எம்.ஐ. மற்றும் இஸ்மியா பேகம். எம். எஸ். "சகவாழ்வு மற்றும் சமூக ஒற்றுமையை வலியுறுத்துவதில் சமயங்களின் வகிபாகம் இஸ்லாம், இந்து, பௌத்த மற்றும் கிறிஸ்துவ சமயங்களின் கோட்பாடுகளை மையப்படுத்திய ஆய்வு." *8 வது சர்வதேச கருத்தரங்கின் நடவடிக்கைகள்,* எப்.ஐ.ஏ. எஸ்.ஈ.யு.எஸ்.எல், ISSN: 978-624-5736-14-0, 04 ஆகஸ்ட் 2021.

[17] ஜகந்நாத ராஜா. மு.கு. *தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள்.* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதற் பதிப்பு, 2005.

**References**

[1] Angayarkanni. E. *Thamizhisaiyiyal Valarchiyil Kudhanthai Pa. Sundharasanarin Pangu*. Thamil Palgalaikkazhagam, Thanjavur, First Edition, 2008.

[2] Rasamanikkanar. M. "Saiva Samaya Valarchi." Poompugar Pathipagam, First Edition, 2011.

[3] Kavitha. S. "Ilakkiyangal Kattum Samayam." *Shanlax Journals*, Volume 2, Issue 3, ISSN: 2454-3993, January 2018.

[4] Krithinasamy. V. *Samayamum Sitrilakkiyamum*. Arul Anandhar Thannatchi Kazhagam Thamilthurai, Third Edition, 2006.

[5] Subbureddiyar. N. *Ariviyal Nokil Ilakkiam Samayam Tathuvam*. Pazhaniyappa Brothers, Chennai, First Edition, 2001.

[6] Subbu Reddiar. N. *Saivamum Thamizhum*. Thirunelveli Theninthiya Saiva Siddanda Noolpathipu Kazhagam, Chennai, First Edition, 2001.

[7] Subbu Reddiar. N. *Aazhvargal Aara Amuthu*. Ainthinai Pathipagam, Chennai, First Edition, 1987.

[8] Subbu Reddiar. N. *Moovar Devaram Pudiya Parvai*. Nivedha Pathipagam, Chennai, First Edition, 2003.

[9] Subbu Reddiar. N. Vainava Puranangal. Sura Books Ltd, Chennai, First Edition, 2003.

[10] Subbu Reddiar. N. *Vitnu Sithar Viritha Tamil*. Paari Nilaiyam, Chennai, First Edition, 1987.

[11] Subbu Reddiar. N. *Vainavamum Thamizhum*. Thirunelveli Theninthiya Saiva Siddanda Noolpathipu Kazhagam, Chennai, First Edition, 1998.

[12] Subbu Reddiar. N. *Saiva Samaya Vilakku*. Pari Nilayam, First Edition, 1984.

[13] Subbu Reddiar. N. Thambiran Thozhar. Pari Nilayam, First Edition, 1985.

[14] Subbu Reddiar. N. *Thondainattu Thiruppathigal*. Avvai, Chennai, First Edition, 2006.

[15] Subbu Reddiar. N. *Annal Hanuman*. Azhiyan Printers, Chennai, First Edition, 2003.

[16] Sheffa. M. I and Ismiya Begam. M. S. "Promoting Faith Based Social Choesion Through Islamic and Arabic Studies." *Proceedings of 8t International Symposium*, FIA, SEUSL, ISSN: 978-624-5736-14-0, 04th August 2021.

[17] Jagannatha Raja. M. K. *Thamizhaga Andhira Vainava Thodharbugal*. Tamil Palgalaikkazhagam, Tanjavur, First Edition, 2005.

**நிதிசார் கட்டுரையாளர் உறுதிமொழி / Author Contribution Statement:** இல்லை / NIL.

E-ISSN: 2581-7140
Volume - 4, Special Issue - 2, June 2022
UGC CARE Listed Journal
Available at: www.ijtlls.com

**கட்டுரையாளர் நன்றியுரை / Author Acknowledgement:** இத்தலைப்பில் கட்டுரை எழுதுவதற்கு வாய்ப்பளித்த ந. சுப்புரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். / I would like to express my gratitude to Na. Subbu Reddiar 100 Educational Trust for the chance to write an article on this topic.

**கட்டுரையாளர் உறுதிமொழி / Author Declaration:** இக்கட்டுரையில் எவ்வித முரண்பாடும் இல்லை என்று உறுதிமொழி அளிக்கிறேன். / I declare that there is no competing interest in the content and authorship of this scholarly work.